தத் ஸத்

ஸ்ரீ ஸர்வ பரிபூரண பர ப்ராஹ்மணே நம :

# ஜீவப் பிரம்மைக்ய
# வேதாந்த ரஹஸ்யம்

பெங்களூர் சிடி
கொம்பாபுர அக்ரஹார மடம் மடாதிபதிகளாகிய
வெட்டவெளி பரம்பரையில் வந்த

**கடப்பை**
**ஸ்ரீ பரமஹம்ஸ ஸச்சிதானந்த யோகீஸ்வரர்**
அவர்கள் இயற்றியது

**ஸ்ரீ ஸச்சிதானந்தர் கம்பெனி**
57/24, ஸ்ரீநிவாச பெருமாள் சன்னதி முதல் தெரு,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

## நூல் அபிப்ராயம்

இந்நூலானது உலகத்திலுள்ள ஜாதிகளெல்லாம் ஒன்றே என்பதை அறிவித்து, பிபீலிகாதி (கண்களுக்குக் காணப்படாத சிறிய புழு) முதல் பிரமதேவன் வரையில் ஸர்வம் பிரம்ம சொரூபமேயென்று தெரிவித்து. அப்பிரம்ம சொரூபத்தில், நாமெல்லோரும் ஏதோ ஓர் ஜன்மத்தில் போய்ச் சேர்ந்து விடுவது திண்ணம் என்னும் ரகஸ்யார்த்தங்களையெல்லாம் இந்நூலில் மிகவும் தெளிவாய் எழுதி வெளியிட்டிருக்கின்றோம். மாயையென்னும் சமுத்திரத்தைக் கடந்து கடைத்தேறப் பட்டவர்களுக்கு இந்நூல் ஒன்றே போதுமானதாய் இருக்கிறது. பல சாஸ்திரங்களிலும் அடங்கியுள்ள ரகஸ்யார்த்தங்களும் இதில் அடங்கி இருப்பதனால் மோக்ஷமென்னும் வீட்டை அடைவதற்கு இந்நூல் ஒன்றே போதுமானதாயிருக்கின்றது. பல பெரியோர் அனேக ரகஸ்யங்களையெல்லாம் பாடல்களாயும் கவிகளாயும் பாடி வெளியிட்டதுபோல் 'இந்த ஜீவப் பிரம்மையக்கியத்தில், வெளியிடாமல், எல்லாம் வசன நடையாய் எழுதி வெளியிட்டிருக்கிறோம். சில நூல்களில் மனதை அடக்குவது அசாத்யமென்று எழுதியிருக்கின்றார்கள். இந்நூலில் மனதை அடக்குவது மிகவும் சுலபமென்று சொல்லி அம்மனதை நிலை நிறுத்தும் ரகஸ்யார்த்தங்களையெல்லாம் இதில் தெரிவித்திருக்கின்றோம். இதுவரையில் இந்நூல் பல பதிப்புகள் அச்சிட்டு பல ஆயிரம் புத்தகங்கள் வெளிவர அவைகளை வாங்கிப் படித்துப் பலர் நற்பயனடைந்துள்ளார்கள். ஆதலால், இந்நூலை ஒவ்வொருவரும் அவசியமாய் வரவழைத்து வாசிக்க வேண்டும். இந்நூல் எல்லா மதங்களையும் அநுசரித்துச் செல்வதனால் எல்ல மதஸ்தர்களும் இந்நூலை வாசித்துக் கடைந்தேறலாம் என்பதற்கு ஐயமில்லை.

இங்ஙனம்,

**பரமஹம்ஸ ஸச்சிதானந்தர்**

பேராசிரியர் **T.R. இராமசந்திரன்** M.A., M Litt
முன்னாள் முதல்வர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை
முன்னாள் இயக்குனர் தொலைதூரக் கல்வி இயக்ககம்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

# சிறப்புரை

இந்திய மெய்விளக்க வரலாறு வேதங்களுடன் தொடங்கியுள்ளது. வேதங்களில் காணப்படும் சில துதிப்பாடல்களில் வேதகாலத்திலேயே மாய வித்தை சார்ந்த சமய சடங்குகளின் வழியாக பொருளாதார நன்மைகளை அடைவதில் சில மனிதர்கள் விரும்பவில்லை என்பதையும், அன்றாட வாழ்கையில் கடைபிடித்து வரும் சாதாரணமான சமயத்தை காட்டிலும் மேலான ஒன்றை அறிய அவர்கள் முற்பட்டதையும் இந்த பிரபஞ்சத்தின் அறிவுபூர்வமாக அறிய இயலாது. மறை உண்மைகளை அறிவதில் மூழ்கி இருந்ததையும் சில துதிப்பாடல்கள் வாயிலாக நாம் அறிகிறோம். அதன் விளைவாக நாம் காணுகின்ற இயற்கை சக்திகளை இயக்கி வருகின்றவரும் பிரபஞ்சத்தில் காணப்படும் எல்ல உயிரனங்களை உருவாக்கியவருமான கண்ணுக்குப் புலப்படாத ஒரு மாபெரும் நபரைப் பற்றி பல வகையான கருத்துகளை வெளிப்படலாயின.

அந்த நபர் உலகின் உள்ள பொருட்கள் மற்றும் உயிரினங்களுக்குள்ளேயே இருப்பதாகவும் அதே நேரத்தில் அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டவராகவும் பிரபஞ்சத்தை அவர் கையில் கொண்டிருப்பதாகவும் அதே நேரத்தில் அவர் எனைய பொருட்கள் மற்றும் உயிரினங்களபோல இந்த பிரபஞ்சத்தில் அவர் தம்மை அழித்து கொள்ளாமல் நிலைத்து நிற்பதாகவும் அவர்கள் கருதினார். இந்த வகையான கருத்துகளை உபநிஷத்துகளில் அழுத்தம் திருத்தமாக கூறப்பட்டிருக்கின்றன. அந்த அழியா நபரை பிரம்மம் என்று அழைக்கலாயினர்.

மாவிடனை ஆத்மா என்று கூறினர். மேலும் பிரம்மம் என்ற பரம்பொருள் ஒவ்வொரு ஆத்மாவிலும் உறைவதாகக் கருதினர். எப்பொழுது மனிதன் அந்த உண்மையை அறிகின்றானோ அந்தக் கணமே அவன் பிறப்பு இறப்பு போன்ற சம்சாரசாகரத்தில் இருந்து விடுதலைப் பெறுகின்றான். அதனையே வீடுபேறு என்கின்றனர். ஜீவப்பிரம்மைக்கியத்தை ஆன்மீகப் பயிற்சியின் வாயிலாக அடையக்கூடும் என்ற உயரிய கருத்தினை அடிப்படையாகக் கொண்டு யோகீஸ்வரர் **ஸ்ரீ கடப்பை சச்சிதானந்த சுவாமிகள்** ஜீவப்பிரம்மைக்கிய வேதாந்த ரகஸ்யம் என்ற தலைப்பில் ஒரு அரிய நூலைப் படைத்துள்ளார். இந்நூலில் அவர் தம் சொந்த வாழ்க்கையில் அனுபவப்பூர்வமாக கண்டறிந்த உண்மைகளுக்கு செயல் விளக்கங்களை தந்துள்ளார். இதைப்படிக்கும் ஒவ்வொருவரும் அவர் அனுபவப்பூர்வமாக கண்டறிந்த உண்மைகளை அறிந்து அவர்கூறியருளியுள்ள எளிய வழிகளை கடைபிடித்து வருவாராகில் வாழ்க்கையில் ஏற்படும் துன்பங்களிலிருந்து விடுபட்டு பேரின்பம் எனப்படும் மோட்ச நிலையை அடைவது உறுதி.

இந்த நூலிற்கு அணிந்துரை வழங்குவதில் பெருமிதம் அடைகின்றேன். யோகீஸ்வரர் **ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள்** ஆன்மீகத்தில் ஆழ்ந்து இருந்த போதிலும் எழை மக்களுடைய கல்வி வளர்ச்சிக்கும் பேருதவி செய்து வந்தார். அவ்வாறு பயன் அடைந்தவர்களுள் அடியேனும் ஒருவன் என்பதை கூறுவதில் பெருமை அடைகின்றேன். சமுதாயத்தில் குறிப்பிடதக்க மனிதர்களுள் ஒருவன் என்ற நிலையை அடைவதற்கு நான் அவருக்கு மிகவும் கடமைப்பட்டவனாகின்றேன். யோகீஸ்வரர் விட்டுச் சென்ற இந்த அறிய நூல் அழிந்துவிடாமல் அவ்வப் போது மறுபதிப்புச் செய்து வரும் திரு. D. **நித்தியானந்தனின்** ஆன்மிகப் பணி மேலும் சிறந்து விளங்க வேண்டும் என்று வாழ்த்துவதில் பூரிப்படைகிறேன்.

# THE HINDU

INDIA'S NATIONAL NEWSPAPER

## 22-1-1985

It is one of the heartening sings of these times, when religion and scriptures are at a discount, that this auther should have written this book in Tamil and published it at a relatively low price. Those who buy and read this work will indeed achive, without doubt, enlightenment on the central issues of life, and the means of transcending mere animal existence and achieving spiritual illumination.


| SRI SACHIDANANDAR & CO., | ஸ்ரீ ஸச்சிதானந்தர் கம்பெனி |
| --- | --- |
| (Book Seller & Publishers) | (புத்தக விற்பனையாளர் பதிப்பாளர்) |
| 24, Srinivasa Perumal | 24, சீனிவாச பெருமாள் |
| Sannathy 1st Street, | சன்னதி முதல் தெரு, |
| Royapettah, Chennai -14. | ராயப்பேட்டை சென்னை-14. |
| ☎ 822 5953. | போன்: 822 5953 |

# ஜீவ பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம்

## மதிப்புரை

ஆசிரியர்
ஏ. என். சிவராமன்

DINAMANI

**20-5-1985**

மோட்சம் என்னும் பேரின்ப நிலையை சாதாரண நிலையில் உள்ள சாமானிய அறிவு படைத்தவர்களும் அடைந்து உய்வதற்கான வழிகாட்டும் நூல் இது. பொதுவாக, படித்த அறிவாளிகள் மட்டுமே மோட்ச ஞானத்தைப் பெற முடியும் என்றில்லாமல் அனைவருக்கும் மோட்ச ஞானத்தை அடையும் வழியை இந்த நூலிலே ஸ்ரீ பரமஹம்ஸ ஸச்சிதானந்த யோகீஸ்வர சுவாமிகள் பல்வேறு மேற்கோள்களுடன் விளக்கியிருக்கிறார்.

இந்நூல் 141 அத்தியாயங்களில் மனித வாழ்க்கையின் நிலைகள், தன்மைகள், நமது தினசரி வாழ்க்கையில் நம்முன்னோர்களின் சம்பிரதாயப்படி பின்பற்றி வரும் சில நடைமுறைகளின் சிறப்புகள், கடவுளின் வடிவம், இறைவனை அறிய, நாயன்மார்கள், ஆழ்வார்கள் மற்றும் அருள் முனிவர்கள் பலர் கூறிய நல் உபதேசங்கள், இராமாயணம் போன்ற தெய்வீக நூல்களின் நற்கருத்துக்கள் ஆகியவை ரத்தின மாலையாகத் தொடுக்கப்பட்டு உள்ளன. யோகப்பியாசம் போன்ற சூட்சமமான விஷயங்களையும் ஆசிரியர் சுவையாகச் சொல்லியிருக்கிறார்.

# விஷய அட்டவணை

| எண் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| 29. | காம சொரூபம் | 236 |
| 30. | கடவுளுக்கு நைவேத்தியம் காட்டிச் சாப்பிடுதல் | 248 |
| 31. | அமாவாசையில் பிதுர்தர்ப்பணம் மந்திரம் | 262 |
| 32. | அன்னம் மந்திரம் பூர்வகமாய் சாப்பிடுவதின் பலன் | 269 |
| 33. | சிருஷ்டிக்கு முன் பிரபஞ்சம் எவ்விதமாயிருந்தது | 277 |
| 34. | பஞ்ச பூதங்களினால் சரீரம் உண்டாயிற்று | 280 |
| 35. | சரீர லக்ஷணம் சாங்கிய விசாரணை | 287 |
| 36. | நாடிகளும் அவற்றின் குணங்களும் | 296 |
| 37. | சரீரத்திரயம் | 298 |
| 38. | பஞ்சகோச விவரங்கள் | 303 |
| 39. | பஞ்சீகரணம் | 315 |
| 40. | தூலதேக பஞ்சீகரண அந்தக்கரணங்கள் | 317 |
| 41. | சாத்வீக ராஜஸ தாமஸ குணங்கள் | 320 |
| 42. | கர்ப்பத்தில் பிண்டம் தரிப்பது | 322 |
| 43. | உபநிஷத்து ரஹஸ்யார்த்தம் வெளியிடுதல் | 348 |
| 44. | ஜாக்கிரதை சொப்பன சுஷுப்தி துரியாவஸ்தைகள் | 353 |
| 45. | ஜகத்சிருஷ்டி மனோசிருஷ்ட்டிலயம் | 357 |
| 46. | சரீரத்தில் ஜீவாத்மா பரமாத்மா நிவசிப்பது | 370 |
| 47. | ஜீவன் வினைப்பயனை அனுபவிப்பது | 375 |
| 48. | தத்துவங்களைப் பரிசோதனை செய்தல் | 383 |
| 49. | கிருஷ்ணன் பிரமதேவர் கர்வத்தை அடக்குதல் | 390 |
| 50. | நாரதரை மாயையில் அகப்படும்படி செய்தல் | 401 |
| 51. | சிஷ்யன் தத்துவங்களை பரிசோதனை செய்தல் | 411 |
| 52. | யார் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் | 419 |
| 53. | அவதூதர்களுக்கு ஜாதிபேதமில்லை | 457 |
| 54. | ஜீவன் முக்தன் லக்ஷணம் | 460 |
| 55. | சம்சார வாசனை வாசனாத்திரவியங்கள் | 474 |
| 56. | பந்தமோக்ஷமி ஆத்மா அநாத்மா லக்ஷணங்கள் | 4[illegible]2 |

| எண் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| 57. | சரசாஸ்வரம் | 507 |
| 58. | மூச்சை நாசிகளில் மாற்றும் விதம் | 510 |
| 59. | வலது நாசியில் மூச்சு நடக்கும் பலன் | 514 |
| 60. | ஜீரண சக்தி ஆயுள் விருத்தி | 518 |
| 61. | வியாதிகளை மேற்கிளம்பச் செய்வது எது? | 522 |
| 62. | பரமசிவன் காக்ஷிதர அழைப்பது | 526 |
| 63. | பஞ்சாக்ஷரத்தில் 'ய' என்பது ஜீவனாயிருக்கின்றது | 531 |
| 64. | நடராஜன் பஞ்சாக்ஷரத்தையே சரீரமாய்த் தரித்தது | 532 |
| 65. | யோகதத்வோபநிஷத் பிரமாணம் | 541 |
| 66. | யோகாப்பியாச காலத்தில் தேகபாதை | 570 |
| 67. | உபநயந காயத்ரீ ரகசியம் | 576 |
| 68. | கும்பக பிராணாயம ஸந்தியாவந்தன உபதேசம் | 589 |
| 69. | அரை காயத்திரி ஜபம் செய்ய உபதேசித்தல் | 592 |
| 70. | ஒரு காயத்திரி ஜபம் செய்ய உபதேசித்தல் | 602 |
| 71. | இரண்டு காயத்திரி ஜபம் செய்ய உபதேசித்தல் | 604 |
| 72. | பிரபஞ்ச விஷயத்தில் மனதைச் செலுத்தாமை | 616 |
| 73. | மனம் அசையாமல் ஒய்ந்திருப்பது | 623 |
| 74. | ஸோஹம் மந்திரம் ஜபம் முறையை உபதேசித்தல் | 630 |
| 75. | மூச்சை நிறுத்தி ஆயுளை விருத்தி செய்வது | 633 |
| 76. | சரீரத்தில் ரத்தம் மாறிக் கொண்டிருப்பது | 640 |
| 77. | காதுகளில் நாதசப்தம் | 646 |
| 78. | நூலாசிரியர் நாதசப்தங்களைக் கேட்டது | 649 |
| 79. | ஆதிசேஷன்மீது ஸ்ரீரங்கநாதர் ஸயனித்தல் | 657 |
| 80. | ஸ்ரீமந் நாராயணமூர்த்தி நாபியில் பிரம்மதேவர் பிறந்தார் | 664 |
| 81. | மூச்சுக்கும் மனத்திற்கும் உள்ள பேதங்கள் | 677 |
| 82. | மனதிற்கு திஷ்டாந்தம் காட்டுதல் | 678 |
| 83. | கைக்குறி சிதாகாசத்தில் மனதை லயப்படுதல் | 683 |
| 84. | கைக்குறி சிதாகாசம் மற்றொரு உபதேசம் | 686 |

| எண் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|



கடப்பை ஸ்ரீ பரம ஹம்ஸ ஸச்சிதானந்த யோகீஸ்வரர்

மடாலய மூலஸ்தானம்

கெம்பாபுர அக்ரஹாரம், பெங்களூர்-560 023, இந்தியா

# பரமஹம்ஸ ஸ்ரீ ஸச்சிதானந்த யோகீஸ்வரர்



யோகத்தில் உட்காரும்
பொழுது இருந்த
சரீரம்.



3-மாதம் 13-நாள்
யோகத்திலிருந்து
வெளிவந்த பொழுது
இருந்த சரீரம்.



ஸ்ரீயோகீஸ்வரரின்
துணைவியார்



துணைவியார் மறைந்த
பிறகு இருந்த ஆஸ்ரமம்



**கடப்பை ஸ்ரீ பரமஹம்ஸ சச்சிதானந்த யோகீஸ்வரர் (வயது 86)**

*ஸ்ரீ போகீஸ்வரர் இடது ஹஸ்தம் பிரம்மம், வலது ஹஸ்தம் ஆத்மா. இவ்விரண்டும் ஒன்ருய் சேருவதே மோக்ஷமென்று தம் ஹஸ்தங்களால் ஸ்ரீ யோகீஸ்வரர் காட்டுகிருர்.*



கடப்பை ஸ்ரீ பரமஹம்ஸ ஸச்சிதானந்த யோகீஸ்வரர்
மடாலயம், கெம்பாபுர அக்ரஹாரம
பெங்களூர் - 560 023, இந்தியா



கடப்பை ஸ்ரீ பரமஹம்ஸ ஸச்சிதானந்த யோகீஸ்வரர்
மடாலயம், கெம்பாபுர அக்ரஹாரம
பெங்களூர் - 560 023, இந்தியா



கடப்பை
ஸ்ரீ பரமஹம்ஸ சச்சிதானந்த யோகீஸ்வரர்



ஶ்ரீ வரசித்தி விநாயகர்

## வெண்பா

அடையு மடியார்க் கருள் செய்யுங் கோவே
திடமொ டெனக்குமருள் செய்வாய்-படியிற்
பிரசித்தி பெற்றுள்ள பேரின்ப ஞான
வரசித்தி வாரணதே வா.

# ஸ்ரீ வரசித்தி விநாயகர்

ஹம்ஸத்வனி (வாதாபி கணபதிம் என்ற மெட்டு) ஆதி

## பல்லவி

மூலா திபதி பாலா நுலா ஜெக
மோன நாயக ஞானியர் தொழு சுகா (மூ)

## அநு பல்லவி

பாலா திமல தேவரும் நீயே
வந்தனை செய்வோர் மனத்தக வாயே
பாரிலோ தவா வாசிப தவா
தேசினா தவா ஆரியோ தவா (மூ)

## சரணம்

விதேக முக்தி யளித்தி நாதா
வேத மந்த்ரமாய் விளங்கிடு நீதா
நிதான பிரணவ பரசுக போதா
நிமல நிரஞ்சன நித்யவிநோதா (மூ)

இதோ பதேச மஹாபிர மாதா
இஷ்ட காமியார்த் தந்தரு தாதா
சுதா சலனமறு சத்திய பூதா
ஷட்வித காரிய சமய வதீதா (மூ)

மதாங்கயத்திரு துரிதம் முகவிபரீதா
மலிவுறு சஞ்சித வெம்பவசேதா
பதாம் புயப்புண யப்பிர சாதா
பரவு சச்சிதானந்த சங்கீதா (மூ)

தத் ஸத்

ஸ்ரீ சர்வ பரிபூரண பரப்பிரம்மனே நம :

# முகவுரை

*தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டுவார் போல்*
*ஆலத்தி னுடுக்கள் காட்டி யருந்ததி காட்டுவார்போல்*
*தூலத்தை முன்புக்காட்டிச் சூக்கும சொரூபமான*
*மூலத்தைப் பின்புகாட்ட முனிவரர் தொடங்கினாரே.*

(கைவல்யம்)

உலகத்திலுள்ள ஜனங்கள் ஒரு மரத்தின் கிளையைக் குறிப்பிட்டு அதன் மத்தியில் காட்டும் மூன்றாம் பிறைச் சந்திரனைப் போலவும் ஆகாயத்தில் சப்த ரிஷிகளின் நக்ஷத்திரங்களைக் குறிப்பிட்டு, அதிலிருக்கும் வசிஷ்டரது நக்ஷத்திரத்தைக் காட்டி அவர் பக்கத்தில் மினுக் மினுக் கென்று அடிக்கடி மின்னிக் கொண்டிருக்கும் வசிஷ்டரது மனைவி பதிவிரதா சிரோன்மணியாகிய அருந்ததி தேவியை விவாக காலத்தில் தம்பதிகளுக்கு புரோகிதர் குறிப்பிட்டுக் காட்டுவது போல, இந்த **"ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம்"** மானது, ஸதூல்மாயுள்ள தத்துவங்களை யெல்லாம் முன்னதாய்ச் சொல்லி, அதன் பிறகு அணுவிலும் அணுவாயிருக்கும் பரப்பிரம்மத்தைக் குறித்து பின் சொல்லபோவது ஆசார்ய பிரசாதம் போன்றதாயிருந்து சூக்ஷுமம சொரூபமாயிருக்கும் பரப்பிரம்மத்தையே உபதேசிக்கின்றது. ஜீவசாக்ஷியாகிய தானும், ஈஸ்வரனாகிய பரப்பிரம்மமும் ஒன்றே யென்று அறியாமல், ஸ்தூலசூக்ஷுமம காரணங்களினால் உண்டாகி தேகமே

நானென்று அபிமானம் வைத்து, நான் பிராம்மணனென்று பிரமை யடைந்து அனேக யுக வருக்ஷங்களாய் புருக்ஷன் கால சக்கரத்தில் (சுழல் காற்றில் அகப்பட்டுக்கொண்ட செத்தை யானது கிறு கிறுவென்று சுழல்வதுபோல்) சுழன்று கொண்டு நானாவித ஜந்துகளின் யோனிகளில் போய்ப் பிறந்து, பிறந்து புண்ய பாவமென்னும் இரண்டு கர்மங்களைச் செய்து, அதனால், சுகதுக்கங்களை அனுபவித்துப் பிறந்துகொண்டு மறுபடியும் இறந்து கொண்டுமாய் இருக்கின்றார்கள். "பிரம்மமே நான்" என்று தெரிந்து கொள்ளும் வரையில் ஜனன மரணங்கள் வந்துகொண்டே இருக்கும். ஆதலால், உலகத்தில் ஸ்திரீ புருஷ ரூபமாய் இருக்கும் மானிட ஜனங்களெல்லோரும், மாயையென்கிற ஆசையில் கட்டுபட்டு மிகவும் ஆழமான சம்சார மென்னும் சமுத்திரத்தில் மூழ்கி என்றால், சம்சார மென்பது மனைவி மக்கள் மீதுள்ள ஆசையேயல்ல; எந்தப் பொருள் தனக்கு வேண்டு மென்று நினைக்கின்றானோ அவையாவும் சம்சார பந்த மென்றே சொல்லப்படும். இந்த சம்சாரமென்னும் பந்தமே பெரிய சமுத்திரமாய் இருக்கின்றது. சமுத்திரத்தைத் தாண்டினாலும் தாண்டலாமேயொழிய சம்சார மென்னும் சமுத் திரத்தை யோகிகள் தவிர மற்ற எவர்களாலும் தாண்ட முடியாது. இப்படிப் பட்ட சம்சாரமென்னும் சமுத்திரத்தில் மூழ்கி, தனாசை என்னும் வியாதியினால் பீடிக்கப்பட்டு, மின்னலைப்போல் க்ஷண நேரம் இருக்கும் ஸ்திரீ ஸம்போக சுகங்களுக்கு ஆசைப்பட்டு எப்பொழுதும் வருத்தமடைந்து கொண்டிருப்பார்களேயல்லாமல் நித்தியானந்த பதவியை வேண்டார்கள். இவர்கள் செய்வது எப்படியிருக்கிற தென்றால், காட்டில் பெரிய பள்ளம் வெட்டி அப்பள்ளத்தின் மேல் கழிகளைப் பரப்பி அதன்மேல் பாயும் பாயின் மேல் மண்ணும், எருவும் போட்டு விதை விதைத்து செழுமையாய் வளர்த்து வைக்கப்பட்ட பயிரைப் பார்த்து, அதனால் கேடு சம்பவிக்குமென்று யோசனையில்லாத யானையானது, அந்த பயிரை மேய்வதற்காக துரிதப்பட்டுச்சென்று அந்தப் பாழும் பள்ளத்தில் வீழ்வதுபோல் இருக்கிறது.

"ஸப்தமாய வ்ருதோ நைவ தமஸோ யாதி புஷ்தரே
பிந்நேதமஸி சைகத்வ மேகமேவாநு பஸ்யதி"

என்னும் சுருதிரீதியாய் (1) 'சப்தத்தினால் ஸர்ப்பமும். (2) 'ஸ்பர்ஸ' த்தினால் ஸமரீ மிருகங்களும், (3) ரூபத்தினால் வீட்டில் பூச்சிகளும்,(4) 'ரஸ' த்தினால் மச்சங்களும், அதாவது. (1) பாம்பாட்டியனவன் மோடி வாசிக்கும் பொழுது ஸர்ப்பங்கள் புற்றிலிருந்து வெளிவந்து அந்த சப்தத்தைக் கேட்டு சந்தோக்ஷித்துப் படம் விரித்துத் தன்னை மறந்து ஆடிக்கொண்டிருக்கும் சமயத்தில் மேற்படி பாம்பாட்டியால் அந்த ஸர்ப்பம் பிடிபட்டு அநேக துன்பங்களை அடைந்து மரணமடைவது போலும், (2) காட்டிலுள்ள ஸமரீமிருகம், வேடன் வலைக்கு அகப்படாமல் ஓடும் பொழுது, அதன் வாலிலுள்ள மயிர்கள் புதரில் அகப்பட்டுக் கொண்டு ஓட ஸாத்தியமாகாமல் நின்றுவிடும். அப்பொழுது வேடன் கையில் அந்த ஸமரீமிருகம் அகப்பட்டு மரண மடைவதுபோலும். (3) விட்டில் பூச்சிகள் தீபபிராகசத்தைப் பார்த்து அது பழமென பிரமித்து அந்த தீபத்தில் வீழ்ந்து மரணமடைவது போலும் (4) தூண்டி முள்ளில் மாம்சத்தையும் கோர்த்து ஜலத்தில் போட்டவுடன் மச்சங்கள் நா ருசிக்காக ஆசைப்பட்டு தூண்டின் முள்ளில் அகப்பட்டு, மச்சங்கள் (மீன்கள்) மரணமடைவது போலும், (5) சம்பங்கி புஷ்ப வாசனைக்கு ஆசைப்பட்டுத் தும்பிகள் அப்புஷ்பத்தில் சேர்ந்து மரணமடைவதுபோலும் புருஷர்களுக்கு முன்ஜன்ம புண்ய விசேஷத்தினால் துர்பலமாண ஜன்மம் உண்டாகியும், ஈஸ்வர பக்தியில்லாமல் எல்லாவற்றிலும் விசேஷ ஆசை யுடையவர்களாயிருந்து சம்சாரமென்னும் பாழும் பள்ளத் தில் வீழ்ந்து நசிக்கின்றார்கள். ஆதலால், சில நாளில் அழிந்து போகும் இத்தேகத்தை நம்பி வீணாய்க் காலங்கழித்துக் கெடாமல் இத்தேக மெடுத்தது முக்கியமாய் மோக்ஷத்தை அடைவதற்கே என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

மோக்ஷமென்றால், எல்லா பந்தத்தினின்றும் விடுதலை அடைதலேயாம். இப்பந்தம் பாஹ்யம், ஆந்தரம் என இரண்டு வகைப்படும்.

பாஹ்யபந்தமாவது:- எனது வீடு, எனது பார்யாள், எனது புத்திரர்கள், எனது புத்திரிகள், எனது சரீரம், எனது பூமி, எனது மாடு, எனது தோட்டம், எனது துரவுகள், [illegible], என்று தனதல்லாத வேறு வஸ்துக்களையெல்லாம் தனதாக பாவிப்பது.

ஆந்தரபந்தமாவது:- காம, குரோத, லோப, மோக, மத, மச்சர, டம்ப, தர்ப, ஈர்ஷை, அசூயை என்னும் இந்தப்பத்துக் குணங்களினால் புருஷனுக்கு பந்தம் உண்டாகின்றது. இந்த பத்து பந்தங்களையும் இந்நூலில் பிரபஞ்ச விரக்தி மார்க்கம் என்னும் அட்டவணையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்த பந்தம் அஞ்ஞானத்தினால் ஏற்பட்டதேயன்றி வேறல்ல இவ்வஞ்ஞானத்தை விசாரிக்குமளவில் இது ஜீவனுக்கு அநேக ஜன்மங்களாய்த் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் காரண சரீரத்தின் வாசனையினால் இவனுக்கு, தாரேஷணை (மனைவியின்மேல் ஆசை) புத்திர ரேஷணை (புத்திரர்களின் மேல் ஆசை) தனேஷணை (பொன் வெள்ளி முதலானவைகளின் மேல் ஆசை) இது முக்கியமாய் கிரகிக்க வேண்டிய விஷயம். இவைகளை யெல்லாம் இந்நூலில் எழுதப்பட்டிருக்கின்றன. இந்த ஈஷணத்திரயங்கள் ஜீவனுடன்கூடவே சூக்ஷும சரீரத்துடன் அணு சொரூபமாய்க் (கண்களுக்குக் காணப்படாத சிறிய வஸ்துவாய்) கிளம்பி அவனவன் செய்த கர்மத்திற்குத் தக்கபடி அந்தத் தாயின் கர்ப்பத்திலிருக்கும் பிண்டத்தில் போய்ச் சேர்ந்து மறுபடியும் சிசுவாய்ப் பிறந்தபின், மேற்சொல்லிய காமக் குரோதாதிகளும், ஈஷணத்திரயங்கள் யாவும் அந்த சிசுவில் அடங்கியிருந்து பிறகு சிசுவானது பெரிதாய் வளர வளர இந்தக் காம குரோதாதிகளும் ஈஷணத்திரயங்கள் சிசுவுடன் கூடவே வளர்ந்து இடை விடாமல் அவனுடன் கூடவே தொடர்ந்து கொண்டே வருகின்றன: இவைகளையெல்லாம் அவர்களுக்கு ஒருவரும் கற்றுக்கொடுப்பதில்லை. பூர்வ ஜன்ம வாசனையினால்

அது, தனக்குத் தானாகவே உண்டாகின்றன, ஆதலால் இந்த ஈஷணத்திரயங்களும், ஆசாபாசங்களும், காமக்குரோதாதிகளும் ஸ்திரீ, புருஷர்கள் கூடவே வளர்ந்து வந்தன. இவைகளை கிரமக்கிரமமாய் யோக சாதனை யினாலும், ஆத்ம விசாரணையிலும் போக்கடித்தால், சிதா காச (ஜீவாத்ம) சொரூபமாயிருக்கும் 'நீட ததாகாரமாய் (தான் தானாய்) நின்று விடுவாய். இவ்வாறு நின்று விடுவதே முக்தியடைவது என்பதேயாம்.

பரமேஸ்வரன் ஜீவர்களின்மேல் கருணையுடைய வராய் இருந்து வேதங்களையுண்டாக்கி அதன் வழியாய் ஜீவர்கள் சித்தசுத்தி அடைந்து முக்திபெறுமாறு, அவ்வேதங்களை கர்மகாண்ட, ஞானகாண்டங்களாய்ப் பிரித்து தான் சகுண ரூபமாய் என்றால், கண்களுக்குத் தெரியும்படி விக்கிரக ரூபத்துடன் நின்று: சங்கு, சக்கரம், கதை, கரிய திருமேனி முதலியன தரித்து விஷ்ணு மூர்த்தியாயும், சூலம் டமரகங் (உடுக்கை. ரிஷப வாகனம் தவளமேனி வெண்மை தேகம்) முதலியன தரித்து மகாதேவராயும் நின்று, வைகுண்ட கலசங்களில் பிரவேசித்து அநுக்கிரகித்தார். அவ்வாறு அநுக்கிரகித்தும் ஜீவர் களுக்குத் தத்து ஞான நிஷ்ட்டை யுண்டாகவில்லை, ஆதலால், விஷ்ணுமூர்த்தி அம்ஸமே வியாசராக அவதரித்து அவ்வேத வேதாந்த சாராமிருதங்களைத்திரட்டி, சரத்தில் முத்துக்களைக் கோர்த்ததுபோல் ஒவ்வொரு பிரம்ம சூத்திரத்தையும் ஏற்படுத்தினார். இதற்கும் உண்மைப் பொருள் விளங்காமையால் பற்பல மதஸ்த்தர்களும் அவரவர் கொள்கையின் கருத்திற்கேற்றபடி பற்பல வியாக்கியானங்களைச் செய்து கொண்டார்கள். அதனால், ஸ்ரீ 'சம்புட வானவர், உண்மைக் கருத்தை ஜீவர்களுக்கு உணர்த்தவேண்டி ஸ்ரீசங்கராச்சார் யராக அவதரித்து இந்த பிரம்மசூத்திரத்திற்கு பதவிபாகஞ் செய்து யதார்த்த அர்த்தத்தைத் தெரிவிக்கும் சாரீர பாஷ்யத்தையும் உண்டாக் கினார். அதுவும் சாமான்யர் கட்கு அர்த்தமாக வில்லை யென்று மற்ற கிரந்தங்களையும் உண்டாக்கினார்.

ஆயினும், அவையனைத்தும் ஸம்ஸ்கிருத பாஷை யிலிருப்பதனால் அந்த பாஷை ஞான முள்ளோர்க்கேயன்றி ஏனையோர்க்கும் உபயோகமாகாததனால் சில பெரியோர் கள் நமது தேச பாஷைகளில் அநேக அத்வைத கிரந்தங் களைப் பாடல்களாய்ப் பாடினார்கள். அவைகளைப் படித்து அநுபவம் பெறுவதற்குச் சாத்தியமாகா தவர்களுக்காக இப்பொழுது அடியேனால் இயற்றியுள்ள இந்த ஜீவப் பிரம்மையக்ய வேதாந்த ரகஸ்யம் மிகவும் சுலபமாயும், சிரவண மநந நிதித்யாசங்கள் மூலமாய் சிறுவர் சிறுமியர்களும் ஆத்மாநுபவத்தை தெளிவாய்த் தெரிந்து கொள்ளும் படி, கரதலாமகலம் (உள்ளங்கை நெல்லிக்கனி) போல் சுருதி. ஸ்மிருதி பிரமாணங்களுடன் அதிக சுலபமான நடையில், தமிழிலும், இங்கிலீஷிலும். தெலுங்கிலும், கன்னடத்திலும் வசனரூபமாய் எழுதப் பட்டிருக்கிறது, இந்தக்கிரந்தத்தை வாசிப்பதனால் பிரம்மமே தானென்று அறிந்து ஆனந்திப்பதற்கு இது ஒவ்வொரு வருக்கும் விசேஷ முக்கியமானது. உள்ளங்கை நெல்லிக்கனி யென்றால், உள்ளங்கையில் நெல்லிக்கனி வைத்து அதில் இருக்கும் கோடுகளை எண்ணிக் கொண்டால் உள்ளே அத்தனை பிளப்புகள் இருக்கிற தென்று சொல்லலாம், வேதாந்த உபந்யாசத்தில் இந்த நெல்லிக்கனியை ஒரு திருஷ்ட்டாந்த மாய்ச் சொல்லுவார்கள்.

உலகத்திலுள்ள ஜனங்களெல்லாம் மனைவி புத்ர பௌத்திர தனதான்யாதி சம்பத்துகள் இருக்கவேண்டு மென்றும், மோக்ஷமும் உண்டாக வேண்டுமென்றும் நினைக்கின்றார்கள், இவ்விரண்டும் எவ்வாறு உண்டாகும்? மனைவி புத்திர தனதான்யாதி சம்பத்துகள்யாவும் மோக்ஷத்திற்கு நேர் விரோதமானவர்கள். மேற் சொல்லிய வஸ்த்துக்களின் மேல் இருக்கும் ஆசைகளெல்லாம் ஸ்திரீ புருஷர்களைவிட்டு நீங்கினால். அப்பொழுது மோக்ஷ மென்னும் வாக்கியத்திற்குச் சரியான அர்த்தம் என்ன வென்றால் விடுதலை. விடுதலையென்றால் எல்லா ஆசைகளிலிருந்து விடுபடுவது. இது விஷயம் இந்நூலில் அநேகமுறை சொல்லியிருக்கின்றோம்.

மேற்சொல்லிய ஆசைகள் யாவும் அநேக கோடானுகோடி ஜன்மங்களாய் ஸ்திரீ புருஷர்களைத் தொடர்ந்து கொண்டே வருவதானால் அந்தப் பாழும் ஆசைகள் மோக்ஷமென்னும் வீட்டை அடைய விடாமல் செய்கின்றன. இதற்கு வாசிட்டம் பிரமாணம் என்ன வென்றால்,

> வாதனைப் பழக்கத்தாலே மன்னுயி
> ரெல்லாங் கட்டுண்
> டேதமா மந்தப் பழக்க மிறுகுமே
> விடரைச் செய்யும்
> வேதையில் தாந்திர நழுவுமேல்
> வேட்கை யாலே
> திதிலோ ர்னேகங்கற்றோர் தீர்
> ரென்னினுங் கட்டுண்பர்

இதுவரையில் சொல்லிய ஆசைகளுக்கே மாயை யென்று சொல்லப்படும். அதாவது, இல்லாததை உண்டென்று பிரமையை உண்டாக்குவதே மாயை. எப்படி யென்றால் உங்கள் முதல் பாட்டன் பாட்டி, இரண்டாம் பாட்டன் பாட்டி, மூன்றாம் பாட்டன் பாட்டி முதலானவர் களெல்லோரும் மனைவி, புத்திர தனதான்யாதி சம்பத்து களின் மேல் சில வருஷங்கள் மாத்திரமே ஆசையுடையவர் களாயிருந்து கடைசியில் எல்லோரையும் விட்டுத் தான் மாத்திரம் தனியாய்போய் விட்ட விஷயம் எல்லோரும் அறிந்த விஷயமேயல்லவா? இதனால் என்ன ஏற்படுகிற தென்றால், சில நாளைக்குள் அறிந்து போகத்தக்க ஸ்திரீ புருஷர்களையும், தனதான்யாதி ஐஸ்வர்யங்களையும், எனது எனது என்று நினைத்து மாண்டவர்கள் கோடான கோடி பேர்கள் உண்டு, அழியும் வஸ்துவை யெல்லாம் நிஜமென்று எண்ணி பிரமையடைவதே மாயையென்றும், அவித்தை யென்றும், அஞ்ஞானமென்றும் சொல்லப்படும். ஆதலால் எல்லோரும் எல்லா ஆசைகளையும் அறவே ஒழித்து மோக்ஷ மென்னும் வீட்டை அடைவதற்காகவே, இந்த "ஜீவப்பிரம் மைக்கிய வேதாந்த ரஹஸ்ய" நூலை எழுதி வெளியிட்டிரு

கின்றோம். வேதாந்த மென்றால், வேதங் களுக்கெல்லாம் கடைசியில் முடிவாகிய பதவி எதுவோ அதுவே வேதாந்தம். அதாவது, ருக், யஜுர், சாம, அதர்வண மென்னும் நான்கு வேதங்களையும் பரிசோதித்துக் கொண்டே செல்லச் செல்ல கடைசியில் மனதை ஒரே நிலையாய் நிறுத்திப் பிறகு அந்த ஓர் நிலையும் அற்றால் தானே தான் ஆகலாம் என்று வேதங் களின் முடிவில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட முடிவான பதவி எதுவோ அதை நூலில் தெரிவித்திருக் கின்றோம். ஆதலால், பல இடங்களிலும் குரங்கைப்போல் ஓடித்திரியும் மனதை எங்கும் ஓட விடாமல் பிரம்ம சூத்திர மென்னும் மூச்சினால் கட்டி ஒரே நிலையாய் நிறுத்திப் பிறகு அந்த ஓர் நிலையையும் சூன்யமாய்ச் செய்தால் அந்த க்ஷணமே ஆனந்தமுண்டாகும், மனது எதுவரையில் ஓடிக் கொண்டிருக்கின்றதோ, அதுவரையில் ஆனந்தம் உண்டா கவேமாட்டா. ஆதலால், எந்த மந்திரங்களும் ஜபங்களும் பூஜைகளும் செய்யாமல் ஆகாச வடிவாகிய பரமாத்ம சொரூபத்தில் மனதை ஐக்கியம் செய்துவிட வேண்டும். இவ்விதமாய் மனதை ஆகாச வடிவத்தில் ஐக்கியம் செய்து விடுவதே வேதங்களின் முடிவாகிய ரகஸ்யார்த்தம். ஆனால் ஒரே முறையாய் மனதை ஆகாச வடிவத்தில் கொண்டுபோய் ஐக்கியம் செய்வது மிகவும் கஷ்டம். ஆதலால், மனதை ஒரே நாட்டத்தில் நிறுத்துவதற்காக முதல் முதல் விக்கிரக ஆராதனையைச் செய்ய வேண்டும், இவ்வாறு விக்கிரக ஆராதனையைச் செய்து வந்தால் மனம் ஒரே நாட்டத்தில் நின்று பிறகு அநேக வருஷ சாதனையினால் அந்த ஓர் நாட்டமும் தனக்குத் தானாகவே மறைந்துவிடும். இவ்வாறான ஈஸ்வர பக்தியைச் செய்யாமல் எப்பொழுதும் பொய் சொல்லிக் கொண்டும், அநேகவித அக்கிரமங்களைச் செய்து கொண்டும் பாவத்தை சம்பாதித்துக் கொண்டும் அநேக தடவைகளில் நானாவித யோனியில் போய்ப் பிறந்து கொண்டும், மறுபடியும் இறந்து கொண்டுமாய் மாயையென்னும் இருளில் அகப்பட்டு வழி தெரியாமல்

துக்கமென்னும் சமுத்திரத்தில் மூழ்கிப் பலவித துக்கங்களை அனுபவித்துக் கொண்டிருப்பதனால், இவர்களை அடிக்கடி சிருஷ்டி செய்ய பிரம்மதேவருக்கும் விசேஷ கஷ்டத்தைக் கொடுத்துக் கொண்டு வருகிறார்கள். பிரபஞ்சத்தையும் ஜீவர்களையும் சிருஷ்டி செய்து அவரவர்கள் கேட்டவை களையெல்லாம் கொடுக்கும்படி பகவான் பிரமதேவருக்குச் சொல்லியிருப்ப தனால் ஜீவர்கள் நித்தியானந்த பதவியைக் கேளாமல், சிலநாளில் அழிந்து போகக்கூடிய துக்ககரமாகிய விஷய சுகங்களை அநுபவிக்க இச்சைக்கொண்டு, வரங்கேட்டு, மோக மென்னும் இருளில் அகப்பட்டுக் கேவல விஷயானந்தத்தில் மூழ்கிக் கடைசியில் பசு பக்ஷி முதலாகிய ஜந்துக்களின் ஜன்மங்களையடைந்து நல்ல வழிக்குவராமல் மாயை யிலேயே அகப்பட்டுத் துக்ககங்களையே நல்ல சுகமென் றெண்ணி அவைகளையே கேட்கின்றார்கள். ஆதலால், உலகத்திலுள்ள ஜனங்களெல்லோரும் அவரவர்களின் இருதயகமலத்தில் ஆகாச வடிவமாய் அமர்ந்துள்ள ஆத்ம சொரூபத்தை மூடிக் கொண்டிருக்கும் ஆசாபாசங்களென்னும் அழுக்குகளைக் கழுவி போக்கடிக்காமல், சரீரத்தின் மேல் இருக்கும் அழுக்குகளைக் கழுவி கழுத்தில் ருத்திராக்ஷங்களைப் பூண்டு விபூதிபூசி ஆசனத்தில் உட்கார்ந்து கண்களைமூடி ஜபமாலையைக் கையிற் பிடித்து முணமுண வென்று உதட்டை அசைத்தும் கர்மவாக்கினால் மந்திரத்தைச் சொல்லி ஜபமாலையைத் திருப்பிவந்தால் இருதயத் திலிருக்கும் ஆசையென்னும், அழுக்குகளைப் போக்கடிக்கக் கூடுமோ? ஒருக்காலும் கூடாது. எந்த மந்திரங்களும் ஜபங்களும் செய்யும் வேலையை மனத் திற்குக் கொடாமல் சும்மா யிருந்தால் தன்னைத்தான் மறந்து கல் பதுமையைப் போல் சரீரம் நின்று பிரம்மானந்த சுகத்தில் சொக்கியிருப்பான்.

எப்படியென்றால், காட்டிலிருக்கும் மலைக்குகைக்குள் ரிஷிகள் புகுந்து தவம் செய்கிறார்களல்லவா? அத்தவத்தின் ரகஸ்யார்த்தம் என்னவென்றால், தவம் செய்பவர்கள் எந்த பலனையும் கேழ்க்காமலும் எந்த விக்கிரங்களின் ரூபங்களை

மனதில் நினையாமாலும், எந்த மந்திரங்களையும் ஜபம் செய்யாமலும் மனதைப் பரமாத்ம சொரூபத்தில் கலக்கும்படிச் செய்து தான்தானாய்க் கல்பதுமையைப் போல் நின்றுவிடுவதற்காகவே மலைகுகைக்குள் சென்று விடுவார்கள். இவ்வாறு சரீரம் கல்பதுமையைப் போல் நின்றபிறகு சிரசு கழுத்து சரீரம் சாயாமலும் அசையாமலும் நின்றுவிடும். இவ்வாறு நின்று விடுவதே தவத்தின் ரஹஸ்யம், பட்டணங்கள், கிராமங்கள், கோவில்கள், மடங்கள் சத்திரங்கள் முதலான இடங்களில் இருந்தால் இப்படிப்பட்ட நிலைக்கு வருவது மிகவும் கஷ்டமென்றெண்ணி தவத்தின் ரகஸ்யார்த்தம் அறிந்த புத்திமான்கள் காட்டுக்குச் சென்று மலைக்குகைக் குள்ளிருக்கும் ஏகாந்த இருட்டறையில் உட்கார்ந்து மனதைப் பரமாத்ம சொரூபத்தில் ஐக்கியம் செய்ய சாதனம் செய்து வருவார்கள். இவ்வாறு சாதனம் செய்வதற்கே முன்னுள்ள அரசர்களில் சிலர், எல்லா போகங்களையும் ஐஸ்வர்யங்களையும் விட்டு காட்டுக்குச் சென்று விட்டார்கள். இதுவே தவத்தின் ரகஸ்யார்த்தம், இருட்டு அறையே தவத்திற்குச் சிரேஷ்ட மானதாதலால் இந் நூலில் உபதேசித்திருக்கும் குரு ரகஸ்யத்தைத் தெரிந்து கொண்டு ஏகாந்த இருட்டு அறையில் உட்கார்ந்து ஜபம் செய்து வருவீர்களாகில் உங்கள் மனம் ஆத்ம சொரூபத்தில் லயித்து, பிரம்மானந்த சுகத்தை அடையும். மனம் இவ்வாறு லயித்து விடுவதே மனமிறந்த தென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

உலகத்தில் மொட்டை அடித்துக்கொண்டு சுவாமிகளென்று பெயர் பெற்றோர், தவத்தின் ரகஸ்யார்த்தங் களைத் தெரிந்துகொண்டபின் காட்டுக்குச்சென்று மலைக் குகைக்குள் புகுந்து அநேக வருஷங்கள் தவம் செய்து வெளிவரும்பொழுது அவர்களுக்கு சுவாமிகளாய் இருந்த போது இருந்த சரீரம் மாறி நகங்களும் தாடி, மீசை, சடைகளும் விஷேசமாய் வளர்ந்து விடும் அதன் பிறகு அவர்கள் வெளிப்புறப்பட்டு வந்தால் அப்படிப்பட்டவர் களையே ரிஷிகளென்று சொல்லப்படும். ரிஷிகளின் ரகஸ்யார்த்தம் இதுவேயாம்.

எல்லா பூஜைகளும் ஜபங்களும் தவங்களும் செய்வது மனதை சூன்யமாய்ச் செய்வதற்கேயன்றி மற்ற எதற்கும் அல்ல. இப்படிப்பட்ட சுகத்தை அனுபவிக்க வழி தெரியாமல் சில புருஷர்கள் கஞ்சாப்புகை சாப்பிடு கின்றார்கள். அது சாப்பிட்டவுடன் கஞ்சாமயக்கத்தால் மனக்குரங்கு சில நிமிஷங்கள் வெளியில் ஓடாமல் நின்றிருக்கும், கஞ்சா மயக்கம் தீர்ந்தவுடன் மறுபடியும் மனக்குரங்கு, பல இடங்களிலும் ஓட ஆரம்பிக்கும். அப்பொழுது மறுபடியும் கஞ்சாப் புகையைச் சாப்பிடுகிறார்கள். இப்படிச் செய்து மனதை நிறுத்துவது சாதனமல்ல, இவ்வித சாதனங் களினால் ஆனந்தம் உண்டாகவேமாட்டா, இதற்கு ஞானக் கும்மி பிரமாணம் என்னவென்றால்.

கற்பநிலை யறிந் துண்ணாமல் வெறிக்
கஞ்சா வுண்டு விழிப்பார்கள்
அத்தையமிக்க மருந்து செய்தால்
பரியன்று நடத்தலாம் ஞானப்பெண்ணே.

மனதை நிறுத்த வழி தெரியாமல் அனேகர்கள் கஞ்சாப் புகைசாப்பிட்டுப் பாழாகின்றார்கள். ஆதலால், கஞ்சாப் புகை சாப்பிடாமல் சில நாட்கள் இதில் சொல்லி யிருக்கும் ஸோஹம் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கு இழுத்துக்கொண்டும், மறுபடியும் வெளியில் விட்டுக் கொண்டுமாய் ஜபம் செய்துவந்தால், அப்பொழுது மனம் இறந்து பிரம்மானந்த சுகத்தை அடையலா மென்று இதில் உபதேசமாய் சொல்லியிருக்கின்றோம். அனேக கோடி விலையுயர்ந்த மாணிக்கம், கோமேதகம் பச்சை; நவரத்தினங்கள் போன்ற ரத்தினங்களுக்கெல்லாம் அதிகமாயிருக்கும் ரத்தினங்களை இந்நூலில் எழுதி வெளியிட்டிருக்கின்றோம். இந்த ரத்தினங்கள் அனேகர் கண்களுக்குப் புலப்படமாட்டா ஒரு வேளை புலப்பட்டாலும் அதை வாசிக்க மனதிற்கு இடம் கொடுக்கமாட்டா அனேக ஜன்மங்களாய் நல்ல புண்யங்களைச் செய்துவந்த புண்ய புருஷர்களுக்கு மாத்திரமே இந்த "ஜீவப் பிரம்மைக்யத்தில்டட சொல்லி யிருக்கும் ரகஸ்யம் காணப்பட்டு

அதைச் சாதனம் செய்ய வேண்டுமென்று எண்ண முண்டாகுமேயொழிய மற்றவர்களுக்கு உண்டாகா தென்று அறியக் கடவீர்களாக.

ஐயா பூர்வஜன்மங்களில் தனக்கு நேர் விரோதிகளாய் இருந்தவர்களே, இந்த ஜன்மத்தில் துஷ்ட மனைவியாய் வந்து சேர்ந்து சம்சாரமென்னும் பந்தத்தில் அவனை அகப்படும்படி செய்து அவனுக்கு அனேக விதங்களாகிய துக்கங்களை உண்டாக்கி, அவன் பிராணனை வாட்டி மனம் நோகும்படி பலவித தூஷணைகளைத் தூஷித்து அவனைத் தலையெடுக்கவிடாமல் அதோகதியாய்ப் பாழாகும்படிச் செய்து விடுகின்றார்கள். குடும்பங்களில் பாரியாளே புருஷனுக்கு எமனாயிருக்கின்றாள். பூர்வ ஜன்மத்தில் இவனுக்கு நேர் விரோதியாய் இருந்தவனே அடுத்த ஜன்மத்தில் இவ்வாறான துஷ்ட மனைவியாய் வந்து சேர்ந்து அவனைத் தலையெடுக்கவிடாமல் செய்து அதோ கதிக்கு ஆளாக்கி விடுகின்றாள். நல்ல புண்ணிய புருஷர் களுக்கு மாத்திரம் நல்ல மனைவி வந்து சேருவாளேயொழிய மற்றவர்களுக்கு நல்ல மனைவியாக வந்து சேரமாட்டாள். எமபாதையோ ஒரு நாள் அனுபவிக்கத்தக்கது. இப்படிப் பட்ட மனைவியின் பாதையோ மரணமடையும் வரையில் அனுபவிக்கத்தக்கதாய் இருக்கின்றதென்று ஸ்பஷ்டமாய் தெரிந்து கொண்டு ஜாக்கிரதைப்படுங்கள். ஆதலால், இதை வாசிக்கும் பெண்டுகளெல்லோரும் புருஷன் சொல்லுக் கடங்கி அவரது இஷ்டம்போல் நடந்து வருவீர்களாகில் அதுவே பதிவிரதா தர்மமென்று சொல்லப்படும். இந்த பதிவிரதா தர்மத்தினால் நீங்கள் மேலான பதவியை மறுஜன்மத்தில் தப்பாமல் அடைவீர்கள். இது சத்தியமான வாக்கென்று அறிந்து புருஷர்னுக்கு அடங்கியிருந்து அவர் சொல்வதுபோல் எல்லாக் காரியங்களையும் நடத்திவர வேண்டும். ஸ்திரீ புருஷர்கள் எல்லோரும் சம்சாரமென்னும் சக்கரத்தில் அகப்பட்டுக் கொண்டு பாழாகாமல் இருக்கும் படி இந்நூலில் விசேஷமாய் குரு உபதேசங்களை சொல்லி யிருக்கின்றோம். அந்தக் குரு உபதேசத்தை அறிந்து சதாகாலமும் அதையே ஜபம் செய்து

வருவீர்களாகில் அநேக ஜன்மங்களாய்ச் செய்து வந்த உங்கள் பாவ கர்மங்களெல்லாம் பஞ்சு பொதியில்பட்ட நெருப்புப் பொறி பஞ்சு மூட்டைகளையெல்லாம் எப்படிப் ப்ஸ்பம் செய்து விடுகிறதோ அதுபோல் உங்கள் பாவகர்மங்களை யெல்லாம் பஸ்பம் செய்துவிடும் இதற்குக் கைவல்யம் பிரமாணம் என்ன வென்றால்,

> பஞ்சினை யூழித்தீப்போற் பலசென்ன விவித வித்தாஞ்
> சஞ்சித மெல்லாம் ஞானத் தழல்சுட்டு வெண்ணீ றாக்கும்
> கிஞ்சிதா காமியந்தான் கிட்டாமல் விட்டுப்போகும்
> விஞ்சின பிராரத்த வினையனு பவித்துத் தீரும்.

ஆதலால், உலகத்திலுள்ள மாயை ஜனங்களெல்லோரும் ஞானத்தை அடைய வேண்டுமென்று ஆவல் கொண்டிருந்த போதிலும் அவர்களினுடைய பூர்வ ஜென்மங்களில் கர்மமானது ஞானமார்க்கத்திற்குரிய அரிய நூல்களை வாசிக்க விடாமல் நாவல்கள் வீண் சரித்திரங்கள் அருவருக்கத்தக்க நாடகங்கள் அகடவிகடமான குயுக்தி கதைகள் முதலியவற்றை வாசிக்கச் செய்து, அவனை அஞ்ஞான மென்னும் படுகுழியில் வீழ்த்தி, மாயையென்னும் சம்சார சமுத்திரத்தில் அலைந்து கொண்டிருக்கச் செய்யும். ஆதலால் பூர்வ சுத்தவாசனை இல்லாதவர்கள் இந்த ஜன்மத்திலாகிலும் நல்லொழுக்கத்துடன் இருந்து பெரியோர்களையடுத்து அவர்களின் மனம் சந்தோஷிக்கும்படி நடந்து அவர்களிடம் ஞானோபதேசம்பெற்று அதை இடைவிடாமல் அப்பியாசித்து வந்தால் அந்த அப்பியாச முதிர்ச்சியினால் இனி எடுக்கப்போகும் ஜன்மங்களிலாயினும் மோக்ஷத்தை அடைவதற்கு முக்கியமானதாயிருக்கும்: உள்ள படிக்கே ஞானமார்க்கத்தின் உண்மையைச் சிறிதேனும் உணர்ந்தவர்கள். மேற்படி நாவல் முதலிய வீண்கதைகளைப் படித்து தமது வாழ்நாட்களை வீண் நாட்களாக்கி விட்டார்கள்.

ஒருவனுக்கு தன் சரீரத்திலிருக்கும் வியாதியைப் போக்கடித்துக் கொள்வதற்கு வைத்தியனும் ஔஷதமும் எப்படி வேண்டுமோ. அதுபோல் தனது மனதிலிருக்கும் ஆசையென்னும்

அழுக்குகளைப் போக்கடித்துக் கொள்வதற்கு குருவென்னும் வைத்தியனும், யோகாமிருத மென்னும் ஔஷதமும் அத்தியாவசியமாய் வேண்டற் பாலன.

ஸம்ஸார நிவர்த்தியானது ஞானத்தினால் உண்டாகுமேயன்றி கர்மத்தினால் உண்டாகமாட்டா. பூர்வ ஜன்ம புண்ணிய கர்மங்களினால் பரிபக்குவமடைந்து சம்சாரத்திலிருந்து விரக்தியடைந்தவனே ஞானத்திற்கதிகாரி அவனே மோக்ஷமடைய அருகன். மோக்ஷமே பந்த விமுக்தியாகிய பிரம்மஞான சொரூபம் எனவும், அஞ்ஞானமே பந்தத்திற்குக் காரணமெனவும் விசாரித்துத் தெளிதலே மானிடயாக்கை யெடுத்ததினாலான பயன், ஆகவே ஒவ்வொருவரும் ஸத்குருமுகமாய் சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து அவரால் உபதேசம் பெற்று அவ்வழியே அநுஷ்டித்து வந்தால் மேலெடுக்கப் போகும் ஜன்மங்களில் சகல ஆசைகளும் விட்டு நீங்கும்.

ஆதலால் நீங்கள் நல்ல குருவைத்தேடி உபதேசம் பெறவேண்டுமென்னும் எண்ணத்தைவிட்டு இந்நூல் ஒன்றையே வாசித்து இதில் உபதேசமாய்ச் சொல்லியிருக்கும் குரு ரகஸ்யார்த்தங்களை நன்றாய் அறிந்து இதையே குருவாக்காய் நம்பி இதில் உபதேசமாய்ச் சொல்லியிருக்கும் பிரம்ம ஞானத்தை சம்பாதித்து. மாயை என்னும் அஞ்ஞானத்தை வென்று ஆனந்தத்தை அனுபவிக்க வேண்டும். உலகத்தில் அநேக நூல்கள் இருந்தபோதிலும் இந்த **ஜீவப்பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம்** தவிர மற்ற நூல்கள் யாவும் ஆத்மா என்னும் வஸ்துவில் அனேக சந்தேகங்களை உண்டாக்கும். இந்நூல் அப்படிப்பட்ட சந்தேகங்களை உண்டாக்கமாட்டா. ஏனென்றால். நமது சரீரமே ஓர் ரதமாய்க்காட்டி இந்த சரீரமென்னும் ரதத்திற்கு கண்கள் மூக்கு வாய் செவிகள் தேகத்தின்மேல் இருக்கும் தோல் இந்த ஐந்து இந்திரியங்களே ஐந்து குதிரைகளாவும் மனதே குதிரையின் கடிவாளமாகவும் புத்தியே இந்திரியங்களென்னும் குதிரைகளை ஓட்டும் சாரதியாகவும் ஆத்மாவே ரதத்தில் உட்கார்த்திருக்கும் சாரதியாகவும் (அதிபதியாகவும்) சொல்லியிருக்கின்றது. எவனொருவன் தன்

இந்திரியங்களென்னும் ஐந்து குதிரைகளையும் யுத்தி என்னும் சாரதியினால் சரியாய்த் திருப்பி ஓட்டுகின்றானோ, அவனுக்கு மனதென்னும் கடிவாளத்தினால் இந்திரியங்களென்னும் குதிரைகள் வசமாய் ரதத்தில் உட்கார்ந்திருக்கும்-சாரதிகளென்னும் ஆத்மாவை மோஹ மென்னும் வீட்டிற்கும் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கும், எவன்புத்தி என்னும் சாரதியினால், இந்திரியங்களென்னும் குதிரைகளை சரியாய்த் திருப்பி ஓட்டு வானோ அப்படிப் பட்டவனுடைய இந்திரியங்களென்னும் குதிரைகள், துன்மார்க்க விஷயத்தில் கொண்டுபோய் அழுத்தச் செய்து ரதத்தில் உட்கார்ந் திருக்கும். ஆத்மா வென்னும் சதிபதியை ஜன்மங்கள் தோறும் அவனுடன் கூடவே தனக்குச் சா_ சொரூபமாயிருக்கும்படி செய்விக்கு மென்று இந்நூலில், எழுதியிருக்கின்றோம், ஆதலால் புருஷனானவன் புத்தியென்னும் ரதசாரதிக்கு நன்றாய் உபதேசித்து தன் இந்திரியங் களென்னும் குதிரைகளை நல்ல வழியாய் போகும்படி மனதென்னும் கடிவாளத்தினால் திருப்ப வேண்டும். அவ்வாறு திருப்பினால் மோக்ஷ மென்னும் வீட்டை தவறாமல் அடையலாம் என்பதே இந்நூலின் கருத்து.

இந்நூலில், திருக்களிற்றுப்படியார், கைவல்யம் முத்தி முடிவு, சூதசங்கீதை, நம்மாழ்வார், பெரியாழ்வார் திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், இராமாநுஜர் நூற்றந்தாதி. திருக்குறுந் தாண்டகம், ஞானவாசிட்டம் உபதேசகாண்டம், குறள், சிவஞான சித்தியார் சிவப் பிரகாசம், திருவருட்பிரகாசம், வள்ளலார் சாஸ்திரம், தேவி காலோத்திரம் நெஞ்சறிவிளக்கம் திருசெந்தூர் புராணம், திருவாதவூர் புராணம் ஸ்வானுபவமாலை, தணிகை புராணம், நிஜானந்தபோதம் வாதவூர் புராணம், திருமந்திரம், உண்மை விளக்கம், பெரியபுராணம், கந்தபுராணம், திருவுந்தியார் காசிகாண்டம், அகஸ்தியர் பாடல், அகஸ்தியர் வாகடம், பிரபுலிங்ககலீலை, அழுகணி சித்தர் பாடல் நிஷ்டானுபூதி, காகபுஜண்டர் பாடல், பாம்பாட்டி சித்தர் பாடல், ஞானசூரியன் தாயுமானவர் பட்டினத்தடிகள், தேவாரம் திருமந்திரம் கோயிற் புராணம்

இவைகள் யாவும் இந்நூலில் அந்தந்த சந்தர்ப்பங்களுக்குத் தக்கபடி அந்தந்தப் பாடல்களைச் சேர்த்திருக்கின்றோம். இதில் அனேக சொற்குற்றங்களும் பிழைகளும் இருக்கலாம். ஆதலால்,

ஓ சகோதரி ! சகோதரர்களே !! பாலும் நீரும் கலந்து பிரிக்கக்கூடாத நிலையில் இருக்கையில். அன்னபக்ஷி யானது நீரினின்று பாலைப் பிரித்து நீரை நீக்கி பாலை மாத்திரம் உட்கொள்ளும் இதைச் செய்ய இதர பக்ஷிகளால் சாத்தியப்படமாட்டா. அதுபோல் இந்நூலை வாசிக்கும் சகோதரிகளும், சகோதரர்களும், முன்சொல்லிய அன்ன பக்ஷிபோல் இருந்து இந்நூலில் எழுதியிருக்கும் ஸத்விஷயங் களை மாத்திரம் கிரகித்துக்கொண்டு குற்றங்களை நிவர்த்தி செய்வீர்களென்று பிரார்த்திக்கின்றனன்,

இங்ஙனம்,

உங்கள் எல்லோருடைய க்ஷேமத்தைக் கோரப்பட்டவன்

***பரமஹம்ஸ ஸச்சிதானந்தன்***

தத் ஸத்

ஸ்ரீ பரப் பிரஹ்மணே நம :



# ஜீவப் பிரம்மைக்ய

# வேதாந்த ரஹஸ்யம்

## 3. ஸ்ரீ நிற்குண சற்குரு ஸ்துதி

யஸ்யாந்தர் நாதிமத்யம் நஹிகரசரணம்ந நாமகோத்ரம் ஸூத்ரம்
நோஜாதிர் நைவவர்ணா நபவதிபுருஷோ நாநபும்ஸம நசஸ்த்ரீ
நாகாரம் நோவிகாரம் நஹி ஜநமரணம் நாஸ்தி புண்யம் நபாபம்
நோதத்வம் தத்வமேகம் ஸஹஜ ஸமரஸம் ஸத்குருந் தந்நமாமி.

பூர்ணஸ்யாவாஹநம் குத்ர ஸர்வதாரஸ்ய ஸாஸநம்
ஸ்வஸ்ச்சஸ்ய பாத்யமார்க்யஞ்ச ஸூத்தஸ்யாச மநம்குதஹ
நிர்மலஸ்யகுத ஸ்நாநம் வஸ்த்ரம் விஸ்வோ தரஸ்யச
நிராலம்ப ஸ்யோபவீதம் ரம்யஸ்யா பரணம் குதஹ.

நிர்லேபஸ்யகுதோ கந்த : ஸபசாதீதஸ்ய ஸா க்ஷதாஹ
நிர்வாஸநஸ்ய கிம்புஸ்ப்பம் புத்யதீ தஸ்ய தூபநம்
ஸா க்ஷா த் ஞாநஸ்வரூபஸ்ய குதோதீப ப்ராபாபவேத்
நித்ய த்ருபதஸ்ப நைவேத்தியம் தாம்பூலஞ்ச குதோஹரே.

ப்ரதக்ஷிண மநந்தஸ்யா த்விதீயஸ்ய குதோநதிஹ
வேதவாசா மவேத்யஸ்ய குதஸ்த்தோ த்ரம் விதீயதே
ஸ்வயம்ப்ரகாஸமா நஸ்ய குதோ நீராஜநம் விபோ
அந்தர்பஹிஸ்ச்ச பூரணஸ்ய கத முத்வாஸநம் பவேத்.

இயமேவ பராபூஜா ஸர்வாவஸ்தாஸு ஸர்வதா
ஐக்யபுத்யாது தேவேஸே மநோதேவோ நிவேஸயேத்

நாஹம் தேஹோ நச ப்ராணா: நேந்ரியாணி ததைவச.
நமநஸ்ச ந புத்திஸ்ச நைவசித்த மஹ: க்ருதிஹி
நாஹம் ப்ருத்வீச ஸலிலம் நவஸ்நி ர் நாநிலோபிகம்
ந கக்தோ ந ரஸம் ரூபம் ஸ்பர்ஸ ஸப்தஸ்ச நாஸ்ம்யஹம்
அத்வை தம் பரமாநந்தம் ஸத்யம் ப்ரஹமாஸ்மாஹம் ஸதா

*ஆதி, மத்ய, அந்திய என்றால், முதல், இடை , கடையும் இல்லாதவனும். அவயங்களில்லாதவனும். பெயர் கோத்திரம் சூத்திரம் ஜாதி வர்ணமில்லாதவனும் ஆண் பெண் அலி என்னும் நாம ரூபமற்று எவ்வித விகாரங் களில்லாதவனும். ஜநந மரணங்களும் புண்ய பாவங்களுமில்லாதவனும். தத் வங்களுக்கெல்லாம் அதிகமாயும் எல்லாவற்றிலும் சமரச மாயும் நிறைந்திருக்கப்பட்ட பரப்பிரம்மமாகிய உன்னை எவ்விதமாய் அறிவேன்: எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருக்கும் உனக்குத் தகுந்த ஆஸனம் எவ்விதமாய்க் கொடுப்பேன்! சகஜ சுபாவங்களுடன் கூடிய உனக்கு ஹர்க்ய பாத்தியங்கள் (இரண்டு கைகளிலும் ஜலம் எடுத்து) எவ்விதமாய் விடுவேன்! எல்லாவற்றையும் பரி சுத்தம் செய்யும் உனக்கு ஆசமனம் எவ்விதமாய்ச் செய்வேன்! மலினமில்லாமல் பரிசுத்தமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் உனக்கு வெளியிலிருக்கும் ஜலத்தினால் ஸ்நானம் எவ்விதமாய்ச் செய்விப்பேன்! பிரபஞ்சத்திற்கெல்லாம் அதீதப்பட்ட (அதிகமாயிருக்கும்) உனக்குத் தகுந்த வஸ்திரத்தை எங்கிருந்து கொண்டு வந்து எவ்வித மாய்த் தரிப்பேன்! விசாரிக்குமளவில் ஜாதி (குலம்) கோத்திரம் இல்லாத உனக்கு யஞ்ஞோபவீத மென்னும் பூனூலை எவ்விதமாய்த் தரிப்பேன்! அவயங் களில்லாத உனக்கு, நல்ல அலங்காரம் எவ்விதமாய்ச் செய்வேன்! இவ்வுருவ முடையவ னென்றெழுதவொண்ணாத உனக்கு மிகுந்த பூஜையை எவ்விதமாய்ச் செய்வேன்! நிரஞ்சனனான உனக்குத் தூபம் எவ்விதமாய்க் கொடுப்பேன்! சூர்ய சந்திரர்களைப் பிரகாசிக்கச் செய்யும் சொரூப முடைய உனக்குத் தீபம் எவ்விதமாய் ஏற்றுவேன்! முதலும் கடையுமில்லாத உனக்கு எந்த மந்திரங் களினால் எந்த புஷ்பத்தை எடுத்துச் சாற்றுவேன்! சர்வ*

*பரிபூர்ணனாய் நித்தியம் திருப்தியடைந்தவனாயிருக்கும் உனக்குச் சொற்பமான எந்த எந்த நைவேத்தியங்களைக் கொடுப்போன்! ஆனந்தத்தை அடைந்திருக்கும் உனக்குத் தாம்பூலம் எவ்விதமாய்க் கொடுப்பேன்! சுயம் பிரகாசனான உனக்கு நீராஞ்சனம் (கற்பூரம் ஏற்றி நீர் விடுவது) எவ்வித மாய்ச் செய்வேன்! பிரபஞ்சமெல்லாம் சரீரமாயிருக்கும் உனக்கும் பிரக்ஷணம் எவ்விதமாய்ச்செய்வேன்! ஸரஸ்வதி சம்பந்தமான வாக்கிற் கெட்டாத உன்னை எவ்விதமாய்த் துதி செய்வேன்! இதற்குத் தாயுமானவர் பாடல் பிரமாணம்*

அங்கிகெனாதபடி யெங்கும் பிரகாசமாக
யானந்த பூர்த்தியாகி
அருளோடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும்படிக் கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனோவாக்கிற்
தட்டாமல் நின்றதெது சமயகோடிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வமே
றெங்குந் தொடர்ந்தெதிற் வழக்கிடவு நின்றதெது
எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லொரு சித்தா தியின்பமா
யென்றைக்கு முள்ளே தெருமேற்
கங்குல்பக லறநின்ற வெல்லையுவ தெது அது
கருத்திற் கிசைந்ததுமே
கண்டென வெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ்சலி செய்குலாம்.

*ஸ்ரீ பகவத் கீதை அத்-4 சுலோகம் 11-ல், இதை விரிவாய்க் காணலாம். இதன்றியும் சுருதி பிரமாண மென்னவென்றால்.*

*சுரு॥ தஸ்ய நிஞ்க்சிந்தா த்யாநம, ஸர்வகர்ம நிராகரண மாவாஹநம. நிஸ்ச்சயஜ்ஞாந மாஸநம் உந்மநீ பாவஹ பரத்யம் ஸதாமகஸ்க மர்க்யம் ஸ்தாதீப்தி ரபா நாம்ருத வ்ருத்தி ஹி*

*ஸ்நாநம் ஸர்வாத்ம பாவநா கந்த ஊத்ருக் ஸ்வ ரூபாவஸ்தாக மக்ஷதாஹ சிதாப்திஹி புஷ்பஹ சிதக்நிஸ்வ ரூபம் தூபஹ சிதாதித்ய ஸ்வரூபம் தீபஹ பரிபூரண சந்த் ராம்ருத்ஸ்யைக்கரணம் நைவேத்யம் நிஸ்ச்சலத்வம் ப்ரத க்ஷணம் ஸோஹம் "பாவோ நமஸ்காரஹ மௌனங் ஸ்துதிஹி ஸர்வ ஸந்தோஷா விசர்ஜநமிதி." (மண்டல பிராஹ்மணோபநிஷத்)*

*சர்வ கர்மங்களையும் விட்டுவிடுவதே உன்னைத் தெரிந்து* கொள்வது எங்கும் பரிபூர்ணமாய் நிறைந்திருக்கும் பிரம்மமே நித்தியம் பிரபஞ்சமோ அநித்யம் நிஸ்ச்சய ஞானமே ஆஸனம் மனதில் எந்த கல்மஷங்களும் இல்லாமல் பரிசுத்தமாயிருப்பதே ஸ்நானம் நிச்சிந்தையாயிருப்பதே அர்க்கிய பாத்தியங்கள் விடுவது மனம் சங்கல்ப விகல்பங்க (நினைப்பு மறப்பு) னில்லாமல் பரிசுத்தமாயிருப்பதே ஆசமனம் ஜாதி மதபேதங்களில்லாமலிரப்பதே ஞானம் இந்திரியங்களை அதனதன் இஷ்டானுசாரமாய்ப் போக விடாமல் திருப்புவதே சௌசம்சர்வம் பிரம்மமென்று நினைப்பதே கந்தம் திருஷ்டியைச் சிதறவிடாமல் சதா பிரம்மத்தில் நிறுத்துவதே அக்ஷதைகள் ஆத்ம தரிசனம் செய்யவேண்டுமென்னும் சங்கல்பமே (எண்ணமே) ஞாநாப்தி இந்த ஞாநாப்தியே புஷ்பம் எந்தப் பந்தங்களு மில்லாமல் ஆத்மா தானென்னும் நிச்சயத்தை யடைவதே பதாயந்தமான தியானம் அத்தக் கரணத்திற்கு (மனம் புத்தி சித்த அகங்காரங்களுக்குச்) சாக்ஷியாய் அந்தக் கரண பிரதி பிம்ம (காணப்படும் வஸ்துக்களின்) சேஷ்டைகள் இல்லாம லிருப்பதே உன்னை விஸ்தாரமாய்ப் பக்தியுடன் பூஜை செய்வது புத்தியை அங்குமிங்கும் ஓடவிடாமல் ஆத்ம ஞானத்தில் ஸ்திரமாய் நிறுத்துவதே ஞானாக்கிநி, இந்த ஞானாக்கிநியே தூபம். "நேதி நேதி" என்றால், நான் தேக மல்ல மனதல்ல ஜீவனல்ல இந்தப் பிரபஞ்சம் சர்வம் நானல்ல; இவைகளையெல்லாம் அறியும்படியான தத்விவே கமே ஞானசூரியன் என்றும், இந்த ஞான சூரியனே தீபம் என்றும் அறிய வேண்டும். நானே பிரம்மம், பிரம்மமே நான் சர்வ பரிபூரண மாகியபரப்பிரம்மத்தில் ஐக்கியமாவதே நைவேத்தியம்,

சர்வ பரிபூரண சாக்ஷியில் சலிக்காம (அசையாம) லிருப்பதே பிரதக்ஷிணம், முன் சிவராஜயோக ஸமாதியில் சொல்லப்போகும் 'ஹம்ஸ' பாவத்தை நன்றாய் அறிந்து 'ஸோஹம்' பாவத்தில் இருப்பதே தியானம் அதா வது, மனதை சுவாசத்துடன் சேர்த்து ஸோஹம், மந்திரம் ஜபம் செய்து வருவதே தியானம். மனம் ஆத்மஞானத்திற் கலந்து அசையாமல் ஒரே நிஷ்டை யிருந்து ஆனந்தத்தை அடைவதே உனது நாம சங்கீர்த்தனம். உள்ளும் வெளியும் எங்கும் நிறைந்து பரிபூரணமாயிருப்பதே ஜபம் நினைப்பு மறுப்புகள் இல்லாமல் மௌனமாயிருப்பதே, ஜீவாத்மா பரமாத்மா ஐக்யம், இந்த ஐக்யம், நமஸ்காரம், உள்ளும் வெளியும் காணப்படும் பதார்த்தங் களிரண்டும் அதாவது, உள்ளே காணப்படும் பதார்த்தம் சங்கல்பம். (நினைப்பு) வெளியே காணப்படும் பதார்த்தம் சகல வஸ்துக்களின் தோற்றம். இவ்விரண்டு பதார்த்தங்களின் நாமருபங்களை அறவேயிட்டு, சங்கல்ப விகல்பங்களில்லாமல் அகண்ட பாவத்தை அடைந்திருப்பதே மோக்ஷம், அன்றியும்.

எல்லாவுலகமு மானாய்நீயே
யோகம்பமேவி யிருந்தாய்நீயே
நல்லாரை நன்மையறிவாய் நீயே
ஞானச்சுடர் விளக்கானாய்நீயே
பொல்லாவினைக ளறுப்பாய்நீயே
புகழ்ச்சேவடியென் மேல் வைத்தாய்நீயே
சொல்வாய்செல்வந் தருவாய்நீயே
திருவையாறகலாத் செம்பொற்சோதீ.

எல்லா உலகமும் நீயாகவே இருக்கின்றாய்! திருவேகம்பம் என்னும் ஸ்தலத்திலிருப்பவன் நீயே: நல்லோரின் நன்மையறிந்தவன் நீயே : ஞானமென்னும் சுடர் ஒளியாய் இருப்பவனும் நீயே : நல்வினை தீவினையென்னும் இரண்டு கர்மவினைகளை நாசம் செய்பவன் நீயே புகழ்ப் பொருத்திய உன் பொற்பாதகமல திருவடியை என் சிரசின்மேல் வைத்தாய்

நீயே. மோக்ஷமென்னும் செல்வம் தரப்பட்டவன் நீயே. திருவையாறு என்னும் ஸ்தலத்தைவிட்டு நீங்காதவனும் நீயே பரப்பிரம்மமாய் இருக்கப்பட்டவனும் நீயே;

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
யமானனா யெறியுங் காற்றுமாகிய
யருநிலைய திங்களாய் ஞாயிறாகி
யாகாயமா யட்ட மூர்த்தியாகிப்
பெருநிலமுங் குற்றமும் பெண்ணுமாணும்
பிறருருவுந் தாமேயாகி
நெருநலையா யின்றாகி நாளையாகி
நிமிர்புன்சடை யடிகள் நின்றவாறே

பிருதிவியாய் (மண்ணாய்). ஜலமாய், அக்கிநியாய் காற்றாய், ஆகாயமுமாய், சூர்ய சந்திரர்களாய், அஷ்ட்டதிக் பாலகர்களாய், உலகமாய், மாயையாய், ஆணாய், பெண்ணுமாய், அலியுமாய், பிறருருவம் தம்முருவம் மாமேயாய். சென்ற காலம், நிகழ்காலம், வருங்காலமுமாய் நீண்ட மிருது வாகிய சடையையுடைய தலைவனாயும் நின்றவன் நீயே ; பிரப்பிரம்மமும் நீயேயாம், இதன்றியும் நீ இன்னும் எப்படிப்பட்டவனென்றால்,

"அஜாத மபூத மப்ர திஷ்ட்டித மப்ராண மமுக மஸ்ரோத்ர மவாகமநோ தேஜஸ்க மசக்ஷுஷ்க்த மநாம மகோத்ர மஸிர மபாணி பாத மஸ்நிக்த மலோஹித மப்ர மேய மஹரஸ்வ மதிர்க்க மணந்வ கல்ப மபார மநிர்த்தேஸ்யம்"

(சுபலோபநிஷத்)

மேற்சொல்லிய பரப்பிரம்மம் பிறப்பு இறப்பு இல்லாதது; ஒருவரால் பிரதிஷ்டை (ஸ்தாபிதம்) செய்யப்பட்ட விக்கிரகங்களைப் போன்றதல்ல அது பிராணவாயு, அதற்கு மனம் புத்தி சித்தம் அகங்காரங்களும், சிரசு கண்கள் மூக்கு வாய் செவிகள் கைகள் கால்கள் முதலாகிய அவயவங்களும் சிவப்பு

வெண்மை முதலிய யஞ்ச (ஐந்து) வர்ணங்களும், உயரம் குட்டை ஸ்தூலம் சூக்ஷ்மம் (கண்களுக்குக் காணப்படாதது) அணு (மிகவும் சிறிது) மஹத்து (மிகவும் பெரிது) என்னும் ரூபங்களும் இல்லாதது அது. எல்லையில்லாதது: எண்ணிச் சொல்வதற்குச் சாத்தியப்படாதது. மேலும் இன்னும் எப்படிப்பட்டதென்றால்.

"அஸப்த மஸ்பர்ஸ மரூப மவ்யயம் ததா ரஸம் நித்ய மங்கத வஸச்சயத் அநாத்யநந்தம் மஹதஹ பரம் த்ருவம் ததேவ ஸிஷ்ய த்யமலம் நிராமயம்," (பைங்கலோபநிஷத்)

அந்தப் பரப்பிரம்மம். சப்த (கேட்பது) ஸ்பர்ச (தொடுவது) ரூப (பார்ப்பது) ரச (ருசி அறிவது) கந்த (முகர்வது) முதலானவைகள் இல்லாதது நாசமில்லாதது. ஆதி அந்த்ய மத்தியமில்லாதது. (அடியும் நுனியும் நடுவும் இல்லாதது) சத்தியமானது மாயா அஞ்ஞானமில்லாதது. த்ருவமானது. நித்தியமானது, நிர்மலமானது நிராமய மானது. இன்னும் அவர் விஷயம் சொல்லுகிறோம் கேளுங்கள்.

"ஏகமேவா த்விதீயம் பரஹம."

என்னும் சாந்தோ க்யோபநிஷத் வாக்கிய ரீதியாய் ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பேதங்கள் இல்லாமலிருப்பதே பரப்பிரம்மம்.

ஸஜாதீயமென்றால் :- ஓர் மனுஷ்ய ஜாதியில் பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய சூத்திராதி பேதங்கள் தோன்றுவது.

விஜாதீயமென்றால்:- மனிதர்கள் மிருகங்கள் தேவதைகள் ஜீவஜந்துக்கள் விருக்ஷங்கள் முதலானவைகளுக்கு வெவ்வேறு வேதங்கள் தோன்றுவது !

சுவகத பேதமென்றால் :- ஒரே தேகத்தில் சிரசு கண்கள் மூக்கு வாய் கைகள் கால்கள் முதலாகி வெவ்வேறு அவயவங்கள்

தோன்றுவது இவ்வகைப்பட்ட மூன்றுவித பேதங்களும் இல்லாமலிப்பதே பரப்பிரம்மம்.

அதாவது, பிரமன் விஷ்ணு மஹேஸ்வராதி தேவதைகளும், பிராம்மண க்ஷத்திரிய வைசிய சூத்திராதி மனுஷ்யர்களும் பல பக்ஷி கிருமி (புழு) கீடக (வண்டு) விருக்ஷ பர்வதங்களும், சிரசு கைகள் கால்கள் முதலாகிய அவயவங்களும் இல்லாமலிருப்பதே பரப்பிரம்மமென்று சொல்லப்படும்.

அப்பா ! குழந்தாய் ! அத்யாத்மோபநிஷத்தில் இன்னும் என்ன சொல்லுகிறதென்றால்.

"பரிபூரண மநாத்யந்த மப்ரமேய மவிக்ரயம் ஸத்கநம் சித்கயநங் நித்யமாநந்த கநமவ்யயம் ப்ரத்யகோரஸம் பூரணமநந்தம் ஸர்வதோமுகம் அஹேய மநுபாதேய மநாஸ்ரயம் நிர்க்குணம் நிஷக்ரியம் ஸூக்ஷமம் நிர்விகல்பம் நிறஞ்ஜநம் அநிருப்ய ஸ்வரூபம் யந்நவாசாம கோசரம் ஸத்யம் ருதம் ஸ்வதஸ் ஸூத்தம் ஸூத்தம் நீத்ருஸம் ஏகமேவா த்விதீபம் ப்ரஹ்மநேஹ நாநாஸ்தி கிஞ்ச்நம்"

(அத்யாத்மோபநிஷத்).

அந்தப் பரப்பிரம்மம் எங்கும் நிறைந்து பரிபூரணமாய் இருக்கப்பட்டது. ஆதி மத்ய அநிதியமில்லாதது எந்த விவகாரங்களும் இல்லாதது, சித்ருபமானது நித்தியமானது ஆனந்தமாய் இருக்கப்பட்டது. நாசமில்லாதது பிரத்திய காத்மாவாயிருப்பது அகண்ட ஞான சொருபமானது. சர்வபரிபூரணமானது, (எல்லாவற்றிற்கும் சிரேஷ்ட்டமானது) எந்த ஆதாரங்களும் இல்லாதது; சுத்த நிர்க்குணமானது, வியாபாரம் மில்லாது. ஆதி சூக்ஷூமமானது எந்த எண்ணங்களும் இல்லாதது. நிரஞ்ஞனமானது இப்படிப்பட்டது அப்படிப்பட்டது என்று நிருபிக்கக் கூடாதது, மனோவாக்குக் கெட்டாதது தனக்குத் தானாயிருப்பது, பரிசுத்தமானது, கேவல ஞாநாகாரமாயிருப்பது தனக்கு இரண்டாவதுவஸ்து எதுவும் இல்லாதது, மைப்படியுங் கண்ணாளுந் தானுங்கச்சி.

மயானத்தான் வார்கடையான் மாசொன்றில்லான்
ஒப்புடையனல்ல னொருவனல்ல
னோரூரனல்ல னோருவனல்லன்
அப்படிய னவ்வுருவ னவ் வண்ணத்த
னவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணற்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே.

இந்தப் பிரப்பிரம்மம் மனோவாக்குகளுக்கெட்டாதது. ஸத்ரூபமானது, தனக்குத் தானாய்ப் பிரகாசித்துக் கொண்டிருப்பது, பரிசுத்தமானது, கேவல ஞானகாரமானது, தனக்குச் சமானமான வஸ்துக்கள் எதுவும் இல்லாதது. எங்கும் நிறைந்து ஏகவெளியாய் ஒன்றாயிருப்பது. தன்னைவிட இரண்டாவது பதார்த்தமில்லாதது. பிரம்மத்தைத் தவிர அணுப்பிரமான வஸ்துக்களும் அந்நியமாய் இல்லாதது என்று அறியக் கடவாய்.

ஒன்றாயும் பலவாயு முருவாயு மருவாயும்
குன்றாயு மணுவாயுங் குணமாயும் குணியாயும்
நன்றாயுந் தீதாயு நானாயுந் தானாயும்
இன்றாயு முளதாயு மிருக்குமந்தப் பரமசிவம்.

"ஓ சுவாமி ! பரப்பிரம்மத்திற்கு நாமரூபமில்லை என்று இதுவரையில் சொல்லிக்கொண்டு வந்தீர்களே! பரப்பிரம்மமென்று சொல்வதே ஒரு நாமமா (பெயரா) யிருக்க பிரம்மத்திற்கு நாமமில்லை என்று எப்படிச் சொல்லலாம்."

குழந்தாய்! ஆம் அது உண்மையே: ஆனால் அதன் ரகஸ்யத்தைச் சொல்லுகின்றோம் கேள்.

"ருதமாத்மா பரம் ப்ரஹ்ம ஸத்யமித்தியா திகா புத்தை
கல்பிதா வ்யவஹாரார்த்தம் யஸ்ய ஸஜ்ஞா மஹாத்மநஹ."

என்னும் மஹோபநிஷத் வாக்கிய ரீதியாய் பரப்பிரம்மமென்னும் பெயர், மனோ வாக்கினால் சொல்வதற்குச் சாத்தியப் பா ாதென்று தெரிந்து கொள்ளுங்கள் இது, சிருஷ்ட்டிக்கு

உட்பட்ட வஸ்துவிற்கு உண்மையான கேசவா, நாராயணா, மாதவா, மதுசூதனா, கிருஷ்ணா, ஈஸ்வரா, லக்ஷ்மி, பார்வதி, ஏகநாதா, அல்லா என்னும் பெயரைப் போன்றதல்ல உலகத்தார் கண்களுக்குக் காணப்படாத ஈஸ்வரனுக்குப் பதிலாய் ஒரு விக்கிரகத்தைக்காட்டி, அதோ ஈஸ்வரன் ஒருவன் இருக்கின்றான் என்று விக்கிரகங்களைக் காட்டுவதுபோல் பிரபஞ்ச சிருஷ்டிக்குப் பூர்வத்தில் நாமரூபமில்லாத (பெயர் ரூபமில்லாத) வஸ்து ஒன்று தனக்குத்தானாகவே சுயம் பிரகாசமாயிருந்தது: அதைச் சீடனுக்கு உபதேசிப்பதற்காக அவ்வஸ்துவிற்குப் பரப் பிரம்மமென்னும் பெயர் உபசார வார்த்தையாய்ச் சொல்லப்பட்டதேயல்லாமல் பரப்பிரம்மத்திற்கு உண்மையாய் ரூபம் பெயர் ஜாதி குலகோத்திரம் பூணூல் முதலானதும் இல்லவேயில்லை. அது ஒன்றுமில்லை. இரண்டுமல்ல, எப்பொழுதும் அல்லாததுமல்ல. தீயதுமல்ல, நானுமல்ல, நீயுமல்ல முதல் கடை இடை இல்லாத அனாதி வஸ்துவாயிருக்கின்றது இதற்கு திருக்களிற்றுப்படியார் பிரமாணம்.

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று நானன்று நின்ற
நிலையன் றுநீயன்று நின்னறிவு மன்று
தலையன் நடியன்று தான்.

இப்படிப்பட்ட பரப்பிரம்மமானது பிபீலிகாதி என்றால், கண்களுக்குக் காணப்படாத தூசு (தும்பு) போன்ற சிறிய புழு முதல் பிரமதேவன் வரையில். பிரம சிருஷ்ட்டி நாள் முதல் நாளது வரையில் சகல ஜீவராசிகளின் ஸ்திரீ கர்ப்பத்திலிருக்கும் பிண்டத்தில் சூக்ஷ்ம சரீரத்துடன் போய்ப்புகுந்து ஜநநகாலம் முதல் மரணகால பரியந்தம் அவனவன் செய்யப்பட்ட நல்வினை தீவினைகளுக்கெல்லாம் சாட்சிபூதமாய் ஜீவாத்மாவாய், வியாபித்திருந்து. மரண காலத்தில் அவனவன் செய்த புண்ய பாவத்திற்குத் தக்கபடி அந்தந்த வீட்டில் ஜன்மிக்கச் செய்கின்றான். இவ்வகைப் பட்ட சாட்சி சொரூபமாயிருக்கும்

ஆத்மாவே சித்ரகுப்த னென்று சொல்லப்படும் இந்த சித்ரகுப்தன் ரகஸ்யம் எதுவோ அது விஷயம் இனி சொல்வோம், இதற்குத் திருஷ்ட்டாந்தம் ஸ்ரீபகவத்கீதை அத்தியாயம்-10 சுலோகம்-20, பிரமாணமென்னவென்றால்.

அஹமாத்மா குடாகேஸ ! ஸர்வபூதாஸய திதஹ
அஹமா திஸ்ச்ச மத்யஞ்ச பூதாநா மந்தஏவச.

சகல சரீரங்களிலும், அந்தர்யாமியாயும் ஆத்மாவாயும் இருந்து அவரவர்களின் கர்மானுசாரமாய்ப் பிராணிகளைச் சிருஷ்ட்டி செய்கிறவனும் காப்பாற்றுகிறவனும் அழிக்கிற வனும் நானே என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இவ்வித ஜீவாத்மாவை பரப்பிரம்மத்தில் ஐக்கியம் செய்வதைக் குறித்து இந்நூலில் விசேஷமாய் எழுதி யிருப்பதனால் இந்நூலுக்கு "ஜீவப் பிரம்மைக்ய மென்றும்" ருக் யஜுர் ஸாம அதர்வணமென்னும் நான்கு வேதங்களின் சிரசாகி உபநிஷத் வாக்கியங்களிலுள்ள ரகஸ்யங்களை எல்லாம் இதில் எழுதப்பட்டிருப்பதனால் இந்நூலுக்கு "ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம்" என்று பெயரிடப்பட்டது.

"அசிந்த்யா வ்யக்த ரூபாயா நிர்குணாய குணாத்மநே
ஸமஸ்த்த ஜகதா தார மூர்த்தியே ப்ரஹ்மணே நமஹ"

அந்தப் பரப்பிரம்மம் சத்திய ஞாநானந்தமானதும், மனோவாக்கிற்கெட்டாததும் நாம ரூபமில்லாதவனும், மாம்ஸ மயமாகிய கண்களுக்குக் காணப்படாததும். விக்கிரகரூபமாகவும், வெட்டவெளியாயும் இருக்கப்பட்டது இது சகல லோகத்திற்கும் ஆதாரமாயிருக்கப்பட்டதுமாகிய அந்தப் பரப்பிரம்மத்திற்கு நான் நமஸ்கரிக்கின்றேன்.

*நித்யாநந்தம் பரமஸுகதம் கேவலம் ஞாநமூர்த்தி யும் விஸ்வாகீதம் ககநஸத்ருஸம் தத்வமஸ்யாதி லக்ஷ்யம் ஏகம் நித்தியம் விமலமசலம் ஸர்வதீ ஸா க்ஷிபூதம் பாவாதீதம் த்ரிகுண ரஹிதம் ஸத்குருந்தந்தமாமி"

* ப்ரஹ்மாநந்தம் என்றும் சொல்லலாம்

எல்லா ஆனந்தங்களுக்கும் ஸ்ரேஷ்டமானதும், இவ்வுலகத்திலும், தேவருலகத்திலும் உள்ள எல்லா சுகங் களுக்கும் மேலானதும், ஞான சொரூபமானதும், பிரபஞ் சத்திற்கெல்லாம் அதிகப்பட்டதும், அவயவங்களில்லாததும், மஹாவாக்கியங்களுக்கு யிக்ஷியார்த்தமானதும், அத்வித்ய மானதும். நாசரஹிதமானதும். நிர்மலமானதும். சலனமற்றதும், மனம் புத்தி சித்த அஹங்காரங்களுக்குச் சாக்ஷி பூதமாயிருப்பது. கற்பனை முதலியனக் கடந்ததும். ஸாத்விக ராஜஸ தாமஸமென்னும் மூன்று குணங்களற்றதும், எனது மாயை என்னும் அவிவேகத்தைப் போக்கடித்து என்னை ஞான சொரூபமாய்ச் செய்த ஸ்ரீ பரப்பிரம்மத்திற்கும் நமஸ்கரிக்கின்றேன்.

''ஸச்சிதா நந்தரூபமாய் வ்யாபிநேச பரமாத்மநே
நமஸ்ரீ குருநாதாய ப்ரகாஸாநந்த மூர்த்தியே''

ஸச்சிதானந்த சொரூபனும், எங்கும் வியாபித்திருப்ப வனும், சுயம் பிரகாசனும், சதாநந்தனும், பரமாத்ம சொரூபனுமான ஸ்ரீ சற்குரு சுவாமியை நமஸ்கரிக்கின்றேன்.

''யேநசே யதாஹிதம் சித்தம் சேதயதே நரஹ
ஜாக்ரத் ஸ்வப்ந ஸஷுப்த்யாதி தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ''

எவனது ஸக்த்தியினால், ஜட சொரூபமாகிய இந்த சித்தம் (மனம்)ஆத்ம சொரூபமாய்த் தோன்றிச் சகல காரியங்களையும் செய்கின்றதோ, எவனது ரத்தா மாத் திரத்தினால், ஜீவன் சேதன சொரூபமாய் ஜாக்கிரதை சொப்பன சுஷுப்தி என்னும் அவஸ்தாத்திரங்களையும் அடைந்து சகலமும் அனுபவிக் கின்றதோ அப்பேர்ப்பட்ட கேவல சாக்ஷிமாத்ர பித்தியகாத்ம சொரூபமான ஸ்ரீசற்குருவை நமஸ்கரிக்கின்றேன்.

"சைதந்யம ஸாஸ்வதம் ஸாந்தம் வ்யோமாதீதம் நிரஞ்ஜநம்
சாதபிந்து சுவாதீதம் தஸ்மை ஸ்ரீ குருவே நமஹட்ட

சுயம் பிரகாசமானதும் நித்தியமானதும் சாந்த மானதும் ஆகாயத்தைவிட அதிகமானதும் எந்த தோஷங்களும் இல்லாததும் நாதபிந்துகளா தீதமானதும் சைதந்நிய சொரூபமானதுமாகிய பிரத்திய காத்மா என்னும் ஸ்ரீ சத்குரு பரப்பிரம்மத்திற்கு நமஸ்கரிக்கின்றேன்.

குரூர் ப்ரஹ்ம குரூர் விஷ்ணு குரூர்தேவா மஹேஸ் வரஹ
குரு ஸாக்ஷாத் பர ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ

பிரமன் விஷ்ணு மஹேஸ்வர சொரூபனும் அத்வீதிய பரப்பிரம்ம சொரூபனுமாகிய ஸ்ரீ சத்குரு சுவாமியை நமஸ்கரிக்கின்றேன்.

"அகண்ட மண்டலாகாரம் வ்யாப்தம் யேந சராசரம்
தற்பதம் தாஸிதம் யேந தஸமை ஸ்ரீ குருவேநமஹ"

இந்த சராசர பிரபஞ்ச முழுமையும் எங்கும் நிறைந்துப் பரிபூரணமாய் வியாபித்திருக்கும் 'தத்' பத லக்ஷிபார்த்த மாகிய பரமாத்மா இப்பேர்ப்பட்டதென்று அதன் லக்ஷணங்களை யெல்லாம் எனக்கு விசிதமாய்ப் போதித்த ஸ்ரீ சற்குரு சுவாமியை நமஸ்கரிக்கின்றேன்.

"ஸ்தாவரம் ஜங்கமம் வ்யாப் தம்யத்கிஞ் சியத் ஸசராசரம்
த்வம்பதம் தர்ஸிதம் யேந தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ."

இந்த சராசர ஜந்துக்களில் வியாபித்திருக்கும் 'த்வம' பத லக்ஷியார்த்தமாகிய ஜீவாத்மா சொரூபம் இப்பேர்ப் பட்டதென்றும் அதன் லக்ஷணங்களை எனக்கு விசிதமாய்ப் போதித்த ஸ்ரீ சற்குருநாதனை நமஸ்கரிக்கின்றேன்.

"சிமம்மயம்வ்யாபிதம்ஸர்வம்த்ரைலோக்யம் ஸ சராசரம்
அஸித்வம் தர்ஸீ தம் யேந் தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ."

அகண்ட ஸச்சிதானந்த பரப் பிரம்மமே பரமாத்மா சொரூபமாகவும் ஜீவாத்ம சொரூபமாகவும் இருக்கிற தென்றும், பரமாத்மா ஜீவாத்மா ஆகிய இவ்விரண்டும் பேதமில்லாமல்

எல்லா ஆனந்தங்களுக்கும் சிரேஷ்டமானதும், இவ்வுலகத்திலும், தேவருலகத்திலும் உள்ள எல்லா சுகங்களுக்கும் மேலானதும், ஞான சொரூபமானதும், பிரபஞ்சத்திற்கெல்லாம் அதிகப்பட்டதும், அவயவங்களில்லாததும், மஹாவாக்கியங்களுக்கு யிக்ஷியார்த்தமானதும், அத்விதீயமானதும். நாசரஹிதமானதும். நிர்மலமானதும். சலனமற்றதும், மனம் புத்தி சித்த அஹங்காரங்களுக்குச் சாக்ஷி பூதமாயிருப்பது. கற்பனை முதலியனக் கடந்ததும். ஸாத்விக ராஜஸ தாமஸமென்னும் மூன்று குணங்களற்றதும், எனது மாயை என்னும் அவிவேகத்தைப் போக்கடித்து என்னை ஞான சொரூபமாய்ச் செய்த ஸ்ரீ பரப்பிரம்மத்திற்கும் நமஸ்கரிக்கின்றேன்.

''ஸச்சிதா நந்தரூபமாய் வ்யாபிநேச பரமாத்மநே
நமஸ்ரீ குருநாதாய ப்ரகாஸாநந்த மூர்த்தியே''

ஸச்சிதானந்த சொரூபனும், எங்கும் வியாபித்திருப்பவனும், சுயம் பிரகாசனும், சதாநந்தனும், பரமாத்ம சொரூபனுமான ஸ்ரீ சற்குரு சுவாமியை நமஸ்கரிக்கின்றேன்.

''யேநசே யதாஹிதம் சித்தம் சேதயதே நரஹ
ஜாக்ரத் ஸ்வப்ந ஸஷுப்த்யாதி தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ''

எவனது ஸக்த்தியினால், ஜட சொரூபமாகிய இந்த சித்தம் (மனம்)ஆத்ம சொரூபமாய்த் தோன்றிச் சகல காரியங்களையும் செய்கின்றதோ, எவனது ரத்தா மாத் திரத்தினால், ஜீவன் சேதன சொரூபமாய் ஜாக்கிரதை சொப்பன சுஷுப்தி என்னும் அவஸ்தாத்திரங்களையும் அடைந்து சகலமும் அனுபவிக்கின்றதோ அப்பேர்ப்பட்ட கேவல சாக்ஷிமாத்ர பித்தியகாத்ம சொரூபமான ஸ்ரீசற்குருவை நமஸ்கரிக்கின்றேன்.

"சைதந்யம ஸாஸ்வதம் ஸாந்தம் வ்யோமாதீதம் நிரஞ்ஜநம்
சாதபிந்து சுவாதீதம் தஸ்மை ஸ்ரீ குருவே நமஹ

சுயம் பிரகாசமானதும் நித்தியமானதும் சாந்த மானதும் ஆகாயத்தைவிட அதிகமானதும் எந்த தோஷங்களும் இல்லாததும் நாதபிந்துகளா தீதமானதும் சைதந்நிய சொரூபமானதுமாகிய பிரத்திய காத்மா என்னும் ஸ்ரீ சத்குரு பரப்பிரம்மத்திற்கு நமஸ்கரிக்கின்றேன்.

குரூர் ப்ரஹ்ம குரூர் விஷ்ணு குரூர்தேவா மஹேஸ் வரஹ
குரு ஸாக்ஷாத் பர ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ

பிரமன் விஷ்ணு மஹேஸ்வர சொரூபனும் அத்வீதிய பரப்பிரம்ம சொரூபனுமாகிய ஸ்ரீ சத்குரு சுவாமியை நமஸ்கரிக்கின்றேன்.

"அகண்ட மண்டலாகாரம் வ்யாப்தம் யேந சராசரம்
தற்பதம் தாஸிதம் யேந தஸமை ஸ்ரீ குருவேநமஹ"

இந்த சராசர பிரபஞ்ச முழுமையும் எங்கும் நிறைந்துப் பரிபூரணமாய் வியாபித்திருக்கும் 'தத்' பத லக்ஷிபார்த்த மாகிய பரமாத்மா இப்பேர்ப்பட்டதென்று அதன் லக்ஷணங்களை யெல்லாம் எனக்கு விசிதமாய்ப் போதித்த ஸ்ரீ சற்குரு சுவாமியை நமஸ்கரிக்கின்றேன்.

"ஸ்தாவரம் ஜங்கமம் வ்யாப் தம்யத்கிஞ் சியத் ஸசராசரம்
த்வம்பதம் தர்ஸிதம் யேந தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ."

இந்த சராசர ஜந்துக்களில் வியாபித்திருக்கும் 'த்வம' பத லக்ஷியார்த்தமாகிய ஜீவாத்மா சொரூபம் இப்பேர்ப் பட்டதென்றும் அதன் லக்ஷணங்களை எனக்கு விசிதமாய்ப் போதித்த ஸ்ரீ சற்குருநாதனை நமஸ்கரிக்கின்றேன்.

"சிமம்முயம்வ்யாபிதம்ஸர்வம்த்ரைலோக்யம் ஸ சராசரம்
அஸித்வம் தர்ஸீ தம் யேந் தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ."

அகண்ட ஸச்சிதானந்த பரப் பிரம்மமே பரமாத்மா சொரூபமாகவும் ஜீவாத்ம சொரூபமாகவும் இருக்கிற தென்றும், பரமாத்மா ஜீவாத்மா ஆகிய இவ்விரண்டும் பேதமில்லாமல்

ஒன்றாய் இருக்கப்பட்டது. ஆதலால், ஜீவாத்ம சொரூபியாகிய நீயே, அந்தப்பரப்பிரம்மமென்றும் அந்தப் பரப்பிரம்மமே நீ யென்றும் ஜீவப்பிரம் மைக்யத்தைப் போதித்து 'அஸி' பத ரகஸ்யார்த்தங்களை எனக்கு விசிதமாய்த் தெரிவித்து என்னைக் குருதாத்தனாகச் செய்த ஸ்ரீ சற்குரு பாதகமலங்களை நமஸ்கரிக்கின்றேன்.

''மத்நாத ஸ்ரீ ஜகந்நாதோ மத்குரு ஸ்ரீ ஜகத்குரு ஸ்வா த்மைவ ஸர்வபூதாத்மா தஸ்மை ஸ்ரீ குருவே நமஹ''

என் பிரபுவே லோகபிரபு, என் குருவே லோககுரு என் ஆத்மாவே ஸ்மஸ்த்த பூதங்களிலும் பரிபூரணமாய் வியா பித்திருக்கும் பரப்பிரம்மமாயிருக்கின்றது. அப்படிபட்ட பரமாத்மா என்னும் பரப்பிரம்மத்திற்கு நான் நமஸ் கரிக்கின்றேன்.

''யஸ்ய ப்ஸராதா தஹமேவ ஸர்வம்
மய்யேவ ஸர்வம் பரிகல்பிதஞ்ச
இதம விஜாநாமீ ஸதாத்ம ரூபம்
தஸ்யாங்கரி பத்மம் ப்ரணதோஸ்மி நித்யம்''

நானே ஸர்வபரிபூர்ண பரப்பிரம்மமாயிருக்கின்றேன், இந்த அசையும் அசையாய் பிரபஞ்சமெல்லாம் என்னிடத்தில் கற்பிக்கப்பட்டிருக்கின்றது. எந்த குருகடாக்ஷத்தினால் எனது நிஜ சொரூபமாகிய பரமாத்ம சொரூபத்தைத் தெரிந்துகொண்டு அந்தப் பரமாத்மாவே அனேக அவதாரங்களை எடுத்து, பக்த ஜனங்களை ரக்ஷித்து அசுரர்களை நாசம் செய்கின்றானோ அந்த பரமாத்மாயென்னும் ஸ்ரீ சற் குருவினுடைய பாதகமலங்களை நான் நமஸ்கரிக்கிறேன்.

''அஞ்ஞான திமிராந்தஸ்ய ஜ்ஞா நாஞ்ஜந ஸலாகயா
சக்ஷுரூந்மீலி தம்யேந தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ.''

அஞ்ஞாநாந்த காரத்தினால் (அஞ்ஞானமென்னும் இருளினால்) குருடனாயிருந்த என்னுடைய கண்களை பிரம்ம

ஞானமென்னும் மையினால் சனிகரத்துடன், எந்த மாஹானுபாவனால் திறக்கப்பட்டதோ. அந்த மஹானுபவ னாகிய அடியேனுடைய சற்குரு சுவாமியின் பாத கமலங்களை நான் நமஸ்கரிக்கின்றேன்.

"ஆப்ரஹ்ம ஸ்தம்ப பர்யந்தம் பரமாத்ம ஸ்வரூபகம்
ஸ்தாவரம் ஜங்கமஞ்சவை ப்ரணமாமி ஜகந்மயம்."

பரமதேவன் முதல் அனு (கண்களுக்குக் காணப்படாத சிறிய புழு) வரையில் ஸ்தாவர ஜங்கமரூபங்க் களாயிருக்கும் இந்த அசையும், அசையா பிரபஞ்சமெல்லாம் பரப்பிரம்ம சொரூபமாகவே இருக்கின்றன. அப்படிப்பட்ட பரப் பிரம்மமே குரு சொரூபமா இருக்கின்றது. ஆதலால், அந்த பரமாத்மா என்னும் ஸ்ரீ சற்குரு பரப்பிரம்மத்தை நமஸ்கரிக்கின்றேன்.

"குருஸ் ஸிவோ குரூர்தேவோ குரூர்பந்து ஸரீரிணாம்
குரூராத்மா குரூர்ஜீவோ குரோரந்யம்ந வித்யதே"
நகுரோரதிகம் நகுரோரதிகம் நகுரோரதிகம் நகுரோரதிகஹ
ஸிவஸாஸந்தஸ் ஸிவஸாஸநதஸ் ஸிவஸாஸந்தஸ்
ஸிவஸாஸந்தஹ

"இதமேவஸிவம் இதமேவஸிவம் இதமேவஸிவம் இதமேவஸிவம்
மமஸாஸந்தோ மமஸாஸநதோ மமஸாஸநதோ மமஸாஸநதஹ"
"விதிதம்விதிதம் விதிதம்விதிதம் விஜநம் விஜநம் விஜ்நம் விஜ்நம்
ஹரிஸாஸநதோ ஹரிஸாஸநதோ ஹரிஸாஸநதோ ஹரிஸாநதஹ"

என்னும் குருகீதா வாக்கியரீதியாய்: தனக்கு ஞானோ பதேசம் செய்த சற்குரு எவரோ அவரே ஈஸ்வரன், அவரே தேவன், அவரே பந்து, அவரே ஆத்மா, அவரே ஜீவன் அவரைவிட அந்நியமானதும், சிரேஷ்ட்டமானதும் எதுவு மில்லை, குருவே மங்களகரமாகிய பரப்பிரம்மம் குரு சொரூபமே சாக்ஷிமாத்ரமானது. அவரது சொருபமே ஜநந மரணாதி விகாரங்களில்லாதது என்று ஹரிஹராதி தேவதை களும் உரைத்திருக்கின்றார்கள்.

ஸுகம் வேதஸாஸ்த்ரேஷு நஸுகம் மந்த்ரயந்த்ரகே
குரோப் ப்ரஸாதா தந்யத்ர ஸுகம் நாஸ்தி மஹீதலே.

நான்கு வேதங்களையும் ஆறு சாஸ்திரங்களையும் சப்த கோடி மஹா மந்திரங்களையும் யந்திரங்களையும் தெரிந்ததனாலேயே பிரம்ம ஞானமென்னும் சுகமுண்டாக மாட்டா சற்குரு கடாக்ஷத்தினாலேயே பிரமானந்தமான மோக்ஷ சாதநம் உண்டாகும். ஆதலால், சற்குரு கடாக்ஷத்தை விட விஷேமானது வேறென்றில்லை.

ஸ்வாஸ்ரமஞ்ச ஸ்வஜாதிஞ்ச ஸ்வகீர்த்திம்புஷ்ச்டிவர்த்தநம்
ஏதஸ்ஸர்வம் பரித்யஜ்ய குரோந்யம் ஸம்பாவயேத்.

சற்குருவானவர் தன்னைவிட த் தாழ்ந்த ஜாதியா ரென்றும் தன்னைவிடச் சிறியவரென்றும் தன் ஆசிரமத்தைவிட தாழ்ந்த ஆசிரமத்திலிருக்கிறாரென்று பேத மெண்ணாமல், அவரது குலகோத்ர வர்ணாசிரமாதிகள் ஆகிய எல்லாவற்றையும் பரித்தியாகஞ் செய்து அவரை ஆசிரயித்துப் பூஜிக்க வேண்டும்.

"ஸ்ரத்ததாநஸ்ஸுபாம்வித்யா மாததீதா வராதபி
அந்த்யாபி பரம் தர்மம் ஸ்த்ரீதத்நம் துஷ்குலாதபி"

வித்தையை அப்பியசிப்பதற்குச் சிரத்தையுடையவன் சிரேஷ்ட்டமான வித்தையை சூத்திரனிடத்திலிருந்தாகிலும். மோக்ஷமார்க்கத்தைச் சண்டாதளனிடத்திலிருந்தாகிலும், குணவதியாகிய ஸ்திரியைத் தாழ்ந்த குலத்திலிருந்தாகிலும் பெறலாம் எனவும் இவற்றிற்கு எக்குற்றங்களுதில்லை யெனவும் மநுஸ்மிருதியிற் கூறியிருக்கின்றது.

"ததேஜதி தந்தைஜதி தத்தூரே தத்வம்திகே
ததந்தரஸ்ய ஸர்வஸ்ய தது ஸர்வஸ்ய பாய்ஹதஹ.டட
(ஈஸாவாஸ்யோபநிஷத்)

தத்துவ விசாரணை இல்லாதவர்களுக்கு மாயாவுபாதியினால் தேஹேந்திரியாதிகள் என்றால், கண்கள் மூக்கு வாய்

செவிகள் தேஹசர்சம் என்னும் முதலான அவயங்களுடன் கூடி அவதரித்து, சிருஷ்ட்டி ஸ்திதிசம்ஹார காரியங்களைச் செய்து கொண்டிருப்பனாகவும், தத்துவ விசாரணை செய்த ஞானிகளுக்குத் தேஹேந்திரியாதிகளில்லாத என்றால். தேஹம் கண்கள் மூக்கு வாய் செவிகள் தேஹ சர்மம் முதலானவைகள் எதுவும் இல்லாதவனாயும் கேவல நிராகார சைதன்னிய சொரூபனாயும் தோன்றுகிறான், அன்றியும் பாமரர்களுக்கு வெகு தூரத்திலிருப்பவனாயும், சிரவண மநநாதிகள் செய்யும் பிரம்ம ஞானிகளுக்கு அதிக சமீபத்திலிருப்பவனாயுந் தோன்றுகிறான் சகல ஜீவ ஜந்துக் களினுடைய சரீரங்களிலும் அந்தக்கரண சாக்ஷியாய் ஞான சொரூபமாய் எல்லா ஜீவராசிகளின் இருதய கமலத்தில் ஆத்மாவாய் வியாபித்து, இந்த மாயா பிரபஞ்சத்திற்கு உள்ளும் புறமும் நிறைந்திருக்கின்றான்.

குகாரஞ்ச குணாதீதம் ருகாரம் ரூபவர்ஜிதம், குணாதீத மரூபஞ்ச யோதத்யாத் ஸகுருஸ்முருதஹ, குகாரஹ ப்ரதமோ பாணோ மாயாதி குணபாஸகம், ருகாரஸ்து பரப்ரஹ்ம மாயா ப்ராந்தி விமோசகம், "குகாரஸ்ச் குணாதீதோ ரூபாதீதோ ருகரரகஹ. குணரூப விஹிநத்வாத் குருரித்யபிதீயதே." "குகாரஸ்ச் சாந்தகாரஸ்து ருகாரஸ்ந்த் நிரோதக்ருத், தகாரோஹி ருகாரஸ்த் தேஜ உச்யதே அஜ்ஞாநக் ராஸகம் ப்ரஹ்ம குருரேவ நஸம்ஸயஹ" மந்த்ரராஜ மிதம் தேவீ குருரித் த்யக்ஷா த்வயம். ஸ்ம்ருதி வேதார்த்த வாக்யாநாம் குரு ஸாக்ஷாத் பரமபதம், ஸப்தகோடி மஹா மந்த்ராஹ கித்தவீப் பரமகாரஹ, ஏகமேவப்ரோ மந்த்ர குருரித் த்யக்ஷரத்வயம்.

என்னும் குரு கீதாவாக்கிய ரீதியாய், 'கு' 'ரு' என்னும் இந்த இரண்டு அக்ஷரங்களில் 'கு' என்னும் அக்ஷரம், சுத்த நிர்க்குண சொரூபம், 'ரு' என்னும் அக்ஷரம் கேவல நிராகார என்றால், வெட்ட வெளியாயிருக்கும் பரப்பிரம்மம். ஆகவே குருவென்றால் சுத்த நிர்க்குண நிராகார பரப்பிரம்மமாகின்றது என்றும்,

'கு' என்றால் மாயை, 'ரு' என்றால் அம்மாயையை நாசம் செய்யும் பரப்பிரம்மம் ஆகவே, குரு என்றால் மாயையை நாசம் செய்யும் பரப்பிரம்மம் என்றும்,

'கு' என்றால், ஸத்வ ரஜஸ் தமோ என்றால், ஸாத்விக ராஜஸ தசமஸமென்னும் மூன்று குணங்களும் இல்லாதது. 'கு' என்றால் கை கால் முதலிய அவயவங்களில்லாமல் வெட்ட வெளியாய் இருக்கப்பட்டது, ஆதலால், குரு என்றால், ரூபமில்லாமல் வெட்டவெளியாய் இருக்கப்பட்ட பரப்பிரம்மம் என்றும்,

'கு' என்றால், இருள், 'ரு' என்றால் அந்த இருளை நாசம் செய்யப்பட்டவன். குரு என்றால். அஞ்ஞானமாகிய இருளை நாசம் செய்யப்பட்ட பரஞ்சோதி யென்றும், மேலும் இந்த 'கு' என்னும் இரண்டு அக்ஷரங்களே சப்தகோடி மஹா மந்திரங்களிலும் மிகவும் சிரேஷ்ட மானவை யென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது, ஆதலால்,

"வேதாந்தர்ந் விசரரேண ஜாயதே ஞாநமுத்தமம்
தேனாக்யந்திக ஸம்ஸார துக்கநாஸோ பவத்யநு."

வேதாந்தங்களாகிய உபநிஷத்துகளின் ரகஸ்யார்த் தகங்களை, மேற்சொல்லிய குருவைப் போன்றவர்களாய் இருக்கப்பட்டவர்களிடம். விசாரணையிலும் தெரிந்து கொண்டால் தத்வ ஞானம் அதாவது. ஆத்ம அகர்த்ம விவேகம் உண்டாகும். இப்படிப்பட்ட ஞானம் உண்டாவ தனால். ஜநநமரணமென்னும் துக்க சம்சாரத்தைத் தாண்டி பிரம்ம சொரூபனாய் முக்தியை அடைவான், முக்தி அடைவதற்கு நான்கு துவாரபாலர்கள் இருக்கின்றார்கள் அவர்கள் யாதெனில் :-

மோக்ஷத்வாரே த்வார பாலாஸ் சத்வாரஹ பரிதீர்த்திதஹ
ஸமோ விசார ஸந்தோஷஸ் சதுர்த்த ஸாதுஸங்கமஹ
ஏகம்வா ஸர்வயத்நேந ஸர்வமுத் ஸ்ருஜ்ய ஸம்ஸ்ரயேத்
எகஸ்மிந வஸகே யாந்தி ஸத்வாரோபி வஸங்மத்ஹ.

என்னும் மஹோபநிஷத் வாக்ய ரீதியாய் சாந்தம் ஆத்மா அநாத்மா விவேகம்: தனக்கு லபிக்காத வஸ்துக்களில் இச்சையில்லாமல் பூர்வ கர்மானுசாரமாய்த் தனக்கு எது லபிக்கின்றதோ அதனுடன் திருப்தியடைந்து சந்தோஷத் துடன் இருப்பது பிரம்மம் ஞானிகளுடன் சினேகம் செய்வது ஆகிய இந்த நான்கு சாதனங்களே நான்கு துவாரபாலகரென்று சொல்லப்படும். இவைகளில் ஏதாகி லும் ஒன்றை பிரயத்தினத்துடன் சாதித்து வசப்படுத்திக் கொண்டால் அப்பொழுதே மற்ற மூன்றுக் வசமாய் மோக்ஷத்தைத் கரதலாமலகம் நம் (உள்ளங்கை நெல்லிக்கனி) போல் காணலாம்.

''அவிராரக்ருதோ பந்தோ விசாராந் மோக்ஷோபவதி
தஸ்மாத் ஸதா விசாரயேத் ஜகத்ஜீவ பரமாத்மநோ
ஜீவபாவ ஜகத்பாவ போதே ப்ரத்யக பிந்நம்
ப்ரஹ்மைவா வஸிஷ்யது.'' (பைங்கலோபநிஷத்)

விசாரணை செய்யாததனால் பந்தமும் விசாரணை செய்வதனால் மோக்ஷமும் உண்டாகும். ஆதலால், ஜகத் என்றால் எது? ஜீவன் எப்படிப்பட்டது? பரமாத்மா எப்படிப்பட்டவன்? என்று ஜகத்ஜீவ பரமாத்மா லக்ஷணங் களை சதா குருமுகமாய் விசாரணை செய்ய வேண்டும். அப்படி விசாரிப்பதனால் ஜீவஜகத்து இரண்டின் லக்ஷணம் இப்படிப்பட்டதென்று விசித்திரமாய்த் தெரிந்துக் கொண்ட வுடனே, பரமாத்மா இப்படிபட்டவனென்று தெளிவாய்த் தெரியவரும் இதற்குத் திருமந்திரம் பிரமாணம் என்ன வென்றால்,

தன்னையறியத் தனக்கொரு கேடில்லை
தன்னையறியாமற்றானே கெடுகின்றான்
தன்னையறியு மறிவை யறிந்து பின்
தன்னையே யர்ச்சிக்கத் தானிருந்தானே.

இவ்வாறு தன்னைத்தான் அறிந்தவுடன் மோக்ஷம் தனக்குத் தானாகவே சித்திக்கும் ஜீவஜந்துக்களின் லக்ஷணம் இப்படிப்

## 1. கடவுளின் ரூபம்

சுலோ || ததேஜதி தந்நைஜதி தத்தூ[illegible]
ததந்தரஸ்ய ஸர்வஸ்ய தது பாஹ்யத:

என்னும் ஈசா வாஸ்யோபநிஷத் வாக்யரீதியாய் கேவல நிராகார பரப்பிரம்மமாகிய நான் தத்துவ விசாரனை இல்லாதவர்களுக்கு தேஹேந்திரியங்களுடையவனாயிருந்து சிருஷ்டிப்பதும் காப்பாற்றுவதும் சம்ஹாரம் செய்வதுமாயிருக்கின்றேன். தத்துவ விசாரணை செய்த ஞானிகளுக்கு அகில சொரூபனாயும் என்றால், தேஹேந்திரியங்களில்லாமல் கேவல நிராகார (வெட்ட வெளியாய) சைதந்திய சொரூபனாய் காணப்படுவேன். பாமர ஜனங்களுக்கு என்றால் இந்த உலகத்தில் தள்ளத் தக்க விஷய சுகங்களையெல்லாம் தள்ளாமலும் சாஸ்திர விசாரனை செய்யாமலும் இருப்பார்களே பாமர ஜனங்களென்று சொல்லப்படுவர். இப்படிப்பட்ட பாமர ஜனங்களுக்கு வெகு தூரத்தில் இருப்பவனாயும் காணப்படுகின்றேன். சிரவண மனனநிதித்யாசங்கள் (கேட்டல் சிந்தித்தல், தெளிதல்) செய்யும் பிரம்ம ஞானிகளுக்குச் சமீபமாயிருப்பவனாயும் காணப்படுவேன். அன்றியும் சகல ஜீவ ஜந்துக்களினுடைய சரீரத்திலிருக்கும் மனம் புத்தி சித்த அஹங்காரமென்னும் அந்தக் கரணங்களுக்கெல்லாம் சாக்ஷியாய் கேவல ஞான சொரூபமான ஆத்மாவாய வியாபித்திருக்கின்றேன். இந்த மாயா பிரபஞ்சத்திற்கு உள்ளும் வெளியிலும் நிறைந்திருக்கின்றேன் மேலும்.

சுரு || தஸ்மாத் ஸாகார மநித்யம் நித்யம் நிராகாரமிதி.

என்னும் மஹா நாராயணோபநிஷத் வாக்யரீதியாய் பெயர் ரூபமுடையவன் என் சாகார (விக்கிரக) சொரூபம் என்றால், ராமா கிருஷ்ணா கோவிந்தா நாராயணா, கேசவா, மாதவா, மதுசூதநா, புண்டரீகா பக்தவச்சலா, பரந்தாமா ஈஸ்வரா, விநாயகா, சுப்ரமண்யா, பார்வதி, லக்ஷ்மி,

சாமுண்டீஸ்வரி என்னும் இன்னும் இப்படிப்பட்ட அனேக பெயர்களும் ரூபங்களுமுள்ள என் சரீரங்களெல்லாம் பிரளய காலத்தில் அழிந்துவிடும். ஆனால் பெயரும் ரூபமும் இல்லாத என் வெட்டவெளி ரூபம் நித்தியமானதும் சத்தியமாயும் எக் காலத்திலும் இருக்கும். இதுவே என் யதார்த்தமான சொரூபம் அதாவது இதன் முக்கியமான கருத்து எதுவோ அதை இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள் :-

வலது கையில் சக்ரமும் இடது கையில் சங்கும் இன்னொரு இடதுகையால் தன் பாதத்தைக் காட்டுவது போலும் வேறொரு வலது கையால் சும்மாயிருவென்று அபய அஸ்தம்போல் காட்டி இவ்விதமாய் விக்கிரகங்களைக் கல்லுகளிலும் மரங்களிலும் செம்புகளிலும் செய்து கோவில்களில் வைத்து அவ்விக் கிரகங்களைப் பூசை செய்து வருகின்றார்களல்லவா ?

இவ்வாறாக விக்கிரக ரூபமாயிருக்கும் என் சொரூபம் ஸாஸ்வதமாய் இருக்கப்பட்டதல்ல இந்த விக்கிரகங் களெல்லாம் பிரளய காலம் வரும்பொழுது சமுத்திர ஜலத்தால் மூடப்பட்டு அழிந்து போகத்தக்கது. ஆனால், எனது நிஜசொரூபம் எதுவென்றால் எங்கும் பரிபூரணமாயும் வெட்ட வெளியாயும் நிறைந்திருக்கும். ஆகாயவடிவமே எனது நிஜசொரூபம் இவ்வாறாக வெட்ட வெளியாயிருக்கும் எனக்கு ரூபமில்லை. பெயருமில்லை நான் கண்களுக்குக் காணப்படாதவனாயும் அரூபியாயும் இருக்கின்றேன். என்றால் சரீரமில்லாதவனாய் இருக்கின்றேன் இன்னும் நான் எப்படிப் பட்டவனாய் இருக்கின்றேனென்றால்,

"யஸ்யாந்தர்நா திமத்யம்" அதாவது முதல் இடை கடை இல்லாதவன் என்றால், நான் இல்லாதயிடம் ஊசி நாட்டுமவ்வளவு இடமுமில்லையென்று அர்த்தமாகின்றது.

இந்நூலாசிரியர் மேற்சொன்னவைகளுக்கெல்லாம் கேள்விகளைத் தாமாகவே கேட்டு மறுபடியும் அக்கேள்வி களுக்கெல்லாம் சமாதானம் இந்நூலாசிரியரே அடியில் சொல்லுகின்றார்.

"யஸ்யாந்தர்நா திமத்யம்" என்று வேதவாக்கியமாய்ச் சொல்லிவிட்டீரல்லவா? அதாவது கடவுளானவர் இல்லாத யிடம் ஊசி நிற்குமவ்வளவு இடமும் இல்லையென்று சொல்லிவிட்டீர், நல்லது, ஊசியைக் கொண்டு வந்து பூமியின் மேல் நட்டால் நிற்கின்றதல்லவா? அப்படியிருக்க கடவுள் இல்லாத இடம் ஊசிநிற்கும் மவ்வளவு இடமும் இல்லையென்று எப்படிச் சொல்லலாம். ஆனால் ஊசி பூமியின் மேல் நின்றிருப்பது பொய்யா ? அல்லது கடவுள் இல்லாதயிடம் ஊசி நாட்டுமவ்வளவு இடமும் இல்லையென்று வேதப் பிரமாணமாய்ச்சொல்லும் வாக்கியம் பொய்யா? இவ்விரண்டில் பொய் எது? மெய் எது? ஊசி பூமியின் மேல் நின்றிருப்பதை நாம் பிரத் தியக்ஷமாய்ப் பார்க்கின்றோம். அப்படியிருக்க நீர் இல்லாத இடம் ஊசி நாட்டுமிடமும் இல்லையென்று எப்படிச் சொல்லலாம்.

மறுபடியும் இக்கேள்விகளுக்கெல்லாம் இந்நூலா சிரியராகிய யோகீஸ்வரரே சமாதானம் சொல்லுகின்றார்.

ஐயா !

பூமியின்மேல் ஊசி நின்றிருப்பது வாஸ்தவமா யிருந்தபோதிலும் ஊசி நின்றிருக்குமிடத்தில் ஒரு பெரிய ஆழமாகிய குழியைத் தோண்டிக்கொண்டே சென்றால். அக்குழிக்குள் வெளியாயிருக்கும் ஆகாயமே வந்து கொண்டிருந்து கடைசியில் ஒரு பெரிய கிணறாய் ஏற்பட்டு அக்கிணற்றில் ஊற்று ஜலம் சுரக்கும். பிறகு, அவ்வூற்று ஜலத்தையெல்லாம் இறைத்துப் பள்ளம் வெட்டிக் கொண்டே சென்றால் அவ்வூற்றின்கீழ் பொன் வெள்ளி செம்பு முதலாகிய பஞ்சலோகங்கள் அங்கங்கு யிருக்கும் அந்த கனிகள் இருக்கின்றன. அக்கனிகளையெல்லாம் வெட்டி யெடுத்துக் கொண்டே சென்றால். அக்கனியின் கீழ் ரெயில் இஞ்சன்களுக்குப் போடும் 'கோல்' என்று சொல்லப் பட்ட நிலக்கரி காணப்படும். இக்கரியை பூமியிலிருந்து வெட்டியெடுப்பதனால் இதற்கு நிலக்கரி

யென்றும் சொல்லுவார்கள். பிறகு அந்நிலக்கரியையும் வெட்டி யெடுத்துக்கொண்டே சென்றால், அதன் கீழ் மறுபடியும் மலை இருக்கின்றது. நிலக்கரி எடுக்குமிடத்தில் இந்நூலாசிரியர் போய்ப் பார்த்தார். மறுபடியும் அம்மலையை வெட்டி யெடுத்தால் அதன்கீழ் பாதாள கங்கை காணப்படும். அப்பாதாள கங்கையை எடுக்க எவர்களாலும் சாத்தியப்பட மாட்டா. அக்கங்கையில் மூழ்கி அடியில் சென்றால் அக்கங்கையின் கீழ் மறுபடியும் ஆகாயமேயிருக்கின்றது. அந்த ஆகாயமானது பாதாள கங்கையையும், அப்பாதாள கங்கைக்கு மேலிருக்கும் பர்வதத்தையும் அப்பர்வதத்தின் மேலிருக்கும் 'கோல்' யென்று சொல்லப்பட்ட நிலக்கரியையும், அந்நிலக்கரிக்கு மேலிருக்கப்பட்ட பொன் வெள்ளி முதலாகிய கனிகளையும் அதற்கு மேலிருக்கும் ஜலத்தின் ஊற்றையும் அந்த ஜலத்திற்குமேல் நாம் நிவசித்துக் கொண்டிருக்கப்பட்ட பூமி வீடு முதலானவைகளெல்லாம் கீழே விழாதபடிக்கு பாதாள கங்கையின் கீழ் இருக்கும் ஆகாயத்தில் கலந்திருக்கும் காற்று மேலுக்குக் கிளப்பித் தாங்கிக் கொண்டிருக்கின்றது. கீழே இருக்கப்பட்ட ஆகாயத்தில் அடங்கியிருக்கும் காற்று எல்லாவற்றையும் மேடுக்குத் தூக்கித் தூக்கித் தாங்கிக் கொண்டிருக்கின்றது. நமக்குக்கீழ் இருக்கப்பட்ட காற்று இவ்வாறு செய்து கொண்டிருக்கின்றது.

நாம் நிவசித்துக்கொண்டிருக்கும் பூமிக்குமேல் இருக்கப்பட்ட ஆகாயம் என்ன செய்கிறதென்றால், நாம் மேலே வீசி எரியும் வஸ்துக்களையெல்லாம் கிழே விழும்படி தள்ளுகின்றது. அதாவது, ஒரு பந்தை மேலே ஏகா விடுவோமாகில் அதைக் கீழே விழும்படி நமக்கு மேல்யிருக்கும் ஆகாயத்தில் அடங்கியிருக்கும் காற்று தள்ளி விடுகின்கிறது,

பாதாள கங்கையின் கீழ் இருக்கும் காற்றோ எல்லாவற்றையும் மேலே தூக்குகின்றது நாம் நிவசித்துக்

கொண்டிருக்கும் பூமிக்குமேல் இருக்கப்பட்ட காற்றோடு எல்லாவற்றையும் கீழே விழும்படிச் செய்கின்றது. ஆதலால், நமக்கு மேலும் நமக்குக் கீழும் ஆகாயம் இருக்கின்றது. அந்த ஆகாயத்தில் காற்று அடங்கி இருக்கின்றன, நமக்குக் கீழும் நமக்கு மேலும் எங்கும் ஆகாயம் நிறைந்திருப்பதனால் நான் இல்லாதயிடம் ஊசி காட்டுமவ்வளவு இடமும் இல்லையென்று வேதத்தில் சொல்லியிருப்பது மெய்யேயாம், ஆதலால் பூமியின்மேல் ஊசி நின்றிருந்ததே கடைசியில் பொய்யாய் விட்டது.

நல்லது, இன்னும் சொல்லுகின்றோம் கவனியுங்கள், நமக்குமேல் அதிக தூரத்தில் காணப்படும் ஆகாயம் பார்க்கப்பட்டவர்களின் மாம்ஸக் கண்களுக்கு ஓர் நீல வர்ணமாய்க் காணப்படுகின்ற தல்லவா? அது வாஸ்த்தவ மான நீலவர்ணமென்று நினைக்கின்றீர்களா என்ன? அது வாஸ்த்தவமான நீலவர்ணமல்ல. நமது மாம்ச கண்களானது விசேஷ தூலை தூரம் பார்க்கமாட்ட நமது கண்களின் திருஷ்ட்டி எத்தனை மைல் தூரம் சென்று நின்று விடுகிறதோ அந்தத் திருஷ்ட்டி நின்றயிடத்தில் நீலவர்ணமா யிருப்பதுபோல் மனத்திற்குத் தோன்றுமே யொழிய அவ்விடத்தில் நீல வர்ணமென்பது சிறிதேனும் இராது நமது சமீபமாய்ச் சுற்றிலுமிருக்கும் ஆகாயம் நீலவர்ணமாய்க் காணப்படாமல் வெறும் ஆகாயமாய் எவ்வாறு காணப் படுகிறதோ இந்த ஆகாயம் போன்ற ஆகாயமே நமது கண்களின் திருஷ்ட்டிக்கு அப்பால் காணப்படுமிடத்தில் இருக்கிறதே யொழிய அவ்விடம் நீலவர்ண ஆகாய மென்பது இல்லவே இல்லை :

நமது திருஷ்ட்டிக்கு நீலவர்ணமாய்க் காணப்படும் இடத்திற்கும் நாம் ஏரோபிளானில் சென்று நிற்போமே யாகில் மறுபடியும் அவ்விடமிருந்து அனேக மைல்தூரத்தில்

நீலவர்ணமாய்க் காணப்படும். இவ்வாறாக அளவற்ற யோசனை தூரங்கள் சென்று கொண்டேயிருந்த போதிலும் அந்த நீலவர்ண மானது அவ்வாறே தோன்றிக் கொண்டே போகும். ஆதலால், நமக்குக் கீழும் நமக்கு மேலும் இருக்கப்பட்ட ஆகாயத்திற்கு முடிவே இல்லாமலிருக் கின்றது.

ஆனால், இப்படிப்பட்ட வெறும் வெளியாயிருப்பதே கடவுளென்று எண்ணுகின்றீர்களா என்ன? அப்படி எண்ண வேண்டாம். கடவுளானவர் எப்படி இருக்கின்றாரென்றால் வெளிக்குள் வெளியா இருக்கின்றாரென்று பெரியோர்கள் சொல்லியிருக்கின்றார்கள். அன்றியும்.

வெட்டவெளி தன்னை மெய்யென் றிருப்பருக்கு
பட்டயம் ஏதுக்கடி குதம்பாய் பட்டயம் ஏதுக்கடி

என்று சித்தர் பாடலிலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆனால், இதுவே வெளியாயிருக்க இவ்வெளிக்குள் மறுபடியும் எவ்வாறு வெளியாயிருக்கின்றாரென்று கேட்கின்றீர்களோ என்ன? அதற்குக் காரணம் சொல்லு கிறோம் கேளுங்கள்,

ஓர் அறையில் சேர்ந்திருக்கும் சபையில் எல்லோரும் உட்கார்ந்து வேதாந்த காலக்ஷேபம் செய்து கொண்டிருக்கும் பொழுது ஒருவன் பாட்டை (ரோட்டு) வழியாய் மல்லிகைப் புஷ்பம் கொண்டு போகின்றான், அவன் புஷ்பம் கொண்டு போவதை சபையிலிருப்பவர்கள் யாரும் பார்க்கவில்லை. அப்படிப் பார்க்காவிட்டாலும் அந்த புஷ்ப வாசனையை சபையோர் எவ்வாறு அறிகின்றார்களோ அதை இனி சொல்லுகிறோம் கவனியுங்கள்.

பாட்டை வழியாய் புஷ்பம் கொண்டு போகும் பொழுது புஷ்பத்தில் அடங்கியிருந்த வாசனையானது புஷ்பத்திற்குச்

சமீபமாயிருக்கும் காற்றில் கலக்கின்றது காற்றானது எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் ஆகாயத்திலேயே அடங்கியிருப்பதனால் புஷ்பவாசனையை இழுத்துக்கொண்டு காற்றானது அதிசீக்கிரமாய் ஓடிவந்து சபையில் உட்கார்ந்திருக்கப் பட்டவர்களிடம் இருக்கும் காற்றுடன் கலக்கின்றன. அப்பொழுது அவ்வறையிலிருக்கும் காற்றெல்லாம் புஷ்ப வாசனையாயிருக்கும்.

அதன்பிறகு, புஷ்பவாசனையுடன் இருக்கும் காற்றை சபையிலுள்ளர்களெல்லோரும் மூக்குத் துவாரங்களின் வழியாய் உள்ளுக்கிழுத்து, அப்புஷ்ப வாசனையை அறிந்து புஷ்பம்கொண்டு போக பட்டவனைத் தாம் பார்க்கா விட்டாலும் பாட்டை வழியாய் எவனோ புஷ்பம் கொண்டு போகின்றான் என்று சபையிலுள்ள எல்லோரும் உடனே தெரிந்து கொள்வார்கள். காற்றும் அக் காற்றில் அடங்கிய புஷ்ப வாசனை இவ்விரண்டும் ஆகாயத்திற்குள் என்றால், வெட்ட வெளிக்குள் எவ்வாறு அடங்கியிருக்கின்றதோ அதுபோல் கடவுளும் இந்த ஆகாயத்திற்குள்ளவே அடங்கியிருக்கின்றார். அந்த ஆகாயத்திற்கே பரப்பிரம்மமென்றும், பரமாத்மாவென்றும் சொல்லப்படும். நாம் எங்கெங்கு இருக்கின்றோமோ அங்கங்கெல்லாம் காற்றானது இருந்து கொண்டேயிருக்கின்றது. இதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமானால் விசிறியினால் விசிறிப்பாருங்கள். காற்றிருப் பதைத் தெரிந்துகொள்ளலாம் மீன்கள் ஜலத்திற்குள் எப்படி அடங்கியிருக்கின்றதோ அதுபோல் நாம் காற்று யென்னும் சமுத்திரத்திற்கு அடியில் அடங்கியிருக்கின்றோம் காற்றும், கடவுளும் கண்களுக்குக் காணப்படும் வஸ்துகளல்ல, இந்த ஆகாயத்திலேயே நட்க்ஷத்திர மண்டலம் சந்திர மண்டலம் சூர்ய மண்டலம் முதலானவைகளும் எந்த ஆதாரமும் இல்லாமல் அந்தரமாய் நின்றிருக்கின்றன,

# 5. நக்ஷத்திரங்களின் ரகஸ்யம்

எந்த ஆதாரமும் இல்லாமல் அந்தரமாய் நிற்கும் மேற்சொல்லிய நக்ஷத்திரங்களின் ரகஸ்யம் எதுவோ அதை இனி சொல்லுகிறோம் கேளுங்கள்,

அஸ்வினி, பரணி, கிருத்திகை, ரோகிணி, என்று இவ்வாறாக இருபத்தி ஏழு நக்ஷத்திரங்கள் இருக்கின்றன. குழந்தை எந்த நக்ஷத்திரத்தில் பிறக்கிறதோ அந்த குழந்தையின் கூடவே அதன் நக்ஷத்திரம் உடனே ஆகாயத்தில் முளைக்கும். அக்குழந்தை பெரிதாய் வளர்ந்து எவ்வளவு காலம் ஜீவித்திருக்கிறதோ அவ்வளவு காலமும் அவன் நக்ஷத்திரம் ஆகாயத்தில் இருந்து கொண்டேயிருக்கும். பிறகு அவன் எப்பொழுது பிராணனை விடுகின்றானோ அப்பொழுது அவனுடன் கூடவே ஆகாயத்தில் முளைத்த அவன் நக்ஷத்திரம் உடனே விழுந்துவிடும்! மறுபடியும் இவன் இன்னொரு வீட்டில் இருக்கும் சிசுவின் சரீரத்தில் போய்ச் சேர்ந்து அங்கு எந்த நக்ஷத்திரத்தில் பிறக்கின்றானோ அப்பொழுது இவனுடன் கூடவே இவன் நக்ஷத்திரமும் ஆகாயத்தில் முளைக்கும். மறுபடியும் இவன் பிராணன் எப்பொழுது விடுகின்றானோ, அப்பொழுது இவனுடன் கூடவே ஆகாயத்தில் முளைத்த நக்ஷத்திரமும் ஆகாயத்திலிருந்து விழுந்துவிடும். ஆகாயத்தில் சிறிதும், பெரிதுமாய் கணக்கில்லாத எத்தனை நக்ஷத்திரங்கள் இருக்கின்றதுகளோ அந்த நக்ஷத்திரங்களெல்லாம் மானவ ஜனங்களின் நக்ஷத்திரங்களென்று தெரித்து கொள்ளுங்கள், இதற்குத் திருஷ்டாந்தம் என்னவென்றால், அடிக்கடி ஆகாயத்திலிருக்கும் பெரிய நக்ஷத்திரம் அதிக வெளிச்சத் துடன் கீழே விழும். அப்பொழுது ஜனங்கள் என்ன சொல்வார் களென்றால் எவனோ மகாராஜன், போய் விட்டானென்று சொல்லுவார்கள். இப்படிச் சொல்வது எல்லோருக்கும் தெரிந்த விஷயமேயாம்.

இதுபோல் மிகவும் சிறிய நக்ஷத்திரங்களும் அதற்கு மேல் சிறிய பெரிய நக்ஷத்திரங்களும் : அப்போதைக்கப்போது விழுந்து கொண்டு வருவதை நாம் பார்த்து வருகிறோம். பகல் காலங்களில் இறப்பவர்களின் நக்ஷத்திரம் பகல் அதிக வெளிச்சமாய் இருப்பதனால் நக்ஷத்திரம் விழுவது நமக்குத் தெரியவராது மேற்சொல்லிய சிறிய நக்ஷந்திரங்களெல்லாம் யாருடைய நக்ஷத்திர மென்றால் பிச்சையெடுக்கப்பட்டவன், கூலி வேலை செய்யப்பட்டவன். ஏழையாயிருப்பவன் இதுபோல் அநேகவிதமாய் அவரவர்களின் அந்தஸ்த்துக்குத் தக்கபடி ஜனங்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றார்கள். மேற்சொல்லிய சிறிதும் பெரிதுமாய் யிருக்கப்பட்ட நக்ஷத்திரங்களெல்லாம் இப்படிப்பட்டவர்களின் நக்ஷத்திரங்களென்று தெரிந்து கொள்ளுங்கள்.

நல்ல இருட்டுக் காலங்களில் ஆகாயத்தைப்பாருங்கள், அப்பொழுது அந்த ஆகாயத்தில் அனேக விதங்களாய் பெரிய நக்ஷத்திரம் யிருக்கும் அதுபோல் அதிலும் சிறிதான அனேக நக்ஷத்திரங்கள் இருக்கும். கண்களுக்குத் தெரிந்தும் தெரியாமலு மாய் அநேக கணக்கில்லாத நக்ஷத்திரங்கள் ஆகாயத்தில் இருக்கின்றன. ஆகாயமெங்கும் பரவியிருக்கிறது பாருங்கள் இப்படிப்பட்ட நக்ஷத்திரங்கள் எல்லா தேசங்களிலும் நிறைந்திருக்கின்றன. இந்த நக்ஷத்திரமெல்லாம் மானவ ஜனங்களின் நக்ஷத்திர மென்று இன்னொரு முறையும் சொல்லுகிறோம் அருந்துதி நக்ஷத்திரம் இனி சொல்லப் போகிறோம்.

✶ ✶ ✶

# 6. ஸப்தரிஷிகள் நக்ஷத்திரம் அருந்ததி நக்ஷத்திரம்

இரவில் இதுவரையில் சொல்லிய நக்ஷத்திரங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டே வாருங்கள். ஒரிடத்தில் நான்கு நக்ஷத்திரங்கள் நான்கு பக்கங்களில் கட்டிலின் காலைப்போல் ஒரே அளவாயும், ஒரே வெளிச்சமாயும் இருக்கும். அந்நான்கு நக்ஷத்திரங்களுக்கு கீழ்ப்புறமாய் யிருக்கும் நக்ஷத்திரத்திற்குச் சில தூரத்தில் இது போன்ற நக்ஷத்திரம் ஒன்றிருக்கும் அந்நக்ஷத்திரத்திற்குச் சில தூரத்தில் அதேபோன்ற நக்ஷத்திரம் இன்னொன்றிருக்கும். இதுதான் "வசிஷ்ட்டர்" நக்ஷத்திரம் அந்நக்ஷத்திரத்திற்குச் சில தூரத்தில் அதேபோன்ற நக்ஷத்திரம் இன்னொன்றிருக்கும் இந்த ஏழு நக்ஷத்திரங்களும் யாருடைய நக்ஷத்திர மென்றால் சப்தரிஷிகளின் நக்ஷத்திரங்கள். இதில் வசிஷ்ட்டரது நக்ஷத்திரம் எதுவோ அதைகட்டில் காலுக்குக் கீழ்ப் புறமாயிருக்கும் ஆறாவது நக்ஷத்திரம். வசிஷ்ட்டரது நக்ஷத்திரத்தைச் சேர்ந்தாப்போல் அதற்கு மிகவும் சமீபமாய் அதன் பக்கத்தில் ஒரு சிறிய நக்ஷத்திரம் அடிக்கடி மினிக் மினிக் என்று தோன்றிக் கொண்டேயிருக்கும். வசிஷ்ட்டரது பக்கத்தில் நின்று மினிக் மினிக்கென்று காணப்படுவது யாருடைய நக்ஷத்திரமென்றால், வசிஷ்ட்டரது மனைவி மஹா பதிவிருந்தையாகிய அருந்துதி தேவி நக்ஷத்திர மென்று தெரிந்து கொள்ளுங்கள் தம்பதிகள் இருவரும் அதுபோல் இருக்கவேண்டுமென்று விவாக காலத்தில் தம்பதிகளுக்கு அருந்துதியைப் பார்க்கும்படி புரோகிதர் சொல்லுகிறார்.

இந்த அருந்துதி நக்ஷத்திரத்தை நீங்கள் பார்க்க வேண்டுமானால் இராக்காலங்களில் நான்கு கட்டில் கால் நக்ஷத்திரம் எங்கிருக்கிறதோ அதை தேடி கண்டுபிடித்து அதற்கு நேராயிருக்கும் மூன்று நக்ஷத்திரத்தில் மத்தியில் இருக்கும் நக்ஷத்திரத்தின் பக்கத்தில் பாருங்கள். மினிக்,மினிக் கென்று ஒரு மிகவும் சிறிய நக்ஷத்திரம் காணப்படும், அது தான் அருந்துதி நக்ஷத்திரமென்று தெரிந்து கொள்ளுங்கள்.

வசிஷ்ட்டர், விசுவாமித்துரர், வால்மீகர், நாரதர் என்று இப்படிப்பட்ட பெயர்களையுடைய ஏழு ரிஷிகள் இருக்கின்றார்கள், இந்த ஏழு நக்ஷத்திரங்களும் அந்த ஏழு ரிஷிகளினுடைய நக்ஷத்திரங்களே யாம். இவர்களுக்கும் அருத்துதி தேவிக்கும், எப்பொழுதும் மரணமென்பதே கிடையாது.

அதனால், இந்த நக்ஷத்திரங்கள் எட்டும், எந்த காலத்திலும் விழாமல் ஆகாயத்தில் நின்றிருக்கும். இதுகள் தவிர, மற்ற நக்ஷத்திரங்களெல்லாம் இறக்கும் பொழுது, விழுந்துக்கொண்டும் மறுபடியும் பிறக்கும் பொழுது முளைத்துக்கொண்டுமாய் இருக்கும்.



## 7. பரப்பிரம்மத்தின் ரூபம்

சுரு || யத்ர நாந்யத்பஸ்யதி நாந்யத்ஸ்ருாணாதி
நரந்யத்விஜாநாதி ஸபூமா யோவை பூமா
ததம்ருதம் அத யத்ராந்யத் பஸ்யத்ய த்யந்ய ஸ்ருணோதி
அந்ய த்விஜாநாதி ததல்பம் அதயதல்பம் தந்மர்த்யம்

என்னும் சாந்தோக்கியோபநிஷத் வாக்யரீதியாய் என் நிஜ சொரூபமாகிய நிராகார சொரூபம் அதாவது, ரூபமில்லாமல் எங்கும் அகண்ட பரிபூரணமாயும் ஆகாய வடிவமாயும் நிறைந்திருக்கின்ற என் சொரூபம் நாச மில்லாமல் இருக்கப்பட்டது. என் சாகார சொரூபம் அதாவது விக்கிரக ரூபமா யிருந்து கண்களுக்குக் காணப்படும் சொரூபம் பிரளய காலம் வரும்பொழு தெல்லாம் ஒவ்வொரு யுகத்திலும் செய்து வைக்கப்பட்ட என் விக்கிரக ரூபம் சமுத்திர ஜலத்தினால் மூடப்பட்டு அருந்து போகத்தக்க தாயிருக்கின்றன. ஆகாய ரூபமா யிருக்கும் எனது நிஜசொரூப மென்றாலோ எந்த யுகத்திலும் அழியத்தக்கதல்ல. அகாய ரூபமாகவே என்றால், வெட்ட வெளியாகவே எப்பொழுதும் இருக்கப்பட்டது. இதன்றியும் இன்னும் எப்படியிருக்கிறேனென்றால்,

சுரு || யோவை பூமா தத்ஸுகம் நால்பே ஸுகமஸ்த்தி
பூமைவசுகம்வை பூமா த்மே விஜீக்ஞாஸிதவ்ய இதி.

எது அகண்ட பரிபூரணமாய் ரூபமில்லாமல் நிராகார சொரூபமாய் என்றால், வெட்ட வெளியாய் இருக்கின்றதோ அதுவே எனது நிஜசொரூபம். இப்படிப்பட்ட நிஜ சொரூ பத்தை ஆராதித்தால் சுகமுண்டாகும். விக்கிரக ரூபமா யிருக்கப்பட்டதை ஆராதித்தால் அதில் அப்படிப்பட்ட சுகமிராது. ஆதலால், வெளியாயிருக்கும் பரப்பிரம்ம சொரூபத்தை இதில் உபதேசித்தோம். அந்த பரப்பிரம்ம சுகத்தை அனுபவிக்கும் பொருட்டே இந்நூல் எழுதப்பட்டது.

என் நண்பர்களே! வெட்ட வெளியாகிய பரமாத்மாவே பெரிதென்றும், விக்கிரஹங்கள் தாழ்ந்ததென்றும் இங்கு சொன்ன விஷயம் ஞானிகளுக்கேயொழிய, சம்சாரிகளுக்கல்ல. ஞானிகள் முன் ஜன்மாந்திரங்களில் கோவில்களுக்கு சென்று விசேஷ பக்தியுடன் கல்லும் கரையும்படி விக்கிரக ஆராதனைகளை (பூஜைகளைச்) செய்து முடித்து சித்தி யடைந்து விட்டபடியால் அவர்கள் விக்கிரக ஆராதனையைச் செய்யவேண்டியதில்லை. இப்படிப்பட்டவர்கள். வெட்ட வெளியாயிருக்கும் பரமாத்ம சொரூபத்தில் மனதைச் சேர்ப்பிக்கவேண்டுமென்று, உபநிஷத்துகளில் சொல்லியதை இங்கு சம்சாரிகளாகிய உங்களுக்குத் தெரிவித்தோம். ஆதலால், குடும்பத்திலுள்ள நீங்களும் அனேக காலம் கோவில்களுக்குச் சென்று மிகவும் சிரத்தை பக்தியுடன் சிவன் அல்லது, விஷ்ணு பூஜைகளைச் செய்து மனம் பழுத்தால் அப்பொழுது நீங்களும் ஞானிகளாகலாம். மனம் பழுக்கவிட்டால் ஞானிகளாக மாட்டீர்கள், இதற்கு சிவஞான சித்தியார், உபதேசகாண்டம் பிரமாணம்,

யாதொரு தெய்வங் கொண்டீரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாகனார் தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யு
மாதலா னிவையி லாதா னறிந்தருள்செய்வ னன்றே.

எத்தி றத்துள மூர்த்தியி னாயினு
மெமை யுணர்ந்த தருச்சனை யியற்றின்
முத்தி நல்லது மாங்கதிர் பவித்திர
முழு முத லிலிங்க வர்ச்சனையே,

பக்தியிற் சிறு பச்சிலை யாயினும்
பனி மலர்ச் சிற்றித ழெனினுஞ்
சுத்த மென்புனற் றுள்ளியா யினுமதிற்
றொகுப்பவ ரெமக் கெனத் தொகுப்பார்.

மானிடர்கள் முதல்படியாகிய கோவில்களிலுள்ள சிவவிஷ்ணுக்களின் பூஜைகளை விசேஷ சிரத்தை பக்தியுடன்

பூர்த்திசெய்யா முன்னமே அதற்கு மேல் என்றால், பக்திக்கு மேல் நான்காம் படியிலிருக்கும் வெட்டவெளியாகிய பரப்பிரம்மத்தில் மனதை லயப் படுத்துவது மிகவும் கஷ்டம், ஆதலால், எல்லோரும் முதலில் கோவில்களுக்குச் சென்று பக்தியைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும். இவ்வாறு பக்தியைப் பூர்த்தி செய்து கொண்ட பின் மனம் வெகு சுலபமாய்ப் படித்துப் பரப் பிரம்மத்தில் ஐக்கியமாய்விடும் பக்திசெய்தவர்களுக்கும் பக்தி செய்யாதவர்களுக்கும் மனதை வெகு சுலபமாய் லயப்படுத்த கைக்குறி சிதா காலத்தில் மனதை லயப்படுத்து தல் என்னும் விஷய அட்டவணையிலும் சிவராஜயோக சமாதி இதை ஜபம் செய்யுங்கள் என்னும் விஷய அட்டவணையிலும் உபதேசமாய் சொல்லியிருக்கின்றோம். ஆதலால் சம்சாரத்துடனிருக்கும் கிருகஸ்த்தர்களும் மற்றுமுள்ள சாதுக்களும் சிவராஜயோக சமாதியில் சொல்லியிருக்கும் இரண்டு மந்திரங்களையும் மூச்சு உட்செல்லும்பொழுதும் மறுபடியும் வெளி வரும் பொழுதும் அந்த இரண்டு மந்திரங்களையும் மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கிழுத்தும், வெளியில் விடுவதுமாய் ஜபம் செய்து வந்தால் மூச்சு. மனதை வெளியில் ஓடவிடாமல் நிறுத்திப் பிறகு, அம்மனதை மூச்சில் ஐக்கியம் செய்து கொள்ளும், அப்பொழுது புருஷன் தன்னைத்தான் மறந்து கல்பொம்மையைப் போல் நின்று விடுவான். இதுவே உபநிஷத்திலுள்ள மஹா ரஹஸ்யம்.

இம் மஹா ரஹஸ்யத்தை உங்களுக்கு இந்நூல் மூலமாய் உபதேசித்துச் சொன்னோம். இதை ஜபம் செய்து வந்தால் இதன் அனுபவம் பிறகு உங்களுக்கு பிரத்தியக்ஷ திருஷ்ட்டாந்தமாய்த் தெரியவரும்.

## 8. சம்சார பந்தம் புருஷனைத் தொடர்வது

இந்நூலுக்கு முக்கியமாய் இருக்கப்பட்டது "சிவ ராஜயோகம்" இந்தச் சிவராஜ யோகத்திற்கு முக்கியமானது "ஸோஹம்" மந்திரம். இம்மந்திரம், இனி உபதேசிக்கப் போகின்றோம், அந்த உபதேசத்தினால் சம்சார பந்தம் நீங்கி இச்ஜன்மத்திலேயே மோக்ஷமென்னும் வீட்டை அடையலாம். இந்த சம்சார பந்தம் புருஷனை எவ்விதமாய்த் தொடர்ந்ததோ அதை சற்றே சுருக்கிச் சொல்லுகிறோம் : அதை கவனித்து வாசித்துப் பாருங்கள்.

ஐயா ! இந்துஸ்தானி தேசத்தில், ஸத்ஜந் கட, என்னும் கிராமத்தில் ராமநாத சுவாமி என்னும் மஹானுபாவர் ஒருவரிருந்தார். அவரது விவாஹ காலத்தில் அவர் மாங்கல்யம் தரிக்கப் போவதற்கு முன் தம்பதிகளுக்கு மத்தியில் திரைபோட்டு வைத்தார்கள், அந்த சமயத்தில் பிராமணர்க ளெல்லோரும் "அதிக முகூர்த்த ஸாவதாக, அதிக லக்ந ஸாவதாக" என்று எல்லோரும் ஒரே சப்தமாய்ச் கூச்சலிட்டார்கள், அப்பொழுது தன் சமீபமாயிருக்கும் ஒருபிராணனைப் பார்த்து, "ஸாவதாக ஸாவதாக" என்று எல்லோரும் கூச்சலிடுகின்றார்களே அது என்ன விஷய மென்று மாப்பிள்ளை கேட்டார். இப்பொழுது ராக்ஷிசி, வந்து உன் கழுத்தில் விழப்போகின்றாள்; ஆதலால் நீசாவதாக மாயிரு; ஏதாகிலும் உபாயமிருந்தால் அதுபோல் செய்து தப்பித்துக்கொள் என்று ஸர்வ முனிவர்களும் உன் மேல் கிருபையுடையவர்களாயிருந்து உன்னை ஜாக்கிரதைப் படும்படி சொல்லுகின்றார்களென்று அந்தப் பிராமணன் சொல்லினன். அவ்வார்த்தை மாப்பிள்ளையினது காதில் வீழ்ந்தவுடனே அவர் திரை திசையிலிருந்து தப்பித்துக் கொண்டு ஓடிவிட்டார். மறுபடியும் அவர் விவாகம் செய்து கொள்ளவில்லை,

ஜாக்கிரதைப்படுங்களென்று எவ்வளவு சொல்லிய போதிலும் புருஷர்கள் கேளாமல் ஸ்திரீமீதியிருக்கும் மோஹாந்தகாரத்தினால் அவளைத் தம் வசப் படுத்திக் கொண்டு அவள் எங்கும் ஓடாமலிருப்பதற்காக முதல் முதல் மாங்கல்ய சூத்திரருமான பாசக்கயிற்றை (பாச மென்றால் ஆசை) அவனது கழுத்தில் போடுகிறார்கள்: இந்த ராக்ஷசி ஒருவேளை அந்த மாங்கல்ய பாசக் கயிற்றிற்கு உட்படமாட்டாளென்று எண்ணி நவரத்தின ஆபரண ரூபமாய்ச் செய்து தாலிவுருவு காசிமாலை செயின் என்கிற பாசக்கயிறுகளும் கழுத்தில் போட்டு, அவன் இவைகளுக்கு உட்படமாட்டாளென்று நினைத்து கைகளையும் கால்களையும் கட்டுவதற்காக ஆபரண ரூபமாயிருக்கும் பொன் வெள்ளி விலக்குகளையும் மாட்டி தங்க ஒட்டியாணத்தினால் இடுப்பை இழுத்துக் கட்டி மூக்காங்கயிறு போன்ற புலாக்கை மூக்கில் மாட்டி முகத்தைச் சுளித்துத் திருப்பாமலிருக்க, கம்மல் என்னும் நகைகளை எல்லாம் மாட்டி அதிகமாய் வாயாடாமலிருக்கக் கண்டத்தை இறுக்கிப்பிடிப்பதற்காகக் கெம்பு ரவைகளால் செய்த அட்டிகைகளைக் கழுத்தில் இழுத்துக்கட்டும்படி புருஷன் செய்விக்கின்றான். இப்படிப்பட்ட ஆபரண ரூபமாகிய பாசக்கயிற்றால் அவளை இறுக்கிக்கட்டிப் பிறகு எங்கும் ஓட விடாமல் தன்னுடன் கூடவே அழைத்துச் செல்வதற்காகத் தன் வலது கை சுண்டுவிரலால் அவளது இடதுகை சுண்டு விரலைப் பிடித்து விவாவக ரூபமாய் இழுத்துக் கொண்டு செல்லுகின்றான். அவளைத் தன்வசப் படுத்திக் கொள்ள இப்படிப்பட்ட ஆபரணாதி பாசக்கயிறுகளால் அலங்கரித்து அவளை இழுத்துக் கொண்டு சென்ற போதிலும் நாளாவட்டத்தில் அவனுடைய சாமார்த்தியங்கள் எல்லாம் அவள் மீதிருக்கும் ஆசையால் ஒழிந்து கேவல மூடனாய், அவள் வலையில் அகப்பட்டு அவனது ஆதினமாய் அவள் நில்லென்றால் நிற்பதும், போவென்றால் போவதுமாய் அவள் சொல்லுக்கு அடங்கியிருப்பான், இப்படிப்பட்ட அபவீத்திர ராக்ஷசியை மோகிப்பதனால் அவ்விடம் என்ன இருக்கின்றது?

சுகமா? அல்லது புருஷார்த்தமா? அவளால் துக்கமே யொழிய வேறு ஏதா கிலும் பலனுண்டோ? ஒன்று மில்லையல்லவா? எப்படிப் பட்டவளை மனைவியென்று சொல்லலாமென்றால் :-

"கார்யேஷுமந்த்ரீ காணேஷுதாஸீ போஜ்யேஸு மாதா ஸயநேஷுரம்பா தர்மாநுஸாரீ க்ஷபயா தரித்ரீஷட் குண்ய பார்யா குலமுத்தரந்தி."

என்னும் ஸ்மிருதி ரீதியாய் புருஷனது சர்வ காரிகங்களிலும் நல்ல ஆலோசனைகளைச் சொல்லுவதில் மந்திரியைப்போலவும் சரீர சம்ரக்ஷணையில் தாதியைப் போலவும். பிரியத்துடன் சாப்பிடும்படிச் செய்வதில் தாயைப்போலவும் காம யோகத்தில் ரம்பையைப் போலவும் குலத்திற்கும் ஆசிரமத்திற்கும் மதத்திற்கும் தகுந்த நடவடிக்கையுடையவளும் புருஷன் சொல்லுவதுபோல் நடந்து பூமி தேவியைப் போன்ற சாந்த குணமுடையவளுமா யிருக்கும் மனைவியே குலத்தை இத்தரிக்கப் பட்டவளென்று வேத சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருப்பதனால் இப்படிப் பட்டவளையே மனைவி யென்று சொல்லலாம்.

அன்னை தயையு மடியாள் பணியுமலாப்
பொன்னி னழகும் புவிப்பொறையும்லிவன்னமுலை
வேசி துயிலும் விறன் மந்திரிமதியும்
பேசிலிவை யுடையாள் பெண்.

மேற்சொல்லியதுபோல் இல்லாமல் புருஷனுடன் வாதாடி அவனைத் துர்பாஷைகளால் தூஷித்துக் கொண்டிருப்பவள் உத்தம ஸ்திரீ ஆகமாட்டாள். இப்படிப் பட்ட ஸ்திரீயுடன் கூடியிருப்பதைவிட அதாவது,

"பத்தாவுக்கேற்ற வதிவிரதை யுண்டானால்
எத்தாலுங்கூடி யிருக்கலாம்லிசற்றெனும்
ஏறுமாறாகி யிருப்பாளே யாமாகிற்
கூறாமற் சந்நியாசங் கொள்."

தன் புருஷனுடைய வார்த்தைபடி நடவாதப் பெண்ணுடன் கூடியிருப்பதைவிட அவளைவிட்டுச் சந்நியாசங் கொள்வதே உத்தமம். ஆதலால், இந்தச் சகல பிரசஞ்சமும் மாயையால் கட்டுப்பட்டுருக்கின்றன. இந்த மாயா பிரபஞ்சமோ கயிற்றைப் பார்த்து சர்ப்பமென்று பயப்படுவது போல் இருக்கிறதென்று ஸ்ரீ சங்கராச்சாரியார் சொல்லியிருக்கின்றார் அதாவது :

ரஜ்ஜுஸர்ப்பம் ப்ரமணாரூபம் தத்வத் ப்ரஹமணி ஜகதாரூபம்
மித்யாமாயா மோஹவகாரம் மநஸிவிசாரய வாரம்வாரம்

"பஜ்கௌரீஸம் பஜகௌரீஸம் கௌரீஸம் பஜமந்வமதே
ரஜ்வஞ்ஞாநாத் பாதி ரஜ்ஜுர்யதாஹி
ஸ்வாத்ம ஜ்ஞாநாத்மநோ ஜீவப்ரவஹ
ஆப்தோகத்யா' ஹி ப்ராந்திநாஸே ஸரஜ்ஜு
ர்ஜீவோ நாஹம் தேஸிகோக்த்யா ஸிவோஹம்

இரவில் வழிநடக்கும்பொழுது தன் எதிரில் கயிறு விழ்ந்திருந்தால் அதைக் கயிரென்று நினையாமல் பாம்பென்று நினைத்துக் கலவரப்பட்டுப் பிரமை அடை கின்றான். பிறகு கயிரென்று அறிந்து மற்றொரு புருஷன் பயப்படாதே அது பாம்பல்ல கயிறு என்று சொன்னபிறகு பாம்பென்னுப் பிரமை எப்ப நாச மாகின்றதோ அதுபோல் ஆத்மாவேதானென்று அறியாமல் ஜீவனென்று எண்ணி பிரமை அடைந்த புருஷன் குரு உபதேசத்தினால் நான் ஜீவனல்ல. ஆத்மசொருபியாகிய நானே பரப்பிரம்மமென்று தெரிந்து கொள்வான். ஆதலால்,

ஒருவன் கயிற்றைப் பார்த்துப் பாம்பென்னு பிரமை யடைவதுபோல் ஜனங்களெல்லோரும் இந்த மாயா பிரபஞ்சத்தைப் பார்த்து நிஜமான பிரபஞ்சமென்று நம்பி மோசம் போகின்றார்கள். இப்படி மோசம் போவதனால் கயிறு சர்ப்பதிருஷ்டாந்தமாய் வேதாந்தத்தில் சொல்லப் பட்டிருக்கின்றது. அவை வருமாறு :

ஒரு கிருஹஸ்தன் வீட்டிற்கு எதிரில் கிணறு ஒன்றுண்டு. அது 1-ம் படத்தில் காட்டப்பட்டிருக்கின்றது. பாருங்கள். அவ்வூரிலுள்ள ஜனங்களெல்லோரும் ஜலம் எடுப்பதற்காக அக்கிணற்றுக்கு வருவதுண்டு. ஒருநாள் மாலை தீபம் வைக்கும் சமயத்தில் ஒரு ஸ்திரீ ஜலம் எடுக்க மிடா எடுத்துக்கொண்டு அந்த கிணற்றண்டை வந்தவுடன் பாம்பு ! பாம்பு ! ஓ அம்மா ! எவ்வளவு பெரிய பாம்பு ! என்று உரத்த சப்தத்துடன் கூக்குரலிட்டு மிடாவைப் போட்டு மூர்ச்சையாய்க் கீழே வீழ்ந்தாள். அவளது கூச்சலைக் கேட்டுச் சற்றுப் பக்கங்களிலிருந்த ஜனங்களெல்லோரும் ஓடி வந்து தூரமாய் நின்று வேடிக்கைப் பார்த்திருந்தார்கள். அவர்களில் இரண்டு புருஷர்கள் மூர்ச்சையாய் வீழ்ந்து கிடக்கும் ஸ்திரீயினுடைய கையைப் பிடித்து சீதோஷணங்களைத் தொட்டுப்பார்த்து உபசரித்தார்கள். ஒருவன் தூரமாக நின்று சூ! சா! என்று கூச்சலிட ஆரம்பித்தான். மூன்று புருஷர்கள் மூர்ச்சையாய்க் கீழே விழுந்தார்கள் ஒருவன் துப்பாக்கியில் தோட்டா வைத்துத் தூரமாய் நின்று துப்பாக்கியால் பாம்பைச்சுட பார்க்கின்றான். ஒருவன் பெரிய தடி கொண்டு பாம்பை அடிக்கப் பிரயத்தனப்பட்டான். ஒருவன் உறையிலிருந்த கத்தியை உருவி பாம்பை வெட்ட, ஆரம்பித்தான் ஒருவன் பெரியகல்லைத் தன் தலைக்குமேல் எடுத்துப் பாம்பின்மேல் போட ஆரம்பித்[தான்]. அதிகபயமுடுடைய ஒருவன் மரத்தின் மீதேறி வில்லில் பாணத்தைப்பூட்டி அப்பாம்பின்மேல் பிரயோகஞ் செய்ய குறிபார்த்து நின்றான். ஒரு பாம்பாட்டி மோடி வாசிக்க ஆரம்பித்தான். ஒருவன் பாலாவவை தூக்கிக் காட்டுகிறான். இன்னும் சிலர் வேடிக்கைப் பார்க்கின்றார்கள் இவைகளை எல்லாம் நெ. 1 படத்தில் காட்டியிருக்கின்றது பாருங்கள்.




ஜீவியின் தீபத்தினால் பிரமை நீங்குதல்

மறு நெ. 2-படத்தில் ஒருவன் பிரம்பினால் பாம்பைத் தொடுகின்றான். ஒரு ஸ்திரீ குழந்தையைத் தூக்கி பாம்பைக் காட்டுகிறாள். சில ஸ்த்ரீகளும் புருஷர்களும் தூரமாய் நின்று வேடிக்கைப் பார்க்கின்றார்கள். இவ்விதமாய் அனேகர் அனேக விதங்களாய் அந்தப் பாம்பைக் கொல்லப் பிரயத்தினப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இவ்விதமாய் இருக்கும்பொழுது அந்த வீட்டிலுள்ள தைரியமுடைய ஒரு கிழவி இந்தக் கூச்சலை யெல்லாம் கேட்டு ஓர் அகலில் விளக்கை ஏற்றிக்கொண்டு மெதுவாய் அந்தப் பாம்பினிடம் சென்று குனிந்து பாம்பைப் பார்த்து நின்றாள். இவைகள் யாவும் நெ.2 படத்தில் காட்டப் பட்டிருக்கின்றது பாருங்கள். பாம்பின்மேல் கிழவியின் தீபப் பிரகாசம் பட்டவுடனே ஜெனங்கள் எல்லோரும் பாம்பல்ல அது 'கயிறு' என்று சொல்லிக் கொல்லென்று எல்லோரும் சிரித்தார்கள். இதற்குள் அந்த வீட்டில் வேலை செய்பவன் வெளியில் சென்றிருந்து மறுபடியும் தாம்புக் கயிற்றைக் கொண்டு போகக் கிணற்றினிடம் வந்து பார்த்தான். அப்பொழுது இவர்கள் செய்துகொண்டிருக்கும் அட்டகசங்களை யெல்லாம் அவன் பார்த்து, விழுந்து விழுந்து சிரித்து இராட்டினத்தின் மேலிருந்த தாம்புக் கயிற்றைக் சுருணையாய்ச் சுற்றிதொட்டியின்மேல் நானே வைத்தேன் என்று சொன்னான் அதைக் கேட்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தார்கள்.

இதனால் என்ன ஏற்படுகிறதென்றால் கயிறு இருந்த இடத்தில் பாம்பின் பிரமை தோன்றிற்று. அதனால் பாம்பைக் கொல்ல அனேக ஜனங்கள் அனேக உபாயங் களைச் செய்தபோதிலும் அவைகளெல்லாம் வியர்த்த மாயிற்று. கடைசியில் கிழவியால் கொண்டு வரப்பட்ட தீபப்

*பிரகாசத்தினால் பாம்பின் பிரமை நீக்கிக் கயிறாய்க் காணப்பட்டது. அதனால் எல்லோருடைய சந்தேகமும் நிவாரணையாய் ஆச்சரியத்தை உண்டாக்கியது கிழவி னுடைய விளக்கல்லவோ?*

*இதற்கு கைவல்யம் பிரமாணம்.*

அரவன்று கயிறென் றாற்போல்
லாளன்று தறியென் றாற்போல்
குரவன்ற னுபதே சத்தார்
கூறுநூல் வெளிச்சங் கொண்டு
புரமன்று புவன் மன்று
பூதங்க ளன்று ஞானத்
திரமென்றும் பிரம மென்றும்
தெளிவந்த யபவா தங்காண்

*என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அதுபோல் சம்சார மென்பது ஒரு பெரிய பாம்பாயிருக்கின்றது. இது ஆதியில் பிரம சிருஷ்டியினால் உண்டாயிற்று. இந்த சம்சாரபந்த மென்பது புருஷனை எவ்வாறு தொடர்ந்து வந்ததோ அது விஷயம் சொல்லப் போகிறோம். அதைக் கவனியுங்கள்.*

# 9. புல்லுகளும் மிருகங்களும் மனிதராய் பிறத்தல்

*ஆதியில் என்றால் இந்தப் பிரபஞ்சோற்பத்தி காலத்தில் பரப்பிரம்மம் எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசி களையும் சிருஷ்ட்டி செய்தது அவையாவையெனில்.*

ஸ்தாவரோ லக்ஷவிம்ஸத்ய ஜலஜோ நவலக்ஷஹ
க்ரிமீணாம் ருத்ரஸங்க்யரஸ்ச்ச சாதுர்லக்ஷந்து மாநுஷஹ
த்ரிம்ஸல்லக்ஷம் கவாநம் சபக்ஷீணாம் தஸலக்ஷஹ.

*அசையாமல் நின்றிருக்கும் விருக்ஷங்கள், மலைகள் முதலானவைகள் 20 லக்ஷம், ஜலத்திலுள்ள மீன் முதலாகிய ஜலவர்க்கங்கள் 9 லக்ஷம் நகர்ந்து செல்லும் புழுவர்க்கங்கள் 11 லக்ஷம். அனேக ஜாதி, அனேக பாஷை பேசும் மனிதர்கள் 4 லக்ஷம் பசு முதலாகிய மிருகவர்க்கங்கள் 30 லக்ஷம். பக்ஷிவர்க்கங்கள் 10 லக்ஷம் ஆகமொத்தம் 84-எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசி களையும் சிருஷ்ட்டி செய்தனர். இந்த எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளையும் பசுக்கள் தின்னும் புல்லுகளும் ஓர் சிருஷ்ட்டியில் சேர்ந்திருக்கின்றன. இப்புல்லுகளானது ஏதோ ஓர் ஜன்மத்தில் தம் புண்ய விசேஷத்தினால் மானவ சரீரமெடுக் கின்றன. இதற்குத் திருவாசகப் பிரமாணம் என்னவென்றால்,*

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்வசுரராகிய முனிவராய்த் தேவராய்ச்
செல்லா ஆ நின்றவித் தாவர ஜங்கமத்து
ளெல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தே னெம் பெருமானே.

என்று சொல்லப்பட்டிருக்கின்றது. புல்லானது எந்த புண்ணியமும் செய்வதில்லை. ஆனால் இப்புல்லுகளுக்கு புண்ணியம் எவ்வாறு உண்டாகிறதோ இனி அதைச் சொல்லப் போகின்றோம் கேளுங்கள் :-

பெரியோர்கள், மஹான்கள், யோகிகள், ஞானிகள், இன்னமுள்ள அடியார்கள், வழிநடக்கும்பொழுது அவர்கள் பாதங்களின் கீழ் மிதிப்படும் புல்லுகளுக்கும் இதன்றியும் நடக்கும் பொழுது அவர்களின் நிழல் எவ்வளவு தூரம் பூமியின்மேல் படுகின்றதோ அங்குள்ள புல்லுகளுக்கும் புண்யமுண்டாகின்றன.

அப்புண்ய விசேஷத்தினால் புல்லாயிருந்தவைகள் மறுஜன் மத்தில் புல்லுகளில் பூர்க்கும் பூவாய்ப் பிறந்து. அப்புண்ய விசேஷத்தினால் மறுஜன்மத்தில் புழுவாய்ப் பிறந்து, அப்புண்ய விசேஷத்தினால் மறுஜன்மத்தில் மரமாய்ப் பிறந்து அப்புண்ய விசேஷத்தினால் பக்ஷிகளாய்ப் பிறந்து, அப்புண்ய விசேஷத்தினால் கல்லாய்ப் பிறந்து அப்புண்ய விசேஷத்தினால் மிருகங்களாய்ப் பிறந்து அப்புண்ய விசேஷத்தினால் கடைசியில் ஸ்திரீ புருஷர் களாய் வந்து பிறக்கின்றன.

புல்லுகளின்மேல் பெரியோர்களின் பாதங்கள் பட்ட் படியால் அப்புண்ய விசேஷத்தினாலேயே இத்தனை ஜன்மங்களையும் கடந்து கடைசியில் ஸ்திரீ புருஷர்களாய் வந்து பிறக்கின்றனவேயொழிய, புல்லுகளும் பூண்டுகளும், புழுக்களும், மரங்களும், பக்ஷிகளும் கல்லுகளும் மிருகங்களும் எந்த புண்யமும் செய்வதில்லை. புல்லுகளின் மேல் பெரியோர்களின் பாதங்கள் பட்டபடியால் இத்தனை ஜன்மங்களையும் கடந்து கடைசியில் அந்தந்தப் புண்யங் களுக்குத் தக்கபடி ஆணாகவோ அல்லது பெண்ணாகவோ வந்து பிறக்கின்றன. இதற்குச் சரியான திருஷ்ட்டாந்தம் ஒன்று சொல்லுகிறோம் கவனியுங்கள் :

கோவில்களைக் கட்டிவைத்த புண்யவான்கள் என்ன செய்தார்களென்றால், கோவில் வேலை முடிந்த பிறகு கோவிலுக்குள்ளிருக்கும் பிரகாரம் சுற்றிலும் கல்லுகளைப் பரப்பி அக்கல்லுகளின்மேல் சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரிப்பதுபோல் அங்கங்கு அனேக இடங்களில் கோவில்களைக் கட்டி வைத்தவர்களின் உருவம் போல் உளியினால் செதுக்கி வைப்பார்கள். இதன்றியும் மூலஸ்தானத்திற்குள் போகும்பொழுது வாசற்படிகளின் மேல் அமைந்திருக்கும் பித்தளைத் தகடுகளின் மேலும் தன் உருவம் போல் செதுக்கி வைக்கிறார்கள், இவ்வாறாக கோவில்களைக்கட்டி வைத்தார்கள் கல்லுகளின் மேலும் பித்தளை தகடுகளின் மேலும் அவர்களின் உருவங்களை அடித்து வைப்பதற்குக் காரணமென்ன வென்றால், பெரியோர்கள் கோவிலுக்குள் வந்து சுற்றித் திரிந்து பார்க்கும்பொழுது அவர்களின் பாதங்கள் தமது சரீரத்தின் மேல் பட்டவுடன் தமக்குப் புண்ய முண்டாகு மென்றும், அப்புண்ய விசேஷத்தினால் மறு ஜன்மத்தில் தாம் நல்ல கதியை அடையலா மென்றும் உத்தேசங் கொண்டு கோவில்களைக்கட்டி வைத்தவர்களெல்லாரும் இவ்வாறு செய்து வைக்கின்றார்கள் அதுபோல்,

புல்லுகளின்மேல் பெரியோர்களின் பாதங்கள் பட்டபடியால் அப்புண்ய விசேஷத்தினால் இது வரையில் சொல்லிவந்த ஜன்மங்களையெல்லாம் புல்லானது எடுத்து கடைசியில் மிருக ஜன்மமெடுத்த பிறகு அம்மிருகங்கள் செய்த புண்யத்திற்குத் தக்கபடி ஸ்திரீ புருஷர்களாய் வந்து பிறக்கின்றன. மேற் சொல்லிய மிருகங்களுக்கு புண்யம் எப்படி உண்டாகின்றதோ இனி அதைச் சொல்லுகிறோம் கேளுங்கள்.

பசுவாகிலும் எருதாகிலும் அல்லது இனி எந்த மிருகமாகிலும் வாலைத் தூக்கி அதிக வேகமாய் ஓடிவரும் பொழுது அவைகள் வரும்வழியில் சிறுவர்கள் நின்றிருந்தால்

அச்சிறுவர்களின் சமீபமாய் அம்மிருகங்கள் வந்தவுடன் அவைகளின் வேகத்தையெல்லாம் அடக்கி உடனே நின்றுவிடும். அப்படிக் கில்லாவிட்டால் சிறுவர்கள் பக்கமாய் ஒதுங்கி ஓடிப்போகும். மிருகங்கள் இவ்வாறாக செய்துவரும் விஷயம் ஒவ்வொருவருக்கும் தெரிந்த விஷயமேயாகும்.

இப்படிப்பட்ட மிருகங்களுக்கெல்லாம் ஜீவகாருண்ய மென்பது உண்டு. ஜீவகாருண்யமென்றால், ஐயோ பாவம் ! குழந்தைகளை மிதிக்கலாகாது என்னும் எண்ணம் உண்டாவதற்கு ஜீவகாருண்யமென்று சொல்லப்படும், இப்படிப்பட்ட ஜீவகாருண்யமுள்ள மிருகங்களெல்லாம் மறுஜன்மத்தில் ஸ்திரீயாகவோ அல்லது புருஷனாகவோ வந்து பிறக்கின்றான. இவ்விதமாகவே எறும்பு முதல் எல்லா ஜீவஜந்துக்களும் புண்யம் செய்து அப்புண்ய விசேஷத் தினால் மிருகங்களாய் ஜன்மித்து பிறகு ஏதோ ஓர் ஜன்மத்தில் மனிதர்களாய் வருகின்றன, இதற்குச் சில திருஷ்ட்டாந்தங்களைச் சொல்லுகிறோம் கேளுங்கள் அதாவது,

நமது தேசத்தை ஆளும் அரசாங்கம் பத்து வருஷங்களுக்கு ஒரு முறை "ஸென்ஸஸ்டட என்னும் கணக்கெடுத்துப் பார்க்கின்றார். அப்பொழுது ஒவ்வொரு "ஸென்ஸஸ்டட களிலும் மிருகங்களும் மனுஷ்ய ஜன்மத்தை அடைந்துக்கொண்டே வருவதனால் ஒவ்வொரு கிராமங்கள், தாலூக்காக்கள், ஜில்லாக்கள். பட்டணங்கள் முதலாகிய ஊர்களில் ஜனங்கள் விசேஷமாய்ப் பிறந்துகொண்டே வருவதனால் இவர்களெல்லோரும் குடியிருப்பதற்குப் போதுமான இடம் இல்லாமலிருப்பதனால் அப்போதைக் கப்போது முன்சொல்லிய ஒவ்வொரு ஊர்களும் பெரிதாய்க் கொண்டே வருகின்றன, ஐம்பது வருஷங்களுக்கு முன் ஒவ்வொரு ஊரும் இப்போதிருக்கும் அவ்வளவு பெரிதாய் இல்லவே இல்லை, இன்னும் ஐம்பது வருஷங்கள் சென்ற பிறகு அந்தந்த ஊர்களைப் போய்ப் பாருங்கள். அப்பொழுது

வெளியாயிருந்த மைதானங்களெல்லாம் வீடுகளாய் இன்னும் பெரிய ஊராகப் போகின்றன. எறும்பு முதல் எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளும் புண்யம் செய்து ஏதோ ஓர் ஜன்மத்தில், மனுஷ்யர்களாய்வந்து பிறந்து மாயையென்னும் ஆசாபாஸ கயிற்றால் கட்டப்பட்டு அதன்பின் அக்கட்டிலிருந்து விடுபட்டு மோக்ஷமென்னும், வீட்டை அடையும். மிருகங்களாய் இருந்தவைகளுக்குக் கிடைக்கத்தகாத மானவ சரீரம் கிடைத்தபோதிலும் மறுபடியும் பாவ கார்யங்களைச் செய்தால் அசுர யோனிகளில் போய்ப் பிறக்கின்றார்கள். இதற்கு ஸ்ரீ பகவத்கீதை அத்யாயம் 16-சுலோகம் 17, 18, 19, பிரமாணம் என்ன வென்றால்,

> ஆத்மஸம்பாவிதாஹ ஸ்தப்தா தநமாநமதாந்விதா
> யஜந்தேநாம யக்ஞைஸ்த்தே தம்பேநா விதிபூர்வகம் 17
> அஹங்காரம்பலம் தர்ப்பம் காமம்க்ரோ தஞ்ச ஸம்ஸ்ரிதாஹ
> மாமாத்மபரதேஹேஷுப்ரத்விஷந்தோப்ஸூயகா ஹா 18
> தாநஹம்த்விஷதஹ : க்ருராந்ஸம்ஸாரேஷுநராதமாந்
> க்ஷிபாம்யஜஸ்ர மஸுபர நாஸ்ரீஷ்வேவ யோநிஷு 19

தன்னைத்தான் புகழ்ந்துக் கொள்ளப்பட்டவனும் செல்வத்தினால், கர்வமடையப் பட்டவனும், அஹங்காரம் பலம் கோபம் ஆசை முதலானவைகளினால் நிறைந் திருக்கப் பட்டவனும், தன் தேகத்திலும் இதரர்களின் தேகத்திலும் ஆத்மாவாயிருக்கப்பட்ட என்னை தூக்ஷிக்கப் பட்டவனும், பார்ப்பவர்களுக்குப் பூஜை செய்பவனைப் போல் நடித்துக் காட்டப்பட்டனுமாகிய இப்படிப் பட்ட துன்மார்க்கர்களை யெல்லாம் மறுபடியும் நான் அசுரயோனிகளில் என்றால், புலி முதலாகிய துஷ்ட்ட மிருகங்களின் கர்ப்பத்தில் பிறக்கும்படிச் செய்விப்பேன் என்று ஸ்ரீ கிருஷ்ணா பகவான் சொல்லியிருக் கின்றார்.

CB

ஆதலால், கிடைக்கத்தகாத மானவ சரீரமெடுத்தும் பாவகாரியங்களைச் செய்வதனால் மறுபடியும் தாழ்ந்த ஜன்மத்தை அடையவேண்டியவர்களாய் இருக்கின்றார்கள்.

மிருகங்களாய் இருந்தவைகள் ஸ்திரீ புருஷர்களாய் வந்து அவதரித்தபோதிலும் பார்வைக்கு மாத்திரம் மனுஷ்யர்களாய்க் காணப்படுவார்களேயொழிய மனுஷயர்களிடத்திலிருக்கும் குணங்கள் அவர்களிடத்தில் எள்ளள வேனும் இராது. பறவைகளும், கல்லுகளும், மரங்களும் இன்னும் மற்ற ஜந்துக்களும் மனிதர்களாய் வருவதுண்டு.

இப்படி மிருகங்களாயிருந்து மனுஷ்யர்களாய் வந்து பிறந்தவர்களுக்கு முதல் ஜன்மத்தில் ஈஸ்வர் பக்தி என்பது இவர்களுக்கு எள்ளளவேனும் இராது. இதற்குச் சில மனிதர்களை இங்கு திருஷ்டாந்தமாய்ச் சொல்லுகின்றோம். அதை அனுபவத்தில் நீங்களே பிரத்தியக்ஷ திருஷ்டாந்த மாய்த் தெரிந்து கொள்ளலாம்.

பயிர்தொழில் செய்பவர்கள் காலை 6-மணிக் கெல்லாம் கழனிக்குச் சென்று ஏர்க்ளைக்கட்டி உழுது 11 மணிக்கு வீடு வந்து சேர்ந்து ஸ்நாநம் செய்து சாப்பிட்டு சிலநேரம் படுத்துத் தூங்கி மறுபடியும் மாலை 4 மணிக் கெழுந்து கழனிக்குச் சென்று ஏர்களைக்கட்டி உழுது மாலை 6-மணிக்கு வீடுவந்து சேர்ந்து மாடுகளுக்குத் தண்ணீர் காட்டி வைக்கோல் முதலானவைகளைப் போட்டு இவர்களும் சாப்பிட்டு, வீண் விவகாரங்களையெல்லாம் சில நேரம் பேசி அதன் பிறகு படுத்து உறங்குவார்கள். இப்படிப் பட்டவர்களுக்கு ஈஸ்வர பக்தியென்பது சிறிதேனும் இராது. இப்படியாய் ஈஸ்வரபக்தி யிராதவர்கள் யாரென்றால் முன் ஜன்மத்தில் மிருகங்களாயிருந்து அந்த மிருக ஜன்மத்தைவிட்டு தாம் செய்த புண்ணிய விசேஷத்தினால் மனிதர்களாய் வந்து பிறந்து எந்த ஈஸ்வர தியானமும் இல்லாமல் ஏர்களை உழுதுகொண்டும் சாப்பிட்டுக் கொண்டுமாய்

இருப்பார்கள். இவர்களைப் போலவே எந்தக் கடவுளின் பூஜையும் செய்யாமல் இன்னும் அனேகர்கள் அனேக விதங்களாகிய வியவகாரங்களைச் செய்து வருகின்றார்கள். இப்படியாயிருக்கும் அனேக மனிதர்களை நீங்களெல்லோரும் பார்த்திருக்கலாம்.

மேற்சொல்லியவர்களில் சிலர் ஏர் உழுது வீடுவந்து சேர்ந்தபிறகு ஸ்நானம் செய்து உலர்ந்த மடி வஸ்திரங் களைக் கட்டி பூஜை அறையில் உட்கார்ந்து விபூதியை மந்திரங்களுடன் அந்தந்த இடங்களில் அணிந்து ஜபமாலையைக் கையில் பிடித்து ஸ்ரீராமமந்திரமோ, ஸோஹம் மந்திரமோ அல்லது பஞ்சாக்ஷர மந்திரமோ தன் ஸக்தியானுசாரமாய் சில நேரம் ஜபம் முடித்துப் பிறகு சாப்பிடுவார்கள். மறுபடியும் மாலையில் ஏர் உழுது வந்த பிறகும் ஸ்நாநம் செய்து பூஜை அறைக்குச் சென்று காலையில் ஜபம் செய்ததுபோல இரவிலும் ஜபம் செய்தபிறகு சாப்பிடுவார்கள்.

மற்ற அனேக விதங்களாகிய வேலைகளைச் செய்யப் பட்டவர்களில் சிலர் மாத்திரம் முன்சொல்லிய ஏர் உழுபவனைப்போல் காலை மாலைகளில் ஜபமோ அல்லது ஈஸ்வர பூஜைகளையோ செய்து வருவார்கள். இவ்வாறாக ஏதோ ஓர் பூஜையை செய்து வரப்பட்டவர்களெல்லோரும் யாரென்றால் இவர்களெல்லோரும் முன் ஜன்மாந்திரங்களில் மனிதர்களாய்ப் பிறந்து ஜபமும் ஈஸ்வரப் பூஜையும் செய்து வந்தவர்களாதலால் அந்த வாசனையானது முதிர்ந்து முன் ஜன்மத்தில் எந்தெந்த பூஜைகளைச் செய்துவந்தார்களோ அதே பூஜைகளை மறுஜன்மத்திலும் செய்துவருவார்கள், இவ்வாறாக ஒவ்வொரு ஜன்மத்திலும் செய்துவரும் பூஜைகளெல்லாம் ஜன்மாந்திரங்கள் தோறும் சிறுகச் சிறுக முதிர்ந்து கொண்டே வந்து கடைசியில் ஏதோ ஓர் ஜன்மத்தில் அந்த ஈஸ்வர பூஜை பழமாய்ப் பழுத்துவிடும். ஈஸ்வர பூஜை பழமாய்ப் பழுத்து மரணமடைந்த பிறகு மற்றொரு சரீரமெடுக்கின்றான்.

மற்றொரு சரீரமெடுத்தபோது அந்த ஜன்மத்தில் தேக தியான நிஷ்டாபரனாய் இருப்பான். என்றால் ஒரே கடவுளின் ரூபத்தை இருதயத்தில் நிறுத்தித்தான் எந்தெந்த வேலைகளைச் செய்துவந்த போதிலும் அந்த வேலை களுடன் இதுவும் ஓர் முக்கியமான வேலையென்று நினைத்து சர்வகால சர்வாவஸ்தையிலும் அக்கடவுளின் ரூபத்தை மனக்கண்ணால் பார்த்துக்கொண்டு தான் பேசாமல் சும்மாயிருக்கும் போதெல்லாம் "ஓம்" என்னும் பிரணவ மந்திரத்தினால் மேற்சொல்லிய கடவுளை ஜபம் செய்துக்கொண்டே வருவான். இவ்வாறாக ஜபம் செய்து வரப்பட்டவர்கள் முதற்படியாகிய பூஜைகளைக் கடந்து இரண்டாவது படிக்கு வந்தவர் களாகின்றார்கள். இப்படியா யிருக்கும் ஜன்மத்தில் தான் முதல் ஜன்மத்தில் செய்துவந்த ஜபம் அல்லது பூஜை முதலானவைகளை நினைத்து மறுபடியும் இரண்டாவது ஜன்மத்தில் ஜபம் செய்ய எவ்வளவேனும் அவனுக்கு இச்சையிராது. ஏனென்றால் அவன் அப்படியைக் கடந்து விட்டபடியால் அதன்மேல் அவனுக்கு இச்சையிராது, இப்படியாய்ப் படிகள் உயர்ந்துக் கொண்டே செல்லச் செல்ல, மேற்படிகளுக்குப் போக இச்சை உண்டாக்குமே யொழிய செய்து முடித்த கீழ்ப்படிகளுக்குச் செல்ல இச்சையிராது. இதுபோல், நிஷ்டையும் ஒவ்வொரு ஜன்மத்தில் சிறுகச்சிறுக முதிர்ந்துக் கொண்டே வந்து கடைசியில் ஏதோ ஓர் ஜன்மத்தில் இந்த நிஷ்டையும் பழமாய்ப் பழுத்து மரணமடைந்த பிறகு மற்றொரு சரீர மெடுக்கின்றார்கள்.

மற்றொரு சரீரமெடுத்த பிறகு அந்த ஜன்மத்தில் யோகியாவான். யோகியென்றால் பல இடங்களிலும் குரங்கைப்போல் ஓடிக்கொண்டிருக்கும் மனதை அங்கு மிங்கும் ஓடவிடாமல் கட்டி விடும் சக்தி யோகத்திற்குண்டு, மோக்ஷமடையப்பட்டவர்களுக்கு இந்த யோகம் மூன்றாவது படியா யிருக்கின்றது. இந்த யோகத்திற்கு மேல்படி ஞானமேயாம். யோகமில்லாமலே ஞானத்தை அடையலா மென்று சிலர்

சொல்லுவார்கள். யோகமில்லாமலே ஞானம் சித்திக்கமாட்டாது. யோகம் எப்படிப்பட்டதென்றால் அக்கினியைப் போன்றது. ஞானம் எப்படிப்பட்டதென்றால் அக்கினியில் உண்டாகும் ஜுவாலையைப் போன்றது. அக்கினியில்லாவிட்டால் ஜுவாலை எப்படி இல்லையோ அதுபோல் யோகமில்லாவிட்டால் ஞானம் சித்திக்கமாட்டாது. ஆதலால் அக்கினியே ஜுவாலையும் ஜுவாலையே அக்கினியாயும் எப்படியிருக்கின்றதோ, அதுபோல் யோகமே ஞானமாயும், ஞானமே யோகமாயும் இருக்கின்றதென்று அறியக்கடவீர்களாக.

மூன்றாவது படியாகிய யோகப்படிக்கு வந்தபிறகு இந்த யோகமும் ஒவ்வொரு ஜன்மத்திலும் சிறுகச் சிறுக முதிர்ந்து கொண்டேவந்து கடைசியில் அந்த யோகம் ஏதோ ஓர் ஜன்மத்தில் பழமாய்ப் பழுத்து மரணமடைந்த பிறகு மற்றொரு சரீர மெடுக்கின்றான்.

மற்றொரு சரீர மெடுத்த பிறகு இந்த யோகியா யிருக்கும்போதே நாசமாய்விட்டபடியால் மறுஜன்மத்தில் மனமென்பது அவனிடம் தலைக்காட்டாமல் இருப்பதனால், அவன் தன் சரீரத்தை மறந்து தன்மேல் வஸ்த்திரம் இருப்பதும் இல்லாததும் அவனுக்குத் தெரியாமலும் அன்றியும் தான் உண்பதும், அல்லது அன்னியரால் ஊட்டப்படுவதும் தனக்குத் தெரியாமலும் இன்ன வஸ்துவுதான் சாப்பிடுகிறோமென்றும் அறிய மாட்டான். இப்படியாய் இருப்பவனே சரியான மௌனியும், ஞானியும் என்று சொல்லலாம். இந்த ஞானமே நான்காவது, படியென்று சொல்லப்படும், இவ்வாறிருக்க,

சிலர் என்ன செய்கிறார்களென்றால் பேசாமல் வாயை மூடிக்கொண்டும். மனதை வெளி வியவகாரங்களில் ஓட விட்டுக்கொண்டும். தாம் எண்ணங் கொண்டிருப்பவைகளை யெல்லாம் பலகையிலும் கடிதங்களிலும் எழுதிக் காட்டிக் கொண்டு வருகிறார்கள், இப்படிச் செய்வது மௌனமல்ல மனதை வெளி விவகாரங்களில் ஓடவிடாமல் நிறுத்தி சும்மாயிருப்பதே மௌனமாகும் : யோகாப்பியாசத்தினால்

மௌனம் சித்திக்குமேயொழிய மற்ற எந்த மந்திரங்களினாலும், ஜபங்களிலும் பூஜைகளினாலும், அல்லது தவங் களினாலும் மௌனம் சித்திக்கமாட்டா. யோகம் ஒன்றிற்கே மனதை நாசம் செய்யத்தக்க சக்தியுண்டேயொழிய இதைத் தவிர மற்ற வகைகளுக்கும் மனதை நாசம் செய்யத்தக்க ஸக்தி இல்லை.

இந்நூலாசிரியருக்கு யோகத்தினால் உண்டான அனுபவங்களை யெல்லாம் இங்கு வெளியிட்டுச் சொல்லுகிறார். அதாவது இவர் உட்கார்ந்திருக்கும்பொழுது மனதை எங்கும் வெளியில் ஒட விடாமல்செய்து சும்மா உட்கார்ந்து திருப்பார், அதுபோல் நடக்கும்பொழுது எந்த எண்ணங்களும் இல்லாமல் சும்மாய் நடப்பார். யாரிடமா கிலும் பேசவேண்டுமானால் அந்த சமயத்திற்கு வேண்டிய பேச்சுகளை மாத்திரம் பேசுவார். பேசி முடிந்தவுடன் மறுபடியும் சும்மாயிருப்பார். புத்தகங்களை எழுத வேண்டியதாயிருந்தால் மனதினால் நினைத்து புத்தியினால் யோசித்து எழுதி மற்றக் காலங்களிலெல்லாம் மனதை எங்கும் ஓடவிடாமல் செய்வித்து சும்மாயிருப்பார்.

இவ்வாறாக சும்மாயிருப்பதே மௌனமென்று அறியக்கடவீர்களாக. இந்த மனநிலையை இந் நூலாசிரியர் யோக பலத்தினால் நன்றாய்க் கண்டறிந்தபடியால் இம்மனத்தின் ரகஸ்யங்களை யெல்லாம் உங்களுக்கு இங்கு சொல்ல நேர்ந்தது. இது இப்படியிருக்கட்டும். திகம்பர வேஷதாரிகளைக் குறித்து இனி சொல்லப்போகிறோம் கவனியுங்கள்.

சிலபுருஷர்கள் வேஷ்டிகளையும் கௌபீனத்தையும் அவிழ்த்துப் போட்டு, சரீரமெல்லாம் விபூதியைப் பூசிக் கொண்டும். எல்லோரிடத்திலும் வார்த்தையாடிக் கொண்டும் ருசிகரமான பதார்த்தங்களைச் சாப்பிட்டுக் கொண்டும் திரிந்து வருகின்றார்கள். இப்படிப்பட்ட துன்மார்க்கர்களையெல்லாம் ''பசுக்களென்று சொல்லலாமேயொழிய திகம்பரிகளாக

மாட்டார்கள். இவர்கள் மஹா ஞானி யென்று உலகத்தார் எண்ணிக்கொள்ளட்டும் என்று இவ்விதமான வேஷத்தைப் பூண்டிருக்கிறார்கள்.

மிருங்களாயிருந்து மனுஷ்யர்களாய் வந்து பிறந்தவர்களுக்கு முதல் ஜன்மத்தில் ஈஸ்வர பக்தி என்பது எள்ளளவேனும் இராதென்றும். இதற்குத் திருஷ்டாந்தம் பயிர்த் தொழில் செய்பவனைக் குறித்தும் இவனைப்போல் இன்னும் அனேகர்கள் அனேக விதங்களாகிய விவகாரங் களைச் செய்து வருபவர்களைக் குறித்தும் இதுவரையில் முன்சொல்லி இருக்கின்றோமல்லவா ? இப்படிப்பட்டவர் களுக்கெல்லாம் ஈஸ்வர பக்தி என்பது எப்பொழுது உண்டாகுமோ இனி அதைச் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

பிரம்மசர்யம், கிருஹஸ்த்தாசிரமம், வானப்பிரஸ்த்தம், ஸந்யாஸம் என்ற நான்கு ஆஸ்ரமங்கள் இருக்கின்றன. இந்நான்கு ஆஸ்ரமங்களிலும் கிருஹஸ்த் தாசிரமமே மிகவும் சிரேஷ்டமானதென்று உபநிஷத்துகளில் சொல்லப் பட்டிருக்கின்றன. ஏனென்றால், கிருஹஸ்த்தன் வீட்டிற்கு பிரம்மசர்யனும் வானப் பிரஸ்த்தனும் ஸந்யாசியும் சென்று சாதம் கேட்கின்றார்கள். சிலர் தர்மம் கேட்கின்றார்கள். சிலர் பால்பழங்களைக் கேட்கின்றார்கள், இவர்கள் கேழ்ப்பதுபோல் கிருஹஸ்த்தன் கொடுத்துக்கொண்டு இவ்வாறாக் கிருஹஸ்த்தன் முன் சொல்லிய பிரம்மசரியன் வானப்பிரஸத்தன் ஸந்யாசிகளுக்கு தர்மம் கொடுத்து வருவதனால் அந்த கிருஹஸ்த்தனுக்குப் அப்புண்ணிய விசேஷத்தினால் மறுஜன்மத்தில் லக்ஷாதிபதி வீட்டில் போய்ப் பிறக்கின்றான்.

லக்ஷாதிபதியாகவும் பிக்ஷாதிபதியாகவும், ஏன் பிறக்கின்றார்களோ அதற்குக் காரணம் சொல்லுகின்றோம் கேளுங்கள். பதினாயிரம் ரூபாய் ஆஸ்தியுடைய ஒருவன் என்ன செய்கின்றாவென்றால், அவன் சக்தியானுசாரம் குளம்

வெட்டுகின்றான். கோவில்களை சீர்திருத்தம் செய்கின்றான். தண்ணீர்ப்பந்தல் வைக்கின்றான். பிரதி வருஷமும் சாதுக்களுக்கு சாதம் போடுகின்றான். இப்படிப் பட்ட தர்மங்களையெல்லாம் ஈஸ்வரார்ப்பணமாக நான் செய்கின்றே னென்று எண்ணுவானாகில் இந்த ஜன்மத்தில் பதினாயிரம் ரூபாய் ஆஸ்தியுடைய இவன் தர்மம் செய்து வந்த புண்ணிய விசேஷத்தினால் மறுஜன்மத்தில் ஐம்பதினாயிரம் ரூபாய் ஆஸ்தியுடையவர்களின் வீட்டில் போய்ப் பிறப்பான். அங்கு பிறந்தபிறகு, மறுஜன்மத்தில் செய்த தர்மத்தைவிட அந்த ஜன்மத்தில் இன்னும் அதிகமாய்த் தர்மம் செய்வான். அதிக தர்மம் செய்து மரணமடைந்த பிறகு மற்றொரு ஜன்மத்தில் லக்ஷரூபாய் ஆஸ்தியுடையவர் வீட்டில் போய்ப் பிறப்பான். இவ்வாறாகவே பிரதி ஜன்மங்களிலும் தர்மம் செய்து கொண்டே போவனேயாகில் அரசனாகவும், கோடீஸ் வரனாகவும் போய்ப் பிறப்பான்.

திரவ்வியம் சம்பாதித்து எந்த தர்மமும் செய்யாமல் வயலைக்காக்கும் பொம்மையைப் போல் தனத்தைக் காத்து, அந்த தனத்தை மற்றவர் எவரோ ஒருவர் அனுபவிக்கும் படியாய் வைத்து உலகத்தில் மரணமடைந்தவர்கள் அனேகர் இருக்கின்றார்கள். வண்டியின் சக்கரம் உருளும் பொழுது கீழ்பாகம் மேலும் மேல் பாகம் கீழுமாய் சுற்றி சுற்றித் திரிந்து உருளுகின்றதோ அதுபோல் தனவந்தனா யிருப்பவன் ஏழையாய் பிறப்பார், ஏழையாயிருப்பவன் தர்மம் செய்து தனவந்தனாய்ப் பிறப்பான், தனவந்தனாயும், அரசனாயும் பிறப்பதற்குக் காரணம் தாம் செய்துவரும் தர்மமே யொழிய மற்றப்படிக்கு வேறொன்றல்ல. நமது நிழல் நம்முடன் கூட எப்படி வருகின்றதோ அதுபோல் நாம் செய்து வரும் தர்மம் ஒன்றே நம்முடன் கூட தொடர்ந்து தனவான்களின் வீட்டில் பிறக்கும்படிச் செய்கின்றது. ஆதலால் தர்மம் தலையைக் காக்கும் என்று பெரியோர் களும் சொல்லியிருக்கின்றார் கள், இதன்றியும் இன்னும் என்ன சொல்லியிருக்கின்றார்களென்றால்,

பாடுபட்டுத்தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்லிகூடுவிட்டு
ஆவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார்
பாவிகா ளந்தப் பணம்

என்றும் சொல்லியிருக்கின்றார்கள் : பொருள் சம்பாதித்து தர்மம் செய்யாமல் மரணமடைந்தால் மறுஜன்மத்தில் நல்லகதி உண்டாகமாட்டாதென்று மானவ ஜனங்கள் தெரிந்து கொள்ளாமல் அதோ கதிக்குப் பாழாகின்றார்கள். இதுவரையில் முன் சொல்லியது போல் புண்ணியம் செய்து லக்ஷாதிபதி களாய்ப் பிறக்கப் பட்டவர்களுக்கு ஈஸ்வரசக்தி என்பது சிறிதேனும் உண்டாகமாட்டா. அவர்களின் மனம் திரவ்வியம் சம்பாதிப்பதிலேயே எப்பொழுதும் நாடி யிருக்கும் அப்படியிருப்பதற்கு காரணமென்னவென்றால்,

புண்ணியத்தில் காம்ய புண்ணியமென்றும் நிஷ்க்காம்ய புண்ணியமென்றும் இரண்டு விதங்களா யிருக்கின்றன. காம்ய புண்ணியமென்றால், தான் செய்யும் தர்மங்களையெல்லாம் நான் செய்கிறே னென்றாகிலும் அல்லது நான் செய்தேனென்றாகிலும் செய்யும் தர்மத் தினால் உண்டாகும் புண்யத்திற்கும் காம்ய புண்ணிய மென்று சொல்லப்படும்.

நிஷ்க்காம்ய புண்ணியமென்பது எப்படிப்பட்ட தென்றால், நான் தாயின் கர்ப்பத்திலிருந்து வரும்பொழுது எந்த வஸ்துக்களும் கொண்டுவரவில்லை. இந்த தனதான்யாதி ஐஸ்வர்யங்களெல்லாம் மத்தியில் ஈஸ்வர னால் கொடுக்கப்பட்டவைகள். ஆதலால், ஈஸ்வரனால் கொடுக்கப் பட்டிருக்கும் வஸ்துக்களையெல்லாம் ஈஸ்வரப் பிரீதியர்த்த மாகவே தர்மம் செய்ய வேண்டு மென்றெண்ணி தர்மம் செய்து வந்தால் அதனால் உண்டாகும் புண்ணியத்திற்கு நிஷ்க் காம்ய புண்ணிய மென்று சொல்லப்படும். இவ்வாறாக நிஷ்க்காம்ய புண்ணியங்களைச் செய்து வரப் பட்டவர்கள் உலகத்தில் மிகவும்

அறிதாயிருப்பார்கள். நான் தர்மம் செய்கின்றே னென்று உலகத்தில் அனேகர்கள் செய்து வருகின்றார்கள். இந்த ரகஸ்யங்களெல்லாம் அனேகர்களுக்குத் தெரியாம லிருக்கின்றன. அதனால் அந்த ரகஸ்யங்களை யெல்லாம் இப்பொழுது இந்நூலில் வெளியிட்டுச் சொன்னோம்.

மிருகங்களாய் இருந்தவைகள் மனுஷ்யர்களாய் வந்து பிறக்கின்றன, அந்த மிருக மனுஷ்யர்களில் சிலர் பயிர்த் தொழிலைச் செய்கின்றார்களென்றும் மற்றும் சிலர் அனேக வியவகாரங்களைச் செய்து வருகின்றார்களென்றும், அப்படிப் பட்டவர்களுக்கு ஈஸ்வரபக்தி இராதென்றும் இதுவரையில் முன்னமே சொல்லியிருக்கின்றோமல்லவா ? இந்த மிருக மனுஷ்யர்கள் ஜன்மாந்திரங்கள் தோறும் தர்மம் செய்து புண்ணியம் சம்பாதித்து வந்தபோதிலும் எந்த ஜன்மத்தில் பெரியோர்களை அடுத்து அவர்களின் பசியைத் தணித்து அவர்களின் இஷ்டபூர்த்தியைச் செய்விக்கின்றார் களோ அப்பொழுது அவர்கள் சந்தோசித்து, அவர்களை ஆசீர்வதிப்பார்கள், அந்த ஆசீர்வாதத்தினாலுண்டாகும் புண்ணியம் நிஷ்காம்ய புண்ணியத்திற்குச் சமானமாகின்றது. முன் சொல்லிய பயிர்த் தொழில் செய்பவனுக்கும் மற்ற வியவகாரங்களைச் செய்யப்பட்டவனுக்கும், எந்த ஜன்மத்தில் பெரியோர்களின் ஆசீர்வாதத்தால் இவ்வாறான புண்ணியம் உண்டாகின்றதோ அந்த ஜன்மம் முதல் இவர்களுக்கு ஈஸ்வர பக்தியானது ஒவ்வொரு ஜன்மத்திலும் உயர்ந்து கொண்டே சென்று கடைசியில் ஏதோ ஒரு ஜன்மத்தில் ஞானியாய்ப் பிறந்து மோக்ஷமென்னும் வீட்டில் அடைவார்கள்.



## 10. திகம்பரி ரகசியம்

திகம்பரியென்றால் சரீரத்தின்மேல் வேஷ்டியும் கௌபீனமும் இல்லாமல் இருப்பவர்களையே திகம்பரி யென்று சொல்லப்படும்.

ஒரு கிராமத்தில் மேற்சொல்லியவரைப் போன்ற ஒரு திகம்பரி இருந்தார் அவர் தினந்தோறும் என்ன செய்வது வழக்கமென்றால், பார்க்கப்பட்டவர்களுக்குப் பயித்தியம் பிடித்தனைப்போல் இருந்து, அங்கங்கிருக்கும் எச்சை இலைகளிலுள்ள சாதங்களைச் சாப்பிட்டுக் கொண்டு சாக்கடைகளிலிருக்கும் ஜலத்தைக் குடித்துக் கொண்டும், இரவில் ஒருவருக்கும் தெரியாத ஓர் இடத்தில் இருந்து சற்று படுத்தெழுந்து, மற்ற இரவெல்லாம் யோகத்திலிருப்பது வழக்கம், இப்படியிருக்க அவ்வூரில் ஒருவன் அவரைப் பார்த்து இம்மஹான் பயித்தியம் பிடித்தவரைபோல் காணப்படுகிறார், இவர் மஹா ஞானி, இவரை அடுத்து இவருடன் கூடவே நான் எப்பொழுதும் இருக்கவேண்டு மென்று தன் மனதில் ஒரு திட நிச்சயம் உண்டாகி அன்று முதல் தன் வீட்டில் சாப்பிடும் வேளை தவிர மற்ற பகற்காலங்களிளெல்லாம் அவர் எங்கெங்கு சென்ற போதிலும் அவரை விட்டு நீங்காமல் அவருடன் கூடவே திரிந்துகொண்டிருந்து, பொழுது போனவுடன் தன் வீட்டிற்குச்சென்று மறுபடியும் காலையில் அவரிடம் வந்து அவருடன் கூடவே திரிந்து கொண்டிருப்பான்.

இவ்வாறாக பன்னிரண்டு வருஷங்கள் வரையில் அவருடன் கூடவே அவன் திரிந்துகொண்டிருந்த போதிலும், அவர் ஒரு நாளாகிலும் இவனிடம் பேசவேயில்லை. இப்படி யிருக்க, ஒரு நாள் காலை திகம்பரியார் இருக்கும் ஊருக்குக் கீழ்ப்புறமாய் திகம்பரியார் சென்று கொண்டிருந்தார். திகம்பரியார் இருக்கும்

ஊருக்கு மேல்புரமாய் இருக்கும் ஊரில், அன்று உற்சவம் நடக்கின்றது. அந்த உற்சவத்திற்கு, ஜனங்கள் போவதற்காக திகம்பரி யாரை எதிர்நோக்கி வருகின்றார்கள். இவ்வாறாக ஜனங்கள் வரும் சமயத்தில் திகம்பரியார், இருந்தார்ப்போல் இருந்து தாம் இரண்டு கைகளால் தமது மர்மஸ்தானத்தை மூடிக் கொண்டார்.

அப்பொழுது பன்னிரண்டு வருஷங்களாய் அவரைத் தொடர்ந்து கொண்டிருக்கும் புருஷன், திகம்பரி யாரைப் பார்த்து, என்ன "சுவாமி! நான் பன்னிரண்டு வருஷங்களாய் சுவாமிகளுடன் கூடவே இருக்கின்றேன் ஒரு நாளாகிலும் நீங்கள் மர்மஸ்தானத்தை மூடினதேயில்லை. அப்படியிருக்க, இன்றைய தினம், சுவாமிகள் எதற்காக மர்மஸ்தானத்தை மூடியதோ அது விஷயம் அடியேனுக்குத் தெரிவிக்க வேண்டும் சுவாமி!" என்று கேட்டான்.

அன்றைய தினம் தான் திகம்பரியார் வாய் திறந்து 'அதை நீ பார்க்கவேண்டும்' என்னவென்று கேட்டார். 'ஆம் சுவாமி! அதை நான் பார்க்கவேண்டும்' என்று சொன்னான், அப்பொழுது திகம்பரியார் தமது வலது கையால் அவன் முகத்தைத் தடவி என் பின்புறமாய் நின்று என்ன தெரிகிறதோ பார், என்று சொன்னார். அப்பொழுது அந்த ஜனங்கள், இவன் கண்களுக்கு எவ்விதமாய்க் காணப் படுகின்றார்கள் என்றால், யானைகள், சிங்கம், புலி, கரடி, பாறை, முள்ளம்பன்றி, ஓணாய், நரி இன்னும் காட்டிலுள்ள அனேக விதங்களாகிய மிருகங்கள், பசு, எருது, கன்றுகள், எருமைகிடா, முதலான அந்த மிருகங்களின் கூட்டத்தில் சில மனிதர்கள் அவன் கண்களுக்கு காணப்பட்டார்கள். அம்மனிதர்கள் திகம்பரியாரை கடந்து சென்றபிறகு தம் மர்மஸ்தானத்தை எடுத்துவிட்டு தன்னைத் தொடர்ந்து பின்புறமாய் வருவனுடைய முகத்தை மறுபடியும் திகம்பரியார் தம் கையால் தடவினார் அப்பொழுது மிருகங்களாய் இருந்தவைகளெல்லாம் அவன் கண்களுக்கு

மனிதர்களாய் காணப்பட்டார்கள். அதன் பிறகு திகம்பரியார் 'நீ என்ன பார்த்தாய்' என்று அவனை கேட்டார் அதற்கு அவன் என்ன சொன்னானென்றால் தம்மை எதிர் நோக்கி வரும் மிருகங்களின் கூட்டமத்தியில் சில மனிதர்கள் இருந்தார்கள் என்று சொன்னான். அந்த மனிதர்களுக்காக நான் மர்மஸ்தானத்தை என் கைகளால் மூடினேனே ஒழிய இந்த மிருகங்களுக்காக மூடவில்லை என்று சொன்னார். அதன்பிறகு அவன் திகம்பரியார் பாதத்தில் சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று தன் இரண்டு கைகளையும் குவித்து அடியேனை ரக்ஷித்து என்னை நல்வழிக்கு ஆளாக்க வேண்டுமென்று அவரை மிகவும் வணக்கமாய்க் கேட்டுக் கொண்டு மறுபடியும் அவருடன் கூடவே திரிந்து கொண்டிருந்தான். இதற்குத் திருஷ்டாந்தம் சிவாநந்த போதம் சொல்லுகிறோம் கேளுங்கள்.

மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு. கல்லுண்டு மரமுண்டு
மனிதரிலும் நீர்வாழும் சாதியுண்டு அநேக குல மனிதருண்டு
மனிதரிலும் மனிதருண்டு வானவரும் மனிதராய் வருவதுண்டு
மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே யருமையென வகுத்தார் முன்னோர்

சில ஸ்திரி புருஷர்கள் ஸ்னானம் செய்து விபூதியோ அல்லது ஸ்ரீசூர்ணமோ நெற்றியில் அணிந்து தம் வீட்டிலிருக்கும் படங்களுக்குப் பூஜை செய்து முடித்து அதன் பிறகு ஜபம் செய்வதும் கோவில்களுக்குப் போய் அவ்விக்கிரங்களைக் கும்பிட்டு வருவார்கள், இவர்களைத் தான் மனிதர்களென்று சொல்லப்படும், அப்படிச் சொல்வதற்குக் காரணம் என்னவென்றால், இவர்கள் முன்ஜன்மத்தில் மனிதர்களாய்ப் பிறந்து, மேற்சொல்லிய பூஜைகளை யெல்லாம் செய்து வந்தார்கள். அந்த வாசனை யினால் இச்ஜன்மத்திலும் அந்த பூஜையைச் செய்து வருகிறார்கள். இதையே விட்டகுறை

தொட்டகுறை, என்று சொல்லப்படும். இதன் கருத்து என்னவென்றால் முன்ஜன்மத் தில் இவர்கள் வேறொரு சரீரத்திலிருந்து மேற்சொல்லிய பூஜைகளைச் செய்து கொண்டிருக்கும் பொழுது, தாம் பிராணனை விடும்போது அந்த பூஜையை அந்த ஜன்மத்தில் விட்டபடியால் விட்டகுறை என்றும், இவர்கள் இன்னொரு வீட்டில் போய்ப் பிறந்து மறுபடியும் அப்பூஜையைச் செய்ய பிரரேம்பிப்பதனால், அதற்குத்தொட்ட குறை என்றும் சொல்லப்படும் என்றால், முன் ஜன்மத்தில் பூஜையை விடுவது, மறுபடியும் அடுத்த ஜன்மத்தில் அப்பூஜையை செய்ய பிராரம்பிப்பது. இதைத் தான் விட்ட குறையேன்றும் தொட்டகுறை யென்றும் சொல்லுவார்கள் ஆதலால்,

ஓ சகோதர சகோதரிகளே ! குரு உபதேசம் பெற்று உபதேசம் பெற்றதை இடைவிடாமல் ஜபம் செய்து கொண்டும், கோயில்களுக்குச் சென்று அல்லது விக்கிர கங்களைக் கும்பிட்டுக் கொண்டும் பொய் சொல்லாமல் சத்தியமாயிருந்து உங்களால் ஈன்றவரையில் தான தர்மங்களைச் செய்து வாருங்கள். இவ்வாறாகச் செய்து வருவீர்களாகில் இனி எடுக்கப்போகும் ஜன்மத்தில் மேலான பதவியை அடைந்து, பிறகு ஏதோ ஓர் ஜன்மத்தில் உங்கள் சொந்த வீடாகிய வெட்ட வெளியாயிருக்கும் பரப் பிரம்மத்தில் போய்ச் சேர்ந்து விடுவீர்கள்.

அங்கு போய்ச் சேர்ந்தபின் மறுபடியும் உங்களுக்குப் பிறப்பு இறப்பு யென்பது இல்லை. இது சத்தியம் சத்தியம் சத்தியம் என்று மூன்றுமுறைச் சொன்னோம்.

# 11. மாயை புருஷனை தொடர்வது

இப்பிரபஞ்சோற்பத்தி காலத்தில் எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளையும் பிரம்மதேவர் சிருஷ்ட்டி செய்தா ரென்றும் அதில் அநேக ஜாதி, அனேக பாஷையில் பேசும் மனிதர்கள் 4 லக்ஷம் இருக்கின்றார்களென்று முன்சொல்லியிருக் கின்றோமல்லவா? ஈஸ்வரன் இம்மனிதர்களை சிருஷ்ட்டி செய்தபிறகு இவர்களுக்கு வேண்டும் ஆகாரத்திற்காக என்ன செய்தா ரென்றால் நெல். கோதுமை, கேழ்வரகு, கம்பு, சோளம், இன்னும் அனேக விதங்களாகிய தான்யதினுசுகளையும், இன்னும் மொச்சை அவரை. துவரை என்னும் நவதான்ய தினுசுகளையும், மிளகாய், புளி வகையரா தினுசுகளையும், இவர்களுக்கு வேண்டும் உப்புக்காக சமுத்திர ஜலத்தையே உப்பாய்ச் சிருஷ்ட்டி செய்தனர்.

ஈஸ்வரன் கொடுத்த மேற்படி போஜன பதார்த்தங் களையும். தான்ய தினுசுகளையும் ஜனங்கள் அபிவிருத்தி செய்து சாப்பிடுவதற்காக வருஷாந்திரம் தோறும் மழையை உண்டாக்கினார். அதன்றியும் இவர்களுக்கு வேண்டும் பால் தயிர் நெய் முதலானவைகளுக்காகப் பசுக்களையும் எருமைகளையும் உண்டாக்கினார். குளிர் காலத்தில் ஸ்திரீ புருஷர்கள் போர்த்துக் கொள்வதற்காக அந்த ஈஸ்வரன் என்ன செய்தாரென்றால். குரும்பாடுகளையும் வெள்ளாடு களையும் சிருஷ்ட்டி செய்து அவற்றின் மேல் வளர்ந்துவரும் மயிர்களை ஆறு மாதத்திற்கொரு முறை கத்திரியினால் கத்தரித்து அம்மயிர்களிலும் கம்பளிகளை நெய்வித்து. குளிர்காலங்களில் போர்த்துக் கொள்வதற்கும், பூமிக்கு வேண்டும். எருவுகளில், ஆடுகளின் மலமூத்திர எருவு மிகவும் முக்கியமான எருவாயிருப்பதற்கும் மேற்படி ஆடுகளைச் சிருஷ்ட்டி செய்தனர். இரவில் தூங்கிக்கொண்டிருப்பவர் களையெல்லாம் பொழுது விடிந்து எழுந்திருங்களென்று 'கொக்கரகே' என்று கூவி

ஜனங்களுக்கு எச்சரிக்கை செய்வதற்காகவே சேவல்களைச் சிருஷ்டி செய்தனர். அன்றியும் தம் வீட்டுச் சமீபமாய்ச் சிதறுண்டு கிடக்கும் சாதம் தான்யங்களை யெல்லாம் பொறுக்கித் தின்று தன் எஜமான் வீட்டை சுத்தி செய்து வைப்பதற்கும், துஷ்ட புழுக்களாகிய பாம்பு தேள்கள் முதலானவைகளும் குழந்தைகளைத் தீண்டாமலிருப்பதற்காக அப்பாம்பு தேள்களையெல்லாம் கொன்று விடுவதற்கும் ஈஸ்வரன் கோழிகளைச் சிருஷ்ட்டி செய்திருக்கின்றாரே யொழிய ஜனங்கள் மேற்படி ஆடு. கோழிகளையெல்லாம் கொன்று தின்பதற்காக சிருஷ்ட்டி செய்ய வில்லை இவ்வாறாக ஜனங்களுக்கு வேண்டிய வஸ்துக்களையெல்லாம் சிருஷ்ட்டி செய்வித்த பிறகு, இவனுடைய சம்சார விஷயங்களை யெல்லாம் பார்க்கவும், இவன் காமத்தை தீர்த்துக் கொள்ளவும் மனைவியை ஈஸ்வரன் கொடுத்தார். இவ்வாறு கொடுத்த பிறகு மனைவியார் மீது புருஷனுக்கு, புருஷன் மீது மனைவியாருக்கும் ஓர் ஆசையை உண்டாக்கினார். அவ்வாசைகள் எப்படிப்பட்டவைகளென்றால், தனக்கு வேண்டும் ஆபரணங்களையும் சேலை ரவிக்கைகளையும் வாங்கிக் கொடுக்கும்படிதன் புருஷன் தன்னுடன் மிகவும் சந்தோஷமாய் வார்த்தையாடிக் கொண்டிருக்கும் காலத்தில் கேழ்ப்பாள். அப்பொழுது அவன் அதற்கு சம்மதித்து அவள் கேட்டதுபோல் நகைகளையும் சேலை ரவிக்கைகளையும் வாங்கிக் கொடுக்கின்றாள்.

அவன் வாங்கிக் கொடுத்தபின் ஆஹா நான் கேட்டவுடன் யாதொன்றும் தடை சொல்லாமல் கேட்டவைகளை யெல்லாம் வாங்கிக் கொடுத்தாரல்லவா என்று மிகவும் சந்தோஷித்து தன் புருஷன் எவ்வாறு நடக்கச் சொல்லு கின்றானோ அதுபோல் மனைவியானவள் அந்த ஆசையினால் நடந்து கொள்வாள். அப்படித்தன் மனைவி யானவள் தன்னிஷ்டம்போல் நடந்துகொள்வதனால் அவனுக்குத் தன் மனைவியார்மேல் விசேஷ ஆசையுண்டா கின்றது. இவ்வாறாக ஒருவர் மேலொருவர் அகதி ஆசையு டன் இருப்பதே மாயை என்று சொல்லப்படும்.



A7

தம்பதிகள் இருவரும் இப்படிப்பட்ட ஆசைகளுடன் இருக்கும் சமயத்தில் புத்திர சந்தானம் உண்டானால் அப்புத்திரன் பாலுண்டு வளர்ந்து இரண்டு மூன்று வருஷங்களானவுடன் தட்டுத் தடுமாறி நடக்கும் சமயத்தில் அப்பொழுது அக்குழந்தையின் தாய் தந்தைகள் கண்ணெது? மூக்கெது? வாய் எது? கையெது? காதெது? என்றும் பிறகு அம்மா வென்று சொல். தாத்தாவென்று சொல், அத்தை என்று சொல், அப்பாவென்று சொல் என்று அக்குழந்தைக்குப் புதிதாய் வார்த்தைகளைக் கற்றுக் கொடுப்பார்கள். அப்பொழுது அக்குழந்தை அம்ம, தாத, அத்த அப்ப என்று தன் சிறிய வாயால் மிகவும் அழகான வார்த்தையைச் சொல்லும் அவ்வழகான வார்த்தைகளைத் தாய்த் தந்தையர்கள் கேட்டவுடன் மிகவும் சந்தோஷித்து அக் குழந்தையை வாரியெடுத்து முத்தமிட்டு என் செல்வமே, என் கண்ணே, என் கண்மணியே என்று கொஞ்சி, மிகவும் சந்தோஷப்படு வார்கள். இவ்வாறாக சந்தோஷப்படுவதே மாயை என்று சொல்லப்படும்.

இப்படியாய் அக்குழந்தை வளர்ந்து ஐந்தாறு வருஷங்களானவுடன் தன் தகப்பனார் காலையில் எழுந்து எவ்விடமாகிலும் சென்று அதிக நேரப்பட்டு வருவாரே யாகில் அப்பா! காப்பியும் சாப்பிடாமல் இவ்வளவு நேரம் எங்கு சென்றிருந்தாய்? என்று குமாரன் தந்தையை மிகவும் உபசரித்துப் பிறகு தன் தாயினிடம் சென்று காப்பியும் பலகாரங்களையும் வாங்கிக்கொண்டு வந்து தந்தை எதிரில் வைத்து அப்பா சாப்பிடு என்று சொல்வான். அப்பொழுது அச்சிறுவன் தந்தை தனக்குள் தானே என்ன ஆலோசிக் கின்றானென்றால்! ஆஹா எனது குமாரன் என் மீது எவ்வளவு ஆசையாயிருக்கின்றான். நான் வெளியே சென்று சற்று தாமதமாய் வந்ததற்காக என்னை எவ்வளவோ உபசரிக்கின்றானென்று எண்ணி அக்குமாரன் மீது விசேஷ ஆசையாயிருப்பான். இப்படிப்பட்ட ஆசைக்கே மாயை யென்று சொல்லப்படும். இப்படியிருக்கும் சமயத்தில் தன் குமாரனுக்கு ஏதோ ஓர் வியாதிகண்டு மரணமடைவானே யாகில்,

அப்பொழுது அவன் தந்தையானவன் என்ன சொல்லி அழுகின்றானென்றால், "ஐயோ மகனே சென்று விட்டாயே! யான் எவ்விடமாகிலும் சென்று சற்று தாமத மாய் வருவேனாகில், அப்பா! காப்பியும் சாப்பிடாமல், இவ்வளவு நேரம் எங்கு சென்றிருந்தாய் என்று என்னை மிகவும் உபசரித்து, உன் தாயிடம் சென்று காப்பியும், பலகாரங்களையும் கேட்டு வாங்கிக்கொண்டு வந்து என்னெதிரில் வைத்துச் சாப்பிடுவென்று சொல்லிக் கொண்டிருந்தாயே! மகனே! இனி என்னை யார் உன்னைப் போல் உபசரித்துக் கொடுக்கப்போகின்றார்களென்று விசேஷமாய்த் துக்கித்து அழுவான். இப்படியாய்த் தன் குமாரனை நினைத்துத் துக்கித்து அழுவதே மாயையென்று சொல்லப்படுமேயொழிய இதை விட மாயை என்பது வேறொன்றில்லை, அல்லது,

அப்பிள்ளையின் தந்தையானவன் சில நாட்கள் வியாதியுடனிருந்து மரணமடைவானேயாகில் பிராணன் போனவுடன் அவன் மனைவியாருக்கு திக்கென்று வயிறெரிந்து கர்ப்பம் கலங்கும்படியாய் இரண்டு கைகளாலும் வயிற்றில் அனேக விசைகள் அறைந்து கொண்டும், இரத்தம் வரும்படி வாயில் அடித்துக்கொண்டும் மண்டையில் இரத்தம் ஒழுகும்படி தலையைப் பூமியின் மேல் மோதியிடித்து இரத்தம் ஒழுகுவதும் தனக்குத் தெரியாமல் சாய்ந்து சாய்ந்து ஓவென்று கூக்குரலிட்டுக் கதறி அழுது, பிறகு தன் புருஷன் முகத்துடன் தன் முகம் வைத்து முகத்தைக் கட்டிக்கொண்டணைத்து மறுபடியும் இன்னும் அதிகமாய்த் தொனி செய்து பெருங் கூச்சலிட்டு சவத்தின்மேல் விழுந்துவிழுந்து சுமார் அரை, முக்கால் அல்லது ஒரு மணி நேரம் வரையில் ஓயாமல் அழுதுகொண்டேயிருப்பாள். இவள் விசேஷமாய் அழுகிற படியால் சரீரமெல்லாம் மிகவும் அலண்டுவிடும். சரீரம் அலண்ட பிறகு அழ சக்தியில்லாதவளாய் விடுகின்றாள் அப்பொழுது பூமியின்மேல் ஒன்சரிப்பாய்ப் படுத்துப் பார்க்கப் பட்டவர்களுக்கு மாத்திரம் சும்மாய்ப்படுத்துக் கொண்டிருப்பவளைப்போல் காணப்படுவாள். அதன் பிறகு

அவள் பூமியைப் பார்த்துக்கொண்டே தனக்குள் தான் அடிமீ சொல்வது போல் யோசித்துக் கொண்டிருப்பாள், அதாவது,

"விவாகம் முடித்து நிஷேக முகூர்த்தம் செய்த பிறகு சம்போக காலங்களில் என்னிஷ்டம்போல் கூடி எனக்கு அதி சந்தோஷத்தைத் தந்துகொண்டிருந்தாரே இனியான் அப்படிப்பட்ட சுகத்தை எப்பொழுது அனுபவிக்கப் போகின்றேன்" என்று நினைப்பாள். அன்றியும் "எந்தெந்த நகைகள், எந்தெந்த சேலை ரவிக்கைகள் வேண்டுமென்று கேழ்க்கின்றேனோ அவைகளை யெல்லாம் இல்லை யென்று சொல்லாமல் வாங்கித்தந்து கொண்டிருந்தாரே. இனி எனக்கு அதுபோல் வாங்கிக் கொடுக்கப்பட்டவர்கள் யாரிருக்கின்றார்கள்" என்று நினைப்பாள். இவ்வாறெல்லாம் நினைப்பதே மாயை யென்று சொல்லப்படும்.

இப்படியாய்த் தன் புருஷனால்தான் அனுபவித்த சுகங்களையெல்லாம் அனேக நேரம் வரையில் நினைத்துக் கொண்டிருப்பாள். பார்ப்பவர்களுக்கு மாத்திரம் சும்மாய்ப் படுத்துக் கொண்டிருப்பவளைப்போல் காணப்படுவாளே யொழிய இவள் நினைப்பவைகளையெல்லாம் எவர்களும் தெரிந்து கொள்ளமாட்டார்கள். இப்படியாய் ஒருமணி நேரம் நினைத்த பிறகு தன் தேக சிரமம் கொஞ்சம் தீரும். தேக சிரமம் தீர்ந்தவுடன் மறுபடியும் எழுந்து தன்னாயகன் மேல் விழுந்து அழுவாள். அப்பொழுது பிராணன் போனவுடனிருந்த அவ்வளவு துக்கம் இராது. அதைவிட கொஞ்சம் குறைந்திருக்கும் புருஷன் மேல் விழுந்து மறுபடியும் வெகுநேரம் அழுவாள் அப்படி அழுவதனால் மறுபடியும் சரீரத்திற்கு ஆயாச முண்டாய் அழச்சக்தியில்லாமல் மறுபடியும் பூமியின் மேல்படுத்து முன் யோசனை செய்ததுபோல் இன்னும் தன் புருஷனால் அனுபவித்த விஷயங்களை யெல்லாம் நினைத்து நினைத்து யோசனை செய்து கொண்டிருப்பாள்,

பிறகு சவத்தைக் குளிப்பாட்டிப் பாடையின்மேல் வைத்துக்கட்டி எடுக்கும்பொழுது தன் புருஷன் பிராணன் போனவுடன் எவ்வாறு வயிறெரிந்து கதறி அழுதாளோ அவ்வளவு துக்கம் மறுபடியும் பாடையெடுக்கும்போது பாடையை எடுக்கவிடாத படிக்கு புருஷன் முகத்துடன் தன் முகத்தை வைத்து முத்தமிட்டு முகத்தைக் கட்டிக்கொண்டு அழுவாள். அப்பொழுது ஸ்திரீகள் அவளைப்பாடையினிடத்திலிருந்து அப்புறப்படுத்தி பாடையை எடுக்கும் படிச் செய்வார்கள். அப்பொழுது அவள் எழுந்து நின்று இரண்டு கைகளையும் குவித்துத் தன் சிரசின்மேல் வைத்துக் கும்பிட்டுக் கொண்டே "என் துரையே! போகின்றாயா? இனியான் எப்பொழுது உன்னைக்காணப் போகின்றேன்டட னென்று வெட்டிச் சாய்த்த மரம்போல் கீழே விழுந்து கும்பிட்டுக்கொண்டே பாடையின் கீழ் புரண்டு புரண்டு அழுதுகொண்டே போவாள். அப்பொழுது ஸ்திரீகள் அவள் கையைப் பிடித்து எழுப்பி உள்ளே அழைத்துப் போய் பெண்டுகளெல்லோரும் கூட்டம்கூடி அவளைக் கட்டிக் கொண்டு சுற்றிச்சுற்றிற் திரிந்து அழுவார்கள். இப்படி சில நேரம் அழுதபிறகு அழுவதை நிறுத்தி ஒய்ந்து ஸ்நானங் களைச் செய்து சாப்பிடுவார்கள். ஆனால், புருஷனை இழந்தவள் மாத்திரம் சாப்பிடமாட்டாள். ஏனென்றால், தனக்குள் விசேஷ துக்கமிருப்பதனால், அத்துக்கமானது பசியை உண்டாக்கமாட்டாது. பிறகு இத்துக்கமானது சிறுகச் சிறுக குறைந்தபின் கொஞ்சமாய்ப் பசி, உண்டாகும். அப்பொழுது, பத்துப்பிடி சாதத்திதை சாப்பிட்டு ஜலம் குடித்து மறுபடியும்படுத்து முன்புதான் புருஷனால் அனுபவித்த சுகங்களை யெல்லாம் நினைத்து நினைத்து வியசனப்பட்டுக் கொண்டிருப்பாள். இவ்வாறாக வியசனப் படுவதே மாயையென்று சொல்லப்படும். இப்படியிருக்க,

மறுநாட்காலை சஞ்சயனம் அநாவது அஸ்தி (எலும்பு)களின் மேல் பால் விடுவதற்காக சுடலைக்குப் பால் கொண்டு போவார்கள், அப்பொழுது அவள் மறுபடியும் அப்பாலைப் பார்த்து விசேஷமாய் அழுவாள். ஆனால் அந்த அழுகை புருஷன் பிராணனைவிட்ட பொழுது வயிறெறிந்து வயிற்றிலும், வாயிலும் அறைந்து கொண்டு அழுத அழுகையைப்போல் இராது. அந்த துக்கத்தில் பாதி துக்கந்தான் மறுநாள் பாலெடுக்கும் தினத்தில் இருக்கும். பிறகு, பதினாறாவது தினத்தில் கருமாதிக் கிரியைகள் செய்வதற்குள் அந்த துக்கமானது சிறுகச் சிறுக குறைந்து கொண்டே வரும். இவ்வாறாக பதினைந்து தினங்கள் சென்ற பிறகு,

பதினாறாவது தினத்தில் கருமாதி கிரியைகளைச் செய்யப்போகும்பொழுது, கழுத்திலிருக்கும் மாங்கல்யத்தைக் கழற்றுவார்கள். அப்பொழுது தன் புருஷன் கட்டிய மாங் கல்யம் போய்விடுகின்றதேயென்று நினைத்து அதனால் விசேஷ துக்கமுண்டாய் தன் புருஷன் பிராணனை விட்டபோது வயிறெறிந்து எப்படிக் கதறி அழுதாளே அந்த அழுகையைப்போல் மாங்கல்யத்தை கழற்றும்போதும் விசேஷமாய் அழுவாள். இவ்வாறாக துக்கப்பட்டு அழுவதே மாயை யென்று சொல்லப்படும்.

கருமாதிக் கிரியைகள் கடந்த பிறகுதான் எப்படி இருப்பாளே இனி அது விஷயத்தைக் குறித்துத் தெரிவிக்கிறோம் கேளுங்கள், தன் புருஷன் பிராணனை விட்ட பிறகுதான் அவனுடன் கூடி அனுபவித்த சுகங்களை யெல்லாம் பதினாறு தினங்கள் வரையில் நினைத்து நினைத்து துக்கித்துவிட்டாள். ஆதலால் கருமாதி கிரியைகள் நடந்த பிறகு முன் நினைத்த நினைப்புகளும் முன்னிருந்த துக்கமும் அவளுக்கு இராது. ஆனால் கருமாதிக் கிரியைகள் கடந்து பிறகு அவள் எப்படியிருப்பா ளென்றால் தன் பேரன் பேத்திமார்களுக்கு

ஸ்நானம் செய்வித்து அன்னமளித்துப் பள்ளிக்கு அனுப்புவதும் வீட்டிலுள்ள மற்றக் கார்யங்களையெல்லாம் பார்த்துக் கொண்டும் தன் குமாரனும், மருமகளும் என்னென்ன கார்யங்களைச் செய்யவேண்டுமோ அந்தந்தக் காரியங்களைச் செய்யும்படி அவர்களுக்கு யுக்திகளைக் கற்றுக் கொடுப்பாள். நல்ல குடும்பத்திலுள்ளவர்களே இப்படி செய்து வருவார்கள். துன்மார்க்க குடும்பத்திலுள்ளவர்கள் என்ன செய்வார்களென்றால் தாய் சொல்லும் வார்த்தைகளைக் கேளாமலும் அவளுக்குச் சாதம் போடாமலும் விசேஷமாய்த் துன்பப் படுத்திக் கொண்டு வருவார்கள். உலகத்தில் இப்படிப்பட்ட துன்மார்க்கர்கள் தான் அதிகமாயிருக்கின்றார்கள்.

முன்சொன்ன நல்ல குடும்பத்திலுள்ளவர்களின் விஷயம் இனி சொல்லுகின்றோம் கேளுங்கள். புருஷன் இறந்தபிறகு தன் குடும்ப காரியங்களையெல்லாம் பார்த்துக் கொண்டு வருவதனால் ஒரு வருஷத்திற்குள் தன் புருஷன் விஷயமெல்லாம் மறந்து விடுவாள், பிறகு இருபது வருஷங்கள் சென்றவுடன் புருஷன் ஞாபகமேயிராமல் அடியோடு மறந்து விடுவாள். இவ்வாறாக மறந்து விடுவதே மாயையென்று சொல்லப்படும்.

இதுவரையில் சொல்லிவந்த ஆசைகளுடனிருந்து மரணமடையப்பட்டவர்களெல்லோரும் எவ்விதமாயிருகின்றாரென்றால் மறுபடியும் மற்றொரு தாய்கர்ப்பத்திலிருக்கும் பிண்டத்தில் போய் சேர்ந்து சிசுவாய்ப் பிறந்து வளர்ந்து மறுபடியும் விவாகம் செய்து கொள்வார்கள், அப்பொழுது அதற்கு முன் ஜன்மத்தில் மனைவியின் மீதும் புத்திர பத்திரிகளின் மீதும் தனதான்யாதி ஐஸ்வரீயங்களின் மீது இருந்த ஆசைகளெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து மறுபடியும் இரண்டாவது ஜன்மத்தில் வந்து மனைவி மக்கள்மீதும் தனதான்யாதி ஐஸ்வர்யங்களின்மீதும் விசேஷ ஆசையை உண்டாக்குகின்றது, அப்பொழுது முன்ஜன்மத்திலிருந்த ஆசையும் இரண்டாவது

ஜன்மத்தில் வந்த ஆசையும் இவ்விரண்டு ஆசைகளும் ஒன்றாய்ச் சேர்ந்து முதிர்ந்திருக்கும், இந்த ஆசைகளுடன் இருந்து மறுபடியும் மரண மடைந்து மூன்றாவது ஜன்மத்தை அடைகின்றான். அப்பொழுது முன்னிரண்டு ஜன்மங்களிலும் வந்த மனைவி மக்கள் மீதும் மற்றவைகளின் மீதும் இருந்த ஆசை களெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து மூன்றாவது ஜன்மத்தில் வந்த மனைவி மக்கள் மீதும் மற்றவர்க்ளின்மீதும் இன்னும் அதிக ஆசையை உண்டாக்குகின்றது: இவ்வாறாகவே எல்லா வஸ்துக்களின் மேலிருந்த ஆசைகளெல்லாம் ஒவ்வொரு ஜன்மத்திலும் முதிர்ந்துகொண்டே வருகின்றன. இவ்வாசை களெல்லாம் இப்பொழுதெடுத்திருக்கும் ஜன்மத்தில் புதிதாய் உண்டான ஆசைகளல்ல. இவைகள் அனாதியாய் என்றால் இப்பிரபஞ்சம் உண்டானது முதல் இந்த ஆசைகளெல்லாம் ஒவ்வொரு ஜன்மத்திலும் சிறுகச்சிறுக தொடர்ந்து முதிர்ந்து கொண்டே வருகின்றன இப்படியாய் ஒவ்வொரு ஜன்மத்திலும் தொடர்ந்துவரும் ஆசைகளுக்கே மாயையென்று சொல்லப்படும். அனாதியாய் வந்து கொண்டிருக்கும் ஆசைகளையெல்லாம் இந்த ஜன்மத்தில் ஒழியென்றால் ஒழியுமோ? அவைகள் எள்ளவேனும் ஒழியமாட்டா.

நமது சரீரத்திலிருக்கும் இருதய கமலத்தின் மத்தியில் மிகவும் பரிசுத்தமாகிய பரமாத்மாவானவர் நிவசித்து கொண்டிருக்கின்றார் : அப்பரமாத்ம சொரூபத்தை இது வரையில் சொல்லிக் கொண்டு வந்த ஆசைகளென்னும் மாயையானது மூடிக்கொண்டிருக்கின்றன. நமக்குள்ளிருக்கும் பரமாத்ம சொரூபத்தை இந்த ஆசைகளென்னும் மாயை எப்படி மூடிக்கொண்டிருக்கின்றதோ அதற்குக் சில திருஷ்டாந்தங்களைச் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

ரப்பர் செடிகளின் பாலானது மிகவும் வெண்மையா யிருக்கும். அப்பாலை யெடுத்து டீசுகள் என்று சொல்லப்படும்

இரண்டங்குல உயரமுள்ள எனாமல்ட் தட்டுகளில் விட்டுப்பிறகு அப்பாலானது தோய்ந்து அடையலாம் கட்டுவதற்காக ஒவ்வொரு தட்டிலும் இருக்கும் ரப்பர்பாலில் இரண்டவுன்சு ஆசிடுக் காசிட் என்னும் திராவகத்தைவிட்டு வைப்பார்கள். அப்பொழுது அப்பால் மறுநாள் காலைக்குள் நன்றாய்த் தோய்த்து அடையாய் விடுகின்றது. பிறகு, அந்த அடையை எடுத்து மிஷின் வைத்துத் திருப்புவார்கள். அப்பொழுது அப்பால் வெண்மை நிறுத்துடன் ஒரு பெரிய அடையப் போல் ஆகும். பிறகு அப்பால் அடைகளை ஓர் அறையிலிருக்கும் கழிகளில் மாட்டிக் கதவைச் சாற்றி ஓர் பக்கத்தில் புகையைப் போடுவார்கள். அப்பொழுது அப்புகையானது வெண்மையாயிருக்கும் ரப்பர் பால் மேல்படுகின்றது, புகை ரப்பர் பால் மேல் பட்டவுடன் அதன் வெண்மை ரூபம் கெட்டு முதல் மஞ்சள் வர்ணமாய் மாறிவிடுகின்றது, பிறகு சுமார் எட்டு தினங்கள் வரையில் புகை போட்டுக்கொண்டே இருக்கும் பொழுது அந்த மஞ்சள் நிறம் மாறி சிறுக சிறுக புகையினால் ரப்பர்பால் கறுப்பு நிறமாய் மாறிக்கொண்டேவரும் இன்னும் மற்றொரு திருஷ்ட்டாந்தம் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

வெண்மையாயிருக்கும் சுவற்றினிடம் கல்லுகளை வைத்து அடுப்பு மூட்டி சமைக்குங் பொழுது புகையானது வெண்மையாயிருக்கும் சுவற்றில் படிகின்றது. அப்பொழுது சுவற்றிலிருந்த வெண்மை நிறம் கெட்டு வெண்மை நிறமெல்லாம் மஞ்சள் நிறமாய் மாறிவிடும். பிறகு பிரதி தினம் அடுப்பை மூட்டிச் சமைத்துக் கொண்டே வந்தால் மஞ்சள் நிறமெல்லாம் மாறி சுவரெல்லாம் கறுப்பு நிறமாய் விடும்.

புகையால் மூடப்பட்டிருக்கும் ரப்பர் பாலிற்குள்ளும், சுவற்றிற்குள்ளும் வெண்மைநிறம் எப்படி யிருக்கின்றதோ அதுபோல் நமது இருதயகமலத்தின் பரமாத்மா சொரூபம் வெண்மையாய் இருக்கின்றது. அந்த வெண்மையுடைய பரமாத்ம சொரூபத்தை இது வரையில் சொல்லிவந்த

ஆசைகளென்னும் மாயை மேற்சொல்லிய ரப்பர் பால்மேல் பட்ட புகையைப் போல் மூடிக் கொண்டிருக்கின்றது.

இவ்வாறாக ஆத்மாவை ஆசைகளென்னும் மாயை மூடிக்கொண்டிருப்பதனால் இதற்கே 'பசு பதி' பாசமென்று சொல்லப்படும். அதாவது, பசுவென்றால் ஜீவாத்மா, பதியென்றால் பரமாத்மா பாசமென்றால் ஜீவாத்மாவாகிய நமக்கும் பரமாத்வாகிய கடவுளுக்கும் மத்தியில் மாயை யென்னும் திரை மூடப்பட்டிருப்பதனால் இதற்குப் பசுபதி பாசமென்று சொல்லப்படும். ஜீவாத்மாவை மூடிக் கொண்டிருக்கும் மாயையென்னும் பாசம் எப்பொழுது ஜீவாத்மாவை விட்டு ஒழிகின்றதோ அப்பொழுதே அந்த ஜீவாத்மா பரமாத்மாவில் போய் சேருகின்றது.

இந்த பசுபதி பாசமென்பதற்கு அர்த்தமெதுவோ அந்த அர்த்தமே 'தத்வமசி' பதத்திற்கு அர்த்தமாகின்றது. அஃதெப்படியென்றால் தத் த்வம் அசி அதாவது, தத் என்றால் பரமாத்மா. த்வம் என்றால்-ஜீவாத்மா. அசி என்றால்-ஆனால் என்பதேயாம். என்றால், ஜீவாத்ம சொரூபமாயிருக்கப்பட்ட நீ அந்தப் பரமாத்ம சொரூபத்தை அடைகின்றாய் என்று அர்த்தமாகின்றது. இதன் கருத்து என்னவென்றால், மாயையிலிருந்து நீ எப்பொழுது விட படுகின்றாயோ, அப்பொழுதே பரமாத்மா சொரூபமா கின்றாய் என்பதேயாம். இதற்கோர் திருஷ்டாந்தம் சொல்லுகின்றோம் கேளுங்கள். அஃதென்னவென்றால்,

இந்தியாவில் வடஆற்காடு ஜில்லா இருக்கின்றது. அந்த வடஆற்காடு ஜில்லாவில் திருவாண்ணாமலை யென்னும் ஒரு திவ்விய க்ஷேத்திரமிருக்கின்றது. அந்த க்ஷேந்திரத்தில் பிரதி வருஷத்தில் வரும் கார்த்திகை மாதத்தில் மலைமேல் கார்த்திகை தீபம் ஏற்றுகின்றார்கள். அந்த கார்த்திகை தீபம் என்பது எதுவோ அதன் ரகஸ்யார்த்தங்களை எல்லாம் இனி இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

## 12. பந்தம்பறி,
## திருவண்ணாமலை அந்தரார்த்தம்

காணப்பா கோவிலென்றுந் தீர்த்தமென்றுங்
காசினியிற் செம்பால் விக்கிரகமென்றும்
பேணப்பா உலகத்தோர் தங்களைத்தான்
பேய்போல் திரிந்தலையப் படைத்தாரீசன்
நாணப்பா தேவதையைப் பணிந்திட்டாலும்
நதிகளெல்லாந் தேடிப்போய் முழுகினாலும்
ஊணப்பா உள்வீட்டுக் குள்ளிருக்கும்
ஒளியுள்ள வத்துமைத்தா னறிந்துகாணே.

ஓ சகோதர்களே! சென்னை திருஒற்றியூரில் பிரதி வருஷம் மாசி மாதம் நடந்தேறிவரும் உச்சவத்தில் பத்தாவது நாளில் பந்தமெறி உச்சவம் நடக்கின்ற தென்றும் அதைப் பார்க்க வேண்டுமென்னும் எண்ணங்கொண்டு கட்டுச் சாதங்களைக்கட்டி எடுத்துக் கொண்டு அனேக ஸ்திரீ புருஷர்கள் ஆயிரக்கணக்காய்க் கூட்டங்கூடி திருஒற்றி யூருக்குச் சென்று, பந்தமெறி அந்தரார்த்தம் (இரகசிய அர்த்தம்) தெரிந்து கொள்ளாமல் அவ்வுச்சவத்தைப் பார்த்தும், கட்டுச் சாதங்களைச் சாப்பிட்டும், திருஒற்றியூரில் விற்கும் புமிப்பாண்டங்களை வாங்கிக்கொண்டு வருகிறார்கள். இதன் அந்தரார்த்தம் என்னவென்றால், இந்நூலில், சொல்லியிருக்கும் காம, குரோத, லோப, மோஹ, மத, மச், சர, டம்ப, தர்ப, ஈரிஷை, அசூயை என்னும் பத்து பந்தங்களையும் பறி என்றால், கொள்ளை கொடுக்க வேண்டு மென்பதேயாம். இந்த பத்து பந்தங்களையும் கொள்ளைக் கொடுத்தால் மோக்ஷமென்னும் பதவியைத் தப்பாமல் அடையலாமென்று கட்டுவதற்காக, திருஒற்றிரூரில் ஒன்பது தினங்கள் உற்சவமாய்ச் செய்து காட்டிப் பத்தாவது தினத்தில், நீங்கள் எல்லோரும் உங்களில் இருக்கும்

ஆசாபாசங்களென்னும் சகல பந்தங்களையும் கொள்ளைக் கொடுத்து விடுங்கள் என்று காட்டுவதற்காகப் பந்தம்பறி (பந்தம்-ஆசை, பறி, கொள்ளை) அதாவது, உள்ளுக்கிருக்கும் சகல ஆசைகளையும் கொள்ளைக் கொடுங்கள் என்பதேயாம். இவ்விதமாய்ப் பந்தம்பறி என்னும் உச்சவம் பகவானால் செய்து காட்டும்படி பூர்வீக பெரியோர்கள், ஆலயங்களில் விக்கிரக மூலமாய் இப்படிப்பட்ட உச்சவங்களைச் செய்ய ஏற்படுத்தினார்கள். அப்படியிருக்க இப்பொழுதிருக்கும் பாமர ஜனங்கள், இதன் ரகஸ்யார்த்தம் தெரிந்து கொள்ளாமல் பந்தம்பறி என்பதற்குப் பல்லாப் பந்தமெறி என்று சொல்லி அங்குமிங்குமாய் ஓடித் திரிந்து கெட்டலைந்து பாழாகின்றார்கள். அதன்றியும்,

திருவண்ணாமலையில் நடந்தேறிவரும் கார்த்திகை தீபத்தின் இரகஸ்யார்த்தம் எதுவோ இனி அதைச் சொல்லுகிறோம் கேளுங்கள். கார்த்திகை மாதத்தில் வரும் கிருத்திகை தினத்தில் பகல் இரண்டு மணிக்கு திருவண்ணாமலைமேல் இருக்கும் பள்ளத்தில் அனேக நெய் குடங்களைவிட்டு மல்பீசை திரியாய்ச்செய்து அதை நெய்யில் நனைத்து நெய் இருக்கும் பள்ளத்தில் வத்தியாய் வைத்துக் கொளுத்திப் பெரிய தீபமாய்ச் செய்து அத் தீபம் தெரியாமல் இருக்கும்படி அதன் எதிரில் ஒரு பெரிய படுதாவைக் கட்டிச்சில மனிதர்கள் அப்படுதாவினிடம் இருப்பார்கள். அதன் பிறகு மலை அடிவாரம் கோயிலுக்குள் இருக்கும் செம்பு விக்கிரஹத்தை அலங்கரித்து வைப்பார்கள். இவைகளையெல்லாம் செய்து முடித்துப்பின் மாலை. ஐந்தரை மணிக்குமேல் கிருத்திகை நக்ஷத்திரம் பிறந்தவுடன் கோவிலுக்குள் அலங்கரித்து வைத்திருக்கும் விக்கிரஹத்தை எடுத்துக் கொண்டு வெளியிலிருக்கும் பிரகாரத்தில் கொண்டு வந்து தீபத்திற்கு நேராய் ஆயக்கால் போட்டு அந்த விக்கிரஹத்தை நிறுத்தி

வைப்பார்கள். நிறுத்தியபின் ஆகாச மார்க்கமாய் ஓடும் பாணத்தை ஒருவன் கொளுத்தி மலை மேல் இருக்கும் தீபத்திற்கு நேராய் விடுவான். அப்பொழுது மலைமேல் படுதாவினால் மூடப்பட்ட தீபத்தினிடம் இருப்பவர்கள் அந்த ஆகாசாபாணத்தைப் பார்த்தவுடன் தீபத்தை மறைத்திருந்த படுதாவை அவிழ்த்து விடுவார்கள். அப்பொழுது மலைமேல் எரியும் தீபம் கோவிலுக்குள் இருப்பவர்களுக்கு நன்றாய்க் காணப்படும்.

அத்தீபத்தை கோவிலுக்குள் இருக்கும் ஜனங்கள் பார்த்தவுடன் இருகைகளையும் குவித்து சிரசிற்குமேல் வைத்துக் கும்பிட்டுக் கொண்டே அரஹர! அரஹர! அரஹர! வென்று எல்லோரும் ஒரே சப்தமாய்க் கூச்சலிடுவார்கள். அச்சமயம் அதுவரையில் அங்கு தயாராய் காத்திருந்த கள்ளர்கள் எல்லோரும் என்ன செய்வார்களென்றால், தங்கத்தினால் கவசம் போட்டு புருஷர்கள் கழுத்தில் கட்டியிருக்கும் தங்க உந்திராக்ஷ கண்டிகைகளையும், ஸ்திரீ கழுத்தில் கட்டியிருக்கும் கெம்பு, வைர, அட்டிகைகளையும், காசிமாலை, தாலி வுருவுகளையும் மிகவும் கூர்மையான கத்தியினால் கத்திரித்து தன் பின் புறமாயிருக்கும் மற்றொரு திருடனிடம் அதைக்கொடுத்து அனுப்பிவிடுவான், ஸ்திரீகளும் புருஷர்களும் தீபதரிசனம் செய்து முடிந்த பின், தங்கள் தங்கள் கழுத்திலிருக்கும் ஆபரணங்களைப் பார்த்து என்கெம்பு அட்டிகை போச்சு, என் வைர அட்டிகை போச்சு என் காசி மாலை போச்சு தாலிவுருவு போச்சு என்று ஸ்திரீகளும் தன் தங்க ருத்ராக்ஷ மாலை போச்சு என்று புருஷர்களும் சொல்லி சற்றுநேரம் வியசனப்பட்டுபிறகு தாம் இறங்கியிருக்கும் இடம் சென்று மாவிளக்குப்போட்டு, தேங்காய்களை உடைத்து கற்பூரமேற்றி கடவுளுக்கு நைவேத்தியம் காட்டிப் பிறகு, அந்த பச்சமாவை தேங்காயையும் மஹா பிரசாதமென்று சொல்லி அவற்றை வயிறு நிறைய புசித்து ஜலத்தைக் குடிப்பார்கள். இவர்கள் ஒரு பொழுதென்று சொல்லி

ஆசாபாசங்களென்னும் சகல பந்தங்களையும் கொள்ளைக் கொடுத்து விடுங்கள் என்று காட்டுவதற்காகப் பந்தம்பறி (பந்தம்-ஆசை, பறி, கொள்ளை) அதாவது, உள்ளுக்கிருக்கும் சகல ஆசைகளையும் கொள்ளைக் கொடுங்கள் என்பதேயாம். இவ்விதமாய்ப் பந்தம்பறி என்னும் உச்சவம் பகவானால் செய்து காட்டும்படி பூர்வீக பெரியோர்கள், ஆலயங்களில் விக்கிரக மூலமாய் இப்படிப்பட்ட உச்சவங்களைச் செய்ய ஏற்படுத்தினார்கள். அப்படியிருக்க இப்பொழுதிருக்கும் பாமர ஜனங்கள், இதன் ரகஸ்யார்த்தம் தெரிந்து கொள்ளாமல் பந்தம்பறி என்பதற்குப் பல்லாப் பந்தமெறி என்று சொல்லி அங்குமிங்குமாய் ஓடித் திரிந்து கெட்டலைந்து பாழாகின்றார்கள். அதன்றியும்,

திருவண்ணாமலையில் நடந்தேறிவரும் கார்த்திகை தீபத்தின் இரகஸ்யார்த்தம் எதுவோ இனி அதைச் சொல்லுகிறோம் கேளுங்கள். கார்த்திகை மாதத்தில் வரும் கிருத்திகை தினத்தில் பகல் இரண்டு மணிக்கு திருவண்ணாமலைமேல் இருக்கும் பள்ளத்தில் அனேக நெய் குடங்களைவிட்டு மல்பீசை திரியாய்ச்செய்து அதை நெய்யில் நனைத்து நெய் இருக்கும் பள்ளத்தில் வத்தியாய் வைத்துக் கொளுத்திப் பெரிய தீபமாய்ச் செய்து அத் தீபம் தெரியாமல் இருக்கும்படி அதன் எதிரில் ஒரு பெரிய படுதாவைக் கட்டிச்சில மனிதர்கள் அப்படுதாவினிடம் இருப்பார்கள். அதன் பிறகு மலை அடிவாரம் கோயிலுக்குள் இருக்கும் செம்பு விக்கிரஹத்தை அலங்கரித்து வைப்பார்கள். இவைகளையெல்லாம் செய்து முடித்துப்பின் மாலை. ஐந்தரை மணிக்குமேல் கிருத்திகை நக்ஷத்திரம் பிறந்தவுடன் கோவிலுக்குள் அலங்கரித்து வைத்திருக்கும் விக்கிரஹத்தை எடுத்துக் கொண்டு வெளியிலிருக்கும் பிரகாரத்தில் கொண்டு வந்து தீபத்திற்கு நேராய் ஆயக்கால் போட்டு அந்த விக்கிரஹத்தை நிறுத்தி

வைப்பார்கள். நிறுத்தியபின் ஆகாச மார்க்கமாய் ஓடும் பாணத்தை ஒருவன் கொளுத்தி மலை மேல் இருக்கும் தீபத்திற்கு நேராய் விடுவான். அப்பொழுது மலைமேல் படுதாவினால் மூடப்பட்ட தீபத்தினிடம் இருப்பவர்கள் அந்த ஆகாசாபாணத்தைப் பார்த்தவுடன் தீபத்தை மறைத்திருந்த படுதாவை அவிழ்த்து விடுவார்கள். அப்பொழுது மலைமேல் எரியும் தீபம் கோவிலுக்குள் இருப்பவர்களுக்கு நன்றாய்க் காணப்படும்.

அத்தீபத்தை கோவிலுக்குள் இருக்கும் ஜனங்கள் பார்த்தவுடன் இருகைகளையும் குவித்து சிரசிற்குமேல் வைத்துக் கும்பிட்டுக் கொண்டே அரஹர! அரஹர! அரஹர! வென்று எல்லோரும் ஓரே சப்தமாய்க் கூச்சலிடுவார்கள். அச்சமயம் அதுவரையில் அங்கு தயாராய் காத்திருந்த கள்ளர்கள் எல்லோரும் என்ன செய்வார்களென்றால், தங்கத்தினால் கவசம் போட்டு புருஷர்கள் கழுத்தில் கட்டியிருக்கும் தங்க உந்திராக்ஷ கண்டிகைகளையும், ஸ்திரீ கழுத்தில் கட்டியிருக்கும் கெம்பு, வைர, அட்டிகைகளையும், காசிமாலை, தாலி வுருவுகளையும் மிகவும் கூர்மையான கத்தியினால் கத்திரித்து தன் பின் புறமாயிருக்கும் மற்றொரு திருடனிடம் அதைக்கொடுத்து அனுப்பிவிடுவான், ஸ்திரீகளும் புருஷர்களும் தீபதரிசனம் செய்து முடிந்த பின், தங்கள் தங்கள் கழுத்திலிருக்கும் ஆபரணங்களைப் பார்த்து என்கெம்பு அட்டிகை போச்சு, என் வைர அட்டிகை போச்சு என் காசி மாலை போச்சு தாலிவுருவு போச்சு என்று ஸ்திரீகளும் தன் தங்க ருத்ராக்ஷ மாலை போச்சு என்று புருஷர்களும் சொல்லி சற்றுநேரம் வியசனப்பட்டுபிறகு தாம் இறங்கியிருக்கும் இடம் சென்று மாவிளக்குப்போட்டு, தேங்காய்களை உடைத்து கற்பூரமேற்றி கடவுளுக்கு நைவேத்தியம் காட்டிப் பிறகு, அந்த பச்சமாவை தேங்காயையும் மஹா பிரசாதமென்று சொல்லி அவற்றை வயிறு நிறைய புசித்து ஜலத்தைக் குடிப்பார்கள். இவர்கள் ஒரு பொழுதென்று சொல்லி

காலை முதல் மாலை தீபம் பார்க்கும் வரையில் ஒன்றும் சாப்பிடாமல் வெறும் வயிற்றுடனிருந்து மாலை பச்சைமாவையும் தேங்காயும் தின்று ஜலம் குடிப்பதனால், மேற்படி மாவும் ஜலமும் வயிறு என்னும் பாண்டத்தில் போய்ச் சேர்ந்து அவ்விரண்டும் தோசைமாவு போல் நன்றாய்ப் புளித்து விடும் அதனால் காலை மூன்று மணிமுதல் பேதியும் வாந்தியும் உண்டாகின்றது. இதையே வாந்திபேதியென்று சொல்லுவார்கள். திருவண்ணாமலை கார்த்திகை தீபத்தில் வாந்தி பேதி உண்டாவதற்குக் காரணம் இதுவேயாம்.

திருவண்ணாமலையில் நடக்கும் கார்த்திகை தீபத்தைக் குறித்து ஜனங்கள் என்ன சொல்லுவார்களென்றால், ஆகாசமார்க்கமாய்விடும் பாணமானது தீபத்தை மறைத்துக் கொண்டிருக்கும் படுதாவைக் கொளுத்தி அதன் பிறகு அப்பாணம் மலைமேலிருக்கும் தீபத்தின் வத்தியைக் கொளுத்துகிறது என்று சொல்லுவார்களே யொழிய இதன் நிஜமான ரகஸ்யம் எவர்களுக்கும் தெரியவராது. அதன் நிஜமான ரகஸ்யம் எதுவோ அதை இதனடியில் சொல்லப் போகின்றோம் கவனியுங்கள்.

பிரபஞ்சத்தை சிருஷ்ட்டி செய்யுமுன் எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் பரப்பிம்மமாகிய கடவுள் ஒருவரே இருந்தார். பரப்பிரம்மாகிய கடவுள் அவ்வாறாகவே இருந்திருந்தால் பிரபஞ்சமும் மானவ ஜனங்களும், மற்ற ஜீவராசிகளும் இல்லாமல் வெறும் வெளியாக இருந்திருக்கும். இப்படியே தெளிவாய் இராமல் பிரபஞ்சத்தைச் சிருஷ்ட்டி செய்யவேண்டுமென்கிற எண்ணம் அந்த பரப்பிரம்மத்திற்கு உண்டாயிற்று. பரப்பிரம்மமாகிய கடவுளுக்கு அப்படிப்பட்ட எண்ணம் உண்டான போதிலும் அப்பரப்பிரம்மம் வெட்டவெளியாய் இருப்பதினால் பிரபஞ்சத்தையும் ஜீவராசிகளையும் சிருஷ்ட்டி செய்ய அப்பரப்பிரம்மத்திற்கு சாத்தியப் படாமலிருந்தது. அதன்பிறகு பிருதவி (மண், அப்பு (ஜலம்) தேயு (அந்தி) வாயு (காற்று) ஆகாயம் (வெளி)

இவ்வைந்திற்கு பஞ்சபூதங்களென்று, சொல்லப்படும், இந்த பஞ்சபூதங்கள் நமக்கெதிரில் காணப்படும் வெட்டவெளியில் அடங்கு இருக்கிறது. இந்த பஞ்சபூதங்களினால் பரப் பிரம்மாகியதான் ஓர் ஈஸ்வரரூபத்தை முதல் தரித்து அதன் பிறகு எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளையும் எப்படி சிருஷ்டி செய்தாரோ. அதை இனி சொல்லப்போகிறோம் கேளுங்கள்.

முதல் விருக்ஷமிண்டாயிற்றா அல்லது விதை உண்டாயிற்று என்று ஜனங்கள் கேழ்ப்பதுண்டு. முதல் விதையுண்டாயிற்றென்று, சொன்னால், விருக்ஷமில்லாமல் விதை எப்படி உண்டாயிற்றென்று கேழ்ப்பார்கள். அல்லது விருக்ஷமுண்டாயிற்றுயென்று சொன்னால் விதையில்லாமல் விருக்ஷம் எப்படி உண்டாயிற்றென்று கேழ்ப்பதுண்டு. விதையே முதலென்றும் அல்லது விருக்ஷமே முதலென்றும் ஜனங்கள் செல்லமுடியாது. ஆனால், விருக்ஷமே முதல் உண்டாய் அதிலிருந்துப் பழம் பழுத்து அப்பழத்திலிருந்தும் விதையை ஜனங்கள் யெடுத்து நட்டு விருக்ஷங்களை அபிருந்தி செய்து கொண்டார்கள். அதுபோல் மல்லி, முல்லை, தவனம், ரோஜா, சாமந்தி முதலாகிய புஷ்ப்பச் செடிகளும் முதல் உண்டாய் அதன் பிறகு அதிலுண்டாகிய விதையையெடுத்து நட்டு புஷ்ப்பச் செடிகளை ஜனங்கள் விருத்தி செய்து கொண்டார்கள் அதெப்படியென்றால்,

மேற்சொல்லிய ஈஸ்வரனானவர் ஓரிடத்தில் நின்று மா, பலா, தென்னை வாழை முதலாகிய செடிகளும், மல்லி, முல்லை, ரோஜா, தவனம், சாமந்தி முதலாகிய புஷ்ப்ப தினுசு செடிகளும் உண்டாக வேண்டுமென்று மனதில் நினைத்தார். பரப்பிரம்மமாகிய ஈஸ்வரன் அவ்வாறு நினைத்த மாத்திரத்தில் எல்லா தேசங்களிலும் அந்தந்த மரங்களும் புஷ்ப்பச் செடிகளும் உண்டாயிற்று.

அதன் பிறகு இவைகளுடன் சேர்ந்து எண்பத்திநான்கு லக்ஷ ஜீவராசிகளையும் சிருஷ்ட்டி செய்தார். இதற்கு சுருதி பிரமாணம் என்னவென்றால்,

"ஸ்தாவரே லக்ஷவிம்ஸத்ய ஜலஜோ நவலக்ஷஹ
க்ரிமீணாம் ருத்ரஸங்க்யாஸ்ச சாதுர்யக்ஷந்து மநுஷன
த்ரிமஸல் லக்ஷம் கவாநாம்ச பக்ஷீணாம் தஸலக்ஷஹ"

அதாவது, அசையாமல் நின்றிருக்கும் மலைகள் விருக்ஷங்கள், 20 லக்ஷம், ஜலத்திலுள்ள மீன் முதலாகிய ஜலஜந்துக்கள் 9 லக்ஷம், நகர்ந்து செல்லும் பாம்பு, தேள், பல்லி முதலாகிய புழுஜாதிகள் 11-லக்ஷம்-பசு எருமை, யானை, சிங்கம், புலி, கரடி, நாய், நரி இன்னும் உள்ள அனேக மிருகஜாதிகள் 30-லக்ஷம், பக்ஷிஜாதிகள் 10-லக்ஷம் ஆகமொத்தம் 84-லட்க்ஷ ஜீவராசிகளை எல்லா தேசங்களிலும் சிருஷ்ட்டி செய்தார். இந்த ஜீவராசி களெல்லாம் தினந்தோறும் செய்யும் புண்ணிய பாவங்களை யெல்லாம் பரபிரம்மமாகியதான் ஒரேயிடத்தி லிருந்து பார்க்க முடியாது. அதனால் அந்த பரப்பிரம்மம் என்ன செய்ததோ அதை இனி சொல்லப் போகிறோம். கவனியுங்கள்.

ஏரி, குளம், சமுத்திரம் முதலானவைகளில் இருக்கும் ஜலத்தின் மேல் காற்றுப்பட்டால் அந்த ஜலம் அலையாய்க் கிளம்பி அந்த அலையிலிருந்து கணக்கில்லாத அநேக மிகவும் சிறிய, நீர்க்குமிழிகள் உண்டாகிறது. சமுத்திர ஜலமே நீர்க்குமிழியாகவும், நீர்க்குமிழியே சமுத்திர ஜலமாகவும் எப்படியிருக்கிறதோ அதுபோல், பரப்பிரம்மமாகிய ஈஸ்வரனில் இருந்து மிகவும் சிறிது சிறிதாய் எண்பத்தி நான்கு லக்ஷ பரப்பிரம்மம் மேற் சொல்லிய நீர்க்குமிழியைப் போல் புறப்பட்டு வந்தன. இந்த சிறிய சிறிய பரப்பிரம்மத்திற்கு ஆத்மாவென்று ஒரு பெயரை வைத்தார்கள்.

சமுத்திரத்திலிருந்து கணக்கில்லாத அனேக நீர்க்குடங்களில் சமுத்திரஜலத்தை எடுத்து கொண்ட பொதிலும் சமுத்திரஜலம் மாத்திரம் சிறிதேனும் குறையாமல் எப்பொழுதும்போல் இருக்கும். அது போல் எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் பரப்பிரம்மத்தி லிருந்து எண்பத்து நான்குலக்ஷ ஆத்மாக்கள், புறப்பட்டு, வந்த போதிலும் பரப்பிரம்மமானது சிறிதேனும் குறையாமல் எப்பொழுதும் போல் எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும். எண்பத்துநான்குலக்ஷ ஆத்மாக்களே அல்ல. இன்னும் அனேக கோடானுகோடி ஆத்மாக்கள் பரப்பிரம்மத்திலிருந்து புறப்பட்டுவந்த போதிலும் சரி பரப்பிரம்மம் மாத்திரம் எள்ளின் மூக்கு நுனி அவ்வளவும் குறையாமல் எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும்,

பரப்பிரம்மமாகிய தான் ஆத்மாயென்னும் பெயருடன் புறப்பட்டு எவர்களின் கண்களுக்கும் தெரியாமல் அணு சொரூபமாய்வந்து எண்பத்து நான்குலக்ஷ ஜீவராசிகளின் இருதய கமலத்தில் வந்து சேர்ந்தார். இதுவரையில் மேற் சொல்லியதுபோல் பரப்பிரம்மமானது பிரபஞ்சத்தை சிருஷ்ட்டி செய்தபின் மறுபடியும் என்ன செய்தாரோ அதை சொல்லுகிறோம் கேளுங்கள்,

பரப்பிரம்மாகிய கடவுள் எல்லா ஜீவராசிகளுக்கும் ஆசையென்பதை உண்டாக்கி அந்த ஆசையென்பது எப்படிப்பட்டதோ அதை இனி சொல்லப் போகிறோம் கவனியுங்கள். ஜீவராசிகளை சிருஷ்ட்டி செய்த முதல் ஜன்மத்தில் மனைவிமேல், புருஷனுக்கும் புருஷன் மேல் மனைவிக்கும் ஓர் மோஹத்தை உண்டாக்கினார், இந்த மோஹத்திற்கே ஆசையென்னும் மாயை யென்றும், அவித்தையென்றும், அஞ்ஞானமென்றும் சொல்லப்படும். அதுபோல், புத்திரர், புத்திரிகள் பேரன், பேத்திமார்கள், மேல் ஓர் ஆசையை உண்டாக்கினார். இவர்கள் சில வருஷங்கள் மாத்திரம்

ஜீவித்திருந்து ஒருவர்மேல் ஒருவர் மிகவும் ஆசையாயிருந்து கடைசியில் அந்த ஆசைகளுடனே பிராணனை விட்டு மற்றொரு தாயின் கர்ப்பத்திலிருக்கும் பிண்டத்தில் போய்ச் சேர்ந்து மறுபடியும் சிசுவாய்ப் பிறப்பார்கள், அங்கு போய்ச் சிசுவாய் பிறந்து வளர்ந்த தன் இரண்டாவது ஜன்மத்தில் மறுபடியும் வேறு மனைவி மக்கள் வருகிறார்கள். அப்பொழுது முதல் ஜன்மத்தில் பெண்டு பிள்ளைகள் மேல் இருந்த ஆசைகளெல்லாம் தம்முடன் கூடவே தொடர்ந்து வந்தபடியால், அந்த ஆசைகளெல்லாம், இரண்டாவது ஜன்மத்தில் வந்த பெண்டு பிள்ளைகள் மேல் இருக்கும் ஆசைகளுடன் சேர்ந்து இன்னும் கொஞ்சம் ஆசைகள் அந்த ஜன்மத்தில் அதிக மாயிற்று, அந்த ஆசைகளுடன் அந்த ஜன்மத்தில் சில வருஷங்கள் இருந்து மறுபடியும் மரணமடைந்து மற்றொரிடத்தில் தாயின் கர்ப்பத்திலிருக்கும் சிசுவில் போய்ச் சேர்ந்து குழந்தையாய்ப் பிறந்து வளர்ந்தபின் மறுபடியும் அந்த ஜன்மத்தில் வேறு பெண்டு பிள்ளைகள் வருகிறார்கள். அப்பொழுது அந்த ஜன்மத்தில் வந்த பெண்டு, பிள்ளைகள் மேல் இருக்கும் ஆசைகளுடன்கூட முன் ஜன்மங்களிலிருந்து தம்முடன் கூடவே தொடர்ந்து வந்த ஆசைகளுடன் சேர்ந்தபடியால் மூன்றாவது ஜன்மத்தில் இன்னும் அதிக ஆசைகள் உண்டாயிற்று. ஸ்திரி புருஷர்களுக்கெல்லாம் இதுபோல் ஒவ்வொரு ஜன்மத்திலும் ஆசைகள் சிறுகச்சிறுக சேர்ந்து வருவதனால், நமக்குள் இருக்கும் ஆத்மாவை இந்த ஆசைகளெல்லாம் ஒரு படுதாவைப்போல் மறைத்துவிட்டது. இந்த ஆசை களெல்லாம் எந்த ஜன்மத்தில் யோகாக்னியால் பஸ்மமாய் கொளுத்தி விடுகிறார்களோ, அப்பொழுது மாயையென்னும் திரையால் மூடப்பட்டிருந்த ஆத்மா வானவர் மிகவும் பரிசுத்தமாய் விடுவார். எப்பொழுது ஆத்மாவானது பரிசுத்தமாய் விடுகிறதோ அப்பொழுதே ஆத்மாவாகிய தான் தன் சொந்த இருப்பிடமாகிய பரப்பிரம்மத்தில் போய்ச் சேர்ந்துவிடும். இந்த ரகஸ்யத்தை பெரியோர்கள் திருவண்ணாமலை கார்த்திகை தீபத்தில்

காட்டினார்கள். அந்த தீபத்தின் ரகஸ்யார்த்தம் இனி இதனடியில் சொல்லப் போகிறோம் கவனியுங்கள்,

எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் பரப்பிரம்மத்தை மலைமேல் விளக்காய் காட்டினார்கள். என்றால், மலைமேல் எரியும் தீபமே பரப்பிரம்மம் என்று தெரிந்து கொள்ளுங்கள். இந்த பரப்பிரம்மத்திலிருந்து ஆத்மாவானது மிகவும் சிறியதாய் புறப்பட்டு வந்தது. இந்த ஆத்மா ஆசையென்னும் மாயையுடன் சேர்ந்திருப்பதனால், இந்த ஆத்மாவை ஆகாசபாணமாய்க் காட்டினார்கள். இந்த ஆத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் மத்தியில் என்னயிருக்கிற தென்றால், ஆசையென்னும் திரை இருக்கிறது. இந்த ஆசையென்னும் திரையை மலைமேல் எரிந்துக் கொண்டிருக்கும் தீபத்திற்கு எதிரில் படுதாவாய்க் காட்டினால் ஆத்மாவை மூடிக்கொண்டிருந்த ஆசை யென்னும் திரையை யோகாக்னியினால் கொளுத்தி விட்டால், அப்பொழுது அந்த ஆத்மா மிகவும் பரிசுத்தமான ஆத்மாவாய் ஆகும். இந்த பரிசுத்த ஆத்மாவை பாணமாய்க் காட்டினார்கள். பாணரூபமாய் காட்டிய மலைமேல் இருக்கும் விளக்கில் போய்ச்சேர்ந்து அந்த விளக்கில் ஐக்யமாய்விடுகிறது என்னும் கருத்தே திருவண்ணாமலை தீப ரகஸ்யார்த்தம் என்று அறிந்து கொள்ளக் கடவீர்களாக. இதன் கருத்து என்ன வென்றால்,

திருவண்ணாமலைமேல் எரிந்து கொண்டிருக்கும் விளக்கு பரப்பிரம்மம். ஆகாசபாணம் ஆத்மா விளக்கை மறைத்திருக்கும் படுதாமாயை, இந்த மாயையென்னும் திரையை போக்கிவிட்டால் அதன் பிறகு பாண ரூபமாய் இருக்கும் பரப்பிரம்மத்தில் போய்ச் சேர்ந்துவிடும். இவ்வாறு சேர்ந்து விடுவதே மோஷமென்று சொல்லப்படும். மோஷமென்னும் பதத்திற்கு சரியான அர்த்தம் என்ன வென்றால், விடுதலை யென்றால், எல்லா ஆசாபாசங்களிலிருந்து விடுபடுவது. இதற்கு ஆத்மா முனிவர் எழுதிய உபதேசகாண்டம் என்னவென்றால்,

மாயை தன்னைப் பரப்பிரம்ம பிரகுருதி
சடம்பாசமென வெடுத்துப் பகர்ந்தா
ஆங்கஃதனாதயிலே பதியினின்றுந்
தோன்றியதாம் பசுவென் றோது
நீங்கரிய வான்மாவை பலபேதங்
கொடுவளைத்து நிற்ப வங்க
ணோங்குபசு விருவினையா லுண்டான
பயனுண்ணும் வினைகட் கெல்லாம்

மீங்கிவன் செய்திடுந் தொழிலேகாரணம்
மவ்வினை யெப்போது முண்டாம்
இருவினை யெய்போ தொடுங்குமெனி
வான்மாவினை வளைத்த மலம்பேரயன்றி

யொருவல லவ்வினையா தென்றுலைத்திடிற்
புண்ணிய பாவ மிவைகளீட்டித்
தருவது கரும்போக னுகர்வதற்குச்
சரீரங் காரணமேயாகும்

பொருவருமைப் புலத்தி லந்தக்காணத்தாற்
பொசிக்கு மலம் பொதித்த சீவன்
கீவனெனப்படு புருவ னேகனவன்
றமரோடுஞ் செல்வா ரோடு

மேவரு மென்பது கொடிய வஞ்
சுரத்தி னருநிழற்கீழ் வேடைக்கா
யாவருந தொக்கது போலுமிவ
னுடம் பனேகமெடுத் திழப்பானந்த

மீவருங் கலாமதியைப் பன்முறையாற்
புயல் மறைத்து விடுதல் போலும்

இவ்விறிரிந்த காயத்திற் களவையிலை
பழங்கலை நீத் தெடுத்துக்கொண்டு
கவர்ந்த புதுக்கலை யெடுபக்குமா போல
வெடுத்தபல காயம்போக்கி
நிவர்த்தெழு மச்சட மகற்றியச்சீவன்
முத்திசென்று நிலைக்குங் காறு
முவர்ந்தபுனற்கயல் கரைப்பா னுலவுதல்
போற் சடந்தோறு முலவாநிற்கும்
விளைத்த விருவினைத் தொடரா லச்சீவன்
றளைப்பட்டு மேவி மூன்றாய்க்
கிளைத்த புவனந்தோறு மின்பதுன்பந்
துய்த்துழலவல் கிளர் பூங்கொன்றை
தளைத்தமோவிப் பெருமான்றிரு விளையாட்
டென் றுரைக்குஞ் சாத்திரங்கள்
வளைத்தெழு சீவனுக்கெல்லாம் பசுவெனும்
பேரென்னை யெனின் வகுத்துச் சொல்வோம்
பிரமனேமுத் லெறும்பு கடையாகப்
பசுவென்று பேசலா மச்
சுரபிதறித் தளைப்பட்டா லோரிடத்தும்
போகாதத் தொடர்பே போலா
விரவுமிந்தச் சீவருங் கன்மத்
தளையாற் கட்டுண்டால் வேறுபோக
துரவுதளைக் கிடந்துழலு மாதலாற்
பசுவெனும் பேருரிமைத் தாமே.

# 13. ஜீவன் மாயையென்னும் கட்டிலிருந்து விடுபடுதல்

மாயையே பிரகிருதிமென்றும் பரப்பிரம்மமென்றும் ஜடமாகிய பதார்த்தமென்றும் பெரியோர்களால் சொல்லப் பட்டிருக்கின்றன. இம்மாயையானது, அனாதியாய் பரப் பிரம்மமாகிய அன்மாவை அனுசரித்துக் கொண்டே வருவதனால், இவ்வான்மாவிற்கு மனபேதங்கள் அதிகமாய். நல்வினை தீவினையென்னும் இரண்டு பலன்களை அனுப வித்துக்கொண்டே வருகின்றது. இந்த நல்வினை தீவினைகள் எப்பொழுது ஒடுங்குமென்றால் ஆன்மாவைப் பற்றிய, ஆவணம் மாயகை காம்யம் என்னும் மும்மலங்களும் எப்பொழுது ஒழிகின்றதோ அப்பொழுதே ஜீவன் மோக்ஷ மென்னும் வீட்டை அடையும். புண்ணிய பாவகர்மங்களை அனுபவிப்பதற்குச் சரீரமே காரணமாயிருக்கின்றது. இந்தச் சரீரத்திற்கு கண்கள் மூக்கு வாய் செவிகள் தேகத்தின் மேலிருக்கும் தோல் என்னும் ஐந்து இந்திரியங்களும், மனம் புத்தி சித்தி அஹங்காரமென்னும் நான்கு அந்தக் காரணங்களுமே ஜீவனுக்கு உபாதையா யிருக்கின்றன. இந்த ஜீவன் மனைவி மக்கள் பந்து ஜனங்களாகிய கொடி வெப்ப மென்னும் கானலில் அகப்பட்டு, மோக்ஷமென்னும் நிழலில் ஒதுங்கச் சக்தி யில்லாமல் அனேக சரீரங்களை எடுத்துக் கொண்டும், மறுபடியும் அந்தச் சரீரத்தை விட்டு வேறு சரீரத்தை எடுத்துக் கொண்டுமாய் இருக்கின்றது. இந்த ஜீவன், பன்முறைகளில் இவ்வாறாக சரீரம் எடுப்பது எப்படி யிருக்கிறதென்றால், சந்திரனையும், சூரியனையும் அடிக்கடி மேகங்கள் வந்து மூடுவது போல் இருக்கிறது. இதன்றியும் பழைய வஸ்திரத்தைத் தரிப்பதுபோல் இந்த ஜீவன் எடுத்த பல தேகங்களைப் போக்கி, மென்மேலும் வருகிற பல

தேகங்களை மாற்றி முக்தியடையும் வரையில் நாவரண்ட வன் ஜலம் குடிக்க குளத்தினிடம் சொல்வதுபோல். ஜீவன் ஆவல்கொண்ட வஸ்துக்களை அனுபவிக்க மறுபடியும் ஜநநமெடுக்கின்றது. அதாவதுதான் செய்துவந்த நல்வினை தீவினைகளாகிய புண்ணிய பாவங்களென்னும் காமத்தினால் ஜீவன் கட்டுப்பட்டு, சொர்க்கமறிய பாதாள லோகங்களை அடைந்து, இன்ப துன்பங்களை அனுபவித்து வருவதனால், இவை யாவும் சிவபெருமான் திருவிளையாட் டென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. ஜீவன், பந்தமென்னும் கயிற்றால் கட்டுபட்டிருப்பதனால் பசுவென்னும் பெயர் உண்டாயிற்று. எலும்பு முதல் பிரம்மதேவன் வரையில் பசுவென்றே சொல்லாம். எப்படியென்றால், கயிற்றால் கட்டப்பட்ட பசுவானது அதை விட்டு விலகிப் போக சக்தியில்லாமல் கட்டில் இருப்பதுபோல, ஜீவனும், காமமென்னும் உறுதியான கயிற்றால் கட்டுப்பட்டுக் கிடந்து வருந்துகின்றது. ஆதலால், இந்த ஜீவனுக்குப் பசுவென்னும் பெயர் நீங்கி ஜீவன் பரமாத்மா சொரூபத்தை அடைய வேண்டும்.

பரமாத்மா பேசப்பட்டவனல்லன். ஆனால் எல்லா காரியங்களும் பகவானால் காட்டப்படுவது போல் முன்னுள்ள பெரியோர்கள், ஆலயங்களில் விக்கிரகங்களைச் செய்து வைத்து அதன் மூலமாய் எல்லா ரகசியங்களையும் தெரிந்து கொள்ளும்படி செய்கின்றார்கள். நமது பரதகாண்டத்தில் இருக்கும் ஸ்திரீ புருஷர்கள் எல்லோரும் மிகவும் புண்ணியம் செய்தவர்கள். புண்ணிய புருஷர்களுக்கு மாத்திரம் பரதகாண்டம் சித்திக்குமேளொழிய மற்றவர்களுக்குச் சித்திக்கமாட்டா. இப்படிப்பட்ட புண்ணிய ஸ்தலத்தில் பிறந்திருப்பதனால்தான் ஸ்திரி புருஷர்கள் மாயை என்னும் திரையால் மூடப்பட்டிருந்த போதிலும் ஈஸ்வர பக்தியுடனும் தரும குணங்களுடனும்

கூடியிருக்கின்றார்கள். எவ்வளவு முட புத்தியுடையவனாயிருந்த போதிலும், வருஷத்திற்கு ஒரு முறையாகிலும் பகவானைப்போய் சேவிக்கட்டும் : அப்படிச் சேவித்தால் அதனால் சொல்ப புண்ணியம் உண்டாகும். இப்படியே ஜன்மாந்திரங்கள் தோறும் கோவிலுக்குச் சென்று வந்தால் சிறுகச்சிறுக புண்ணியம் அதிகமாய்ப் பிறகு அவன் மனம் அவனுக்கு வசப்பட்டுக் கடைசியில் மோக்ஷமென்னும் வீட்டை அடைவான் என்று நினைத்து, நமது பெரியோர்கள் ஆலயங்களைக்கட்டி வைத்தார்கள். அவ்வாலயங்கள் க்ஷீணதிசை அடையா மலிருப்பதற்காக இப்போதிருக்கும் சத்புருஷர்கள், க்ஷீண திசையடைந்த கோவில்களைச் சீர்திருத்தி வருகின்றார்கள். ஆதலால்,

நாம் முக்கியமாய் ஜநநமெடுத்தது. மாயையில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் ஜீவாத்மாவை மாயை என்னும் கட்டிலிருந்து. விடுதலை செய்வதற்கேயன்றி பெண்டு பிள்ளைகளின் மீதும், தனம் தான்யம் கிருஹம் பூமி தோட்டம் துரவுகள் முதலானவைகளின் மீதும் சிலது நாட்கள் ஆசபாசமாயிருந்து மரணமடைவதற்கல்ல. பதினெழு தத்துவங்களுக்கும் மனதே பிராதனமாயிருக்கின்றது, ஆதலால், அப்படிப்பட்ட மனதைச் சூன்னியமாய் (ஒன்று மில்லாமல்) செய்தால் மற்றப் பதினாறு தத்துவங் களும் தனக்குத் தானாகவே நசித்து (சங்கிலியினால் கட்டப்பட்ட சிங்கத்தைக் கட்டிலிருந்து விடுவித்தவுடன் அது, எப்படி காட்டுக்கு ஓடிவிடுமோ அதுபோல்) மாயையால் கட்டுப்பட்டிருக்கும் ஜீவாத்மா வானது, மாயையென்னும் கட்டிலிருந்து விடுபட்டவுடன் அந்த ஜீவாத்மாவரனது தனக்குள்தான் எவ்விதமாய் நினைத்து அந்தப் பரம்பிரம்மத்தில் போய்ச் சேருகின்றதோ அதை இதனடியில் சொல்லுகின்றோம் கவனியுங்கள்.

ஆதியில் பரமாத்மா சொரூபியாயிருந்த என்னை அந்த நான்முகன் (பிரம்மதேவன்) பதினேழுதத்துவங் களுடன் கூடிய குக்ஷுமம (கண்களுக்கு காணப்படாத) சரீரத்தினால் கட்டி சம்சாரமென்னும் பந்தத்தை அனுபவிக்கும்படிச் செய்து அனுப்பிவிட்டான். இப்போது பரமாத்மாவாகிய நான் குடியிருக்கும் தேசமென்னும் வீட்டில் ஜீவனென்னும் மனிதன், முன் ஜன்மாந்திரங்களின் அனேக எண்ணங்களையுடையவனா யிருந்தபோதிலும் அவைகள்யாவும் முன்ஜன்மாந்திரங்கள் தோறும் செய்துவந்த நிஷ்க்காம்மிய தவத்தினால் என்றால், எல்லாம் ஈஸ்வரார்ப்பணமாய்ச் செய்து வந்த புண்ணிய விசேஷத் தினால் முன்னிருந்த ஆசாபாசங்களென்னும் அழுக்கு களெல்லாம் சிறுகச் சிறுக ஒழித்துக் கொண்டே வந்து கடைசியாய் இந்த ஜன்மத்தில் எல்லா ஆசைகளும் ஒழிந்து விட்டன. இனி இந்த ஜீவனாயிருக்கும் புருஷன் அனுபவிக்க தக்க வேண்டிய எந்த ஸஞ்சித கர்மங்களும் இல்லவே யில்லை, ஆதலால் நான் மாயையென்னும் கட்டிலிருந்து விடுபட்டேன், என்று ஜீவாத்மா நினைத்து கொண்டே கடைசியில் பரமாத்மாவில் போய்ச்சேர்ந்து ஐக்யமாய்விடும்,

இப்படிப்பட்ட ஜீவப் பிரம்மைக்யமே மோக்ஷ மென்று சொல்லப்படும். உலகத்திலுள்ள ஸ்திரீ புருஷர் களெல்லோரும் அந்த மனதென்னும் மாயைக்கு வசப்பட்டு, பிறப்பு இறப்பை அடைந்து கொண்டு வருகின்றார்களே யொழிய மற்றபடிக்கு வேறல்ல. இனி நம்மாழ்வார் சாற்றுமுறை ரகஸ்யார்த்தம் இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

## 14. நம்மாழ்வார் சாற்றுமுறை ரகஸ்யார்த்தம்

விஷ்ணு ஆலயங்களில் நடந்தேறி வரும் அத்யந்த உற்சவத்தில் நடக்கும் நம்மாழ்வார் சாற்றுமுறை ரகஸ் யார்த்தம் இதனடியில் விவரித்துச் சொல்லுகின்றோம். கேளுங்கள் :-

மேற்சொல்லிய சாற்றுமுறை உற்சவத்தில் நம்மாழ் வாருக்கு இருபத்துநான்கு போர்வைகளைப் போர்த்தி அதன் பிறகு நம்மாழ்வாரைப் பெருமாளுக் கெதிரில் கொண்டுவந்து நிறுத்துவார்கள்.

பெருமாளுக்கெதிரில் நம்மாழ்வாரை நிறுத்தியபிறகு அரயர் வியாக்கியானம் செய்து நம்மாழ்வாருக்கு தூப தீபம் காட்டி பிறகு, ஒரு போர்வையைக் களைவார், என்றால் எடுப்பார். பிறகு மறுபடியும் அரயர் வியாக்யானம் செய்து தூபதீபம் காட்டி மற்றோர் போர்வையை எடுப்பார். இவ்வாறாக போர்த்து வைத்திருந்த இருபத்துநான்கு போர்வைகளையும் எடுத்தபின் மேற்படி ஆழ்வார்மீது எந்த ஆடையுமில்லாமல் நிர்வாணமாய் இருப்பார். பிறகு அந்த நிர்வாண விக்கிரகத்தைக் கொண்டு போய்ப் பெருமாள் திருவடியில் சாஷ்டாங்கமாய் வீழ்ந்து நமஸ்கரிப்பது போல் படுக்க வைப்பார்கள். இவ்வாறாக படுக்க வைத்த பிறகு நம்மாழ்வார் சரீரமெல்லாம் தெரியா மலிருக்கும்படி திருத்துளாவினால் மூடி பெருமாளுக்குக் கற்பூர ஆராதனையைக் காட்டுவார்கள்.

இவ்வாறாக ஸ்ரீரங்கம், ஆழ்வார், திருநகர், காஞ்சி முதலாகிய க்ஷேத்திரங்களில் இப்படிப்பட்ட உற்சவங்கள் நடத்தி வருவதுண்டு. இந்த உற்சவத்தின் ரகஸ்யார்த்தம் எதுவோ அதை இதனடியில் இனி சொல்லப்போகின்றோம் கேளுங்கள் :—

நம்மாழ்வார் என்பவர் மாயை சொரூபமாகிய இருபத்துநான்கு தத்துவங்களுடன் மூடப்பட்டிருக்கின்றார் என்னும் பாவனையே இருபத்துநான்கு போர்வைகளைப் போர்த்து வைப்பதற்குக் காரணமென்று அறியக்கடவீர்களாக.

இந்த ஆழ்வாரானவர் மோக்ஷமடைய பரிபக்குவ காலம் சமீபித்துவிட்டபடியால், இவரை மூடிக் கொண்டிருந்த மாயா சொரூபாகிய இருபத்துநான்கு தத்துவங்களையும் ஒவ்வொரு தத்துவங்களாய்க் களைந்துக் களைந்து அதாவது இந்த தத்துவம் தானல்ல என்று இவ்வாறாகவே இருபத்து நான்கு தத்துவங்களையும் களைந்து கொண்டே வந்த பின் கடைசியில் நம்மாழ்வாரை மூடிக் கொண்டிருந்த எல்லா தத்துவங்களும் ஒழிந்து விட்டன. பிறகு, இருபத்தைந்தாவது தத்வமாகிய ஜீவாத் மாவே நம்மாழ்வார் சொரூபம். அந்த இருபத்து ஐந்தாவது தத்துவமாகிய நம்மாழ்வார் ஜீவாத்மாவை இருபத்து ஆறாவது தத்துவமாகிய பரமாத்மா சொரூபத்தில் சேர்ப்பதற்காக நம்மாழ்வாரை நிர்வாணத்துடன் கொண்டு போய் பெருமாள் பாதத்தினிடம் படுக்க வைத்து. அவர் சரீரம் தெரியா மலிருக்கும்படி துளசி தளத்தால் சரீரத்தையெல்லாம் மூடிக் கற்பூரார்த்திக் காட்டியவுடன் நம்மாழ்வார் ஜீவாத்மாவானது கற்பூர ஜோதி சொரூபத்தில் கலந்து பெருமாளுடன் ஐக்கியமாகி விட்டார் என்று உலகத்தார் தெரிந்து கொள்வதற்காக இந்த நம்மாழ்வார் உற்சவத்தைச் செய்து காட்டு கின்றார்கள். இப்பொழுது பெருமாளை பரப்பிரம்மமாய் நினைக்க வேண்டியதேயொழிய பெருமாளாய், நினைக்கலாகாது.

இதுபோல் ஒவ்வொரு ஸ்தீரி புருஷர்களிடத்திலும் இருக்கப்பட்ட ஜீவாத்மாவானது இருபத்து நான்கு தத் துவங்களால் மூடப்பட்டிருக்கின்றன. இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் எந்த ஜன்மத்தில் அவர்களை விட்டு ஒழிந்து விடுகின்றனவோ அந்த ஜன்மத்தில் பரமாத்ம சொரூபத்தில் போய்க் கலந்து விடுவார்கள். என்பதே நம்மாழ்வார் சாற்று முறை உற்சவத்தின் ரகஸ்யார்த்தம்

நம்மாழ்வார் ஜீவாத்மாவைக் காண விடாமல் மூடிக்கொண்டிருந்த மாயா சொரூபமாகிய இருபத்து நான்கு தத்துவங்களையும் நம்மாழ்வாரானவர் கழற்றி எறிந்து விட்டபடியால் பிறகு நம் மாழ்வார் ஜீவாத்மாவானது பரப்பிரம்மத்திலேயே ஐக்யமாய் விட்டது என்று காட்டுவதற்காக கற்பூரஜோதியைக் காட்டுகின்றார்கள்.

**நம்மாழ்வாரை மூடிக்கொண்டிருந்த 24 தத்துவங்கள்**

**1. ஞாநேந்திரியங்கள் - 5**

*அதாவது, கண்கள், மூக்கு, நாக்கு, காதுகள், சரீரத்தின் மேலிருக்கும் தோல் என்று சொல்லப்பட்ட ஐந்து ஞாநேந்திரியங்களும் நேதினேதி என்றால் நானல்ல.*

**2. கனமேந்திரியங்கள் - 5**

*அதாவது வாய், கைகள், கால்கள், குதம், மர்மஸ்த்தானம் என்று சொல்லப்பட்ட ஐந்து கன்மேந்திரியங்களும் நேதினேதி என்றால், நானல்ல.*

**3. அந்தக்கரணங்கள் - 4**

*அதாவது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்று சொல்லப்பட்ட நான்கு அந்தக்கரணங்களும் நேதினேதி என்றால் நானல்ல,*

**4 வாயுக்கள் - 10**

*1 பிராண 2 அபான 3 உதனா 4 ஸமான 5 வியான் இதுதான் சரீரத்திற்கு முக்கியமான. வாயுவுகள். இதற்கு உபவாயுக்கள் ஐந்துண்டு. அது எதுனென்றால், 6 நாக, 7 கூர்ம, 8 கிருகர, 9 தேவதத்த, 10 தனஞ்செய என்று சொல்லப்பட்ட பத்துவாயுக்களும் நேதினேதி என்றால் நானல்ல. இந்த பத்து வாயுவும் செய்யும் வேலையை பிறகு சொல்லப்படும். மேற்சொல்லிய இருபத்திநான்கு தத்துவங்களும் நானல்ல. நான் இருபத்து ஐந்தாவது தத்துவமாயும், ஜீவாத்மாவாய் இருக்கின்றேன். ஆதலால் இந்த இருபத்து நான்கு தத்துவங்களையும் கலைந்து என்றால் நிக்கி இருபத்து ஐந்தாவது தத்துவமாகிய நான் இருபத்து ஆறாவது தத்துவமாகிய பரமாத்மாவில் போய்ச் சேர்ந்து விட்டேன் என்பதே*

இந்நாம்மாழ்வார் சாற்றுமுறை உற்சவத்தின் ரகஸ்யார்த்தமென்று தெரிந்து கொள்ளுங்கள். ஆசையென்னும் மாயையும் மேற்சொல்லிய இருபத்திநான்கு தத்துவங்களையும் எப்படி போக்கடிக்க வேண்டுமோ இனி அதைச்சொல்லுகின்றோம் கேளுங்கள்.

ஓர் குளத்திலுள்ள ஜலத்தில் பாச்சியானது ஜலத்தை தெரியவிடாமல் பச்சை நிறமாய் மூடிக் கொண்டிருக்கும். பிறகு அந்த ஜலத்தைக் கைகளால் தள்ளும் பொழுது அப்பாச்சியானது சற்று தூரம் விலகிபோகும். ஜலத்தை தள்ளாமல் நிறுத்திவிட்டால் மறுபடியும் அந்த பாச்சி களெல்லாம் வந்து ஒன்றாய்ச் சேர்ந்து மறுபடியும் ஜலத்தை மூடிவிடும், ஆனால் அந்த பாச்சியை எவ்வாறு போக்கடிக்க வேண்டுமென்றால், விசேஷமாய் சிறிய கல்லுகளைக் கொண்டு வந்து குளத்தின் கரையில் வைத்துக் கொண்டு முதல் ஒரு கல்லை எடுத்து குளத்து மத்தியில் போட வேண்டும். அப்பொழுது கல் விழுந்த விடத்தில் அலைகள் மேல் கிளம்பி அந்த அலைகள் அவ்விடமிருக்கும் பாச்சி யைத் தூரமாய்த் தள்ளிக்கொண்டு போரகும், மறுபடியும் உடனே இன்னொரு கல்லெடுத்து முன்போட்ட இடத்தி லேயே போடவேண்டும், அப்பொழுது அங்கு வேறு சில தூரம் தள்ளிக்கொண்டு போகும். இப்படியாய் கல்லுகளை யெடுத்து உடனுக்குடனே நடுக்குளத்தில் போட்டுக் கொண்டேயிருந்தால் அப்பொழுது ஜலத்திலி ருந்து அனேக அலைகள் புறப்பட்டு அப்பாச்சிகளை யெல்லாம் நான்கு பக்கங்களிலிருக்கும் படிகளின் சமீபமாய்க் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கும். அதன் பிறகு, குளத்திலுள்ள ஜல மெல்லாம் நன்றாய்க் காணப்படும். குளத்தில் கல்லுகளைப் போடுவதை நிறுத்தி விட்டால், பாச்சியானது மறுபடியும் சிறுகச் சிறுக ஏறிவந்து ஜலத்தையெல்லாம் மூடிவிடும். அது போல்,

நமது இருதயகமலத்தின் மத்தியிலிருக்கும் ஆத்மாவை இதுவரையில் சொல்லிக்கொண்டு வந்த ஆசாபாசங்களென் னும் அழுக்குகளென்னும் பாச்சிகள் மூடிக் கொண்டிருக்கின் றன. இந்த, ஆசாபாசங்களென்னும் பாச்சிகளையெல்லாம் எவ்விதமாய்ப் போக்கடிக்க வேண்டுமென்றால், பிரதி தினம் தவறாமல் ஸ்நானம் செய்து இந்த ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யத்தில் சொல்லியிருப்பதுபோல் விபூதியை அந்தந்த இடங்களில் மந்திர பூர்வமாய் வைத்து அதன் பிறகு, இந்நூலில் இதுவே சிவராஜயோகஸமாதி இதை செய்யுங்கள். என்று விஷய அட்டவணையில் சொல்லி யிருக்கின்றது. அந்த அட்டவணையில் 'ஸோஹம்' மந்திரம் எப்படி ஜபம் செய்ய வேண்டுமோ அதை மிகவும் தெளிவாய்ச் சொல்லியிருக்கின்றது. அந்த மந்திரத்தைப் பூசை அறையில் உட்கார்ந்து ஜபம் செய்து வரவேண்டும். அப்படி யார் ஒருவர் அந்த மந்திரத்தை ஜபம் செய்து வருகின்றார்களே, அவர்களுடைய ஆசாபாசங்களும், புண்ணிய பாவங்களும் நான் சொல்லிய பாச்சியைப்போல் தினந்தோறும் சிறுகச் சிறுக கழிந்து கொண்டே வந்து கடைசியில் எல்லா ஆசைகளும் புண்ணிய பாபங்களும் ஒழிந்து மோக்ஷமென்னும் வீட்டை அடைவார்கள்.

மோக்ஷ மென்னும் பதத்திற்குச் சரியான அர்த்தம் என்னவென்றால், விடுதலை அடைதலேயாம், விடுதலை யென்றால் எல்லா ஆசாபாசங்களிலிருந்தும், புண்ணிய பாவங்களிலிருந்தும் விடிபடுதல். இவ்விரண்டிலிருந்து விடுபட்ட மஹான்களுக்கே மோக்ஷமென்னும் பதவி உண்டாகுமேயொழிய மற்றவர்களுக்கு உண்டாகமாட்டா. இந்த மாயையென்னும் பாச்சிக்கே களிம்பென்றும் சொல்லுவார்கள். களிம்பென்பது எப்படிப்பட்டதென்றால், ஒரு செம்பு குடத்தில் விளக்கெண்ணையைவிட்டு தினந்தோறும் அக்குடத்தைக்

கையாண்டு வரும்பொழு தெல்லாம் பாத்திரத்தின்மேல் எண்ணெய் விழுந்து செம்புவர்ணத்தை யெல்லாம் மறைத்து அந்தப் பாத்திரத்தைப் பச்சை வர்ணமாய்ச் செய்துவிடும். இந்த பச்சை வர்ணத்தையே களிம்பென்று சொல்லி வேதாந்த சாஸ்திரத்தில் இதை யொரு திருஷ்ட்டாந்தமாய்க் காட்டுவார்கள்.

ஆதலால், இதுவரையில் சொல்லிவந்த சம்சார மென்னும் பந்தமானது அனேக ஜன்மங்களாய்ப் புருஷனுடன் கூட தொடர்ந்து கொண்டே வருகின்றது. இதிலிருந்து தப்பித்துக் கொள்ள அனேகர்கள் அனேக விதங்களாகிய உபாயங்களைச் செய்து வருகின்றார்கள். அவைகள் யாவையெனில்,

சிலர் கஞ்சாப் புகையைச் சாப்பிடுவதும், சிலர் ஜபமாலையைக் கையில் பிடித்துத் திருப்பிக்கொண்டே ஜபம் செய்வதும், சிலர் தியானம் செய்வதும், சிலர் தீர்த்த யாத்திரைகளை செய்வதும், சிலர் கர்மானுஷ்டமான விதிகளை செய்வதும், சிலர் பூஜைகளைச் செய்வதும், சிலர் யாகங்களைச் செய்வதும், சிலர் பஜனைகளைச் செய்வதும், சிலர் விசேஷ தர்மங்களைச் செய்வதும், சிலர் கோவில்களும் சத்திரங்களும் கட்டுவதுமாயிருக்கின்றார்கள்.

இப்படிப்பட்ட உபாயங்களினால் இந்த சம்சாரமென்னும் பந்தமானது நாசமாகமாட்டா. பின் எப்படி நாசமாகுமென்றால், ஞான விருத்திக்காக "ஸோஹம்" மந்திர ஜபத்தில் சமாதி நிஷ்ட்டை சாதனம் செய்து வரவேண்டும். அதாவது, சுத்த அசலமாகிய (சலிக்காத) அந்தக் காரணம், என்னும் அகலில் "அஹம் பிரம்மாஸ்மி" என்னும் "ஸோஹம்" மந்திரச் சுடரினால் நான், என்னும் தீபத்தைப் பிரகாசிக்கச் செய்தால் அந்த க்ஷணமே, சம்சாரமென்னும் பந்தம் இறந்து, ஸச்சிதானந்த பிரம்ம சொரூப

தரிசனமாய் ஆனந்தக் கடலில் மூழ்கியிருக்கலாம். இதற்குத் திருஷ்டாந்தம் ஸ்ரீ பகவத் கீதை அத்தியாயம் 17 சுலோகம் 16- பிரமாணம் கீழே சொல்லு கின்றோம் கேளுங்கள் :—

பந. ப்ரஸாத; ஸௌம்யத்வம் மௌநமாத்ம வுநிக்ரஹ
பாவஸம் ஸுஂத்திரித்யேத தபோமாநஸ முச்யதே.

காமக்ரோதாதிகளென்னும் ஆசாபாசங்களில் மனதைப் போகவிடாமல் செய்து மிகவும் பரிசுத்தமாய் வைத்திருந்தால், அப்பொழுது அம்மனதிற்கு சந்தோஷ மென்கிற அகக்குறி முகத்தில் விளங்கி விகசித்துக் கொண்டிருக்கும். மனம் விகார குணங்களில் போகாமல் நின்று விட்டால் வாய்த் திறவாமலிருக்கும், என்றால் மௌனியாய் விடுவான். அம்மனதை அகமுகப்படுத்தி ஆத்மாவில் சேர்ப்பித்தால், அப்பொழுது மனத்திற்கு உண்டாகும் சங்கல்ப விகல்பம் என்றால் நினைப்பு, மறப்பு களெல்லாம் அம்மனத்திலேயே ஒடுங்கிவிடும்.

இதுவே மனத்தினால் செய்யத்தக்க தவமென்று சொல்லப்படும். ஆதலால் பிராணனில்லாத சரீரம் எப்படி வியர்த்தமோ அதுபோல், கயிறு பாம்பாய்த் தோன்றும் திருஷ்ட்டாந்தம் இல்லாவிட்டால் வேதாந்த சாஸ்த்திரத்தை ஸ்திரப்படுத்துவதற்குச் சாத்திய மாகாததனால் இதுவரையில் முன்பு கயிறு சர்ப்பமாய் தோன்றிய திருஷ்ட்டாந்தம் சொல்லியிருக்கின்றோம்.

ஓங்கார ரூபமாய் நிர்க்குணமாய் பரப்பிரம்மமாயிருப்பதை இந்நூலில் உபதேசித்தோம். ஆதலால், அதை சதாகாலமும் அப்யசித்துக்கொண்டு வரவேண்டும். இதைச் செய்ய சாத்தியமாகாவிட்டால் சகுண ரூபமாகிய விக்கிரக ஆராதனையைச் செய்துவர வேண்டும். இந்த விக்கிரக

ஆராதனையைச் செய்ய சாத்தியமாகாவிட்டால், ஒரு ரூபத்தை மனதில் நினைத்து அதை பரமாத்ம சொரூபமாய்ப் பாவித்து ஒரு வரத்தையும் கேழ்க்காமல் நிஷ்க்காம்யமாய்ப் பஜனைகளைச் செய்து வரவேண்டும். நிஷ்க்காம்யமாய்ப் பஜனைகளைச் செய்ய சாத்தியமாகாவிட்டால், காம்ய கர்மங்களை அதாவது, ஒரு பலத்தை விரும்பி கர்மங்களைச் செய்து வரவேண்டும். பலத்தை விரும்பி கர்மங்களைச் செய்ய சாத்தியமாகாவிட்டால், வாரம் வாரம் அதாவது ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்னும் இந்த ஏழு நாட்களிலும், இனி எடுக்கப்போகும் ஒவ்வொரு ஜன்மத்திலும் பிறந்து கொண்டும், மறுபடியும் இறந்துகொண்டுமாய் இருப்பதே திண்ணம். ஆதலால், இதுவரையில் முன்பு கயிறு பாம்மாய்த் தோன்றும் திருஷ்ட்டாந்தம் சொல்லியிருந்தோமல்லவா அந்தக் கயிற்றைப்பார்த்து பாம்பென்று எல்லோரும் பிரமையடைந்து மதிமயங்கியிருக்கும் பொழுது கிழவியால் கொண்டுவரப்பட்ட தீபப் பிரகாசத்தினால் யார்த்தமாகிய கயிறு காணப்பட்டு பாம்பின் பிரமை நீங்கி சந்தேகம் நிவர்த்தியானது போல்

இந்த "ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்ய" நூலானது, கிழவியால் கொண்டுவரப்பட்ட தீபம் போலிருந்து எல்லோருடைய சந்தேகங்களையும் போக்கடித்து, நிராகாரமாகிய பரப்பிரம்மத்தைத் தரிசிக்கும்படி செய்விக்கும்,

## 15. பரமசிவன் அரசனுக்கு உபதேசம் செய்தல்

மூன்றாவது படியாகிய யோகநிலையைக் குறித்து வேறாக யோகாப்பியாச நூலில் வெளியிட்டிருக்கின்றோம். அந்த யோகத்தின் மஹிமையைக் குறித்து இதனடியில் சொல்லப் போகின்றோம்.



உலகத்திலுள்ள ஸ்திரி புருஷர்களெல்லோரும் அநேக ஜன்ம ஜன்மங்களாய்ச் செய்து வரும் ஸத்கர்மநுஷ்டான புண்ணிய விசேஷங்களினால் ஈஸ்வரப்பக்தி உண்டாகும். அந்த ஈஸ்வர பக்தியினால் தியான நிஷ்டையுண்டாகும். அந்த தியான நிஷ்டையினால் யோகம் சித்திக்கும். அந்த யோகத்தினால் ஞானமுண்டாகும். அந்த ஞானத்தினால் மோக்ஷமடைவார்கள். ஆதலால், மோக்ஷத்தை அடைவதற்கு இவ்வாறான படிகள் நான்குகுண்டு, இவைகளை அடைவதற்காகப் புண்ணியமும் வேண்டும். இப்புண்ணியத்தில் காம்ய புண்ணிய மென்றும் நிஷ்காம்ய புண்ணிய மென்றும் இரண்டு விதங்களாயிருக்கின்றன. இனி இவ்விரண்டு புண்ணியங்களையும் விவரித்துச் சொல்லு கின்றோம்.

குளங்கள், சத்திரங்கள், ஆலயங்கள், தண்ணீர்ப் பந்தல் முதலியவைகளைக் கட்டிவைத்து அன்னதானம்,

வஸ்த்திரதானம், பூதானம், கோதானம் இன்னும் இப்படிப் பட்ட அநேக தானங்களை செய்து இவைகளையெல்லாம் நான் செய்கின்றேனென்றாகிலும், அல்லது நான் செய்தே னென்றாகிலும் நினைப்பானேயாகில் தான் செய்த அப்புண்ணிய கார்யங்களுக்காக இனிமேல் எடுக்கப்போகும் ஜன்மத்தில் இப்போதிருக்கும் பொருளை விட, இன்னும் அதிகப் பொருள் உண்டாய், மறுபடியும் அந்த ஜன்மத்தி லும் புண்ணியம் செய்து வருவான். நான் செய்கின்றே னென்று நினைத்துச் செய்துவரும் புண்ணியத்திற்கே காம்ய புண்ணியமென்று சொல்லப்படும். இப்படிப்பட்ட காம்ய புண்ணியங்களெல்லாம் ஒவ்வொரு ஜன்மத்திலும் பொருளைக் கொடுத்துக் கொண்டு போகுமேயொழிய ஈஸ்வர பக்தியை உண்டாக்கமாட்டா. என்றால், இப்படிப் பட்ட புண்ணியங்கள் கோடானுகோடி புண்ணியங்களைச் செய்தபோதிலும் ஈஸ்வர பக்திக்கு உபயோகப்படமாட்டா. ஆனால் ஈஸ்வர பக்திக்கு எப்படிப்பட்ட புண்ணியம் இருக்கவேண்டுமோ இனி அதைச்சொல்லுகின்றோம் கேளுங்கள்.

தான் செய்யும் எல்லா புண்ணிய கார்யங்களினாலும் தனக்கு எவ்வித சம்பந்தமும் இல்லையென்று நினைத்து எல்லாக் கார்யங்களையும் ஈஸ்வரார்ப்பணமாய்ச் செய்து வரவேண்டும். அப்படி ஈஸ்வரார்ப்பணமாய் செய்து வரும் புண்ணியத்திற்கு நிஷ்காம்ய புண்ணியமென்று சொல்லப் படும், ஒவ்வொரு ஜன்மத்திலும் அதுபோல் நிஷ்காம்ய புண்ணியங்களைச் செய்துகொண்டே சென்றால், ஈஸ்வர பக்தி சிறுகச் சிறுக முதிர்ந்துகொண்டே வந்து கடைசியில் எதுவோ ஓர் ஜன்மத்தில் அந்த ஈஸ்வரபக்தி பழமாய்ப் பழுத்துவிடும், ஈஸ்வர பக்தி பழமாய்ப்பழுத்த பிறகு மறுபடியும் மறு ஜன்மத்தில் அந்த ஈஸ்வர பக்தியைச் செய்ய எவ்வளவேனும் அவனுக்கு இச்சையிராமல் செய்து, அதற்கு மேற்படியாகிய தியான நிஷ்டையில் கொண்டுபோய்விடும்.

தியான நிஷ்டையில் கொண்டுபோய் விட்டபிறகு மறுபடியும் செய்துவரும் நிஷ்க்காம்ய புண்ணிய விசேஷத்

தினால் இந்த தியான நிஷ்டையும் சிறுகச்சிறுக முதிர்ந்து கொண்டேவந்து கடைசியில் எதுவோ ஓர் ஜன்மத்தில் அந்த தியான நிஷ்டையும் பழமாய்ப் பழுத்துவிடும், தியான நிஷ்டை பழமாய்ப் பழுத்தபிறகு மறுபடியும் எடுக்கும் ஜன்மத்தில் அந்த தியான நிஷ்டையைச் செய்ய அவனுக்கு எவ்வளவேனும் இச்சையிராமல் அதற்கு மேற்படியாகிய யோகத்தில் கொண்டு போய்விடும்.

யோகத்தில் கொண்டுபோய் விட்டபிறகு, மறுபடியும் செய்துவரும் நிஷ்காம்ய புண்ணியங்களினால் இந்த யோகமும் சிறுகச் சிறுக முதிர்ந்துகொண்டே வந்து கடைசியில் எதுவோ ஒரு ஜன்மத்தில் அந்த யோகமும் பழமாய்ப் பழுத்துவிடும் : இந்த யோகம் பழமாய்ப் பழுத்தவுடன் ஞானியாகின்றான். இது விஷயங்களெல்லாம் இது வரையில் முன்னமே சொல்லியிருந்த போதிலும் மறுபடியும் இப்பொழுது இங்கு சொல்ல நேர்ந்தபடியால் சொன்னோம்.

அன்பர்களே! ஒரு யோகி, யோக சித்தி பெற்று மோக்ஷமடையும் சமயத்தில் அந்த யோகிக்குக் கர்ம சேஷம் ஏதாகிலும் இருக்கும் பக்ஷத்தில் அக்கர்ம பலனை அனுபவிப்பதற்காக அந்தந்த கர்மங்களுக்கு தக்கபடி வரவேண்டிய சரீரம் வந்து அந்த கர்மபலத்தை அனுபவிக்க வேண்டியதாய் நேரிடும். இதற்குத் திருஷ்டாந்தம் ஜனக மஹாராஜன் எப்படியிருந்து இராஜ்ஜிய பரிபாலனம் செய்து வந்தாரோ அதுவிஷயத்தைக் குறித்து இந்நூலில் இனி சொல்வோம். இந்த ஜனக மஹாராஜனைப் போல் யோகியாயிருந்த மற்றொரு இராஜன் விஷயத்தைக் குறித்து இப்பொழுது சொல்லப் போகின்றோம். இந்த இராஜன் விஷயமெல்லாம் மிகவும் ஜாக்கிரதையாய்க் கேளுங்கள்,

யோகாப்பியாசம் செய்துவந்த ஒரு புருஷனுக்கு ஜனக மஹாராஜனுக்கு கர்மசேஷம் இருந்தது போல், இந்த யோகிக்கும்

கர்மசேஷமி நந்தது. இந்த யோகி அந்த கர்ம பலத்தை அனுபவிப்பதற்காக யோக சரீரத்தைவிட்டு அரசன் வீட்டில் போய்ப்பிறந்து, தனக்கு இராஜ்யபரிபாலனம் வந்தபின் பத்து வருஷங்கள் வரையில் இராஜ கார்யங்களையெல்லாம் நடத்தி வந்துப் பிறகு, ஈஸ்வரனே மானிடச் சட்டையைத் தரித்துவந்து அந்த அரசனுக்கு உபதேசம் செய்ய வேண்டுமென்று பீரரப்தகர்மம் ஏற்பட்டிருந்தது. இவ்வாறு ஏற்பட்டிருப்பதனால், இந்த யோகியானவன் அரசன் வீட்டில் போய்ப் பிறந்தான். பிறந்த பிறகு, தனக்குப் பட்டாபிஷேகம் முடிந்து ஒன்பதறை வருஷங்கள் வரையில்தான் இராஜ்ஜிய பரிபாலனம் செய்து வந்தான். இவ்வாறாக அந்த அரசன் ஒன்பதரை வருஷங்கள் வரையில் இராஜ்ஜிய பரிபாலனம் செய்த பின் இன்னும், 6-மாதத்திற்குள் குரு உபதேசம் பெற வேண்டியவனாய் இருப்பதால். அந்த அரசனுடைய இருதயகமலத்தில் அந்தர்யாமியாயும், சாக்ஷிமாத்திரனாயும் இருக்கப்பட்ட ஆத்மாவானவர் அந்த அரசனுடைய மனதை கீழே சொல்லப்போகுமாறு திருப்பி அவனுக்கு யோசனைகளை உண்டாக்கி அந்த யோசனையைப் போல் ஆத்மாவானவர் செய்விக்கின்றார். அதன் பிறகு ஈஸ்வரனே வந்து அவ்வரசனுக்கு உபதேசம் செய்யப் போகின்றார். ஆதலால், கீழே சொல்லப்போகுமாறு அரசனை ஆலோசனை செய்யும்படி அரசனுக்குள்ளிருக்கும் ஆத்மாவானவர் செய்வித்து அந்த ஆலோசனைகள் எப்படிப்பட்டதுகளோ, இனி அதை சொல்லப் போகின்றோம் கேளுங்கள்,

"நான் சுமார் 9 அல்லது 10 வருஷங்களாய் இராஜ்ஜிய பரிபாலனம் செய்து வருகிறேனல்லவா? இந்த இராஜ்ஜிய பரிபாலனம் செய்வதை ஆலோசித்துப் பார்த்தால், தினந்தோறும் செய்திவரும் கார்யங்களால் இருக்கின்றனவே யொழிய எதுவும் புதிதாய்ச் செய்யும் கார்யம் எனக்கு ஒன்றும் காணப்படவில்லை. தினந்தோறும் செய்துவரும் கார்யங்களையே செய்துவந்தால், எனது ஜன்மம் கடைத் தேறுவது எப்படி? என் தந்தை, என் தந்தையின் தந்தை, என் பாட்டன் அவர் தந்தை எனது

இரண்டாவது பாட்டன் இப்படியே எத்தனையோ கணக்கில்லாத என் பாட்டன் மார்கள் இந்த சிம்மாசனத்தில் உட்கார்ந்து இராஜ்ய பரிபாலனம் செய்து கடைசியில் இந்த சிம்மாசனத்தைவிட்டு மரணமடைந்து எங்குபோய்ப் பிறந்திருக்கின்றார்களோ இது விஷயம் எனக்கும் மற்றவர்களுக்கும் தெரியவராம லிருக்கின்றது. இனி அப்படிப்பட்ட கதி எனக்கும் சம்பவிக்கப் போகின்ற தல்லவா? "சீசீ"! இந்த இராஜியத்தினால், எனக்கு யாதொரு பிரயோசனமுமில்லை இதற்கு ஞான வாசிட்டம் பிரமாணம் என்னவென்றால்,

மண்ணாடுமன்னவரு மவர் தனமு மாண்டவனனுண்
    மணலையொக்கும்
விண்ணாடுமிந்திரரு மவர்வாழ்வும் போயின
    விண்மீனையொக்கும்
மெண்ணாடுபிரமரு மண்டமும் பூதங்களு
    மிறந்தவெல்லையில்லைக்
கண்ணாடு மவையெங்கே நின்வாழ்க்கை
    நிலையென்னே கழலுநெஞ்சே,

அதாவது, இப்பூவுலகத்தை அரசாண்டுவந்த கோடானகோடி இராஜாக்களும், அவர்களின் செல்வமும் ரதங்களும், யானை, குதிரைகளும், சைன்னியங்களும் அநேகம் அழிந்து போனதை நினைத்துப் பார்க்குமளவில் அது எப்படியிருக்கிறதென்றால், சிறிய சிறிய மணல்கள் கும்பலாய்ச் சேர்ந்து குவித்து ஒரே இடத்தில் எப்படி தங்கியிருக்கிறதோ அதுபோல் ஒவ்வொரு ஸ்திரீ புருஷர் களும் மேற்சொல்லிய சிறிய சிறிய மணல் கும்பலைப் போன்ற அனேக ஜன்மங்களை எடுத்திருக்கின்றார்கள். இனியும் அச்சிறிய மணல்கும்பலைப் போன்ற கணக்கில்லாத அனேக கோடானுகோடி ஜன்மங்களையும் சத்தியமாய் எடுக்கப்போகின்றார்கள். இதன்றியும் ஆகாயமத்தியில் கணக்கில்லாத எத்தனைக் கோடானுகோடி நக்ஷத்திரங்கள் இருக்கின்றனவோ அத்தனைக்கோடானுகோடி தேவேந்திரர்களும் பிரம

தேவர்களும் தேவகுலத்தையாண்டு கடைசியில் மாண்டே விட்டார்கள். இப்படிப்பட்ட கதியேயல்லவா எனக்கும் சம்பவிக்கப் போகிறது, ஆதலால், இனி, நல்ல குருவா யிருக்கப்பட்ட வரைக் கண்டுபிடித்து அவரால் உபதேசம் பெற்று அவர் சொல்வதுபோல் நடந்து கொள்ள வேண்டு" மென்று இராஜனை ஆலோசிக்கும்படி இராஜனுக்குள் அந்தர்யாமியாவும், சாக்ஷி சொரூபனாயும் இருக்கப் பட்ட ஆத்மாவானவர் செய்துவிட்டார். இதன்றியும் மறுபடியும் கீழ்வருமாறு இராஜனை ஆலோசிக்கும்படி ஆத்மாவானவர் செய்கின்றார்.

"எனக்கு உபதேசம் செய்யப்பட்ட குருவானவர் எங் கிருக்கின்றாரென்பதும் தெரியாமலிருக்கின்றது. ஆதலால், எல்லா தேசங்களுக்கும் கடிதங்களை எழுதி அனுப்ப வேண்டும். அப்பொழுது எனக்கு உபதேசிக்கத் தக்க குருவானவர் எவ்விடமிருந்தாகிலும் வருவார்" என்று தனக்குள்தான் ஆலோசித்து பிறகு கீழே சொல்லப் போகுமாறு அரசனை ஆலோசிக்கும்படி ஆத்மாவானவர் செய்கின்றார்.

அங்க, வங்க, களிங்க, காஷ்மீர, நேபாள, முதலாகிய தேசங்களிலிருக்கும் ஸ்ரீ ஸத்குரு சுவாமிகளின் பாதார விந்தங்களுக்குக் கேரள தேசாதிபதியாகிய விஸ்வேஸ்வர னென்னும் அரசன், நமஸ்கரித்து எழுதும் விக்ஞாபனம் என்னவென்றால்,

"எந்த ஜாதி, எந்தமதம், எந்தபாஷை, எந்த ஏழை எந்த அவதூதர், எந்த வியாதியுடையவர், எந்த திகம்பரியாய் இருந்தபோதிலும் சரி அடியேனுக்கு குருவாய் வந்து எனக்குத் தக்க உபதேசம் செய்வராகில் அப்படிப்பட்ட குருவிற்கு நான் என் இராஜ்யத்தில் பாதி இராஜியம் பாதகாணிக்கையாய் அவருக்குக்கொடுப்பேன். அப்படி எனக்குத்தக்க உபதேசம் செய்யாவிட்டால் அப்படிப்பட்டவர்களை யெல்லாம் சிக்ஷிப்பேன், என்று கடிதங்களை யெழுதி எல்லா தேசங்களுக்கும் அனுப்பினான், அப்பொழுது அந்தந்த

தேசங்களிலுள்ள பண்டிதர்கள், வித்வாம்ஸர்கள், அனேகர் களுக்கு குருவாயிருக்கப்பட்டவர்கள் இப்படிப்பட்டவர் களெல் லோரும் அரசனிடம் சென்று அவருக்கு உபதேசம் செய்ய நினைத்து சில பண்டிதர்கள் கீழ்வருவாறு பேசிக் கொள்கிறார்கள்.

"ஓ லக்ஷ்மனாசார்யரே! நமது தேசாதிபதியாகிய விஸ்வேஸ்வரரென்னும் அரசன் எல்லா தேசங்களுக்கும் எழுதியனுப்பிய லிகிதத்தை (கடிதத்தை) நீர் வாசித்து பார்த்தீரா? இதோ அந்த லிகிதத்தை வாசித்துப் பாரும்! இந்த அரசன்விஷயம் ஆலோசித்துப்பார்க்குமளவில் இவர் பயித்தியம் பிடித்த அரசனைப்போல் காணப்படுகிறார், யாராகிலும் இவருக்குத் தக்க உபதேசம் செய்வாராகில் தன் இராஜ்ஜியத்தில் பாதி இராஜ்ஜியம் பாதகாணிக்கையாய்க் கொடுத்துவிடுவதாயும், அப்படி அவருக்குத்தக்க உபதேசம் செய்யாவிட்டாலும் அவர்களை சிக்ஷிப்பதாயும் எழுதியனுப்பியிருக்கின்றார். என்னிடத்தில் மஹா மந்திரமாகிய தாரக மந்திரமென்று சொல்லப்பட்ட ஸ்ரீ ராம மந்திரம் இருக்கின்றது. நான் அவரிடம் சென்று இந்த தாரக மந்திரத்தை அவருக்கு உபதேசம் செய்து பாதி இராஜி யத்தைப் பெற்றுக்கொண்டு வருகின்றேன்."

என்று லக்ஷ்மணாசார்யரிடம் சொல்லிவிட்டு கேரள தேச அரசனிடம் சென்றான். இதுபோல் மற்றொரு ஊரிலிருக்கும் சாஸ்த்திர பண்டிதன் ஒருவன் கீழ்வருமாறு சொல்லி அவனும் கேரள தேச அரசனிடம் சொல்லுகின்றான்.

"கிருஷ்ணபாகவதாரே! இன்றையதினம் நான் எழுந்த வேளை மிகவும் நல்லவேளையாயிருக்கின்றது. நான் எழுந்து சந்தியா வந்தனம் செய்துமுடித்து வெளிவந்து நின்றவுடன் கேரள தேசாதிபதியாகிய விஸ்வேஸ்வர அரசன் எழுதி அனுப்பிய நிருபத்தை மேற்படி தேசாதிபதி சேவகன் கொண்டுவந்து என்னிடம் கொடுத்தான். இந்த நிருபத்தை வாசிக்கின்றேன். அதை நீரும் சற்றேகேளும்" என்று சொல்லி அரசன் எழுதி அனுப்பிய லிகிதத்தை கிருஷ்ணபாகவதற்கு வாசித்துக் காட்டுகின்றான்.

அங்க, வங்க, களிங்க, காஷ்மீர, நேபாள முதலாகிய தேசங்களிருக்கும் ஸ்ரீ ஸத்குருசுவாமிகளின் பாதாரவிந்தங் களுக்குக் கேரள தேசாதிபதியாகிய விஸ்வேஸ்வரனென்னும் அரசன் நமஸ்க்கரித்து எழுதும் விக்ஞாபனம் என்ன வென்றால்,

'எந்த ஜாதி, எந்த மதம், எந்த பாஷை, எந்த ஏழை, எந்த அவதூதர், எந்த வியாதியுடையவர், எந்த திகய்பரியாய் இருந்தபோதிலும் சரி அடியேனுக்குக் குருவாய் வந்து எனக்குத்தக்க உபதேசம் செய்வாராகில் அப்படிப்பட்ட குருவிற்கு நான் என் இராஜ்ஜீயத்தில் பாதி இராஜியம் பாதகாணிக்கையாய் அவருக்குக் கொடுப்பேன், அப்படி எனக்குத்தக்க உபதேசம் செய்யாவிட்டால் அப்படிப் பட்டவர்களையெல்லாம் சிக்ஷிப்பேன்' என்று கடிதங்களை எழுதிய எல்லா தேசங்களுக்கும் அனுப்பியிருக்கின்றார். ஆதலால் எல்லா மந்திரங்களைவிட மிகவும் சிரேஷ்ட மானதும் மகாபாபங்களையெல்லாம் போக்கடிக்கத் தக்கதுமாகிய பஞ்சாக்ஷர மந்திரம் என்னிடத்திலிருக்கின் றது. நான் அவரிடம் சென்று இந்த பஞ்சாக்ஷர மந்திரத்தை அவருக்கு உபதேசித்து பாதி இராஜ்ஜீயத்தைப் பெற்று வருகின்றேனென்று கிருஷ்ண பாகவதரிடம் சொல்லித் தான் கேரள தேசத்திற்குச் சென்றான்.

மற்றொரு ஊரில் அனேகர்களுக்குக் குருவாயிருக்கப்பட்ட ஒருவன் கேரள தேசாதிபதியாகிய அரசனது கடிதத்தை வாசித்துப் பார்த்து, புன்சிரிப்புடன் சிரக்கம்பம் செய்து அதாவது, சிரசை அசைத்து நம்மிடமிருக்கும் பிரம்மசூத்திரமாகிய 'ஸோஹம்' மந்திரத்தை உபதேசம் செய்துவரலா மென்றெண்ணி சில சிஷ்யர்களுடன் புறப்பட்டுக் கேரள தேசம் சென்றான்.

இவ்வாறாகவே இன்னும் அனேக தேசங்களிலிருந்து அனேக குருக்கள் புறப்பட்டு, கேரள தேசாதிபதியாகிய விஸ்வேஸ்வரனென்னும் அரசனுக்கு உபதேசம் செய்ய சென்றார்கள். இவர்களெல்லோரும் அவ்வரசனால் சிக்ஷை அடையவேண்டுமென்கிற பிராரப்தகர்மம் இருந்தபடியால்

அவர்களின் பிராரப்த கர்மமானது அவர்களை அரசனிடம் போகும்படிச் செய்வித்தன.

இவ்வரசனோ பூர்வஜன்மங்களில் ஒவ்வொரு ஜன்மத்திலும் யோகியாகவே பிறந்து கொண்டே வந்து கடைசியில் யோகசித்தி பெற்று ஞானமடையும் சமயத்தில் இந்த யோகி அரசனாய்ப் பிறக்க வேண்டுமென்னும் கர்மமிருந்த படியால், அக்கர்ம பலத்தை அனுபவிப்பதற்காக யோகியாயிருந்த சரீரத்தை விட்டு அரசன் வீட்டில் போய்ப் பிறந்தவனாதலால், இந்த அரசன் யோகியாய் பிறவா முன்னமே தாரக மந்திரமாகிய ஸ்ரீ ராமமந்திரம், பஞ்சாக்ஷர மந்திரம், பிரம்ம சூத்திரமாகிய ஸோஹம் மந்திரம் முதலானவைகளை யெல்லாம் ஜபம் செய்து அந்த ஜபங் களெல்லாம் முதிர்ந்து பழமாய்ப் பழுத்து அதற்கு மேல் படியாகிய யோகத்தில் போய் அரசன் நின்றிருக்கப்பட்டவ னாதலால், மேற்சொல்லிய மந்திரகளெல்லாம் யோகத்தை விட தாழ்ந்தபடிகளாதலால் தனக்கு உபதேசம் செய்ய வந்தவர்களை யெல்லாம் க்ஷணத்திற்குள் தோல்வியடையும்படிச் செய்து அவர்களை யெல்லாம் சிறையில் அடைந்து விட்டான்: யோகிகள் மனதை ஜயித்தவர்களாதலால், அவ்வளவு மகிமையுள்ள மந்திரங் களாயிருந்த போதிலும் சரி, அந்த மந்திரங்களினால் யோகிகளுக்கு யாதொரு பிரயோஜனமும்மில்லை.

ஆயிரம் சொல்வதேன், கணக்கில்லாத எண்ணங்களை எண்ணப்பட்ட மனதை ஒரே எண்ணத்தில் கொண்டுவந்து நிறுத்துவதற்காக முன்சொல்லிய தாரக மந்திரமாகிய ஸ்ரீ ராமமந்திரமாகிலும், அல்லது பஞ்சாக்ஷர மந்திர மாகிலும் அல்லது ஸோஹம் மந்திரமாகிலும் ஜபம் செய்து வர வேண்டும். மேற்சொல்லிய மூன்று மந்திரங்களையாவது அல்லது இரண்டு மந்திரங்களை யாவது ஒரு புருஷன் ஜபம் செய்து வரலாகாது. அப்படி இரண்டு மந்திரங்களை ஜபம் செய்து வருவார்களாகில் அவர்களின் மனமானது ஒரே நிலையில் நிற்கமாட்டா.

மேற்சொல்லிய மூன்று மந்திரங் களிலும் எந்த மந்திரத்தை ஜபம் செய்ய அவர்களுக்கு இஷ்டமிருக்கின்றதோ அந்த ஒரே மந்திரத்தை எடுத்துக் கொண்டு ஜபம் செய்து வருவார்களாகில் அப்பொழுது அவர்களின் மனமானது ஒரே நிலையில் நின்று பிறகு அனேக தின சாதனங்களினால் அந்த ஓர் நிலையும் அற்றுவிடும். மனதை ஒரே நிலையில் நிறுத்துவதற்காக இதுவரையில் சொல்லிய மந்திரங்களை ஜபம் செய்துவர வேண்டும். அரசனாய் வந்து பிறந்த இந்த யோகிக்கு யோகத்தைவிட மேற்படியிலிருக்கும் ஞானியாயிருக்கப் பட்டவன் வந்து உபதேசம் செய்யவேண்டும். அப்படி ஞானியாய் இருக்கப்பட்டவன் வந்து உபதேசம் செய்யா விட்டால் ஈஸ்வரனே வந்து அவ்வரசனுக்கு உபதேசம் செய்ய வேண்டும். ஆதலால், இனி ஈஸ்வரனே குருவாய் வந்து அரசனுக்கு உபதேசம் செய்யப் போகின்றார்.

அரசனுக்கு உபதேசம் செய்யவந்த பண்டிதர்கள். வித்துவாம்சர்கள் முதலானவர்களையெல்லாம் அரசன் தோல்வியடையும்படிச் செய்து அவர்களையெல்லாம் சிறையில் போட்டு தன் அரண்மனைக்குச் சென்றான். மறுநாட்காலை 8-மணிக்கு விகாரரூபமாய் வரப்போகும் பரமசிவனால் உபதேசம் பெறவேண்டு மென்றால் கர்மம் அவ்வரசனுக்கு இருந்தபடியால் மறுநாட்காலை 6-மணிக்கெல்லாம் அப்பியங்க ஸ்நானம் செய்து எதையும் சாப்பிடாமல் தன் கொலுமண்டபத்திற்குச் சென்று நவரத்தின சிம்மாசனத்தின்மீது அரசன் போய் உட்கார்ந்தான்.

ஒருவன் சரீரத்தில் அணிந்திருக்கும் நெஜார் என்றால் கால் சட்டை, சொக்காய்களுக்கு எப்படியோ நெருப்புத் தீப்பட்டு சரீரமெல்லாம் பற்றியெரியும் பொழுது ஜலத்தில் போய்க் குதிப்பதற்காக ஜலத்தைத் தேடிக் கொண்டு அவன் எப்படி ஓடுகின்றானோ அதுபோல், அரசனது சரீரத்திற்கும் மிகவும் எரிச்சலுண்டாய் "இன்னும் குருவானவர் வரவில்லையே ஹா."

வென்று கதறி சிலநேரம் சிம்மாசனத்தின் மீதே மூர்ச்சையாய்ச் சாய்ந்திருந்தான்.

அரசன் சபைக்குள் போகும்பொழுது வாசற்படியில் காத்துக்கொண்டிருக்கும் சேவகர்களுக்கு அரசன் எவ்வாறு ஆஞ்ஞாபித்திருந்தானென்றால் "சேவகர்களே! எந்த திகம் பரியாயிருந்தபோதிலும் அல்லது குஷ்ட்ட வியாதியினால் கைகால்கள் குறைந்து அதிலிருந்து சீழ், இரத்தம் ஒழுகி கெட்ட நாற்றமுடையவனாயிருந்த போதிலும் சரி அல்லது கட்டவஸ்த்திரமில்லாமல் கிழிந்த கந்தல்களைக் கட்டிக் கொண்டுவந்த போதிலும் சரி, அப்படிப்பட்டவர்களை யெல்லாம் தடை செய்யாமல் என்னிடம் அனுப்பிவிடுங்க" ளென்று முந்தியே சேவகர்களுக்கு அரசன் ஆஞ்ஞா பித்திருந்தான் அப்பொழுது அரசனது ஆஞ்ஞையைப்போல் எல்லோரையும் அரச சபைக்குள் அனுப்ப சேவகர்கள் மிகவும் ஜாக்கிரதையாய் வாசற்படியில் காத்திருந்தார்கள். இங்கு இப்படியிருக்க சிம்மாசனத்தின் மேல் மூர்ச்சையாய் விழுந்திருந்த அரசன் மூர்ச்சைத்தெளித்து எழுந்து மறுபடியும் சரியாய் உட்கார்ந்தான்.

அப்பொழுது அங்கு இராஜசபையில் இருக்கப் பட்டவர்களெல்லோரும் நிசப்தமாயிருந்தார்கள். இன்னும் ஐந்து நிமிஷத்திற்குள் பரமசிவனானவர் குருவாய்வந்து அரசனுக்கு உபதேசம் செய்யப் போகின்றார். இதற்குள் அரசன் இவ்வாறு சொல்லுகின்றார். "இன்னும் யான் குரு உபதேசமடைய எவ்வளவு காலம் செல்லுமோ" என்று மிகவும் வருத்தத்துடன் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது ஐந்து நிமிஷங்களாயிற்று. ஐந்து நிமிஷங்களானவுடனே பரமசிவனானவர் மிகவும் கறுத்த சரீரத்தைத் தரித்து கந்தல்கந்தலாய்க் கிழிந்திருக்கும் பழைய அழுக்குத் துண்டு வஸ்த்திரத்தைச் சிரசில் சுற்றிக்கொண்டு பீஜங்கள் காணும் படி கௌபீனத்தைக் கட்டி அரசனுக்கெதிராய்

வந்து கொண்டிருக்கும் பொழுது, விகாரவேஷத்துடன் அரசனுக்கெதிராய் வருபவரை எதிர்கொண்டழைத்து வரவேண்டு மென்று அரசனுக்கோர் எண்ணம் உதித்தது. அப்படி எண்ணம் உதித்தவுடன் அரசன் சிம்மாசனத்தை விட்டெழுந்து கீழே இறங்கப்போனான், அப்பொழுது வேஷதாரியாகிய பரமசிவன் தனது வலது கையை மேல் தூக்கி அரசனைப் பார்த்து "நில்" என்று ஒரு சப்தம் போட்டு அந்த க்ஷணமே மறைந்து விட்டார். பரமசிவன் தனது வலது கையை மேல்நோக்கி அரசனைப் பார்த்து "நில்" என்று ஒரு சப்தம் போட்டு அந்த க்ஷணமே மறைந்து விட்டார்.




பரமசிவன் "நில்" என்னும் ஸப்தம் அரசன் காதில் விழுந்தவுடன் மனதை நிறுத்தும்படி சொன்னாராதலால், மனதை எந்த விவகாரங்களிலும் போகவிடாமல் நிறுத்திவிட வேண்டுமென்று அரசனுக்குத் தோன்றியபடியால் அந்த க்ஷணமே அரசன் கண்களை மூடிக்கொண்டு இமைக்கொட்டுவதற்குள் தன் மனதை வெளிவிவகாரங்களில் ஓடவிடாமல் செய்து கல் விக்கிரகம்போல் அரசன் நின்றுவிட்டான். அரசன் சிம்மாசனத்திடம் அசையாமல் கல் விக்கிரகம்போல் நின்ற பிறகு ராஜசபையில் உட்கார்ந்திருந்த

மந்திரிகள், பிரதானிகள் மற்றுமுள்ள சபையாரும் காலை ஏழு மணிக்கு உட்கார்ந்து முதல் ஒருவர் பேசாமல் சும்மாயிருந்து இருந்த வேடிக்கைகளையெல்லாம் பகல் பன்னிரண்டுமணி வரையில் பார்த்துக்கொண்டிருந் தார்கள். அரசன் காலை 8-மணிக்கு மூடிய கண்களை பகல் பன்னிரண்டுமணி வரையில் திறவாமல் நின்றிருந்த படியால் சபையிலுள்ளவர் களுக்கெல்லாம் பசியுண்டாயிற்று. பிறகு எல்லோரும் எழுந்து தங்கள் தங்கள் வீடுசென்று போஜன முண்டு, மறுபடியும் மாலை மூன்று மணிக்கு இராஜ சபைக்குவந்து சேர்ந்தார்கள். இதுவரையில் அரசன் கண்களைத் திறவாமலேயே நின்றிருந்தான். பிறகு இரவு 7-மணி வரையில் சபையிலுள்ள வர்களெல்லோரும் காத்திருந்தும் அரசன் கண்களைத் திறவாமலிருந்தபடியால் மறு படியும் சபையிலுள்ள வர்களெல்லோரும் எழுந்து தங்கள் தங்கள் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். பிறகு மறுநாட் காலை 8-மணிக்கு எல்லோரும் மறுபடியும் இராஜ சபைக்குவந்து சேர்ந்தார்கள். ஆனால் அரசன் மாத்திரம் கண்களைத் திறவாமல் அப்படியே நின்றிருந்தான். இது போல் மந்திரி, பிரதானி முதலானவர்களெல்லோரும் எட்டு தினங்கள் வரையில் வந்து பார்த்தார்கள். அரசனோ எட்டு தினங்கள் வரையில் மூடிய கண்களைத் திறவாமல் நின்று கொண்டேயிருந்தான். அதன் பிறகு மந்திரி பிரதானி களெல்லோரும் கீழே சொல்லப்போகுமாறு ஆலோசித்து இராஜ்ஜிய பரிபாலானம் செய்யப் போகின்றார்கள்.

"அரசன் கண்களைமூடி நின்றயிடத்திலேயே நின்று விட்டபடியால் இராஜியத்தைப் பரிபாலனம் செய்ய ஒருவருமில்லை. ஆதலால் அரசனது கையிலிருக்கும் கணையாழி மோதிரத்தைக் கழற்றி நாம் இராஜிய பரிபாலனம் செய்து வரவேண்டும்' மென்று எல்லோரும் கூட்டங்கூடி பேசி அதுபோல் செய்யத் தீர்மானித்தார்கள். பிறகு அரசன்

*கையிலிருக்கும் கணையாழி மோதிரத்தை மெதுவாய்க் கழற்றி. மந்திரிமார்களே இராஜிய பரிபாலனம் செய்து எல்லா கணக்கு புஸ்த்தங்களிலும் தஸ்த்தா வேஜுகளிலும் அரசனது கணையாழியால் சீல்வைத்து வந்தார்கள்,இவ்வாறாக பன்னிரண்டு வருஷங்கள் வரையில் அரசனானவன் கண்களைத்திறவாமலே நின்றிருந்தான். அதன் பிறகு பதின்மூன்றாவது வருடம் தொடங்கியவுடன் அரசன் கண்களை விழித்துப் பார்த்து.*

ஐந்து வகையாகின்ற பூதமுத னாதமு
மடங்கவெளி யாகவெளிசெய்

தரியாமை யறிவாதி பிரிவாக வறிவார்கள்
"அறிவாக நின்ற நிலையில்

சிந்தையற நில்" என்று சும்மா விருத்தி, மேற்
கின்மயா னந்த வெள்ளம்

தேக்கித் திளைத்துந னதுவா யிருக்க நீ
செய்சித்ர மிகநன்று காண் !

"ஏந்தைவட வாற்பரம குருவாழ்க; வாழ்கவரு
ளியந்தி மரபுவாழ்க !

என்றடியார் மனமகிழ மேதாகமத்துணி
யிரண்டில்லை யொன்" றென்னவே

வந்தகுருவே ! வீறு சிகஞான சித்திநெறி
மௌனோப தேசகுருவே !

மந்த்ரகுருவே ! யோக தந்த்தர குருவே ! மூலன்
மரபில்லரு மௌனகுருவே !

*என்னும் தாயுமானவர் பாடலைச்சொல்லி 'குரு' வானவர் எங்கே?" என்று மந்திரிமார்களைக் கேட்டான். "குருவானவர் உங்களுக்கேதோ சொல்லி உடனே மாயமாய்ப் போனார். மறுபடியும் அவரை நாங்கள் பார்க்க வில்லை. அவர் உங்களுக்கு*

எதுவோ சொன்னவுடன் அப்படியே நின்று விட்டீர்கள். நீங்கள் கண்களை மூடி நின்று பன்னிரண்டு வருஷங்கள் கடந்துவிட்டன. இப்பொழுது பதின்மூன்றாவது வருஷம் தொடங்கியது. இந்த பதின்மூன்றாவது வருஷத்தில் நீங்கள் கண்களைத் திறந்து பார்த்தீர்கள்" என்று மந்திரிமார்கள் சொன்னவுடன் அரசன் ஆள்காட்டும்விரலை தன் மூக்கின் மேல் வைத்து மிகவும் ஆச்சர்யப்பட்டு "நான் இப்போதேயல்லவா கண்களை மூடினேன் இதற்குள் பன்னிரண்டு வருஷங்கள் எப்படியாயிற்று" என்று மந்திரிமார்களைக் கேட்டான். அப்பொழுது அரசன் கணையாழியைக் கொண்டு பன்னிரண்டு வருஷங்களாய் இராஜ்ய பரிபாலன் செய்துவந்த கணக்கு களையெல்லாம் மந்திரிமார்கள் கொண்டுவந்து அரசனுக்குக் காட்டினார்கள். அக்கணக்குகளை யெல்லாம் அரசன் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டு மனதை வெளி வியவகாரங் களில் ஓடவிடாமல் செய்து இடைக்கொட்டு மவ்வளவு நேரம் வரையில் பிரம்ம நிஷ்டையில் இருந்தற்கே பன்னிரண்டு வருஷங்கள் கடந்து விட்டதல்லவா?

இப்படிப்பட்ட மகா சுகத்தை அனுபவித்த பிறகு இனி இந்த இராஜியத்தில் இருக்கலாகாதென்று தனக்குள்தான் நிச்சயித்துக் கொண்டு பிறகு சிம்மாசனத்தினிடமிருந்து கீழே இறங்கி மலஜனவிசர்ஜனை செய்யச் செல்பனைபோல் மெதுவாய்க் காட்டுமார்க்கமாய்ச் சென்று கொண்டிருந்தான். அப்பொழுது அரசன் தன் பின்புறமாய்த் திரும்பிப்பார்த்து தன்னைத் தொடர்ந்து வரப்பட்டவர்களையெல்லாம் போகச்சொல்லி பிறகுதான் ஒருவனே காட்டுக்குச் சென்று மலைக்குகைக்குள் நுழைந்து யோக சமாதி நிஷ்ட்டையில் உட்கார்ந்து விட்டான்.

உலகத்தில் சுகம் அனுபவிக்கவேண்டுமென்று சொல்லு கின்றார்களல்லவா? ஆனால் அந்த சுகம் எப்படி பட்டதென்பதும் அனேகர்கள் அறியமாட்டார்கள். சுகம்

யென்பதை எப்படி அறியலா மென்றால், மனோ ஓட்டத்தை அடக்கிச் சும்மாயிருந்தால் அப்பொழுது அந்த சுகத்தை அறியலாமே யொழிய, மனம் பல இடங்களிலும் குரங்கைப் போல் ஓடிக்கொண்டிருக்கும், வரையில், அந்த சுகத்தை அறியமாட்டார்கள். இப்பொழுது மேற்சொல்லிய அரசனு டைய மனதானது எதையும் நினையாமல் இறந்துவிட்ட படியால் பிரம்மானந்தக் கடலில் மூழ்கி சமாதி நிலையில் நிற்குமவ்வளவு ஸ்திதிக்கு வந்துவிட்டது. இப்படிப்பட்ட நிலைக்குக் கொண்டுவந்து நிறுத்துகிறது எதுவென்றால் முன் ஜன்மாந்திரங்களில் செய்துவந்த யோக பலமேயெழிய இதைவிட வெறானதல்ல யோகசித்தி பெற்ற ஒருவனுக்கே ஞானம் சித்திக்குமேயொழிய மற்றவர்களுக்கு ஞான மென்பது சித்திக்கமாட்டா.

பன்னிரண்டு வருஷங்கள் வரையில் அன்னபானாதி கள் இல்லாமலும் மலஜல விசர்ஜ்ஜனை செய்யாமலும் எப்பிடியிருக்கலாமென்று நீங்களெல்லோரும் மிகவும் ஆச்சரியப்படுவீர்கள். இவைகளுக்கெல்லாம் காரணம் "ருஷிகள் ஆஹாரமில்லாமலிருப்பதற்குக் காரணம்" என்னும் அட்டவணையில் சொல்லியிருக்கின்றோம். அதை நீங்கள் வாசிப்பீர்களாகில் இதன் ரகஸியங்களையெல்லாம் அதில் கண்டறியயலாம்.



எதுவோ சொன்னவுடன் அப்படியே நின்று விட்டீர்கள். நீங்கள் கண்களை மூடி நின்று பன்னிரண்டு வருஷங்கள் கடந்துவிட்டன. இப்பொழுது பதின்மூன்றாவது வருஷம் தொடங்கியது. இந்த பதின்மூன்றாவது வருஷத்தில் நீங்கள் கண்களைத் திறந்து பார்த்தீர்கள்" என்று மந்திரிமார்கள் சொன்னவுடன் அரசன் ஆள்காட்டும்விரலை தன் மூக்கின் மேல் வைத்து மிகவும் ஆச்சர்யப்பட்டு "நான் இப்போதேயல்லவா கண்களை மூடினேன் இதற்குள் பன்னிரண்டு வருஷங்கள் எப்படியாயிற்று" என்று மந்திரிமார்களைக் கேட்டான். அப்பொழுது அரசன் கணயாழியைக் கொண்டு பன்னிரண்டு வருஷங்களாய் இராஜிய பரிபாலன் செய்துவந்த கணக்கு களையெல்லாம் மந்திரிமார்கள் கொண்டுவந்து அரசனுக்குக் காட்டினார்கள். அக்கணக்குகளை யெல்லாம் அரசன் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டு மனதை வெளி வியவகாரங் களில் ஓடவிடாமல் செய்து இடைக்கொட்டு மவ்வளவு நேரம் வரையில் பிரம்ம நிஷ்டையில் இருந்தற்கே பன்னிரண்டு வருஷங்கள் கடந்து விட்டதல்லவா?

இப்படிப்பட்ட மகா சுகத்தை அனுபவித்த பிறகு இனி இந்த இராஜியத்தில் இருக்கலாகாதென்று தனக்குள்தான் நிச்சயித்துக் கொண்டு பிறகு சிம்மாசனத்தினிடமிருந்து கீழே இறங்கி மலஜனவிசர்ஜனை செய்யச் செல்பனைபோல் மெதுவாய்க் காட்டுமார்க்கமாய்ச் சென்று கொண்டிருந்தான். அப்பொழுது அரசன் தன் பின்புறமாய்த் திரும்பிப்பார்த்து தன்னைத் தொடர்ந்து வரப்பட்டவர்களையெல்லாம் போகச்சொல்லி பிறகுதான் ஒருவனே காட்டுக்குச் சென்று மலைக்குகைக்குள் நுழைந்து யோக சமாதி நிஷ்ட்டையில் உட்கார்ந்து விட்டான்.

உலகத்தில் சுகம் அனுபவிக்கவேண்டுமென்று சொல்லு கின்றார்களல்லவா? ஆனால் அந்த சுகம் எப்படி பட்டதென்பதும் அனேகர்கள் அறியமாட்டார்கள். சுகம்

யென்பதை எப்படி அறியலா மென்றால், மனோ ஓட்டத்தை அடக்கிச் சும்மாயிருந்தால் அப்பொழுது அந்த சுகத்தை அறியலாமே யொழிய, மனம் பல இடங்களிலும் குரங்கைப் போல் ஓடிக்கொண்டிருக்கும், வரையில், அந்த சுகத்தை அறியமாட்டார்கள். இப்பொழுது மேற்சொல்லிய அரசனு டைய மனதானது எதையும் நினையாமல் இறந்துவிட்ட படியால் பிரம்மானந்தக் கடலில் மூழ்கி சமாதி நிலையில் நிற்குமவ்வளவு ஸ்திதிக்கு வந்துவிட்டது. இப்படிப்பட்ட நிலைக்குக் கொண்டுவந்து நிறுத்துகிறது எதுவென்றால் முன் ஜன்மாந்திரங்களில் செய்துவந்த யோக பலமேயொழிய இதைவிட வெறானதல்ல யோகசித்தி பெற்ற ஒருவனுக்கே ஞானம் சித்திக்குமேயொழிய மற்றவர்களுக்கு ஞான மென்பது சித்திக்கமாட்டா.

பன்னிரண்டு வருஷங்கள் வரையில் அன்னபானாதி கள் இல்லாமலும் மலஜல விசர்ஜ்ஜனை செய்யாமலும் எப்பிடியிருக்கலாமென்று நீங்களெல்லோரும் மிகவும் ஆச்சரியப்படுவீர்கள். இவைகளுக்கெல்லாம் காரணம் “ருஷிகள்” ஆஹாரமில்லாமலிருப்பதற்குக் காரணம்'' என்னும் அட்டவணையில் சொல்லியிருக்கின்றோம். அதை நீங்கள் வாசிப்பீர்களாகில் இதன் ரகஸியங்களையெல்லாம் அதில் கண்டறியலாம்.



## 16. சோகம் நிவாரணையடைய உபதேசித்தல்

ஏப்போ தாயினுங் கூற்றுவன் வருவான்
அப்போ தந்தக் கூற்றுவன் றன்னைப்
போற்றவும் போகான் பொருளொடும் போகான்
சாற்றவும் போகான் தமரொடும் போகான்
நல்லா ரெண்ணான் நல்குரவறியான்
தீயா ரெண்ணான் செல்வரென் றெண்ணான்
தரியா னொருகணம் தருக ணாளன்
உயிர் கொடு போவான் உடல்கொடு போகான்
ஏதுக்கழுவீர் ஏழை மாந்தர்காள்

*என்னும் கபிலர் வாக்கியரீதியாய்,*

*ஓ சகோதிரிகளே! ஓ சகோதரர்களே !! உங்கள் குடும்ப சம்ரக்ஷணையில் தெய்வ விதிப்படி யாவரேனும் மரண மடைந்தால், அவர்களுக்காக நீங்கள் வியசனப்பட வேண்டாம். அவர்கள் உங்களுடன் கூட வந்தவர்களுமல்லர் நீங்கள் மரணமடைந்தபிறகு உங்களுடன் கூட இனி வரப்பட்டவர் களுமல்லர், சந்தையின் கூட்டம் போல் மத்தியில் வந்து சில நாளிருந்து சென்று விடுகின்றார்கள். உங்கள் புத்திர பௌத்திர களத்திர மித்திராதிகளின் முன் பிறப்பு உங்களுக்குத் தெரியவரா மாட்டா. அவர்கள் பிறந்த பின்பு தான் நம்முடையவர்களென்று தோன்றி, ஆசை என்னும் பிரமையை உண்டாக்குகின்றார்கள். மறு படியும் அவர்கள் மரணமடைந்த பிறகு எப்படி ஆகின்றார்களோ அதுவிஷயம் உங்களுக்குத் தெரிய வராது, மத்தியில் சிலநாள் மாத்திரம் நம்முடையவர்களென்று பிரமையை உண்டாக்கும் புத்திரகளத்திராதிகளைக் குறித்து ஏன் நீங்கள் வியசனப்படவேண்டும்?*

எத்தாய ரெத்தந்தை யெச்சுற்றத்தா
ரெம்மாடு சும்மாடாமேவர் நல்லார்

செத்தால் வந்துதவுவா ரொருவரில்லைச்
சிறுவிகாற் றிமூட்டிச் செல்லாநிற்பர்

சித்தாய வேடத்தாய் நீடுபொன்னித்
திருவானைக் காவுடைய செல்வாவுன்றன்

அத்தாவுன் பொற்பாத மடையப்பெற்றா
லல்லகண்டங் கொண்டடியே னென்செய்கேனே.

என்னும் திருஞானசம்பந்தர் வாக்யரீதியாய்க் காணப்படும் பந்துக்களும், வஸ்த்துக்களும் நசித்துப் போவது நிச்சயம், இந்த பந்துக்களில் சிலர் உங்களுக்கு முன் பிறந்தவர்களும், சிலர் பிறந்தவர்களுமாயிருக்கின்றார்களல்லவா? உங்களுக்கு முன் பிறந்தவர்களுக்குப்பின் நீங்கள் பிறவாமலிருந்த போது அவர்களுக்கு நீங்கள் என்ன உறவாயிருந்தீர்கள்? நீங்களும் அவர்களும் பிறப்பதற்கு முன்னே எவ்விடத்தில் எப்படி இருந்தோ மென்று சொல்ல யாதொன்றும் உங்களுக்குந் தெரியவர மாட்டாதல்லவா? நல்லது. அவர்கள் இறந்த பிறகாயினும் எவ்விடத்தில் எப்படி இருக்கின்றார்களோ அது உங்களுக்குத் தெரியவருமா? அதுவும் தெரியவரமாட்டாதல்லவா? அவர்கள் பிறந்து ஜீவித்திருக்குங் காலம்வரையில் மாத்திரம் உங்களுக்குக் காணப்படுகின்றார்களே யன்றி, பிறப்பதற்குமுன்னும் இறந்த பின்னும் எவ்விடத்தில் எப்படியிருக்கின்றார்களோ என்பது உங்களுக்குத் தெரியவரமாட்டாதல்லவா? அப்படியிருக்க அவர்களுக்காக நீங்கள் வியசனப்படுவதேன். அப்படி வியசனப்படுவது அறியாதத் தன்மையினாலேயேயன்றி வேறல்ல. ஆத்மா, அநாத்மா விவேகமில்லாதவர்கள் வியசனப் படுவார்களேயன்றி, ஆத்மா, அநாத்ம விவேக முடையவர்கள் ஜீவித்திருக்கப்பட்டவர்களைக் குறிதேனும் அல்லது

இறந்தவர்களைக் குறித்தேனும் சந்தோஷமும் வியசனு படமாட்டார்கள். ஒரு தேகம் மரணமடைந்தால் அ தேகத்திலுள்ள ஆத்மாவும் மரணமடைகின்றதெ என்னுகிறீர்களோ என்ன? அப்படி எண்ண வேண்ட அதற்குக் காரணம் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

மரணமடைவதென்றால், சாஸ்வதமாகயிருக்கப்ப ஆத்மா, ஒரு தேகத்தினின்று மற்றொரு தேகத்தில் போ பிரவேசிப்பன, ஆத்மா, எந்த தேகத்தினின்று கிள விடுகிறதோ, அந்தத் தேகம் மாத்திரம் மரணமடைந்ததா கின் அதிலிருந்த ஆத்மா அத்தேகத்தை விட்டவுடன் மற்றெ தேகத்தில் போய்ப் பிரவேசிக்கும். அதில் சிலநாள் குடியிரு மறுபடியும் அந்தத் தேகத்தையும் விட்டு மற்றொரு தேகத் பிரவேகித்து இப்படியே எப்பொழுதும் ஆத்மா எதையோ தேகத்தை ஆசிரயித்துக்கொண்டேயிருக்கும். ஆதவ அசத்தாகிய தேகாதி சர்வ பிரபஞ்சமும் கானல் ஜலத்தை மு பார்த்தவுடன் அது நிஜமாகிய ஜலம்போல் தோன்றிப் பிறகு அ ஜலமல்லவென்று அறிந்த ஒருவன் மற்றொருவனை நம்பும்ப சொல்லியும் சமீபத்தில் அழைத்துச் சென்று காட்டியும் அவ கண்ட காணல் நீர் சம்சயத்தை எப்படி நசிக்கச் செய்கின்றானே அதுபோல் தேகாதி சர்வ பிரபஞ்சமும் நசிப்பது திண்ணம் அநே ஜன்மங்களாய்ச் செய்துவந்த புண்ணிய விசேஷத் தினா ஆத்மாவின் நிஜசொரூபம் தெரிந்த பிறகு ஜநந மரணங்களுக்கு காரணமாயிருக்கும் சஞ்சித மென்னும் மூட்டை நசிக்கும். இ சஞ்சிதமென்னும் மூட்டை நசித்தவுடன் ஜீவசொரூபியாயிருக்கு ஆத்மா பரமாத்மாவுடன் போய் ஐக்கியமாகுமேயன்றி, பஞ் பூதங்களால் உண்டாகிய தேகத்தைப்போல சொரூபம் நாசமாக பட்டதல்ல. அதாவது, பஞ்சபூதங்களினால் உண்டாகி தேகம்மாத்திரம் நாசமடையத் தக்க தென்றும், ஆத்ம நித்தியமாகிய வஸ்துவென்றும் அறிய வேண்டும்.

செடிமுளைந்த காட்டுக்குள்ளே சிதம்பரதேவன் வீட்டுக்குள்ளே
இருவரும் மூவருங் கூடிக்கொண்டு குடியிருந்து குடிப் போயினார்
குருநாதா வேதா வென்னுங்கடி அதுவாமடி யிதுவல்வடி
இது ஓமடி இது வொக்குமடி

*ஓ சகோதரர்களே? இந்த ஆத்மா பரப்பிரம்மத்தின் அம்சமேயன்றி வேறல்ல. அதுவே சகல ஜந்துக்களிலும் வியாபித்திருக்கின்றது. இந்த ஆத்மாவே சத்பதார்த்த மாயிருக்கின்றது. இதற்குத் திருஷ்டாந்தம். ஸ்ரீகிருஷ் ணார்ஜுந சம்வாதரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம் - 2, சுலோகம் 16.*

தாஸதோ வித்யதே பாவோ நா பாவோ வித்யதே ஸதஹ
உபயோரபி த்ருஷ்ட்டோந்த ஸத்வநயோ ஸ்தத்வ தர்ஸிபிஹி

*கிருஷ்ணன் : ஸத், என்றால் நித்தியமான (கெடாத) பதார்த்தம், அஸத், என்றால், அநித்தியமான (நசிக்கத்தக்க) பதார்த்தம். ஸத் பதார்த்தத்திற்கு அநித்தியமும் அஸத் பதார்த்தத்திற்கு நித்தியமும் எக்காலத்திலும் உண்டாகமாட்டா. இவ்விரண்டு பதார்த்தங்களின் ரகஸ்யம், தத்வ வேந்தர்கள் (ஞானிகள்) அறிவார்களே யன்றி மற்றவர்கள் அறியமாட்டார்கள்.*

*அர்ஜுனன்: ஸத் என்றால் எது? அஸத்! என்றால் எது?*

*கிருஷ்ணன் : என்னிடத்திலிருக்கும் பரமாத்மாவும், உன்னிடத்திலும் நம் எதிரிலிருக்கும் ராஜா களிடத்திலும் இன்னும் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள பிபீலிகாதி என்றால், கண்களுக்குக் காணப்படாத சிறிய புழு முதல் பிரமதேவர் பரியந்தம் சமஸ்த ஜந்துக்களிடத்திலும் இருக்கப்பட்ட ஜீவாத்மாவும் எந்தக் காலத்திலும் நசிக்கத்தக்கதல்ல. ஆதலால், இந்த பரமாத்மா ஜீவாத்மாக்கள் 'ஸத்' என்றும் மற்ற திருஸ்ய (கண்களுக்குக் காணப்படும்) பிரபஞ்ச மெல்லாம் நசிக்கப்படுவதால் 'அஸத்' என்றும் சொல்லப்படும்.*

அர்ஜுனன் : உம்மிடத்தில் இருப்பது பரமாத்மா வென்றும் நான் முதலான மற்ற ஜந்துக்களிடத்தில் இருப்பது ஜீவாத்மவென்றும் சொன்னீரல்லவா? அங்ஙனம் கூறுவதற்குக் காரணமென்ன? பரமாத்மா ஜீவாத்மாக்கள் வெவ்வேறு வஸ்துக்களா? அப்படியானால் அவ்விரண்டிற்கு முள்ள பேத மென்ன? நான் முதலான மற்ற ஜந்துக்களில் வியாபித்திருப்பது ஜீவாத்மா என்றீரல்லவா? அந்த ஜீவாத்மா வொன்றே சகல ஜந்துக்களிலும் வியாபித் திருக்கின்றதா? அல்லது அந்தந்த ஜந்துக்களின் வெவ்வேறு ஜீவாத்மாக்கள் வியாபித்திருக்கின்றதா? இந்த ஜீவாத்மாக் கள் மாத்திரம் எப்படி நாசமில்லாமலிருக்கும்.

கிருஷ்ணன் : பரமாத்மாவென்றால் சகல பிரபஞ்சங் களையும் சிருஷ்டிக்கப்பட்டதும், அழிக்கப்பட்டது மாகிய பரப்பிரம்மத்திற்குப் பெயர். ஜீவாத்மாவென்றால் அந்த பரப்பிரம்மத்தின் அம்சமேயன்றி வேறல்ல அந்த பரப்பிரம்மம் அந்த பிரமாத்மாவே ஜீவாத்மா என்னும் பெயருடன் அணுசொருபமாய்வந்து எல்லா ஜீவராசிகளிலும் வியாபித் திருக்கின்றது. இந்த ஜீவாத்மா மாயையுடன் சம்பந்தப் பட்டிருக்கின்றது. பரமாத்மாவானது அப்படிப்பட்ட மாயையுடன் சம்பந்தமில்லாமல் சுயம் பிரகாசமாயிருக்கும். அதனாலேயே அது பரமாத்மாவென்று சொல்லப்படும். அந்த பரமாத்மா, பிறப்பு இறப்பு உயர்வு தாழ்வு முதலான எவ்வித விகாரங்களுமில்லாமல் எப்பொழுதும் ஒரே விதமாயிருக்கும். அப்படிப்பட்ட பரமாத்மாவே உன்னிடத்திலும் மற்றவர்களிடத்திலும், ஆத்மா யென்னும் பெயருடன் நிவசித்துக் கொண்டிருக் கின்றது. இந்த ஆத்மா மாயையுடன் கூடியிருக்கும் வரையில் பிறப்பு இறப்பு அதாவது ஒரு தேகத்தைவிட்டு மற்றொரு தேகத்தில் போய்ப் பிரவேசிப்பது முதலாகிய விகாரங்களை அடையும். இந்த ஜீவாத்மாவிற்கு எப்பொழுது மாயைவிட்டு ஒழிகின்றதோ அப்பொழுதே அது பரமாத்மாவில் கலக்கும், அப்படிக் கலந்த

பிறகு அதற்கு ஜனனமரணாதி விகாரங்கள் உண்டாகமாட்டா. பரமாத்மாவில் ஜீவாத்மா சேருவதே மோக்ஷம் என்று சொல்லப்படும். இதற்குத் திருஷ்டாந்தம் சொல்லுகிறேன் கேளு.

இவ்வுலகத்தில் சுயமாகயிருக்கப்பட்ட சொர்ணத்திற்குத் தங்கம் அல்லது அபஞ்சியென்றும், செம்பினால் கலக்கப்பட்ட தங்கத்திற்குப் பொன்னென்றும் சொல்லுகிறார்களல்லவா அப்படிச் சொல்லுவதற்குக் காரணமும் அவற்றின் பேதத்தையும் நீ அறிவாயா?

அர்ஜுனன் : ஆம் அறிவேன். தங்கம் சுயமானது. அதாவது வேறு எந்த லோகங்களுடனும் கலக்காமலிருப்பது. அதனை எத்தனை விசை உருக்கினாலும் அல்லது புடம் வைத்தாலும் அது, மாற்றிலா அல்லது எடையிலாவது குறைவதும் உயர்வதும் இல்லை. பொன்னைபுடம் வைத்தால் அதன் மாற்று உயர்ந்து, எடை குறைந்து கொண்டே வரும். அப்படியே புடம் போடப்போட அதிலிருக்கும் அழுக்குகளெல்லாம் ஒழிந்து அதுவும் சுயமான தங்கமாகும். அதன் பிறகு அதை எத்தனைப் புடங்களிட்டாலும் அது மாற்றும் எடையும் குறையாமலும் உயராமலும் தங்கமாகவேயிருக்கும்.

கிருஷ்ணன் : ஜீவாத்மா, பரமாத்மாக்களுக்கும் உள்ள பேதங்களும் இதுபோன்றுதேயென்று அறிக. ஜீவாத்மா பொன்னைப் போன்றதும், பரமாத்மா தங்கத்தைப் போன்றதுமாகும் தங்கத்தை எத்தனைப் புடங்களிட்டாலும் அது மாற்றிலாயினும் அல்லது எடையிலாயினும் எப்படி மாறுவதில்லையோ அதுபோல் பரமாத்மா எப்பொழுதும் எந்த விகாரங்களையும் அடையாமல் ஒரே விதமாயிருக்கும், பொன்னானது புடங்களால் எடை குறைந்துகொண்டும் மாற்று உயர்ந்து கொண்டும்வர அதிலிருக்கும் அழுக்கு களெல்லாம் நீங்கிச் சுயமான நிறமாய் அந்தப்பொன்னும் எப்படி தங்கம்

போலாகின்றதோ அதுபோல் ஜீவாத்மாவும் அநேக ஜன்மங்களாய்ச் செய்து வந்த நிஷ்க்காம்ய பலத்தினால் அஞ்ஞானம் நீங்கிக்கொண்டே வரவர, கடைசியில் அஞ்ஞானம் பூர்த்தியாய் நீங்கினபிறகு பரமாத்மாவில் கலக்கின்றது, இதற்கும் பின்வரும் விஷயங்களையெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத் கீதையில் விரிவாய்க் காணலாம், ஆதலால், உங்கள் குடும்பத்தில் இறந்தவர்களைக் குறித்து வியசனம் உண்டான போதெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந ஸம்வாத, ஸ்ரீ பகவத் கீதை அத்தியாயம் 2 சுலோகம் 11 முதல் 30 வரையில் வாசித்தால் அப்பொழுது உங்கள் சோகம் தீர்ந்து மனம் சாந்தியடையும். ஆதலால்,

"கட்டோடே கனத்தோடே வாழ்கின்றே னென்பீர்
கண்ணோடே கருத்தோடே கருத்தனைக் கருதீர்
பட்டோடே பணிவோடே திரிகின்றீர்
தெருவில் பசியோட வந்தாரை பார்க்கவேநேரீர்
கொட்டோடே முழக்கோடே கோலங் காண்கின்றீர்
குறியோடே குணத்தோடே குறிப்பதைக் குறியீர்
எட்டுடன் ரெண்டும் சேர்ந்தெண்ணவும் அறியீர்
எத்தொழிலை புரிகின்றீர் பித்துல கீரே"

என்னும் திருவருட் பிரகாச வள்ளலார் வாக்கிய ரீதியாய் உலகத்திலுள்ள ஜனங்களாகிய நீங்களெல்லோரும். பந்து மித்திர களத்திரங்களென்னும் கூட்டத்துடன் சேர்ந்து பெருங் கௌரவத்துடன் வாழ்கின்றோமென்று நினைக்கின்றீர்கள். ஸ்திரீகளே! பட்டுபீதாம்பர ஆடைகளையும் வைரத் தினால் செய்த உயர்ந்த ஆபரணங்களையும் அணிய வேண்டு மென்னும் கருத்துடனிருக்கின்றீர்கள். இதுபோல் புருஷர் களாகிய நீங்களும் பட்டுப் பீதாம்பரங்கள் சரிகை வேஷ்டி முதலான் ஆடைகளும் ருத்திராக்ஷங்களுக்குத் தங்கக் கவசங்களும் அணிந்து, உங்கள்

குடும்ப சவரக்ஷிணைக்கு வேண்டிய கவசங்களை மாத்திரம் செய்து கொண்டு, பசியுடன் வந்தவர்களை ஆதரிக்காமல் அநேக விதங்களான மேள வாத்தியங்களுடன் மிகவும் சந்தோஷமாய் ஊர்க் கோலம் வருகின்றீர்கள். இப்படிப் பட்ட அல்ப விஷயங் களால் சந்தோஷத்தை அடைந்து, உங்களுக்கு முக்கியமான குறி எதுவோ அதைப்பார்க்கமாட்டீர்கள்.

எட்டுமிரண்டுமென்று சொல்லும் 'அ' 'கார' 'உ' காரமென்னும் ரேசக பூரங்களை என்றால், மூக்கை உள்ளுக் கிழுப்பதையும், வெளியில் விடுவதையும் அறியாமல் எத் தொழிலைச் செய்தாலும் என்ன பிரயோஜனம் அடையப் போகின்றீர்கள். தனக்குள் அந்தர்யாமியாவும் சாக்ஷி சொரூபனாயும் இருக்கும் பரமாத்மா சொரூபத்தை அறிய எல்லோருக்கும் ஞானக்கண் என்பதை ஈஸ்வரன் கொடுத் திருந்தும், பூர்வ வினைப்பயனால் அதை அறிய மறந்திருக் கின்றீர்கள். அம்மறதியை நீக்க இந்த "**ஜீவப் பிரம்மைக்கய வேதாந்த ரஹஸ்யமே**" மிகவும் முக்கியமான தென்று தெரிந்து கொள்ளுங்கள். இந்நூலை வாசித்து இதில் சொல்லியிருக்கும் உபதேசத்தைக் கைப்பெற்று சாதனம் செய்து வரபட்டவர்களுக்கு யமபாதை நீங்கும்.

(<u>வினைப்பயன்</u> : அனேக ஜன்மங்களாய்ச் செய்துவந்த சஞ்சீதமென்னும் மூட்டையே. வினைப்பயன் என்று சொல்லப்படும்)

## 17. மனோலயத்தால் சகலமும் சித்தியடைதல்

நாம் ஒவ்வொருவரும் அநேக ஜன்மங்களாய் அநுபவித்து வருகிற ஜநந மரணமென்னும் துக்கம் சமுத்திரத்திலிருந்து விடுபட்டு, நித்தியானந்த சுகத்தையடைய விரும்புகின்றோமன்றே? அதற்கென்ன செய்ய வேண்டுமோ அதை இதனடியில் இனி சொல்லப் போகின்றோம் கேளுங்கள்.

ஒரு கன்னிகை, பருவமடைந்து விவாகம் முடிந்து பின்பு தனது குடும்பத்திலுள்ள சகல காரியங்களையும் கவனித்து வருவதுடன், மாமன் மாமி மூத்தோர் மைத்துனர் முதலானவர்களிடத்திலும் அன்பாய் இருந்து அவர்களை உபசரித்து வருகின்றாள். அங்ஙனம் உபசரித்து வந்த போதிலும், தனது பிராணநாதனிடத்தில் மாத்திரம் அதிக விசுவாசத்தைப் பாராட்டி மிகவும் அன்பாய் இருப்பாள். அன்றியும், அப்புனிதவதிக்குப் புத்திரபாக்கியம் கிடைத்தவுடன், அவள் முன்போல் குடும்பத்தில் அதிக கவலையின்றி இரவும் பகலும் தனக்கு அரிதாய்க் கிடைத்த செல்வக் குழந்தையைச் சீராட்டி அன்பார்ந்தமுதூட்டித் தாலாட்டி வளர்த்து ஆனந்தமடை வாளன்றோ. அதுபோல் நாம், அநேக ஜன்மங்களாய்ச் செய்துவந்த புண்ணிய விசேஷத் தினால் பரிபக்குவமடைந்து நல்லுணர்வுதித்து நமது நிலையில்லா தேகத்தையும், அதன் சம்பந்தமாயுள்ள பெண்டு பிள்ளை பண்டு பதார்த்த மாயுள்ள போகத்தையும், நேற்றைக் கிருந்தார் இன்றைக்குக் காணோம் என்கிறபடி நீரிற் குமிழியைப் போன்ற நிலையில்லா வாழ்க்கையையும் கவனித்து, அந்தோ! இந்நாள் வரையில் என்ன செய்தோம்! நமது வாழ் நாளெல்லாம் திரவ்யம் சம்பாதிப்பதில் வீழ்நாளாய் விட்டதேயென்று மரணத்திற்குப் பயந்து ஸாது சங்கத்திற் பயின்று நல்வழியாய்க் கடந்து சற்குருவின் திருவடியை ஆசிரயித்து அவரால் உபதேசிக்கப்

பெற்றுள்ள அந்நிலை வழுவாமல் தியானித்து வரவேண்டும், எப்படியெனில், நாம் தேவாலயத்திற்குள் பிரவேசிக்கும் பொழுது, முதலில் 'பலிபிட' மிருக்கின்றது.

"துள்ளுமறியா மனது பலிகொடுத்தேன், கன்ம துஷ்ட்ட தேவதைகளில்லை என்று தாயுமானவர் சொல்லி யிருப்பதுபோல் நம்மனதிற் குடிகொண்டுள்ள காமக் குரோதாதி துஷ்ட்ட குணங்களையும், அஹங்கார மமகாராதி சகல துஷ்ட்ட மிருகங்களையும் அந்த பலி பீடத்தினிடம் பலிகொடுத்து, அதன்பிறகு பரிசுத்த மனத்துடன் சந்நிதானத்தினுட் புகுந்து, மூலஸ்தானத்திலுள்ள லிங்கத்தை தரிசனம் செய்யச் செல்லும்போது, லிங்கத்திற்கெதிரில் உட்கார்ந்திருக்கும் நந்தியைக் குறுக்கிட்டுச் செல்லாமல். நந்திக்கு வலது, அல்லது





இடது புறமாய் மூலஸ்த்தானத்திற்குள் சென்று, அந்த மூல விக்கிரகத்தை நன்றாய்த் திருஷ்ட்டித்துப் பார்த்து, அந்த உருவத்தைப் புருவ மத்தியில் நிறுத்தி, கண்களைமூடி உள்முகமாகவே மனக்கண்ணால் பார்த்து ஒரே தியான மாய்ச் சிலநேரம் தியானித்துப் பிறகு விபூதிபிரசாதம் பெற்று, வெளிவரும் பொழுது முன் நந்தியைக் குறுக் கிடாமல் எவ்வாறு சென்றார்களோ அவ்வாறே வெளிவர வேண்டும். நந்தியைக் குறுக்கிட்டு வரலாகாது ஏனென்றால் நந்தி ஈஸ்வரருக்கு நேராயிருந்து தம்மூச்சியினால் அவருக்கு விசுறுகின்றார். அதனால்

நந்திக்கும் ஈஸ்வரருக்கும் மத்தியில் போகலாகாது. மத்தியில் போனால் விசுறுவதற்குத் தடையாகும். ஈஸ்வரன் மஹாயோகி யாதலால், எப்பொழுதும் யோகாக்நி ஜுவாலையாகவே இருப்பார், அவருக்கு சதா 'அபிஷேகமே பிரீதியாதலால், ஈஸ்வரருக்கு அபிஷேகப் பிரியஹ' என்று சொல்லப்படும். இதற்குத் திருஷ்ட்டாந்தம் பூநா, பம்பாய், காசி முதலான இடங்களில் ஈஸவரர் ஆலயங்களிலுள்ள லிங்கங்களின் சிரசின் மத்தியில், தென்னம் ஈர்க்கு அவ்வளவு கனத்தில் நீர்த்தாரை சதாகாலமும் வீழ்ந்து கொண்டிருப்பதற்காக வாழைப் பூவைப் போன்ற, ஒரு குடம் ஜலம் பிடிக்கும்படியான செம்புப் பாத்திரம் செய்து அதை லிங்கத்திற்குமேல் உயரத் தூக்கிக் கட்டி அதில் ஜலம் கொட்டுவார்கள். பிறகு, செப்புக்குடம் நுனியிலிருக்கும் துவாரத்திலிருந்து இரவும் பகலுமாய் ஜலம் லிங்கத்தின்





சிரசின்மேல் எப்பொழுதும் வீழ்ந்து கொண்டே இருக்கும். இந்தப் பாத்திரத்திற்குத் தாராபாத்திரமென்று சொல்லுவார்கள். நீர்த்தாரை, ஈஸ்வரர் சிரசின்மீது எப்பொழுதும் வீழ்ந்து கொண்டிருந்தால், உஷ்ணம் சாந்தமாகும் என்று காட்டுவதற்காக பூர்வீக பெரியோர்கள் லிங்கத்தின் சிரசில் சதாகாலமும் ஜலம் வீழ்ந்து கொண்டிருக்கும் படியாய் தாராபாத்திரத்தைச் செய்து லிங்கத்தின் சிரசின்மேல் தொங்கக் கட்டியிருக்கின்றார்கள். இதை நீங்கள், பூநா, பம்பாய், காசி, முதலான இடங்களிலுள்ள சிவாலயங்களில் பார்க்கலாம். இது விஷயங்களையெல்லாம்

**'சரீர தேவாலய ரஹஸ்யார்த் பாரிஜத'** நூலில் விசேஷமாய் எழுதியிருக்கின்றார். ஆதலால், அந்நூலை வரவழைத்து அதன் மூலமாய் எல்லா ரகஸ்யங்களும் தெரிந்து கொள்ளலாம். யோகாப்பியாசம் செய்துவரப் பட்டவர்களுக்கு விசேஷ உஷ்ண முண்டாகும். அவ் வுஷ்ணத்தைத் தணிக்க ஸ்நானம் செய்ய, சாந்தியும் யோகபியாச நூலில் சொல்லியிருக்கின்றோம். அதில் சொல்லியதுபோல் செய்துவர வேண்டும். உஷ்ணத்திற்கு உஷ்ணமே கொடுத் தால் அந்த உஷ்ணம் சாந்தியாகும். குளிர்ந்த ஜலத்தின் குணம் என்னவென்றால், உஷ்ணத்தையுண்டாக்கும். ஆதலால், ஈஸ்வரருக்கு குளிர்ந்த நிலத்தினால் விசேஷமாய் அபிஷேகம் செய்து வருகின்றார்கள். குளிர்ந்த ஜலத்தினால் ஈஸ்வரனுக்கு அபிஷேகம் செய்துவந்தால் அவரது யோகாக்நி ஜுவாலை குளிர்ந்து விடுமென்று எண்ணி குளிர்ந்த ஜலத்தினால் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்கின்றார்கள். ஆதலால், யோகாப்பியாசம் செய்யப்பட்டவர்களும் விசேஷ அக்நி ஜுவாலையுடன் இருப்பார்கள். அதனால் யோகிகளும் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானஞ் செய்துவர வேண்டும். இதற்குக் கைவல்யம் பிரமானமென்ன வென்றால்,

இம்பரினஞ்ரை தஞ்சாமலிரும்பினை
யிரும்பா லெய்யும்
அம்பினையம்பாற் பற்றுமழுக்கினை
யழுக்கான் மாய்ப்பர்
வம்பியன் மாயை தன்னை மாயையான்
மாய்ப்பது போல்

என்றிருப்பதனால், உஷ்ணத்திற்கு உஷ்ணமே சேர்த்தால் குளிர்ச்சித்தரும், வெந்நீர் குணம் குளிர்ச்சி குளிந்த ஜலம் குணம் உஷ்ணம், ஆதலால், யோகி யானவன் எப்பொழுதும் குளிர்ந்த ஜலத்திலேயே ஸ்தானஞ் செய்துவர வேண்டும்.

இப்படிப்பட்ட யோகியை தேங்காயின்மீது பிடித்துக் கொண்டிருக்கும் மட்டையைப்போல் பிடித்துக் கொண்டிருந்த

சகல பந்தபாசங்களென்னும் பிடிப்புகள்யாவும் தனக்குத் தானாகவே அவர்கள் செய்து வரும் யோகத்தினால், அந்த யோகியைவிட்டு நீங்கும். ஆதலால் இதுவரையில் முன் சொல்லிய குடும்பத்திலுள்ள ஸ்திரீயைப் போல், ஈஸ்வரன் மீது அதிகப் பிரீதியைப் பாராட்டி அன்பே வடிவாயிருந்து ஈஸ்வரனைத் தியானித்து வரவேண்டும், அங்ஙனம் தைல தாரையைப்போல் இடை விடாமல் ஈஸ்வரனை தியானித்துக் கொண்டு வருகின்ற காலத்தில் அவ்வுபாசனா மூர்த்தியின் திருவருளால் ஆனந்தமே வடிவமாகிய ஞானம் உதயமாகின்றது. அங்ஙனம் கிடைப்பதற்கரிதாகிய ஞானம் உதயமானவுடன் அதாவது, பல்லாயிரங்கோடி அண்டங்களிலும் பரிபூரணமாய் சுயம் பிரகாசமாயுள்ள சுத்த சைதன்ய பரமாத்மாவாகிய ஆத்ம சொரூபத்தைத் தரிசித்தவுடன் ஆயிரமாயிரமாகக் கூடியுள்ள காகத்தின் பெருங்கூட்டத்தில் ஒரு கல்லெறித்த மாத்திரத்தில் அக்காகங்களனைத்தும் அந்த க்ஷணமே ஓடி எப்படி காணாமல் மறைந்து விடுமோ அதுபோல், அனேக ஜன்மங்களாய் நம்மைப் பற்றியுள்ள அளவில்லாத பாவகர்ம கூட்டங்கள்யாவும் அஞ்ஞான மென்னும் இருளைக் கடந்து ஒருங்கே தொலைந்து விடுகின்றன. இதற்குத் தாயுமானவர் பிரமாணம் என்ன வென்றால்,

"காகமானவை கோடிகூடி நின்றாலு மொரு
கல்லின்முன் னெதிற்நிற்குமோ
கன்மமான வைகோடி முன்னே செய்தாலு நின்
கருணைப்பிரவாக வருளைத்
தர்கமாய் நாடினரை வாதிக்க வல்லவோ
தமியனேற்கருட்டாகமோ"

இவ்வித அப்பியாசத்திலுள்ள பெரியோர்கள், சகல ஜீவகோடிகளிடத்திலும் அன்பே வடிவாயிருப்பார்கள். ஏழை, தனவான், நல்லவன், தீயவன், புண்ணியவான், பாவி, குலத்திலுயர்ந்தவன், தாழ்ந்தவன், வித்வான், மூடன் என்கிற எவ்வித பேதம் அவர்களிடத்தில் இல்லாமல் எல்லோரிடத் திலும் சமரசபாவனையுடையவராய்ச் சாந்தமும் கருணையுந்ததும்பப் பெற்று ஈஸ்வரனுக் கொப்பாவார்கள்.

க்ஷீயந்தே ஸாஸ்ய கர்மாணி தஸ்மின கிருஷ்ட்டே பராவரே
(முண்டகோபநிஷத்)

இதற்குத் திருமந்திரமும், ஸ்ரீபகவத்கீதை அத்யாயம் 13 சுலோகம் 29-பிரமாண மென்னவென்றால்,

அன்பு சிவமிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவதாரு மறிகிலார்
அன்பே சிவமாவதாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருப்பாரே.

அ13 || ஸமம் பஸ்யந் பஸ்யந் ஹி ஸர்வத்ர ஸஹாவஸ்தித மிஸ்வரம்
நஹிநஸ்த்யாத்மாநாத்மாநம் ததோ யாதி பராங்கதிம் சு29

என்றிருக்கின்றது. அதாவது ஸமஸ்த ஜீவகோடிகளிடத்திலும் சமமாய் நிறைந்துள்ள ஆத்ம சொரூபத்தைத் தனது ஆத்ம சொரூபமாய் அறிந்தவன் எவனோ அவன் எந்த ஜீவனையும் இம்சிக்கமாட்டான். அப்படிப்பட்டவனே எனது நிஜ சொரூபத்தையடைவான் என்பதேயாம். இதற்கு உபதேச காண்டம் பிரமாணம்.

உரைக்குமற் றுணர்வுக்கு மறிய வொண்கிலாப்
பரப்பிர மத்தினிற் றோன்றிப் பல்லுயிர்க்
கிரக்கமுற் றளித்திடவெய்து மிகப்பொரு
ளிரப்புறு முயிர்த்தொகை நிறைந்து நிற்குமால்.

ஆகவே, நாம் ஒவ்வொருவரும் ஜநந மரண துக்கத்திலிருந்து விடுபட்டு நற்கதியடைய வேண்டுமாயின், நாம் பரிசுத்த மனமுடையவர்களாயிருந்து சகல ஜீவகோடிகளையும் சமரசமாய் நினைத்து உள்ளன்புடன் கடவுளைத் தியானிக்க வேண்டும். அங்ஙனம் நிறைந்த மனதுடன் அப்பியசித்துக் கொண்டு வருவோமாயின் அக்கடவுளின் திருவருளால் வாக்குசுத்தியும் ஞானசக்தியும் எல்லாக்காரியசித்தியும் உண்டாகும்.

முகம்மதிய மதஸ்தர்கள் பரிசுத்தமான (வெண்மை யான) ஆடைகளை அணிந்து தங்கள் தேவாலயமாகிய மஜீதிநுட் புகுந்து கைகள் கால்கள் முகம் வாய் மூக்குத் துவாரம் காதுகள் முதலானவைகளைக் கழுவி சுத்தி செய்து எவ்வகை வீணான எண்ணங்களுமில்லாமல் பரிசுத்தமான மனதுடன் 'நிமாஸ்' என்னும் நிஷ்ட்டை செய்து முடித்து அவர்கள் வெளி வரும்பொழுது, அம்மஜீதின் வாசற்படி இரு பக்கங்களிலும் வரிசை வரிசையாக வைத்துக் கொண்டிருக்கும் தோஷந் தாங்கிய குழந்தைகளின் முகத்தில் நமாஸ் செய்து வரப்பட்டவர்கள் ஊதுகின்றனர். அதனால் சகல தோஷங்களும் நிவர்த்தியாகின்றது யென்பது உலகமறிந்த விஷயமன்றோ? இவர்கள் சிசுக்களின் முகத்தில் ஊதுவதனால் சகல தோஷங்களும் நீங்குவதற்க் காரணம் இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

முகம்மது மதஸ்தர்கள் விக்கிரக ஆராதனையைச் செய்வதில்லை. இவர்கள் வெட்டவெளியாயிருக்கும் பரப் பிரம்மத்தைத் துதி செய்யப்பட்டவர்கள்.

முகம்மதியர்கள் 'மஜீதிநுட்' புகுந்து அவ்விடமிருக்கும் குளத்தில் கைகள், கால்கள், முகம் முதலானவை களை மிகவும் பரிசுத்தமாய் அலம்பி நமாஸ் செய்யும்மிடம் சென்று அவர்கள் மூன்றாம் பிறையை குறி பார்ப்பதனால், மூன்றாம்பிறைக் காணப்படுவது மேற்குதிசை. ஆதலால் அவர்கள் மசூதிக்குள் மேற்குப்புறமாய்த் திரும்பி இரண்டு காதுக்குள் கை வைத்துக் கண்களைமூடி,

*லா-- -- ஆ, இலா---- ஹா, இல்லல்---- ----லா,*
*மஹம் மது ரசூலில்---- ---லா.*

என்று விசேஷ நீளமாய் ஆ ஆ ஆ ஆ ஆ வென்று தீர்க்கமாய்ச் சொல்லிக்கொண்டேவந்து கடைசியில் மனதை வெட்ட வெளியாகிய பரமாத்ம சொருபத்தில் ஐக்கியம் செய்து

பரமாத்மாவைப் போல் வெட்ட வெளியாய் விடுவார்கள். இவ்வாறு வெட்ட வெளியாயிருக்கும் பரப்பிரம்மத்தில் மனதை லயப்படுத்திப் பிறகு மிகவும் பரிசுத்தமான மனதுடன் வெளிவந்து தோஷம் தாங்கிய குழந்தைகளின் முகத்தில் நமாஸ் செய்து வந்தவர்கள் ஊதுவதனால், அவர்களின் வாயிலிருந்து வரும் பரிசுத்த மான காற்று குழந்தைகளின் முகத்தில் பட்டவுடன் சகல தோஷங்கள் தீர்ந்து விடுகின்றன. நிமாஸ் செய்தவர்கள் குழந்தைகளின் முகத்தில் ஊதி வெளிவந்தவுடன் அவர்களின் மனமானது ஊர் விவகாரங்களில் ஓடிக்கெட்டலைந்து கொண்டிருக்கும். அந்தச் சமயங்களில் குழந்தைகளின் முகத்தில் அவர்கள் ஊதினால் தோஷம் நிவாரணையாக மாட்டா.

இதனால் என்ன விளங்குகின்றதென்றால், அரைமணி நேரம் பரிசுத்த மனதுடன் ஜபத்திலிருந்தவர்கட்கே இத்த கைய சக்தியுண்டாகின்றதென்றால், சதாகாலமும் ஜபத்தி லிருக்கும் பெரியோர்களிடத்தே அபாரமான சக்தி பிரகாசித்துக் கொண்டிருக்குமென்பதற்கு ஐயமுண்டோ? இவ்வப் பியாசம் பூர்வ சஞ்சிதகர்மங்கள் ஒழிந்தவர்களுக்கே எளிதில் வசமாகும் அக்கர்மங்கள் சஞ்சிதம் பிராரப்தம் ஆகாம்யம் என மூன்று வகையாகும்.

இளையபல பிறவிகளி னிறந்துபிறந் தாளா
விருவினைகள் புந்தருந்து மிதுசகல மகலா
முனமருவு மிருபயனு மொருகாலத் தகுந்த
முந்துநுக ருந்து பயனந்தமுற வந்த
வினையுமெதிர் வினையிமுடி வினையுதவு பயனா
னேராக நேராதன் மேவுங் கானமுற்
சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருத்தியசத் திநிபாதந் திகழு மன்றே.

*1. சஞ்சிதம். பிரமதேவன் ஜீவகோடிகளைச் சிருஷ்டி செய்த நாள்முதல் நாளதுவரையில் ஜனங்கள் அநேக கோடானகோடி ஜன்மங்களை ஒவ்வொரு ஜன்மத்திலும் செய்துவந்த புண்ணிய பாவங்களெல்லாம் மூட்டை மூட்டைகளாகச் சிறுகச்சிறுக பருவதம்போல் சேர்த்துவந்த கர்மங்களே சஞ்சிதமென்று சொல்லப்படும் இந்த சஞ்சிதமென்னும் நல்வினை தீவினைப்பயனால் பிராரப்த கர்மம் வந்து துக்கமனுபவிக்கும்பொழுது கடவுளைத் தூஷிக்கின்றார்கள்.*

இந்தச்சீவனால் வருமறுபகை
யெலாமிவன் செயலென்னாமல்
அந்தத் தேவனால் வருமென்ற
மூடர்களதோ கதியடைவார்கள்
இந்தச் சீவனால் வருமறுபகை
யெலாமிவன் செயலல்லாமல்
அந்தத் தேவனா லன்றெனும்
விவேகிக் ளமலவீடடைவாரே.

*இந்த பிராரப்த கர்மத்தை விவரித்துச் சொல்லு கிறோம் கேளுங்கள் :—*

*2. பிராரப்தம்:--மேற்சொல்லிய சஞ்சிதத்திலிருந்து அவனவன் செய்த கர்மானுச்சரமாய்ப் புண்ணிய பாவங்களைப் பங்கிட்டுக் கொண்டுவந்து இந்த ஜன்மத்தில் அனுபவித்துக் கொண்டிருப்பது பிராரப் தமாகும். இந்த பிராரப்த கர்மங்களை விவரித்துச் சொல்லுகிறோம் கேளுங்கள்.*

*ஒருவன் அனேக ஜன்மங்களாய்ச் செய்துவந்த புண்ணிய பாவகர்மத்தில் 100 மூட்டை புண்ணியமும், 5-மூட்டை பாவமும் இருப்பதாய் நினைத்து கொள்ளுங்கள். அவனுக்குப்*

பிரம்மதேவன் 80. வயது, ஆயுள் ஏற்படுத்தி ஜன்மத்தை உண்டாக்கினதாய் எண்ணுங்கள்., இவன் புண்ணியம் விசேஷமாய்ச் செய்திருப்பதனால் இந்த 80- வருஷத்திற்குத் தக்கபடி, அனுபவிப்பதற்காக 10-மூட்டை புண்ணியமும், பாவம் குறைவாகச் செய்திருப்பதனால் பாவத்தில் அரை மூட்டையும் பங்கிட்டு அனுப்பி மிகுதியாகிய 90 மூட்டை புண்ணிய கர்மமும், நாலரை மூட்டை பாவ கர்மமும் இருப்பில் இருப்பதாய் எண்ணவேண்டும். இவன் புண்ணியம் அதிகமாகக் கொண்டு வந்ததனாதலால், ராஜன் வீட்டிலாகிலும், அல்லது பெருத்த செல்வமுடையவர்களின் வீட்டிலாகிலும், பிறந்து இம்மைச் சுகத்தை அதிகமாயும், துக்கம் சொற்பமாயும் அனுபவித்துக் கொண்டு வருவான். இந்த துக்கம் எப்படிப்பட்ட தென்றால், சந்தானமில்லாமற் போயிற்றே என்றாகிலும், அல்லது ஒருவேளை சந்தானமிருத்தால் நன்மார்க்கனாய் வந்து பிறந்தானே என்றாகிலும், மனையாள் தன் இஷ்டம் போல் நடக்கவில்லையே என்றாகிலும், தனத்தைக் கள்ளர்கள் கொண்டு போகா வண்ணம் காப்பாற்றுவதி லாயினும் இப்படியே எதுவோ ஓர் வியசனம் உண்டாக்கி கொண்டே இருக்கும்.

மற்றொருவனுக்கு, 100 மூட்டை பாவமும், 5 மூட்டைப் புண்ணியமும் இருப்பதாய் நினைத்துக் கொள்ளுங்கள். இவனுக்கு 80 வருஷங்கள் ஆயுள் பாகம் உண்டென்று வைத்துக்கொள்ளுங்கள். இவன் பாவம் அதிகமாய்ச் செய்திருப்பதனால் பாவத்தில் 10 மூட்டையும் புண்ணியம் அற்பமாய்ச் செய்திருப்பதனால் புண்ணியத்தில் அரை மூட்டையும் அனுபவிக்கும்படியாய்ச் செய்து அனுப்பப் பட்டான். அதனால் இவன் கூலிவேலை செய்யப்பட்டவர் களின் வீட்டிலாகிலும், அல்லது பிக்ஷை எடுக்கப்பட்டவர் களின் வீட்டிலாகிலும் ஜன்மித்து எப்பொழுதும் கஷ்ட தசையை

அனுபவிப்பா னென்று அறியவேண்டும். இவனுக்கு நித்திரை வேளைத் தவிர மற்றக் காலங்களி னெல்லாம் துக்கமே அதிகமாயிருக்கும் 80 வருஷத்திற்கு அரை மூட்டை புண்ணியம் இருப்பதால் எப்போதாகிலும் ஒவ்வொரு சமயங்களில் அற்ப சந்தோஷத்தை இவனுக்கு உண்டாக்கும் என்று அறிய வேண்டும். இதுபோல் ஒவ்வொருவருடைய புண்ணிய பாவங்களுக்குத் தகுந்த சரீரம் மாறி மாறி வந்து கொண்டே இருக்கும்.

அதாவது, அவரவர்களின் புண்ணிய பாவங்களுக்கு தக்கபடி உயர்வு தாழ்வான என்றால், செல்வந்தர்களாயும், மிகவும் ஏழைகளாயும், அல்லது பிக்ஷை எடுக்கப்பட்டவர் களாயும் வந்து பிறக்கிறார்கள். இவ்வாறாய்ப் பிறந்த மானவ ஜனங்களெல்லோரும், சென்ற காலம் நிகழ்காலம் வருங் காலம் என்கிற இம்மூன்று காலங்களையும், அதாவது தம் தம் மூன்று ஜன்மங்களையும் நாம் மிகவும் சுலபமாய்த் தெரிந்து கொள்ளலாம். தன் மூன்று ஜன்மங்களையும் தெரிந்து கொள்ளும் விஷயம் இதனடியில் சொல்லு கின்றோம். ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களும் குழந்தையாயிருந்து முதல் பன்னிரண்டு வருஷங்கள் வரையில் தான் செய்துவந்த புண்ணிய பாவங்களெல்லாம் மேற்சொல்லிய ஸஞ்சிதமென்னும் புண்ணிய பாவங்களின் மூட்டையில் போய்ச் சேரமாட்டா. பதின்மூன்றாவது வருஷம் முதல், அவர்கள் மரணமடையும் வரையில் செய்துவரும் புண்ணிய பாவங்களெல்லாம், மேற்சொன்ன ஸஞ்சிதமென்னும் மூட்டையில் போய்ச் சேரும். ஆதலால், தன் மூன்று ஜன்மங்களையும் தெரிந்து கொள்ள ஒருவன் யோசிக்கிறான். அதைச் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

## 18. புண்ணியம் செய்தவன் மூன்று ஜன்மங்களையறிதல்

ஒருவன் தான் செய்ததையெல்லாம் ஆலோசிக் கின்றான். குழந்தையாய்ப் பிறந்தது முதல் பன்னிரண்டு வருஷங்கள் வரையில் செய்துவரும் புண்ணிய பாவங் களெல்லாம் அவர்களைப் பற்றாதென்றும், பதின்மூன்றாவது வருஷம் முதல் செய்துவரும் புண்ணிய பாவங்களெல்லாம் அவர்களைப் பற்றுமென்றும் பெரியோர்கள், சொல்லியிருப்பதை நான் கேள்விப்பட்டிருக்கின்றேன், ஆதலால்,

நான் முன் ஜன்மத்தில் எப்படியிருந்தேன். இந்த ஜன்மத்தில் எப்படியிருக்கின்றேன். இனி வரப்போகும் ஜன்மத்தில் எப்படிப்பட்டவனாய்ப் போய்ப் பிறப்பேனோ என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஓர் எண்ணம் எனக்குதித்தது.

நான் முன்ஜன்மத்தில் பாவம் செய்யாமல் ஏதோ சொல்ப புண்ணியம் செய்திருக்கிறேன், அந்த புண்ணிய விசேஷத்தில் இந்த ஜன்மத்தில் சொல்பமாய் தனம் இருக்கப்பட்டவரின் வீட்டில் வந்து பிறந்து யாதொரு கஷ்ட்ட ஜீவனமும் இல்லாமல், மிகவும் சுகஜீவியாயிருக் கின்றேன். முன் ஜன்மத்தில் நான் புண்ணியம் செய்திராம லிருந்தால் இவ்வீட்டில் பிறக்காமல், எந்த ஏழைகளின் வீட்டிலோ அல்லது கூலி வேலை செய்யப்பட்டவர்களின் வீட்டிலோ பிறந்து, அன்னயானாதி களுக்கு மிகவும் கஷ்ட்டப்பட்டுக் கொண்டிருப்பேன். பூர்வ ஜன்மத்தில் நான் இன்னும் விசேஷமாய்ப் புண்ணியம் செய்திருப்பேனே யாகில், இவர்களைவிட இன்னும் அதிக தனவந்தர்களாய் இருக்கப் பட்டவர்களின் வீட்டில் பிறந்து, இதைவிட இன்னும் அதிக சுகத்தில் இருந்திருப்பேன், நான் பூர்வ ஜன்மத்தில் சொல்ப புண்ணியம் செய்திருந்தபடியால் சொல்ப ஆஸ்தி யுடையவர்களின் வீட்டில் வந்து பிறந்தேன். இதனால்

என்ன ஏற்படுகின்றதென்றால், பூர்வ ஜன்மத்தில் நான் சொல்ப புண்ணியம் செய்வதனால் ஏற்படுகின்றது.

என்னைவிட புண்ணியம் குறைவாய்ச் செய்தவர்கள், என்னவ்வளவு செல்வமுடையவர்களின் வீட்டில் பிறவாமல், என்னிலும் சொல்பமாயிருக்கும் தனவந்தர்களின் வீட்டில் பிறந்து, என்னவ்வளவு சுகம் அனுபவிக்காமல், என்னிலும் குறைவாய்ச் சுகம் அனுபவிப்பார்கள். ஆதலால் அவர்களை விட நானே விசேஷமானவனென்று என் புத்திக்கு நன்றாய்த் தோன்றுகிறது. நான் பூர்வஜன்மத்தில்பாவம் செய்திருந்தால் இவ்வீட்டில் பிறவாமல் மிகவும் ஏழைகளின் வீட்டில் பிறந்திருப்பேனென்று எனக்கு நன்றாய்த் தெரியவருகிறது. நல்லது இந்த ஜன்மத்தில் நான் செய்த புண்ணியங்களை யெல்லாம் இனி சற்றே ஆலோசித்துப் பார்ப்போம்.

எனக்கு இப்பொழுது வயது எழுபது ஆகின்றது. நான் குழந்தை முதல் பன்னிரண்டு வருஷங்கள் வரையில் செய்துவந்த காரியங்களையெல்லாம் யோசித்துப்பார்த்தால் கனவு கண்டதுபோல் சிலது ஞாபிகமிருந்து சிலது ஞாபக மிராததுமாயிருக்கின்றன. பதின்மூன்றாம் வயது முதல் எழுபது வருஷங்கள் வரையில் நான் செய்துவந்த காரியங்களையெல்லாம் ஆழ்ந்து யோசிப்பேனாகில் எனக்கு நன்றாய்த் தெரியவரும். அதை இப்பொழுது யோசிக்கலாம். நான் பிறந்தபின் என்னை ஐந்தாவது வயதில் என் தாய் தந்தை வாசிப்பதற்காகப் பள்ளிக்கு அனுப்பினார்கள்.

நான் பால்யத்தில் பள்ளிக்குச் செல்லும்பொழுது பிரதிதினம் என் தாய் எனக்கு அணா ஒன்று அல்லது இரண்டுமாய்க் கொடுத்து வருவதுண்டு. அதில் எனக்கு வேண்டுமான தின்பண்டங்களில் சிலவற்றை வாங்கிச் சாப்பிட்டு மிகுதியாயிருக்கும் காசை யாராகிலும் ஏழைகளாயிருக்

கப்பட்டவர்கள் வந்து கேட்டால் அவர்களுக்குக் கொடுத்து வந்தேன். அன்றியும் பிக்ஷுகர்கள் யாராகிலும் பசியுடன் வந்து என்னைச் சாதம் கேட்டால், அவர்களை அழைத்துக்கொண்டு போய் என் தாயிடம் சொல்லி அவர்களுக்கு வயிறு குளிரச் சாதம் போட்டு வித்து வந்தேன். இனி யாராகிலும் என்னை வஸ்த்திரங்கள் கேட்டால் வீட்டிலுள்ள ஏதாகிலும் பழைய வஸ்த்திரங்களை அவர்களுக்கு கொடுத்து வந்தேன். இதுபோல் யான்பால்யத்திலிருந்து B.A. (பி. ஏ.) பாஸ் செய்யும் வரையில் யார் யார் என்னை எதெது கேட்டார்களோ அவைகளை இல்லையென்று சொல்லாமல் என் ஸக்தியானு சாரம் கொடுத்துக் கொண்டு வந்தேன். நான் B.A. (பி. ஏ.) பாஸ் செய்த பிறகு, என் தாய் தந்தைகள் B.L. (பி. எல்.) வாசிக்கும்படிச் சொன்னார்கள். B.L. வாசித்தால் வக்கீல் வேலைக்கல்லவோ போக வேண்டும், வக்கீல்வேலை மிகவும் பாவமான தொழில், எப்படியென்றால், தம் கேஸ் ஜயிக்கவேண்டு மென்று எண்ணி, கேசுக்கு அனுகூலமான பொய் வார்த்தைகளைச் செல்லும்படி சாக்ஷிகளுக்கு கற்றுக் கொடுத்து அப்பொய்ச் சாக்ஷியால் கேஸை ஜெயிக்க வேண்டும். அவ்வாறு ஜெயித்து வந்தால் தான் நல்ல வக்கீலென்று இவருக்குப் பெயருண்டாகும். அப்பொழுதே இன்னும் அநேகர்கள் கேசுகளைக் கொண்டுவந்து கொடுப்பார்கள். பிறகு கேசுகள் அதிகமாய் வரவர பிரதிதினம் அநேக பொய்களை சோடித்துக் கேஸை ஜெயிக்க வேண்டியதாய் நேரிடும். “சீ சீ” B.L. (பி. எல்.) பாஸ் செய்வதனால் பிரதிதினம் பொய்சொல்லி பாவத்தை சம்பாதித்து மூட்டைக் கட்டி கொண்டு, இதனால் மறுஜன்மத்தில் துன்பத்தை அடையவேண்டிதாய் நேரிடும். சில நாளிருந்து மரண மடையப்பட்ட நான் பாவகார்யங்களை ஏன் செய்ய வேண்டும் ஆதலால், B.L. பரீக்ஷைக்கு வாசிக்கலாகாது,

இனி கவர்மெண்டு உத்தியோகத்தில் போய் சேர்ந்து கவ.ர்மெண்டார் கொடுக்கும் சம்பளத்தை வாங்கி அதை என் குடும்ப சவரக்ஷனைக்கும், தான தருமங்களுக்கும் உபயோகப் படுத்திக்கொண்டு வந்தால் எந்த பாவகர்மங்களும் எனக்குச் சேரமாட்டா. அதனால் மறுஜன்மத்தில் நான் நல்ல கதியை அடைவேன். இப்போது நான் B.A.(பி. ஏ.) வரையில் படித்தது போதும் என்று தீர்மானித்து பிறகு கவர்மெண்டு உத்தியோகத்தில் போய்ச் சேர்ந்தேன், சேர்ந்த பிறகு நான் என் மேல் அதிகாரிகளுக்கெல்லாம் மிகவும் நல்லவனென்று பேர் எடுத்துக்கொண்டபடியால் அவர்களின் சகாயத்தினாலும் என் பூர்வஜன்ம அதிர்ஷ்டத்தினாலும், வருஷங்கள் தோறும் எனக்கு உத்தியோகம் உயர்ந்துகொண்டே வந்து, கடைசியில் டிப்டி கலெக்டர் உத்தியோகம் கிடைத்தது, இதில் லஞ்சம் வாங்காமலும் பொய் சொல்லாமலும், சத்தியமாயிருந்து எனக்கு மாதம் வரும் சம்பளம் ரூபாய் ஐந்நூறில் என் குடும்ப சவரக்ஷனைக்கு போக மிகுதியாயிருக்கும் ரூபாய்களைச் சேகரித்து, அதை என் ஸந்ததி யாருக்கும் வைக்காமல், சிறிதாய் சத்திரம் கட்டி அதில் அன்னதானமும், சதாவர்த்தியும் என்றால் சாதுக்களுக்கு கோதுமை மா. பருப்பு, நெய் கட்டை தக்ஷணை அணா ஒன்று எக்காலமும் கொடுத்துவர, பண்டும் ஏற்படுத்தி வைத்ததுமேயல்லாமல், தற்சமயம் வேஷ்டி சேலை இல்லாமலிருக்கும் ஏழைகளுக்கெல்லாம் என் சக்தியானு சாரம் வேஷ்டி சேலைகளை வாங்கிக் கொடுத்துவந்தேன். இதன்றியும் பசியுடன் வந்தவர்களுக்கு நான் சாப்பிடும் சாதத்தை அவர்களுக்கு போட்டு நான் பட்டினியாயும் இருந்திருக்கிறேன். இப்போது எனக்கு வயதோ எழுபது ஆய்விட்டது. இனி எனக்குப் பிராண பிரயாண காலம் சமீபமாய் நெருங்கிவிட்டது. நான் பிறந்து எனக்குப் புத்தி தெரிந்த பதிமூன்றாம் வருஷம் முதல் இன்று வரையில் நல்லது செய்தேனா, அல்லது கெட்டது

செய்தேனா என்பதைச் சற்று ஆலோசித்து இனி வரப்போகும் ஜன்மத் தில் நான் எப்படிப்பட்டவனாய்ப் பிறப்பேனோ அதைச் சற்றே ஆலோசித்துப் பார்க்கலாம்.

நான் பூர்வஜன்மத்தில், சொற்பமாகிலும் அல்லது விசேஷமாயாகிலும் பாவம் செய்திருந்தால், இந்த ஜன்மத்தில் இவ்வீட்டில் பிறவாமல், சாப்பிடக்கூழும், கட்ட வேஷ்டியும் இல்லாமல் மிகவும் தரித்திரர்களாய் இருக்கப் பட்டவர்களின் வீட்டில் போய்ப் பிறந்து எப்பொழும் துக்கத்தையே அனுபவிக்கவேண்டியதாய் நேரிட்டிருக்கும். நான் பூர்வஜன்மத்தில் சொல்ப புண்ணியம் செய்திருந்த படியால், இச் ஜன்மத்தில் சொல்பமாய்ப் பொருளிருக் கப்பட்டவர்களின் வீட்டில் வந்து பிறந்தேன், இதனால் என்ன ஏற்படுகிறதென்றால், பூர்வ ஜன்மத்தில் நான் சொல்ப புண்ணியம் செய்தவனாய் ஏற்படுகின்றது. என் புத்தியினால் புண்ணியத்தை மாத்திரம் தெரிந்து கொண்டேனேயொழிய, நான் பூர்வ ஜன்மத்தில் எந்த ஜாதியார் வீட்டில் பிறந்ததும் தெரிந்துகொள்ள எனக்குச் சக்தியில்லை. ஏனென்றால், நான் மாயையென்னும் திரைக்குள் அகப்பட்டுகொண்டிருப்ப தனால் என் பூர்வ ஜன்மங்களைத் தெரிந்து கொள்ள சக்தியில்லாமலிருக் கின்றேன். இந்த மாயை யென்னும் திரையிலிருந்து எப்பொழுது வெளிப்படுகின்றேனோ, அப்பொழுது என் பூர்வ ஜன்மங்களையெல்லாம் நான் மிகவும் சுலபமாய்த் தெரிந்து கொள்வேன். இனி வரப்போகும் ஜன்மத்தில் நான் எப்படிப்பட்ட வனாய்ப் பிறப்பேனோ அதை யோசித்துப் பார்ப்போமென்றல்லவா முன் சொல்லியிருக்கிறேன். அதை இப்போது யோசிக்கலாம்.

நான் பால்யத்தில் B.A. (பி. ஏ.) பாஸ் செய்யும் வரையில் என் தாய் செலவிற்காக அம்போதைக்கப் போது கொடுத்துவந்த பணத்தில் நான் சொல்பமாகச் செலவு செய்து மிகுதி பணத்தை,

சாதுக்களுக்கும் ஏழைகளுக்கும் கொடுத்து அவர்களைப் பசியாறும் படிச் செய்வித்தேன். பிறகு கவர்ன்மெண்டு உத்தியோகத்திலிருந்து வரும் சம்பளத்தில் வீட்டு செலவுகள் போக மிகுதி தொகையைச் சேகரித்து சத்திரம் கட்டி, அந்த சத்திரத்தில் அன்னதானமும், சதாவர்த்தியும் செய்து வருவதுமேயல்லாமல், ஏழைகளுக்கு வேஷ்டி சேலைகளும் வாங்கி தானம் கொடுத்து வந்தேன்; அன்றியும், பசியுடன் வந்தவர்களைப் பசியாறும்படிச் செய்வித்தேன் நான் புத்தி அறியாத நாள் முதல் இன்றுவரையில் புண்ணிய காரியங்களைச் செய்து வந்தேனேயொழிய பாவ கார்யங்களை ஒன்றும் செய்ய வில்லை.

நல்லது என்று பதிமூன்றாவது வயது முதல் இன்று வரையில் ஏதாகிலும் பாவகர்மங்களைச் செய்தேனோ? அதை இப்பொழுது சற்று ஆலோசித்துப் பார்க்கலாம்.

நான் பால்யத்திலிருந்து இன்று வரையில் ஏதாகிலும் பாவகர்மங்களைச் செய்தேனோவென்று இரண்டு தினங்களாய் எவ்வளவோ யோசித்துப் பார்த்தபோதிலும், பதிமூன்று வயது முதல் எழுபது வயது வரையில் ஒரு பாவகர்மமும் நான் செய்ததாகக் காணப்படவில்லை. ஆதலால், மறுஜன்மத்தில் இதைவிட அதிக செல்வமுடைய வர்களின் வீட்டில் போய்ப் பிறப்பேனேயொழிய இவ்வளவு செல்வமுடையவர்களின் வீட்டிலாகிலும் அல்லது இதைவிடத் தாழ்ந்த செல்வமுடையவர்களின் வீட்டிலா கிலும் போய்ப் பிறக்கமாட்டேனென்று என் புத்திக்கு ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது. ஆதலால், நான் பூர்வஜன்மத்தில் சொல்ப புண்ணியம் செய்திருந்த படியால், அந்த புண்ணியத்திற்குத் தக்கபடி இந்த ஜன்மத்தில் சொல்பமாய் தனம்

இருக்கப்பட்டவர்களின் வீட்டில் வந்து பிறந்தேன். இந்த ஜன்மத்தில் என் மனைவி மக்களுக்கும் ஆஸ்தி சேகரித்து வைக்காமல் நான் சம்பாதித்த பொருள்களையெல்லாம் தர்ம கைங்கர்யத்திற்கே உபயோகப்படுத்திவிட்டேன். நான் செய்த இவ்வாறான தர்மகைங்கர்யத்தினால் முன் ஜன்மத்தில் செய்த புண்ணி யத்தைவிட இந்த ஜன்மத்தில் எனக்கு விசேஷ புண்ணியம் உண்டாயிருக்கலாமென்று என் புத்திக்கு மிகவும் நன்றாய்த் தோன்றுகின்றது. ஆதலால், நான் இப்பொழுது மரண மடைந்தால் மறு ஜன்மத்தில் இதைவிட விசேஷ செல்வ முடையவர்களின் வீட்டில் போய்ப் பிறப்பேனென்று நான் மிகவும் நன்றாய்த் தெரிந்து கொண்டேன். இதுபோல், வாசிக்கும் ஒவ்வொரு ஸ்திரி புருஷர்களும் அவரவர்கள் இப்பொழுதிருக்கும் ஸ்திதியை அறிந்து, முன் ஜன்மத்தின் புண்ணிய விசேஷத்தினால், இந்த ஜன்மத்தில் செய்த புண்ணிய விசேஷத்தினால், மறுஜன்மத்தில் இப்பேர்பட்ட ஸ்திதிக்குப் போவோ மென்று இம்மூன்று ஜன்மங்களையும் நீங்களே யோசித்துப் பார்த்து உங்கள் மூன்று ஜன்மங்களையும் ஸ்பஷ்ட்டமாய்த் தெரிந்து கொள்ளுங்கள்.

இப்பொழுது புண்ணியம் செய்தவனுடைய விஷயம் சொன்னோம். இனி பாவம் செய்தவனுடைய விஷயம் சொல்லப் போகின்றோம். அதாவது, இந்த ஜன்மத்தில் பாவம் செய்த ஒருவன் தன் மூன்று ஜன்மங்களையும் யோசிக்கின்றான். அதை சொல்லுகின்றோம் கவனியுங்கள்.

## 19. பாவம் செய்தவன் மூன்று ஜன்மங்களையறிதல்.

ஐயா நான், பூர்வஜன்மத்தில் ஏதோ சிறிய புண்ணியம் செய்திருந்தபடியால் மிகவும் ஏழையாகவும் கஷ்ட ஜீவனமாயும் இல்லாமல் இருக்கப்பட்டவர்களின் வீட்டில் வந்து பிறந்தேன். பிறந்தபின் பன்னிரண்டு வருஷங்கள் வரையில் பால்யமாயிருந்த பொழுது நான் என்னென்ன காரியங்களைச் செய்து வந்தேனோ அவைகள் ஒன்றும் எனக்கு ஞாபகமில்லை இப்பொழுது எனக்கு வயது ஐம்பத்தைந்து ஆகின்றது பதின்மூன்றாம் வருஷம் முதல் இன்று வரையில் நான் செய்த காரியங்களை யெல்லாம் நன்றாய் ஆழ்ந்து யோசித்துப் பார்த்தால் எல்லாம் ஞாபகம் இருக்கின்றன. நான் செய்த காரியங்களெல்லாம் துன்மார்க்க காரியங்களாய் இருக்கின்றதேயொழிய நல்ல காரியம் ஒன்றும் காணப்பட வில்லை.

நான் பால்யத்தில் பள்ளியில் வாசிக்கும்போது, பிள்ளைகளின் புஸ்தகங்கள், ஸ்லேட்டுகள் குடை இன்னும் அனேக வஸ்துக்களையெல்லாம் திருடிக் கொண்டு போய் விற்பனை செய்து, திண்பண்டங்களை வாங்கிச் சாப்பிட்டு வந்தேன். இவ்வாறு பதினாறு வயது வரையில் பள்ளியில் வாசித்துப் பிறகு நின்று விட்டேன். நின்றபின், மிளகாய்ப் புளி முதலாகிய பலசரக்குகள் விற்பனை செய்யும் மளிகை கடையில் என் தாய் தந்தை கொண்டுபோய்விட்டு, ஐயா; இவன் எங்கள் குமாரன் உங்கள் கடையில் வேலை நன்றாய்க் கற்றுக் கொண்ட பிறகு இவனுக்குச் சம்பளம் போடுங்கள் என்று அக்கடை எஜமானுக்கு ரொம்பவும் சொல்லி என்னை அவனிடம் விட்டுப்போனார்கள். அவர்கள் என்னை அக்கடையில் விட்டது முதல், கடைக்காரர்கள் சரக்குகளை விற்பனை செய்து அவர்களின் கல்லா பெட்டியில் காசைப் போடுவதைப் பார்க்கப் பார்க்க அக்காசுகளின் மேல் எனக்கு ஆசை அதிகமாய்

உண்டானதும் அதில் தினம் ஏதாகிலும் திருடிக்கொண்டு போகவேண்டு மென்று எனக்கு ஓர் எண்ணம் உதித்தது. இவ்வெண்ணம் உதித்தவுடன் எவ்விதமாய் திருடி எங்கு வைத்துக்கொண்டு போக வேண்டும். இவர்கள் பிரதிதினம் என் வேஷ்டியை அவிழ்த்துச் சோதித்து வீட்டிற்கு அனுப்பு கின்றார்களே, இதற்கு என்ன செய்யலாமென்று யோசித்தேன். பிறகு ஓர் எண்ணம் தோன்றிற்று. ரூபாயையெடுத்து ஆசனத்திற்குள் வைத்து கௌபீனத்தை நன்றாய் இழுத்துக்கட்டி நடக்கும் பொழுது இரண்டு பிருஷ்டத்தால் அவ்வெள்ளி ரூபாயை இடுக்கிப் பிடித்து வெளியே சென்றுவிட வேண்டுமென்று எண்ணங்கொண்டு அதுபோல் பிரதி தினம் செய்து வந்து, அக்காசை வீட்டில் கொடாமல் பிரதி தினம் திண்பண்டங்களை வாங்கிச் சாப்பிட்டு வந்தேன். இது விஷயம் என் எஜமானுக்குத் தெரிந்து என்னைக் கேட்டான். அப்பொழுது பதில் சொல்ல நாவெழாமல் போனபடியால் எஜமான் என்னைப் பிரம்மால் நல்ல அடி அடித்தான். அப்பொழுது உண்மையைச் சொல்லி விட்டேன். பிறகு, என்னைக் கடையிலிருந்து நீக்கி விட்டார்கள்.

சிலநாள், நான் சும்மாயிருந்து அதன் பிறகு வக்கீலிடம் குமஸ்தாவாய், இருபது ரூபாய் சம்பளத்தில் போய் சேர்ந்தேன். அப்பொழுது வக்கீல் பொய் கேசுகளையும் மெய்யாகவும், மெய் கேசுகளைப் பொய்யாகவும் ஜோடித்து, கேசுகளைச் ஜெயித்து வருவதைப் பார்த்தேன், அதைப் பார்த்த பிறகு இவர் நம்மில் சேர்ந்தராய்தான் இருக்கின்றாரென் றெண்ணி, அது முதல் எல்லா வக்கீல் வாதிகளின் சாக்ஷிகளிலோ அல்லது பிரதி வாதிகளின் சாக்ஷிகளிலோ, நான் எதையும் பார்க்காவிட்டாலும் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்ததுபோல் சொல்லுகின்றேன், ரூபாய் இருநூறு கொடுங்களென்று பெற்றுக் கொண்டு இவ்வாறு அனேக கேசுகளில் பொய் சாக்ஷிகளைச் சொல்லி பெரிய செல்வந்தனானேன். அன்றியும் கொலைக் கேசுகளில் ஆயிரக்கணக்காய் ரூபாய்களை வாங்கிக் கொண்டு, கொலை

செய்யாதவனைக் கொலை செய்தா னென்று பொய் சாக்ஷி சொல்லி அவனை தூக்கில் போடுவித்தேன்.

இவ்வாறான துஷ்ட கார்யங்களால் தனத்தைச் சம்பாதித்து ஒருவனுக்கு ரூபாய் ஒன்றிற்கு வட்டி அணா ஒன்றுவிகிதம் ரூபாய் ஆயிரம் கொடுத்து ஆயிரத்திற்கு பதினாயிரம் ரூபாய் வரையில் வட்டிக்கு வட்டியாய்ச் சேர்த்து, கடைசியில் கோர்ட்டில் டிக்கிரி செய்வித்து அவன் வீட்டை ஏலம் போடுவித்தேன். அப்பொழுது அவன் மனைவி மக்களெல் லோரும் வயிறெறிந்து அடபாவி! ஆயிரம் ரூபாயும் சரியாய்க் கொடாமல் அதிலும் ஆறு மாதம் வட்டி பிடித்துக்கொண்டு, கொடுத்து கணக்கில் ஆயிரம் எழுதிக்கொண்டு அப்போதைக்கப்போது நாங்கள் கொடுத்துவந்த ரூபாயை வரவு வைக்காமலும், எங்களைக் கேளாமலும் சம்மன் செய்து இப்பொழுது வீட்டின்மேல் வாரண்டுகொண்டு வந்தாய் ! நீ நாசமாய்ப் போவாய் என்று வயிறெரிந்து என்னைச் சாபித்தார்கள்.

இவ்வாறு அனேக மோசங்கள் செய்து பொருள்களைச் சம்பாதித்து அதை என் மனைவி மக்களுக்கு ஆஸ்தியாய்ச் சேகரித்து வைத்த இனி மரண மடைய போகின்றேனல்லவா? பால்யத்திலிருந்து இது வரையில் நான் செய்து வந்த பாவ கர்மங்களை யெல்லாம் நினைத்துக் கொண்டால் என் மனம் துடிதுடிக்கின்றதே. இனி என் செய்வேன். இந்த ஜன்மத்தில் நான் பள்ளிக் கூடங்களிலும், கடையிலும் திருடினதற்காக மறுஜன்மத்தில், மிகவும் தரித்திரங்களின் வீட்டில் பிறந்து குடிக்ககூழும் கட்ட வஸ்திரமும் இல்லாதவனாயிருந்தும், திருடின கைகளுக்கு குஷ்ட்டங்களும், அங்கங்கு தேம்பல் போன்ற படைகளும், அப்படைகளில் ரணங்களும், அந்த ரணத்தில் ஊரலும் (நமைச்சலும்) உண்டாகி, நான் செய்த பாவகர்மத்திற்காக ஈஸ்வரன் இவைகளை எனக்கு சிக்ஷையாய் உண்டாக்கியு படியால் எவ்வளவு குஷ்ட மருந்துகளும் படைமருந்துகளும் போட்டபோதிலும் போகாமலிருக்குமோ

என்னமோ தெரியவில்லை ஆசனத்தில் அரைரூபாய் வைத்து ஆசனத்தை இருக்கி பிடித்தபடியால் அவ்வாசனத்தில் மூலவியாதி உண்டாகுமோ? திரவ்யம் சம்பாதிப்பதற்காக ஆசைப்பட்டு பொய் சாக்ஷிகள் அனேகம் சொல்லி கேசுகளைக் கெலித்துக் கொடுத்தபடியால், பொய் சொன்ன வாயில் புற்று உண்டாய் நாற்றமெடுத்து புழுக்களும் தள்ளுமோ? சொல்ப தொகை கொடுத்து வட்டிக்கு வட்டியாய் சேர்த்து அதை ஆயிரக்கணக்காய்ப் பெருக்கி அவர்களை மிகவும் துன்பப்படுத்தி அவர்களின் திரவ்வியத்தையெல்லாம் வாங்கிக் கொண்ட படியால், அவர்கள் வயிறெறிந்து சாபித்தார்கள்,

அப்பாவ கர்மத்திற்காக எனக்குக் குஷ்ட்ட முண்டாய், காலால் நடந்து கைகளால் ரூபாய் வாங்கியதற்காக என் கை கால்கள் குறைந்து அதிலிருந்து சீழ் ஒழுகி, நாற்ற முண்டாய் ஈமொய்த்து, அந்த நாற்றத்தை நானும், மற்றவர்களும் சஹிக்க முடியாமல் இராப்பகலாய் அந்நோயினால் அவஸ்த்தைப்பட்டு சாகும் வரையில் மிகவும் துன்பத்தை அடைய வேண்டியதாய் நேரிடுமோ? கொலைக்கேசில் பொய்களைச் சொல்லி அவர்களைத் தூக்கில் போடுவித்தபடியால் மறுஜன்மத்தில் ரெயில் சக்கரத்தின் கீழோ, அல்லது குதிரை, மாட்டு வண்டிகளின் சக்கரத்தின் கீழோ அகப்பட்டுக் கொண்டு மரணமடைய வேண்டிதாய் நேரிடுமோ என்னமோ தெரியவில்லையே?

இவைகளை பூர்வ ஜன்ம கர்மமென்றும், தலையெழுத் தென்றும் விதியென்றும் பிராரப்த கர்மமென்றும் சொல்லு வார்கள். நான் இந்த ஜன்மத்தில் செய்த துஷ்ட்ட நடவடிக்கைகளுக்காக மறுஜென்மத்தில் முன் சொன்ன வியாதிகளெல்லாம் எனக்குச் சிக்ஷையாய் ஏற்படும்போல் தோன்றுகின்றது. ஐயையோ, இந்தக் கர்மத்திற்கு நான் என்ன செய்வேன். அப்பப்பா இக்கர்ம பலனைத் தப்பிக்க ஈஸ்வரனாலும் சாத்தியமாக மாட்டாதென்று வேதங்களில் சொல்லி யிருப்பதாய்ப் பெரியோர்கள் சொன்னதை நான்

கேட்டிருக்கின்றேன். இனி இப்பாவ கர்மங்களை எப்படித் தப்பித்துக் கொள்வேன், இப்பொழுது என்னிடமிருக்கும் திரவ்வியங்களையெல்லாம் ஸத்விஷபத்தில் தானம் செய்த போதிலும் அந்த தானத்தினாலுண்டாகும் புண்ணியபலனை அனுபவிப்பதற்காக செல்வமுடையவர்களின் வீட்டில் போய்ப் பிறப்பேன். அப்படி நான் செல்வந்தரின் வீட்டில் போய்ப் பிறந்தபோதிலும் நான் செய்த பாவகர்மங்களுக்காக முன் சொல்லிய வியாதிகள்வந்து துக்கத்தை அனுபவிக்க வேண்டியதாய் நேரிடுமே. இதற்கு நான் என் செய்வேன். இப்பொழுது யோசித்ததை பால்யத்திலேயே இதுபோல் யோசித்திருப்பேனேயாகில் பாவ கர்மங்களைச் செய்திருக்க மாட்டேன். நான் பால்யத்திலிருந்து செய்து வந்த பாவ கர்மங்கள் போல் உலகத்தில் அனேகர்கள் செய்து வரலாம். ஆதலால் அப்படிப்பட்டவர்களெல்லோரும் இவைகளை யெல்லாம் வாசித்து இனி நீங்களாகிலும் பாவம் செய்யாமல் ஜாக்கிரதைப்படுங்கள். எப்பொழுதும் புண்ணிய காரியங் களையே செய்து வாருங்கள். அதனால் உங்களுக்கு மறு ஜன்மத்தில் நல்ல கதி உண்டாகும். அறியாத தன்மையினால் நான் மோசம் போய் விட்டேன், இவ்வாறு மோசம் போவதற்கு என் பூர்வ ஜன்மகர்மமே காரணமாயிருந்து, என்னை இவ்வாறு செய்வித்ததேயொழிய நான் என் சுயமாய்ச்செய்ததல்ல ஒவ்வொரு விஷயமும் அவரவர்களின் கர்ம விதிப்படி நடக்குமேயொழிய கர்மவிதியில்லாமல் எதுவும் நடை பெற மாட்டாதென்று அறியக்கடவீர்களாக,

இப்பொழுது சஞ்சீதம் பிராப்தம் என்னும் இரண்டு கர்மங்களையெல்லாம் உங்களுக்கு விவரித்துச் சொல்வோம். இந்த ஸஞ்சிதம் என்னும் கர்மம் ஆகாம்யத்திலிருந்து உண்டாயிற்று. இந்த ஆகாம்ய கர்மத்தை இனி விவரித்துச் சொல்லுகிறோம். இதனால் எல்லா ரகஸ்யங்களும் தெரிந்து கொள்ளலாம்.

3. ஆகாம்யம் :- இப்போதெடுத்திருக்கும் தேகத்தினால் மரணபரியந்தம் செய்துவரும் புண்ணிய பாவங்களின் கர்மமே ஆகாம்யமென்று சொல்லப்படும். மரணமடைந்த வுடன் இந்த ஆகாம்ய மென்னும் கர்மங்கள் முன் சஞ்சி தத்தில் குறைவாய் நின்றிருந்த 90 மூட்டை புண்ணியத்துடன் இந்த ஜன்மத்தில் செய்த புண்ணியமும் போய்ச் சேர்ந்து விருத்தியாகும். இதுபோல் முன் தங்கியிருக்கும் நாலரை மூட்டை பாவத்துடன் இந்த ஜன்மத்தில் செய்த பாவமும் போய்ச் சேர்ந்து விருத்தியாகும். இவ்விதமாய் ஜன்மாந்திரங்கள் தோறும் புண்ணிய பாவங்கள் விருத்தியாய் வந்து கொண்டே இருப்பதனால் இவர்களுக்கு ஜன்மங்கள் அனேக மாய்ப் பெருகிக்கொண்டே வருகின்றன. என்றால், ஆகாம் யத்தினால் சஞ்சிதம் உண்டாய் அதிலிருந்து பிராரப்தம் வருகின்றன. எப்படியென்றால், பயிரிடுபவன் நிலத்தை உழுது நாற்றை நட்டுத் தண்ணீரிறைத்துக் களைபிடுங்கிப் பயிரைப் பாதுகாத்து தானியத்தைக் காலத்தில் அறுவடை செய்து மொத்தமாய்க் களஞ்சியத்தில் சேகரித்து வைக்கின்றான். நிலத்தில் தானியத்தை அறுக்கும் வரையில் செய்யும் வேலைகளை ஆகாம்யத்திற்கு ஒப்பிடலாம்.

தானியத்தை சேகரித்து மொத்தமாய்க்கட்டி வைத்ததை சஞ்சிதத்திற்கு ஒப்பிடலாம். கட்டிவைத்த தானியத்திலிருந்து எடுத்து புசிப்பதே பிராரப்தத்திற்கு ஒப்பிடலாம். இதுபோல் கர்மத்திற்குக் காரணம் மனோ சங்கல்ப ஒருவன் யாதேனும் ஒரு பலனை அடைவதற்கு மனதில் சங்கல்பித்துக் கொள்வதே ஆகாம்யம். இப்படிப் பட்ட சங்கல்பங்கள் (எண்ணங்கள்) அதிகமாகச் சேர்ந்த மொத்தமே சஞ்சிதம். சங்கற்பித்துக் கொண்டவண்ணம் பலனை அனுபவிப்பதே பிராரப்தம். ஆதலால், உலகத்தில் ஜனங்கள் அனுபவிக்கும் சுகதுக்கங்களுக்குக் காரணம் அவரவர்கள் பூர்வ ஜன்மங்களிற் செய்த கர்மங்களேயாம். அதாவது ஆசைகொண்டு எண்ணிய

போதிலும் சரி, பிராரப்த கர்மங்களை அனுபவித்தே தீரவேண்டும். புண்ணிய பாவங்கள் செய்வதனால் சரீரமெடுத்து அந்தப் புண்ணிய பாவங்களை அனுபவித்தே தீரவேண்டும். எதையும். ஈஸ்வரார்ப்பணமாய்ச் செய்து வந்தால் புண்ணிய பாவங்கள் சஞ்சிதத்திற் போய்ச் சேராமல் ஈஸ்வரனைச் சேர்ந்த போதிலும் பூர்வ சஞ்சித கர்மங்களைப் பஸ்மீகரப்படுத்த முன் சொல்லியது போல் எந்த எண்ணங்களுமில்லாமல் மனதைப் பரிசுத்தமாய் வைத்து ஒரே சமாதியிலிருக்க வேண்டும். அதாவது, அப்போதைக்கப்போது இடை விடாமல் அநேக காலம் தன்னை மறந்திருப்பதே சமாதி எனப்படும். மேலும்,

"மநஸ்ஸங்கல்பநம் த்யத்வர ஸம்க்ஷிப்யா த்மநி புத்திமாந்
தாரயித்வா ததாத்மாநம் தாரணா பரிகீர்திகா."

புத்திமான்கள் சகல விஷயங்களையும் சங்கற்பிக்கும் மனதை அந்த விஷயங்களிலிருந்து நிவர்த்தி செய்து, பரமாத்ம சொரூபத்தில் சங்கற்பிக்க வேண்டுமென்று நிச்சயித்துப் பரமாத்மாவிலேயே மனதை ஸதாகாலமும் லயிக்கச் செய்ய வேண்டும். இந்த சமாதி நிலையை தியான மென்று கீதையில் சொல்லப்பட்டிருக்கின்றது.

கீதை. அ 4-யோகஸந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநஸஞ்
(சிந்தஸம்ஸயம்)
ஆத்மவந்தம் நகர்மாணி நிபத்நந்தி தநஞ்சய || சு 41,

பலாபேக்ஷையை விட்டு ஈஸ்வரார்ப்பண புத்தியாய்க் கர்மம் செய்கிற நிஷ்காம கர்மயோகி, குரு உபதேசித்த பிரம்ம ஞானத்தினால் சகல சம்சயங்களையும் போக்கடித்துக் கொண்டு பிரம்ம நிஷ்டையில் இருப்பவனைக் கர்மங்கள் கட்டுப்படுத்த மாட்டா. இந்த பிரம்ம நிஷ்டையினால் பாவங்களெல்லாம் நசித்துவிடும். இதற்கு சூதசங்கிதை பிரமாணம் என்னவென்றால்,

நித்திய நைமித்திய கன்மங்கள் நிஷ்காமியமாகப்
பத்தியுறச் செய்வதனாற் பாவமெல்லாம் நாசமுறும்
ஒத்தியல் மற்றதனானே யொழியாம லுறு
சித்தசுத்தி யுளதாவென்று சொல்லுமால் மறையனைத்தும்
காலிலா வுயிர்க்குள் பரயனுக் கிரகத்தினாற்
பிரமவித்தியா சுத்தியுண்டாகிடும் பிறங்க
வுர வுறப்போதே சிவப்பிர சாதமுண்டாய்
விரவு பாசமுற்றெழிய கன்முத்திமேவிடுமால்

ஆதலால், முன்சொல்லியதுபோல் எதையும் ஈஸ்வர ரார்ப்பணமாய்க் செய்து வந்தால் அதனால் சித்தசித்தியும் அந்த சித்த சுத்தியினால் ஞானமும், அந்த ஞானத்தினால் மோஷமும் அடையலாம், இந்திரியங்களை அடக்கி மனதை லயப்படுத்துவதற்காக ஸ்ரீ பகவத்கீதை முதல் 6 அத்யாயங் களில் விசேஷார்த்தங்களுடன் தனியே எழுதப்பட்டிருக் கின்றது. இந்நூலையும் மேற்படி கீதையையும் வாசித்து ஏகாந்த ஸ்தலத்தில் உட்கார்ந்து மனதை வெளி விவகாரங்களின் ஓடவிடாமல் நிறுத்தி பரமாத்ம சொரூபத்தில் லயிக்கச் செய்ய எளிதில் அறிந்து அதைச் சாதனம் செய்து நற்கதி, அடைய வேண்டுமென்பதே இந்நூலின் கருத்தாகும்.

## 20. மாயை இருள் ஜீவர்களை எப்படி மூடிக்கொண்டது

ஐயா! அமாவாஸ்யை தினத்தில் வரும் இருளை கரு மேகங்கள் மூடிக்கொண்டால், அந்த இருள் எப்படி அதிகரிக்கின்றதோ, அதுபோல் உலகத்திலுள்ள ஜனங்களுக் கெல்லாம் ஆகாம்ய கர்மத்தினால் அஞ்ஞானமாகிய மாயையென்னும் இருள், ஜன்மாந்திரங்கள் தோறும் அதிகரித்து விருத்தியாய்க் கொண்டே வருகின்றன. அமாவாஸ்ய இருளில் வழி நடக்கும் புருஷனுக்கு எதிரில் மற்றொரு புருஷன் எதிர்ப்பட்டால் அவன் பிராமண னென்றும், சூத்திரனென்றும் சண்டாளனென்றும் தெரியா விட்டாலும், எவனோ ஒரு புருஷன் எதிரில் வருகிறா னென்றும், நாற்கால் மிருகங்கள் எதிர்ப்பட்டால், அது ரிஷபமென்றும் பசுவென்றும் எருமை யென்றும் கிடா வென்றும் தெரியாமற் போனபோதிலும், ஏதோ ஒரு நாற்கால் மிருகம் வருகிறதென்றுந் தெரியவரும். இருள் இன்னும் அதிகமாய் மூடிக்கொண்டபோது வழிநடந்தால், முன் கண்டவைகளும் தெரியாமல் ஒருவரோடொருவர் இடிபடுவது எல்லோருக்கும் பிரத்தியக்ஷ திருஷ்டாந்தமாகயிருக்கிறது. இதுபோல் அஞ்ஞானம், ஜன்மாந்தரங்கள் தோறும் கர்மத்தை அதிகப்படுத்திக் கொண்டே வந்து கடைசியில் மாயை அதிகமாய், முன்சொல்லிய அமாவாஸ்யை இருளைப்போல் புருஷனை அந்த மாயை மூடிக்கொண்டு, ஆத்ம சொரூபத்தைப் பூர்த்தியாய் காணப்படாமல் செய்விக்கும், இருளுடன்கூட மேகங்களும் மூடிக்கொள்வதனால் அந்த சமயத்தில், இவன் இன்ன புருஷனென்றும், இன்ன மிருகமென்றும் அறியக்கூடாமை யாயிருக்கும். சூர்யோதயமாய் இருள் நீங்கியவுடன் இரவு கண்டவைகளின் நிஜஸ்திதியைக் கண்டறிவதுபோல் புருஷனுக்கு ஆகாம்ய கர்மத்தினால் அதிகரித்துக்கொண்டே வரும். அஞ்ஞான மென்னும் மாயை ஞானச்சுடரினால் நசித்தவுடனே, ஆத்ம

தத்துவம் இப்படிப்பட்டதென்று தெரியவரும். அமாவாஸ்யை இருட்டுக் கறுக்களில் வழிநடக்கும் பொழுது வழிதெரியா மலிருக்கும் சமயத்தில், மின்னல் மின்னியவுடன் அதன் வெளிச் சத்தினால் சில தூரம் சென்று மறுபடியும் வழி தெரியா மலிருக்கும் அப்பொழுது மறுபடியும் மின்னல் மின்னியபோது, அதன் வெளிச்சத்தைக் கண்டு மறுபடியும் வழிநடக்கின்றோம். இதற்கு சிவப்பிரகாச மூலம் பிரமாண மென்னவென்றால்,

இருணனி யிரவி தான்வந்
  திரித்தலு மிரவி லெண்ணாம்
யொருணிலை கண்டு மாந்தர்
  பொருந்திடு மாறு போல
மருணிலை யெங்கு நீங்கமகிழ்ந்
  துயிர் தன்னுண் மன்னும்
அருளையு மொழிய ஞாலத்
  தறிந்தவா றறியு மன்றே
அறிந்திடு மனாதி வாயி
  வானவை யவன்ற னாலே
அறிந்திடு மென்று? மொன்று
  மறிந்திளா வவைபோ லியாவும்
அறிந்திடு மறியுந் தன்மை
  யறிந்திடா கன்மத் தொன்மை
அறிந்தவை நுகரு மாறு
  மருளுவ னமலன் றானே.

மேற்சொல்லியதுபோல், ஸ்திரீ புருஷர்களை மூடிக் கொண்டிருக்கும் அஞ்ஞான மயமாகிய மாயை யென்னும் இருளை நீக்கி நல்வழிகாட்ட, இந்த 'ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யமே' மிகவும் முக்கியமானதாயிருக்கின்றது. ஆத்மஞானம் ஆத்மவிராசரணையினால் தெரிந்து கொள்ள வேண்டுமே யொழிய, மற்றவைகளால் தெரிந்து கொள்ளத் தக்கதல்ல. ஸ்நானம் சந்தியாவந்தனம் ஜபதபங்கள் தேவதா பூஜை உபவாசங்கள் தீர்த்த ஸ்நாநம் க்ஷேத்திர தரிசனம்

முதலானவைகளெல்லாம் கர்மங்களென்றே சொல்லப்படும். இந்த கர்மங்களையெல்லாம் நாம் தினந்தோறும் அனுஷ்டித்துக் கொண்டு வருகின்றோமேயொழிய, அவைகளினால் இது வரையில் சிறிதேனும் ஆத்ம செரூபம் தெரிய வந்ததில்லை. இனி இந்த ஜீவப்பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யத்தை வாசித்தால் தம்மில் இருக்கும் மாயையென்னும் அழுக்கு களெல்லாம் நீங்கி ஆத்ம சொரூபத்தைத் தெரிந்து கொள்ளலாம். இந்த ஆத்ம சொரூபத்தில் விசேஷமாய்க் களிம்பு (அழுக்கு) ஏறியிருப்பதனால், ஸ்திரீ புருஷர்கள் தம்மில் இருக்கும் ஆத்ம சொரூபத்தை அறியாம லிருக்கின்றார்கள். அவ்வாத்ம சொரூபத்திற்கு ஆதியில் களிம்பு எவ்வாறு பற்றிற்றோ, அதை இதனடியில் சொல்லு கின்றோம் கேளுங்கள்.

களிம்பு தோய்ந்தசெம் பெனவுனை மருவுங்
கருமை கூர்மலங் கண்டது கலக்கும்
பளிங்கு போன்றதுன் றன்மயம் மலத்தின்
பற்றி னாலுடல் பலவெடுத் துழன்றாய்
வளங்கு லாம்புவ னந்தொறுஞ் செயுமுன்
வல்வி னைப்பயன் வருமுறை நெறியே
யளந்து நாந்தர நுகர்ந்துமே னுகர்வு
மாக்கி யேதிரிந் தனைமன வழுக்கால்

மேற்சொல்லிய பாட்டின் கருத்தை இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

ஓர் செம்புக் குடத்தில் அநேக வருஷங்களாய் எண்ணெய் விட்டுக் கொண்டும், எடுத்துக் கொண்டும் வருவார்களாகில் சிறுகச் சிறுக நாளாவட்டத்தில் அச்செம்பு குடம் முழுமையும் காலங்குலத்திற்கு மேல் பச்சை நிறத்துடன் களிம்பு ஏறி செம்புக் குடத்தைக் காணவிடாமல் களிம்பு மூடிக்கொள்ளும். பிறகு அக்குடத்தை ஒருவனுக்குக் காட்டி இது என்ன குடமென்று அவனைக் கேட்டால் அது இன்னகுடமென்று சொல்ல அவனுக்குச் சாத்தியமாக மாட்டா. பிறகு, அவன் செங்கல் பொடி,

புளி முதலானவைகளால் அக்குடத்தைத் துலக்கி அக்களிம்புகளை யெல்லாம் போக்கி, பிறகு இது செம்பு குடமென்று சொல்லுவான், அதுபோல் நமக்குள்ளே களிம்பில்லாமல் பளிங்குபோல் இருக்கும் ஆத்ம சொரூபத்தில் களிம்பேறிய ரகஸ்யம் இதனடியில் வள்ளலார் சாஸ்த்திரப் பிரமாணத்துடன் சொல்லுகின்றார் கேளுங்கள்:

சிருட்டிக்குமுன் சீவனெல்லாஞ் சிவமெனக் செப்புமறை
சிருட்டிக்குபின் வேறுபட்டான் சிறுசீவ னென்றே
சிருட்டியை நீக்கிச் சிவலோகமென் பாவனை சேர் தரலுஞ்
சிருட்டிக்குமுன் சிவாமாயினான் நிகழ்ச்சி யேகம்பனே.

ஆதியில் பிரம்மதேவர் ஜீவர்களைச் சிருஷ்ட்டி செய்யும்பொழுது, பளிங்குபோல் இருக்கும் ஆத்மாவானது, ஜீவர்களுக்கு சாக்ஷிபூதனாயிருப்பதற்காக எல்லா ஜீவராசி களின் இருதய கமலத்தில் போய்ச் சேர்ந்தது. அந்த ஆத்ம சம்பந்தத்தால் எல்லா ஜீவராசிகளும் பிழைத்திருக்கின்றன. இந்த ஜீவராசிகள் அனுபவிப்பதற்காக மனைவி, புத்திரர்கள், புத்திரிகைகளும், பொன், வெள்ளி, தனம், வாகனங்கள் பூமி தோட்டம், துரவுகள் முதலாகிய போக பாக்கியங்களை யெல்லாம் முதல் ஜன்மத்தில் ஈஸ்வரன் கொடுத்தனர்.

ஸ்திரீ புருஷர்களுக்கு, ஆதியில் எடுத்த முதல் ஜன்மத்திலேயே மேற்சொல்லியவைகளின் மீதெல்லாம் ஆசை அதிகம் உண்டாய், நல்வினை தீவினைகளை (புண்ணிய பாவங்களை) செய்து கடைசியில் பிராணனை விடும்பொழுது தாம் ஆசைப்பட்டவைகளை நினைத்துக் கொண்டே பிராணனைவிட்டு விடுகின்றான். அதனால் அவன் பிறகு ஆசைப்பட்டவைகளையெல்லாம் அனுபவிக்க மறுபடியும் அந்தந்தப் புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி உயர்வு தாழ்வாயிருக்கும் அந்தந்த வீட்டில் போய்ப் பிறக்க வேண்டியதாய் நேரிடுகின்றது. அப்பொழுது இவ்

வாசைகள்யாவும். தனக்குள்ளே சாக்ஷி மாத்திரனாய்ப் பளிங்கு போலிருக்கும் ஆத்ம சன்னிதானத்தை, மேற் சொல்லிய ஆசையென்னும் களிம்பு (அழுக்கு) புகை சூழ்வது போல் முதல் ஜன்மத்தில் பற்றுகின்றது. அவ்வாசைகளை அனுபவிக்க புருஷன் மறுபடியும் இரண்டாவது ஜநநம் எடுக்கவேண்டியதாய் நேரிட்டது. இரண்டாவது ஜநநம் எடுத்தபொழுது, மறுபடியும் முன்போல் இரண்டாவது ஜன்மத்தில் வேறாய் வந்த, பார்யாள் புத்திரர்கள் புத்திரிகைகள் தன்வீடு தோட்டம் துரவுகள் முதலியவைகளின் மீது ஆசைகள் அந்த ஜன்மத்தில் இன்னும் அதிகமாகின்றது அவைகளை அனுபவிக்க மறுபடியும் மூன்றாவது ஜநநம் எடுக்கின்றான். இவ்வாறாகவே பிரதி ஜந்மங்களிலும் ஆசை அதிகமாய்மேற்சொல்லிய செம்புக் குடத்தின்மேல் சிறுகச் சிறுக ஏறிய பச்சை நிறமுடைய பாசியைப் போன்ற களிம்பு புருஷனுக்கு அனேக கோடானகோடிகளாய் எடுத்துவந்த ஜன்மங்கள் தோறும் ஆசையென்னும் களிம்பு, சிறுகச் சிறுகப் புகையைப் போல் சூழ்ந்து கொண்டே வருகிற படியால் தனக்குள் பளிங்கு போல் சாக்ஷி சொரூபமா யிருக்கும் ஆத்ம ஸந்நிதானத்தை மேற்படி பந்த பாசங்க ளென்னும் ஆசைகள் மூடிக் கொண்டு மோக்ஷமென்னும் வீட்டை அடையவிடாமற் செய்விக்கின்றன. இதற்குத் திருமந்திரம் பிரமாணம் என்னவென்றால்,

கடந்கடந்தோறுங் கதிரவன்தோன்றி
லடங்கிடமூடில் வற்றினடங்கான்
விடங்கொண்ட கண்டனுமேவிகாயத்
தடங்கிநின்றது மப்பரிசே.

எறும்பு முதல் எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளும் ஏதோ ஓர் ஜன்மத்தில் மோக்ஷமென்னும் வீட்டை அடைய வேண்டியது திண்ணம். இம்மோக்ஷ வீட்டிற்கு வழிகாட்டும் குருவானவர் எப்படிப் பட்டவராயிருக்க வேண்டுமென்றால், முன் களிம்பேறிய செம்புக் குடத்தைச் செங்கற் பொடியினால்,

தேய்த்துக் களிம்பைப் போக்கி செம்பு குடத்தைக் காட்டிய குருவைப் போன்றவராய் இருக்க வேண்டும். இங்கு உங்களுக்கு இந்த "ஜீவப்பிரம்மைக்ய வேதாந்தரஹஸ்ய"மே, களிம்பைப் போக்கி செம்புக் குடத்தைக் காட்டிய குருவைப் போல் இருக்கின்றது. ஆதலால் இதில் உபதேசமாய்ச் சொல்லிய விஷயங்களை கிரஹித்து, அதை சாதனம் செய்து வருவீர்களாகில் அப்பொழுது, ஜன்மாந்திரங்கள் தோறும் புகையைப்போல் சிறுகச் சிறுக சூழ்ந்து கொண்டே வந்த ஆசையென்னும் களிம்பு (அழுக்கு) களெல்லாம், மறுபடியும் புகையைப்போல் சிறுகச் சிறுக இந்த "ஜீவப் பிரம்மைக்ய" உபதேசத்தால் குறைந்து கொண்டேவந்து கடைசியில் எல்லா பந்தபாசங்களும் நீங்கி, தான் தானாயி நின்று பிரம்மத்துடன் கலந்து விடுவீர்கள். இவ்வாறு ஆசையென்னும் களிம்பைப் போக்கியவனுக்கு மறுபிறப்பில்லை. மேற்சொல்லிய ஆசைகளையே ஆணவம், மாயை காம்ய கர்மமென்று சொல்லப்படும். இவை அனாதியிலிருந்து சகமாயுள்ள மூலமலமாயிருக்கின்றன, இம்மூன்று மலமும் ஆன்மாக்களின் அறிவு முழுவதையும் விளங்கவொட்டாமல் களிம்பேறி மறைகின்றன. இக்களிம்பிற்கு, தோங்காயின் மேல் இருக்கும் பட்டையைத் திருஷ்டாந்தமாய் இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

தேங்காயின்மீது பிடித்துக்கொண்டிருந்த பட்டையைப்போல் யோகியைப் பிடித்துக் கொண்டிருந்த, சகல பந்த பாசங்களென்னும் பிடிப்புகள்யாவும் தனக்குத் தானாகவே யோக பலத்தினால் அந்த யோகியை விட்டு நீங்கும் என்று முன் சொல்லியிருக்கின்றோம், ஆதலால், தேங்காயின் ரகஸ்யார்த்தம் இதனடியில் தெரிவிக்கின்றோம் கேளுங்கள்.

## 21. தேங்காய் கர்ப்பூரக் கட்டியினுடைய ரகஸ்யார்த்தம்

தேங்காயானது பட்டையால் மூடப்பட்டிருக்கும் பொழுது அதன்மேல் பட்டை பச்சை வர்ணமாயும், மினு மினுப்பாயும் பார்வைக்கு மிகவும் அழகாயும் இருக்கும். பிறகு தேங்காயின்மேல் மூடிக்கொண்டிருக்கும் பட்டையை உறிக்கும்பொழுது அது ஒன்றுடன் ஒன்று பின்னிக்கொண்டு விசேஷ சிக்குச் சிக்குகளான நாருகளுடன் கூடி உறிந்து வந்துகொண்டேயிருக்கும் பிறகு தேங்காயின்மேல் மூடிக் கொண்டிருந்த சிக்குகளையெல்லாம் விடுவிடுத்துத் தேங் காயை உடைத்துப் பார்க்கும்பொழுது உள்ளே மிகவும் வெண்மை நிறமாய்த் தேங்காய் காணப்படும். அத்தேங்காய் மூடிகளைத் தட்டில் வைத்துக் கடவுளுக்குக் காட்டு கின்றார்கள். அவ்வாறு காட்டுவதற்குக் காரணமென்ன வென்றால்,

அனேக சிக்குச் சிக்குகளான நாருகளுடன் கூடி பின்னிக் கொண்டிருந்த இத்தேங்காயை உறிக்கும் பொழுது இது மிகவும் கஷ்டத்துடன் விசேஷசிக்குச் சிக்குகளான நாருகளுடன் கூடி எப்படி உறிபட்டு வந்ததோ அதுபோல், ஸ்திரீ புருஷர்களாகிய நமது சரீரத்தின் மேலிருக்கும் தோலானது பார்வைக்கு மாத்திரம் இத்தேங்காயின் மூடப்பட்டிருந்த பட்டையைப் போல் மினுமினுப்பாயும், மிகவும் அழகாயும் இருக்கின்றது. பார்வைக்கு மாத்திரம் தேங்காயின்மேல் மூடிக்கொண்டிருக்கும் பட்டையைப் போல் மினு மினுப்பாயும் மிகவும் அழகாயும் நமது சரீரத்தின் மேலிருக்கும் தோல் இருந்தபோதிலும், நமது சரீரத்திற்குள் அனே விதங்களாகிய ஆசாபாசங்களென்னும் சிக்குகள் தேங்காயின்மேல் மூடப்பட்டிருந்த சிக்கைப்போல் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து ஆசையென்னும் சிக்குகள் பின்னிக்கொண்டு அநேக கோடானு கோடி ஜன்மங்களாய் வந்துகொண்டே இருக்கின்றன.

நமது சரீரத்திற்குள்ளிருக்கும் ஆசாபாசங்களென்னும் சிக்குகளையெல்லாம் விடுவித்துப் பார்க்கும் பொழுது இத்தேங்காய்க்குள் வெண்மை நிறம் இருப்பது போல் நமது சரீரத்திற்குள் மிகவும் பரிசுத்தமான பரமாத்ம சொரூப மிருக்கின்றது. அந்த பரமாத்ம சொரூபத்தை அநேக ஜன்மங்களிலிருந்து சிறுகச் சிறுக ஒவ்வொரு ஜன்மத்திலும் மூடிக்கொண்டு வந்த ஆசாபாசங்களென்னும் சிக்குகளை யெல்லாம் விடுவித்து ஜீவாத்ம சொரூபமாயிருக்கும் எங்களை பரமாத்ம சொரூபமாயிருக்கும் உம்மில் ஐக்கியம் செய்து கொள்ள வேண்டுமென்று கடவுளைக் கேட்டுக் கொள்வதற்காகவே தேங்காய்களை உடைத்து, தட்டில் வைத்துக் கடவுளுக்குக் காட்டுவதற்குக் காரணமாயிற்று, தேங்காய் முடிகளைக் கடவுளுக்கும் காட்டிய பிறகு,

ஒரு பெரிய கற்பூரக் கட்டியையேற்றி இதோ இக்கற் பூரக்கட்டியெல்லாம் எறிந்து நீராய்க் கரைந்து ஒன்றும் சேஷமாய் நிற்காமல் கற்பூரக்கட்டியெல்லாம் வெளியோடு வெளியாய் எப்படிக் கலந்து விடுகிறதோ அது போல் எங்கள் ஆசாபாசங்களென்னும் கர்மங்களையெல்லாம் இந்தக் கற்பூரக்கட்டியைப்போல் நீராய்க் கரையும்படிச் செய்து பிறகு எங்களுக்குள்ளிருக்கும் சொரூபத்தை, பரமாத்மா சொரூபமாயிருக்கும் உம்மில் ஐக்கியம் செய்து கொள்ள வேண்டுமென்னும் பாவனையே கற்பூரக்கட்டிகளை கொளுத்திக் கடவுளுக்குக் காட்டுவதற்குக் காரணமாயிற் றென்று அறியக்கடவீர்களாக, அப்பொழுது, கோயில் மூலஸ் தானத்தில் மூலவிக்ரகத்தைச் சேவித்து நிற்கும் ஸ்திரீ புருஷர் களெல்லோரும் கற்பூரக்கட்டியைக் கொளுத்தும் ரஹஸ் யார்த்தத்தைத் தெரிந்து கொள்ளாமல் கீழே சொல்லப் போவது போல அவரவர்களுக்கு வேண்டும் வரங்களைக் கேட்கின்றார்கள்.

## 22. பெருமாள் கோவில்களில் வரம் கேட்பது

பெருமாள் கோவில்களில் அர்ச்சகர்கள் கற்பூரக் கட்டிகளைக் கொளுத்தி கடவுளுக் குக்காட்டும்போது மூலஸ்த்தானத்திடம் நின்று கொண்டிருக்கும் ஸ்திரீ புருஷர்க ளெல்லோரும் அக்கடவுளைக் கும்பிட்டுக் கொண்டே தம் தம் மனதில் எவ்வாறாக நினைத்துக் கொள்ளு கின்றார்களென்றால்,

நான் புத்திரசந்தானமில்லாமலிருக்கின்றேன். என் குடும்ப அபிவிருத்திக்காக எனக்குப் புத்திரசந்தான முண்டானால், இரண்டாயிரம் ரூபாயில் ரத்தினங்களிழைத்த கிரீடம் செய்வித்து உன் சிரசில் அணிகின்றேன் என்று ஒருவனும், மற்றொருவன் எனக்கு நல்ல கன்னிகையாய்ப் பார்த்து சீக்கிரம் விவாகம் செய்விப்பாயாகில் ஆயிரம் ரூபாயில் ரத்தினாபரண மாலையைச் செய்வித்து உனது கண்டத்தில் போடுகிறேனென்றும், இன்னொருவன் நான் B.A. (பி. ஏ.) பாஸ் செய்வேனே யாகில் ஐந்நூறு ரூபாயில் லக்ஷிமியைச் செய்வித்து உனது லக்ஷஸ்தலத்தில் என்றால் மார்பில் வைக்கின்றேனென்றும். வேறொரு ஸ்திரீ, என் புருஷன் வியாதி சௌக்கியமானால் என் சரீரத்தில் அணிந்து கொண்டிருக்கும் ஆபரணங்களையெல்லாம் உன் உண்டியில் போடுவேனென்று இவ்வாறாக மூலஸ்தானத்தில் எத்தனை பேர் ஸ்திரீ புருஷர்கள் நின்றிருக்கின்றார்களோ அவர் களெல்லோரும் அவரவர்களுக்கு வேண்டும் வரங்களை மனதில் நினைத்துக்கொண்டே கும்பிட்டுக் கொண்டிருப் பார்கள். அப்பொழுது கல்லுருவமாய் நின்றிருக்கும் கடவுளானவர்,

ஒரு கையில் சங்கும், இன்னொரு கையில் சக்கரமும் மற்றொரு கையால், தன் பாதத்தைக் காட்டி என்று பாதத்தின் மேல் திருஷ்டியை நிறுத்தி சும்மாயிருங்களென்று என் வலது

கையைக் காட்டுகின்றேன். ஏனென்றால், நான் கல்லுருவாய் நின்றிருப்பதனால் நீங்கள் என்னை எந்த வரமும் கேளாமல் மனதை நிறுத்தி சும்மாயிருங் களென்று என் வலது கையை உங்களுக்கு காட்டுகின்றேன். நீங்கள் இரண்டு கைகளையும் குவித்து என்னைக் கும்பிட்டுச் சில நாளைக்குள் அழிந்து போகத்தக்க வரங்களையா என்னைக் கேழ்க்கின்றீர்கள். யான் உங்களுக்குப் பெருத்த மோக்ஷ சாம்ராஜ்ய பதவியைக் கொடுப்பதற்காகவே கல்லுருவமான கடவுளாய் நின்றிருக்கின்றேன்.

இரண்டு கைகளையும் குவித்துக் கும்பிடும் ரகஸ் யார்த்தம் என்னவென்றால், ஜீவாத்ம சொரூபமாயிருக்கப் பட்ட எங்களை, பரமாத்ம சொரூபமாயிருக்கும் உம்மில் ஐக்கியம் செய்துகொள் என்னும் பாவனையே இரண்டு கைளையும் குவித்துக் கும்பிடுவதற்குக் காரணமேயொழிய மற்றப்படிக்கு வேறல்ல, யான் வலது கையால் சும்மாயிரு வென்று காட்டியதுபோல் நீங்கள் எதையும் நினையாமல் சும்மாயிருப்பீர்களாகில், அப்பொழுது இராக்ஷதர்களைச் சம்மரித்த சக்கரம் இதோ என் வலது கையில் இருக்கின்றது பாருங்கள். இந்த சக்கரத்தினால் உங்கள் மனதைக் கண்டித்து அதன் பிறகு, உங்களை யான், என்னில் ஐக்கியம் செய்து கொள்வேன். உங்களை யான், என்னில் ஐக்கியம் செய்து கொண்டபிறகு, இந்த கலியுகத்தில் இன்று ஒரு ஜீவன் என்னில் வந்து சேர்ந்து ஐக்கியமாயிற்றென்று மிகவும் சந்தோஷித்து, என் இடது கையிலிருக்கும் சங்கை வாயில் வைத்து பம் பம் என்று பூரிப்பேன் என்னும் பாவனையாய் முன்னுள்ள பெரியோர்கள் நான்கு கைகளையும் நான்கு விதங்களாய்க் கல்லுகளிலும், மரங்களிலும் செய்வித்து ஆலயங்களில் வைத்துக் காட்டினார்கள். இதோ பெருமா ளானவர் மற்றொரு முறை ஸ்ரீ கிருஷ்ணாவதாரமெடுத்து காலிங்க நர்த்தனம் செய்து காட்டிய ரஹஸ்யத்தை இனி மேலே சொல்லப் போகின்றோம்.

## 23. பிரபஞ்ச விரக்தி மார்க்கம்

*"கிம் வாநேந தநேக வாஜிகரிபிஹி ப்ராப்தேந ராஜ்யேந கிம் கிம் வா புத்ரகளத்திரமித்ர பஸுபிஹி தேஹேந கேஹேநகிம் ஜஞாத்வைதத் க்ஷண பங்குரம் ஸ்பதிரே த்யரஜ்யம் மநோ தூர தஹஸ்வாத மார்க்கம் குருவாக்யதோ பஜ பஜ ஸ்ரீ பார்வதி வல்லபம்"*

"தந்தை தாய் தமர் தரா மககவன்னும் மிவை யெலாஞ்

சந்தையிற் கூட்ட மிதிலோ
சந்தேக மில்லை மணி மாட மாளிகை மேடை

சதுரங்க சேனை யுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரஜாலக் கோலம்

வஞ்சனை பெறாமைலோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்த மல பாண்டமோ
வஞ்சனை யிலாத கனவே

யெந்த நாளுஞ்சரி யெனத் தேர்ந்து தேர்ந்துமே
யிரவு பகலில்லா விடத்

தேகமாய் நின்ற நின் னருள் வெள்ள மீதிலே
யானென்ப தறவு மூழ்கிச்

கிந்தையான் நெளியாது சுழலும் வதை யென்கொலே
தேடரிப சத்தாசி யென்

சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேஜோ கயா னந்தமே."

அன்பர்களே ! இச்சரீரம் மலம் நிறைந்த பாண்டம். இராஜாதிகாரத்தால் பல பொருள்களும் ஒரிடத்தில் கொண்டு வந்து சந்தை சேர்ந்தபொழுது அச்சந்தையில் கொள்வோர் பலர்

வந்து சேர்வதுபோல், அவரவர்களின் நல்வினைத் தீவினைப் போல் அந்தந்தக் குடும்பத்தில் அனேகர் வந்து சேருகின்றார்களா தலால், தந்தை தாய் தமர்தாரம் மகவென்னுமிவை யெலாஞ் சந்தையிற் கூட்டமென்று சொல்லப்பட்டது. அதாவது தாய் தந்தை முதலானோர், சந்தையிற் கூடிய கூட்டம் போல் மத்தியில் வந்து சேர்ந்தவர்கள். சதுரங்கசேனை யென்றால் அரசர்க்குரிய நால்வகைப் படைகள், அவைகள் எவை யென்றால் தேர், யானை, குதிரை, காலாட்கள் என்பதேயாம். அன்றியும் மாடமாளிகை சதுரங்கசேனை என்பவற்றோடு கூடிய வாழ்வு இந்திர ஜாலம் போன்றது, வஞ்சனைப் பொறாமை முதலானவைகளுக்கிடமாகிய சரீரமோ கனவு போன்றது. இராஜ்ஜிய பரிபாலனமோ தோல் பொம்மை நாடகம் போன்றது. இவைகளை எக்காலத்தும் உயர்வு தாழ்வு கருதாது ஒரு நிகராகத் தெளிந்து மனமானது ஒரே நிலையில் நில்லாமல் சுழல்வதற்குக் காரணம் எதுவோ அதை இனி சொல்கிறோம். கேளுங்கள்.

மாடு மக்களுஞ் சுற்றமும் பெண்டிரு மாளிகையுடன் வாழ்வு
நாடு ராச்சிய மாண்டிடும் புகழ்ச்சியு நம்மதென்றே தேகத்தி
னூடுசென்று நீயென துடலியா னெனவுமன்றலுத்திடு நெஞ்சே
வீடுவிட் டுயிரேகிடும் போதினில் வினைவழி நுழைந்தாயே
(சிவானந்தபோதம்)

இச்சன்மத்திற்கு முன் ஜன்மங்களில் செய்த சஞ்சித கர்மயந்தத்தால் வந்த, தாய் தந்தையர்கள் புத்திரர்கள் புத்திரிகைகள் மனைவிகள் சுற்றத்தார் முதலானவர்களும் பந்துக்களாய் வந்து தோன்றித் தோன்றி, நீர்க் குமிழிகளைப் போல் மறைந்து விட்டார்கள். நாமும் அவ்வாறே இனி மறைந்துவிடப் போகிறோம். ஆதலால்,

"எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா
னியாதினு மரிதரிதுகா
ணிப்பிறவி தப்பினா லெப்பிறவி வாய்க்குமோ
யேது வருவோ வறிகிலேன்."
"தந்தையார் தாயருடன் பிறந்தார் தாரமார்
புத்திரரார் தாந்தாமாரே
வந்தவா றெங்ஙனே போமாறேதோ மாயமா
மிதற்கேது மகிழவேண்டாம்
சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்பின் றிகழ் மதியும்
வாளரவுந் திளைக்குஞ் சென்னி
எந்தையார் திருநாம நமச்சிவாய வென்றெழுவார்க்
கிருவிசும்பி லிருக்கலமே!"
"பந்தமெனு மக்கள்மனை வீடுதோட்டந் துறவு
பணைமாகு மிதுக ளெல்லாம்
பாரினில் வரும்போது மந்ததிலை நாளைக்குப்
பாடைமேல் போகும்போது
சொந்தமென வந்திடா திடையனிற் கனவுபோல்
தோன்றிய யழிவதென்று
சுத்தமா யெண்ணாமல் நித்தமே சதமென்று
தொல்லுலகி லெண்ணி நாளும்
வந்தமட மாதினோ டினிதரக வாடியே
வலிவையெல் லாமி ழந்து
வாழ்நாட் கழித்துட னிறப்ப தன்யாயமே."
"தந்தையார் போயினார் தாயாரும் போயினார்
தாமும் போவார்.
கொந்தவேல் கொண்பொரு கூற்றத்தார் பார்க்கின்றார்
கொண்டு போவார்
ரெந்தநாள் வாழ்வதற்கே மனம் வைத்தியா
லேழை நெஞ்சே
யந்தணா ரூர்தொழு துய்யலா மையல் கொண்
டஞ்சநெஞ்சே."

(திருஞானசம்பந்தர்)

என்பதுபோல, இவர்களெல்லோரும் மாயையால் உண்டா யினும் அஞ்ஞானிகள், சரீரமே நித்தியமென்றும் இந்தச் சம்சாரமே சாஸ்வதமென்று எண்ணி மாயையால் கட்டுப் பட்டு, சரீர சம்பந்தமான பார்யாள் புத்திரர்கள் மரண மடைந்தவுடன் அவர்களுக்காகத் துக்கித்துக் கொண்டும், மறுபடியும் திரவ்வியம் சம்பாதிக்கப் பிரயத்தினம்பட்டுக் கொண்டும், காமக் குரோத லோப மோஹ மத மச்சராதி களை அநேக விதங்களாய் விஸ்தரித்துக் கொண்டு, நமக்கு எந்த விதத்திலும் திரவ்வியம் கிடைத்தால் போதுமென்று துச்சமான வியவகாரங்களைச் செய்து, திரவ்வியத்தைச் சம்பாதித்துக் கொண்டு, இதுவே நமக்குச் சுகம் இதைவிடக் சுகம் வேறில்லை யென்று நிச்சயித்து அந்தகர் (குருடர்) களைப்போல் காமத்தினால் (ஆசையினால்) தமக்கு எந்த கதி உண்டாகுமோவென்று தெரியாமல் வேடன் வலையில் அகப்பட்டு மதி மயங்கிக் கிடக்கும் பக்ஷிகளைப்போல் புருஷர்கள் ஸ்திரீகளின் மோகவலையில் அகப்பட்டமுந்தி, எழுந்திராதபடி ஈஷணாத் திரயகளென்னும் சமுத்திரத்தில் மூழ்கி, பெண்டு புள்ளைகளின்மேல் ஆசை அதிகரித்து அவர்களுக்காகத் தனத்தைச் சம்பாதித்து அவர்களால் சுகத்தையடையாமல் வாழ்நாளெல்லாம் துக்கமாய்க் காலங்கழித்து, சரீரம் விழும்போது அநேகவித யம பாதை களையடைந்து, நரக்குழியில் சில நாளிலிருந்து பரமாத் மாக்களாய் பிரபஞ்சத்தில் பிறந்து பிறந்து இறந்திறந்து இம்மையிலிருந்து மறுமைக்கும் மறுமையிலிருந்து இம்மைக்கு கணக்கில்லாமல் உழன்று அநேக கஷ்ட்டங்களை யனுபவிக்கின்றார்கள். குக்ஷுமதிருஷ்ட்டியினால் பார்த்தபோது தேகம் வேறு தான் வேறாகக் காணப்படும். ஆகையால் ஸ்திரீ புருஷர்களெல்லோரும் பிராந்தியினால் தேகமும் தானும் ஒன்றென மயங்கி, காமாதி தசவர்க்கங் களையே விருத்தி செய்து நசிக்கின்றார்கள். காமாதி தசவர்க்கமென்றால், காம குரோத லோப மோக மத மச்சரடம்ப தர்ப்பார்வை அசூயை என்பனவேயாம்.

ஆசையாற் சந்திரனங்கந் தேய்ந்தனன்
ஆசையாற் சவுபறியறிவை நீக்கினான்
ஆசையா னராசுரனாவி போக்கினான்
ஆசையால் வாலியு மழிந்து போயினான்.

1. *காமமென்பது, தநம்தாந்நியம் புத்திர பௌத்தி ராதிகளின் மேல் அதிகப் பிரீதி வைத்தது. இத துயரமடைந்தவர் நரகாசூரன் முதலியோர்.*

2. *குரோதமென்பது : ஒருவனுக்குக் கெடுதி விளைவிக்கிப் பிரயத்தினம் செய்ய இச்சை கொள்ளுதல். இக் குணத்தால் துயரவடைந்தவர் பகாசுரன்.*

3. *லோபமென்பது : தனது சொத்திலிருந்து ஞாநிகளுக்கும் சிறிதேனும் கொடுக்கக் கூடாது என்னும் எண்ண மிருத்தல், சான்று துரியோதனன்.*

4. *யோகமென்பது : புத்திர களத்திராதிகளின் மீது அதிக பிரீதி வைத்துத் தனக்கு உண்டாயிருக்கும் பொருள் போதாதென்றும், இன்னும் அதிகம் சம்பாதிக்க வேண்டும் மென்னும் ஆசையை விருத்தி செய்தல். இப் புத்திர சோகத்தால் துயரமடைந்தவர் தசரதமகாராஜன்.*

5. *மதமென்பது : திரவ்வியம் அதிகரிப்பதனால் இதரர்களை லக்ஷியம் வைக்காமல் பேசுதல், இதனால் துயரமடைந்தவர் கார்த்த வீரியார்ச்சுனன்.*

6. *மச்சரமென்பது : தன்னைபோல் பிறரும் சுகமநு பவித்தலைச் சகியாமையை விளைவிக்கும் சித்த விருத்தியையுண்டாக்குதல். இக்குணத்தால் துயர மடைந்தவர் சிசிபால தந்தவக்கிரன்.*

7. *டம்பமென்பது : பலர் மெச்ச தர்மம், யாகம் முதலானவைகளைச் செய்தல், இதனால் துயர மடைந்தவர் புரூரச்சக்கரவர்த்தி,*

8. தர்ப்பமென்பது : புத்திர மித்திர களத்திர தனதான்யாதி சம்பந்துகளின் தனக்கு நிகாரனவர்கள் ஒருவருமில்லை என்று கர்வப்படுதல். இதனால் துயரமடைந்தவர் பரசுராமன்.
9. ஈர்ஷை : தனக்கு நேர்ந்த துக்கம் பிறருக்கும் நேரிட வேண்டுமென்று எண்ணுதல். இதனால் கெட்டவர் அருணாக்ஷதன்.
10. அசூயை என்பது : கெடுதி செய்தவனுக்கு மறுபடியும் கெடுதி செய்விக்க வேண்டுமென்று எண்ணுதல். இக் குணத்தால் துயரமடைந்தவர் பவுண்ரீக வாசுதேவன்.

இதன் விவரங்களை, ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந சம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை அ 3 சு-40, அ 6 சு-7, 36, இவைகளில் விரிவாய்க் காணலாம். அன்றியும் அத்யாயம் 16, சுலோகம் 13 - 14 - 15 - 16 - ல் ஸ்ரீகிருஷ்ண பகவான் சொல்லுகின்றார்.

இதமத்ய மயாலப்த மிமம்ப்ராப்ஸ்யே மநோரதம்
இத மஸ்த்தீத மபிமே பவிஷ்யதி புநர்த்தநம்
அஸௌ மயாஹதஸ்ஸத்ரு ரஹநிஷ்யேசா பரா நபி
ஈஸ்வரோஹ மஹம்போகீ ஸிததோஹம் பலவாந்ஸுகீ
அட்யோபிஜநவா நஸ்மிகோ ந்யோஸ்தி ஸத்ருஸோ மயா
யக்ஷ்யே தஸ்யாமி மோதிஷ்ய இத்யஞ் ஞாநவிமோ ஹி
அநேகசித்தவிப்ராந்தா மோஹஜால ஸமாவ்ருதாஹ
ப்ரஸக்ததாஹ காமபோகஷு பதந்தி நரகஸுசௌ.

இந்த வஸ்துவானது என்னால் சம்பாதிக்கப்பட்டது. இந்தக் காரியத்தை நிறைவேற்றுவேன்; பொருள் எனக்கு அளவற்றுக் கிடக்கின்றது; இவ்வளவு தனமும் எனக்கு மறுபடியும் உண்டாகப் போகின்றது; இந்தச் சத்ருவானவர் என்னால் கொல்லப்பட்டால்; மற்றுமுண்டான பகைவர் களையும் நான் கொல்லுவேன்; நான் கோடீஸ்வரன்; நான் போகங்களில் மிகுந்தவன்; நான் மகா சாயகாலுள்ளவன்; நான

சுகசௌக்கியங்களை யுடையவன்; நான் பலமுடையவன்; நான் சகல சம்பத்துக்களுடன் நிறைந்திருப்பவன்; தலைமுறை தலைமுறையாய் நல்ல குலத்தில் அவதரித்து வந்தவர்களின் வம்சத்தில் நான் பிறந்திருக்கிறேன்; எனக்குச் சமானமானவன் வேறொருவனுமில்லை; நான் செய்யும் யஞ்ஞ யாகங்களைக் கண்ணுற்றுப் பார்த்தவர்கள் வெட்கமடையும்படிச் செய்வேன்; கூத்திகள் முதலிய சம்பிரமங்களுக்கு வேண்டிய பொருளைக் கொடுப்பேன் என்று நினைக்கப்பட்டவர்கள் அஞ்ஞானத்தினால் புத்தி மோசம் போய் பலவித சஞ்சலத்தினால் சித்தம் மருண்டு மனைவி மக்கள் சுற்றம் என்கிற மோகவலையில் அகப்பட்டு இது வரையில் சொல்லிய விஷய போகங்களில் அதிக இச்சை யுடையவர்கள், அசுத்தமும் அகோரமுமான நரகத்தில் விழுவார்கள், ஸ்ரீபகவத் கீதை அத்யாயம்-16 சுலோகம்-17 -18-19 பிரமாணம் என்னவென்றால்,

ஆத்மஸமபாவிதாஹ ஸ்தப்தா தநமா தாந்வி தாஹ
யஜந்தேநாம யக்ஞைஸ்தே தமபேநாவிதி பூர்வகம்
அஹங்காரம் பலம் தர்பபம்காமம்க்ரோ தஞ்சஸம்ஸ் ரிதாஹ
மாமாத்பரதேஹேஷு ப்ரத்லிஷந்தோப்யஸு யகாஹ
தாநஹம்த்விஷத க்ரூராந ஸம்ஸாரேஷு நாரதமாந்
க்ஷி பாம்யஜஸ்ர மஸுபா நாஸுரீஸ்வேவயோநிஷு

தன்னைத்தான் புகழ்ந்து கொள்பவர்களும் செல்வத் தினால் கர்வமடையப் பட்டவர்களும், அகங்காரத்தையும் பலத்தையும் ஆசையையும் கோபத்தையும் உடையவர்களும், தன் தேகத்திலும் இதரர்களின் தேகத்திலும் ஆத்மாவா யிருக்கும் என்னைத் தூஷிப்பவர்களும், தன்னை ஞானி யென்று உலகில் காட்டிக் கொள்ளும் பொருட்டு வேத விதியை விலகிப் பார்ப்பவர்களுக்கு மாத்திரம் பூஜை செய்கிறவனைப் போல் நடித்துக் காட்டுகின்றவர்களும், துவேஷமுடையவர்களும் க்ரூர சுபாவ குணமுடையவர் களும், அசுத்த முடையவர்களும் நகரில்

அத்மராகவும் இருக்கின்ற இவர்களையும் ஜநந மரண மார்க்கங்களில் அசுர யோனிகளிலேயே எப்பொழுதும் நான் போட்டுக் கொண்டிருப்பேன். என்றால், இராக்ஷதர்கள், இன்னும் புலி முதலாகிய துஷ்ட ஜன்மங்களில் தள்ளுகின்றேன். ஸ்ரீபகவத் கீதை அத்யாயம்-16, சுலோகம்-7, பிரமாணம் என்னவென்றால்,

ப்ரவ்ருத்திஞ்ச நிவ்ருத்திஞ்ச ஜநா நவிது ராஸுராஹ
நஸௌச சம்நாபிசாமாரோ நஸத்யம் தேஸுவித்யதே

அசுர சுபாவத்தையுடையவர்கள் புருஷார்த்தத்தை அடைவதற்குரிய காரியத்தில் பிரவேசிக்காமல், இதற்கு விரோதமாயிருக்கும் அதர்மத்தையே செய்து வருகின்றார்கள். இப்படிப்பட்டவர்களிடத்தில் மனோ சுத்தி யென்பது இல்லை. தனது வர்ணாசிரமத்திற்குரிய நடையும் சீலமும் ஆசாரமும் சத்தியமும் நம்பிக்கையும் இவர்களுக்கு இல்லவேயில்லை அத்யாயம்-16, சுலோகம்-4.

தப்போ தர்போ பிம நஸ்ச்ச க்ரோதஹ பாருஷ்ய பேவக
அஞ்ஞாநம பிசாஜா தஸ்ய பார்த்த ! ஸம்பத மாஸுரீம்

ஓ! பார்த்தா! ஓ அர்ஜுநா, கீர்த்தியை விரும்பி, பலர் மெச்ச தர்மம் முதலானவைகளைச் செய்தல், பெரியோர்களுக்கும் நல்லோர்களுக்கும் அடங்காமை, தன்னைத் தான் புகழ்ந்து கொள்வதும், என்னை மதிக்கயில்லையென்று பிறர்மேல் துவேஷிப்பது, கடினமாக எவரையும் எடுத்தெறிந்து பேசுவது முதலான குணங்களுடையவனாயும், நன்மை தீமைகள் எடுத்துச் சொல்லியும் கேளாமற் தன்னிஷ்டம்போல் மூட நடக்கையுடன் இருப்பவன், அசுர குணமுடையவனேயாம், அத்யாயம் 16, சுலோகம் 21.

த்ரிவிவம் நரகஸ்யேதம் த்வாரம் நாஸக மாத்மாஹ
காம : க்ரோத லோப ஸ்தஸ்மா தேத்தரம் த்யஜேத் :

உலகத்தில் வேத விதிப்படி நடக்கவேண்டுமென்கிற மனமுடையவராயிருந்த போதிலும், காமக் குரோதாதி குணங்களை விடாமலிருந்தால் இவர்களையும் அசுர யோனியில் செலுத்தி நரகத்துக்கு வழி காட்டுவேன். ஆதலால், இவற்வையெல்லாம் விடவேண்டும். அத்யாயம்-16, சுலோகம்-20.

ஆஸுரீம் யோநி மாபந்த மூடா ஜந்மநி ஜன்மநி
மாமப்ராப்யைவ கௌந்தேய! ததோ யாந்த்யதமாம் கதிம்

ஓ! குந்தீபுத்ரா! ஒவ்வொரு ஜன்மத்திலும் அசுர சுபாவத்திற்குரிய பிறவியை அடைந்த மூடர்கள், என்னை அடைய சக்தியில்லாமல் அதிலிருந்து மற்றொரு அதிக நீசமான ஜன்மங்களை அடைகின்றார்கள், ஆதலால் இவைகள் யாவும் தள்ளத்தக்க குணங்களேயாம்.

இனி கொள்ளத்தக்க குணங்களைச் சொல்லு கின்றோம் கேளுங்கள் :-- அவை, இச்சை, பக்தி, சிரத்தை

1. இச்சை என்பது:- அன்னபானாதிகளை யுட்கொள்ள வும், மலமூத்திரங்களை வெளியில் தள்ளவும் விரும்புதல், இவைகளைச்செய்யாவிடில் தேகபாதை உண்டாகும் இதைச் செய்வதனால் பிறருக்குச் கெடுதியாதொன்றுமில்லை.

2. பக்தி என்பது :- குருவினிடத்திலும், ஈஸ்வரனிடத் திலும் அதிக நேசம் வைத்து இடைவிடாப் பேரன்புடன் துதித்தல்.

3. சிரத்தை என்பது :- குரு வாக்கியத்திலும் சாஸ் திரத்திலும் முழு நம்பிக்கை வைத்தல்.

மேற்கூறிய காமக் குரோதாதி பத்து குணங்களும், பிறவிக் கேதுவாகிய பலவித எண்ணங்களை விளைவித்து, ஜநந மரணமென்னும் சமுத்திரத்தில் அழுந்தச்செய்யும். ஆதலால்,

அக்குணங்களை அறவே விட்டு பின் கூறிய மூன்று குணங்களைக் கடைபிடித்தொழுகினோரே மூமூட்சுக்களாய் முக்தி அடைவார்களென்பது கற்றுணர்ந்த பெரியோர்கள் கருத்து.

"தோன்றுங் குணங்கள் பத்தும் நீக்கிப்பின்
மூன்று குணம் கொல்ளவோ றுந்தீபற
மூமூட்சுக்க ளாவா ரென் றுந்தீபற." (உந்தியார்)

ஒவ்வொரு மனிதனிடத்திலும் மேற்சொல்லிய காமக் குரோதாதி பத்து குணங்கள் இல்லாவிடினும் அவைகளில் இரண்டு அல்லது ஒரு குணமாகிலும் ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களிடத்திலும் இருந்தே தீரும். அதை எப்படித் தெரிந்து கொள்ளலாமென்றால் மேற்சொல்லிய காமக் குரோதாதி பத்து குணபேத விவரங்களையெல்லாம் வாசித்து கொண்டு வரும்போதும் தம்மிடத்திலுள்ள துர்குணம் இதுவென்று நன்றாய் தமக்கே தெரியவரும். இப்பத்து குணங்களே மனிதர்களுக்கு ஆலகால விஷமா யிருந்து ஜநந மரணங்களை விருத்தி செய்துகொண்டே வருகின்றன. இந்த பத்து துர்க்குணங்களையே கர்ம காண்டத்தில் தச கண்டன் என்றால், பத்துத்தலை இராவண னென்று சொல்லப் படுமேயொழிய இந்தக் காமக் குரோதா திகளைவிட வேறே பத்துத்தலை இராவணன் இல்லை. இது விஷயங்களையெல்லாம் இனி சொல்லப்போகும் சம்சார வாசனை வாசனாத்திரயங்கள் என்னும் விஷய அட்டவணை யில் பார்க்கவும். இனி காலிங்க நர்த்தன ரக்ஷஸ்யார்த்தம் இதனடியில் சொல்லப்போகின்றோம் கேளுங்கள் :-

## 24. காலிங்கநர்தன ரஹஸ்யார்த்தம்

படத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் காலிங்க மடுவிலிருக்கும் ஐந்து சிரசுகளையுடைய நாகேந்திரனது சிரசின் மேல் தன் பாதத்தை வைத்து நர்த்தனம் செய்து அதன் கர்வத்தையெல்லாம் அடக்கியதாக சொல்லுகிறார்கள். இந்த காலிங்க நர்த்தனம் ரகஸ்யார்த்தம் எதுவோ அதை இனி இதனடியில் சொல்லப் போகிறோம்.



ஸ்ரீ கிருஷ்ணபகவான் காலிங்க மடுவிலிருக்கும் ஸர்ப்பராஜன் கர்வத்தை அடக்கியது

நாம் உள்ளுக்கிழுத்துக்கொண்டும், மறுபடியும் வெளியில் விட்டுக் கொண்டுமாயிருக்கும் மூச்சுக்கு கால் என்று சொல்லப்படும். இந்த மூச்சு என்னும் காலுக்கு இருப்பிடம் எதுவென்றால், நாபி, நாபி என்றால் தொப்புள், இந்த தொப்புளானது எப்படியிருக்கிற தென்றால் மடுவைப் போல் வட்டமாயிருக்கிறது. மடு வென்றால் ஜலம் ஓடிக்கொண்டிருக்கும் நதியில் எவ்விடத்திலாகிலும் ஓரிடத்தில் விசேஷ ஆழமாய் ஜலம் நின்றிருக்கும். அந்த ஜலம் நின்றயிடம் வட்டமாயிருக்கும். ஆதலால், அதற்கு மடு வென்று பெயருண்டாயிற்று.

அதுபோல் நமது தொப்புளும் மடுவைப்போல வட்டமாயிருக்கிறது. இந்த தொப்புளென்னும் மடுவில் மூச்சு என்னும் காலானது லிங்கம்போல் நேராய் நின்றிருக்கும். மூக்குத் துவாரங்களின் வழியாய் வெளி வந்து இமைக் கொட்டு மவ்வளவு நேரமும் சும்மாயிராமல் இரவு பகலு மாய் நர்த்தனம் செய்து கொண்டே இருக்கின்றது. அதாவது மூச்சு என்னும் காலானது தொப்புள் என்னும் மடுவில் இருந்து புறப்பட்டு அடி பெருத்து நுனி சிறுத்து லிங்கம் போல் நின்றிருக்கும். மூக்குத் துவாரங்களின் வழியாய் வெளி வந்த மூச்சானது மேலும், கீழுமாய் ஏறி இறங்கி நர்த்தனம் செய்வதனால் இதற்குக் காலிங்கமென்று சொல்வதற்குக் காரணமாயிற்று, என்றால், தொப்புளுக்கே மடுவென்றும், நாம் உள்ளுக்கிழுத்து வெளியில் விடும் மூச்சுக்கே காலென்றும் புருவ மத்தியிலிருக்கும் சுழுமுணைக்குக்கீழ் அடிபெருத்து நுனி சிறுத்து நேராய் நின்றிருக்கும். மூக்குத் தண்டுக்கு லிங்கமென்று சொல்லப்படும்.

ஆதலால் மூச்சு யென்னும் கால் தொப்புள் என்னும் மடுவிலிருந்து புறப்பட்டு மூச்சு யென்னும் லிங்கத்தின் வழியாய் வெளிவந்து எப்போதும் இமைக்கொட்டும் மவ்வளவு நேரம் சும்மாயிராமல் இராபகலுமாய் ஏறி இறங்கி நர்த்தனம் செய்து கொண்டே இருக்கின்றது. இவ்வாறாக நர்த்தனம்

செய்துகொண்டிருக்கும் மூச்சு யென்னும் காலின் வேகத்தை யோக சாதனையினால் மிதித்து அம்மூச்சியென்னும் காலின் வேகத்தை அடக்குங்கள். யோகசாதனை செய்து மூச்சுயென்னும் காலின் வேகத்தை அடக்குவீர்களாகில், அதனால் உங்கள் மனம் இறந்து, மோக்ஷமென்னும் வீட்டை அடைவீர் களென்று காட்டுவதற்காக ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர் மூச்சு யென்னும் கால் தெரியாத வஸ்து.

ஆதலால் இந்த மூச்சே கால் என்று காட்டுவதற்காக தன் காலைத் தூக்கி நர்த்தனம் செய்து காட்டினாரேயொழிய இதைவிட வேறே காலிங்க நர்த்தனம் அவர் செய்து காட்ட வில்லை. இது யோகத்தின் இரகஸ்யம் இந்த யோகத்தின் ரகஸ்யத்தை உலகத்திலுள்ள மானவ ஜனங்களுக்கெல்லாம் எவ்விதமாய் காட்டினாரென்றால் சரீரத்திலிருக்கும் பிராண, அபான, உதான, சமான, வியானனென்னும் ஐந்து பிராணங்களையே ஐந்து சிரசுடைய நாகேந்திரனாகவும், மூச்சுயென்னும் காலையே தன் பாதமாய்க் காட்டி நாகேந்திரன் சிரசுன்மேல் வைத்து ரத்தம் கக்கும்படி நர்த்தனம் செய்து காட்டுவது போல் நீங்களும் உங்களுக்குள்ளிருக்கும் மேற்சொல்லிய ஐந்து பிராணங்களின் கொழுப்பை அடங்குங்கள் என்று சொல்ல வாயில்லாமலிருப்பதனால் பாம்பின் சிரசின்மேல் தன் காலை வைத்து நர்த்தனம் செய்து காட்டினார். இந்த ஐந்து பிராணங்களின் விவரங்களையெல்லாம் கீழ் சொல்லப் போகின்றோம்.

## 25. ஐந்து சிரசுகளையுடைய நாகேந்திரன் இரகஸ்யம்

தேவருலகத்திலும், பூலோகத்திலும், அல்லது மற்ற எந்த உலகத்திலும் ஐந்து சிரசுகளையுடைய நாகேந்திர னென்பதும் இல்லவேயில்லை. நமது சரீரத்திலும் பிராண, அபான, உதான, சமான, வியானனென்னும் பஞ்ச பிராணங் களே அதாவது ஐந்து பிராணங்களே ஐந்து சிரசுகளையுடைய நாகேந்திரனென்று சொல்லப் படுமே யொழிய இந்த பஞ்ச பிராணங்களைவிட வேறு நாகேந்திரன் எவ் விடத்திலுமில்லை. இந்த ஐந்து பிராணங்களையும் ஐந்து சிரசுகளையுடைய நாகேந்திரனாய் எப்படிச் செய்வதும் காட்டினார்களோ அதை இனி சொல்லப் போகிறோம் கேளுங்கள்.

1. பிராணவாயுவு :- இது இருதயத்திலிருந்து மூக்குத் துவாரங்களின் வழியாய் உள்ளுக்கும் வெளிக்குமாய் மூச்சியென்னும் பெயருடன் ஏறிக்கொண்டும், மறுபடியும் இறங்கிக் கொண்டுமாயிருக்கின்றது. இந்த மூச்சிக்கு யஞ்ஞோபவிதமென்றும், பிரம்ம சூத்திரமென்றும் ஹம்ஸ மென்றும், பிராணனென்றும் உயிரென்றும், ஜீவனென்றும், நூல்யென்றும், வாசியென்றும், பாதமென்றும், காலென்றும், குதிரையென்றும் இத்தனைவித பெயர்களுடன் இருப்பது மேவல்லாமல் ஐந்து வாயுவுகளிலும் இந்த பிராணவாயுவு மிகவும் முக்கியமான வாயுவாயிருப்பதனால் ஐந்து சிரசையுடைய நாகேந்திரனுக்கு இந்த பிராணவாயுவை நடுசிரசாய் வைத்துக் காட்டினார்கள்.

2. அபானவாயுவு :- இது குதத்தினிடமிருந்து மல மூத்திரங்களை வெளியில் தள்ளச்செய்யும். இந்த அபான வாயுவை நாகேந்திரனுக்கு நடுசிரசாய் வைத்துக் காட்டிய பிராணவாயுவிற்கு வலது புறமாய் இந்த அபான வாயுவை நாகேந்திரனது இரண்டாவது நாகன் சிரசாய் செய்து வலது பக்கம் ஒட்டிக் காட்டினார்கள்.

3. உதானவாயுவு :- இது கண்டத்தினிடம் இருப்பது. நாகேந்திரனது நடுசிரசாய் வைத்து காட்டிய பிராண வாயுவிற்கு இந்த உதானவாயுவை, மூன்றாவது நாகன்சிரசாய் செய்து அதன் இடது பக்கம் ஒட்டிக் காட்டினார்கள்.

4. ஸமானவாயு ! இது நாபி ஸ்தாஸத்தில் இருப்பது இந்த ஸமானவாயுவை நாகேந்திரனுக்கு நான்காவது நாகன் சிரசாய்ச் செய்து அதன் வலது பக்கம் ஒட்டிக் காட்டினார்கள்.

5. வியானவாயுவு ; இது சரீரமெங்கும் வியாபித் திருப்பது இந்த வியானவாயுவை, நாகேந்திரனுக்கு ஐந்தாவது நாகன் சிரசாய்ச் செய்து அதன் இடது பக்கம் ஒட்டிக் காட்டினார்கள்.

ஆகமொத்தம் இந்த பஞ்ச பிராணன்களென்னும் ஐந்து வாயுக்களையும் ஐந்து சிரசையுடைய நாகேந் திரனாய்ச் செய்து ஒரே படமாய் ஒட்டிக் காட்டினார்கள். இந்த பஞ்ச பிராணன்களினுடைய கொழுப்பை யெல்லாம் யோகபலத்தினால் அடக்கிவிடவேண்டும். பஞ்ச பிராணன் களினுடைய யோக பலத்தினால் அடக்கிவிட்டால் அப் பொழுது மனம் இறந்து போக நித்திரை செய்யலாமென்று காட்டுவதற்காக ஸ்ரீ ரங்கத்தில் ஸ்ரீ ரங்கநாதர் ஆதிசேஷன் மீது சயனித்து யோகனித்திரைச் செய்வதாய் மானவ ஜனங்களுக்குக் காட்டியிருக்கின்றார்கள். யோகம் சித்தி யானால் அதன் பிறகு ஞானம் தனக்குத் தானாகவே சித்திக்கும், யோகம் சித்திக்காவிடில் ஞானம் சித்திக்க மாட்டா. இப்படிப்பட்ட ஸ்திதிக்குவந்த யோகி எப்படி யிருப்பானென்றால் எவ்வித பற்றுதலுமில்லாமல் நிஷ்க் களங்கமாய்ப் படிகம் போல் பிரகாசித்துக் கொண்டிருப்பான்.

பன்னிறங் கவருந் தொன்மைப் படிக நீடொனியும் பன்மை
மன்னிலங் கியல் புந் தந்தவரொளி போல வையநீ
தன்னகம் பயிலு நற்கிற் சடங்களின் நன்மை தாவா
நன்னிலம் பெறநி றைந்த ஞானமே ஞானமென்பர்

(சிவப்பிரகாசம்)

படிகலிங்கத்தின் எதிரில் வெண்மை வர்ணமுடைய புஷ்பத்தைக் காட்டியபோது, அப்புஷ்பத்தின் பிரதி பிம்பம் அந்தப் படிக லிங்கத்தில் வெண்மைநிறமுடையதாகவும், சிவப்பு வர்ணமுடைய புஷ்பத்தை காட்டிய போது சிவப்பு நிறமுடைய தாகவும், பச்சை வர்ணமுடைய புஷ்பத்தைக் காட்டியபோது பச்சை நிறமுடையதாகவும் காணப்படும். இவைகளையெல்லாம் களைந்து பார்க்கும்பொழுது சுத்த வெண்மையுடைய படிகலிங்கமாய்த் தன் நிஜசொரூபத்துடன் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அதுபோல், நமது சரீரத்திற்குள் இருக்கும் ஆத்மா மேற்படி படிக லிங்கம் போல் பரிசுத்தமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற தென்று அறிக இவ்வித ஆத்மாவானது. மேற்சொல்லிய காமக்குரோதாதி என்னும் அழுக்குகளால் மூடப்பட்டிருக்கின்றன. இதையே பசு பதி பாச மென்று சொல்லப்படும். அதாவது, பசு என்றால் நாம்; பதி என்றால் கடவுள் பாசம் என்றால் நமக்கும் கடவுளுக்கும் மத்தியில் இருக்கப்பட்ட ஆசையென்னும் திரை இந்த ஆசையென்னும் திரை இந்த ஆசையென்னும் திரையை யார் ஒருவர் நீக்கிவிடுகிறார் களோ அப்பொழுது அவர்களின் பசுத்தன்மை நீக்கப் பெற்று பதியாய் விடுகிறார்கள். அதாவது பசுக்களாயிருக்கும் ஜீவாத்மாக் களெல்லோரும் பதியதாயிருக்கும் பரமாத்மாவில் ஐக்கியமா கின்றார்கள், இந்தப் பசுவென்னும் ஜீவாத்மாவானது அஞ்ஞானத்துடன் கூடியிருப்பதனால் ஞானரத்னம் மறைவு பட்டிருக்கின்றது, அஃதெப்படி என்றால் ஒரு வீட்டில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் தீபத்தை ஒரு கூடைகொண்டு மூடினால் அஃது எப்படி கூடைக்குள் மாத்திரம் பிரகாசித்துக் கொண்டு மற்ற இடங்களை இருட்டடையச் செய்யுமோ அதுபோல் நம்மிடத்திலுள்ள ஜோதி சொரூபமாகிய ஆத்மா முற்கூறிய காமக்குரோதாதியென்னும் ஆசையினாலும் ஈஷணாத்திரயங்களினாலும் மூடப்பட்டிருக்கின்றது இவை களையே பாசமென்று இதுவரையில் சொல்லி வந்தோம். இந்த பாசத்தையும் ஈஷனைத் திரயங்களையும் பஸ்பம் செய்து பார்க்குமளவில் அவ்விடம் சேஷமாய் ஒன்றுமில்லாத

ஆகாசவடிவே நிற்கும். அந்த ஆகாச வடிவந்தான் நீ, அதுதான் ஆத்மா அது தான் சிதம்பர ரஹஸ்யம். அதுதான் ஆத்மா அது தான் சித்திர குப்தன் என்று சொல்லப்படும். ஆதலால் துக்ககம் அதிகரித்துத் தமது கதிகானாமல் கர்மானு சாரமாய் ஒவ்வொருவரும் அநுபவிக்கும் சுகம் துக்க சுகமேயாம், பூமியெல்லாம் பரிபாலனம் செய்த போதிலும் இந்திரலோக பதவியும் வரவேண்டுமென்று தோன்றும். நாம் அநுபவிப்பது தாழ்ந்த தென்றும் எண்ணிப் பிரமலோக பரியந்தம் அடைந்த போதிலும் அவைகளெல்லாம் துக்கசுகமேயாகும். சுய சொரூப ஸ்திதியைப் பெற்று மோக்ஷாநந்தத்தை அடையப் பட்டவர்களுக்கு இவைகளெல்லாம் துச்சமேயாம். ஸ்திரீகளின் மோக வலையில் அகப்பட்டு மின்னலைப்போல் க்ஷணத்திற்குள் அழியத்தக்க சிற்றின்பங்களை அனுபவித்து மீண்டும் எழுந்திருப்பதற்குச் சக்தியில்லாமல்,

துன்பநுகரும் வினையின் தொடர்ச்சியினோ
ரின்பநுகர்வார் போலேந் திழையார் கட் பட்டார்
தன்பன மிகநடுங்க ஞானிதசையில்லா
வென்பு கறித்ரதிட்டா லிருஞ் சுவையும் நெற்றிடுபேக

என்னும் ஸ்கந்த புராண வாக்கியரீதியாய் சக்தி யில்லாத எலும்பை நாயானது கடித்து யாதொரு ருசியை அறியாததுபோல் துன்ப மனுவிக்கவேண்டிய பிராரப்த வினையையுடையவர்கள், இன்பம் அனுபவிப்பவர்களைப் போல் நினைத்து * வீசுகோசப் புழுவைப் போல வழிதெரியாமல் காமக் குரோத லோபங்களினால் ஆழ்ந்து உழலுகின்றார்கள். இதற்கு ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம் 6, சுலோகம் 11, 12.

சிந்தா மபரிமேயாம் சப்ரளயாந்தா முபாஸ்ரிதாஹ
காமோபபோகபரமா ஏதாவ திதி நிஸ்சிதாஹ
ஆஸாபாஸஸதைர் பத்தாஹ காமக்ரோத பராயணாஹ
ஈஹந்தே காமபோகார்த்த மந்யாயே நார்த்தஸஞ்சயாத்.

இப்படிப்பட்ட மனிதர்கள், பிரதிதினம் அனேக எண்ணங்களையுடையவர்களாய் சாகும்மளவும் அளவு கடந்த துக்கத்தை அடைந்தவர்களாயும், பெண்கள் ஆசையே புருஷார்த்தமாக நினைத்து இதுதான் மோக்ஷ மென்று நிச்சயித்தவர்களாயும், ஆசை என்னும் அநேக கயிறுகளால் கட்டப்பட்டவர்களாயும், காமக்குரோத முதலியவற்றையே பிரதானமாகக் கொண்டவர்களாயும் காமானுபவத்தின் பொருட்டாகவே கெட்ட வழியில் திரவ்வியக் குவியலைச் சம்பாதிக்கின்றார்கள். இவர்களுக்கு உண்டாயிருக்கும், ஈஷணாத் திரயங்களைப்பற்றி இனி இதனடியில் சொல்லப்போகின்றோம்.

ஈஷணாத் திரயமென்பது:- தாரேஷணை, புத்தி ரேஷணை, தநேஷணை,

அத்துவீக நூல்களவை யோது மீஷணைகள்
சத்துவ மிறரேசஷணை யுடனேலி யொத்து
வருபுத்தி ரேஷணையு மாறாம லன்பு
தருமோரர்த் தேஷணையுந் தான்.



* வீசுகோசாப் புழுவானது நுண்ணியதாகிய நூலை ஒரு வழியுமில்லாத கூடாகக்கட்டி அதிலிருந்துதான் வெளியில் புறப்பட்டுப் போக வழிகாணாமல் அந்தக் கூண்டிற்குள்ளவே இறக்குந் தன்மையைப்போல், மனிதன் பஞ்ச பாசங்களினாலும் தத்துவாதத்வங்களினாலும் பந்தப் பட்டு ஈனமாகிய ஜனநமகரண துக்கங்களையடைவான்.

## 26. தாரேஷணை

*தாரேஷணை:- பார்யாளின் மீது ஆசை கொள்ளல்*

சுலோலி ஸந்யாஸ மக்நிஹோ த்ரஞ்ச த்விஜா தீ தாம்
(ப்ரஸஸ்யதே

*என்னும் சித்தாந்த வசனங்களில், புருஷர்கள் பிரமசரிய விரதம் பூண்டு மோக்ஷா பேக்ஷயுடையவர்களாயிருந்தால் சந்நியாஸாசிரமும், காம சுகத்தில் இச்சையுடையவர் களாயிருந்தால் அக்கிநி சாக்ஷியாய் விவாகம் செய்து கிருகஸ்தாசிரமும் கைக்கொள்ளல் வேண்டும். பிரமசாரியா யிருந்து சந்நியாசம் பெற்றவர்கள் சாங்கியர்களென்றும், பிரமசாரியாயிருந்து கிருகஸ் தாசிரமம் பெற்று பிறகு சந்நியாஸாசிரமம் பெற்றவர்கள் கர்மயோகிகளென்றும் சொல்லப்படுவார்கள். சாஸ்திர ஞானமுடைய பண்டிதர் களுக்கு நிஜமான அர்தம் தெரியாமல் சாமாந்தி யார்த்தங் களை ஊஷித்து, மனைவியே சம்சாரத்திற்கு பரம புரு ஷார்த்தமென்று எண்ணித் தாம்பிரமை அடைவதுமே யன்றி இதரர்களையும் பிரமிக்கும்படிச் செய்விப்பார்கள்.*

*'சுரு' ஆதிமத்யாவஸா நேஷுது, சமஸர்வமிதம் யதஹ ஸ்த்ரிவம் தயக்த்வா ஜக்த் த்யக்தம ஜகத் த்யக்த்வா ஸுகீ பவேத். மஹாவாக்கிய ரத்நாவளியில் சொல்லி இருக்கின்றது. சம்சாரவிஷயம் விசாரிக்குமளவில் எப்பொழுது துக்கமாகவே யிருக்கின்றது. சம்சாரத்திற்கு மூலகாரணமாயிருக்கும் மனைவியினால், பிரயோசனம் ஞானிகளுக்கு யாதென்றுமில்லை. ஞானிகள் தவிர மற்றவர்கள் மனைவி வரவில்லையே என்று துக்கப்படுவார்கள். அவள் வந்த பிறகு, தான் சொல்லியது போல் செய்து கணவனுக்கு உபசரனைச் செய்யாமல் வீண்வாதங்*

களாடி, வீட்டு விஷயங்களையெல்லாம் வெளிப்படுத்தி இல்லாத பொய் வார்த்தைகளைக் கற்பனை செய்து இதரர்களுக்குச் சொல்லி தன் புருஷன் கௌரவத்திற்குத் தீங்கு விளைவித்து திருட்டுத்தனம் முரட்டுப்புத்தி முதலாகிய ராக்ஷஸ குணங்களுடன் இருந்து தனது புருஷன் மீது பிரீதி இல்லாத வளாயும், ஞான்ஹீன முடையவளாயும், வியாதியுடைய வளாயும். ரூபனலா வண்யமில்லாதவளாயும், அநாசார முடையவளாயும், நாகரீகம் இல்லாதவளாயும். ருசியுடன் பாகம் செய்யாதவளாயும். அப்படிக்கல்லாமல் நல்ல குணமுடையவளாயும், ரூபலாவண்ணியமுடையவளாயும் தன் புருஷனிடத்தில் அதிகப் பிரீதியுடையவளாயும், அவள் சந்தானமில்லாமல் மலடியா யிருப்பாளாகில் அதனால் துக்கமே உண்டாகும். அல்லது அவன் இரத்தினாபரணங்களும் சரிகைச் சேலை சரிகை ரவிக்கை களையும் கொண்டு வந்து கொடுக்கும்படி தொந்தரவு செய்வாளாகில் தரித்திரத் தினால் அவைகளைக் கொண்டு வந்து கொடா விட்டால், இராப் பகலாய் இழவு பேரிழிவு கல்லெடுப்பு வீட்டில் என்னைக் கொண்டுவந்து கொடுத்தார்களோ என்று சட்டியைத் தூக்கிப் பானையின்மீதும் பானையைத் தூக்கிச் சட்டியின் மீதும், சொம்பு தவளை முதலானவைகளையும் புருஷனைக் கண்டபோதெல்லாம் தூக்கிப் போட்டு உடைத்துக்கொண்டிருப்பாள் அப்படி உடைத்துக் கொண்டி ருப்பதும் துக்கமே அல்லது ரோகத்தினாலாகிலும் பிசாசாதி வியாதிகளினாலாகிலும் பாதைப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுது, வைத்தியர் களையும் மாந்தரீகர்களையும் வரவழைத்து அதை நிவர்த்தி செய்விப்பதற்காக சரீரப் பிரயாசையும் திரவ்விய விரய அதிகமாய் உண்டாவதினால் அதனாலும் துக்கமே சம்பவிக்கும் அல்லது அவள் வியாதி யில்லாமல் நல்ல அழகும் குணமும் சந்தானமும் உடைய வளாயிருந்து திடீரென்று இறந்து விடுவாளாகில் அவளை நினைத்துத் துக்கத்தை அடைய வேண்டியதாய் நேரிடும் ஆதலால்,

"காமக் க்ரோதஸ்ச லோபஸ்ச தேஹேதிஷ்ட்டந்தி தஸ்கராஹ
ஜ்ஞாநரத்தா பஹாரய தஸ்மாத்யஜாகரத ஜாக்ரதஹ
மாதா நாஸ்தி பிதா நாஸ்தி தாஸதிபந்து ஸஹோதரஹ
அர்த்தம் நாஸ்தி க்ருஹம் காஸ்தி தஸ்யா த்ஜாக்ரத் ஜாக்ரதஹ
"ஆஸயா பத்யதே லோக ஹதர்மணா பஹுசிந்தயா
ஆயுக்ஷீணம் நஜாநதி தஸமாத் ஜாக்ரத ஜாக்ரதஹ"
"ஜந்மதுக்கம் ஜாயாதுக்கம் ஜக்யாதுக்கப் புநப் புநஹ
ஸம்ஸா ரஸாகரம் துக்கம் தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரதஹ"

என்றால், எல்லோருடைய சரீரத்திற்குள் காம குரோத லோபமென்னும் மூன்று கள்ளர்கள் இருந்து கொண்டு ஞானமென்னும் ரத்தினத்தை அபகரிக்கின்றார்கள். ஆதலால் ஜாக்கிரதையாகயிருங்கள்! ஜாக்கிரதையாயிருங்கள்.

தாய், தந்தை, பந்துக்கள், சகோதரர்கள், தனம் வீடு முதலானவைகளும் சாஸ்வதமாய் இருக்கப் பட்டவையல்ல. ஆதலால் ஜாக்கிரதையாயிருங்கள்! ஜாக்கிரதையாயிருங்கள்.

மைந்தா! நீ ஆசையால் கட்டுபட்டிருக்கின்றாய். இந்த ஆசையினால் கர்மத்தைச் சம்பாதித்துக் கொள்கின்றாய். இந்த கர்மத்தினால் விசேஷமாகிய எண்ணங்கள் உண்டா கிறது இந்த எண்ணங்களினால் தினம் தினம் ஆயுள் க்ஷீணித்துக்கொண்டே வருகின்றது. எண்ணத்தினால் ஆயுள் க்ஷீணித்துக்கொண்டு வருகின்றதே யொழிய மற்றொன்றும் காணோம் ஆதலால், ஜாக்கிரதையாயிருங்கள்.

ஓ மைந்தா! ஜன்மமெடுப்பதினால் துக்கம் சம்பவிக் கின்றது, கிழத்தனம் வருவதனால் துக்கம் சம்பவிக் கின்றது மனைவியரால் துக்கம் சம்பவிக்கின்றது. சம்சார விஷயங் களினால் விசேஷ துக்கம் சம்பவிக்கின்றது, ஆதலால், ஜாக்கிரதையாயிருங்கள்! என்று மேலே சொல்லியிருக்கும் நான்கு சுலோகங்களின் தாத்பர்யங்கள் இதுவேயாம். இந்த நான்கு

சுலோகங்களையும் ஸ்ரீ சங்கராசார்யார் சொல்லி யிருக்கின்றார். அவர் சொல்லியதுபோல் எல்லோரும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்.

சுலே"ஸத்யம் மாதா பிதா ஞாநம். தர்மோ ப்ராத தயாஸகி ஸாந்திஹி பத்நீ க்ஷமா புத்ர ஷடைதே மமபாந்தவா"

என்னும் பாண்டவ கீதா வாக்யரீதியாய் ஸத்யமே தாய், ஞானமே தந்தை, தர்மமே சகோதரன், தயையே சிநேகிதன், ஸாந்தியே பத்னி, பொருமையே புத்திரன் இந்த ஆறு குணங்களும் உள்ளவனே முக்தனாவான் என்றால் சர்வ துக்க சாகரமாகிய பரம உபசாந்தி என்னும் மனைவியுடன் கூடி கிரீடித்துக் கொண்டு பிரம்மானந்த சமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் புண்ணிய புருஷன் ஜீவன் முக்தனால் சம்சார விஷய வியாபாரங்களும் மனோ விகாரங்களும் இல்லாதவனாய் சுகியாயிருப்பானென்பது சாஸ்திரப் பிராமணம்.



# 27. புத்திரேஷணை

புத்திரேஷணை : புத்திரர்களின்மீது ஆசை கொள்ளல்.

புத்ரேண லோகாந் ஜயதி, அபுத்ரஸ்யகதிர் நாஸ்தி; புந் நாம்நோ நாகாத் த்ராயதே இதி புத்ரஹ புக் நாம்நோ நரகாத் யஸ்மாத் பிதரம் த்ராயதே ஸ்வயம் தஸ்மாத் புத்ர யிதிப்ரோக்த ஸ்வயமேவ ஸ்வயமேவ ஸ்வயம்புவஹ,

என்னும் சுருதிகளைக் கேட்டு அதன் நிஜஸ்திதியை அறியாத சில பண்டிதர்களும் பாமரர்களும் விபரீதார்த் தங்களை ஊஹித்து புத்திரர்கள் இருக்கவேண்டுமென்றும் புத்திரர்களை உடையவர்களுக்கே இஹபரங்களில் சுகமுண்டென்றும் புத்திரர்கள் இல்லாதவர்களுக்கே சுகமில்லை என்றும் புத்திரர்கள் தாய் தந்தையர்களின் வம்சத்தாரை எல்லாம் புண்ணிய லோகத்திற்கு அனுப்புவார்களென்றும் புத்திரர்கள் இல்லாவிடில் பிதுரு குணம் தீராதென்றும் தாம் பிரமை அடைவதுமே யல்லாமல் உலகத்திலுள்ளவர்களையும் பிரமிக்கச் செய் கின்றார்கள். ஆனால் புத்திரர்களால் இந்த லோகத்திற்கும் பரலோகத்திற்கும் மோக்ஷத்திற்கும் யாதொரு பிரயோஜன மில்லை. புத்திரர்கள் பிறவா முன்னும் பிறந்த பின்னும், பிறந்து இறந்தபின்னும் அதிக துக்கமே சம்பவிப்பதல்லாமல் வேறில்லை

"ஆலப்யமா நஸ்தநங்ஹ பிதரௌ க்லேயேஸ்ச்சிரம்
லப்றோ ஹி கர்ப்பாதேந ப்ரஸவேநச பாததே"
"ஜாதஸ்ய, கரஹரோகாதி குமாஸ்ரய சதுர்த்ததா
உபநீதேப்ய வித்யத்வ மநுத்வா ஹஸ்ச்ச பண்டிதே"
"பூஸ்சாச்ச பரதாராதி தாரித்ரியம் சகுடுப்பிதஹ
புத்ர துஹநன்ய நர்ஸ்த்யந்தோ தநீசெந் மரியமேததா!,
"ஏலம் விதய புத்ரோஸெல ப்ரீதிம த்பத்வா நிஜா தமரி
நிஸ்கிதய பரமமரீதிம் வீஷ்யதே ததஹர்நிஸம்"

என்னும் யாஞ்ஞ வல்க்யோபநிஷ்த் வாக்யரீதியாய் புத்திரர்கள் பிறந்தபோதிலும் பிறவாமளிருந்த போதிலும் துக்கத்தையே உண்டாகச் செய்கின்றன. எப்படி யென்றால், புத்திரர்களில்லாதவர்கள், புத்திரர்கள் இல்லையே என்னும் துக்கத்தினால் ஒரு பிராமணனை வரவழைத்து பெரிய மணையின் மீது உட்காரச்செய்து அவனை நமஸ்கரித்து சுவாமி! எங்களுக்குப் புத்திர சந்தானமில்லாமற் போயிற்றே! எங்கள் கதி என்ன? என்று கேட்க அதற்கு அவன் சில சாஸ்திரங்களைப் பரிசோதித்து பார்த்து நீங்கள் பூர்வ ஜன்மங்களில் பாவகர்மங்களைச் செய்தபடியால் புத்திர சந்தானமில்லாமற் போயிற்று, ஆதலால் நீங்கள் ராமேஸ் வராதி புண்ணிய க்ஷேத்திரங்களைச் சேவித்துத் தீர்த்தமாடி வந்தால் அப்பொழுது உங்கள் பாவ கர்மங்களெல்லாம் நசித்துப் புத்திர சந்தான முண்டாகு மென்று சொல்ல அந்தப் பிராமணனுடைய வார்த்தையை அவர்கள் நம்பி அதிக திரவியங்களையெடுத்துக் கொண்டு அநேக மாதங்கள் தீர்த்த யாத்திரைகளை செய்து தானதர்மங்கள் தர்ப் பணங்கள் சர்ப்ப சாந்தி நாகப்பிரதிஷ்ட்டை அரச மர பிரத க்ஷணம் முதலானவைகளை அநேகம் செய்து வெறுத்து, பிரயாணங்களில் அன்னபானாதிகள் சரியாய் அகப்படாத தனால் தேகம் மெலிந்து அநேக கஷ்ட்டங்களை அனுபவித்து.

மறுபடியும் ஊர்வந்து சேர்ந்தும் இஷ்ட்ட சித்தி நிறைவேறாமற் போனபடியால் மறுபடியும் வேறொரு மந்திர ஜோதிடம் கற்றவனை வரவழைத்துத் தமது அபிப்ராயத்தை தெரிவித்து இதற்கு ஏதாகிலும் உபாயம் சொல்ல வேண்டுமென்று வேண்டிக் கொள்ள அந்த மந்திர சாஸ்திரவாதி உங்களுக்கு சனி போதாமலிருப்பதனால். நவக்கிரகங்களுக்கு அண்டமேற்றி மந்திரங்களால் அர்ச்சனை செய்வித்து மொக்குகளைப்போட்டு மந்திரித்து சனி நீங்கிய பிறகு புத்திரசந்தான முண்டாகு மென்று, சொல்ல அவன் வார்த்தையைக் கேட்டு அதற்குத்தக்கப் பிரயத்தனங்களைச் செய்தும்,

மறுபடியும் சந்தானமில்லாவிட்டால் மற்றொரு மாந்திரீகனை வரவழைத்துக் கேட்டபோது பேய் பிடித்துக்கொண்டிருப்பதனால் புத்திர சந்தானமில்லை யென்றும், பேய் ஒட்டுவதற்கு ஐம்பது வராகன் பிடிக்கு மென்று சொல்லி ஐம்பது வராகனைப் பெற்றுக் கொண்டு ஒரு வாரம் வரையில் முழுக்கில் வைத்து உடுக்கையடித்துச் சிலம்பு போட்டு பேயோட்டும் மந்திரங்களைச் சொல்லி முடித்து இனி உங்களுக்கு சந்தானம் உண்டாகும் என்று சொல்லி சென்ற பிறகு அவர்களுக்கு சந்தானமில்லாமல் போவதனால் மிகவும் வியாகூலமடைந்து.



மற்றொரு சாஸ்திரவாதியை வரவழைத்து எங்களுக்குச் சந்தானமில்லை எங்கள் கதி என்ன? என்று கேட்க அவன் சாஸ்திர கிரகங்களைப் பரிசோதித்து ஆஹா! நீங்கள் முன் ஜன்மத்தில் மஹாபாவங்களைச் செய்தவர்கள் அதனால் உங்களுக்குச் சந்தானமில்லாமற்போயிற்று தம்பதிகளாகிய நீங்கள் இருவரும் நியம நிஷ்டைகளுடன் போஜனமில்லாம லிருந்து மஞ்சள் வஸ்திரங்களை உடுத்தி வாயை தாள் போட்டு திருப்பதி மலைக்குச் சென்று திருவேங்கடத்தானை தரிசித்து நியமம் தவறாமல் உண்டியில் நூறு வராகன் காணிக்கைப் போட்டு மா விளக்குடன் அகண்டம் ஏற்றி முப்பழம்

பலகாரங்களுடன் சமாராதனைச் செய்வித்து வீடு சேர்ந்தவுடன் மறுபடியும் மாவிளக்குப் போட்டுப் பிராமண சந்தர்ப்பனைச் செய்வித்தால் உங்களுக்குப் புத்திர சந்தான முண்டாவதற்குச் சந்தேகமில்லையென்று சொல்ல அவனது வார்த்தையை நம்பி அதுபோல் செய்தும் சந்தானமில்லாமல் துக்கத்தில் மூழ்கியிருந்தார்கள் பிறகு !

சுலோ "கோடரந்தாகலோ வஹசிஸ் தருமேகம் தஹிஷ்யதி குபுத் ரஸ்து குலோஜா தஹ ஸ்வகுலம் நாஸயேத்பரம்.ணி

என்றிருப்பதனால் புத்திரருக்காக அநேகவித பாடுகள் பட்டும் புத்திர சந்தானமில்லாமற் போனதால் கடைசியில் நற்குணமுடைய புத்திரன் உண்டாக வேண்டுமென்று ஈஸ்வரனைப் பிரார்த்தனை செய்து வந்தார்கள். புத்திர சந்தானமில்லாத தாய் தந்தையர்களுக்குப் பலவித துக்கம் உண்டாக்குதில் சந்தேகமில்லை. இப்படிப்பட்ட கஷ்டத்துடன் சந்தானமுண்டானபோதிலும் அதனால் துக்கமே உண்டாகின்றது.

அஃதெப்படியென்றால், சந்தானப் பிரீதியுடையவர் களுக்குத் தெய்வானுகூலத்தினால் தனக்குத் தானாகவே கர்பம்தரித்து அக்கர்பம் சில மாதங்களில் கலங்கி விட்டால் அதனால் தாய் தந்தையர்களுக்குத் துக்கத்தை விசேஷமாய் உண்டாக்கும். அப்படிக்கல்லாமல் கர்பம் நின்று பத்து மாதங்களும் பூர்த்தியாய்ப் பிறகு பிரசவ வேதனை அதிகமாகப்படும்பொழுது அந்த வேதனையைப் பார்த்து சகிக்காமல் மருத்துவம் செய்யப்பட்டவளை அழைத்துவந்து காட்டியபோது, "ஐயா! உமது மனைவி விசேஷமாய்ப் பிரசவதேவதனைப்பட்டு கொண்டிருப்பதனால் ஏதாகிலும் பிரார்த்தனை செய்துக் கொள்!" வென்று சொல்லுவாள். அதற்குப் பட்டாச்சாரியார். செய்ய வேண்டிய பிரார்த்தனை களையெல்லாம் முந்தியே செய்து முடிந்தன: குழந்தைக்கு ஆசைப்பட்டு பெரிய பிராணனுக்கே மோசம் வந்தது. இனி என்ன

செய்வேன்? அவள் பிழைத்தால் போதும் ஈஸ்வரன் எங்களை எல்லா விதத்திலும் சோதித்துத் துக்கத்தையே உண்டாக்குகின்றான். என்று சொல்லி மிகவும் வருத்தமடைவான். ஒரு வேளை பிராணனுக்கு அபாயம் உண்டானால் அதனால் அவனுக்குத் துக்கமே சம்பவிக்கும் அப்படிக்கல்லாமல் சுகமாய்ப் பிரசவித்தால் சிசுவிற்குப் பக்ஷிதோஷங்களும் சந்தி தோஷங்களும் உண்டாகும். இவைகளுக்காகக் குளிச்சங்கள்கட்டி, வீபூதி மந்திரித்துக் கொடுத்தும் காலை மாலைகளின் முகம்மதியர்களின் மசூதிக்குக் கொண்டுபோய் நிமாஸ் செய்து வெளியில் வரும் முகம்மதியர்கள் குழந்தைகளின் முகத்தில் ஊதிய பிறகு கொண்டு வருவதும் வழக்கமுண்டு இப்படிப்பல விதங்களாய்க் கஷ்டப்பட்டுச் சிசுவைக் காப்பாத்து கின்றார்கள். சிசு பிறந்த பிறகு பன்னிரண்டு மாதங்கள் வரையில் பாலகிரகதோஷம் காண்கின்றது. அப்பொழுது மூன்று சந்துகள் கூடியிருக்கும் இடத்தில் பொங்கலிட்டு. ஒணான் பலி கொடுத்துப் பூசை செய்கின்றார்கள்.

இப்படிப்பட்ட கஷ்டத்துடன் பதினைந்து வருஷங்கள் வளர்ந்து துன்மார்க்கனாயிருந்து ஊர் பிள்ளைகளை அடித்துத் தானும் அவர்களால் அடியுண்டு, தன் தாய், தந்தையர்களுக்கும் கலகத்தை உண்டாக்குவதனால், அப்பொழுது தாய் தந்தையர்களுக்குத் துக்கத்தையே உண்டாக்குகின்றான். அப்படிக்கல்லாமல் புத்திசாலியாயிருப்பானாகில் அவனுக்கு எட்டாவது வயதில் உபநயனம் செய்து அவனைப் பள்ளிக்கு அனுப்புவார்கள். அவன் வாசிப்புடையவனாகாவிட்டால் அவன் மூடபுத்தியை அறியாமல் அவனுடைய தாய் தந்தையர்கள் உபாத்தியாரிடம் சென்று, எங்கள் பிள்ளைக்கு நன்றாய் படிப்புச் சொல்லாமல் மாதம் மாதம் சம்பளம் மாத்திரம் பெற்றுக் கொண்டீர்: உமக்கு ருணமிருந்து கொடுத்தோம் என்று தூஷணை செய்து சண்டையிடுவார்கள். பிள்ளைக்கு வித்தை வராவிட்டால் துக்கத்தையே உண்டாக்கும். அப்படிக்கில்லாமல் வாசிப் புடையவனாயிருப்பானாகில்

அவனுக்கு விவாகம் செய்விக்க வேண்டுமென்று எண்ணிப் பெண்ணிருக்கும்மிடம் சென்று பெண்ணைக் கேட்டபோது ஒருவன் முந்நூறு வராக்ன் கொடுக்க வேண்டும்: அன்றியம் கலைச்சாமானுடன் வங்கி ஒட்டி யாணமும் போட வேண்டுமென்று கேழ்க்கும்பொழுது தமக்குத் திரவ்வியம் இல்லாமல் போயிற்றல்லவா என்று மிகவும் துக்கித்துக் கொண்டிருக்கும்பொழுது மற்றொருவன் கன்னிகாதானமாய் கொடுப்பதற்கு சம்மதித்து பொருத்த நிமித்தங்கள் 'பார்த்தபொழுது, வயிற்றுப் பொருத்தமில்லை. நாங்கள் பெண் கொடுக்க மாட்டோமென்று சொன்னவுடன், ஆஹா! கைகெட்டினது வாய்க்கெட்டாமல் போயிற்றல்லவா என்று துக்கத்தையே உண்டாக்கும். அப்படிக் கல்லாமல் பொருத்த நிமித்தங்கள் சரியாயிருந்து விவாகம் முடிந்தவுடன் அவள் அழகும் நற்குணமும் இல்லாவிட்டால் அதனால் மனோ வியாகூலமே உண்டாகும். அப்படிக் கல்லாமல் எல்லா நற்குணங்களும் இருந்தபோதிலும் அவள் க்ஷய ரோகத்துடன் மிகவும் மெலிந்து இருப்பாளாகில் அவளுக்குக் கூழ்ப்பாண்ட லேகியம் முதலானவைகளைச் செய்து தகுந்த ஔஷதங்கள் கொடுத்தும் வியாதி தீராமலிருந்தாலும், குமாரானது காமம் அதிகரித்து மனைவி இனி உபயோகப்படமாட்டாளென்று எண்ணி, பரஸ்திரீகளை மோகித்து அவளால் வியாதி சம்பவித்த பொழுது திரவியம் விரயமாவதனால் தாய் தந்தையர்களுக்குத் துக்கம் உண்டாவதுமேயன்றி, இவன் மோகித்த பரஸ்திரீயுடைய புருஷனால் தாவா செய்யப்பட்டு, ராஜ நிகத்தாரால் தண்டனை யடைந்தபொழுது தாய் தந்தையர்களுக்குப் பெரிய துக்கத்தையே உண்டாக்கும், அப்படிக்கல்லாமல் நல்ல மருமகளாய்வந்து வாய்த்தும் புத்திர சந்தானம் அதிகமாயுண்டாய், தரித்திரத்தினால் சாப்பாட்டுகில்லாமல் அவஸ்தைபட்டு கொண்டிருக்கும்பொழுது அவனது தாய் தந்தையர்கள் மிகவும் துக்கப்பட்டுக் கொண்டிருப்பார்கள்.

இப்படி துக்கம் கொண்டிருக்கும் தாய் தந்தையர்களைச் சில ஜனங்கள் பார்த்து "என்ன வியசனமாயிருக்கின்றீர்கள்" என்று கேட்டபொழுது "எங்கள் புத்திர பௌத்திராதிக ளெல்லோரும் கட்ட வஸ்திரமும் புசிப்பதற்கு அன்னமும் இல்லாமல் துக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள். அதை பார்த்து வருத்தமடைகின்றோம். எங்களுக்கு மரணமாகிலும் வரவில்லையே" என்று சொல்லுவார்கள். ஆதலால், தாய் தந்தையர்களுக்குப் புத்திரன் இல்லாவிட்டாலும், இருந்தா லும் துக்கத்தையே உண்டாக்குகின்றது. இப்படிப்பட்ட புத்திரர்களால் நற்கதி உண்டாகுமென்பது என்ன நிச்சயம்,

தாய் தந்தையர்கள் மரணமடைந்த பொழுது அவர்களுக்காகப் புத்திரர்கள் செய்யும் சிரார்த்தம். தர்ப்பணம், தானம் முதலானவைகளினால் அவர்கள் திருப்தி அடைந்து நற்கதி அடைவார்களென்று கர்ம காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் புத்திரன் எப்படிப் பட் : -வனாயிருந்த போதிலும் சரி, புத்திரன் இருந்தே தீர வேண்டுமென்பது லோகப் பிரசித்தியாயிருக்கின்றது. புத்திரர்கள் செய்யும் தான சிதார்த்தங்களினால் தாய் தந்தையர்களுக்குத் திருப்தியும் நல்ல கதியும் உண்டாவது ஸத்தியமாயிருந்தால் தாய் தந்தையர்களுக்குத் திருப்தியும் நல்லகதியும் உண்டாவது ஸத்தியமாயிருந்தால் தாய் தந்தையர் ஜீவித்திருக்கும் பொழுது புத்திரர்கள் தாய் தந்தையர்களின் பெயரைச் சொல்லி, சில பிராமணர்களுக்கு ஷட் (ஆறு). ருசிகளுடன் அவரவர்களுக்கு இஷ்டமான பதார்த்தங்களைத் திருப்தியாய்ப் புசிக்கும் வரையில் அளிப்பது, தனது தாய் தந்தையர்களுக்குப் போஜனம் வைக்காமலிருந்தால், அந்தப் பிராமணர்கள் திருப்தியுடன் புசித்து, தாய் தந்தையர்களினுடைய பசியைப் போக்கடிக்குமா? போக்கடிக்காதல்லவா?

அப்படியிருக்க அவர்கள் மரணமடைந்தபின் அவர்களுக்காகப் புத்திரர்கள் செய்யும் சிரார்த்த தானாதிகள் அவர்களுக்குத் திருப்தியையும் நல்ல கதியையும் எப்படியுண்டாக்கும்? ஆனால் பித்ருகளைக் குறித்துச் செய்யும் சிரார்த்த தர்ப்பண தானாதிகள் வியர்த்தமாயென்று கேட்கின்றீர்களோ என்ன? காரணமில்லாமல் காரிய முண்டாகமாட்டா. ஆதலால், அவர்கள் பெயரைச் சொல்லிப் புத்திரர்கள் செய்யும் தானங்கள் அந்தப் புத்திரர்களின் நற்கதிக்கே காரணமாயிருக் கின்றனவேயல்லாமல் வியர்த்தமாக மாட்டா, கர்ம காண்ட விதிப்படி ஸ்தூல சரீரம் வீழ்ந்த பொழுது ஜீவன், சூக்ஷ்ம சரீரத்துடன் சந்திரலோகம் போய்ச் சேர்ந்து சமஸ்த போகங்களையும் அனுபவித்துப் பிறகு, மேகத்துடன் போய்ச் சேர்ந்து ஜல ரூபமாய் ஜந்துக்களுக்கு வேண்டிய ஆகாராதி தானியங்களில் வீழ்ந்து, அத்தான்ய அன்னமாய் அந்த அன்னத்திலிருந்து, ரசமுண்டாய் அந்த ரசம் இரத்த ரூபமாய். அந்த இரத்தம் மாமிசத்தில் பிரவேசித்து, மாமிசத்திலிருந்து கொழுப்பிலும், கொழுப்பிலிருந்து அஸ்தி (எலும்பு) களிலும் அஸ்திகளிலிருந்து மூளையிலும், மூளையிலிருந்து சுக்கிலமுண்டாய் அந்தச் சுக்கிலம் ஸ்திரீ கர்ப்பத்தில் போய் பிரவேசித்து ஜன்மமெடுக்கின்ற தென்று சிலர் சொல்லுகின்றார். ஜீவன், தேஜோமார்க்கமாய்ச் சூர்யலோகம் சென்று, பிறகு பிரம்மலோகம் சேர்ந்து பிரம்மத்துடன் கலந்து முக்தி யடைகின்றதென்று சிலர் சொல்லுகின்றார்கள். மற்றும் சிலர் ஜீவ சொரூபியா யிருக்கும் தான் மற்றொரு தாய் கர்ப்பத்திலுள்ள சிசுவினுடைய சரீரத்தில் போய்ப் பிரவேசிப்பதற்காக இந்த ஸ்தூல சரீரத்தை விட்டுவிடுகின்ற தென்றும் சொல்லு வார்கள்.

சுலோ|| "ஜாதஸ்ய ஹித்ருவோம்ருத்பு த்ருவம்ஜன்ம ம்ருதஸ்யா அத்யவர்ப்தஸதாம் தேவம்ருத்யுர்வைப் ராணிநாம்த்ரூவம்

என்னும் பர்த்துருஹரி வாக்கிய ரீதியாய் தாய் தந்தையர்கள் மறுபடியும் ஜன்மமெடுத்த போதிலும், அல்லது மோக்ஷத்தை அடைந்தபோதிலும் புத்திரர்கள் அவர்களைக் குறித்துச் செய்யும் புண்ணிய காரிய பலன்கள் அவர்களுக்குச் சேரமாட்டா. இதற்குத் திருஷ்ட்டாந்தம் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

ஒரு பிராமண தம்பதிகள் இருவரும் அவரவர்களின் கர்மாநுசாரமாய்த் தன் புத்திரனது வீட்டில் அவன் தாய் தந்தைகள் இருவரும் ரிஷபமாயும் நாயாயும் பிறந்திருந் தார்கள். அந்த புத்திரன் தனது தந்தையின் சிரார்த்தத்திற்காகச் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் அந்த ரிஷபத்திற்கு வைக்கோல் போட மறந்து விட்டான். சிரார்த்தத் திற்காகக் கொண்டுவந்து வைத்திருந்த பாலில் சர்ப்பம் விஷத்தைக் கக்கிற்று நாய் அதைப் பார்த்திருந்து அந்தப் பாலைக் கீழே கவிழ்த்தது. அதைப் பிராமணன் கண்டு, வயிறெரிந்து நாயைத் தடியாலடித்துக் கட்டி விட்டு அதற்கு சாதம் வைக்காமல் போனான். ரிஷப நாயாயிருக்கும் அவனது தாய் தந்தையர்கள் பூர்வ ஜன்மங்களில் அநேக விரதங்களை அனுஷ்டித்து வந்த தனால் அந்த ரிஷப நாய்களுக்குப் பூர்வ ஞானமுண்டாய். இவன் நமக்காக வைத்த சிரார்த்தத்தினால் நமக்கென்ன திருப்தியு ண்டாயிற்று. நமக்குத் தீனியைப் போடாமல் கொல்லு கின்றானேயென்று ரிஷபம் மிகவும் துக்கத்துடன் நாய்க்குச் சொல்லிற்று சகல பாஷா ஞானமுடைய அந்தப் பிராமண குமாரன், அவ் வார்த்தையைக் கேட்டு மனம் நொந்து, அவைகளின் பசியைத் தீர்த்தான். ஆதலால், தாய் தந்தையர்களுக்காகப் புத்திரர்கள் செய்யும் சிராத்தங்கள் தாய் தந்தையர்களுக்குச் சேரமாட்டா. ஸநகன், ஸநந்தான், ஸந்தகுமாரர், ஸநத்சுஜாதன், நாரதர், ஹநுமான், பீஷ்மர் முதலானவர்கள் புத்திரர்களில்லாமலே ஸ்தகதி அடைந்த விஷயம் லோக பிரசித்தயாயில்லையா?

சுலோ "ஐஸ்வர்யம் ஸ்ங்கரம் வைச ஆரோக்கியம் பாஸ்கரம் தத ஆவுஷ்யம் ஸ்ருஷ்டிகர்த்தாரம் மோக்ஷமிஸ் சே ஜநார்த்தநம்"

என்னும் ஸ்மிருதிரீதியாய், ஸ்ரீ மகாவிஷ்ணுவாகிய கிருஸ்ணமூர்த்தியைப் புத்திரனாய்ப் பெற்ற தேவகி வசுதேவர்கள், கிருஷ்ணன் மரணமடைந்த வார்த்தையை அர்ஜுநனால் கேள்விப்பட்டு புத்திர துக்கத்தை அனுபவித்து மரணமடைந்து, தாம் செய்த புண்ணிய விசேஷத்தினால் நல்ல கதியை அடைந்தார்களே யொழிய புத்திரனால் தேவகி வசுதேவர் நல்ல கதியை அடையவில்லை. மேலும் ஸ்ரீ ராமமூர்த்தியைப் புத்திரனாய்ப் பெற்ற தசரதன் புத்திர சோகத்தினால் இறந்து, தேவதா சக்கரவர்த்தியாகிய தேவேந்திரனால் கௌரவிக் கப்பட்டு, சுவர்க்க லோகத்திலிருக்கும்பொழுது ராவணனை வதைத்த ஸ்ரீ ராமமூர்த்தியை பிரமன், சிவன் தேவேந்திராதி தேவதைகள் தருசிக்க வந்த பொழுது அவர்களுடன் கூடவந்த தசரதன். ஸ்ரீ ராம மூர்த்தியை நமஸ்கரித்த தாய், ஸ்ரீ 'ராமாயணத்தில், சொல்லப்பட்டிருக்கின்றது, பிரமருத் திரேந்திராதிகளைத் தசரதன் தரிசனம் செய்தது. ஸ்ரீ ராம மூர்த்தியைப் புத்திரனாகப் பெற்றதனாலல்லவோ என்றாலோ "ஜ்யோதிஷட்டோம் ஸ்வர்க்க காமோயஜேத்," என்று சுருதியிருப்பதனால்

இந்த தசரதன் அசுவமேத முதலான யாகங்களைச் செய்ததனாலும், த்போநிஷட்டர்களாகிய வசிஷ்ட, தூர்வாஸ மகரிஷிகளைப் பூஜித்த புண்ணிய விசேஷத்தினாலும் சுவர்க்க லோகப்பிராப்தியும், பிரமாதி தேவதா தரிசனமும் கிடைத்ததேயொழிய ஸ்ரீராமனை புத்திரனாய்ப் பெற்ற தனாலல்ல, புத்திரனால் நல்ல கதி அடைவது நிச்சயமாயிருந்தால் ஸ்ரீராமனை புத்திரனாய்ப் பெற்ற தசரதன் மறு பிறப்பில்லாத பரம பிராப்தியை அடையவேண்டியதே யொழிய புனர் ஜன்மத்திற்குக் காரணமாயிருக்கும் சுவர்க்காதி போகங்களை அடையத் தக்கதல்ல. மேலும் இரணியன் பிரஹ்லாதனான தன்

புத்திரனால் அநேக துக்கங்களை அனுபவித்து பிறகு தன் புத்திர னாலேயே மாண்டான் அன்றியும் திருத்ராஷ்ட்ரன் துர்யோத னாதிகளாகிய நூறு குமாரர்களைப் பெற்று அவர் யுத்தத்தில் மாண்டதனால் மிகவும் துக்கத்தையடைந்து பிறகு தன் புண்ணிய விசேஷத்தினால் பரமகதியை அடைந்தான். இவ்வாறே இன்னும் அநேகர்கள் புத்திர சோகத்தினால் விசேஷ துக்கத்தை அடைந்தார்கள்.

ஆதலால் இந்தப் புத்திரர்களால் தாய் தந்தையர்களுக்கு துக்கமும், மரணமும், நரகமும், உண்டாகுமென்று பிரமாணமுண்டு, பிராரப்தத்தில் இல்லாத புத்திரன் எவ்விதமாய் உண்டாகும். இந்த ஜன்மத்தில் புத்திரனுக்காக கஷ்டப்படுவ தனால் இந்த புத்திரன் மேலிருந்த ஆசையானது இதுவரையில் முன் சொல்லிய சஞ்சிதத்தில் போய்ச் சேர்ந்து மறுபடியும் அதிலிருந்து பங்கிட்டுக் கொண்டுவந்து அந்த புத்ர பலனை மறுஜன்மத்தில் தவறாமல் அடைவார். என்றால், இந்த ஜன்மத்தில் புத்திரன் பிறக்கவேண்டுமென்று எண்ணங் கொண்டால், இதன் பலன் மறுஜன்மத்தில் தப்பாமல் கிடைக்கும் என்பதேயாம். ஆனால், 'அபுத்ரஸய கதிர்நாஸ்தி' என்னும் சுருதி அசத்தியமா என்றாலே, அந்தச் சுருதிக்கு நிஜமாகிய அர்த்தம் என்னவென்றால், புத் என்னும் நகரத்திலிருந்து தாய் தந்தைகளை மேல் கிளப்பி ரக்ஷிக்கப் பட்டவன் புத்திரன் என்பது சுருதியுடைய அர்த்தம்.

ஞானகாண்டரீதியாய் நரகமென்றால், துக்கம். சொர்க்கமென்றால் சந்தோஷம் ஒருவன் மஹாதுக்கத்தில் அகப்பட்டுகொண்டு ஆஹார நித்திரைகளில்லாமல் பிராணனை விட்டுவிட வேண்டுமென்று எண்ணி தேகம் முதலாகிய பிரபஞ்சமெல்லாம் சொப்பனம் போன்றன வென்றும், பிரபஞ்ச விலக்ஷினாகிய பரப்பிரம்மம் ஒன்றே சத்தியமானது என்றும் பரப்பிரம்மமாகிய எனக்கு துக்கமேது என்னும் திவ்விய

ஞானத்தை உண்டாக்கி முன்னிருந்த துக்கத்திலிருந்து உத்தரிப்பது விஞ்ஞான மென்றும் இப்படிப்பட்ட விஞ்ஞானம் உண்டாவதே புத்திரன் உண்டாவது என்பதேயாம். அப்படிப்பட்ட ஞானம் இல்லாமல் போவதே புத்திரன் இல்லாமற் போவது. பரம வைராக்கிய முடையவனாயிருந்து பரமார்த்த ஞானத்தைச் சிரவண மநந நிதித்தியாசங்களினால் பிரபவிக்கச் செய்து புத்திராதி சகல துக்கங்களையும் விட்டுச் சித்த விஸ்ராந்தி யடைந்து ஆத்ம சொரூபனாய்த் தன்னில் தான் விசேஷ பிரீதியுடையவனாய் இருந்து சதா ஆத்ம நிஷ்ட்டை செய்து மோக்ஷமடைய வேண்டுமென்பது வேதாந்த சித்தாந்தத்தில் துணியாம் மோக்ஷப் பிராப்தத்திற்கு ஞானவைராக்கியங்களே முக்கியமானது என்பதற்குச் சுருதி ஸ்மிருதிப் பிரமாணம்.

'நகர்மணா நப்ரஜயா தடிநந த்யாகேநைகேந அம்ருதத்வ மாநஸ:' என்று உபநிஷத்தும்,

'ஞாநாதேனது கைவல்யம், என்று சுருதியும்'

'பாகஸ்ய வஹ்நிவத் ஜ்ஞாநம் விநா மோக்ஷோ நஸித்யதி' என்று ஆத்மபோத ப்ரகாசிகை.

'நஹி ஞாநேந ஸத்ருஸம் பவித்ரமிஹ வித்யதே' என்று கீதையும்,

'நகர் மணா மனுஷ்ட்டரநைர் ந தாநைஸ தபஸாபி வா கைவல்யம் லபதேமர்த்யஹ கிந்து ஞாநேந கேவலம்!' என்று சிவகீதையும் பிரமாணங்களுண்டு.

# 28. தனேஷணை

தனேஷணை : பொருளாசை கொள்ளல்

"யஸ்யாதி வித்தம் ஸநரஹ குலீநஹ பண்டிதஹ ஸஸ்ருதிமாத் குணஜ்நஹ.

ஸ யேவ வக்ந்தா ஸச தர்ஸநீயஹ ஸர்வேகுணாஹ காஞ்ச நமாஸ்ரயந்தே,"

என்னும் சுலோகரீதியாயும் பாத்துருஹரி வாக்கிய ரீதியாயும் லௌகீசாஸ்திர ஞானமுடைய சில பண்டிதர் களும் பாமரர்களும் தனமே எல்லா புருஷார்த்தங்களிலும் உத்தமமான தென்று தனமுடையவனே நல்ல வம்சமும் பாண்டியத்தியமும் சகல வேதசாஸ்திரங்களும் விஷய ஞானமும் எல்லா நற்குணமும் வாசா கைங்கர்யமுடையவ னென்றும் சொல்லுவார்கள், தனமில்லாவிடில் மேற் சொல்லிய பாண்டித்தியமும் சகல வேத சாஸ்திரங்களும் விஷய ஞானமும் எல்லா நற்குணமும் வாச்சாலத்வமும் உண்டாயிருந்த போதிலும் வியர்த்தமான தென்றும் அவன் வார்த்தை உபயோகப்படாதென்றும் சொல்லுவார்கள். இகபர லோகத்திற்கும் தனமே முக்கிய பிரதானமான மென்றும் பரமபதமும் தனத்திலேயே உண்டாகுமென்றும் தனமுடையவனுக்கு வஸ்துக்களெல்லாம் சித்திக்குமென்றும், தனமுடையவன் புத்தியில்லாதவனாயிருந்த போதிலும் அவனை உலகத்தார் கொண்டாடுவார்கள். நற்குணங்களிலிருந்தும் தனமில்லாவிட்டால் அவனை உலகத்தார் நிந்தனை செய்வார்கள். ஆதலால், ஏழ்மையைவிடத் தாழ்ந்தது பிரபஞ்சத்தில் வேறொன்றில்லை. தனமுடைய வனுக்கு உலகமெல்லாம் உள்ளங்கையில் இருக்கும்மென்று எண்ணி, அந்த தனத்தை சம்பாதிப்பதற்காகப் படாத கஷ்டங்களெல்லாம் பட்டுச் செல்லக்கூடாத இடங்களுக்கெல்லாம் சென்று செய்யக்கூடாத வேலைகளை எல்லாம் செய்கிறார்கள்,

பல்லெலாந் தெரியக்காட்டிப் பருவரன் முகத்திற்கூட்டிச்
சொல்லெலாஞ் சொல்லிநாட்டித் துனைக்கரம் விறித்து நீட்டி
மல்லெலா மகலலொட்டி மானமென்பதனை வீட்டி
யில்லெலா மிரத்தவந்தோ விழிவிழி வெந்தஞான்றும்

சுலோ "அர்த்தநாமரர்ஜநே துக்கமார் ஜிதா நாஞ்ச ரஷணே
நாஸே துக்கம் வ்யயே துக்கம் கிமார்த்தம் துக்கபாஜ்நம்
ஆஸா பிஸாசீ மவமாதயந்தம் ஆலோகயந்தம் ஜகதிந்தர ஜாலம்"

என்று மநுவசத்திலும் மஹாவாக்கிய ரத்நாவளியிலும் சொல்லியிருக்கின்றது. ஆதலால், காலத்திரயத்திலும் துக்கமாகிய தவத்தின்மீது ஞானிகள் ஆசைவையாமல் அந்ததனத்தின் வரத்து போக்குகளுக்குத் துக்கிக்காமல் தாம் அனுபவித்துக்கொண்டும் பிறருக்குத் கொடுத்துக் கொண்டும் நித்தியானந்தத்தை அடைந்து கொண்டுமாய் இருப்பார்கள், பாமரர்கள் தனத்தைச் சம்பாதித்து அதை தாம் அனுபவிக்காமலும் பிறருக்குக் கொடாமலும் பொம்மையைப் போலிருந்து கடைசியில் அந்த தனம் கள்ளர்களுக்கோ துர்வீயாஜ்ஜியதிற்கோ, அக்நிக்கோ தான் மரணமடைந்த பிறகு தன் தயாதிகளுக்கோ அல்லது மனைவி தன் இஷ்ட்டானுகாரமாய் சிலவழித்து விடுவாளோ தெரிய வராது.

தனத்தை எவர்களாகிலும் கொள்ளையிடுவார் களென்று எண்ணி அந்த தனத்தைப் புதைத்து வைத்தால் அது பூதேவிக்குச் சுவாதீனமாகும். ஆதலால், தனம் தனக்குத் துக்கத்தையே உண்டாவதற்குக் காரணமா யிருக்கிறது. வாயையும் வயிற்றையும் கட்டிச் சேர்த்துவைத்த தனத்தை வியர்த்தனமாய் போக்கடித்துக் கொண்டார்கள். அதிக துக்கத்தில் சாப்பாடில்லாமல் மெளிந்து மரணமடைந்தவர் கள். அநேகபேர்களுண்டு, மேலும் தனத்தை விருத்தி செய்ய வந்தால் அந்த தனம் நாளாவட்டத்தில் குறைந்து விடுமென்று எண்ணி வீடுகள் பூமி தோட்டம் துரவு முதலானவைகளை அடகுவைத்து கொண்டு வட்டிக்கு

கொடுத்தால், அதனால் தாயாத்களின் வழக்குகள் நேர்ந்தாலும் அல்லது திருட்டுச் சொத்தென்று வியாஜ்ஜியம் நேரிட்டாலும் அதனால் துக்கத்தையே உண்டாக்கும். அப்படிக்கல்லாமல் தான் கொடுத்த ரொக்கம் முழுமை ஒரே முறையாய் வரவேண்டு மென்றால் அது கஷ்ட சாத்தியமே யாம். தான் கொடுத்த தொகை சிறுகச்சிறுக வந்து சேருமே யொழிய ஒரே முறையாய் வருமென்று நினைக்கலாகாது.

விசேஷ லாபத்திற்கு ஆசைப்பட்டுச் சரக்குகளை வாங்கித் தூரதேசம் செல்வதற்காகக் கப்பல் வியாபாரம் செய்யத் தொடங்கியபோது காற்று மழையால் கப்பலுக்கு அபாயம் நேரிட்டாலும் அல்லது மாட்டு வண்டிகளில் செல்லும் பொழுது கள்ளர்களால் சரக்குகளைக் கொள்ளையடித்த போதிலும் அதனால் தனக்கு வேதனையை உண்டாக்கும். அப்படிக் கில்லாமல் தான் நிச்சயித்த தேசத்திற்குச் சரக்குகள் போய்ச் சேர்ந்து, சரக்குகளைக் கடன் கொடுத்து பணம் கொடாவிட்டாலும் அல்லது, சரக்கு விளை குறைந்தாலும் கறையான் பிடித்துச் சரக்குகள் கெட்டாலும். தீப்பட்டாலும் களவு போனாலும் இவைகளால் மனோவிய கூலமே உண்டாகும்.

இப்படிப்பட்ட எவ்வித அபாயங்களுமில்லாமல் விலையுடன் சரக்கை விற்பனை செய்து அந்தத்தனத்தை, "உண்டி" எழுதி, அந்த பணம் கொடுக்கத் தவறிவிட்டால், உண்டி கொடுத்தவனிடம் சென்று தனம் கொடுக்கும்படி கேட்டால் நான் மிகவும் நஷ்டமடைந் தேனென்று வேஷம் போட்டுத் தனத்தை அபகரித்தால் அதனால் துக்கமே உண்டாகும். அப்படிக் கல்லாமல் தனம் சுகமாய் வீடுவந்து சேர்ந்தால் அதை பந்துக்கள் சுற்றத்தார் சிநேகிதர்கள் புத்திரர்கள் சகோதரர்கள் முதலானோர் அபகரிக்கப் பார்ப்பார்கள். இவன் ஏமாறாமல் சாக்கிரதை யுடனிருந்தால் பந்துக்கள் முதலான வர்களின் எண்ணம் ஈடேறமாட்டா. அதனால் அவர்கள் அவனைக் கொல்ல எண்ணங்கொள்வார்கள்.

தன் பந்துக் களே இவ்வாறிருந்தால் பிறரைச் சொல்லவும் வேண்டுமோ! இந்தத் தனத்திற்குப் பிராணகாதகி (ஆட்கொல்லி) என்றும் பெயருண்டு.

பூர்வம் சிவஞ்ஞா என்னும் ஒரு மஹாபுருஷன் தன்பத்திநியுடன் காட்டுக்குச் சென்று விறகுகளை வெட்டிச் சுமை கட்டி ஊருக்குள் கொண்டுவந்து விற்பனை செய்து ஜீவிப்பது வழக்கம். இப்படிக் காலங் கழித்து வரும் நாளில் ஒரு நாள் விறகுகளை வெட்டும்பொழுது அந்தத் தம்பதி களுக்குச் சமீபமாய் இருந்த புதரில் தனம் காணப்பட்டது. அதை அவர்கள் பார்த்தவுடன் ஆட்கொல்லி என்று ஒடும்பொழுது அம்மார்க்கமாய்வந்து கொண்டிருக்கும் சகோதரர்கள் இருவரும் ஓடுபவர்களைப் பார்த்து, நீங்களேன் ஒடுகின்றீர்களென்று கேட்டார்கள். பிராணகா தகியைப் பார்த்து ஓடுகின்றோமென்று சொல்லினர்கள். அந்தப் பிராணகாதகியன்பது எப்படிப் பட்டதோ அதைப் பார்ப்போம். சற்றே காட்டுமென்று கேட்டார்கள். அவன் அவர்களை அழைத்துக் கொண்டு சென்று தூரமாய் நின்று புதரைக் காட்டினான். அவர்கள் புதரிலிருக்கும் தனத்தைப் பார்த்து இவர்கள் பைத்தியம் பிடித்தவர்களென்று எண்ணி அவர்களைப் போகும்படிச் சொல்லி சகோதரர்கள் இருவரும் மிகவும் ஒற்றுமையாயிருந்து ரொக்கத்தை யெல்லாம் மஹா சந்தோஷமாய் எடுத்துக் கொண்டு சமீபமாயிருக்கும் கிராமம் சென்று பங்கிட்டுக் கொல்லா மென்று சொல்லி அதை ஓரிடத்தில் மறைத்து, மூத்தோன் அவ்விடமே காவலிருந்து சகோதரனைப் போஜன பதார்த் தங்களைக் கொண்டுவரும்படி கிராமத்திற்குள் அனுப் பினான், சகோதரன், தான் ஒருவனே இந்த தனத்தை அநேக காலம் சுகமாய் ஜிவித்திருக்கலாம். இவனுக்கு ஏன் பங்கிட்டு கொடுக்க வேண்டும் என்று எண்ணி, தமயனைக் கொன்றுவிட நினைத்துப் போஜன பதார்த்தங்களை வாங்கி அதில் சிலவற்றைத்தான் புசித்து, மற்றவைகளில், விஷத்தைக் கலந்து கொண்டு வந்தான். தனத்தினிடம் காத்திருந்த தமையன்

சகோதரனுக்குத்தனத்தைப் பங்கிட்டுக் கொடுக்க இஷ்டமில்லாமல் அவனை வெட்டிவிட நிச்சயித்துத் தன்னிடமிருந்த கத்தியை நன்றாகத்தீட்டித் தயார் செய்து வைத்துக்கொண்டிருந்தான். சகோதரன் வந்து திண்பண்டங் களைக் கீழே வைக்கக் குனிந்தான். உடனே தமையன் தன் தம்பியைக் கத்தியால் ஒரே வெட்டாய் வீசி நறுக்கி ஓரிடத்தில் புதைத்துவிட்டு விஷங்கலந்த பதார்த்தங்களை புசித்துத் தானும் மாண்டான். ஆதலால்,

சுலோ "மாதா புத்ர விரேதாய ஹிரண்யாய நமோநரஹ

என்னும் சுருதி வாக்கிய ரீதியாய் ஆஹா! தனம் அவர்களை எப்படிப்பட்ட ஸ்திதிக்குக் கொண்டுவந்தது பாருங்கள். பதினெட்டு தினத்திற்குள் கௌரவர்களின் பதினோரஷ்றரோனி சதுரங்க சேனைகளும், பாண்டவர் களின் ஏழு அக்ஷேரக்ஷினி சதுரங்க சேனைகளும் மாண்டது தனத்திற்காக அல்லவா. இராவணாதி இராக்ஷதர்கள் தங்கள் மதத்தினாலல்லவோ அன்னிய ஸ்திரீகளையும் தனத்தையும் அபகரிக்க எண்ணி மாண்டார்கள். சுலோ 1 பாகஸ்ய வஹ்நிவத்ஞானம் விநாமோக்ஷோந ஸ்த்யதி, என்னும் ஆசார்ய வாக்கியத்தினால் நல்ல கதிக்கு ஞானம் காரணமேயொழிய தனம் காரணமன்று.

ஆதலால், தனம் பிராணஹானியை உண்டாக்குவதற்கு முக்கிய காரணமாயிருப்பதுமேயன்றி மான ஹானியையும் உண்டாக்கும். தனமுடையவன் நல்ல குணங்களில்லாமல் ஸ்திரிலோலனாயிருந்தாலும் மதுபானம் செய்பவனாயிருந் தாலும் அல்லது சூதாடுபவனாயிருந்தாலும் மானஹானி உண்டாவதற்குச் சந்தேகமில்லை. ஆதலால், இஹலோக சுகத்திற்குச் சாதகமானதும் சர்வ துக்கத்திற்குக் காரணமா யிருக்கப்பட்டது மாகிய தனத்தின்மீது மிகவும் பிரிதி வைக்காமல் சகல துக்கநாசனமும், பரம மோக்ஷ சாதனமும் நிரதிசயா

ஞந்தமென்னும் பிரம்ம ஞானமே மஹா தனமென்றும் அவைகளைச் சம்பாதித்து துர்ஜனர்களாகிய உட் சத்துருக் களையெல்லாம் ஜபித்து ஊர்ச்சிதமடைந் தவனே, புண்ணிய புருஷனென்பது வேதாந்த சித்தாந்தத்தின் முடிவாகும்.

ஆதலால், இந்த ஈஷணாத் திரவியங்கள் சமுத்தி ரத்தைப் போன்றதாய் இருக்கின்றன. பெண்டு பிள்ளை களுக்காகத் தனத்தைச் சம்பாதித்துத் தனது நிஜ சொரூ பத்தை மறந்து தான் ஜீவிக்கும் காலம் வெகு அற்பமெனச் சற்றாகிலும் தெரிந்து கொள்ளாமல், மரணம் அடையும் வரையிலும் இந்த அநித்யமான திரவ்வியத்தையே, பெண்டு பிள்ளைகளுக்காகச் சம்பாதித்துக்கொண்டிருப்பார்கள். மரண காலம் வந்தபோது தனது நிஜசொரூபம் தெரிந்து கொள்ளாததனால், மரணம் சமீபித்த வீட்டில் பூச்சிகள் தீபத்தைப் பார்த்துப் பழமென பிரமையடைந்து அந்த தீபத்தில்போய் வீழ்ந்து மரணமடைவதுபோல் மனிதர்கள்.

நாரீஸ்தநபரநாபீதேஸம், த்ருஷட்வாமாகா மொஹ வேசம்
ஏதன் மாம்ஸவஸா திவிகாரம். மநஸிவிசிந்திய வாரம் வாரம்

என்னும் ஸ்ரீ சங்கராசாரியார் வாக்கியரீதியாய் அஸ்திகள் சர்மம் (தோல்) நரம்பு ரோமம் ரத்தம் மாமிசம் மஜ்ஜை (கொழுப்பு) மலம் மூத்திரம் முதலானவைகளினால் நிறைந்திருக்கும். ஸ்திரீ ரூபத்தைப் பார்த்துப் பிரமை யடைந்து அவள் சம்ரக்ஷணார்த்தமாய்ப் பாபங்களுக்குட் பட்டு பயப்படாமல் திரவ்வியத்தைச் சம்பாதித்துக்கொண்டு சிலது நாளைக்குள் ஜீவர்கள் இச்சரீரத்தைவிட்டு மறுபடியும் வேறு சரீரமெடுக்கின்றார்கள். ஆதலால், இவ்வாறாகயிருந்து இறந்த ஸ்திரீ புருஷர்கள், மறுபடியும் எவ்விதமாய் மாறிமாறி வருகின்றார்களென்றால்,

சுருயஹ ஸ்றரஹ பூர்வபீதஸ்தம் நிஷ்பீட்ய முதமஸ நுதே
யஸ்மாத் ஜாதோ பகாத் பூர்வம் தஸ்மிந்நேவ பகேரமந்
"என்னையும் நோக்கி யென்னல்குலும் நோக்கி
யேந்திளங் கொங்கையும் நோக்குகின்றார்
அன்னையென் னோக்குமென் றஞ்சுகின்றேனக்
சோவொருவ ரழகியவா.ணி (பெரிய திருமொழி

*என்னும் யோக தத்வோபநிஷத் வாக்கியரீதியாயும், பெரிய திருமொழி வாக்கிய ரீதியாயும், பூர்வம் எந்த ஸ்தனங்களில் பாலைக் குடித்தானோ, அந்த ஸ்தனங்களையே மோகித்து சந்தோஷிக்கின்றான். எந்த யோநியில் முன் பிறந்தானோ அந்த யோநியைப் பார்த்து இப்பொழுது சம்போகம் செய்கின்றான்.*

பிறந்திடத்தைத் தெடுதே பேதை மடநெஞ்சம்
கறந்திடத்தைத் தேடுதே கண்.

சுரு || "யா மா தா ஸா புநர் பார்யா யா பார்யா மாத்தயேன ஹி யஹ பிதாஸ புநஹ புத்ரோ யஹ யிதர ஸ புநஹ புதாணி

*எவள் முதல் தாயாயிருக்கின்றாளோ, அவளே மறுபடியும் மனைவியாய் வருகின்றாள் ; எவள் மனைவியா யிருந்தாளோ அவளே மறுபடியும் தாயாய் வருவாள். எவன் முதல் தந்தையாயிருந்தானோ அவன் மறுபடியும் புத்திரனாய் வருவான்; எவன் புத்திரனாயிருந்தானோ அவனே மறுபடியும் தந்தையாய் வருவான்.*

சுரு || "ஏவம் ஸம்ஸாரசக்ரேண கூபசக்ரே கடா யிவ
ப்ரமந்தோ யோநிஜன்மாநி ஸ்ருத்தாலோகா ஸம்ஸ்ஜதேணி

*இப்படிப்பட்ட சம்சார சக்கரமானது, கிணற்றிலிருந்து ஜலம் கொண்டுவரும் ராட்டினம் கிருங்கிரு வென்று சுழல்வதுபோல் ஸ்திரீ புருஷர்கள் சம்சார மென்னும் சக்கரத்தில் சுழன்றுகொண்டு அநேக யோனிகளில் பிறந்து கொண்டும்,*

மறுபடியும் இறந்து கொண்டுமாய் வருகின் றார்கள். ஆதலால், பிராணப் பிரயாண காலத்தில் யார் யார் எந்தெந்த ரூபத்தை நினைக்கின்றார்களோ, அவர்கள் அந்த ரூபத்தையே அடைகின்றார்கள். ஜீவன் காற்று ரூபமாயி ருப்பதனால் "யத்பாவம் தத்பவதி" என்பதுபோல் ஜீவன் எதையெதை நினைக்கிறதோ அதையதையே அடையும்படி, தனக்குள் சாக்ஷி சொரூபமாயிருக்கும் ஆத்மாவானவர் செய்விக்கின்றார், இதன் விவரங்களையெல்லாம் பரமாத்மா என்னும் அட்டவணையில் முன் சொல்வோம்,

மருளுந் தெருளும் வந்து கதியென்பதை மறந்து
  மதனன் சலதி பொங்க விரணம்தான்
அளிபுண் டனைவந்து விரல் கொண் டுறவளைந்து
காதஞ் சுகமிலதன்று பரவசமாகி
  மருவுந்தொழில் மிகுந்து தினமும் தினமும் விஞ்சி
வளரும் பிறைகுறைந்த படிமதி சோர
  வானர மதென மேதி திரையாய

என்னும் திருப்புகழ் வாக்யா ரீதியாய் அடிக்கடி மயக்கமும் தெளிவுமுண்டாய், நற்கதி யென்பதை அறிதே மறந்து, காமக்கடல் பொங்கி இரணமாகிய அளிந்த புண்ணை சூழ்ந்து விரலினால் மிகவும் பரிசித்து, புணர்ச்சி யாகிய இது இன்பமேன்று பரவசப்பட்டு புணருந்தொழிலில் அதிகப்பட்டு நாள்தோறும் மிஞ்சி விருத்தி அடைகின்ற சந்திரன் கலை குறைந்தாற்போல் அறிவு சோர்வடைய சரீரம் குரங்கின் சரீரம் எனத் திரைந்து

"வயதும் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று
  வரலுஞ் செயலறிந்து ளிருமலுமாகி
அனமுஞ் செலுதலின்ற விழியுஞ் சுடர்களின்று
  முகமுங் களைகளின்றி சரியெனநாடி
மனையின் புறவிருந்த வினமுங் குலைகுலைந்து
  கலகஞ் செயவிருண்ட யமன்வரும் வேளை
ஏது துணை பழிகார மனமே.ணி

என்னும் திருப்புகழ் வாக்கியரீதியாய் வயதும் முதிர்ந்துவர, அடங்கிக்கிடந்த வியாதிகளெல்லாம் மேலெழும் திமிதிமியென்று உற்சாகத்தோடு வந்து செய்கையற்று உள்ளே இருமலு முண்டாய் அன்ன மிறங்குதலும் இல்லாமல், கண்களும் பஞ்சடைந்து ஒளியில்லாமல் முகத்தில் அழகு குறைந்திருக்கும் சமயத்தில் முடிவுதானென்று ஆலோசித்து, மனைவியும் சுகமுண்டான போது, அனுபவிக்க இருந்த சுற்றமும் கட்டுக் குலைந்து பேரொலி செய்யக் கரு நிறத்தையுடைய கூற்றவன் நம்மைநாடி வருங்காலத்தில் நமக்குத் துணையாய் நின்று காக்கச்கடவது யாது? எனக்குப் பழியை யுண்டாக்குகிற நெஞ்சமே!

லாயொருபக்கம் வாங்கி வலிப்ப
வாநத்தநீர்க் குழிக்கண்கள் மிழற்ற
தாயொரு பக்கம் தந்தையொரு பக்கம்
தாரமொரு பக்கமரற்ற
தீயொரு பக்கஞ் சேர்வதன் முன்னம்
செங்கண்மாலொடும் கிக்கனச்சுற்ற
மாயொரு பக்கம் நிற்கவல்லார்க்
கரவதண்டத்தி லுய்யலுமாமே.

கூடிக்கூடி யுற்றார்க ளிருந்து
குற்லம்நிற்க நற்றங்கள் பறைந்து
பாடிப்பாடியோர் பாடையிலிட்டு
நரிப்படைக்கொரு பாகுடம்போலே
கோடிமுடி யெடுப்பதன் முன்னம்
கௌத்துவமுடைக் கோவிந்தனோடு
கூடியாடிய வுள்ளத்த ரானால்
குறிப்பிடங்கடந் துய்ய லுமாமே

(பெரியாழ்வார் திருமொழி)

"இருப்பது பொய் ! போவது மெய் !
யாரிருந்து மென்னாம் ?
எவரிருந்து மென்செய்வார் ?
எமன் வருங்காற் றேடும்
பொருள் கொடுத்துப் பிழைப்பாயோ ?
தமரை யனுப்புவையோ ?
பொய்யுரைத்தாற் சென்றிடுமோ ?
பிற்கணத்தே வருவேன்

உருக்கம் வையுமையா வென்
றதுதும் விடுவானோ?
ஊட்டி வளர்த்திடு முடம்பி
னோடு கொடுபோகானோ ?
செருந்கெதுவோ நிலையில்லாப்
பொருட்கழுவாமல் மன்னே
சீச்சீ நீ யறிந்து கெட்டாய்
செப்புவர் யாருனக்கே ?ணி

என்னும் பிரபந்த வாக்யரீதியாய் முற்கூறிய காமக் குரோதாதிகளையும், ரஷணாத் திரயங்களையும் பஸ்பம் செய்து பார்க்குமளவும் அவ்விடம் சேஷமாய் ஒன்று மில்லாத ஞான சொரூபமாகிய ஆகாச வடிவமே நிற்கும், அப்படிப்பட்ட ஞானத்தை அடையவிடாமல் செய்வது காம சொரூபமேயாம். அந்தக் காம சொரூபத்தை இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

## 29. காம சொரூபம்

காமோ நமமஹாந்ஜகத்ப்ரமஹ இதாஸ் தித்வாந்தரங் கேஸ்வயம்
ஸ்திரீ பும்ஸாவிதரே தராங்க கருணை ராவேஸ்ய பாஹி ஸ்புடம்
அந்யோந்யம் பரிமோஹ்ய நைஜ தமஸா ப்ரேமா நுபந்தேநதென
பத்வா ப்ராமயதி ப்ரபஞ்சரசநாம் ஸம்வர்தயந் ப்ரஹம ஹா!

*பிரபஞ்சத்தைப் பிரமிக்க செய்கின்ற மன்மதன், ஜீவகோடிகளின் சரீரத்திலிருந்து கொண்டும் ஸ்திரீ புருஷர்களின் மனதை சிருங்கார சேஷ்டைகளினால் சிற்றின்பத்தைப் பெருக்கி மயக்கி ஒருவருக்கொருவர் மேல் மோஹத்தை அதிக மாய்யுண்டாக்கி ஆசை யென்னும் பந்தத்தினால் பிரபஞ்சத்தை சாஸ்வதமாய் விருத்தியடையச் செய்து, பிரம்ம ஞானத்தை நாசப்படுத்தி ஸ்திரீ புருஷர்களை பிரம்மிக்கச் செய்கின்றான். அதனால், சமஸ்த பிராணிகளுக்கும் காமத்தினால் வஸ்துக்களின் ஆசை உண்டாக்கின்றது. ஸ்திரீ புருஷர்களின் அந்தரங் கத்திலிருக்கும் மன்மதன், ஆசையென்னுங் கயிற்றாற் கட்டி ஆட்டிகின்றான். அதனால் சகல பிராணிகளுக்கும் காமம் அதிகரித்திருக்கின்றது. எப்படியெனில்,*

*தாயின் கருப்பையிலிருந்துவந்த சிறு குழந்தைக்கு வருஷத்திற்கு வருஷம் தேகமும் மனமும் குணங்களும் வெவ்வேறாய் மாறி மாறிக் கடைசியில், யௌவன தசை வந்து சகல போகங்களையும் அனுபவித்துப் பிறகு சரீரபலம் குறைந்து கொண்டே வரவர, மயிர் நரைத்துப் பற்க ளெல்லாம் வீழ்ந்து சரீரம் மேல் தோல் சுருங்க முண்டாய்க் கூன் வளைந்து கண் பார்வைகள் குறைந்து சரீரம் நடுக்கலுண்டாய் நடந்து சக்தி யில்லாமல் கையில் ஊன்றுகோல் பிடித்து நடுநடுங்கி தட்டுத்தடுமாறி நடந்து கொண்டிருந்த போதிலும் இக்கிழவனுக்குக் காமம் (இச்சை) மாத்திரம் இருபது வயதில்*

எவ்வாறிருந்ததோ அதுபோல் வயது தொண்ணூற்றொன்பதிலும் இருக்கும் அச்சமயத்தில் தாதா (பாட்டா) கலியாணம் செய்து கொள்கின்றாயா வென்று விளையாட்டாய்ச் சிறு பெண்கள் அக்கிழவனைக் கேட்பதுண்டு. அவ்வயதில் யாதொன்றும் செய்ய கிழவனுக்குச் சக்தி இல்லாதவனாயிருந்த போதிலும் பொக்கை வாயால் சிரித்துக் கொண்டு ஆ- ஆ- ஆ- ஆ- ஆ வென்று, வாயைத் திறந்து, இப்பொழுது எனக்கு யார் பெண் கொடுப்பார்கள் என்று சொல்லுவான். இவ்வாறான ஆசை உண்டாவதற்குக் காரணம் யாதனில் அநேக ஜன்மங்களாய் இவனுடன் கூடவே வந்து கொண்டிருக்கும் காமம். அக்கிழவனை இவ்வாறாக செய்வதேயொழிய இச்சென் மத்தில் இவனுக்குப் புதிதாய் உண்டாகிய காமம் செய்ததல்ல. இப்படிப்பட்ட காமத்துடனிருந்து சரீரத்தை விடுவதனால் அந்தக் கிழசரீரம் மாத்திரம் நாசமடைந்து அக்காமம் வேறு தாயின் கர்பத்திலிருக்கும் சிசுவில் போய்ப் புகுந்துப் பிறகு சிசுவாய்ப் பிறந்து வளரும்பொழுது பதினான்கு வயது பால்யத்தை வரையில் அக் காமமானது சிறுவனுக்குள் அடங்கியிருந்து பிறகு சிறுவனுக்குப் பால்ய தசை சென்று யௌவனம் வந்தவுடன் முன்ஜன்மத்தில் கிழவனாயிருந்த பொழுது இந்த காமத்திற்கும் யௌவனம் வந்து மறு ஜன்மத்தில் ஸ்திரீமீது அதிக மோகம் கொண்டிருப்பான். இந்தக்காமமானது இவ்வாறே அநேக ஜன்மங்களாய்த் தொடர்ந்து கொண்டே வருவதனால் ஜன்மாந்திரங்கள் தோறும் இக்காமத்திற்கு அசைகள் அதிகமாய் வேரூன்றி, பிரதி ஜன்மங்கள்தோறும் இந்த ஆசைகளென்னும் காமம் அவர்களின் கூடவே தொடர்ந்து வந்துகொண்டே இருக்கின்றன. இதுபோல் மற்ற எல்லா விஷயங்களும் மனிதர்களுடன் கூடவே அநேககோடி ஜன்மங்களாய் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கின்றனவேயன்றி இந்த ஜன்மத்தில் புதியதாய் வந்த காமமல்ல. ஆதலால் இக்காமத்தை

ஜயிக்க உபாயம் என்னவென்றால் ஸங்கல் பங்களை (எண்ணங்களை) எல்லாம் அதாவது, ஆசைகளை நிவர்த்தி செய்வதே காம ஜெயத்திற்கு சுலப உபாயம். காமம் உதிக்காமலிருப்பதற்காக என்ன செய்யவேண்டுமென்றால் போக்கிய வஸ்துக்களை விட்டு அது நன்றாயிருக்கிற தென்னும் எண்ணத்தை விட்டால் அதில் இச்சை உண்டாகவேமாட்ட. காமம் ஸங்கல்பத்தினால் (எண்ணத்தை) உண்டாகிறது. சங்கல்பம் காமத்திற்கு பீஜம் (விதை) காம ஜயத்திற்கு நன்றாயிருக்கிற தென்னும் எண்ணத்தை விடுவதே முக்கிய உபாயம் எந்த மனிதனும் நன்றாயிருக்கின்ற தென்னும் எண்ணத்தினாலேயே எந்தப் பதார்த்தங்களையும் இச்சிக்கின்றார்களேயன்றி நன்றாயிருக்கின்றது என்னும் எண்ணம் அவனுக்கு இல்லாவிடில், எதையும் இச்சிக்கவே மாட்டான். கோரிக்கைகளை ஜயிக்க எண்ணமுடையவன் காணப்படும். வஸ்துக்கள் நன்றாயிருக்கின்ற தென்னும் எண்ணத்தை நாசம் செய்ய வேண்டும். விஷயங்களில் சுகம் உண்டென்கிற எண்ணமேவிடல் வேண்டும். வைரக்கற்களை ரவைகற்களைச் சுரங்கத்திலிருந்து எடுக்கும் பொழுது எவ்வித பிரகாசமும் இல்லாமல் கேவலம் பாறைக் கல்லுகளைப்போல் இருக்கும் பிறகு அதைத் தொழிலாளிகள் சாணைப் பிடித்தபொழுது அவ்வைரக்கற்களுக்கு மிகவும் ஜொலி ஜொலிப்பு உண்டாகிறது. சாணைப் பிடித்த வைரக்கற்களைப் பாறை கற்களைப் போல் நினைத்தால் அதில் சிறிதேனும் ஆசை உண்டாகமாட்டா அது நன்றா யிருக்கின்றது என்று எண்ணமுண்டானால் அந்த ஆசை நிவாரணையாக மாட்டா. வஸ்துவினுடைய ரூபத்தை அறிந்து அந்த வஸ்துவில் அநர்த்த முண்டென்று நினைத்தால் ஸங்கல்பத்தையும் காமத்தையும் ஜயிக்கலாம். இதற்குத் திருஷ்டாந்தம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை அ 3 சுலோகம் 40-41. பிரமாணம் என்னவென்றால்,

* இந்த்ரியாணி மநோ புத்தி ரஸ்யாதிஷ்ட்டாத மூச்யதே
எதைர்விமோஹய த்யேஷ ஜ்ஞாந மாவ்ருத்ய நேஹிநம்

*அர்ஜுனன் : இந்தக் காமக் குரோதங்களை நிவர்த்தி செய்வதற்கு, மனம் புத்தி இந்திரியம் இவைகளை வசப் படுத்தவேண்டுமென்று சொன்னீரல்லவா? அவ்வாறு சொல்வதற்குக் காரணமென்ன ?*

*கிருஷ்ணன்: ஓ அர்ஜுநா, உலகத்தில் சகல மனிதர் களுக்கும் ஆசையென்பது உண்டல்லவா? அந்த ஆசை இருக்கப்பட்ட இடத்தைச் சொல்லுகின்றேன் கேள். ஆசை உண்டாவதற்கு இடம் புத்தி, ஆசையை விசேஷமாய் உண்டாக்குவதற்குச் சாதனம் மனது. விஷயங்களில் ஆசையை உண்டாக்குவதற்குக் காரணம் இந்திரியங்கள்,*

*ஆதலால், இந்த மூன்றும் ஆசைக்கு இருப்பிடமென்று சொல்லப்படும். இந்த ஆசை, ஞானத்தைப் பிரகாசிக்கச் செய்யாமல் ஜீவனை அநேக விதங்களாய் மோகிக்கச்*

---

* *இந்திரியங்கள் மனது புத்தி இவைகள் காமத்திற்கு இருப்பிடமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்தக் காமமா (ஆசையா)னது ஞானத்தை மறைத்து ஜீவனை மயக்கு கின்றது. ஏனென்றால், சப்தங்கள் முதலானவைகளை இந்திரியங்கள் அறிந்து மனத்தினிடம் சேர்ப்பிக்கின்றது. இந்திரியங்கள் சப்தங்களை மனதினிடம் சேர்ப்பித்தவுடன் அம்மனது விஷயங்களையெல்லாம் அறிகின்றது. மனது விஷயங்களை அறிந்தவுடனே அம்மனம் புத்தியினிடம் சேர்ப்பிக்கின்றது: பிறகு புத்தி ஆத்மாவினிடத்தில் விஷயங்களாகிய அழுக்குகளை (காமக்குரோதங்களை) சேர்ப்பித்தவை. இந்திரியங்கள் மனது புத்தி இவைகளாகையால் அவைகள் காமத்திற்கு இருப்பிடமாகச் சொல்லப்பட்டன. காமமாகிய அழுக்கை யடைந்த ஆத்மா அசுத்தனாய் விட்டபடியால் பரிசுத்தமான ஆத்மஞானம் மறைவுபட்டு மயங்கியிருக்கின்றது.*

செய்கின்றன. இந்திரியங்களில்லா விடில், இந்தக் காமக் குரோதங்கள் உண்டாகமாட்டா. அஃதெப்படியென்றால், ஒரு புருஷன் ஏதேனும் அதிசயமான வஸ்துவைப் பார்த்தா லல்லவோ அதில் காமம் (ஆசை) உண்டாகின்றது. அந்த ஆசை எதிலிருந்து உண்டாகின்றது?

அர்ஜுநன் : மனதிலிருந்தே உண்டாகின்றது.

கிருஷ்ணன் : அப்பொழுது மனதும், காமத்திற்கு இருப்பிடமல்லவா ?

அர்ஜுநன் : ஆம்.

கிருஷ்ணன் : நல்லது. அந்த வஸ்துவில் ஆசை பிறந்தவுடனே அதை அடையதக்கது எது ?

அர்ஜுநன் : புத்தி

கிருஷ்ணன் : அப்பொழுது புத்தியும் காமத்திற்கு (ஆசைக்கு) இடமாயிருக்கின்றதல்லவா ?

அர்ஜுநன் : ஆம்.

கிருஷ்ணன் : ஒருவன் நினைத்த வஸ்து கிடைத்தால் சரி. அப்படிக்குக் கிடைக்காவிட்டால் அவனுக்கு என்ன சம்பவிக்கும் ?

அர்ஜுநன் : கிடைப்பது எவரால் தடுக்கப்படு கின்றதோ அவர்களின் மீது கோபம் உண்டாகும்.

கிருஷ்ணன் : அப்படிக் கோபமுண்டாவதே குரோத மென்று சொல்லப்படும். இந்தக் குரோதத்திற்கு மனது புத்தி இந்திரியங்களே இருப்பிடமாயிருக்கின்ற தென்று இப்பொழுது தெரியவந்ததல்லவா ?

அர்ஜுநன் : ஆம் தெரிய வந்தது,

கிருஷ்ணன் : நல்லது, அந்தவஸ்துவைக் கண்களால் பாராமலிருந்தால் அதில் ஆசை உண்டாகுமோ?

அர்ஜுநன் : உண்டாகமாட்டா.

தஸ்மா த்வமிந்த்ரியாண்யாதௌ நியம்ப* பரதர்ஷப!

பாப்மாநம் ப்ரஜஹி ஹயேநம் ஜ்ஞாந விஜ்ஞாந நாஸநம்-41

கிருஷ்ணன் : ஓ பரத சிரேஷ்ட்டனே! ஆசை இவ்வளவு அனர்த்தத்தை உண்டாக்குகின்றதாகையால், இந்திரியங்கள் மனது புத்தி இவைகளை அடக்கி ஞானத்தைப் போக்கடிக்கும்.

பாவ சொரூபமான இந்தக் காமத்தை விட்டுவிடு. அதாவது, நீ முக்கியமாய்ச் செய்ய வேண்டிய விஷயம் என்னவென்றால் முதல் கண்கள், மூக்கு, வாய், செவிகள், தேகசர்மம் என்னும் இந்த ஐந்து இந்திரியங்களையும் அடக்க வேண்டும். என்றால் இந்திரியங்கள் போகும் வழியாய் மனதைப் போகவிடாமல் திருப்பிக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்வதனால் அந்த இந்திரியங்கள் விஷயங்களில் எப்பொழுதும்

---

* ஸ்ரீ கிருஷ்ணன் "பரதர்ஷப" என்று சொல்லுவதை யோசிக்குமளவில் அர்ஜுநன் வம்சத்திற் பூர்வம் பரதன் என்பவர் காமத்தை ஜயித்து ஞானியாயிருந்தார். ஆதலால், நீயும் காமத்தை ஜயிப்பதற்கு பிரயத்தனப்படு என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ஜுனனுக்கு உபதேசித்ததாய்த் தெரிய வருகின்றது. பரதன் ஞானியாயிருந்தும் காமத்தை (ஆசையை) விடாததனால் முதல் ஜன்மத்திலேயே மோக்ஷத்தை அடைய வேண்டிய பரதன் மானாயும் ஜடபரதனாயும் இரண்டு ஜன்மங்களை எடுக்க வேண்டிய தாய் நேரிட்டது. ஏனென்றால், ஜடபரதனுக்குக் கர்மசேஷம் இருந்தபடியால் இரண்டு ஜன்மமெடுக்க வேண்டியதாய் நேரிட்டது.

ஓடமாட்டா. இந்திரியங்கள் எப்பொழுது விஷயங்களில் ஓடாமல் நின்று விடுகின்றனவோ அப்பொழுதே குரோதம் ஓடிவிடுகின்றது.

ஆதலால் நீ இந்திரியங்களை விஷயங்களிலிருந்து திருப்பிக் கொள்வதனால் இந்த காமத்தை ஜயித்தவனா கின்றாய்.

அர்ஜுனன்:- ஐயா கிருஷ்ணமூர்த்தியே! "இந்திரி யாணி ப்ரமாதீநி" இந்திரியங்கள் மிகவும் பலமுடையது என்று இது வரையில் அத்யாயம்-2 சுலோகம்-60ல் சொல்லியிருக்கின்றீர். அப்படிப்பட்ட இந்திரியங்களை இழுத்துப் பிடித்தால் ஆசையென்னும் சத்துருவை ஜயிக்கலா மென்று இப்பொழுது சொன்னீரே! அப்படிப்பட்ட பலமுடைய இந்திரியங்களை இழுத்துப் பிடிப்பதற்கு உபாய மென்ன? இதற்குமுன் விஷயங்களை ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத் கீதையில் விரிவாய்க் காணலாம். இங்கு வேண்டுவது இவ்வளவேயாம்.

இந்த ஆசாபாசங்கள் நம்மைவிட்டு ஏன் ஒழிகிற தில்லையென்றால் ஆதியில் நம்மைப் பிரம்மதேவர் சிருஷ்டி செய்த நாள் முதல், நாளது வரையில் நாம், அநேக கோடி ஜன்மங்களை எடுத்து சரீரம் மாறி மாறி வந்து கொண்டேயிருக்கின்றோம். இப்பொழுதிருக்கின்ற மனைவி புத்திர பௌத்திராதிகள், தன தான்யாதி கிருகம் (வீடு) பூமி முதலானவைகள் யாவும், அனேக ஜன்மங்களாய் அவனவன் செய்த கர்மானு சாரமாய் பிரதி ஜன்மங்களிலும் தொடர்ந்து கொண்டே வருகின்றன. மேற்கூறியவைகளின் மீதுண்டான ஆசாபாசங்கள் இப்பொழுது மத்தியில் உண்டானவை களல்ல. இவை அனாதியானவை. இந்தப் பெண்டு பிள்ளைகளைப்போல்,

ஆதியிலிருந்து அனேக பெண்டு பிள்ளைகள் வந்துகொண்டே இருந்தார்கள். அந்தந்த ஜன்மங்களில் வந்து கொண்டிருந்த பெண்டு பிள்ளைகளை யெல்லாம்விட்டு மரணமடைந்து கொண்டே வர வர முன் ஜன்மாந்திரங்களில் அவர்களின் மீதுள்ள ஆசாபாசங் களெல்லாம் சூட்சும சரீரத்துடன் கூடவே சேர்ந்து என்றால், பிராணன் போகும்பொழுது சகல ஆசைகளும் மூச்சுடன் சேர்ந்து அந்தச் சரீரத்தை விட்டு வேறோர் தாயின் கர்ப்பத்தில் சிருஷ்ட்டி செய்து வைத்திருக்கும் பிண்டத்தில் போய்ச் சேர்ந்து சிசுவாய்ப் பிறந்தபோது, அந்தச் சிசுவுடன் கூடவே மேற்படி ஆசாபாசங்களெல்லாம் பால்யம் வரையில் அடங்கி யிருந்து பால்யதசை சென்று சிறுவனுக்கு யௌவனம் வரும்பொழுது முற்கூறிய ஆசாபாசங்களுக்கும் யௌவன முண்டாய், மறுபடியும் இச்சென்மத்திலுள்ள பெண்டு பிள்ளைகளின் மீதும் மற்றவைகளின்மீதும் ஆசையை உண்டாக்குவதற்குக் காரணமாயிருகின்றன. இதற்குத் திருஷ்ட்டாந்தம் சொல்லு கின்றோம் கேளுங்கள்.

யாதொன்றும் தெரியாமல் பரப்பிரம்ம சொரூபமா யிருக்கும் ஒரு வயதையுடைய குழந்தையின் கையில் ஓர் நாலணா கொடுத்த மாத்திரத்தில் அக்குழந்தை அதை ஏந்தி வாங்கிக் கொள்ளும். மறுபடியும் அதை யார் கேட்ட போதிலும் கொடுக்க மனம் வராமல் கையில் கெட்டியாய் இறுக்கிப் பிடித்துக் கொள்ளும் விஷயம், ஒவ்வொருவரும் அறிந்த விஷயமன்றோ. இதற்குக் காரணம்யாதெனில், சிசுவாயிருக்கும் தான் முன்ஜன்மாந்திரங்களில் பணத்தையே கையாண்டுவந்து கொண்டிருந்ததால் அந்தச் சிசுவுடன் கூடவே பணப்பிசாசும் சூட்சும (கண்களுக்குக் காணாத சரீரத்துடன் என்றால் மூச்சுடன் தொடர்ந்து கொண்டு வருகின்றது. இவைகளுடன் கூட ஆத்மாவும் பிரதி சரீரங்கள் தோறும் தொடர்ந்துக்

கொண்டேவந்து இவர்கள் செய்யப்பட்ட காரியங்களுக் கெல்லாம் சாக்ஷியாயிருந்து மறுபடியும் இவர்கள் மரணமடையும் பொழுது அந்தந்த ஜீவர்களுக்குத் தக்கபடி சுகதுக்கங்களை ஆத்மா கொடுத்துக் கொண்டு வருகின்றது. இந்த ஆத்மா, பிரபஞ்ச சிருஷ்ட்டி காலத்தில் பரப்பிரம்மத்திலிருந்து அணு சொரூபமாய்ப் புறப்பட்டு எல்லா ஜீவராசிகளிலும் வியாபித்திருக்கின்றது.

மற்றொரு திருஷ்ட்டாந்தம் சொல்லுகின்றோம் கேளுங்கள். ஒருவனுக்கு இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். அவர்களிருவரும் ஒரே பள்ளிக்குச் சென்று வாசிப்பதுண்டு. அவர்களில் மூத்த குமாரன் மாலை 7-மணி முதல் இரவு 10-மணி வரையில் வாசித்துப் பிறகு சயனியப்பான். மறுபடியும் இரவு 2 மணிக் கெழுந்து காலை 8-மணி வரையில் வாசித்து நித்தியகடனை முடித்துப் பள்ளிக்குப்போவது வழக்கம். இவ்வாறு கஷ்டப்பட்டு வாசித்தும் வகுப்பில் சூட்சும புத்தியில்லாமல் மந்தபுத்தி யுடையவனாக வேயிருப்பான், இவன் சகோதரன் எப்படிப்பட்டவ னென்றால், காலை மாலைகளில் எப்பொழுதும் ஆட்டங் களையே ஆடிக்கொண்டிருந்து இரவு 7-மணிக்கு உட்காந்து தன் பாடபுத்தகங்களின் ஏட்டை ஒரு முறை திருப்பிப் பார்த்து வைத்துவிட்டு 8-மணிக்கெல்லாம் போஜனத்திற்கு எழுந்திருப்பது வழக்கம்; இவர்களிருவரும் இவ்விதமாய் வாசித்துப் பரீக்ஷைக்குச் சென்றபோது மூத்தவன் இராப் பகலாய் வாசித்தும் மந்தபுத்தியுடையவனாதலால், பரீக்ஷைக் கடிதத்தைக் கையில் வாங்கி அதற்குப் பதிலெழுதயா தொன்றும் தோன்றாதவனாய் எதையோ ஒன்றை எழுதிக் கொடுத்து வந்துவிடுவான். அதனால் அவன் பரீக்ஷையில் தப்பினவனானான். இதற்குக் காரணம் யாதெனில், இவன் முன்

ஜன்மங்களில் வாசிப்புடைய வனல்லன். வாசிப்பதற்காக இந்த ஜன்மத்தில் பிரயத்தினப் பட்டிருக்கின்றான் ; இவ்வாசிப்பானது படிப்படியாய் ஜன்மாந்திரங்கள் தோறும் உயர்ந்துகொண்டே போகும். அதிகமாய் வாசிக்காமலிருந்த இளையவனோ பரீக்ஷையில் உட்கார்ந்து பரீக்ஷைக் கடிதத்தைக் கையில் வாங்கி முதற் கேள்வியிலிருந்து கடைசி கேள்வி வரையில் ஒரு முறை வாசித்துப் பார்த்து அவைகளுக்கெல்லாம் பதில் எழுதவே னென்று சந்தோஷ முடையவனாய் ஒரு கேள்வியும் தவறாமல் எல்லாவற்றையும் எழுதிப்பூர்த்தி செய்து பரீக்ஷைக் கடிதத்தில், உபாத்தி யாயர்கள் குறித்திருக்கும் மணிக்கு அரைமணி முந்தியே தான் எழுதிய கடிதத்தை உபாத்தியாயர்களிடம் கொடுத்து விட்டு வருவான். பரீக்ஷை முடிந்து எல்லாப் பிள்ளைகளின் கடிதங்களைப் பார்க்கும் பொழுது மேற்படி சிறுவன் எல்லாப் பிள்ளைகளைவிட அதிகமாய் மார்க்கு வாங்கி அவர்களுக்கெல்லாம் தலைவனாய் ஏற்பட்டான். அதிக வாசிப்பில்லாமலே இவ்விதமாய் உண்டாவதற்குக் காரணம் யாதெனில்,

> "ஒருமைக்கட் டான்கற்ற கல்விவொருவற்
> கொழுமையு மேமாப் புடைத்துணி என்பதுபோல்

இந்த இளையவன் முன் ஜன்மங்களில் ஆஅ. ஆக. (பி.ஏ. பி.எல்.) முதலாகிய பரீக்ஷைகள் செய்து கொண்டே வந்தவன் முன்னிருந்த ஸ்தூல என்றால், கண்களுக்குக் காணப்படும் சரீரங்கள் மாத்திரம் மாறி மாறி வருகின்றனவேயன்றி சூட்சும சரீரம்மாத்திரம் மாறுபடாமல் முன்னிருந்த குணங்களுடன் கூடவே வந்து கொண்டிருக்கும். இவ் விதமாய்த் தொடர்ந்து வருவதே பூர்வவாசனை என்று சொல்லப்படும். அது போல் மோஷமடைய நான்கு படிகள் உண்டு. அவைகளில் இரண்டாம்

படியை அப்பியாசம் செய்து கொண்டிருப்பவன். தன் அப்பியாசத்தைப் பூர்த்தி செய்து மரணமடைந்தால் மறுஜன்மத்தில் மூன்றாம்படி பிராரம்பிப்பான். அல்லது அப்பியாஸத்திலிருக்கும் பொழுது மரணமடைந்தால் மறு ஜன்மத்தில் அதாவது முன்ஜன்மத்தில் தான் சிவன் அல்லது விஷ்ணு பூஜை அல்லது அல்லா ஏசுநாதர் பூஜைகளை எங்கு செய்து விட்டானோ அவ்விடத்திலிருந்து மறுஜன்மத்தில் செய்ய ஆரம்பித்து இரண்டாம்படியை பூர்த்தி செய்து மூன்றாம் படியாகிய யோகாப்பியாசத்தை ஆரம்பிப்பான். இதுதான் விட்டகுறை என்றும் தொட்டகுறை என்றும் சொல்லப் படும் இதற்குத் திருஷ்டாந்தம் என்னவென்றால், ஓர் அங்குலம் நீளமுள்ள பச்சை நிறமுடைய புழுவானது இலைகளை மேய்ந்துகொண்டிருப்பதை ஒவ்வொருவரும் பார்த்திருக்கலாம். அப்புழு நடக்கும்பொழுது முகத்தினிடம் இருக்கும் பாகத்தை ஊன்றி உடலைமேல் தூக்கிப், பின்புறம் இருக்கும் பாகத்தைக் கொண்டுவந்து சிரசினிடம் இருக்கும் பாதத்தினிடம் வைத்து அப் பாதங்களை ஊன்றியபிறகு, முன்பாதத்தை எடுத்து அதற்குமுன் வைத்து இவ்விதமாய் ஒன்றை தொட்டு மற்றொன்றை விட்டு நடந்து கொண்டே போகும். அதுபோல் நாம் இந்த ஜன்மத்தில் எவ்வளவு ஈஸ்வரபக்தி செய்துவிட்டு விடுகின்றோமோ மறுஜன்மத்தில் அவ்விடமிருந்து மேற்கொண்டு சொல்வோ மென்று அறியவேண்டும். பக்தி செய்யும் முறை இதனடியிற் சொல்லுகின்றேன் கேளுங்கள்.

சாதாரணமாய் உலகத்திலுள்ள மனிதர்கள் எவ்விதமாய் பக்தி செய்து வருகின்றார்களென்றால் :- விக்கிநேஸ்வரர்மீதோ அல்லது மற்ற எந்த தேவதையின் மீதோ. அபிஷேகம் செய்தாலும் சரி அல்லது ராமன், கிருஷ்ணன், ஈஸ்வரன், லக்ஷிமி, பார்வதி, சரஸ்வதி முதலாகிய படங்களை ஆராதித்தாலும் சரி,

அச்சமயத்தில் அவர்களின் மனோநாட்டம் பூஜையின் மேலிராமல் உத்தியோக விஷயத்திலோ வியாபார விஷயத்திலோ சம்சார துக்கத்திலோ பொருள் ஆசையிலோ கோர்ட்டு விவகாரங்களிலோ, அல்லது, ஆபீசுக்குப் போக வேண்டுமே என்று சீக்கிரம் சீக்கிரமாய் மணியை ஆட்டி இவ்விதமாய் எதிலோ ஒன்றில் மனதில் ஓடவிட்டுப் பூஜையை செய்து வருகின்றார்கள். இவ்விதமாய்ச் சிரத்தையில்லாமல் கோடி ஜன்ம மெடுத்துப் பூஜை செய்து வந்த போதிலும் மேல்படியில் ஏறாமல் இந்த முதற்படியில் தான் இருப்பார்களென்று அறியவேண்டும். சிரத்தையுடன் பக்தி செய்து முக்தியடையும் மார்க்கத்தைச் சொல்லுகின்றோம் கேளுங்கள். ஸ்ரீ பகவத்கீதை அத்யாயம் 9 சுலோகம் 26 ல் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா என்ன சொல்லு கின்றாரென்றால்:-

“பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோமேபக்த்யாப்ர யஸ்சாதி ததஹம் பக்த்யுப ஹ்ருத மஸ்நாமி ப்ரயதாத்மநஹ.ணி

எனக்காக சிரத்தை பக்தியுடன், வில்வம் துளசி முதலாகிய பத்திரங்களாகிலும் சரி, அல்லது புஷ்பங் களாலாகிலும் பழங்களாலாகிலும் நீராகிலும், சரி, எவன் சுத்தாந்தக்கரண மனதுடன் எனக்குச் சமர்ப்பிக்கின்றானோ என்றால் எந்த பலனையும் கேழ்க்காமல் என்னை நினைத்து என் உருவத்தைப் பார்த்து மிகவும் பக்தியுடன் பிரதிதினம் செய்து வருகின்றானோ அப்படிப் பட்டவன் எனக்குக் காட்டும் (கொடுக்கும்) பத்ர புஷ்ப பழங்களை நான் கிரகிக்கின்றேன். என்றால், அதன் சத்தை நான் இழுத்துக் கொள்கிறேன் என்று பகவானும் மற்ற ஆன்றோரும் சொல்லியிருக்கின்றார்கள்.

## 30. கடவுளுக்கு நைவேத்தியம் காட்டி சாப்பிடவேண்டும்

ஸ்திரீ புருஷர்களெல்லோரும் தேவதா பூஜை எவ்விதமாகச் செய்யவேண்டுமோ அதனை இதனடியில் விவரித்துச் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

அன்பர்களே! நமது வீட்டிற்கு நாரதர், வசிஷ்டர், விஸ்வாமிந்திரர் முதலாகிய மஹாத்மாக்கள் வந்து விட்டால் எவ்விதமாய் அதிக சிரத்தை பக்தி விசுவாசங்களுடன் அவர்களைப் பூஜிப்போமே அதுபோல், ஈஸ்வர பூஜை செய்யும் ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களும் மனதை, வெளி விஷயங்களில் ஓடவிடாமல் நிறுத்தி மிகவும் பக்தி சிரத்தை விஸ்வாசங்களுடன் நிதானமாய்க் கடவுளைப் பூஜை செய்து வரவேண்டும். இவ்விதமாய்ப் பூஜை செய்து முடிந்தபிறகு, ஸ்திரீகள் ஸ்நானம் செய்து மிகவும் பயபக்தியுடன் சிசு ஆசாரம் மடியுடனிருந்து அடியில் சொல்லுவதுபோல், அந்தந்த வாரத்தில் அந்தந்தப் பதார்த்தங்களைச் சமைத்து, ஈஸ்வரர் படம் அல்லது கணபதி, சுப்பரமண்யர், விஷ்ணு, லக்ஷ்மி முதலாகிய படங்களில் எந்தப் படம் உங்கள் வீட்டில் இருக்கின்றதோ அந்தப் படங்களுக் கெதிரில் ஒவ்வொரு வீட்டிலுள்ளவர்கள் காலை மாலைகளிலும் இலையில் சாதம் வடித்து எல்லா பதார்த்தங்களையும் அந்த இலையில் பரிமாறி பிறகு நெய், மோர், ஜலம் முதல்னவைகளையும் இலை சமீபமாய் வைத்து ஆராதனை செய்து (நைவேத்தியம் காட்டி) அந்த சேஷத்தைச் சாப்பிடவேண்டும் சாப்பிடும் சாதம், பதார்த்தம், மோர், ஜலம் முதலானவைகளைப் பகவானுக்கு ஆராதனை செய்து சாப்பிட்டுவர வேண்டுமே யொழிய பகவானுக்கு ஆராதனை செய்யாமல் சாப்பிட லாகாது. பதார்த்தங்களைப் பிரதிதினம் மாற்றி மாற்றி ஒரு கீரை தினுசு சேர்த்து சாப்பிட்டு வந்தால் மலம் தாராளமாய் நழுவிச் செல்லும். அது எப்படி யென்றால்,

1. ஞாயிறு பகல்: ஆமவடை அல்லது கத்திரி மோர்க் குழம்பு, வாழைக்காய் பொரியல், பொன்னாங் கண்ணி சிறுபருப்பு துவட்டல், மிளகு, ரஸம், மோர், ஊறுகாய்.

இரவு கடுகு குழம்பு, அப்பளம், வறுத்து உடைத்த கடலைப்பருப்பு தேங்காயுடன் துகையல், ரசம், மோர், ஊறுகாய்.

2. திங்கள் பகல்: பருப்பு சாம்பார், கடலை பீர்க்கன் அல்லது புடலங்கூட்டு, உருளைக்கிழங்கு வறல், அரைக்கீரை மிளகுடன் துவட்டல், ரசம், மோர், ஊறுகாய்.

இரவு சுண்டைக்காய் குழம்பு, மணத்தக்காளி வத்தல் அப்பளப்பூ, ரசம், மோர், ஊறுகாய்.

3. செவ்வாய் பகல்: வண்டக்காய் வறுத்த குழம்பு, வாழைக்காய் வறல், பசரக்கீரை கடையல், ரசம், மோர், ஊறுகாய்.

இரவு வெந்தியக் குழம்பு, கடலைப் பருப்பு நெய்யுடன் வறுத்து தேங்காய் சேர்த்த துவையல், கொத்தவரை வத்தல், ரசம், மோர், ஊறுகாய்.

4. புதன் பகல்: தயிர் கசகசா மசாலாவுடன் உருளைக் கிழங்கு குழம்பு, மெரி (சிறிய) பாவை வறல் அரைக் கீரை கடையல், ரசம், மோர், ஊறுகாய்.

இரவு மிளகு குழம்பு, ஆதண்டங்காய் (சுக்கங்காய்) வத்தல், உலர்ந்த ரோஜா புஷ்பத் துகையல், அத்திக்காய் கூட்டு, ரசம், மோர், ஊறுகாய்.

5. வியாழன் பகல்: பச்சைபயர் சாம்பார், வாழைத் தண்டுக்கூட்டு, அகத்திக்கீரைத் துவட்டல், ரசம், மோர், ஊறுகாய்.

இரவு வடகம் குழம்பு, சப்பரிசி வத்தல் வாழைப்பூ கூட்டு ரசம், மோர், ஊறுகாய்.

6. வெள்ளிக்கிழமை பகல்: பகடா குழம்பு, கத்திரி பொரியல் கருணை அல்லது சேமை வறல், மணத்தக் காளிக்கீரைக் கடையல், ரசம், மோர், ஊறுகாய்.

இரவு பருப்பு சாம்பார் இஞ்சியுடன் எலுமிச்சம் பழம் ரசம் சேர்த்து துவையல், கடலை கத்திரி கூட்டு மணத்தக்காளி வத்தல், ரசம், மோர் ஊறுகாய்.

7. சனிக்கிழமை பகல் வாழைத்தண்டு கத்திரி பருப்பு சேர்த்து தப்பளம் (குழம்பு) உருளைக்கிழங்கு புட்டு சிறுகீரை மிளகுடன் துகட்டல் அல்லது பருப்புடன் கடையல் ரசம் மோர் ஊறுகாய்.

இரவு கத்திரி எண்ணெய்க்குழம்பு, பாவை வத்தல், ரசம் மோர், ஊறுகாய்.

கோஸ், நூக்கோல், அவரை, முள்ளங்கி, முருங்கை கீரைத்தண்டு, மாங்காய்ப் பச்சடி, வெள்ளரி, பெலா, விளாம், சுக்காங்கீரை, தக்காளி முதலாகிய பதார்த்தங்கள் கிடைக்குங்காலத்தில் அந்தந்த சந்தர்ப்பங்களுக் குத்தக்கபடி அந்தந்த காலத்தில் உபயோகப்படுத்திக் கொள்ளவேண்டும். பிரதிதினம் கிடைக்கும் பதார்த்தங்களைப் பிரதி வாரங் களிலும் உபயோகப்படுத்த மேற் சொல்லப்பட்டிருக்கின்றது, அதுபோல் சமைத்து பகல் மாலைகளில், அவரவர்களின் வீட்டில் இருக்கும் அந்தந்த விக்கிரஹங்கள் அல்லது படங்களுக்குக் காட்டி ஆராதனை செய்து அந்த சேஷத்தைச் சாப்பிடவேண்டும். இவ்வாறு பிரதிதினம் பகல் இரவு சாப்பிடும் அன்னம், பதார்த்தம், நெய், மோர், ஜலம் முதலானவைகளைப் பகவானுக்கு ஆராதனை செய்து சாப்பிட்டு பொய்

சொல்லாமலும் இருப்பீர்களாகில் உங்களுக்குப் புண்ணியமுண்டாகும். அப்புண்ணிய விசேஷத் தினால் நீங்கள் எல்லோரும், பெரிய வீடாகிய மோக்ஷ சாம்ராஜ்ஜிய பதவி வீட்டைத் தப்பாமல் அடைவதுமே யன்றி மாதம் மும்மாரி மழை பொழியும். இது சத்தியம் சத்தியம். ஆதலால், ஸ்திரீகள் சாதம் வடித்து நிமிர்த்திய பிறகு அந்த சாதத்தில் கொஞ்சம் சாதம் கரண்டியில் எடுத்து அதில் நெய்விட்டுக் கலந்து அக்கினியில் போட்டு அவ்வக்கினியை நமஸ்கரித்துச் சாதம் வடித்து நிமிர்த்திய பாண்டத்தின்மீது ஜலம் தெளித்துக் கிட்டையால் நன்றாய்த் துடைத்து மூன்று பக்கங்களிலும் விபூதியிட்டு அந்த அன்னத்தை நமஸ்கரித்து அதன்மீது தட்டைமூடி ஒருபுற மாய் அன்னப்பாண்டத்தை வைக்கவேண்டும். பதார்த்தங் களையும் அதுபோல் சமைத்து முடித்தப்பின் ஒரு தட்டில் இலைப்போட்டுப் பதார்த்தங்களுடன் அன்னமும் நெய்யும் பரிமாறி ஈஸ்வர படங்களின் எதிரில் பூமியின்மேல் ஜலம் தெளித்து தீபம் ஏற்றி, மேற்படி பதார்த்தங்களும் அன்னமும் பரிமாறிய தட்டைப்படத்திற்கு எதிரில் வைத்துத் தன் வலது கையில் கொஞ்சம் தீர்த்தம் விட்டுக்கொண்டு,

"ஓம் பூர்வஸ்வஹ ஓம் தத்ஸ விதுர்தரேண்யம்
பர்கோ தெவஸ்யதீமஹீ. தியோயோநஹ ப்ரசோதயாத்ணி

என்று சொல்லி அந்தத் தீர்த்தம் அன்னத்தின்மீது தெளித்து, மறுபடியும் கொஞ்சம் ஜலம் கையில்விட்டு "தேவசவித ப்ரசௌவ" என்று சொல்லி அந்த தீர்த்தத்தை நைவேத்தியம் சுற்றிலும் விட்டு, மறுபடியும் ஜலம் கையில்விட்டு "ஸத்தயம் தறுதேந பரிஷம்யாமி" என்று சொல்லி நைவேத்தியம் சுற்றிலும் மறுபடியும் தீர்த்தம் விடவேண்டும். இவ்விதமாய் விட்டபிறகு, பிரசாதத்தின் சத்தை ஈஸ்வரன் இழுத்துக் கொள்ளும்படி இதனடியில் சொல்லப்போகும் ஆறு மந்திரங்களையும் சொல்லும் பொழுதும் பிரசாதத்தை பகவானுக்கு தன் வலது கையால் காட்ட வேண்டும்.

"ஓம் ப்ராணாய * ஸவாஹா ஓம் உதாநாய ஸ்வாஹா
ஓம் வியாநாய ஸ்வாஹா, ஓம் உதாநாய ஸ்வாஹா
ஓம் ஸ்மாநாய ஸ்வாஹா, ஓம் ப்ரஹ்மணே ந ஸ்வாஹா."

என்று வலது கையால் பதார்த்தத்தின் சத்தைக் கிரகிக்கும்படி காட்ட வேண்டும். இவ்விதமாய்க் காட்டிய பிறகு மூன்று வட்டில்களில் பிரத்தியேகமாய் ஜலம் வைத்து ஒவ்வொரு வட்டிலுள்ள ஜலத்தை உத்தரணியால் எடுத்து, மஹா தீர்த்தம் கண்டருள்வாய், மஹா தீர்த்தம், கண்டருள் வாய். மஹா தீர்த்தம் கண்டருள்வாய் என்று சொல்லி மூன்றுமுறை கடவுள் படத்திற்குக்காட்டி அந்தத் தீர்த்தத்தை ஒவ்வொரு முறை வேறு வட்டிலில் விடவேண்டும்.

இவ்விதமாய்விட்டு கடவுளுக்கு ஆராதனை செய்த பிறகு சிறு குழந்தைகளும் பெரியோர்களும் சாப்பிட வேண்டுமேயொழிய கடவுளுக்கு ஆராதனைச் செய்யாமுன் சாப்பிடலாகாது. ஏனென்றால், பதார்த்தங்களை அறுத்துச் சமைக்கின்றோம். ஒவ்வொரு பதார்த்தத்திலும் ஜீவனுண்டு. அதையறுத்து சமைப்பதனால் தோஷம் உண்டாகின்றது. அவைகளைக்கடவுளுக்கு ஆராதனை செய்து சாப்பிட்டால் அந்தத் தோஷ நிவாரணையாகும். இதுபோல் வடதேசத்திலுள்ள பிராமணர்கள் தவிர மற்ற எந்த ஜாதி யாரும் செய்வதில்லை. ஆனால் அமாவாஸ்யை கிருத்திகை இவ்வித விரத தினங்களில் மாத்திரம் மற்ற மூன்று ஜாதியாரும் செய்து வருகின்றார்கள். அவ்வாறு செய்யாமல் பிரதி தினம் அமாவாஸ்யை கிருத்திகை இத்தினங்களாய் எண்ணி கடவுளுக்கு ஆராதனை செய்து சாப்பிட வேண்டும்,

இதற்குத் திருஷ்ட்டாந்தம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுநசம்வாதரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை அ-3, சுலோகம் 12-ல் ஸ்ரீ கிருஷ்ணபகவான் என்ன சொல்லுகின்றாரென்றால்,

---

* ஸ்வாஹ = ஸத்தை இழுத்துக்கொள் என்பதேயாம்.

இஷ்ட்டாந் போகாந் ஹிவோ தேவா தாஸ்யந்தெ யஜ்ஞ பாவிதா ஹா
தைர்தத்தா நப்ரதா யைப்போ யோயுங்க்தே ஸ்தேந ஏவஸ்ஹ

ஆதலால், ஓ அர்ஜுநா! பிரம்மதேவர் இந்த ஜனங்களுக்கு இன்னும் என்ன சொல்லினரென்றால் புருஷ சிரேஷ்ட்டர்களே! யஞ்ஞத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள், சந்தோஷ மடைந்து உங்களுக்கு இஷ்ட்டமான போகங்களைக் கொடுப்பார்கள். ஆதலால், நீங்கள் சாப்பிடு வதற்கு முன் அன்னமும் பதார்த்தங்களும் கடவுளுக்குக் காட்டி ஆராதனை செய்து அந்த சேஷத்தைப் சாப்பிட வேண்டும், இஃதன்றியும் எந்தெந்த இடங்களில் எந்தெந்தப் பதார்த்தங்களைச் சாப்பிடுகின்றீர்களோ அந்தந்தப் பதார்த்தங்களை அவ்வவ் விடத்திலேயே ஈஸ்வரனுக்கு அர்பணம் செய்து அந்த சேஷத்தைச் சாப்பிட வேண்டும். மேற்படி தேவதைகளால் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும், அவர்களுக்கே நைவேதிக்காமல் சாப்பிடப் பட்டவன் திருடனே யாவான் என்று சொல்லினர்.

அர்ஜுநன் :- ஐயா கிருஷ்ணமூர்த்தியே ! தேவர்கள் சமஸ்த போகங்களைக் கொடுக்கின்றார்களென்றும், அவர்களால் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கே நைவேதிக்க வேண்டுமென்றும், அப்படி நைவேதிக்காமல் சாப்பிடப்பட்டவன் திருடனாவா னென்றும் பிரமதேவன் சொன்னதாய்ச் சொன்னீரே இதற்கு காரணமென்ன? தேவதைகள் கொடுத்த பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கு நைவேதிக்காமல் சாப்பிடுவதனால் எப்படித் திருடனாவான்? இஃது என் புத்திக்கு எட்டா மலிருக்கின்றது. ஆதலால் இது விவரம் எனக்குத் தெரியச் சொல்லும் கிருஷ்ணா.

கிருஷ்ணன் :- ஓ அர்ஜுநா, நீ ராஜ்ஜிய பரிபாலனம் செய்யும் ராஜனல்லவா? உன்னிடத்தில் ஆயிரக்கணக்காய் ஜனங்கள் சம்பளம் வாங்கிக்கொண்டு சேவகம் செய்கின்றார் களல்லவா? அப்படிச் செய்வதற்குக் காரணமென்ன?

அர்ஜுநன் :- ஓ சுவாமி! அவர் என்னிடம் சேவிப்பதற்காகவே தான் அவர்களுக்குச் சம்பளம் கொடுக்கின்றேன். ஆதலால், அவர்கள் என்னிடம் சேவிக்கின்றார்கள்.

கிருஷ்ணன் :- நல்லது, உத்தியோகஸ்தர்களில் சிலர் உன் உத்தியோகம் செய்வதுமேயல்லாமல் அப்போதைக்கப் போது உனக்கு, நல்ல உயர்ந்த ருசிகரமாகிய பழவர்க்கங் களைக் கொண்டுவந்து காணிக்கையாயக் கொடுக்கின்றார் கள். மற்றும் சிலர் அப்படிச் செய்யாமல் நிராகரித்திருக்கின் றார்கள். அப்பொழுது இந்த இரண்டு வகுப்பினர்களிலும் எவர்களிடத்தில் உனக்கு அபிமானம் அதிகமாயிருக்கும்?

அர்ஜுநன் :- அப்போதைக்கப்போது பழவர்க்கங்களைக் கொண்டுவந்து காணிக்கையாய்ச் சமர்ப்பிக்கப் பட்டவர் களிடத்திலேயே எனக்கு அபிமானம் அதிகமா யிருக்குமேயன்றி மற்றவர்களிடத்தில் அப்படிப்பட்ட அபிமானம் இராது.

கிருஷ்ணன் :- ஆனால் நீ ஆயிரக்கணக்காய் கொடுத்த சம்பளத்திலிருந்து அப்பழவர்கங்கலை வாங்கிக் கொண்டு வருகிறார்களா ? அல்லது மற்றொரு விதமாய்ச் சம்பாதித்துக் கொண்டு வருகிறார்களா?

அர்ஜுநன் :- நான் கொடாவிட்டால் அவர்களுக்கு எங்கிருந்து வரும்; நான் கொடுத்த திரவ்வியத்திலிருந்தே வாங்கிக் கொண்டு வந்து கொடுக்கின்றார்கள் .

கிருஷ்ணன் :- அதனால் உனக்கென்ன பிரயோஜன முண்டாயிற்று? உலகில்லாத வஸ்துவை ஏதாகிலும் கொண்டு வந்து கொடுக்கின்றார்களா? அப்படிக் கொடாவிட்டால் உனக்கேதாகிலும் குறைபடுமோ? ஆதலால் அவர்களிடத்தில் அபிமானம் வைக்க வேண்டிய காரணமென்ன?

அர்ஜுநன் :- எனக்கு அவர்கள் கொடுக்கப்பட்ட காணிக்கையினால் யாதொரு பிரயோஜனமும் இல்லாவிடினும் அவர்களுக்கு என்மீது உண்டாயிருக்கும் சிரத்தை பக்தி விசுவாசங்களினால் எனக்கு அவர்களின் மீது அதிகப்பிரீதி உண்டாகின்றது. ஆதலால், அவர்களிடத்தில் நான் அபிமானம் வைப்பது சகஜமேயல்லவா?

கிருஷ்ணன் :- நல்லது. நீ அவர்களை அபிமானிப்பதனால் அவர்களுக்கு உன்னால் ஏதாகிலும் பிரயோஜன முண்டாகுமா?

அர்ஜுநன் :- ஆஹா! உண்டாகும். எனக்கு எப்பொழுது அவர்களிடத்தில் அபிமானம் உண்டாகின்றதோ அவர்களுக்கு ஆயிரக்கணக்காய்ச் சம்பளம் உயர்த்திக் கொண்டே வருவேன். அதனால் அவர்கள் கிரமக்கிரமமாய் அபிவிருத்தி அடையத்தக்கவர்களாயிருப்பார்கள். அப்படிச் செய்யாமல் என்னிடத்தில் பக்த சிரத்தையில்லாதவர்களாய் இருக்கின்றார்க ளென்று எனக்கு தோன்றினால் அவர்களுக்குச் சம்பளம் உயர்த்தி மேன்மையுண்டாக்க எனக்கு எப்படி மனம் உண்டாகுமா? அதற்குப் பதிலாய் அவர்களை நாளா வட்டத்தில் க்ஷீணகதிக்குக் கொண்டுவரவேண்டுமென்று தோன்றும்.

கிருஷணன் : இதுபோல் இந்திராதி தேவதைகளும் ஜனங்களுக்கு ஜீவனார்த்தமாகிய பதார்த்தங்களைக் கொடுப்பதற்கு மழையைப் பெய்விக்கப் பகவானால் நியமிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அவர்களால் விளைவித்துக் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கு அர்ப்பணம் செய்வதனால் அவர்கள் சந்தோஷித்து மறுபடி யும் பிரதி வருஷங்களிலும் மழையை விருத்தி செய்து கொண்டே வருவார்கள். அதனால் ஜனங்கள் க்ஷேமமாய் விருத்தியடைவார்கள் அத்தியாயம் 3 சுலோகம் 13.

யஜ்ஞஸிட்டாஸிந ஸ்ஸந்தோ முச்யந்தே ஸர்வ கில்பிஷை
ஹிதே த்வநம் புஞ்ஜதே பாபாயே பசந் த்யாத்ம காரணாத்

*ஆதலால், ஓ. அர்ஜுநா? நான் இதுவரையில் சொல்லியதுபோல் ஜீவனார்த்தமாகிய பதார்த்தங்களைக் கொடுத்துக் கொண்டிருக்கும் தேவதைகளை ஜனங்கள் தினந்தோறும் ஆராதிக்கவேண்டியது அத்யாவஸ்ய மாதலால் புத்திமான்களாகிய ஜனங்கள் தேவதைகளுக்கு ஆராதித்த பிரசாதங்களைப் புசித்து ஜீவிப்பவர்கள் சமஸ்த பாபங்களிலிருந்து விடுபட்டு விமுக்தர்களாவார்கள். அப்படிச் செய்யாமல் எவனொருவன் சுயேச்சையாய் அவன் குடும்பம் வரையில் அன்னத்தைப் புசிக்கின்றானோ அப்படிப்பட்டவன் பாபத்திற்குப் பாத்திரனாகின்றான்.*

*தேவயஜ்ஞாதி பஞ்ச யஜ்ஞங்களைச் செய்து அம்ரு தன்னும் பெயருடைய அதன் சேஷத்தைச் சாப்பிடப் பட்டவர்கள் சகல பாவங்களிலிருந்து விடுபடுவார்கள் பஞ்சயஜ்ஞமென்றால்,*

"அத்யாபநம் ப்ரஹ்மயஜ்ஞஹ பித்ருயஜ்ஞஸ்து தர்பண்ம்
ஹோமோ தைவோ பலிர்பௌதோ ந்யருஞ்ஞோ அதிதி பூஜ நம"
"பஞ்சை தாந் யோ மஹாயஜ் ஞாந்ந ஹாபயதி ஸ்க்திதஹ
ஸகருஹேபி வஸந் நித்யம் ஸுதாதோஷைந் ந லிப்யதே."

*இதில் பிரம்மயஜ்ஞமென்றால், பிரதிதினம் வேதாத் யயணம் செய்வது பித்ருஜ்ஞமென்றால், பிரதிதினம் பித்ரு தேவதைகளுக்குத் தர்ப்பணங்கள் விட்டு அவர்களை திருப்தியடையச் செய்வது ; தேவாஜ்ஞ மென்றால், பிரதி தினம் அக்நியில் ஓமம் செய்வது ; பூதாஜ்ஞமென்றால் பிரதிதினம் ஜந்துக்களுக்குப் பலி கொடுத்துக் கொண்டி ருப்பது ;*

மனுஷ்யஜ்ஞாமென்றால், பிரதிதினம் வரப்பட்ட அதிதிகளுக்கு போஜனம் அளிப்பது ; இப்படிப் பட்ட பஞ்ச மஹா உஜ்ஞுத்தினால் பிரதிதினம் செய்யும் கிருகஸ்தன் என்றால், ஸம்சாரத்துடன் இருக்கப்பட்டவன் பஞ்சஸுநா தோஷங்களை அடையமாட்டான். பஞ்சஸூநாதோஷ மென்றால் ;

"கண்டநீ பேஷணீ கல்லி உதகும்பீ சமார்ஜநீ
பஞ்சஸூநாக்ருஹஸ்தஸ்ய தாபிஸ் ஸ்வர்க்கம் ந விந்ததி"

உலக்கை உரல் அம்மி அடுப்பு ஜலபாண்டம் துடைப்பம் இவைகளில்லாமல் சம்சாரம் நடக்கமாட்டா. ஆதலால் இவைகளால் வேலை செய்யும்பொழுது சிறிய ஜந்துக்களாகிய புழுக்களும் இம்சையுண்டாகின்றது. ஆதலால், இதையே பஞ்சஸூநாய யஜ்ஞுமென்று சொல்லப்படும் கிருகத்தில் இப்படிப்பட்ட தோஷங்கள் சம்பவிப்பதனால் கிருகஸ்தனுக்குச் சொர்க்கம் உண்டாவது துர்லபம். சொர்க்கமே உண்டாகா மலிருந்தால் முக்தனாவது எப்படி? முன்சொல்லிய பஞ்சம்ஹா யஜ்ஞுங்களைச் செய்து வந்தால் இந்தத் தோஷங்கள் நசித்துவிடும் இப்படிச் செய்யாதவர்கள் பாவத்தையே அனுபவித்துக் கொண்டு வரவேண்டும். இவ்விடத்தில் யஞ்ஞுமென்றால் அக்நிஷ்ட் டோமாதி யஜ்ஞுங்களேயல்ல ; பிரதி புருஷனும் ஓர் இஷ்ட்ட தேவதையை உபாசனாமூர்த்தியாய் ஆராதிப்ப துண்டல்லவா? அந்த உபாசனா மூர்த்திக்குப் பிரதி தினம் சமைத்த பதார்த்தங்களை அந்தப்பகவானுக்கு ஆராதித்து அந்த சேஷத்தைச் சாப்பிடுவதும் யஜ்ஞுமென்றே சொல்லப் படும். ஆதலால் ஓ அர்ஸுநா! அப்படி ஆராதித்து பிறகு, "தைவம் மா நுஷரூபணே" என்றிருகின்றதாதலால், அதிதிகளுக்குப் பிக்ஷை கொடுத்துச் சாப்பிட வேண்டும். அப்படிக் கொடுத்துச் சாப்பிடுவதனால் தேவதா பிரீதி

யார்த்தனாய்ச் செய்யப்பட்ட யஜ்மங்களில் இதுவும் சேர்ந்த தென்று அறியக்கடவாய். இஃதன்றியும் சகல பூதங்களும் பகவத் சொரூபமேயாதலால், புபீலிகரதி பிரருதேவன் வரையில் சகல ஜீவஜந்துக்களிலும் சாக்ஷாத் பரப்பிரம்மமே சாக்ஷிமாத்திரனாய் ஆத்ம சொரூபனாய் இருப்பதனால் தன் வீட்டைக் காத்துக் கொண்டிருக்கும் நாய் பூனை முதலாகிய ஜந்துக்களுக்கும் அன்னம்போடுவது தேவதாப்பிரீதியார்த் தம் செய்யப் பட்ட யஜ்ஞத்திலேயே சேர்ந்ததாகின்றது. தீண்டாதவர்கள் முதல் எந்த ஜாதியாராயிருந்தாலும் அவர்களின் சக்தியானுசாரமாய் இப்படிச் செய்வதற்குச் சாத்திய மானதேயன்றி அசாத்திய மானதல்ல. இப்படிச் செய்வதனால் கடவுளுக்குப் பிரீதி யுண்டாகிறது. எப் பொழுது கடவுளுக்குப் பிரீதி உண்டாகிறதோ அப்பொழுதே அவனுடைய பாவகர்மங்களெல்லாம் பரிஹாரமாகின்றன (நசிக்கின்றன). அப்படிச் செய்யாதவனுக்கோ என்றால் சமைத்த பதார்த்தங்களைப் பகவானுக்கு ஆராதிக்காமலும் தன் சக்தியானுசாரம் அதிதிகளுக்குப் போடாமலும் தன் வீட்டைக் காத்துக்கொண்டிருக்கும் பூனை நாய்களுக்கும் போடாமலும் எவனொருவன் தன் குடும்பம் வரையில் உபதேசித்துக் கொள்ளுகின்றானோ அப்படிப்பட்டவன் பாபியென்றே சொல்லப்படுவான். ஆனால் இப்படி உஜ்ஞருபமாகிய தேவதா ஆராதனையினால் உண்டாகும் பிரயோஜன மென்னவென்று கேட்கின்றாயோ அதை சொல்லுகிறேன் கேள்.

> அந்நாத் பவந்தி பூதாநி பர்ஜந்யா தந்ந ஸம்பவஹ
> யஜ்ஞாத பவதி பாஜந்யோ யஞ்ஞஹ கர்மஸமுதபவஹ

அப்படிப்பட்ட யஜ்ஞத்தில் தேவதைகளுக்குப் பிரீதி யுண்டாகின்றது, அதனால் அவர்கள் காலமழையை சரியாய்ப்

பெய்விக்கின்றார்கள் : அப்படிப் பெய்விப்பதனால் பயிர்கள் சரியாய்ப் பலன்களைக் கொடுக்கின்றன. அப்படிக் கொடுப்பதனால் ஜனங்களுக்கு ஆஹாரங்கள் புஷ்க்களமாய் உண்டாகின்றன. அதனால் மனிதர்கள் பசு பக்ஷி, முதலானவைகள் அபிவிருத்தியாகின்றன. ஆதலால், ஜனங்கள் யஜ்ஞமென்னும் தேவதாராதனையைச் சரியாய் நடத்திக் கொண்டு வரவேண்டும், இவ்வாறு நடத்திக்கொண்டு வந்ததால் அவரவர்கள் நற்கதியடைவதுமேயன்றி மாதம் மும்மாரி மழை பெய்யும். ஆதலால், பிரதி மனுஷ்யனும் யஜ்ஞ மென்னும் கர்மத்தை அவஸ்யமாம் அனுஷ்டிக்க வேண்டும். அத்யாயம்-3 சுலோகம்-16.

ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரங் நாநுவர்த்தய தீஹ யஹ
ஆகாயு நித்தரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதீ

ஓ அர்ஜுநா! இந்தயஜ்ஞம் சக்ராகாரமாய்த் திரிந்து கொண்டிருக்கின்றது. அஃதெப்படியென்றால், யஜ்ஞம், ஜனங்களுடன் கூடவே பிரம்மதேவனால் உற்பத்தி செய்யப் பட்டது. அந்த யஜ்ஞத்தினால் தேவதைகள் பிரீதியா கின்றார்கள்: பிரீதியாவதினால் மழை பெய்கின்றது. மழை பெய்வதனால் ஆஹார வஸ்துக்கள் விசேஷமாய் உண்டாகின்றன. அப்படி உண்டாவதனால் பகவதாராதன ரூபமாய்க் கர்மத்தைச் செய்ய சக்தியுடையவர்களாகின்றார்கள், அப்படிப்பட்ட கர்மம் மறுபடியும் அந்த பகவானிடத்திலேயே அர்ப்பணமாகின்றது. ஆதலால், இந்த யஜ்ஞரூபமான கர்மம் எந்தப் பரப் பிரம்மத்திலிருந்து பிறந்ததோ அந்த பரப்பிரம்மத்திலேயே ஐக்கியமாய் மறுபடியும் அதிலிருந்தே உண்டாகிறபடியால் இதற்குச் சக்ரமென்று சொல்லப்படும். இந்த விஷயங்களையெல்லாம் எவனொருவன் சரியாய் அறியாமல் தான்

செய்யப்பட்ட கர்மமெல்லாம் பரமாத்மாவினாலேயே உண்டாயினவென்றும் அவற்றின் பலன் அந்தப் பரமாத்மாவிற்கே சேர வேண்டி தாய்யிருக்கின்றதென்றும் எண்ணாமல், தன் ஆத்மார்த்தமா எண்ணி அதன் பலத்தைத் தானே அனுபாவித்துக் கொண்டு மனதை இந்திரிய விஷயங்களில் ஓடவிட்டுக் கொண்டிருக்கின்றானோ. அவன் பாபாத்மனாகின்றான். அப்படிப் பட்டவன் ஜீவனம் வியாத்தமான தாயிருக்கின்றது.

ஓ அர்ஜுநா! உலகத்தில் முதல் விருக்ஷம் உண்டா யிற்றா அல்லது விதை உண்டாயிற்றா என்னும் விஷயத்தை எவ்வாறு சொல்லத் துணியமாட்டோமோ அதுபோல் இந்தச் சக்கரத்திற்கு இது முதலென்றும் இது கடைசி யென்றும் சொல்வதற்குச் சாத்தியப்படமாட்டா. அது போல், சம்சாரமென்னும் சமுத்திரமும் அனாதியென்று சொல்லப்பட்டிருக்கின்றது. அஃதெப்படியென்றால் ஒரு சக்கரத்தின்மீதேறி அந்த சக்கரத்தை அனேக தடவைகளில் சுற்றிவரும் எறும்பானது தான் வெகுதூரம் திரிகின்றதென்று எண்ணுமேயன்றி மறுபடியும் யதாஸ்தானத்திற்கே வருகின்றதென்று தெரிந்து அந்த சக்கரத்தைவிட்டு அப்புறம் போவதற்கு எப்படிப் பிரயத்தனப் படாதோ அதுபோல், சம்சாரியாயிருக்கப்பட்டவன் தான் ஒருமுறை செய்த காரியத்தையே மறுபடியும் செய்து கொண்டு அப்போதைக் கப்போது அது புது கார்யங்கள் செய்வதுபோல் பிரமை யடைந்து, இந்த சம்சாரமென்னும் சக்கரத்தில் பிறந்து கொண்டும், இறந்து கொண்டுமாய் இருப்பானேயன்றி, இதிலிருந்து விமுக்தனாவதற்குப் பிரயத்தினப்படமாட்டான்.

"இந்த அத்தியாயம் 3-சுலோகம் 3 முதல் 17-வரையில் அஜ்ஞானி அந்தக்கரண கத்தி நிமிர்த்தமாய்க் கர்மத்தைச் செய்ய வேண்டுமென்று செரல்லப்பட்டது 18வது சுலோகம் முதல்

பிரம்மஞானிக்குக் காமத்தினால் பியோஜனம் இல்லை யென்பதைச் சொல்லப் போகின்றார்." இதை ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத் கீதையில் விரிவாய்க் காணலாம். இன்னும் அத்தியாயம் 9 சுலோகம் 27 ல்,

யத்கரோஷி யதஸ்நாஸி யஜ்ஜுஹோகஷி ததாஸியத்
யத்தபஸ்யஸி கௌந்தேய ! தத்புருஷ்வ மதர்ப்பணம்

ஓ குந்தி புத்ரா! சுபாலருணத்திலாகிலும் சாஸ்திர விதிப்படியாகிலும் நீ எந்தக் கர்மங்களைச் செய்கின்றாயோ உன் பசி தணிய வயிற்றிற்கு எதைச் சாப்பிடுகின்றாயோ, எதையெதைப் புசிக்கின்றாயோ, எதை குடிக்கின்றாயோ, எதைத் தானம் செய்கின்றாயோ எதில் மனதைச் செலுத்துக்கின்றாயோ, எதைக் கொடுக்கின்றாயோ அவைகளை எல்லாம் நான் என்னும் அஹங்கார மமகாரங் களைவிட்டு எல்லாவற்றையும் கிருஷ்ணார்ப்பணம் அல்லது பிரம்மார்ப் பணமாய்ச் செய்வதே எனக்கான பூஜை. இவ்வாறு செய்யும் கர்மயோகி கர்மபந்தங்களிலிருந்து விடுபட்டு ஆத்ம ஞானத்தையடைந்த ஜீவன் முத்தனாய்ப் பிரம்மமாகிய என்னில் ஐக்கியமாவான் என்று சொல்லப் பட்டிருக்கின்றது. ஆதலால் நீங்கள் பிரதி மாதமும் பிதுர் தர்ப்பணமென்னும் கர்மத்தைச் செய்துவர வேண்டும். அப்பிதுர் தர்ப்பண கர்மங்களை எவ்வாறு விட வேண்டுமோ அதை இதனடியிற் சொல்லுகின்றோம் ; அதுபோல் பிரதி மாதம் வரும் அமாவாஸ்யை களிலும் பிதுர் தர்ப்பணம் விட்டுவர வேண்டும்.

# 31. அமாவாஸ்யையில் பிதுர் தர்ப்பண மந்திரம்

பிரதிமாதம் அமாவாஸ்யையில் நீங்கள் எள்ளும் ஜலமும் தட்டில்விட்டுப் பிதுர் தர்ப்பணம் கர்மவிதிப்படிச் செய்யவேண்டிய மந்திரங்களை சொல்லுகிறோம்.

அமாவாஸ்யை தினம் காலை ஆறு அல்லது ஏழுமணிக்கெல்லாம் ஸ்நானம் செய்து முடிந்தபிறகு மூன்று தர்ப்பை நுனிகளை ஒன்றாய் சேர்த்த ஜாணளவு நீளத்தில் கிள்ளி, அம்மூன்று தர்ப்பை நுனியில் ஒரு முடி போட்டு வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு நாலங்குலம் நீளமுள்ள தாய் பத்துத் தர்ப்பைகளைக் கிள்ளி வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு நீளமாயுள்ள சில தர்ப்பைகளையும் எள்ளும் எடுத்து, எல்லாவற்றையும் ஒரு இலையில் தயார் செய்து வைத்துக் கொள்ள வேண்டும்.

மேற்சொல்லியது போல் தர்ப்பையும் எள்ளும் தயார் செய்து ஒரு பெரிய மனையின் மீது மான் தோல் போட்டு அதன்மேல் வெள்ளை வஸ்திரம் மடித்து விரித்துக் கிழக்கு முகவாய் * சித்தாசனத்துடன் உட்கார வேண்டும்! இவ்வாறு உட்கார்ந்து சிரசு, உச்சி, நெற்றி, மார்பு, தொப்புள், புஜம் நடுக்கைகள், கணுக்கைகள் மாறுதலாய் முழங்கால், பாதமணிக்கட்டு, விலா முதுகு, கீழ்ப்புரம் கழுத்து முதலான இடங்களில் மந்திரங்களைச் சொல்லி விபூதியிட இந்நூலில் இதுவே சிவராஜயோகஸமாதி இதை ஜபம் செய்யுங்கள் என்னும் விஷய அட்டவணையில் எழுதியிருக்கின்றோம். அதைப் பாடம் செய்து அம்மந்திரங்களை மனதில் சொல்லி விபூதியிட்டு

* சித்தாசனம் இடதுபாதம் வலது துடையின்கீழ் வைத்து வலதுபாதத்தை இடது துடைக்கும் முழங்கால் கணுக்கால் இவ்விரண்டிற்கும் மத்தியில் வைத்து உட்காருவது.

முடித்தவுடன் விபூதியிட்ட ஜலத்தைக் கிணற்றிலாகிலும் அல்லது செடிகளிலாகிலும் விட்டுவிட வேண்டும். பிறகு,

தன் எதிரில் ஒரு பஞ்சபாத்திரம் ஜலம் தட்டி வைத்து ஒரு பெரிய செம்பு ஜலமும் இலையும் எள்ளும், முன் தயார் செய்து வைத்த தர்ப்பைகளும் தனது வலது கைப்புறமாய் வைத்துக் கொள்ள வேண்டும்.

இவைகளையெல்லாம் தன் சமீபமாய்த் தயார் செய்து வைத்துக் கொண்டு, பிறகு கணபதி பூஜை செய்து முடித்துத் தர்ப்பணம்விட வேண்டும் இனி கணபதி பூஜையும் பிதுர் தர்ப்பணமும் விடும் மந்திரங்கள் இதனடியில் சொல்லப் போகின்றோம். இதனடியில் சொல்லப்போகும் மந்திரங் களையெல்லாம் பாடம் செய்து பிரதி அமாவாஸ்யைகளில் நீங்களே பிராமணன் இல்லாமல் தர்ப்பணம்விட்டு வாருங்கள். இனி கணபதி பூஜை சொல்லுகின்றோம்.

இரண்டு சிறிய தர்ப்பைகளை ஆசனமாய்க் காலின் கீழ் மனைமேல்வைத்து உட்கார்ந்து.

சுக்லாம்பரதரம் விஷ்ணு சசிவர்ணம் சதுர்புஜம்
ப்ரலந்ததெநம்த்யாயேத் ஸர்வலிகக்னோபஸாந்தயேத்

இம்மந்திரங்களைச் சொல்லி இரண்டு கன்னத்திலும் மாறுதலாய் தட்டிக்கொள்ள வேண்டும். பிறகு,

இரண்டு சிறிய தர்ப்பைகளை, வலது கை மோதிர விரல், சுண்டு விரல்களின் சந்தில்வைத்து பின் புறமாய் அத்தர்ப்பையை வளைத்து விரல்களால் இடுக்கப்பிடித்து தர்ப்பையை பிடுத்திருக்கும் வலது துடை முழங்கால் மேல் வைத்து அடியில் சொல்லப்போகும் மந்திரங்களைச் சொல்ல வேண்டும். இதைப் பாடம் செய்து கொள்ளுங்கள்.

சிவாப்யாம் சிவ சிவ சம்புராக்ஞ. பரவர்த்தமாநஸ் ஆசியப்ரஹ்மண. தவிதீயப்ரர்த்தே, ஸ்வேத வராஹ கல்பே வைவஸ்வத மந்வந்தரே. அஷ்டாவிம்ம் ஸததமே கலியுகே ப்ரதமபாதே, ஷஷ்டி ஸம்வச்சராணாம் மத்யே, யுவ நாம ஸம்வச்சரே *உத்ராயணே மேஷமாஸே. கிருஷ்ணபக்ஷே, அபாவாஸ்யாம், சுபதிதௌ வாசாஹ பானுவாசர யுக்த்தாயாம், அஸ்வினி நக்ஷத்ர யுக்தாயாம், சுபயோகம், சுபவருண, யேவங்குண, விசேஷண, விசிஷ்டாயம், அஸ்யாம் வர்த்தானாயாம் அமாவாஸ்ய புண்ணிய காலே, சிவகோத்திரத்தில் இருக்கப்பட்ட அடியேனுடைய தகப்பனார்...................... பாட்டனார்................... இரண்டாம் பாட்டனார்.................... தாயார்.......................... பாட்டியார்.................. இரண்டாம் பாட்டியார்.................... அமாவாஸ்ய புண்ணியகாலே தீலதர்ப்பணஞ்சு, அத்யமகம் அத்யகருஸ்யே.

இம்மந்திரங்கள் சொல்லிமுடிந்தவுடன் மோதிரவிரல் சந்தில் இடுக்கிவைத்திருந்த தர்ப்பையைப் போட்டு விட வேண்டும் பிறகு,

தெற்கு முகமாய், இடது முழங்கால் மண்டிபோட்டு இடது கையை பூமியில் ஊன்றி உட்கார்ந்து, முன் தயார் செய்து வைத்த நாலங்குல நீலமுள்ள தர்ப்பையில் ஆறு தர்ப்பைகளையெடுத்து, பூமியில் ஊன்றியிருக்கும் இடது முழங்கை சந்துவருவாய்க் கொண்டுவந்து அத்தர்ப்பையைத் தன் எதிரில் கிழக்குமேற்காய் ஒரு ஜாணுக்குள் இரண்டு தர்ப்பைகளாய்ச் சேர்த்து தட்டில் மூன்று இடங்களில் வைக்கவேண்டும். பிறகு,

---

*உத்தராயணம் - தை முதல் ஆனி வரையில்,
தக்ஷணாயணம் - ஆடி முதல் மார்கழி வரையில்.

மண்டிபோட்டிருக்கும் முழங்கால் முழங்கை சந்து வழியாய் முடிபோட்டிருக்கும் தர்ப்பையைக் கொண்டு வந்து, முடி தெற்காயும் அடி வடக்காயும் இருக்கும்படி மேற்படி தட்டில் முன் வைத்த சிறிய தர்ப்பைகளின் மேல் வைக்கவேண்டும். இவ்வாறு வைத்தபிறகு முழங்கால் முழங்கை சந்து வழியாய் எள்ளை வலது கையில், கொண்டு போய் மூன்று மந்திரங்களைச் சொல்லிக் கொண்டே தர்ப்பை முடியிலும். மத்தியிலும் கடைசியிலும் எள்ளை வைக்க வேண்டும். அம்மந்திரங்களை இதனடியில் சொல்லுகின்றோம்.

சிவலோகத்தில் (விஷ்ணு கோத்திரத்தில்) இருக்கப் பட்ட அடியேனுடைய தகப்பனார்.............. பிரதம ரூபத்திற்கு ஆவாஹ கன்னமஹ என்று சொல்லி தர்ப்பை முடியுள்ளயிடத்தில் வைக்க வேண்டும். பிறகு,

பாட்டனார்...................................த்விதிய ரூபத்திற்கு ஆவாஹ நன்னமஹ என்று அத்தர்ப்பை மத்தியில் வைக்க வேண்டும். பிறகு,

இரண்டாம் பாட்டனார்..........த்ருதிய ரூபத்திற்கு ஆவாஹ நன்னமஹ என்று தர்ப்பை கடைசியில் வைக்க வேண்டும். பிறகு,

தாயார்.............ப்ரதம ரூபத்திற்கு ஆவாஹ நன்னமஹ

பாட்டியார்..............த்விதிய ரூபத்திற்கு ஆவாஹ நன்னமஹ.

இரண்டாம் பாட்டியார் ..........த்ருதிய ரூபத்திற்கு ஆவாஹ நன்னமஹ,

தகப்பன், பாட்டன், இரண்டாம் பாட்டன்களுக்கு முடிபோட்டு வைத்த தர்ப்பை மேல் மூன்று இடங்களில் எள்ளை

வைத்து முடிந்தவுடன், அவர்களின் மனைவி களாகிய உங்கள், தாயார், பாட்டி, இரண்டாம் பாட்டிகளுக் கும் எள்ளை எடுத்து மேற்படி எள்ளுடன் சேர்ந்தாற் போல வைத்து முடிந்தவுடன், சமமாய் உட்கார்ந்து ஒரு பெரிய தர்ப்பையைச் சொம்பின் கழுத்தில் சுற்றி வலது கையில் எள்ளை எடுத்து தர்ப்பை நுனி வழியாய் சொம்பிலிருக்கும் ஜலத்தை இடது கையால் பிடித்து வலது கையிலுள்ள எள்ளில் விட்டு எல்லோர் பெயரையும் சொல்லிக் கொண்டே எள்ளும் ஜலமும் தட்டில் விட வேண்டும்.

பிதுஹ தகப்பனார்.......................ப்ரதம ரூபத்திற்கு திலோகதன்ன மஹ. திலோதகன்னமஹ. திலோதகன்னமஹ,

ப்ரதம ரூபஸ்ய பாட்டனார்................த்விதிய ரூபத்திற்கு திலோதகன்னமஹ திலோதகன்னமஹ, திலோதகன்னமஹ,

தாயார்...................ப்ரதம ரூபத்திற்கு திலோதகன்னமஹ, திலோதகன்னமஹ, திலோதகன்னமஹ,

பாட்டியார்...............த்விதிய ரூபத்திற்கு திலோதகன்னமஹ, திலோதகன்னமஹ, திலோதகன்னமஹ,

இரண்டாம் பாட்டியார்......................த்விதிய ரூபத்திற்கு திலோதகன்னமஹ, திலோதகன்னமஹ, திலோதகன்னமஹ:

இவ்வாறு, எள்ளும் ஜலமும் தர்ப்பணம் விட்டு அவ்வாறே உட்கார்ந்து,

சர்வேஷாம், காருண்ய, பிதுர்முக்தஸ்ய, அறிந்தறியாத மூவேழு இருபத்தோரு தலைமுறையார்க்கும் தர்ப திலோதகன்னமஹ, திலோதகன்னமஹ, திலோதகன்னமஹ,

என்று எள்ளும் ஜலமும் தட்டில்விட்டுப் பிறகு, அயேத்தியா, மதுரா, மாயா, காசீ, காஞ்சீ, அவந்திகா, துவாரகா, ஸப்தைகாமாக்ஷிதாயாக, முகத்தியாக, காசி, பலேனித்யம், விஸ்வநாத ஸன்னிசௌ கயாயாம் கயாயாம் என்று சொல்லவேண்டும் ;

இவைகளையெல்லாம் சொல்லிமுடித்து எழுந்து நின்று இரண்டு கைகளையும் குவித்து தர்ப்பணம் விட்ட தட்டுக்கெதிரில் மூன்று முறை பிரதக்ஷணம் செய்து மனையின் மீது உட்கார்ந்து வேஷ்ட்டி நுனியைத் தட்டிலுள்ள ஜலத்தில் நனைத்துப் பிழிந்து கண்களில் ஒற்றிக்கொள்ள வேண்டும். பிறகு,

எள்ளை எடுத்து யதாஸ்தானம் ப்ரதிஸ்ட்டாபயாமி என்று சொல்லி அந்த எள்ளைத் தட்டிலுள்ள தர்ப்பை மேல் போட்டு, மூன்றாய்ச் சேர்த்து முடிபோட்டிருந்த நீளதர்ப்பை முடியை அவிழ்த்து, எல்லாம் ஒன்றாய்ச் சேர்த்துக் கிணற்றிலாகிலும் குளத்திலாகிலும் செடிகளிலாகிலும் விட்டுவிட வேண்டும்.

பன்னிரண்டு மாதங்களின் பெயர், கிழமை, நக்ஷத்திரங்களும் இதனடியில் சொல்லுகின்றோம், அதாவது அந்தந்த மாதங்களில் வரும் அமாவாஸ்யைகளுக்கு மாறி மாறி வரும் மாதம் கிழமை நக்ஷித்திரங்களுக்கு மாறு பெயர் சொல்லுகின்றோம். அதுபோல் அந்தந்த மாதங்களையும், கிழமைகளையும் பிரதி மாதமும் மாற்றி மாற்றி சொல்லி தர்ப்பணம் விடவேண்டும்.

## மாதம்

*சித்திரை (மேஷமாஸே) வைகாசி (இடபமாஸே) ஆனி (மிதுனமாஸே), ஆடி (கடகமாஸே), ஆவணி (சிங்கமாஸே),*

புரட்டாசி (கண்ணிமாஸே), ஐப்பசி (துலாமாஸே), கார்த்திகை (விருச்சிகமாஸே), மார்கழி (தனுர்மாஸே), தை (மகரமாஸே), மாசி (கும்பமாஸே), பங்குனி (மீனமாஸே), இது பன்னிரண்டு மாதங்களின் மாறு பெயர்கள்.

## கிழமை

ஞாயிறு (பானுவாசர யுக்தாயரம்) திங்கள் (இந்து வாசரயுக்தாயாம்) செவ்வாய் (பௌம்யவாசர யுக்தாயாம) புதன் (சௌம்யவாசர யுக்தாயாம்) வியாழன் (குருவாசர யுக்தாயாம்) வெள்ளி (ப்ருகுவாசர யுக்தாயாம்) சனி (ஸ்திரவாசர யுக்தாயாம்) இது ஏழு நாட்களின் மாறு பெயர்கள்.

## நக்ஷத்திரங்கள்

அஸ்வனி, பரணி, கார்த்திகை, ரோகினி, மிருக சீரிடம், திருவதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்திரம், அஸ்த்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்தராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி.

மேற்சொல்லிய மாதம் கிழமை நக்ஷத்திரங்களில் எந்த மாதத்தில் எந்தக்கிழமை எந்த நக்ஷத்திரம், அமாவாஸையை வருகின்றதோ அந்த மாதம் அந்தக் கிழமை, அந்த நக்ஷத் திரம் சொல்லி தர்ப்பணம் விட இதில் எழுதியிருக்கின் றோம்: இவ்வாறு தர்ப்பணம் விட்டு பிரதி தினம் அன்னம் பகவானுக்குக் காட்டி பிறகு அவ்வன்னத்தை மந்திர பூர்வ மாய்ச் சாப்பிடவேண்டும், இதை இதனாடியில் சொல்லு கின்றோம்

## 32. அன்னம் மந்திர பூர்வமாய்ச் சாப்பிடுவதின் பலன்

எனதன்பர்களே! பிரதிதினம், சாப்பிடுவதற்காக உட்கார்ந்த பிறகு பதார்த்தங்களும் சாதமும் இலையில் பரிமாறியபின், மனைவியை வெறும் சாதத்தில் நெய்விடச் சொல்லி, பிறகு இலை ஓரமாய் சாதத்தில் படாமல் இடது கை நடு விரலை இலையில் ஊன்றி, தன் வலது கையில் மனைவியைக் கொஞ்சம் ஜலம் விடச் சொல்லி.

"ஓம் பூர்வஸ்ஸுவஹ. ஓம் தத்ஸ் விதுர்வரேண்யம்
பர்கோ தேவஸ்யமதீமஹி தியோயோநஹப்ரசோ தயாத்"

என்னும் இந்நான்கு மந்திரங்களையும் சொல்லி அந்தத் தீர்த்தம் அன்னத்தின் மீது தெளிக்க வேண்டும். அப்பொழுது அந்த அன்னம் சித்தியாகின்றது. பிறகு கொஞ்சம் தீர்த்தம் கையில் விடச் சொல்லி.

"தேவ ஸவித ப்ரசௌவ" என்று சொல்லி அந்த தீர்த்தம் இலையை சுற்றிலும் பிரதக்ஷணமாய் விட வேண்டும். பிறகு கொஞ்சம், தீர்த்தம் கையில் விடச்சொல்லி.

"ருத்யம் தஸதேந பரிஹிஞ்சாமி" என்று சொல்லி மறுபடியும் அந்த தீர்த்தம் இலை சுற்றிலும் விட வேண்டும்.

இவ்விதமாய் இரண்டு முறை இலை சுற்றிலும் விட்ட பின் மறுபடியும் கொஞ்சம் தீர்த்தம் கையில் வாங்கி "அம்ருதோபஸ் தரணமஸி" என்று சொல்லி அந்த தீர்த்தம் சாப்பிட வேண்டும்.

இவ்விதமாய்ச் சாப்பிட்ட பிறகு முன்நெய்விட்டிருந்த வெறும் சாதத்தில் மறுபடியும் கொஞ்சம் நெய் விடச் சொல்லி, பெருவிரல் நடுவிரல் பவித்திரம் (மோதிரம் விரல் களால் வெறும்

சாதத்தைக் கலந்து நாலைந்து அன்னத்தை மாத்திரம் மேற்படி விரல்களால் எடுத்து அடியில் சொல்லப் போகும் ஒவ்வொரு மந்திரங்களையும் மனதினால் நினைத்து வாய்திறந்து பற்களில் படாமல் ஆறுமுறையும் ஆறு மந்திரங்களைச் சொல்லி வாயில் போட்டு அந்த அன்னத்தை விழுங்கி, பஞ்சபிராணன்களுக்கு ஆஹுதி செய்ய வேண்டும். ஆஹு என்றால் எரிந்து கொண்டிருக்கும் அக்கினியில் போடுவது. நெய் கலந்த அன்னம் வாயில் போடும் மந்திரம் இனி இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

> "ஓம் ப்ராணாய ஸ்வரஹா. ஓம் அபாநாய ஸ்வாஹா. ஓம் வியாநாயா ஸ்வாஹா. ஓம் உதாநாய ஸ்வாஹா. ஓம் ஸமாநாய ஸ்வாஹா. ஓம் பிரஹ்மணே ஸ்வாஹா. ப்ரஹ்மணிமாத்ம அமுர்தத்வாயா."

என்று இந்த மந்திரங்களைச் சொல்லி வாய்த்திறந்து அந்த அன்னத்தை வாயில் போட்டு பற்களில் படாமல் விழுங்கியபின் இடது கைப்பக்கமாய் மனையாளை இரண்டிடங்களில் பூமியின் மேல் ஜலம் விடும்படிச் சொல்லி முன் இலையில் ஊன்றியிருந்த இடது கை நடுவிரலை எடுத்து, முதல் விட்ட ஜலத்தில் அவ்விரலைத் தொட்டு நனைத்து, சுத்தி செய்து, மறுபடியும் அந்த விரலை இரண்டாவது விட்ட ஜலத்தில் தொட்டு 'ப்ரஹ்மணி மாத்ம அமுர்தத்வா' என்று சொல்லி நடுவிரலை மார்பில் தொட வேண்டும். இவ்விதமாய்த் தொடுவதற்குக் காரணம் யாதெனில், ஆத்மா இருதய கமலத்தில் மத்தியில் இருப்பதனால் அவ்வாத்மாவிற்கு நைவேத்தியம் செய்து. அந்த சேக்ஷத்தை நான் சாப்பிடுகின்றேன் என்பதே இவைகளின்கருத்து. இலையில் உட்கார்ந்து இடதுகை நடுவிரலை இலையில் ஊன்றி முன் சொல்லிய மந்திரங்களை எல்லாம் சொல்லி முடித்து, நெய்விட்டிருக்கும் வெறும் அன்னம் மூன்று விரல்களால் எடுத்து 6 முறைகள் வாயில் போடும் வரையில்

நடுவிரலை இலையில் ஊன்றிக் கொண்டேயிருக்க வேண்டும்; மந்திரங்களைச் சொல்லி முடிந்தபின் இலையில் ஊன்றிய இடது கைவிரலை எடுத்துவிடவேண்டும். பிறகு பருப்பு பதார்த்தங்களை கலந்து சாப்பிட்டு முடிந்தவுடன் எழுந்திருப்பதற்கு முன், மறுபடியும் கொஞ்சம் தீர்த்தம் தானாகவே கையில் விட்டுக்கொண்டு 'அம்ருதாபி தானமஸி' என்று சொல்லி அந்தத் தீர்த்தத்தைச் சாப்பிட்டு எழுந்திருக்கவேண்டும். இரவில் சாப்பிடும், பொழுது மாத்திரம் 'தேவஸவித ப்ரஸௌவ' 'ருதம்வா ஸத்யேந பழிஷஷஞ்சாமி' என்னும் இந்த இரண்டு மந்திரங்களையும் சொல்லி இரண்டு முறை இலையைச் சுற்றிலும் ஜலம்விடவேண்டும். இந்த மந்திரங்களைச் சொல்லி சாப்பிடுவதனால் நாம் சாப்பிட்ட பதார்த்தங்கள் அமிர்தமாயிற்று என்னும் பாவனையேயாம்.

இப்படிச் செய்வதனால் - என்ன குணங்கள் உண்டாகுமென்றால், துன்மார்க்க விருத்தியில் திரவ்வியம் சம்பாதிக்க இடங்கொடாமல் ஞாயமாய்ச் சம்பாதிக்க எண்ணமுண்டாம். அப்படி ஞாயமாய் சம்பாதித்த திரவ் வியத்தினால் பதார்த்தங்களை வாங்கிச் சமைத்துப் பகவானுக்கு ஆராதனை செய்து அந்த சேஷத்தை நான் சாப்பிடுகிறேன் என்றும் நான் சாப்பிடும் ஆஹாரம் அநியாயமாய்ச் சம்பாதித்ததல்ல நியாயமாய்ச் சம்பாதித்த தென்று த்ருட வைராக்கியம் ஏற்படும். ஆதலால் முன் சொல்லியது போல் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் பஞ்சமர் (தீண்டாதவர்கள்) முதலாகிய ஐந்து ஜாதியார்களும் அன்னத்தை மந்திர பூர்வமாய்ச் சுத்தி செய்து பிறகு அந்த அன்னத்தைச் சாப்பிட வேண்டும். பஞ்சமர்களும் இவ்வாறு செய்தால் அவர்கள் பிராமணர்கள். பிராம்மணர்கள் இவ்வாறு செய்யாவிட்டால் அவர்களே பஞ்சமர்கள்.

இப்படி மந்திரபூர்வமாய்ச் சாப்பிட்டவர்கள் மறு ஜன்மத்தில் என்ன பலனை அடைவார்களென்றால். அது விஷயம் ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம்-6 சுலோகம்-44ல்

பூர்வாப்யாஸேந தேநைவ ஹ்ரியதே ஹ்யவஸோபி
ஸ்ஹஜிக்ஞாஸுரபி யோகஸ்யஸ்பதப்ரஸ்மாதி வர்ததே

பரிசுத்தமான மனதுடன் ஈஸ்வரனைப் பக்தி செய்து மரணமடைந்தவன் மறுஜன்மத்தில், தானாய்ப் பிரயத்தினப்படாவிட்டாலும், நானே அவனை பலவந்தமாய் யோகாப்பியாசம் செய்வித்து அவன் மனதை எங்கும் ஓடவிடாமல் நிறுத்தி மோக்ஷமடைய மேல்படிக்குக் கொண்டு போகின்றேன். ஏனென்றால், பூர்வ ஜன்மங்களில் நான் அவனுடன் கூடவேயிருந்து அவன் மனதிற்குச் சாவியைக் கொடுத்துத் திருப்பி விசேஷ பக்தியை உண்டாக் கினவன் நானே. இந்த ஜன்மத்திலும் நான் அவனுடன் கூடவே இருப்பதனால் அவன் முன் ஜன்மத்திலும் ஈஸ்வர பக்தி கால் செய்திருந்தால் அரையும், அரை செய்திருந்தால் முக்காலும் முக்கால் செய்திருந்திருந்தால் அந்தந்த ஜன்மத்தில் பூர்த்தி செய்வது என்னுடைய கடமையேயன்றி அவனுடைய கடமையன்று என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லியிருக்கின்றனர். ஆதலால், இதை வாசிக்கும் சகோதர சகோதரிகளும் ஈஸ்வரபக்தி செய்யும்பொழுது மனதை வெளிவியவகாரங்களில் ஓடவிடாமல் நிறுத்திப் பிறகு அம்மனதை உள்முகமாய்த் திருப்பி அந்த பகவான் ரூபத்தை மனக்கண்ணால் பார்த்து பக்திசெய்து முடிந்த வுடன் போஜனத்திற்காக உட்கார்ந்து சாப்பிடும் பொழுது பதார்த்தங்களுடன் அன்னமும் பரிமாறியபின் முன் சொல்லிய மந்திரங்களால் அந்த அன்னத்தை சுத்தி செய்து சாப்பிட வேண்டும்.

நாயனா ! பக்திசெய்யும் மார்க்கம்..... ஸ்ரீ கபீர்தாஸ் சரித்திரத்தில் விசேஷமாய் எழுதப்பட்ருக்கின்றது. ஒவ்வொரு குடும்பத்திலுள்ளவர்களும் ஸ்ரீ கபீர்தாஸ் சரித்திரத்தை வரவழைத்து வாசிப்பாராகில் ஆத்மாவுடன் சேர்ந்திருக்கும் மாயையென்னும் மலினம் நீங்கும். மாயை யென்னும் மலினம் நீங்குவதால் ஆத்மா பரிசுத்தமாய் விடுகின்றது. ஆத்மா பரிசுத்தமான பிறகு அது தன் நிஜ சொரூபமாகிய பிரம்மத்தில் போய்ச்சேரும். அதாவது, ஜீவாத்மா பரமாத்மா சொரூபத்தை அடையும் : இதற்கு திருஷ்ட்டாந்தம் ஸ்ரீ பகவத்கீதை அத்யாயம்-15 சுலோகம்-11. பிரமாணம் என்னவென்றால்,

யதந்தோ யோகிநஸ்சசைநம் பஸ்யந்தயாத்ம ந்யவஸ்தி தம்
யதந் ந்யோப்ய க்ருதாத்மத்மநோ நைநம் பஸ்யந்த்யசேத ஸஹ

வைராக்கியம் ஜீவகாருண்யம் ஈஸ்வரபக்தி முதலாகிய நல்ல சாதனங்களுடன் தேசங்கள் தோறும் இருக்கும் யோகி தேகத்திற்கு வேறாகவும் விலக்ஷணனாகவும் ஸச்சிதானந்த சொரூபனாகவும் இருக்கும் ஆத்மாவை அறிகின்றான். காமக் குரோதாதிகளென்னும் மலின மனமுடையவர்கள் அதாவது ஆசையுடையவர்கள் ஆத்மாவை அறியமாட்டார்கள். ஆதலால்,

இதை வாசிக்கும் ஸ்திரீ புருஷர்கள் எல்லோரும், வைராக்கியமாயும் ஜீவகாருண்யமாயும் இருந்து, மச்சம் மாமசம் முதலானவைகளைப் புசிக்காமல் நிவர்த்தி செய்து சுசி ஆசாரங்களுடன் இருந்து பதார்த்தங்களைச் சமைத்து பிரதிதினம் காலை இரவுகளில் சாப்பிடும் ஆஹாரங்களை பகவானுக்கு ஆராதனைச் செய்து அந்த க்ஷேசத்தை முன் சொல்லியதுபோல் பதார்த்தங்களிலுள்ள தோஷங்க ளெல்லாம் பகவானுக்கு அர்ப்பணமாய் விடுகின்றன. ஏனென்றால் பகவான் பிபீலிகாதி (கண்களுக்கும் காணப் படாத சிறிய புழு) முதல் பிரமதேவன்



A|8

வரையில் சகல சராசர ஜந்துக்களிலும் வியாபித்திருக்கின்றான். எந்த ஜந்துக்களைக் கொன்று தின்றாலும் ஈஸ்வரனைக் கொன்றவனாகின்றான். ஆதலால் எந்த ஜீவ ஜந்துக்களையும் கொன்று தின்னலாகாது. நோன்பென்பது கொன்று தின்னாமையேயாம் சில மனிதர்கள், கசாபுத்தொழில் செய்யப்பட்டவர்கள் ஆடு மாடுகளைக் கொல்லுகின்றார்களே யொழிய நாங்கள் கொல்லுவதில்லை. ஆதலால் அந்தப்பாவம் கசாபுத் தொழில் செய்பவனைச் சேருகின்றதேயன்றி எங்களைச் சேரமாட்டாதென்று சொல்லுகின்றார்கள். நல்லது, அவைகளைப் புசிப்பவர்கள் இருப்பதனாலல்லவோ கசாபுத் தொழில் செய்பவன் ஆடு மாடுகளைக் கொல்லுகின்றான். அவை களைப் புசிப்பவர்கள் இல்லாவிட்டால் அவன் ஏன் அவைகளைக் கொல்லப் போகின்றான்? திருப்பதி மலையின் மீது ஏதாகிலும் கசாபுத்தொழில் செய்கின்றார்களா! இல்லையல்லவா! ஏனென்றால், மாம்சங்களைப் புசிப்பவர்கள் திருப்பதிமலையில் இல்லாததனால் ஜீவஇம்சை திருப்பதி மலைமேல் செய்வதில்லை: அதுபோல் பிரபஞ்ச மெங்கும் மாம்சம் புசிக்காமலிருப்பார்களாகில், கசாபுத் தொழில் செய்பவனுக்கு வேலையே இராது. ஆதலால் அந்தப்பாவம் சாப்பிட்டவர்களை பற்றுமேயொழிய கசாபுத் தொழில் செய்யப்பட்டவனைப் பற்றாது.

மற்றும் சிலர் ஆடு கோழி முதலானவைகளை நாம் புசிப்பதற்காகவே கடவுளால் சிருஷ்டி செய்யப் பட்டிருக்கின்றன என்று வாதிப்பார்கள். இஃது அறியாத் தன்மையேயாம். பகவான் அவனவன் கர்மத்திற்குத் தக்கபடி, பசு பக்ஷியாதி மானவ ஜன்மங்களைக் கொடுத்து, கர்ம வழியில் மோக்ஷத்திற்குக் கொண்டு வருவதற்காகவே எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளையும் சிருஷ்ட்டி செய்கின்றார்! அதில் ஆடு கோழிகளும் சேர்ந்திருக்கின்றதே யொழிய மனிதர்கள்

புசிப்பதற்காக அல்ல; இவர்களின் முன்னோர் மாம்சங்களைப் புசித்துக் கொண்டே வந்த படியால் அது பரம்பரை விருத்தியாய் வந்து கொண்டேயிருக்கின்றன. மாம்சம் புசித்துப் பழக்கமாய் விட்டபடியால் அதை விடுவதற்கு மனமில்லாதவர்களாய், முன் சொல்லிய குதர்க்கங்களைச் சொல்லி வாதாடுகிறார்கள். பிரமாண வம்சத்தில் பிறந்தவர்களுக்கு இவ்வித துரப்பியாசம் ஏதா கிலும் உண்டா? இல்லையல்லவா? ஏனென்றால் அவர்களின் வம்ச பரம்பரையாக வந்து கொண்டிருக்கும் தாய் தந்தை யர்கள், இந்தத் துஸ்ட்ட அப்பியாசத்தை அவர்களின் வீட்டில் செய்யாததனால், அவர்கள் மாம்சத்தைப் பார்த்தவுடன் அவர்களின் சரீரம் அருவருத்து மயிர்க் கூச்சலையடையும்.

ஆனால் சில பிராம்மணர்கள் மாம்சம் சாப்பிடு கின்றார்களே என்று யோசிக்கின்றீர்களா? என்ன அதற்குக் காரணம் சொல்லுகின்றோம் கேளுங்கள் அவர்கள் பூர்வ ஜன்மங்களில் சூத்திரர்களாயிருந்தவர்கள். ஏதோ புண்ணிய விசேஷத்தினால் பிராமணர் ஜநனம் எடுத்தபோதிலும் அவர்களின் மனது இழுத்துச் செல்லும். என்றால் பூர்வ ஜன்மங்களில் சூத்திரர்களாயிருந்தவர்களின் மனமானது நாருசியாய் மாம்சங்களைப் புசித்துக் கொண்டேயிருந்து, அம்மனம் சூத்திர சரீரத்தை விட்டு, ஏதோ புண்ணிய விசேஷத்தினால் பிராமண சரீரத்தில் போய்ப் புகுந்து மாம்சம் அவர்களின் வீட்டில் சமைக்காமலிருந்த போதிலும், அவர்களின் சிநேகிதர்களாகிய சூத்திரர்களின் வீட்டிற்கு சென்று மாம்ஸம் சாப்பிடவேண்டுமென்று அவர்களின் மனமானது நினைத்துக் கொண்டே இருக்கும் என்றால், ஜீவன் ஒரு சரீரத்தை விட்டு மற்றொரு சரீரத்தில் போய்ப் புகுந்த போதிலும், முன் ஜன்மத்தில் மனதிற்கு இருந்த குணங்கள் மறு ஜன்மத்திலும் இருந்து கொண்டேயிருக்கும். இவ்வாறிருப்பதனால், இதற்குப் பூர்வ வாசனையென்று சொல்லப்படும். இதன் விவரங்களைத் தெரிந்து

கொள்ள வேண்டுமானால் இந்நூலாசிரியரால் அச்சிட்டதத்துவ பரிசோதனை அன்னதான பலன் என்னும் நூலை வரவழைத்துப் பார்த்து தெரிந்துக் கொள்ளவும், மாம்ஸம் புசிக்கப்பட்டவர்களின் மீது பகவானுக்குக் கிருபை உண்டாகமாட்டா. மோக்ஷத்தைக் கோரப்பட்ட புருஷர்க ளெல்லோரும் முதல் மாம்ஸ பக்ஷணையை நிவர்த்தி செய்வ தனால் ஜீவகாருண்யமுண்டாகும். ஜீவகாருண்ய முண்டாவ தனால் மோக்ஷப்பிராப்தி சித்திக்கும். இதற்கு திருஷ்ட்டாந்தம் ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம்-17, சுலோகம் 5-6 பிரமாணம்.

அஸாஸத்ரவிஹிதம கோரம் தபயந்தேயே தபோ ஜநாஹ
தம்பாஹங்கார ஸம்யுக்தாஹ காம்ராத பலாந்தவிதாஹ
கர்ஸயந்தன் ஸரீரஸ் ஸரீரஸதம் பூதக்ராம மசேத்ஸஹ
மாம் சைவாந்தஸ்தம் ஸாந்வித்ய ஸுரநிஸ்ச்சயாந்.

பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்னும் பஞ்ச பூதங்களினால் உண்டாகிய சரீரத்தில், ரகஸ்யமாயிருக்கும் ஆத்மாவாகிய என்னை, உபவாசங்களினால் துன்பப்படுத்து பவனும், பலர் மெச்சவேண்டுமென்னும் அகங்காரத்த யுடையவனும், தானென்னும் கர்வங்கொண்டவனும், விஷயங்களில் பிடிவாதங் கொண்டிருப்பவனும், புத்தி யில்லாதவனும், சாஸ்திர விருத்தமாயும், நல்லோர் மனம் கூசும் படியாயும் இருக்கும் விரதங்களை எவன் அனுஷ்ட்டிக் கின்றானோ அதாவது ஆடு கோழி முதலானவைகளைப் பலி கொடுக்கின்றானோ அவன். அசுர (புலி) முதலாகிய யோனிகளில் பிறப்பான்.

## 33. சிருஷ்ட்டிக்கு முன் பிரபஞ்சம் எவ்விதமாய் இருந்தது

சுரு || "ஸ்ருஷ்ட்டேபுரா நாமரூப விஸர்ஜிதம் ஜகத்,ணி
"ஸதேவஸௌம்ய இதமகர ஆஸீத்."

(சாந்தோக்யோப நிஷத்)

*சிருஷ்ட்டிக்குமுன் பிரபஞ்சம் நாம (பெயர்) ரூபமில்லாமல் கேவல பரப்பிரம்ம சொரூபமாகவேயிருந்தது.*

சுரு || "தஸ்மின் மருஸுக்திகா ஸ்தாணு ஸ்படிகாதௌ ஜலரௌப்ய புருஷரேகாதிவத் லொஹிம ஸுக்லக் ருஷ்ட்ண மயீ குணஸாம்யா நிர்வாச்யந மூலப்ரக்ருதி ர்ாஸீத் (பைங்கலோபநிஷத்)

*கானல் நீர்போலும் கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி போலும் இரவில் தூணைப்பார்த்துப் புருஷனென்று பயப் படுவதுபோலும், ரவையில் நானாவித வர்ணங்கள் இல்லா விடினும் பிரமையினால் அநேக வர்ணங்கள் இருப்பதாய்க் காணப்படுவதுபோலும் சுத்தநிர்க்குண நிராகார நிர்விகார பரப்பிரம்மத்தில் மூல பிரக்ருதியென்னும் இல்லாத மாயை யொன்று உண்டாயிற்று. இதற்கு உபதேச காண்டமும், சிவப் பிரகாசமென்னும் சித்தாந்த நூல் பிரமாணம்*

பிரகிருதி யெனச்சொல்லப் படுமாயை
யுமையிடத்தெம் பெருமா னென்னு
மரனையா தரித்திருக்கும் பிரமனா
தியர்க்குமயக் களிப்ப தாகும்
விரவுபசும் பொன்னணிப்பால் வெவ்வேறா
குதல்போன்மென் கலைக்கு நூல்போற்
பரவுபிர பஞ்சமுண்டா வதற்கதுவே
காரணமாயப் பலித்த தாமே.

என்னையிது வெனிலுலகுக் குபாதான மில்லை
இரைவனவ தெனினசித்துச் சித்தினிடத் துதியா
மன்னிபுள தேன்முதல்வ னென்கோ லென்னில்

மாயைதா னசித்துருவாய் மருவமாட்டா
தன்னவனு மிதுவொழிய வாக்க மாட்டா
னசத்தனா மெனினதுபு மவன்போ னித்த
முன்னவனவ் வசித்தைவிரித் தெவையுமாக்கு
முதன்மையது கொடுத்ததென மொழிந்திடாரே.

*அந்த மூல பிரக்ருதி வெண்மை சிவப்பு கறுப்பு என்னும் மூன்று வர்ணங்களுடன் கூட மூன்று சக்திகளா யிற்று. வெண்மை வர்ணமே மாயாசக்தி, சிவப்பு வர்ணமே அவித்தியாசக்தி, கறுப்பு வர்ணமே ஆபரண விசேக்ஷபசக்தி எனப்படும். இதில்,*

சுரு || 'ஸத்வோத்ரிக்தா வ்யக்தாவரண ஸந்திராஸீத்
தத் ப்ரதிபிம்பிதம் யத் ததீஸ்வர சைதன்யாமாஸீத்
ஸ ஸ்வாதீந மாயாஸர் வஞ்ஹ ஸ்ருஷட்டி ஸ்திதி
லயாநா மாதிகர்த்த ஜகதஞ்குர ரூபோபவதி

(பைங்லோபநிஷத்)

*மாயாசக்தி, சத்வகுணம் பிரதானமாயிருக்கும். அதில் பரப்பிரம்மம் பிரதிபலித்ததனால் உண்டாகிய பிரதி பிம்பமே ஈஸ்வரன் என்று சொல்லப்படும். அவர் அந்த மாயையைச் சுவாதீனம் செய்து கொண்டு, பிரமன் விஷ்ணு மஹேஸ்வர ரூபமாய் பிரபஞ்ச சிருஷ்டித்து சம்மாரங்களைச் செய்து கொண்டிருப்பார் ; ஆதலால்,*

சுரு || 'ப்ரஹமணோ ரவ்யக்தம் அவ்யக்தாந் மஹத் மஹதோ
அஹங்காரஹ அஹங்காராத் மஞ்சதந்மா த்ராணி பஞ்சதந்மா
த்ரேப்யோ பஞ்சம ஹாபூதாநி பஞ்சமஹ் பூதேப்யோ
கிலம் ஜகத்' த்ரிஸிதி (ப்ரஹமணோப நிஷத்)

*பிரம்மத்திலிருந்து மாயை, மாயையிலிருந்து அவித் தை (அஞ்ஞானம்) அவித்தையிலிருந்து அஹங்கார மென்னும் ஆவரண விசேசபக்தியும் அதிலிருந்த சப்த ஸ்பரிசரூப ரசகந்தங்களென்னும் பஞ்ச தந்மாத்திரைகளும் அதிலிருந்து, சூக்ஷ¬மமாகிய பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்னும் பஞ்சபூதங்களும் அதிலிருந்து தூலமாகிய ஆகாசாதி பஞ்ச*

பூதங்களும் அந்த பஞ்ச பூதங்களினால் பிரபஞ்சமும் உண்டாயின. மாயையால் உண்டாகிய பிரபஞ் சமும், இந்த மாயா சரீரம் நசிக்கும் பொழுது அதனுடன் கூடவே இந்த மாயா பிரபஞ்சமும் நசித்து விடுகின்றது. மறுபடியும் இந்த மாயா சரீரம் பிறக்கும் பொழுது அதனுடன் கூடவே இந்த மாயா பிரபஞ்சமும் பிறக்கின்றது. இப்படி நமது மாயா சரீரம் பலதடவைகளில் பிறந்து பிறந்து நசிப்பதனால் இந்த மாயா பிரபஞ்சமும் பலமுறை நம்முடன் கூடவே பிறந்து பிறந்து மறைவு படுகிறது. இவ்விதமாய் நாம் அநேக கோடி ஜன்மங்களெடுத்துக் கொண்டேவந்து பிறகு பிரளயகாலத்தில் நமது மனம் எவ்விடத்தில் தங்கியிருக் கின்றதென்றால் :-

சுரு || ப்ரஹ்மாத்யம் ஸதாவராந்தகம் ச பஸ்யந்தி ஜ்ஞாந சக்ஷுஷஹ தமேகமேவ பஸ்யந்தி பரிஸுப்ரம்வி புரத்விஜா ஹயஸ்மித்ஸர்வமிதம் ப்ரோக்தம் ப்ரஹம்ஸ்த் ரவ ஜங்கமம் தஸ்மிந் மேவ லயம் யாந்தி ஸ்ரவந்தயஹ ஸாகரேதயஹ யஸ்மின் பாவஹ ப்ரலீயந்தே வீநாஸ்ச்சா வயகத்தாம யயுஹ :- வயக்த்தாம பஸ்யந்தி பூயோ ஜாயந்தே புத்புதா இவ. (சுபாலோபநிஷத்)

சகல நதிகளும் சமுத்திர ஜலத்திலிருந்து உண்டாய் மறுபடியும் சமுத்திரத்தில் வீழ்ந்து கலந்து நதி ஜலமும் சமுத்திரஜலமும் பேதமில்லாமல் ஏகமாவதுபோல், பிரமன் முதல் தாவர ஜந்துக்கள் வரையில், சகல சர சர ஜகத்துகளெல்லாம் எந்த பரப்பிரம்மத்திலிருந்து உண்டாயிற்றோ, அந்த பரப்பிரம்மத்திலேயே மறுபடியும் பிரளய காலத்தில் லயிக்கும். சமுத்திரத்தில் அலைகள் நுரைகள் திவலைகள் குமிழிகள் உண்டாய் மறுபடியும் அந்த அலைகள் நுரைகள் திவலைகள் குமிழிகளெல்லாம் சமுத்திர ஜலத்தில் லயித்து விடுவது போல் அந்த பரப்பிரம்மத்திலிருந்து சகல சராசர ஜகத்தும் உண்டாய் மறுபடியும் அந்த பரப்பிரம்மத்திலேயே லயித்து விடும். இதுவிஷயம் பின் விவரமாய்ச் சொல்லப்படும். இனி இதனடியில், பஞ்சீகரணத்தை சொல்லப்போகிறோம் கவனியுங்கள்.

## 34. பஞ்ச பூதங்களினால் சரீரம் உண்டாயிற்று

சுலோக அதாகஸஸ்ய பூதஸ்ய ஸாரீத்தம் ஞாதேதி கத்யதே
ஸேஷார்த்தஞ்ச சதுர்பாகாந் கருதவாஸம மிஸ்ரமாசரேத்
பவநே மிளிதாகாஸம் பாகம் மாநஸ் உச்யதெ
அலே மிளிதா காஸம் புத்தி ரித்யபிதீயதே
ஜலேந மிஸ்ரிதசகாஸம் சித்த மிதவபிதீயதே
ப்ருதிவயாம் மிளிதா காஸம் அஹங்கார மிதீர்நம !

(விஷ்ணு யாமளம்)

பஞ்சபூதங்கள் ஐந்தில் ஒவ்வொரு பூதத்திலிருந்து இரண்டு பூதங்களாயிற்று. இதில் முதல்பாக பஞ்ச பூதம் பிரபஞ்சமாயிற்று, இரண்டாவது பாக பஞ்சபூதம் இருபத்தைந்து தத்துவங்களும் சேர்ந்து சரீரமாயிற்று. எப்படி யென்றால்

மேற்சொல்லிய ஆகாசாதி பஞ்சபூதங்கள் ஒவ்வொன்றும் ஸமஷ்ட்டி வியஷ்ட்டியென்று இரண்டு பாகங்களாயிற்று. ஸமஷ்ட்டி யென்றால் ஒன்றாய்ச் சேர்ந்துயிருப்பது. இதற்குத் திருஷ்ட்டாந்தம் தோப்பு வியஷ்ட்டி யென்றால் வெவ்வேறாய் இருப்பது. இதற்கு திருஷ்ட்டாந்தம் மரம் இதற்குக் கைவல்யம் பிரமாணம்.

மரங்கள்போல் வியட்டிபேதம் வனதெனல் சமட்டி பேதம் சரங்கடா வரங்கள் பேதத் தனியுடம் வியட்டி யென்பார். பரம்பிய வெல்லாங் கூட்டிப் பார்ப்பதே சுமிட்டி யென்பர். இராக்கிய பலசீவர்க்கு மீசர்க்கும் பேதமீதே.

இதுபோல் பஞ்சபூதங்களையும் ஸமஷ்ட்டி வியஷ்ட்டி பாகங்களாய்ச் செய்து ஒரு பூதத்துடன் மற் றொரு பூதம் சேர்ந்தபோது இருபத்தைந்து தத்துவங்களாய் சரீர ரூபத்தை

அடைகின்றது, என்றால் மேற்சொல்லிய பஞ்ச பூதங்களையும் ஒன்றுடன் வொன்று சேர்த்து சிகுவை உற் பத்திச் செய்தனர், என்றால் பரப்பிரம்மம் பிரமன் விஷ்ணு மஹேஸ்வரரூபங்களைத் தரித்து, ஒரு பூதத்துடன் மற்றொரு பூதத்தை எப்படிச் சேர்க்கின்றாரோ அதை இதனடியில் தெரிவிக்கின்றோம். இதற்குக் கைவல்ய பிரமாணம்.

ஐந்து பூதமும்பத் தாக்கி யவைபாதி நன்நான் காக்கி
நந்து தன் பாதிவிட்டு நாலொடு நாலுங் கூட்ட
வந்தன தூல பூத மகாபூத மிவற்றி னின்றிந்
தந்தன நான்காந் நூல் தநுவண்ட புவன போகம்

முதல் ஆகசத்தை இரண்டு பாகமாய்ச் செய்தார். அதில் முதற்பாகம் சமஷ்ட்டியென்று சொல்லப்படும். இரண்டாவது பாகம் வியஷ்ட்டி என்று சொல்லப்படும். முதல் அர்த்தபாகம் சமஷ்ட்டி ஆகாசம் ஞாதாவாயிற்று. என்றால், அந்தக்கரணங்களாயிற்று அதில் தோன்றியது பிரம்மம், பிரம்மத்தின் பிரதி பிம்பமும் இவ்விரண்டும் கூடினதே ஞாத என்று சொல்லப்படும். இந்த ஞாதாவை அக்ஷரனென்றும் க்ஷேத்திரஞ்ஞனென்றும் புருஷனென்றும் ஜீவனென்றும் சொல்லப்படும். இரண்டாவது அர்த்தபாகம் வியஷ்ட்டி ஆகாசத்தை நான்கு பாகமாய்ச்செய்து, அதில் முதற்பாக வியஷ்ட்டி ஆகாசத்தை வாயுவுடன் சேர்த்த பொழுது, ஸங்கல்பம் (எண்ணங்கள்) என்னும் தத்துவம் பிறந்தது. இரண்டாவது பாகவியஷ்ட்டி ஆகாசத்தை அக்நி யுடன் சேர்த்த பொழுது புத்தியென்னும் தத்துவம் உண்டா யிற்று. மூன்றாவதுபாக வியஷ்ட்டி ஆகாசத்தை ஜலத்துடன் சேர்த்தபொழுது சித்தம் என்றால், மனம் நினைத்ததை ஸ்திரப்படுத்துவதே சித்தம் எனப்படும். ஆதலால், ஆகா சத்தை ஜலத்துடன் சேர்த்தபொழுது சித்தம் என்னும் தத்துவம் உண்டாயிற்று. நான்காவது பாகவி யஷ்ட்டி ஆகாசத்தை பிருதிவியுடன் சேர்த்தபொழுது அஹங்கார

மென்னும் தத்துவம் பிறந்தது. இந்த மனம் புத்தி சித்தி அஹங்காரமென்னும் நான்கையுமே அந்தக் கரணமென்று சொல்லப்படும். இவ்வாறாய் வந்த அந்தக் கரணங்களின் தொழில்களைச் சொல்லுகின்றோம் கேளுங்கள் :

மனம்-ஒன்றை நினைக்கும் மறுபடியும் அதை மறக்கும், புத்தி-இது நல்லது. இது கெட்டது என்று சொல்லும். சித்தம் மனம் நினைத்ததை ஸ்திரப்படுத்துவதே சித்த மென்று சொல்லப்படும். அஹங்காரம்-அவனவன் வினைப் பயனுக்குத் தக்கபடி கோபமுண்டாய் அவனை அதோ கதிக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கும்.

சுலோ || "தாரச வாயுரர்த்தஞ்ச வ்யாநமிதி கீர்த்திகம்
ஸேஷார்த்தே த்வேகபாகம் சஸமாநஞ்ச ஓம் மிஸ்ரிதம்
அக்நௌ ஸமமிஸரிதம் பாகம் உதாந மபிதீயதே
ஜலேஷு மிஸ்ரிதம்பாதம் தத் பிராணமிதி கத்யதே.
பருதின்யாம மிஸ்ரிதம பாகம் அபானமிதி கீர்த்திதம்
(விஷ்ணுயாமளம்)

ஆகாசத்தை ஸமஷ்ட்டி வியஷ்ட்டியாய்ச் செய்து, அதில் மனம் புத்தி சித்தம் அஹங்காரங்கள் பிறந்த விவரங்களை யெல்லாம் முன்சொல்லியிருக்கின்றோம். இனி வாயுவை ஸமஷ்ட்டி வியஷ்ட்டியாய்ச் செய்து அதில் பிறப் பது எதுவோ அதைச் சொல்லப்போகின்றோம். கேளுங்கள்.

வாயுவை இரண்டு பாகங்களாகச் செய்தனர். அதில் முதற்பாகம் சமஷ்ட்டியென்று சொல்லப்படும். இரண்டாவது பாகம் வியஷ்ட்டியென்று சொல்லப்படும். முதல் அர்த்த பாகம் சமஷ்ட்டி வாயு வியான வாயுவாயிற்று. இரண்டாவது அர்த்த பாகம் வியஷ்ட்டி வாயுவை நான்கு பாகமாய் செய்து, அதில் முதற்பாக வியஷ்ட்டி வாயுவை ஆகாசத்துடன் சேர்த்தபொழுது, யமானவாயு பிறந்தது. இரண்டா வது பாக வியஷ்ட்டி வாயுவை

அக்நியுடன் சேர்த்தபொழுது உதானவாயு பிறந்தது. மூன்றாவது பாக வியஷ்ட்டி வாயுவை ஜலத்துடன் சேர்த்தபொழுது, பிராணவாயு பிறந்தது. நான்காவது பாக வியஷ்ட்டி வாயுவை பிருதிவியுடன் சேர்த்தபொழுது அபானவாயு பிறந்தது. இந்த வியான சமான உதான பிராண அபானனென்று ஐந்து வாயுக்களும் எல்லா ஜீவராசிகளுக்கும் பஞ்ச பிராணன்களா யிருக்கின்றன.

வாயுவை வியஷ்ட்டி வியஷ்ட்டிகளாய்ச் செய்து, அதில் உண்டாகிய வியான சமான உதாண பிராண அபானனென்னும் ஐந்து வாயுக்களின் விவரங்களை யெல்லாம் சொன்னோம். இனி அக்னியை ஸமஷ்ட்டி வியஷ்ட்டிகளாய்ச் செய்து அதில் பிறப்பது எதுவோ அதைச் சொல்லப் போகின்றோம் கேளுங்கள்.

சுலோ || "அக்நி மத்யே பாகந்து சக்ஷுநித்ய பிதீயதே
ததாபி வயோமகதம் பாகஸ்ரோத்ர மித்யபிதீயதே
வாயுநா மிஸ்ரிதம் பாகம் த்வகி ந்த்ரிய மிதிரிதம்
ஜலேஷு மிஸ்ரிதம்பாகம் ஜிஹ்வா இத்யபீதீயதே
ப்ருதிவ்யாம்மிஸ்ரிதம்பாகம் க்ராணேந் த்ரியமிதி ஸ்ம்ருதி."
(விஷ்ணுயாமளம்)

அக்நியை ஸமஷ்ட்டி வியஷ்ட்டியாய்ச் செய்து, அதில் ஸமஸ்ட்டியாக அக்நி நேத்திரங்களாயிற்று. பிறகு வயஷ்ட்டி யாக அக்நியை நான்கு பாகங்களாய்ச் செய்து, அதில் முதற்பாக வியஷ்ட்டி அக்நியை ஆகாசத்துடன் சேர்த்த பொழுது சுரோத்திரங்கள் என்றால், காதுகள் பிறந்தன. இரண்டாவது பாக வியஷ்ட்டி அக்நியை வாயுவுடன் சேர்த்தபொழுது த்வக்கு என்றால், சரீரம் பிறந்தது, மூன்றாவது பாக வியஷ்ட்டி அக்நியை ஜலத்துடன் சேர்த்த பொழுது ஜிஹ்வை என்றால் நாக்குப் பிறந்தது. நான்காவது பாக வியஷ்ட்டி அக்நியை பிருதிவி என்றால், மண்ணுடன் சேர்த்தபொழுது க்ராணம் அதாவது, மூக்குப் பிறந்தது.

அக்நியை ஸமஷ்ட்டி வியஷ்ட்டியாய்ச் செய்து, அதில் உண்டாகிய, கண்கள் காதுகள் சரீரம் நா மூக்கு இந்த ஐந்து ஞாநேந்திரியங்களையும் சொன்னோம். இனி ஜலத்தை ஸமஷ்ட்டி வியஷ்ட்டிகளாய்ச் செய்து அதில் பிறப்பது எதுவோ அதைச் சொல்லப் போகின்றோம் கேளுங்கள் :

சுலோ || "ஜலேஷுபர்ததம் ரஸம் ஞ்யேயம் ஸப்தம் (வ்யோமேச மிஸ்ரிதம்
வாயுநா மிஸ்ரிதம் பாகம் ஸ்பர்லஞ்ச பவதி நிஸ்ச்சம்
அக்நௌ ஸம்மிஸ்ரிதம் பாகம் ரூப மித்யபிதீயதே
ப்ருதிவ்யாம் மிலிதம் பாகம் கந்த மித்யபிதீயதே
(விஷ்ணுயாமளம்)

ஜலத்தை ஸமஷ்ட்டி வியஷ்ட்டிகளாய்ச் செய்து, அதில் ஸமஷ்ட்டியாக ஜலம் ரச தந்மாத்திரையாயிற்று. என்றால், ருசி அறிவதாயிற்று. மற்ற வியஷ்ட்டிபாக ஜலத்தை நான்கு பாகமாய்ச் செய்து அதில் முதற்பாக ஜலத்தை ஆகாசத்துடன் சேர்ந்தபொழுது ஸப்தம் பிறந்தது. இரண்டா வது பாக ஜலத்தை வாயுவுடன் சேர்த்தபொழுது ஸ்பர்ஸம் என்றால் வாயு சரீரத்தைத் தொடுதல் பிறந்தது. மூன்றாவது பாக ஜலத்தை அக்நியுடன் சேர்த்தபொழுது ரூபம் என்றால், பார்வைப்பிறந்தது. நான்காவதுபாக ஜலத்தை ப்ருதிவுடன் சேர்த்தபொழுது கந்தம் என்றால், வாசனைப் பார்ப்பது பிறந்தது. இந்த சப்த ஸ்பர்ச ரூப ரச கந்த மென்னும் ஐந்தும் பஞ்சதன்மாத்திரைகளென்று சொல்லப்படும்.

ஜலத்தை ஸமஷ்ட்டி வியஷ்ட்டிகளாய்ச் செய்து அதில் உண்டாகிய சப்த ஸ்பர்ச ரூப ரச கந்த மென்னும் ஐந்தும் பஞ்சதன் மாத்திரைகள். இந்த பஞ்ச தன்மாத்திரை களின் விவரங்களையெல்லாம் சொன்னோம். இனி பிருதி விதிய ஸமஷ்ட்டி வியஷ்ட்டிகளாய்ச் செய்து, அதில் பிறப் பது எதுவோ அதைச் சொல்லபோகின்றோம் கேளுங்கள்.

சுலோ "ப்ருதிவ்யா மர்த்தபாகஞ்ச பாபுரீந் த்ரீய முக்யதே
வ்யோமேச மீளிதம் ப்ருத்விபாகம் வாசிந்த்ரியம் மதம்
வாயுநா மிஸ்ரிதம ப்ருத்வீ பாகம் பாணிக்த்ரியம் ததா
அக்நிநா மிளிதம் பாகம் பரதேந்த்ரியமிஸ்ம்ருதம்
பலேஷு மிளிதம் பாதம் முபஸ்தத மிதிநத்யதே"
(விஷ்ணுயாளமம்)

*பிருதிவி என்றால் பூமியை என்றால், மண்ணை ஸமஷ்ட்டி வியஷ்ட்டியாய்ச் செய்தபொழுது ஸமஷ்ட்டி பிருதிவியானது மனத்தைத் தள்ள குதமாயிற்று. பிறகு வியஷ்ட்டிபாக பிருதிவியை நான்கு பாகங்களாய்ச் செய்து, அதில் முதற்பாக வியஷ்ட்டி பிருதிவியை ஆகாசத்துடன் சேர்த்தபொழுது வாக்கு என்றால் பேசுவதற்கு வாய் உண்டா யிற்று. இரண்டாவது பாணி என்றால் கொடுக்கவும் வாங்க வும் கைகள் உண்டாயிற்று மூன்றாவதுபாக வியஷ்ட்டி பிருதிவியை அக்னியுடன் சேர்த்தபொழுது நடக்கவும் நிற்கவும் பாதங்கள் உண்டாயிற்று. நான்காவது பாக வியஷ்ட்டி பிருதிவியை ஜலத்துடன் சேர்த்த பொழுது குய்யம் என்றால், இது ஸ்திரீ புருஷர்களுக்கு க்ஷணநேரம் சம்போகத்தில் சந்தோஷத்தை உண்டாக்க மர்மஸ் தானமாய் உண்டாயிற்று. மேற்சொல்லிய வாக்கு பாணி பாதம் குய்யம் குதம் என்னும் இவ்வைந்தும் கர்மேந்திரியங் களென்று சொல்லப்படும்.*

சுலோ || "மஹா பூதார்த்த பாகாநி வக்ஷ்யாமி ஸ்ருண நாரத
ஞாதாவ்யா நஸ்ச்ச சக்ஷுஸ்ச்ச ரஸம் பாயு ரிதீரிதம்!ணி
(விஷ்ணுயாமளம்)

*பஞ்ச பூதங்களைப் பாதிக்கப்படாமல் அகண்டமா யிருந்த முதல் அர்த்தபாகமாகிய ஸமஷ்ட்டிபாகம் ஞாத வியானவாயு நேத்திரங்கள் ரசம், குதம் என்னும் ஐந்து தத்துவங்களாய்ப் பிறந்தன. இரண்டாவது அர்த்த பாகமாகிய வியஷ்ட்டி பாதங்கள் ஒவ்வொன்றையும் நான்கு பாகங்களாய்ச்செய்து, அந்தந்த*

பூதங்களில் சேர்த்தபொழுது இருபது தத்துவங்கள் ஆகின்றன. மேற்சொல்லிய ஸமஷ்ட்டி ஐந்து தத்துவங்களுடன் சேர்த்து இருபத்து ஐந்து தத்துவங்களாய்ச் சரீரம் பிறந்தது.

இவ்வாறான பஞ்சபூதங்களினால் உண்டாகிய சரீரத்தில் சிருஷ்ட்டி செய்திருக்கும், மனம் புத்தி சித்த அஹங்காரமென்னும் நான்கு அந்தக் கரணங்களினால் ஸ்திரீ புருஷர்களுக்கு மோஹத்தை யுண்டாக்கி பார்யாள் புத்திரிகள் பௌத்திரர்கள் என்றால் பேரன் பேத்திமார் களின்மீது ஈஸ்வரன் விசேஷ ஆசையை உண்டு பண்ணி, அவர்களை சூத்திரதாரியைப்போல் ஆட்டுகின்றான், இதற்குத் திருஷ்ட்டாந்தம் ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம் 18 சுலோகம் -61, பிரமாணம் என்ன வென்றால்,

ஈஸ்வர ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஸோர்ஜுநா ! திஷ்ட்டதி
ப்ராமயந் ஸர்வபூதாதி யந்த்ராரூடாநி மாயயா

எல்லா பூதங்களையும் ஆஞ்ஞாபிக்கும் ஈஸ்வரன், சர்வ ஜீவராசிகளின் இருதய கமலத்திலிருந்து சூத்திர தாரியால் ஆட்டப்படும் பொம்மைபோல் ஆட்டுவித்துப் பிராணிகளை பிரம்மிக்கச் செய்கின்றான். ஆதலால்,

இந்நூலை வாசிக்கும் ஒவ்வொருவரும், பஞ்சபூதங்களி னால் வந்த இந்த சரீரம் அநித்யமானதென்றும், பஞ்சபூத சரீரத்தினால் வந்த மனைவி மக்கள் சுற்றத்தார் முதலான வர்கள் நீர்க்குமிழியைப்போல் அதி சீக்கிரமாய் நசித்துப் போகப்பட்டவர்களென்று எண்ணி அவர்களின்மீது எள்ள ளவு ஆசை வைக்கலாகாது. அவர்களின் மீதிருக்கும் ஆசை எப்படி இருக்கவேண்டுமென்றால், பார்யாள் புத்திர பௌத் திராதிகளின் மீதும் தனதாந்யாதிகளின் மீதும் ஆசையுடைய வனைப்போல் இருந்து, குழந்தைகளை எடுப்பதும்போலும், முத்தமிடுவதுபோலும், மனைவி மேல் விசேஷ ஆசை

யுடையவனாய் இருப்பதுபோலும் உழவு வியவஹாரங்களில் விசாரிப்பவனைப் போலும் தன் குடும்பத்திலிருக்கப் பட்டவர்களுக்கு நடித்துக் காட்டி தான் மாத்திரம் அந்தரங் கத்தில் எதிலும் ஆசையில்லாதவனாய் தாமரை இலையின் மீதுள்ள ஜலம் தாமரையில் ஒட்டாமலிருந்ததுபோலும் சேற்றிலிருக்கும் பிள்ளைப்பூச்சி சேற்றிலிருந்தபோதிலும் அந்த சேற்றை பற்றாமலிருப்பது போலும் இருந்து, இந்நூலில் சொல்லியிருக்கும் மூச்சியென்னும் நூலால் மனக்குரங்கைக் கட்டி ஜபம் செய்து வர எழுதியுள்ள சிவராஜ யோகமாகிலும், பஞ்ச முத்திரைகளாகிலும், மனம் உதிக்குமிடத்தை ஆகாச ரூபமபாய்க் காட்டி எண்ணங்களை உதிக்கவிடாமல் உபதேசித்திருப் பதையாகிலும், அல்லது பஞ்சாட்க்ஷரத்தையாகிலும் இவைகளில் எதை யாகிலும் ஒன்றை எடுத்துக் கொண்டு, வியாபார, உத்தியோ கங்கள் செய்யும் வேலைகளில் தவிர மற்றக்காலங்களிலெல் லாம் மேற்கூறிய மந்திரங்களில் எதையாகிலும் ஒன்றை ஜபம் செய்து வருவீர்களாகில் பூர்வ ஜன்மங்களில் செய்து வந்த பாவ கர்மங்க ளெல்லாம் ஒழிந்து மோக்ஷத்தை அடைவீர்கள். மோக்ஷ மென்றால் விடுதலை, விடுதலை யென்றால், முன் சொல்லிய காமக் குரோதாதிகளென்னும் பத்து குணங்களும், தாரேஷனை புத்திரேஷனை தனேஷனை என்னும் ஈஷணாத்திரயங்களும் பூர்த்தியாய் விட்டு விட்டால் பிறகு எந்த எண்ணங்களு மில்லாமல், தான் தானாய் இருந்து அந்நியகாலத்தில் தான் பரமாத்மாவில் கலந்து போவதே மோக்ஷமென்று சொல்லப்படும்.

## 35. சரீர லக்ஷணம் சாங்கிய விசாரணை

சரீர லக்ஷணம் இப்பேர்ப்பட்டதென்று விசாரித்துத் தெரிந்துகொள்ளாவிடில் ஆத்மா இப்பேர்ப்பட்ட தென்னும் ஆத்மஞானம் உண்டாகமாட்டா. அதலால் சரீர லக்ஷணம் இப்பேர்ப்பட்டதென்பதைச் சிரத்தையுடன், விசாரிப்பதே மிகவும் முக்கியமமனது.

சுரு ॥ ஸாங்க்யம் தேஹவிசாரணம் சுப்ரஹம்(விஷ்ணுயாமளம்)

தேகம் தேகி இப்படிப்பட்ட வனென்றும் தெரிந்து கொள்வது சாங்கிய விசாரணை. ஞாநேந்திரியங்கள் ஐந்து கர்மேந்திரியங்கள் ஐந்து, தந்மாத்திரைகள் ஐந்து, பிராணன்கள் ஐந்து, அந்தக் காரணங்கள் நான்கு இந்த 24 தத்துவங்கள் சேர்ந்து சரீரமாயிற்று இந்த சரீரத்தில் வசிக்கும் ஆத்மாவே 25-வது தத்துவம் 26-வது தத்துவமே பரப் பிரம்மம். இந்த பரப்பிரம்மத்தில், 25-வது தத்துவமாகிய ஜீவாத்மாவைக் கொண்டு போய் சேர்ப்பிக்கவேண்டும். இவ்வாறு சேர்ப்பிப்பதே மோக்ஷமென்று சொல்லப்படும்.

### ஞாநேந்திரியங்கள்-5

பூதாதியெனும் பெயரஞ்சுண்டே தென்னில்
பிரிதிவப்புவுடன் றேயுவாயு வாகாயம்
ஆதாரமான மண்ணீர் நெருப்போ
டசைவானவாயு வெளியதன் பேரைந்தாம்
சூதானஞான விந்திரிய மைந்து
துய்யதொக்கு சட்சுசிங்குவை யாக்கிராணந்
தீதான சோத்ரமிதன் விரிவுகேளாய்
சிறந்தசெவியுடம்பு வாய்கண் மூக்காமே

ஸ்ரு || "ஸ்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரியாணி ஸ்ரோத்ர
மாகா ஸேவாயௌ தவக் அக்நௌ சக்ஷுரப்ஸு ஜிஹ்வா
ப்ருதிவ் யாம்க்ராணமிதி." (ஸாரீராகோபநிஷத்)

1. **சுரோத்திரம்** : செவி இது, ஆகாசத்தின் அம்சமான படியால், அதன் குணமாகிய நாநாவித சப்தங்களைக் கேட்டுக் கொண்டிருக்கும்.

2. தொக்கு : தோல் இது வாயுவின் அம்சமான படியால், அதன் குணங்களாகிய சீதளம் உஷ்ணம் மிருதுவு கடினம் என்னும் நான்வித ஸ்பரிசங்களை உணரும்.

3. சட்சு : கண்கள், இது அக்நியின் அம்சமான படியால் அதன் குணங்களாகிய வெண்மை கருமை, சிவப்பு, பச்சை, நீலம் மிசிர (எல்லாம் கலந்த வர்ணம்) நீளம், குட்டை, தூலம், மெலிந்த என்னும் பத்து வித ரூபங்களைப் பார்க்கும்.

4. சிங்குவை : நா, இது அப்புவின் அம்சமானபடியால், அதன் குணங்களாகிய உப்பு புளிப்பு இனிப்பு கசப்பு கார்ப்பு துவர்ப்பு என்னும் அறுசுவைகளின் ரசத்தை அறியும்.

5. **கிராணம்** : நாசி (மூக்கு) இது. பிருதிவியின் அம்சமானபடியால் அதன் குணமாகிய சுகந்த துர்க் கந்தங்களை மாத்திரம் பகுத்து அறியும். இவ்வைந்து இந்திரியங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விஷயத்தை அறிவதனால் இவைகள் ஞேந்திரியங்கள் எனப்படும்.

## கன்மேந்திரியங்கள் 5

உண்டுலிரித்திடும் வாக்குப் பாதம் பாணி
யொப்பரிய பாயுருவோடு பத்தமைஞ்சாம்
கண்டுகொள்ளும் வாக்குவாய் திறத்தல்பாதங்
காணுமிருகால் பாணி கையதாகும்
விண்டுமுறை பாயுருக் கண்ணியாகும்
விரித்தபடியுபத்த மென்பதுவே லிங்கம்
என்று மறிகரண மினிநான்கு குளோ
யியம்புமனம் புத்தியாங்காரஞ் சித்தம்.

17A

சுரு || "வாக் பாணி பாத பாயூபஸ்த்தாக்யாநி கர்மேந்திரியாணி, தோஷம் க்ரமேண வசநாதாந கமந விஸர்ஜநா நந்தாஸ் சைதே லிஷயாஹ ப்திவயாதி மஹா பூதேஷு க்ரமேணோத் பந்நாஹ.ணி (ஸாரீரகோபநிஷத்)

1. வாக்கு : வாய், இது ஆகாயத்தின் அம்சமா யிருப்பதனால் ஆகாயத்தின் குணங்கொண்டு வசனிக்கும் என்றால் பேசும்.

2. பாணி : கைகள், இவை வாயுவின் அம்சமா யிருப்பதனால் கொடுத்தல் வாங்கல் பிடித்தல் விடுதல் முதலாகிய காரியங்களைச் செய்யும்.

3. பாதம் : கால்கள், இவை அக்நியின் அம்சமா யிருப்பதனால், நடப்பது உட்காருவது நிற்பது எழுந் திருப்பது முதலான காரியங்களைச் செய்யும்.

4. பாயுரு : குதம், இது பிருதிவியின் அம்சமாயிருப்ப தனால் மல மூத்திரங்களை வெளியில் தள்ளச் செய்யும்.

5. உபஸ்தம் : மர்மஸ்தானம், இது அப்புவின் அம்சமா யிருப்பதனால் அப்போதைக்கப்போது மூத்திரம் சுக்கிலம் சோணிதம் விடுவித்துப் போக ஆனந்தம் அடைவிக்கும். இந்த ஐந்தும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரியத்தைச் செய்து கொண்டிருப்பதனால் இதற்குக் கர்மேந்திரியங்கள் என்று சொல்லப்படும்.

## அந்தக்கரணங்கள் 4

ஸ்ரு || "மனோபுத்திர ஹஹங்காரஸ்சித்த மித்யந்தக் காண சதுஷ்ட்டயம் தேஷாம் க்ரமேண ஸங்கல்பவிகல் பாத்யவஸாயாதி மாநாவதாரணாஸ்வரூபா ஸ்ச்சை தேவிஷயாஹ மநஸ்தா நம் நாபி புத்தேர்வதந மஹங் காரஸ்ய ஹ்ருதயம் சித்தஸ்யகளாந்தம்.ணி (ஸாரீரகோபநிஷத்)

1. **மனம்** : இமனம் வாயுவின் அம்சமானபடியால் தன் சொரூப குணமாகிய நினைப்பு மறப்பென்னும் சங்கல்ப விகல்பங்களையே செய்துகொண்டு வாயுவைப் போல் அலைந்து திரியும். இதற்கு அதிதேவதை சந்திரன் இடம் நாபி.

2. **புத்தி** : அக்கினியின் அம்சம். இது பதார்த்தத்தின் சுய ரூபத்தை நிச்சயிக்கும் வடிவ விருத்தியே புத்தியாம். அன்றியும் இப்புத்தி, காரியா காரியங்களையும் நல்லது கெட்டது என்பதையும் நிச்சயித்துணரும். அதிதேவதை பிரமன், இடம் முகம்.

3. **சித்தம்** : அப்புவின் அம்சம். பொருளின் நினைப்பே சித்தமாம். இது பஞ்சேந்திரியங்களுக்குச் சலனத்தை யுண்டாக்கி அதன் வழியாய் விஷயங்களைப் பற்றியிழுத்துச் செல்லும். இதற்கு அதிதேவதை விஷ்ணு. இடம் நாபி.

4. **அஹங்காரம்** : ப்ருதிவியின் அம்ஸம். மாமிஸ பிண்டமாகிய இத்தேகத்தையே நான் என்று அபிமானிக்கும் வடிவ விருத்தியே அஹங்காரமாகும். இது காரியா காரியங்களை யோசிப்பதை விட்டு 'நான்' 'எனது' என அபிமானித்துப் புண்ணிய பாவங்களைச் செய்துகொண்டி ருக்கும் இதற்கு அதி தேவதை ருத்திரன். இடம் இருதயம்.

இந்நான்கும் தேகத்தில் வியாபித்துக் கொண்டு ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களை அவ்வவ் விருத்திகளில் பிரவேசிக்கச் செய்கின்றன.

## வாயுக்கள் 10

தசவாயு வின்பெயரைச் சாற்றக்கேள் ப்ராணன்
நிசமார பான்னோர் வ்யானன்லி வசமாரு
மத்தகையனாக னுதானன் கிரிகரன் றேவ
தத்தன் றனஞ்ஜய னிதுதான்.

## பிரதான வாயுக்கள் 5

ஹ்ருதி ப்ராணோ குதேபானோ உதாநஹ கண்ட ஸேஸ்திதஹ ஸமானோ நாபிதேஸஸ்து வ்யாநஸ்ஸர்வ ஸரீரகஹ.ணி

1. பிராணவாயு : இது இருதயஸ்தானத்திலிருந்து நாசிகா (மூக்கு) ரந்திரங்களின் வழியாய் மேல்நோக்கி நடந்து பசி தாகங்களை உண்டாக்கிப் புசித்த ஆகாரத்தை ஜீரணம் செய்விக்கும்.

2. அபானவாயு : இது குதத்தைப்பற்றி நின்று மலமூத்திரங்களையும் சுக்கில சோணிதத்தையும் வெளியில் தள்ளும்படிச் செய்யும்.

3. உதானவாயு : இது கண்ட ஸ்தானத்திலிருந்து அன்னத்தை விழுங்கி, அந்த அன்னரசத்தை நாடிகளுக்கு வியாபிக்கச் செய்து சப்தத்தோடு கலந்து குரலோசை செய்விக்கும். இஃதன்றியும் தூங்கும்பொழுது கண்கள் மூக்கு வாய் செவிகள் சரீரத்தின் மேலிருக்கும் தோல் என்னும் ஐந்து இந்திரியங்களை அஞ்ஞான மென்றும் இருளில் அழுந்தச் செய்து, பிறகு தூங்கி எழுந்தவுடன் அந்தந்த இந்திரியங்களைத் தம்தம் ஸ்தானத்தில் வந்து இருக்கும்படிச் செய்விக்கும்.

4. ஸமானவாயு : இது நாபி ஸ்தானத்திலிருந்து உதான வாயுவினால் அனுப்பப்பட்ட அன்னரசத்தை நாடி (நரம்பு) களுக்குச் சமமாகப் பங்கிட்டுத் தேகத்தை வளர்ப்பிக்கும்.

5. வியானவாயு : இது சரீரத்தின் எல்லா இடங் களிலும் வியாபித்து ஸ்பரிசத்தைக் கிரகிக்கச் செய்யும். மேலும் புசித்த அன்னத்தைத் திப்பி வேறு ரசம் வேறாகச் செய்து கொண்டிருக்கும். இவ்வைந்தும் தேகத்திலிருப்ப தனால் ஒருவன் ஜீவித்திருக்கின்றான். ஆதலால் இவைகளைப் பஞ்ச பிராணன்களெனப்படும்.

## உப வாயுக்கள் - 5

6. **நாகன்** : இது கண்டத்திலிருந்து வாந்தியை உண்டுபண்ணும். அன்றியும் நேத்திரங்களினால் எல்லா வற்றையும் பார்க்கச் செய்யும்.

7. **கூர்மன்** : இது கண்களிலிருந்து திறக்கவும் மூடவும் செய்யும்.

8. **கிருகரன்** : இது மூக்கிலிருந்து குருகுருத்துத் தும்மலை உண்டாக்கும்.

9. **தேவதத்தன்** : இது, மார்பினின்று கபத்தைச் சேர்த்து நெட்டிக் கொட்டாவியையும் விக்கலையும் உண்டாக்கும்.

10. **தனஞ்சயன்** : இது கர்பத்திலிருக்கும் பிண்டத்தை வெளியில் தள்ளும். அன்றியும், மரணமடைந்த சரீரத்தையும் விடாமல் காஷ்ட்டத்திற்குப் போகும் வரையில் சரீரத்தை வீங்கி வெடித்து நாற்றமெடுக்கும் படிச் செய்விக்கும். இந்த தனஞ்ஜயனென்னும் வாயு சரீரம் தஹனம் செய்யும்வரையில் ஸரீரத்திலேயே இருக்கும்.

இந்த பத்துவாயுக்களும் பத்து நாடிகளில் திரிந்து கொண்டிருக்கும் அன்றியும்,

பூஷா! அலம்புஸா என்னும் நாடிகள் செவியினிட மிருந்து பற்பல சப்தங்களைக் கேட்கச் செய்யும்,

**கந்தாரி, ஹஸ்தி ஜிஹ்வா** :- என்னும் நாடிகள் நேத்திரங்களிலிருந்து பதார்த்தங்களைத் தெரியச் செய்யும் இது இருதயத்திலிருந்து மேல் வியாபித்திருக்கின்றது.

**சிநீவாலி, குஹூ** : என்னும் இரண்டு நாடிகளும் மலமூத்திரங்களைவிடச் செய்து கொண்டு அநாகதச் சக்கிரம் முதல் லிங்க குதஸ்தானங்கள் வரையில் வியாபித்திருக்கும்.

**ரக்தவியாளன் :** இந்த நாடியானது அநாஹத (இருதய) முதல் ஸ்வாதிஷ்ட்டானம் (லிங்கம்) வரையிலும் வியாபித்து அந்தரங்க ஸ்தானத்தில் குஹூநாடியுடன் கலந்து சுக்கில சோணிதங்களை ஏகமாய் வெளியில் தள்ளச் செய்யும் இந்த ஏழு நாடிகளும் இருதயத்தை ஆதாரமாகச் செய்துகொண்டு நான்கு நாடிகள் ஊர்த்துவ (மேல்) முகமாகவும் மூன்று நாடிகள் அதோ (கீழ்) முகமாகவும் வியாபித்திருக்கின்றன.

**இடை பிங்கலை :** இவ்விரண்டும் நெற்றிச் சக்கிரம் முதல் மூலந்தாரம் வரையிலும் வலமிடமாக வியாபித்து அதன் மத்தியில் ஸுஷும நாடியை அநுசரித்துத் திரிகின்றன. இவை புருவ மத்தியிலிருந்து கொண்டு வலது நாசி. இடது நாசிகளில் சேர்ந்து பிராண வாயுவை உசுவாச நிசுவாசங்களாய் நடத்திக் கொண்டிருக்கும்.

**ஸுஷும்னா நாடி :** இது பிரம்மாந்திரம் வரையில் வியாபித்து நாவிற்சேர்ந்து அகாராதி க்ஷகாராந்த ஓசைகளை உண்டாக்கும்.

## தன்மாத்திரைகள்-5

உன்னவரிதான தன்மாத்திரையைக் கேட்பா
யுரைப்பார் சத்தபரிசமுடன் ருபசகந்தம்
என்னுமிவை தமிற்சப்தமது செவியிற்கேட்டு
மியற்பரிசமுடம்பு சுகமறியும் ரூபம்
கண்ணு முருக்காணும் ரசமினிப்பைக் காட்டுங்
கருதுகந்தம நாசினியிற் கந்கங்காணும்
சொன்னவகை யைந்து முயிர்கூறாமென்று
சொல்லு கன்மேந்திரியந்தானைந் துண்டோ.

1. சந்தம் : ஆகாசத்தின் தன்மாத்திரை, இது செவியின் உட்புறத்திலுள்ள மெல்லிய ஜவ்வின் வழியாய் சப்தத்தைக் கேட்பிக்கும்.

2. ஸ்பரிசம் : வாயுவின் தன்மாத்திரை இது தேகத்தினால் பிராணாதி ஸர்வ வாயுக்களுடன் வியாபித்தி ருப்பதனால் தொட்டுக் காட்டும் குணத்தை சரீரத்தின் மூலமாய் அறிவிக்கும்.

3. ரூபம் : அக்நியின் தன்மாத்திரை, இது நேத்திரங்களில் அக்நி ஸம்பந்தப்பட்டிருப்பதனால் பத்துவித ரூபங்களையும் நேத்திரத்தினின்று காட்டி வைக்கும்,

4. ரசம் : ஜலத்தின் தன்மாத்திரை இது நாவில் ஜலசம் பந்தமிருப்பதனால் அந்த நாவிலிருந்து அறு சுவையின் பேதங்களை அறிவிக்கும்.

5. கந்தம் : பிருதிவி (பூமி)யின் தன்மாத்திரை இது நாசியில் (மூக்கில்) பிருதிவி சம்பந்தமிருப்பதனால் அந்த நாசியின் வழியாய்ச் சுகந்த துர்க்கந்தங்களை அறிவிக்கும்.

மேற்சொல்லிய ஸர்வ இந்திரியங்களும் ஆத்மாவை அறியமாட்டா. ஆகவே, இத்தேகாதி இந்திரியங்கள் யாவும் "ஜடம்" என்றும் ஆத்மா ஒன்றே ஞான சொரூபமாய் இருப்பதால் "சித்து" என்றும் சொல்லப்படும்.

## 36. நாடிகளும் அவற்றின் குணங்களும்

காரணமாம் மாந்தர்க்கு நாடி சொல்வேன்
கருவான எழுபத்தீ ராயிரந்தான்
பூரணமா மதைக்குறுக்கித் தசநாடியாகப்
பூட்டினேன் குருநாடி சூதநாடி
தோரணமாம் வாதமென்ற நாடிதானுந்
தொகுப்பான கானகத்து மயில்போலாகும்
வாரணமகம் பித்தமது வட்டை போலாம்
வளமானசி லேற்றுமமது தவளையாமே
ஆமேதான் நாடி மூன் றோடிற்றானா
லப்பனே சன்னியது வந்து கூடும்
போமேதான் வாதமது திமிர்த்து நின்றால்
பொல்லாத ஏமனுக் கறுதியாகும்
சாமேதான் பித்தமது வழுந்திற்றானாற்
சார்வாக வசாத்தியமு முடனேநேரும்
சாமேதான் சிலெற்றுமமது கோபித்தாக்கால்
சடுதியி லெமபதி சேருவாரே
சேருவார் வாதத்தில் பித்தமாகில்
செழிப்பான வார்த்தைமுதற் குழரிப்பேசும்
கூறுவார் பித்தத்தில் வாதமாகில்
குணமான திரேகமது வெளுப்புமாகும்
தீருவார் சேற்றுமத்தில் பித்தமாகில்
திரேகமது மஞ்சணிக்கும் மலம் வெளுக்கும்
ஊருவார் தொந்தரத் திரமாகிநின்றால்
உடல்வலுக்கும் நாசிவக்கும் முன்னம்பாரே
பாரப்பா வாதமது தித்திப்பாகும்
பாங்கான பித்தமது கசப்புமாகும்
சீரப்பா சேத்துமமது புளிப்புமாகும்
சிரப்பான தொந்தமது வியாதிமெத்த

கூறப்பா சப்தங்கள் மாறிப்போகும்
குடிமாங் காந்தலது வதிகமுண்டாம்
தீரப்பா மேனியது கருகிப்போகும்
திறமான நாடியின் விபரங்காணே
காணவே சேற்றுமத்தின் வாதமாகில்
கடினமாம் பிடரியது வலிப்புமுண்டாய்
தோணவே நரம்பெல்லாம் வலித்து நிற்கும்
துடியான கண்டமது வலித்துக்காணும்
ஊனவே பித்தத்தில் நாடிதானு
முற்பனமாய் வாதத்தி லுறையுமாகில்
ஆனவே பித்தமும் வாதமும் கூடில்
லரணைவால் துடிபோலத் துடிக்கும் பாரே
பாரதோன் நோயாளி யெழுந்து நிற்கில்
படையுடனே மூச்சுமது வதிகங்கொண்டால்
சீரேதான் நேத்திரமது வட்டமானால்
சிகப்பான முழியதுவுந் திரும்பி விழிபார்த்தால்
தூரேதான் சேத்துமமது தொண்டை கட்டுந்
தொலையாத நெஞ்சரிப்பு மேற்சுவாசம்
வீரேதான் மேனியது கருகல்காணும்
மேதினியில் வியாதியது செனிக்கும்வாறே
வாறான பித்தமது வுறையுமானால்
வளமான சேற்றுமத்துப் தொண்டைகட்டுங்
கூறானவாதமது குறுகிற்றானால்
குறிப்பான மூத்திரமது மஞ்சள் போலாம்
நீறான பழுவெலும்பு ரத்தஞ்சுண்டி
நிலையான யாக்கைக்கு வறுதிநேருந்
தூறான சடலமது சுறுங்கிற்போகுஞ்
சுந்தரனே நாடி தெளிந்து பாரே

## 37. சரீரத்திரயம்

சீவர்களுக் குற்றுத் திகழுஞ் சரீரங்கள்
மூவகையா மென்று மொழிவார்கலிளாவதவை
தூலமெடு சூக்மஞ் சொற்காரண மென்றே
வாலறிவி னோர்கள் வகுத்து

தூலம், சூட்சமம், காரணம் என்று சரீரங்கள் மூன்றாகும்.

1. தூலசரீரம்- தலை, கண்கள், மூக்கு, வாய் கைகள், கால்கள் முதலாகிய அவயங்களுடன் கூடி இம்மாம்ஸ சரீரம் கைகளினால் பிடிப்பதற்குக் கடினமாயும் மிருதுவாயும் பார்வைக்கு நீளமாயும் குட்டையாயும் பெருத்தும் சிறுத்தும் தோன்றுவதால் இதற்கு தூல சரீரம் என்று சொல்லப்படும்.

2. சூட்சுமசரீரம்- மனம், புத்தி, சித்த, அஹங்காரம் ஆகிய இந்நான்கும் கூடியதே சூட்சும சரீரமென்று சொல்லப்படும், இவைகளையே "லிங்க்" சரீரம் என்றும் சொல்லுவார்கள், சூட்சும சரீரமென்பது கண்களுக்குத் தோன்றாமலும் கைகளாற் பிடிப்பதற்கு சாத்தியபடாமலும் இந்தத் தூலசரீரத்தின் உள்ளிருப்பது.

3. காரணசரீரம்- இது தூல சூட்சும சரீரங்கட்கு விதையாயிருந்து, ஜனனமரணங்களை உண்டாக்கி துன்பத்தையே சதம் எனக்கருதச் செய்கின்ற அஞ்ஞானமே "காரண" சரீரம் எனப்படும்.

தூலசரீரம் "ஸீர்யலே இதி ஸரீராஹ" ஜீர்ணித்துப் போவதால் சரீரம் என்றும் "த்ஹ்யதே இதி தேஹ" தகிக்க (கொளுத்தப்) படுவதால் தேகமென்றும் சொல்லப்படும். இந்த தேகம் அன்னமில்லாவிடில் ஜீர்ணித்துப் போகும். அன்றியும் வியாதியினனும் கிழத்தனத்தினாலும் ஜீர்ணித்துப்போகும். அங்ஙனம் ஜீர்ணித்தபின் அதாவது பிராணன் போய்விட்டபின்பு இத்தேகம் மசானத்தில் அக்கினியால் சுடப்பட்டுச் சாம்பலாகப் போகும். சூட்சும் சரீரம் விருத்தியாய்க் கொண்டேவரும். எப்படியென்றால் ராகத்து வேஷ காமக் குரோதங்கள் தினமும்

விசேஷித்து வளருகின்றமையால் இந்தச் சூட்சும சரீரம் விருத்தியை அடைந்து வளருகின்றன. நாளுக்குநாள் காமக்குரோதாதிகள் குறைவுபட்டால் ஜன்மங்கள் குறைவுபட்டு நாளுக்கு நாள் சூட்சுமசரீரம் ஜீர்ணித்துப்போகும். ஆதலால் இந்த ராகத்துவேஷாதிகள் சூட்சும சரீரத்தின் விகாரங்களாகும் காரண சரீரம் எங்ஙகனம் விருத்தியடையும்? அஞ்ஞானத்தில் நான், எனது என்னும் அபிமானம் நாளுக்குநாள் அதிகரிப்ப தனால் காரண சரீரம் விருத்தியடைகிறது. ஆதலால், அபிமானம் நாளுக்குநாள் ஒடுங்கினால் காரண சரீரம் நாளாவட்டத்தில் ஒடுங்கி ஜீர்ணித்துவிடும். சூட்சும காரண சரீரங்கள் இரண்டும் சற்குரு கடாக்ஷத்தினாலும் ஞானதாக்கி நியினாலும் ரூபமில்லாமல் நசித்துப்போகும் இவ்விரண்டும் நசித்தவுடன் மோக்ஷம் சித்திக்கும்.

ஓ சுவாமீ! தூல சரீரம் யதார்த்த பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றதுபோல் சூட்சும சரீரம் ஏன் காணப் படுவதில்லை. ஆதலால் அதனை உண்டென எப்படி நிச்சயிக்கலாம்?

அப்பா! குழந்தாய்! மாம்சமயமாகிய இந்தத் தூல சரீரத்திற்கு நித்திரை மரணம் மூர்ச்சை முதலானவைகள் சம்பவிக்கும் சமயங்களில், இச்சரீரத்திலுள்ள நேத்திரங்கள் செவிகள் முதலாகிய அவயவங்கள்யாவும் இருந்த போதிலும் அந்த நேத்திரங்கள் பார்ப்பதில்லை. செவிகள். கேட்பதில்லை. இவ்விதமே ஒவ்வொரு இந்திரியமும் அதனதன் காரியங்களைச் செய்வதில்லை. ஆதலால் இந்தத் தூல சரீரம் கேவல மாம்ச பிண்டமாகிய மட்பாண்டமாயிருப்பதனால், இதுவே சகல காரியங்களையும் செய்வதாகச் சொல்லலாகாது. இந்தத் தூல சரீரத்திற்குள் சூட்சும (கண்களுக்குக் காணப்படாத) சரீரம் ஒன்றிருந்து சமஸ்த காரியங்களையுஞ் செய்து கொண்டிருக் கின்றது என்பது நிச்சயமாகும். ஆகவே தூல தேகத்தில் கண்கள், மூக்கு, வாய், செவிகள், தேகசர்மம் என்னும் பஞ்சேந் திரியங்களுடன் கூட மனம், புத்தி சித்தம் அஹங்காரமென்னும் அந்தக்கரணங்கள் நான்கும் கூடியிருப்பதனால், அவைகள்

ஒவ்வொன்றும் தம் தம் காரியங்களைச் செய்து கொண்டிருக்கின்றன. அஃதெப்படியெனில்,

நாம் சில வஸ்துக்களைக் காண்கின்றோம். வஸ்துவைக் காணுவது கண்ணென்னும் அவயவமல்ல. கண்களுக்கும் மூளைக்கும் மத்தியிலுள்ள நரம்பின் வழியாய் ஓடிக் கொண்டிருக்கும் இந்திரியமே ஒரு வஸ்துவை பார்க்க மிகவும் உபயோகமானது. கண்ணென்னும் அவயமானது, காணுந் தொழிலிலுள்ள இந்திரியத்திற்கு ஒரு கருவி. மேற்படி கண்ணுக்கு இந்திரியமென்னும் கருவி இல்லா விடில் ஒருவனுக்கு நூறு கண்கள் இருந்தபோதிலும், பிரயோஜனப்படமாட்டா. கண்ணும் கண்ணுக்கும் மூளைக்கும் சேர்ந்திருக்கும் இந்திரியமென்னும் கருவி, இவைகளிரண்டும் இருந்தபோதிலும், மனம் இவைகளுடன் கலக்காவிட்டால் எந்த வஸ்துவையும் காணமுடியாது. ஒரு வஸ்துவைப் பார்க்கவேண்டுமானால் முதல் கண்ணும், கண்ணுக்கும் மூளைக்கும் சேர்ந்திருக்கும் கருவி, மனம் ஆக இம்மூன்றும் வேண்டும் மனதானது வேறோர் இந்திரியத்து டன் சேர்ந்து மற்றொரு வேலையில் இருந்துவிட்டால் அப்பொழுது கண்ணிந்திரியமும், கருவியும் சேர்ந்து காணுந்தொழிலைச் செய்யமாட்டா. ஆகையால், ஒரு விஷயத்தை அறிய வேண்டுமானால், அவ்வுணர்ச்சிக்குக் கருவிகள் கண் மனம் ஆகிய இம்மூன்றும் அவசியம் வேண்டும். சப்தத்தைக் கேட்பதற்கு செவியென்னுங் கருவியும் செவி இந்திரியமும் மனமும் ஆக இம்மூன்றும் வேண்டும். இவ்வாறாகவே மற்ற எல்லா இந்திரியங்களுக்கும் வேண்டுமென்று தெரிந்துகொள். வஸ்துக்களைக் காணும் பொழுது மனமானது, கண் இந்திரிய மூலமாய் வெளியில் சென்று அவ்வஸ்துக்களைப் பார்த்து, கண்களை மூடிக் கொண்டு நினைக்கும்பொழுது அவ்வஸ்துக்களை மனம் மறுபடியும் உள்ளிந்திரியங்களுடன் கலந்து வேலை செய்கின்றது வஸ்துக்களை கவனிக்கும்பொழுது, கருவி களின் சகாயமும் வேண்டும். இந்திரியங்களின் ஒத்தாசை யில்லாமல் மனதினால் ஒன்றும் செய்ய முடியாது. ஒரு வஸ்துவின் அடையாளம், அல்லது குறியில்லாமல் மன தானது

ஒன்றையும் நினைக்கமாட்டாது. அவ்வடையாளங்களை மனதிற்குக் கொண்டுவருவது இந்திரியங்களேயாம் இதன் விவரங்களை யெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீபகவத் கீதையில் விரிவாய்க் காணலாம். தூல, சூட்சும சரீரமிரண்டும். காரிய ரூபமாயிருக்கின்றன, எவ்வாறெனில்,

புகை வருவதனால் அக்நியைக் காணாவிடினும் காரணமாகிய அக்நியிலிருந்தே அதன் காரியமாகிய புகை காணப்படுகின்றது என்று நிச்சயிப்பதுபோல் காரிய வடிவமாகிய சூட்சும சரீரம் உண்டாவதற்குக் காரணம் ஒன்று உண்டென்றும் நிச்சயிக்கலாம். அதுவே அஞ்ஞான மாகிய காரண சரீரம், அதனாலேயே தூல சூட்சும சரீரங்கட்கு காரணமாயிருந்து ஜநந மரணாதிதாபத்தி யங்களை உண்டாக்குகின்றன. எப்படியெனில்,

தூக்கத்தில் கனவு காணும்பொழுது ஆத்மா வெளியில் போவதில்லை. மனம், புத்தி, சித்தம், அஹங்கார மென்னும் அந்த காரணங்கள் வெளியில் போகின்றன : அவைகள் போன போதிலும், கண்களுக்குக் காணப்படும் தூல சரீரம் பிணமாகமாட்டாது. ஆத்மா போய் விட்டால் சரீரம் பிணமாய்விடும். ஆத்மாவிற்கு அறியும் சக்தியுண்டு, அதனால் அந்தக் கரணம் வெளிவியவகாரங்களில் திரிவதை ஆத்மா சாக்ஷியாயிருந்து, அந்தக்கரணங்கள் தூக்கத்தில் கண்டவைகளை யெல்லாம் காலையில் மற்றவர்களிடத்து இரவு கண்டவை களையெல்லாம் சொல்லுகின்றது. ஆதலால் தூலசூக்ஷ்ம சரீரங்களுக்குச் சத்தாயிருப்பது ஆத்மா. ஆத்மாபோய்விட்டால் சரீரத்தை தகனம் செய்துவிடுவார்கள். தூங்கப்பட்டவனைத் தகனம் செய்வார்கள் என்றால், தூல குக்ஷ்ம சரீரங்களுக்குச் சத்தாயிருப்பது ஆத்மா. இந்த ஆத்மா சரீரத்தில் எது வரையில் இருக்கின்றதோ அதுவரையில் சகல இந்திரிய கூட்டங்களும் இருக்கும். ஆத்மா போய்விட்டால் எல்லா இந்திரியங்களும் போய்விடும். சகல இந்திரியங்களுக்கும் அரசனாயிருப்பது ஆத்மா. இவ்வாத்மா போகும் வரையில் அந்தக் கரணேந்திரியங்கள் போகமாட்டா. அந்தக் கரணேந் திரியங்களுக்குச் சத்வகுண காரியங்கள் இருப்பதனால்,

அவைகளுக்கு ஞான சக்தி உண்டு. ஆத்மாவிற்கு ரஜோகுண கார்யங்கள் இருப்பதனால், அதற்குக் கிரியாசக்தியுண்டு, அதன் பலத்தினால் ஆத்மா போய்விட்ட பிறகு, லிங்க சரீரம் போய்விட்டதென்று சொல்லுவார்கள். சூக்ஷ்மசரீரம் தூல சரீரத்தை விட்டுப் போய்விடும். ஆத்ம பலத்தினால், இந்திரியங்களும் அந்தக் கரணங்களும் இருக்கின்றன வென்று யோக சாஸ்த்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது, அன்றியும், பிராண வாயுவை நிறுத்தாவிட்டால் மனோவாயு நிற்கமாட்டா. ஆதலால், மனோ ஓட்டத்தை நிறுத்தத்தக்க ராஜயோகத்தை இதில் சொல்லியதுபோல் ஜபம் செய்துவர வேண்டும். அன்றியும் மனோவாயுவை ஓடவிடாமல் செய்விக்கும் யோகாப் பியாசத்தையும் செய்துவர வேண்டு மென்றும் யாம் சொல்லுகின்றோம்.

"அஜ்ஞான தவிவேகஹ அவிவேகா தபிமாநஹ. அபிகாநாத் ராகா தயஹ ராகாதயம் கர்மாணி, கர்மணா சரீரபரிக்ரஹ" என்றிருப்பதால், அஞ்ஞானத்தினால் அவி வேகமும், அவிவேகத்தினால் 'நான்' எனது என்னும் அபிமானமும், அந்த அபிமானத்தினால் காமக்குரோதாதி களும், அந்தக் காமக்குரோதாதிகளால் அநேக கர்மங்களைச் செய்து, அக்கர்ம வசத்தால் ஜீவாத்மா அநேக ஜநந மரணங்களை அடைந்து கொண்டேயிருக்கும். அதனால் அக்காரண சரீரம் முற்றிலும் நசிக்காவிடில் முக்தியில்லை யென்பது திண்ணம், இந்தக் காரண சரீரமே சஞ்சில கர்மமென்று அறிய வேண்டும்.

சுரு || ததா வித்வாந் ப்ரஹ்மஞாநாக்நிநா கர்மபந்தம் (நிர்த்தஹேத் என்னும் பையிங்கலோப நிஷத்வாக்கிய ரீதியாய், ப்ரஹ்ம ஞானத்தினால் அஞ்ஞானமும் சகல கர்மங்களும் நசித்து ஜீவன் முத்தியை அடையும் இனி பஞ்சகோசங்களைக் குறித்து சொல்லுகின்றோம் கேளுங்கள்.

## 38. பஞ்சகோச விவரங்கள்

கோசங்க ளோரைத்தாய்க் கூறுவரன்னம் ப்ராண
ணாசின்மனோ விஞ்ஞான மானந்தலி நேசமுள
வன்னமயத்தூல மதன்பின் மூன்றுஞ் சூச்ம
நன்னய காரண மானந் தம்

"ஆத்மா நாத்ப ஸ்தூல ஸூக்ஷ்ம காரண ஸ்ரீரத்ரய விலக்ஷணஹ்
பஞ்சகோஸ ஸ்வதிரிக்தஹ் அவஸ்த்தாத்ரய ஸாக்ஷீ ஸச்சிதாநந்தரூபஹ"

பரமாத்மா பஞ்சசோக விலக்ஷணனென்று சுருதிகள் முறையிடுகின்றன. பஞ்சகோசங்களை அறியாமுன் அவை களுக்கு விலக்ஷணனான பரமாத்மாவை அறியலாகாது. ஆதலால் முதல் பஞ்சகோசத்தை விசாரிக்கலாம்.

அஃது அந்நமய பிராணமய மநோமய விஞ்ஞானமய ஆநந்தடயமெனக் கோசங்கள் ஐந்து வகைப்படும். இதற்குச் சிவஞான சித்தியார் பிரமாணம் என்ன வென்றால்,

மருவா னந்தம் விஞ்ஞான
மனோ பிராண னன்மைய
முருவாந் தன்மை யுண்டாய்மு
னொன்றுக் கொன்று குந்குமமாய்
வருமா மன்னன் மயகபற்றி
மாயை முதற்கா ரணமாகு
மருவா யான்மா வைங்கோசத்
தார்ப்புண் டவற்றி னகம்புறமாம்

"அந்தவிகார ஸுக்லஸோணித ஜந்ய ஷட்பாவவிகார ஸஹிதம்
அந்நேந்ஸநவ வர்த்தமாநம் இதம் ஸ்தூலஸரீர மந்நமய கோஸஹ
ஸுக்லஸோணித ஸம்பூததே ஹோந்நமய உச்யதே
அந்தகர்யாணாம் ஸமூ ஹோந்நமயகோஸஹணி

1. அன்னமயகோசம் : தாய் தந்தையர்கள் புசித்த அன்னத்தினாலுண்டாகிய சுக்கில, சோணிதங்களால் தாயின் உதரத்தில் சிசு தரித்துப் பிறந்து பால் அன்னம் முதலிய ஆகாரங்களால் தினே தினே விருத்தி யடைந்து, தூலமாகிய கை கால்கள் நீண்டு, சரீரம் அப்போதைக்கப் போது மாறுபடுதல் வளருதல், நசித்தல் முதலாகிய விகாரமுடையதால் சப்த தாது மயமாய்க் காணப்படும், ஆதலால் இந்த தூலசரீரம் அன்னமய கோசத்தினால் உண்டாயிற்று. இது மரணமடைந்தபின் அன்னமாகிய பிருதிவி (பூமி) யில் ஒடுங்கும் அன்றியும்,

"யதா கட்கம் தத்கோஸம் ஆம்பரபலம் த்வக்
யதா துஷ்ஹ தண்டுலாதிக மாச்சாதயதி
யதாவா கர்ப்பம் ஜராயுரா வாரயதி
கோஸவதாச்சாத கத்வத் கோஸ இத்யுச்யதேணி

உறை கத்தியையும் ஒடு புளியையும், உமி அரிசி யையும் மாபிண்டத்தையும் மூடிக்கொண்டு அவைகளைக் காணவிடாமற் செய்வதுபோல் பரமாத்மாவை இந்த மோசங்கள் மூடிக்கொண்டு காணப்படாமல் செய்வதனால் இதற்குக் கோசங்களெனப் பெயர் உண்டாயிற்று.

"நநி கட்காதிநாம் தத்கோஸாதீநாஞ் சஸத்ததபிந்நஹ யதே.
பஞ்சகோஸா நாமாத்ம பிந்நஸத்தாகத்வா பாவாத்
கோஸாதிம்யோ வைஷம்யாத்கத மாச்சாதகத்வமி சே
துச்ணி

உறை கத்தி முதலியவைகள் வேறாயிருந்தபோதிலும் ஒன்றினுள் ஒன்று சேர்ந்திருப்பதனால் அவைகள் காணப் படுவதில்லை. இதுபோல், ஆத்மாவை பஞ்சகோசங்கள் மூடிக்கொண்டிருப்பதனால் ஆத்மா காணப்படுவதில்லை. ஆத்மாவை மூடும்படியான சக்தி கோசங்கட்கு எப்படி உண்டாயிற்றென்றால் :-

"ஆதித்ய கிரண பரிணாம வினேஷத்வாந்மே
கஸ்யாதித்ய ஸத்தைவ ஸத்தா ததாபி மேகஹ
ஆதித்யம் யாதாச்சாதயதி அக்நிமுபஜீவ்ய
வர்தமாநஸ்ய தூமஸ்யா ப்யக்தே ஸ்த்தை
வஸத்தா ததாபி ஸ்தூமஹ அக்நிமாஸ்ச்சாத
யதி ரவமாத்ம ஸத்தயா ஸத்தவதாந்தோபி
கோசா ஆத்மாநம் ஆஸ்ச்சாதயநீந்தி.ணி

சூரிய கிரணத்தினால் உண்டாகிய மேகங்கள் சூரியனை மூடிக்கொண்டு காணப்படாமற் செய்வது போலும், அக்கிநினாலுண்டாகிய புகை அக்கிநியை மூடிக் கொண்டு காணப்படாமல் செய்வதுபோலும், ஆத்ம சத்தாவை அநுசரித்து விருத்தியடையும் கோசங்கட்கு ஆத்மாவை மூடும்படியான சக்தியுண்டாயிற்று. ஆனால் அன்னமயகோசத்திற்கும் பரமாத்மாவிற்கும் சேர்க்கை எப்படி உண்டாயிற்றென்றால், அந்நியோந் நியாத்தியாசத் தினால் உண்டாயிற்று. அந்நியோந்தியா தியாசமென்றால், ஒரு வஸ்துவிலுள்ள குணங்கள் மற்றொரு வஸ்துவில் தோன்றுதல். அதாவது "நான் ஜீவன்" என்பது ஜீவர்த்தி யாசம் "நான் மனுஷ்யன்" என்பது ஜாத்யாத்தியாசம்; நான் பிறந்து வளர்ந்து க்ஷீணித்து மரிக்கின்றேன் என்பது விகாராத்தியாசம். நான் பிராமணன் நான் க்ஷத்திரியன் என்பது வர்ணாத் தியாசம்; நான் ஆந்திரன் வேளாளன், மஹாராஷ்டிரன் காஸ்யப கோத்திரன், நான் பிரமசாரி, நான் சந்நியாசி, நான் ராமையன் என்பது நாமேத்தியாசம். நான் கறுத்தன், வெளுத்தவன் என்பது ரூபாத்தியாசம், இவை யாவும் அன்னமய கோசத்தின் லக்ஷணங்கள்.

இந்தத் தூலசரீரம் உற்பத்திக்கு முன்னும் மரணத்திற்குப் பின்னும் இல்லவேயில்லை. ஆகையால் உற்பத்தி விநாசாதி ஷட்பாவ விகார ஷட்கோச மயமான இந்த அன்னமயகோசம் ஆத்மாவல்ல.

"கர்மேந்த்ரியை ஸ்ஸஹ ப்ராணமய கோஸஹ ப்ராணாதி
பஞ்சகம் ப்ராணமயஹ கர்மேந்த்ரி யைர்யுதம்ணி
"ப்ராணாதி தஸவாயு வோந்நமய கோஸே
யதா வர்தந்தே ததா ப்ராணமயகோஸஹ.ணி

2. **பிராணமயகோசம் :** வாக்கு பாணி பாத பாயுரு குய்யம் என்னும் கர்மேந்திரியங்கள் ஐந்து, பிராணன் அபானன் உதானன் சமானன் வியானன் என்னும் பிராணன்கள் ஐந்து, ஆகிய இந்த பத்து வாயுக்களும் சேர்ந்தது பிராணமயகோசம் ஆகின்றது. அன்றியும்,

பிராணவாயு முதலாயுள்ள தசவித வாயுக்களும் அன்னமயகோசத்தில் எப்பொழுது சஞ்சரிக்குமோ அப்பொழுதே பிராணமயகோசத்திற்கு பரமாத்மா விற்கும் சேர்கையுண்டாகும். எப்படியெனில்,

"அஹம் க்ஷுதாயுக்த அஹம் பிபாஸாவாந்
அஹம் பலவாந் அஹம் வீர்யவாந்
அஹம் க்ரியாவாந் அஹம் வக்த"
"அஹம் தாதா முகஹ பங்குஹு விஹஸ்தஹ ஷண்டஹ இத்யாதி
"ப்ராண விகாரத்வே ஸதி வக்த்ருத்வாதி ரஹிதமாத்மா
வக்தாரமிவ தாநாதி ரஹிதமாத்மா நம் தாதாரமிவி நம்
கமநாகமந ஸூந்யமாத்மநம் கந்தாரமிவ
க்ஷுத்பிபாஸாதி ரஸிதமாத்மாநம் க்ஷுதபிபாஸாவந்த மிவ ஆவாரயதி"

நான் பசியும், தாகமும் சாமர்த்தியமும் பலமும் பராக்கிரமும் உடையவன். வாய்ச் சாலகன், கொடுக்கப் பட்டதாத, ஊமை, முடவன், குருடன், என்னும் இவை முதலானவைகள் பிராமணமய கோசத்தின் குணங்களாகும்,

"ஆத்மநஹ ஸச்சிதானந்தா மம ப்ராணஹ
அஸ்திபாதி ப்ரியமிதி ப்ராணமயகோஸே சாத்யஸ்யதிணி

20R

என்பதுபோல், பரமாத்மாவில் உண்டாயிருக்கும் ச்சிதாநந்தாதி (சத்து, சித்து, ஆனந்தம்) குணங்கள் பிராண யகோசத்தில் உண்டாயிருப்பதால் பிராணமுடையவனா ருக்கின்றான். அதனால் பிராணமய கோசத்திற்கும் மயகோசமே த்மாவென்று சொல்லலாமெனில், எந்தப் பிராணவாயு, கால் கம் முதல் சிகை (உச்சி) வரையில் வியாபித்து, கண் முதலாகிய ந்திரியங்களுக்குப் பலத்தை யுண்டாக்கி அந்த இந்திரியங்களை கட்ட நடவடிக்கை களில் கொண்டு போகிற படியாய், இதுவும் த்மாவல்ல.

ஜ்ஞாநேந்த்ரியைர் மநோயுக்தம் மனோமய இதீரிதஹ
ஜ்ஞாநேந்த்ரியாணி பஞ்சமநஸ்ச்ச ஏதஸ்ஸர்வம்
மிளிதவா மநோமயகோஸ இத்யுச்யதே
ஏதத் கோஸத்வய ஸம்யுக்த ஆத்மாந
ஆதி சதுர்தஸ கரணைஸ்ஸப் தாதி விஷயஸங்கல்பாதி
தர்மா ந்யதா கரோதி ததா மநோமயகோஸஹ.

**3. மனோமயகோசம் :** மனதுடன், செவிகள் தேக சர்மம் கண்கள் நா மூக்கு என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் சேர்ந்து சப்த முதலாகிய விஷய சங்கல்பாதி தர்மங்களைச் செய்யும் பொழுது மனோமயகோசம் என்று சொல்லப்படும்.

இந்த மனோமய கோசத்திற்கும் பரமாத்மாவிற்கும் சேர்க்கை எப்படி உண்டாயிற்றென்றால்,

"அஹம ஸ்ங்கல்பவாந் நஹம் விமல்பவாத்
ஸோகவாந் மோஹவாத். காமீலோ பீ ஸ்ரோதா
ஸ்ப்ருஷ்ட்டா த்ரஷ்ட்டாரஸயிதா க்ராதா பதிரஹ
அந்தஹ இத்யாதி மநோ விநாரத்வே ஸதி ஸம்ஸ
யாதி ரஹிதமாத்மாநம ஸம்ஸயாதி வந்தம்
ஸோக மோஹாதி ரஹித மாத்மநம்
ஸோக மோஹர திவந்தம் தர்ஸநாதி ரஹித மாத்மாநம்
தர்ஸநாதி மந்தமா வாரயதி"

நான் சங்கல்ப விகல்பமுடையவன், துக்கம் மோகம் காமம் குரோதம் துவேஷமுடையவன், கேட்கப்பட்டவன், இச்சையுடையவன், ராஜச குணமுடையவன் எதையும் கிரகிக்கப்பட்டவன், செவிடன், நாக்கு மூக்கில்லாதவன் முதலாகிய மனோமயகோச இஷ்ட்ட சங்கல்பாதி தர்மங்கள் ஆத்மாவிலும், ஆத்மாயென்னும் ஸச்சிதானந்தம் மனோமய கோசத்தில் சேர்ந்திருப்பதால் அவ்வாறு தோன்றுகின்றன. ஆதலால், மனோமய கோசத்திற்கும் ஆத்மாவிற்கும் சேர்க்கையுண்டாயிற்று.

இந்த மனோமய கோசத்தையே ஆத்மாவென்று சொல்லலாமென்றால், தேகத்தில் 'நான்' என்னும் அஹங் காரத்தையும், வீடு முதலியவைகளில் எனது என்னும் அபிமானத்தையும் உண்டாக்குகின்றது, இக்கோசம் பிராண மயகோசத்திற்கு வேறாயிருந்து காமக்குரோதாதி வியாபாரங் களையும் உண்டாக்கித் தன் நிஜ சொரூபத்தை மறந்து தேகா திகளைப் பார்த்து, நான் எனதுயென்னும் விகாரங்களை யுடையாததால் இந்த மனோமயகோசமும் ஆத்மாவல்ல.

"ஜ்ஞாநேந்த்ரியாணி பஞ்சயுத்தீஹி ஏதஸ் ஸர்வம்
மிளித்வா விஞ்ஞாநமயகோஸ இத்யுச்யதே
புத்தி ஜ்ஞாநேந்த்ரியைர் யுக்தம் விஞ்ஞாநமய கோஸகம்
ஏதத் கோஸத்ரய விஸிஷ்ட்டாந்தஹ கரணே
தக்கத விஸேஷ த்யாந மநநாதி வ்ருத்தயோ
யதோ த்பத்யந்தே ததா விஜ்ஞாநமயகோஸஹணி
"அஹம் கர்தா புத்திமாந் ஊஹா போஹ சதுரஹ
ஏகஸந்த க்ராஹி லோகாந்தர காமீ
ராகாத்வேஷீ ஸ்ரோத்ரியஹ பண்டிதஹ விரக்தஹ
பக்திமாந் உபாஸகஹ ஜ்ஞாநீத்யாதி விஞ்ஞான
மயகோஸ விகாரத்வே ஸதி அகர்த்தாரமாத்மாநம்
விஞ்ஞா தாரமிவ நிஸ்ச்சய ரஹிதமாத்மாநம்
நிஸ்ப்சயவந்தமிவ மாந்தஜாட்யாதி ரஹிதமாத்மாநம்
ஜாட்யாதிமந்த மிவா வாரயதிணி

4. **விஞ்ஞான மயகோசம்:** புத்தியும் ஞானேந்திரியங் கள் ஐந்தும் சேர்ந்து, அன்னமய பிராணமய மனோமய கோசங்களுடன் கூடின. அந்தக்கரணத்திலிருக்கும் தியான தியானசாதிகளின் விருத்தி எப்பொழுது உண்டாகின்றதோ அப்பொழுதே விஞ்ஞானமயகோசம் எனப்படும்.

இந்த விஞ்ஞான மயகோசத்திற்கும் பரமாத்மாவிற்கும் சேர்க்கை உண்டாயிற்றெனில் ;

நான் கர்த்தன், புத்திமான், சஞ்சலமுடையவன், காரியா காரியங்கள் செய்வதில் சாமர்த்தியமுடையவன், ஒரே வார்த்தையில் தெரிந்துக்கொள்ளத்தக்கவன், சுகியா யிருக்கப்பட்டவன், இச்சையில்லாதவன், பண்டிதன், பக்தி யுடையவன், எவ்வுலகத்திற்கும் போகப்பட்டவன், என்னும் இவைகள் யாவும் விஞ்ஞான மயகோச தர்மங்களேயாம்.

மனோமயகோசத்திலும் மனமிருப்பதனால் ஆத்ம தர்மங்களான ஸச்சிதானந்தம் தோன்றுகிறது. இதனால் மனோமயகோசத்திற்கும் ஆத்மாவிற்கும் சேர்க்கை யுண்டா யிற்று. இந்த விஞ்ஞான மயகோசத்தையே ஆத்மாவென்று சொல்லலாமென்றால் மனோமயகோச அந்தரங்கத்தில் சப்த வாக்கியங்களாகிய விஞ்ஞான மயகோசம் ஆத்மாவுடன் கூடியிருக்கும் புத்தியானது சுஷுப்தி காலங்களில் தனக்குக் காரணமாகிய அஞ்ஞானத்தில் அடங்கி சாக்கிரதையில் சிகை பரியந்தம் வியாபித்து அநேக அவஸ்தைகளை உண்டாக்கி திருசியமா யிருப்பதனாலும், அதற்கு விருத்திப் பிரவாகம் இடைவிடாமல் எப்பொழுதும் கூடியிருப்பதனா லும் இதுவும் ஆத்மாவல்ல.

மேற்கூறிய பிராணமய மநோமய விஜ்ஞானமய மென்னும் மூன்று கோசங்களால் சூட்சுமசரீரம் நிலைத்து நிற்கும்.

"பரியமோத ப்ரமோத வ்ருத்தி மதஜ்ஞாந
ப்ரதாந மந்தக்கரணம் ஆநந்தமயகோஸ இத்யுச்யதே
ப்ரநாதி யுக்தம் ஜீஞாத மாநஸதமய உச்யதே."

5. ஆநந்தமயகோசம் : பிரியம் மோதம் பிரமோதம் என்னும் விருத்திகளுடன் கூடிய அஞ்ஞானமே பிரதானமாயிருக்கும். அந்தக்கரணம் இந்த அந்தக்கரணமே ஆனந்தமயகோசம் எனப்படும்.

பிரியம் என்பது. இஷ்ட்டமான பதார்த்தத்தைக் கண்டபொழுது உண்டாகும் சந்தோஷமே பிரியமாம். மோகம் என்பது அப்பதார்த்தம் தன் கையிற் கிடைத்த போது உண்டாகும் சந்தோஷமே மோகமாம்.

பிரமோதம் என்பது தன் கைக்குக் கிடைத்த வஸ்துவைத் தான் அனுபவித்தவுடன் உண்டாகும் சந்தோஷமே பிரமோதமாம்..

ஏ தத்கோஸ சதுஷ்ட்டய காரணாஜ்ஞாந
ஸம்ப்ருக்தம் ஸ்வகாரண ஜஞானம் ஸ்வரூபஸூகே
வடதாராஸு வடவ்ருக்ஷ இவ யதா வர்த்ததே
ததாநந்த மயகோஸஹ

மேற்குறித்த நான்கு கோசங்களும், அஜ்ஞானத்துடன் சேர்ந்து சிறிது ஆலவிதைக்குள் பெரிய அலவிருஷம் அடங்கியிருப்பதுபோல், சொரூப சுகத்தில் தன் காரணஞானம் அடங்கி யிருக்கும் பொழுது ஆநந்தமய கோசமென்று சொல்லப்படும்.

இந்தப் பஞ்ச கோசத்திற்கும் பரமாத்மாவிற்கும் சேர்க்கை எப்படி உண்டாயிற்றெனில் :-

"அஹம் போக்தா ஸுகீ ஸந்துஷ்ட்டஹ ஸாத்விகஹ
ராஜஸ தாமஸஹ மூடஹ துஷ்ட்டஹ ஸுந்யஹ
மோஹிதஹ அவிவேகீ ப்ராந்த இத்யாநந்தமய
கோஸ விகாரத்வே ஸதி ப்ரியமோத ப்ராமோக
ரஹி தமாத்மாநம் ப்ரியமோத் ப்ரமோதம்
மந்தமிவ அபோக்தார மாத்மாநம் போக்தாரமிவ
பரிச்சிந்த ஸுகாரஹித மாத்மாநம்
பரிச்சிந்த ஸுகவந்த மிவாச்சாதயதி"

நான் போக்தன் : சந்தோஷமுடையவன் சுகமுடைய வன், ராஜஸன், சாத்விகன், தாமசன், மூடன், சக்தன், பிராநதி யுடையவன் என்னும் இவை முதலானவைகள் ஆத்மாவிலும்.

"ஆத்மநஹ ஸச்சிதாநந்தாம்ஸ்ச்ச மம ஜ்முநாமஸ்தி
பாதி ப்ரியமித் ஆநந்தமய கோஸே அயேஸ்யதி."

ஆத்மா, ஸச்சிதானந்த ஆநந்தத்துடன் இருப்பதால், அநர்த்தம் தோன்றுகின்றது. ஆகையால் ஆநந்தமய கோசத் திற்கும் பரமாத்மாவிற்கும் சேர்க்கையுண்டாயிற்று ஆனால், இந்த ஆநந்தமயகோசம் ஆத்மாவாகாத விதமெப்படி யெனில்,

"அஸ் தூல மரன்வ ஹர்ஸ்வ மதீர்க்கமஸப்த
மஸ்பர்ஸ் வரூப மவ்வயம்."

இவ்வித லக்ஷணங்களுடன் கூடினதாதலால், அஃதும் ஆத்மா ஆகமாட்டா. ஆனால் பரமாத்மா பஞ்சகோசங் களுக்கு வேறாயிருப்பதனால் அஃது எப்படி சித்திக்கும். கத்தி உறை முதலானவைகள் ஒன்றாய்த் தோன்றினாலும் விசாரிக்குமளவில் கத்தியும் உறையும் வேறாவதுபோல், வேதாந்த சாஸ்திர விசாரணையினால் பரமாத்மா; காலத்திரயத்திலும் பஞ்ச கோசங்களினின்றும் வேறுபட்டுத் தோன்றுவதால், பஞ்சகோச வியதிரிக்தம் லபிக்கும். இதற்குத் திருஷ்ட்டாந்தம்.

மமாயம் மஹ ம்மசாயம் வத்ஸஹ
மமசாயம் குமாரஹ மமாயம் குமாரீ
மமாயம் ஸ்திரீ ஏவமாதி பதாத்தவாந் புருஷஹ
தவா மம அந்நமயகோஸஹ மம ப்ராண

மயகோஸஹ மம ம்நோ மயகோஸஹ
மம விஜ்ஞாநாமயகோஸஹமமநந் தமயகோஸஹ
ஏவம் பஞ்சகோர்ஸவாஸ ஆத்மா பஞ்சகோஸாதிர்
நவபவதிதேபயோ விலக்ஷணஹ.

என்பசு, என்கன்று, என்புத்திரன், என்புத்திரி, என் மனைவி என்று சொல்லும்பொழுது, பசு, கன்று, புத்திரன், புத்திரி, மனைவி முதலானவைகளுக்கெல்லாம் தான் வேறாயிருந்து எப்படிச் சொல்லுகிறோனோ அதுபோல் என்சரீரம், என் பிராணன், என்மனது, என் புத்தி, என் அஜ்ஞானம் என்று தன்னைச் சம்பந்தித்துக்கொண்டு பேசும் பஞ்ச கோசங்களைவிட ஆத்மா சொரூபனாகியதான் வேறாயிருக்கின்றான். அன்றியும் அவன்கன்று இளைத்து விட்டது என்றாகிலும் அவன் மனைவி நற்குணமுடையவளென்றாகிலும், மூர்க்க குணமுடையவளென்றாகிலும் சொல்லும் பொழுது அதனதன் விகார குணங்களெல்லாம் அவனைப் பற்றாமலிருப்பதுபோல், அன்னமயகோச சம்பந்தமான ஜாதி குலகோத்திர நாமாதி விகாரங்களும் பிரணமயகோச சம்பந்தமான பசி தாகம் முதலாகிய விகாரங்களும் மனோமயகோச சம்பந்தமாகிய சங்கல்ப விகல்பாதி விகாரங்களும் விஞ்ஞான மயகோச சம்பந்தமாய்ச் செய்யப்படும் விகாரங்களும், சாக்ஷியாயும் ஆத்ம சொரூபனாயும் இருக்கும் தன்னைப்பற்றமாட்டா :ஆனால் மக்கள், மாடு, மனைவி முதலானவைகள் தான் கூடாமல் வேறு வஸ்த்துகளாயிருக்கின்றன. ஆதலால்தான் வேறு தன் பசுக்கள் வேறு என்று அறியலாம். ஆத்மா பஞ்ச கோசங்களுடன் கூடவே சேர்ந்திருக்கின்றன. ஆதலால் இது பஞ்சகோசங்களுக்கு வேறாயிருக்கின்றதென்று எவ்விதமாய் அறியலாமென்றால்

கரு "பாஹ்ய த்ருஷ்ட்டிர் நேத்திரம் அந்தர் த்ருஷ்ட்டிர் புத்தி
பாஹ்ய த்ருஷ்டயாஜ்ஞா த்மசக்யா அபு பதார்த்தாஹ
அந்த்ர த்ருஷ்டயா ஜ்ஞாதும் ஸக்யந்தே.ணி

என்னும் சுலோகரீதியாய் பாஹ்ய (வெளி) திருஷ்ட்டி நேத்திரங்களாவும் அந்தர் (உள்) திருஷ்ட்டி புத்தியாகவும் இருக்கின்றன. நேத்திரங்களால் அறிவதற்குக் கூடாத விஷயங்களை அந்தர் (உள்) திருஷ்ட்டியாகிய புத்தியினால் அறியலாம். அஃதெப்படியென்றால், ஜலம், உஷ்ணம் இவ்விரண்டும் கலந்திருந்தபோதிலும் கைகளால் தொட்டு உஷ்ணம் வேறு, ஜலம் வேறென்று புத்தியினால் அறிவது போலும். சுவரின்மீது எழுதப்பட்ட சித்திரங்கள் சுவருடன் கலந்து ஒன்றாய்த் தோன்றிகொண்டிருந்த போதிலும் சுவர் வேறு சித்திரம் வேறென்று புத்தியினால் ஊஹித்து அறிவது போலும், ஆத்மாவேறு பஞ்சகோசங்கள் வேறென்று புத்தியினால் அறியலாம்.

"ஜலதஸூர்ய ப்ரதிபிம்மம் ஜலவருத்தௌ வாத்ததே
ஜல ஹ்ராஸே ஹர்ஸ்தி ஜலசலநேசலதி
ஜலபேதே பித்யதி இத்யேவம் ஜலதர்மா நுவிதா
இவபவதி நது பரமார்த்தஹ ஸூர்யஸ்ய தத்வ
மஸ்தி ஏவம் பரமப்ர்த்ததோ லிக்ருதமேகரூப
மபிஸ்த் ப்ரஹ்ம தேஹா த்யுபாத்யந்தர பாவாத்
பஜத ஏவோபாதிமாந் வ்ருத்தி ஹ்ராஸாதீநி."

ஜலத்தில் பிரதிபலிக்கும் சூரியபிம்பம். ஜலம் விருத்தி அடைய அடைய சூர்யபிம்பமும் விருத்தி அடைகின்றது. ஜலம் குறையக் குறைய சூர்யபிம்பமும் குறைந்து விடுகின்றது: ஜலம் அசைந்தால் சூரியனும் ஜலத்தில் அசைவதாய்க் காணப்படும். ஜலம் பின்னமானால் சூரிய பிம்பமும் பின்னமாகின்றது. இப்படி ஜலதர்மத்தை அனுசரித்துத் தோன்றுகின்றதே யொழிய

சூரியனை எவ்வளவேனும் பற்றாது. அதுபோல் தாஷ்ட்டாந்தத்தில் அன்னமயகோச இஷ்ட்டமான ஜீவாத்மா மனுஷ்யத்வாதி தர்மங்களும், பிராண மயகோச இஷ்ட்டமான க்ஷுத்பி பாஸர்தி (பசிமுதலாகிய) குணங்களும் மனோமயகோச இஷ்ட்ட மான சங்கல்பாதி தர்மங்களும் விஞ்ஞானமயகோச இஷ்ட்டமான கர்த்துருத்துவாதி குணங்களும் அநந்தவய கோச இஷ்ட்டமான போக்த் துருத்வாதி விகாரங்களும் யதாத்தமென்று அத்தரத்தில் உபாதிகள் இருப்பதனால் இஷ்ட்டமான போக்த்துருத்வாதி விகாரங்கள் தோன்றுமே யொழிய தார்த்தமாயில்லாத சத்ரூபனும் கஞ்சகோச வியதிரிந்தனும் சாக்ஷியுமான தன்னைக் காலத்திரயத் தினாலும் பற்றாதென்றறிக. செத்தையை நீக்கித் தர்ப்பை யைக் கைக்கொள்ளுமாறு பஞ்சகோச பஞ்சசீககரணத்திற்கு வேறாகவும் ஆத்ம சொரூபமாகவும் இருக்கும் வெரும் பாழான வெளியை விசாரணையினால் தெரிந்து கொள்ள வேண்டும் இதற்கு, கைவல்யம் பிரமாணம்;

பஞ்சகோச மும்விட்டப்பசற் பார்க்கின்றபொழுது பாழே
விஞ்சிய ததுவல் லாமல் வேறொன்றுந் தெரியக்காணேன்
அஞ்சன விருள்ள யோநா னகமென வநுபுவிப்பேன்
வ்ஞ்சமில் குருவே யென்ற மகன்மதி தெளியச் செல்வார்.
வஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழி தப்பாமல்
பஞ்சகோ சமுங்கடந்து பாழையுந்தள்ளி யுள்ளில்
கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடஸ்தன் பிரம்மென்னும்
நெஞ்சமு நழுவி டொன்றாய் நின்றபூ ரணத்தைக்
கண்டான்.

## 39. பஞ்சீகரணம்

பஞ்சமஹா பூதங்களில் ஒவ்வொரு பூதத்தையும் மற்ற பூதங்களுடன் சேர்த்தபொழுது பஞ்சீகரண மாயிற்று எப்படியெனில்,

"ஐம்பூதமும் பத்தாக்கி யனவபாதி நன்னான்காக்கி
நைந்துதன் பாதிவிட்டு நலோடு நாலுங்கூட்ட
வந்தன தூலபூத மகாபூத மிவற்றின்று
தந்னே தூலதேக தனுவண்ட புவனபோகம்" (கைவல்யம்)

ஆகாசத்தை இரண்டு பாகங்களாய்ப் பாகித்து அதில் ஒரு பாகம் சமஷ்ட்டிபாக்மாயும் மற்றொருபாகம் வியஷ்ட்டி பாகமாயும் செய்யவேண்டும். இவ்விதமாய்ப் பிரதி பூதத்தை யும் தனித்தனியே வெவ்வேறாகப்பாகிக்க வேண்டும். ஆகாசத்தினுடைய சமஷ்ட்டிபாகம் ஞாதாவாயிற்று. வியஷ்ட்டி பாகத்தை நான்கு பாகங்களாய்ச் செய்து ஒவ்வொரு பாகத்தையும் தனித்தனி வாயுவுடன் சேர்த்த பொழுது மனதும். அக்னியுடன் சேர்த்தபொழுது பக்தியும், ஜலத்துடன் சேர்த்த பொழுது சித்தமும், பூமியுடன் சேர்த்த பொழுது அஹங்காரமும் பிறந்தன.

வாயுவை மேற்சொல்லியதுபோல் இரண்டு பாகங்களாக செய்து அதில் சமஷ்ட்டி பாகம் வியானவாயு வாகவும் மற்ற வியஷ்ட்டி பாகத்தை நான்கு பாகங்களாய்ச் செய்து ஒரு பாகத்தைப் பூமியுடன் சேர்த்தபொழுது பிராணனும், ஜலத்துடன் சேர்த்தபொழுது அபாத்னும் அக்னியுடன் சேர்த்தபொழுது சமானனும் ஆகாயத்துடன் சேர்த்தபொழுது உதானனும் பிறந்தன.

தேயுவை முன்போல இரண்டு பாகங்களாய்ச் செய்து அதில் ஸமஷ்ட்டி பாகத்தைச் சக்ஷுவாகவும், மற்ற வியஷ்ட்டி பாகமாகிய நான்கையும் வாயுடன் சேர்த்த பொழுது துவக்கும்

(தேகசர்மமும்) ஆகாசத்துடன் சேர்த்தபொழுது சுரோத்திரமும் (செவியும்), ஜலத்துடன் சேர்த்தபொழுது சிங்குவையும் (நாக்கும்) பிருதிவி (பூமி) யுடன் சேர்த்தபொழுது கிராணமும் (மூக்கும்) பிறந்தன.

அப்புவை இரண்டு பாகங்களாய்ச் செய்து, அதில் சமஷ்ட்டிபாகம் ரசேந்திரியாகவும், மற்ற வியஷ்ட்டி பாகமாகிய நான்கையும் பிருதிவியுடன் சேர்த்தபொழுது கந்தமும் தேயுவுடன் சேர்த்தபொழுது ரூபமும், வாயுவுடன் சேர்த்தபொழுது பரிசமும், ஆகாசத்துடன் சேர்த்தபொழுது சப்தமும் பிறந்தன.

பிருதிவி (பூமி)யை இரண்டு பாகங்களாய்ச் செய்து, அதில் சமஷ்ட்டிபாகம் பாயுவிந்திரியமாகவும் மற்ற வியஷ்ட்டிபாகம் நான்கையும் அப்புவுடன் சேர்த்த பொழுது மர்மஸ்தானமும், தேயுவுடன் சேர்த்தபொழுது வாக்கும், வாயுவுடன் சேர்த்தபொழுது கைகளும், ஆகாசத்துடன் சேர்த்தபொழுது பாதங்களும் இவ்வாறாகவே இருபத் தைந்து உண்டாயின. இவைகள் யாவும் ஆத்மாவை அறியமாட்டா. ஆகையால் இவைகள் யாவும் ஜடமென்று சொல்லப்படும். மேலும் இந்தப் பூததேகம் மரித்தவுடனே, இத்தேகத்திலிருக்கும் பஞ்ச பூதங்களும் அது தனித்தனியாய் அந்தந்தப் பூதங்களில் போய்ச் சேர்ந்துவிடும். மறுபடியும் ஜீவன், வேறு சரீரத்தை அடையும்பொழுது அவனவன் செய்த கர்மானுசாரமாய் எந்தத்தாயின் கர்ப்பத்தில் போய் ஜனிக்க வேண்டுமோ அந்தத் தாயின் கர்ப்பத்தில், பஞ்ச பூதங்க (பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகாசங்க) ளால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் தூலசரீரத்தில் தாய் உள்ளுக்கிழுக் கும் மூச்சு வழியாய் ஜீவன் பிரவேசித்து, சிசுவின் கர்ப்பத் திலுள்ள இதய கமலத்தில் இருக்கும் ஜலத்தில் போய்ச் சேர்ந்து, மறுபடியும் சிசுவாய்ப் பிறக்கின்றது; ஆத்மா, ஞானசொரூபனாகையால் சித்தென்று சொல்லப்படும்.

# 40. தூலதேக பஞ்சீகரண அந்தக்கரணங்கள்

இச்சரீரம் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமென்னும் பஞ்பூதங்களால் உண்டாக்கப்பட்டது. அதாவது,

"அஸ்திசர்ம நாடீரோம மாமஸஸ்ச்சேதி ப்ருதிவ்யாம் ஸாஹ
மூத்ர ஸ்லேஷ்மரக்த ஸுக்லஸ்வேதா அபம்ஸாஹ
க்ஷுத் த்ருஷ்ட்ணாலஸ்ய மோஹமைதுநா நக்நேஹ
ப்ரசாரண விலேகந ஸ்தூலாக்ஷயுந் மேஷநிமேஷா திவாயோஹ
காமக்குரோத லோபமோஹ பயாகஸஸ்ய" (சாரீரகோபநிஷத்)

அஸ்திகள் தோல், நரம்பு, ரோமம், மாமிஸம் இவ்வைந்தும் பிருதிவியினுடைய அம்சம். மூத்திரம் கபம் ரத்தம் சுக்கிலம் வியர்வை இவ்வைந்தும் ஜலாம்சம். பசி, ஆசை, நித்திரை அல்லது ஆலஸ்யம் மோகம் மைதுநம் (சம்போகம்) இவ்வைந்தும் அக்கிநியாம்சம். நடப்பது, அசைவது, எழுதுவது, கண்ணிமைக் கொட்டுவது, மூடுவது, திறப்பது இவைகள் வாயுவாம்சம். காமம், குரோதம், லோபம், மோஹம், பயம் இவ்வைந்தும் ஆகாசாம்சமாகும்.

சுரு || "மநோ புத்தி ரஹங்காரஸ்சித்த மித்யந்தக்கரண
சதுஷ்ட்டயம் தோஷாம் க்ரமேண ஸங்கல்ப விகல்பாத் யவ
ஸாயாபி மாநவதாரணா ஸவரூபாஸ்சைதே விஷயாஹ
மநஸ்தாநம் களாந்தம் புத்தேர்வதந அஹங்காரஸ்ய
ஹருதயம் சித்தஸ்ய நாபிரிதி" (சாரீரகோபநிஷத்)

ஆனதனு வதனிலுறு மநிலைனையு மியக்கி
யாங்கார நீங்காத வகந்தைக்கு வித்தா
யானலது பிறரொருவ ரெனையொப்பார் புவியி
லில்லையெனு மியல்பினதா யிந்திரியம் புலன்கள்
தானுகரு மளவிலதின் முந்தியுறு மிச்சை
தானுவாய்ச் சங்கற்ப சதாகதியுந் தந்து
மானதமானது நிற்குஞ் சிந்தைநினை வையம்
வந்துதரு மனமொழிய வகுப்பொணாதே. (சிவப்பிரகாசம்)

மனம், புத்தி, சித்த, அஹங்காரமென்னும் இந்நான்கும் அந்தக் கரண சதுஷ்டயம் : இதுவே, அந்தநிந்திரிய (உள் இந்திரிய) ங்களென்று சொல்லப்படும்.

இம்மனம் அதிவேகமுள்ளது, அன்றியும் கண்கள், மூக்கு, வாய், செவிகள், சரீரத்தின் மேலிருக்கும் தோல், இந்த ஐந்து இந்திரியங்களுக்கும், மனதானது விஷயங்களில் விசேஷ ஊக்கத்தைக் கொடுக்கத்தக்க தாயிருக்கின்றது. எப்படியென்றால் கண்கள் மூலமாய் அழகையும், மூக்கின் மூலமாய் வாசனையும், வாயின் மூலமாய் ருசியையும், செவிகளின் மூலமாய் சப்தங்களையும், சரீரத்தின் மேலிருக்கு தோல் மூலமாய் சீதோஷ்ணங்களையும் மனம் கிரகிக்கும். இந்த இந்திரியங் களுடன் மனம் சேராவிட்டால், எதையும் அறிவதற்கும், இந்திரியங்களுக்குச் சக்தியிராது. ஆதலால், விஷயங்களின் இச்சையை உண்டாக்குவதற்கு மனதே காரணமாயிருக்கின்றன. விஷயங்களும் இந்திரியங்களும் சேர்த்து, அதில் மனம் சேராவிட்டால், வெளி இந்திரியங் களுக்கு விஷயப் பிரவிருத்தி இல்லையாதலால் இந்திரியங்களுக்கு விஷய ஊக்கத்தைக் கொடுப்பதற்கு மனதே காரணமாயிருக்கின்றது,

**புத்தி :** இது நல்லது, இது கெட்டதென்று அறிந்து நிச்சயிக்கும்.

**சித்தம் :** மனதின் சொரூபமே சித்திமாம்: சித்தமென்று ஒரு தனித்த பொருளில்லை. இச்சித்தமென்பது மனதின் தொழிலாகிய நினைப்பேயன்றி இச்சித்தம் என்பது ஒரு தனித்த தத்துவமல்ல.

**அஹங்காரம் :** இதன் குணம் யாதெனில், நானே கர்த்தன், என்னைவிட அதிகப்பட்டவன் எவனுமில்லை யென்று அபிமானித்து, காரியா காரியங்களை விசாரிக்காமல் தன்னிஷ்டம்போல் சர்வ காரியங்களையும் செய்து கொண்டிருக்கும். இந்த மனோ புத்தி சித்த அஹங்காரங்கள் ஒன்றாய்க் கூடினதே அந்தக்கரணமென்று சொல்லப்படும். இதற்குச் சுருதிப் பிரமாணம் என்ன வென்றால்,

சுரு || "ஸாத்விக ராஜஸ தாமஸ லக்ஷணாதி த்ரயோ குணஹ
அஹிம்ஸா ஸ்த்யமஸ்தேய ப்ரஹ்மசர்யா பரிக்ரஹ ஏதே
அக்ரோதோ குருஸ்ஒஷ்ருஷா ஸௌசம் ஸந்தோஷ
ஆர்ஜவம் அமாநித்வ மதபித்வம் மாஸ்திகத்வமஹிம்ஸ் ரதா
ஸர்வே குணாஹ ஜ்ஞேயாஸ் ஸாத்விகஸ்ய விசேஷதஹ"

"அஹம் கந்தாஸ்யஹம் போக்தாஸ்ம்யஹம்
வந்தாபிமாஜ வாந் ஏதே குணா ராஜஸஸ்ய ப்ரோச்ச யந்தே
ப்ரஹ்மவித்தமைஹி"

"நித்ரலஸ்யௌ மோஹராகௌ மைதுநம் சௌர்ய மேவச
ஏதே ஸ்ணாகுதாமஸஸ்ய ப்ரோச்யந்தேபரஹ்மவாதி பிஹி"

*************

## 41. சாத்விக ராஜஸ தாமஸமெனக் குணங்கள்

ஊர்த்தே ஸாத்விகோ மத்யே ராஜஸோ
அதஸ்தாத் தாமஸ இதி ஸத்யஞாநம் ஸாத்திகம்
தர்மஜ்ஞாநம் ராஜஸம திமிராந்தம் தாமஸமிது
(சரீரகோபநிஷத்)

ஸ்ரீ பகவத்கீதை அத்யாயம்-14 சுலோகம்-8.

ஸத்வம் ரஜஸ் தம இதி குணாஹ ப்ரக்குருதி ஸம்பவாஹ
நிபத்சந்தி மஹாபாஹோ தேஹே தேஹி நமவ்யம்

ஹே ! நீண்ட கைகளையுடைய ஒ அர்ஜுநா ! மாயையினாலுண்டாகிய ஸாத்விகம், ராஜஸம் தாமஸம் என்கின்ற மூன்று குணங்களும் தேகத்தை மூடிக்கொண்டு எந்த விகாரங்களும் இல்லாதவனாயும் நாசரஹிதனாயும் இருக்கும் ஆத்மாவை மறைக்கின்றன. இம்முக்குணங்களும் எப்படிப்பட்டவை யென்றால்,

ஸத்துவம் : பொய் சொல்லாமலிருப்பது, ஜீவ ஹிம்சை செய்யாமலிருப்பது, சத்தியம் தவராமலிருப்பது. களவு செய்யாமலிருப்பது, ஏகபத்தினி விரதத்துடன் இருப்பது கோபமில்லாமல் இருப்பது குரு சிசுருஷை சௌசம், சந்தோஷம், ஆசாரம், டம்பமில்லாமலிருப்பது ஜீவகாருண்ணியமாயிருப்பது ஆகிய இவை முதலான குணங்களுடையவன் ஸாத்விகன்,

ராஜஸம் : நான் கர்த்தன் ; நான் போக்தன் நான் தாதா என்று அஹகங்காரன் கொண்டிருப்பவன் ராஜஸன்.

தாமஸம் : நித்திரை ஆலஸ்யம், மோஹம், ராகம், மைதுநம் (சம்போகம்) திருட்டுத்தனம் மோஸம், கோபம் ஆகிய இவை முதலான குணங்களுடையவன் தாமஸன்.

உத்தமம் - சாத்விக குணம்.

மத்திமம் - ராஜஸ குணம்.

அதமம் - தாமஸ குணம்.

ஸாத்விககுணம் : பரிசுத்தகுணமுண்டாய் நிவர்த்தி மார்க்கமும் அஞ்சனம் (சலிக்காத) பகவத் பக்தியும் குருபக்தியும் சாது ஜன விஸ்வாஸமும் அபேத (பேதமில்லாத) பிரம்மஞானமும் உண்டாகும்.

ராஜஸகுணம்: பிரவர்த்தி மார்க்கமும் அதாவது காம்ய கர்மாநிஷ்ட்டானமும் அதன் சம்பந்தமான தேவதா உபாசனைகள் முதலானவைகளை உண்டாகும்.

தாமஸகுணம் : ஈஸ்வரன் இல்லை என்னும் நாஸ்திக புத்தியும், துர் அஹங்காரமும் அவிவேக அந்தகாரமும் (இருளும்) உண்டாக்குவதேயாம்.

## 42. கர்ப்பத்தில் பிண்டம் தரிப்பது

சுரு ॥ "ஷட்விதோ ரஸோ ரஸாச் சோனிதம்
ஸோணிதாந் மாம்ஸம் மாமஸாந் மேதோ
மேதஸஹ ஸ்நாயஹ ஸ்நாயுப்யோ ஸ்தீநி
அஸ்திப்யோ மஜ்ஜா மஜ்ஜாதஹ ஸுக்லம்
ஸுக்லஸ்ஸோணித ஸம்யாகா தாவர்ததே கர்ப்பஹ"
(கர்போபநிஷத்)

ஜீவராசிகளின் சரீரத்தில் ஆறுவித ரசங்களுண்டு. அதாவது புசிக்கும் ஆஹாரத்திலிருந்து ரசம் உண்டா கின்றது. அந்த ரசம் ரத்த ரூபத்தை அடைகின்றது. அந்த ரத்தம் மாமிசத்திலும் மாமிசத்திலிருந்து கொழுப்பிலும் கொழுப்பிலிருந்து அஸ்தி (எலும்பு) களிலும், அஸ்திகளி லிருந்து மூளையிலும் பிரவேசித்து, மூளையிலிருந்து சுக்கிலமாய் மாறுகின்றது. உழக்கு ரத்தம் சுண்டினால் ஒரு துளி சுக்கிலம் உண்டாகின்றது. இப்படிப்பட்ட சுக்கிலம் ஒரு சம்போகத்திற்கு முப்பது துளிக்குமேல் செலவழிந்து விடுகின்றன. அதனால் ஏழரைப்படி ரத்தம் நஷ்டமாய் விடுகின்றது.

மாதருது காலங்களில் அதாவது, விடாயன நான்காம் நாள் முதல் பதினாறு தினங்களில் இரண்டு தினங்களுக்குமேல் சம்போகம் செய்யலாகாது.

சம்போக காலத்தில் மனோ வியாகூலமாய் இருக்கலாகாது. அப்படி யிருப்பாராகில் அவர்களுக்கு எப்படிப்பட்ட குழந்தை ஜனிக்கு மென்றால்,

சுரு ॥ வ்ருத்யனுகுணா ஹி ப்ரவ்ருத்திஹி
ததோஹி பித்ர னுகுணா ப்ரஜாஹ
வ்யாகுலித மநோப்யா மந்தாஹ கஞ்ஜா
குப்ஜா வாமநா வ்யங்க்ய ஜாயந்தே (கர்போபநிஷத்)

காரணத்திற்குத் தகுந்த காரியம் உண்டாகின்றது. ஆதலால் சித்த விருத்திக்குத் தகுந்த குழந்தைகள் ஜன்மிக்கின்றன. அதாவது ஸ்திரீ புருஷர்கள் கூடும்பொழுது மனம் சந்தோஷமில்லாமல் வியாகூலமாயிருந்தால் பிறக்கப்போகும் குழந்தைகளின் கர்மத்திற்குத் தக்கபடி கூன் குருடு நொண்டி கோணல் முதலாகிய அங்கயீனமுடைய குழந்தைகள் ஜன்மிக்கும்.

சம்போக காலத்தில் மனோவியா கூலமில்லாம லிருப்பதற்காக சிலர் தம் படுக்கை அறை முழுமையும் மிக சௌந்தரியமுள்ள படங்களை அமைத்து வைப்பது வழக்கம். ஏனென்றால், அப்படங்களின் உருவங்களை சதா பார்த்து கொண்டிருப்பதனால் அவ்வுருவங்களில் வைத்த மனோம்மியமானது புணர்ச்சி காலத்தில் அக்கருவிற்கு சௌந்தரியத்தை உண்டாக்கு மென்பது யாவரும் அறிந்த விஷயமே,

மேலும் ஸ்திரீகள் பிரதி மாதமும் மாதவிடாய் வந்து ஸ்நானம் செய்யும் பொழுதெல்லாம் எவர்களின் முகத்தையும் பாராமல் சூரியனைப் பார்க்கவேண்டுமென்று நமது முன்னோர்கள் நூல்களில் கூறியிருக்கின்றார்கள். அதற்குக் காரணம் யாதெனில் மாதவிடாயான தீட்டுகாலத்தில் கருதரிக்கும் கருப்பை மலர்ந்திருக்குமென்றும் ஸ்நானம் செய்த ஐந்தாம்நாள் முதல் பதினாறு தினங்கள் வரையில் புணரலாமென்றும் விதித்திருப்பதால் ஸ்நான காலத்தில் எந்த உருவம் எதிர்ப்படுகின்றதோ, அந்த உருவமே கருவில் அமையு மென்னுங் கருத்தால் ஸ்நானம் செய்ததும் சூரியனைப் பார்க்க வேண்டுமென்று கூறியிருக்கின்றார்கள்.

மாதவிடாயான, ஐந்து ஏழு ஒன்பது பதினொன்று பதின்மூன்று பதினைந்து இவ்வொற்றைபட்ட நாட்களில் பிண்டம் தரித்தால் பெண்ணாகவும் நாலு ஆறு எட்டு பத்து பன்னி ரண்டு பதினான்கு பதினாறு இவ்விரட்டித்த நாட்களில்

பிண்டம் தரித்தால் ஆணாகவும் பிறக்குமென்று சுருதி பிரமானமுண்டு. அன்றியும் பிண்டம் தரிக்கவேண்டுமானால் மாதவிடாயான பதினாறு தினத்திற்குள் தரிக்குமேயொழிய அதற்கு மேற்பட்டால் பிண்டம் தரிக்கமாட்டா.

ஏனென்றால் கர்ப்பகமலம் மாதவிடாயான பதினாறு தினங்கள் வரையில் மாத்திரம் திறந்து கொண்டிருக்கும். பதினேழாம் நாட்காலை கர்ப்பகமலத்தில் வாய் மூடிக்கொள்ளும் மறுபடியும் அந்த கர்ப்ப கமலம் எப்பொழுது திறக்கு மென்றால், மறுபடியும் மாதவிடாயாகும். காலத்தில் திறக்கும். இவ்வாறாகவே பிரதி மாதமும் மாதவிடாயாகும் காலத்தில் கர்ப்பகமலம் திறக்கும் பிரதி மாதமும் மாதவிடாய் ஆகும்பொழுது கர்ப்ப கமலத்தின் வாய்த்திறக்கப்பட்டு மறுபடியும் பதினேழ ; நாட் காலை மூடப்படும் கர்ப்பகமலத்தின் வாய் மூடப்பட்ட பிறகு கர்ப்பம் தரிக்கமாட்டாது. கர்ப்பம் தரிக்க வேண்டுமானால், மாதவிடாயான பதினாறு தினத்திற்குள் மாத்திரமே தரிக்கு மேயொழிய பதினாறு தினங்களுக்கு மேற்பட்டால் கர்ப்பம் தரிக்கமாட்டாது. இதை நீங்கள் அனுபவத்தில் பாருங்கள்.

புணர்ச்சி காலத்தில் தாய் தந்தையர்களுக்கு உண்டாகும் குணபேதங்களைப் போலவும். எண்ணங்களைப் போலவும் பிள்ளைகளின் கர்மத்திற்குத் தக்கபடி குண ரூபா ரூபங்கள் பேதிக்கு மென்பதற்குத் திருஷ்டாந்தமாக உலகத்தாருடைய சில வழக்கங்களைக் காட்டி நிரூபிக்கின்றோம். அவையாவன :

பெண் குதிரையின் எதிரில் ஒரு விரையடித்த ஆண் குதிரையை நிறுத்தியபிறகு அந்த பெண் குதிரை ஆண் குதிரையை திருஷ்டித்துப் பார்த்து மோஹித்து கனைத்த வுடனே பெண் குதிரையின் கண்களைக் கட்டிப் பிறகு விரையடித்த குதிரையை மறைத்து வேறொரு குதிரையைப் புணரவிட்டுப் புணர்ந்த குதிரையை மறைத்து, முன் விரையடித்த குதிரையைப் பெண் குதிரை முன்னிறுத்தி அதன்

கண்களையவிழ்த்த மாத்திரம் எதிரில் நின்றிருக்கும் விரையடித்தக் குதிரையைப் பெண் குதிரைப்பார்த்து, அதுவே தன்னைப் புனர்ந்ததாக நினைத்து மறுபடியும் கனைத்தவுடன், அதை யொத்த குட்டிக் கருவில் தரித்து அக்குதிரையைப் போன்ற வலிவுடைய குட்டியைப் போடும்.

ஆதலால் இதை வாசிக்கும் அன்பர்கள் யாவரும் தாம் சயனிக்கும் அறையில் சுத்தமான படங்களை சம்போக காலத்தில் ஸ்திரீகளின் கால் மாட்டில், அவர்களின் திருஷ்டிக்குக் காணப்படும் இடத்தில் வைத்து மிகவும் சந்தோ[illegible]மாயிருந்து, ஸ்திரீகள் அப்படங்களைப் பார்த்துக் கொண்டே இருக்கும்பொழுது சம்போகம் செய்வார்க ளாகில், அவர்களுக்கு அழகும் சாத்வீக குணமும் ஈஸ்[illegible]ர பக்தியு முடைய குழந்தை பிறக்கும்.

இதற்கோர் திருஷ்டாந்தம் சொல்லுகின்றோம் கேளுங்கள். இன்ஜினியராயிருந்த ஓர் ஆங்கிலேயதுரை தன் நாயகியுடன் கூடும்பொழுது கறுத்தநிறம் சுருட்டை மயிருடைய ஆப்ரிக்கா மனிதன் படம் ஒன்று அவள் கால் மாட்டிற்கு நேராய்ச் சுவற்றில் மாட்டியிருந்தது. புணர்ச்சி சமயத்தில் அவள் திருஷ்ட்டி அப்படத்தில் நின்றிருந்த படியால் அக்காலத்தில் பிண்டம் தரித்துக் குழந்தையைப் பெற்றாள். அக்குழந்தை ஆப்ரிக்கா குழந்தை ரூபம்போல் இருந்தபடியால், அவள் நாயகன் அக்குழந்தையைப் பார்த்து தன்நாயகி பரபுருஷனைச் சேர்ந்து இக்குழந்தையைப் பெற்றாளென்று எண்ணி, மிகவும் கோபமுண்டாய் யாதொன்றும் செய்யத் தோன்றாமல் பிறகு, தனக்கு மிகவும் சினேகிதனாயிருந்த ஒரு பெரிய டாக்டரிடம் சென்று இந்த ரகஸ்யம் அவனிடம் வெளியிட்டான்.

அந்த டாக்டர் மிகவும் புத்திசாலியாதலால் தனக்கும் யாதொன்றும் தோன்றாமல் நெடுநேரம் ஆலோசித்துப் பிறகு, உன்படுக்கை அறையைப் பார்ப்போம் வாவென்று இன்ஜீனீயர்

வீட்டிற்குச் சென்று, அவன் படுக்கை அறையைப்பார்த்து நீங்கள் எந்த முகமாய்ப் படுப்பதென்று டாக்டர், இன்ஜீனியரைக் கேட்டார். அப்பொழுது தாம் கட்டிலில் படுக்கும் தலைமாட்டு கால்மாட்டைக் காட்டினான், உடனே டாக்டர் கால்மாட்டுச் சுவற்றைப் பார்த்தான். அப்பொழுது அச் சுவற்றில் கறுத்தநிறமும் சுருட்டை மயிருமுள்ள படம் ஒன்று கால் மாட்டில் இருந்ததைப் பார்த்து, அப் படத்தை டாக்டர் தன் கையிலெடுத்து மேற்படி துரைக்கு காட்டி குழந்தையைக் கொண்டுவரச் சொல்லிப் பார்த்த பொழுது, படத்தின் ரூபமும் அக்குழந்தையின் ரூபமும் ஒன்றாயிருந்தபடியால், நீங்கள் சம்போகம் செய்யும் பொழுது உன் மனைவி அப்படத்தைப் பார்த்திருந்தபடியால் அக்காலத்தில் பிண்டம் தரித்து அதனால் குழந்தை அந்த ரூபமாய்ப் பிறந்தது. உன் மனைவியின்மீது யாதொரு தோஷமும் இல்லையென்று அத்துரைக்குத் தேறுதலைச் சொல்லிச் சென்றான்.

ஆதலால் சம்போகம் செய்யும் அறையில் நல்ல அழகுடைய படங்களை அமைத்து வைக்கவேண்டும். ஆண்குழந்தை வேண்டு மென்றால் ஆண் குழந்தையும், பெண்குழந்தையும் பெற வேண்டிய ரஹஸ்யம் முன்சொன்னோம். அதுபோல்

சுரு || "ஸப்தார த்ரோஷிதம் புத்பதம்பவதி
அர்த்தமாஸா ப்யநதரேண பிண்டோபவதி
மாஸா ப்யந்தரேண கடிநோபவதி
மாஸத்வயேந ஸிரக் குருதே
மாஸத்ரயேண பாத ப்ரதேஸோபவதி
அத சதுர்த்தேமாஸே ஜடர கடிநப்ரதேயோபவதி
பஞ்சமெமாஸே ப்ரஷ்டவம்ஸோமவதி
ஷஷ்ட்டேமாஸே நாஸாக்ஷி ஸரோத்ராணிபவந்தி
ஸப்தமேமாஸே ஜீவ ஸம்யுக்தோபவதி

அஷ்ட்டமேமாஸே ஸர்வஸம்பூர்ணோபவதி
நவமேமாஸே ஸர்வலக்ஷண ஞாநகரணஸம்பூர்ணோ பவதி
உபயம் க்ளீபம்பிதரு ரோதோதி ரேகாத் புருஷோபவதி
மாத்ரு ரேதோதி ரோகாத் த்ரியோபவந்தி
ஸ்த்திரீயோஹி காமிந்ய ஸ்தாஸா சுகாதிகயாத்தா
ஏவபஹுளாஜாயந்த உபாயோ பீஜதௌல்யே நபும்ஸ்கோபவதி"
(காப்போபநிஷத்)

"ஏதஸ்மாத்க்மி வேந்த்ரஜால முபரம் யத் கர்ப்ப வாஸேஸ்திதம்
ரேதஸ்ச்சேததி ஹஸ்தமஸ்தக பதப்ரோத்ந்பூத நாநாங்குரம்
பரயாயேணஸஸிஸு த்வயௌவநஜராவேஷைரநேகைர் வ்ருதம்
பஸ்யத்யத்தி ஸ்ருணோதி ஜிக்ரதி யதாகஸ்சத் ததாகஸ்சதி"

ஆஹா! இந்தப் பிரபஞ்சத்தியுள்ள மாயா விசித்திர இந்திரஜால வித்தையை என்னவென்று சொல்லலாம். ஸ்திரீகள் மாதவிடாயானபின் 4, 6, 8, 10, 12, 14, 16, இவ் விரட்டித்த நாட்களில் சம்போகம் செய்து தரிக்கப்படுவது ஆணாகவும், 5, 7, 9, 11, 13, 15, இவ்வொற்றைபட்ட நாட்களில் தரிக்கப்படுவது பெண்ணாகவும் பிறக்கும். அந்தச்சமயத்தில் ஆண்குழந்தை தரித்தால் ஸ்திரீகளுக்கு மூச்சு வலது நாசியிலும் பெண் குழந்தை தரித்தால் இடது நாசியிலும் நடந்து கொண்டிருக்கும். இரண்டு நாசிகளிலும் மூச்சு நடந்து கொண்டிருந்தால் அலியாய்ப் பிறக்கும்.

தாய் தந்தையர்களின் சுக்கில சோணிதங்கள் தாயின் கர்ப்பப் பையில் தங்கினால் பிண்டம் தரிக்குமென்று மநுஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஸ்திரீகள் மாதவிடாய் நின்று கர்ப்பம் தரித்த இரண்டாம் மாதம் முதல் சிசு ஜநநகாலம் வரையில், ஒரு நாளும் தவறாமல் காலை மாலைகளில் எதையும் சாப்பிடாமல் வெறும் வயிரா யிருக்கும்பொழுது இரண்டு சிட்டிகை குங்குமப்பூ வாயில்

போட்டு மென்று விழுங்கவேண்டும். இவ்வாறு ஒரு நாளும் தவறாமல் காலை மாலைகளில் குங்குமப்பூவைச் சாப்பிட்டு வந்தால் சிசு அழகுடையதாவும், கருப்பான் முதலிய சிரங்குகள் இல்லாததாயும் மிகவும் சுகமாய் வளர்ந்துவரும்.

இதற்கோர் திருஷ்டாந்தம் சொல்லுகின்றோம் கேளுங்கள். சென்னை நாட்டுப்பிள்ளையார் கோவில் வீதியில், சால்ட்டு சப்இன்ஸ்பெக்டர் பாரியாள் இரண்டு மாதம் கர்பவதியாயிருந்தனள். அவ்வீட்டிலுள்ளவர்கள் எல்லோரும் இந்நூலாசிரியர் மீது மிகவும் சிரத்தை பக்தி விஸ்வாஸ முடையாவர்களாயிருந்த படியால், அது சமயம் இந்நூலாசிரியர் அவர்கள் வீட்டிற்குச் சென்றிருந்தார். மேற்சொல்லிய அம்மையார் இரண்டு மாதம் கர்பவதியாயிருந்தபடியால், அடியில் சொல்வது போல் செய்யும்படிச் சொல்லினர். அதாவது, குங்குமப்பூவில் காஷ்மீர் குங்குமப்பூ உயர்ந்தது.

அதை உடனே கொண்டுவந்து இன்று முதல் ஒரு நாளும் தவறாமலும், மறவாமலும் பிரதிதினம் காலை மாலைகளில் வெறும் வயிற்றுடனிருக்கும் பொழுது இரண்டு சிட்டிக்கை குங்குமப்பூ எடுத்து வாயில் போட்டு நன்றாய் மென்று விழுங்கவேண்டும். இவ்வாறு சாப்பிட்டு வந்தால் அவ்வம்மைக்கு எந்த சீதள வியாதியும் வராமல் இருப்பதுமேயன்றி, பிறக்கும் குழந்தைக்கு கருப்பான் சிரங்குகள் கட்டிகள் முதலான வியாதிகள் எதுவும் எப்பொழுதுமே வர மாட்டா தென்றும், குழந்தைச் சிவப்பாய்க் கிருஷ்ண விக்கிரகம் போலப் பிறக்குமென்றும் சொல்லினர், அவர்கள் மிகவும் குருபக்தியுடையவர்களாதலால், இவர் சொல்லியதுபோல் அன்றே காஷ்மீர் குங்குமப்பூ வரவழைத்து அன்று முதல் ஒருநாளும் தவறாமலும் மறவாமலும் சிசு ஜநநமாகும் நாள் வரையில் குங்குமப் பூ கொடுத்து வந்தார்கள்.

பிறகு இந்நூலாசிரியர் மறுபடியும் ஒருமுறை அவ்வீட்டிற்குச் சென்றிருந்த பொழுது, கர்ப்பம் தரித்த இரண்டாம் மாதம், முதல் குங்குமப்பூ சாப்பிடும்படி சுவாமிகள் சொல்லியது போல் சாப்பிட்டுப் பிறந்த குழந்தை இதுதான்னென்று அக்குழந்தையைக் காட்டினார்கள். அப்பொழுது அக் குழந்தைக்கு, ஒரு வருஷம் பத்துமாதம் ஆயிற்று. ஆண் குழந்தையாய்ப் பிறந்தது. தாய் தந்தையர்கள் கருப்பாய் இருந்த போதிலும் அக்குழந்தை சிறிது தூல சரீரம்மாயும் கிருஷ்ண விக்ரகம்போல், சிவப்பு நிறமும் மிகவும் அழகுடையதாவும் இருந்தது. அக்குழந்தைப் பிறந்தநாள் முதல் இவர் குழந்தையைப் பார்க்கும் நாள் வரையில் அக்குழந்தைக்கு எவ்வித கறுப்பான் சிரங்குகள், கட்டிகள் இன்னும் எந்த வியாதிகளும் இல்லாமல் மிகவும் சுகமாய் விளையாடிக் கொண்டிருந்தது.

அவ்வீட்டில் மற்றொரு அம்மையும் கர்ப்பவதி யாயிருந்தனள். அவ்வம்மைக்கும் அதுபோல் அதே குங்குமப்பூ கொடுத்துவந்தார்கள். ஆனால் அவ்வம்மையார் ஒருநாள் சாப்பிட்டும் ஒருநாள் மறந்து சாப்பிடாமலும் இவ்வாறு குங்குமப்பூ சரியாய்ச் சாப்பிடாமல் அநேக நாள் தவறிக்கொண்டு வந்தது. அவ்வம்மைக்குப் பிறந்த குழந்தை தாம் பிரத்தியக்ஷிமாய்ப் பார்க்கும்பொழுது அக்குழந்தையின் கழுத்து, கை முதலான இடங்களில் அனேக கட்டிகள். நெல்லிக் காய் பிரமாணம் இருந்தன. இவர் சொல்லியதுபோல் பிரதிதினம் தவறாமல், காலை மாலைகளில் வெறும் வயிற்றில் குங்குமப்பூ சாப்பிட்டு வந்திருந்தால் முன்சொல்லிய கட்டிகள் ஏதும் வந்திராது;

ஆயினும் ஒன்று சொல்லுகின்றோம் கேளுங்கள். அவரவர்கள் பூர்வ ஜன்மத்தில் செய்த கர்மத்திற்கு (புண்ணிய பாபங்களுக்குத்) தக்கபடி வியாதிகளும் சுகதுக்கங்களும்

உண்டாகின்றன, "புத்தி கர்மாநுசாரிணி," என்றிருப்பதனால் அவரவர்கள் அனுபவிக்க வேண்டிய கர்மத்திற்குத் தக்கபடி புத்தியும் உண்டாகும். ஆதலால்,

இவ்வம்மையின் குழந்தை, வியாதிகளை அனுபவிக்க வேண்டிய கர்மம் இருந்தபடியால் குங்குமப்பூவை இவ் வம்மையார் சரியாய்ச் சாப்பிடாமல் இருக்க அடிக்கடி மறதியை உண்டாக்கிற்று. உலகத்தில் ஒவ்வொருவரும் அவரவர்களின் கர்மங்களுக்குத் தக்கபடி வியாதிகளும் சுகதுக்கங்களும் அனுபவித்துக் கொண்டு வருகின்றார்களே யொழிய, மற்றபடிக்கு வேறல்ல. இதுவிஷயம் யாவும் இந்நூலில் சஞ்சித ப்ராப்த அகாம்ய கர்மங்களில் சொல்லி யிருக்கின்றோம். அவைகளை நீங்கள் மறந்திருக்கலாமென்று மறு முறையும் இங்கு சொன்னோம்.

கர்ப்ப உற்பத்தியைக் குறித்துயாம் இவ்வளவு தூரம் எழுதவேண்டியது ஏனென்றால் இந்நூலை வாசிக்கப் பட்டவர்களின் வீட்டில் எந்த சமயத்தில் ஸ்திரீகளுக்கு கர்ப்பம் தரிக்கின்றதோ அச்சமயம், இரண்டாம் மாதம் முதல் சிசு பிறக்கும் வரை காஷ்மீர் குங்குமப்பூ ஒரு நாளும் மறவாமல் காலை மாலைகளில், ஒன்றும் சாப்பிடாமுன் இரண்டு சிட்டிகை குங்குமப்பூ எடுத்து வாயில் போட்டு, மென்று விழுங்க வேண்டுமென்று எழுதினோம். குங்குமப்பூவை மென்று விழுங்கியபின் வாய் மிகவும் நல்ல வாசனையாயும், மணமாயும் இருப்பது தமக்கே நன்றாய்த் தெரியவரும். சற்றுநேரம் சென்றபிறகு குங்குமப்பூ தின்ற எச்சிலைத் துப்பிப்பாருங்கள். அவ்வெச்சில் பொன்னிறம் போல் மஞ்சள் வர்ணமாய் வரும். இந்த காஷ்மீர் குங்குமப்பூ தேயிலைப்போல் இருந்தது. தேயிலையும் சிறிதாயும், ஒன்றையொன்று பற்றாமலும் வெவ்வேறாய் ரத்தம் நிறம் போல் சிவப்பு வர்ண முடையதாயிருக்கும். இதுவே தரமான குங்குமப் பூ இது விலை அதிகம்.

மற்றொரு குங்குமப்பூ இருக்கின்றது. அது மயிரைப் போல் நீளமாயும் நாரைப்போல் ஒன்றையொன்று பற்றிக் கொண்டு மஞ்சள் நிறமுடையதாயிருக்கும். எல்லாக் கடைகளிலும் இந்த மட்டக் குங்குமப்பூவை வைத்துக் கொண்டு, இது மிகவும் உயர்ந்ததென்று சொல்லி விற்பனைச் செய்து வருகிறார்கள். உயர்ந்த காஷ்மீர் குங்குமப்பூ விலை கொடுத்து வாங்க மாட்டார்களென்று எண்ணி தாழ்ந்த குங்குமப்பூ உயர்ந்ததென்று சொல்லி விற்பனைச் செய்து வருவார்கள்.

இதன்றியும் கர்ப்ப ஸதிரீகளே அல்லாமல் எல்லா ஸ்திரீ புருஷர்களும் பிரதி தினம் காலை மாலைகளில் சிறிதும், போஜனமுண்டு தாம்பூலம் போடும்பொழுதும் தாம்பூலத்தில் சிறிது காஷ்மீர் குங்குமப்பூ சேர்த்து சாப்பிட்டுவந்ததால், எந்த சீதள வியாதியும் பற்றாமல் சரீரத்திற்கு உஷ்ணத்தை உண்டாக்கி, எந்த வியாதிகளையும் அணுகாமலிருக்கச் செய்விக்கும், குங்குமப்பூ சாப்பிட்டு எச்சிலைத் துப்பினால் அவ்வெச்சில் பொன்னிறம்போல் மஞ்சள் வர்ணமாய்வருமென்று முன்சொன்னோ மல்லவா? அவ்வெச்சலின் குணத்தை இப்பொழுது சொல்லுகின்றோம் கேளுங்கள்.

வெறும் வயிற்றில் குங்குமப்பூ சாப்பிட்டு எச்சிலை விழுங்கியபோது அக்குங்குமப்பூ சத்தாகிய மஞ்சள் நிறமுடைய ரசம் தாயின் குடலில் சம்பந்தபட்டிருக்கும் கர்ப்ப பையிலுள்ள சிசுவின் உச்சி வழியாய் மேற்படி குங்குமப்பூ ரசம் இறங்கி அக்குழந்தையின் சரீரத்திலுள்ள நாடிநரம்புக்கெல்லாம் பிரதி தினம் காலை மாலைகளில் ஓடிக்கொண்டே வருகிறபடியால், அந்த மஞ்சள் நிறமுடைய ரசமானது குழந்தையின் சரீரத்தைச் சுத்தி செய்து வைப்பதால், அக்குழந்தையின் நிறம் மாறி, கறுப்பான் முதலிய சிரங்குகளை சேர விடாமல் செய்விக்கும். ஆதலால், கர்ப்பம் தரித்த ஸ்திரீகளெல்லோரும் இரண்டாவது மாதம் முதல் பிரதி தினம் தவறாமல் காலை மாலைகளில்

இரண்டு சிட்டிகை அளவு காஷ்மீர் குங்குமப்பூ பிரதிதினம் காலை மாலை இரண்டு வேளைகளிலும் கர்ப்பஸ்திரீகள் சாப்பிட்டுப் பிறக்கும் குழந்தையை அனுபவத்தில் பிரத்தியக்ஷ திருஷ்டாந்தமாய்ப் பார்த்து பிறகு ஒவ்வொரு குடும்பத்திலுள்ள கர்ப்பஸ்திரீகளெல்லோரும் சாப்பிட்டுவர வேண்டுமென்று அவர்களும் சொல்லவேண்டும்.

சிசு கர்ப்பத்தில் தரித்த பிறகு ஏழு தினங்கள் வரையில் நீர்குமிழியைப் போலவும் பதினைந்து தினங்களுக்குப் பிண்டவடிவமாயும் ஒரு மாதத்தில் கட்டிப் பிண்டமாயும், இரண்டாவது மாதத்தில் தலையும் மூளையும் மூன்றாவது மாதத்தில் கால்களும் கைகளும், நான்காவது மாதத்தில் வயிறும் ஐந்தாவது மாதத்தில் முதுகெலும்பும், விலா எலும்புகளும் ரோமங்களும், ஆறாவது மாதத்தில் கண்கள் மூக்கு வாய் செவிகள் முதலாகிய அவயங்களும் ஏற்படும். இப்படி ஏற்பட்ட பிறகு ஏழாவது மாதத்தில் ஜீவன் பிரவேசிக்கின்றான். அப்பொழுது, பிண்டம் தலை கீழாய்த் திரும்பும். பிண்டம் திரும்புவது தாய்க்கு நன்றாய்த் தெரியவரும். அச்சமயம் தாயினுடைய வயிற்றில் நோய் இல்லா மலிருப்பதற்காக "ஸூதி," என்னும் பெயரையுடைய ஒரு குடலானது பிண்டத்தைச் சுற்றிக் கொண்டிருக்கும். எட்டு ஒன்பதாவது மாதங்களில் ஞானம் உதயமாய் "நாநாயோநி ஸஹஸ் ராணி, த்ருஷ் வா சைவத தாமயா ஆஹாரா விவித புக்தாஹ பீதாஸ்ச விவிதாஸத் தநாஹ," என்னும் சுருதி ரீதியாய் ஸ்தாவர ஜன்மங்களாகிய எண்பத்து நான்கு லக்ஷம், அதாவது ஸ்ரீ பகவத்கீதை அத்யாயம் 14 சுலோகம்4, பிரமாணம் என்னவென்றால்,

ஸ்ர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தய ஸ்ஸப்பவந்தி யாஹ
தாஸாம் ப்ரஹ்ம மஹத்யாநி ரஹம் பீஜ்ப்ரதஹ பிதா.

ஓ குந்திபுத்ரா! ஜராயுதம் என்றால் மா என்னும் பையால் மூடப்பட்டுப் பிறக்கும் மனிதர்கள் மிருகங்கள் முதலானவை

அண்டஜம் (முட்டையில் பிறப்பது) சுவேஜதம் (வியர்வையில் பிறக்கும் பேன் முதலானது) உற்பீஜம் (பூமியில் பிறக்கும் நாக்குப் பூச்சி) என்கிற நால்வகை யோனிகளில் எந்தத் தேகங்கள் உண்டாகின்றனவோ அவற்றிற்கெல்லாம் மாயையே தாயாகவும் நான் விதைப் போட்ட தந்தையாகவும் இருக்கின்றேன், என்றால்,

ஸ்தாவரேர லக்ஷவிம்ஸத்ய ஜலஜோ நவலக்ஷஹ
க்மீணாம் ருத்ரஸங்க்யாஸ்ச சாதுர்லக்ஷந்து மாநுஷஹ
த்ரிம்ஸல் லக்ஷம் நவாநாம சப்க்ஷீணாம் லஸலக்ஷஹ

விருக்ஷாதி ஸ்தாவரங்கள் 20 லக்ஷம், ஜலத்திலுள்ள மச்சாதி ஜலவர்க்கங்கள் 9 லக்ஷம், புழு முதலாகிய கிருமி வர்க்கங்கள் 11 லக்ஷம், மனுஷ்ய ஜாதிபேதங்கள் 4 லக்ஷம் கோக்கள் முதலாகிய மிருகவர்க்கங்கள் 20 லக்ஷம், பக்ஷி வர்க்கங்கள் 10 லக்ஷம் ஆகமொத்தம் 84 லக்ஷ ஜீவராசிகளின் நாநா யோனிகளில் பிறந்து பிறந்து உழன்று மரித்த தனது பூர்வ ஜன்மங்களையெல்லாம், நான் பூமியில் ஜனிக்கும் வரையில் தாயின் உதரத்தில் மல மூத்திர ஸ்தானங்களுக்கு மத்தியிலுள்ள கர்ப்பத்திலிருந்து தனக்குத் தானாகவே பின் வருமாறு துக்கித்துக்கொண்டிருக்கும் அந்த துக்கம் எப்படிப் பட்டதென்றால்,

ஐயோ! நான் எனது முன் ஜன்மங்களில் கொஞ்சமேனும் புண்ணியம் செய்யாமற்போனேன்; பிரபஞ்சாநுபவம் தெரிந்திருந்தும் என்னை யார் என்ன செய்வார்களென்னும் கர்வத்தினால் நிஷ்க்காம்ய சத்கர்மங்களைச் செய்யாமற் போனேன்; இதரர்களை மோசம் செய்வதற்காகவே காம்ய கர்மங்களைச் செய்தேன். நிஷ்க்காம்ய சத்கர்மங்களைச் செவியிற் கேளாமலும், ஒருக்கால் கேட்டா லும் அதை மனதில் நிறுத்தாமல் பெரியோர்கள் நல்ல விஷயங்களைக் குறித்துச் சொல்லிய போதெல்லாம் அவைகளைக் கேளாமல், நான் என் இஷ்டம் போல் செய்வேனென்று சொல்லி அவர்களைத்

தூஷித்து நற்கதியை அடையாமற் போனேன். அஞ்ஞானத் தினால் பரஸ்திரீகளை மோகித்து, அநியாயமாய் அவர்களை மானபங்கம் செய்தேன்; அறியாத்தன்மையினால் அனேக பாபகிருத்தியங்களைச் செய்தேன்; குருவையும் பெரியோர் களையும் தாய் தந்தையர்களையும் தூசித்தேன் ; தனத்தைச் சம்பாதித்துப் பெண்டு பிள்ளைகளுக்குக் கொடுத்துப் பின்னும் அதைக் கேட்க மறுபடியும் அவர்கள் கொடாததனால் துக்கித்தேன்; இனி, இந்த மலமூத்திரப் பையிலிருந்து பூமியில் பிறந்தவுடன் ஞாநம் அடைவதற்காக சத்குருவை நாடி சாங்கியொ பக்தி மார்க்கங்களினால் பரமாத்வைத் தரிசிப்பேன் என்று சிசுவானது இவ்வாறு நினைத்துத் துக்கித்துக் கொண்டி ருக்கும் சமயத்தில் பத்துத்திங்களும் பூர்த்தியான பிறகு பிண்டம் தாய்க்கு நோயை உண்டாக்கும் தாய் கர்ப்ப வேதனைப்படும் பொழுது கர்ப்பப்பையில் குண்டாய் கட்டுண்டிருக்கும் சிசுவானது பூர்வஞாநத்துடன் இருப்ப தால். இனி நான் மாயா பிரபஞ்சத்தில் மறுபடியும் போய்ப் பிறக்க வேண்டுமேயென்று மிகவும் பயத்திருக்கும். இவ்வாறிருக்கும் சமயத்தில்,

நாகன் கூர்மன் கிருகரன் வேதத்தன் தனஞ்சயன் என்னும் ஐந்து வாயுக்களின் தனஞ்சயனென்னும் வாயுவானது, கர்ப்பத்திலிருக்கும் பிண்டத்தை வெளியில் தள்ளுமென்றும், அன்றியும் மரணமடைந்த சரீரத்தையும் விடாமல் பிணத்தைக் காஷ்ட்டத்திற்குக் கொண்டு போகும் வரையில், சரீரத்தை வீங்கி வெடித்து நாற்றமெடுக்கச் செய்விக்குமென்றும் முன் சொல்லியிருக்கின்றோம். அதுபோல் தனஞ்சயனென்னும் வாயு வானது, தன் பலத்தை எவ்விதமாய்க் காட்டி. கர்ப்பபை யிலிருக்கும் சிசுவை வெளியில் தள்ளுகின்றதோ அதன் ரஹஸ்யத்தை இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள் :

குயவன் மண்பாண்டம் செய்து வைத்தவுடன் அப்பாண்டத்தை விரலால் ஊன்றினால், விரல் பட்ட இடத்தில் பள்ளம் விழுகின்றது. அதுபோல், கர்ப்பப்பையில் கட்டுப்பட்டிருக்கும். சிசுவின் சரீரம் மேற்சொல்லிய பச்சை மண்ணுக்குச் சமானமனதாய் இருக்கும். குழந்தை, தாயின் கர்ப்பப்பையில் குண்டு போல் சுருண்டு பிட்டங்கள் மேல் புறமாய்த் தூக்கிக் கொண்டிருக்கும். அப்பொழுது அக்குழந்தை முதுகின் கீழும் இரண்டு பிட்டங்களுக்கும் மேலுமாயிருக்கும், இடுப்பு மத்தியில், தனஞ்சயனென்னும் வாயு வானது தன் பலத்தால் ஊன்றி நெட்டி வெளியில் தள்ளும். முன் சொல்லிய குயவன் பாண்டம்போல் பச்சை மண்ணுக்குச் சமானமாயிருக்கும். அக்குழந்தை பிட்டங்களுக்குமேல் தனஞ்சயனென்னும் வாயு ஊன்றி நெட்டி வெளியில் தள்ளுவதனால் பிட்டங்களுக்கு மேல்புறம் இரண்டு பள்ளங்கள் ஏற்படும். இதைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், உங்கள் வீட்டில் நடந்துகொண்டிருக்கும் ஒன்று அல்லது இரண்டு மூன்று நான்கு வயதுடைய குழந்தைகளின் பிட்டங்களுக்கு மேலும், இடுப்பில் கீழும் பாருங்கள். அவ்விடம் இரண்டு பள்ளங்கள் காணப்படும்

இந்நூலில் சொல்லிய விஷயங்களெல்லாம், சுருதி, யுக்தி அனுபவங்களுக்குச் சரியாயிருக்கும். தனஞ்சயனென்னும் வாயுவினால் வெளியில் தள்ளும்பொழுது, அந்தச் சிசு வானது பூர்வஞானத்துடன் கர்ப்பத்தில் இருப்பதனால் வெளிவர மிகவும் பயந்து இரண்டு கைகளையும் சேர்த்து சிரசின் மேல்வைத்து ஐயோ! என்னை மாயா சம்சாரத்தில் கொண்டு போய்த் தள்ளுகின்றாயா? என்று சிசுவானது மிகவும் பயந்து ஈஸ்வரனை கும்பிட்டுக்கொண்டே தாயின் யோனியிலிருந்து வெளி வருகின்றன. சகலமிருகங்களுக்கும் பூர்வ ஞானமுண்டு; ஆதலால் அம்மிருகங்களும் குழந்தைகளும் ஐயோ! என்னை மாயப்பிரபஞ்சத்தில் கொண்டுபோயத் தள்ளுகின்றாயாயென்று மிகவும் பயந்து தன் இரண்டு கைகளையும் சிரசின்மேல் வைத்து

ஈஸ்வரனைக் கும்பிட்டுக் கொண்டே வெளிவரும். தாயின் கர்ப்பத்திலிருந்த குழந்தை வெளிவரும்பொழுது இவைகளை நீங்கள் பிரத்தியக்ஷ திருஷ்ட்டாந்தமாய்ப் பார்க்கலாம்.

இவ்வாறு ஜநநகாலம் சம்பிராப்தமாய், "ஜ்ஞாநாந் தேஜவதம் ப்ர ப்தீர யோநி மத்யஸ்ச கஸ்ச்சதி யோநி ஸ்பர்ஸ மாத்ரேண ஜ்ஞாநரூபம் நஸம்ஸயஹ" தான். தாயின் கர்ப்பத்தில் கட்டுப்பட்டிருந்த பையிலிருந்து புறப்பட்டு பூமியில் பிறந்தவுடன், சிசுவானது தன் பூர்வ ஞானத்தை மறந்து சுத்த பிரம்மசொரூபமாய்ச் சயனித்துக் கொண்டிருக்கும். அப்பொழுது சிசுவின் தொப்புளுடன், சேர்ந்திருக்கும். 'மாவி' என்னும் பையை அறுத்து குழந்தையின் உடலையெல்லாம் நன்றாய்ச் சுத்தி செய்துப் படுக்கவைத்துப் பிறகு குழந்தை அழவில்லையே எனச் சொல்லி ஸ்திரீகள் குளிர்ந்த ஜலத்தையெடுத்துக் குழந்தையின் முகத்தில் தெளிப்பார்கள். குளிர்ந்த ஜலம் சிசுவின் முகத்தில் பட்டவுடன் அச்சிசுதிடுக்கிட்டுத் திமிரி உடலை விரித்துக் கைகால்களை உதறிக்கொண்டே குவா : குவா! குவா ! என்று மிகவும் சிறும் குரலாய் அழும். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், இங்கிலீஷ், ஜர்மனி, சைனா, ஜப்பான், ஒட்ரம், சிங்களம், பர்மா, அரபி, இன்னுமுள்ள அனேக ஜாதிகளிலும் குழந்தையானது பிறந்தவுடன் குவா! குவா! குவா! வென்றே அழும் எதுவோ இனி அதைச் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

எல்லா பாஷைகளுக்கும் ஸம்ஸ்க்ருத பாஷையானது தாயாயிருப்பதனால் ஸம்ஸ்க்கிருத பாஷையில் குவா (என்னும் சப்தத்திற்கு எங்கே யென்று அர்த்தமா கின்றது.) ஆதலால் எல்லா ஜாதிகளிலும் பிறக்கும் குழந்தையானது குவா ! குவா ! குவா ! என்று வீரிட்டழும். இதன் கருத்து என்னவென்றால் எங்கே ; எங்கே ! எங்கே ! எனக்குப்பூர்வஞானமிருந்ததே, அந்த ஞானம் எங்கு போயிற்று என்னும் கருத்தேயாம். இவ்வாறாக சிசுவானது துக்கப்பட்டு அழுது நாளுக்கு நாள் பால்யயௌவன கௌமார

(கிழத்தன) மென்னும் சரீர வீகாரங்களை மேன் மேலடைந்து வளர்ந்து ஒன்றையொன்று பார்த்துக் கொண்டும் தின்றுகொண்டும், கேட்டுக்கொண்டும். வாசனைப் பார்த்துக் கொண்டும், சிரித்துக் கொண்டும் அழுதுக் கொண்டும், விளையாடிக் கொண்டும், பேசிக் கொண்டும், சம்போகம் செய்துக் கொண்டும், உலகத்தாரை மோசம் செய்து கொண்டும் பொய் சொல்லிக் கொண்டும் இவ்வாறாக வித்தைகளான அநேக காரியங்களைச் செய்து கொண்டிருந்து மறுபடியும் அகஸ்மாத்தாய் இருந்தாப் போலிருந்து ஏதோ ஓர் வியாதி கண்டு ஜீவன் எப்படி வந்ததோ அப்படியே மறுபடியும் யாரிடமும் போகின்றேனென்று சொல்லாமலே ஓடிப்போய்விடுகிறது. ஆஹா! ஜீவனில்லாத ஜட பதார்த்தமாகிய சுக்கிலமேயல்லவா. இப்படி விந்தை விந்தைகளான அனேக நாம ரூபங்களுடன் தோன்றி மறுபடியும் நாம ரூபங்கள் எதுவும் தோன்றாமல் சூன்னியமாய் விடுகின்றது. இதைவிட பெருத்த இந்திர ஜாலவித்தை வேறொன்றில்லை. இந்திர ஜாலத்தைப் போன்ற இந்த மாயாப் பிராந்தியினாலேயே நநோ விசித்திர ஜகத்து தோன்றுகின்றதேயல்லாமல் மாயாப் பிராந்தி இல்லாதவர்களுக்கு இந்த மாயா பிரப்பஞ்சம் இல்லவேயில்லை. எப்படியென்றால்: "மாயாமய மிதமகிலம ஜகத் ஜாயதே கஸ்ச்சதி இதிஜகத் இதம்ப்ரபஞ்சம் நாஸ்த்யேவ நோத்பந்நம் நோஸ்கிந்ம ஜகத்மாயா கார்யாதிம் நாஸ்தி மாயா நாஸ்தி மயம்நஹி லந்த்யாகுமார வசதே பீதிஸ்சேத் அஸ்தவிதம் ஜகத்."

இந்த ஜகத்து மாயாப் பிராந்தியினால் தோன்றுகின்றது. இந்திர ஜாலம் போல் நாநாவித நாமரூபங்களுடன் தோன்றி மறுபடியும் நாமரூபங்கள் தோன்றாமல் அசத்தியமாய்ப் போவதே ஜாத்து, எப்படி யென்றால் மனிதன் பிறந்தால் அவனுடன் கூடவே இந்த மாயா பிரபஞ்சமும் மறுபடியும் பிறக்கின்றது. இப்படி இந்த மாயா சரீரம் பல முறைகளில் அவனுடன் கூடவே பிறந்து நசிக்கின்றது. இந்திர ஜாலத்தில்

தோன்றும் வஸ்துக்கள் எப்படி அநித்யமோ அதுபோல் மாயையும், இந்த மாயையினால் தோன்றும் நாமரூப ஜகத்தும் அசத்தியமே. மாயைக்குக் காரணம் மனம் மனத்திற்குக் காரணம் இந்திரியங்கள், இதற்குத் திருஷ்டாந்தம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந சம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை. அத்யாயம்-2, சுலோகம் 67 பிரமாணம் என்னவென்றால்,

இந்திரியாணாம் ஹி நரதாம் யந்மனோநு விதியதே
ததஸ்ய ஹரதி பிரஜ்ஞாம் வாயுர்நாவ மிவாம்பஸ்

மெய் வாய் கண்கள் மூக்கு செவிகளாகிய பஞ்சேந்திரியங்களிலும் எந்த இந்திரியங்களின் வழியாய் மனம் பிரவேசிக்கின்றதோ, அதில் ஆசையுண்டகின்றது என்றால் இந்திரியங்கள் மனிதனுடைய மனதை வசப்படுத்தி விஷயங்களில் ருசியை உண்டாக்கி அவைகளை இழுக்கச் செய்யும். எப்படியென்றால், ஜலத்தின் மீது மிதந்து கொண்டிருக்கும் படகை நடத்துபவன் சுக்கானால் திருப்பாவிட்டால் அப்படகு போக வேண்டிய மார்க்கமாய் போகாமல் வேறு மார்க்கத்தில், காற்றினால் எவ்வாறு இழுக்கப்படுமோ அதுபோல் புருஷனும் தன் மனமென்னும் படகை, சன்மார்க்கத்தில் போகும் படி. புத்தியென்னும் சுக்கானால் திருப்பா விட்டால் இவனுடைய மனம். இந்திரியங்களென்னும் காற்றினால் கெட்ட மார்க்கங்களில் இழுக்கப்படுவதல் சந்தேகமில்லை. இதற்குப்பின் விஷயங்களை எல்லாம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந சம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத் கீதையில் விரிவாய் காணலாம். இங்கு வேண்டியது இவ்வளவேயாம்.

எவன் மனம் ஈஸ்வரனிடத்தில் சேர்க்கப்படுகின்றதோ அவன் மனம், இந்திரியங்களுக்கு உட்படமாட்டா. அப்படி உட்பட்டால், அவன் சிரேஷ்டமான ஞானம் கெட்டு விஷயாசக்தியினால் இழுக்கப்படுவான். ஆதலால், இந்திரியங்கள்

குதிரையைப் போன்றன; மனம் வண்டியைப் போன்றது. இதைச் சாரத்யம் செய்பவன் மோக்ஷத்திற்கு திட பிரயத்நம் செய்து யென்னும் கயிற்றைக் கடிவாள மாகப் போட்டு கண்கள் மூக்கு வாய் செவிகள் தேக சர்ம மென்னும் ஐந்து இந்திரியக் குதிரைகளை இழுத்துப் பிடித்த போதிலும் நிற்காமல் அவனையும் அந்த இந்திரியங் களென்னும் குதிரைகள் பலவந்தமாய் விஷயங்களில் பற்றி இழுத்துச் செல்வதனால் அப்பொழுது அந்த விவேகியான வன் என்ன செய்கின்றானென்றால், குதிரைகளென்னும் இந்திரியங்களை இழுத்துப் பிடிப்பதற்குச் சக்தி இல்லாத வனாயிருப்பதால் நான் என்னும் விருக்ஷத்தில் இந்திரியங் களென்னும் குதிரைகளைக் கட்டிவிடுகின்றான்; அப்படிக் கட்டி விடுவதனால் அந்த இந்திரியங்களென்னும் குதிரைகள் எவ்வளவு பலமுள்ளவை களாயிருந்த போதிலும் வெளி விவகாரங்களில் இழுத்துக் கொண்டு போகமாட்டா, 'நான்' என்னும் விருக்ஷம் தேகமல்ல; தேகத்தின் மத்தியில் அந்தர்யாமியாயிருக்கும் ஆத்மாவில் மனதைக் கட்டிவிட வேண்டும். இதற்குச் சுருதிப் பிரமாணம் என்ன வென்றால்:-

"இந்த்ரியத்வாரா ஸங்க்ராஹ்யர் சுந்தாத்யை ராத்மவேதாம்
ஸ்யைம் பக்த்யா ஸமாராத்யஜ்ஞா தும்ஸோயம்ம ஹாமகஹணி

இந்திரியங்களை அவற்றின் விகாரகாரியங்களில் போகவிடாமல் திருப்பி ஆத்மநிஷ்ட்டை செய்வதே மஹா யாகமேயொழிய, காராடுகளாகிய வெள்ளாடுகளைக் கொன்று அக்நி குண்டத்தில் போட்டு ஹவிர்ப்பாக மெடுத்துப் புசிப்பதுயாகமல்ல.

கண்கள் மூக்கு வாய் செவிகள் தேகசர்மம் (சரீரத்தின் மேல் தோல்) என இந்திரயங்கள் ஐந்து. மனம் சுகந்தமான வாசனைகளை மூக்கிந்திரிய வழியாய் இழுத்தும், ருசிகரமாகிய பதார்த்தங்களை வாயிந்திரிய வழியாய் அறிந்தும், தோடி

காம்போதி பைரவி முதலாகிய ராகங்களைச் செவியிந்திரியங்களின் வழியாய்க் கேட்டும், சீதோஷ்ணங்களைத் தேகசர்ம இந்திரிய வழியாய்க் கிரகித்தும் ஆநந்திக்கின்றது. மூக்கு வாய் செவிகள் தேகசர்மம் என்னும் இந்நான்கு இந்திரியங்களும் புருஷனை அதோகதி செய்விப்பதில்லை பின் எது அதோகதி செய்விக்கின்ற தென்றால் கண்ணிந்திரியம் செய்விக்கின்றது.

அஃதெப்படியென்றால், ஆலயங்களில் நடந்தேறி வரும் உற்சவங்களுக்குச் செல்ல வேண்டுமென்று ஸ்திரீகள் கூந்தலை வாரி முடித்து ஸ்நானம் செய்து புஷ்பங்களை அணிந்து நெற்றியில் நல்ல பொட்டு வைத்து தமக்கு ஆபரணங்கள் இல்லாவிட்டாலும், வேண்டும் ஆபரணங் களை இரவலாக வரவழைத்து காதுகளிலும் கைகளிலும் கழுத்திலும் கால்களிலும் அணிந்து நல்ல ரவிக்கையும் பட்டுச் சேலையும் தரித்து அண்டை.... அயல் வீட்டிலிருக்கும் தன் சிநேகித ஸ்திரீகளையும் நன்றாய் அலங்கரித்துக் கொண்டு வரும்படிச் சொல்லிப் பிறகு எல்லோரும் சேர்ந்து கோவிலுக்குப் போவதுண்டு, கோவிலுக்குப் போன பிறகு, குளத்தில் கை கால்களை அலம்பி சந்நிதானத்திற்குள் பிரவேசிக்கும்பொழுது வழியில் சென்று கொண்டிருக்கும் மற்ற ஸ்திரீகளையெல்லாம் இவர்கள் பார்த்து கமலம் அதோ மத்தாப்பு ரவிக்கைப் போட்டிருக்கின்றாளோ அவளைப் பார்த்தையா? அவள் கட்டியிருக்கும் மேகவர்ண சேலைக்கும் மத்தாப்பு ரவிக்கைக்கும் எவ்வளவு நன்றாயிருக்கின்றது பார். இப்படிப்பட்ட.... சேலையும் ரவிக்கையும் நானும் எடுக்க வேண்டும். அவள் கறுப்பு முகத்திற்கும் குண்டு மூஞ்சிக்கும் தக்கபடி மூக்குத்தி ரவைக் கம்மலும் போட்டிருப்பதனால் அவள் எவ்வளவு பிரகாசமாயிருக்கிறாள் பார் என்று, ஒவ்வொரு ஸ்திரியும் ஒருவரை யொருவர் பார்த்துப் பேசிக் கொண்டு போவதற்காகவே ஆலயங்களுக்கு இப்பெண்டுகள் போகின்றார்களேயொழிய, பகவானை பக்தியுடன் சேவிப்பதற்கல்ல, இதுபோல் புருஷர்களும் ஸ்நானம் செய்து நாமம் அல்லது விபூதி

சந்தனமாகிலும் நெற்றியில் வைத்து நல்ல சரிகை வேஷ்டி அணிந்து ஆலயத்திற்குட் சென்று, தம் சிநேசிதர்களைப் பார்த்து ரங்காநாதா! அதோ காசி ரவிக்கைப் போட்டுக் கொண்டிருக்கிறாளே அவளைப் பார் ; அவள் இடுப்பு மிகவும் சிறியதாயும், மார்பு அகண்டும், கழுத்துத் திட்டமாயும், குண்டு முகமாயும், மூக்குக் கோட்டைப் போலும், புருவம் வில்லைப் போலும் கண்களின் வெள்ளை விழிகள் பால்போலும் அவற்றின் மத்தியிலிருக்கும் கரு விழிகள் பால்போலும் அவற்றின் மத்தியிலிருக்கும் கரு விழிகள் குண்டுமணியி லுள்ள கறுப்பைப் போலும் இருக்கின்றது.

ஆஹா! இவளை மனம் புரிந்தவன் பாக்கியமே பாக்கியம்; உலகத்திலுள்ள ஜனங்கள் மனைவி சிகப்பாய் வரவேண்டுமென்று எண்ணுவார்கள் ; சிவப்பு நிறமுடையவர்களாயிருந்த போதிலும் முகத்தில் இப்படிப்பட்டகளை இல்லா விட்டால் என்ன பிரயோஜனம். கருப்பழகு நெருப்பழகு என்று இப்படியே ஒவ்வொறு புருஷனும் ஒவ்வொரு ஸ்திரீ ரூபத்தைப் பார்த்து வர்ணித்துப் பேசி, பகவானைச் சரியாய்ச் சேவிக்காமல், தாங்கள் தங்கள் வீடு போய்ச் சேர்ந்து தாம் தாம் கண்ட அதிசயங்களை எல்லாம் மற்றவர்களுடன் சொல்லிப் பேசிக்கொள்வது வழக்கம்

உலகத்திலுள்ள பாமரஜனங்கள் எல்லோரும் தெய்வபக்தி இல்லாமல் அதோ கதிக்கு ஆளாகின்றார் கள். ஆதலால், அவர்களை எவ்விதத்திலாகிலும் ஆலயங்களுக்குத் தாசிகளின் மூலமாய் வரவழைத்துப் பகவானைச் சேவித்து ஒரு க்ஷணமாகிலும் அவர்களின் மனம் பகவத் சேவையில் நிற்பதற்காக ஆலயங்களில் தாசிகளை நாட்டியம் செய்யும்படி ஏற்படுத்தினால் அவள் மீதிருக்கும் ஆசையினாலாகிலும் ஆலயங்களுக்கு வந்து பகவானைத் தரிசனம் செய்வார்களென்று எண்ணியே முன்னிருந்த பெரியோர்கள் ஆலயங்களில் தாசிகளை நடனம் செய்ய ஏற்படுத்தினார்கள். அப்படி ஏற்படுத்தியும்

ஜனங்கள் வந்து பகவானைச் சேவிக்காமல் அவர்களின் கண்களும் மனதும், முன்சொல்லிய துர்விஷயங்களிலேயே ஓடிக் கொண்டிருக்கும்.

ஆதலால், கண்ணிந்திரியம் எந்த வஸ்துக்களைப் பார்க்கின்றதோ அந்த வஸ்துக்களை யெல்லாம் மனம் கிரஹித்து அதை அடையவேண்டுமென்று, துர்மார்க்க விருத்தியில் பிரவேசித்து புருஷனை அதோகதிக்கு ஆளாக்கி அனேக அனர்த்தங்களில் இழுத்துக் கொண்டு போய்விடும்.

தொட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையிலே நடையிலே

சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதசகீற்றிலே

பொட்டியிலே யவர்கட்கு பட்டிலே புனைகந்த
பொடியிலே யடியிலேமேற்

பூரித்த முளையிலே நிற்கின்ற நிலையிலே
புத்திதனை நுழையவிட்டு

நெட்டியிலே யலையாம லறியிலே பொறையிலே
நின்னடியார் கூட்டத்திலே

நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெஞ்ஞான
ஞேயத்திலேயு னிருநாள்

மட்டிலேமனதுசெல நினைதருளு மருள்வையோ
வளமருவு தேவையரசே

தரைராஜனுக் கிருகண் மணியா யுதித்தமலை
வளர்க்கா தலிப் பெறுமையே.

என்று தாயுமானவர் திருவாக்காலு முணர்க. ஆதலால், பஞ்சேந்திரியங்களும் கண் என்னும் இந்திரியமே மிகவும் துன்மார்க்கமானதென்று சொல்லலாம். இப்படிப்பட்ட இந்திரி யங்களின் விருத்தியையெல்லாம் அடக்கி மனதை ஆத்ம நிஷ்டையில் நிறுத்துவதே மஹாயாகம்.

"ப்ராணேந்த்ரியாத்யந்த கரணகுணா தேஹே பரதரம் ஸச்சிதா நந்தமய, ஸர்வஸாக்ஷிகம் நித்யமுக்தப்ரஹ்மன்தாநம் பரமபதம்."
(நிராலம்போ பநிஷத்)

பஞ்ச பிராணன்களும், மெய்வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் மனம், புத்தி, சித்தி, அஹங்காரமென்னும் அந்தக்கரணங்கள் நான்கும் ஆகிய இவைகளுக்கெல்லாம் வேறாய் ஸச்சிதானந்த ஸர்வஸாக்ஷி யாயிருக்கும் ஆத்மாவே பரப்பிரம்மம். அப்படிப்பட்ட ஆத்மாவில் மனதை லயப்படுத்துவதே (சேர்ப்பதே) பரமபதம். வைகுண்டம், கைலாசம் என்று சொல்லப்படும்.

"அதஸ் ஸம்ஸாரவிஷய ஜநந ஸம்ஸர்கஏவ நரகஹ ஸத்ஸம் ஸ்வர்க்கஹ ஸ்வர்க்கஹ" (நிராலம்போ பநிஷத்)

சம்சாரவிஷய வியவகாரங்களில் அகப்பட்டுக் கொண்டிருப்பதே நரகம். இதைவிட வேறு நரகமில்லை. சதா மனதைப் பிரம்மத்தில் ஐக்கியம் செய்வதே சொர்க்கம். இதைவிட வேறு சொர்க்கமில்லை.

ஸச்சிநனந்தா நுபவ ஸ்வரூபம் ஜ்ஞாத்வா ஆநந்தரு
(போயஸ்திதிஹி
ஸ ஏவ ஸுகம் அதஸ் ஸம்ஸாரவிஷய ஸங்கல்ப ஏவ துக்கம்
(நிராலம்போபநிஷத்)

ஸச்சிதானந்த பரமபிரம்மமே ஆத்மாவென்றறிந்து சகலமும் மறந்து ஆத்மானுபவ நிஷ்டையில் இருப்பதே

பரமசுகம். மனைவி புத்திரர்கள் முதலான சம்சார விஷய சங்கல்பமே, மஹா துக்கமென்று சொல்லப்படும். இப்படிப்பட்ட சம்சார துக்கத்தைக் கடந்து கடைத் தேறினவன் யாரென்றால் இதற்குத் திருஷ்டாந்தம் ஆன்றோர், வாக்கியமும் ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம்-7 சுலோகம்-3, பிரமாணம் என்ன வென்றால்,

ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத் தொன்றாம்புலவர்
வார்த்தைபதினாயிரத் தொருவர் பூத்தமலர்
தண்டா மறைத்திருவே தாதாகோடிக் கொருவர்
உண்டாயினுண்டென்றறி.
மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஸ்ச்சித்யததி ஹித்தயே
யததா மபி ஹித்தாநாம் ஸச்சிந்மாம் வேத்தி தத்வதஹ

ஆயிரக்கணக்கான சாஸ்திரங்களை வாசித்த பண்டிதர்களில் ஒருவன் மாத்திரம் மோக்ஷத்திற்காகப் பிரயத்தனப்படுகின்றான்; இப்படிப் பிரயத்தனப்பட்டவர்கள் அநேக ஆயிரம் பேர்களுண்டு : அப்படிப்பட்டவர்களில் ஒருவன் மாத்திரம் என்னை வாஸ்த்வமாய் அறிகின்றான்; அப்படிப் பட்டவன் யாரென்றால்,

"யஏவம் வேதஹம் ப்ரஹ்மா ஸ்மீதி
ஸ் இதம் ஸர்வம் பவதி." (ப்ருஹதாரண்யோபநிஷத்)

எவன் ஆத்மசொரூபியாகிய நானே பிரம்மமென்று தெரிந்து கொள்கின்றானோ அவனே அந்தப் பரப்பி ரம்ம சொரூபமாகின்றான்.

"அயமாத்மா ப்ரஹ்ம" (மாண்டுக்யோபநிஷத்)

இத்தேஹத்தில் அந்தக்கரண (மனம் புத்தி சித்தம் அஹங்காரங்களுக்கு) சாக்ஷியாயிருக்கும் ஆத்மாவே பரப்பிரம்மம்.

"பூதேஷு பூதேஷு விசுந்த்ல் தீராஹ
ப்ரேத்யாஸ்மாந் லோகா தம்ருதா பவந்தி."(கேநோபநிஷத்)

சமஸ்த பிரயாணிகளிலும் ஆத்ம சொரூபியாகிய பரப்பிரம்மமே இருக்கின்றதென்று தெரிந்துகொண்ட புண்ணியவான் எவனோ, அவன் அந்த ஜன்மத்திலேயே மோக்ஷசித்தியை அடைவான். மோக்ஷமென்றால்,

"யதா பஞ்சாவதிஷ்ட்டந்தே ஜ்ஞாநாதி மநஸா ஸஹ
புத்திஸ்ச்ச நவிசேஷ்ட்டேத தாமாஹுர் பரமாங்கதிம்."
(கடோபதிஷத்)

சுரோத்திரங் (காது)கள் நேத்திரங்கள் முதலாகிய ஞானந்திரியங்கள் ஐந்தும், மனதும் ஆத்மாவில் சேர்ந்து இதர வியவகாரங்களில்லாமல் சகல எண்ணங்களையும் மறந்து, நிச்சலனமாய் தந்மயமாயிருப்பதே மோக்ஷ மென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

"த்வமேதாஹம் நபேதோஸ்தி பூர்ணத்வாத் பரமாத்
(மண்டல ப்ராஹ்மணோபநிஷத்." (மகஹ,

நீயே நான், நானே நீ ; நாம் இருவரும் சர்வ பரிபூரண பரப்பிரம்மமாகிய ஆத்மசொரூபிகளே, நாம் இருவரும் ஏக பரப்பிரம்மமே. நம் இருவருக்கும், சத்தியமாய் எவ்வித பேதங்களும் இல்லை. இதற்குத் திருஷ்ட்டாந்தம் ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம் 12-சுலோகம் 6-7 பிரமாணம் என்றால்,

யேது ஸர்வாணி கர்மாணு மயி ஸத்யஸ்ய மத்பராஹ
அநந்யேநைவயோகேந மாம் த்யாயந்த உபாஸதே
தேஷாமஹிம் ஸமுத்தர்தா ம்ருத்யுஸம்ஸார ஸகாரத்
பவாமிநகிராத் பசர்த்த மய்யாவே ஸித கேதஸாம்.

எவன் சகல கர்மங்களையும் நான் செய்கின்றேன் என்னும் அஹங்காரம் இறந்து எல்லாம் அவன் செயலென்று நினைத்து மனோவாக்குக் காரியங்களை என்னிடத்தில் ஒப்பித்து எனது

பூர்ண ஞாபகத்தில் நின்று நீயே நான் நானே நீ என்கிற ஐக்கியானு சந்தானத்தில், எனது சொரூபத்தை மநநம் செய்பவனாயும் (தியானார்ச்சன சிரவண கீர்த்தன ஸ்துதி நமஸ்காரங்களை) எவன் செய்கின்றானோ அவனை சம்சார சமுத்திரத்திலிருந்து சீக்கிரமாய்க் கரையேற்றுவேன். இன்னும் அத்யாயம்-10 சுலோகம்-2 பிரமாணம் என்ன வென்றால்,

ந மே விது ஸ்ஸுரகணாஹ ப்ரபவம் ந மஹர்ஷயஹ
அ ஹமார்ஹி நேவாநாம மஹர்ஷிணாம் சஹர்வஸஹ

எனது உத்தமமான அவதார மஹிமையைத் தேவர்களும் அறியார்கள். மஹரிஷிகளும் அறியார்கள். நான் தேவர்களுக்கும் மஹரிஷிகளுக்கும் காரணமாயிருக் கின்றேன்.

ஸம்மம் ஸர்வேஷு பூதேஷு திருஷ்ட்டாந்தம் பரமேஸ வரம்
விஸ்யத்ஸ்வ விநஸ்யந்தம்யஹ பஸ்யதீ ஸ பஸ்யதி
அத்-13 சு 28.

தேவதைகள் மனிதர்கள் முதலாகிய ரூபபேதங் களில்லாமல், அந்தந்த தேஹங்களுக்கு இருக்கப்பட்ட இந்திரியங்கள் மனம் புத்தி சித்தி அஹங்காரம் முதலானவை களுக்கெல்லாம் சாக்ஷியாயிருக்கப்பட்ட பரமேஸ்வர னென்னும் ஆத்மாவை யதார்த்தமாய்த் தெரிந்து கொண்டவன் எவனோ அவன் சம்சார விரக்தனாகின்றான் என்னும் கீதாவாக்ய ரீதியாய், ஆத்மசொரூபியாகிய நீயே பரப்பிரம்மம். அந்தப் பரப்பிரம்மமே நீ என்று அறிந்து சகல எண்ணங்களையும் விட்டு, ஆத்மசொரூபியாகிய நானே பிரம்மமென்று சதா ஆத்மானு சந்தானம் செய்து கொண்டிருக்கக்கடவாய்.

## 43. உபநிஷத்துகளின் ரஹஸ்யார்த்தம் வெளியிடுதல்

ஸம்ஸ்கிருத பாஷையில் 'உதர்' என்னும் தாதுவிருந்து 'உபநிஷத்' என்னும் சப்தம் உண்டாயிற்று. 'உதர்' என்றால் நாசம் செய்யப்பட்டது, அதாவது அஞ்ஞானமென்னும் சம்சார விருக்ஷத்தை நிர்மூலமாய்க் கண்டித்து பிரம்ம லக்ஷணத்தையும் ததேக ஞானத்தையும் போதித்து ஜநந மரணங்கலில்லாமற் செய்து பிரம்மம் இப்படிப்பட்டதென்று தெரிவித்து, அஞ்ஞானத்தைப் போக்கடித்து ஜீவபிரம்மைக்கியத்தைப் போதிப்பதே உபநிஷத்துகளென்று சொல்லப்படும்,



*ஆலிலையின்மீது சயனித்துக்கொண்டிருப்பது என்று காட்டும் குறி யாதெனில் சகல ஜீவராசிகளின் · ஹிருதய கமலத்தில் தாமரைக் கமலம்போன்ற ஒரு கமலமுண்டு அதனை இருபிளப்பாய்ப் பிளந்தபோது அது ஆலிலை வடிவமாயிருக்கும். அப்படிப்பட்ட கமலத்தில் ; ஜீவாத்மா நிவசித்துக் கொண்டிருப்பதனால் அந்த ஜீவாத்மாவிற்கு ஆலிலையின்மீது பள்ளிக்கொண்டான் என்று பெயர் வந்தது.

இந்த உபநிஷத்துகள் வேதவாக்கியம். அதாவது ஆதியில் மஹா பிரளயத்தில் பரப்பிரம்மமானது அவதரித்து ஜலத்தில் *ஆலிலையின்மீது படத்தில் காட்டியதுபோல் சயனித்துக் கொண்டு,

சுரு || "நிஸ்வாஸபூத மே விஷ்ணோர் ஜாத்ஹ வேதாஸு விஸ்தராஹ."

என்னும் சுருதி வாக்கியரீதியாய் நான், மூச்சை வெளியில் விட்டபொழுது அம்மூச்சிலிருந்து ருக், யஜுர், ஸாம அதர்வண மென்னும் நான்கு வேதங்கள் உண்டாயின, அதில் கர்மபக்தி இப்படிப்பட்டதென்றும் ஞான நுஷ்டானங்கள் இப்படிப்பட்ட தென்றும் தெரிவித்து அதை உலகத்திலுள்ள மானவ ஜனங்களுக்கு சுருதி ஸ்மிருதி பிரமாணங்களுடன் சொல்லி யிருக்கிறேன். ஆதலால், வேதங்கள் என்னுடைய வாக்கியங் களென்று அறிய வேண்டும்.

அந்த வேதங்களிலிருந்து, ருக்வேதத்தில் 21-காகை (பிரிவு) களும் யஜுர் வேதத்தில் 109-சாகை (பிரிவுகளும்) சாம வேதத்தில் 1000-சாகை ஆயிரம் (பிரிவு) களும் அதர்வண வேதத்தில் 50-சாகை (பிரிவு) களும், ஆகமொத்தம் ஆயிரத்து நூற்றெண்பது சாகை (பிரிவு) களும் உண்டாயின. இந்த ஆயிரத்து நூற்றெண்பது ஆயிரத்து நூற்றெண்பது உபநிஷத்துகள் உண்டாயின. இதில் ருக்வேதத்திலிருந்து பத்தும் யஜுர்வேதத்திலிருந்து ஐம்பத்தொன்றும். சாமவேதத்திலிருந்து முப்பத்தொன்றும் ஆக மொத்தம் நூற்றெட்டு உபநிஷத்துகளை மாத்திரம் எடுத்துக் கொண்டார்கள். ஏனென்றால், இந்த ஆயிரத்து நூற்றெண்பது உபநிஷத்துகளையும் பார்ப்பதற்கு நமது ஆயுட்பாகம் போதாமலிருப்பதால், நாம் மோக்ஷத்தை அடைவதற்கு வேண்டிய முக்கியமான உபநிஷத்துக்களையெல்லாம் பரீக்ஷித்துப் பார்த்த பொழுது நூற்றெட்டு உபநிஷத்துகள் மாத்திரமே அகப்பட்டன.

மனதை நிறுத்துவதற்காக எவை முக்கியமான உபநிஷத்துகளோ அவைகளில் சிற்சில உபநிஷத்துகளை மாத்திரம் இந்நூலில் காட்டப் பட்டிருக்கின்றன. ஆதலால், குரங்கைப்போல் பலயிடங்களிலும் ஓடித்திரியும் மனதை ஓடவிடாமல் நிறுத்தி, நாமெல்லோரும் முக்தியடைய இந்த 'ஜீவப்பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யமே' மிகவும் முக்கியமான நூல்.

ஆதலால் ரெயிலுக்குப் போகப்பட்டவன், தனக்கு வேண்டும் வஸ்த்துக்களைத் தன் பிரயாணத்திற்கு எப்படிச் சித்தப்படுத்திக் கொள்கின்றானோ அதுபோல் நம்முடைய பிராண, பிரயாண காலத்திற்கு வேண்டிய விஷயங்களை யெல்லாம் இந்நூலில் உபதேசமாய்ச் சொல்லியிருக்கின்றோம். அதை தெரிந்து கொண்டு இன்று முதல் அந்த உபதேசத்தை ஒருநாளும் மறவாமல் தினந்தோறும் சாதனைச் செய்துவர வேண்டும்.

இதற்கு திருஷ்ட்டாந்தம், ஸ்ரீ கிருஷ்ணபகவானை அர்ஜுநன் என்ன கேட்கின்றாரென்றால், ஹே சுவாமி! மரண காலத்தில் கிருஷ்ணாவென்று சொன்னால் மேலான பதவியை அடைவாரென்று சொன்னீரல்லவா ? அதுபோல் மரண காலத்தில் நான் கிருஷ்ணாவென்று சொல்லுகின்றேன். அதற்கு பகவானான ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்கின்றார் ஓஹோ ! அதுவா உனது அபிப்பிராயம் ! அப்படிக்கல்ல, நீ இப்பொழுது எந்த வஸ்துவின்மீது அதிக பிரீதியை வைத்திருக்கின்றாயோ அந்த வஸ்துவே உனது பிராண பிராயணகால சமீபத்தில் உன்னெதிரில் வந்து நின்று காணப்படுமேயொழிய என் நமஸ்மரணை உனக்கு உண்டாகவேமாட்டா. ஆதலால் நீ இன்று முதல் சதா காலமும் என் நாமத்தை ஸ்மரித்துக்கொண்டு வருவாயாகில் உன் மரண காலத்தில் நீ பிரஞ்னாஞதப்பி இருந்த போதிலும், அந்தச் சமயத்தில் நான் உன்னுள்ளே அந்தர்யாமியாயிருப்பதனால், என்

ஸ்மரனை உன் ஞாபகத்திற்கு வரும்படிச் செய்வேன். ஆதலால், இன்று முதல் என்னை ஸதாஸமரித்துக்கொண்டே வரக்கடவாய் என்று சொல்லினர்.

ஆதலால் ரெயிலுக்குப் போகப்பட்டவன் பத்து நிமிஷங்களுக்கு முந்தியே ரெயிலிடம் போயிருக்க வேண்டும். ரெயில் வந்து நின்றபிறகு ரெயிலிடம் போய்ச் சேரப்பட்டவனுக்கு ரெயில் அகப்படமாட்டாது. அதுபோல் நமது பிராண பிரயாணகாலம் சமீபத்துத் தன் ஸ்மரணை தப்பியிருக்கும்பொழுது, நம்முடைய பந்து ஜனங்களெல்லோரும் செவியினிடம் வந்து, அண்ணா ! எனக்கென்ன சொல்லுகின்றாய்? மாமா ! எனக்கென்ன சொல்லுகின்றாய் ? அப்பா ! எனக்கென்ன சொல்லுகின்றாய் ? என்று சிலரும் மற்றும் சிலர் ராமா வென்று சொல், கிருஷ்ணா என்று சொல், நாரயணா என்று சொல் கோவிந்தா வென்று சொல், என்று உரத்த சப்தத்துடன் சொல்லுவார்கள். அந்தச் சமயத்தில், ராமனாகிலும் கிருஷ்ணனாகிலும் நாராயணனாகிலும் கோவிந்தனாகிலும் வந்து அவனுக்குச் சகாயம் செய்யப் போவதில்லை. இது விஷயங்களைக் குறித்து வரப்போகும் மஹோபநிஷத்தில் விரிவாய்க் காணலாம்.

'மநஸா பாவ்யமாநோஹ தேஹதாம்யா தி தேஹகஹ
தேஹவாநையா முகதோ தேஹதர்மைர் நலிப்யதே.'

ஆதலால், இந்நூலில் சிவராஜயோக சமாதியில் சொல்லியிருக்கும் 'ஸோஹம்' மந்திரத்தை இடைவிடாமல் இராப்பகலாய் இன்றுமுதல் மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்துவந்தால் மரண காலத்தில் தான் ஸ்மரணை தப்பியிருந்தபோதிலும் தன்னில் ஸாக்ஷிபூதமாயிருக்கும் பரப்பிரம்மத்தின் அம்சமாகிய ஆத்மாவிற்குக் கருணையுண்டாய் ஐயோ பாவம் ! இவன் இதுவரையில் 'ஸோஹம்' மந்திரத்தை

ஸ்மரித்துக்கொண்டு வந்தானே இவனைக் கைவிடலாகாதென்று எண்ணி, இவன் ஸ்மரித்துக் கொண்டிருந்த 'ஸோஹம்' மந்திரம் அவன் ஞாபகத்திற்கு வரும்படிச் செய்விக்கும்.

இவ்வித அப்பியாசம் செய்வதைவிட்டுப் பத்து சிநேகிர்களுடன்கூடி, புட்பால், டென்னிஸ், கிரிகெட்டு, பியாட்மெண்டன், இஸ்பேட்டு, சதுரங்கம், சொக்கட்டான் முதலாகிய ஆட்டங்களை ஆடிக்கொண்டும், சந்தோஷமாய்ச் சிரித்துக் கொண்டும் நியூஸ்பேப்பர்களை வாசித்துக்கொண்டும் விருசாவாக காலக்ஷேபம் செய்து வரும் நாளில் மேற் சொல்லியவர்களில் எவராகிலும் ஒருவர் காயலாவாயிருக்கும் பொழுது ஐயோ! இன்னார் காய லாவாயிருக்கின்றாராமே! பாவம் என்று மற்ற ஒன்பது பேர்களும் கலந்து பேசிக் கொள்வார்களே யொழிய காயலாவாயிருக்கப் பட்டவன், மற்ற ஒன்பது பேரையும் நினையாமல் அவர்களை மறந்து பிரஞ்ஞை தப்பித்தன் பிராண பிராயண காலத்திலிருப்பான்.

ஆதலால், மேற்சொல்லிய ஆட்டங்களில் இருந்த போதிலும் மனதை இந்திரியங்களின் வழியாகச் செலுத்தாமல் பரப்பிரம்ம சொரூபத்தில் செலுத்த வேண்டுமென்பதே இந்நூலின் கருத்து.



## 48. தத்துவங்களைப் பரிசோதனை செய்தல்

கருவூரில் என்றால் கர்ப்பப்பையில் கருவாய்த்தரித்துக் கட்டுக்பட்டுக் குடியிருந்து வந்த ஒரு சிறுவன் பிரம்ம ஞானத்தை அடைய விரும்பி, ஓர் ஆசாரியரை அடுத்துப் பற்பல சுருதிகளைக் கேட்கலுற்றான். கேட்டவைகளைச் சிந்திக்குங்காலத்தில, அவனுக்கு அநேக விஷயங்களில் சந்தேகமுண்டாயிற்று. அவைகளில் முக்கியமானது எதென்றால், சர்வ ஜீவராசிகளும் பரப்பிரம்மமே என்று சுருதிகள் முறையிடுகின்றனவே? ஆனால் நாம் பரப்பிரம்மத்தினின்றும் வேறாகத்தானே இருக்கின்றோம். அது ஏன் என்பதேயாம். பிறகு, அவன் இதை ஆழ்ந்து யோசிக்குமிடத்தில் தன்னிடத்திலுள்ள அஞ்ஞானமே காரணமென தெளிந்தான். ஆயினும், இதை சந்தேகம் தெளிய ஓர் குருவையடுத்துக் கேட்கத் தொடங்கினான்.

*சிஷ்யன் அஞ்ஞானமென்பது எது?*

குரு - தன்னைத்தான் அறியாமல் இதர விஷயங்களில் பிரயத்தனப்படுவதே அஞ்ஞானமென்று சொல்வார்களே யொழிய, அஞ்ஞானமென்று ஓர் வஸ்து இல்லை. அஞ்ஞான மென்பது அறியாத்தன்மையேயாம்.

*சிஷ்யன் மாயை என்பது என்ன?*

குரு - மாயை என்பது பகவானுடைய லீலையேயொழிய மாயை என்று ஓர் வஸ்து இல்லை, ஆதலால் இந்த மாயா சொரூபத்தைச் சொல்லுகின்றோம் கேள்.

பூலோகத்தில் கோசலமென்னும் தேசத்தில் காதி என்னும் பெயருடைய ஓர் பிராமணன் இருந்தான். அவன் ஒரு காரியத்தை மனதில் நினைத்து உறவினரை விட்டு நீங்கி வனத்திற்குச் சென்று

ஒரு தாடக நீரின் நடுவில் கழுத்தளவு ஜலத்தில் போய் நின்று விஷ்ணு மூர்த்தியை நினைத்து எட்டு மாதங்கள் வரையில் மேலாகிய தவத்தைச் செய்துவந்தான். பிறகு விஷ்ணுவானவர், அவனுக்குப் பிரத்தியக்ஷமாய், உனக்கென்ன வரம் வேண்டுமென்று கேட்டனர். அதைக் கேட்ட பிராமணன் கரையேறிவந்து திருமாலைக் கைகுவித்து வணங்கி பரமேஸ்வரா! லஷ்மீ மநோஹரா! புரஹரா! ஸ்மரஹரா! பாபவிதூரா! பரமகல்யாணகுணாதரா! தயாகரா! தர்ம நிலையா! ப்ராணதாரித்த நாசநா! பவபந்த விமோசநா! பக்தவச்சலா! சந்திர சூடாவதம்ஸா! உமது மாயா சொரூபத்தைத் தரிசிக்க விரும்புகின்றேன் என்றான். அதைக்கேட்ட பகவான், அப்படியே என் செரூபத்தைக் காணக்கடவாய், கண்ட பிறகு அதனை நீங்கக்கடவாயென்று அநுக்கிரஹித்து பகவான் மறைந்துவிட்டான்.



பகவான் மறைந்தவுடன், பகவானை சேவித்த சந்தோஷத்தினால் அதிக உற்சாகம் (ஸந்தோஷம்) கொண்டு தன்னைத்தான் மறந்து அநேக நாள் பரியந்தம் தன் தியானத்திலேயேயிருந்து விட்டான். இவ்வாறு சில மாதங்கள் சென்றன. பிறகு ஒரு நாள் முன்னே திருமால் அருளிச்செய்த மாயா சொரூபத்தை நினைத்துக் கொண்டே சென்று ஒரு தாமரைத் தடாகத்தில் இடுப்பளவு ஜலத்தில் நின்று வலதுகை மோதிர விரல் பெருவிரல்களால் இடது வலது மூக்குத் துவாரங்களை மூடி தடாக நீரில் ஒரு முழுக்குப்பேட்டு

சிரசைமேல் எடுப்பதற்குள் என்ன காக்ஷியைக் கண்டதும் இனி சொல்லுகிறோம். தான் தன் பந்துக்கள் இருக்கும் வீட்டில் வியாதியினால் இறந்தவனாகத் தன்னைக் கண்டான். பிறகு தன் பந்துக்களும், தன் மனைவி தன் தாய் முதலியோர் தன்மேல் விழுந்து கட்டிக்கதறி அழுவதையும் பார்த்தான். இதற்குமேல் தன்னைச் சுடலைக்குக் கொண்டுபோய்ச் சுட்டுச் சாம்பலாய்ச் செய்ததையும் பார்த்தான். நீரின் நடுவிலிருக்கின்ற பிராமணன் இன்னும் என்ன கண்டானென்றால், தான் ஊணதேசமென்கிற ஒரு நகர முடிவில் இருக்கும் நீசர் குலத்தில் ஒரு பெண்ணின் வயிற்றில், வெந்தக் கரிக்கட்டைபோல் ஆண் மகனாகப் பிறந்து, அந்த குலத்துப் பெண்ணொருத்தியை மணம் புரிந்து, மனமும் பிராண வாயும் போல் ஒற்றுமையாய்க் கலந்து வாழும் நாளில், தன் குலம் விளங்கச் சில புத்திரர்களைப் பெற்றதையும் கண்டான். சிலநாள் சென்ற பிறகு தன் சேரிக்குச்சில தூரத்தில் ஒரு சிறுதழைக் குடிசைகட்டி அதில் வசித்து கொண்டிருக்கும் பொழுது, தன் மக்களுக்கும் தனக்கும் தன் மனைவிக்கும் கிழத்தனம் வந்துவிட்டது. மனைவி மக்களுக்கும் தனக்கும் ஒருமிக்க கிழத்தனம் வந்ததைப் பார்த்து வருந்துங்காலத்தில் தன்னைத் தவிர மற்றவர்களையெல்லாம் காலன் (யமன்) கொண்டுபோய்விடதான் தனியேயிருந்து வாய் விட்டலறி ஓ! வென்று கூச்சலிட்டழுது பிறகு சகிக்கமாட்டாமல் மனங்கலங்கி நிராசையுள்ளவனாய் அநேக நாடுகளில் வெகுகாலம் திரிந்து கொண்டிருப்பதாய்க் கண்டான். இவ்வாறு திரிந்து கொண்டே கடைசியாய்க் கீரநாட்டின் ராஜதானியில் புகுந்து சொர்க்கலோகம் போல் பொன்மயமாயிருக்கும் வீதியின் வழியாய் வந்துகொண்டிருப்பதையும் கண்டான். அதுசமயம் அவ்வூர் அரசன் மாண்டிருந்தபடியால் ராஜ்ஜீய பரிபாலனம் செய்ய வேற்றரசனை நியமிப்பதற்காகப் பட்டத்து யானையை மந்திரிகள் அலங்கரித்து, அதன் துதிக்கையில் புஷ்ப மாலையைத்தந்து செங்கோல் செலுத்த வேற்றரசனைக் கொண்டு

வரக்கடவாய் என்று அந்த யானையிடம் சொல்லி யனுப்பினார்கள். அவ்வார்த்தையைக் கேட்ட யானையானது, உடனே மாலையைத்தன் தும்பிக்கையால் எடுத்துக்கொண்டு அதிவேகமாகச் சென்றது, அப்பொழுது ராஜாதிராஜர்கள் எல்லோரும் தம் தம் கழுத்தில் மாலையைத் தரித்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்து யானைக்கெதிரில் சென்று நின்றார்கள். அந்த யானையானது அவர்களின் கழுத்தில் மாலையைச் சூட்டாமல் அவர்களிலிருந்து தப்பித்துக் கொண்டுமுன் சொல்லிய பொன்மயமாயிருக்கும் வீதியன் வழியாய் வந்தது. அப்பொழுது காதியென்னும் சண்டாளன், யானை வரும் வேகத்தை பார்த்துப் பயந்து ஓர் மூலையில் பதுங்கிக் கொண்டான். மேற்படி யானையானது சண்டாளனுக்கு நேராய் வந்து அவன் கழுத்தில் மாலையைத் தரித்துத் தன் முதுகின் மேலிருக்கும் அம்பாரியில் ஏற்றிக்கொண்டு போவதையும் கண்டான்.

சிஷ்யன் : ஓ யோகீஸ்வரரே! அந்த யானையை எதிர்நோக்கி வந்த ராஜாதி ராஜாகளுக்கெல்லாம் மாலையைத் தரிக்காமல் கேவலம் நீசனாயிருக்கும் சண்டாளனது கண்டத்தில் (கழுத்தில்) மாலையைத் தரிப்பதற்குக் காரணம் யாது?

குரு : குழந்தாய்! அந்தக் காரணத்தைச் சொல்லுகின்றோம் கேள், இப்பொழுது மாயைக்குள் அகப்பட்டிருக்கும் சண்டாளன், காதி என்னும் பிராமணனென்று உனக்கு நன்றாய்த் தெரிய வருகின்றதல்லவா? இவன் ஆதியில் விஷ்ணுவைக் குறித்துத் தவம்செய்தபடியால் சர்வத்திற்கும் ஆதாரமாய் இருக்கப்பட்ட பரப்பிரம்மமே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாச மென்னும் பஞ்சபூதங்களால் விஷ்ணு ரூபத்தைத் தரித்துக் காதி என்னும் பிராமணனிடம் சென்று அவன் கேட்ட வரத்தைத் தந்து மறுபடியும் முன் சொன்ன பஞ்சபூதங்களையும் அந்தந்தப் பூதங்களில் ஐக்கியம் செய்து முன்னெடுத்த விஷ்ணு ரூபத்தை மறைத்து தான் யதாரீதியாய்ப் பரப்பிரம்மமாகவே இருந்தது.

२५२

குழந்தாய் இவன் தவம் செய்யும் விஷயம் அந்தப் பரப்பிரம்மம் எப்படி அறியுமென்று எண்ணுகின்றாயோ என்ன? அதன் ரகஸ்யத்தைச் சொல்லுகின்றோம் கேள். மனிதர்கள் எதை எதை நினைத்துத் தவம் செய்கின்றார்களோ அவைகளையெல்லாம் அவரவர்களின் இருதய கமலத்தில் சாக்ஷி சொரூபமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஸாக்ஷாத் பரப்பிரம்மத்தின் அம்சமாகிய ஆத்மா அறிகின்றது. எப்பொழுது ஆத்மா அறிகின்றதோ அப்பொழுதே பரப்பிரம்மமும் அறிந்ததாகும். "ஆத்மா" "பரப்பிரம்மம்" என்று நாமபேதமே யொழிய அதன் குணம் மாத்திரம் ஒன்றேயாம். எப்படியெனில் ஏரியினுள்ள ஜலம் ஊர் முழுதும் இருக்கப்பட்ட ஜனங்களின் தாகத்தைத் தணிக்கச் செய்கின்றது. குடத்து ஜலம் ஓர் குடும்பத்திலுள்ள ஜனங்களின் தாகத்தைத் தணிக்கச் செய்கின்றது. ஒரு சிறிய சொம்பு ஜலம் ஒரு மனிதனின் தாகத்தைத் தணிக்கச் செய்கின்றது. ஆதலால், பெரிது சிறிதென்னும் பேதமேயொழிய தாகம் தணிக்கும் தன்மை ஒன்றேயாம். அதுபோல் ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் உள்ள பேதமென்று அறியக் கடவாய்.

இப்படி சாக்ஷி சொரூபமாயிருக்கும் ஜீவாத்மா, யானையிலும் இருப்பதனால், மேற்சொல்லிய சண்டாளனது கண்டத்தில் மாலையைத் தரிக்கும்படி, அந்த யானையினுடைய மனத்திற்குத் தோன்றும்படி ஆத்மா செய்வித்தது. அதனால் தன்னை எதிர்நோக்கி வரப்பட்ட ராஜாதி ராஜாக்களுக்கெல்லாம் (அரசர்களுக்கெல்லாம்) மாலையைத் தரிக்காமல் சண்டாளனிருக்குமிடத்திற்கே நேராய்ச் சென்று அவன் கழுத்தில் மாலையைச் சூட்டித்தன் அம்பாரியில் ஏற்றிக்கொண்டு மந்திரிமார்களிடம் கொண்டுபோய் விடும்படியாய்ப் பரப்பிரம்மத்தின் அம்சமாகிய ஆத்மா, யானையினது மனதிற்குச் சாவியைக் கொடுத்துத் திருப்பிவிட்டபடியால் அந்த யானை அவ்விதமாய்ச் செய்ததென்று அறியக்கடவாய். பிறகு

யானையால் கொண்டு வரப்பட்ட இவனை மாதர்கள் ஸ்நாநம் செய்வித்து அலங்கரித்தார்கள். பழைய மந்திரிமார்களும் சேனாதிபதி முதலானோர்களும் இவனை அரசனாக முடிசூட்டி காவலன் என்கிற நாமமளித்து, அவனது ஆஞ்ஞையைச் சிரசாகவகித்து நடந்தார்கள். அப்பொழுது அந்த சண்டாளன் கீரதேசத்தை நீதியாக செங்கோல் செலுத்திவந்தான். இப்படி எட்டு வருஷங்கள் கழியவே ஒரு நாள் தன்யனாய் காலால் நடந்து தன் அரண்மனையின் தெரும்புறத்தில் நீசவேஷத்தோடு உலாவும் சமயத்தில், முன்பு தன் ஊரில் தனக்கு பழைய பந்துவாயிருந்தவர்களில். கீரதேசத்திற்குள் புகுந்து ராஜன் அரண்மனைக்கு நேராய் வந்து கொண்டிருக்கும்போது, அவர்களில் ஒரு முதியோன் வந்து அரசனைப் பார்த்தவுடன் ஆசையோடு தழுவி முன்பெயரைச் சொல்லி, எங்களுக்குப் பழைய பந்துவாகிய நீ எங்களை விட்டு எங்கே போனாய்? இப்போது எவ்விடத்திலிருக்கின்றாய் என்று இவனது பழைய வரலாற்றை உள்ளபடியே சொல்லி விசாரித்தான் அதைக்கேட்ட இவன், இங்குள்ளவர்கள் யாராயினும் இதைக் கேட்பாராயின் தனக்கு பழியாய் முடியுமென்று, நினைத்து அச்சண்டாளன் முதியோனை உறத்த சப்தத்தோடு அதட்டித் துறத்திவிட்டு, விரைவாகத் தனது அந்தப்புறத்தில் பிரவேசித்தான். சாளரவாயிலில் நின்று இவைற்றையெல்லாம் கண்டும் கேட்டுமிருந்த ஸ்திரீ களெல்லோரும் ராஜஸ்திரீ மந்திரிமார்கள் முதலானவர்களுக்கும் அறிவிக்க, இவன் சண்டாளனா யிருக்கலாமென்று அவர்களும் நினைத்து மிகவும் மனவருத்தமடைந்தார்கள். ஆனால் அவன் மாத்திரம் மனங்கலங்காமல் அவைகளை அறியாதவன் போல் பழையபடியே சிங்காசனத்திலிருந்தான். இவனை மாதர்கள், மந்திரிமார் முதலானோர்கள் தீண்டுவதற்குச் சகிக்காமல் பிணத்தை அருவருத்தல்போல் அருவருத் திருந்தார்கள் இவனோ கல்வி செல்வங்களிரண்டுமில்லாத பிராணிகளைப்போல்

இருந்தான். அந்த நகர மாந்தரும் நீசரானோம். இனி ஒர பிராயசித்தினாலும் பரிசுத் தராகமாட்டோம். நாம் பரிசுத்தமாவதற்காக தீப்பாய்வோமென்று நிச்சயித்து, நெருப்பை வளர்த்தி அதில் எல்லோரும் வீழ்ந்து மடிந்தார்கள். இவன் அவர்கள் மடிந்ததைக் கண்டு, நமது தொடர்பாலல்லவோ இத்தனை பேர்களும் நாசமடைந்தார்கள். இனி நாமும் மாண்டு போவதே தக்க நன்மையென்று நினைத்துத் தானும் தீ மூட்டி அதில் விழுந்தபோது, அந்தத் தீயானது இளந்தளிரை எரிப்பதுபோல் இவன் சரீரத்தை எரித்தது. உடனே நீரில் மூழ்கியிருந்த காதியென்னும் பிராமணன், ஜலத்திற்குள் மூழ்கியிருந்த சிரசை மேலெடுத்தவுடன் பிராமணன் சரீரம் பதைபதைத்து நடுங்கி உடனே நீரைவிட்டு மேலெழுந்து மஹா மாயையினின்று நீங்கி ஈஸ்வரனது சர்வ சக்தியை குறித்துப் புகழ்ந்து மனங்களித்திருந்தான். (சந்தோஷமாயிருந்தான்) இக்கதை இன்னும் உண்டு. இவ்விடத்திற்கு வேண்டியது இவ்வளவே கதை முழுவதும் அறிய விரும்புவோர் ஞானவாசிட்டம் 24-வது கதையில் விரிவாய்க் காணலாம்.

சிஷ்யன்:- சுவாமி ஓர் முழுக்குப்போட்டுச் சிரசை எடுப்பதற்குள் எத்தனையோ வருஷங்கள் சென்று விட்டனவே இதற்குக் காரணம் யாது?

குரு:- குழந்தாய்! அதற்குக் காரணம் சொல்லுகின்றோம் கேள். பிரமதேவருக்கு இருக்கப்பட்ட வயதை அனுசரித்துத் தன் மாயா சொரூபத்தைக் காதியென்னும் பிராமணன் தரிசிக்கும்படி பகவான் ஸங்கல்பித்தார் (நினைத்தார்). அதனால் அவன் அத்தனை வருஷங்கள் மாயையில் கட்டுப்பட்டிருந்தான். இவன் இன்னும் எத்தனையோ கோடி ஜன்மங்கள் எடுக்க வேண்டுமென்று பகவான் ஸங்கல்பித்தாலும் அத்தனை கோடி ஜன்மங்களையும் ஓர் முழுக்குப்போடுவதற்குள் எடுக்கவும் எடுக்கலாம்.

# 49. கிருஷ்ணன் பிரம்மதேவர் கர்வத்தை அடக்குதல்

பிரம்மதேவருக்கு ஆயுட்காலம் எப்படியென்றால் அதைச் சொல்லுகிறோம் கேள். ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம் 8, சுலோகம் 17 பிரமாணம் என்னவென்றால், ஸஹஸ்ரயுகபர்யந் மஷர்யத் ப்ரஹமணோ விதுஹ"ராத்ரிப் யுகஸ்ஹஸ்ராந்தாம் தே ஹோராத்விரோ ஜநநஹ





கிருதாயுகம் திரேதாயுக, துவாபரயுகம் கலியுகம் என்னும் நான்கு யுகங்களும் ஆயிரமானால் பிரம்ம தேவருக்கு பகலாகும். இதுபோல் நாலு யுகங்களும் ஆயிரமானால் ஒரு இராப் பொழுதாகும். இவ்விரண்டும் சேர்ந்து பிரமதேவருக்கு ஒரு நாளாகும். இந்நாட்கள் முப்பதானால் பிரமனுக்கு ஒரு மாதம், இம்மாதங்கள் பன்னிரண்டானால் ஒரு வருஷம். இவ்வருஷங்கள் நூறானால் பிரம்மதேவர் ஆயுள்பாகமும் முடியும். அதாவது, உத்தராயணம் தக்ஷிணாயனமென்கிற மனித வருஷம் ஒன்றானால் தேவர்களுக்குப் பகலிரவு சேர்ந்து ஒரு நாளாகும். 360 தேவநாட்கள் ஒரு வருஷம், பதினேழுலக்ஷத்து இருபத்தெட்டாயிரம் மனித வருஷங்களானால் ஒரு கிருதாயுகம்.

ன்னிரெண்டு லட்சத்து தொண்ணூற்றோராயிரம் வருஷங்களானால் ஒரு திரேதாயுகம். எட்டுலக்ஷத்து அறுபத்து நாலாயிரம் வருஷங்களானால் ஒரு துவாபரயுகம் நாலு லக்ஷத்து முப்பத்து ஈராயிரம் வருஷங்களானால் ஒரு கலியுகம் இன்னும் ஸ்ரீ பகவத்கீதை அத்யாயம் 8, சுலோகம் 18 பிரமாணம் என்னவென்றால்,

அவ்யக்தாத் வ்யக்தயஸ்ஸந்வரஹ ப்ரவந்த்யஹராகமே
ராத்திரியாகமே ப்ரலீயந்தே தத்ரைவா வ்யக்தஸஞ்யயகே

பிரமனது விடியற்காலமாகிய பகற்காலத்தில் மூலபிரகிருதி என்னும் மாயையினால் எல்லா அண்டங்களும் உண்டாகின்றன. பிரம்மனுக்கு இரவாரம்பகாலத்தில் பிரகிருதி என்னும் மாயை லயமாகின்றது. அதாவது பிரமனது விழிப்பே உலகோற்பத்தி அவரது நித்திரையே உலகலயம் (பிரளவம்) இப்படிப்பட்ட வருஷங்களும் அநித்தியமென்று அறிந்தவர்களே ஞானிகளாவார்கள். ஆதலால், பிரகிருதி என்னும் மாயையுடன் கூடியிருக்கும் மாணவர்களின் மனதெல்லாம், பகற்காலங்களில் குரங்கைப்போல் பலவிடங்களில் ஓடோடியும் திரிந்து கொண்டிருக்கும். இவ்விதமாய் திரிந்துக் கொண்டிருக்கும் மனம் இராக் காலங்களில் எங்கும் ஓடாமல் ஒடுங்கியிருக்கும். இவ்வாறு கற்பங்கள் தோறும் இம்மனம் ஓய்வின்றி ஒவ்வொரு ஜன்மமெடுத்துத் திரிந்துக் கொண்டே வருகின்றது.

குழந்தாய்! பிரமதேவருக்கு முன் சொல்லிய நெடுநாள் ஆயுர்ப்பாகம் இருக்கின்றதென்று நினைத்து, என்னைப் போல் இவ்வளவு காலம் யார் ஜீவித்திருக்கின்றார்களென்று நினைத்து அஹங்காரங் கொண்டு, அன்னவாகனத்தின் மீதேறி வைகுண்டம் போய்ச் சேர்ந்து விஷ்ணுமூர்த்தியைத் தரிசித்து பரமபுருஷா! பரந்தாமா! அநாதரக்ஷகா! நான் ஜீவித்திருக்கும் காலம் வரையில் ஜீவித்திருக்கும் புருஷன் யாராகிலும் உலகத்தில் இருக்கின்றார்களா என்று விஷ்ணுமூர்த்தியைக் கேட்டனர்.

நீ சகல பிரபஞ்சத்தையும் சிருஷ்டித்து மஹானுபாவன், உனக்குச் சமானமானவர்கள் மூன்று லோகங்களிலும் யாருமில்லை. யாதொரு வியாதிகளுமில்லாமல் அனேக காலம் நீ ஜீவித்திருப்பாய். உன் மஹா மஹிமை இப்படிப்பட்டதென்று நான் ஒருவனே வர்ணித்துச் சொல்வது ஒரு பெரிதானதல்ல. இன்னும் சில பெரியோர்களை விசாரித்தாலேயன்றி உன் பிரபாவம் தெரியவராது, என்று பகவானான விஷ்ணுமூர்த்தி பிரமதேவருக்குப் பதில் சொல்லினர். அப்படியானால் அங்குபோய் விசாரித்து வரலாம் வருகின்றீர்களா என்று பிரமதேவர் விஷ்ணுமூர்த்தியைக் கேட்டனர். அதற்கு விஷ்ணுமூர்த்தி சம்மதித்து, கருடவாகனாருபராய் பிரமதேவரை அழைத்துக் கொண்டு ஓர் காட்டின் மத்தியில் நிவசித்துக் கொண்டிருக்கும் ரோமச மஹரிஷியைக் கண்டார்கள். அப்பொழுது அகஸ்மாத்தாய் விஷ்ணுமூர்த்தி தரிசநம் ரோமச மஹரிஷிக்குக் கிடைத்தவுடன், அவருக்கு உண்டாகிய பிரமாநந்தத்தினால் விஷ்ணுமூர்த்தியை மிகவும் துதிசெய்து சுவாமீ! தேவரீர் இவ்வளவு தூரம்வர காரணம் யாதோ அறியாமலிருக்கின்றேன். அதைத் தயை செய்து அனுக்கிரகிக்க வேண்டும் என்று ரோமச மஹரிஷி விஷ்ணுமூர்த்தியை வேண்டிக் கொண்டனர். அப்பொழுது விஷ்ணுமூர்த்தி ரோமச மஹரிஷியைப் பார்த்து ஐயா! முனி புங்கவா, உமது ஆயுர்ப்பாகத்தைத் தெரிந்து கொள்ள நாங்கள் இருவரும் இங்கு வந்தோம். ஆதலால் உமது ஆயுர்ப்பாகத்தை இந்த பிரமதேவருக்குச் சற்றே தெரியச் சொல்லவேண்டும். என்று பகவானான விஷ்ணுமூர்த்தி சொல்லினர். அதைக்கேட்ட முனிஸ்வரர் விஷ்ணுமூர்த்தியை நமஸ்கரித்து தேவா! ஸர்வஞ்ஞனான உமக்கு தெரியாத விஷயமும் ஒன்றிருக்கின்றதோ? ஆயினும் அடியேனை கௌரவித்துக் கேட்டதனால் சொல்லுகின்றேன் கேளுங்கள். இந்த பிரம தேவன் மரணமடைந்தால் என் சரீரத்திலிருக்கும் ஒருமயிர் விழுந்துவிடும்.

இப்படிப்பட்ட மயிர்கள் மூன்றுகோடி ஐம்பது லக்ஷம் மயிர்கள் என்சரீரத்தில் இருக்கின்றன என் சரீரத்திலிருக்கும் மயிர்களெல்லாம் விழுந்தவுடன் அடியேன் தேவரீருடைய பாதாரவிந்தம் வந்து சேர்ந்து சதானந்தத்தை அனுபவிப்பேன் என்றால் மூன்றுகோடி ஐம்பதுலக்ஷம் பிரமதேவர்கள் மரணமடைந்தால், அடியேன் சரீரத்திலிருக்கும் மூன்றுகோடி ஐம்பது லக்ஷம் மயிர்களும் விழுந்து விடும். என் சரீரத்திலிருக்கும் மயிர்களெல்லாம் விழுந்த பிறகு பகவானாகிய உமது பாதாரவிந்தம் வந்து சேர்வேன். என்று ரோமச மஹரிஷி சொல்லினர், அதற்கு விஷ்ணுமூர்த்தி ஐயா! மூன்றுகோடி ஐம்பதுலக்ஷம் பிரமதேவர்கள் மரணமடையும்வரையில் உமது தேகத்தை ரக்ஷிப்பதற்காக வீடு இருக்கவேண்டியது அவஸ்யமல்லவா? அதையேன் நிர்ணயம் செய்து கொள்ளவில்லை என்று கேட்டனர். அதற்கு ரோமச மஹரிஷி மந்தஹாசம் செய்து தேவதேவோத்தமா! இந்த தேகம் நீர்க்குமிழியைப் போன்றதென்று யதார்த்தமாய்த் தெரிந்தபிறகு, இதை அவ்வளவு பத்திரமாய்க்காப்பாற்ற வேண்டியதேன்? தேவரீருடையபாதாரவிந்த சேவையிலிருக்கப் பட்டவர் களுக்கு தேகாபிமானமும் ஏது? தேகாபிமானம் இருக்கும் வரையில் துக்கமே யொழிய சுகமில்லை, என்று சொல்லினர். அதற்கு விஷ்ணுமூர்த்தி, மிகவும் சந்தோஷித்து அவருக்கு மஹாவாக்கிய தத்துவங்கள் சிலவற்றைச் சொல்லி ரோமச மஹரிஷி சொல்லிய விஷயமே நிஜமென்று ஒப்புக்கொண்டு போய்வருகின்றோம் என்று விஷ்ணுமூர்த்தி சொல்லினர். பிறகு விஷ்ணுமூர்த்தி பிரமதேவரை அழைத்துக்கொண்டு மற்றொரு அண்ணிய (காடு) மத்தியில் நிர்மல (பரிசுத்தமான) பிரதேசத்தில் பிரம்மானுசந்தானம் செய்து கொண்டிருக்கும் அஷ்ட்ட (எட்டு) வக்கிரனென்னும் ரிஷியினிடம் சென்று தரிசனம் கொடுத்தார். அப்பொழுது அஷ்ட்ட வக்கிரமஹரிஷி விஷ்ணுமூர்த்தியை வெகு விதங்களாய்த் துதிசெய்து, தேவதேவோத்மா! தேவகி நந்தா!

தேவரீர் இவ்வளவு தூரம் விஜயம் செய்து அடியேனுக்குத்தரிசனம் கொடுத்ததைப் பார்க்க மிகவும ஆச்சரியமாயிருக்கின்றது. அடியேனால் ஆகவேண்டிய வேலை ஏதாகிலும் இருந்தால் ஓர் வார்த்தை சொல்லியனுப்பும்பக்ஷத்தில் தலையால் நடந்துவரேனா! தேவரீருடைய பக்தவாத்சல்யம் என்னவென்று சொல்வேன். தேவரீருடைய சன்னிதானத்திற்கு அடியேனை வரவழைத்தால் தாசனுக்கு மார்க்க ஆயாசம் உண்டாகுமென்று எண்ணியல்லவோ தேவரீரே இங்கு வந்தீர்கள். அடியேன் தன்னியனானேன். வந்தகார்யம் எதுவோ அதை தயைசெய்து சொல்லவேண்டும். என்று மிகவும் பக்தியுடன் கேட்டுக்கொண்டனர்.

அப்பொழுது அரவிந்த நயனனாகிய பகவான் புன்சிரிப்பாய்ச் சிரித்து அஷ்டவக்கிர ரிஷியைப்பார்த்து ரிஷிகுல திலகமே! உம்முடைய ஜீவிதகாலம் (ஆயுர்பாகம்) எவ்வளவென்று தெரிந்து கொள்ள இங்கு வந்தோம். நீர் எவ்வளவு காலம் ஜீவித்திருப்பீரோ அது விஷயம் இப்பிரம தேவருக்குச் சற்றே தெரியச் சொல்ல வேண்டும் என்று சொல்லினர். அதற்கு அஷ்டவக்கிர ரிஷியானவர் பரமேஸ்வரா! பரந்தாமா! சகலலோகத்திற்கும் ரக்ஷகனாயிருக்கும் உமக்குத் தெரியாத விஷயமும் ஒன்றுண்டோ? ஆயினும் உமது ஆஞ்ஞையைமீறி நடப்பது அடியேனுக்குத் தகுதியல்ல. என் சரீரத்தில் எட்டுக் கோணங்கள் இருக்கின்றன. அவைகளெல்லாம் நிமிர்ந்தால் என் ஆயுர்ப்பாகம் முடியும். அதாவது மூன்றுகோடி ஐம்பதுலக்ஷம் பிரமதேவர்கள் மரணமடைந்தால் ரோமா மஹரிஷி எட்டு தடவைகளில் பிறந்து மரணமடைந்தால் என் தேகத்திலிருக்கும் எட்டு கோணங்களும் நிமிர்ந்துவிடும். இந்த கோணங்களெல்லாம் நிமிர்ந்தவுடனே என் ஆயுர்பாகம் முடியும். அப்பொழுது அடியேன் சுத்தப் பிரம்மமாய் விடுவேன் என்று சொல்லினர்.

அப்பொழுது விஷ்ணுமூர்த்தி அவரைப்பார்த்து, ஐயா! அதுவரையில் சரீர ரக்ஷணார்த்தமாய் வீடு ஒன்று இருக்கவேண்டுமல்லவா? அது ஏன் இல்லாமலிருக்கின்றீர். என்று கேட்டனர். அதற்கு ரிஷியானவர் சொல்லுகின்றார். மஹானுபாவா, என் மனதை சோதிக்க இவ்வார்த்தையைக் கேட்கின்றீர்போல் தோன்றுகிறது. ஆயினும் என்னை ஒரு பொருட்டாய் நினைத்து கேட்பதனால் சொல்லுகின்றேன். கேளுங்கள். இந்த சரீர நீர்க்குமிழியைப் போன்றதென்று எண்ணாமல் நித்தியமானதென்றெண்ணி, இத்தேக ரக்ஷணார்த்தத்திற்குக் குடிசையிருந்தால் உம்மைத்துதி செய்ய லோபம் உண்டாகாதே? சகல பிரபஞ்சத்தையும் சிருஷ்டிக்கவும், ரக்ஷிக்கவும், சம்ஹாரம் செய்யவும் நீர் கர்த்தராயிருக்க இதில் அடியேனுக்கு என்ன சம்பந்தமிருக்கின்றது. தேகாபிமானம் உள்ளவரையில் அஞ்ஞானம் நசிக்காதல்லவா? பூர்வஜன்ம கர்மங்களினால் அபிமானம் உண்டாகின்றது. அப்படிப்பட்ட அபிமானத்தை நிவர்த்தி செய்வதே ஞானமென்று தேகத்திற்குப் போஷணார்த்தம் அனாவசியமென்று தோன்றியபடியால் அதன் விஷயமாய்ப் பிரயத்தனமொன்றும் செய்யவில்லை! என்று சொல்லினர்.

அதற்கு விஷ்ணுமூர்த்தி மிகவும் சந்தோஷித்து பரதத்வமான உபதேசங்கள் சிலவற்றை எண்கோண ரிஷிக்கு உபதேசித்து, எண்கோணரிஷி சொல்லிய வாக்கியமே சத்தியமானதென்று நிரூபித்து, நான் சென்று வருகிறேன் என்று ரிஷியினிடம் பகவான் சொல்லினர். அதற்கு ரிஷியானவர் மிகவும் வியசனமடைந்து தேவரீருடைய சேவை இனி எப்பொழுது லபிக்குமோ, எப்பொழுது யான் தன்னியனாவேனோ? என்று சொல்லிக்கொண்டே சில தூரம் சென்று வழிவிட்டுப்பிறகு தன்னிருப்பிடம் சேர்ந்து பிரம்மானந்த மனுபவித்துக் கொண்டிருந்தார். பிறகு விஷ்ஸமூர்த்தியும், பிரமதேவரும் பரமபதம் போய்ச் சேர்ந்து விஷ்ணுமூர்த்தி மாணிக்க

மண்டபத்திலுள்ள திவ்விய சிம்மாசனத்தின் மீது எழுந்தருளி பிரமதேவரைப் பார்த்து,

ஐயா! பிரமதேவரே! நான் சொல்லப்போகும் விஷயங்களைச் சாவனதானமாய்க் கேட்க்கக்கடவீராக, இந்திரியங்களை ஜயித்த அஞ்ஞானமென்னும் இருளை சுட்டறுத்து ஞானமென்னும் சூரிய பிரமைமயினால் ஜோதியை ஆநந்தமாய்த் தரிசித்த பரமபக்தர்களான ஜீவன் முக்த சத்புருஷர்களை நீ சேவித்து, அவர்களின் வசனாமிருதங்களைக் காதுகளால் கேட்டீரல்லவா உமது பூர்வபுண்ய விசேஷத்தினால் அந்த மஹானுபாவர்களின் சேவை உமக்கு லயித்ததேயொழிய மற்றபடிக்கு வேறல்ல. இனியாகிலும் பக்தியுடன் இருக்கக் கடவீராக, உலகத்தில் அஹங்காரத்துடன் இருந்தவர்கள் இதுவரையில் யாராகிலும் கடைத்தேறி இருக்கின்றார்கா? அப்படிப் பட்டவர்களுக்கு அதோகதியே யொழிய சத்கதி (நல்லகதி) உண்டாகமாட்டா. எப்படிப்பட்டவர் களாயிருந்தபோதிலும் அவர்களையும் சர்வம் கெடுத்துவிடும். ஆதலால் நீர் கர்வத்தைவிட்டுவிடுவதே மிகவும் சிரேஷ்ட்டமானது என்று அஹங்கார நிரஹங்காரங்களைக் குறித்துச் சற்று நேரம் பிரமதேவருக்கு உபந்நியாசம் செய்தார் பிறகு,

பிரமதேவர் அவ்வாக்கியங்களைக் கேட்டவுடனே அவருக்கு அறிவுண்டாய் விஷ்ணுமூர்த்தியை நமஸ்கரித்து தேவ தே வோத்மா! தேவகீநந்தனா! என் இருதய ஆகாசத்தை மூடிக்கொண்டிருந்த அஹங்கார விகார காடந்த காரங்களெல்லாம் (இருளெல்லாம்) தேவரிருடைய கடாக்ஷவீக்ஷண்யமென்னும் பிரகாசத்தினால் நீங்கி ஞானோதயமாயிற்று. லோகாபிமான பாசத்திலிருந்து விடுபட்டு முமுக்ஷுவானேன் என்று விஞ்ஞாபனம் செய்து பகவானிடம் செலவு பெற்றுக் கொண்டு தன் லோகத்திற்குச் சென்று விட்டார்.

நாயனா! குமாரா! இவ்வளவு நீண்ட ஆயுர்ப்பாகமுடைய

பிரமதேவர் கண் இமையை மூடுவதற்குள் மானிட ஜநநமெடுத்த மானவர்களெல்லோரும் கணக்கில்லாத அனேக கோடி ஜன்மங்களை எடுத்து மாயா சக்கரமாகிய ஸம்சார சக்கரத்தில் அகப்பட்டுப் பிரதி தினம் செய்து கொண்டிருக்கும் காரியங்களையே செய்து கொண்டு, பிரதிதினம் இருபத்து நாலுமணிநேரமும் இஹலோக சுகமாகிய தன் மனைவி மக்களுக்கு ஆஸ்தி சேகரித்துக்கொண்டு, ஒரு நிமிஷமாகிலும் எந்த ஈஸ்வரத் தியானமும் இல்லாமல் இருந்து எப்பொழுதும் ஜநந மரணங்களை அடைந்து கொண்டே வருகின்றார்கள். இந்த சம்சாரமென்னும் மாயா சக்கரத்தில் நாரதர் ஒரு முறை அகப்பட்டுக்கொண்டு பட்ட பாட்டை ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத் கீதை அத்தியாயம் 5 - சுலோக் 6-ல் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

நாதத்தே கஸ்யசித் பாபம் நசைவ ஸுக்ருதம் விபுஹு
அஜ்ஜாநே நாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹயந்தி ஜந்தவஹ

கிருஷ்ணன்: ஆம், அவனவன் செய்யும் புண்ணிய பாவங்கள் ஈஸ்வரனைச் சேரமாட்டா, ஜீவர்களையே சேரும்.

அர்ஜுநன்: இதென்ன அநியாயம்! ஈஸ்வரன், கர்மங்களினுடைய பலன் ஜீவர்களுக்குக் கொடுக்கவில்லை என்றும் ஜீவர்களுககுச் சம்மந்தித்திருக்கும் மாயையே அந்த கர்மங்களை செய்விக்கின்றதென்றும் நீர் இதற்குமுன் சொன்னீரல்லவா? அப்படியிருக்க கர்த்திருத்துவமில்லாத ஜீவனுக்கு மாயையினால் செய்யப்படும் கர்மங்களினுடைய பலன்களாகிய புண்ணிய பாவங்கள் எப்படிச் சேரும்.

கிருஷ்ணன்: அஃதெப்படியென்றால், ஜீவன்தான் ஒன்றும் செய்யாவிடினும், மாயையினால் செய்யப்படும் கர்மங்களைதான் தான் செய்வதாய் எண்ணுகின்றான் அதனால் அந்த கர்மத்தை தன்மேல் போட்டுக் கொள்கின்றான். இப்படிச் செய்வதே அஹங்காரமென்று சொல்லப்படும். இந்த அஹங்காரத்தினால் அந்த கர்ம பலன்கள் அவனை சேருகின்றன.

அர்ஜுநன்: ஐயோ பாவம்! இந்த ஜீவன் நிர்நிமித்தமாய் தான் செய்யாத கர்மங்களை தன்மேல் சுமத்திக்கொண்டு அதனால் ஏன் பந்தத்தில் அகப்பட்டுக்கொள்ள வேண்டும்?

கிருஷ்ணன்: அஞ்ஞானத்தில் அப்படிச் செய்கின்றான் இந்த அஞ்ஞானத்திற்கே அவித்தையென்றும், மாயையென்றும் சொல்லப்படும். இந்த மாயையினால் சமஸ்த ஜந்துக்களினுடைய ஞானம் மூடப்பட்டிருக்கின்றது. இந்த மாயையினால் மோசம் போய் அஹங்காரத்தை வஹித்து, அதனால் பந்தப்பட்டிருக் கின்றான்.

அர்ஜுநன்: ஆனால் அந்த மாயை யாரால் கல்பிக்கப்பட்டது?

கிருஷ்ணன்: ஈஸ்வரனால் கல்பிக்கப்பட்டது.

அர்ஜுநன்: அப்படியானால், ஜகச் சிருஷ்டிக்குக் கர்த்தாவாகிய ஈஸ்வரனே இந்த மாயையை உண்டாக்கி அதனால் ஜீவர்களை மோஹக்கச் செய்து கொண்டு அதன் மூலமாய் அவர்களைக் கர்மபத்தாகளாகச் செய்வித்துத் தான் எதுவும் செய்யாதவனைப்போல் எந்த பலன்களையும் பற்றாமல் விலக்ஷணனாய் எப்படியிருக்காலாம்.

கிருஷ்ணன்: ஈஸ்வரன் ஜீவர்களையும் மாயையும் சிருஷ்டி செய்தது. வாஸ்தவமே. ஆனால் மாயையினால் கட்டப் பட்டிருக்கும் ஜீவர்களுக்கு அந்த மாயையிலிருந்து தப்பித்துக்கொள்ளும் சக்தியையும் ஈஸ்வரன் கொடுத்திக்கின்றார். அந்த சக்தியையே புத்தி என்று சொல்லப்படும். எந்த ஜீவனுடைய மானிட ஜன்மம் வருகின்றதோ அப்பொழுது அந்த மனிதன் தன் மாயையினுடையவும் சுபாவத்தைச் சரியாய்த் தெரிந்துக்கொண்டு ஸம்ஸ்த்த கர்மங்களுக்கும் மாயையின் சம்வந்தமே என்றும், அவைகளினால் தனக்கு யாதொரு சம்பந்தமும் இல்லையென்றும் அறிந்து எவனெவன் நடக்குன்றானோ. அப்படிப்பட்டவன் அந்த மாயையிலிருந்து நீங்கினவனாகின்றான். அப்படிப்பட்டவன் அந்த கர்மத்திற்குப்

பாத்திரனாகமாட்டான். அப்படிச் செய்யாமல் எந்த ஜீவன், பகவான் கொடுத்திருக்கும் புத்தியை சரியாய் உபயோகப் படுத்தாமல் அஹங்கார மமகாரமுடையவனாய் மாயையால் செய்யப்படும் கார்யங்களையெல்லாம் தானே செய்வதாய் நினைத்துக் கொள்கின்றானோ அப்படிப்பட்டவன், மதயானை தன் தலையில் தானே மண்ணை வாரிப்போட்டுக் கொள்வதுபோல் மாயையினால் செய்யப்படும் கர்மங்களை தன்னில் உண்டாக்கிக்கொண்டு அதனால் கர்மபத்தனாய் அந்த கர்மங்களின் பலாபலன்களை அனுபவிக்கின்றான். பகவான் இவனை கர்மபக்தனாய்ச் செய்வதில்லை. இதற்கோர் திருஷ்ட்டாந்தம் சொல்லுகின்றேன் கேள்.

ஓர் யஜமானிடம் இருக்கும் சேவர்களில் இரண்டு சேவர்களை அழைத்து நீங்கள் இருவரும் தாமரைத் தடாகத்திற்கு சென்று தாமரை இலைகளும் புஷ்பங்களும் கொண்டு வரவேண்டும் என்று சொல்லி, அந்தத் தடாகத்தில் தாமரைக் கொடிகளும் அல்லிக் கொடிகளும் மிகவுண்டு, அவைகள் காலில் சுற்றிக்கொண்டால் நீங்கள் எவ்வளவு நீஞ்சல் கற்றவர்களாயிருந்த போதிலும் சரி அந்த நீஞ்சல் பிரயோஜனப்படமாட்டா. ஆதலால் நீங்களிருவரும் இவ்விரண்டு கத்திகளையும் கொண்டுபோய், கொடிகள் காலில் சுற்றிக்கொள்ளும் போது அவைகளை அறுத்துவிடுங்கள், என்று சொல்லி இருவருக்கும் இரண்டு கத்திகளைக் கொடுத்தனுப்பினான். அவர்களில் ஒருவன் தன் எஜமான் உத்திரவின்படி கத்தியை மறவாமல் எடுத்துக்கொண்டுபோய், நீஞ்சும் பொழுது காலில் சுற்றிக்கொண்டே கொடிகளை எல்லாம் அறுத்துக்கொண்டு அந்தக் கொடிகளால் கட்டுபடாமல் இலைகளையும் புஷ்பங்களையும் பறித்துக்கொண்டு வந்தான், மற்றொருவனோ அப்படிக்குச் செய்யாமல் எஜமான் கொடுத்த கத்தியை வீட்டில். வைத்து மறந்து சென்று கையில் ஆயுதமில்லாமலே தடாகத்திலிறங்கிச் சென்றவுடனே, கொடிகள் காலில் சுற்றிக்கொண்டபடியால் நீந்துவதற்குச் சக்தியில்லாமல்

தத்தளித்துத் தடுமாறிப் பிராணனை விட்டான். இப்படியாய்ப் பிராணனைவிட்ட இவனுடைய மரணத்திற்குக் காரணபூதன் யஜமானா? அல்லது தானேயாகின்றானா?

அர்ஜுநன்: யஜமான் காரண பூதனல்லன் ஏனென்றால் அவனை அந்த தடாகத்திற்கு அனுப்பும் பொழுதே அவ்விடத்திலுள்ள கொடிகளின் விஷயங்களைச் சொல்லியும் அதை நிவர்த்தி செய்துகொள்வதற்குத் தகுந்த ஆயுதத்தை அவன் உபயோகப்படுத்தி கொள்ளாமற் போனதனால் அந்த தோஷம் யஜமானைப் பற்றாது.

கிருஷ்ணன்: ஆனால், அந்த சங்கதி அறியாதவர்கள் என்ன சொல்லுவார்கள்.

அர்ஜுநன்: அந்த யஜமானனே அவன் மரணத்திற்குக் காரண பூதனென்று சொல்லுவார்கள்.

கிருஷ்ணன்: அதுபோல், இந்த பிரபஞ்சத்திலுள்ள மனிதர்களும் மாயையினால் அவர்கள் அனுபவிக்கும் பலன்களுக்கு ஈஸ்வரனே காரணபூதனாய் இருக்கிறானென்று எண்ணிக்கொண்டார்கள்.

அர்ஜுநன்: ஆனால் பிரதி ஜீவனுக்கும் மானவ ஜன்மம் உண்டானபொழுது மாயையை நிவர்த்தி செய்துக்கொள்ள சாதனமாகிய புத்தியை பகவான் கொடுத்திருக்க அப்புத்தியினால் மாயையை உதறிவிட்டு மோக்ஷத்தை அடையதக்க பிரயத்தினத்தைச் சுலபமாய்ச் செய்யலாமல்லவா? அப்படியிருந்தும் அதுபோல் செய்பவர்கள் மிகவும் அரிதாய் இருக்கின்றார்கள். என்றால் லக்ஷத்தில் ஒருவன் இருப்பதும் அரிதாய் இருக்கிறதே அதற்குக் காரணமென்ன?

கிருஷ்ணன்: ஓஹோ! மாயையை ஜயிப்பது சுலப சாத்தியமென்று நீ எண்ணிக் கொண்டாய்ப்போல் தோன்றுகிறது. அந்த மாயா சக்தியைக் குறித்து ஓர் கதை சொல்லுகின்றேன் கேள்.

## 50. கிருஷ்ணன் நாரதரை மாயையில் அகப்படும்படி செய்தது

அர்ஜுநா! பகவானான என்னிடம் ஒரு சமயம் நாரதர் வந்து சுவாமி! எனக்கு மாயையைக் காண்பிக்க வேண்டுமென்று கேட்டனர். அதற்குப் பகவானான நான், அப்படியே ஆகட்டுமென்று கூறிச் சும்மாயிருந்தேன். சில நாள் சென்ற பிறகு ஒரு நாள், நாரதரை வரவழைத்து என்னுடன்கூட ஓர் வனத்திற்கு பிரயாணமாய் வரவேண்டுமென்று கேட்டேன். அதற்கு நாரதர் சம்மதித்து இருவருமாய்ப் பிரயாணப்பட்டு அநேகதூரம் நடந்து போகும்பொழுது மத்தியில் எனக்கு அதிக தாகம் உண்டாயிற்று. அப்பொழுது நாரதரைப் பார்த்து ஐயா நாரதரே எனக்கு அதிக தாகமாய் இருக்கிறது ஜலம் கொண்டு வாருமென்று நாரதரிடம் சொல்லி அனுப்பினேன். நாரதரோ உடனே ஜலம் கொண்டுவரச்





சென்றார். அவர் போகும் வழியில் சற்று தூரத்தில் கிராமம் ஒன்று தெரிந்தது. அக்கிராமத்தில், ஜலமகப்படுமென்று அங்குச் சென்றனர். அவர் செல்லும் வீதியில் ஓர் பெரிதான மெத்தை வீட்டைக்கண்டு அவ்வீட்டின் கதவைத் தட்டினார். உடனே கதவைத் திறந்து கொண்டு அதிக அழகுடைய ஒரு பெண்மணி வந்து நின்றாள். நாரதர் அவளைக் கண்டவுடன் தான் வந்த

கார்யத்தை மறந்து அப்பெண்ணுடன் வேடிக்கையாய்ப் பேச ஆரம்பித்து, அன்று முழுவதும் அவ்விடத்தைவிட்டு அவர் அசையவில்லை. மறுநாளும் அவ்விடத்திலேயே பேசிக்கொண்டிருந்தார்.

கண்ணன் ஜலம் கொண்டுவரச் சொன்னாரே என்பதை நாரதர் அடியோட மறந்துவிட்டார், பெண்ணுடன் பேசுவதே அவருக்கு ஆனந்தமாய்விட்டது. பேச்சு முற்றவே அப்பெண்ணின்மேல் ஆசையுண்டாயிற்று. அவ்வாசையினால் மோஹம் உண்டாயிற்று. மோஹத்தை தீர்த்துக்கொள்ளப் பெண்ணின் தகப்பனாரிடம் உத்தரவு பெற்று அப்பெண்ணை மனம்புரிந்து அவளுடன்கூட இன்பனுபவித்துக் கொண்டிருந்தார். இப்படியாகப் பன்னிரண்டு வருஷங்கள் கழிந்தன நாரதருடைய மாமனார் ஏதோ ஓர் வியாதி சம்பந்தத்தால் உலக வாழ்க்கையைத் துறந்தான். பிறகு அவனுடைய சொத்துக்களெல்லாம் நாரதருக்குக் கிடைத்தன. விசேஷ சொத்தும் வீடும் நல்ல மனைவியும் நமக்கு நேர்ந்ததை எண்ணி அதிக சுகமாக நாரதர் அக்கிராமத்தில் வாழ்ந்து கொண்டிருந்தனர். இவ்வாறிருக்கும்பொழுது நாரதருக்கு அனேக குழந்தைகள் உண்டாய் அக்குழந்தைகளையெல்லாம் சீராட்டி முத்தமிட்டு சம்சாரத்திலிருக்குங் காலத்தில், அக்கிராமத்திற்கு அடுத்த நதியில் வெள்ளம் வந்து நாரதர் இருக்கும் கிராமத்திற்கு புரண்டு வந்தது. அப்பொழுது அவ்வூரிலுள்ள வீடுகளெல்லாம் வீழ்ந்து ஆடுமாடுகளையும் மற்றமுள்ள ஜீவர்களையும் ஆற்று வெள்ளமடித்துக் கொண்டு போய்விட்டது. அப்பொழுது நாரதர் தன மனைவியை ஓர் கையிலும் மற்றும் இரண்டு குழந்தைகளை மற்றோர் கையிலும் மற்றும் இரண்டு குழந்தைகளை தோள்களின் மீதும் ஏற்றிக் கொண்டு வெள்ளத்தைத் தாண்டி அக்கரைக்குச் செல்ல உத்தேசித்து, நதியில் இறங்கிச் சென்றார். பாதி நதி சென்றவுடன் மேல்வெள்ளம் அதிகமாய் வந்தபடியால்

ஜலத்தின் உருட்டினால் எல்லா குழந்தைகளையும் மனைவியையும் இழந்து, தான் மாத்திரம் மிகவும் கஷ்டத்துடன் நதி அக்கரை ஏறினார். அந்த சமயத்தில் நாரதருக்கு எப்பேர்ப்பட்ட துக்கம் சம்பவித்திருக்கலாம்? அதை நீயே யோசித்துப்பார். அந்த துக்கத்தை நாரதர் பொறுக்க மாட்டாமல் பூமியில் வீழ்ந்து, ஓ வென்று கூச்சலிட்டுப் புரண்டு கதறி அழுதார். அத்தருணத்தில் கபடநாடக சூத்திரதாரியாகிய நான் நாரதருடைய முதுகைத்தட்டி ஐயா நாரதரே! தாகம் தணிக்க ஜலமெங்கே? என்று கேட்டேன். ஜலம் கொண்டு வருகின்றேனென்று சொல்லிப் போய் இருபது வருஷம் வரையில் சம்சாரத்தில் நாரதர் அகப்பட்டு அலைந்ததே மாயை. மனிதனுக்கு ஓர் விஷயம் கெட்டதென்று தெரிந்திருந்தபோதிலும் அவ்விஷயத்திலேயே அவன் ஈடுபட்டிருப்பான். இப்படி ஈடுபட்டிருப்பதே மாயை இந்த மாயையானது எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் ஆத்மாவைப்பற்றிக் கொண்டிருக்கும்.

அர்ஜுநன்: ஆனால் சுவாமி ஆத்மா ஒன்றுதானே உள்ளது. மாயையொன்று ஆத்மாவுடன் சேர்ந்திருந்தால் வஸ்து இரண்டாகவில்லையா?

கிருஷ்ணன்: ஆம், ஆத்மா ஒன்றென்பது உண்மையே அதனுடன் மாயை என்பது ஒன்று சோந்திருப்பதும் உண்மையே. ஆனால் வஸ்துக்கள் இரண்டாகவில்லை. எப்படியென்றால், கயிற்றைப்பார்த்து பாம்பென்று பிரமை அடைகின்றான். அதனால் கயிறு ஒன்று பாம்பு ஒன்று ஆக இரண்டு பொருளாய் விடுமா? அது இரண்டு பொருளா கலாம். மேற் கூறிய உதாரணத்தால் கயிற்றினிடத்து பாம்பு தோன்றினாலும் உற்று நோக்குங்காலத்தில் கயிறே சத்தியப் பொருளாயும், பாம்பின் தோற்றம் பொய் பொருளாயும் போகின்றது. அதுபோல், உற்று நோக்காத தோஷத்தால் ஆத்மா ஒன்றும் மாயையொன்றுமாய்

இரண்டு பொருளாகத் தோன்றுகின்றது. உண்மையாய் விசாரிக்குமளவில் ஆத்மாயகார்த்த பொருளாயும் மாயை தோற்ற பொருளாயும் முடிகின்றது. ஒரே பொருள் பிரமையினால் கயிறாகவும் தோன்றுவதுபோல் ஒரே பொருள் மருட்சியினால் மாயையாகவும் அதாவது ஜகத் ஜீவர்களாகவும் தெளிவை அடைந்தபோது ஆத்மாவாகவும் தோன்றுகின்றது. கயிறு, பாம்பாகத் தோன்றுங்காலத்தில் தோற்றம், கயிறு, பாம்பு ஆக மூன்று தோன்றுகின்றன. அதுபோல் ஆத்மா, மாயை ஜகத்ஜீவபரங்கள் ஆக மூன்றுள்ளன. கயிறும் தோற்றமும் பாம்பும் வியவகாரத்தில் மூன்றாம் இருப்பினும் உள்ளது. கயிறு ஒன்றேயாம். கயிறுள்ள இடத்திலேயே தோற்றமிருக்கின்றது. தோற்றமுள்ள இடத்திலேயே பாம்பிருக்கின்றன. ஆதலால் மாயையிலேயே ஜகத்ஜீவ பரங்களிருக்கின்றன. ஆதலால் மாயாசக்தி ஆத்மாவைக்காட்டிலும் வேறல்ல இந்திரஜால வித்தையானது, அவ்வித்தையை கற்ற வித்வானைத்தவிர வேறில்லை. அதுபோல், ஜகத்ஜீவபரங்களுக்குக் காரண மாகிய மாயாசக்தியும் சக்தனாகிய ஆத்மாவைக்காட்டிலும் வேறன்று. இந்திரஜாலவித்தை செய்யும் பொழுதும் செய்யாதபொழுதும் இந்திரஜால வித்வான் இருப்பதுபோல் மாயாசக்தி இருக்கும் பொழுதும் ஆத்மா இருக்கும். இந்திரஜால வித்தையே பொய் வித்வானே மெய் இதுபோல், மாயையே பொய் ஆத்மாவே மெய் என்று அறியக்கடவாய்.

அர்ஜுநன்: மாயை பொய்யானால் உலகம் பிரத்தியக்ஷமாய்த் தோன்றிக் கொண்டிருக்கின்றதே! ஆதலால், கண்களுக்குத் தோன்றிக்கொண்டிருக்கும் உலகத்தைப் பொய் என்று எப்படிச் சொல்லலாம்?

கிருஷ்ணன்: அர்ஜுநா! கானல் நீர் தோன்றிக் கொண்டிருக்கிறதல்லவா, அந்த நீர் சத்தியமா? அல்லது அசத்தியமா? சத்தியமானால் ஸ்நாநம் செய்யவும் தாகம்

தீர்க்கவும் உபயோகப்படவேண்டும். அஸத்தியமானால் நீ சொல்லியதுபோல் அது தோன்றாமலல்லவோ இருக்க வேண்டும்! எது சத்துமல்லாமல் அசத்துமல்லாமல் இருக்கின்றதோ அது கடைசியில் இல்லாமற் பொய்யாகவே முடியும். ஜீவபரன்கள் தோன்றியபோதிலும் அவைகள் சத்தியமல்ல. ஆத்மாவே சத்தியமாகிய பொருளென்று அறியக்கடவாய்.

அர்ஜுநன்: ஓ சுவாமி! கானல்நீர் தோற்றம் மாத்திரமாயிருக்கின்றது. மாயையாலுண்டாகிய உலகமோ அப்படியல்ல. அது தோன்றிக்கொண்டே இருப்பதுடன் அதிலுள்ள சுகதுக்கங்களைப் பிரத்தியக்ஷமாய் அனுப்பவிப்பதைக் காண்கின்றோம். அதைக் கானல்நீர்போல் அசத்தியமென்று எப்படிச் சொல்லலாம்.

கிருஷ்ணன்: சொப்பணத்தில் காணும் உலகம் சொப்பன உலகத்திற்கு ஆதாரம் மனதேயாம். மனதினால் உண்டாகிய சொப்பன உலகில், சப்த ஸ்பரிச ரூபரஸ கந்தங்கள் அதாவது, சப்த (காதுகளினால் கேழ்ப்பது) பரிச (தேகத்தின் மீதிருக்கும் சர்ம (தோல்) மூலமாய்த் தொட்டு அறிவது) ரூப (கண்களால் பார்ப்பது) ரச (நாவினால் ருசி அறிவது) கந்த (மூக்கினால் வாசனையறிவது) இவைகளினால் அனுபவிக்கின்றன. அஃதெப்படியென்றால், ஓர் காதலன் தன் நெடுநாளாய் ஆசை கொண்டிருந்த ஓர் காதலியை சொப்பனத்தில் கண்டு அவளை ஆலிங்னம் செய்து அவளுடன் இன்ப சுகத்தை அனுபவிக்கின்றான். அப்பொழுது அவன் அந்த காதலியையும் அவளால் உண்டான சுகத்தையும் சத்தியமென்றே நினைக்கின்றான். சொப்பனம் நீங்கி விழித்தவுடன் அவ்வளவும் பொய்யாய் போகின்றதைக் கண்டு, அக்காதலன் மனம் நொந்து அவஸ்தைப்படுவான். உலக அனுபவமும் இவ்வாறேயாம். இப்படிச் சொப்பன உலகம் ஜாகிரத உலகும் ஆத்மாவை

நோக்கப் பொய்யாகும். கயிற்றில் பாம்பும் கானல் நீரும், சொப்பன உலகமும் அந்ததக் காலத்தில் உண்மையாயும் அனுபவமாயும் இருந்தாலும் அந்ததக் காலங்களில் அவைகள் எப்படிப் பொய்யோ அப்படியே இந்த உலகமும் உண்மைபோல் தோன்றி அது அனுபவத்திற்கு வந்தாலும் பொய்யேயாகும்.

அர்ஜுநன்: ஆனால் இப்பொழுது நீர் சொல்லிய விஷயத்தை யோசித்துப் பார்த்தால் மனுஷ்யர்களில் யாரும் இந்த மாயையை ஜயிக்கமாட்டார்கள் போல் தோன்றுகிறது அத்தியாயம் - 5, சுலோகம் -16.

ஜ்ஞாநேநது ததஜ்ஞாநம் யேஷாம் நாஸித மாத்மநஹ
கேஷா மாதித்யவத் ஜ்ஞாநம் ப்ரகாஸயதி தத்பரம்.

கிருஷ்ணன்: அர்ஜுநா! நீ அப்படிச் சொல்ல வேண்டாம், மாயையை ஜயிப்பது மிகவும் கஷ்ட்ட சாத்தியமே. ஆயினும், எல்லோரும் அப்படி ஜயிக்க மாட்டார்களென்று சொல்லலாகாது. மாயையை ஜயிப்பதற்குப் புத்தி என்னும் சக்தி ஒன்றை பகவான் பிரதி புருஷனுக்கும் கொடுத்திருக்கின்றாரென்று இதற்கு முன் சொல்லியிருந்தேனல்லவா? அதை அநேகர்கள் சரியாய் உபயோகப்படுத்தா விடினும் அங்கங்கு ஒருவராயினும் அதைச் சரியாய் உபயோகப்படுத்திக் கொண்டு வருகின்றார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு ராகத்துவேஷாதிகள் நீங்கிவிடும். எப்பொழுது அவைகள் நீங்கி விடுகின்றவோ அப்பொழுது அவர்களுக்கு ஞானோதயமாகின்றது. அப்படிப்பட்ட ஞானம் எப்போது உண்டாகின்றதோ அப்பொழுது சூர்யோதய மானவுடன் அதுவரையில் இருளில் திருஷ்டிக்குக் காணப்படாத வஸ்துக்களெல்லாம் எப்படி ஸ்பஷ்ட்டமாய்க் காணப்படு கின்றவோ, அதுபோல் இதுவரையில் அனாதியாய் வந்து கொண்டிருக்கும் ஆகாம்யத்தினால் உண்டாகிய சஞ்சிதமென்னும் மூட்டை எந்த ஞானத்தினாலே அதாவது, ஆத்மசொரூப விஷய ஞானத்தினால் பஞ்சுப் பொதிகளில் நெருப்புப் பொறி

பட்டவுடன் பொதிகளெல்லாம் பஸ்மமாவதுபோல், நசிக்கப்படுகிறதோ, அப்படிப்பட்டவர்களுக்கு சூரியனுடைய பிரகாசம்போல் சகலமும் பிரகாசிக்கச் செய்கிறது. அப்பொழுது அஞ்ஞானத்தினால் மனோ திருஷ்டிக்குக் காணப்படாமலிருந்த பரப்பிரம்ம சொரூபம் ஸ்பஷ்டமாய்க் காணப்படும். அதனால் ஸம்ஸாரபந்தம் நீங்கி விடும். இங்கு சொல்லவேண்டிய விஷயம் இவ்வளவேயாம் இதற்கு மேல் விஷயங்கள் இந்நூலாசிரியரர் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதையில் விரிவாய்க் காணலாம். இன்னும் அத்யாயம் - 9, சுலோகம் - 7, பிரமாணம் என்ன வென்றால்,

ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம
கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜா மயஹம்

ஓ அர்ஜுநா! பிரம கற்பத்தின் முடிவாகிய பிரளய காலத்தில் சகல சராசர பிரபஞ்சங்களும் ஈஸ்வரனாகிய எனது மாயையில் கலந்து லயமாகின்றன, பிறகு சிருஷ்டி காலத்தில் மறுபடியும் அவைகளை நான் சங்கல்பித்து (நினைத்து) சிருஷ்டி செய்கிறேன்.

என்றால், ஞானமடையாத ஜீவகோடிகளெல்லாம் பிரளயத்தில் எங்கு அடங்கியிருக்கிமென்றால், தட்டான் குந்தனவேலை செய்யும்பொழுது அணு அதாவது, கெம்பு மத்தியில் புதைத்து வைத்த தங்கரெக்குகளை சிறிய தங்கங்களை எல்லாம் மெழுகினால் ஒற்றியபோது, அந்த சிறிய தங்கமெல்லாம் எவ்விதமாய் மெழுகினால் பிடித்துக் கொள்கின்றதோ, அதுபோல் பிரளயத்தில் ஜீவர் களெல்லோரும் அந்த பிரம்மத்தில் பிடித்து கொண்டிருந்து, மறுபடியும் பிரளயம் முடிந்தவுடன் ஈஸ்வரன் பிரபஞ்சத்தை எப்படி சிருஷ்ட்டி செய்விக்கின்றாரென்றால், மளிகை கடை வர்த்தகன் இரவில் உப்பு மிளகாய்ப் புளி பருப்பு முதலாகிய கூடைகளை எடுத்து ஒன்றின்மேல் ஒன்றை வைத்து கடையைப் பூட்டி வீடுசென்று

போஜனமுண்டு நித்திரை செல்கின்றான். இதுவே பிரளயமாக நினைக்கவேண்டும். மறுபடியும் பொழுது விடிந்தவுடன் கடையைத் திறந்து உப்புக்கூடையிருந்த இடத்தில் உப்புக்கூடையும், மிளகாய் புளி, பருப்பு முதலிய கூடைகள் இருக்க வேண்டிய இடங்களில் அவைகளை அந்த இடத்தில் வைப்பதுண்டு. அதுபோல், பிரளயம் முடிந்தவுடன் ஈஸ்வரன் எவரெவர்களை எங்கெங்கச் சிருஷ்ட்டி செய்ய வேண்டுமோ, அவரவர்களை ஆங்காங்கு சிருஷ்டி செய்கின்றனர். அதுபோல் பெரியோர்கள் முனிவர்கள் செடிகள் மரங்கள் மலைகள் முதலான புனங்களையும் சிருஷ்ட்டி செய்கின்றனர். அதன்பிறகு பிளயத்தில் கோவில்கள் எல்லாம் நாசமாய் விட்டபடியால் பிரளயம் முடிந்தவுடன் மறுபடியும் புது கோவில்களை கட்டுகின்றார்கள். இதற்கு உபதேச காண்டமும் ஸ்ரீ பகவத் கீதையும் பிரமாணம்.

முற்றொடங்கிய காலமா பிரளய
  முற்றுற வெந்தை யெம்பெருமா
னிற்று றாவுயிர்த் தொகையெலாந்
  தன்னுழைக் கரந்தன னற்றைநாளிரவிற்
கற்றைவார்குழற் சக்தியொ டருநடத்
  தாண்டவங் கருணையிற் புரியு
முற்ற கங்கலீ ரெம்பிரா
  னிறப்பறாஞானசத் தியைப்புரிந் துதவும்.
வாமமேமுதற் சைவமீ றுட்படு
  சமயங் ளாறையும் வகுத்துக்
காமரண்டமெண்ணிறந்தன புரிந்துமும்
  முதன்மையா யாரையுங் காட்டித்
தோமின் முத்தொழி லவர்க்களித்
  துருத்தரகணங்களைத் தொகுத்துவானவரை
மாமுனிப்பெருந் தலைவரை மக்களை
  மரங்களை மலைகளை லகுத்து

ஆறொடைந்தெனு மிருத்திர ருருத்திர
கணங்களபூ தங்கண்மற் றசுரர்
மாறில்பல்லுயிர்த் தொர்குதிக ளாங்கவை
வழங்குறு புவனங்கள் யாவு
மூறுசிந்தை யினினைத்துள வாக்கிமற
றுள்ளவை யாயைவு மொருங்கவ்
வாறுசத்தியுண்டாக்குற வருத்தியாங்
சுவையெலாம் வந்துழி மகிழும்

இதம் ஞாநமுபாஸ்ரிதய மம ஸாதகர்ம்யமாகதாஹ
ஸாகேபி நேர்பஜாயந்தே ப்ரளயே த வ்யதந்திச.

அத்யாயம் 14, சுலோகம் 2. பிரளயகாலத்தில் சகல ஜீவர்களும் எனது மாயையில் அடங்கியிருந்து மறுபடியும் சிருஷ்ட்டி காலத்தில் தம் தம் பூர்வ வாசனையின்படி அங்கங்கு ஜநநமெடுத்துப் பிறகு மாயையிலிருந்து விடுபட்டவர்கள் மறுபடியும் ஜநந மரணங்களில்லாமல் நிர்வாண (வெட்டவெளி) சுவாமாகிய எனது சொரூபத்தை அடைவார்கள். இவ்வாறு அடையப்பட்டவர்களுக்கு நான் எப்படிப்பட்ட குருவாயிருப்பேனென்றால், இதற்குத் திருஷ்டாந்தம் அத்யாம் 10 சுலோகம் 11, பிரமாணம்.

தேஷா மேவாநுஜம் பார்த்த மஹ மஜ்ஞாநகம் தமஹ
நாஸயா ம்யாத்மபாவஸ்தோ ஜ்ஞாநதீபேத பாஸ்வதா.

அஞ்ஞானத்தினால் வந்து பொருளெனக் காட்டும் சம்சாரமமென்னும் இருளை பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஞான விளக்கினால் அனுக்கிரகம் குருவாகவும் உயிருக்குயிராகவும் நான் இருந்து சம்சாரபந்தத்தை நாசம் செய்கின்றேன் என்று சொல்லப்பட்டிருக்கின்றது

குரு:: குழந்தை! நீ முன்கேட்ட விஷயங்களை எல்லாம் எதற்காக விசாரித்தாய்?

சிஷ்யன்: சுவாமி! மோஷமடையும் பொருட்டே விசாரித்தேன்.

குரு:: மோஷமென்றால் விடுதலை, விடுதலை என்றால் இதற்கு முன் ஏதாகிலும் ஓர் பிடிப்பு இருக்க வேண்டும். பிடிப்பு என்றால் பந்தம், மோஷமடைய விருப்பங்கொள்ளும் நீ இருபத்து நான்கு தத்துவங்களில் எந்த தத்துவம் உன்னை பிடித்துக் கொண்டிருக்கின்றதோ அதை அறிந்து விடுதலை செய்து கொள்ள வேண்டியதேயொழிய மாயை அஞ்ஞானம் ஜகத் சிருஷ்டி முதலானவைகளை விசாரிப்பதனால் பிரயோஜனமில்லை.

சிஷ்யன்:- எனக்கு எதனால் ஞானமில்லை,

குரு: சிஷ்யா! சிவப்பு, கறுப்பு வெளுப்பு ருசி, அரிசி, பக்குவம் அபக்குவம், லாபம்? நஷ்டம் நியாயம் அநியாயம் முதலானவைகளை ஞானமில்லாமல் நீ எப்படி அறிகின்றாய்? உனக்கு ஞானமில்லாவிடில் அஞ்ஞானத்தினால் அறிந்தாயா? அல்லது ஞானத்தினால் இதுகளையெல்லாம் அறிந்தாயா?

சிஷ்யன்: சுவாமி! எனக்கு ஞானமிருப்பதாகவே ஏற்படுகின்றது. ஞானமென்றால் எதுவோவென்றிருந்தேன், எனக்கு பிரம்ம ஞானமில்லை என்று தோன்றுகின்றது,

குரு: பிரம்மஞானமென்று ஒன்றும் இந்திரிய ஞானமென்று ஒன்றும், சந்திரஞானமென்று ஒன்றும் உண்டோ?

சிஷ்யன்: சுவாமி! அது அறியாத தன்மையினால்லவோ கேட்க நேர்ந்தது எந்த மார்க்கத்தை அனுஷ்ட்டித்தால் மோஷமாகிய நித்தியானந்த பதவியை அடைவேனோ அம்மார்க்கத்தை அடியேனுக்கு அனுகிரகிக்க வேண்டும் சுவாமி!

## 51. சிஷ்யன் தத்துவங்களைப் பரிசோதனை செய்தல்

குரு: எந்த காரணத்தினால் உன் கால் நொண்டியாயிற்றோ அதை ஆலோசித்துப்பார். அப்படிப்பார்ப்பதே ஞானமார்க்கம். ஸ்ரத்தாவாந் லபதேஜஞாதம் என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லியிருப்பதுபோல் சிரத்தையுடைய புருஷன் ஞானமும், மோக்ஷமும் அடைவான்.

சிஷ்யன்: என்கால் எந்த காரணத்தினால் நொண்டியாயிற்றோ அதை ஆலோசித்துப்பார் என்று ஆசாரியர் சொல்லியிருக் கின்றாரல்லவா? அதை இப்பொழுது ஆலோசிக்கலாம்.

என் கால் நொண்டியாயிருக்கின்றதே இந்த நொண்டி சரீரம், நானே சிருஷ்டித்துக் கொண்டதல்ல. அப்படி நானே சிருஷ்ட்டித்துக் கொள்ளும் பக்ஷத்தில் என் இஷ்ட்டம்போல் நல்ல சரீரமாய் சிருஷ்ட்டித்துக் கொள்வேனல்லவா? என் தாயின் கர்பத்திலேயே யல்லவா இந்த நொண்டி சரீரம் எனக்குண்டாயிற்று.

என் தாயின் கர்பத்தில் பிரவேசித்து என் காலை நொண்டியாய்ச் செய்வதற்கு மனுஷ்யர்களால் ஆகமாட்டா தல்லவா? நான் முன் செய்த பாபகர்மத்தினால் என் தாயின் கர்பத்திலேயே என்னை அவர் சிருஷ்ட்டி செய்தாரோ அவரே எனக்கு சிக்ஷை செய்ததாய் ஏற்படுகிறது. ஆதலால் அப்படி செய்தவரே சர்வத்திற்கும் அதிகாரியான ஈஸ்வரரேயென்று எண்ண வேண்டும்.

ஈஸ்வரன் என்னைத் தாயின் கர்பத்திலேயே சிக்ஷித் திருப்பதனால் இதற்கு முன் ஜன்மத்தில் நான் செய்த பாவகர்மத்திற்காக என்னை சிக்ஷித்தார்போல் தோன்றுகிறது.

இந்த ஜன்மத்தில் நான் பாவம் செய்தால், மறு ஜன்மத்தில் எப்படிப்பட்ட சிக்ஷை எனக்கு ஏற்படுமோ தெரியவராது.

ஆனால், நான் முன் ஜன்மத்திலேயுமிருந்தேன். இந்த ஜன்மத்திலேயுமிருக்கின்றேன். இனி எடுக்கப்போகும் ஜன்மத்திலும் இருப்பேன். இது விஷயம் இப்படியே அந்தந்த ஜன்மங்களிலும் ஆலோசித்திருந்தால் மூன்று ஜன்மங்களும் தெரியவரும். இந்த மூன்று ஜன்மங்களிலும் நான் இருப்பதாய் ஏற்படுகிறது. ஆதலால், நான் நித்தியன் என்றால் எப்பொழுதும் இருக்கப்பட்டவன்.

இதற்கு முன் ஜன்மத்தில் நான் இல்லாமலிருக்கும் பக்ஷத்தில் எனக்கு பாபமிராது. பாபம் இல்லாவிட்டால் என் கால் நொண்டியாயிராது, பாவம் செய்யாதவனை சிக்ஷிப்பதற்கு ஞாயமில்லை. பாவம் செய்யாதவனை சிக்ஷித்தால் அவன் ஈஸ்வரனாகமாட்டான்.

நான் முன் ஜன்மத்தில் மரணமடைந்திருந்தால், இந்த ஜன்மத்தில் எப்படிப் பிழைத்திருப்பேன்? மரணமென்றால் இந்த சரீரத்தைவிட்டு மற்றொரு சரீரத்தில் ஆத்மா பிரவேசிப்பதேயாம். (ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை அத்யாயம்-2, சுலோகம் -22 பார்க்க) நான் மறு ஜன்மத்தில் பசுவாய் ஜன்மித்தால் அப்பொழுது எனக்கு கைகள் இருக்க மாட்டாதல்லவா. ஆதலால் கைகள் சரீரத்திலேயே நின்று விடுகின்றன. எனக்கு கைகளிருந்தால் நான் ஜன்மிக்கும் பசுவின் சரீரத்திலும் கைகள் இருக்க வேண்டும். அப்படியில்லாமல், அவைகள் இந்த சரீரத்திலேயே நின்றுவிடும். ஆதலால் கர்மேந்திரியங்கள் என்னைப்பிடித்து கொண்டிருக்கவில்லை. கர்மேந்திரியங்கள் நானல்ல. கர்மேந்திரியங்கள் சரீரசம்மதமேயல்லாமல் அசரீரியாகிய எனக்குச் சம்பந்தப்படடதல்ல.

நான் புழுவாய் ஜன்மித்திருந்தால் எனக்குக் காதுகள் இராது, ஆதலால், காதுகளும் சரீர சம்பந்தமேயல்லாமல், அசரீரியாகிய எனக்குச் சம்பந்தமானவைகளல்ல. ஆதலால் ஞானந்திரியங்கள் என்னைப் பிடித்துக் கொண்டிருக் கவில்லை.

நான் விருக்ஷமாய் ஜன்மித்திருந்தால், விருக்ஷத்திற்கு இருபத்து நான்கு தத்துவங்களும் இல்லை, இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் சரீரத்திற்குச் சம்பந்தப் பட்டதேயொழிய அசரீரியாகிய எனக்குச் சம்பந்தப் பட்டவைகளல்ல, இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் என்னைப் பந்திக்கமாட்டா. எல்லா தத்துவங்களும் சரீரத்தையே பிடித்துக் கொண்டிருக்கின்றன. ஆனால் விருக்ஷமானது எதை அறியுமென்றால், ஸ்பர்சத்தை மாத்திரம் அறிகின்றது. விருக்ஷமாய் ஜன்மித்தால் எல்லா தத்துவங்களும் நசித்து அறிவு மாத்திரம் சேஷித்து நித்தியமாய் இருக்கின்றது. சர்பங்களுக்குக் கண்கள் செவிகள் ஒன்றாயிருக்கின்றன. வெளவால் என்னும் பக்ஷிக்குப் பிராணாபானங்கள் ஒன்றாயிருக்கின்றன. இவ்விதமாய் அந்தச் சரீரங்களுக்குத் தக்கபடி உயர்வு தாழ்வு என்னும் ஸ்தானபேதமுண்டு. மனிதன் செய்யும் புண்ணிய பாவங்களுக்குத் தக்க சரீரம் ஏற்படுகின்றது. எவற்கும் ஸ்திரமான சரீரமேயில்லை. ஆதலால், சரீரம் நானல்ல. சரீரம் என்னைப் பந்தப்படுத்தவில்லை நான் எப்படிப் பட்டவனென்றால், சரீரத்திற்கு உண்டாகும் சுகதுக் கங்களைத் தெரிந்துகொள்ளப்பட்டவன். ஆதலால், நான் அறிவுடையவனாகவே இருக்கின்றேன்.

பசுவாய் ஜன்மித்திருந்தால் புல்லையல்லவோ புசிக்க வேண்டும். ஆதலால். ஆஹாரம் சரீரசம்பந்தமேயல்லாமல் அசரீரியாயிருக்கும் எனக்குச் சம்பந்தமானாதல்ல.

இந்த ஜன்மத்திலுள்ள தாய் தந்தையர்கள் மனைவி புத்திரர்கள், புத்திரிகள் மரணமடைந்து மற்றொரு சரீரமெடுத்தபொழுது இவர்கள் எங்கு எவ்வித

பந்துவாயிருப்பார்களோ, சத்துருவாயிருப்பார்களோ, மித்திரர்களாயிருப்பார்களோ, அல்லது எந்த தேசத்தில் ஜன்மிப்பார்களோ தெரியவராது. ஆதலால் இவர்களும் சரீரசம்பந்தமானவர்களேயல்லாமல் அசரீரியாகிய எனக்குச் சம்பந்தப்பட்டவர் களல்லர்.

இப்பொழுது இந்த சொத்துக்கள் என்னுடைய தென்னும் எண்ணத்தினால் நான் அண்டைவீட்டுச் சொத்தை அபகரிக்க நினைக்கின்றேன். அண்டை வீட்டில் நான் பிறந்தால் அப்பொழுது இந்த வீட்டு சொத்தையல்லவோ அபகரிக்க எண்ண வேண்டும். ஆதலால், எனக்கு சொந்தமாகிய சொத்துக்கள் எதுவும் இல்லை. இந்த சொத்துக்கள் சரீர சம்பந்தமேயொழிய அசரீரியாகிய எனக்குச் சம்பந்தமானவைகளல்ல.

இந்த ஜன்மத்தில் பிராமணனாய் ஜன்மித்திருக் கின்றேன். மற்றொரு ஜன்மத்தில் தீண்டாதவனாய் (சண்டாளனாய்) ஜன்மித்தால் இந்த வர்ணாசிரமதர்மம் அப்போதிராதல்லவா? ஆதலால், இந்த வர்ணாசிரமதர்மம் சரீர சம்பந்தமாகவே இருக்கின்றன.

இப்பொழுது நான் சைவ மதத்திலிருந்து வைஷ்ணவ மதத்தை தூஷிக்கின்றேன். வைஷ்ணவனாய் ஜன்மித் திருந்தால் அப்பொழுது வைஷ்ணவ சின்னங்களைத் தறித்துக்கொண்டு சைவர்களையல்லவோ தூஷிக்க வேண்டும், ஆதலால் மதங்களும் சரீர சம்பந்தமேயொழிய அசரீரியாகிய எனக்குச் சம்பந்தப்பட்டவைகளல்ல.

நான் ஜன்மித்த பதினோராவது நாள் புண்ணியாஹ வாசனம் செய்து எனக்குக் கிருஷ்ணனென்னும் பெயரை என் தாய் தந்தையார்கள் வைத்தார்கள். இப்படிப்பட்ட பெயர்கள் முன்ஜன்மங்களில் எத்தனையோ பெயர்களை

உடையவனாயிருந்தேனல்லவா! ஆதலால், எந்த பெயரும் எனக்குச் சொந்தமானவையல்ல. பெயர்கள் சரீரத்திற் கேயொழிய சொந்தமான பெயர் எனக்கு எதுவுமில்லை. ஆதலால், நான் நித்தியன், எனக்கு, ஆயுர்ப்பாகம் நூறு வருஷமென்றல்லவோ பிரமதேவன் சிருஷ்டித்தார். நான் அசுவமாய் (குதிரையாய்ப்) பிறந்தால் அசுவத்திற்கு முப்பத்திரண்டு வருஷமல்லவா ஆயுர்ப்பாகம்? வேதத்தில் சரீரத்திற்கே ஆயுர்ப்பாகம் விதிக்கப்பட்டதே அல்லாமல் அசரீரியாகிய எனக்கு ஆயுற்பாகம் விதிக்கப்படவில்லை. ஆதலால், நான் எப்பொழுதும் மோக்ஷத்திலேயே இருந்து கொண்டிருக்கின்றேன்.

இதுவரையில் நான் என் அறிவினால் பரிசோதித்த படியால் எந்த தத்துவங்களும் என்னைப் பிடித்துக் கொள்ளாமலிருப்பதனால் நான் நித்தியனாயும் ஞான சொரூபனாயும் இருக்கின்றேன். ஞான சொரூபனென்று சொன்னால் ஞானத்தை அறியவேண்டியவன் ஒருவன் இருக்க வேண்டுமல்லவா? அதைக்குறித்து இனி சற்று ஆலோசித்துப் பார்ப்போம்.

நான் நித்தியனாயும் அசரீரியாயும் இருக்கும் எனக்கு சரீரம் எப்பொழுது வந்ததென்றால் பஞ்சபூத சிருஷ்ட்டிக்குப் பின்னல்லவோ வந்திருக்க வேண்டும். இதற்கு முன் அதாவது பஞ்ச பூத சிருஷ்ட்டிக்குமுன் எனக்குச் சரீரமில்லாமல் இருந்ததென்று ஸ்பஷ்ட்டமாய்த் தெரிய வருகிறது. ஆதலால் நான் நித்தியனாயும் ஞான சொரூபனாயும் இருக்கின்றேனென்று முந்தியே சொல்லியிருக்கின்றேன். இந்த ஞானசொரூபமே அறிவாயிருக்கின்றது. அறிவு வேறு, அந்த அறிவை அறியப்பட்டவன் வேறு என்று சொல்வதற்கு இடமில்லை. எப்படியென்றால் சுவாலை வேறு அக்நிவேறு என்று சொல்வதற்கு எப்படிக் கூடாமையோ, அதுபோல் அறிவு வேறு ஞானம் வேறு என்று சொல்வதற்குக் கூடாமையாயிருக்கின்றது.

அக்நியே சுவாலையாயும் சுவாலையே அக்நியாயும் எப்படியிருக்கின்றதோ, அது போல் ஞானமே அறிவாகவும் அறிவே ஞானமாகவும் இருக்கிறது இப்படிப்பட்ட ஞானமுடையவனே பரப் பிரம்மம் அந்த பரப்பிரம்மமே நான்.

இதனாலேயல்லவா பிரம்மஞானம் பரமாத்மா வென்றும், தத்வமஸி என்றும் வேதங்களில் சொல்லி யிருப்பதுமேயன்றி, ததேகோவசிஷ்டடஹ சிவகேவ லோஹம் என்று ஸ்ரீ சங்கராசாரியாரும சொல்லி யிருக்கின்றார். சிவோஹம் என்பது இந்த அர்த்தத்தை அனுசரித்தே சொல்லியிருக்கின்றது.

இப்படி அறிவாயிருக்கும் என்னை யாராயினும் அடிக்கலாமா, அல்லது கத்தியினால் வெட்டலாமா அக்நியால் தகிக்கலாமா ஜலத்தினால் நனைக்கலாமா, காற்றினால் அலையச் செய்யலாமா? எந்த பஞ்சபூத வஸ்துக்களும் என்னைத் தொடமாட்டா. நான் ஒருவன் கைகளுக்கும் கண்களுக்கும் கருத்துக்கும் அகப்படப் பட்டவனல்லன். அறிவாயிருக்கும் எனக்கு எந்த சொத்துகளினாலாயினும் என்றால், தாரேஷணை (பார்யாளின் மேல் ஆசை) புத்தி ரேஷனை (புத்திரர்களின் மேல் ஆசை) தநேஷணை (பொன் வெள்ளி முதலானவைகளின் மேல் ஆசை ) என்னும் ஈஷணாத்திரயங் களினாலாயினும் ராகத்து வேஷங்களினாலாயினும் அன்னபானாதிகளினாலாயினும்மானா பிமானங் களிலாயினும் லோபாலோபங்களினாலாயினும் என்ன பிரயோஜனமுண்டு.

சரீர சம்பந்தமானவைகள் எத்தனையோ வருவதும் போவதுமுண்டு. அசரீரியாகிய எனக்கு சொந்தமான சரீரம் ஒன்றுமில்லை. அசரீரியாகிய எனக்கு சொந்தமான சரீரம் ஒன்றுமில்லை. இப்பொழுது என்னைப்பிடித்திருந்த காமக் குரோதங்களெல்லாம் எப்படி ஒழிந்தன? அவைகளை யெல்லாம் நான் அறிந்த பின்னல்லவோ என்னை விட்டொழிந்தன. இதற்குமுன் ஒழியென்றாலும் ஒழியுமோ? ஒழியமாட்டாதல்லவா?

எந்த தாழ்ந்த ஜாதியிலுள்ளவர்களோ அல்லது எந்த மிருகமோ ஒருவனுக்குப் பார்யாளாய் முறைக்கொண்டு வந்தது. இப்படியே அநேக புத்திரர்களும் புத்திரிகைகளும் ஒவ்வொருவராய் முறைகொண்டு சந்தையிற் கூட்டம்போல் வந்து கூடிக்கொண்டிருக்கின்றார்கள். இப்படியாய் வந்தவர்களை புருஷர்கள் காப்பாற்றிக் கொண்டிருப்பார்கள். இந்த ஜன்மத்தில் மேற்சொல்லியது போல் பந்துக்களாய் வந்தவர்கள் வருகிற ஜன்மத்தில் இவர்களெல்லோரும் எங்கெங்கே போய்ப் பிறப்பார்களோ அல்லது எப்படியாவார்களோ தெரியவராது. அன்றியும் இப்பொழுது இந்த ஸ்தலத்தில் நிலம் வாங்கி இவ்விடம் வீடுகட்டுவதும் இதுபோல் மறு ஜன்மத்தில் வேறோரிடத்தில் வேறு நிலம் வாங்கி வீடு கட்டுவதுமாயிருக்கின்றார்கள். சீ சீ, இது மிகவும் அறியாத் தன்மையாயிருக்கின்றது.

நான் இப்பொழுது கிரகிக்க வேண்டிய விஷயங்களைக் கிரகித்தேனோ? முக்கியமாய்ச் செய்ய வேண்டிய விஷயங்களைச் செய்தேனா இன்னும் ஏதாகிலும் குறைவுபட்டிருக்கின்றதா? அதை யோசித்து பார்ப்போம்.

ஜ்ஞானமேவமோக்ஷஹ என்றிருக்கின்றது. ஆதலால் ஆத்ம விசாரணை செய்தபிறகு எந்தத் தபமும் ஜபமும் செய்யவேண்டியதில்லையென்று ஸ்பஷ்டமாய்த் தெரியவருகின்றது. ஆதலால், நான் இனி செய்ய வேண்டியது ஒன்றுமில்லை.

இதற்குத் திருஷ்டாந்தம், பரீக்ஷித்து சுகப்பிரம்மத்தினிடம் ஞானோபதேசம் பெற்ற பிறகு, மோக்ஷத்திற்கு வேண்டிய தபசு முதலானவைகள் ஏதாகிலும் செய்தாரா? ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினால் ஞானோபதேசம் பெற்ற அர்ஜீனன் ஏதாகிலும் செய்தாரா? நான் மாத்திரம் ஏன் செய்ய வேண்டும்?

ஞானோபதேசமான பிறகு, பரீக்ஷித்து மஹரிஷி யானவர் மோக்ஷமடையும் வரையில் அவருக்குச் சர்வ காசமிருந்துபடியால், பகவானுடைய குணாதிசயங்களைக் கேட்டு ஆனந்தித்தனர். அதுபோல் நானும் பகவத் குணங்களைக்கேட்டு ஆனந்திக்கின்றேன். அப்படி பகவத் குணங்களைக் கேட்டு ஆனந்திப்பதினால் மனம் தெளிந்து திடமாய் நிற்கும். இப்படி மனம் திடமாய் நிற்பதற்குச் சத்சங்கத்வமும் வேண்டும் இதற்குப் பபிரமாணம்.

"ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம் நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்
நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம் நிஸ்சலதத்வே ஜீவன் முக்திஹ."?

சத்ஸங்கத்வே - நல்லவர்களுடன் சினேகம் செய்தால், நிஸ்ஸங்கத்வம் - புத்திர மித்திர களத்திராதிகளின் மீதிருந்த ஆசை நீங்கும். நிஸ்ஸங்பத்வே - புத்திர மித்திர களத்திராதிகளின் மீதுள்ள ஆசை நீங்குவதனால், நிர்மோஹத்வம் - அஞ்ஞானத்திற்கு மூலகாரணமாயை மோகம் இல்லாமலிருக்கும் நீர்மோஹத்வே - மோகம் இல்லாமலிருப்பதனால், நிஸ்சலதவம் - அசலமாகிய பரதத்துவ நிஷ்ட்டையுண்டாகும். நிஸ்சலதத்வே - அப்படிப்பட்ட பர தத்வமான நிஷ்ட்டையுண்டானால், ஜீவன் முக்தி - ஜீவன் மோக்ஷத்தையடையும்.

என்றால், நல்லவர்களுடன் சினேகம் செய்தால், புத்திர மித்திர களத்திராதிகளின் மீதிருந்த ஆசை நீங்கும், புத்திர மித்திர களத்திராதிகளின் மூலகாரணமாயிருக்கும் மோகம் நீங்கும். மோகம் நீங்குவதனால், அசலமாகிய பரதத்வமான நிஷ்ட்டையுண்டாகும். அப்படிப்பட்ட பரதத்வமான நிஷ்ட்டையுண்டானால் ஜீவன் மோக்ஷத்தையடையும் என்பதேயாம்.

## 52. யார் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள்?

இதன் ரகஸ்யம் அனேகர்களுக்குத் தெரியவராது. அதைச் சொல்லுகின்றோம். இதற்கு திருஷ்டாந்தம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை அத்தியாம் 4, ஸ்லோகம் - 13 பிரமாணம் என்ன வென்றால்,

சாதுர்வர்ணயம் மயாஸ்ருஷ்டம் குணகர்ம விபாகஸ்ஹ
தஸ்ய கர்த்தார மபி மர்ம வித்யகர்த்தார மவ்யயம்

கிருஷ்ணன்: அர்ஜுநா! இந்த உலகத்தில் ஜனங்களுக்கு, நான்குவித குணபேதங்களுண்டு. அதைச் சொல்லுகின்றேன் கேள். சிலர் கேவல ஸத்வகுணமுடையவர்களும் சிலர் ஸத்வ ரஜோ குணங்களுடையவர்களும் சிலர் ரஜஸ்மே குணங்களுடையவர்களும் மற்றும் சிலர் கேவல தமோ குணமுடையவர்களுமாயிருக்கின்றார்கள். இதில் முதல் வகுப்பினர்கள் என்றால், கேவல ஸத்வகுணமுடையவர்கள். கண்கள் மூக்கு வாய் செவிகள் தேகசர்மம் என்னும் இந்த ஐந்து இந்திரியங்களையும் மனதையும் ஜயித்து ஸத்வ குணத்துடனிருந்து தவம் செய்து கொண்டிருப்பவர்களே பிராமணர்கள்.

இரண்டாவது வகுப்பினர்கள் என்றால் ஸத்வ ரஜோ குணங்களுடையவர்கள். மேற்சொல்லிய இந்திரியங்களும், இந்திரியங்களுக்கெல்லாம் அரசனாயிருக்கும் மனம் இவ்விரண்டினாலல்லவோ புண்ணிய பாவங்கள் உண்டா கின்றனவென்று தெரிந்து கொண்டு, இந்திரியங்களுடன் கூட யுத்தம் செய்பவர்களே க்ஷத்திரியர்கள்.

மூன்றாவது வகுப்பினர்கள் என்றால் ரஜ ஸ்தமோ குணங்களுடையவர்கள், புண்ணிய பாவங்களின் ரகஸ்யார்த்தங்களை அறிந்து, புண்ணியம் செய்வதானல் லாபமுண்டென்றும் பாவம் செய்வதானல் நஷ்ட்ட முண்டென்றும் தெரிந்து கொள்ளத்தக்க நிலையை அடைந்தவர்களே வைசியர்கள்.

நான்காவது வகுப்பினர்கள் என்றால், கேவல தமோ குணமுடையவர்கள். இவர்கள், யாதொன்றும் அறியாமல் அஞ்ஞானமென்னும் இருளில் மூழ்கியிருப்பார்கள், இப்படிப்பட்டவர்களே சூத்திரர்கள்.

சுலோ ‖ ஏ ஸத்யம் ப்ரஹ்மஸௌகஞ்ச ப்ரஹமமிந்த்ரிய நிக்ரஹம் ஸர்வஜீவதயா ப்ரஹ்மயேத ப்ராக்ஷிமணலக்ஷணம்.

ஓ அர்ஜுநா! குணத்தொழிலால் ஜாதிபேதம் ஏற்படுகிறது. அதை சொல்லுகின்றேன் கேள்! எவன் பூர்வ ஜன்மத்தில் வியாழதிசை பதினாறில், பத்து வருஷங்கள் முன் ஜன்மத்தில் கடந்தபின் மரணமடைகின்றானோ அவன் மறுபடியும் சண்டாளன் வீட்டிலோ, க்ஷத்திரியன் வீட்டிலோ அல்லது பிராமணன் வீட்டிலோ பிறக்க வேண்டிய கர்மம் இருக்கும பக்ஷத்தில் அந்த ஜாதி தாயின் கர்ப்பத்தில் சிருஷ்ட்டி செய்து வைத்திருக்கும் தூல சரீரத்தில் வந்து சேர்ந்து பிறக்கும் பொழுது முன் ஜன்மத்தில் வியாழதிசை பதினாறில் பத்து வருஷங்கள் அந்த ஜன்மத்திலேயே செல்லும்போது மிகுதி நின்ற வியாழதிசை வருஷங்கள் ஆறும், சிசுவின் கூடவே துடர்ந்துவரும். அதன்பிறகு, சிசு ஜநநமானவுடன், ஜோதிடன், ஜோஸ்யம் எழுதும்பொழுது குழந்தை பிறந்த லக்கினத்தைக் குறிப்பிட்டு, வியாழதிசை கர்ப்பத்தில் செல்லுபோய் நின்ற வருஷங்கள் ஆறு என்று கணக்கெடுத்து ஜாதகம் எழுதுகின்றான் என்றால்,

பூர்வ ஜன்மத்தில் எந்த ஜாதியில் எங்கு பிறந்தானோ அந்த ஜாதியில் மரணமடைவதற்கு முன் வியாழதிசை பதினாறில் பத்து வருஷங்கள் நடக்கும்பொழுது வியாதி வந்து மரணமடைவானாகில் மிகுதியாயிருக்கும் வியாழ திசை ஆறும் அவனைத் துடர்ந்து வருகிறதேயொழிய கர்ப்பத்தில் பத்து வருஷங்கள் செல்லுபோகவில்லை இது, தேவரகஸ்யமாதலால், சில ஜோஸ்யர்களுக்கு மாத்திரமே இந்த ரகஸ்யம் தெரியவருமேயொழிய, மற்றவர்களுக்குத் தெரியவராது.

இன்னும் சொல்லுகின்றேன் கேள். சூரியன் அங்காரகன் பிரஹஸ்பதி புருஷ கிரகங்கள், சந்திரன் சுக்கிரன் ராகு ஸ்திரிகிரகங்கள், புதன் சனி கேது நபும்ஸக (அலி) கிரகங்கள், பிரஹஸ்பதி சுக்கிரன் பிராமண கிரகங்கள், சூரியன் அங்காரகன் க்ஷத்திரிய கிரகங்கள், சந்திரன் புதன் வைசிய கிரகங்கள், சனீஸ்வரன், சூத்திரர் முதலான ஜாதிகளுக்கு அதிபதி, ராகு கேது சண்டாள கிரகங்கள் தாய் தந்தையர்கள் கூடி பிண்டம் தரிக்கும் பொழுது மேற் சொல்லிய கிரகங்களில் எந்த கிரகங்கள் அவனவன் கர்மத்திற்குத் தக்கபடி முன் ஜன்மத்தில் செலலுபோய் மிகுதியிருக்கின்றனவோ அந்த கிரகங்கள் அக்குழந்தையைத் தொடர்ந்து வருவதனால், அக்குழந்தை அந்த அம்சமாகவே பிரகாசிக்கும். எப்படி யென்றால்,

பிரமாணர்களின் வீட்டிலாகிலும் அல்லது க்ஷத்திரிய வைசிய சூத்திர சண்டாளர்களின் வீட்டிலாகிலும் தாய் தந்தைகள் சேர்ந்து பிண்டம் தரிக்கும் சமயத்தில், பிரஹஸ்பதி சுக்கிர கிரகங்கள் ஆக்ஷி உச்ச திரிகோணம் முதலான சுபஸ்தானங்களிலிருந்து ஆணாகவோ அல்லது பெண்ணாகவோ பிறந்தால், அவர்கள் சத்திய வந்தர்களாயும் சிசு ஆசாரமுடையவர்களாயும் இந்திரிய நிக்கிரஹ முடையவர்களாயும் பூததயை பச்சாதாபமுடையவர்களாயும் பிரம்ம வேத்தர்களாயுமிருப்பார்கள். இந்த குணங்களுடன்

கூடியிருப்பவர்கள் பிராமணர்களேயொழிய பிராமண ஜாதியில் பிறந்து இப்படிப்பட்ட குணங்களில்லாவிடில் அவனை சூத்திரனாய் எண்ண வேண்டுமேயொழிய பிராமணனாய் எண்ணலாகாது! கர்மத்தினால் பிராமண னேயொழிய ஜாதியினால் பிராமணனாகமாட்டான்.

முன் சொல்லிய எந்த ஜாதியிலாகிலும் பிண்டம் தரிக்கும்பொழுது சூரியன் அங்காரகன் வலுத்திருந்தால் இவை க்ஷத்திரிய கிரகங்கள்! இந்த கிரகங்களுடன் கூடி பிறந்தவர்களுக்கு மேற் சொல்லிய க்ஷத்திரிய தர்மங்கள் உண்டாகும்.

எந்த ஜாதியிலாகிலும் பிண்டம் தரிக்கும்பொழுது சந்திரன் புதன் வலுத்திருந்தால் அவை வைசிய கிரகங்கள், இந்த கிரகங்ளுடன் கூடி பிறந்தவர்களுக்கு மேற்சொல்லிய வைசிய தர்மங்கள் உண்டாகும்.

எந்த ஜாதியிலாகிலும் பிண்டம் தரிக்கும்பொழுது சனீஸ்வர கிரகம் வலுத்திருந்தால் இது சூத்திர கிரகம் இந்த கிரகங்களுடன் கூடி பிறந்தவர்களுக்கு மேற்சொல்லிய சூத்திர தர்மங்கள் உண்டாகும்.

இந்த நான்கு ஜாதிகளையும் இதலலோகத்தில் சிருஷ்ட்டிக்கவில்லை, நான் மாயையை சிருஷ்ட்டி செய்யும் கர்த்தாவாகியிருக்கின்றேன். அந்த மாயை என்னைப் பற்றமாட்டாது. ஏனென்றால், என்னைவிட வேறு வஸ்து இருந்தாலல்லவோ அந்த வஸ்துவை நான் சிருஷ்டித் தேனென்று சொல்லலாம். எல்லாம் நானாகவே யிருக்கின்றேன். ஆதலால் என்னை அசம்சாரி (சம்சாரமற்றவன்) என்றே சொல்லலாம், அத்யாயம் 9 சுலோகம் 33 பிரமாணம் என்ன வென்றால்,

மாம்ஹி பார்த்த! வ்யாபாஸ்ரித்ய யேபிஸ்யுஹுபாபயே
நயஹ ஸ்திரீயோ வைஸ்யாஸ்த்ததா ஞூத்ராஸ்தேபி
யாந்திபராஙகதிம்

ஹே! குந்திபுத்ரா! தோல் எலும்பு கொழுப்பு மயிர் முதலானவைகளுடன் கூடியிருக்கும் நான் யாரென்று அறியாமல், நான் ஆண், நான் பெண் நான் பிராமணன் நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன் என்று பந்தத்தில் கட்டுண்டு கிடப்பது உயிர்களன் சுபாவகுணமாதலால், எல்லாம் கற்றும் அன்னியர்களுக்கு உபாதசித்தும் தன்னைத்தான் அறியாவிட்டால், அவன் பிராமணனாகமாட்டான், இப்படிப்பட்டவர்கள் நீசஜன்மங்களையே அடைவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கின்றது, இதற்கு மநுஸ்மிருதி பிரமாணம் என்னவென்றால்.

சூதரோ ப்ரஹ்மணதாமேதி ப்ராஹ்மணஸ்ச்சேதி ஸூத்ர
தாம் க்ஷத்ரியாஜ் ஜாதமேவந்து விந்யாத் வைஸ்யாத் தலைச

சூத்திரன் பிராமணனாவான், பிராமணன் சூத்திரனாவான். க்ஷத்திரிய சூத்திர சண்டாள ஜாதியில் பிறந்தவர்களும் இப்படியே ஆவார்கள். என்றால், சண்டாளன் பிராமணனாய்ப் பிறப்பானென்று எல்லா சுருதி, ஸ்மிருதிகளிலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

நவிஸோஸோஷதி வர்ணாணாம் ஸர்வப்ராஹ்ம மிதம் ஜகத்
ப்ராஹ்மண பூர்வஸ்ருஷ்ட்டம் ஹிகர்மபிர வரணதா மகதம்

என்று ஸ்ரீ மஹாபாரதம் சாந்திபர்வம் 188-வது அத்யாயத்தில், ஜாதியினால் ஒன்றுமில்லை. ஆதியில் இந்த ஜகத்தெல்லாம் பிரம்மமாகவே இருந்ததென்று சொல்லியிருக்கின்றது. காமத்தினால் ஜாதிபேத முண்டாயிற் றென்று சொல்லப்பட்டிருக்கின்றது. கிருதயுகத்தில் ஜாதி பேதமில்லையென்றும் வாயுபுராணம் எட்டாவது

அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. எப்படிப் பட்டவனாயிருந்தபோதிலும் நல்ல நடவடிக்கையில்லாவிட்டால் அவன் பிராமணனாக மாட்டான். சூத்திரனாய்ப் பிறந்து நல்ல நடவடிக்கையுடன் இருப்பானாகில் அவன் பிராமணனேயாவான், இதற்குச் சில வாக்கியங்களை புராணத்திலிருந்து இங்கு திருஷ்ட்டாந்தமாய் சொல்லுகிறோம்.

எபிஸ்து கர்நர்தேவிஸுைபரா ச்ரிதைஸ்ததா ஞுத்ரோ
ப்ரஹ்மணதாம் யாதி வைஸ்யஹ க்ஷத்திரியதாம் வரஜேந்

நயோநிர்ணாபி ஸம்ஸ்காரோ நஸ்ருதம் நச ஸந்ததிஹ கரணாநி த்விஜத்வஸ்ய வ்ருத்தமேவது காரணம் ஸர்வோயாம் ப்ராஹ்மணோ லோகே ஜருத்தேநச விதியதே வ்ருத்தேஸ்தி தஸ்த, ஸூத்ராபி ப்ராஹ்மணத்துவம் நீசஸயதி.

என்று பாரதத்திலும் மஹேஸ்வரி சம்வாதத்திலும் இப்படிப்பட்ட நற்கார்யங்களைச் செய்வானாகில் சூத்திரனும் பிராமணனே யாவான் என்றும் ஜாதிபேதம் உபநயனம் மேதாத்யயனம் (வேதங்களை வாசிப்பது) சந்ததி முதலானவைகளினால் பிராமணனாவனென்றும் நல்ல நடவடிக்கையினால் பிரமணனாவனென்றும் சொல்லப் பட்டிருக்கின்றது. மஹாபாரதம் ஆயண்யபர்வத்தில் தர்மராஜருக்கு வைசம்பாயனர் சொல்லுகின்றார்.

ஓ யுதிஷ்ட்டிரா (ஓ தர்மராஜா) ஜாதியினால் பிராமணனாகமாட்டான். கார்யத்தினால் பிராமணனாவன், நல்ல நடவடிக்கையுடையவன் சண்டாளனாயிருந்த போதிலும் அவனே பிராமணனாவான். ஓ யுதிஷ்ட்டிரா! இப்பிரபஞ்ச மெல்லாம் ஒரே ஜாதியாயிருந்து கர்மத்தினால் நான்கு ஜாதி ஏற்படுத்தப்பட்டது. மனிதர்களெல்லோரும் ஒரே தாய் கர்பத்திலிருந்து பிறந்தவர்கள். இப்படிப்பட்டவர்களில் நல்ல ஆகாரம் நல்ல நடவடிக்கை எவனுக்குண்டோ அவனே பிராமணனாவான். என்றால் சூத்திரனானாலும்

சண்டாளனானாலும் சரி எவனுக்கு நல்ல ஆசாரம் நல்ல நடவடிக்கையுண்டோ அவனே பிராமணனாவான். பிராமண ஜாதியில் பிறந்து நல்ல ஆசாரம் நல்ல நடவடிக்கையில்லாவிட்டால் அவன் சூத்திரனேயென்று எண்ணவேண்டும். ஓ ராஜனே! ஜாதியினால் ஒன்றுமில்லை, குணங்களே கல்யாண (மங்கள) மானது. எவன் தர்மாத்தமாயும் பரோபகாரார்த்தமாயும் இருக்கிறானோ அவனே பிராமணனென்று சொல்லப் பட்டிருக்கின்றது. மற்றோரிடத்தில் யக்ஷயன் கேள்விக்கு தர்மராஜா சொல்லுகின்றார்.

ஓ நாகேந்திரா! ஸத்தியம் தானம் பொறுமை அஹிம்ஸை (கொன்று சாப்பிடாமலிருப்பது) தவம் கருணை முதலாகிய குணங்கள் எவனிடம் இருக்கின்றனவோ அவனே பிராமணன் இக்குணங்கள் சூத்திரனிடத்திலிருந்தால் அவன் சூத்திரனாகமாட்டான். பிராமணனிடத்தில் இக்குணங் களில்லாவிட்டால் அவன் பிராமணனாகமாட்டான்.

என்றால் மேற்சொல்லிய குணங்கள் சூத்திரனிடத்தி லிருந்தால் அவனே பிராமணன், பிராமணனிடம் மேற்சொல்லிய குணங்களில்லாவிட்டால் அவனே சூத்திரன் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதிஸங்கராசாரியர் பிராமண ஜாதியில் பிறந்தபடியால் அவருக்கும் அஞ்ஞானம் மூடிக்கொண்டு ஜாதி அபிமானம் உண்டாயிற்று அதைப் போக்கடிக்க பரமசினானவர், சண்டாள வேஷம் தரித்து வந்து சொன்ன விஷயங்களை இதனடியில் சொல்லுகின்றோம்.

இந்த உலகத்தில் பரம தயையுடையவனாயும், ஷட்குண ஐஸ்வர்ய ஸம்பத்துடையவனாயும் ஜல ஜந்துகளுக்குச் சமுத்திரம் ஏரி குளங்களே ஆதாரமாயிருப்பது போல், துக்கமே சம்சாரமென்னும் சமுத்திரத்திற்குக் காரணமாயிருந்து. எப்பொழுதும் அதில் மூழ்கிக் கொண்டிருக்கும் ஜீவகோடிகளை உத்தரிப்பதற்காக பரமசிவனானவர் சண்டாளவேஷம் தரித்து

காசிப் பட்டணம் வழியாய் வரும்பொழுது, ஸ்ரீ ஸங்கராசாரியார் அவரைக் கண்டு, ஹே சண்டாளா! விலகிப்போ! என்று சொல்லினர். அப்பொழுது சண்டாள வேஷத்தைத் தரித்திருக்கும் பரமசிவனானவர் சொல்லுகின்றார்.

ஹே! சந்நியாசிகளுக்கெல்லாம் சிரேஷ்டனாயிருக்கப்பட்டவனே! நான் கேட்கப்போகும் கேள்விகளுக்கெல்லாம் தக்க பதில் சொல்லக்கடவாய். அன்னவி காரமாகிய உன் சரீரத்தைவிட்டு, அன்னவிகாரமாகிய என் சரீரத்தை விலகும்படிச் சொல்லுகின்றாயா? அல்லது உன் சரீரத்திற்குள்ளிருக்கும் ஆத்மாவை, என் சரீரத்திற் குள்ளிருக்கும் ஆத்மா தீண்டலாகாதென்று சொல்லுகிறாயா என்ன?

"உபயோ ரப்யத்ந கார்யத்வே நைகத்வாத்"

உன் சரீரம் எப்படி அன்னமயகோசத்தினால் உண்டாயிற்றோ அதுபோல், என் சரீரமும் அன்னமய கோசத்தினா லுண்டாயிற்று. ஆதலால் இரண்டு சரீரங்களும் ஒன்றாயிருக்க, உன் சரீரம் சுசிவானதும் என் சரீரம் அசுசியானதும் என்று எப்படிச் சொல்லலாம்? என் சரீரம் அசுசியென்றால் உன் சரீரமும் அசுசியானதே! ஆதலால், சரீரத்தைப் பார்த்து விலகியிரு என்று சொல்வது சரியல்ல. நம்மிருவருடைய சரீரமும் அசுத்தமேயென்று செல்வதற்கு வேதமே பிராமணமாயிருக்கின்றது. அதாவது,

"ஸவாஏஷ பருஷோந்நரஸமய இதி"

பிரபஞ்சமெல்லாம் மாயாசொருபமாயிருக்கின்றது, ஆதலால் ஒரேவிதமாயிருக்கும் அன்னரசத்தில் உண்டாகிய சரீரங்களைக்குறித்து அபிமானம் வைக்கலாகாது? ஆத்மா உன் சரீரத்திலும் என் சரீரத்திலும் இதர பிபீலிகாதி பிரம பரியந்தமுள்ள சகல ஜீவராசிகளின் சரீரத்திலும் ஒரே விதமாயிருக்கிறது. இது விஷயத்திலும் நீ சொல்லலாகாது. இதற்குச் சுருதிப்பிரமாணம் என்னவென்றால்,

"சைதந்யஸ்ய ஸர்வத்ரைக ரூபத்வாத். ஏதோ தேயஸ்
ஸர்வ பூதேஷு கூடஹ சர்வவ்யாபீ ஸர்வபூதாந் தராத்மா"

*ஆத்மா ஒருவனே சுயம்பிரகாசனாய் எல்லாப் பூதங்களிலும் அதிகோப்பியமாய் ஸாக்ஷிபூதனாய் இருக்கின்றான்.*

பிரத்யக் வஸ்துநி நிஸ்தரங்க ஸஹஜா நந்தவாபோ தாம்யுதௌ
விப்ரோ யம்ஸ்வபசோபமித்யபிம ஹாந்கோயம் விபேதப்ரமஹ
கிம்கங் காம்புநி பிம்பிதேம் பரமணௌ சண்டான
வீதிபயஹப்பூரே வாந்தரமஸத்தி காஞ்சநகடீ மருக்கும்
பயோர்வாம்பரே.

*"துக்கமயமாகிய அஹங்காரங்களுக்கெல்லாம் வேறாயிருந்து பிரகாசித்துக் கொண்டிருக்கும் பரப்பிரம்மத் துடன் சேர்ந்திருப்பவனுக்கு அலைகளில்லாத சமுத்திரம் சற்றும் அசையாமல் இருப்பதுபோல் மனதை சற்றும் அசையவிடாமல் செய்யப்பட்டவனுக்கு அதாவது, சங்கல்பவிகல்பம் (நினைப்பு மறுப்பு) இல்லாதவனுக்கு இவன் பிராமணனென்றும், இவன் சண்டாளனென்றும் பேதபுத்தி எங்கிருந்து உண்டாயிற்று. கங்கா நதியிலும், சண்டாள வீதியிலும் இருக்கும் ஜலத்தில் பிரதி பிம்பித்திருக்கும் சூரியனுக்கு எப்படி பேதமில்லையோ, அப்படியே ஜீவாத்மாவிற்கும், பரமாத்மாவிற்கும் பேதமில்லை. தங்கக் கலசத்திலும், மட்பாண்டத்திலும் நிறைந்திருக்கின்ற ஆகாசத்திற்குக் குணபேதங்கள் எப்படியோ, அப்படியே ஆத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் குணபேதங்களில்லை. ஆத்ம வஸ்துவில் பேதபுத்தியுடன் எவன் பார்க்கிறானோ அவன் ஜநந மரண ரூபமாயிருக்கும் சம்சாரத்திலிருந்து விடுபடமாட்டான். குடத்திலிருக்கும் ஆகாயத்தைக் கொண்டு போவதில்லை. குடத்தை மாத்திரம் கொண்டுபோகின்றான். அதுபோல், ஜீவனும் ஆகாயம்போல் எங்கும் நிறைந்திருக்கப்பட்டது. நாசமில்லாதது அது எங்கும் அகண்டானந்த ரூபமாய் ஞானத்தினால் பிரகாசித்து சர்வ காலத்திலும் (எப்பொழுதும்) ஆநந்தத்துடன் கலந்து*

ஒன்றாயிருககும் பரப்பிரம்மம், அப்படிப்பட்ட பரப்பிரம்மத்திற்குப் பேத புத்தியுண்டென்று நீ எப்படிச் சொல்லலாம்? என்று சண்டாள வேஷதாரியாகிய பரமேஸ்வரன் சொல்லினர்.

இவ்விதமாய் சண்டாள வேஷத்தைத் தரித்துவந்த பரமசிவனது வார்த்தையை, சர்வஞ்ஞானமும் பூஜ்ஜியனாயும் இருக்கப்பட்ட ஸ்ரீஸங்கராசாரியார் கேட்டவுடன், ஜாதி பேதமில்லாதவராய் சில முமுக்ஷுக்களைப் பார்த்து அவர்களுக்குச் சமாதியில்லாமலே வர்ணாச்சரமாபிமான நிவர்த்திக்காக நிஜ சொரூபமாகிய பிரம்மைக்யாநுபவத்தை அடைவதற்கு ஐந்து சுலோகங்களால் தமது சுவாநுபவத்தை வெளியிடுகின்றார்.

"ஜாக்ரத்ஸ்வப்ந ஸுஷுப்திஸ்புடதரா யாஸம்வித
உஜ்ஜ்ரும்பதே யா ப்ரஹ்மாதிபி பூலிகாந்த தநுஷுப் ரோதா
ஜகத்ஸாக்ஷிணி ஸைவாஹம் நச த்ருஸ்வஸ்த்விதி த்ரு
ப்ரஜ்ஞாபி யஸ்யாஸ்திடசத். சண்டாளோஸ்து ஸது
த்விஜோஸ்து குருரித்பியஷா மநீஷா மம்".

ஜாக்கிரதை சொப்ந சுஷுப்திகளில் எந்த ஞானம் சுயம்பிரகாசமாய்ப் பிரகாசிக்கின்றதோ, பித்த ஞானம் ஜகத்திற்கு சாக்ஷியாயிருக்கின்றதோ, பிரம பிபீலிகாதி சரீரங்களில் எந்த சூத்திரம் (நூல்) ஆடிக் கொண்டிருக்கின்றதோ, அந்த சூத்திரமே நான் திருசிய வர்க்கங்கள் (காணப்படும் வஸ்துக்கள்) நானெல்லவென்று திருடஞாநம் எவனுக்குண்டாகின்றதோ அப்படிப்பட்டவன் சண்டாளனாயிருந்தாலும் அல்லது, பிராமணணாயிருந்தாலும் அவனே என் குரு வென்று ஸ்ரீ ஸங்கராச்சாரியார் சொல்லுகின்றார். செவிகள், தேக சர்மம், நேத்திரங்கள், நாக்கு, மூக்கு என்னும் ஞானேத்திரியங்கள் ஐந்து, வாய், கைகள், கால்கள், குதம் மர்மஸ்தானம் என்னும் கர்மேந்திரியங்கள் ஐந்து, மனம் புத்தி சித்தம்

அஹங்காரமென்னும் அந்ரீக்கரணங்கள் நான்கு ஆகிய இவைகளில் எது பிரத்தியஹமாய்த் தெரியவருகின்றதோ, அதுவே ஜாக்கிரதாவஸ்தை என்று சொல்லப்படும். முன்சொல்லிய இந்திரிய விவரங்களெல்லாம் நித்திரையில் காணப்படாமலிருந்தபோதிலும் பதார்த்தங்களினுடைய ஸ்மரணை நித்திரையில் காணப்படுவதே சொப்பநா வஸ்தையென்று சொல்லப்படும். அநாதியாயிருக்கும் மூலஞானத்துடன் மனது எப்பொழுது லீனமாகின்றதோ (அடங்கியிருக்கின்றதோ) அதுவே, சுஷுப்தியா வஸ்தையென்று சொல்லப்படும். இந்த மூன்று அவஸ்தைகளிலும் ஜாக்கிராவஸ்தையை அதாவது, ஜாக்கிரத்தில் சுஷுப்தியை பிரகாசிக்கும்படிச் செய்தால், ஜநநமரணங்களில்லாத பரமாத்மா பிரகாசித்துக் கொண்டிருக்கும். அதாவது, அவஸ்தாத் திரங்களிலும் என்றால், ஜாக்கிரதை சொப்பன சுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளிலும் சாக்ஷியாயிருக்கும் ஆத்மாவே நான் என்று எவன் நினைக்கின்றானோ அவன், தான் தானாவே பிரகாசித்துக் கொண்டிருப்பான். இந்த மூன்று அவஸ்தைகளிலும் சுயம்பிரகாசனாயும் சித்சொரூபனாயும் இருக்கும் பரப்பிரம்மமே நான் என்று எவன் நினைக்கின்றானோ அவன் அப்படியே யாவான்.

இவ்விதமாய் ஞானசொரூபமாகிய பரமாத்மா ஜீவர்களுக்கு பிரம்மபாவத்தைப் போதித்து, வியஷ்ட்டி ஸமஷ்ட்டி தேஹேந்திரியங்களைப் பின்னமாய்ச் செய்து அவைகளைப் பிரகாசிக்கும்படிச் செய்வித்து, ஜீவனுக்கு பிரம்மதத்துவத்தைக் காட்டுகின்றார் பரமாத்மா, தேஹேந்திரியாதிகளைப் பிரகாசிக்கச் செய்வதேயல்லாமல் ஜடமாகிய பிரபஞ்சததையுங்கூட பிரகாசிக்கச் செய்கின்றார். அந்த பரமாத்மா. ஜீவாத்மாக்களுக்கு ஏன் காணப்படுவதில்லை யென்றாலோ ஜீவாத்மாக்களுக்கு மாயையென்பது மூடிக்கொண்டிருப்பதனால் அப்பர மாத்மா காணப்படுவதில்லை,

ஆத்மா ஓர் ரூபத்துடன் சேர்ந்து சமஸ்த ஜந்துக்களையும் பிரகாசிக்கச் செய்கின்றது. ஞானசொரூபனாயும், சாக்ஷிமாத்ரனாயும் இருக்கும் பரமாத்மா எதுவோ அதுவே நான் காணப்படும் பிரபஞ்சம் நானல்ல தேஹமும் இந்திரியங்களும், இந்திரியங்களினால் செய்யப்படும் காரியங்களும் சாஸ்வதமானதால், அனேககோடி ஜன்மங்களாய் சம்சார விஷயத்தையே மனனம் செய்து வந்தபடியால் இந்த ஜன்மத்தில் ஜீவர்களுக்கு யாவரும் சொல்லாமலே, முன் சொல்லி யிருக்கும் காமக்குரோத லோப மோஹ மதமாச்சரங்கள் எப்படித் தனக்குத்தானாய் உண்டா கின்றனவோ அதுபோல், அநேக ஜன்மங்களாய்ச் செய்துவரும் ஈஸ்வரார்ப்பண சத்கர்மங்களினால் நானே பிரம்ம மென்று எண்ணிக் கொண்டு வரப்பட்டவன் குரு உபதேமில்லாமலும் சாஸ்திராப்யாஸ முதலாகிய சாதனங்களில்லாமலே தீவிரமாய் பிரம்ம சொரூபத்தை அடைகின்றான். இப்படிப்பட்ட யதார்த்த ஞானம் எவனுக்குண்டோ, அவனே பிரம்ம சொரூபனென்று தெரிந்து கொள்ள வேண்டும் இப்படிப்பட்டவன் சண்டாளனா யிருந்தாலும் அவனே பிராமணனென்று சொல்லப்படுவான். அப்படி பட்டவனே காரண குரு ஆவான்,

சண்டாளனை எப்படி குருவாய் வைத்துக் கொள்ளலாமென்று சந்தேகப்படுகின்றாயா என்ன? அப்படி சந்தேகப்படலாகாது. ஏனென்றால் நித்திய மானதும், சுத்தமானதும் அசிங்கமானதுமாகிய ஆத்ம ஞானத்திற்கு, ஜாதி குலம் என்னும் எந்த அபிமான முண்டோ. அந்த அபிமானமெல்லாம் எவனுக்கு நசித்துப் போகின்றதோ அவன் சண்டாளனாயிருந்தாலும், பரிசுத்தமானவனே என்று சொல்லலாம். ஜீவேஸ்வரர்களுக்கு எப்படிப்பட்ட அபிமானங்களும் இல்லையென்று ஸ்ரீஸங்கராசாரியார் அபிப்பிராயம்.

ஜாக்கிரதை சொப்ந சுஷுப்தியாவஸ்தைகளிலும் எந்த ஆத்மா ஸ்பஷ்ட்டமாய்ப் பிரகாசித்துக் கொண்டு பிரமதேவன் முதல் பிபீலிகாதி ஸகல சராசர சரீரங்களுக்கு . . சுத்திற்கும் எது சாக்ஷியாயிருக்கின்றதோ அந்த ஞான சொரூபமாகிய ஆத்மா நானேயொழிய காணப்படும் பதார்த்தங்கள் நானல்ல என்னும் திருடஞானம் எவனுக்குண்டோ அவன் சண்டாளனா யிருந்தாலும் பிராமணனாயிருந்தாலும் அவனே காரண குருவென்று ஸ்ரீ சங்கராசாரியாருடைய அபிப்பிராயம்.

பரமாத்மா பிரபஞ்சத்தை ஸ்ருஷ்ட்டி செய்து அந்தப் பிரபஞ்சத்திலேயே பிரவேசித்திருக்கிறாரென்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது.

இந்த பிரபஞ்சமெல்லாம் ஜீவேஸ்வரரூபமாய், சத்துவ குண ராஜாகுண தமோகுணங்களுடன்கூடி, சுகரூபனாயும் நாச ரகிதனாயும் சுயம் பிரகாசனாயும் இருக்கும் பரப்பிரம்மத்தில் புத்தியை திடமாய் எவன் நிறுத்துகின்றானோ அப்படிப்பட்டவன் சண்டாளனாலும் சரி அல்லது பிராமணனாலும் சரி, அவனே குருவென்று ஸ்ரீ சங்கராசாரியாரது அபிப்பிராயம்.

"நித்தியமாயும் நிர்மலமாயும் இருக்கும் பரப்பிரம்மனே நான் என்று நினைத்து காணப்படும் பிரபஞ்சத்தை மாயையென்று எவன் எண்ணுகின்றானோ, அவன் எவனானாலும் சரி அவனே எனக்கு குருவென்று ஸ்ரீ சங்கராசாரியர் சொல்லுகிறார்.

குருவினுடைய வாக்கினால் தெரிந்துக் கொண்டு, பிரபஞ்சம் அநித்தியமென்று அடிக்கடி நினைத்துக் கொண்டிருக்கப்பட்டவன், எப்பொழுதும் நாசமில்லாத பரப்பிரம்மத்தை ஸ்துதி செய்து, கபடமில்லாத சாந்த மனதுடையவனாய் இருப்பவன், அனேக ஜன்மங்களாய் வந்து

கொண்டிருக்கும் ஸஞ்சிதமென்னும் புண்ணியபாவ கர்மங்களின் மூட்டைகளையெல்லாம் ஞான அக்கிநியினால் பஸ்மம் செய்து, தனக்கு ஈஸ்வரனால் கொடுத்து அனுப்பப்பட்ட பிராப்த கர்மத்தை மாத்திரம் அனுபவித்து, பிறகு மோக்ஷத்தை அடைகின்றான், இதற்குக் கைவல்யம் பிராமணம்.

பஞ்சினை யூழித் தீப்போற் பலசன்ம விவித வித்தாம்
சஞ்சித மெல்லாம் ஞானத் தழல்சுட்டு வெண்ணீறாக்கும்
கிஞ்கிதா காமி யந்தான் கிட்டாமல் விட்டுப் போகும்
விஞ்சின பிராரத்தத்தின் வினையனு பவித்துத் தீருல்.

காரண குருவினுடைய வாக்கியத்தினால் இந்த பிரபஞ்சம் அநித்தியமென்று அறிந்து மூன்று காலத்திலும் என்றால், ஜாக்கிரதை சொப்பன சுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளிலும் இருக்கப்பட்டதும், பிரபஞ்சத்திற் கெல்லாம் எந்த பரப்பிரம்மமுண்டோ, அந்த பரப்பிரம்மமே நானாகின்றேன் என்று எப்பொழுதும் நினைத்துக் கொண்டேயிருக்க வேண்டும். இந்த பிரம்ம பதவியை அடைவதற்கு அநேககாலம் பிடிக்கும். இது விஷயத்தைக் குறித்து பதஞ்சலிரிஷி என்ன சொல்லுகின்றாரென்றால்,

"ஸதுதீர்க்கால நைரந்தர்ய ஸ்த்தராஸேவிதோர த்ருட பூமிஹி"

அநேக ஜன்மங்களால் எப்பொழுதும் பிரம்மத்தை ஜபம் செய்து வந்தால், பிரம்மபதவி உண்டாகிறது. எல்லா கர்மங்களையும் சாஸ்திர விதிப்படி விட்டு என்றால், சந்நியாசியாய் அநேக காலம் விடாமல் செய்து வரும் திருடஸம்ஸ்காரணத்தினால் (பூர்வ ஜன்மங்களின் வாசனையினால்) தானாகவே ஞான சொரூபமான அகண்டானந்தத்தை அடைந்து நானே பிரம்ம சொரூப னென்று தெரிந்து கொள்ளுகின்றான். இதுபோல் சதாகாலமும் பிரம்மத்தை ஜபம் செய்துவர வேண்டுமென்று

ஸ்ரீ ஸங்கராசாரியரது அபிப்பிராயம். நிர்வ்யாஜேத்யாதிநா விதுஷயஹ நேநேத்யர்த்ஹ, அஹங்காரம் கபடம் அசுர குணங்கள் அதாவது காமக்குரோத லோப மோஹ மத மாச்சரங்கள் இல்லாதவர்களாகிய ஞானிகள் தமது சரீரத்தை பிராரப்தத்திற்குச் சமர்ப்பிப்பார்கள். அதாவது, மனோவி காரங்களில்லாமல் சுக துக்கங்களை அனுபவித்துக் கொண்டிருப்பார்கள். ஏதௌ வாஸநா மநோ நாசௌ கீத்ருஸௌ அனேக ஜன்மங்களாய் வரும் வாசனைகளின் நாசமும், மனோ நாசமும் எவ்விதமாய் ஒழியும், அவைகள் எப்படிப்பட்டவைகளென்னும் கேள்விக்குச் சமாதானம் என்னவென்றால், மனதிற்கு, டம்பம் முதலானவைகள் அகஸ்மாத்தாய் உண்டாவதற்குக் காரணம். பூர்வ ஜன்மங்களின் வாசனையேயாம். அதவாது, அனேக ஜன்மங்களாய்க் காமக்குரோதாதி அழுக்குகள் மனத்துடன் கூடவே தொடர்ந்துக் கொண்டு வருவதேவாசனையென்று சொல்லப்படும். இந்த காமக்குரோதாதி குணங்கள் எப்படி நாசமாகுமென்றால் இது ஆத்மா வென்றும், இது அநாத்மாவென்றும் தெரிந்து கொள்ளாத அவிவேகத்தினால் உண்டாகிய காமக்குரோதங்கள் முதலாகிய அஹங் காரங்களும், அன்னிய பதார்த்தங்களினால் (ஆசாபா சங்களினால்) உண்டாகிய காமக்குரோதாதிகளும், தெய்வ வாசனை உண்டானபிறகு நாசமாய்விடும். தீவட்டியிலிருந்து அநேக தீபங்கள் உண்டாவதுபோல், தெய்வ வாசனை யிலிருந்து உண்டாகும் சாத்வீக விருத்திகளின் சமூகமே (கூட்டமே) அந்தக் கரணபரிணாமமென்று தெரிந்து கொள்ளவேண்டும். அதாவது, இதர விஷயங்களில் மனம் ஓடாமலிருப்பது, அந்தக் கரண பரிணாமமென்று சொல்லப்படும். மனதிற்கு உண்டாகும் ஆசாபா சங்களென்னும் குரங்குச் சேஷ்ட்டைகளெல்லாம், பிரம்ம நிஷ்ட்டையினால் நாசமாகும். இந்த பிரம்ம நிஷ்ட்டையை அப்பியாசம் செய்யவேண்டுமானால், பிராணாயாமம் செய்து வரவேண்டும். காமக்குரோதாதி வாசனை களையெல்லாம் போக்கடிப்பது

தெய்வவாசனை, தத்துவ ஞானத்திற்குச் சாதனம் என்று சுருதிகளில் சொல்லப் பட்டிருக்கிறது. தன்னைவிட அன்னியமாயிருக்கும் தேகேந்திரியங்களில் நான் என்னும் எண்ணமே அபிமானமென்று சொல்லப்படும். இந்த அபிமானத்தை விடுவதே ஞான சாதனம். அபிமானத்தை விட்டுப் பரிசுத்மான பரமாத்மாவை ஜபம் செய்யப்பட்டவன் ஆத்மாவை தரிசிக்கின்றான். இதம் வாஸ்நா க்ஷயரதே தத்வஜ்ஞாந ஸாதத்வம் பரதர்ஸயந்நாஹ வாசனைகளின் நாசமே தத்வ ஞானத்திற்கு முக்கியமென்று சொல்லுகின்றது. ஆகாம்மியத்தினால் வந்த சஞ்சிதமென்று கர்மத்வயங்களை அதாவது, புண்ணியபாவங்களை பிரம்மாக்நியினால் பஸ்மம் செய்த புருஷன் தன்னைவிட வேறு வஸ்துயில்லையென்று நினைக்கின்றான், அதனால், பிரம்மஞானிக்கு பாவ சம்பந்தங்களில்லை. ஆனால் பஞானியானவன் தன் சரீரம் நசிக்கும் வரையில் பிராரப்த கர்மத்தைமாத்திரம் அனுபவிக்கின்றான்.

"மமேதம் சரீரம் அநுபூயுந்தே இது என்னுடையது இது என் சரீரம். இது என் கண்கள் இது என் காதுகள் இது என் பிராணன் இது என் மனம், இது என் புத்தி என்று வேறு வேறு பதார்த்மாய் எண்ணுவது பிரதி புருஷனுக்கும் அனுபவமாயிருக்கின்றது. தேகேந்திரியங்களையெல்லாம், இது அது, என்று வேறாய்ச் சொல்வதானல் ஆத்மா தேகேந்திரியங்களைவிட வேறாயிருக்கின்றதென்று ஸ்பஷ்டமாய்த் தெரியவருகிறது.

"ஆத்மாநு அநுபூயந்தே, ஆத்மாவே "நான்" என்று சொல்லிக் கொண்டபோது அந்த "நான்" என்னும் ஆத்மா, தேகேந்திரியாதி மனோ புத்திகளைவிட வேறாகிய ஓர் வஸ்துவென்று தேவ மனுஷ்யாதி சர்வ ஜந்துக்களுக்கும் தம் தம் மனதிற்குப் பிரத்தியக்ஷமாய்த் தோன்றுகிறது.

"அத இதம்காராஸ் பதத்வேந" "இது" "அது" என்று வேறு பதார்த்தமாய் என்னுவதனால்' "தேஹாதீநாம் அபாவே கடம் முதலாகிய வேறு பதார்த்தங்களை."இது" "அது" என்று நாம் எப்படிச் சொல்லுகிறோமோ அதுபோல் தேககேந்திரியங் களையும் இது அது என்று வேறு பதார்த்தமாய் சொல்லுகிறோம். ஆதலால் கடாதிகளைப் போல், தேகேந்திரியங்கைளுக்கெல்லாம் ஆத்மா வேறாயிருக்கிறது என்று ஸ்பஷ்ட்டமாய்த் தெரியவருகிறது. சித்தம்ப்ரஹ மத்வம் நான் என்று சொல்லப்பட்ட தேகேந்திரியங்கள் நான் அல்ல. இவைகளை அநாத்மாக்கள் என்றே சொல்ல வேண்டும்.

"சித்பாஸ்யத்வ ப்ராந்திவே" எல்லா சரீரங்களும் பிரம்மமாகிய ஆத்மாவின் சகாயத்தினால் பிரகாசிக் கின்றதேயொழிய, சுயமாய் பிரகாசிக்கத் தக்கவைகளல்ல, அதனால் சரீரங்களைவிட ஆத்மா வேறாயிருக்கிறதென்று ஸ்பஷ்ட்டமாய் தெரியவருகிறது இப்படிப் பட்ட சரீரத்தில் நான் என்னும் ஆத்மா எப்படியிருக்கின்றதென்றால் ஸ்படிகத்தின் முன் சிவப்பு வர்ணமுடைய புஷ்பத்தைக் காட்டியபோது அதனுடைய பிரதிபிம்பம் ஸ்படிகத்தில் சிவப்பாய்த் தோன்றுவதுபோல் காணப்படும்.

"ப்ரத்யகாத்மநஹ ஸ்வயமேவ ப்ரகாஸதே" நமக்குள் இருக்கும் மனம் புத்தி, சித்தம், அஹங்காரமென்னும் அந்தக் கரணங்கள் நான்கும், கண் இந்திரிய வழியாய்ச் சென்று, வெளியில் காணப்படும் பதாத்த்தங்களின்மேல் விழ்ந்து, அப்பதார்த்தங்களின் பிரதி பிம்பத்தைத் தன்னில் நிறுத்திய பிறகு அந்த பதார்த்தம் தன் எதிரில் காணாவிட்டாலும் மனம் மாத்திரம் அதையே நினைத்துக்கொண்டிருக்கும். அதாவது, அந்தக்கரணத்தில் வெளி வஸ்துக்களின் பிரதிபிம்பம் பிரதிபலித்துக்கொண்டேயிருக்கும். வெளியில் காணப்படும் பதார்த்தங்களின் ரூபங்களை அந்தக் கரணங்கள் தாமாகவே

கிரகிக்கத்தக்க சுபாவ குண முடையவை அல்ல. ஆத்மாவின் சம்பந்தத்தினாலேயே அந்தக்கரணங்களுக்கு (மனம் புத்தி சித்த் அகங்காரங்களுக்கு) கிரகிக்கத்தக்க சக்தி யுண்டாகின்றது. ஆதலால் ஆத்மாவே அந்தக் கரணத்தை ஜொலிக்கச் செய்கிறது. இந்த அந்தக் கரணத்தையே இது வரையில் 'தான்' 'நான்' என்று சொல்லிக் கொண்டு வந்தது. ஆதலால் அதை அந்தக் கரணமென்று சொல்லாமல் நான் என்பதே ஆத்மாவென்று சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தக் கரணத்தை ஆத்மா வென்று மந்த புத்தியுடையவர்களுக்கு சொன்னதேயொழிய சூட்சும புத்தியுடையவர்களுக்குச் சொன்னதல்ல.

குருவானவர் சிஷ்யனுக்குப் பிரம்மோபதேசம் செய்யும்பொழுது சிஷ்யனைப் படிப்படியாய்க் கொண்டு போவதற்காக முதல் அன்னமே பிரம்மமென்றும், பிறகு பிராணனே பிரம்மமென்றும், இவ்விதமாய் ஒன்றொன்றாய் உபதேசம் செய்து மறுபடியும் அந்த புத்தியைத் திருப்பி அந்தக் கரணமே பிரம்மமென்று ஸ்தாபித்து நான் என்னும் ஞானம் அந்தக் கரணத்திறகே உண்டென்றும் அந்தக் கரணத்தினால் ஆத்மாவை தெரிந்துகொள்ள வேண்டு மென்றும், அந்தக் கரணங்களினால் காணப்படும் பிரகாசத்திற்கு ஆத்மாவே காரணமென்றும் இந்த ஆத்மாவை அந்தக் கரணத்தின் மூலமாகவே அறிய வேண்டுமென்றும் குருவானவர் உபதேசிக்கின்றார்.

ஆத்மா சுயம்பிரகாசமாயிருக்க, அந்த ஆத்மாவைத் தெரிந்து கொள்ள அந்தக்கரணத்தின் சகாயமேன் என்றாலோ ஆத்மாவை அஞ்ஞானமென்னும் மாயையானது மூடிக் கொண்டிருக்கின்றது. ஆதலால், ஆத்மாவைத் தெரிந்து கொள்ள அஞ்ஞானமென்னும் மாயை நாசமாக வேண்டும்.

சுலோ யாதிர் யஞ்ஞா தேவதா பிரஹமித்யந்தஹ் ஸ்புடாக் ருஹ்யதே யத்பாஸா ஹ்ருதயாக்ஷ தேஹிவிஷ யாபாந்தி ஸ்வதோ

அசேதநாஹ தாம்பாஸ்ஸைஹ பிஹிதார்க்க மண்டல நிபாம்ஸ்பூர்த்திம் ஸதா பாவயந் யோகீ நிர்வ்ருத மாநஸோ ஹி குருரித்யேஷாமநீஷாமம்

எல்லா ஜந்துக்களின் மனதிற்குச் சாக்ஷியாயிருந்து 'நான்' என்னும் எண்ணத்தைத் தெரிந்து கொள்ளத் தக்கதும் இந்திரிய வியாபாரங்களையெல்லாம் ஆத்மா செய்விக் கின்றதென்றும், அந்த ஆத்மாவே சுயம்பிரகாசமான ஜோதி சொரூபமென்றும் அறிந்து, அதனால் உண்டாகும் பிரம்மா நந்த சுகத்தை எவன் அடைந்திருக்கின்றானோ, அப்படிப் பட்டவனையே ஸ்ரீ சங்கராச்சாரியார் தன் குருவாய் நினைக்கின்றார்.

திரியக் ஜந்துக்கள் அதாவது, மிருகங்கள் பக்ஷிகள் புழுக்கள் முதலானவைகள் எவையுண்டோ, அவைக்களுக் கெல்லாம் நான் என்னும் அந்தக்கரண விருத்திகள் காரணமாயிருந்து எல்லாப் பூதங்களையும் மற்றொரு சகாயமில்லாமலே தனக்குத் தானாகவே பிரகாசிக்கச் செய்யும் ஞானசொரூபமே, அகண்டானந்த பிரம்மமாய் கிரகிக்கப்படுகிறது. புழு முதலானவை களுக்கெல்லாம் நான் என்னும் தேகாபிமானம் எது என்று கேட்கின்றாயா என்ன? அதற்குக் காரணம் சொல்லுகின்றோம் கேள். ஸர்ப்பமானது புருஷனைப் பார்த்தவுடன் ஓடிவிடுகிறது. அப்படி ஓடுவதற்குக் காரணமென்ன வென்றால் நான் என்னும் அறிவு அதற்கும் இருப்பதினால் தன்னைக் கொல்ல வருகிறானென்று எண்ணி, தன் தேகத்தின்மேல் அபிமானம் வைத்து ஓடுகிறது. ஆதலால், அதற்கும் நான் என்னும் தேகாபிமானமுண்டு. அப்படிப்பட்ட பிரம்மத்தின் சகாயத்தினால், அந்த ரேந்திரியம் அதாவது , மனம் புத்தி சித்த அகங்காரங்களும், பாஹ்யேந்திரியம் அதவாது, வெளியில் காணப்படும் வஸ்துக்களின் தோற்றம் இவைகள் யாவும் காணப்படும். பரப்பிரம்மத்தின் சகாயத்தினாலேயே இந்த பிரபஞ்ச மெல்லாம் பிரகாசிக்கின்றனவென்று சுருதிப் பிரமாணமுண்டு.

சூரியன் எங்கும் பிரகாசித்துக் கொண்டிருந்த போதிலும் அவனை மேகங்கள் மூடியபொழுது அந்த சமயம் மாத்திரம் சூரியப்பிரகாசம் காணப்படாமலிருப்பது மாணவர்களின் கண்களுக்கேயல்லாம் சூரியனுக்கல்ல. அதுபோல், நான் என்னும் ஆத்மஞானம் பரோக்ஷமாய் எல்லோருக்கும் தெரிந்தாலும், அவர்களுக்கு அபரோக்ஷ ஞான முண்டாகும் வரையில் அதவாது பிரம்ம சாக்ஷாத்காரம் பிரத்தியக்ஷா நுபவமாய் உண்டாகும் வரையில் அஞ்ஞானமிருப்பதனால் ஞானம் சித்திக் கமாட்டாது.

தேகேந்திரியங்களுக்கெல்லாம் வேறாய், சுயம்பிரகாச மாயிருக்கும் ஆத்மாவே நான் என்று அறிந்த யோகியானவன், எப்போதும் திடசித்தமாகவேயிருப்பான். இப்படித் திடசித்தமாயிருப்பதே ஸம்பிரஞ்ஞாத சமாதியென்று சொல்லப்படும். மனதை ஒரே நிலையில் நிறுத்துவதே தியானமென்று பதஞ்சியோக சூத்திரத்தில் சொல்லப்படும்.

அதவாது, மந்திரங்களைவிட்டு ஜபம் செய்வது தியானமென்றும்', எப்பொழுதும் மந்திரங்களை ஜபம் செய்யாமல் சும்மாயிருப்பது தன்னை மறந்து இருப்பது சமாதி யென்றும் சொல்லப்படும். இந்த தியான சமாதிகள் இரண்டையும் இதனடியில் விவரித்துச் சொல்லியிருக்கின்றோம் கேள்.

"சித்தைகாக்ரியாத் உபதிஸ்யதே மனதை ஒரே நிலையில் நிறுத்தினால் ஞானோதயமாகும். மனதை ஒரே நிலையில் நிறுத்தும் புருஷனது தாரதம்பியங்களைக்கண்டு பிடித்து குருவானவர் சிஷ்யனுக்கு ஞானோபதேசம் செய்கின்றார். "விலாப்ய விகருதிம் சிதாநந்தம் சிந்தயேத்" யோகாப்பியாசம் செய்யும்பொழுது மனதை ஒரே நிலையில் நிறுத்தி மனோவிகாரங்களையெல்லாம் அடக்கி, பிறகு யோகப்பியாசம் செய்ய வேண்டும். சம்பிரஞ்ஞாத சமாதி எப்படிப்பட்ட தென்றால், பிரஹ்மாகார த்யாநாப்யாஸ ப்ரதர்ஷதஹ அகங்காரமில்லாமல் அதாவது நான் என்னும் அந்தக்காரணங்களுடன் சம்மந்தபடாமல், தன்னைத்தான் மறந்து

கேவலமென்றும் சொல்லப்படும். இப்படிப்பட்ட சமாதிநிலை யோகாப்பியாசத்தினால் உண்டாகிறது.

"ஜ்ஞாநஸாதநமுபதி ஸந்நாஹ" 'நான்' என்பதே பிரம்மமென்று முதல் உத்தேசிக்கின்றார்கள். பிறகு நான் என்பது பிரம்மமல்லவென்றும் அந்தக்கரண விருத்த களென்றும் அந்த அந்தக்கரண விருத்திகளினால் ஆத்மஞானமும் உண்டாகுமென்றும் அந்த ஆத்மா ஞானத்தால் பிரம்ம சாக்ஷத்காரம் உண்டாகமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. அதாவது 'நான்' என்னும் எண்ணத்தைவிட்டுத் தன்னைத்தான் மறந்து பிரம்மானு சந்தானம் செய்து கொண்டிருக்க வேண்டுமென்று உபதேசிக்கின்றார்கள். "யே கீதி உபலக்ஷணம்□ மனது வெளியில் ஓடாமலிருப்பதே யோகம், அப்படி மனதை வெளியில் ஓடவிடாமல் நிறுத்தினவனே யோகி இந்த யோகமே மௌனமென்று சொல்லப்படும். "மௌனம் ஏக தண்டிநஹ யோகத்திற்குச் சாதனம் என்னவென்றால் எண்ணங்களை யெல்லாம் அடக்கி சாந்மாயிருந்து எந்த எண்ணங்களு மில்லாதவனாய் சகல பூதங்களையும் சமமாய்ப் பார்ப்பவனே யோகியும், சந்நியாசியும் என்று சொல்லப்படவான். இப்படிப் பட்ட குணங்களையுடைய சந்நியாசிக்கு உண்டாகும் பலனை சொல்லுகின்றோம் கேள்.

"ததாச பகவதீதிபாவஹ பிரம்மாஞானியாகிய சந்நியாசிக்கு வாக்கு வியாபாரமும் மனோ வியாபாரமும் இல்லாததால் எப்பொழுதும் பிரம்ம பாவத்தினால் சுயம்பிரகாச சித்ரூப பிரம்மானந்தத்தை அடைகின்றான்.

"பரிப்ராப்த ஆநந்தோ யீ விவர்தேஃ" ஆத்மா நாத்ம விவேகமுண்டாய் சம்சாரபந்தங்களைவிட்டு மனோ வியாபாரமாகிய சங்கல்பங்களையெல்லாம் ஒழித்திருக்கும் யோகிக்கு பிரம்மானந்தம் பிராப்தமாகுமென்று கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது.

"ஹி பாவ" யோகியானவன், இந்த பிரம்மாநந்தத்தில் சந்தோஷ மனதுடையவனாயிருப்பதால், ஜீவப்பிரம்மைக்ய ஸந்தானத்திலேயேயிருப்பான் இப்படிப்பட்டவனே என் குருவென்று ஸ்ரீ சங்கராச்சாரியார் சொல்லியிருக்கின்றார்.

"யத்ஸௌக்யாம்பு திலேஸத இமே ஸக்ராதயோநிர் வ்ருதா யஸ்சித்தே நிதராம் ப்ரஸாந்தகலமே லபத்வாமுநிர் வ்ருதஹ யஸ்மிந்நித்ய ஸுநாமபுதௌ களித்தீர் ப்ரஹ்மைவ ந ப்ரஹ்மவித்யஹ கஸ்ஸித்ஸ ஸுரேந்திர வந்தி தபதோ நூநம் மநீஷா மம.

'குரு' 'கு' என்றால் நாடாந்தகாரம் (இருள்) 'ரு' என்றால் அந்த நாடாந்தகாரத்தை நாசம் செய்யப்பட்டவன். இப்படிப்பட்ட குருவினால் உபதேசம் பெற்ற மநநசீலன் எப்பொழுதும் பிரம்மத்தையே தரிசித்துக் கொண்டு, எந்த எண்ணங்களுமில்லாமல் பிரம்ம சுகத்தை அடைந்தவனா கின்றான். ஆதலால் அவன், தேவதைகளால் நமஸ்கரிக்கப் படுவானென்று சுருதி சொல்லுகிறது.

ஸங்கல்பமில்லாத மநநசீலன், நித்தியசுக சமுத்திரத்தில் மூழ்கிய மனதுடையவனாயிருப்பதால் அவனை தேவதைகள் நமஸ்கரிக்கின்றார்கள்.

சுயம்பிரகாசமானதும் ஞானசொரூபமானதுமான ஆத்ம சம்பந்தசுகம் எதுவோ அதுவே சௌக்கியமென்று சொல்லப் படும். அந்த சௌக்கியம் எங்கும் நிறைந்திருப்ப தனால், இதை சமுத்திரத்திற்கு ஒப்பிடப்பட்டது. அப்படிப்பட்ட சுகத்தில் இந்திராதி தேவதைகள் அணுமாத்திரம் அடைந்தவர்களாயிருக் கின்றார்கள். இந்த பிரம்மத்தில் அணுமாத்திரம் ஆஸ்ரயித்து சமஸ்த பூதங்களும் ஜீவித்திருக்கின்றன. அந்த அணுமாத்திர பரப் பிர' மத்தை மாயை மூடிக்கொண்டிருப்பதனால் அது ஜநந மரணங்க ளயே அடைந்துகொண்டு வருகின்றது. இந்த மாயை நீங்கியபிறகு நித்திய நிரதி நயானந்த பிரம்ம மென்னும்

சமுத்திரத்தில் மூழ்கியிருப்பான். அதாவது, விருத்தி (எண்ணங்கள்) சூன்னியமான மனது அசம் பிரஞ்ஞாத சமாதியென்பதற்குச் சுலோகமுண்டு. இப்படி பிர்மானந்தத்தில் உள்ளவன் பரிபூரண ஆநந்த சொரூபனாய் இருப்பான். அப்படிப்பட்டவனுக்கும், பிரம்மத்திற்கும் பேதமே இராது. அவனே பிரம்மமென்றும் சொல்லப்படும். இப்படிப்பட்டவன், அளவில்லாத மாயையென்னும் பாசத்தை அறுத்து சிவஞானியாவான். உலகினர் இவனைப் புகழ்ந்து பூசிப்பார்கள், சிவபதவியிற் செல்பவன் இவனே அத்தகைய சிவஞானிக்கு அன்னமளித்தால் சிவபெருமானுக்கு அன்னமளித்ததாகும். அவ்வகை சிவஞானியை நிந்திப்பது சிவபெருமானை நிந்தித்ததாகும். அவனை வாழ்த்துவது, சிவபெருமானை வாழ்த்துவதாகும். ஈஸ்வரக் கிருபா நோக்குமுடையவர்கள். ஜீவன் முக்தர்களாவார்கள் என்று சூதமா முனிவர் நைமிசாரண்ய மஹரிஷிக்குச் சொல்லுகின்றார்.

எப்பரி சப்பரி சரன்பாலுள
  மருத்தி யின்னெறிக்க ணியலாநிற்போ
னொப்பரிய பாசநீத் தொழிந்த
  சிவஞானி யவனுலகோ ரேத்திச்
செப்பிய யருச்சித்தற்கு முறிய
  னவன் சிவகதியிற் செல்லாநிற்போ
னிப்புவனத் தவற் கனமீந்திடிற்
  சிவனுங் கற்புதமா யிருக்குமன்றே
அன்னவனை நிந்திப்ப தரணை
  நிந்திப்ப தவன் றன்னை வாழ்த்தன்
முன்னவனை வாழ்த்துவதா மவ
  னருட்கண்ணோக் கடைந்தார் முத்தராவ
ரென்னிவர னருச்சனை யேசெயவேண்டு
  மிவன் பெருதற்கரிய வில்லை
சொன்னது சத்தியமென்றால் கேட்ட
  முனிவரர் சடிலந்துளக்கிச் சொல்வார்.

இப்படிப்பட்ட பிரம்மத்தைத் தெரிந்தவன் பிராமணனாகின்றானென்று சுருதி சொல்லுகிறது. இப்படிப் பட்டவன் இந்திராதி தேவதைகளாலும் மனுஷ்யர்களாலும் பூசிக்கப்படுகிறான். ஐசுவர்யம் வேண்டுமென்று நினைக்கப்பட்ட புருஷன் பிரம்மஞானியைப் பூசிக்க வேண்டுமென்பது சுருதி வாக்கியம் ஆத்மாவைத் தெரிந்து கொண்டே பிரம்மஞானிக்கு திரிமூர்த்திகளும் சுவாதீன மாகின்றார்களென்று ஸ்மிருதிகள் சொல்லுகின்றன.

ஆதலால் இதுவரையில் சொல்லிவந்த பிரம்மஞான சாதனர்களுக்கு பிரமக்ஷத்திரிய வைசி சூத்திரர் என்னும் ஜாதிபேதம் இல்லை. இது பரிபக்குவமடைந்த அந்தக்கரணமுடையவர்களுக்கே அடையத்தக்கதுமாயிருக் கிறது. இதற்குச் சுருதிப்பிரமாணம் என்ன வென்றால்,

சுரு|| "ஜாதிரிதி ச ந சர்மணோந ரக்தஸ்ய ந மாம்ஸஸ்யந சாஸ்திநஹ ந ஜாதி ராத்மநோ ஜாதிர் வ்யவஹார ப்ரகல்பிதா"

உலகத்திலுள்ள சகல ஜனங்களின் சரீரம், அஸ்திகள் தோல் நரம்பு மாமிசம் கொழுப்பு ரத்தம் முதலானவைகளினால் நிறைந்திருக்கின்றது. ஆதலால் சரீரத்திற்கு ஜாதிபேதமில்லை. அன்றியும், சகல ஜீவஜந்துக்களின் சரீரத்தில், பரப்பிரம்மத்தின் அம்சமாகிய ஆத்மா ஒருவனே வியாபித்திருக்கின்றான். அப்படிப்பட்ட ஆத்மாவிற்கு ஜாதிபேதமில்லை. உலக வியாபாரத்திற்காக ஜாதிபேதம் கற்பிக்கப்பட்டதேயொழிய சத்தியமாய் ஜாதிபேதம் இல்லவேயில்லை. ஆதலால், நீ ஜாதிபேதமென்னும் வர்ணாசிரம் தர்மங்களைவிட்டு கர்மத்தை அனுஷ்டித்து வரக்கடவாய்.

சிஷ்யன்: ஓ சத்குரு நாதா கர்மமென்றால் என்ன?

ஆசிரியர்: கர்மமென்றால் ஓர் காரியம். அதாவது கேட்பது, பார்ப்பது, வார்த்தையாடுவது முதலாகிய ஒவ்வொரு

காரியங்களம் கர்மமென்றே சொல்லப்படும். அந்த கர்மம் சாதாரண கர்மம், பாவகர்மம், சத்கருமம், நிவர்த்தி கர்மம் என்று நான்குவிதங்களாயிருக்கின்றன. இவற்றில் சாதாரணகர்மம் எப்படிப்பட்டதென்றால் தசேந்திரியங்களில் (பத்து இந்திரியங்கள்) செய்யப்பட்ட காரியங்களேயாம். அவைகள் எவையென்றால்,

செவிகள், அவற்றின் விஷயமாகிய சப்தங்களைக் கேட்கச் செய்யும். நேத்திரங்கள், அவற்றின் விஷயமாகிய ரூபங்களைப் பார்க்கச் செய்யும், நா, (நாக்கு) அதன் விஷயமாகிய ருசிகளை அறியச் செய்யும், மூக்கு அதன் விஷயமாகிய வாசனையை முகரச் செய்யும், வாய் வார்த்தையாடும், கைகள் கொடுக்கல் வாங்கல் முதலாகிய காரியங்களைச் செய்து கொண்டிருக்கும் பாதங்கள் நடப்பது நிற்பது முதலான காரியங்களைச் செய்து கொண்டிருக்கும். குய்யம் மூத்திரம் விடும். அன்றியும் சுக்கில சுரோணிதங் களைவிட்டு ஆனந்திக்கும். குதம், மலவிசர்ஜ்ஜனை செய்விக்கும். த்வகிந்திரியம் (தேகசர்மம்) ஸ்பர்சம் என்றால் தொடுதல் என்பதை அறிவிக்கும்.

இந்த பத்து இந்திரியங்களும் செய்யும் கார்யங் களையெல்லாம் ஆத்மா, அஞ்ஞானத்தினால் மூடப் பட்டிருப்பதனால் நான் செய்கிறேன் என்று புருஷன் சொல்லுகிறான். இவ்விதமாய் முன்சொல்லிய இந்திரியங் களால் செய்துவரும் கார்யங்களையெல்லாம் தேக கர்ம மென்றும் சாதாரண கர்மமென்றும் சொல்லப்படும். ஆனால்,

"இந்த்ரியாணாம் ப்ரஸங்கேஷு தோஷமட் ருச்சத்யஸம் ஸந்நியம்யது தாந்யேவ ததஸ்ஸித்திம் நியச்சதி" (ஸயம் என்னும் மனுஸ்மிருதி வாக்கியரீதியாய் இந்திரியங்களை அதனதன் காரியங்களைச் செய்துகொண்டிருப்பதனால் அதாவது, மனம், எல்லா விஷயங்களில் ஓடுவதனால் இச்சை உண்டாகிறது. அப்படி ஓடவிடாமல் நிறுத்தினால் இச்சை ஒழிந்து

மோக்ஷமென்னும் பதவியை அடைகிறான். எப்படி என்றால், இந்திரியங்கள் சப்தாதி விஷயங்களில் ஓடினால், அந்த விஷயத்தில் புருஷனுக்கு ஆசை உண்டாகிறது. அதாவது பிடிப்பு உண்டாகும். அப்படி ஆசை உண்டாவதனால் கர்மம் (இச்சை) உண்டாகும். காமம் உண்டாவதனால் குரோதம் உண்டாகும். அப்படி குரோதம் உண்டாவதனால் மோகம், அதாவது தூஷிப்பதோ அடிப்பதோ கொல்லுவதோ முதலாகிய காரியங்களை தன்னைத்தான் தெரியாமல் ஸ்மரணை தப்பு செய்து புத்தியை கெட்ட ஸ்திதிக்கு கோபம் கொண்டு வந்துவிடும். அப்பொழுது புருஷன் ஸ்மரணை தப்பி இந்திரியங்களை ஜயிக்க வேண்டுமென்னும் புத்தியை மறந்துவிடுகிறான். இப்படி ஸ்மரணை தப்புவதனால், புத்திக்கு ஆத்மஞானம் அடைய பங்கம் உண்டாகிறது. அப்படி புத்திக்கு பங்கம் உண்டாவதனால் புருஷன் சம்சாரமென்னும் சமுத்திரத்தில் மூழ்கியிருப்பான் ஆதலால்,

'இந்த்ரியாணாந்து ஸர்வேஷாமயத்யேகம் க்ஷரதீந்த்ரியம் தேநாஸ்ய க்ஷரதிப்ரஜ்ஞாத்ருதேஹெ பாதாதிவோதகம் என்னும் மநு ஸ்மிருதி வாக்கியரீதியாய் இந்திரியங்களில் ஏதாகிலும் ஓர் இந்திரியம் சுவாதீன்மாகாவிட்டால் (சிறிய துவாரமுள்ள குடத்தில் ஜலம் சிறுகச்சிறுக ஒழுகிப்போவதுபோல) புத்தி கெட்டவனுக்கு ஞானம் சிறுகச்சிறுக தினே தினே குறைந்துவிடும் ஆதலால்,

"வஸே க்ருத்வேந்த்ரிய ஸம்யம்ய ச மநஸ்ததா ஸர்வாநஸம்ஸா தயே தர்மாந் ந க்ஷிண்வந்யோகதஸதநும் என்னும் மநுஸ்மிருதி வாக்கியரீதியாய் இந்திரியங்களை விஷயங்களில் ஓடவிடாமல் நாளாவட்டத்தில் வசப்படுத்தி, தன் சரீரத்தைக் கஷ்டப்படுத்தாமல் ஞானநிஷ்டையை அப்பியாசம் செய்துவரவேண்டும், ஆனால்

"ந ததைதாநி ஸக்யந்தே ஸந்நியந்து மஸேவயா விஷயலேஷுப்ஜுஷ்டாநி யதா ஜ்ஞாநேக நித்யனஹ

என்னும் மநுஸ்மிருதி வாக்கியரீதியாய் விஷயங்களில் ஓடிக்கொண்டிருக்கும் இந்திரியங்களை திருப்பிக் கொள்ள எப்படிப்பட்டவனுக்கும் அசாத்தியமே ஞானாநுஷ்ட்டானங் களினால் மனதை அடக்கினால் என்றால் எதிலும் ஆசையில்லதாமல் இருந்தால் இந்திரியங்களுக்கு விஷயங்களில் ஆசை உண்டாகமாட்டா. இந்திரியங்களை விஷயங்களிலிருந்து பலாத்காரமாய் திருப்பிக் கொள்ளவேண்டுமென்று எண்ணினால் அந்த இந்திரியங்கள், தன்வசமாகாமல் அதனதன் காரியங் களையே செய்துகொண்டிருக்கும். என்றால், சப்தாதி விஷயங்களில் இந்திரியங்கள் ஓடிக்கொண்டேயிருக்கும். ஆதலால் மனதை நிறுத்தாமல் இந்திரியங்களை பலாத்காரமாய் ஜயிப்பதற்குப் பிரயத்தனப்படபவனை, மூடனென்றே சொல்லலாம். இந்திரியங்களை அதனதன் காரியங்களைச் செய்யவிடாமல் நிர்ப்பந்தப்படுத்தினால் சரீரம் நிற்கமாட்டா.

ஸருத்வா ஸ்ப்ருஷ்ட்வா ச புக்த்வா ச த்ருஷ்வா
ஜஞா த்வா ஷுபாஸுபம்
ந ஹருஷ்யதி க்ளாதி ய ஸ்ஸாந்த இதிகத்யதே.''
''ஸ்ருத்வா ஸப்ருஷட்வா ச த்ருஷ் வா ச புக்த்வா
க்ராத்வா ச யோ நாஹ ந ஹருஷ்யதி க்ளாதி லா
ஸ விஞ்ஞேயோ ஜிதேநத்ரியஹ.'

என்னும் மஹோபநிஷத, மநுஸ்மிருதி வாக்கியங்களின் ரீதியாய் நேத்திரங்கள் ரூபங்களைப் பார்த்துக் கொண்டிருந்தபோதிலும், நாருசி அறிந்த போதிலும் மூக்கு வாசனையை முகர்ந்தபோதிலும் வாய் வார்த்தையாடிக் கொண்டிருந்தபோதிலும் கைகள் கொடுக்கல் வாங்கல் முதலான கார்யங்களைச் செய்து கொண்டிருந்தபோதிலும், பாதங்கள் நடந்து கொண்டிருந்தபோதிலும் மர்மஸ்தானம் மூத்திரம், சுக்கிலம் விட்டுக் கொண்டிருந்த போதிலும் குதம் மல விசர்ச்ஜனம் செய்து கொண்டிருந்த போதிலும் அவைகள்

தம்தம் கார்யங்களையே செய்து கொண்டிருக்க வேண்டும். அவ்வாறு செய்யவிடாமல் நிறுத்தினால் தேகத்திற்கு பாதையை உண்டாக்கும். இதுவே சரீர கர்மமென்று சொல்லப்படும். இந்த சரீர கர்மம் அல்லாமல் பாவகர்மம் புண்ணிய கர்மமென இரண்டு கர்மங்களுண்டு, அதாவது ஜீவ இம்சை செய்வது பொய் சொல்வது, திருடுவது, அசத்தியமாடுவது, தூஷிப்பது, அடிப்பது, மனநோகப் பேசுவது, மோசம் செய்வது, பரஸ்திரீகளை மோகிப்பது முதலானவைகள் தேவவிருத்தமான பாவ கர்மங்களென்று சொல்லப்படும். இப்படிப்பட்ட பாவகர்மங்களைச் செய்து மரணமடைந்தவுடன்,

"ஹரீரஜையீ கர்மதோஷ ர்யாதிஸதாவரதாம் வாசி பக்ஷி மருகதாம் மாநஸை ரந்த்ஜாதிதாம். (கைஹ என்னும் மநுஸ்மிருதி வாக்கிய ரீதியாய் மேற்சொல்லியது போல், தேகத்தினால் அகங்காரத்துடன் செய்யும் பாவ கர்மங்களுக்காக பூலோகத்தில் ஸதாவரங்களாகிய பர்வத விருக்ஷாதி ஜன்மங்கள் உண்டாகும். அகங்காரத்துடன் வாக்கினால் சொல்லும் பாவகர்மங்களுக்காக மிருக, பக்ஷி ஜன்மங்கள் உண்டாகும், அகங்காரத்துடன் மனதினால் செய்யும் பாவகர்மங்களுக்கு மனுஷ்யர்களில் அதம ஜாதியாகிய சண்டாளஜாதி உண்டாகும். தேவ விருத்தமாகிய பாவகர்மங்களைச் செய்ய கனவிலும் நினைக்கலாகாது என்றால் பாவம் செய்ய வேண்டுமென்று மனதிலும் எண்ணலாகாது என்று அறியக்கடவாய்.

சிஷ்யன்: சுவாமி! தேவரீர் வாக்கின்படி இனி பாவ கர்மங்களைச் செய்வதில்லை, இதுவரையில் செய்துவந்த பாவ கர்மங்களை நசிப்பது எப்படி?

க்ருத்தா பாபம் ஹி ஸந்தப்ய தஸ்மர்பாபாத்ப்ரமுச்யதே
நைலம் குர்யாத் புநரி தி நிவ்ருத்யா பூயதேது ஸஹ யதே

என்னும் மநுஸ்மிருதி வாக்கியரீதியாய், இந்நூலில் உபதேசித்திருக்கும் ராஜயோகத்தை நன்றாய்த் தெரிந்து கொண்டு

அதில் சொல்லியதுபோல் அப்பியசித்து இது வரையில் பாவகர்மங்களை தெரியாமல் செய்துவந்தேன். பாவகர்மத்தினால் உண்டாகும் தோஷம் இப்பொபது தெரியவந்தது. இனி எப்பொழுதும் பாவகர்மங்களைச் செய்யமாட்டேன். இதுவரையில் தெரியாமல் செய்து வந்த பாவத்தை மன்னிக்கவேண்டும் என்று ஈஸ்வரனைத் துதிசெய்து பச்சாதாபத்துடன் துக்கித்து இனி சத்தியமாய் பாவகர்மங்களைச் செய்வதில்லை என்று பிரதி தினம் ஈஸ்வரனை துதி செய்து வருவாயாகில் இதுவரையில் நீ தெரியாமல் செய்துவந்த பாவகர்மங்கள் ஒழிவது மேயல்லாமல், இனி பாவகர்மங்களைச் செய்ய எண்ணமும் உண்டாகமாட்டா.

'அகர்மேதி ச கர்த்ருத்வ போக்த்ருத்வாத்யஹங்கார தயா பந்தரூபம் ஐந்மாதிகாரணம் நித்ய நைமித்திக யாக வ்ரததபோதநாதிஷுபலாபி ஸந்தாநம் யத்தத கர்ம.'*

என்னும் சுருதிரீதியாய் ஸ்நாந சௌஸ சந்நியா வந்த ஸ்ரார்த்த வாப்பணாதி நித்திய நைமித்திக கர்மங்களும், யாக விரததபோ தானாதி காம்மிய கர்மங்களும் அகர்மமென்று சொல்லப்படும். எப்படியென்றால், வேதோக்த கர்மங்களாகிய நித்திய நைமித்திக காம்மிய கர்மங்களைப் பிரதி மனிதனும் அபேக்ஷையுடன் செய்வதனால் அதன் பலனை அனுபவிப்பதற்ாக மறு ஜநநமெடுக்க வேண்டும் பலாபேக்ஷையுடன் செய்யுங் கர்மங்கள், புண்ணிய கர்மங்களாயிருந்தபோதிலும் அவை புனர் (மறு) ஜன்மங்களுக்குக் காரணமாயிருந்து, ஜீவனை பந்தத்தில் கட்டுப்படுத்துமேயொழிய மோக்ஷசாம்ராஜ்ஜிய பதவியை உண்டாக்கமாட்டா, இதுவே அகர்மமென்று சொல்லப்படும் அதாவது, பலா பேஹையுடன் செய்யும் நித்திய நைமித்திக கர்மங்களும், வேதோக்தமான புண்ணிய கர்மங்களா யிருந்தபோதிலும் அவைகள் மோக்ஷத்தைக் கொடுக்கமாட்டா.

ஸுப்ரப்யதயம் சைவ நெஸ்ரேய ஸிகமேவச
ப்ரவ்ருத்தஞ்ச நிவ்ருத்தஞ்ச த்விவிதம கர்ம்வைதிகம்.

என்னும் மநுஸ்மிருதி வாக்கியரீதியாய், வேதாக்த மான கர்மங்களில் பிரவர்த்சி கர்மமென்றும், நிவர்த்தி கர்மமென்றும் இரண்டுவித கர்மங்களுண்டு. சொர்க்க பதவியடைந்து அங்கு தேவ போகங்களை அனுபவிப்பது பிரவர்த்தி கர்மமென்று சொல்லப்படும். ஜநந மரணமென்னும் சமுத்திரத்தைதாண்டி முக்தி அடைவது நிவர்த்திக்கர்மமென்று சொல்லப்படும். அதாவது,

இஹம்சாமுத்ர வா காம்யம் ப்ரவ்ருத்தகர்ம கீர்த்யதே
நிஷ்காமம் ஜஞாநபூர்வந்து நிவ்ருத்த முபதிஸ்யதே.

என்னும் மநுஸ்மிருதி வாக்கியரீதியாய் தனதான்னிய தாரா (மனைவி) புத்ராதி அஷ்ட்ட ஐஸ்வரியங்களும் அஷ்ட்ட போகங்களும், பூலோக சுகங்களாதலால் இவைகள் பிரவர்த்தி கர்மமென்று சொல்லப்படும்.

சொர்க்கலோகத்திலுள்ள தேவபோகங்களில் இச்சை வைத்து செய்யும் தபோ விரத யாக தானாதி புண்ணிய கர்மங்கள் காம்ய கர்மமாயிருப்பதால் இதுவும் பிரவர்த்தி கர்மமென்று சொல்லப்படும். பூலோக சுகங்களையும் தேவலோக சுகங்களையும் நினையாமல் நி காம்யமாகிய என்றால் ஸம்ஸார அபேக்ஷயில்லாமல் ஈஸ்வரார்ப் பணமாய் செய்யும் ஞான நிஷ்ட்டை (பிரம்ம நிஷ்ட்டை) யிலிருப்பது நிவர்த்தி கர்மமென்று சொல்லப்படும்.

ப்ரவ்ருத்திம் கர்ம ஸமஸேவ்ய தேவநோமோதி ஸாம்யதாம்
நிவ்ருத்திம் ஸேவ்யமாநஸ்து பூதாநத்யேதி பஞ்சவை'

என்னும் மநுஸ்மிருதி வாக்கிய ரீதியாய் காம்யம் என்றால் ஓர் பலனை விரும்பிச் செய்யும் கர்மங்களாகிய பிரவர்த்தி

கர்மங்களை செய்தவன் மரணமடைந்தவுடன் தேவலோகத்தில் பிறந்து தேவபோகங்களை அனுபவித்து அந்த புண்ணியம் முடிந்தவுடன் க்ஷீணே புண்யே மாத்யலோகல் விஸந்தி என்னும் கீதாசாரியார் வாக்கியரீதியாய் மறுபடியும் தன் பூர்வ ஜென்மங்களில் புண்ணிய விசேஷத்திற்குத் தக்கபடி பூலோகத்திலுள்ள சக்கரவர்த்திகளின் வீட்டிலோ அல்லது, பெருத்த செல்வமுடையவர்களின் வீட்டிலோ பிறப்பான். நிஷ்க்காம்யாய் ஞான நிஷ்ட்டனால் நிவர்த்தி கர்மங்கள் செய்தவன் என்றால், ஈஸ்வரார்ப்பணமாய் கர்மங்களை செய்பவன் ஜநநமரணமென்னும் சமுத்திரத்தைத் தாண்டி சரீரம் வராத விதேஹமுக்தியை அடைகின்றான். ஆதலால்,

"யதா பங்கேந பங்காம்தஹ ஸுரயா வா ஸுராவ் ருபஹ"
பூதஹத்பாம் ததைவைகாம ந யஜ்ஞை மார்ஷ்டு மர்ஹதி

சேற்றுப்பாண்டத்தை சேற்று ஜலத்தினால் அலம்பினால் அந்த சேறு போகாமலிருப்பது போலும், கள்குடத்தைக் கள்ளினால் அலம்பினால் அக்குடத்தில் கள் நாற்றம் போகாமலிருப்பது போலும், கர்மத்தினால் உண்டாகிய ஜன்மம் மறுபடியும் காம்ய கர்மங்களாகிய பிரவாத்தி, கர்மானுஷ்டானங்களினால் நிவர்த்தி யாகமாட்டா.

"யதோக்தாநபி கர்மாணி பரிஹாய த்விஜோத்தமஹ
ஆத்ம ஜ்ஞாநே ஸமேச ஸ்யாதவே தாப்யாஸேசயத் நவாந்

என்னும் மநுஸ்மிருதி வாக்கியரீதியாய், ஜன்மங் களுக்குக் காரணமாயிருக்கும் ஜப தப விரத யாக யஞ்ஞாதிகளையெல்லாம் விட்டு, வேதாந்த விசாரனை செய்து இந்திரியங்களை அடக்கி, இந்நூலில் உபதேசித்திருக்கும் ராஜயோகத்தை அறிந்து சதா காலமும் ஞான நிஷ்ட்டையில் இருக்க வேண்டும்.

29

"ஏதத்தி ஜந்மஸாபல்யம் ப்ராஹ்மணஸ்ய விஸேஷதஹ ப்ராப்யைதத்க்ருத க்ருதயோபவதி நாந்யதா."

என்னும் மநுஸ்மிருதி வாக்கியரீதியாய் முன்சொல்லிய வேதாந்த விசாரணை, இந்திரிய நிக்கிரஹம் ஞாநானுஷ்டானம் இம்மூன்றும் இல்லாதவன் பிராமணனாய் ஜன்மித்த போதிலும் அவன் பிராமணனாகமாட்டான்.

"அநந்தகர்ம ஸௌசஞ்ச ஜபோ யஞ்ஞ ஸ்ததைவச தீர்த்தயாத்ராபி கமநம் யாவத் தத்வம் நவிந்ததி"

என்னும் பைங்கலோபநிஷத் வாக்கியரீதியாய் ஸௌச ஸ்நான ஜப தப தான யாக தீர்த்த யாத்திரை முதலானவைகள் காம்ய கர்மங்களாதலால் அவைகளினால் ஜநநமரணங்கள் வந்து கொண்டிருக்குமேயொழிய மோக்ஷம் உண்டாகவேமாட்டாது. ஞானநிஷ்டை அறியாதவர்களே காம்ய கர்மானுஷ்டானங் களை செய்து கொண்டிருப் பார்கள்.

'ஜீவஸ்ய தத்தஜிக் ஞாஸா நார்த்தோ யஸ்சேஹ கர்மபிஹி அதாதோ ப்ரஹ்ஹஜிக்ஞாஸ என்னும் சுருதி ரீதியாயும் "நிவ்ருத்திம் கர்மஸேவே தப்ரவர்த்திம்மத்பரம்த்யஜேத் ஜிக்ஞாஸாயம் ப்ரவ்ருத்தோ நாத்ரியேத் கர்மசோதநாம்

என்னும் பரமஹம்ஸோ பநிஷத் வாக்கியரீதியாய் ஞானிகளுக்கு சிவன் ஜீவன இருவரையும் ஒன்றாய்ச் சேர்ப்பதே அதாவது ஜீவப் பிரம்மைக்யமாகிய பிரம்ம நிஷ்டையில் இருப்பதே சந்நியாவந்தனமாயிருக்கின்றது.

"ஜ்ஞாத்வாஸ்வயரப்ரத்யாகாத்கா நம்புத்திதத்வருத்தி ஸாக்ஷிணம், ஹோஹமித்யேவ தத்வருயா ஸ்வாக்ய த்ராத்ம மதிம் த்யஜேத்."

என்னும் அத்தியாத்மோபநிஷத் வாக்கியரீதியாய் ஆத்மாவே பரப்பிரம்மமென்று போதிக்கும் ஸோஹம் மந்திரத்தியானமே ஞானிகளுக்கு ஞான காயத்திரி யாயிருக்கின்றது. அப்படிப்பட்ட ஞான காயத்திரியே அஜப காயத்திரியென்று சொல்லப்படும்.

29B

"ஸ்வஸ்ரூபவிஜ்ஞாநாத்நாதிகம் திர்த்தமுச்யதேதர
மாத்மவிக்ஜிஞாநெநா தஸ்மாத் ஜ்ஞாநமேவபரம தீர்த்தம்

எந்த ஞானத்தினால் ஜநந மரணமென்னும் சமுத்திரத்தைத் தாண்டி மோக்ஷமென்னும் கரை ஏறு கின்றார்களோ அந்த ஞானமே தீர்த்தமென்று சொல்லப் படுமேயொழிய கங்கா தீர்த்தம் ஞானிகளுக்குத் தீர்த்தமாகமாட்டா.

'அத்பிஹி காத்ராணி ஸுத்யந்திமநஸ்ஸத்யேநஸுத்யதி
வித்யா தயோப்யாம்பூதாத்மா புத்திர் ஜ்ஞாநேநஸத்யதி

என்னும் மநுஸ்மிருதி வாக்கிய ரீதியாய் தேகம் ஜலத்தினாலும், மனது ஸத்தியத்தினாலும் ஜீவாத்மா, நிஷ்க்காம்ய பிரம்ம நிஷ்டையினாலும், புத்தி யதார்த்த ஞானத்தினாலும் பரிசுத்தமாகும். உலகத்திலுள்ள ஜனங்களெல்லோரும் ஜலத்தினால் தேக சுத்தி செய்து கொண்ட போதிலும், அவர்களின் மனது ஜீவாத்மா புத்தி என்பவைகள் மாத்திரம் சுத்தியாகமாட்டா.

"யஸ்ய வாங்கமாஸி ஸுத்தே ஸம்யகுப்தே ச ஸர்தாஸ்
வை ஸர்வம்வாப்ரேரதி வேதாந்தோப கதம்பலய்."

என்னும் நாரத பரிவிராஜகோபநிஷத் வாக்கிய ரீதியால் ஞானிகளுக்கு, ஞானதீர்த்த ஸ்தானத்தினால், வாக்கு மனது புத்தி ஜவாத்மா என்னும் இந்நான்கும் பரிசுத்தமாவதனால் அவர்கள் லௌகீயமாகிய ஜல ஸ்நானங்களில் உண்டாகும் தேகசுத்தியை முக்கியமாய் கவனிப்பார்கள்.

"ஸர்வேஷாமபி தாநா காம் ப்ரஹ்ம மதாநம் விஸிஷ்யதே
வார்யந்த கோ மஹி வாஸஸ்தில காஞ்சந ஸர்பிஷாம்."

என்னும் மநுஸ்மிருதி வாக்கிய ரீதியாய் ஞானிகளை ஆசிர்வதித்து. சிஷ்யர்களுக்கு ஸதா பிரம்ம ஞானத்தை உபதேசித்துக் கொண்டிருப்பதே ஞானதானமென்று

சொல்லப்படும். ஜவதான அன்னதான கோதான பூதான வஸ்திரதானத்தில் (என்) தான கன்னிகாதான முதலான தானங்களைவிட ஞானதானமே சிரேஷ்ட்டமாயிருப்ப தனால் ஞானிகள், எப்பொழுதும் ஞானதானமே செய்து வருவார்கள். ஆதலால்,

"யஜதே புருஷோ யஜமாநஹ புத்திம் பத்நீம் பரிக்ருஹ்யதீக்ஷ ம ஸந்தோஷம் தீந்தரியாணி யஜ்ஞபாத் ராணி கர்மேந்த்ரியாயுபகரணாநி ஸத்ரே ஸாரீரகே தக் தத்தேவதா ஏவத் விஞ்ஜஸ் தடஸ்தா ஏவ யதாதேஸம யஜமநந மஜயஜத்தே ஓமித்யாத்ம ந மவ்யக்ரோ ப்ரஹமண்யக்நௌ ஜ்யோதிபத். ஜ்ஞாநயஜ்ஞஸ்ய விஜ்ஞேய ஸ்ஸர்வயஞ்ஞோ த்தமோத்தமஹ ஜ்ஞா தண்டாஜ்ஞாநஸிகாஜ்ஞா நயஞ் ஞோபவீதிஹ ஸ்காஜ் ஞரநமயீயஸ்ய உபவீதஞ்ய தந்மயம் ப்ராஹ்மண்யம் ஸகலம் தஸ்ய இதி தேவா நுஸாஸநம்"

என்னும் கர்ப்போபநிஷத் சாட் யாப்நீய உபநிஷத் வாக்கியங்களின் ரீதியாய், தேகமேயாகசாலையாயிருக்கிறது அந்த தேகமென்னும் யாகசாலையில் ஞானேந்திரியங்களே யஜ்ஞ பாத்திரங்களாகவும் காமேந்திரியங்களே உபகரணங்களாகவும், சுகதுக்கங்களை சமமாய் நினைத்து சந்தோஷப்படுவதே தீக்ஷையாகவும் அந்தந்த இந்திரியங் களின் தேவதைகளே த்விஜர்களாகவும், ஜீவனே யஞ்ஞம் செய்யும் யஜமானனாகவும் புத்தியே யஞ்ஞம் செய்யும் யஜமானனுடைய பார்யாளாகவும் கோபமே யஜ்ஞபசுவாகவும் இருக்கின்றன. ஆதலால் ஸோஹம் என்னும் மந்திரத்தை ஜபம் செய்து பரிப்பிரம்மமென்று யாகாக்நியில் ஜீவசொரூபியாகிய தன்னை சேர்த்து ஹோமம் செய்து வந்தால் தன் ஜீவசொரூபம் கெட்டுதான் பிரம்ம சொரூபனாகின்றான். இப்படிப்பட்ட ஞானயஜ்ஞமே சகலயஜ்ஞங்களிலும் சிரேஷ்ட்டமானது. இந்த ஞானயஞ்ஞோபவீதம் (ஞானமென்னும் (பூணூல்) எவனுக்கு உண்டோ அவனே, வேதோக்தமான பிராமணனேயொழிய மற்றவர்களின் பிராமணர்களல்லர்.

"இந்த்ரியத்வாரா ஸங்க்ராஹ்யையர் கந்தா த்யை ராத்மதேவ தாம் ஸ்வயம் பக்த்வா ஸமாராத்ய ஜ்ஞாதும் ஸோயம் மஹாமகஹ"

என்னும் பிரமாண ரீதியாய் இந்திரியங்களை ஜயித்து, பரப்பிரம்மமாகிய ஆத்மாவை கந்தாதிகளால் பூஜை செய்வதே ஞானயாகமென்று சொல்லப்படும். காராடு களாகிய வெள்ளாடுகளைக் கொன்று அக்நி குண்டத்தில் போட்ட சாம்பலாய்ச் செய்து அந்த சாம்பலை அவிர்ப்பாகமென்று பெயர் வைத்து சாப்பிடுவது கர்மயாகமென்று சொல்லப்படும்.

"ஜ்ஞாநாம்ருத த்ருப்த யோகிநோ ந கிஞ்சத் கர்த்ருத்வ மஸ்தி அஸ்திசேந்ந ஸ தத்வவித்பவதி."

என்னும் பைங்கலோபநிஷத் வாக்கிய ரீதியாய், தேவாமிர்தத்தை சாப்பிட்டு திருப்தியடைந்தவனுக்கு மற்ற எந்த மதுரமான பதார்த்தங்கள் ருசிக்காமலும், அவைகளை அவன் வேண்டாமலும் இருப்பதுபோல் ஞாநமென்னும் அமிர்தத்தினால் திருப்தியடைந்த ஞானி சர்வ சங்கல்பங் களையும் விட்டவனாதலால் அவன் பிரமருத் திரேந்திராதி பதவியின் சுகங்களையும், பூலோக போக சுகங்களையும் நினைக்கமாட்டான். அன்றியும் அப்படிப்பட்ட தேவலோக பூலோக சுகங்களை அனுபவிப்பதற்காக வேண்டிய, யஜ்ஞயாக தான தபோ விரதங்களையும் செய்யவுமாட்டான். இப்படிப்பட்ட ஞானிகள் தவிர மற்றவர்களெல்லோரும், யஜ்ஞயாக தான தபோ விரதங்களை அவஸ்யமாய் அனுஷ்டித்து வரவேண்டும், ஏனென்றால்,

"ஸத்கர்மபரிபாகதேரி பஹூநாம் ஜந்மநாமந்தே ந்ருணாமமோனே னுஸ்ச்சாஜாயதேததா ஸத்குரு மாஸ்ரித்ய சிரகாலஸேவயா பந்தாந மோக்ஷம் கஸ்சித் ப்ரயஸ்ச்சதி"

என்னும் பைங்கலோபநிஷத் வாக்கிய ரீதியாய் உலகத்திலுள்ளவர்களெல்லோரும் அனேக ஜன்மங்களாய்

பலாபேக்ஷையுடன், ஜ்ஞய யாக தான தபோ விரதங்களாகிய ஸத் (நல்ல) கர்மங்களைச் செய்து அதன் பலனை அனுபவிப்பதற்காக, பிறந்து கொண்டும் மறுபடியும் இறந்து கொண்டுமாயிருப்பார்கள். இப்படி அனேக ஜன்மங்களாய் பாலபேக்ஷையுடன் செய்துவந்த ஸத்கர்மத்தினால், எதுவோ ஓர் ஜன்மத்தில் தான் செய்யும் தான தர்மங்களெல்லாம் ஈஸ்வரன் கொடுக்கிறாரென்றும் அப்படிப்பட்ட ஈஸ்வரனே சகலத்திற்கும் கர்த்தனென்று நிச்சல பக்தி உண்டாகும்.

"தமேதம் வேதா நுவசநேந விவிதிஸந்தி ப்ரஹ்மசரியேந தபஸா ஸ்ரத்தயா யஜ்ஞேநாஸகந."

என்னும் புருஹதாரண்யோ பநிஷத் வாக்கிய ரீதியாய், முன்சொல்லியதுபோல் ஈஸ்வரனிடத்தில் நிச்சல பக்தி உண்டாவதனால், மோக்ஷாபேக்ஷை உடையவர்களாய் தாம் செய்யும் ஜப தப தான தர்ம யஜ்ஞ யாகாதிகளை எல்லாம் பலாபேக்ஷையில்லாமல் ஈஸ்வரார்ப்பணமாய் செய்து அதனால் பக்தி அதிகரித்து சித்த சலனமில்லாமல் தாம் ஈஸ்வரனிடத்தில் லயித்திருப்பார்கள். இப்படி லயித்த பிறது,

"தண்டுலஸ்யயதா சர்ம தாம்ரஸ்ய காளிமா
3ஸ்யதி க்ரியயா விபர புருஷய்ய ததா மலம்"
"குர்வந்நேவேஸ கர்மாணி ஜி ஜீவிஷேத் ஸதம் ஸகாஹ
ஏவம் த்வயி நாந்யதேதோஸ்தி ந கர்மலிப்யதே நரே?"

என்னும் மஹோபஷத் வாக்கியரீதியாயும், மோக்ஷ பேக்ஷையுடைய முமுட்சுக்களுக்கு ஈஸ்வரபக்தி அதிகரித்து பலாபேக்ஷையில்லாமல் ஈஸ்வரார்ப்பணமாய் பிரவர்த்தி மார்க்கமாகிய சத்கர்மங்ளையே செய்து வருவார்கள். இப்படி செய்து வந்தால் சித்தி உண்டாகும். அதனால்,

"ஈஸ்வரா நுக்ரிஹூ தேவ பும்ஸாமத்வைத வாஸநா."

ஈஸ்வரர் அனுக்கிரஹம் கிடைக்கும் ஈஸ்வர அனுக்கிரஹம் கிடைப்பதனால், திருக்கோயில் நியமமும், அடியார்களிடத்தில்

அன்பும் உண்டாய் உருத்திராக்ஷம் திருவெண்ணீறு என்னும் பஞ்சாக்கரத்தை மறக்க மனமில்லாமல் அதிக ஆசாரத்தோடிருந்து ஆசார்யருடைய திருவருளைப் பெறவேண்டு மென்னும் கருத்துண்டாகும். இதற்கு உபதேச காண்டம் பிரமாணம்:

திருக்கோயி லிமயமரன் பணிவிடையிற்
சிந்தை செலுந் தேசிகன்ற

னருட்கூற வேண்டுமெனுங் கருத்துண்டாந்
தொண்டரிடத் தன்பு முண்டா

முருத்திரவக்கம் பூதி யஞ்செழுத்தை
யிடைமறத்தற் குள்ள மோரா

திருக்குமர னருச்சனைபெற் றந்நிலையா
சாரத்தி னிருக்க வேண்டும்.

மேற்சொன்னவர்கள், ஞானசார்யரை ஆசிரயித்து அவர்களின் மூலமாய் ஞானாக்ஷாத்தாரமடைந்து முத்தியை அடைவார்கள். ஆதலால், இதில் உபதேசித்திருக்கும் உபதேசங்களை ஞானசாரியார் உபதேசமென்று எண்ணி இதை சாதனம் செய்துவந்தால், சகல பந்தபாசங்களும் ஒழிந்து மோக்ஷமென்னும் வீட்டைத்தப்பாமல் அடைவார்கள்.

"தேஹோயம் மாநுஷோ ஜந்தோஹ பஹுகர்மைய ஸாதநம்
ஸதா ஸத்கர்ந ஸேவேத துஷ்கர்ம ஸததம் த்யஜேத்ஹ."

என்னும் சுலோகரீதியாய் பலாபேக்ஷயில்லாமல் செய்யும் ஸத்கர்மங்கள் ஈஸ்வரப் பிரீதியாகும். இந்த ஈஸ்வரப் பிரீதியினால் ஞானமுண்டாகும். ஆதலால், பலர்பேக்ஷயை விட்டுச் செய்துவரும் கர்மங்களை ஈஸ்வரார்ப்பணமாய்ச் செய்துவர வேண்டும்.

"அந்தம் தமஹ ப்நவிஸந்தி ஏ ஸம்பூதி முபாஸதே
ததோ பூய இவ தே தமோய உ ஸம்பூதயாம் ரதாஹ."

என்னும் ஈசாவாஸ்யோபநிஷத் வாக்கியரீதியாய் பலாபேக்ஷையில்லாமல் சத்கர்மங்களை ஈஸ்வரார்ப்பணமாய் செய்யாதவர்களுக்கு ஞானம் உண்டாக மாட்டாது. இப்படிப்பட்டவர்கள் மோக்ஷமெனும் கரைகாணாமல் ஜநந மரணமென்னும் சமுத்திரத்தில் மூழ்கி சதா துக்கத்தையே அனுபவித்துக் கொண்டிருப்பார்கள். இது சத்தியம், சத்தியம், ஆதலால்,

"அஹம் ப்ரஹ்மேதி நிஸ்சித்ய அஹம்யாவம் பரித்யஜ
ஸர்வமேவ லயம் யாதி ஸுப்த்த ஹஸ்தஸ்த புஷ்பவத்
ஸர்வவ்யாபார முத்ஸ்ருஜ்ய ஆஹம் ப்ரஸ்மேதி பாவய
அஹம் ப்ரஹ்ம ந ஸத்தோஹா அஹம் ப்ரஹ்ம சிதாத்மகம்

ஸச்சிதாநந்தமாத்ரோ ஹமிதி நிஸ்ச்சித்ய தத்தயஜ."

என்னும் தேஜோபிந்தூபநிஷத் வாக்கியரீதியா் தூங்கப்பட்டவனுடைய கையிலிருக்கும் வஸ்து எப்படி நழுவிவிடுகிறதோ அதுபோல், அகங்கார மமகாரங் களையெல்லாம் நீ நழுவவிட்டு இதில் உபதேசமாய்ச் சொல்லியிருக்கும் அயம் ப்ரஹ்மாஸ்மி என்னும் ஸோஹம் மந்திரத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டு அதுபோல் அப்பியசித்து வருவாயாகில், உன் பாவகர்மங்களெல்லாம் ஸோஹம் மந்திர ஜபகடரால் பஸ்பமாய்விடும், இவ்வாறு அப்பியசித்துக்கொண்டு வந்து,

யத்பரம் விமலமத்வம் ஸிவம் தத்ஸதாஹமிதி மௌநமாஸ்ரய:

என்னும் சுருதிரீதியாய், சகல எண்ணங்களையும் சூன்னியமாய்ச் செய்து அதாவது ஸோஹம் மந்திரத்தையும் மறந்து சிலை விக்கிரகம்போல் மௌன நிஷ்டையில் இருக்கக் கடவாய்.

## 53. அவதூதர்களுக்கு ஜாதி பேதமில்லை

சுருப்ப் "அக்ஷரத்வாத் வரேண்ய த்வான் தூதஸ்ம்ஸாந பந்தநாத்
தத்த்வமஸயாதி லஷ்யத்வாத் அவதூத இதீர்யதே"

என்னும் அவதூதோபநிஷத் வாக்கியரீதியாய் அவதூத என்னும் வாக்கியத்தில் "அ" "வ" "தூ" "த" என்று நான்கு அக்ஷரங்கள் உண்டு அதில் அ என்றால் நாசமில்லாதவன் "வ" என்றால் சகல மனுஷ்ய ஜனங்களுக் கெல்லாம் சிரேஷ்டமானவன் என்றால், பிரம்மசாரி கிரகஸ்தன் (சம்சாரத்துடன் இருப்பவன்) வானப்பிரஸ்தன் சந்நியாசி என்னும் நான்கு ஆசிரமத் திலுள்ளவர் களுக்கெல்லாம் சிரேஷ்டன் சந்நியாசி யேயாம்; "தேஹமேநான்" என்னும் அபிமானமே சம்சார மென்று சொல்லப்படும். அப்படிப்பட்ட அபிமானம் இல்லாமல் போவதே சம்சாரமில்லாமல் போவது, அன்றியும் சகல எண்ணங்களையும் விட்டுவிடுவதே சம்சாரமில்லாமல் போவது, 'தூ' என்றால் அப்படிப்பட்ட அபிமானமென்னும் சம்சார விஷயங்களையெல்லாம் விட்டவன் சந்நியாசி என்பதேயாம். 'த' என்றால், தத்வமஸி என்னும் மஹாவாக்கியரீதியாய் "பிரம்ம" "ஆத்மா" என்னும் பேதமில்லாமல் இவ்விரண்டையும் ஐக்கியம் செய்யப்பட்டவன் என்பதேயாம், ஆதலால் முன்சொல்லிய நான்கு அக்ஷரங்களின் ரஹஸ்யார்த்தம் தெரிந்தவனே 'அவதூதன்' என்று சொல்லப்படும்.

சுரு|| யோ விலங்க்யா ஸ்ரமாந் வர்ணாநாதபந்யேவ ஸ்திதஹ
ஸதா அதிவர்ணா ஸ்ரமீயோகீ அவதூதஹ ஸ்கதயதே.

என்னும் அவதூதோபநிஷத் வாக்கியரீதியாய் ஜாதி பேதம் குலகோத்திரம் முதலானவைகள் சரீரத்திற்கே யொழிய சரீரத்திற்குள் வேறாயிருக்கும் ஆத்மாவிற்கில்லை. இப்படிப்பட்ட ஜாதிபேதங்களைவிட்டு, பரப்பிரம்மதின் அம்சமாகிய ஆத்மாவிற்கு ஜாதிபேதம் இல்லை என்று அறிந்து அந்த பரப்பிரம்மமே தானென்று திடநிச்சய முடையவனாய் சதாகாலமும் தான் தானாய் நின்றிருக்கப் பட்டவனே அவதூதன் என்று சொல்லப்படுவான்.

சுரு|| யஹ ஸரீரேந்திரியாதிப்யோ விஹீநம் ஸர்வ ஸாக்ஷிணம்
பாரமார்த்திகம் விஜ் ஞாநம்ஸுகாத்மாநம் ஸ்வயம் ப்ரபம்
பரதத்தவம் விஜாநாதி ஸோதிவர்ணாஸ்ரமீ பவேத்.

என்னும் நாரத பரிவிராஜகோபநிஷத் வாக்கிய ரீதியாய் தேஹம் இந்திரியங்கள் முதலானவை களுக்கெல்லாம் வேறாய் சர்வசாக்ஷியாய் மாயையால் மூடப்படாதவனாய் ஞான சொரூபனாய் ஆனந்தரூபனாய் சுயம்பிரகாசனாய் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஆத்மாவேதானென்று அறிநது எப்பொழுதும் தான்தானாய் இருப்பவனே அவதூதன் என்று சொல்லப்படுவான்.

சுரு|| வர்ணஸ்ரமாத்யோ லேஹே மாயயா பரிகல்பிதாஹ
தாத்மநோ போதரூ பஸ்ய மம தே ஸ்ந்தி ஸர்வதா
இதி யோ வேத வேதாந்ஹி ஸோதிவர்ணாஸ்ரமீ பவேத்.

என்னும் நாரத பரிவிராஜ கோபநிஷத் வாக்கிய ரீதியாய் கோத்திரம் ஜாதிபேதங்கள் முதலானவை களெல்லாம் மாயா சம்பந்தத்தால் தேகத்திற்க உண்டா யிற்றேயொழிய, ஆத்மசொரூபியாகிய எனக்கு ஜாதி பேதம் எதுவும் இல்லை. நான் என்னும் அபிமானம் உடையவர் களுக்கே ஜாதிபேதமுண்டேயொழிய தேகம் இந்திரியங்கள் முதலானவை களுக்கெல்லாம் வேறாயிருக்கும் எனக்கு எந்த ஜாதிபேதமுமில்லையென்று நிச்சயித்து தான் தானயிருக்கப் பட்டவனே அவதூதனென்று சொல்லப்படும்.

சுரு|| யஸ்ய வாணாஸ்ரமாசாரோ களிதஹ ஸ்வாத்ம தர்ஸ
நாத் வர்ணானாஸ்ரமாந் ஸர்வாநதீத்ய ஸிவாத்மநி
ஸ்திதஹ யோதீதய ஸ்வாஸிரமாந் வர்ணாநாத்மந்யேவ
த்திதஹபுமாந் ஸோதிவர்ணாஸ்ரமீ ப்ரோக்தஹ
ஸர்வவேதார்த்தவ வேதிபிஹி

என்னும் நாரத பரிவிராஜகோபநிஷத் வாக்கிய ரீதியாய், தூங்குகிறவன் கையிலிருக்கும் வஸ்து நழுவி விழுந்து விடுவதுபோல் பிரம்ம நிஷ்டையில் தூங்கிக் கொண்டிருப்ப வனுக்கு ஜாதிபேதம் ஒன்றும் தெரியாமல் தன்னைத்தான் மறந்திருப்பான். இப்படிப் பட்டவனே அவதூதனென்று சொல்லப்படுவான்.

சுரு ॥ ஆநந்தமந்தர் நிஜமாஸ்ரயம்
தமஸாபிஸாசி மவமாநயந்தம்
ஆலோக்கியந்தம ஜகதிந்தர ஜாலம்
ஆபத் கதம் மாம ப்ரவிஸே றஸங்கம
வர்ணாஸ்ரமாரயுதா விமுடாஹ
காமா நுஸாரேண பலமலபந்தே
வர்ணாதி தர்மம் ஹி பரித்யஜந்தஹ
ஸ்வாநந்த த்குப்தாஹ புருஷாபவந்தி

என்னும் மைத்ரேய புயபநிஷ்த்வாக்கியரீதியாய், சின்முத்திரையுடன், இடுப்புக்கூன் வளையாமல் நேராய் நிமிர்ந்து சித்திரப் பதுமைபோல் உட்கார்ந்து கண்களை மூடி அந்தர் (உள்) முகமாய் சச்சிதானந்த பரப்பிரம்மத்தைத் தரிசித்து ஆசாபாச மென்னும் பிசாசை அவமானப்படுத்தி ஜகத்து இந்திரஜாலம் என்று நினைத்து தன்னில்தான் சிரித்துக் கொண்டு சகல துக்கங்களும் சரீரத்திற் குண்டே யொழிய அசரீரியாகிய (சரீரமில்லாத) எனக்கு எந்தத்துக்கங்களும் இல்லை. நான் சதா பிரம்மா நந்தமென்னும் சமுத்திரத்தில் மூழ்கி நிர்பயமா யிருக்கின்றேனென்று இருக்கப்பட்டவனே அவதூதன் என்று சொல்லப்படுவான். அஞ்ஞானிகளே குலம் கோத்திரம் ஜாதிபேத முடையவர் களாயிருந்து, அதற்கு வேண்டிய நித்திய நைமித்திய காம்மிய கர்மங்களைச் செய்து அதன் பலனை அனுபவிப்பதற்காக மறுஜநநம் எடுக்கின்றார்கள். ஆதலால் ஜாதிபேதம்விட்டு தன் நிஜசொரூபத்தில் மனதை லயப்படுத்தி இருக்கப்பட்டவனே அவதூதன் பிரம்மஞானம் இப்படிப் பட்டதென்று அறியாமல் கௌபீனத்துடனிருந்து கொண்டிருப் பவன் அவதூதனாகமாட்டான்.

## 54. ஜீவன் முக்தன் லக்ஷணம்

க்ரியா நாஸாத் பதேவ சிந்தாநாஸோ
தஸ்மாத் வாஸநாக்ஷயஹ
வாஸநாஹ க்ஷயோ மோக்ஷஹஸா
ஜீவந்முக்தி ரிஷ்யதே. (அத்யாத்மோபநிஷத்)

*சகல விவகாரங்களும் நசிப்பதனால் எந்த எண்ணங்களும் இல்லாமலிருப்பதனால் வாசனாத்திரயங்கள் நசிக்கும். வாசனாத்திரயங்கள் நசிப்பதனால் ஜீவன் முக்தியை அடைகின்றது.*

''ப்ரஹ்மண்யேவ விலீநாத்மா நிர்விகாரோ விநிஷ்ஹெ
ப்ரஹ்மா த்மநோஸ் ஸோதிதயோ ரேகபாவாவகாஹிநீ
நிர்விகல்பாச சின்மரத்ர வ்ருத்திஹி பரக்ஞேதி கத்யதே ஸா
ஸர்வதா யவேத் பஸ்ய ஸ ஜீவன் முக்த இஷ்யதே.''-
''தேஹேந்த்ரியே ஸ்வாம்பாவ இதம்பாவ ஸ்ததந்யகே
யஸ்ய நோ பவதஹ்க்வாபி ஸ ஜீவன் முக்த இஷ்யதே
ப்ரத்யக்ப்ரஹ்மணோர் பேதம்மதாபிப்ரஹ்மஸர்கயோ
(ஹெ இஷ்யதே
ப்ரஜ்ஞா யோ விஜா நாதி ஸ ஜீவன் முக்த
''ஸாதுவிஹி பூஜ்ய மநேஸ்மிந் பிட்யமா நேபிதுர்ஜநைஹி
ஸம்பாவோ பவேத்ய ஸ்ய ஸ ஜீவன் முக்த இஷ்யதே.''
(அத்யாத்மோபநிஷத்

தீங்குறு மாயை சேரா வகைளினை திரிவி தத்தால்
நீங்கிட நீங்கா மூல நிறையிரு ளிரிய நேயத்
தோங்குணர் வகத்த டங்க யுளத்துளின் பொடுங்கநேரே
தூங்குவர் தாங்கி யேகத் தொன்மையிற் றுகளி லோரே
குறிப்பிடங் காலந்திக் காசனங்கொள்கைகுவங்குணஞ்சீர்
சிறப்புறு விரதஞ் சீலந் தபஞ் செபந் தியான மெல்லாம்
மறுத்தற வொழிதல் செய்தன் மருவிடா மன்னு செய்தி
உறக்குறுபவர்போல்வாய்மை யொழிந்தவையொழிந்து போமே

அகம்புற மென்றி ரண்டா லருச்சுனை புரியு மிந்தச்
சகந்தனி விரண்டு மின்றித் தமோமயமாகி யெல்லாம்
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழு நீர்மையார் போல் ஞானந்
திகழ்ந்தகம் புறமொனாத செம்மையார் நன்மை யாரே
அண்டமே விடவனைத்து மனைத்தையு மண்ட மேவிக்
கொண்டல்போ லெனவயு ஞானக் குறைவிலா நிறைதலாலே
கண்டதோர் பொருளை யந்தக் கருத்தினால் காணீற்றானே
அண்டநா யகனார் மேனி யானதே லைய மின்றே.
மண்முதற் காரணமெல்லா மறுவசத் தாக்கி ஞானக்
கண்ணினி லூன்றி யந்தக்கருத்தினால் லெவைய நோக்கி
எண்ணியஞ் செழுத்து மாறி யிறைநிறை யுணர்ந்து போற்றல்
புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலும் மன்றே
தொண்டர்க டாமும் வானோர் தொழுந்திரு மேனிதானும்
அண்டருங் கண்டிலாத வண்ணலே யெனவணங்கி
வெண்டா ளங்கள் சிந்த விழிமொழி ருளற மெய்யே
கண்டுகொண்டிருப்பார் ஞானக் கடலமு தருந்தினோரே

*பிரம்மத்தில் லீனமான பிரம்மவித்து நிர்விகாரனாயும் நிஷ்கிரியனாயும் இருப்பான். பிரம்மமே ஆத்மாவென்றும் ஆத்மாவே பிரம்மனென்றும் தத்துவ விசாரணையினால் தெரிந்து சமரச ஐக்கிய பாவத்தையடைந்து சகல சங்கல்பங்களும் நசித்து சகலமும் மறந்து தானே தானாய் கேவலசாக்ஷி மாத்திரனாயிருக்கும் விருத்தியே பிரஞ்ஞையெனப்படும். இப்படிப்பட்ட பிரஞ்ஞை யுடையவனே ஜீவன் முக்தன் நான். என் தேகம் என் இந்திரியங்கள் என்னும் அகங்காரமே அஞ்ஞானம், இந்த அஞ்ஞானம் இல்லாதவனே ஜீவன் முக்தன். பிரம்மத்திற்கும் ஆத்மாவிற்கும், எப்பொழுதும் பேதம் உண்டாகமாட்டாது. பிரம்மமே ஆத்மா, ஆத்மாவே பிரம்மமென்று எவன் ஞானத்தினால் அறிகின்றானோ அவன் ஜீவன் முக்தன் சாதுக்கள் தம்மைப் பூசித்தாலும் அல்லது துர்ச்சனர்கள் தம்மைத் தூஷித்தாலும் கோப தாபங்களில்லாதவர்களாய் சர்வமும் சமமாய்*

நினைக்கப்பட்டவர்களே ஜீவன் முக்தர்கள் என்று சொல்லப்படுவார்கள்.

புருஷஸ்ய கர்த்ருதவபோக்த்ருத்வ ஸுகதுக்காதி லக்ஷண சித்ததர்மஹ, க்லேஸரூபத்வாத் பந்தோ பவதி தந்நிரோதநம் ஜீவன்முக்தி. (முக்திகோபநிஷத்)

நானே யஜமான், சர்வமும் என்னால் நடக்கிறது என்று அகங்காரங்கொண்டு ஓர் காரியத்தைச் செய்வது கர்த்தருத்துவமென்றும், அப்படிச் செய்து அதன் பலனை அனுபவித்து போக்த்ருவமென்றும் சொல்லப்படும். மனமே நானாவித காரியங்களையும் செய்து கொண்டு சுகதுக்கங்களை அனுபவித்துக் கொண்டிருக்கின்றது. மனதினாலேயே பந்தம் உண்டாகிறதேயொழிய நான் எந்த காரியங்களையும் செய்வதில்லை. நான் எதையும் அனுபவிப்பதில்லை நான் கேவல சாக்ஷி மாத்ரன் அகர்த்தன் அபோக்தன் என்றும் நிச்சய ஞானமுண்டாகி கர்த்தருத்துவ போக்தருத்துவமென்னும் அகங்காரமில்லாதவனாய் மனோ விகாரங்களை நாசஞ் செய்துதான் கேவல சாக்ஷிமாந்திரனும் சின்மாத்திர பிரம்மமாயிருப்பவனே ஜீவன் முக்தன்.

"த்ருஸ்யம் நாஸ்தீதி போதேந மனஸோ த்ருஸயமார்ஜனம்
சம்பந்தம்சேத் ததுத்பந்நா பார நிர்வாண நிர்வருதிஹ
(மஹோபநிஷத்

காணப்படும் வஸ்துக்களெல்லாம் அசத்தியமென்று எண்ணி சகலமும் மறந்து சுக சொரூபமாயிருப்பதே மோக்ஷமென்று சொல்லப்படும். அப்படிப்பட்ட ஸ்திதியை அடைந்தவனே ஜீவன் முக்தன்.

"ந மோக்ஷா நபஸஹ பிருஷ்ட்டே ந பாதாளே ந பூதலே
ஸர்வாஸா ஸம்க்ஷயே சேதஹ க்ஷயோ மோக்ஷ இதீஸ் யதே.
(மஹோபநிஷத்)

காணப்படும் வஸ்துக்களெல்லாம் அசத்தியமென்று எண்ணி சகலமும் மறந்து, சுக சொரூபமாயிருப்பதே மோக்ஷமென்று சொல்லப்படும். அப்படிப்பட்ட ஸ்திதியை அடைந்தவனே ஜீவன் முக்தன்.

"க மோக்ஷா நபஸஹ ப்ருஷ்ட்டே ந பாதானே ந பூதலே
ஸந்வாஸா ஸம்க்ஷயே சேதஹ க்ஷயோ மோக்ஷ இதிஷ் யதே.
(அந்த பூர்ணோபநிஷத்)

மோக்ஷமென்பது ஆகாசத்திலுமில்லை, பாதாள லோகத்திலுமில்லை பூலோகத்திலுமில்லை. சகல ஆசைகளும் நசித்து சங்கல்ப (எண்ணங்கள்) சூன்யமாய் (இல்லமல்) இருப்பதே மோக்ஷமென்று சொல்லப்படும் ஆதலால், எண்ணங் களையெல்லாம் நாசம் செய்தவனே ஜீவன் முக்தன்.

"அத்யாத்மரதீ ராஸந்தஹ பூர்ணபாவந மாநஸ்ஹ
ப்ராப்தா நுத்தம விஸ்ராந்திஹி ந கிஞ்சிதஹ வாஞ்சதி"
"ஸர்வாதிஷ்ட்டாந ஸந்மாத்ரே நிர்விகல்பே சிதாத்மநி"
(அந்நபூர்ணோபநிஷத்)

அத்யாத்யநிஷ்ட்டையிலிருந்து மனதை பரப் பிரம்மத்தில் லயிக்கசெய்து சித்த விஸ்ராந்தியடைந்து சகல போகங்களிலும் எண்ணமில்லாதவனாய் காராபுத் ராதிகளின்மீது சிநேகதித மில்லாதவனாய், நிர்விகல்பமாய் பிரம்மசொரூபத்திலிருப்பவனே ஜீவன் முக்தன் இதற்கு சிவபிரகாசம் பிரமாணம்.

தீங்குறு மாயை சேரா வகைவினை திரிவி தத்தால்
நீங்கிட நீங்கா மூல நிறையிரு ளிரிய நேயத்
தோங்குணர் வகத்தடங்கி யுளத்துளின் பொடுங்கநேரே
தூங்குவர் தூங்கி யேகத் தொன்மையிற் றுசளிலோரே
இப்பால் இரண்டு முறை சொல்லப்பட்டது.
"அஸேஷண பரித்யாகோ வாஸநாயாம்ய உத்தமஹ
மோஹ இத்யுச்யுதே ஸத்பிஹி ஸஸஏவவிமலக்கரமஹ
(மஹோ)

சகல மலின வாசனைகளும் பூர்த்தியாய் நசித்து சின்மாத்திரமாயிருப்பதே மோக்ஷமென்று சொல்லப்படும். அப்படிப்பட்ட ஸ்திதியை அடைந்தவனே ஜீவன் "யோஸுத்தவாஸநா பூயோ ந ஐந்மாநர்த்த போகிநஹ "ஞாதஜ்ஞேயா ஸ்த உச்யந்தே ஜீவன் முக்தா மஹா (தியஹ (மஹோகபநிஷத்)

டம்பமில்லாமலிருப்பது, காமக்குரோதரி துர்க்குணங் களில்லாமலிருப்பது, சமதமாதிகள் சரவண மனனாதிகள் என்பவைகளே சுத்த வாசனைகளென்று சொல்லப்படும். இப்படிப்பட்ட சுத்த வாசனை நசித்து புனர்ஜநந சூன்யமாய் சதா அபோக்ஷ ஞானசாக்ஷாத் காரத்தை அடைந்தவனே ஜீவன் முக்தன், ஜீவன் முக்தனென்றால், இதர்களுக்கு பந்தமுடைய சம்சாரியைப்போல் காணப்பட்டு, லோகவியாபாரங்கள் செய்தபோதிலும் தான்மாத்திரம் தன்னிடத்தில் தோன்றப்பட்ட ஜீப்பிராந்தியை நசிக்கச் செய்து சாக்ஷிமாத்திர பரப்பிரம்ம சொருபமாய் இருக்கப்பட்டவனென்பதேயாம்.

"ஸர்வத்ர விகஸ்தநேஹோ யஸ்ஸாக்ஷிவ தவஸ்திதஹ
நிரிச்சோ வார்த்ததே கார்யே ஸ ஜீவந்முக்த உச்யதே." மஹா

தாரா (மனைவி) புத்ராதிகளின்மீது ஆசையுடைய வனாய் உலகத்தாருக்குக் காணப்பட்டபோதிலும் அந்தரங்கத்திலும் அவர்களின்மீது ஆசையில்லாதவனாய், தேகேந்திரிய வியாபாரிகளுக்குத்தான் சாக்ஷியென்று எண்ணிக்கொண்டு எந்த எண்ணங்களுமில்லாமல் சௌச ஸ்நாந போஜனாதி சகல காரியங்களையும் செய்து கொண்டிருப்பவனே ஜீவன்முக்தன்.

"யேநதர்ம மதர்மஞ்ச மநோ மநந மீஹிதம்
ஸர்வமந்தஹ பரித்யக்தம் ஸ ஜீவன்முக்த உச்சயதே (மஹோபு)

வேதவிஹத தர்மா அதர்மங்களில் தனக்கு லாபமில்லையென்று எண்ணி, அவைகளை நினைக்காமலுங்

அபேக்ஷிக்காமலும் சதா ஆத்மாநு சந்தானம் செய்யப்பட்டவனே ஜீவன்முக்தன்.

'யாவதீ த்ருஸயகலநா ஸகலேயம் விலோக்யதே
ஸா யேந ஷூஷ்டு ஸந்த்யக்தா ஸ ஜீவன்முக்த உச்சயதே'
(மஹோபநிஷத்)

நானா விசித்திர பெயர் ரூபங்களுடன் காணப்படும் பிரபஞ்சம் மாயா கற்பனையென்றும், அஃது அசத்தியமென்றும் தெரிந்து, பிரபஞ்சத்தின் ஆசையை விட்டு சதா ஆத்மத்தியானம் செய்துகொண்டு தன் மயமாயிருப்பவனே ஜீவன் முக்தன்,

"கட்வாம்ல லவணம் திக்த மம்ருஷ்ட்டம் ம்ருஷ்ட்ட மேவச
ஸமமே வசயோ புங்க்தே ஸ ஜீவன்முக்த உத்யதே" (மஹோப)

கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, கசப்பு, துவர்ப்பு, இனிப்பு ஆகிய ஷட்ரசம் என்றால், ஆறுவித ருசி பேதங்களும், ருசியில்லாத அன்னமும் தெய்வாதீனமாய் எவ்வாறு பிராப்தித்த போதிலும் அதில் ஒரு அருசி விசாரிக்காமல் சம்பாவத்துடன் புசித்து சதா ஆத்மாநு சந்தான பரனாயிருப்பவனே ஜீவன் முக்தன்.

ஜ்ராமரணமாபச்ச ராஜ்யம் தாரித்ரியமேவ ச
ரம்யமித்யேவ யோ புங்த்தே ஸ ஜீவன்முக்த உத்யதே'!
(மஹோபநிஷத்)

சரீர சம்பந்தமாகிய மூப்பு (கிழத்தனம்) மரணம், ஆபத்து, ராச்சியம், சம்பத்து தாரித்திரியம் முதலானவைகள் சம்பவித்தபோதிலும், அவைகள் தேகத்திற்கேயன்றி ஆத்மாவிற்கில்லையென்று நினைத்து நிர்ப்பயமாய் பிரம்மானந்த சொரூபமாய் இருப்பவனே ஜீவன் முக்தன்,

"ஸர்வேச்சா ஸ்கலாஸ் ஸகாஹ ஸ்ர்வேங் ஹா ஸர்வ நிஸ்ச்சயாஸ
த்யாயேந பரித்யக்தா ஹ ஸ்ஸ ஜீவன் முக்த உச்யதே."
மஹோப

சகல எண்ணங்களையும், சகல சந்தோஷங்களையும் சர்வபிரபஞ்ச விஷயங்களையும் சர்வசாஸ்திர சித்தாந்தங் களையும் விட்டு விட்டு லோகவாசனை சாஸ்திரவாசனை, தேகவாசனை என்றும் வாசனாத்திரய (மூன்று வாசனைகளுமில்லாதவனாய்) சதா ஆத்மாநு சந்தானம் செய்து கொண்டிருப்பவனே ஜீவன் முக்தன்.

"ஸாந்த ஸம்சாரகலநஹ கலாவாநபி நிஷ்களஹ
யஸ்ஸசித்தோபி நிசியத்த ஸ்ஸ ஜீவந்முக்த உத்யதே."

மஹோப

சம்சாரத்திலிருக்கும் சம்சார பந்தங்களில்லாத வனாயும் வித்வாம்சனாயிருந்தும் வித்வாம்ச னென்னும் கர்வமில்லாத வனாயும் பரிசுத்த சித்தனாயும் இருந்து எந்த எண்ணங்களும் இல்லாமல் இருப்பவன் எவனோ அவனே ஜீவன் முக்தன்.

"ஜாகரத்யேவ ஸுஷுப்திதஹ குருகர்மாணிதவ த்விஜ
அந்தஸ்ஸர்வ பரித்யாகீபஹி குரு ய்தாகதம்" அன்ன பூர்ணோ

ஜாக்கிரதாவஸ்தையில் தூங்கிக் கொண்டிருப் பவனைப்போல் இருந்து சகல காரியங்களையும் செய்துகொண்டு அந்தரங்கத்தில் காமக் குரோதாதிகள் இல்லாதவனாய், தான் சாக்ஷிமாத்திரனாயச் சிந்துக் கொண்டு வெளிக்குமாத்திரம் உலகத்தாரைப்போல் யதாவிதியாம் சகல காரியங்களையும் செய்து கொண்டிருப் பவனே ஜீவன் முக்தன்.

"தேஹேந்த்ரியே ஸ்வஹம்பாவ இதம்பாவ ஸ்ததந்யகே
யஸ்ய நோ பவதஹ க்வாபி ஸ ஜீவந்முக்த இஷ்யதே"

(அத்யாத்)

தேகேந்திரங்களே நானென்றும் அகங்காரத்தை விட்டுத் தேகத்திற்கு வேறாயிருக்கும் ஆத்மாவே நானென்று நினைக்கப்பட்டவனே ஜீவன் முக்தன்.

"ராகத்வேஷ பயாதீந மநுரூபம்சரநபி
யோந்தர்வ்யோம வதத்யா ஸ ஜீ வந்முக்த உச்யதே"

(மஹோபநிஷத்)

302

காமக்குரோத லோப மோகததி குணங்களை யுடையவனாய் நடித்துக் கொண்டிருந்தபேரிலும், பண்டித திறமையைக் காட்டாமல் பாமரனைப்போலிருந்து எவன் மனம் பிரம்மமயமாய் நிராகாரமாய் ஆகாசத்தைப்போல் பரிசுத்த மாயிருக்கின்றதோ, அவனே ஜீவன் முக்தன் இதற்கு கைவல்யம் பிரமாணம்.

காமமா திகள்வந் தாலுங் கணதிற்போ மனத்திற் பற்றார்
தாமரையிலைத் தண்ணீர்போற் சகத்தோடுங்கூடி வாழ்வார்.
பாமர ரெனக்காண்பிப்பார் பண்டிதத்திறமைகாட்டார் ஊமரு
மாவா ருள்ளத் துவகையாளு சீவன் முக்தர்.
அஹங்காரமயீம் த்யக்த்வா வாஸநாம் விலயைவ யஹ
திஷ்ட்டதி த்யேயஸமத்யாகீ ஸ ஜீவநமுக்த உச்யதே." (மஹோ)

அகங்கார ரூபமாகிய மலினவாசனைகளை விட்டுவிட்டு தேவதா உபாசனாதிகளை நிவர்த்தி செய்து, சதா ஆத்ம நிஷ்ட்டையில் இருப்பவனே ஜீவன் முக்தன்.

"யஸ்யநேச்சா ததாநிக்சர யஸ்ய கர்மணி நிஷ்ட்டதஹ
ந தஸ்ய லிப்யதே ப்ரக்ஞ பதமபத்ரமிவாமபுபிஹி". (மஹோப)

எவன் இச்சையில்லாதவனாய் சகல கார்யங்களையும் செய்து கொண்டிருப்பானோ அவன் தாமரையிலையின் மேலுள்ள ஜலத்தை போல், சுகதுக்கங்களைப் பற்றாமல் அசங்கனாயிருப்பான். அப்படியிருப்பவனே ஜீவன் முக்தன்.

"ஜ்ஞாநாம்ருத த்ருப்த யோகிதோ ந கிஞ்சத் கர்தவ்யமஸ்தி
தஸ்ததிசேந ந ஸ தத்வவித்பவதி," (பைங்கலோபநிஷத்)

தேவாதுருதம் வயிறாரப் புசித்தவன் பசி தாகம் முதலானவைகளில்லாதவனாய் மிகவும் சந்தோஷ முடையவனாய் அன்னபானாதிகளை (பசி தாகங்களை) ஆசிரயிக்காதவனாய் (வேண்டாதவனாய்) எவ்விடத்திலும்

சம்சாரம் செய்யாமல் இருந்த இடத்திலேயே சுகமாய்ப் படுத்துத் தூங்குவதுபோல ஞானாமிருதம் பானம் செய்து (சாப்பிட்டு) திருப்தியடைந்த ஞானி, சகல காரியங்களும் தெய்வாதீனமாய்ப் பூர்வகர்மங்களை அனுசரித்து நடக்கிறதேயொழிய, நான் எதுவும் செய்வதில்லையென்னும் திட நிச்சயமுண்டாய அகங்கார சூன்யனாய் எந்த வியாபாரமும் செய்யாமல் நிச்சலனாய் (மனம் அசையாதவனாய்) இருந்த இடத்திலேயே சதாபிரம்மாநந்த நித்திரையில் இருப்பான். அப்படிப்பட்டவனே ஜீவன் முக்தன் மனோவியாபாரம் சூன்னியமாகாவிடில் (ஒடுங்காவிடில்) ஜீவன் முக்தனாகமாட்டான்.

"ப்ராரப்த கர்ம பர்யந்தம் ஹி நிர்மோகம்த் வ்யவஹரதி சந்த்ரவச்சரதே தேஹி ஹ முக்தஸ்சாநிகேதநஹ," (பைங்க)

பிராரப்தகர்மம் நசிக்கும்வரையில் எப்படிப்பட்டவர் களுக்கும் தேகம் நசிக்காததால் ஞானிப்ராரப்தம் நசிக்கும் வரையில் தேகதாரணனாய் இருப்பான். அறுவடையான பயிர்தாள்கள் மறுபடியும் முளையாததுபோல், ஞானக்கிநியினால் இனிமேல் தனக்குப் புனர்ஜநந மில்லாதவனாய்ச் செய்துகொண்டு பூர்ண சந்திரனைப்போல் நிஷ்களங்கனாய் எந்த தோஷங்களும் இல்லாதவனாய் கர்த்தத்துவ போக்த்ருத்துவமென்னும் அகங்காரமம காரங்கள் இல்லாதவனாய், சேற்றிலுள்ள பிள்ளைப்பூச்சி சேற்றைப் பற்றாமலிருப்பதுபோல் சம்சாரத்திலிருந்த போதிலும் அதில் பற்றாமல், மனம் இந்திரியம் முதலான வைகளை வசயம் செய்து சகல ஜனங்களுக்கும் மித்திரனாய் அதிக தயானத்வமுடையவனாய் கோபதாபங்கள், அசூயை பயம் முதலானவைகளில்லாதவனாய் தனக்கிஷ்டமான பதாத்த்தங்கள் கிடைத்தால் சந்தோஷமும் தனக்கிஷ்ட மில்லாத பதார்த்தங்கள் கிடைத்தால் துக்கமும் இல்லாதத வனாய் தன் பூர்வகர்மானுசாரமாய் ஏதெது பிராப்தமாகின்றதோ (கிடைக்கின்றதோ) அதில் திருப்தியடைந்து தனக்குக் கிடைக்காத

வஸ்துகளுக்குத் துக்கப்படாமல் தூஷணை, பூஷணைகளை சமமாய் நினைத்து சதா பிரம்மைக்யாநு ஸந்தானம் செய்து கொண்டிருப்பவனே ஜீவன்முக்தன்.

"ஸர்வலோக ஸதுதிபாத்ரஹ ஸர்வதேஸ ஸஞ்சாரஸிலஹ
பரமாத்மககநெ பிந்தும் நிக்ஷிப்ய ஸூத்தாத்வைதா
ஜாட்ய ஹைஜாமநஸக யேகநித்ராகண்டா நந்த
பூரானுவ்ருதயா ஜீவன்முக்தோப்வதி.""

(மண்டல ப்ராஹமணொபநி)

எல்லா உலகத்தாராலும் துதிக்கப்பட்ட ஞானிய தேச்சையாய் நிர்ப்பயமாய் சர்வதேச சஞ்சார சீலனாய் வெட்ட வெளியாகிய ஸச்சிதானந்த பிரம்மமே நா னென்றும் சதா அதிலேயே புத்தியை லயிக்கச்செய்து தனக்கு அந்நிய மானது மற்றொன்றுமில்லை யென்றும் சர்வம் தானாய் பரிசுத்த அத்வைத பிரம்மசாக்ஷாத் காரத்தை யடைந்து சஹஜமான சுகயோக நிந்திரை யுடையவனாய் சதா அகண்டானந்த விருத்தியுடன் இருப்பவன் எவனோ அவனே ஜீவன்முக்தன்.

"தீர்த்தே ஸவபச க்ருஹேவா தநும் விஹாயயாதி
கைவல்யம் ப்ராணாநவகீர்யயாதி கைவல்யம்." (பைங்கலோப)

காசி ராமேஸ்வரம் முதலாகிய புண்ணிய ஸ்தலங் களிலாகிலும் சண்டாளனுடைய கிரகத்திலாகிலும் எப்பேர்ப்பட்ட இடங்களிலாகிலும் ஞானி பிராரப்தம் நசித்தவுடனே சரீரத்தை விட்டுப் பிரம்மைக்கியத்தை யடையவானாகில் அவன் எப்படிப்பட்ட இடத்தில் பிராரணனை விட்டபோதிலும் தோஷமில்லை. பிரம்ம ஞானிக்கு இது பிராமண அக்கிராரம். இது பறைச்சேரி என்னும் பேதமில்லாமல் சர்வமும் சமமாய்ப் பார்ப்பான்.

"யத்ரயத்ர ம்ருதோ ஜ்ஞார் யேநவாகேந ம்ருத்யுநா
யதா ஸர்வகதம வ்யோமம் தத்ர தத்ரலயம் கதஹ"
"கடாகாஸ மிவாத்மாநம விலயம் வேத்தி தத்ததஹ
ஸ கச்சதி நிராலம்பம் ஜ்ஞாநாலோகம் ஸமந்ததஹ" (பைங்க)

சம்சாரம் செய்யாமல் இருந்த இடத்திலேயே சுகமாய்ப் படுத்துத் தூங்குவதுபோல ஞானாமிருதம் பானம் செய்து (சாப்பிட்டு) திருப்தியடைந்த ஞானி, சகல காரியங்களும் தெய்வாதீனமாய்ப் பூர்வகர்மங்களை அனுசரித்து நடக்கிறதேயொழிய, நான் எதுவும் செய்வதில்லையென்னும் திட நிச்சயமுண்டாய அகங்கார சூன்யனாய் எந்த வியாபாரமும் செய்யாமல் நிச்சலனாய் (மனம் அசையாதவனாய்) இருந்த இடத்திலேயே சதாபிரம்மாந்நத நித்திரையில் இருப்பான். அப்படிப்பட்டவனே ஜீவன் முக்தன் மனோவியாபாரம் சூன்னியமாகாவிடில் (ஒடுங்காவிடில்) ஜீவன் முக்தனாகமாட்டான்.

"ப்ராரப்த கர்ம பர்யந்தம் ஹி நிர்மோகம்த் வ்யவஹரதி சந்த்ரவச்சரதே தேஹி ஹ முக்தஸ்சாநிகேதநஹ," (பைங்க)

பிராரப்தகர்மம் நசிக்கும்வரையில் எப்படிப்பட்டவர்களுக்கும் தேகம் நசிக்காததால் ஞானிப்ராரப்தம் நசிக்கும் வரையில் தேகதாரணனாய் இருப்பான். அறுவடையான பயிர்தாள்கள் மறுபடியும் முளையாததுபோல், ஞானக்கிநியினால் இனிமேல் தனக்குப் புனர்ஜநந மில்லாதவனாய்ச் செய்துகொண்டு பூர்ண சந்திரனைப்போல் நிஷ்கனங்கனாய் எந்த தோஷங்களும் இல்லாதவனாய் கர்த்தத்துவ போக்த்ருத்துவமென்னும் அகங்காரமம காரங்கள் இல்லாதவனாய், சேற்றிலுள்ள பிள்ளைப்பூச்சி சேற்றைப் பற்றாமலிருப்பதுபோல் சம்சாரத்திலிருந்த போதிலும் அதில் பற்றாமல், மனம் இந்திரியம் முதலான வைகளை வஸயம் செய்து சகல ஜனங்களுக்கும் மித்திரனாய் அதிக தயானத்வமுடையவனாய் கோபதாபங்கள், அசூயை பயம் முதலானவைகளில்லாதவனாய் தனக்கிஷ்டமான பதாத்த்தங்கள் கிடைத்தால் சந்தோஷமும் தனக்கிஷ்ட மில்லாத பதார்த்தங்கள் கிடைத்தால் துக்கமும் இல்லாதத வனாய் தன் பூர்வகர்மானுசாரமாய் ஏதெது பிராப்தமாகின்றதோ (கிடைக்கின்றதோ) அதில் திருப்தியடைந்து தனக்குக் கிடைக்காத

வஸ்துகளுக்குத் துக்கப்படாமல் தூஷணை, பூஷணைகளை சமமாய் நினைத்து சதா பிரம்மைக்யாநு ஸந்தானம் செய்து கொண்டிருப்பவனே ஜீவன்முக்தன்.

"ஸர்வலோக ஸதுதிபாத்ரஹ ஸர்வதேஸ ஸஞ்சாரஸிலஹ
பரமாத்மககநெ பிந்தும் நிஷிப்ய ஸுத்தாத்வைதா
ஜாட்ய ஹைஜாமநஸக யேகநித்ராகண்டா நந்த
பதானுவ்ருதயா ஜீவன்முக்தோப்வதி.""

(மண்டல ப்ராஹமணோபநி)

எல்லா உலகத்தாராலும் துதிக்கப்பட்ட ஞானிய தேச்சையாய் நிர்ப்பயமாய் சர்வதேச சஞ்சார சீலனாய் வெட்ட வெளியாகிய ஸச்சிதானந்த பிரம்மமே நா னென்றும் சதா அதிலேயே புத்தியை லயிக்கச்செய்து தனக்கு அந்நிய மானது மற்றொன்றுமில்லை யென்றும் சர்வம் தானாய் பரிசுத்த அத்வைத பிரம்மசாக்ஷாத் காரத்தை யடைந்து சஹஜமான சுகயோக நிந்திரை யுடையவனாய் சதா அகண்டானந்த விருத்தியுடன் இருப்பவன் எவனோ அவனே ஜீவன்முக்தன்.

"தீர்த்தே ஸவபச க்ருஹேவா தநும் விஹாயயாதி
கைவல்யம் ப்ராணாநவகீர்யயாதி கைவல்யம்." (பைங்கலோப)

காசி ராமேஸ்வரம் முதலாகிய புண்ணிய ஸ்தலங் களிலாகிலும் சண்டாளனுடைய கிரகத்திலாகிலும் எப்பேர்ப்பட்ட இடங்களிலாகிலும் ஞானி பிராரப்தம் நசித்தவுடனே சரீரத்தை விட்டுப் பிரம்மைக்கியத்தை யடையவானாகில் அவன் எப்படிப்பட்ட இடத்தில் பிராரணனை விட்டபோதிலும் தோஷமில்லை. பிரம்ம ஞானிக்கு இது பிராமண அக்கிராரம். இது பறைச்சேரி என்னும் பேதமில்லாமல் சர்வமும் சமமாய்ப் பார்ப்பான்.

"யத்ரயத்ர ம்ருதோ ஜ்ஞார் யேநவாகேந ம்ருத்யுநா
யதா ஸர்வகதம வ்யோமம் தத்ர தத்ரலயம் கதஹ"
"கடாகாஸ மிவாத்மாநம விலயம் வேத்தி தத்ததஹ
ஸ கச்சதி நிராலம்பம் ஜ்ஞாநாலோகம் ஸமந்ததஹ" (பைங்க)

ஞானி பறைச்சேரியிலாகிலும் அல்லது பிராமண அக்கிராரத்திலாகிலும் வியாதியுடையவனாயும் வியாதி இல்லாதவனாயும் அறிவுடையவனாயும் அறிவில்லாத வனாயும் இருந்து எப்படி மரண மடைந்தபோதிலும் அவனுக்குத் தோஷமில்லை. ஜாதிபேதங்களும், குலகோத்திரங்களும் சரீரத்திற்கே யொழிய தனக்கில்லை யென்றும் தானே பிரம்மமென்றும் தெரிந்து ஆனந்திக் கின்றானாதலால் தான் மரணமடைந்தவுடனே சடம் உடைந்தபின் அந்தக் கடத்திலிருந்த ஆகாசம்மசாகாசத்தில் ஏகமாவதுபோல், சர்வ பரிபூரண பரப்பிரம்மத்தில் ஐக்கியமாகின்றான்,

'தக்தஸ்ய தஹனம் நாஸ்தி பக்வஸ்ய பசநம் யதா
ஜ்ஞாநாக்கி தக்ததேஹஸ்ய நச ஸ்ரார்த்தம் நச க்ரியா." (பைங்கலோபநிஷத்)

'பிரம்மமே' தானென்றும் ஞானக்கிநியினால் 'தேஹமே' தானென்னும் பிராந்தி நசிக்கப்படுமாதலால் தன் சரீரத்தை ஞானக்கிநியினால் எரிந்தவன் எனப்படுவான்.

அக்நியில் வெந்து பஸ்பமாய்ப் போன வஸ்துக்களை மறுபடியும் சுடுவதில்லை அதுபோல் ஞானக்கிநியினால் தேஹமே தானென்னும் பிராந்தியை பஸ்பமாய்ச் செய்த ஞானி மரணமடைந்தவுடன் அவன் தூலசரீரத்தை மறுபடியும் சுடலையில் அக்கிநியினால் தகனம் செய்யலாகாது. அவனுக்குத் திலோதகம் (எள் ஜலம் விடுவது) பிண்டப் பிரதானம் (பிண்டம் வைப்பது முதலாகிய கர்மக்கிரியைகள் (திதி) ஸ்ராரத்தம் முதலானவைகளைச் செய்யலாகாது. அவனது சரீரத்தைப் பூமியில் புதைத்து சமாதிகிரியைகள் செய்ய வேண்டும்.

"தத்ரகோ மோஹ கஸ்ஸோகஹ ஏகத்வ மநுபஸ்ய தஹ
தரதி ஸோகமாத்வித் பித்யதே ஹ்ருதயக்ரந்திஹி
ஸ்சித்யந்தேஸர்வஸம்ஸயாஹ க்ஷீயந்தேசாஸ்யகர்மாணி
தஸ்மிந் த்ருஷ்ட்டே பராவரே (கடோபநிஷத்)

சர்வம் தானான பரப்பிரம்மமே தானென்று அறிந்து தன்னைவிட அந்நியமான பதார்த்தம் மற்றொன்று உண்டென எண்ணாமல் சர்வம் தானாகப் பாவித்து தன்னைத்தான் தரிசித்துக்கொண்டிருக்கும் ஞானிக்கு சோகமோகங்களில்லை. அப்படிப்பட்டவன் ஜநந மரணதுக்கமென்னும் சமுத்திரத்தைக் கடந்து நித்தியாநந்தத் தையடைவான். இப்படிப்பட்டவன், சகல சந்தேகங்களையும் சகல கர்மங்களையும் நசிக்கப் பெற்று பிரம்ம சொரூபனாயிருப்பான்.

"ஜீவஹ பஞ்சவிம்ஸகஹ ஸ்வகல்பித சதுர்விம்ஸதி தத்தம
பரித்யஜ்ய ஷட்விம்ஸ பரமாத்மா ஹமிதி நிஸ்யாத்
ஜீவன் முக்தோ பவதி" (மண்டல ப்ராஹ்மணோபநிஷத்)

இருபத்தைந்தாவது தத்வமாய் ஜீவாத்மாவாயிருக்கும் தான் தேகேந்த்ரியாதி இருபத்துநான்கு தத்துவமாகிய பரப்பிரம்மமே தானென்றும் நிச்சயமுடையவனே ஜீவன் முக்தன்.

"ந கர்தா நைவபோக்தாசநசபோஜ்ய தா ததா" (வராஹோப)

நான் கர்த்தனல்லன். எதையும் நான் செய்வதில்லை. நான் போக்கதனல்லன் எதையும் நான் அனுபவிப்பதில்லை. நான் இதரர்களை அனுபவிக்கச் செய்யப்பட்டவனுமல்லன். கேவலம் சாக்ஷிமாத்ரன் அகர்த்தன் அபோக்தன் என்று நிச்சயித்து கர்த்ருத்வ அகங்காரமில்லாதவனாயிருப்பவனே ஞானி. அப்படிப்பட்ட அகங்காரமில்லாத ஞானி எந்த காரியங்களையும் செய்யமாட்டான். ஒருவேளை செய்தபோதிலும் அவனுக்குத் தோஷமில்லை. இப்படிப்பட்ட ஞானிகள் பால (குழந்தை) உன்மத்தன் (பித்தன்) போல் இருப்பார்கள்.

"யஹ ஸமஸ்த்தார்த்த ஜாலேஷு வ்யவஹார்ய அபிஸீ தலஹ
பார்த்தேஷ்விவ பூர்ணாத்மா ஸஜீவத்முக்த உச்யதே"
(வராஹோபநிஷத்)

ஞானி உலகத்தாரைப்போல் சகலமான காரியங்களையும் செய்தபோதிலும் இதரர்களினுடைய காரியங்களில் பிடிப்பில்லாதவனாய் இருந்து, எல்லா கார்யங்களையும் செய்து ஜகத்து செப்பனம்போல் வித்தை என்று எண்ணி ஆசையில்லாதவனாய நிரசையாயிருந்து பரம சாந்தியை வகித்து பிரம்மசொரூபனாய் இருப்பவனே ஜீவன்முக்தன் இதற்குச் சிவப்பிரகாசம் பிரமாணம்.

அகம்புற மென்றிரண்டா லருச்சனை புரியு மீந்தச்
சகந்தணி லிரண்டு மின்றித் தமோமய மாகியெல்லாம்
நிசந்திட மகிழ்ந்து வாளு நீர்மையார் போல ஞானந
திகழ்ந் தகம் யுறமெனாத செம்மையார் நன்மை யாரே
"ஜீவன்முக்த பதம த்யக்த்வாஸ்வ்தேஹேகால ஸாத்கருதே
விஸ த்யதேஹ முக்தத்வம் பவநோ ஸ்பந்ததாமிவ
அஸபத மஸ்பர்ஸ் மரூபமவ்யயம் ததா ரசம்
நித்ய மங்கதவஸ்ச்சயத் அநாத்யரநந்தம் மஹதஹபரம்
த்ருவம் ததேவ ஸிஷ்யதயமலம் நிராமயம்"(பைங்கலோபநிஷத்)

ஞான ஞானாக்நியினால் சஞ்சிதமென்னும் புண்ணிய பாவங்களையும் அதனால் உண்டாகிய சூக்ஷும சரீரத்தையும் காலக்யமப்படி அவைகளை எல்லாம் காய்ந்த இரும்புண்ட நீரைப்போல் பிணமாய்ச் செய்து தேஹமில்லாத விதேக முக்தியையடைவான். அப்பொழுது சப்த ஸ்பரிச ரூபரச கந்தமில்லாதவனாயும் நாமரூபகிரியா சூன்யமானவனாயும் ஸர்வோதக்கிருஷ்ட்டமானவனாயும் இருக்கும் பரப்பிரம்மத்தில் கலந்து ஏகமாய்ப் போவான், இதற்கு கைவல்யம் பிராமணம்.

அரியமெய்ஞ் ஞானத்தீயா லலித்தையா முடனிறாமே
பெரிய நூ லமுங்கா லத்தநற் பிணமாகி விழுமந் நேரம்
உரியசூக் குமசரீர முலையிரும்புண்ட நீர்போல்
துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தி லிறந்துபோமே
"தஸ்மாத் பாவ பாவௌ பரித்யஜ்ய
பரமாத்ம த்யாநேநமுக்தோ பவதி" (மண்டல ப்ராஹ்ம)

பாவாபாவங்கள், அதாவது ஒன்றை நினைப்பது மறுபடியும் மறப்பது இந்த நினைப்பு மறப்புகள் சூன்யமாய் (ஒன்றுமில்லாபடி) சதா தான் தானாய் இருப்பவனே முக்தன்.

'த்வேபதே பந்த மோக்ஷாய நிர்ம மேதி மமேதி ச
மமேதி பத்யதே ஐந்துஹ^நிர்ம மேதி விமுச்யதே.,''
(பைங்கலோபநிஷத்)

இது என்னுடையது, இது எனக்கு வேண்டுமென்பதே 'ம' காரம்; ஞானானந்த ஸர்வ பரிபூரண பரப்பிரம்மமே நானகையால் இந்த தேகாதி பிரபஞ்சம் எதுவும் எனதல்ல என்று நினைப்பதே "மம" காரமில்லாமற்போவது, இந்த இரண்டு எண்ணங்களே பக்த மோக்ஷத்திற்குக் காரணங்கள். ஆதலால்,

'அஹம் பரஹ்மேதி நியதம் மோக்ஷ ஹே துர்மஹாத்தாம்
(பைங்கலோபநிஷத்)

ஆத்ம சொரூபமாகிய நானே பரப்பிரம்மம், அந்த பரப்பிரம்மமே நான் என்னும் ஸோஹம் பிரம்மத்தை இந்நூலில் சொல்லிருப்பதுபோல், ஜபித்து பிம்மைக்யாநு ஸந்தானம் செய்வதே மோக்ஷத்திற்கும் காரணமாயிருக்கின்றது.

## 55. சம்சார வாசனை வாசனாத்திரவியங்கள்

த்ருட்பாவநயா த்யகத பூர்வாபர விசாரணம்
யதா தானம் பதார்த்தஸ்ய வாஸநா ஸா ப்ரகீர்த்திதா,
(முக்திகோபநிஷத்)

இந்த சம்சாரநுபவம் தொன்றுதொட்டு அதாவது பரப்பிரம்மம் எப்பொழுது உண்டாயிற்றோ அப்பொழுதே நம்மையும் மற்றுமுள்ள சகல ஜீவஜந்துக்களையும் சிருஷ்டி செய்துவிட்டார். அதுமுதல் நாளது வரையில், நாசமாய்ப் போகத்தக்க இந்த அநித்தியமான சம்சாரத்தையே நித்தியமானதென்று நம்பி பின் எதுவோ என்னும் விசேஷ மில்லாமல் அந்த அநித்தியமான சம்சாரத்திலேயே மனத்தை செலுத்தி சதாஸம்ஸார விஷயங்களையே நினைத்துக் கொண்டிருப்பதனால் பிராணனை விடும்பொழுது அந்த ஸம்ஸார ஞாபகமே வருகின்றது. இந்த சம்ஸார ஞாகபகமே விதையாயிருந்து மறுபடியும் ஜநநம் எடுக்க வேண்டியதாயிருக்கின்றது. இந்த ஜநநம் வராமல் எப்பொழுது நசித்துவிடுமென்றால்,

"ஜந்மாந்தர ஸதாப்யஸ்தா மித்யா ஸம்சாரவாஸநா
ஸா சிராப்யாஸயோகேந விநா நக்ஷீயதே க்வதித்
(முக்திகோபநிஷத்)

அநேக ஜன்மங்களாய்ப் பழக்கப்பட்ட இந்த மாயா (மா-எதுயா-இல்லையோ, அதுவே மாயை) ஸம்ஸார வாசனையாவது, ஜீவப்பிரம்மைக்ய ஞான யோகாப்பியாச மில்லாமல் நசிக்கமாட்டா. அதாவது யுத்தத்திற்குப் புருஷனது பலமும் ஆயுதமும் வேண்டும். பலமில்லாமல் எவ்வளவு கூர்மையுடைய ஆயுதமாயிருந்தபோதிலும் புருஷன் கொல்லமாட்டான். அதுபோல் ஞானம் அடைய யோகம், முக்கிய

பலமாயிருக்கின்றது. யோகமில்லாமல் ஞானம் சித்திக்கமாட்டாது. ஆனால் ஜடபரதர் முதலானவர்கள் யோகமில்லாமலே ஞானசித்தி அடையவில்லையா என்கிற கேள்வியுண்டாகும். அதற்குக் காரணம் சொல்லுகின்றோம். அவர்கள் முன் ஜன்மங்களிலேயே யோகசித்தியை அடைந்து கர்மசேஷமிருந்த படியால் மறு ஜநநமெடுத்து ஞானிகளானார்கள் என்று அறிவீர்களாக. இஃதன்றியும் உலகத்தில் மூன்று வாசனைகள் உண்டு அவையாவன.

லோகவாஸநயா ஜந்தோ ஸாஸ்த்ரவாஸநயாபிச
தேஹவாஸநயா ஜ்ஞானம் யதாவந் நைவஜாயதே. (முக்தி)

லோகவாசனை, சாஸ்திரவாசனை, தேகவாசனை இம்மூன்று வாசனைகளும் ஆத்மஞானத்தை உண்டாக்கமாட்டா.

1. லோகவாசனை என்றால் உலகத்தில்தான் செய்யப்பட்ட சத்விஷயங்களினால் தன்னை எல்லோரும் புகழ வேண்டுமென்று எண்ணமுடையதே லோகவாசனை.

2. சாஸ்திரவாசனை என்றால், தாமே சகல சாஸ்திரங்களையும் கற்ற பண்டிதர்களென்று கர்வித்து சிவ விஷ்ணுக்களுக்குப் பேதத்தை யுண்டாக்கி சிவனே பெரியவன், சிவமதமே சிரேஷ்டமான மதமென்று சிவமதஸ்தர்களும், விஷ்ணுவே பெரியவன், வைஷ்ணவ மதமே சிரேஷ்டமான மதமென்று வைஷ்ணவ மதஸ்தர்களும், ஒருவரோடொருவர் வாதாடிப் போராடிக் கொண்டிருப்பதே சாஸ்த்திரவாசனை இந்த சிவவிஷ்ணுக்களைக்குறித்து உபநிஷத்துக்கள் என்ன முறையிடுகிறதென்றால்,

ராமஏவ பரம்ப்ரஹ்ம ஜீவ ஏவ ஸ்வயம் ஸாக்ஷாத்தும் பரஹ்மயோ ஹவை ந்ருஸிமயோ தவோ பகவாந் புஸ்ய ப்ரஹ்மயஸ்ச்சவிஷ்ணு யஸ்ச்சமஹேஸ்வரஹ 'த்வமபஜ்ஞ ஷ்த்வம்

வஷட்கார ஸ்தவம் இந்த்ரஸ்த்வம் ருத்ர ஸ்த்வம் விஷ்ணு ஸ்த்வம் பிரஹ்மஸ்த்வம் ப்ராஜா பதிஹி ஸிவாயவிஷ்ணுரூபாய் ஸ்வரூபாய விஷ்ணவே ஸ்வஸ்ச்ய ஹ்ருதயம்விஷ்ணு ர்விஷ்ணோஸ்ச்சஹ்ருதயம்ஸிவஹ."

என்னும் ராம ரஹஸயோபநிஷத் மஹோபநிஷத் ந்ருஸிம்மதாபி ந்யுபநிஷத் அதர்வசிகோபநிஷத் தைத்திரீயோபநிஷத் ஸ்கந்தோபநிஷத்துக்களின் வாக்கியரீதியாய் விஷ்ணுவாகிய நானும் பரமசிவனும் நாங்களிருவரும் ஏக (ஒரே) பரப்பிரம்ம சொரூபம், விஷ்ணுவாகிய நானே பரமசிவன், பரமசிவனே நான், எங்களிருவருக்கும் எவ்வித பேதங்களுமில்லை, மேலும் சிவனுடைய இருதயமே விஷ்ணு; விஷ்ணுவினுடைய இருதயமே சிவன், இவர்களிருவருக்கும் எந்த பேதமும் இல்லை. மேலும் ராமாவென்று உலகத்தார் கொண்டாடுகின்றார் களல்லவா? அந்த ராமனைக் குறித்து உபநிஷத் வாக்கியம் என்னவென்றால்,

"ராமதீதி ராமஹ" நான் ஞானிகளுடைய இருதயத்தில் சேர்ந்திருப்பதனால் எனக்கு ராமனென்று பெயர் உண்டாயிற்று, இதை விவரித்துச் சொல்லுகின்றோம் கேள்.

"அத்யோ ரா தத் பதார்த்தஸயாத் ம காரஸ்த்வம் பதார்த்த வாந், தயோ ஸம்யோஜந மஸீதயர்த்தே தத்வ விதோவிதுஹு."

என்னும் ராம ரஹஸ்யோ பநிஷத் வாக்கியரீதியாய் "ரா" என்னும் அக்ஷரம் தத் பத லக்ஷியார்த்தமாகிய நிராகார பரப்பிரம்மமென்றும் ம என்னும் அக்ஷரம் த்வம் பத லக்ஷியார்த்தமாகிய ஜீவாத்மா என்றும் அர்த்தமாகின்றது. ஆகையால், அப்படிப்பட்ட நிராகார பரப்பிரம்மமே ஒவ்வொரு ஜீவஜந்துக்களிலும் ஸாக்ஷிமாத்ரனாய் ஆத்ம சொரூபமாயிருக் கின்றது. ஆதலால், பிரம்மத்திற்கும் ஆத்மாவிற்கும் பேதமில்லை. தேகத்ரய (தூலசூக்ஷ்ம காரணமென்னும் மூன்று சரீரங்களுக்கும்)

சாக்ஷியாயிருக்கும் ஆத்மாவே ராமன் என்று சொல்லப்படும். இவ்வித ஆத்ம ராமனைக்குறித்து கர்ம காண்டம் என்ன சொல்லுகிற தென்றால், ராமன் பிறந்து சீதையை மணம் புரிந்து இராவணனைக் கொன்றதாக சொல்லுகிறது. உபநிஷத் வாக்கியரீதியாய் ஆத்ம, ராமனே ராமன், மனமே சீதை, காம, குரோத, லோப மோக, மத, மச்சர, டம்ப, தர்ப்ப, ஆர்ஷை, அசூயை என்னும் இந்த பத்து குணங்களே பத்துத்தலை ராவணனென்று சொல்லப்படுமேயொழிய இதைவிட வேறு பத்துதலை இராவணன் இல்லவேயில்லை. இந்த காமக் குரோதாதி பத்து குணங்களையும் ஜயித்து மனதென்னும் சீதையை ஆத்ம ராமனில் ஐக்கியம் செய்வதே ராமாயணத்தின் அந்தரார்த்தம். கர்ம காண்டத்தில் ராமனைத் தியானஞ் செய்யும்படி ஏன் ஏற்படுத்தினார் களென்றால் மனிதர்களுக்கு க்ஷணத்திற்குள் அநேக எண்ணங்கள் உண்டாகின்றன. அப்படி அநேக எண்ணங்கள் உண்டாகாவண்ணம் ராமனையே துதிசெய்து கொண்டிருந் தால் மனம் ஓர் எண்ணத்தில் நிற்கும், பிறகு குருமுகமாய் தெரிந்துக்கொண்டு அந்த ஓர் எண்ணத்தையும் நாசம் செய்யப்படுமென்று ராமனை ஜபம் செய்யும்படி கர்மகாண்டத்தில் ஏற்படுத்தினார்கள், ஆதலால் சகல எண்ணங்களையும் நாசம் செய்து மனதை ஒரே நிலையாய் நிறுத்தி ஈஸ்வரனை தியானம் செய்வதற்காகவே இந்நூல் எழுதப்பட்டது.

"ரமந்தே யோகி நோநந்தே நித்யாநந்தே சிதாத்மநி
இதி ராமபதோ நாஸேள பரப்ரஹ்மாபிதீயதே
சிந்மயஸ்யா த்விதீயஷ்ய நிஷிகலஸ்யா சரீரிணஹ."

என்னும் ராமாதாபி ந்யுபநிஷத் வாக்கியரீதியாய், என் நிஜசொருபதான கேவல ஸத்யஞாநாநந்த நித்ய நிர்மல நிராகார பரிபூரண பரப்பிரம்ம சொருபத்தைப் பிரம்மஞானிகள் தமது ஆத்மசொருபமாய் அறிந்து என் நிஜசொருபமாகிய ஆத்மாவில்

சதாரமித்திருக்கின்றார்கள். என்றால் சேர்ந்திருக்கின்றார்கள். ஆதலால், எனக்கு ராமனென்று பெயருண்டாயிற்று. வேதாந்தத்தை ஆழ்ந்து விசாரித்து என் நிஜரூபத்தை தரிசித்தவர்களுக்கே மோக்ஷம் உண்டாகும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. பரப் பிரம்மமே சிவ விஷ்ணுக்களின் ரூபத்தையடையும் அதாவது, பரப்பிரம்மம் ஆகாசரூபமுடையது. காற்றுடன் கலந்த பரிமளம் எங்கும் வியாபித்திருப்பதுபோல், பரப்பிரம்மமே சர்வஞ்ஞனென்று சொல்லப்படும்.

காட்டிடுங் கரணமொன்று மில்லையேற் காணொ ணாதாம்
நாட்டிய விவற்றான் ஞான நனுகவு மொண்ணா முன்னமாட்டிய
தவத்தி னாலே யிறையரு ளுவாய் வந்து
கூட்டிடு மிவற்றை நீக்குக் குறைகழல் குறுகு மாறே.

இப்படிப்பட்ட பரப்பிரம்மத்தை ஒருவன் ஈஸ்வரனாய் நினைத்து, அநேக வருஷங்கள் சிரத்தை பக்தி விசுவாசத்துடன் தவம் செய்துவந்தால், அப்படிப் பட்டவனுக்கு அந்த பரப்பிரம்மம் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்னும் பஞ்சபூதங்களினால், சூலம் டமரும், (உடுக்கை) ரிஷப வாகனம், வளமேனி (வெண்மை தேகம்) முதலியன தரித்து ஈஸ்வரரூபமாய் வந்து அவனுக்கு தரிசனம் தந்து மறுபடியும் உடனே பிருதுவி பிருவிலும், அப்பு அப்புவிலும், தேயு தேயுவிலும், வாயு வாயுவிலும், ஆகாசம் ஆகாசத்திலும், அந்தந்தப் பூதங்களை அந்தந்த பூதங்களுடன் ஐக்கியம் செய்து தான் முன்போல் பரப்பிரம்ம சொரூபமாகவே இருக்கும்.

மற்றொருவன் விஷ்ணுவாய் நினைத்து தவம் செய்து வந்தால் அப்படிப்பட்டவனுக்கு அந்த பரப்பிரம்மம், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்னும் பஞ்ச பூதங்களினால் தான் சகுண ரூபமாய், சங்கி சக்கரம் கதை கரியதிருமேனி முதலானவைகளுடன் விஷ்ணுமூர்த்தியாய் வந்து தரிசனம் தந்து, மறுபடியும் முன்சொல்லியதுபோல் பஞ்சபூதங்களையும் அந்தப்

பூதங்களில் ஐக்கியம் செய்து யதா ரீதியாய்த்தான் பரப்பிரம்ம சொரூபமாக இருக்கும்.

மற்றொருவன் அல்லாவாய் நினைத்து தவம் செய்தால் அப்படிப்பட்டவனுக்கு அந்த பரப்பிரம்மம், முன்சொல்லிய பஞ்சபூதங்களினால் அல்லா ரூபத்தை தரித்து அவனுக்குத் தரிசனம் தந்து மறுபடியும் பஞ்சபூதங்களையும் பஞ்சபூங்களுடன் ஐக்கியம் செய்து தான் முன்போல் பரப்பிரம்ம சொரூபமாகவே இருக்கும்.

மற்றொருவன் ஏக நாதராய் எண்ணித் தவம் செய்தால், அப்படிப்பட்டவனுக்கு அந்த பரப்பிரம்மம் பஞ்ச பூதங்களினால் ஏக ரூபத்தைத் தரித்து, அவனுக்குத் தரிசனம் தந்து மறுபடியும் பஞ்ச பூதங்களையும் பஞ்ச பூதங்களுடன் ஐக்கியம் செய்து தான் முன்போல் பரப்பிரம்ம சொரூபமாகவேயிருக்கும். ஆதலால், யத் பாவம் தத் பவதி என்பதுபோல், ஈஸ்வரனை யார் யார் எந்தெந்த ரூபமாய் வந்து நினைக்கின்றார்களோ அவரவர்களுக்கு அந்தந்த ரூபமாய் வந்து தரிசனம் கொடுக்கின்றார். இதற்கு நிஜானந்த போதம் பிரமாணம்

மோமடா வெளியோடே வெளிதான் சேரும்
புதுமையடா வாய்வோடே வாய்வு சேரும்
ஊமடா தீயோடே தீதான் சேரும்
யுத்தமனே யப்புடனே யப்பு சேரும்
ஆமடா மண்ணுடனே மண்தான் சேரும்
அவரவர்களின் த்தோடேயவரவர்கள் சேர்ந்திடுவாரே

இதற்குத் திருஷ்டாந்தம் நாலாயிரப்பிரபந்தம் நம்மாழ்வார் பாடலும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந சம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம் 4-சு 11- பிரமாணம் என்னவென்றால்,

நாழா லமர்முயன்ற வல்லறக்க னின்னுயிரை
வாழா வகைவலிதல் நின்வலியே லி ஆழாத
பாரும் நீ வானும் நீ காலும் நீ தீயும் நீ
நீரும் நீ யான் நின்ற நீ
நீராய் நிலனாய்த் தீயாய்க காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்க் ளிரண்டாய்ச் சிவனாயயனானாய்
கூரா ராழிவெண் சங்கேந்திக் கொடியேனபால்
வாராராய் ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே
மாயா வாமநனே மதுசூதா நீ யருளாய்
தீயாய் நீராய் நிலனாய் விசுபோய்க் காலாய்
தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்
நீயாய் நீநின்றவா றிவையென்ன நியாயங்களே
யேயதா மாம் ப்ரபத்யந்தே தாம் ஸ்ததைவ பஜாமயஹம்
மம வர்த்மா நுவர்தந்தே மநிஷ்யாஹ பார்த்த ஸர்வஸஹ

கிருஷ்ணன் : ஹே பார்த்தா! நீ சொல்லியதுபோல் இந்த உலகத்தில் நிஜசொரூபம் அறியாமல் என் அவதார சொரூபமே என் நிஜசொரூபமென்றெண்ணி பூஜை செய்யப்பட்டவர்கள் அனேகர் இருக்கின்றார்கள். அப்படிப்பட்டவர்களையும் நான் வியர்த்தம் செய்யமாட்டேன். அப்படிப்பட்டவர்கள், நான் பரிபூர்ண பரப்பிரம்மமென்னும் ஞானத்தை அடையாமல் மோக்ஷப் பிராபதியை பெறாவிடினும், அவர்களில் எவரெவர்கள் எந்தெந்த தேவதாரூபமாய் நினைத்துப் பூஜிக்கின்றார்களோ அவரவர்களுக்கு நான் அந்தந்த தேவதாரூபத்துடன் சென்று அந்தந்தப் பலன்களை நானே கொடுத்து வருகிறேன். அதாவது இந்த உலகத்திலுள்ள ஜனங்களெல்லோரும் என்னை அநேக அனேக ரூபங்களாய் நினைத்து பூஜிக்கின்றவர் களாயிருக்கின்றார்கள் நான் ஆகாச வடிவமாய் எங்கும் நிறைந்திருக்கும் பரப்பிரம்ம மென்று தெரிந்து கொள்ள மாட்டார்கள். நான் நிராகார பரிபூரண பரப்பிரம்மமென்று புருஷர்கள் அறியாமல், ராமனேதெய்வமென்று ராமோபாசனை செய்தாலும், கிருஷ்ணனே தெய்வமென்று கிருஷ்ணோபாசனை

செய்தாலும், நரஸிம்மமே தெய்வமென்று நரஸிம்மோபாசனை செய்தாலும் ஈஸ்வரனே தெய்வமென்று ஈஸ்வரோபாசனை செய்தாலும், என்னையே ஆராதித்தவர் களாகின்றார்கள். இந்திராதி அஷ்டதிக்குப் பாலர்களையும், நவக்கிரகங்களையும் காளி முதலாகிய சக்திகளையும் மற்றுமுள்ள சில பேய்ப் பிசாசாதி தேவதைகளையும் ஆராதிக்கின்றார்கள், அந்தந்த தேவதைகளின் ரூபங்கள் என்னைவிட வேறாயிருந்த போதிலும் என்னையே ஆராதித்தவர்களாகின்றார்கள். இதற்கு திருமங்கையாழ்வார் திருவாய்மொழி பிரமாணம்.

பாருருவில் நீரெரிகால் விசும்பு மாகிப்
  பல்வேறு சமயமுமாமப் பரந்து நின்ற

எருருவில் மூவருமே யென்ன நின்ற
  இமையவர்தந் திருவுருவே றெண்ணும்போது

ஒருவுருவம் பொன்னுருவமென்று செந்தீ
  ஒன்றுமா கடலுருவ வொத்து நின்ற

மூவுருவுங் கண்டபேர் தொன்றாம் சோதி
  முகுலுருவ மெம்மடிக னாருவந் தானே.

ஒடியோடிப் பலபிறப்பும் பிறந்து மற்றொர் தெய்வம் பாடியாடிப் பணிந்துபல் படிகால் வழியேறிக்கண்டீர் கூடிவானவ ரேத்தநின்ற திருக்குருகூ ரதனும் ஆடுபுட் கொடியாதி மூர்த்திக் கடிமை புகுவதுற்றே (நம்மாழ்வார்)

"உடம்புருவில் மூன்றொன்றாய் மூர்த்திவேறா
யலகுய்ய நின்றானை அன்று பேய்ச்சி
விடம்பருகு வித்நகனைக் கன்றுமேய்த்து"
"இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சமணரும் சாக்கியரும்
வலிந்து வாதுசெய்வீர்களும் மற்று நுந்தெய்வமு மாகி நின்றான்
மலிந்து செந்நெல் கவரிவீசும் திருக்குரு கூரதனுள்
பொலிந்து நின்ற பிரான் கண்டீரொன்றும் பொய்யில்லை
போற்று மினே"



31 A

"தேருங்கால் தேவ னொருவனே யென்று ரைப்பார் ஆரு மறியா ரவன் பெருமை ஒரும் பொருள் முடிவு மித்தனையே யெத்தவம் செய்தார்க்கும் அருள் முடிவதாழியான் பால்" என்னும் திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் திருமழிசை யாழ்வாராதிகள் சொல்லும் வாக்கியரீதியாய் இப்பிரபஞ்சத்தில் பிபீலிகாதி பிரமபரீயந்தமாயுள்ள சமஸ்த சராசரங்கள் என் சொரூபமே ஸர்வதேவ நமஸ்காரஹ கெஸ்வம் ப்ரதிகச்சதி என்பதுபோல் சர்வ விக்கிரகங்களின் மூலமாய்ச் செய்யும் ஆராதனைகள் யாவும் என்னையே சேருகின்றன. ஆதலால் அவரவர்கள் உபாசிக்கும் தேவதா ரூபங்கள் மூலமாய் அவரவர்கள் கோரிய பலன்களை நானே கொடுத்து வருகிறேன். இந்த உலகத்தில் கேவல மூடர்களும் நாஸ்திகர்களும் தவிர பக்தியுடன் உபாசனை செய்யும் எம்மதஸ்கர்களும் தேவதைகளும் என்னையே ஆராதித்தவர் களாகின்றார்கள். ஆதலால் அவரவர்களின் மனோ நிச்சயத்திற்கும், பக்திக்கும் ஆராதனைக்கும் தக்கவாறு பலன்களை நானே கொடுத்து வருகிறேன்.

சுரு|| தஸ்மாத் ஸாகாரமநித்யம் நித்யம் நிராகராமிதி

என்னும் மயா நாராயணோபநிஷங் வாக்கியரீதியாய் ரூபநாமமுடைய என் ஸாகார கண்களுக்குக் காணப்படும் விக்கிரக ஸ்வரூபம் அநித்தியமானது. என்றால் அழிந்து போகத்தக்கது ரூபநாமக்கிரியைகள் (ரூபமும் பெயரும்) இல்லாத என் நிராகார (வெட்டவெளி) சொரூபம், நித்தியமானதும் சத்தியமானது மாயிருக்கும், இதுவே என யதார்த்தத சொரூபம்.

சுரு|| "யத்ர நரந்யத் பஸ்யதி நாந்யத் ஸருணோதி
நாந்யத் தவிஜாநாதி ஸபூமா. யோவை பூமா ததம்ருதம்."
"அத யத்ராந்யத் பஸ்யத்யந்ய ஸருணோதி
அநய த்விஜாநாதி தததல்பம்?"
"அத யதலபம் தந்மர்த்யம்
ஸம்பூர்ண மந்யத ந்யூத மந்யத் ஸ்தாநம்."

3/B

என்னும் சாந்தோக்யோபநிஷத் ப்ருஹதநரண் யோப நிஷத் வாக்கியரீதியாய், என் நிஜசொரூபமாகிய நிராகார (வெட்டவெளி) சொரூபம், அகண்டபரிபூரணமென்றும், நாசமில்லாததென்றும் சொல்லப்படும். என் ஸாகார (விக்கிரக) சொரூபம், அல்பமானதும் கண்டமானதும் மித்தியா சொரூபமானதும் அதாவது, நசித்துப் போகத் தக்கதுமாய் இருக்கும்.

சுரு|| "யோவை பூமா தத்ஸுகம் நால்பே ஸுகமஸ்தி ,
பூமைவ ஸுகம்பூமாத்வேவ விஜ்ஞானிதவ்ய இதி"

என்னும் சாந்தோக்யோநிஷத் வாக்கியரீதியாய் எது அகண்ட பரிபூரணமர் நிராகார சொரூபமாய் இருக்கின்றதோ, அதுவே சுக சொரூபமானது, அல்ப (விக்கிரக ரூபத்தில்) அப்படிப்பட்ட சுகமிராது; அகண்ட பரிபூரணமாகிய நிராகாரமே (வெட்டவெளியே) சுக சொரூபமானது. அப்படிப்பட்ட நிராகார பரப்பிரம்மத்தை மனிதர்கள் தெரிந்து கொள்ளமாட்டார்கள். ஆதலால்,

சுரு|| "யஸ்ய வாங்மநாஸி ஸுத்தே ஸம்ய குப்தே ச ஸர்வதா
ஸ வை ஸர்வமவாப்நோதி வேதாந்தோப கதம்பம்."

என்னும் நாரத பரிவிராஜபோபநிஷத் வாக்கியரீதியாய் எவன் மனம் சஞ்சலமில்லாமல் (அசையாமல்) வாக்கு (வார்த்தை) மௌனமாய் இந்திரிய வியாபாரங்களில்லாமல் பரிசுத்த மாயிருப்பானோ அவன் வேதாந்தத்தில் சொல்லப் பட்டிருக்கும் ஆத்மானுபவத்தை அடைவான் என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லியிருக் கின்றார். இன்னும் விரிவாய்த் தெரிந்துகொள்ள வேண்டுமென்று விருப்பமுள்ளோர் ஸ்ரீ கிருஷ்ணாஜுந சம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதையில் விரிவாய்க் காணலாம்.

இப்படிப்பட்ட பரப்பிரம்மத்தில் உள்ளுரை தெரிந்து கொள்ளாமல் சிவமதஸ்தர்களும் விஷ்ணுமதஸ்தர்களும் ஒருவரோடொருவர் வாதாடி சிவனையும் விஷ்ணுவையும்

தூக்ஷிக்கின்றார்கள். இப்படிப்பட்டவர்கள் ரௌரவாதி நரகங்களையே அனுபவிப்பார்கள். இவர்களை உபநிஷத்துக்கள் பாராத மூட பண்டிதர்களென்றே சொல்லலாம், இதற்கு உபதேசகாண்டம் பிரமாணம்.

> ஈதெலா மிப்பரி செடுத்துக் காட்டின
> வேதமப் பொருளெலாம் விரிந்த வாற்றினைம்
> பேதுறப பொலமையென் றழியப் பேசினார்
> தீதுறு நரகெலாஞ் சென்று வீழ்வாரே.

3 தேகவாசனை என்றால் தேகம் கெடாமலும் தலை மயிர் நரையாமலும், கிழத்தனம் வியாதிகள் மரணம் முதலானவைகள் வராமலிருக்க மூலிகைகள் சித்தௌஷதங்கள் (சித்தர்களால் செய்யப்பட்ட ஒளஷதங்கள்) முதலானவைகளைப் புசித்து காயசித்தி அடைய வேண்டுமென்னும் தேகாபிமான எண்ணமே தேக வாசனை என்று சொல்லப்படும். இத்தேகாபிமானம் எதுவரையில் உண்டோ அதுவரையில் ஆத்மஞானம் உண்டாகமாட்டாது. சதா ஆத்மதியானம் செய்துக் கொண்டு ஆத்மானுபவ நிஷ்டையென்னும் நிர்விகல்ப சமாதி நிஷ்டையை அப்பியாஸம் செய்யும் பெரியோர்களுக்கு மாத்திரம் இந்த வாசனாத்திரவியங்கள் நசிக்குமேயொழிய, மற்றவர்களுக்கு நசிக்கமாட்டா. இந்த வாசனைகள் நசிக்கும் வரையில் அனேக யோனிகளிற் பிறந்து பிறந்து உழன்று கொண்டே இருப்பார்கள். இதற்கு உபநிஷத்துப் பிரமாணம்.

> நாநாயோநி ஸதங்கத்வா ஸேதேசௌ வாஸநாவஸாத்
> (த்ரிஸிகி ப்ராஹமணோபநிஷத்)

இந்த வாசனாத்திரவியங்களினாலேயே (முன்சொன்ன மூன்றுவித வாசனைகளினாலேயே) நானாவித யோநிகளில் போய்ப் பிறக்கின்றார்கள். ஆதலால் அப்படிப்பட்ட யோநி களில் போய்ப் பிறவாமல் தப்பித்துக் கொள்வதற்கு முக்தி கோபநிஷத் பிரமாணம் என்னவென்றால்

'வாஸ்நாஸ்த்வம் பரித்யஜ்ய அந்தஸ்ஸாந்த ஸமஸ்கேஹோரபம சிந்மாத்ரவாஸநஹ தாமப்யதஹ பரித்யஜ்ய மனோபுத்தி ஸமாநதாம் ஸேஷத்திர ஸ்மாதாநோ மயித்வம் புருமாருமே. அஸப் தமஸமர்ஸ மியாதி (முந்திகோபநிஷத்)

முன்சொல்லிய மூன்றுவித வாசனைகளையும் மோக்ஷத்தின் இச்சையையும்விட்டு ஜகத்தெல்லாம் அநிந்தியமென்றும், பரப்பிரம்மமே ஸத்யமென்றும் பிரம்மத்தையே தியானம் செய்ய வேண்டும்.

பிறகு அந்த தியானத்தையும்விட்டு மனோபுத்திகள் இரண்டையும் சஞ்சலமில்லா (அசையா)மல் ஸ்திரமாய் நிறுத்தி,

"ஹ்ருதயம் நிர்மலம் க்ருத்வா சிந்தயித் த்வாபயநாமயம் அஹமேவபரம் ஸர்வமிதி பஸ்யேத்பரம ஸுகம்."

(பைங்க)

இருதயத்தை எவ்வித சங்கல்பமு (எண்ணமு) மில்லாமல் நிர்மலமாய் செய்துக்கொண்டு, அதாவது பிரம்மசிருஷ்ட்டி நாள் முதல் நாளதுவரையில் நாம் அனேக கோடானு கோடி ஜன்மங்களை எடுத்துக் கொண்டே வருகின்றோம். இனியும் எத்தனையோ கோடி ஜன்மங்களையும் எடுக்கப்போகின்றோம். இதற்குத் திருஷ்டாந்தம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுந ஸம்வாதரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை அத்யாயம் - 2, சுலோகம் - 12.

"நத்வேவாஹம் ஜாதுநாஸம் நத்வம் நேமே ஜநாதிபாஹ நசைவ நபவிஷ்யாம ஸர்வே வய மதஹபரம்."

ஓ அர்ஜுநா! நான் இவ்வளவு தூரம் சொல்லியும் விஷயம் தெரியாமலேயிருக்கின்றாய். நீயாகிலும் நானாகிலும் நமது எதிரிலிருக்கும் இந்த ராஜாகளாகிலும், மற்றும் யாராயிருந்தபோதிலும் ஒருபோதிருந்து மற்றொரு போதில்லாமலும் இருப்பதுண்டோ? நீ இது வரையில் எத்தனையோ ஜன்மங்களெடுத்து இப்பொழுது இந்த ஜன்மம்

உடுத்திருக்கின்றாயல்லவா? அப்படியிருக்க நீ துக்கப்படுவது எதைப்பற்றி? தேகத்தைப்பற்றியா? அல்லது ஆத்மாவைப் பற்றியா? தேகம் போய்விடுகிறதே என்று வியசனமுண்டானால் ஒரு தேகம் போகவும் மற்றொரு தேகம் வரவுமாகவே இருக்கிறபடியால் ஜடமாகிய தேகம் ஒருநாள் அழிவது நிச்சயம் நிச்சயமாய் அழியும் சுபாவமுடைய தேகத்தைக் குறித்து நீ வியசனப்படுவதனால், அது அழியாமலிருக்குமோ? ஜடமாகிய தேகத்தைக் குறித்து நீ வியசனப்பட வேண்டியதேன்? ஆத்மா போய்விடுகிறதென்பதைப்பற்றி வியசனப்படுவதினால், பின் சொல்லப்போகும் பல சுலோகங்களினால் பரமாத்மா எப்படி நித்யனோ அதுபோல் ஜீவனும் நித்தியனென்று சொல்லப்பட்டிருப்பதனால் எப்பொழுதும் அழிவில்லாத சுபாவமுடைய ஆத்மாவைக்குறித்து நீ வியசனப்படவேண்டிய காரணமேயில்லை. தேகத்தை அடைவதும் விடுவதும் ஜீவனுடைய கார்யமேயொழிய வேறல்ல. தேகமும் ஜீவனும் ஒன்றாயிருந்தால் தேகம் போனால் ஜீவனும் போய்விடவேண்டியதல்லவா? ஒரு தேகத்தை விடுவதும் மற்றொரு தேகத்தை அடைவதும் ஜீவனுடைய ஆத்மாவல்ல. ஆகையால் நீ இதற்காக துக்கப்படவேண்டாம். இதனால் என்ன ஏற்படுகிறதென்றால் பகவானைப்போல் ஜீவனாகிய நீயும் அநாதி நித்தியனென்று ஏற்படுகின்றது. இத்ததேகத்தைவிட்டு இன்னும் எத்தனையோ ஜன்மங்கள் எடுக்க வேண்டியவனாயிருக் கின்றாயல்லவா? இப்படிப்பட்ட விஷயத்தில் நீ இதுவரையில் இல்லாமலிருந்தாயென்றும் எண்ணலாமா?

அர்ஜுனன் : ஆம் வாஸ்தவமே. அப்படி எண்ணலாகாது. நான் முன்னும் இருந்தேன். இப்பொழுதும் இத்தேகத்துடன் இருக்கின்றேன். இனிமேலும் ஏதோ ஒரு தேகத்தை அடைய வேண்டியவனாயிருக்கின்றேன். சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் இம்மூன்று காலங்களிலும் நான் இல்லாமல் இருப்பவனல்ல. இந்த ஜன்மத்தில் எனக்கு அர்ஜுநன் என்று

பெயர் வைத்தார்கள். இதற்குமுன் ஜன்மங்களில் எந்தெந்த ஜாதியில் பிறந்தேனோ என்னென்ன பெயர்களை வைத்தார்களோ தெரியவராது. இனி எடுக்கப்போகும் ஜன்மங்களில் எந்தெந்த ஜாதியில் பிறந்து என்னென்ன பெயர்களை அடைவேனோ தெரியவராது.

கிருஷ்ணன் : அதுபோல், நாமும், நமது எதிரிலிருக்கும் இந்த ராஜர்களும் மற்றும் யாவத்திரரளும் மூன்று காலங்களிலும் இருக்கப்பட்டவர்களேயாம். இவர்களும் உன்னைப்போல் முன்ஜன்மங்களில் எந்தெந்த ஜாதியிலோ பிறந்து எத்தனையோ பெயர்களை அடைந்திருக்கின்றார்கள். இந்த யுகத்தில் இவர்களெல்லோரும் மரணமடைந்து வேறு சரீரமெடுத்து இனி வேறு பெயரை அடையப் போகின்றார்கள். அப்படியிருக்க பீஷ்மாதிகள் இல்லாமற் போகின்றார்களே என்னும் துக்கம் உனக்கேன் உண்டாயிற்று.

அர்ஜுநன் : ஐயா கிருஷ்ணமூர்த்தியே! என் அபிப்பிராயத்தை நீர் சரியாய் கிரகிக்கவில்லைபோல் காணப்படுகிறது. பீஷ்மாதிகள் பூர்த்தியாய் நாசமாய்ப் போகின்றார்கள் என்றல்ல, நான் துக்கப்படுவது, அவர்கள் இந்த ஜன்மத்தில் எந்த தேகத்துடன் எனக்குப் பாட்டனாயும் குருவாயும் ஏற்பட்டு என்னிடத்தில் எவ்வளவோ பிரியமுடையவர்களாய் என் க்ஷேமத்தையே விசாரித்துக் கொண்டிருந்த மஹான்களாதலால் அவர்கள் அப்படிப்பட்ட அந்த தேகத்தைவிட்டு கிருதார்த்தர்களான போதிலும் (மேன்மையை அடைந்த போதிலும்) அப்படிப்பட்டவர்களின் சாங்கத்தியமும் (சேர்க்கையும்) ஆதரணையும் எனக்குத் தப்பிவிடுகின்றதல்லவா என்று துக்கப்படுகின்றேன்.

கிருஷ்ணன் : ஓஹோ! அதுவா உன் துக்கத்திற்குக் காரணம்? அப்படி எண்ணுவதும் சரியல்ல. அத்தியாயம் -2 , ச்லோகம் 13.

தேஹிநோ ஸ்மித் யதாதேஹே கௌமாரம் யௌவநம்
ஜாரததா தேஹேந்தர ப்ராரப்தி ர்தீரஸ்த்ர ந முஹியதி.

எப்படியென்றால், சொல்லுகின்றேன் கேள். இந்த பிரபஞ்சத்தில் மனிதர்கள் ஜன்மித்தவுடன் யாதொன்றும் தெரியாத சிசுவாயிருந்து பிறகு சில நாட்களில் பால்யதசை அடைந்து, ஆட்டம் பாட்டங்களில் காலங்கழித்து சிலநாள் சென்றபிறகு யௌவன தசையடைந்து (வந்து வந்து) சந்தன புஷ்ப தாம்பூலாதிகளுடன் ஸ்திரீ போகம் அனுபவித்துக் காலங்கழித்துச் சிலநாள் சென்ற பிறகு கிழத்தனமுண்டாய் கண்கள் தேகசர்மம் முதலாகிய இந்திரியங்களின் பலங்குறைந்து நரையுண்டாய் கடைசியில் ஓர் ஊன்றுகோலாகிலும் இல்லாமல் நடக்க சக்தியற்றவர்களாய், மேல் தோல் சுருங்கி தலை நடுக்கலிட்டு கூன் வளைந்து பிறகு மரணமடைகின்றார்கள். அப்படி யாவதற்குக் காரணமென்ன? ஆத்மா எப்பொழுதும் ஒரே விதமாய் இருக்கப்பட்டதல்லவா? அப்படியிருக்க முதல் பிறந்தபொழுது எப்படியிருந்ததோ அப்படியேயிராமல் தேகம் இத்தனை விதங்களாய் மாறவேண்டியதேன்?

தேகம் இத்தனை விதங்களாய் மாறுபடுவதைக்காட்ட படத்தில் குழந்தை படுத்திருக்கிறது. இக்குழந்தை பத்து வயது வந்தவுடன் யாதொரு வியசனமும் இல்லாமல் விளையாடுகிறான்.

வயது இருபது வந்தவுடன், அவன் யௌவமான ஸ்திரீ மேல் மோகத்தை உண்டாகும். அந்த மோகத்தைத் தீர்த்துக்கொள்ள விவாகம் செய்து அவளைக் கட்டியணைத்து முத்தமிட்டு மோகத்தை தீர்த்துக்க் கொள்ளுகிறான், முப்பது வயதிற்குள் குழந்தைகளைப் பெற்ற பிறகு மனைவியின்மேல் முன்யிருந்த மோகம் ஆசை கொஞ்சம் குறைந்து, குழந்தைமேல் மிகவும் ஆசையுடைய வனாயிருப்பான். வயது நாற்பது வந்தவுடன் குடும்ப விஷயத்தில் கவலையுண்டாய், மனைவி மக்களைக் காப்பாற்ற சக்தியில்லாமல் மனவருத்தமடைந்தும்

துக்கமனுபவித்து வருங்காலத்தில் தனது புத்திரர்களுக்கு யௌவன தசைவந்து அவர்கள் சம்பாதிக்கும் பொருள்களால் தந்தை சுகமடைந்து பிறகு தான் நாற்பது வயது வரையில் அனுபவித்த சுகதுக்கங்களையெல்லாம் ஐம்பது வரையில் யோசனை செய்கிறான். அறுபது வயது தொடர்ந்தவுடன் சரீரம் பலம் குறைந்து கையில் தடிபிடிக்க ஆரம்பிக்கின்றான். அறுபது வயது முதல் தொண்ணூறு வயதுவரையில் அப்போதுக்கப்போது சரீர மாறுபட்டு கையில் எவ்வாறு தடிபிடித்து நடக்கின்றாறோ பாருங்கள்.

அர்ஜுநன் : சரீரம் இவ்வாறு மாறுபட்டுவருவது மனிதர்களுக்கு மாத்திரமேயல்ல, பிரதி ஜீவஜந்துக்களுக்கும் சரீரம் இப்படியே மாறுகின்றதைப் பார்க்கின்றோம். இதனை யோசிக்குமளவில் தேக தர்மமெனத் தோன்றுகிறது.

கிருஷ்ணன் : ஆம், நீ சொல்வது சரிதான். இப்படி மாறுபடுவது தேக தர்மமேயன்றி ஆத்ம சுபாவமல்ல. ஆதலால், ஒரு மனிதன் மரணமடைந்தால் தேக தர்மனானென்று சொல்வதற்குக் காரணமாயிருக்கின்றது. தேகதாரியாகிய ஆத்மா அந்தந்தத் தேகத்தில் எப்படி பால்யயௌவன கௌமார (கிழத்தன) தசைகளை அடைந்து அந்தந்த தேகத்தைவிட்டு மற்றொரு தேகத்தில் பிரவேசிப்பது ஆத்மாவிற்கு இயல்பாயிருக்கின்றது. ஆதலால், பீஷ்மாதிகளினுடைய ஆத்மாவும் தேக தர்மானு குணங்களால் அந்தந்த தேகத்தை விடுவது சகஜமாயிருக்கின்றன. ஞானியானவன், இப்படிப்பட்ட விஷயங்களில் உன்னைப்போல் வியசனப்படமாட்டான், உனக்கு இப்படிப்பட்ட ஞானமில்லாததனால் நீ வியசனப்படுகிறாய்.

ஆதலால், ஒவ்வொரு ஜன்மத்திலும் தாம் செய்து வரும் புண்ய பாவங்களினாலும் குடும்பத்திலுள்ள ஆசையினாலும் காமக்குரோதாதி அழுக்குகள் இருதயத்தில் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. இருதயத்திலிருக்கும் காமக்குரோதாதி

அழுக்குகளெல்லாம் இந்நூலில் சொல்லியிருக்கும், குரு உபதேசத்தை இடைவிடாமல் அப்பியசித்து வந்தால், அந்த காமக்குரோதாதிகளெல்லாம் தனக்குக் தானாய் நசித்துவிடும். பிறகு இருதயம் எவ்விதசங்கல்பவிகல்பங்களும் (நினைப்பு மறப்பு) இல்லாமல் படிகம்போல் நிர்மலமாய்விடும். மனதை வெளியில் ஓடவிடாமல் நிறுத்தி அந்த பரப்பிரம்மமே நான். நானே சர்வமென்று, மௌன, மாயிருப்பதே பரமசுகம். மௌனமென்றால், வார்த்தையாடாமல் வாய்மூடிக் கொண்டிருப்பதல்ல, மனதை வெளியில் ஓடவிடாமல் நிறுத்துவதே மௌனமென்று சொல்லப்படும்.

இருக்காலம் எந்தெந்த யுகங்களுக்கும்
ஏகாந்த மானதொரு பிரம்மந்தன்னில்

பெருக்கவே மனதடங்கி மௌனம் பெற்று
பேராசை யாகவும்தான் பிரம்மத்துள்ளே

குருக்களைப்போல் அரசனைப்போ லிரிதிரனைப்போற்
குணமான மூவரைப்போற் பிரம்மத்தூடே

திருக்கெடுத்து எந்தெந்த வவதாரங்கள்
செய்திடலால் நிலையறிந்த பெரியோர்தானே.

# 56. பந்தமோக்ஷம்
# ஆத்மா அநாத்மா லக்ஷணங்கள்

''ஆத்மா நாத்மநோ ர்தேஹாதீந் ஸ்வேத்யஸ்யாத் மத்வே (நாபிமந்யதே)

ஸோபிமாநஹ ஆத்மநோ பந்தஹ தந்நிவ்ருத்திர் மோக்ஷஹ

*தானல்லாத தேகம் இந்திரியங்கள் முதலானவைகளை தானென்றெண்ணி அபிமானித்துக் கொண்டிருக்கிறது. அப்படி அபிமானிப்பதால் உண்டான அபிமானமே பந்தம் அந்த அபிமானத்தை விட்டுவிடுவதே மோக்ஷம் எப்படி என்றால்;-*

அநாத்யவித்யா வாஸ்தயாஜாதோ ஹமிதிஸங்கல்போ பந்தஹ
பித்ருமாத்ரு ஸஹோதர தாராபத்ய க்ருஹாரா மக்ஷேத்ர
மமதா ஸம்ஸாராவாண ஸங்கல்போ பந்தஹ
கருத்ருத்வா த்யஹங்கார ஸங்கல்போ பந்தஹ
அணிமா த்யஷ்ட்வைஸ்வர்ய ஆஸாசித்த ஸங்கல்போ பந்தஹ
தேவ மநுஷ்யாதி உபாஸநாகாம ஹங்கல்போ பந்தஹ
யமாதி அஷ்ட்டாங்க யோகாப்யாஸாதி ஸங்கல்போ பந்தஹ
வர்ணாஸ்ரம தர்ம கர்மஸங்கல்போ பந்தஹ
ஆஜ்ஞாபய ஸம்ஸாத்மகுண ஸங்கல்போ பந்தஹ
யஜ்ஞ் வரததபேதாநவிதிவி தாநஜ்ஞாந ஸங்கல்போ பந்தஹ
கேவல மோக்ஷாபோ ஸங்கல்பேக்ஷா பந்தஹ! பந்தஹ
ஸங்கல்பமாத்ர ஸம்பவோ பந்தஹ
நித்யாநித்ய வஸ்து விசாராதநித்ய ஸம்ஸார ஸுதுக்க
விஷய ஸமஸ்த க்ஷேத்திரமமதாதி
ஸ்மஸ்த்தபந்த ஸங்கல்பக்ஷயோ மோக்ஷஹ.

(நிராலம்போபநிஷத்)

சத்திய ஞானாந்த பரப்பிரம்மமே தானென்று அறியாமல், அநாதியாய் வந்துகொண்டிருக்கும் அஞ்ஞான மயமாகிய ஜீவனேதான் என்னும் சங்கல்பமே (எண்ணமே) பந்தம், சர்வசாக்ஷியாகிய பிரம்மமே தானென்று அறியாமல் தனது தாய் தந்தைகள், சகோதரர், களத்திரம், புத்திரர் புத்திரிகள் தோட்டம் துரவு, வீடு, பூமி முதலானவைகளின் மேல் இச்சை வைத்துக்கொண்டிருப்பதே பந்தம். சுத்த நிர்க்குண பரப்பிரம்மமே தானென்று அறியாமல் நான் என்னுடையது என்னும் அகங்கார மமகாரங்கள் உண்டாய் நானே எஜமான் எனது மனைவி எனது புத்திரர் முதலானவர்களை நானே காப்பாற்றப்பட்டவன் என்னும் சங்கல்பமே பந்தம், பிறப்பு இறப்பில்லாத பிரம்மமே தானென்று அறியாமல் தனக்கு மரணமுண்டென்று பயந்து காயசித்தியையடைந்து சாகாமலிருக்க அணிமாதி அஷ்டட மஹா சித்தியை அடையவேண்டுமென்னும் சங்கல்பமே பந்தம், நானே சுவர்தாரமான பரப்பிரம்ம மென்று அறியாமல் ஹரஹராதிதேவதைகளைத் தியானித்து இஷ்டார்த்தங்களை அடைய வேண்டுமென்னும் சங்கல்பமே பந்தம். நித்யமுக்தநிர்விகார கேவல அத்வைத பரப்பிரம்மமே தானென்று அறியாமல் எல்லாவற்றையும் மறந்து ஸாக்ஷிமாத்திரனாய் ஆநந்திக்காமல் தன்னைவிட வேறாய் பிரம்மம் உண்டென்று அஷ்டாங்க யோகங் களைச் செய்து புருவமத்தியில் திருஷ்டியை நிறுத்தி பஞ்ச முத்திரைகளில் தோன்றும் சிந்தனைகளின் மண்டலங் களைப் பார்த்துக் கொண்டு அதுவே பிரமமெனினும் சங்கல்பமே பந்தம் நாமரூபங்கள், குலகோத்திரங்களில்லாத பரப்பிரம்மமே தானென்று அறியாமல், தனக்குக் குலகோத்திரங்கள் ஜாதிபேதம் ஆசாரங்கள் உண்டென்னும் சங்கல்பமே பந்தம்தான் கர்ம சூன்னியனான பரப்பிரம்ம மென்று அறியாமல் ஜப தப விரத யஞ்ஞதானாதிகளைக் கர்மகாண்டத்தின் ரீதியாய்த் தவறாமல் செய்ய வேண்டுமென்னும் சங்கல்பமே பந்தம்.

நித்திய அநித்திய வஸ்துகளைத் தெரிந்து கொண்டு பிரம்மமே சத்தியமென்று ஜகத்து வித்தையென்றும் அறிந்து அநித்தியமாகிய மனைவி புத்திரர் புத்திரிகள் வீடு தனம் தான்யம் முதலானவைகளின்மீது உண்டாயிருக்கும் ஆசைகளைவிட்டு, சுகதுக்கங்கள் சரீரத்திற்கேயொழிய ஸாக்ஷியாகிய எனக்கு இல்லையென்று தெரிந்து, ஆத்ம சொரூபியாகிய நானே பிரம்மமென்று அறிந்து சகல சங்கல்பங்களையும் நசிக்கச் செய்து சதா பிரம்மநந்த சமுத்திரத்தில் மூழ்கியிருப்பதே மோக்ஷம்.

"தஸமாத் பாவாபாவெள பரித்வஜ்ய
பரமாத்ம த்யோநேந முக்தோ பவதி. "

(மண்டல ப்ராஹ்மணோபநிஷத்)

பாவா பாவங்கள் என்றால் நினைப்பு மறப்பு இந்த நினைப்பு மறப்பு சூன்னியமாய் சதா ஆகாச வடிவமா யிருப்பதே மோக்ஷம் என்றால் எந்த ஆசைகளும் எந்த எண்ணங்களும் இல்லாமலிருந்தால் அதுவே மோக்ஷம்.

"த்வேபதே பந்தமோக்ஷய நிர்கிமதி மமேதிச
மமேதித் பத்யதே ஜந்துர் நிர்மமேதி விழச்சதே"

(மஹோபநிஷத்)

இது என்னுடையது, இது எனக்கு வேண்டும் என்பதே மமகாரம். இந்த மமகாரத்தினால் ஜன்மங்கள் வந்துகொண்டே இருக்கின்றன. ஞானானந்த சர்வபரிபூரண பரப்பிரம்மமே நானாகையால் இத்தேகாதிப் பிரபஞ்சம் சர்வமும் நானல்ல, எதுவும் என்னுடையதல்ல என்னும் எண்ணம் இல்லாமலிருப்பதே மம காரங்களில்லாமல் இருப்பது. இந்த இரண்டு எண்ணங்கள் உள்ளதே பந்தம். மம காரங்களில்லாமலிருப்பதே மோக்ஷம், அமிருத பிந்துபநிஷத்தில் இன்னும் என்ன சொல்லியிருக் கிறதென்றால்,

"கவாமநேக வர்ணாநாம் க்ஷீரஸ்யாப்யேந வர்ணதா
க்ஷீரவத்பஸயதே ஜஞானம் லிங்கிநஸ்து கவாமயதா

*பசுக்கள், நானாவித வர்ணங்களுடன் வெவ்வேறு ரூபங்களாயிருந்தபோதிலும், அவைகளால் உண்டாகும் பால் மாத்திரம் ஒரே நிறமாய் இருப்பதுபோல், அனேக பேத புத்தியுடையவன் சற்குருவையடைந்து வேதாந்த சிரவணமனை நித்தியாசனங்களைச் செய்து அவனுக்கு உண்டாயிருக்கும் பேத புத்தி நசித்து அபேதமாயுள்ள பிரம்மஞான முண்டானால் அப்பொழுது அவன், எல்லா ஜீவராசிகளின் சரீரங்களிலும் அபேதமாய் (பேதமில்லாத) கேவல ஞான சொரூபமான பிரம்மம் ஒன்றே வியாபித்திருக்கிறதென்று அறிவான்.*

"க்ருதமிவ பயசி நிகூடம் பூதே பூதே சவஸதி விஜ்ஞாநம்
ஸததம் மநஸி மந்தயிதவ்யம் மநோ மந்தா நபூதே."

*பாலில் நெய், ரகசியமாய் காணப்படாமல் மறைந்திருப்பதுபோல், சகல ஜந்துக்களிலும் பரப் பிரம்மத்தின் அம்சமாகிய ஆத்மா, ரகசியமாய் காணப் படாமல் மறைந்திருக்கின்றான்.*

"கவாம்ஸர்பிஹி ஸரீரஸ்தம் நகரோத்யங்க போஷணம்
ததேவ கர்மரசிதம் புநஸ்தஸ்யைவ பேஷஜ்ம்.

*பசுக்களின் சரீரத்தில் சகஜமாய் நெய் இருந்தபோதிலும் அவைகளின் சரீரம் நெய் என்றெண்ணி அந்த சரீரங்களை புசிப்பதற்கு உபயோகப்படமாட்டா. பசுக்களின் பாலைக் கறந்து காய்ச்சி தோய்த்து மத்தினால் கடைந்து அதிலுண்டாகிய நெய் மாத்திரம் எடுத்து சாப்பிடுவதற்கும் வைத்தியத்திற்கும் உபயோகப்படும்.*

"ஏவம் ஸர்வஸரீரஸ்த ஸர்பிவத் பரமேஸ்வரம்
விநாஸோ பாஸநாம் தேவஹந கரோதி ஹிதம் ந்ருஷு

பரமசிவன் 'ஹம்ஸ' (ஸோஹம்) சொரூபமாயிருக்கின்றார் என்பதை இங்கு உங்களுக்கு பிரம்மவித்தியோபநிஷத் மூலமாய் நிரூபித்துப் பிறகு பரமசிவனாகிய நடராஜர் பஞ்சாக்ஷரத்தையே திருமேனியாக கொண்டு தில்லையில் நடனம் செய்து காட்டிய ரகஸ்யம் சொல்லுவோம்.

ஹம்ஸோ கணேஸோ விதிரேவ ஹம்ஸோ
ஹம்ஸோ ஹரிர்விஸ்வ மயஸ் ஸம்பு
ஹம்ஸோ ஹ மாத்மா கருரேவ ஹம்ஸோ
ஹம்ஸோஹம் ஹம்ஸஹ பரமாத்ம ஹம்ஸஹ

மேற்சொல்லிய 'ஹம்ஸ 'யே கணபதி ஹரி சம்பு ஆத்மா குரு பரமாத்மாவென்று 'செல்லப்படும். இது விஷயம், ஹம்ஸ சூத்திர ரகஸ்யத்தில் இன்னும் விவரமாய் பின்சொல்வோம். இதில் தெளிவாய்த் தெரிந்து கொள்ளுங்கள்; இங்குவேண்டியது இவ்வளவேயாம்.

பஞ்சாக்ஷகத்தை நடராஜர் எவ்விதமாய் நடனம் செய்து காட்டினாரோ, அதை இதனடியில் சொல்லுகிறோம்.



34B

## 63. சிவாய நமயென்னும் பஞ்சாக்ஷரத்தில் 'ய' என்பது ஜீவனாயிருக்கின்றது

எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலந்கேள்-சிட்டன்
சிவாயநம வென்னுந் திருவெழுத் தஞ்சாலே
யவாயமற நின்றாடுவான். (உண்மை விளக்கம்)

எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே நாட்டம்- எட்டும் இரண்டும் சேர்ந்தால் பத்தாகிறது. தமிழிலக்கத்தில் பத்து என்பது எப்படியிருக்குமென்றால், ய போல் அடிபெருத்து நுனி சிறுத்து லிங்கவடிவமாயிருக்கும், நமது சரீரத்தில் அடிபெருத்து, நுனி சிறுத்து 'ய' போல் லிங்க வடிவமாயிருப்பது எதுவென்றால் மூக்குத்தண்டு. இம்மூக்குத் தண்டில் சிவபெருமான் ஜீவனாய் நடனம் செய்வதை, புதல்வா நலிக்கேள். பிள்ளாய் சொல்லக்கேள். கிட்டன்-பரமசிவன், சிவாயநம வென்னுந் திருவெழுத்தஞ்சாலே யாவயமற நின்றாடுவான்- அருள் தரத்தக்க சிவாயநம வென்னும் பஞ்சாக்ஷரத்தையே, பரமசிவன் திருவுருவங்கொண்டு ஆன்மாக்களின் பிறவியறத்தக்க யோக நிலை நடனம் செய்து காட்டினார் அதாவது.

எட்டும் இரண்டும் சேர்ந்து (அ உ) பத்து வடிவம் பொருந்தி அடிபெருத்து நுனி சிறுத்து "ய" போன்ற லிங்க வடிவமாயிருக்கும் மூக்குத் துவாரங்களில் சிவபெருமான் நின்று நடனம் செய்ய-சிவாயநம' வென்னும் பஞ்சாக்ஷரத்தையே, அழகு பொருந்திய சரீரமாய் எடுத்து ஆன்மாக்களன் பிறவியறத்தக்க நடனஞ் செய்து காட்டினார். அதை இதனடியில் சொல்லுகிறோம்.

## 64. தில்லைநடராஜன் சிவாயநம வென்னும் பஞ்சாக்ஷரத்தையே சரீரமாய்த் தரித்தது

சேர்க்குந் துடிசிகரம் சிக்கன்வா வீசுகர
மார்க்கும் யகர மபயகரம் பார்க்கிலிறைக்
கங்கி நகர மடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான் (உண்மை விளக்கம்)

பரமசிவன் உடுக்கைப் பிடித்த கரமே (கையை) 'சி' கரமாகவும் வீசிக்காட்டும் வலது இடது இரண்டு கரங்களே 'வ' கரகமாகவும் வலது இடது இரண்டு பாதங்களையும் இரண்டு முறை மேல் தூக்கிச் சும்மாயிருவென்று வலது கையால் காட்டும் அபயகரமே (அபயம் காட்டும் கையே 'ய' கரமாகவும் அக்நி யேந்தியகரமே (கையே) 'நகரமாகவும் மாயையென்னும் இராக்ஷதனை மிதித்த பாதமே 'ம' கரமாகவும், பரமசிவன் அழகு பொருந்திய சரீரம் எடுத்து தில்லையில் நடராஜராய்வந்து நடனம் செய்து யோகநிலையை அறிவிக்கும் ரகஸ்யம் இதனடியில் சொல்லுகின்றோம் கேளுங்கள்-

என்னை அறியாமல் எனக்குளே நீயிருக்க
உன்னை யறியாமல் உயிரிழந்தேன் பூரணமே
சக்திசிவம் இரண்டாகி தாணமுடிவி லொன்றால்
சித்திரமாய் நின்ற தீறமறியேன் பூரணமே,"

எனக்குத் தெரியாமல் அனேக கோடானுகோடி ஜன்மங்களாய் நீ எனக்குளே 'ஹம்ஸ' (ஸோஹம்) சொரூபமாயிருந்து. இரவும் பகலுமாய் வலது இடது மூக்குத் துவாரங்களில் மாறி மாறி மூச்சி என்னும் காலை தூக்கி நடனம் செய்து வருகிறாய்.







என் மூக்குத் துவாரங்களில், மூச்சு சொரூபமாயிருந்து நடனஞ் செய்துவரும் உன்னைன் தெரிந்து கொள்ளாமல் யான் அனேக கோடானகோடி ஜன்மங்களாய் இறந்து கொண்டும், பிறந்து கொண்டுமாய் வருகின்றேன் பூரணமே.

இடது நாசியும் வலது நாசியும் இரண்டாய்ப்பிரிந்து மூக்குத் துவாரங்களுக்கு முடிவாகிய புருவ மத்தியில் மறுபடியும் ஒன்றாய் சேர்ந்து நடக்கின்ற மூச்சு என்னும் காலை தூக்கிச் சித்திரப்பதுமையைப் போல் நிறுத்த வழியறியன் பூரணமே.

சங்குரெண்டு தாரையொன்று
ஜன்னல்பின்னை லாகையால்
மங்கி மாறாதே யுலகில்
மானிடர்க ளெத்தனை
சங்கு ரெண்டையும் தவிர்த்து
தாரைபூத வல்லீரேல்
கொங்கைமங்கை பங்கரோடு
கூடிவாழலாகுமே.

*வலது இடது மூக்குத்துவாரங்கள் இரண்டும் ஒன்றாய் சேருமிடம் புருவ மத்யம். அப்புருவ மத்யமே திருவேணி சங்கமென்று சொல்லப்படும், என்றால், இடைகலை பிங்கலை சுழுமுனை என்னும் மூன்று நாடிகளும் சேருமிடம் சங்கமென்று சொல்லப்படும். அவ்விடம், சாரையுஞ் சர்ப்பமும் பின்னலாய் பின்னிஎழுந்து நின்று விளையாடுவதுபோல் இடகலை பிங்களைல சுழுமுனை என்னும் மூன்று நாடிகளும் கூடி விளையாடும் ரகஸ்யம் தெரிந்து கொள்ளாமல் மாண்ட மானிடர்களெத் தனையோ பேருண்டு,*

*வலது நாசி இடது நாசி இவ்விரண்டு நாசிகளிலும் மூச்சைத் தனித்தனியாய் இழுத்து நிறுத்தி நடத்தி பிறகு இரண்டு நாசிகளிலும் மூச்சை இழுத்து நிறுத்தி நடத்த சக்தியுடையவர் களானால் பரஞான அபரஞான மென்னும் இரு ஸ்தனங்களைப் பொருந்திய உமாதேவி யாரோடு கூடி இருக்கலாம்.*

"நெருப்பை மூட்டி நெய்யைவிட்டு
நித்தம்நித்தம் நீரிலே
விருப்பமோடு நீகுளிக்கும்
வேதவாக்யம் கேளுமின்

நெருப்புநீரும் உம்முளே
நினைத்துகூல வல்லிரேல்
சுருக்கமற்ற சோதியைத்
துடர்ந்து கூடலாகுமே.

ஸ்திரீ புருஷர்களின் நாபிக் கமலத்தில் நித்திரை செய்து கொண்டிருக்கும் குண்டலி சக்தியை மூச்சியென்னும் மூலர்களால் கிளப்பி முதுகெலும்பிலிருக்கும் வெள்ளை நரம்பிலுள்ள சிறிய துவாரங்களின் வழியால் உச்சிவரையில் மூச்சை மேல் ஏற்றி. அதனால் உண்டாகும் சூட்டால் பிரம்ம கபாலத்திலிருக்கும் நெய் போன்ற அமிர்தமானது உருகி சொட்டுச் சொட்டென்றெழுக கொண்டிருக்கும் சமயத்தில் சரீரமெல்லாம் ஸ்நானஞ் செய்தவனைப்போல் வியர்த்திருப்பதே வேதவாக்கிய ரகஸ்யம். அதாவது

மூச்சியென்னும் நெருப்பும், நெய் என்னும் அமிர்தமும் வியர்வையென்னும் நீரும் உம்மிடத்திலிருப்பதை யோகாப்பியாச அனுபவத்தாலறிந்து சொல்ல வல்லமையுடையவரானல் எல்லைக் கடந்து சேர்ந்திருக்கலாகுமே.

உலகத்திலுள்ள மானவ ஜனங்களெல்லோரும் எல்லை கடந்த ஜோதியில் சேரும் பொருட்டே, தில்லையில் (சிதம்பரத்தில்) நடராஜர் காலை தூக்கி நர்த்தனம் புரிந்து யோக நிலையைக் காட்டினார்.

தில்லை (சிதம்பரம்) ஆகாச (வெட்டவெளி) அம்சம் திருவண்ணாமலை அக்னியாம்ஸம், காளஹஸ்திரி வாயுவாம், ஸம் காஞ்சி பிரிதிவி (பூமி-மண்) அம்சம், காசி அப்புவா(ஜலா)ம்சம்.

சிதம்பரம், ஆகாச அம்சமாயிருப்பதனால் நடராஜன் இருக்கும் கனகசபை சமீபமாய், ஒரு படுதாவால் மூன்று சுவர்களையும் மறைத்து அப்படுதாவிற்குள் வெறும் வெளியாயிருக்கும் இடத்தை ரகஸ்ய தரிசனமென்று பெயர் வைத்து இந்த வெளியை காட்ட, கோவில் தீக்ஷதர்கள் தக்ஷணை பெற்று கற்பூரமேற்றி படுதாதிரையை நீக்கி வெட்ட வெளியாகிய ஆகாயத்தைக் காட்டி உடனே படுதாவை மறைத்து விடுவார்கள். ஸ்திரீ புருஷர்களெல்லோரும் அந்த ரகஸ்ய தரிசனத்தைகண்டு என்ன அங்கொன்று மில்லையே இருளாயிருக்கிறதே, அந்த இருள்தானா ரகஸ்யதரிசனம் என்று ஒருவரோடொருவர் பேசிக் கொள்வதேயொழிய அதன் நிஜரகஸ்யம் அனேகர்களுக்குத் தெரியவராது. அதன் நிஜரகஸ்யம் என்னவென்றால், ஈஸ்வரனுடைய ரூபம் ஆகாசரூபம் என்றால், கடவுள் ஆகாச (வெட்டவெளி) ரூபமாயிருக்கப்பட்டவர்.சிதம்பரம் ஆகாச வடிவமாதலால் அந்த ஆகாசத்தை படுதாவால் மறைத்து, ரகஸ்யதரிசனமென்று பெயர் வைத்து காட்டுகிறார்கள். இதுவே சிதம்பர ரகஸ்ய தரிசனத்திந் அந்தரார்த்தம். இனி நடராஜர் காலைத்தூக்கி நடனம் செய்து காட்டும் ரகஸ்யம் சொல்லு கிறோம்.

நடராஜர் முதல் இடது காலை ஊன்றி வலது காலை மேல் தூக்கி சிலநேரம் நர்த்தனம் செய்துபிறகு, வலது காலை ஊன்றி இடதுகாலை மேல்தூக்சி சிலநேரம் நர்த்தனம் செய்து காட்டிப் வலது காலைக் காதுவரையில் நீட்டி இடது கையைமேல் தூக்கி நடனம் செய்யும்பொழுது காளி ஸ்திரியாயிருப்பதனால் காலைக் காதுவரையில் நீட்ட வெட்கமுண்டாய்த் தோல்வியடைந்தா ளென்று புராணங்களில் சொல்லுகிறதென்று கற்பனைக் கதையாய் சொல்லுகிறார்களே யொழிய, அதன் நிஜமாகிய அந்தரார்த்தம் சொல்லுவாரில்லை அதன் நிஜமாகிய அந்தராரத்தம் சொல்லுகின்றோம்.

பிராணயாமம் அல்லது ஸந்தியாவந்தனம் செய்பவர்கள் முதல் இடது நாசியை மூடி, வலது நாசயில் மூச்சை உள்ளுக்கிழுத்து நிறுத்தவேண்டுமென்று காட்டுவதற்காக நடராஜர் முதல் வலது காலைத் தூக்கி நடனம் செய்து காட்டினார், இதன் ரகஸ்யமே முதல் காலைத் தூக்கிக் காட்டுவதற்குக் காரணம் பிறகு.

வலது நாசியை மூடி, இடது நாசியில் மூச்சை இழுத்து நிறுத்தவேண்டும் என்று காட்டுவதற்காக வலது காலை ஊன்றி இடது காலைத்தூக்கி நடனம் செய்து காட்டினார். பிறகு கருமான், உலைக்ககளத்தில் இரண்டு தொல் துருத்திகளை வைத்து அதை இரண்டுகைகளால் பிடித்து மாற்றி மாற்றி உலைக்களத்தை ஊதுவதுபோல், வலதுகைப் பெருவிரல் மோதிவிரல்களை வலதுஇடது நாசிகளின் மேல் வைத்து இரண்டு மூக்குத் துவாரங்களிலும் மூச்சை இரண்டு விரல்களாலும் மாற்றி இரண்டு மூச்சையும் ஒன்றாய்ச் சேர்த்து பின்னலாய்ப் பின்னி உள்ளுக்கிழுத்து நிறுத்த வேண்டுமென்று காட்டுவதற்காக நடராஜர் ஒத்தைக் காலைத் தூக்கி நடனம் செய்து காட்டினார். இதற்கு நெஞ்சறி விளக்கம் பிரமாணம்.

ஒருபாந் தன்னைத் தூக்கி யொருபாதந் தன்னை மாற்ற
இருபாத மாடுகின்றி வியல்பைநீ யறிந்தா யானால்
குருபாத மென்று கூறுங் குறிப்புனக் குள்ளே யாச்சு
விருபாத னாகைநாதர் மலரடி காண்பாய் நெஞ்சே.

ஒருபாதந் தன்னைக் தூக்கி - வலதுகை மோதிரவிரலால் இடது நாசியை மூடிவலது நாசியில் மூச்சு என்னும் பாதத்தைத் தூக்கி (இழுத்து) ஐம்பது எண்ணும் வரையில் நிறுத்தி ஒருபாதந் தன்னை மாற்றி வலது நாசியில் இழுத்து நிறுத்திய மூச்சை வலதுகைப் பெருவிரலால் வலது நாசியைமூடி. இடது நாசியின்வழியாய் மாற்றி இரண்டங்குலம் நீளமவ்வளவு மூச்சை

மாத்திரமே வெளியில்விட்டு இருபாத மாடுகின்ற இயல்பை- அதை மறுபடியும் இடதுநாசியில் இழுத்து. வலது நாசியில் மாற்றுந்தன்மையை நீயறிந்தாயானால் நீ சூட்சும புத்தியினால் அறிவாயாகில், குருபாதமென்று கூறுங் குறிப்பு உனக்குள்ளே ஆச்சு-உனக்குள்ளே விளங்கும். இருபாதநாகை நாதர்-மூக்குத் துவாரங்களில் இடைகலை பிங்கலையாய் நடக்கும் நாகனென்னும் மூச்சைக் காட்ட கால்களைத் தூக்கி நடனம் செய்து காட்டிய நடராஜரது மலரடி காண்பாய் நெஞ்சே பாத கமலங்களைத் தரிசிப்பாய் மனமே.

அதாவது வலதுகை மோதிர விரலால் இடது நாசியை அடிவலது நாசியில் மூச்சு என்னும் பாதத்தை தூக்கி (இழுத்து) ஐம்பது எண்ணும் வரையில் நிறுத்தி பிறகு வலது நாசியில் இழுத்து நிறுத்திய மூச்சை வலது கைப் பெருவிரலால் வலது நாசியைமூடி இடது நாசியின் வழியாய் மாற்றி இரண்டங்குலம் நீளமவ்வளவு மூச்சை வெளியில்விட்டு மறுபடியும் அந்த இரண்டங்குலம் நீளமவ்வளவு மூச்சையே இடது நாசியில் இழுத்து மூடி, வலது நாசியில் மாற்றும் தன்மையை நீ சூட்சும புத்தியினால் அறிவாயாகில், அது நீ யாவாய் என்று குருவினால் உபதேசிக்கபட்ட குறிப்பு உனக்குள்ளே விளங்கும்; இடைகலை பிங்களையாய் நடக்கும் நாகனென்னும் மூச்சைக்காட்ட, கால்களைத் தூக்கி நடனம் செய்து காட்டிய நடராஜரது, பாத கமலங்களைத் தரிசிப்பாய் மனமே என்றால்.

மாயை என்னும் பிசாசே நமக்குப் பொருத்த காளியாய் இருக்கிறது. ஆதலால் நீங்கள் பிராணாயாமம் செய்து சித்தியடைந்தால், அப்பொழுது உங்களைப் பிடித்துக் கொண்டிருக்கும் மாயை என்னும் இராக்ஷதனை ஜயிக்கலாம் என்று மாளவ ஜனங்களுக்குக் காட்டுவதற்காக நாடராஜர்

மாயை என்னும் இராகக்ஷதனைத் தமது காலால் மிதித்து அந்த மாயையின் கர்வத்தை யெல்லாம் அடக்க நடராஜர் நடனஞ் செய்து காட்டினார் என்று முன்னுள்ள பெரியோர்கள் விக்ரக மூலமாய்க் காலைத் தூக்கிக் காட்டியிருக்கின்றார்கள். நாம் விடும் மூச்சுக்குக் கால் என்று பெயர். ஆதலால், நடராஜர் மூச்சியென்னும் காலைத் தூக்கிக் காட்டினார் என்பதேயாம். இந்த மூச்சியென்னும் காலுக்கு யஞ்ஞோபவீத மென்றும் பிரமசூத்திரமென்றும் ஹம்ஸ என்றும் பிராலானேன்றும் வாசி என்றும் இவ்வாறு அனேக பெயர்களையுடையதாய் இருக்கின்றன. இப்படிப்பட்ட மூச்சுயென்னும் நூல் சரீரத்திலிருந்து என்றைக்கோ ஓர் நாள் அறுபட்டுப் போகப்போகிறது. இதற்கு நெஞ்சறிவிளக்க பிரமானம்

இறந்திடு மிருபத் தோராயிரத் தறுநூறு பேறும்
இறந்திடு மிக்காயம் போன லீசனைக் காண்பதென்னாள்
மறந்திடாதறிவான் மூலவாசியை மேலே யேற்றிச்
சிறந்த தாபரத்து நாகை லிங்கரைத் தரிசி நெஞ்சே.

இறந்திடு மிருபத்தோ்ராயிரத் தறுநூறு பேரும் நிமிஷத்திற்குப் பதினைந்து மூச்சுகளாய் மூக்குத் நிமிஷத்திற்குப் பதினைந்து மூச்சுகளாய் மூக்கு துவாரங்களின் வழியாய் ஆடி பிரதிதினம், இருபத்து நாலுமணி நேரத்திற்குள் நடந்து நடந்து கழிந்துவரும் இருபத்தோராயிரத்து அறுநூறு மூச்சுகளும் இறந்திடு மிக்காயம் போனால் - இந்தச் சரீரத்திலிருந்து ஒவ்வொரு மூச்சாய் அறுபட்டு இறந்து கொண்டே வந்தால் ஈசனைக் காண்பதென்னாள்-பரமசிவனை கண்டறிவது எப்போ மறந்திடாதறிவாள்-மறவாதபடி இமைக்கொட்டுமல்வளவு நேரமும் சும்மாயிராமல் ஓயாதபடி ஆடி மூலவாசியை மேலேற்றி- மூலாதார (குத்தின்) வழியாய் நடக்கும்

மூச்சுயென்னும் வாசியை முதுகெலும்பின் வெள்ளை நரம்பிலுள்ள சிறிய துவாரங்களின் வழியாய் பிரம்ம கபாலத்திற்கு (உச்சிக்கு) யேற்றி சிறந்த தற்பரத்து நாகைலிங்கரை-உயர்வாயிருந்து. தான் தானால் நடந்து கொண்டிருக்கும் நாகனென்னும் லிங்கத்தை (மூச்சை) தரிசி நெஞ்சே அறிவாய் மனமே.

அதாவது, நிமிஷத்துத்திற்குப் பதினைந்து மூச்சுக் காளாய் பிரதிதினம் இருபத்து நான்குமணி நேரத்திற்குள் மூக்குத் துவாரங்களின் வழியாய், நடந்து நடந்து கழித்துவரும் இருபத்தோராயிரத்து அறுநூறு மூச்சுக்களும் இந்தச் சரீரத்திலிருந்து ஒவ்வொரு மூச்சாய் அறுபட்டு இறந்து கொண்டே வந்தால் ஈசனைக் கண்டறிவது எப்போ மறவாதபடி இமைக்கொட்டு மவ்வளவு.



## 65. யோகாப்பியாசத்திற்கு யோக தத்வோபநிஷத் பிரமாணம்

*1. விஷ்ணுர் நாம மஹாயோகீ*

*மஹாபூதோ மஹா தபாஹ தத்மார்க்கே யதா*
*தீபோ த்ருஸ்யதே புருஷோத்தம மஹா*

புருஷோத்தமனான மஹாவிஷ்ணுவானவர் மஹா யோகியாவும் சகல பூதங்களுக்கும் ஆதாரமாயும் விசேஷ தபஸியாயும் தத்வமார்க்கங்களுக்கெல்லாம் தீபம்போல் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றார்.

*2. ஜந்மம்ருத்யு ஜரா வியாதி நாஸம் மருத்யுதாரகம்*
*நாநமார்கைஸ்து துஷ்ப்ராபம் கைவல்யம் பரமபதம்*

பக்தி ஞான யோக மார்க்கங்களினால், ஜீவர்கள் மாயையிலிருந்து விடுபட்டு, கிழத்தனம் வியாதிகள் பிறப்பு இறப்புகளில்லாமல் முக்தியை அடைவதே பரமபதமென்னும் கைவல்யமேயாம்.

*3. பதிதாஸ் ஸாஸ்த்ரஜாலேஷு ப்ரஜ்ஞயா தேந [மோஹிதாஹ*
*அநிர்வாக்யம் பதம் வந்தும் ந்ஸக்யம் தைஸ் [ஞுரைபி*
*ஸ்யாத்ம ப்ரகாஸரூபம் தத்கிம் ஞாஸ்ந்ரேண ப்ரகாஸ்யதே*

எல்லோரும் சாஸ்திரமென்னும் வலையில் அகப்பட்டு அந்த சாஸ்திரங்களில் அதிக மோகங் கொண்டிருக்கின்றார்கள். பரமபதமென்னும் கைவல்யம் தேவர்களுக்கும் கிடைக்கத்தக்க தல்ல. தன் பிரகாசம், சாஸ்திரங்களினால் பிரகாசிக்கச் செய்யத்தக்கதல்ல.

யோகதத்வோபரிஷத்தில் யோகியினுடைய மஹிமைகளையெல்லாம் சொல்லியிருப்பதை இனி இதனடியில் சொல்லுகிறோம் கேளுங்கள்.

4. தாதுஸ்திரீ லௌல்யகாந்தி ம்ருகத்ருஷ்ணா மயாநிலை
ஞாத்வா ஸூதீஸத்பேஜத் ஸர்வாந் விக்நாத்
[புத்திப்ரபாவத்ஹ

யோகாப்பியாச ஆரம்பகாலத்தில் அனேக விக்கினங்கள் உண்டாகும். அவையாவையெனில், குடும்ப விஷயத்தில் அனேக கஷ்டங்களை உண்டாக்கும் யோகாப்பியாசிக்குச் சோம்பேரித்தனம், தன்னைத்தான் புகழ்ந்து கொள்வது. துஷ்டசகவாசம், மந்திரங்களைச் சாதிப்பது. ரசவாதம் (பொன் செய்வது) அதிக ஸ்திரீசம்போகம் முதலானவைகள் இருக்கலாகாது. புத்திமான்கள் இவைகளையெல்லாம் புண்ய விசேஷத்தினால் கானல்நீர் போல் நினைத்து நீங்கவேண்டும்.

5. ப்ராணாயாமம் தகுத்குர்யாத் பத்மாஸநகதஸ் ஸ்வயம்
மேற்சொன்னவைகளையெல்லாம் விட்டு பத்மாசனத்தில் உட்கார்ந்து பிராணாயாமம் செய்யவேண்டும்.

6. ஸுஸோபநம் மடம்குர்யாத் ஸூக்ஷ்மத்வாரந்து
[நிர்வாணம்

ஸுஷ்டுலிப்தம் கோமயேந ஸுதாயாவா பரயத்நதஹ
மத்குணைர் மனகைர் லூதைர் வர்ஜிதம்ச ப்ரயத்நதஹ
திநேதிநேச ஸம்ருஷ்டம் ஸந்மார்ஜந்யா விஸேஷதஹ
வாஸிதந்ச ஸுகந்தேந தூபிதம் குக்குலாதிகுபிஹி

மிகவும் அழகுடைய அறையில் காற்றுச் செல்ல துவாரம் வைத்து, சுண்ணாம்படித்துப் பசுஞ் சாணத்தினால் மெழுகி மூட்டுப் பூச்சி கொசுக்கள் எட்டுக்கால் பூச்சிக் கூண்டுகள் சேராமலிருக்கும்படி பிரதி தினம் நன்றாய்க் கூட்டி, பளிங்கு சாம்பிராணி தூபம் போட்டு, வாசனை வஸ்துக்களை வைத்து உயர்ந்த ஊதுவத்திகளைக் கொளுத்தி வைக்கவேண்டும். பிறகு

7. நாத்யுச்சிரிதம் நாதிநீசம் சேலாஜிந குஸோத்தரம்
தத்ரோப்விஸ்ய மேதாவி பத்மாஸந ஸமந்விதஹ
ருஜுகர்யஹ ப்ராஞ்ஜலிஸ்சப்ரணமே திஷ்ட்ட தேவதாம்.

மிகவும் உயரமும் தாழ்வுமில்லாமல் ஒரங்குலம் உயரம், இரண்டடி நீளம், ஒன்றரை அடி அகலமுடைய ஒரு பெரிய மனையை (பலகையைப்) போட்டு, அதன் மேல் தர்ப்பாசனமும் கிருஷ்ணாஜினமும் (மான்தோலும்) அமைத்து, அதன்மேல் அபானவாயு படாதபடி வெள்ளை வஸ்திரம் மடித்து விரித்து பத்மாசனத்துடன் உட்கார்ந்து, கூன்வளையாமல் சித்திரப் பதுமைபோல் நின்று தன்னிஷ்ட்ட தேவதையையும் குருவையும் நமஸ்கரித்து அடியில் சொல்லப்போகும் பிராணாயமம் செய்துவரவேண்டும்.

8. ததோ தக்ஷிண ஹஸ்தஸ்ய அங்குஷ்டேநைவ பிங்களாம்
நிருத்ய பூரயே த்வாயு மிடையாது ஸநைஸ்ஸநை
யதாஸந்த்ய விரோதோ ததக் குர்யாச்ச கும்பகம்

வலதுகைப் பெருவிரலால் வலது நாசியை மூடி, இடது நாசியின் வழியாய் மூச்சை உள்ளுக்கிழுத்து கும்பகம் செய்யவேண்டும் (நிறுத்தவேண்டும்)

9. தாராயித்வா யதாஸக்தி ரேசயேதிடயா ஸநை
யாயத்யஜேத் தயா பூர்யதாரயேக் விரோததஹ.

உள்ளுக்கிழுத்து நிறுத்திய மூச்சை தன் சக்தியானு சாரமாய் நிறுத்தி பிறகு மூச்சை வெளியிடும்பொழுது இடது நாசியை மூடி வலது நாசியால் விடவேண்டும்.

10. ஏவம் மாஸ த்ராப்யாஸாந் நாடீஸுத்தி தைதோபவேத்
யதாது நர்டீஸுத்தி ஸ்யாத் ததா சிஹ்நாநி பாஹ்யஹ்ரதஹ
ஜாயந்தெ யோகிநோ தேஹே தாநி வக்ஷ்யாம்ய ஸேஷதஹ

மூன்று மாதம் வரையில் மூச்சை இடது வலது

நாசிகளிலும் மூச்சை இழுத்து நிறுத்தினால் நாடி சுத்தியாகும். எப்பொழுது நாடி சுத்தியாகின்றதோ அப்பொழுதே யோகியினுடைய சரீர அடையாளம் மாறுகிறது.

11. ஸ்ரீரலகுதா தீப்திர் ஜடராக்நி விவர்த்தநம்
க்ருஸத்வம் ஸர்ரஸ்ய ததா ஜாயேத நிஸ்யசம்
யோகவிக்நகராஹாரம் வர்ஜயேத் யோகவித் தமஹ

சரீரம் மிகவும் லேசாயும் காந்தியுடையதாயும் ஆகும். ஜடரநக்கிநிக்கு அதிக உஷ்ணமுண்டாய் சாப்பிடும் பதார்த்தங்கள் பஸ்பமாய்விடும். எவ்வளவு தூலதேகமாயிருந்த போதிலும் நலிந்து கச்சலாய்விடும். இவைகளெல்லாம் நிஸ்சயமாய் உண்டாகும், யோகாப்பியாசம் செய்யபட்டவர்கள். யோக விக்கனமுண்டாகும் பதார்த்தங்களை நிவர்த்தி செய்யவேண்டும்.

12. அப்பாஸ காலே ப்ரதமம் ஸஸ்தநம் க்ஷீராஜ்ய போஜகம்

யோகாப்பியாசிகள் பாலுடன் போஜனம் செய்வது மிகவும் சிரேஷ்டமானது.

13. கோதுமமுத்க ஸால்பந்தம் யோகவ்ருத்திசரம் விதுஹு

யோகாப்பியாசியானவன் எப்பொழுதும் கோதுமை பயிறு நல்ல பச்சரிசி சாதம் நெய் பால் இவைகளைச் சாப்பிட்டு வந்தால் யோக விருத்தி உண்டாகும்.

14. ததபரம் யதேஷ்டதது ஸ்யாத் வாயுதாரணே
யதேஷ்ட்ட தாரணாத் வரயோ ஸித்யேத் கேவலகும்பகஹ
கோவல கும்பகேஸிததே ரேசபூர விவரஜிதே
நதஸ்ய துர்லபம் கிஞ்சித் தரிஷுலோகேஷு றிக்யதே

யோகசித்தயடைந்த பிறகு. வாயுவை தன்னிஷ்ட்டம் போல் நிறுத்த சக்தியுண்டாகும். இவ்வாறு தன்னிஷ்ட்டம்போல் வாயுவை நிறுத்த சாதனம் செய்து வந்தால் கேவல கும்பகம்

சித்திக்கும் ரேசக பூரங்களில்லாமல் கேவல கும்பகத்தில் இருப்பவனுக்கு மூன்று லோகங்களிலும் அவனுக்கு வேண்டுவது ஒன்றுமில்லை:

15. பரஸ்வேதொ ஜாயதோ ஜாயதே பூர்வம் மர்தநம்தேக
சகாரயேத்

யோகாப்பியாசம் செய்யும்பொழுது. வியர்வையுண்டாகும். அந்த வியர்வையைத் தேகத்திலேயே மறுபடியும் தைலம்போல் நன்றாய்த் தேய்த்துவிட வேண்டும். பிறகு அப்பாஸ முதிர்ச்சியினால் வியர்வை உண்சாகாமல் கிரமக்கிரமமாய் நின்றுவிடும். இவ்வாறு தேய்ந்து வந்தால் சரீரத்திற்கு விசேஷ பலமுண்டாகும்.

16. ததோபிதாரணாத்வாயோ ஹேக்ரமேணவஸ நைஸ்ஸை
நம்பேபாவதி தேஹஸ்ய ஆஸநஸ்த் தஸ்ய தேஹிநஹ

கிரமக்கிரமமாய் வாயுவை அதிக நேரம் நிறுத்தப் பழகி வந்தால், பத்மசானத்தில் உட்கார்ந்திருக்கும் யோகியின் சரீரத்திற்கு நடுக்கல் உண்டாகும் அல்லது. சரீரம் அசையும்.

17. ததோதிக ராப்யாஸாத் தாருணா ஸ்வேத உத்பதவத
யதா சதார்த்ரோபாவ உத்ப்ளுத்யோத ப்ளுத்யசகயதி
பத்மர்ஸந ஸ்த்திதோ யோசீ ததா கஸ்ச்சதி பூதலே
ததோதிக தாரப்யாஸத் பூமித்யாகஸ்ச ஜாயதே
மத்மாநஸ்த்தயே வாஸௌ பூமி முத்ஸருஸ்ய வர்த்ததே

பிறகு. கும்பகத்தில் அதிகநேரமிருக்கும் யோகிக்கு அதிக. உஷ்ணமுண்டாய் சரீரமெல்லாம் விசேஷமாய் வியர்க்கும். அப்பொழுது சரீரத்திற்கு தவளையைப்போல் துள்ளிகுதிக்கும் சக்தியுண்டாகும். பத்மாசனத்திலிருக்கும் யோகி இவ்விதமாய் எகிரிக் குதித்துக்கொண்டே போவான். வாயுவை இன்னும் அதிக நேரம் கும்பகத்திலிருக்கப் பழகி வந்தால் பூமியிலிருந்து மேல் கிளம்ப சக்தியுண்டாகும்.

18. அதிமா நுஷசேஷ்ட்டாதி ததா ஸமர்த்ய முத்யவேந்
நதர்ஸ்யேஸச்ச ஸாமர்த்யம் தர்ஸநம் வீர்யவத்தரம்
ஸ்வல்யம் வா பஹூதா துக்கம் யோகீ ந்வ்யததே ததா

இவ்வவ்பியாசத்தினால் மனிதர்களால் செய்யத்தகாத அசாத்தியமான காரியங்களை மிகவும் சுலபமாய்ச் செய்ய சாமர்த்தியம் உண்டாகும். இந்தச் சாமர்த்தியத்தை வெளியிடலாகாது. இப்படிப்பட்ட யோகி மிகவும் பல சாலியாகயிருப்பான். இந்த யோகிக்கு துக்கம், அற்பமாயும் அதிகமாயும் இருந்தாலும் துக்கிக்கவேமாட்டான்.

19. அல்பமுத்ர புரீஷஸ்ச்ச ஸவல்பரித்சஸ்ச்ச ஜாயதே
கீலவோ தூஷிகா யாலா ஸ்வேத ணார்க்ந்ததாநநே
ஏதாநி ஸர்வ்தா தஸ்ய நஜாயந்தே ததப் பரம்

இப்படிப்பட்ட யோகிக்கு மல மூத்திரம் நித்திரை மிகவும் சொல்பமாகவேயிருக்கும். அன்றியும், வியர்வை வாய்நாற்றம் சொள்ளுவடிதல் (கடைவாய் வடிதல்) காதுகளில் குரும்பி கண்களில் பீளை கட்டுவது முதலானவைகள் உண்டாகமாட்டா.

20. ததோ திகுதராப்யாஸாத் பல முத்யத்யதே பஹு
யேந பூசரஹித்திஹ ஸ்யாத் பூசராணாம் ஜயே க்ஷமஹ
வ்யாக்ரோ வா ஸரபோ வாபி கஜோ கலய ஏவவா
ஸிம்ஹோவா யோகிநா தேந மரியதே ஹஸ்ததாடிதஹ

கடைசியில், யோகாப்பியாசத்தினால் அதிக பலமும் பூசரசித்தியும் உண்டாகும். அன்றியும் அந்த யோகிக்கு சகல மிருகங்களையும் ஜயிக்கும் சாமார்த்தியமும் உண்டாகும். புலி சிங்கம் யானை முதலானவைகளை அந்த யோகி தன்கையால் அடித்தமாத்திரத்தில் அவைகள் மரணமடையும். ஏனென்றால் யோகி வாயுவை விசேஷமாய்க் கும்பகத்தில் நிறுத்துவதனால் அவ்வாயு பலத்தால் அவைகள் மநணமடைகின்றன.

358

21. *கந்தர்பஸ்ய யதாரூபம் ததா ஸ்யாதபி யோகிநஹ*
*தத்ரூப வஸநா நார்யஹ காங்க்ஷந்தே தஸ்யசசங்கமம்*
*யதிஸங்கம் கரோயேஷ தஸ்யபிந்து க்ஷயோ பவேத்*
*மர்ஜரித்வா ஸ்திரீயாஸ் ஸங்கம் சூர்யா தப்பாஸமாத்ராத்*
*யோகிநோங்கே ஸுகந்தஸ்ச்ச ஜாயேபிந்துதாரணாத்.*

இப்படிப்பட்ட யோகி மன்மதனைப் போன்ற அழகுடையவனாயிருப்பான். ஸ்திரீகள் இவனைப் பார்த்தவுடன் மோகிப்பார்கள். அப்பொழுது யோகி அந்த ஸ்திரீகளுடன் சம்போகம் செய்தால் இந்திரியம் நஷ்டமாகும். ஆதலால் ஸ்திரீ சம்போகம் நிவர்த்தி செய்து, மிகவும் சிரத்தையுடன் யோகாப்பியாசம் செய்து இந்திரியம் விடாமல் இருக்கும் யோகியின் சரீரம் மிகவும் பரிமளவாசனையுள்ளதாய் ஆகும்.

22. *ததோஹஸ்யபாவிஷடஹ ப்ரணவம் ப்லுதமரத்தயா*
*ஜாபத் பூர்வர்ஜிதாநாந்து பாபாநாம் நாஸஹேதவே*

பிறகு ஏகாந்தமான ஸ்தலத்தில் உட்கார்ந்து பூர்வ ஜன்ம தோஷங்கள் (யோகாப்பியாசம் செய்யாத முன்னும் செய்த பாவங்களெல்லாம்) நசிப்பதற்காக பிரணவமென்னும் ஓங்காரத்தினால் சூம்பித்த சுவாசத்தை கணக்குடன் ஜபித்து வரவேண்டும்.

23. *ஸர்வவுக்ந ஹரோமநத்ரஹ ப்ரணவஸ் ஸர்வதோஷஹர*
*எவ மப்பாஸயோகா ஸித்திராரம்ப ஸம்பவா*

'ஓம்' என்னும் பிரணவம் சகல விக்கினங்களையும் சகல பாவங்களையும் நசிக்கச்செய்யும். இப்படிச் செய்வதனால் சகலமும் சித்தியாகும்.

24. *எகவாரம் ப்ரதிதினம் சூர்யாத் கேவலகும்பகம்*

பிரதி தினம் ஒருமுறை கேவலகும்பகம் அப்பியாசம் செய்யவேண்டும் என்றால். மூச்சை 'ஓம்'என்னும் மந்திரத்துடன்

வலது நாசியில் உள்ளுக்கிளுத்தும் கர்ப்பத்தில் அதிகநேரம் நிறுத்த வேண்டும்.

25. இந்திரியா ணீந்த்ரியார்த் தேயோ யத்ப்ரத்யா ஹரணம்
யோகீ கும்பக மாஸ்தாப ப்ரத்யாஹாராஸ் ஸ உச்யதே
[ஸ்புடம்

யோகியானவன் கேவல கும்பகத்திலிருந்து கண்கள் மூக்கு வாய் செவிகள் தேகசர்மம் என்னும் ஐந்து இந்திரியங்களையும் விஷயங்களில் போகவிடாமல் திருப்புவதே பிரத்தியாஹாரமென்று சொல்லப்படும்.

26. யாமமத்ரம் ப்ரதிதினம் யோகீ யக்நா ததந்த்ரிதஹ
யதாவா சித்ரஸாமர்த்யம் ஜாயதே யோகிநோ த்ருவம்

யோகியானவன் சோம்பலில்லாமல் பிரதிதினம் மூச்சை ஒரு மணி நேரம் கும்பகம் செய்தால். அவனுக்கு அனேக சாமர்த்தியங்கள் உண்டாகும். அன்றியும்.

27. தூர ஸ்ருதிர்தூர த்ருஷ்டிஹி க்ஷணாத் தூரகமஸ்ததா
வாக்ஸித்திஹி காமரூபத்வ மத்ருஸ் யகரணி ததா
மலமூத்ர ப்ரலேபேந லோஹோதே ஸவர்ணதா பவேத்
பேகதி ஸ்தஸ்யஜாயேத ஸந்ததாப்யாஸ யோகதஹ.

தூரத்திலுள்ள சம்பவங்களைக் கேட்கவும் பார்க்கவும் க்ஷணத்திற்கு தூரப்பிரயாணம் செல்லவும். இஷ்டமான ரூபங்களை எடுக்கவும். தன்னை அன்னியர்கள் அறிந்து கொள்ளக்கூடாத சக்தியும் உண்டாகும். இப்படிப்பட்ட யோகியினுடைய மல மூத்திரங்களை இரும்பில் பூசினால் தங்கமாகும். எப்பொழுதும் யோகாப்பியாசம் செய்து கொண்டிருக்கப்பட்டவனுக்கு ஆகாசத்தில் சஞ்சரிக்கும் சக்தியும் உண்டாகும்.

28. *ஸதா புத்திமதா பாவ்யம் யோகிநா யோகஸித்தயே*
*எதே விந்நா மஹாஸித்தோக ரமேத்தோஷு புத்திமாந்*

யோகியானவன் தனக்கு யோகம் சித்திக்குமென்னும் எண்ணத்தினால் பிரதிதினம் யோகாப்பியாசம் செய்துவர வரவேண்டும். யோகப்பியாசம் சித்தியான பிறகு முன்சொல்லிய தூரசிரவணம் முதலாகிய ஸித்திகளெல்லாம் பரமாத்மா சம்பந்தத்திற்கு (யோகத்திற்கு) விக்கினங்கள். ஆதலால், புத்திமான்கள் அப்படிப்பட்ட விஷயங்களில் இச்சை வைக்கலாகாது.

29. *ஸிஷ்யாஸச்ச ஸ்வஸ்வகார்யேஷு ப்ரார்த்தந்திநஸம்*
*[ஸயஹ*
*தத்தத் கர்மகரவ்யயக்ர ஸ்வாப்பாஸோ விஸ்மருதோபவத்*

சிஷ்யர்கள் தங்கள் கராணார்த்தமாய் யோகியை பிரார்த்திப்பார்கள். அந்தக் காரியங்களில் யோகி பிரவேசிப்பானாகில். தன் யோகாப்பியாசத்திற்கு விக்கினமுண்டாகும். ஆதலால்.

30. *அவிஸ்மருத்ய குரோர்வாக்ய மப்யஸேத் ததஹர்நிஸம்*

குரு வாக்கியத்தை மறவாமல் எப்பொழுதும் யோகாப்பியாசம் செய்துவர வேண்டும்.

31. *ததஹ பரிசயாவஸ்தா ஜாயதே ப்யாஸயோகதஹ*

யோகாப்பியாசம் சித்தியானபிறகு பரமாத்மாவிற்கு கேவல சமீபத்திலிருக்கும் ஸ்திதிக்கு வருகிறான். என்றால் யோகத்தில் அனுபவம் அதிகமுண்டாய் மோக்ஷமடையும் ஸ்திதிக்கு வருவான் என்பதேயாம்.

32. வாயுஹகபரிசிதோ யத்நா தச்கிநா ஸஹ குண்டலீம்

பாவயத்வா ஸுஷுநாயாம் ப்ரவிஸேஸ்க நிரோ ததஹ வாயுநா ஸஹசித்ரம் பர்விஸேஸ்ச மஹாபதம்

தன் பிரயத்தனத்தால் கநாபியிலிருக்கும் குண்டலி சக்தியை மூச்சினால் கிளப்பிளவுடன் அதுமுது கெலும்பிலிருக்கும் கஷும்நா என்னும் வெள்ளை நரம்பியிலுள்ள சிறிய துவாரத்தில், மிகவும் விசித்திரமாய்ப் பிரவேசிக்கும்.

33. ப்ரஹ்மணஹ ப்ரளயே நாபிஷத்தி மஹாமதிஹி
மைப்யஸேத் ததா த்யாகம் கடிகா ஷஷ்டிமேவச

மேற்சொல்லியவை களையெல்லாம் அப்யாசம் செய்த யோகி பிரம பிளயத்திலும் மரணமடையமாட்டாள். ஆதலால் அல்லும்பகலுமாய் அறுபது நாழிகையும் விடா முயற்சியாய் யோகாப்பியாம் செய்துவர வேண்டும்.

34. வாயும் நிருத்ய மேதாவி ஜீவந்முக்தோ பவத்யயம் ஸமாதிஸ்
ஸமாதாவஸ்தா ஜீவாத்மா பரமாத்மநோ ஹோ.

மஹா புத்திமானாயிருக்கும் யோகி வாயுவை நிறுத்தி ஜீவன் முக்தனாகின்றான். ஜீவாத்மா பரமாத்மா ஐக்கியமே சமாதி என்று சொல்லப்படும்.

35. பதி ஸ்வதேஹமுத்ஸ்ர ஷ்டு மிச்சாரே துத்ஸ்ருஜேத்ஸ்வயம்
பர ப்ரஹ்மணி லீயேத நாதஸ்யோ த்க்ராந்தி ரிஷ்யதே

இவ்வாறு சித்தியடைந்து யோகியானவன். தன் சரீரத்தை விட வேண்டுமென்று நினைத்தால் விட்டுவிடாலாம். படிப்பட்ட யோகி பரப்பிரம்மத்தில் ஐக்கியமான பிறகு, அவன் மறுபடியும் அந்தப் பரப்பிரம்மத்திலிருந்து விடுபடமாட்டான் மேலும்.

36. அதகோச்சேத் ஸமுத்ஸ்ர ஷடும் ஸிவஸரீரம் பரியம்பாதி
ஸர்வலோகஷு விஹரக் கணிமாதி குணக்லிதஹ
குதாசித் ஸ்வேச்சயா தேலோ யூத்வா ஸ்வர்கே மஹிதே
மதுஷயோ வாபி யக்ஷோவா ஸ்வேச்சயாபி க்ஷணாத்பவேத்

முன் சொல்லிய யோகி தன் சரீரத்தைவிட இஷ்டமில்லா விட்டால் அணிமாதி சித்திகளால் சகல லோகத்திலும் சஞ்சரித்து ஒரு சமயத்தில் விஷ்ணுரூபம் தரித்து சொர்கலோகத்திலும் தன்னிஷ்டம் போல் யக்ஷனாயும் ஆகலாம். அன்றியும்.

37. ஸிம்ஹோ வ்யாக்சோ கஜோ வாஸ்வ ஸ்வெஸ்ச் சயாபஹ
தாமியாத் யதேஷ்டமேவ வர்தேத மத்வாயோகி மஹேஸ்வாஹ
அப்பாஸபேததோ பேதஹ பலந்து ஸமவேவஹி

சிங்கம் புலி மானை குதிரை முதலானவைகள் யோகியினுடைய இஷ்டம்போல் நடந்து கொள்ளும் யோகி தன்னிஷ்டம் போல் நடந்து கொள்வான். மஹேஸ்வரனாயும் அவதாரம் செய்யலாம்.

38. நிஸ்ச்சிதம் த்வாத்மமாத்ரேணா வஸிஷ்டம்யோக ஸேவயா
ஸஹநாவவ த்விதி ஸாந்திஹி இத்யுபநிஷத்
இதியோகதத் வோபநிஷச் ஸமாப்தா.

ஜனங்களில்லாத ஏகாந்தமானவிடத்தில் உட்கார்ந்து நவத்துவாரங்களிலும் மூச்சை போகவிடாமல் நிறுத்தி யோகாப்பியாசம் செய்துவந்தால் "தானேதானாய்" ஆகலாம் என்று போகதத்வோப நிஷத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால். யோகாப்பியாசம் செய்ய வேண்டிய முறைகளையெல்லாம் இந்நூலாசிரியராகிய யோகீஸ்வரர் வேறெரு புதிய நூல் எழுதியிருக்கின்றார். அந்நூலில் பெயர் என்னவென்றால் 'யோகாப்பியாசம் செய்யவேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூல்" என்பதேயாம் அந்நூலை வரவழைத்து வாசித்து அதில் செல்லியிருப்பதே குருவாக்காய்

நினைத்து யோகாப்பியாசம் செய்து வந்தால் அவர்களுக்கு யாதொரு தடையுமில்லாமல் யோகசித்தி உண்டாகும். மேற் சொல்லிய யோகாப்பியாச நூலில் தொடர்ச்சி இதனடியில் இன்னும் விரிவாய்ச் சொல்லுகின்றோம் கேளுங்கள். இதற்கு ஸ்ரீ பகவத்கீதை அத்யாம்-6 சலோகம்-18 பிரமாணம்.

யதா விநியதம் சித்த மாத்மந்யேவா வதிஷ்ட்டதே
நிஸ்ப்ருஹ ஸ்ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா

கிருஷ்ணன்:- ஆதலால், ஓ அர்ஜுநா நான் சொல்லியதைப் போல் மனதை நிறுத்தி யோகத்தை அபயசித்துக்கொண்டே வந்தால் சில காலங்களுக்கெல்லாம் அந்த யோகியினுடைய மனது தனக்குத் தானாய் பரமாத்ம சொரூபத்தில் (கர்ப்பூரத்தை எரித்தபோது கர்ப்பூரம் சிறிதும் தட்டில் இல்லாமல் எரிந்து வெளியோடே வெளியாய் கலந்து விடுவது போல்) கலந்துவிடும். அப்படிப்பட்ட மஹா யோகியானவன் எத்தொழிலைச் செய்தாலும் அவனுடைய இந்திரியங்கள் விஷயங்களில் ஓடிக்கொண்டிருந்தாலும், மனது மாத்திரம் எந்த விஷயங்களிலும் அகப்படாமல் எப்பொழுதும் ஆத்ம சொருபத்திலயே லயித்திருக்கும். அவன் மனது எப்பொழுது அப்படிப்பட்ட ஸ்திதிக்கு வருகிறதோ. அப்பொழுது அவன் யோக சித்தியை அடைந்தவனாகின்றான், என்றால் யோகாப்பியாசம் செய்யப்பட்டவனுடைய மனது, பிரம்ம சொருபத்தில் ஒன்றாய்ச் சேர்ந்து நிச்சலனமாய் இருக்கும் என்பதேயாம் அப்படி இருப்பவனை சமாதி நிஷ்ட்டனென்றே சொல்லப்படுவான்.

அர்ஜுனன்:- ஐயா! கிருஷ்ணமூர்த்தியே! யோகாப்பியாசம் செய்து கொண்டே வரவர அவன் மனது பரமாத்ம சொருபத்தில் கலந்து விடுமென்று சொன்னீர்றல்லவா? அப்பொழுது அவன்

மனது எவ்விதமாயிருக்கும்? இதற்கு முன் விஷயங்களை ஸ்ரீ கிருஷ்ணார்ஜுஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதையில் விரிவாய் காணலாம். இந்தச் சமாதி நிஷ்ட்டையே தியானமென்று கீதையில் பலவிடங்களில் சொல்லபட்டிருக்கின்றது. பிரம்ம நிஷ்ட்டையில் மனம் லயித்து பிரம்மானந்தத்தை அடைந்திருக்கும் ஞானிகள், நிஷ்ட்டைகலைந்து மனம் உதித்து, பிரபஞ்சத்திலுள்ள சகல காரியங்களையும் செய்து கொண்டிருந்தபோதிலும் இந்த ஜகத்து மனோமென்று ததேகத்தியானமாயிருப்பார்களாதலால், அவர்களுக்கு ஜகத்து தோன்றினாலும் தோஷமில்லை, ஞானிகளின் மனம் ஞானக்கிரியினால் பஸ்பமாய் விடுவதனால் காத்திருக்துவ சூந்நியமாய் அதாவது அவர்கள் செய்யும் தொழிலில் மனமில்லாமல் செய்வார்கள் அகங்காரதி விஷயங்களுடைய சேஷ்ட்டைகள் இப்படிப்பட்ட பிரம்ம வேத்தர்களைப் பற்றமாட்டா.

இதற்கு திருஷ்ட்டாந்தம் என்னவென்றால் தாமரையிலையில் ஜலம் ஒட்டாமலிருப்பதுபோல் இந்தத் தேகமென்னும் தாமரையிலையில் விஷயங்களென்னும் ஜலம் எப்பொழுதும் ஒட்டமாட்டா. அப்படிப்பட்ட பிரம்ம வேத்தர்களைச் சில மனிதர்கள் தெரிந்து கொள்ளாமல் நம்மைப்போல் சம்சாரியாய் சமஸ்த விவகாரங்களையும் செய்கின்றான். ஆதலால் அவனை ஹம்ஸசொரூபனென்று எப்படிச் சொல்லலாம் என்று தூஷிக்கப்பட்டவர்களுக்கு அந்த மஹா யோகியினுடைய பாபகர்மங்கள் அப்போதே அவர்களைச் சேருகின்றன. இதற்கு திருவள்ளுவர் குறள் கைவல்யம் பிரமாணம்.

எரியாமற் சுடப்படினு முய்வுண்ட மூய்யார்
பெரியார் பிழைத்தொழுகுவார்,

ஒருவன் தீயினாற் சூடுபட்டானாயினும். அச்சூட்டை எற்றுக் கொள்ளுதல்கூடும் பெரியோர்க்குப் பிழை செய்தோர்கள் எவ்வகையாலும் அவர்களின் சூட்டை ஆற்றிக் கொள்ளமாட்டார்கள் என்றால். பெரியோர்களை தூஷித்தார்கள் ஈடேறமாட்டார்கள் என்பதேயாம்.

பொறுமையாற் பிராரத்தத்தைப் புசிக்கநாட் செய்த கன்மம்
மறுமையிற் றொடர்ந்திடாமல் மாண்டுபோம் வழியே தென்னின்
சிறியவரிதழ்ந்து ஞானி செய்த பாவத்தைக் கொள்வர்
அறிபவரறிந்துபூசித் தறமெலாம் பறிந்துண்பாரே

பொறுமையாயிருக்கும் ஞானி அல்லது யோகிகளை மூடர்கள் தூஷிப்பதனால், முன் ஜன்மங்களுக்கு விதையாயிருக்கும் அவர்களின் சஞ்சிதமென்னும் பாப கர்மங்களின் மூட்டையைப் பங்கிட்டுக் கொள்கின்றார்கள். அப்படிப்பட்டவர்களை, சில சொரூபமென்றறிந்து அவர்களை ஆதாரனை செய்துவரும் புருஷர்கள் அம்மஹாஸ்களினுடைய புண்ணிய கர்மங்களைப் பங்கிட்டுக் கொள்கின்றார்கள், இப்புண்ணிய பாவ கர்மங்கள் அவர்களை விட்டு நீங்கியவுடனே மோக்ஷமென்னும் பெரியவீட்டை அடைவார்கள்.

ஆதலால், இப்படிப்பட்ட பிரம்மாத்மா அநுபவமுடைய இந்த அத்தியாத்மா வித்தையைத் தெரிந்து கொள்ளாமல் சரீரமே 'நான்' என்னும் மாயையில் வீழ்ந்து பந்தத்தில் அகப்பட்டு இருக்கப்பட்டவர்களுக்கு இந்த ஜீவன் முக்தி அனுபவம் எவ்விதமாய் உண்டாகும்.

ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை அத்யாயம் 4 சுலோகம்-28 ல் அர்ஜுநன் கேட்கின்றான்:

அர்ஜுநன் : ஓ ஸ்வாமி! இப்பொழுது நீர் சொல்லி யக்ஞத்தில் யோகயக்ஞமும் அதாவது இயம நியம

பிராணயாமாதி அஷ்ட்டாங்க யோகத்தையும் ஓர் யக்ஞமாகும்' அதில் அவிஸ் (விறகுகள்) எது? அக்நி எது? அதை விவரித்துச் சொல்லும் கிருஷ்ணா;

அபாவநே ஜுஹவதி ப்ராண மபாநம் ததாபரே
ப்ராணாபாநகதீ ருத்வா ப்ராணயாம பராயணஹ
அபரே நியதாஹாராஹப்ராணாந்ப்ராணேஷுஜுஹ்வதி

அ-4 சு-29

கிருஷ்ணன்: ஓ அர்ஜுநா! யோகத்திற்கு முக்கியமான அங்கம் பிராணயாமம். அந்தப் பிராணாயாமம் எப்படிப்பட்டதென்றால், மூக்குத் துவாரங்களில் நடந்து கொண்டிருக்கும் மூச்சை 'ஓம்' என்னும் மந்திரத்துடன் உள்ளுக்கிழுத்து நிறுத்தவேண்டும். பிராணயாமம் செய்வதற்கு ரேசக பூரந கும்பகமென்று மூன்றுவித சாதனங்களுண்டு. ரேசகமென்றால் மூச்சை மூக்குத் துவாரங்களின் வழியாய் வெளியில் விடுவது; அதற்கு விசுவாசமென்று சொல்லப்படும். பூரகமென்றால், வெளி வாயுவை மூக்குத் துவாரங்களின் வழியாய், உள்ளுக்கிழுப்பது, அதற்கு நிசுவாசமென்று சொல்லப்படும், இதன் பாகமே குதத்தின் வழியாய்ப் போகும், அது அபானமென்று சொல்லப்படும், கும்பகமென்றால் உள்ளே இழுத்த மூச்சை வெளியிடாமல் நிறுத்துவது பிராணனென்றால் இருதயத்திலிருக்கப்பட்ட வாயு ஊர்த்துவ முகமாய் (மேல்நோக்கி) இருக்கப்பட்ட வாயு பிராணனென்றும், அதோ முகமாய் (கீழ்நோக்கி) இருக்கபட்ட வாயு அபானனென்றும் சொல்லப்படும். பிராணாயாமம் செய்யப்பட்ட யோகி ஓர் மூக்கை மூடி, மற்றோர் மூக்கில் மூச்சை இழுத்து நிறுத்தி மறுபடியும் மூச்சை விடும்பொழுது முன் மூடியிருந்த மூக்குத் துவாரங்களின் வழியாய் விடுகின்றான். இவ்விதமாய் வாயுவை அப்பியாசம் செய்வதனால், ஊர்த்துவ வாயுவும் அதோ வாயுவும் சேர்ப்பித்தவனாகின்றான். அப்பொழுது பிராணனை அபானத்தில்

சேர்த்ததாகின்றது. இப்படிச் செய்வதே பிராணனை அபானத்தில் ஹோமம் செய்வது என்று சொல்லப்படும் உள்ளுக்கிழுத்த மூச்சை வெளியில் விடுவதால் அதோ முகமாயிருக்கும் வாயு ஊர்த்துவ முகமாய்ச் செல்லும், அதாவது அபானத்தைப் பிராணனுடன் சேர்த்ததாகின்றது. இதுவே ரேசகமென்றும் அசுவாசமென்றும் சொல்லப்படும். சிலர் சொற்ப ஆகாரத்தைப் புசித்து பிராண வாயுவை வெளியில் விடாமல் கர்ப்பத்திலேயே நிறுத்துவார்கள், இதுவே கும்பகமென்னும் பிராணயாமம் இப்படிச் செய்வது பிராணவாயுவை நிறுத்துகின்றார்கள். அதாவது பிராணாயான, வியானோதான சமானனென்னும் பஞ்சப் பிராணன்களினுடைய வியாபாரங்களாகிய உசுவாச நிசுவாசங்களையும், நாக கூர்ம கிருகர தேவதத்த தனஞ்சயனென்னும் உப்பிராண வாயுக்களையும் நிறுத்தி எந்த மனோவியாபாரங்களும் இல்லாதவர்களாய் இருப்பார்கள்.

அர்ஜுநன்: ஸ்வாமி! அப்படிச் செய்வது கேவல சரீரசாதனமாயிருக்கின்றது. இது சாதாரணமாய்க் கரடி வித்தைக்காரன் தன் உதரபோஷணார்த்தமாய் அப்பியசிக்கும் வித்தையாகின்றது. இப்படிப்பட்ட வித்தை எப்படி மோக்ஷசாதனமாகும்? இதனால் யோகிகளுக்கு என்ன பிரயோஜனம்?

கிருஷ்ணன்: நீர் செல்லியது வாஸ்தவமே, ஆனால் கரடிவித்தை செய்பவன், தான் வாயுதாரணையின் சாமர்த்தியங்களை இதரர்களுக்குக் காட்டி அதன் மூலமாய் உதரபோஷணம் செய்து கொள்கின்றானே யொழிய, அவனுக்கு அது மோக்ஷசாதனமல்ல, யோகிகளோ அப்படியல்ல, அவர்கள் இந்தப் பிராணயாமத்தை என் அப்பியசிக்கின்றார்களென்றால், மனம் எங்கும் ஓடமல் ஓர் லக்ஷியத்தில் நின்றிருப்பதற்கு

அனுகூலமானதாய் இருக்கின்றதென்று அப்பியசிக்கின்றார்கள் என்றால், அவர்கள் தமது மனதை பரமாத்தமாவில் ஐக்கியம் செய்பவர்களாயிருக்கின்றார்கள். மனதை பரமாத்மாவில் ஐக்கியம் செய்ய இந்தப் பிராணயாமமே மிகவும் முக்கியமானதாயிருக்கின்றது. அதலால் இதனை யோகிகள் அப்பியாசம் செய்கின்றார்கள். இது மோஷ சாதனத்திற்கு முக்கியமான தாயிருக்கின்றது.

அர்ஜுநன்: சுவாமி! இப்பொழுது நீர் சொல்லிய பிராணயாமங்களில் கும்பமென்னும் பிராணயாமத்திற்கு மித ஆகாரத்தைப் புசித்து, பிராணவாயுவை வெளியிடாமல் கர்ப்பத்திலயே நிறுத்திவைப்பார்களென்று சொல்வதற்குக் காரணமென்ன? மற்றப் பிராணாயாமங்களுக்கு இல்லாத சொற்ப ஆஹாரம் இதற்கு மாத்திரம் எப்படி உண்டாயிற்று சொல்லும் கிருஷ்ணா!

கிருஷ்ணன்: அர்ஜுநா! இந்தக் கும்பகமென்னும் பிராணயாமம், சொல்ப ஆகாரத்தைப் புசிப்பவர்களுக்கு மாத்திரமே சாத்தியமாகுமேயொழிய இதரர்களுக்குச் சாத்தியமாகமாட்ட, ஏனென்றால், இந்த பிராணாயாமம் செய்வதனால் பிராணவாயுவை வெளிவிடாமல் கர்ப்பத்தில் நிறுத்தவேண்டும். அப்படி நிறுத்துவதற்குக் குடலில் இடம் வேண்டியதாயிருக்கின்றது, ஆதலினால், சொல்ப ஆகாரம் புசிக்க வேண்டும், வயிறாரப் புசித்தால், குடலில் பிராணவாயு தங்குவதற்கு இடமில்லாமலிருக்கும், பிராணாயாமம் செய்பவர்கள் சொல்ப ஆகாரம் புசிக்க வேண்டும். அங்ஙனம் புசித்தால் தான் பிராணவாயு கும்பகத்தில் குடலில் தங்கியிருக்கும் இன்னும் அத்தியாயம் 6, சுலோகம் 11, 12, 13, 14-ல் இன்னும் என்ன சொல்லியிருக்கிறாரென்றால்.

ஸுசென தேஸே ப்ரதிஷ்ட்டாப்ப ஸ்திர மாஸந மாத்நஹ
நாத்யுச்ரித நாதிநீசம் செலாஜிரு குஸோத்தரம்
தத்ரைகாக்ரம் க்ருத்வா யத சித்ததேந்திரிய க்ரியஹ
உபவிஸ்யாஸநே யுஜ்ஞ்ரா த்யோக மாத்ம விஸுத்தயே
மைம் காயஸிரோக்ரீவம் தாரயந்த சலம் ஸ்திரஹ
ஸம்ரேஷ்ய காஸிகாக்ரம ஸ்வம் திஸஸ்சா நவலோகயந்
ப்ரஸாந்தாத்மா விகதபீ ர்ப்ரஹ்மசாரி வ்ரதே ஸ்திரஹ
மா ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸித மத்பரஹ

கிருஷ்ணன்: *அர்ஜுநா இன்னும் சொல்கின்றேன் கேள், யோகாப்பியாசம் எப்படிச் செய்ய வேண்டுமென்றால், ஏகாந்தமான ஸ்தலத்தில் பரிசுத்தமான இடத்தில் எறும்பு, மூட்டுப் பூச்சி முதலானவைகளின் பாதையில்லாமல் இருக்க ஒரு அங்குலம் உயரமுள்ள ஓர் பெரிய பீடத்தை அதாவது, (ஓரங்குல உயரமுள்ள மணையை) அமைத்து, மனது சலனமில்லாமல் நிச்சலனமாய் நிறுத்தி யோகாப்பியாசம் செய்வதற்காக அந்த மனையின்மேல் தர்ப்பாசனமும், அதன்மேல் மான்தோலும் போட்டு பத்மாசனத்துடன் உட்கார்ந்து பிராணாயாமம் செய்யும் பொழுது மூச்சை மூக்குத் துவாரங்களின் வழியாய் உள்ளுக்கிழுத்து, அந்த மூச்சை வெளிவராதபடி கண்டத்தினிடம் மூடிவிட வேண்டும். அப்பொழுது மூச்சு குதஸ்தானத்தின் வழியாய் அபான வாயுவாய்ப் போக ஆரம்பிக்கும், அச்சமயத்தில் அதை வெளியில் போகவிடாமல் இரண்டு பீருஷ்ட்டங்களையும் கெட்டியாய் இறுக்கிப் பிடித்த போதிலும், அந்த மூச்சு அபான வாயுவாய் வெளியில் செல்லும் மூச்சை அதிகநேரம் நிறுத்திப் பழகினவர்களுக்கு வாயு குடலில் நின்றுவிடும். அபான வாயு மேற்படி மான்தோல்மீது படாமலிருப்பதற்காக அதன்மேல் வெள்ளை வஸ்திரம் மடித்துப் போட்டு உட்கார்ந்து மனதை கண்கள் மூக்கு வாய் செவிகளின் தேகசர்மம் என்னும் ஐந்து*

இந்திரியங்களின் வழியாய் ஓடவிடாமல் திருப்பி நிச்சலனமாய்ச் செய்து அந்தகரண பரிசுத்த நிமித்தமாய் யோகாப்பியாசம் செய்யவேண்டும். இவ்வப்பியாசம் செய்வதற்குமுன் தன் சரீரத்தை எப்படி வைக்க வேண்டுமோ அதைச் சொல்லுகிறேன் கேள்:-

சிரசு கழுத்து மார்பு இடுப்பு முதலானவைகளை அசைக்காமலும் சாய்க்காமலும், அசதி சோம்பல் முதலிய தேகக் குற்றங்கள் இல்லாமல் நேராய் நிமிர்ந்து நிற்கும்படி செய்து இங்குமங்கும் திக்குகளைப் பாராமல் அசையாதவனாய்த் தன் மூக்கு நுனிக்குறியில் திருட்டியை நிறுத்திப் பிறகு யோகாப்பியாசம் செய்து வரவேண்டும் சரீரம் நிற்பதற்காக பிக்ஷை எடுத்துச் சாப்பிட்டு ஸ்திரீ எண்ணமில்லாதவனாய் பிரம்மசாரியாயிருந்து ஸம்சார சமுத்திரத்தை எவ்விதமாய்க் கடப்பேன் என்னும் பயமுடையவனாயிருந்து, மனதை விஷயங்களில் போகவிடாமல் திருப்பிக் கொண்டு நிச்சாலன் மனதுடையவனாய்த் தன் ஆத்மாவில் மனதைச் சேர்பிக்க தியானயோகத்தை அப்பியசிக்க வேண்டும். தன் மூக்கு நுனியில் திருஷ்ட்டியை நிறுத்தச் சொல்லிய காரணமென்னவென்றால் மூக்கு நுனியில் திருஷ்ட்டியை நிறுத்தினால் மனது மூக்குநுனிக்குறியிலேயே நின்றிருக்குமென்று அறியக் கடவாய் அன்றியும்.

"சுலோ || ஸுகாஸதே ஸமாஸீதஹ தத்வாப்யாஸம் ஸமா சரந் ஸதாப்பாஸேந ததஹக் கார்யாத் பரதத்வ ப்ரகாஸநம ஆஸநம பராண ஸமரோதஹ ப்ரதயா ஹாரோ தாரணார்யா நம ஸ்மாதிரேதாநி யோகாங்காநி வராநநே ஏகாந்தே விஜ நே ரம்யா குஹாயாம புண்ய பூமிகே ரஹி[illegible] 'மஸகைர்தம்பிஸுர் தேவாயதநகேபி வாஸித்தக்ஷேத்ரே மஹாதீர்த்[illegible] தியாகாஸிதிஹி ப்ரஜாயதே தந்ரஸித்தாஸநம் பத்வா குஜுகாய[illegible] காரயேத்

''யுக்தாஸநம் ஸமாருஹ்ய ஸமகாயஸிரோ தரஹ நாஸாக்ர த்ருஷ்ட்டிரேகாந்தே ஜபேதோங்கார மவ்யயம் பூர்புவஹஸ்வரிமே லோகாஹ ஸோமஸூர்யாக் நிதேவ தாஹ யுஸ்யமாதாராஸு திஷ்ட்டந்தி தத்பரம் ஜ்யோதி ரோமிதி, ஆஸாநேந ருஜம்ஹந்தி ப்ராணாயாமேந பாதகம், விகாரம்மாநஸம்யோகீ ப்ரத்யாஹா ரேண முச்சதி தாரணாபிஹி மநோதைர்யம் த்யா நம் நிஸ்ச்சல மத்புதம் ஸம்ாதௌ மோ க்ஷமாப்நோகி த்யகத் வா கர்மஸு பாஸ்ஸுபம்.

*என்னும் யோகமார்த்தாண்ட வாக்கிய ரீதியாய் மனது சஞ்சலமில்லாமல் நிஸ்ச்லமாயிருக்க சித்தாசனத்தில் உட்கார்ந்து தியானாப்பியாச விசேத்தினால் ப்ரஹம சாக்ஷாத்காரத்தை அடையவேண்டும் இமய, நிமய, ஆசன, பிராணாயாம பிததியாகார, தாரண, தியான சமாதியென்னும் இந்த எட்டும் யோகங்களென்று சொல்லப்படும். யோகாப்பியாசம் செய்யப்பட்டவள் ஜன சஞ்சாரமில்லாததாகியும், வியாக்ராதி (புலி முதலாகிய) ஐந்துக்களின் பயங்கரத் தொனி இல்லாததாயும் இருக்கப்பட்ட மலைக்குகையிலாகிலும், மகான்கள் இருந்து பவித்திரமான பிரதேசங்களிலும் கிராமத்திற்குத் தூரமாய் ஏகாந்தமாயிருக்கப்பட்ட பாழடைந்த தேவாலயங்களிலாகிலும், யோகிகள் சித்தியடைந்த ஆசிரமங்களிலாகிலும் புண்ணிய தீர்த்தக் கரைகளிலாகிலும் உட்கார்ந்து இடுப்பு மார்பு கழுத்து சிரசு முதலானவைகளைச் சரியாய் நிறுத்தி யோகாப்பியாசம் செய்து வந்தால் யோகசித்தியை அடையலாம். யோகாப்பியாசி எந்த ஆசனத்திலாகிலும் உட்கார்ந்து காயத்திரியில் சொல்லியிருக்கும் ரஹஸ்யத்தை அறிந்து அதாவது 'தத்ஸவிதுர்வ ரேண்யம்'' ''பர்கோ தேவஸ்ய தீமஹி'' ''தியே யோக; ரப்சோதபாத்'' என்னும் இம்மூன்று வாக்கியங்களும் 'அ' 'கார' 'ம' காரங்களாய் 'ஓங்' காரமாயிருக்கின்றது. இந்தப் பிரணவாக்ஷரம் ரேசகமே (மூச்சு வெளியில் விடுவதே) 'அ' காரம் பூரகமே (மூச்சு உள்ளுக்கிழுப்பதே 'உ' காரம் கும்பகமே உள்ளுக்கிழுத்த மூச்சை வெளியில் விடாமல் நிறுத்துவதே) 'ம'*

காரம் இந்த ஓங்காரமே 'ஸோஹம்' ஸோ என்பதில் 'ஓ' என்னும் ஜீவாக்ஷரமும் ஹம்என்பதில் 'ம' என்றும் ஜீவாக்ஷரமும் சேர்ந்து ஓம் என்னும் சப்தம் உண்டாயிற்று, இந்த ஓம் என்பதை உசுவாச நிசுவாசங்களில் அதாவது, மூச்சுடன் 'ஓம்' என்னும் மந்திரம் சேர்ந்து உள்ளுக்கிழுத்து நிறுத்தப்பழகிவர வேண்டும் இந்த மூன்று அக்ஷரங்கள் அடங்கிய அக்கினி முதலான தேஜோ வஸ்துக்களாயும் சிருஷ்ட்டி ஸ்திதி லயங்களுக்குக் காரணமாகிய, பிரம்மா விஷ்ணு ருத்திரர்களாயும் இவைகளுக்கெல்லாம் மூலமாகிய பரப்பிரம்ம சொரூபமாயும் இருக்கிறது. சாஸ்வதமான ஓங்கார வாக்கியத்திற்கு ஓங்கார வாக்கியத்திற்கு லக்ஷியமான ஜோதி சொருபமாகிய தன் நிஜ சொரூபத்தில் மனதை ஐக்கியம் செய்ய வேண்டும். இமய நியமங்களினால் ஐந்து பொறிகளும் அடங்கும். ஆசன சுத்தியினால் சகல வியாதிகளும் நிவாரனையாகும். பிராணாயாமம் செய்வதனால் பாவங்களெல்லாம் நசிக்கும். பிரத்தியாகாரம் செய்வதனால் மனோ விகாரங்களெல்லாம் தீரும்; தாரணை செய்வதனால் யோகசித்தியை அடைவோமென்னும் மனோ தைரியம் உண்டாகும் தியானத்தினால் தன் சரீரம் மறந்து இதரர்களுக்கு ஆச்சரியத்தை உண்டாக்கும் சமாதியில் இருந்தால் புண்ணிய பாவங்கள் ஒழிந்து மோக்ஷத்தை அடையலாம்

பன்னிரண்டு பிராணாயாமம் செய்தால் ஒரு பிரத்தியாகாரம் அதாவது பன்னிரண்டு பிராணாயமாம் செய்வது அவ்வளவு கஷ்ட்டம். ஒரு பிரத்தியாகாரம் செய்வது கஷ்ட்டம் பன்னிரெண்டு பிரத்தியாகாரம் செய்தால் ஒரு தாரணை அதாவது பன்னிரண்டு பிரத்திபாகாரம் செய்வது எவ்வளவு கஷ்ட்டமோ, ஒரு தாரணை கஷ்ட்டப்பட்டு செய்தால் தியானம் சித்திக்கும் அந்தத் தியானத்திலிருந்து சமாதியை அடையலாம். இப்படி அனேக காலம் செயது நிச்சலனமாய்ச் சமாதியிலிருந்த யோகி பிரம்மஸாக்ஷரத்காரத்தை அடைவான். இதற்குச் சாமவேதம் 46வது யோக சிகோபநிஷத் பிரமாணம்.

''ப்ராணாம த்விஷ்ட்கோ ப்நத்யாஹந ப்ரகீர்த் திதஹ'' ப்ரதயாஹார தஷ்ட்கோ ஜயாதே தராணா ஸுபா தாரணா த்வாதஸ ப்ரோக்தமயாநமயோக விஸாரதைஹி த்யாந த்வாத ஸகேநைவ ஸமாதி ரபிதீயதே. ஸமாதெளபரஞ்ஜோதி ரநநந்தம் விஸ்வதோ முகம் தஸ்மிய தருஷ்டே க்ரியா காமவதா யதேந வித்யதே.

''ஸூர்யநாட்யா ஸமாக்ருஷ்ய வாயுமப்யாஸ யோகிநா விதி வ்தது கும்பகம் க்ருத்வ ரேசயேத் சிதரஸ்மிநா உதரே பஹுரோகக்நம் க்ரிகீதோஷம் நிஹந்தி சமுஹூரமுஹூரிதம் கார்யம் ஸூர்யபேத துதாம்ஹ்ருதம் நாடீப்யாம் வாயுமாக ருஷ்ய குண்டல் யாஹ பார்ஸ்வயோஹோ க்ஷபேத் தாரயேது தரே பஸ்சாதரேசயே த்ருடயா ஸுதிஹி கண்டே கபாதி தோஷக்நம் ஸரீராக்கி விவர்த்தனம் நாடீஜலாபஹம் தாதுகத தோஷவிநாசனம் கச்சத்ஸ் திஷ்ட்டதஹது கார்யமுஜ்ஜாயாக்யம் கும்பகம். முகேநவாயும் ங்ஸக்ருஹய க்ராணரகத் ரேணம் ரேசயேத்ஸீதலிகரணம் சேதம் ஹந்தி பித்தம் க்ஷுதா த்ருஷம். ஸ்தநயோரத பஸத்ரேவ லோஹகாரஸய வேகதஹ ரேசயேத் பூரயேத் வாயுமாஸரமம் தேஹகம தயா யாதாஸ்ரமோ பவேத் தேஹே ததா ஸூர்யேண பூரயேத், வாதபித்த ஸ்லேஷ்மஹரம் ஸரீராக்நி விவர்தகம் குண்டலீ போதகம வக்தரதோஷக்நம் ஸுபதம் ஸுகம் ப்ரஹ்நாடி முகாந்தஸ்த கபாத்யர்கள் நாஸநம் ஸம்யகபந்த ஸமுத்பூதம க்ரந்தி த்ரயவி பேதகம் விஸேஷேணைவ கர்தவ்யம் பாஸ்த்ரக்யம் கும்பகம் தவிதம் பந்த த்ரயமதே தாநீம் ப்ரவக்ஷ்யாமிய தாக்ரமம் நித்யம் க்ருதேந தேநாஸெள வாயோர் ஜயமவாப் நூயாத்'' (யோகசிகோநிஷத்)

ப்ராணாயாமோ பவதேவம் பாபிகேந்த நபாவகஹ,''

*இந்தப் பிராணாயாமம் செய்வதனால் சர்வ நோய்களும் நிவாரணையாவதுமேயன்றி புண்ணிய பாவங்களென்னும் விறகுகளை பிராணாயமென்னும் அக்நிதத்தம் செய்துவிடும், புண்ணிய பாவகர்மங்கள் எப்பொழுது பஸ்மமாய் விடுகிறதோ அப்பொழுது ஒழிந்து விடுகின்றதோ அப்பொழுதே சஞ்சிதமென்னும் மூட்டைகள் பஸ்மமாய்விடுகின்றன. சஞ்சிதமென்னும் புண்ணிய பாவங்களின் மூட்டைகள்*

36B

எப்பொழுது பஸ்மமாய் விடுகிறதோ, அப்பொழுதே புனர் ஜநநமில்லாத விதேஹ முத்தியை அடைகிறான் என்று அறியக்கூடவாய்

அர்ஜுநன்: சுவாமி யோகி தியானம் செய்யும் பொழுது தேகம் சிரசு கண்டம் முதலானவைகளை அசைக்காமலும் இங்கும் மங்கும் திக்குகளை பாராமலும் அசையாதவனாம் தன் மூக்கு நுனியில் திருஷ்ட்டி ஏன் நிறுத்தவேண்டும்.

கிருஷ்ணன்: அப்படிச் செய்வதனால் அவனுடைய திருஷ்ட்டி இதர விஷயங்களில் ஓடாமலிருக்கும், அவனுடைய மனது விஷயங்களின் மீது ஓடுவதற்கு அவகாசமிராது.

அர்ஜுநன்:- பிராணாயாமம் செய்யும்பொழுது பிராணவாயுவைப் பந்தனம் செய்வதனால் பிராணனுக்கு அபாயம் உண்டாகாதா?

கிருஷ்ணன்: பிராணாயாமம் செய்யப்பட்டவன் கிரமக்கிரமமாய் நாளாவட்டத்தில் பிராண வாயுவை நிறுத்தி, எண்ணிக்கைகளைச் சிறுகச்சிறுக உயர்த்திக் கொண்டே வருவானாகில் அபாயம் உண்டாகாது. அதனால் மனது ஒரே திருஷ்ட்டியில் சலிக்காமலிருந்து கடைசியில் பகவத் சொரூப லக்ஷியத்தில் நின்றுவிடும் இது குருவினால் தெரிந்துகொள்ள வேண்டும்.

யோகாப்பியாசத்தினால் இந்திரியங்கள் மனம் புத்தி பிராணவாயு சரீரத்தினுடையவும் வியாபாரங்கலெல்லாம் நிறுத்தினவனாயிருக்கும் ஓர் சற்குருவை ஆசிரயித்து அவருக்குச் சிசுருஷை செய்து அவரால் உபதேசம் பெற்று ஜன சமூகமுள்ள இடங்களில் இல்லாமலும் ஒருவேளை தன்னிடம் ஜனங்கள் வந்த போதிலும் அவர்களுடன் தான் கலக்காமலும் பீக்ஷானனம் புசித்து ராகத்துவேஷங்கள் அதாவது தன் குற்றத்தைக்காட்டாமல்

இதரர்கள் குற்றங்களைக் காட்டித் தூஷிப்பது முதலிய குணங்கள் இல்லாதவனாயிருந்து யாரிடத்தும் எந்த காரணத்தினாலும் விரோதிக்காமல் இருப்பதே பிரம்மசாரிய விரதமென்று சதா என்னிடத்திலேயே மனதை நிறுத்தி என்னையெ தியானித்துக் கொண்டிருக்க வேண்டும். அத்தியாயம் 6 சுலோகம் 15

யுஞ்ஜ ந்நேவம ஸதாத்மாநம் யோகீ நியதமாநஸஹ
ஸாந்திம் நிர்வாண பரமாம் மத்ஸம் ஸ்தாமதி கச்சதி

அர்ஜுநா! (10-11- 12-13 14- சுலோகங்களில் சொல்லியது போல்) மனதை யோகத்தினால் நிறுத்த அப்பியாசம் செய்து வந்தால், கடைசியில் அந்த யோகம் பழுத்தச் சித்த சாந்தி உண்டாகும். எப்பொழுது சாந்தசித்தனாகின்றானோ அப்பொழுது என்னை அடைந்தவனாகின்றான்: ஜநந மரணாதி சம்சார விஷயங்கள் யாவும் நாசமாய் நிர்வாண பதவியை என்றால் பரமாத்ம சொரூபத்தை அடைகின்றான். அத்தியாயம் 6 சுலோகம்-16.

நாத்யஸ்நதஸ்து யோகோ ஸ்திநசைகாந்த மநல்நதஹ
நசாதி ஸ்வபந விலஸ்ர ஜாக்ரதோ நைவ சார்ஜுந.

அர்ஜுநா! தியான யோக சமாதி சித்தியடையும் வரையில் நிச்சலனமாய் சரீரம் நிற்பதற்கு வேண்டிய சொல்ப ஆகாரம் சொல்ப நித்திரை மாத்திரம் இருக்கவேண்டும். இதற்கு சப து பிரமாணம் என்னவென்றால்'

"யாதுஹவா ஆத்மஸம்மித மந்நம ததவதி தந்த ஹிநஸ்தி
யத்பூயோ ஹிநஸ்தி தத் யத் கநீயோ ந ததவதி"

சரீரம் நிற்பதற்காக வேண்டிய சொல்ப ஆகாரத்தை மாத்திரம் புசித்தால் அது, யோகாப்பியாசி மனதை வெளியில் ஓடவிடாமல் நிறுத்தி அவனைக் காப்பாற்றமே யொழிய அநர்த்ததை உண்டாக்க மாட்டாது.

'பூரேயே தஸநேநார்த்தம் த்ருதீயமுதநேநது வாயோன் சஞ்சாரணார்த்தாய சதுர்த்த மவஸேஷயேந் அர்த்தமஸ நஸ்ய ஸ்வயஞ்ஜநஸ்ய த்ருதீய முத்க்ஸ்யது வாயோஸ் ஸ்ஞ்சாரணார்தந்து சதுர்த்வம் ஸேஷயேத்.

யோகாப்பியாசி தம் வயிற்றில் இவ்வளவுதான் செல்லுமென்று தோன்றிய ஆகாரத்தில் பாதி புசிக்க வேண்டும் மூன்றாவது பாகத்தை ஜலம் சாப்பிட்டு நிரப்பவேண்டும். பிராணவாயு குடலில் தாரமாய் நடப்பதற்காக நான்காவது பாகத்தை காலியாய் விட்டு வைக்கவேண்டும் இதற்கு அதிகமாக யோகாப்பியாசி புசித்தால் அது அவனுக்கு அநர்த்தை உண்டாக்கும். அதிகமாய்ச் சாப்பிட ஆகாரம் இந்திரியங்களுக்கு மிகவும் பலத்தை உண்டாக்கி, விஷய போகங்களில் இச்சை அதிகரித்து யோகத்திற்குக் கெடுதியை உண்டாக்கும். ஆதலால் மித ஆகாரத்தைப் புசித்தால் சரீரத்திலுள்ள இந்திரியங்களுக்குப் பலங்குறைந்து மனம் ஆத்மவோடு கலந்துதான் தானாய் நிற்கும் யோக்கியதையை உண்டாக்கி ரக்ஷிக்கும், யோகாப்பியாசியானவன் ஆகாரத்தை சாஸ்திரத்தில் சொல்லியதைவிட அதிகமாகவேனும் அல்லது குறைவாகவேனும் புசிக்கலாகாது யோகி இந்திரியங்களில் அலுப்பை தீர்தது்க் கொள்ள மிதமான நித்திரை செய்யவேண்டும். அதிக நித்திரை செய்தால் நித்திரையுண்டாகுமேயொழிய யோகம் கிட்டமாட்டாது. யோகி நித்திரை பூர்த்தியாயில்லாமலும் இருக்கலாகாது. நித்திரையில்லாமலிருந்தால் இந்திரியங்கள் மிகவும் அலண்டுயோகாப்பியாசம் செய்ய அதிக கஷ்டத்தை உண்டாக்கும் உலகத்திலுள்ள ஜனங்கள். அதிக நித்திரை செய்து விழித்துக் கொண்டு தம்தம் காரியஙகளில் செல்வதுபோல் யோகியும் இருப்பானாகில் யோகத்திற்கு விககினம் உண்டாக்கும், இதற்கு நாரத புராணம் பிரமாணம்.

"நித்ராஸந பயவிஸ்வாஸ சேஷ்ட்டா தந்த்ராதி வர்ஜநம்"
க்ருத்யா நியிலிதா க்ஷஸ்து ஸக்தோ த்யாயந் ப்ரஸித்யதி

அதிக ஆகாரம் அதிக நித்திரை அதிக உணவு பய விசுவாசம் இந்திரியங்களின் சேஷ்ட்டை சோம்பல் கைகளாலு கால்களாலும் செய்யப்பட்ட வியாபாரங்கள், மந்தபுத் முதலானவைகளை விட்டு நேத்திரங்களை மூடி ஓ தியானத்திலிருப்பவனே யோகசித்தியை அடைவான். இந் ஆகாரவிஷயம் அத்யாயம் 4 சுலோகம் 22-23 யிலும் மு சொல்லப்படிகுக்கின்றது. அத்யாயம் -6 சுலோகம் 17-லு சொல்லுகின்றோம் கேள்:

யுக்தாஹார விஹாரஸ்ய யுக்தசேஷ்ட்டஸ்ய கர்மஸு
யுக்தஸ்தப்நாவபோ கஸ்ய யோகோ பவதி துக்கஹ

கிருஷ்ணன்:- யோகாப்பியாசி மித ஆகாரம் மி நடைகுடும்ப சவரக்ஷணைக்கு எவ்வளவு அவஸ்யமோ அவ்வள வரையில் ஆகாரத்திற்கு வேணடியசம்பா தனையை சம்பாதித் மித நித்திரை மித விழிப்பு உள்ளவனுக்குத் தியானயோக சித்திக்கும். இப்படிப் யோகியினுடைய மனது பரமாத் சொரூபத்தில் கலந்துவிடும்.

"எத்தொழிலைச் செய்தாலு மேதவஸ்கைப்பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே-வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமனம் நீர்க்குடத்தே தான்,"

என்னும் பட்டினத்தடிகளின் வாக்கின்படி சாக்கிர சொப்பனம் சுழுத்தி முதலிய எந்த அவஸ்தைகளிலிருந்தாலு அவனுடைய இந்திரயங்கள் விஷயங்களில் ஓ கொண்டிருந்தாலும், குக்ஷிபாதையின் பொருட்டு எவ்வித தொழில்களைச் செய்து கொண்டிருந்தாலும் அவன் மன மாத்திரம் எந்த விஷயங்களிலும் அகப்படாமல், எப்பொழு ஆத்ம சொரூபத்திலேயே லயித்திருக்கும். அவனுடைய மன

எப்பொழுதும் அப்படிப்பட்ட ஸ்திதிக்கு வருகிறதோ அப்பொழுது அவன் யோகசித்தியை அடைந்தவனாகிறான். யோகாப்பியாசம் செய்யப்பட்டவனுடைய மனது அசையாமல் இருந்து பரமாத்ம சொரூபத்தில ஐக்கியமாக வேண்டும். அப்படி இருப்பவனே சமாதி நிஷ்டனென்று சொல்லப்படும். இன்னும் அத்யாயம் 6 சுலோக-19 பிரமாணம் சொல்லுகின்றேன் கேள்.

யதாதீபோ நிவாதஸ்தோ தேங்கதே யோபமாஸ்மருதா
யோகிநோ யுதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோக மாத்மநஹ.

கிருஷ்ணன்:- அர்ஜுநா! அப்படிப்பட்டவனுடைய மனது எப்படி இருக்குமென்றால். யோகாப்பியாசம் செய்து, மூச்சை நிறுத்தப் பழகினவன் மனது காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட தீபம் எப்படி அசையாமல் நின்று எரிகின்றதோ, அதுபோல் சுவாதீனமான மனதுடைய யோகி சகல எண்ணங்களையும் மறந்து சிலாவடிவாய் அசையாமலிருப்பான். அப்பொழுது அவனுடைய மனம். கண்கள் மூக்கு வாய் செவிகள் தேகசர்மம் என்னும் ஐந்து இந்திரியங்களின் வழியாய் உலக வியாபார விஷயங்களில் ஓடாமல் முன் சொல்லிய அசையாத தீபம்போல் இருக்கும். அஃதெப்படி யென்றால் தீபத்தை அசையும்படிச் செய்வது காற்றல்லவா? காற்று இல்லாவிடில் தீபம் அசைவதற்குக் காரணமில்லையல்லவா? அதுபோல் மனதை அசையும்படிச் செய்து மேற்சொல்லிய இந்திரியங்களேயாம். சமாதி நிலையில் நின்றபொழுது மனதும் இந்திரியங்களும் மேற்சொல்லிய தீபம்போல் அசையாமலிருக்கும். ஆதலால், யோகினுடைய மனது அசையாமல் மேற்படி தீபநிலைக்கு எப்பொழுது வருகிறதோ அப்பொழுது அந்த மனம் சாந்தமடைகிறது. அதனால் அவன் யோகசித்தியை அடைந்தவனாகின்றான் இதற்கு ஆன்றோர் பிரமாணம்.

"வாயுனிற்க மனனிற்கும் மனந்தானிற்கப் பொறினிற்கும்"
பாயபொறிகணிற்க விடர் படுபுன்புலக ணின்றனவால்
ஆயபுலன்கணிற்மையா லகிந்தோன்றாதுள்ளத்தே
தூயபரமா னந்தபரஞ் ஜோதிதோன்ற கண்டிருந்தார்.

உலவாச நிஸ்வாசங்களுக் கேதுவாகிய மூச்சு இயக்க மாற்றிருப்பின், உடனே மனவியக்கம் அடங்கி ஒருவழிப்பட்டு நிற்கும் அம்மனவடக்கத்தால், மெய் வாய் கண்கள் மூக்கு செவியென்னும் பஞ்சேந்திரியங்களின் இயக்கம் (அசைவு) அடங்கி ஒருவழிபட்டு நிற்கும், அப்பரஞ்சேந்திரிய அடக்கத்தால் பரிசம் (சரீரத்தின் மேலிருக்கும் தோல் மூலமாய் அறிந்து கொள்வது) ரசம் (நாக்கினாள் ருசி அறிவது) சப்தம் (காதினால் கேட்பது) முதலாகிய வாசனைகள் அறும் அவைகளற்றாமல் பிரபஞ்ச தோற்றம் புலப்படாதொழியும் அவ்வாறொழிந்து ஏகாக்ர சித்தனாயிருக்கும் பொழுது. பரமானந்த ஸ்வரூபமாகிய மேலான பிரம்மஜோதி பிராப்திலபிக்கும், ஆதலால், வாயு நிற்கப் பிராணயாமம் செய்ய முயற்சிக்கவேண்டும், கஷ்டப்பட்டு மூச்சை அதிகநேரம் நிறுத்தப் பழகினவனுடைய மனமானது எல்லாவிஷயங்களிலும் தனக்குத் தானாகவே யோகபலத்தினால் விரக்தியை அடையச்செய்யும். அப்பொழுது சாதாரண மனிதனுக்கும் தனக்கும் எவ்வளவோ பேதமிருக்கிறதென்று தன் மனத்திற்கே தோன்றி இதரர்களிடம் யாதொன்றும் பேச எண்ணமில்லாத ஸ்திதியில் கொண்டுவந்து மனதை ஓரே நிலையில் நிறுத்திவிடும். ஆதலால் கஷ்ட்டபட்டு நாளா வட்டத்தில் கிரமக்கிரமமாய் சிறுகச்சிறுக மூச்சை முதல் 25-எண்ணும் வரையில் நிறுத்தி சிலமாதங்கள் பழகி பிறகு 50-எண்ணும் வரையில் நிறுத்தி இப்படிச் சில மாதங்கள் பழகி பிறகு 75-எண்ணும் வரையில் நிறுத்தி இப்படிச் சில மாதங்கள் பழகி பிறகு 100-எண்ணும் வரையில் நிறுத்தி இப்படிச் சில மாதங்கள் பழகி பிறகு 200-எண்ணும் வரையில் நிறுத்தி இவ்விதமாய்ச் சிறுகச்சிறுக மூச்சை நிறுத்த உயர்த்திக்கொண்டே வந்தால் மேற்சொல்லிய விஷயங்களையெல்லாம் சுவானுபவத்தில் பிரத்தியக்ஷமாய்க் காணலாம். அத்யாயம்-6 சு-18.

யுஞ்ஜ ந்நேவம் ஸதாத்மாநம் யோகீ விகதகல்மஷஹ
ஸுகேந ப்ரஹ்மஸமஸ்பர்ஸ மத்யந்தம் ஸுகமஸ்துதே

இப்பொழுது நான் சொல்லியதுபோல் எவனெருவன் தன்மனதை விஷயங்களிலிருந்து திருப்பிக்கொண்டு யோகாப் பியாசத்தை அப்பியசித்து வருகின்றானோ அப்படிப்பட்டவன் விகதகல்மஷனாய் என்றால், இதற்கு முன்சொல்லிய ஆகம்யம், சஞ்சிதம் என்னும் புண்ணிய பாவங்களில்லாதவனாய்ப் பரப்பிரம்ம சொரூபனாய் நித்தியாகந்தத்தை அனுபவிப்பான். இப்படிப்பட்ட யோகிக்கு வினைப்பயன் சேஷம் (மிகுதி) இருந்தால் மறுஜன்மத்தில் ஞானியாய்ப் பிறப்பான். யோகியாய்ப் பிறக்கமாட்டான் இதற்குத் தாயுமானவர் பிரமாணம்.

"யோகியார்க்கே ஞான மொழுங்காம் பேரன்பான
தாகியரும் யோகமுள்னே சார்ந்தோர் பராபரமே,"
நில்லடா வாசியைத்தான் வாங்கிக் கொள்ளு
நீங்காத கருவிகளை வறைத்துப்போடு
அல்லடா என்னைப்போல் ஆசானப்பா
அப்பனே யுன்றனுக்கு வாய்க்காதப்பா
சொல்லடா சிவஞானந் தன்னைந் தேர்ந்து
சொற்பெரிய முமுட்சுத் தன்னைப் போற்றி
சொல்லடா சிவஞான கருவுக்குள்ளே
தினந்தினந்தான் பணிந்துமினித் திடமாய் நில்லே,
ஆட்டுமட ஆசையற்று ரோச மற்ற
அனனைசுற்றந் தனைமறந்து அகண்ட மேவும்
பூட்டுமடா நவத் துவாரங்கள் தன்னைப்
பொறிக ளைந்துஞ் சேருமடா புனிதமாக
காட்டிலென்ன நாட்டிலென்ன மௌனங் கொண்டால்
காமதேனு கற்பகமும் உனக்கே சித்தி
வீட்டிலே தீபம் வைத்தாற் பிரகாசிக்கும்
வெளியேறி னாற்றீபம் விழலாய்ப்போமே."

## 66. யோகாப்பியாச காலத்தில் இந்நூலாசிரியருக்கு உண்டாகிய தேகபாதை

இந்நூலாசிரியர் யோகாப்பியாசம் செய்யும் பொழுது பட்ட கஷ்டங்களையெல்லாம் இதனடியில் சொல்லுகின்றார்.

ஓர் அரசன் வேற்றரசனை ஜயிக்கக் காட்டின் வழியாய்ச் செல்லும்பொழுது முதல் பயனீர் (Pioneer) பட்டாளம் காடுகளை வெட்டி ரோட்டு (பாட்டைப்) போட்டுக்கொண்டே செல்வார்கள் பிறகு அவர்களைப் பின் தொடர்ந்து யதாதிகளும் (சிப்பாய்களும்) அவர்களுக்குப் பின்னால் குதிரை வீரர்களும் அவர்களுக்குப்பின் பிரங்கி சவாரிகளும் அவர்களுக்கு பின் அஜிடன் மேஜர் கர்னல் முதலான துரைமார்களும் சென்று யுத்தகளம் சேர்ந்து வெற்றரசனை ஜயிக்கின்றார்கள் அதுபோல் இந்தத் தேகமென்னும் காட்டில் ஆத்மா என்னும் அரசன் நிவசித்துக் கொண்டிருக்கின்றான், அவனைத் தரிசிப்பதற்காக மூக்குரத்திரங்களின் வழியாய் மூச்சை உள்ளுக்கிழுத்து கும்பகத்தில் நிறுத்தவேண்டும். சரீரத்தில் எழுபத்திராயிரம் ரோமத் துவாரங்களுண்டு. இந்த ரோமத் துவாரங்கள் மாமிசம், ரத்தம், கொழுப்பு, நரம்பு முதலானவைகளினால் மூடப்பட்டிருக்கின்றன. அவைகளையெல்லாம் முன் கும்பத்தில் நிறுத்தி வைத்து மூச்சானது சரீரத்தில் ஓடிக்கொண்டிருக்கும் ரத்தக் குழாய்களில் வழியாய்க் கூரான அம்புபோல். எழுபத்திராயிரம ரோமத்துவாரங்களில் வழியாய் அந்த மூச்சு சென்று உள்ளே தங்கியிருக்கும். துர்மலங்களையெல்லாம் வியர்வையுடன் சேர்த்து ஒவ்வொரு ரோமத் துவாரங்களில் வழியாய் வெளியில் கொண்டு வந்துவிடும். அந்தச் சமயத்தில் விசேஷ நோயாயிருக்கும் அப்பொழுது சரீரமெல்லாம் அலண்டு அந்தந்த நாடி நரம்புகளலெல்லாம் தளர்ந்து தம் தப் ஸ்தாங்களைவிட்டுக் கிளம்பி அந்த நாடிகள் சர்ப்பம்போல் சீறிக்கொண்டு காதுகளின் வழியாய் தச (பத்து) வித

வாக்கியங்கள் ஓங்காரத்துடன் சப்தம் காதுகளில் கேட்டுக் கொண்டேயிருக்கும் இதை அனுபவத்தால் பிரத்தியக்ஷமாய்க் காணலாம். இதுவிஷயம் "தசவித நாதங்கள்"என்பதில் சுருதிப் பிரமாணங்களுடன் இந்நூலில் இனி சொல்லப்போகின்றோம்.

இவ்வித கஷ்டத்துடன் பிராணயாமம் செய்யப்பட்டவர்களுக்கு மூச்சு தேகமாத்யந்தம் கூரான அம்பு போட சொல்வதனால் பாதப் பெருவிரல் முதல் உச்சிவரையிலுள்ள அவயங்களெல்லாம் ரணம் போலிருக்கும். அப்படிப்பட்ட சமயத்தில் ஆகாரம் புசிக்கவேண்டுமென்று நினைத்து எந்த கையையாகிலும் சரி, வாயினிடம் கொண்டு போக நினைத்தால் கைமேல் கிளம்பச் சக்தியற்றதாயிருக்கும். அப்பொழுது இடதுகை சகாயத்தினால், வலது கையை மெதுவாய் மேலுக்கொடுத்து வாயினிடம் கொண்டு போய் வைக்கவேண்டியதாயிருக்கும். இந்நூலாசிரியர் படுக்கை யிலிருந்து எழுந்து உட்கார்ந்து யோகாப்பியாசம் செய்ய வேண்டுமென்று எண்ணினால் தேகமெல்லாம் அதிக ரணமாயும், நோயாயும் இருப்பதனால் எழுந்திருக்கச் சக்தியற்று மெதுவாய்க் கைகளை ஊன்றி எழுந்திருக்க இரண்டு நிமிடங்கள் செல்லும் படுக்க வேண்டுமென்றாலும் அவ்வளவு கஷ்டமாகவே படுக்க வேண்டும். இவ்விதமாய் எவ்வளவு நோயாயிருந்தபோதிலும் சரி, அந்த நோய்களுக்கெல்லாம் இவர் சகித்துக்கொண்டு பிரதி தினம் காலை மாலைகளில் தவறாமல் பிராணாயாமம் செய்து வந்தார். அப்பொழுது முன்சொல்லிய பயநீர் பட்டாளம் ஆயுதங்களுடன் சென்று காட்டை வெட்டிப் பாட்டைப் போட்டது போல இந்நூலாசிரியர் முன் கும்பகத்தில் நிறுத்திவைத்த மூச்சானது கூரான அம்பு போன்று ஆயுதம்போல் சென்று இந்நூலாசிரியர் தேகமென்னும் காட்டைத் துளைத்துக்கொண்டு அதன்பிறகு மூச்சு சரீரமெங்கும் தாராளமாய்ச்செல்ல பாட்டையை உண்டாக்கி கொண்டது, மூச்சு தாராளமாய் செல்ல பாட்டை உண்டான பிறகு முன் சொல்லிய நோய்களெல்லாம் இவருக்கு நீங்கிற்று. நோய் நீங்கினபிறகு தேகத்திற்கு அதிக பலம்

உண்டாயிற்று, மூச்சு தேகமெல்லாம் தாராளமாய் ஒடித்திரிய ரீரத்திற்குள் வழியை உண்டாக்கி கொண்ட பிறகு மூச்சு நாபிகமலத்தினிம் சென்று அவ்விடமிருக்கும் குண்டலி சக்தியை மேற்கிளப்புகின்றது மேல் கிளப்பினவுடனே அதிலிருந்து யோகாய்நிச்சுவாலை உண்டாகும். அந்த யோகாக்நிச்சுவாலை சஞ்சிதமென்னும் புண்ணிய பாவங்களின் மூட்டையைப் பஸ்மம் செய்விக்கும். முன் சொல்லிய நோய்களையெல்லாம் இந்நூலாசிரியர் 1891 வருஷம் அனுபவித்திருக்கின்றார். இப்படிப்பட்ட கஷ்ட சாத்தியமான பிராணாயாமம் எவ்வளவு செய்துவிட்டு விடுகிறார்களோ அதற்குத்தக்க பலத்தைத் தரும் இவ்வித நோய்களுடன் கஷ்ட்டபட்டு தமது மூச்சை சுவாதீனம் செய்து கொண்டு நிர்விகல்ப சமாதியிலிருந்தால் என்ன பலன் அடையலாமென்றால்.

"யாமமாத்ரம் வாஸுதேவம் சித்தயேத் கும்பதேநயஹ
ஸப்தஜந்மார்ஜிதம் பாபம் தஸ்ய நஸ்யதி யோகிநஹ"

என்னும் த்ரிசிகி பிராஹமணோநிஷத் வாக்கியர்திராய் இரண்டரை நாழிகை மூச்சை வெளியிடாமல் நிறுத்தினால் தன் மனம் வாசுதேவனில் என்றால் பிரம்மத்தில் லயிக்கும் அப்படி பிரம்மத்தில் லயித்திருந்தால் ஏழு ஜன்மங்களாய்ச் செய்துவந்த புண்ணிய பாவங்கள் முன் சொல்லிய யோகாக்நியினால் பஸ்மாகும் எப்பொழுதும் இது போல் யோகாப்பியாசம் செய்து கொண்டே இருந்தால் அனேக ஜன்மங்களாய்ச் செய்துவந்த புண்ணிய பாவங்களெல்லாம் எரிந்துவிடும். யோகியின் புண்ணிய பாவங்களெல்லாம் எரிந்தபின் அந்த யோகியின் வம்சத்தில் வந்த இருபத்தோரு தலைமுறையார் எங்கெங்கு போய்ப்பிறந்திருக் கின்றார்களோ, அவர்களின் புண்ணிய பாவங்களும் பஸ்பமாய் அவர்களும் மோக்ஷமடைகிறார்கள் என்று சுருதி பிரமாணமுண்டு என்ன பலன் அடையலாமென்றால்.

சுரு|| ஸர்வேஷாமபி சைதேஷரம் வேத ஸ்மிருதி விதாநத க்ருஹஸ்த உச்யதே ஸ்ரேஷ்ட்டஹ ஸத்ரீநேதாக்பிபர்த்திஹி

என்னும் மதுஸ்மிருதி வாய்யரீதியாய், பிரம்மசர்யன் கிருகஸ்தன், வாகப்பிரஸ்தன், ஸந்நியாசி என்னும் நான்கு ஆசிரமங்களிலும் கிருகஸ்தனே என்றால், மனைவியுடன் கூடி சம்சாரியாய் இருக்கப் பட்டவனே சிரேஷ்டன் மற்றமூவரும் அதாவது, பிரம்மசாரி (விவாகமில்லாதவன்) வானப்பிரஸ்தன, ஸந்யாசி இம்மூவரையும், கிருகஸ்தனே என்றால் சம்சாரத்துடன் இருக்கப்படவனே அன்ன வஸ்திரங்களைக் கொடுத்துக் காப்பாற்றுகிறான். ஆதலால் சம்சாரியே எல்லோரிலும் மிகவும் சிரேஷ்ட்டமாணவன்

சுலோ யதா நதீந்காஸ்ஸர்வே ஸாகரே யாந்திஸம் ஸத்திதிம்।
ததை வாஸ்ரமிண ஸ்ஸர்வே க்ருஹஸ்த்தேயாந்தி ஸம்ஸ்த்திதிம்

என்னும் மனுஸ்மிருதி வாக்கியரீதியாய். சகல நதிகளும் சமுத்திரத்தில் சேருவது போல் பிரம்மசர்யன் வானப்பிரஸ் தன் ஸந்யாசி இம்மூவரும் சம்சாரியை ஆசிரயித்து ஜீவித்திருப்பதனால் எல்லோரிலும் சம்சாரீயே சிரோஷ்ட்டமானவன் இதற்கு நிஷ்ட்டானுபூதி பிரமாணம்

"நீட்டை மேவு நிருமல யோகியர்
கட்டவேநற் கலைகளுதவுவோ
னிட்ட மாயிரு பத்திரண் டாம்பவத்
தொட்ட ரும்பத மெய்துவ துண்மையோ."
சாதனைக்குண் முயலுந் தகைமையோர்
பாத் முச்சிப் படியப் பணிபவ
ரோது மங்க மொரூபதிரட்டியிற்
றீதில் வீடு பெறுவது திண்ணமே.
'ஜான் நிஷ்ட்டையை நல்குதற் றேசிகன்
மான முற்றிடு மானிட னல்லனால்
வான முற்றுவளர்கயி லைப்பரன்
றானெ னத்தினஞ் சாற்றிட லாகுமால்"

ஆணவம் காம்யம் மாயை என்னும் இம்மும்மலங்களையும் ஜயித்து நிஷ்டை செய்து கொண்டிருக்கும் யோகிகளுக்கு கட்ட வஸ்திரம் கொடுக்கப்பட்டவர்களும் அவர்கள் மனதைச் சந்தோஷப் படுத்தினவர்களும் திடமாய் இருபத்திரண்டாம் பிறப்பில் கிடைப்பதற்கு அரிதாகிய பதவியை அடைவார்கள்.

சாதனை செய்யும் யோகிகளையும் பெரியோர்களையும் பாதம் முதல் நெற்றி வரையில் பூமியில் படும்படி சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்தரித்துப் பணிந்து பூசித்துவாரப்பட்டவர்கள் இருபதாவது பிறப்பில் மோக்ஷமென்னும் வீட்டை அடைவார்கள்.

சந்தியாவந்தனம் முறைப்படி செய்து அதன் அனுபவத்தால் பிராணயாம விதிகளை காட்டி யோகநிஷ்ட்டையை அறிவிக்கும் உண்மைக் குருவானவர் மானிட சட்டையைத் தரித்திருப்பினும் அவரை மானிடராய் நினையாமல் ஆகாயத்தை அனாவி உயர்ந்த கைலயங்கிரியில் எழுந்தருளியிருக்கும் பரமசிவனையென்று நினைத்து அவரை எப்பொழுதும் பூஜித்துவர வேண்டும்.

சுலோ|| "த்ருத்ஹி க்ஷமா அஸ்தேயம் ஸௌச மிந்த்ரிய நிக்ரஹ
தீர்வித்யா ஸத்யமக்ரோதோ தஸகம தர்மலக்ஷணம் நதீந்காஸ்ஸர்வே
"தஸல ஹணாநி தர்மஸ்ய யே விப்ரா ஸ்ஸமதீயதே
"அதீத்ய ரநுவர்தந்தே தே யாந்தி பரமாம் கதிம்,"

என்னும் மனுஸ்மிருதி வாக்கியரீதியாய் கெடுதி செய்தவனுக்கு கெடுதி செய்யாமலிருப்பது திருட்டுத்தனமில்லா மலிருப்பது, நல்ல ஆசாரத்துடன் இருப்பது, கண்கள் மூக்கு வாய் செவிகள் தேகசர்மம் என்னும் ஐந்து இந்திரியங்களின் வழியாய் மனதை ஓடவிடாமல் நிறுத்துவது வேதாந்த சாஸ்திர விசாரணை செய்வது சத்தியம் தவறமலிருப்பது, கோபமில்லாமலிருப்பது மனதின் இஷ்டம்போல் நடவாமலிருப்பது ஆத்மாவிற்கும்

பரமாத்வாவிற்கும் பேதம் நினையாமலிருப்பது, இந்தப் பத்து தர்மங்களும் உடையவனே மோக்ஷமடைவான்; மற்றவர்கள் அடையார்கள். சம்சாரிக்கு இந்தப் பத்துக் குணங்களும் இருக்கும் பக்ஷத்தில் சத்தியமாய் அவனையே மனோ சந்நியாசமடைந்த மாகாத்மா என்று சொல்லப்படும்.

இல்வாழ்வா னென்பானியல் புடைய மூவர்க்கு
நல்லாற்றினின்ற துணை.

ஈஸ்வரார்ப்பணமாய்த் தர்மம் செய்துவந்தால், அதனால் உண்டாகும் புண்ணியம் சஞ்சுதம் என்னும் புண்ணியத்தில் போய்ச் சேரமாட்டா. அவ்வாறு புண்ணியம் உண்டாகாவிட்டால் ஏன் தர்மம் செய்ய வேண்டும் என்று ஓர் கேள்வி உண்டாகிறதல்லவா? அதற்குக் காரணம் சொல்லுகிறார். இச்சை கொண்டு காமியரூபமான கர்மங்களைச் செய்துவரும் புண்ணியத்தினால் சரீரமெடுத்து, அந்தப் புண்ணிய பலனை அனுபவிக்கவேண்டும். எந்தப் பலன்களையும் நினையாமல் நிஷ்காமகர்மரூபமான கர்மங்களைச் செய்து வருவார்களாகில் மோக்ஷத்தைத் தரத்தக்க புண்ணியம் உண்டாகும்.

அந்தமில் ஞானி யருளை யடைந்தக்கா
வந்த வுடறான் குகைசெய் திருத்திடிற்
சுந்தர மன் னருந் தொல்புவி யுள்ளோரு
மந்தமி லின்ப வருன் பேறுவாரே
சத்சிதா நந்த சங்கர னாகவே
யச்ச நீங்குபு தன்னை யறிந்தவன்
றுச்ச மாந்துயரத் தோன்மலி யாக்கைவை
யிச்சி யானதை யானென வெண்ணியே.
எப்பொருடனக்கு மியானெத் திருத்தலாலெனக்கியாரு
கமாப்பர்களினிய ரின்னா தாரென் வொருவரில்லை
யிப்படி யறிவு மன்பர் பக்லலே யானு நிற்ப
னப்படி யவரு மென்பா லங்ஙன மமர்ந்து நிற்பார்.

## 67. உபநாயக காயத்திரி ரகசியம் சந்த்யாவந்தனம் செய்யவேண்டிய முறையும் உபதேசித்தல்

'ஜன்மநா ஜாய்தே ஸூத்ரஹ கர்மணா ஜாயதே த்விஜஹ
வேபாடந்துவிப்ராணார் ப்ரஹமஜிஞாந்துப்ரஹ மணஹ

*ஜனமநா ஜாயபத ஸூத்ரஹ*– குழந்தையாய்ப் பிறந்தவுடன் சூத்திரனாயிருக்கின்றான்: *கர்மணா ஜாய தேத்விஜஹ*- உபநயநமென்னும் கர்மம் செய்தால் (த்விஜ இரண்டாவது ஜநம் அடைந்தவ) னாகின்றான். *வேதபாடந்துவிப் ராணாம்*- வேதங்களை வாசிப்பதனால் பூணூல் போட்டு கர்மம் செய்யும் பிராமணனா கின்றான்; *ப்ரஹம ஜ்ஞானந்து பராஹ்மணஹ*- பிரம்மஞான மடைந்தவன் பூணூலில்லாத ப்ராமணனாகின்றான்.

ஓ சகோதரி சகோதரர்களே! குழந்தையானது பிறந்தவுடன் சூத்திரனாயிருக்கின்றான். அவனுக்கு எட்டாவது வயதில் உபநயநம் (உம்-மேல் இருக்கப்பட்ட நயநம்-கண் அதாவது மூன்றாவது கண்ணைத் திறப்பிப்பது உபநயநம்) என்றால் நெற்றிக்கண்ணைத் திறக்க செய்தால் இரண்டாவது ஜன்மத்தை அடைந்தவனாகின்றான்.உபநயந காலத்தில் மூன்று இழைகளையுடைய பூணூலை (பூணூல் நூல்-பூணூல் மாத்திரம் (கழுத்தில் போடுகின்றார்கள்.)

ஓ யோகீஸ்வரரே! உபநயந காலத்தில் 2, 4, 5, இழைகளையுடைய பூணூலைப் போடாமல் மூன்று இழைகளையுடைய பூணூலை மாத்திரம் கழுத்தில் போடுவதற்குக் காரணமென்ன இதன் ரகஸ்யத்தைத் தெரியச் சொல்லும் சுவாமி.

பெரியோர்கள் இதை மகா கோப்பியமாய் (ரகஸ்யமாய்) வைத்து எவர்களுக்கும் உபதேசம் செய்யாமல் அநேகர்களைப் பரீக்ஷித்து குரங்குப் பிடியைப் போல் குருவை விடாமல் தொடர்ந்து கொண்டே வரும் சிஷ்யனுக்கு மாத்திரமே குருவானவர் உபதேசிக்கின்றான். அதாவது குரங்கின் குட்டி அரை நிமிஷமாகிலும் தாயை விடாமல் வயிற்றைச் சேர்த்து அணைத்துப் பிடித்துத் தாய் எத்தனைக் கிளைகளின் மீது ஏறித் தாவிக் குதித்தாலும், குரங்குக் குட்டித் தாயை விடாமல் தானும் தாயின் வயிற்றைக் கட்டிக்கொண்டு அதனுடன் கூடவே எகிரி குதித்துக்கொண்டும், நடக்கும்பொழுது வயிற்றை விடாமல் கவ்விக் கொண்டும் செல்லும், இதற்கே மாக்கட ரூபமென்று சொல்லப்படும் மேற்படி குரங்குக் குட்டியைப்போல் விடாமல் சதா காலமும் குரு சேவை செய்து வரும் சிஷ்யன் மீது குரு ரகசியத்தை உபதேசிக்கின்றார், பிறகு, பூனை குட்டிப்போட்டவுடன் அதை ஓரிடத்திலேயே வையாமல், தான் எங்கெங்கு செல்லுகிறதோ, ஆங்காங்கு குட்டிகளை வாயில் கவ்விக்கொண்டுபோய்ப் பல இடங்களில் வைப்பதுண்டு, அதுபோல் குருவானவர் குரங்குப் பிடியைப் போல் தன்னுடன் கூடவேயிருந்த சிஷ்யனுக்கு உபதேசம் செய்து பிறகு மேற்படி குருவானவர் முன்சொல்லிய பூனைக்குட்டியைப்பொல் சிஷ்யனைக் கைவிடாமல் தான் எங்கெங்குச் சென்றாலும் அவனை ஆங்காஙகு அழைத்துச் சென்று, தம் சமீபமாய் வைத்துப் பிரதிதினம் தாம் உபதேசித்ததை ஜபம் செய்யும்படி தூண்டிக் கொண்டேயிருப்பார். உபதேசிப்பதனால் இப்படிப்பட்ட கஷ்டங்கள் தமக்கு உண்டாகுமென்று எண்ணியே பெரியோர்கள் மிகவும் ரகஸ்யமான பொருளை உபதேசம் செய்யாமல் எதோ ஓர் மந்திரம் ஜபிக்கும்படிச் சொல்லியனுப்பி விடுவார்கள்.

"அறியாத பாவிக்கு ஞானமேது
ஸச்சிதானந்தன் சொன்னதொரு நூலைப்பாரு
பரிபாஷை யாகவுந்தான் சொல்லவில்லை
பிரம்மைக்கிய மென்னுடைய நூலைப்பாரு
விரிவாகச் சித்தசொன்னநூலையெல்லாம்
வீணாக மறைப்பாகச் சொன்னாரையா
குறியான அண்டமதை பொளித்தோவிட்டார்
கூறினார் வெவ்வேறாய்க் குற்றந்தனே"

எல்லா சாஸ்திரங்களிலும் மறைவாகச் சொல்லியது போல் இந்த ஜீவப்பிரம்மைக்கியத்தில் சொல்லாமல் எல்லா ரகசியமும் வெட்டவெளியாய் இதில் கூறியிருக்கின்றோம், ஏனென்றால் எங்கள் பரம்பரை வெட்டவெளியாயிருப்பதனால், எல்லா ரகசியங்களும் இந்நூலில் வெட்டவெளியாகவே சொல்லி வருகிறோம். இப்பொழுது நீ கேட்ட கேள்வியும் வெட்டவெளியே. அதற்கு பதில் சொல்லப்போவதும் வெட்டவெளியே. அதாவது இப்பொழுது சொல்லப்போகும் விஷயத்தை நீ அப்பியசித்து வருவாயாகில் மனம் சூந்நியமாய் வெட்டவெளியில் ஐக்கியமாய் விடுவாய். ஆதலால், அதை இதனடில் சொல்லுகிறோம் கேள்.

நமது சரீரத்தில் எழுபத்திராயிரம் ரோமத் துவாரங்களுண்டு. இதையே எழுபத்திராயிரம் நாடிகளென்று சொல்லுவார்கள். இதில் நூற்றெட்டு நாடிகள் சிரேஷ்ட்ட மானவைகள். அவைகளில் சுழுமுனை இடைகலை பிங்கலை குஹூ ஸரஸ்வதி யஸஸ்வநி பூஷ விஸ்வோதர வருண அஸ்தி, ஜிம்ஹ, பயஸ்வநி, சங்கணி காந்தாரி அலம்புஸா என்னும் இந்த பதினான்கு நாடிகளும் சிரேஷ்ட்டமானவைகள். இம்மூன்று நாடிகளும் வலது இடது நாசிகளிலும் புருவமத்தியிலும் இருந்து உசுவாச நிசுவாங்களாய் என்றால் மூச்சுகளாய் ஆடிக்கொண்டிருக்கின்றன. இந்த மூன்று நாடிகளே மூன்று

பஞ்ஞோபவிதமென்று ( பூணூலென்று) அறியகடவாய் கழுத்தில் தரித்திரிக்கும் யஞ்ஞோபவீதம் என்னும் 'பூணூல்' கைளால் பிடித்து அறுக்கத்தக்கதும், எரியத்தக்கதுமாயிருக்கின்றது. சரீரத்தில் மூக்குத் துவாரங்களின் வழியாய் ஆடிக்கொண்டிருக்கும் பஞ்ஞோபவீதம் (பூணூல்) கைளால் பிடித்து அறுக்கத்தக்கதும் ஆவணி அவிட்ட காலத்தில் கழற்றி எறியத்தக்கதுமல்ல. அன்றியும் உபநயந கால்த்தில் வந்த நூலிழை பஞ்ஞோபவீதம் போல் இது மத்தியில் வந்ததல்ல. இஃது. அனேக ஜன்மங்களாய் ஜாதிகுற பேதமில்லாமல் அந்தந்த வம்சத்தில் ஐநந காலம் முதல் மரண காலம் வரையில் சரீரத்துடன் கூடவே வந்து கொண்டிருக்கின்றது. அதுவே சகல ஜீவஜந்துக்களின் சரீரங்களில் மூக்குத் துவாரங்களின் வழியாய், உசுவாச நிசுவாசங்களாய் ஆடிக்கொண்டிருக்கும் மூச்சே யஞ்ஞோபவீதமென்று சொல்லப்படும். மத்தியில் உபநயமென்று பெயர் வைத்து மூன்று நூலிழைகளையுடைய பூணூலைக் கழுத்தில் தரித்துக் கொள்வது யஞ்ஞோபவீதமல்ல.

இந்தப்பூணூல் செய்யும் முறை நான்கு வகையுண்டு. அதாவது. தங்கத்தினால் செய்வது, தர்ப்பையினால் செய்வது என்று ஆகமங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது உலகத்தில் விசேஷமாய்ப் பருத்தி நூலினால் செய்வது என்று ஆகமங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது உலகத்தில் விசேஷமாய்ப் பருத்தி நூலினால் பூணூல் செய்து வருகிறார்கள். இதை செய்யும் பிராமணர்கள் சாஸ்திரவிதிப்படிச் செய்வதில்லை. பூணூல் ஸாஸ்திர விதிப்படிச் செய்யவேண்டிய முறை இதனடியில் சொல்லுகிறோம்.

பருத்திச் செடியிலிருக்கும் விரிந்த பருத்தியை கன்னிகைப் பெண்கள் கொண்டுவந்து அவர்களே அப்பருத்தியை, ராட்டினத்தில் வைத்து திருப்பி விதை எடுத்து அப்பருத்தியை

நூலாய்த் திரித்து அந்த நூலை அக்கன்னிகைகளே, மூன்று இழை கொண்ட பூணூலாக முறுக்க வேண்டுமென்று ஆகமங்களில் சொல்லியிருக்கின்றது. பூணூலை கன்னிகைப் பெண்கள் முறுக்கும் பொழுது தொண்ணூற்றாறு படி நீளம் முறுக்கி அதாவது, இடது கை ஆள்காட்டும் விரல் நடுவிரல் மோதிரவிரல் சுண்டுவிரல் இந்நான்கு விரல்களிலும் தொண்ணூற்றாறு பிடிகள் முறுக்கவேண்டும். எனென்றால், தத்துவங்கள் தொன்னூற்றாறு இருக்கின்றன அது எதுவென்றால் பிருதிவி அப்பு. தேஜஸ், வாயு ஆகாசம் சப்தம்ஸ்பர்சம், ரூபம் ரஸம் கந்தம் ஸ்ரோத்ரம் த்வக்கு சக்ஷுரரசணைக்ராண், வார்கு, பாணி, பாதம், வாயு உபஸ்த்தம் மனம் புத்தி, சித்தம் அகங்காரம், ஜாக்ரத்ஸ்வப்னம், ஸுஷுப்தி துரியம், துரியாதீதம். இடாபிங்களா; ஸுஷும்னா, காந்தாரி, ஸஸ்தஜிஹவா, பூஷாயஸ்வனி, அலம்புஸா, குஹு, சரஸ்வதி விஸ்வோதரவருணா, பயஸ்வனி சங்கினி ஆணவம், காம்யம் மாயிம், ஸத்வம், ரஜஸ், தமஸ், அக்கினி மண்டலம் ஆதித்திய மண்டலம், சந்திரமண்டலம் வாதம் பித்தம், கபம், சிலேஷ்மம் காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் மூலாதாரம், ஸ்வாதிஷட்டானம், மணிபூரகம், அனாஹதம் விசுத்தி, அஜ்ஞோயம் ரக்தம், மாம்சம், மேதஸ ஸ்நாயு அஸ்தி மஜ்ஜை. சுக்லம் பிராணம், அபானன் வியானந், உதானன், ஸமானன் நாகன் கூர்மன், கிருகரன் தேவதத்தன, தனஞ்சயன் அன்னமயம், பிராணமயம் மனோமயம், விஜ்ஞானமயம். அனந்தமயம், நேத்ரம், சுரோதரம் கிராணன், ஆஸ்யம் குதம் குய்யம் என்று தத்துவங்கள் தொண்ணூற்றாறு இருக்கின்றன. இந்த தொண்ணுற்றாறு தத்துவங்களையும் தொண்ணூற்றாறு பிடிகளாய் முறுக்கி, அதை மூன்றாய் மடித்து முறுக்கி, சாவித்திரியென்றும் பிரம்ம கிரந்தியென்னும், நாகபாசமென்றும் சொல்லப்பட்ட பெயரையுடைய முடிச்சியில் ஒரு முடிபோட்டு வைக்கவேண்டும். இப்பூணூல், பிராமண க்ஷத்திரிய

வைசிவர்களில் பிள்ளை பிறந்த எட்டு, பன்னிரண்டு, பதினாறு வயதில் அவர்களின் ஜாதிக்குத் தக்கபடி உபநயன காலத்தில் அப்பூணூலை காலத்தில் போடவேண்டும். இவ்வாறாக மேற்சொல்லிய வயதுகளில் பூணூலைப் போடுவதற்கே உபநயனமென்று சொல்லப்படும். வைதிகப் பிராமணானாயிருக்கப்பட்டவர் தன் குமாரனுக்கு உபநயனம் செய்தபிறகு அவன் கையில் ஜலம் வாங்கிச் சாப்பிட்டு அவனுடன் கூட பந்திபோஜனம் செய்வார். அதற்குமுன் அவன் பிள்ளையாயிருந்த போதிலும் அவனைச் சூத்திரனைப் போல் நினைப்பார். ஏனென்றால் பூர்வஜன்மத்தில் அவன் சண்டாளனோ மிலச்சனோ (மகம்மதியனோ) சூத்திரனோ வைசியனோ க்ஷத்திரியனோ பிராமணனோ தெரியவராது. அப்படிப் பட்டவனுக்கு உபநயனம் செய்து பிறகு பிராமண குலத்தில் சேர்த்துக்கொள்கிறார். அவனை இவ்வாறு சேர்த்துக்கொண்ட பிறகு அவன் கர்மவிதிப்படி பிரதி தினம் செய்யவேண்டிய கர்மானுஷ்டானங்களைச் செய்து வருவான். என்றால் சாஸ்திர விதிப்படி பூணூல் தரித்தால் அவன் சிவபூஜை பிராமண பந்திபோஜனம் வேதபாராயணம் முதலானவைகளைச் செய்ய யோக்கியதை உடையவனாவான் என்று சாஸ்திர முறை இருக்கிறது அதன் ரகஸ்யார்த்தம் இதனடியில் தெரிவிக் கின்றோம்.

உலகத்திலுள்ள ஜனங்களில் சிலர் பிராமண க்ஷத்திரிய வைசிய இம்மூன்று ஜாதியரும் பூணூல்போட வேண்டுமென்றும், சூத்திரர்கள் போடலாகாதென்றும் சொல்வார்கள். இப்பூணூல் எல்லோரும் அணியத்தக்கதோயாகும். சூத்திரர்கள் சரியான ஆசாரத்துடன் இராததனால் அவர்களுக்கு விவாக காலத்தில் பிதுர்தர்ப்பணங்கள் செய்யும்பொழுதும் உத்திர கிரியைகள் செய்யும்பொழுதும் கழுத்தில் பூணூல் போடுகிறார்கள். இப்பூணூல் கர்மத்திற்கேயொழிய ஞானத்திற்கில்லை.

அதாவது பூணூல் என்பது சகல ஜீவராசிகளின் மூக்கு ரந்திரங்களின் வழியாய் உள்ளுக்கும் வெளிக்கும் அடிக்கொண்டிருக்கும் மூச்சுக்கயஞ்ஞோபவீதமென்றும், பிரம்ம சூத்திரமென்றும், ஹம்ஸவென்றும், பூணூலென்றும், சுவாசமென்றும், மூச்சென்றும், பிராணனென்றும் வாசியென்றும் குதிரையென்றும், காலென்றும் உயிரென்றும் இத்தனைவித பெயர்களுண்டு, முதல் கர்மவிதிப்படி நூலிழைகளையுடைய பூணூலைக் கழுத்தில் போட்டு எல்லா மர்மங்களையும் செய்து முடித்து பிறகு மூக்கு ரந்திரங்களின் வழியாய் ஆடிக்கொண்டிருக்கும் பூணூல் ரஹஸ்யம் குருவினால் தெரிந்து கொள்ளும் வரையில் கழுத்தில் பூணூல் போட்டு கர்மவிதிகளைச் செய்து வருவதற்காக நூலிழைகளையுடைய பூணூல் கழுத்தில் போடும்படி ஆகமங்களில் ஏற்படுத்தியிருக்கின்றன. அதாவது பருத்தியை நூலாய் முறுக்கி அதை மூன்றாயும் ஆறாயும் ஒன்பதாம் மடித்துக் கழுத்தில் போடுவதற்குக் காரணம் இதனடியில் சொல்லுகிறோம்.

அய்யா! பூணூலுக்கு ஆதாரம் பருத்தி, பருத்திக்கு ஆதாரம் விதை, பருத்திகாயுடன் சேர்த்திருக்கும் விதையை ராட்டினத்தில் வைத்து முடுக்கி விதையை பிரத்தியோப்படுத்தினால் பிறகு அப்பருத்தி பரிசுத்த வெண்மையாகும் பருத்தி உண்டாவதற்கு விதை எப்படி ஆதாரமாயிருக்கிறதோ அதுபோல் ஜன்மம் உண்டாவதற்கு முக்கிய ஆதாரம் எதுவென்றால் ஆசையென்னும் விதையேயாம். பருத்தியிலிருக்கும் விதையை வேறுபடுத்தியது போல் ஆசையென்னும் விதையை வேறுபடுத்தினால் அப்பொழுது ஜீவன் மேற்சொல்லிய பருத்தியைப் போல் பரிசுத்த வெண்மையாய் மோக்ஷத்தையடையும் என்றால், சகல ஆசைகளையும் ஒழித்தவன் மேற்படி பருத்தியைபோல் சுத்த பிரம்மமாகிறான். மேற்சொல்லிய பருத்தியானது முதல் அனு

அணுவாய்ச் சேர்ந்து பிறகு பருத்தியாயிற்று. அது போல் ஜீவர்களும் பிரம்மத்திலிருந்து அணு அணுவாய் வந்து ஜன்மித்திருக்கிறார்கள். அணுவாய் ஜன்மித்த ஜீவர்களெல்லோரும் எந்த ஜன்மித்திலேயோ ஓர் ஜன்மத்தில்மாயையென்னும் திரையை நீக்கிக்கொண்டு மறுபடியும் அந்த பிரம்மத்தில் போய்ச் சேரவேண்டியது நிச்சயம். மேற்சொல்லிய பருத்தியை உடைத்து விதைஎடுத்து அப்பஞ்சை ராட்டினத்தில் வைத்து முறுக்கினால் அப்பஞ்சு நூலாகிறது. தொண்ணூற்றாறு தத்துவங்கள் இருப்பதனால் மேற்படி நூலை தொண்ணூற்றாறு விரற்கடையாய் மடிக்கவேண்டும். இவ்வாறு மடித்தபின் நமது சரீரத்தில் அநேக நாடிகளுண்டு. அந்த நாடிகளில் சுழுமுனை நாடி மேற்சொல்லிய நாடிகளில் மூக்கின் ரத்திரங்களின் வழியாய் இடைகலை பிங்கலை சுழுமுனை என்னும் மூன்று நாடிகளையும் ஒன்றாய்க் குறிப்பிட்டுக் காட்டுவதற்காக மூன்று இழைகளையுடைய பூணூலை ஒன்றாய்ச் சேர்த்து உபநயன காலத்தில் சிறுவர்களன் கழுத்தில் போட்டுக் காட்டுகிறார்கள். மேற்படி பூணூல் மத்தியில் போட்டிருக்கும் முடியை சுழுமுனை நாடியாய்க் காட்டியிருக்கின்றார்கள்? சுழுமுனை நாடி நாபியில் இருப்பதால் பூணூல் முடியை நாபியினிடம் நிறுத்தவேண்டும். நாபியிலிருக்கும் சுழுமுனை நாடியைக் கொண்டு போய்ப் பிரம்ம கபாலத்தில் நிறுத்தினால் தன்னைத்தான் மறந்து பிரம்மத்தில் சேர்ந்து சொக்கியிருப்பதே பிரம்மானந்தமென்றும், மோக்ஷமென்றும் சொல்லப்படும்.

பெரியோர்கள் குருவாய் வந்து தொண்ணூற்றாறு தத்துவங்களையும் தொண்ணூற்றாறு விரற்கடைப்பதனால் அப்பூணூலை எண்ஜாணாய் மடித்துக் கழுத்தில் போட்டு எண்ஜான் சரீரத்தில், கழுத்தில் போட்ட பூணூலைப் போன்ற நூல் இடைகலை பிங்கலை சுழுமுனை எப்பெயருடன் இரண்டு

நாசியிலும் பூணூல் என்னும் மூச்சு அடிக்கொண்டிருக்கின்றது இந்த மூச்சு என்னும் பூணூலை வலது இடது நாசியில் செலுத்தாமல் மூலாதாரம் என்றால் குத்திந் வழியாய் சுழுமுனை நாடியில் செலுத்தி பிரம்ம கபாலத்தில் கொண்டுபோய் நிறுத்தவேண்டும். இவ்வாறு நிறுத்தியபின் தானே பிரம்மமாய் விடுவான் என்று பூணூல் மூலமாய் பிரம்மத்தை அறியும்படி காட்டியிருக்கிறார்கள். இதற்கு நெஞ்சறி விளக்கம் பிரமாணம்:

சக்தியுஞ் சிவமு மாகித் தாண்டவமாடும் வாசி
சுத்திய மூலநாடிச் சுழிமுனை கம்பத் துள்ளே
புத்தியைச் செலுத்திமேலாம் பொருடனையெடுக்க வல்லார்
பக்திசெய் நாகைநாதர் பதிதனைப்பார்ப்பார் நெஞ்சே

ஒவ்வொரு விஷயமும் சுருதி குரு சுவானுபவமில்லாவிடில் அவ்விஷயத்திலுள்ள ரகஸயத்தைத் தெரிந்து கொள்ள மாட்டார்கள். ஸந்தியாவந்தனமென்பது பிராணாயாமமே யொழிய மூக்கின் மேல் விரல்களை வைத்து மூச்சை வெளியில் விட்டுக்கொண்டும் மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாய் காயத்திரீமத்திரம் மனதினால் நினைத்து ஜபித்துக் கொண்டிருப்பதல்ல. அப்படி ஜபம் செய்பவர்களைக் கர்ம பிராமணர்கள் என்றே சொல்லப்படும் இந்த கர்ம பிராமணர்கள் சந்தியா வந்தனம் வேலை தப்பி காலை 8 மணிக்கும் மாலை 7அல்லது 8 மணிக்கும் சந்தியா வந்தனம் செய்துவருகிறார்கள். சந்தியாவந்தனம் ரகஸ்யார்த்தம் தெரியாததனால் இவர்கள் சந்தியாவந்தனம் காலம் தவறி செய்து வருகிறார்கள். சந்தியாவந்தனந் செய்யவேண்டிய காலங்களை இதனடியில் சொல்லுகிறோம், சந்தி என்றால் இரவும் பகலும் கூடும் வேளை அதாவது, இருள் நீங்குவதற்காகச் சூரியன் கிரணங்களுடன் புறப்பட்டு உதயமாகிறான் அதுபோல் பகல் சென்று இருள் வருவதற்காக சூரியன் அஸ்தமிக்கிறான் சூரியன் உதயமாகும்

போதும் அஸ்த்தமிக்கும் பொழுதும் இராக்ஷதர்கள் வந்து சூரியன் ரத்தைக் குறுக்கிடுகின்றார்களென்றும். அக்காலத்தில் சந்தியாவந்தனம் செய்யும் பொழுது குளத்திலுள்ள ஜலம் இரண்டு கைகளிலும் எடுத்து அர்க்கியம் விடும்பொழுது அந்த ஜலத்திலிருந்து அணுசொருபமாய்ப் புறப்படும் ஜலபிந்துவானது கூரான அம்பு போல் சென்று மேற்படி ராக்ஷதர்களை வதைக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு வந்தபுராணம் பிரமாணம்.

ஐயர் கையில் வந்தவுணரைத் தெறுந்
துய்ய தீபம்படை தோகை கண்ணுறா
வெய்ய சூர்கிளை விட்ட வந்தென
மை யுலாய கண வாரி மிக்கதே.

ஐயர் கையில் வந்தவணரைத் பெறுந்தவத்திற் சிறந்த பெரியோர்களும் தபோதனர்களும் முனிவர்களும் தேவர்களும் ஒழுக்கமுடைய பிராமணர்களும் சந்தியா வந்தனம் செய்யும் பொழுது குளத்திலுள்ள ஜலம் இரண்டு கைகளால் எடுத்து அர்த்தியம் விடும் பொழுது துல்ய நீலம்படை அதிலுண்டாகும் பரிசுத்தமான நீர்த்துளி பிந்துக்கள் வருணனுக்கு அஸ்திரமாய்ச் சென்று மாந்தேகர் என்னும் அசுரர்களைக் கொல்வதற்காக தொகை கண்ணுறா வெய்ய சூர்கிளை விட்ட வந்தெனமையுடைய கண் வாரி மிக்கதே-இந்திராணி மையிடும் கண்ணில் போய்ச் சேர்ந்து கொடிய சூரர்களாகிய சூரபத்மன் முதலானவர்களைக் கொள்வதற்காக இந்திராணி கண்ணினின்று விஷம்போன்ற கண்ணீர் ஆறாய் பெருகியது.

இங்கு ஐயர் என்பது சாதாரண பிராமணர்களல்ல. தவத்திற் சிறந்த பெரியோர்களும் தபோதன்ர்களும் முனிவர்களும் தேவர்களும் ஒழுக்கமுடைய பிராமணர்களு மேயல்லாமல் எந்தத் தாழ்ந்த ஜாதியாராயிருந்த போதிலும். ஆசாரத்துடனிருந்து தெய்வ பக்தியில் சிறந்த சந்தியா வந்தனம்

மந்திரங்களைக் கற்று குளத்திலுள்ல ஜலத்தை இரண்டு கைளால் எடுத்து அர்க்கியம் விடுவாராகில் அதிலிருந்து ஓடும் ஜலபிந்துவானது வருணனது அஸ்திரமாய் இராக்ஷதர்களை வதைக்கச் செல்லும். இவ்வஸ்திரங்கள் சென்றவுடன் அவ்விராக்ஷதர்கள் சூரியனது ரதத்தைவிட்டு விலகி ஓடிப்போவார்கள் எந்த ஜாதியாராயிருந்த போதிலும் சந்தியா வந்தனம் மந்திரங்களைக் கற்று கர்மவிதிப்படி சந்தியா வந்தனம் செய்து வருவராகில் கர்மபிராணனாய் பிறகு ஞான பிராமணானாவர். சந்தியா வந்தனம் கர்மவிதிப்படி தவறாமல் செய்துவர வேண்டும்.

சந்தியவந்தனம் வீட்டில் செய்யும்பொழுது பஞ்ச பாத்திரத்திலுள்ள ஜலம் எடுத்துத் தட்டில் அர்க்யம் விட்டால் அதிலிருந்து ஜலபிந்து ஓடமாட்டா. குளத்திலுள்ள ஜலம் இரண்டு கைகளாலெடுத்து குளத்துஜலத்தில் அர்க்யம் விட்டால் அந்த ஜலத்தின் மேல் நீர்த்துளிகள் ஓடும் அல்லது ஆறு ஏரி கிணறு முதலானவைகள் இருக்குமிடத்தில் சந்தியாவந்தனம் மேற்சொல்லிய இடங்களில் செய்யவேண்டுமேயொழிய வீட்டில் பஞ்சபாத்திரத்திலுள்ள ஜலத்தால் ஸந்தியாவந்தனம் செய்யலாகாது. காலை மாலைகளில் தவறாமல் குளத்திற்குச் சென்று சந்தியாவந்தனம் செய்துவர வேண்டும். சந்திய வந்தனம் காலை சூரியன் கிரணங்களுடன் புறப்படாமுன்னும் மாலை அஸ்தமிக்கும் சமயத்தில் சூரியன் மாரளவி இருக்கும்பொழுது சந்தியாவந்தனம் செய்துவர வேண்டுமேயொழிய காலை 8 மணிக்கும், மாலை 7 அல்லது 8 மணிக்கும் சந்தியாவந்தனம் செய்வதனால் யாதொரு பிரயோஜனமில்லை அப்படிச் செய்வதைவிட சும்மாயிருப்பதே உத்தமம்.

சந்தியாவந்தனம் பார்த்தும் பாராமலும் செய்யவேண்டும் என்றால் மாலையில் சூரியனைப் பார்த்துமாரளவு பொழுது

இருக்கும் பொழுது சந்தியாவந்தனம் செய்ய வேண்டும். காலையில் சூரியனைப் பார்க்காமுன்னேமே அதாவது சூரியன் புறப்படா முன்னமே சந்தியா வந்தனம் செய்யவேண்டும் என்பதேயாம்.

சந்தியாவந்தனம் எப்படி முக்கியமோ. அதுபோல் மகம்மதியர்களுக்கு நிமாஸ் என்பது மிகவும் முக்கியமானதா யிருக்கிறது. மகம்தியர்கள் நிமாஸ் காலம் தவிர மற்றக்காலங்களில் நிமஸ் செய்யமாட்டார்கள். இவர்கள் ரெயில் பிராயணமாகச் சென்றால். பகற் காலங்களிலாகிலும் மாலையிலாகிலும் நிமாஸ் காலம் சமீபித்துவிட்டால் ரெயிலில் உட்கார்ந்திருக்கும் புருஷர்களைச் சற்றே விலகியிருக்கும்படிச் சொல்லி குட்டையைக் கிழே விரித்துப் போட்டு அதன்மீது உட்கார்ந்து நிமாஸ் செய்கிறார்கள். இவர்கள் கால் நடையாகிலும் வண்டிகளிலாகிலும் செல்லும் பொழுது நிமாஸ் காலம் நெருங்கிவிட்டால் வண்டிகளை நிறுத்திப் பாட்டைக்குச் சமீபமாய் இருக்கும் மைதானத்தில் குட்டையை விரித்து போட்டு அதன்மேல் மேற்கு முகமாய் உட்கார்ந்து நிமாஸ் செய்வார்கள். இதுபோல் மோக்ஷத்தை விரும்பும் புருஷர்கள் எல்லோரும் எங்கு சென்றாலும் சந்தியாவந்தனம் காலம் தவறாமல் சூரியன் காலை கிரணங்களுடன் உதயமாகா முன்னும் மாலை அஸ்தமிக்க மாரளவுபொழுது இருக்கும் பொழுதும் பிரதிதினம் தவறமல் சந்தியாவந்தனம் செய்துவர வேண்டும்.

சந்தியாவந்தன காலத்தில், காயத்திரி மந்திரம் ஜபம் செய்யும்பொழுது பூணூலைப் பெருவிரல் ஆள்காட்டும் விரல்களுக்கு மத்தியில் வைத்து அந்நூலைக் கெட்டியாய் பிடித்து அதைக் குட்டையால் மூடி இருதயத்திற்கு நேராய் நிறுத்தி மந்திரம் ஜபம் செய்து வருகிறார்கள். இதை மிகவும் வைதீகமுள்ள சில பிராமணர்கள் மாத்திரம் முன்சொல்லியது

போல் பூணூலை பெருவிரல், ஆள்காட்டும் விரல்களுக்கு மத்தியில் வைத்து மந்திரத்தை ஜபம் செய்து வருவார்கள். வைதீகமில்லாத மற்றுமுள்ள பிராமணர்கள் எல்லோரும் இமைக் கொட்டுவதற்கு முன்னமே பூணூலை விரல்களால் தொட்டு சந்தியாவந்தனம் முழுமையும் ஐநது நிமிங்களுக்குள் செய்து முடித்து எழுந்து விடுவார்கள். இவர்கள் இவ்வளவு சுருக்கமாய்ச் செய்து முடிப்பது சரியானதன்று. முன்சொல்லிய வைதீகப் பிராமணர்களில், ஆயிரத்திற்கொருவர் இவர் சந்தியாவந்தன ரகஸயம் தெரிந்துகொள்வதும் மிகவும் கஷ்டம். இதன் அந்தார்த்தம் என்னவென்றால் பூணூலே பரமாத்ம சொரூபம். விரல்களே மனது. ஆதலால் நமது இருதய கமலத்தியில் இருக்கும் பரமாத்ம சொருபத்தில் மனதைச் சேர்ப்பிக்க வேண்டும் என்று பூணூலைப் பெருவிரல். ஆள்காட்டும் விரல்களுக்கு மத்திமில் நைந்துப்பிடித்து இருதயத்திற்கு நேராய் நிறுத்தி மந்திரம் ஜபம் செய்துவரக் காரணமாயிருக்கிறதென்று அறியக்கடவீர்களாக ஆதலால் காயத்ரீ மந்திரம் ஜபம் செய்யும்பொழுது பிராணாயுவைக் கும்பித்து (நிறுத்தி) ஸப்தவியாஹ்ருதிகள் சிரோமந்திரங்களுடன் சந்தியாவந்தனம் செய்யவேண்டிய முறையை இத்னடியில் சொல்லப்போகிறோம்.



## 68. கும்பக பிராணாயால் ஸந்தியாவந்தன உபதேசம்

கும்பக பிராணயாம ஸந்தியா வந்தனம் எல்லா ஜாதி ஸ்திரீ புருஷர்களும் செய்து வரலாம். இந்த கும்பக பிராணாயாம ஸந்தியாவந்தனமாகிலும் சரி அல்லது இந்நூலாசிரயரால் எழுதப்பட்ட "யோகாப்பியாசம் செய்யவேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூல்" இந்நூலில் சொல்லியிருக்கும் யோகாப்பியாசம் செய்து சித்தியடைந்தாலும் சரி, இவ்விரண்டிற்கும் பலன் ஒன்றேயாம். இதனால் என்ன நன்மை உண்டாகிறதோ, அதை இதனடியில் சொல்லப்போகிறோம் கவனியுங்கள்.

யோகம் சித்தியானால் தனக்கு எவ்வளவு ஆஸ்தி இருந்தபோதிலும் சரி அவைகளின்மேல் சிறிதேனும் ஆசையில்லாமல் விரக்தியை உண்டாக்கும் இதன்றியும் தன் மனைவி மக்கள் மேலும் பந்துஜனங்கள் மேலும், சிநேகிதர்களின் மேலும் எவ்வளவு விசேஷ ஆசை இருந்தபோதிலும் சரி, அந்த ஆசைகளெல்லாம் யோக பலத்தினால் சிறுகச் சிறுக ஒழிந்து எல்லாவற்றிலும் விரக்தியை உண்டாக்குவதுமேயல்லாமல் பலவிடங்களிலும் உதவியற்ற விஷயங்களில் ஓடித்திரியும் மனதை எங்கும் ஓடவிடாமல் நிறுத்தி தான் தானாய் நின்றிருக்கும்படி யோகம் செய்பிக்கும். இதுகளெல்லாம் இந்நூலாசிரியருக்குப் பிரத்தியக்ஷ அனுபவமாதலால். அவர் அனுபவங்களையெல்லாம் இங்கு சொல்லுகிறார். இவர் ஜன்மசரீரத்தை வாசித்தால் இவர் விஷயமெல்லாம் நன்றாய்த் தெரியவரும் இந்த யோகத்தின் ரகஸ்யம் இனி சொல்லுகிறோம் கவனியுங்கள்.

காலை தூங்கி எழுந்தது முதல் மறுபடியும் இரவு படுத்துத் தூங்கும்வரையில் ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களும் கணக்கில்லாத எத்தனையோ எண்ணங்களை எண்ணுகின்றார்கள். இந்த

எண்ணங்களையெல்லாம் சொல்ல முடியாததனால் இந்த எண்ணங்களுக்கு "மனது" என்று ஒரு பெயரை வைத்தார்கள். இந்த மனத்திற்கு "சிந்தை" என்றும் சொல்லுவார்கள். ஒவ்வொருவரும் எண்ணும் எண்ணமெல்லாம் மூச்சியிலிருந்து பிறக்கிறது. யோக பலத்தினால் மூச்சியின் வேகத்தையும், கொழுப்பையும் அடக்கிவிட்டால் அப்பொழுது எந்த எண்ணங்களும் உதிக்க இடமே இல்லை. எல்லா விஷயங்களுக்கும் எல்லா ஆசைகளுக்கும் எண்ணங்களே முதல் காரணமாயிருக்கிறது. இந்த எண்ணங்களை நாசம் செய்தால் எந்த ஆசைகளும் உண்டாகவேமாட்டா. இந்த எண்ணங்களை நாசம் செய்ய யோகம் ஒன்றிற்கே அதிகாரமுண்டு, மற்ற பூஜைகளாலும் மந்திர ஜபங்களாலும் எண்ணங்கள் நாசமாகமாட்டா, இதற்காக தாயுமான சுவாமிகள் 101 வது பாட்டில் என்ன சொல்லியிருக்கிறாரென்றால்.

"கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாங்
கரடிவெம்புலிவாயையும் கட்டலா
மொரு சிங்க முதுகுன்மேற் கொள்ளலாம்
கட்செவி யேமுத்தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து வுற்றுண் ணலாம்
வேறொருவர் காணம லுகத் துலாவலாம்
விண்ணவரை யேவல் கொளலாம்
சந்ததமு மிளமையோ டிருக்கலா மற்றொரு
சரீரத்தி னும்புகுத லாம்
சலமே நடக்கலாங் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்தி பெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே"

சித்தியடைந்த யோகிகளுக்குத் தவிர, மற்றவர் எவர்களுக்கும் இந்த மனம் வசப்படமாட்டா, யோகிகள் யோகபலத்தினால் மூச்சின் கொழுப்பையெல்லாம் அடக்கி விடுவார்கள். மூச்சியின் கொழுப்பை அடக்கிவிட்டால் அப்பொழுது அந்த மூச்சியிலிருந்து எப்பொழுகும் உதித்துக் கொண்டேயிருக்கும் எண்ணங்களையெல்லாம் நாசமாய்விடும். எப்பொழுது எண்ணங்களெல்லாம் நாசமாய் விடுகிறதோ அதன்பிறகு அவ்விடம் ஒன்றுமில்லாத வெட்டவெளியே இருக்கும். சித்தியடைந்த யோகிகள் பேசும்பொழுதும் வேலைசெய்யும் பொழுதும் தூங்கும்பொழுதும் தவிர, மற்ற காலங்களிலெல்லாம் எந்த எண்ணங்களும் அவர்களுக்கு உதிக்காமல் இருப்பார்கள். இப்படியிருப்பதே மௌனமென்று சொல்லப்படுமேயொழிய, பேசாமல் வாயை மூடி பலகையில் எழுதிக் காட்டுவதும் கைகளால் சைகை செய்வதும் மௌனமல்ல. அந்தந்த வேலைகளைச் செய்யும் காலங்களில் தவிர மற்ற காலங்களிலெல்லாம் எந்த எண்ணங்களையும் எண்ணாமல் சும்மாயிருக்கவேண்டும். அப்படி சும்மாயிருப்பதே மௌனமேயொழிய, மனதை வெளியில் ஓடவிடும்படிச் செய்து வாயை மூடிக்கொண்டிருப்பது மௌனமல்ல. ஆதலால், இதனடியில் சொல்லப்போகும் கும்பக பிராணாயாம ஸந்தியா வந்தனம் செய்து சித்தியடைந்தால் அப்பொழுது வேகமும் கொழுப்பும் அடங்கிவிடும் மூச்சியின்பொழுது மூச்சியிலிருந்து அடிக்கடி உதித்து கொண்டிருந்த எண்ணங்கள் எதுவும் உதிக்காமல் நின்று விடும்.

## 69. மூச்சை கும்பகத்தில் நிறுத்தி அரை. காயத்திரி ஜபம் செய்ய உபதேசித்தல்

எல்லோரும் காலையில் ஸ்நானம் செய்து இந்நூலில் சொல்லியிருப்பதுபோல் சில மதஸ்தர்களும், விஷ்ணு மதஸ்தர்களும் விபூதி ஸ்ரீசூர்னங்களை அணிந்துப் பிறகு பூஜை அறைக்குள் சென்று தெற்கு முகமாய்ப் பார்க்கும் படி ஒரு சிறிய பெஞ்சை வைத்து அதன்மேல் தன் குருவினுடைய படத்தை வைத்து விளக்கேற்றி அப்படத்தை எதிரில் மனையும்; அதன் மேல் மான்தோலும் அத்தோல் மேல் வெள்ளை வஸ்திரம் மடித்துவைத்து அதன்மேல் தான் உட்கார்ந்து கற்பூரமேற்றி இரண்டு கைகளையும் சேர்த்து மார்பினிடம் வைத்து படத்தைப் பார்த்துக் கும்பிட்டுக் கொண்டே

> "ஸுக்லாம் பரதரம் விஷ்ணும் ஸசிவர்ணம் சதுர்புஜம்
> பரஸந்த வதனம் த்யாயேத் ஸர்வவிக்ஞோப ஸாந்தயே
> குருர்பிரம்ம குருர்விஷ்ணு குருதேவோ மஹேஸ்வரஹ
> குருஸாக்ஷரத் யரப் பிரஹ்ம தஸ்மை குருவேநமஹ"

"எனக்கு கும்பக பிராணயாம ஸந்தியாவந்தனம் சித்திக்கும்படி வரம் பிரசாதிக்கவேண்டும் என்று மனத்தில் நினைத்துக் கும்பிட்டு முடிந்தபின் பஞ்ச பாத்திரத்திலிருக்கும் ஜலத்தை வலதுகை மூன்று விரலால் எடுத்து' ஓம் அஸ்தராயநமஹ ஓம் அசுத்ரய நமஹ என்று சிரசிற்குமேல் இரைக்கவேண்டும். பிறகு முன்போல் மூன்று விரல்களால் ஜலம் எடுத்து, ஓம் அஸ்த்ராயநமஹ ஓம் அஸ்த்ராயமஹ, ஓம் அஸ்த்ராயாமஹ என்று சிரசு சுற்றிலும் இரைக்கவேண்டும். இவ்வாறு இரைத்தபின். பஞ்சபாத்திரத்திலிருக்கும் ஜலத்தை உத்தரேணியால் எடுத்து வலது உள்ளங்கையில் விட்டு "ஓம் கேசவாய சிவாஹ" என்று மனதில் நினைத்து, அந்த தீர்த்தைச் சாப்பிடவேண்டும். பிறகு மறுபடியும் உத்தரேணி ஜலம் எடுத்து உள்ளங்கையில் விட்டு "ஓம் நாராயணய ஸ்வாஹா" என்று

மனதில் நினைத்துச் சாப்பிடவேண்டும். மறுபடியும் உத்தரேணி ஜலம் எடுத்து உள்ளங்கையில் விட்டு "ஓம் மாதவாய ஸ்வாஹா" என்று மனதில் நினைத்துச் சாப்பிடவேண்டும் இவ்வாறு செய்வதற்கு ஆசமனமென்று சொல்லப்படும். இந்த ஆசமனம் என் செய்ய வேண்டுமோ இதை இனி சொல்லப்போகிறோம் கவனியுங்கள். குடலில் நீர் இல்லாமல் குடல் உலர்ந்து சுருங்கியிருக்கும் மூன்று உத்தரேணி ஜலம் மேற்சொல்லியது போல் சாப்பிட்டால் சுருங்கியிருந்த குடல் சுருக்கம் நீங்கி குடல் தளர்ச்சியாயும் மெதுவாயும் இருக்கும் அப்பொழுது மூக்கு ரந்திரங்களின் வழியாய் மூச்சை உள்ளுக்கிழுத்தால் அந்த மூச்சானது குடலில் தாராளமாய் செல்லும், குடலில் மூச்சு தாராளமாய் செல்வதற்காவே முதல் உத்தரேணி ஜலம் சாப்பிட வேண்டும்.

வலதுகைப் பெருவிரல் மோதிவிரல் இவ்விரண்டு விரல்களையும் வலது இடது நாசிகளின் மேல் வைத்து இடது நாசியை மூடி வலது நுரையிரலில் தங்கியிருக்கும் மூச்சையெல்லாம் "ஓம் ஓம் ஓம்" என்னும் மந்திரத்துடன் எல்லா மூச்சையும் சிறுக சிறுக வலது நாசியில் விட்டு மறுபடியும் அதன் துடர்ச்சியாகவே ஓம் ஓம் ஓம் என்னும் மந்திரத்துடன் வலது நுரையீரலில் எவ்வளவு மூச்சு கொள்ளுகிறதோ அவ்வளவு மூச்சையும் சிறுகச் சிறுக உள்ளுக்கிழுத்து விழுங்கி மறுபடியும் ஒரு முறை மூச்சை இழுத்து பார்க்கவேண்டும். அப்பொழுது ஒன்று, இரண்டு, மூன்றங்குலம் நீளமவ்வளவு மூச்சு உள்ளே சென்றாலும் செல்லும் அல்லது செல்லாமல் இருந்தாலும் இருக்கலாம் மூச்சு உள்ளே சென்றாலும் சரி அல்லது செல்லாவிட்டாலும் சரி மூச்சை இழுத்துப் பார்த்தே தீரவேண்டும். இரண்டாவது முறை இழுத்த மூச்சையும் விழுக்கவேண்டும். மூச்சை விழுங்கியபின் மூக்கின் மேல் இருக்கும் விரல்களை எடுத்து விட்டு மூச்சை வெளியிடாமல் கும்பகத்தின் நிறுத்தி.

— 38 38A

'ஓம்பூ ஓம்புவ, ஓம்ஸ்வ: ஓம்மஹ ஓம்ஜந: ஓம்தப."

இந்த ஆறுமநதிரஙகளை மாத்திரம் மனதில் நினைக்க வேண்டும் இம்மந்திரங்களை மனதில் நினைததபின் மறுபடியும் உள்ளே நிறுத்தியிருககும் மூச்சை எவ்விதமாய் வெளியிட வேண்டுமோ, அதை இனி சொல்லப்போகிறோம்.

முதல் இடது நாசியை மூடி வலது நாசியில் "ஓம் ஓம் ஓம்" என்னும் மந்திரத்துடன மூச்சை உள்ளுக்கிழுத்து விழுங்கி, அம்மூச்சை கும்பகத்தில் நிறுத்தி ஆறு காயத்திரி மந்திரங்களை மனதில் நினைத்து ஜபம் செய்த்ர்கள். இப்பொழுது அம்மூச்சை வெளியிடும் பொழுது வலது நாசியை மூடி இடது நாசியில் பாம்பு புஸ் என்று எப்படி சீறுகிறதோ அதுபோல் பாம்பு சீறும் அவ்வளவு நீளம் மூச்சை ஓம் என்று வெளியில் விட்டு நான்கு செகிண்டு வரையில் அவ்விடமும் மூச்சை நிறுத்தி மறுபடியும் வெளியில்விட்ட அவ்வளவு மூச்சை மாத்திரம் ஓம் என்று இடது நாசியில் உள்ளுக்கிழுத்து அவ்விடம் முன்போல் நான்கு செகிண்டு வரையில் மூச்சை நிறுத்தி, பிறகு இடது நாசியை மூடி, வலது நாசியில் மூச்சை புஸ் என்று சீறி முகவாய்க்கட்டை வரையில் ஓம் என்று விட்டு நான்கு செகிண்டு வரையில் மூச்சை நிறுத்தி வெளியில்விட்ட மூச்சை அவ்வளவு மாத்திரம் மூச்சை மறுபடியும் ஓம் என்று வலது நாசியில் உள்ளுக்கிழுத்து நான்கு சகிண்டு வரையில் மூச்சை நிறுத்திப் பிறகு வலது நாசியை மூடி இடது நாசியில் மூச்சை ஓம் என்று முகவாய்க் கட்டை வரையில் விட்டு இதுபோல் மூச்சின் வேகம் அடஙகும் வரையில் இடது, வலது இரண்டு நாசிகளையும் விரல்களால் மாற்றிமாற்றி மூச்சை வெளியில் விட்டுக் கொணடும். மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாயிருந்து மூச்சின் வேகம் அடங்கியபின் மூக்கின்மேல் இருந்த விரல்கள எடுத்து விட்டு சரீரத்தில் உண்டாயிருக்கும் வியர்வையை கைளால் நன்றாய்த் தேய்த்துப் பிறகு குட்டையால் வேர்வையை துடைக்க வேண்டும். துடைத்தபின் சின்ன

முத்திரையை விரல்களால் பிடித்து கண்களை மூடி மூக்கு முனையில் திருஷ்ட்டியை நிறுத்தி மூச்சு உள்ளே செல்லும் பொழுது அந்த மூச்சியில் 'ஸோ' என்னும் மந்திரத்தைச் சேர்த்து உள்ளுக்கிழுத்து மறுபடியும் மூச்சை வெளிவரும் பொழுது அந்த மூச்சியில் "ஹம்" என்னும் மந்திரத்தைச் சேர்த்து வெளியிடவேண்டும். மேற்சொல்லிய மந்திரங்களை மூச்சியுடன் சேர்து உள்ளுக்கிழுக்கும் பொழுது நீங்கள் அதில் கவனம் வைக்காவிட்டால் மனம் வெளி விவகாரங்களில் ஓடிவிடும். ஆதலால் நீங்கள் எமாறாமல் இருந்து வெகு ஜாக்கிரதையாய் செய்யவேண்டும். சரீர சிரமம் தீர்துக்கொள்வதற்காக சுமார் ஐந்து நிமிஷங்கள் வரையில் "ஸோஹம்" மந்திர ஜபம் செய்யவேண்டும். இவ்வாறு விலா நாசியில் மூச்சையிழுத்து கும்பத்தில் நிறுத்தி அரை காயத்திரி மந்திரம் ஜபம் செய்து முடிந்த பின் வலது நாசியை மூடி இடது நுரையூரலில் தங்கியிருக்கும் மூச்சையெல்லாம் "ஓம் ஓம் ஓம்" என்னும் மந்திரத்துடன் எல்லா மூச்சையும் இடது நாசியில் வெளியில் விட்டு மறுபடியும் அதன் தொடர்ச்சியாகவே "ஓம் ஓம் ஓம்" என்னும் மந்திரத்துடன் இடது நுரையிரல் எவ்வளவு மூச்சுக் கொள்ளுகிறதோ அவ்வளவு மூச்சையும் சிறுகச் சிறுக இடது நாசியில் உள்ளுக்கிழுத்து விழுங்கி மறுபடியும் ஒருமுறை மூச்சை இழுத்துப் பார்க்கவேண்டும். அப்பொழுது ஒன்று இரண்டு, மூன்றங்குலம் நீளமவ்வளவு மூச்சு இடது நாசியில் உள்ளே சென்றாலும் செல்லும். அல்லது சொல்லாமல் இருந்தாலும் இருக்கலாம் மூச்சு உள்ளே சென்றாலும் சரி, அல்லது செல்லாவிட்டாலும் சரி மூச்சை இழுத்துப் பார்த்தே தீரவேண்டும்: மறுபடியும் இரண்டாவது முறை இழுத்த மூச்சையும் விழுங்கவேண்டும். மூச்சை இழுத்து விழுங்கியபின் மூக்கின் மேல் இருக்கும் விரல்களை எடுத்து மூச்சை வெளியில் விடாமல் கும்பத்தில் நின்று,

"ஓம்பூ: ஓம்புவ: ஓம்ஸ்வ: ஓம்மஹ: ஓம்ஜந: ஓம்தப,

இந்த ஆறு மந்திரங்களையும் மனதில் நினைக்க வேண்டும் இம்மந்திரங்களை மனதில் நினைத்தபின் மறுபடியும் உள்ளே நிறுத்தியிருக்கும் மூச்சை எவ்விதமாய் வெளியிட வேண்டுமோ, அதை இனி சொல்லப் போகிறோம்.

இடது நாசியை மூடி, வலது நாசியில் மூச்சை "ஓம்" என்னும் மந்திரத்துடன் முகவாய்க் கட்டை வரையில் விட்டு நான்கு செகிண்டு வரையில் மூச்சை நிறுத்தி வெளியில் விட்ட அவ்வளவு மூச்சை மாத்திரம் மறுபடியும் ஓம் என்று வலது நாசியில் உள்ளுக்கிழுத்து, நான்கு செகிண்டு வரையில் மூச்சை அவ்விடமும் நிறுத்தி, இதுபோல் மூச்சியின் வேகம் அடங்கும் வரையில் வலது இடது நாசிகளை விரல்களால் மாற்றி மாற்றி ஓம் என்னும் மந்திரத்துடன் மூச்சை வெளியில் விட்டுக் கொண்டும், மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாய் இருந்து மூச்சின் வேகம் அடங்கியபின் மூக்கின் மேல் இருக்கும் விரல்களை எடுத்துவிட்டு சரீரத்தில் உண்டாயிருக்கும் வியர்வையை கைகளால் நன்றாய்த் தேய்த்துப் பிறகு குட்டையால் துடைக்க வேண்டும். அதன் பிறகு இதுவரையில் முன்சொல்லியது போல் சுமார் ஐந்து நிமிஷங்கள் வரையில் "ஸோஹம்" மந்திர ஜபம் செய்ய வேண்டும் இவ்வாறு முதல் வலது நாசியில் செய்து முடித்தபின் இரண்டாவது முறை வலது நாசியை மூடி இடது நாசியிலும் மூச்சை கும்பகத்தில் நிறுத்தி முன் செய்தது போல் அரை காயித்திரி மந்திரம் ஜபம் செய்யவேண்டும். இதுபோல் வலது நாசிகளில் செய்து முடித்தபின் மூன்றாம் முறை வலது, இடது இரண்டு நாசியிலும் மூச்சை நன்றாய்ச் சேர்த்து உள்ளுக்கிழுத்து மூச்சை கும்பகத்தில் நிறுத்தி அரை காயத்திரி மந்திரம் ஜபம் செய்யவேண்டிய முறையை இனி சொல்லப்போகிறோம் அதுபோல் மூன்றாம் முறை செய்யவேண்டும்.

வலது நாசியிலும் இடது நாசியிலும் செய்ய வேண்டிய முறைகளையெல்லாம் இதுவரையில் சொன்னோம். வலது இடது இரண்டு நாசியிலும் செய்ய வேண்டிய முறையை இனி சொல்லப் போகிறோம் அது போல் செய்யவேண்டும்.

பெருவிரல், மோதிரவிரல் இவ்விரண்டு விரல்களையும் வலது நாசிகளின் மேல் வைத்து, இடது நாசியை மூடி வலது நாசியில் உள்ளே தங்கியிருக்கும் மூச்சை முகவாய்கட்டை வரையில் மாத்திரம் ஓம் என்று விட்டு இடது நாசியை மூடி மறுபடியும் முகவாய்க்கட்டை வரையில் மூச்சை ஓம் என்று வலது நாசியில்விட்டு இதுபோல் உள்ளே தங்கியிருக்கும் மூச்சையெல்லாம் வலது இடது இரண்டு நாசிகளின் வழியாய் வெளியில் விட்டுக்கொண்டேவந்து கடைசியில் மூச்சு கொஞ்சமாயிருக்கும் பொழுது அதை வலது நாசியில்விட்டு மறுபடியும் அதன் தொடர்ச்சியாகவே இரண்டங்குலம் நீளமவ்வளவு மூச்சை ஓம் என்று வலது நாசியில் இரண்டங்குலம் நீளமவ்வளவு மூச்சை இடது நாசியில் உள்ளுக்கிழுத்து இதுபோல் வலது இடது இரண்டு நுரையிரல்களிலும் எவ்வளவு மூச்சு கொள்கிறதோ அவ்வளவு மூச்சையும் வலது இடது இரண்டு நாசிகளின் வழியாய் உள்ளுக்கிழுத்துக் கொண்டேவந்து, கடைசியில் மூச்சு கொஞ்சமாயிருக்கும்பொழுது வலது நாசியில் இழுத்து விழுங்கவேண்டும். மூச்சை இழுத்து விழுங்கியபின் நாசிகளின் மேல் இருக்கும் விரல்களை எடுத்துவிட்டு மூச்சை வெளிவிடாமல் இருக்கும் விரல்களை எடுத்துவிட்டு மூச்சை வெளிவிடாமல் கும்பகத்தில் நிறுத்தி.

"ஓம்பூ: ஓம்புவ: ஓம்ஸ்வ: ஓம்மஹ: ஓம்ஜந: ஓம்தப,

இந்த ஆறு மந்திரங்களையும் மனதில் நினைக்க வேண்டும் இம்மந்திரங்களை மனதில் நினைத்தபின் மறுபடியும் உள்ளே நிறுத்தியிருக்கும் மூச்சை எவ்விதமாய் வெளியிட வேண்டுமோ, அதை இனி சொல்லப் போகிறோம்.

"ஓம்பூ: ஓம்புவ: ஓம்ஸவ: ஓம்மஹ: ஓம்ஜந: ஓம்தப,

இந்த ஆறு மந்திரங்களையும் மனதில் நினைக்க வேண்டும் இம்மந்திரங்களை மனதில் நினைத்தபின் மறுபடியும் உள்ளே நிறுத்தியிருக்கும் மூச்சை எவ்விதமாய் வெளியிட வேண்டுமோ, அதை இனி சொல்லப் போகிறோம்.

இடது நாசியை மூடி, வலது நாசியில் மூச்சை "ஓம்" என்னும் மந்திரத்துடன் முகவாய்க் கட்டை வரையில் விட்டு நான்கு செகிண்டு வரையில் மூச்சை நிறுத்தி வெளியில் விட்ட அவ்வளவு மூச்சை மாத்திரம் மறுபடியும் ஓம் என்று வலது நாசியில் உள்ளுக்கிழுத்து, நான்கு செகிண்டு வரையில் மூச்சை அவ்விடமும் நிறுத்தி, இதுபோல் மூச்சியின் வேகம் அடங்கும் வரையில் வலது இடது நாசிகளை விரல்களால் மாற்றி மாற்றி ஓம் என்னும் மந்திரத்துடன் மூச்சை வெளியில் விட்டுக் கொண்டும், மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாய் இருந்து மூச்சின் வேகம் அடங்கியபின் மூக்கின் மேல் இருக்கும் விரல்களை எடுத்துவிட்டு சரீரத்தில் உண்டாயிருக்கும் வியர்வையை கைகளால் நன்றாய்த் தேய்த்துப் பிறகு குட்டையால் துடைக்க வேண்டும். அதன் பிறகு இதுவரையில் முன்சொல்லியது போல் சுமார் ஐந்து நிமிஷங்கள் வரையில் "ஸோஹம்" மந்திர ஜபம் செய்ய வேண்டும் இவ்வாறு முதல் வலது நாசியில் செய்து முடித்தபின் இரண்டாவது முறை வலது நாசியை மூடி இடது நாசியிலும் மூச்சை கும்பகத்தில் நிறுத்தி முன் செய்தது போல் அரை காயித்திரி மந்திரம் ஜபம் செய்யவேண்டும். இதுபோல் வலது நாசிகளில் செய்து முடித்தபின் மூன்றாம் முறை வலது, இடது இரண்டு நாசியிலும் மூச்சை நன்றாய்ச் சேர்த்து உள்ளுக்கிழுத்து மூச்சை கும்பகத்தில் நிறுத்தி அரை காயத்திரி மந்திரம் ஜபம் செய்யவேண்டிய முறையை இனி சொல்லப்போகிறோம் அதுபோல் மூன்றாம் முறை செய்யவேண்டும்.

வலது நாசியிலும் இடது நாசியிலும் செய்ய வேண்டிய முறைகளையெல்லாம் இதுவரையில் சொன்னோம். வலது இடது இரண்டு நாசியிலும் செய்ய வேண்டிய முறையை இனி சொல்லப் போகிறோம் அது போல் செய்யவேண்டும்.

பெருவிரல், மோதிரவிரல் இவ்விரண்டு விரல்களையும் வலது நாசிகளின் மேல் வைத்து, இடது நாசியை மூடி வலது நாசியில் உள்ளே தங்கியிருக்கும் மூச்சை முகவாய்கட்டை வரையில் மாத்திரம் ஓம் என்று விட்டு இடது நாசியை மூடி மறுபடியும் முகவாய்க்கட்டை வரையில் மூச்சை ஓம் என்று வலது நாசியில்விட்டு இதுபோல் உள்ளே தங்கியிருக்கும் மூச்சையெல்லாம் வலது இடது இரண்டு நாசிகளின் வழியாய் வெளியில் விட்டுக்கொண்டேவந்து கடைசியில் மூச்சு கொஞ்சமாயிருக்கும் பொழுது அதை வலது நாசியில்விட்டு மறுபடியும் அதன் தொடர்ச்சியாகவே இரண்டங்குலம் நீளமவ்வளவு மூச்சை ஓம் என்று வலது நாசியில் இரண்டங்குலம் நீளமவ்வளவு மூச்சை இடது நாசியில் உள்ளுக்கிழுத்து இதுபோல் வலது இடது இரண்டு நுரையிரல்களிலும் எவ்வளவு மூச்சு கொள்கிறதோ அவ்வளவு மூச்சையும் வலது இடது இரண்டு நாசிகளின் வழியாய் உள்ளுக்கிழுத்துக் கொண்டேவந்து, கடைசியில் மூச்சு கொஞ்சமாயிருக்கும்பொழுது வலது நாசியில் இழுத்து விழுங்கவேண்டும். மூச்சை இழுத்து விழுங்கியபின் நாசிகளின் மேல் இருக்கும் விரல்களை எடுத்துவிட்டு மூச்சை வெளிவிடாமல் இருக்கும் விரல்களை எடுத்துவிட்டு மூச்சை வெளிவிடாமல் கும்பகத்தில் நிறுத்தி.

"ஓம்பூ: ஓம்புவ: ஓம்ஸ்வ: ஓம்மஹ: ஓம்ஜந: ஓம்தப,

இந்த ஆறு மந்திரங்களையும் மனதில் நினைக்க வேண்டும் இம்மந்திரங்களை மனதில் நினைத்தபின் மறுபடியும் உள்ளே நிறுத்தியிருக்கும் மூச்சை எவ்விதமாய் வெளியிட வேண்டுமோ, அதை இனி சொல்லப் போகிறோம்.

வலது நாசியை மூடி, இடது நாசியில் மூச்சை "ஓம்" என்னும் மந்திரத்துடன் முகவாய்கட்டை வரையில் விட்டு நான்கு செகிண்டு வரையில் மூச்சை நிறுத்தி வெளியில் விட்ட அவ்வளவு மூச்சை மாத்திரம் மறுபடியும் ஓம் என்று வலது நாசியில் உள்ளுக்கிழுத்து நான்கு செகிண்டு வரையில் மூச்சை அவ்விடமும் நிறுத்தி, இதுபோல் மூச்சியின் வேகம் அடங்கும் வரையில் வலது இடது நாசிகளை விரல்களால் மாற்றி மாற்றி ஓம் என்னும் மந்திரத்துடன் மூச்சை வெளியில் விட்டுக் கொண்டும் மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாய் இருந்து மூச்சின் வேகம் அடங்கியபின் மூக்கின்மேல் இருக்கும் விரல்களை எடுத்துவிட்டுக் கொண்டும். மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாய் இருந்து மூச்சின் வேகம் அடங்கியபின் மூக்கின் மேல் இருக்கும் விரல்களை எடுத்துவிட்டு சரீரத்தில் உண்டாயிருக்கும் வியர்வையை கைளால் நன்றாய்த் தேய்த்துப் பிறகு குட்டையால் துடைக்கவேண்டும். அதன்பிறகு இதுவரையில் முன்சொல்லியதுபோல் சுமார் ஐந்து நிமிஷங்கள் வரையில் "ஸோஹம்" மந்திர ஜபம் செய்ய வேண்டும் இவ்வாறு முதல் வலது நாசியில் செய்து முடிந்தபின் இரண்டாவது முறை வலது நாசியை மூடி இடது நாசியிலும் மூச்சை கும்பகத்தில் நிறுத்தி முன் செய்ததுபோல் அரை காயித்திரி மந்திரம் ஜபம் செய்யவேண்டும். இதுபோல் ஒருநாளும் தவறாமல் நாற்பது நாள் வரையில் மூச்சை கும்பகத்தில் நிறுத்தி மேற்சொல்லியதுபோல் அரை காயத்திரி மந்திரம் ஜபம் செய்ய வேண்டும் இவ்வாறு மூன்று நாசிகளிலும் மூச்சை நிறுத்தி, அரை காயத்திரி ஜபம் செய்தால் ஒரு சந்தியாவந்தனம் அல்லது ஒரு பிராணயாமம் செய்தவனாகிறான். இதில் சொல்லியிருப்பதுபோல் ஸந்தியா வந்தனம் செய்து மூச்சியின் வேகத்தைக் கொன்றுவிட்டால் இப்பொழுது அந்த

மூச்சு அந்த யோகியின் வசமாய் யோகியின் இஷ்ட்டம்போல் மூச்சு நடக்கும், அப்படியே யோகியின் இஷ்ட்டம் போல் மூச்சு நடப்பதற்கு காரணம் என்னவென்றால் யோகி மூச்சின் வேகத்தையும் கொழுப்பையும் யோகாப்பியாசத்தினால் கொன்று விடுகிறான். மூச்சின் வேகத்தைக் கொன்று விடுவதனால் அப்பொழுது அந்த மூச்சிலிருந்து உதித்துக் கொண்டே இருக்கும் எண்ணங்களளெல்லாம் நின்றுவிடும். மூச்சு யோகிக்கு வசமாகாவிட்டால் அந்த மூச்சிலிருந்து அனேக எண்ணங்களெல்லாம் நின்றுவிடும். மூச்சு யோகிக்கு வசமாகாவிட்டால் அந்த மூச்சிலிருந்து அனேக எண்ணங்கள் உதித்துக் கொண்டேயிருக்கும். இந்த எண்ணங்களுக்கெல்லாம் மூச்சு தாய் வீடாயிருக்கிறது. தாய்வீடாக இருக்கும் மூச்சின் வேகத்தை யெல்லாம் யோகி கொன்றுவிடுவான். மூச்சின் வேகத்தையோகி கொன்றுவிட்டால் அப்பொழுது அந்த யோகிக்கு எந்த எண்ணங்களும் உதிக்கவே மாட்டா.

இதன் ரகஸ்யத்தை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமானால் மூச்சை பூர்த்தியாய் உள்ளுக்கிழுத்து நிறுத்தி வீட்டுக்குப் போக வேண்டுமென்று நினைத்துப் பாருங்கள். அப்பொழுது அந்த நினைப்பு உங்களுக்கு உண்டாகவேமாட்டா. எண்ணங்களையெல்லாம் நாசம் செய்வதற்காகவே யோகாபியாசம் செய்யவேண்டும் இதுவரையில் மேற்சொல்லிய ரகஸ்யங்களெல்லாம் ரூபாயில் பதினைந்தனா மனிதர்களுக்குத் தெரியவராது. இந்த ரகஸ்யங்களெல்லாம் யோகத்தில் சித்தி பெற்ற யோகிகளுக்கு மாத்திரம் தெரியவரும் விக்கிரகங்களைப் பூஜை செய்பவர்களுக்கும். அனேக விதங்களாகிய மந்திரங்களை ஜபம் செய்பவர்களும் மூச்சை நிறுத்தாமல் சந்தியாவந்தனம் செய்பவர்கள் இப்படிப்பட்டவர்களுக்கெல்லாம் எண்ணங்கள் எப்பொழுதும் உதித்துக் கொண்டே இருக்கும்.

மூச்சை இழுத்து கும்பகத்தில் நிறுத்தி காயத்திரி மந்திரம் எண்ணி முடிந்தபின் மூச்சை இரண்டங்குலம் நீளம் வெளியிடும்பொழுது நான்கு செகிண்டு நிறுத்த வேண்டும் மென்றும் மறுபடியும் அம்மூச்சை உள்ளுக்கிழுத்தபின் அவ்விடமும் நான்கு செகிண்டு நிறுத்தவேண்டுமென்றும் இது வரையில் முன்சொல்லியிருக்கிறோமல்லவா? மூச்சை வெளியிடும் பொழுது மறுபடியும் உள்ளுக்கிழுக்கும் பொழுதும் அங்கங்கு நான்கு சகிண்டு வரையில் மூச்சை நிறுத்தி கொண்டே மூச்சை இழுத்து கும்பகத்தில் நிறுத்தி காயத்திரி மந்திரம் எண்ணி முடிந்தபின் மூச்சை இரண்டங்குலம் நீளம் வெளியிடும்பொழுது நான்கு செகிண்டு நிறுத்த வேண்டும் மென்றும் மறுபடியும் அம்மூச்சை உள்ளுக்கிழுத்தபின் அவ்விடமும் நான்கு செகிண்டு நிறுத்தவேண்டுமென்றும் இது வரையில் முன்சொல்லியிருக் கிறோமல்லவா? மூச்சை வெளியிடும் பொழுது மறுபடியும் உள்ளுக்கிழுக்கும் பொழுதும் அங்கங்கு நான்கு சகிண்டு வரையில் மூச்சை நிறுத்தி கொண்டே வந்தால் அப்பொழுது அந்த மூச்சின் வேகமும்பலமும் வர குறைந்து கொண்டே வந்து கடைசியில் யோகாப்பியாச முதிர்ச்சியினால் மூச்சியின் வேகமெல்லாம் குறைந்துவிடும். அப்படிப்பட்ட யோகிகளுக்கு அந்த மூச்சு வசமாய்விடும். மூச்சு வசமானால் எண்ணங்கள் தலைகாட்டாமல் ஓடிவிடும், இந்த எண்ணங்களுக்கே 'மனது' என்று சொல்லப்படும். மனது வேறு; எண்ணங்கள் வேறல்ல. எண்ணங்களே மனதாகவும், மனதே எண்ணங்களாகவும் இருக்கின்றன. எண்ணங்களுக் கெல்லாம் மூலக்காரணமாயிருக்கும் மூச்சியின் வேகத்தை அடக்கி ஸந்தியாவந்தனம் செய்ய இனி சொல்லப்போகிறோம். அதுபோல் எல்லா பிராமணர்களும் க்ஷத்திரிய, வைஸ்யர்களும் செய்து வாருங்கள். சூத்திரர் மற்ற ஜாதியார் காயத்திரி மந்திரங்களை சரியான உச்சரிப்புடன் ஜபம் செய்ய முடியாது. ஆதலால்

யோகாப்பியாசம் செய்ய வேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூள் என்னும் இன்னொரு நூல் புதியதாய் எழுதியிருக்கின்றோம். அந்நூலை வரவழைத்து எல்லோரும் சுலபமாய் யோகாப்பியாசம் செய்ய இந்நூலாசிரியராகிய யோகீஸ்வரர் எழுதியிருக்கின்றார். அதில் சொல்லியது போல் யோகாப்பியாசம் செய்துவர வேண்டும். இது விஷயம் இதோடே நிறுத்தப்பட்டது.

முதல் வலது நாசியிலும் பிறகு இடது நாசியிலும் அதன் வலது இடது இவ்விரண்டு நாசிகளிலும் செய்தால் தான் ஒரு சந்தியாவந்தனம் செய்தவராகின்றார்கள். இவ்வாறு செய்வதே கும்பக பிராணயாம சந்தியா வந்தனமென்று சொல்லப்படுமே யொழிய, மூக்கின் மேல் விரல்களை வைத்து மூச்சை விட்டுக்கொண்டும் மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டும் ஓம்பூ, ஓம்பூவ முதலாகிய காயத்திரி மந்திரங்களை ஜபம் செய்வது சரியான காயத்திரி மந்திர ஜபமல்ல.

மேற்சொல்லியது போல மூச்சை இழுத்து கும்பகத்தில நிறுத்தி நாற்பது நாள் வரையில் அரை காயத்திரி மந்திரம் காலை மாலை இரண்டு வேளைகளிலும் ஜபம் செய்ய வேண்டும் மாலையில் செய்யும்பொழுது Reverse அதாவது முதல் இடது நாசியிலும், பிறகு வலது நாசியிலும் அதன் பிறகு இடது வலது நாசியிலும் செய்யவேண்டும்.

மூச்சை இழுத்து கும்பகத்தில் நிறுத்தி நாற்பது நாள் வரையில் ஓம்பூ; – என்கிற ஒரு காயத்திரி மந்திரம் ஜபம் செய்ய வேண்டும்.

## 70. மூச்சை கும்பகத்தில் நிறுத்தி ஒரு காயாத்திரி ஜபம் செய்ய உபதேசித்தல்

தினந்தோறும் காலை 4-மணி முதல் 7-மணிக்குள்ளும் மறுபடியும் காலை 5-மணி முதல் 7-மணிக்குள்ளும் இதன் மத்தியில் எப்பொழுதாகிலும் சரி இந்நூலில் சொல்லியிருக்கும் சந்தியாவந்தனம் செய்து கொள்ளலாம். மாலை செய்யும்பொழுது Reverse என்றால், முதல் இடது நாசியிலும், பிறகு வலது நாசயிலும் அதன் பிறகு இடது வலது இரண்டு நாசிகளிலும் சேர்த்துச் செய்யவேண்டும்மென்று மறுபடியும் இவ்விடமும் சொல்லுகின்றோம். மூச்சை நிறுத்தி ஒரு காயத்திரி ஜபம் செய்வதை இனி சொல்லப்போகிறோம்.

இதுவரையில் முன் சொல்லியது போல் காலை பூஜை அறைக்குள் சென்று குரு ஸ்துதி செய்து முடிந்தபின் மூன்று விழுங்கு ஜலம் சாப்பிட்டு கண்களையும் இடது நாசியையும் மூடி வலது நாசியில் ஓம் ஓம் என்னும் மந்தித்துடன் மூச்சை ஒரே நீளமாய் விடாமல் ஓம் ஓம் என்னும் மந்திரத்துடன் இரண்டு இரண்டு அங்குலம் மூச்சை நீளமவ்வளவு மூச்சை மாத்திரம் வெளியில் விட்டு மறுபடியும் மேற்சொல்லியது போல் இரண்டு இரண்டு அங்குலம் மூச்சை ஓம், ஓம் என்று உள்ளுக்கிழுத்து விழுங்கி மறுபடியும் அம்மூச்சை வெளியிடாமல் கும்பகத்தில் நிறுத்தி.

ஓம் ஓம் என்று உள்ளுக்கிழுத்து விழுங்கி மறுபடியும் அம்மூச்சை வெளியிடாமல் கும்பகத்தில் நிறுத்தி

ஓம்பூ, ஓம்புவ: ஓம்ஸ்வ: ஓம்மஹ: ஓம்ஜந, ஓம்தப: ஓம்ஸத்யம், தத்ஸவிதுர்வரேண்யம் பரிகோதேவஸ்யதீமகூீயோயோந: பரசோதயாத், ஓம் ஆபோஜ்யோதி ரஸோம் ருதம ப்ரஹ்ம பூர்புவ ஸவரோம்"

மூச்சை நிறுத்தி இந்த ஒருகாயத்திரி மந்திரம் ஜபம் செய்து முடித்தவுடன் இடதுகைச் சுண்டு விரலை மடித்து ஒன்று என்று மனதில் நினைத்துக் கொள்ளவேண்டும். இவ்வாறு நினைத்துக் கொண்ட பிறகு இதுவரையில் முன்சொல்லியது

போல் வலது நாசியை மூடி இடது நாசியிலும் மறுபடியும் வலது நாசியிலுமாய் அந்த மூச்சியின் வேகம் அடங்கும் வரையில் மூச்சை விரல்களால் மாற்றி மாற்றி விட்டுக் கொண்டும் மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாயிருந்த மூச்சியின் வேகம் அடங்கியபின் ஸோஹம் மந்திரம் இதுவரையில் முன் செய்ததுபோல் ஐந்து நிமிஷங்கள் வரையில் ஜபம் செய்யவேண்டும். அப்பொழுது மூச்சை நிறுத்தி வலது நாசியில் ஒரு காயத்திரி மந்திரம் ஜபம் செய்தவனாகின்றான். பிறகு

வலது நாசியை மூடி இடது நாசியில் மூச்சை ஓம், ஓம், என்று இதுவரையில் முன் சொன்னது போல் வெளியில் விட்டு மறுபடியும் ஓம், ஓம், ஓம் என்னும் இடது நாசியில் மூச்சை உள்ளுக்கிழுத்து விழுங்கி ஒரு காயத்திரி என்னும் வரையில் மூச்சை நிறுத்தி ஒன்று என்று மனதில் நினைத்து, இடதுகைச் சுண்டுவிரலை மடக்கவேண்டும். இவ்வாறு மடக்கியபின் அம்மூச்சை வலது நாசியிலும் இடது நாசியிலும் ஓம் ஓம் என்று இதுவரையில் முன் விட்டது போல் விட்டுப் பிறகு ஸோஹாம் மந்திரம் ஐந்து நிமிஷங்கள் வரையில் ஜபம் செய்யவேண்டும். அப்பொழுது மூச்சை நிறுத்தி இடது நாசியில் ஒரு காயத்திரி மந்திரம் ஜபம் செய்தவனாகின்றான். இவ்வாறாக, இடது நாசியில் செய்து முடிந்த பின் வலது. இடது இரண்டு நாசிகளிலும் முன் சொல்லியது போல் ஓம் ஓம் ஓம் என்று இரண்டு நாசிகளிலும் மூச்சை வெளியில் விட்டு மறுபடியும் மூச்சை ஓம் ஓம் என்று உள்ளுக்கிழுத்து விழுங்கி ஒரு காயத்திரி மந்திரம் ஜபம் செய்யும் வரையில் மூச்சை நிறுத்தவேண்டும். பிறகு அம்மூச்சை இடது வலது நாசியிலுமாய் ஓம் என்னும் மந்திரத்துடன் விட்டும் இழுத்துமாய் இதுவரையில் முன் செய்ததுபோல் செய்யவேண்டும். அப்பொழுது மூச்சையிழுத்து நிறுத்தி வலதிடது இரண்டு நாசியிலும் ஒரு காயத்திரி மந்திரம் ஜபம் செய்தவனாகின்றான். இம்மூன்று நாசிகளிலும் செய்தால் தான் ஒரு சந்தியாவந்தனம் அல்லது ஒரு பிராணாயமம் செய்தவனாகின்றான். இவ்வாறு செய்து முடிந்தபின் மூச்சை நிறுத்தி ஒன்றரை காயத்திரி மந்திரம் ஜபம் செய்ய வேண்டும்.

## 71. மூச்சை கும்பகத்தில் இரண்டு காயத்திரி ஜபம் செய்ய உபதேசித்தல்

மூச்சை கும்பகத்தில் நிறுத்தி என்பது நாள் வரையில் ஒருகாயத்திரி மந்திரம் ஜபம் செய்து முடிந்தபின் மறுபடியும் என்பது நான் வரையில் இரண்டு காயத்திரி மந்திரம் ஜபம் செய்ய வேண்டியதை இனி சொல்லப்போகிறோம்.

மூன்று உத்தரேணி ஜலம் சாப்பிட்டு கண்களையும் இடது நாசியையும்மூடி வலது நாசியில் மூச்சையெல்லாம் ஓம், ஓம், ஓம் என்று வெளியில் விட்டு மறுபடியும் அதன் தொடர்ச்சியாகவே மூச்சை ஓம் ஓம் ஓம் என்று வலது நுரை ஈரலில் எவ்வளவு மூச்சு கொள்ளுகிறதோ அவ்வளவு மூச்சையும் பூர்த்தியாய் சிறுகச் சிறுக ஓம் என்றும் மந்திரத்துடன் உள்ளுக்கிழுத்து விழுங்கி மறுபடியும் இன்னெரு முறையும் இழுத்து விழுங்கி

ஓம்பூ, ஓம்புவ: ஓம்ஸ்வ: ஓம்மஹ: ஓம்ஜந, ஓம்தப: ஓம்ஸத்யம், தத்ஸவிதுர்வரேண்யம் பரிகோதே வஸ்யதீமக்ஷீயோயோந: பரசோதயாத், ஓம் ஆபோஜ்யோதி ரஸோம் ருதம ப்ரஹ்ம பூர்புவ ஸவரோம்"

என்று ஒவ்வொரு காயத்திரி மந்திரம் ஜபம் செய்து முடிந்தவுடன் இடதுகைச்சுண்டு விரலை மடித்து ஒன்று என்று மனதில் நினைத்துப் பிறகு இடது நாசியைமூடி வலது நாசியில் மூச்சையெல்லாம் ஓம் ஓம் ஓம் என்று வெளியில்விட்டு மறுபடியும் அதன் தொடர்ச்சியாகவே மூச்சை ஓம் ஓம் ஓம் என்று வலது நாசியில் பூர்த்தியாய் சிறுக சிறுக ஓம் என்னும் மந்திரத்துடன் உள்ளுக்கிழுத்து விழுங்கி அதை கும்பகத்தில் நிறுத்தி இன்னொரு முறை

ஓம்பூ, ஓம்புவ: ஓம்ஸ்வ: ஓம்மஹ: ஓம்ஜந, ஓம்தப: ஓம்ஸத்யம், தத்ஸவிதுர்வரேண்யம் பாகோதே வஸ்யஹிதீமதியோ யோந: ப்ரசோதயாத், ஓம் ஆபோஜ்யோதி ரஸோம் ருதம ப்ரஹ்ம பூர்புவ ஸ்வரோம்"

என்று இன்னொரு காயத்திரி மந்திரம் ஜபம் செய்து இரண்டு என்று மனதில் நினைத்துக்கொள்ள வேண்டும். அப்பொழுது இரண்டு காயத்திரி மந்திரம் ஜபம் செய்யும் வரையில் மூச்சை நிறுத்தினவனாகின்றான்.

பிறகு அம்மூச்சை வெளியிடும் பொழுது வலது நாசியைமூடி, இடது நாசியில் வலது நாசியிலுமாய் முகவாய்கட்டை வரையில் அம்மூச்சை இரண்டு நாசிகளிலும் மாற்றி மாற்றி வெளியில் விட்டுக்கொண்டும் மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாய் இருந்து மூச்சியின் வேகம் அடங்கியபின் நாசியின் மேல் இருக்கும் விரல்களை எடுத்துவிட்டு சரீரத்தில் உண்டாகிய வியர்வையை கைகளால் நன்றாய்த் தேய்த்து தளுவத்தால் (குட்டையால்) சரீரமெல்லாம் துடைத்துப் பிறகு சின்முத்திரையை விரல்களால் பிடித்து ஐந்து நிமிஷங்கள் வரையில், ஸோஹம் மந்திரம் மூச்சியில் சேர்த்து ஜபம் செய்ய வேண்டும். இதுபோல் வலது நாசியில் செய்து முடிந்தபின்

வலது நாசியைமூடி இடது நாசியின் உள்ளே தங்கியிருக்கும் மூச்சையெல்லாம் ஓம் ஓம் என்று வெளியில் விட்டு விட்டு மறுபடியும் அதன் தொடர்ச்சியாகவே மூச்சை ஓம் ஓம் என்று உள்ளுக்கிழுத்து விழுங்கி மறுபடியும் இன்னொருமுறை மூச்சை ஓம் என்று உள்ளுக்கிழுத்து விழுங்கி மறுபடியும் அம்மூச்சை வெளியிடாமல் நிறுத்தி இதுவரையில் முன்செய்ததுபோல் இரண்டு காயத்திரி மந்திரம் ஜபம் செய்யும் வரையில் மூச்சை நிறுத்திப் பிறகு மூச்சை விடும்போது இடது நாசியை மூடி வலது நாசியில் இடது இடது நாசியிலுமாய்

மூச்சின் வேகம் அடங்கும் வரையில் முகவாய்கட்டை வரையில் மூச்சைவிட்டுக் கொண்டும் மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாய் இருக்கவேண்டும். பிறகு மூச்சியின் வேகம் அடங்கியபின் நாசியின் மேல் இருக்கும் விரல்களை எடுத்துவிடு வியர்வையை கைகளால் தேய்த்துத் தளுவத்தால் துடைத்துப் பிறகு ஹோஹம் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கிழுத்தும் மறுபடியும் வெளியில் விட்டுமாய் ஜபம் செய்ய வேண்டும், இதுபோல் வலது இடது இரண்டு நாசிகளிலும் செய்து முடிந்தபின்.

மூன்றாவது முறை உள்ளே தங்கியிருக்கும் மூச்சையெல்லாம் வலது இடது இரண்டு நாசிகளின் வழியாய் வெளியில் விட்டுவிட்டு மறுபடியும் அதன் துடர்ச்சியாகவே வலது இடது இரண்டு நாசிகளின் மூச்சை ஓம் ஓம் என்று உள்ளுக்கிழுத்து விழுங்கி இரண்டு காயத்ரி மந்திரம் ஜபம் செய்யும் வரையில் மூச்சை நிறுத்திப் பிறகு இதுவரையில் முன்சொல்லியது போல் இடது நாசியிலும் வலது நாசியிலுமாய் மூச்சை விரல்களால் மாற்றி மாற்றி விட்டுக்கொண்டும் மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாயிருக்க வேண்டும் மூச்சியின் வேகம் அடங்கிய பின் ஐந்து நிமிஷங்கள் வரையில் ஹோஹம் மந்திரம் ஜபம் செய்ய வேண்டும்.

வலது நாசி இடது நாசி வலது இடது நாசிகளின் இம்மூன்று நாசிகளிலும் செய்தால் ஒரு சந்தியாவந்தனம் என்றால் ஒரு பிராணாயாமம் செய்தவர்களாகின்றார்கள். காலையில் வலது நாசி பிறகு இடது நாசி அதன் பிறகு வலது இடது இரண்டு நாசிகளிலும் செய்யவேண்டும் மாலையில் செய்யும்பொழுது முதல் வலது நாசியை மூடி வலது அதன் பிறகு இடது வலது இரண்டு நாசிகளிலும் செய்ய வேண்டும்.

இது போல் அனேக மாதம் பழக்கத்தால் மூச்சை வலது நாசியில் உள்ளுக்கிழுத்து நிறுத்தி ஏழு காயத்திரி மந்திரம் ஜபம் செய்ய வேண்டும். வலது நாசியில் ஏழு காயத்ரி மந்திரம் ஜபம் செய்து முடிந்தபின்(இடது நாசியில் மூச்சை இழுத்து நிறுத்தி ஏழு காயத்ரி மந்திரம் ஜபம் செய்யவேண்டும். பிறகு வலது இடது இரண்டு நாசிகளிலும் மூச்சை இழுத்து நிறுத்தி ஏழு காயத்ரி மந்திரம் ஜபம் செய்ய வேண்டும். இம்மூன்று நாசிகளிலும் மூச்சை இழுத்து நிறுத்தி முவ்வேழு இருத்தி ஒன்று காயத்ரி மந்திரம் ஜபம் செய்தால், அப்பொழுது இதற்கு ஸ்ப்த வியாஹூருதிகள்டட என்று சொல்லப்படும் பிறகு அனேகமாதம் பழக்கத்தால் வலது நாசியிலும் இடது நாசயிலும் வலது இடது இரண்டு நாசிகளிலும் மூச்சை இழுத்து நிறுத்தி பதினொரு காயத்ரி மந்திபம் ஜபம் செய்தால் அதற்கு "சிரோ மந்திரம்" என்று சொல்லப்படும். இவ்வாறாக மூச்சை இழுத்து கும்பகத்தில் நிறுத்தி, அநேக காயத்ரி மந்திரங்களை ஜபம் செய்துவந்தால் அப்பொழுது மூச்சியின் வேகமும் பலமும் குறைந்துப் பிறகு அம்மூச்சு அந்த யோகிக்கு வசமாய்விடும். மூச்சு யோகிக்கு வசமானபின் அந்த யோகிக்கு எந்த எண்ணங்களும் உதிக்கவேமாட்டா. எனென்றால் எண்ணங்களெல்லாம் மூச்சியில் இருந்து உதிக்கின்றது யோகி மூச்சியின் வேகத்தை கொன்று விடுவதனால் அந்த யோகிக்கு எந்த எண்ணங்களும் உதிக்கவேமாட்டா என்று மற்றொரு முறையும் சொல்லுகிறோம் ஆனால்; அந்த யோகி பேசவேண்டுமென்று நினைத்தால் அப்பொழுது எண்ணங்கள் உதித்து பேசுவார். பிறகு எதையும் நினையாமல் சும்மாயிருக்கவேண்டு மென்று நினைத்தால் அதுபோல் சும்மாயிருக்கவேண்டுமென்று நினைத்தால் அதுபோல் சும்மாயிருப்பார். இப்படிப்பட்ட அற்புதமான மகிமை யோகசித்தி பெற்றவர்களுக்கு மாத்திரம் இருக்குமேயொழிய தேவதா பூஜை மந்திர ஜபங்கள் செய்பவர்களுக்கு

எவ்வளவேணும் இராது இந்த பூஜைகளாலும், மந்திர ஜபங்களாலும் மூச்சியின் வேகம் அடங்கவேமாட்டா. அதனால் அவர்களுக்கு எண்ணங்கள் எப்பொழுதும் உதித்துக் கொண்டேயிருக்கும். எண்ணங்கள் எதுவும் உதிக்காமல் இருக்கும்படிச் செய்ய யோகம் ஒன்றிற்கே அதிகாரமுண்டு மற்ற பூஜைகளுக்கும் மந்திர ஜபங்களுக்கும் எண்ணங்கள் உதிக்காமல் இருக்கும்படிச் செய்ய சிறிதேனும் அந்த பூஜைகளுக்கும் மந்திர ஜபங்களுக்கும் அதிகாரம் கிடையாது.

இப்படிப்பட்ட யோகிக்கு ஆயுள் விசேஷமாய் வளர்ந்து அனேக நூறு வருஷங்கள் வரையில் ஜீவித்திருப்பார்.

இதை வாசிக்கும் சகோதரர்கள் சகோதரிகள் எல்லோரும் மூச்சை கும்பகத்தில் நிறுத்தி ஒரு காயத்ரி மந்திரம் ஜபம் செய்யும் வரையில் மூச்சை நிறுத்த மாட்டீர்கள். அதலால் என்ன செய்ய வேண்டுமென்றால். மூச்சை வலது நாசியில் உள்ளுக்கிழுத்து நிறுத்தி.

ஓம்பூ ஓம்புவ ஓம்ஸ்வ ஓம்மஹ ஓமஜந ஓம்தப

என்னும் அந்த ஆறு மந்திரங்களை மாத்திரம் ஜபம் செய்யும் வரையில் மூச்சை நிறுத்தி அதன்பிறகு இடது வலது நாசிகளில் மூச்சை மாற்றி மாற்றி விட்டுவிட வேண்டும் அதுபோல் இடது நாசியில் அரை காயத்ரி வலது இடது இரண்டு நாசிகளிலும் அரை காயத்ரி என்னும் வரையில் நாற்பது நாள் வரையில் மூச்சை நிறுத்தி நாதனம் செய்யவேண்டும். பிறகு நாற்பத்தோராவது நாள் முதல் 'ஓம்பூ' முதல் ஓம்ஆபோ ஜோதிரஸாமருதம் ப்ரஹ்ம பூர்புவ ஸ்வரோம்ட என்னும் இந்த பதினோரு மந்திரங்களை எண்ணும் வரையில் மூச்சை கும்பகத்தில் நிறுத்தவேண்டும் இவ்வாறு நாற்பது நாள் வரையில் காயத்ரி மந்திரம் ஜபம் செய்யும் வரையில் மூச்சை நிறுத்தி சாதனம் செய்து முடிந்தபின் மறுபடியும்

நாற்பத்தோராவது நாள் முதல் மூச்சை நிறுத்தி ஒன்றரை காயத்ரி மந்திரம் ஜபம் செய்யும் வரையில் மூச்சை நிறுத்தவேண்டும் இதுபோல் நாற்பது நாளைக்கு ஒரு முறை மூச்சை நிறுத்தி, அரை காயத்ரி மந்திரமாய் உயர்த்திக்கொண்டே சென்றால் அநேக காயத்ரி மந்திரம் ஜபம் செய்யும் வரையில் மூச்சை நிறுத்த சக்தியுண்டாகுமென்று அறியக்கடவீர்களாக. இதுபோல் 12 பன்னிரண்டு காயத்திரி வரையில் மூச்சை நிறுத்த வேண்டும்.

"உருத்தரித்த நாடியில் ஒடுகின்ற வாயுவை
கருத்தினால் இருத்திய கபாலமேற்ற வல்லிரேல்
விருத்தருமே பாலராவர் மேனியும் சிவந்திடும
அருட்டரிந்த நாதர் பாதம் அம்மைபாதம் உண்மையே."

"ஒடிஒடிஒடிஒடி உன்கலந்த ஜோதியை
நாடிநாடிநாடிநாடி நாள்களும் கழிந்துபோய்
வாடிவாடிவாடிவாடி மாண்டுபோன மானிடர்
கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே."

"காணவேணும் என்றுநீ கடல்மலைக ளேருவீர்
ஆணுவம் தல்லவோ அறிவில்லாத மூடரே
வேணுமென்று ஈசம்பாதம் மெய்யுளே விளங்கினால்
காணலாகும் நாதனைக் கடந்துநின்ற சோதியே."

"புத்தங்களைச் சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்
செத்திடம் பிறந்திடந் தெங்கனென் றறிகிலீர்
அத்தனைய சித்தனை யறிந்துநோக்க வல்லிரேல்
உத்தமத்து ளாயசோதி யுணரும்யோக மாகுமே."

"நாலுவேத மோதுவீர் ஞானமொன்று சொல்லுவீர்
பாலினோடு நெய்கந்த பான்மையை யறிவிரோ
ஆல்மண்ட கண்டனு மகத்துளே யிருக்கையில்
காலனென்று சொல்லுவீர் கனாவினுமங் கில்லையே,"



3*9*A

"சாற்றடா என்மகனே மான கேளு
சத்தியமா யோகமென்ற தனுவைச் சொல்வேன்
எற்றடா பின்சொல்லும் மௌனம் பூட்டி
இன்பமுடன் பேரொளயு மெண்ணிக் காணும்."

பல்லவி

பூசித்தேன் பிராணாயவாசியோகம் ரேசித்து ஆண்டே
பூரித்து கும்பகம் கண்டேன் பாக

அநுபல்லவி

வாசித்து வாயுவைபூதி வங்கென்றுந் தப்பித்துலாவி
தூஷித்துக் கருவிகளைத் தொடர்ந்து கட்டறுத்துயான்
(பூசித்தேன்)

சரணங்கள்

கும்பித்து பூரகநாடி தம்பீத்துக் கும்பகந்தேடி
நம்பித்து மூவாண்டுமென்று அம்பிகயோகத்தில் நின்று
கெம்பீரமாய் கண்ட தரையில் எம்பிரான்
நம்பி கமலபாதந் தும்பிமுகனைத் தொழுது (பூசித்தேன்)

நங்கென்றும் வினாடியூதி மங்கென்றுஞ் சாதித்துபேதி
சிங்கென்றும் மூலத்துக்கேற்றி
(வங்கென்றும் பரத்தைப் போற்றி)
அங்கென்றும் வாசிமேலாக வெங்கெங்கும் பிரகாசமாக
கங்குல்பக லகன்றேக திங்களுங் கதிரோங்க (பூசித்தே)

ஔவென மூலத்திலோட்டி யொன்பது வாசலுங்கட்டி
ஔவெனும் உவ்வெனுங்கூட்டி அப்புவையப்புவிலூட்டி
நாசியில் வாசியோடாமல் லிசியி ஞானம்பாயாமல்
மூதசிகன் பொற்பாதமேவி யூசியின் முனைவாறாமல் (பூசித்தே)

398

ஆதா ரமப்புவ மூலத்தின் கீழோங்கார மூலம்
பிதாவைத் தொழுது முக்தி பிராணயாம தீபத்தையேற்றி
கங்கை மதிமலர்தன் கமல் பாதாரவிந்தம்
கங்கா ஸ்நாணங்கள் செய்து கெவனம்பாயவும் வாசி (பூசித்தே)
ஆசான் சற்குருநாத ரருளாண்டையே கேளீர்
பாசாபாசமறுத்தி பரிபூரண சந்திரனை
தேசியெனுங் கெவனவாசிக் குதிரை மீதில்
நாசிப்புருவ நடுவிரோசித்தும் பாய்ந்துயான் (பூசித்தேன்)

வினாடிகடிகைக்கொன்று விதமாய் சுழியில் நின்று
தினநாள் முப்பதும்வாசி யினமிந்தப்படி பேசி
கோசமெனு மக்கரங் குறித்து ஒராண்ட முறி
நாசமா தாகுப்பாழ் நசித்து வெண்ணீறாக (பூசித்தேன்)

வீந்து நாதமெனும் மேகங்கருவே சீலம்
அந்த மாதியுஞ் சூட்சுமம அமுரிப்புளியும் வாசம்
சிவமுஞ் சத்தியுஞ் சேர்ந்து ஜெயநீர் திரவகமாச்சு
நவபாஷாணங்கள் நீறும் நவலோகங்கள் மாற்றேறும் (பூசித்தேன்)

தேவியெனு மம்பிகை சீர்பொற்கமல நாடி
ஆவியெனுஞ் சுவாச மண்டபம் பாயுவுந்தேடி
ஊதுந் திருத்திவாசி ஒசை மூலத்தில் பாய்ந்தால்
வாதமுன் னுக்குள்னெய்து மதியால் ரவியுந்தோற்றறும் (பூசி)

இருவினைகளையுஞ் சுட்டு இறப்பும் பிறப்புஞ் சுட்டுக்
கருவிதொண்ணூற்றாறுங் கனவால் வெந்து நீறாக
வாசியென்ற பிராணாயாமம் வாயுவைக் கும்பித்து மூலம்
நாசிவழி வாராமல் ராஜயோகஞ் செய்தேன் காண் (பூசி)

விதியைவெல்லும் மதியால் மதியைவெல்லும் கழியால்
பதியையறிய ஞானவழியீ தாண்டையே கேள்
மதியுனனுக்குள்ளிருக்கும் வாரி சவாரி மேலாய்
விதியும்வாசிக்கப் போமோ விந்துநாதத்தின் கூறால் (பூசித்தேன்)

மாய்கை யகற்றிமூல மலஞ்சலங் கழியப்
பயமதுவுங் கிலேசம் பாழா மிந்திரிய மாண்டே
இந்த மதியைக்கண்டு வந்த விதியைப்போக்கி
சொந்தமனையில் நின்றுஞ் சுந்தரர்க்குமுரைத்
தேன் கான் (பூசித்தேன்)

ஆனை மும்மதங் கொண்டா வடக்கலாமோ வடக்க
வானஞ் சுருக்கிவிடத் தானே தானஞ் சுருக்கும்
பொங்குங் கடல்குர்வாரி பொழியப பொழியப்புனல
எங்கும் பிரகாசமாகுமென் சரண்தேகமுன்தங்கம் (பூசி

பதினெண்பேர்களுஞ் சொன்ன பரிபாஷையுங் தோண
விதியின்வசமதென்று வெறுத்துமெய்க்குருகாணா
விதியை மதியால்வெல்லும் வேதசாரத்தையரும்
குருவின் வழியறிந்துங் குறைவாராது வாழயான்
சித்தேயன் பிராணாய வாசியோகம் (பூசித்தேன்)

## திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்த ஞானவெட்டி

வாற்றடா நித்தமுந்தான் ஒண்ணரை வீசம்
வளமான பிராணாயாமம் வசமாய்க்கூட்டு
போற்றடா பதினெட்டு மாதமட்டும்
புத்திரனே பிராணாயாமம் பொருத்தக்கூட்டே

நாட்டான் கும்பகபூரகத்தினோட
நவமானரேசகமு மூன்று மொன்றாய்
வாட்டமுட னொன்றாகக் களையேவாங்கி
வலுவசக மேல்நோக்கி யமுதுமுண்ணு
நாட்டமுடன் சதகோடி ரவியுந்தோணுந்
தமாதிறக்கும் வாசலங்கே தயவாய்த்தோணும்
பூட்டமுடன் பூரகத்தி லேறினாக்கால்
புத்திரனே பொல்லாப்பு போகுந்தானே

நடத்துவா யோகமுந்தான் தாண்டிற்றானால்
நலமான கும்பகத்தில் நாடிச்செல்லு
அடுத்துவா யோங்காரத் துள்ளோடுங்கி
ஆதிவத்து வுண்டென்றும் அறிவிற்றங்கி
முடத்துவாய் முன்னணியாய்ப் பூசைசெய்து
மூதண்ட பிரமனையு மோதித்தாக்கிக்
கடத்துவாய் கரிமாலையுருவாய்க்கொண்டு
கருவிகளைக் களைந்துகடந்தேறுவாயே

ஏறுவாய் இமபடியே ஆனபின்பு
என்மகனே அங்குஷ்ட்டமாகிப்போவாய்
தேறுவாய் கற்பூயச் சுடர்போல் நிற்பாய்
தேவியுந்தா னனுதினமுந் தொண்டுசெய்வாள்
நேருவாய்ப் பரகதியு முனக்குக் கிட்டும்
நேரான ரவிமதியு மாண்டுபோகும்
பாருபார் பராபரனு நீயுமாவாய்
பழுதில்லாச் சித்தனென்று பகரலாமே.

நீஞ்சலா மிதைவிட்டாற் கற்பமில்லை
நீத்தமுந்தான் இம்முலங் கொள்ளவேணும்
பாஞ்சாலஞ் சிகாரமுடன் மகாரமிரண்டும்
பத்தியுடன் அனுவளவு விட்டிடாதே
வாஞ்சலாம் பதிமூன்று வருடங்கொள்ளு
வாசியென்ற மயில்மீதி லணைந்துநில்லு
அஞ்சலா மைவருந்தான் பட்டுப்போவார்
ஆன்மாவைக் காணாலா மறிந்துபாரே.

பாரப்பா அப்படியே உண்டேன்யானும்
பலவிதயோ சனைகளெல்லாம் பாழாய்ப்போச்சு
ஆரப்பா மும்முல மடுத்துக் கொண்டேன்
நேரப்பா யோகத்தி னிலையைக்கண்டேன்
நிச்சத்தைப் பக்தியுடன் நினைத்துக்கொண்டேன்
சாரப்பா கருவிகளும் பட்டுப்போச்சு

ஆச்சப்பா ஆறுதலமை யூருக்குள்ளே
அறிவான ஆத்மாவை யறிந்து கொண்டேன்
எச்சப்பா யிடைகலைபிங் கலையிரண்டும்
இயல்பாக வாங்கியினி யிழுத்துக்கொண்டேன்
வாச்சப்பா வாசிக்கால். வீழுங்குக்கொண்டேன்
மாறாத சிரஞ்சீவி வரமுங்கொண்டேன்
மூச்சப்பா முக்கண்ணை யமுச்கிப்பார்த்து
முன்னனியாய் நானுமினிக் கண்டிட்டேன்

மாட்டினார் கும்பகத்தில் மதிக்கச் சொன்னேன்
மாரும் லமுதமதை யுண்ணச்சொன்னேன்
பூட் னேன் புருவமைத் தமர்ந்திருப்பது
பொல்லாத கருவிகளைப் போக்கச் சொன்னேன்
ஆட்டினேன் அண்டரண்டு வெளியிற்குள்ளே
அருள்பொருளா யனுதினமும் வாழச்சொன்னேன்
காட்டினேன் கருவையெல்லாந் திறந்துமைந்தா!
கபடற்ற பூரசத்தைக் கண்டுக்கொள்ளே.''

## 72. பிரபஞ்ச விஷயத்தில் மனதைச் சொலுத்தாமல் வேலைகளைச் செய்துவரவேண்டும்

*ப்ரபஞ்சஸ்ய மநஹ கல்பிதத்வாத் த்தோ பேதா பாவத் கதாசி த்பஹிர்க்கதேபி மித்யாத்வபாவாத் ஸக்ருத்லிபாத ஸதாநந்த நுபவைக கோச்ரோ ப்ரஹம லித்ததேவ பவதி.*

சம்சாரத்திலிருக்கும் ஒரு ஸ்திரீயானவள் பரபுருஷனுடன் கூடிய பிறகு தன் புருஷனுடன் சேரும்பொழுது அவளுடைய மனமானது தன் புருஷன் மேல் இராமல் முன்பு தன்னைக்கூடிய புருஷன்மேல் இருந்து அவனையே மனதில் நினைத்துக் கொண்டிருப்பாள்.

அதுபோல், சமாதியில் உட்கார்ந்த யோகிகள் சமாதியை விட்டெழுந்து வெளியில் வந்து எல்லா கார்யங்களை செய்து வந்த போதிலும், பிரபஞ்ச விஷயமெல்லாம் மனதினால் நினைத்தால் அது கண்களுக்கு காணப்படுகிறது. இவைகளுக்கெல்லாம் மித்யா சொரூபமாயிருக்கும் மாயையே யொழிய மாயையைவிட வேறானதல்ல என்று நிச்சயித்து, அவர்கள் எந்த காரியங்கள் செய்தபோதிலும் அவர்களின் மனது மாத்திரம் அக்கார்யங்களில் பிரவேசிக்காமல், தன் புருஷனுடன் கூடிதான் சம்போகம் செய்துகொண்டிருந்தபோதிலும் அவளது மனமானது பரபுருஷன் மேல் எப்படி நின்றிருந்ததோ அதுபோல் யோகிகளினுடைய மனம் பிரம்மத்திலேயே நின்றிருக்கும் இவர்களின் மனம் பிரம்மத்தில் நின்றிருப்பதனால் இவர்களுக்கு பிரபஞ்சம் தோன்றிய போதிலும் எந்த தோஷங்களும் பற்றாது. அது எப்படி யென்றால், அந்நியினால் வெந்த வேஷ்டிகள் சேலைகள் மடிப்புகளுடன் இருந்தபோதிலும் அவைகளை

யெடுத்துக் காட்டிக்கொள்ள எப்படி உபயோகப்பட மாட்டாதுகளோ அதுபோல் முன்சொல்லிய யோகிகளினுடைய மனதானது யோகாக்நியினால் வெந்துவிட்டபடியால் அவர்கள் செய்யும் வேலைகளை யெல்லாம் மனமில்லாமலே செய்து வருவார்கள். இதற்கோர் சிறிய திருட்டாந்தம் சொல்கிறோம்.

தன் வீட்டில் லட்டு ஜிலேபி பதுர்பேணி பூரி அப்பம் வடை பகோடா தேன்குழல் முதலான பக்ஷணங்களை (பலகாரங்களைச்) செய்து கொண்டிருப்பவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த ஆறு வயதுடைய சிறுவன் அவைகளையெல்லாம் நினைத்துகொண்டே படுத்துத் தூங்கிவிட்டான். அதன் பிறகு அவ்வீட்டில் எஜமாநி தன் வீட்டில் செய்த பலகாரங்களையெல்லாம் ஓர் இலையில் வட்டித்து தன் குமாரனை எழுப்பி உட்காரவைத்துச் சாப்பிடும்படிச் சொன்னாள். அவன் தூக்கத்திருப்தனால் அவைகளைச் சாப்பிட்டாமல் கண்களை மூடிக் கொண்டு சும்மாய் உட்கார்ந்தான். பிறகு அவன் தாய் அவன் சமீபமாய் உட்கார்ந்து ஒவ்வொரு பலகாரத்தையும் எடுத்து அவன் வாயில் வைத்து ஊட்டினாள். அவன் அவைகளையெல்லாம் தின்றுகொண்டே தண்ணி கொடு என்று தாயைக் கேட்டான். அப்பொழுது தாயானவள் தண்ணீரைக் குடிப்பாட்டிப் மீதி பலகாரங்களையெல்லாம் ஊட்டி வாயைக்கழுவி பிறகு அவனைப் படுக்க வைத்தாள். அவன் படுத்துத் தூங்கி. காலை எழுந்தவுடன் "அம்மா! இராத்திரி செய்த பலகாரங்கள் நான் சாப்பிடாமலே படுத்துத் தூங்கி விட்டேன். அந்தப் பலகாரங்களை இப்பொழுது கொடு என்று தாயைக் கேட்டான். அதற்குத் தாயானவள் அடியில் சொல்லப்போகுமாறு சொல்கின்றாள்.

"என்னா? அந்தப்பலகாரங்களை ராத்திரி சாப்பிடவில்லையா? நீ தூங்கியப்பிறகு பலகாரங்களையெல்லாம் உன்னெதிரில் வைத்து உன்னை எழுப்பி சாப்பிடும்படிச் சொன்னேன். அப்பொழுது நீ கண்களை மூடிக்கொண்டு சாப்பிடாமல் சும்மா உட்கார்ந்திருந்தாய் அதன் பிறகு நான் எடுத்து உன் வாயில் ஊட்டினேன். அவைகளைத் தின்றுகொண்டே தண்ணீர் கொடு என்று கேட்டாய், அப்பொழுது நான் உனக்குத் தண்ணீரைக் குடிப்பாட்டி மிகுதி பலகாரங்களையும் ஊட்டி வாயைக் கழுவி மறுபடியும் தண்ணீர் குடிப்பாட்டிப் படுக்கவைத்தேன். இதெல்லாம் உனக்குத் தெரியாதா? என்று தாயானவள் குமாரனைக் கேட்டாள். அதற்கு குமாரன் இவ்வாறு சொல்லுகின்றான்.

"அம்மா இப்படிப்பட்ட பொய்யை ஏன் சொல்லுகிறாய்? அந்தப் பலகாரங்களை நான் எப்பொழுது சாப்பிட்டேன். தண்ணீர் எப்பொழுது எனக்குக் குடிப்பாட்டினாய்? அவைகளையெல்லாம் தின்று தண்ணீர் குடித்திருந்தால் மறுபடியும் நான் என் உன்னை இப்பொழுது கேட்கிறேன். இதுகளெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியவராது என்று ஒரேபிடிவாதத்துடனிருந்து அவன் சொல்லுவதே சத்தியமானதென்று ஸ்திரப்படுத்திச் சொல்லுகின்றானே யொழிய தாய் எவ்வளவு சொன்ன போதிலும் சிறுவன் நம்பவேயில்லை.

மேற்சொல்லிய சிறுவன் பலகாரங்களைச் சாப்பிடும் பொழுது மனம் புத்தி சித்தம் என்னும் இம்மூன்று ஜாக்ரதாவஸ்தையில் இராமல் தூக்கம் என்னும் இருளால் மூடப்பட்டிருப்பதனால் தாய் அவனை எழுப்பியதும் அவனுக்கு ஊட்டியதும் தண்ணீர் குடிப்பாட்டியதும் இவைகளெல்லாம்

அவனுடைய மனம் புத்தி சித்தம் முதலானவைகளும் அறியாததனால் தான் இந்த வஸ்துவைச் சாப்பிட்டேனென்றும் இந்த வஸ்துவை சாப்பிடவில்லையென்றும் சொல்வதற்குச் சாத்தியப்படாமல் போய்விட்டது மேற்சொல்லிய மனம் புத்தி சித்தம் என்னும் இம்மூன்றம் தூக்கமென்னும் இருளில் இராமல் ஜாக்கரதவஸ்தையிலிருந்து சாப்பிட்டிருப்பதால் சாப்பிட்ட பலகாரங்களையும் அவைகளின் ருசிகளையும் சிறுவன் அறிந்திருப்பான். ஆதலால் இந்நூலை வாசிக்கும் ஸ்திரீ புருஷர்களெல்லோரும் எந்தப் பதார்த்தங்களைச் சாப்பிட்டபோதிலும் சரி அவர்களின் மனம் புத்தி சித்தங்களை அந்தப் பதார்த்தங்களிலுள்ள ருசிகளில் பிரவேசிக்காமல் செய்தும் அன்றியும் வேலைகளைச் செய்யுங் காலத்தில் மேற்படி மனம் புத்தி சித்தங்களை அந்தந்த வேலைகளில் பிரவேசிக்காமல் செய்தும் இதுவரையில் சொல்லிய பரபுருஷ கவனமுடைய ஸ்திரீயைப் போலும் மேற்சொல்லிய ஆறுவயதுடைய பாலனைப் போலும் இருந்து எல்லா காரியங்களையும் நடத்திவரவேண்டும்; கண்கள் மூக்கு வாய் செவிகள் முதலாகிய இந்திரியங்கள் அவையாவைத் தம் தம்கார்யங்களைச் செய்து வரும்பொழுது எதற்கும் உதவாத விஷயங்களைலெல்லாம் நினைக்கும்படி மனத்திற்கு என் வேலையைக் கொடுக்க வேண்டும். இதற்கோர் திருஷ்ட்டாந்தம் சொல்லப் போகின்றோம்.

தாயின் கர்பத்திலிருந்து வெளிவந்த சிசுவுக்கு மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னும் இந்நான்கும் இல்லவே யில்லை. ஆதலால் அந்தச் சிசுவானது பரப்பிரம்மமென்று சொல்லப்பட்ட கடவுளுக்குச் சமானமாகவே இருக்கும். அப்படிப்பட்ட சிசுகளுக்கு மலமூத்திரங்கள் வரும் பொழுது சிசுவுக்குள் தங்கியிருக்கும் வாயுக்கள் அந்த மலமூத்திரங்களை வெளியில் கொண்டுவந்து தள்ளுகிறதேயொழிய பரப்பிரம்ம

சொரூபமாயிருக்கும் சிசுவுக்கு மலமூத்திரங்கள் வருவது தெரிந்து தான் வெளியில் கொண்டுவந்து தள்ளுவதில்லை அதுபோல் நமது சரீரத்திலிருக்கும் எல்லா வாயுக்களினால் கண்கள் மூக்கு வாய் செவிகள் சரீரத்தின் மேலிருக்கும் தோல் முதலானவைகளினாலும் சரீரத்திற்கு வேண்டும். வேலையை வாங்கிக் கொண்டு. மனத்திற்கு எந்த வேலையும் தொடாமல் எப்பொழுதும் சும்மாயிருக்கும்படிச் செய்விக்கவேண்டும் எல்லோரும் இவ்வாறு செய்வதற்காக ஜநநமஹாராஜர் ராஜ்ய பரிபாலனம் எவ்வாறு செய்து வந்தாரோ; அது விஷயமெல்லாம் இந்நூலில் சொல்லியிருக்கிறோம். ஆதலால் எல்லா காரியங்களையும் ஜனகர் எவ்வாறு செய்துவந்தாரோ, அதுபோல் செய்துவரவேண்டும்.

நீங்கள் இப்பொழுது ஆரம்பத்திலேயே ஜநக மஹாராஜரைப்போ மனதை நிறுத்தமாட்டீர்கள் இந்நூலில் உபதேசமாய்ச் செல்லியிருக்கும் "ஸோஹம்" என்னும் இரண்டு மந்திரங்களை இரண்டு மூச்சுகளிலும் சேர்த்து ஜபம் செய்து வரவேண்டும். இந்த ஜபத்தினால் மனம் ஒருநிலையில் கட்டுபட்டிருக்கும். இந்த சாதனையினால் மனம் கட்டுப்பட்ட பிறகு ஜநகமாஹாராஜர் ராஜ்ய பரிபாலனம் செய்து வந்ததுபோல் நீங்களும் வீட்டிலுள்ள குடும்ப வியவகாரங்களை யெல்லாம் பார்த்து வரலாம். இப்படிப்பட்டவர்களையே ராஜயோகிகளென்று சொல்லப்படும். இந்த ராஜயோகித்திற்கு மேற்படி எது வென்றால், பிராணாயாமமேயாம் இந்தப் பிராணாயாணமப்பியாசத்தினால் புண்ணியபாபங்களின் கர்மங்களெல்லாம் நசித்து மோக்ஷமென்னும் வீட்டையடைவார்கள். இந்தப் பிராணாயாம விஷயத்தை குறித்து யோகசூடாமண்யோப நிஷத்தில் சொல்லப்போகிறோம்.

ப்ராயணாம த்விஷட்கேந ப்ரத்யாஹாரஹப்ரகீர்திதஹ
ப்ரத்யாஹார த்விஷட்கேந ஜாயதே தாரணாஸுபா
தாரணாத்வதஹ ப்ரோக்தம்த்யாநம்யோ கவிஸாரதைஹீ
த்யாநம த்வாதஸகேநைவ ஸமாதி ரபிதீயதே.
யத்ஸமாதௌ பாஞ்சோதி ரநச்தம் விஸ்வாதாமுகம்
தஸ்மித் த்ருஷட்டேகரியாகர்மயதா யதா ந வித்யதே.

பன்னிரண்டு பிராணாயாமம் செய்தால், ஒரு பிரத்தியாஹாரமாகிறது. என்றால், பன்னிரண்டு பிராணயாமம் செய்தால் எவ்வளவு கஷ்ட்டமோ, ஒரு பிரத்தியாஹாரம் செய்வது அவ்வளவு கஷ்ட்டமுண்டாகும்.

பன்னிரண்டு பிரத்தியாஹாரம் செய்தால் ஒரு தாரணையாகும். என்றால் பன்னிரண்டு பிரத்தியாஹாரம் செய்தால் எவ்வளவு கஷ்ட்டமோ, ஒரு தாரணை செய்வது அவ்வளவு கஷ்ட்டமுண்டாகும்.

கஷ்ட்டப்பட்டு பன்னிரண்டு தாரணைகள் செய்தால் தியானம் சித்திக்கும். இந்தத் தியானத்திலேயேசமாதி நிலை அடையலாம். இவைகளையெல்லாம் யோகாப்பியாசம் செய்யவேண்டிய நூலை வரவழைத்து வாசித்துத் தெரிந்து கொள்ளுங்கள்.

பிராணாயாமம் (யோகாப்பியாசம்) செய்வது மிகவும் கஷ்ட்டமென்று தெரிந்து கொள்ளாமல், யோகாப்பியாசம் செய்தால் மிகவும் சிரோஷ்ட்டமானதென்று எல்லோரும் சொல்லுகின்றார்களே. இந்த யோகாப்பியாசம் உபதேசம் பெற்று அதை விடாமுயற்சியாய்ச் செய்துவந்தால் கடவுள் பிரத்தியக்ஷமாய் வந்து காணப்படுவாரோ என்னமோவென்று சில மனிதர்கள் நினைக்கிறார்கள் இந்த யோகாப்பியாச சாதனையினால் கடவுள் வந்து பிரத்தியக்ஷமாய் காணப்பட

மாட்டார். இந்த சாதனையினால் மனம் இறந்து அதன் பிறகு தான பிரம்மாமாவார்கள். ஆதலால்

யோகப்பியாசம் செய்யும்பொழுது சரீரத்திற்கு எவ்வளவு கஷ்டத்தை உண்டாகியபோதிலும் அவைகளுக்கொல்லாம் சகித்துக் கொண்டு எல்லா ஸ்திரீ புருஷர்களும் யோகாப்பியாசம் செய்துவர வேண்டும். இந்த யோகாப்பியாசம் ருஷி பத்நிகளாகிய மைத்ரேயி ஸுலபசாரங்கி, ஸாண்டிலீ தபஸ்வரி முதலாகிய ஸ்திரீகளும் செய்து சித்தியடைந்திருக்கிறார்களென்று 'சுருதிகளில் சொல்லப்படிருக்கிறது. அதனால் எல்லா ஸ்திரீகளும் யோகாப்பியாசம் செய்துவரலாம்.

பிராணயாமமென்கிற யோக வித்தையை பிராமணர்கள் செய்யவேண்டியதேயொழிய சூத்திரர்கள் செய்யத்தகாதென்று சில பிராமணர்கள் சொல்லவார்கள். இந்தப் பிராணாயாமம் பிராமணர்களே செய்யவேண்டுமென்றும், மற்ற ஜாதியார் செய்யலாகாதென்றும் எந்த சாஸ்திரங்களிலும் சொல்லவில்லை. ஆதலால் இந்தப் பிராணாயாமமென்கிற பிரம்மவித்தையை பிராமணக்ஷத்திரிய வைஸ்ய சூத்திரர். பஞ்சமர்கள் என்னும் ஐந்து ஜாதியாரும் மாம்ச பக்ஷணங்களை நிவர்த்திசெய்து சுசி ஆசாரங்களுடனிருந்து யோகாப்பியாசம் செய்ய வேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூலில் இந்நூலாசிரியராகிய யோகீஸ்வரர் மிகவும் தெளிவாய் எழுதியிருக்கும் யோகாப்பியாசத்தை வாசித்து. அதில் சொல்லியதுபோல் யோகாப்பியாசம் செய்துவந்தால் யோகசித்தியைப் பெறுவார்கள், இனி இந்நூலாசிரியர் மனம் விஸ்ராந்தி அடைந்திருப்பதைக் குறித்துச்சொல்லப்போகின்றார்.

## 73. மனம் அசையாமல் ஒய்ந்து நின்று விஸ்ராந்தி அடைந்திருப்பது

இந்நூலாசிரியருக்கு யோக சித்தி ஆகாமுன் இவரது மனமானது இவருக்கு வசப்படாமல், உலகத்திலுள்ள அனேக விஷயங்களில் எப்பொழுதும் ஓடிக்கொண்டேயிருந்தது.

இவரது கண்கள் எந்த வஸ்துக்களின் மேல் போய் விழுந்து அந்த வஸ்த்துக்களைக் கண்கள் பார்த்துக் கொண்டிருந்தபோதிலும் இவரது மனம் மாத்திரம் அந்த வஸ்துவைக் கிரகிக்காமல் வேறாய் நின்று பிறகு எதையும் நினையாமல் எவ்வளவு நாழியிருந்தபோதிலும் அப்படியே சும்மாயிருக்கும். இவ்வாறாக சும்மாயிருப்பதற்கே "விஸ்ராந்தி" என்று சொல்லப்படும்.

யாராகிலும் இவருடன் பேசினால் அவைகளுக்கு மாத்திரம் சொல்லவேண்டிய பதில் வார்த்தையைச் சொல்லி முடிந்தவுடன் மறுபடியும் இவரது மனம் எதையும் நினையாமல் அப்படியே சும்மாய் நின்றிருக்கும். இவ்வாறாக சும்மாயிருப்பதே "மௌன" மென்று சொல்லப்படும்.

இவர் எதையும் நினையாமல் சும்மாயிருந்து வழி நடக்கும்பொழுது இவரைத் தெரிந்தவர்கள் யாராகிலும் வழியில் கண்டு நின்று இவருடன் பேசினால் கேட்டவைகளுக்கெல்லாம் பதில் சொல்லி முடிந்தபின், மறுபடியும் இவர் எதையும் நினையாமல் சும்மாய் வழிநடப்பதே "சமாதி" என்று சொல்லப்படும்.

மேலும் நடக்கும் இவர் வழிநட்கும்பொழுது இவரது கண்கள் எந்த வஸ்துக்களைப் பார்த்தபோதிலும் காதுகள் எந்த சப்தங்களை அல்லது பேச்சுக்களைக் கேட்டபோதிலும் அல்லது சரீரத்தின் மேலிருக்கும் தோலின் மேல் குளிர்ந்த காற்றாகிலும், காற்றாகிலும், பட்டபோதிலும் இவரது மனம் மாத்திரம் பஞ்சேந்திரியங்களென்று சொல்லபட்ட ஐந்து இந்திரியங்கள் செய்யும் வேலைகளை கிரகிக்காமல் தான் வேறாய் நின்று சும்மாயிருப்பதே. 'நிர்விகல்ப சமாதி'

இவர் எழும்பெழுது மாத்திரம் இவரது யோகபலத்தினால் அனேக அற்புதமான யோசனைகளெல்லாம் மனத்திற்குத் தோன்றி அன்றன்று நூலை எழுதி முடித்தபின் மறுபடியும் இவரது மனம் சுயமாய் நிற்கும் இவ்வாறாக சும்மாய் நிற்பதே "மனம் இறந்த" தென்று சொல்லுவார்கள். எப்பொழுதும் மனம் வேலை செய்யாமல் இறந்தவனைப்போல் சும்மாயிருப்பது யோகபலத்தினால் உண்டாகவேண்டுமே யொழிய மற்ற எந்தப் பூஜைகளாலும், ஜபங்களாலும் மந்திதந்திரங்களாலும் மனம் இறக்கமாட்டாது.

'பாடப் படிக்க வெழுதப் பயன்சொல்லக்
கோடாமல் வந்துங் குணமில்லை சீடாகேள்
சித்திர தீபம் போலச் சிந்தை தனை நிறுத்திச்
செத்தசவம் போலத் திரி

பாடவும், படிக்கவும் எழுதவும் புராணங்களையும் வேதாந்தங்களையும் நன்றாய்ச் சொல்லத் திறமுடையவனாயிருந்த போதிலும் யாதொரு பிரயோஜன்மும் இல்லை அசையாமல் நின்றெரியும் தீபம் போல் மனதை நிறுத்தி எங்கு சென்றபோதிலும் செத்தபிணம் போவதுபோல் சும்மாய்

நடந்துபோக வேண்டும். சகல எண்ணங்களையும் விட்டு மனம் விஸ்ராந்தியடைந்து இதர சாஸ்திரங்களிலும் சமஸ்த போகங்களிலும் இச்சையில்லாதவர்களாயிருந்து, மாயை என்னும் வலையில் அகப்படாமல் சுயம்பிரகாசமாந பிரம்ம ஞானத்தினால் *நிர்விகல்ப சமாதியிலிருப்பார்களோ! அவர்களே ஜீவன் முக்தர்கள். மேற்சொல்லிய ஸநகஸநந்தநாதிகளும் எப்பொழுதும் நிர்விகல்ப சமாதியிலேயே இருப்பார்கள். இதன்றியும் இவர்கள் தேவலோகத்திற்கு சென்று தேவசபையிலிருக்கும்பொழுது மாத்திரம் மனதுடையவர் களாயிருந்து பேசவேண்டிய விஷயங்களையெல்லாம் பேசுவார்கள். பேசி முடிந்து தேவசபை கலைந்து வெளியில் வந்த பிறகு அவர்களின் மனம் எப்படியிருக்மென்றால்.

தாமரையிலையின்மேல் நீர்த்துளி நின்றிருந்தபோதிலும் அந்த நீர் தாமரையிலையின் மேல் ஒட்டாமல் முத்துப்போல் எப்படி இலையின் மேல் ஒடிக்கொண்டிருக்குமோ அதுபோல் முன் சொல்லிய மஹானுபாவர்களுடைய எண்ணங்கள் மேற்சொல்லிய தாமரை இலையின்மேல் முத்துப்போல் நின்றிருந்த ஜலத்திற்குச் சமானமாயிருக்கும் மனதில் ஒட்டமாட்டா.

மந்திரம் கற்றவர்கள் நல்ல பாம்புகளுடன் விளையாடிக் கொண்டிருந்தபோதினும் அந்த பாம்பு புண் என்று சீறித்தன் படத்தால் பாம்பாட்டியின் கையை அடித்துக்கடிக்க வரும்பொழுது அந்தக்கடிக்கு அகப்படாமல் பாம்பாட்டி எப்படி தப்பித்துக்கொள்கிறானோ அதுபோல் முன்சொல்லிய மஹானுபாவார்களினுடைய மனதில் பாம்பின் விஷத்திற்குச்

---

*நிர்விகல்ப-நினைப்பு மறப்புகள் இல்லாமல் தன்னைத்தான் மறந்திருப்பதே நிர்விகல்ப சமாதி



404

சமானமாயிருக்கப்பட்ட எண்ணங்கள் எதுவும் சேரமாட்டா, இப்படிப்பட்டவர்களின் எண்ணங்களும் மனமும் பிரம்மத்தில் எப்படி கலந்துவிடுவதென்றால்

வைணந்தோய ஸம்ஸ்பர்ஸ்யாத் த்ரவதோ யமம்பவேத்
மாநோஹப்ரஹம ஸம்ஸ்பர்ஸ்யாத் ததா ப்ரஹமயம் பவேத்

உப்பு ஜலத்தில் போட்டவுடன் அது கரைந்து ஜலமாய் விடுவது போல் எப்பொழுதும் எண்ணங்களுடன் கூடியிருக்கும் மனம் பிரம்மத்தில் கலந்தவுடனே அந்த மனமும் பிரம்மசொருபமேயாகின்றது. ஆதலால்

மநஸா வாஸாத்ருஷ்ட்யா க்ருஹ்யதே ஞை ரபூந்த்தரியைஹி ·
அஹமேவ ஸமத்யோந்ய திதி புத்தயத்வ மஞ்ஜஸ

மனதினால் வாக்கினாலும் சதுர் தசேந்திரிய வியாபாரங்களினாலும் அதாவது மனம், புத்தி, சித்த, அஹங்காரமென்று சொல்லப்பட்ட இன்னான்கும் நமக்குள்ளே இருக்கின்றன. இவை அந்தக்காரணமென்றால் உள்ளேயிருக்கப் பட்ட மேற்சொல்லிய நான்கு குணங்களேயாம் இக்குணங்கள் ஒருவருக்குக் காணப்படுவதல்ல. இதன்றியும் கண்கள், மூக்கு, நாக்கு, காதுகள் சரீரத்தின் மேலிருக்கும் தோல் இந்த ஐந்தையும் ஞானேந்திரயங்களென்று சொல்லுவார்கள். இதுவுமல்லாமல் வாய், கைகள், கால்கள், குதம், மர்மஸ்தானம் இவ்வைந்தும் கர்மேந்திரியங்களென்று சொல்லுவார்கள். இந்தப் பதினாலும் சேர்ந்தே சதுர் தசேந்திரிய வியாபாரமென்று சொல்லப்படும் இவைகளினால் பார்ப்பது வார்த்தையாடுவது எண்ணுவது இன்னும் அனேகவியாபாரங்களை யெல்லாம் செய்யும்பொழுது மந்திரம் செய்து செய்து மற்றக் காலங்களிளெல்லாம் மனதிற்கு எந்த வேலையும் கொடாமல் சும்மாயிருக்க ஒவ்வொருவரும் சாதனை செய்துவர வேண்டும். அதாவது,

பேசும் வேளையில் மாத்திரமெ மனதை உபயோகப் படுத்திப் பேசி முடிந்தவுடனே சும்மாயிருந்து விட வேண்டும். நடக்கும்பொழுது எதையும் நினையாமல் சும்மா நடக்கவேண்டும். நிற்கும்பொழுதும் உட்காரும் பொழுதும் எதையும் நினையாமல் சும்மாயிருக்கவேண்டும். ஸ்நானம் செய்யும்பொழுது ஸ்நானம் செய்து சரீரம் துடைக்கும்பொழுது சும்மாயிருந்து கைகால் இக்காரியங்களையும் செய்ய வேண்டும், படுக்கும்பொழுது படுத்து எதையும் நினையாமல் சும்மாயிருந்து தூங்கவேண்டும். இப்படித் தூங்கினால் மிகவும் சீக்கிரமாய் தூக்கம் வந்துவிடும். யாரிடமாகிலும் பேச வேண்டுமானால் அவைகளுக்கு மாத்திரம் பேசி மறுபடியும் எதையும் நினையாமல் சும்மாயிருக்க வேண்டும் மனிதர்களில் பெரியோர்கள் யாரென்றால், எப்பொழுதும் மேற் சொல்லியதுபோல் சும்மாயிருக்கப்பட்டவர்களே பெரியோர் களாவார்கள்.

இந்நூலாசிரியர் எதாகிலும் எழுதவேண்டியதாயிருந்தால் அவைகளுக்கு வேண்டிய விஷயங்களை யோசித்து எழுதி முடிந்தபின் மறுபடியும் இவரது மனம் சும்மாயிருக்கும் இந்நூலாசரியர் பேசும் வேலையிலும், எழுதும் வேளையிலும் தவிர மற்றக் காலங்களிளெல்லாம் எதையும் நினையாமல் சும்மாயிருப்பதுபோல. இந்நூலை வாசிக்கப்பட்ட ஸ்திரீ புருஷர்களெல்லோரும் இவரைப் போல் சும்மாயிருக்க பிரயத்தினம் செய்யவேண்டும். ஆனால் இவரைப்போல் நீங்கள் சும்மாயிருக்க சாத்தியப்படமாட்டாது. எனென்றால் இவர் யோக பலத்தினால் மனதைய! -க்கி சும்மாயிருக்க உங்களால் சாத்தியப்பட மாட்டாது உங்கள் மனது சும்மாயிருக்க ஒர் உபாயம் சொல்லுகிறோம். இதுபோல் செய்து வந்தால் உங்கள்

மனது ஒரே நிலையில் நின்று பிறகு அந்த ஓர் நிலையும் சூன்யமாய் மனம் சும்மாயிருக்கும். ஸூக்ஷத்திலிருக்கிறது மோக்ஷம் என்று சொல்லுவார்கள் அந்த ஸூக்ஷமமான வித்தையை இனி உங்களுக்குச் சொல்லப் போகிறோம்.

தாயின் கர்ப்பத்திலிருந்து வெளிவந்த சிசுவிற்கு மனம் புத்தி சித்தம் அங்காரமென்பது எதுவுமில்லாமல் சுத்த பரப்பிரம்ம சொருபமாயிருக்கும் சிசு, மலம் மூத்திரங்களை வெளியில் விடவேண்டுமென்று எண்ணி வெளியில் விடுவதில்லை. சரீரத்திற்குள்ளிருக்கும் அந்தந்த வாயுக்கள் அந்தந்த மல மூத்திரங்களை ஒன்பது துவாரங்களின் வழியாய் வெளியில் கொண்டுவந்து தள்ளும் சிசுவிற்கு மலமூத்திரங்கள் வருவதும் வராததும் தெரியவராது. சரீரத்திரக்குள்ளிருக்கும் அந்தந்த வாயுக்கள் அந்தந்த மலமூத்திரங்களை வெளியில் கொண்டுவந்து தள்ளுகின்றன.

முன் ஜன்மத்தில் இந்த சிசுவிற்கு மனம் புத்தி, சித்தம் அஹங்காரமென்னும் நான்கு அந்தக்கரணங்களும் இருந்தன. முன் ஜன்மத்திலிருந்த சரீரத்தைவிட்டு மரணமடைந்து ஜீவன் வேறோரு தாயின் கர்ப்பத்தில் வந்து பிரவேசிக்கும்பொழுது அந்த ஜீவனானது முன் சரீரத்திலிருந்த மனம், புத்தி, சித்த அஹங்காரங்களையும் தன்னுடன் கூடவே இழுத்துக் கொண்சுவந்து மற்றொரு தாயின் கர்ப்பத்திலிருக்கும் சிசுவினுடைய இருதயத்தில் சேர்ப்பிக்கின்றான். மேற்படி தாயின் கர்ப்பத்திலிருந்து பிறந்து வளர்ந்து வரும்பொழுது சிசுவிற்குள் அடங்கியிருக்கும் மனம் புத்தி சித்த அஹங்காரங்களும் சிசுவுடன் கூடவே வளர்ந்துவரும். பிறகு சிசுவிற்குப் பால்ய திசை நீங்கி யௌவனதிசை வரும்பொழுது மேற்சொல்லிய மனம், புத்தி, சித்த அஹங்காகளுக்கும் யௌவன திசைவரும்.

பிறகு யாதொன்றும் தெரியாமல் சுத்த பிரம்மமாயிருந்த சிசுவிற்கு, யான், எனது என்னும் அஹங்கார மமகாரங்களை உண்டாகும்படிச் செய்தது. இந்த மனம், புத்தி என்று சொல்லபட்ட அந்தக்காரணங்களேயாம்.

அப்பப்பா! இந்த அந்தக்கரணங்களென்னும் மனம், புத்தி, சித்த அகங்காரங்கள் நான்கும் சிசுவுடன் கூடவேயிருந்து அவைகளும் வளர்ந்து கடைசியில் அந்த சிசுவை எவ்வளவு அனர்த்தத்திற்குக் கொண்டுவந்து விட்டதோ பாருங்கள் சிசுவினுடைய மலமூத்திரங்கள் சிசுவிற்குத் தெரியாமலே அந்தந்த வாயுக்கள் அந்தந்த மலமூத்திரங்களை வெளியில் கொண்டுவந்து எவ்வாறு தள்ளிற்றோ. அதுபோல் கண்கள் பார்த்தபோதிலும் காதுகள் கேட்ட போதிலும், வாய்ப் பேசியபோதிலும் அல்லது ருசிகளைப் பார்த்தபோதிலும் மூக்கு வாசனைகளை அறிந்தபோதிலும் சீதோஷ்ணக் காற்றுகளை சரீரத்தின் மேலிருக்கும் தோல் அறிந்த போதிலும், கண்கள் முதலாகிய அந்தந்த இந்திரியங்கள் அந்தந்த காரியங்களைச் செய்விக்கின்றன. ஆதலால், மனதை மேற்சொல்லிய இந்திரியங்களில் பிரவேசிக்க விடாமல் செய்து எதையும் நினையாமல் சும்மாயிருக்க வேண்டும். அப்படிச் சும்மாயிருக்கச் செய்வது அசாத்தியமென்று எண்ணவேண்டாம் நாளாவட்டத்தில் கிரமகிரமமாய் சிறுகச்சிறுக சும்மாயிருக்க சாதனத்திறுக் கொண்டுவரவேண்டும், ஆயிரம் சொல்ல வேண்டியதேன்? உங்கள் மனதைக் கட்டுவதற்கு "நூலும்' மந்திரமும் கொடுக்கிறோம். அந்த நூலினாலும் மந்திரத்தினாலும் உங்கள் மனதை எங்கும் வெளியில் ஓடவிடாமல் கட்டிவிடும்.

## 74. 'ஸோஹம்' மந்திரம் ஜபம் செய்ய வேண்டிய முறையை உபதேசித்தல்

ஐயா! நீங்கள் ரோட்டு (பாட்டை) வழியாய் நடந்து செல்லும்பொழுது அங்குமிங்கும் திக்குகளை (பராக்குகளைப்) பாராமல் தலைமைக் குனிந்து பூமியைப் பார்த்து கொண்டே நடக்க வேண்டும். அப்படி நடக்கும்பொழுது மூச்சு உள்ளே போகும் சமயத்தில் அந்த மூச்சுடன் கூடவே 'ஸோ' என்னும் மந்திரத்தைச் சேர்த்து உள்ளுக்கிழுத்து மறுபடியும் மூச்சை வெளியிடும் பொழுது அந்த மூச்சுடன் கூடவே 'ஹம்' என்னும் மந்திரத்தைச் சேர்த்து வெளியிடவேண்டும். இந்த மூச்சுக்கு பிரம்ம சூத்திரமென்றும் யஞ்ஞோபவீமென்றும் ஹம்ஸ என்று சுவாசமென்றும், பிராணனென்றும், ஹம்ஸ என்று சுவாசமென்றும், பிராணனென்றும் உயிரென்றும் குதிரையென்றும் கால் என்றும் நூல் என்றும் இத்தனைப் பெயர்களுடன் கூடியிருக்கிறது அதலால் இந்தப் பிரம்மசூத்திரமென்று நூலினால் 'ஸோஹம்' என்னும் மந்திரத்தையும் மனதையும் சேர்த்துக்கட்டி ஜபம் செய்து வந்தால் அப்பொழுது உங்கள் மனதானது வெளி விபவகாரங்களைகளில் ஓடாமல் மந்திரத்திலேயே கட்டுப் பட்டிருந்து பிறகு மனமானது இறந்துவிடும். இதற்கு உத்திரகீதை இங்குப் பிரமாணமாய் சொல்லு கிறோம்.

ஆத்மந்த்ரஸ்ய ஹம்ஸஸ்ய் பரஸ்ப்பர ஸமந்வயாத
யோகேநா கதமாமாநாம் பவநா ப்ரஹமாக்ஷதே

மூக்குத் துவாரங்களில் தனக்குத்தானகவே ஜபித்துக் கொண்டிருக்கும் 'அஜபா' மந்திரத்துடன் அஜபா என்றால் ஒவ்வொரு மூச்சும் தனக்குத் தானாகவே இராப்பகலாய் ஸோஹம்; மந்திரத்தை எப்பொழுதும் ஜெபித்துக்கொண்டே இருக்கும் இப்படி எப்பொழுதும் ஜபித்துக் கொண்டிருப்பதற்கு

"அஜபா" என்று சொல்லப்படும். இது போல் எல்லோரும் ஸோஹம் என்னும் மந்திரத்துடன் மூச்சை உள்ளுக்கிழுத்தும் மறுபடியும் வெளியில் விட்டுமாய் ஜபம் செய்துவரவேண்டும். யோக சித்தவருத்தி நிரோதஹடட சித்தமென்று சொல்லபட்ட மனதை எங்கும் வெளியில் ஓடவிடாமல் தடுக்கச் செய்து யோகாப்யாசமேயென்று பதஞ்ஜலி யோகசூத்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன இந்த "ஸோஹம்" மந்திரத்தை ஜபம் செய்வதே ஆத்ம மந்திரமென்று சொல்லப்படும்.

இதன் ரகஸ்யார்த்தம் என்னவென்றால் அருணோதயம் முதல் அதாவது காலை 6 மணி முதல் மறுநாள் காலை 6 மணி வரையில் மூலாதார சுவாதிஷ்ட்டான். மணிபூரக, அனாஹத விசுத்தி அஞ்ஞேய, ஹைஸ்ராரம் வரையில் அதிதெவதைகளாய் இருக்கப்பட்ட கணபதி. பிரமன் விஷ்ணு, ருத்திரன் ஜீவன் ஈஸ்வரன் பரமாத்மா என்னும் இவ்வேழு பேர்களுக்கும். தினந்தோறும் இருபத்து ஓராயிரத்து அறுநூறு (21,600) மூச்சுகளும் அஜபாவாய் தனக்குத்தானாகவே ஜபித்து கொண்டு மேற்சொல்லிய தேவதைகளினுடைய பசியை மூச்சு என்னும் ஹம்ஸற்காயத்ரியானது ஆற்றிகொண்டே வரும். இவைகளின் ரஹஸ்யார்த்தங்களையெல்லாம் மிகவும் தெளிவாய்த் தெரிந்துகொள்ளுங்கள். ஆதலால் நீங்கள் வெளியில்விட்டு மறுபடியும் உள்ளுக்கிழுக்கும் ஒவ்வொரு மூச்சிலும் மேற்சொல்லிய "ஸோஹம்" மந்திரத்தை ஜபம் செய்து வரவேண்டுமென்று இப்பொழுது உங்களுக்குச் சொல்லியிருக்கிறோம் இதன்றியும் இதுவே "சிவராஜ யோக சமாதி இதை ஜபம் செய்யுங்கல்" என்னும் அட்டவணை களிலும் இந்த ஸோஹம் மந்திரம் படத்தைக்காட்டி இனி அதன்மூலமாய் பிறகு விசேஷமாய்ச் சொல்லப் போகிறோம். ஆதலால், எல்லோரும் யோகாப்பியாசம் செய்வது மிகவும்

கஷ்டமாவதலால் யோகபியாசத்திற்குக் கீழ்ப்படி எதுவென்றால் இந்த 'ஸோஹம்' மந்திரமேயாம் பிபிலிகாதி என்றால் கண்களுக்கு காணப்படாத சிறிய புழுமுதல் பிரம்மதேவன் வரையில் இருக்கும் எல்லா ஜீவராசிகளினுடைய மூக்குத்துவாரங்களில் நடந்து கொண்டிருக்கும் மூச்சானது இந்த 'ஸோஹம்' மந்திரத்தை தனக்குத்தானாகவே ஜபித்துக்கொண்டு மரண காலபர்யந்திரம் நடந்து கொண்டேயிருக்கும். ஆதலால் காலபர்யந்திரம் நடந்து கொண்டேயிருக்கும். ஆதலால் ஸ்திரீ புருஷர்களெல்லோரும் போகம் வேளையிலும் வேலை செய்யும் வேலையிலும் தவிர மற்ற காலங்களிலெல்லாம் ஸோஹம் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்து வரவேண்டும். இவ்வளவு சொல்ல வேண்டியதேன்? தினந்தோறும் விடாமுயற்சியாய் ஆறுமாதகாலம்வரை மாத்திரமே 'ஸோஹம்' மந்திரத்தை ஜபம் செய்து வாருங்கள். அப்பொழுது அதன் அனுபவம் உங்களுக்குப் பிரத்தியக்ஷ திருஷ்டாந்தமாய்த் தெரியவரும் இதைவிட பெருத்த உபதேசம் இந்தப் பிரபஞ்சத்தில் எங்கும் இல்லவேயில்லை. உலகத்தில் ராஜயோகமென்பது இந்த 'ஸோஹம் மந்திர ஜபமேயொழிய இதைவிட மற்றொன்று ராஜயோகமல்ல.

## 75. பிராணவாயு வென்கிற மூச்சை நிறுத்தி ஆயுளை விருத்தி செய்வது

ஞாச்வா ஸுஷும்நா ஸத்பேதம் க்ருத்வா வாயும் ச மத்யகம்
ஸ்தித்வா ஸதைவ ஸுஸ்த்தாநே ப்ரஹ்மரந்த்ரே நிரோதயேத்

"ஸுராஜ்ய தார்மகே தேஸே" நல்ல ராஜ்யமும் புண்ணியவான்களாயிருக்கப்பட்ட ஒரு நல்ல தேசமாகிலும் அல்லது சிறிய கிராமமாகிலும் தேடிக் கண்டு பிடித்து அக்கிராமத்திற்குச் சமீபமாயிருக்கும் ஓர் வனத்தில் ஓலையினால் ஆஸ்ரமம் ஏற்படுத்திக் கொண்டு தான் ஒருவன் மாத்திரமே ஏகாங்கியாய் நிவசித்துக் கொண்டிருந்த தனக்குப் பசியுண்டானபொழுது தன் சமீபமாயிருக்கும் கிராமத்திற்கு சென்று 'பவதி பிக்ஷாந்தேஹி" என்றால் என் தேகத்திற்குள்ளிருக்கும் ஜீவாத்மாவினுடைய பசியைத் தணிக்கச் செய்வதற்காக ஜீவாத்மாவினுடைய பசியைத் தணிக்கச் செய்வதற்காக பிக்ஷை கொடுங்கள் என்பதேயாம். இதுபோல் பிக்ஷை கொடுங்கள் என்பதேயாம். இதுபோல் பிக்ஷை கேட்டு வாங்கி சாப்பிட்டுப் பசியைத் தணிக்கச் செய்து. மறுபடியும் தனது ஆசிரமத்திற்குச் சென்று யோகாப்பியாச சாதனையினால், மூச்சை பிரம்மகபாலத்தில் கொண்டு போய் நிறுத்தவேண்டும்.

அயாஸேந பர்ஸ்ப்பந்தே ப்ராணாநாம் க்ஷயமாகதே
மந: ப்ரஸமமாயாதி நிர்வாண மவஸிஷ்யதே

மேற்சொல்லியதுபோல், மூச்சு என்னும் பிராணவாயுவைக் கொண்டுபோய்ப் பிரமமகபாலத்தில் நிறுத்த சாதனம் செய்துவந்தால் மனமானது மிகவும் சாந்தியை அடைந்திருக்கும் என்றால் மனமானது மிகவும் சாந்தியை அடைந்திருக்கும் என்றால் எதையும் நினையாமல் சும்மாயிருக்கும். அவ்வாறு சும்மாயிருக்கும்பொழுது வெறும் ஆகாயம் மாத்திரமே சேக்ஷமாய் நின்றிருக்கும் இதன் கருத்து

என்னவென்றால் பிராணவாயு என்கிற மூச்சும் மனது என்கிற காற்றும் இவ்விரண்டும் ஒன்றாய் கலந்துவிடும் என்பதேயாம். அப்பொழுது ஆத்மா மாத்திரமே தனித்து நின்றிருக்கும். அப்படிப்பட்ட சமயத்தில் எந்த எண்ணங்களும் உண்டாகாமல் சமாதியிலேயே நின்றிருக்கும், இப்படிப்பட்ட சமாதியிலிருக்கும் பொழுது தன் ஆயுர்பாகம் விசேஷமாய் அபிவிருத்தியாகும். இதற்கு உத்தரகீதை பிராமாணம் சொல்லுகிறோம்.

கச்சந் திஷ்ட்டந்யதாகாலம் வாயு ஸ்வீகரணம் பரம்
ஸர்வகாலம் பரேயோகந ஸஹஸ்ராயுர் பவேந் நரஹ

தாத்பர்யம்:- நடக்கும் பொழுதும், நடவாமல் உட்கார்ந்திருக்கும் பொழுதும், எப்பொழுதும் என்றால் ஸ்நானம் போஜனம் படுக்கை முதலாகிய ஸர்வகாலங்கிளிலும் மூச்சை நிறுத்த அதிகமாய்ப் பிரயத்தினம் செய்து வந்தால் நரமனிதராயிருக்கப்பட்ட நாம் ஆயிரவருஷம் வயதுடையவர்களாய் இருக்கலாம்.

“ஸதாயுபுருஷ ஸதேந்த்ரியஹ” என்றால் புருஷனுக்கு நூறு வயது ஆயுள் பிரமாணமென்று சொல்லப்பட்டிருக்கிறது. புருஷனுக்கு நூறுவயதாயிருந்த போதிலும் மூச்சைநிறுத்தும் யோகாப்பியாசம் செய்வதனால் ஆயிரவருஷம் ஆயுள் விருத்தியும் அதனால் ஞானமும் பிரம்மபதவியும் உண்டாகும். இப்படிப்பட்டவர்கள் காலனை (யமனை) ஜயித்தவர் களாகிறார்கள். மூச்சை எவ்வளவு நேரம் நிறுத்திகிறாற்களோ, அவ்வளவு நேரமும் யோகிகளுக்கு ஆயுள்விருத்தியாகும். அநேக காலம் சமாதியிலிருந்த யோகிகள் மரண காலத்தை தெரிந்துகொண்டு மூச்சை நிறுத்திக் காலனை (யமனை) ஜயித்து தனக்கிஷ்ட்டமானபோது மூச்சி என்னும் பிராணனை விட்டுவிடுவான்.

பவநோத்யதேயேந மநஸ்த்தே நைவபத்யதே
மநஸ்ச்சபத்யகே யேந பவநஸ்த்தோபத்யதே

மூச்சு பிறக்குமிடத்திலேயே மனம் பிறக்கிறது. மனம் பிறக்குமிடத்திலயே மூச்சு பிறக்கிறது. மனமெங்குண்டு வாயுவங்குண்டு. மனமெங்கில்லை வாயுவங்கில்லைடட என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள் இந்த மூச்சு என்னும் வாயு எந்தயோகியினால் கட்டப்படுகிறதோ, அந்த யோகியினால் மனம் கட்டப்படும். மூச்சு என்னும் வாயு எந்தயோகியினால் கட்டப்படுகிறதோ, அந்த யோகியினால் மனம் கட்டப்படும் மூச்சு என்னும் வாயு மனது என்னும் வாயு இவ்விரண்டிற்கும் ஏதாகிலும் ஒன்று கட்டுப்பட்டால் உடனே மற்றொன்றும் கட்டுப்படும்.

ஹேதுத்வயந்து சித்ஸய வாஸநா சஸரீரிணஹ
தயோர்விநஷ்ட்ட ஏகஸ்க் ஸ்தௌத்வாவபி விநஸ்யதஹ.

மனம் உதிப்பதற்கு முக்கிய காரணமாயிருப்பது எதுவென்றால், பிராணவாயு என்கிற மூச்சேயாம். இந்த மூச்சும் மனதும் இவ்விரண்டில் எதாகிலும் ஒன்று நசிந்தால் உடனே மற்றொன்றும் நசிந்துவிடும். மனம் நசித்துப்போக ஓர் உபாயம் சொல்லுகிறோம். அது போல் செய்து வாருங்கள். அப்பொழுது உங்கள் மனமானது நசித்து ஆயுள் விருத்தியாகும்.

நீங்கள் நடந்து சென்றாலும், நின்றாலும் உட்கார்ந்தாலும் பேசாமல் சும்மாயிருக்கும் பொழுதெல்லாம் மூச்சை உள்ளுக்கிழுத்து மறுபடியும் அதை வெளயிடாமல் நிறுத்தவேண்டும். சற்றுநேரம் சென்றபிறகு மறுபடியும் சொல்லப மூச்சை விட்டு மறுபடியும் இழுத்து இதுபோல் ஒவ்வொரு மூச்சையும் விட்டும் இழுத்துமாய் எப்பொழுதும் சாதனை செய்துவந்தால், அதன்பிறகு உங்கள் மனம் நசித்து ஆயுள் வருத்தியாய்க்கொண்டேவரும். இதன்றியும், உங்கள் மனமானது

வெளிவிவகாரங்களில் ஓடாமல் நின்றுவிடும். இவ்வாறாக எப்பொழுதும் மூச்சை நிறுத்தி சாதனம் செய்து வரப்பட்டவர்களுக்கு எந்த வியாதி (நோய்)களும் வரமாட்டா, இப்படியாய் மூச்சை நிறுத்தி சாதனம் செய்துவருவது யோகாப்பியாசத்தில் சேர்ந்ததேயாம்.

ஸதுதீர்க்காலே ஸநரந்தர்ய ஸத்கார ஸேவிதோத்ருட பூமி

ஒருவன் எத்தனையோ ஜன்மங்களாய் ஈஸ்வர பக்தியில் மிகவும் சிரத்தையுடையவனாயிருந்து. அந்த ஈஸ்வர பக்தியை ஒவ்வொரு ஜன்மத்திலும் மிகவும் பக்தியுடன் பூஜித்துவந்த புண்ணிய விசேஷத்தால் யோகசாதனை நிலைக்குக் கொண்டு போய்விடும். பிறகு அந்த யோக சாதனைகளினால் மோக்ஷம் சாம்ராஜ்ய பதவி உண்டாகும். யோகாப்பியாசம் செய்ய வேண்டுமென்று நினைக்கும் புருஷன் சில தினங்களாகிலும், அல்லது சில மாதங்களிலாகிலும் சில வருஷங்களிலாகிலும் சித்தியடையலாமென்று நினைக்கும் பக்ஷத்தல். அது சித்தியாக மாட்டா. அனேக வருஷங்களக்காகிலும் அல்லது அனேக ஜன்மங்களுக்காகிலும். யோகம் சித்திக்கு மென்று நினைத்து யோகாப்பியாசம் செய்துவர வேண்டும். யோகாப்பியாசம் அனேக ஜன்மங்களாய் செய்துகொண்டே வந்தால், யோகம் சித்திக்குமென்று உபநிஷத்துகளில் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்குப் பிரமானம்.

அநேக ஜந்ம ஸம்ஸத்தி : ததோயாகு பராங்கதிம

அனேக ஜன்மங்களாய் யோகாப்பியாசம் செய்து வந்தால் அந்தயோகம் சித்திக்கும் யோகம் சித்தியான பிறகு மோக்ஷமென்னும் வீட்டை அடைவான்.

யஸ்யகஸமிந் ஸனிதே வாங்கபவத்யதீ நித்யத்ருப்தஹ
ப்ரஸாந்தாத்மாஸ அந்மந்யேவ திஷ்ட்டதி

பரமாத்மாவிற்கு விரோதமாயிருக்கப்பட்ட விஷயங்களில் புத்தியைப் போகவிடாமல் செய்து சர்வகால சக்வாவஸ்லத யிலும் *தபோநிஷ்ட்டையிலிருக்க பிரீதியுடைவனாயிருந்து, ராக த்வேஷாதி துர்குணங்களை யெல்லாம் தூரப்படுத்தி, ஞான சொரூபமாயிருக்கும் யோகியெவனோ, அவனே மோக்ஷவீட்டை அடைகருகனாயிருக்கிறான்.

மஹாவ்ருஷோ யச்சித்தம் தத்ஸர்வதா மய்யேவா
திஷ்ட்டதே மஸ்மாதே ஹம்ஸஹ தஸ்மிந்தேவ ஸ்தீயதே

வேதத்திற்கு விரோதமாயிராத ஞானகர்மங்களை அனுஷ்ட்டித்து வரப்பட்டவர்களில், யோகியாகிய பரமஹம்ஸரேட மிகவும் சிரேஷ்ட்டமானவர் அதலால் ஆதலால் அவரை மஹானுபவரேன்றே சொல்லப்படும். இப்படிப்பட்ட மஹானுபாவர் சம்சார விஷயங்களில் ஒடிக்கொண்டிருக்கும் மனதை தனது யோகப்பலத்தினால் ஜயித்து எப்பொழுதும் பரமேஸ்வரனான என்னிடத்தில்திலே ஐக்கியம் செய்திருப்பதனால். நானும் அந்த யோகியினுடைய மனதில் சேர்ந்து ஐக்கியாமயிருப்பேன்.

அஞ்ஞானிகலாயிருக்கப்பட்ட புருஷர்கள் மாயையால் மூடப்பட்டிருப்பார்கள். அப்படிப்பட்டவர்களிடம் நான் ஐக்கியமாய் இரேன். எப்படிப்பட்ட தத்வவேந்தர்களாயிருந்த போதிலும் யோகியாகாவிட்டால் அவர்களின் மனம் எப்பொழுதும் வெளி வியவகாரங்களிலேயே ஓடிக்கொண்டிருக்கும். யோகிகளுக்கோ அப்படி எப்பொழுதும் ஓடமாட்டா. ஆதலால், நான் எப்பொழுதும் யோகி களிடத்திலேயே இருப்பேன்.

---

*தபோநிஷ்ட்டை என்றால் கண்களைமூடி எதையும் நினையாமல் சும்மாய் உட்கார்ந்திருப்பது.

தர்ஸநா தர்ஸநா தர்ஸநே ஹித்வா கேவல ரூபதஹ
யஸ்த்திஷ்ட்டதி ஸ்து ப்ரஹமாந் ப்ரஹமணோ ப்ரஹ்ம
விஸ்வயம்

எந்த மஹானுபாவர், ஞான அஞ்ஞானங்கள் இரண்டையும் பரமாத்ம சொரூபத்தில் சேர்த்து பிரகாசிக்கச் செய்கிறாரோ அப்படிப்பட்ட மஹானுபாவர் சாக்ஷாத் பரப்பிரம்ம சொரூபியேயொழிய பிரம்மமேத்தரல்ல.

ஸர்வே பிரஹ்ம வதிஷ்யந்தி ஸம்ப்ராப்தேது கலௌயுனகே
நாதநுதிஷ்ட்டந்தி மைத்ரேய ஸிஸ்நோதர பராயணாஹ.

கலியுகம் உண்டானது முதல் நாளதுவரையிலும் பிரபஞ்சத்திலுள்ள மனிதர்களில் சிலர், பரப்பிம்மத்தில் போய்ச் சேர்ந்து மோக்ஷமென்கிற வீட்டை அடையவேண்டுமென்று சொல்லுகிறார்களே யொழிய அதற்கு வேண்டிய ஞானானுபவ அனுஷ்ட்டானங்களில்லாமல் ஸ்திரீ ஸம்போகம், உதரபோஷணத்திற்காக பொருள் சம்பாதிப்பது இவைகளில் ஆசையுடையவர்களாய் இருக்கின்றார்கள். யோகிகளாகிய பரமஹம்ஸர்களுக்கோ இவ்வித தோஷங்கள் எதுவுமில்லை

தஸ்யபுத்ரா தயாமுபயந்தி ஸுஹ்ருதஸ்ஸாது
க்ருத்யாந் த்விஷந்தஹ பாபக்ருத்யாம்.

தத்வஞானமடைந்த மஹாயோகிகள் தாம் அதற்கு முன் சம்பாதித்து வைத்த வீடு, தோட்டம், துரவுகள் நிலம் முதலானவைகளியெல்லாம் அவர்களின் புத்திரர்கள் கிரகிக்கின்றார்கள். அந்த மஹா யோகியின் பசியைத் தணிக்க சாதம் கொடுத்துவரப்பட்டவர்கள் அந்த யோகியின் புண்ணியத்தைக் கிரகிக்கின்றார்கள் அவர்களை அலட்சியமும் செய்து தூஷித்துவரப்பட்டவர்கள் அவர்களின் பாவ கர்மங்களைப் பங்கிட்டுக்கொள்ளுவார்கள்.

இப்படிப்பட்ட மஹாதத்வஞானியை அனேக ஜன்மங்களாய்த் தொடர்ந்துவரும் சம்சாரபந்தங்களெல்லாம் நசிந்துவிடும். இவைகள் நசித்தவுடன் காமக்ரோதாதி விஷயங்களும். மோஹாதி சகல குணங்களும் அதனுடன் கூடவே நசித்துவிடும்.

மநசக்ஷுரேந்த்ரியாணாம் ச ஐகாக்ரயம் பரமம தபஹ
தஜ்ஜயா ய ஸர்வதர்மேப்ய யஹ ஸ தர்மஹ பரவுச்யதே

மனதினுடையவும் கண்கள், மூக்கு, வாய், காதுகள் சரீரத்தின் மேலிருக்கும் தோல் இந்த ஐந்து இந்திரியங்களினுடைய வியாபாரங்களையெல்லாம் ஒரே நிலையாய் நிறுத்தி, பிரம்ம நிஷ்டையிலிருப்பதே ஸ்ரேஷ்டமான தபஸ்ஸு என்று சொல்லப்படும் இப்படிப்பட்ட தபஸ்ஸுசெய்பவர்களுக்கு ஜநநமரணங்கள் உண்டாக மாட்டா.

மனம் நசிக்கும்வரையில் இதற்குமுன் ஜன்மங்களிலிருந்து தொடர்நது கொண்டேவரும் வாசனைகள் நசிக்கமாட்டா. வாசனைகள் நசிக்கும்வரையில் சித்தம் என்கிற மனது நசிக்காது. சித்தம் என்கிற மனது நசிக்கும் வரையில் தத்வஞானம் உண்டாகமாட்டாது. தத்வஞானம் உண்டாகும் வரையில் வாசனாக்ஷயம் என்றால். மண்ணாசைப் பெண்ணாசைப் பொருளாசை என்னும் இம்மூன்று ஆசைகளும் நசிக்கமாட்டா. இந்த ஆசைகளும் மனமும் நசிக்கும் வரையில் தத்வஞானம் உண்டாகமாட்டாதென்று அந்த பூர்ணோப நிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## 76. சிவப்பு ரத்தம் நீலரத்தமாயும் நீலரத்தம் சிவப்புரத்தமாயும் சரீரத்தில் மாறிக்கொண்டிருப்பது

எல்லா ஜீவராசிகளுக்கும், மனிதர்களுக்கும் கண்டம் முதல் மார்பு வரையில் மண்ணீரல், ஈரல், பித்தமென்கிற கசப்புப்பை, நுரைஈரல் இருதய கமலம் (Heart) இந்த ஐந்து வஸ்துக்களும் இருதயத்தில் ஒரே கொத்தாய்த தொங்கிக்கொண்டிருக்கும். இதற்கு ஈரல்குலை என்று சொல்லுவார்கள். இந்தக் குலை கண்டத்தினிடமிருந்து மார்பு வரையிலும் தொங்கிக் கொண்டிருக்கும். இவ்வைந்தில் நுரைஈரல் இருதயகமலம் இவ்விரண்டை மாத்திரம் படத்தில் காட்டப்பட்டிருக்கிறது பாருங்கள். நுரை ஈரல் மத்தியிலிருக்கும் இருதயமகலத்தில் பாதிபாகம் நீலவர்ணமாயும், பாதிபாகம் சிவப்பு ரத்தவர்ணமாய் இருக்கும். அடிக்கடி வந்து சேர்ந்துக் கொண்டேயிருக்கும் நீல



(கெட்ட) ரத்தத்தையெல்லாம் உள்ளே இழுக்கும் மூச்சு என்கிற பிராணவாயுவானது நீலரத்தமாகிய கெட்ட ரத்தத்தையெல்லாம் சுத்தி செய்து சிவப்பு ரத்தமாய் மாற்றிவிடும். பிறகு அந்த சிவப்புரத்தம் இருதயமல இடது பாகத்தில் இடத்திற்கு ஓடும் ரத்தநரம்பு (ஆர்ட்டரி Artery) குழாய் மூலமாய் அனுப்பப்படுகிறது ஆர்ட்டரியால் அனுப்பப்பட்ட சிவப்புரத்தம் மறுபடியும் சரீரத்தில் ஓடும்பொழுது மாமிசம் நரம்பு கொழுப்பு எலும்பு மூளை முதலானவைகளுடன்கூட அந்த சிவப்பு ரத்தம்நீல (கெட்ட) ரத்தமாய் மாறுகிறது. இவ்வாறாக நீல ரத்தமாய் மாறி, சரீரத்தில் ஆங்காங்குள்ள நீலரத்தக்குழாய்களின் வழியாய், இருதயகமல வலது பாகத்தில் அடிக்கடி சென்று உள்ளுக்கிழுக்கும் மூச்சியினால் அந்த நீல ரத்தம் சுத்தி செய்யப்பட்டு மறுபடியும் இருதயகமலம் இடது பாகத்தில் சிவப்பு ரத்தமாய்க் கொண்டுபோய்விடும்.

இவ்விதமாய் சகலபிராணிகளின் சரீரத்திலிருக்கும் நீல(கெட்ட) ரத்தமானது ஒவ்வொருமுறையும் உள்ளுக்கிழுக்கும் மூச்சினால் அடிக்கடி சிவப்பு ரத்தமாய் மாறிசிரசு முதல் பாதப் பெருவிரல் வரையில் ஓடுகிறது. சிவப்பு அடிக்கடி மாறிக்கொண்டு வருவதைப் பார்த்தால் இதுவும் ஓர் பிரம்ம சிருஷ்டி வேலையை செய்து வருகிறது.

உள்ளுக்கிழுக்கும் மூச்சானது, நீல (கெட்ட) ரத்தத்துடன் கலக்கும்பொழுதெல்லாம் அந்த நீலரத்தத்திலிருக்கும் விஷதன்மை விஷவாயுவாய் மாறி மூக்கு ரந்திரங்களின் வழியாய் வெளிவருகிறது. இப்படி வெளிவரும் வாயுவிற்கு உஸ்வாஸமென்றும் வெளியில் விடும் மூச்சென்றும், கார்போனிக் ஆசிட்கியாஸ் Carbonicacidgass என்று சொல்லப்படும். நீலரத்தமும், சிவப்பு ரத்தமும், ரத்தக்குழாயின் நரம்புகளின் வழியாய் ஓடும்.



41A

பிராணாயாமம் (யோகாப்பியாசம்) செய்யும்பொழுது மூக்குத் துவாரங்களின் வழியாய் மூச்சை உள்ளுக்கிழுக்கும் பொழுது அந்த மூச்சுடன்கூடவே 'ஐம்' என்னும் பிரணவ மந்திரத்தைச் சேர்த்து உள்ளுக்கிழுத்து, மறுபடியும் மூச்சு வெளிவராதபடி கண்டத்தினிடம் மூடிவிடவேண்டும். அப்பொழுது, அந்த மூச்சு நுரைஈரலில் சில நேரம் தங்கியிருக்கும். பிறகு அந்த மூச்சு நுரையிரலில் இருந்து வெளிவரும். அப்பொழுது யோகியானவன் கண்டத்தினிடம் மூடியைத் திருப்பதனால், அந்த மூச்சு மூக்குத் துவாரங்களின் வழியாய் வெளிவராமல், தொண்டைக்குப் பின்புறமாயிருக்கும் தீனிப்பை குழாய் வழியாய் 22 அடி (இருபத்திரண்டடி) நீளமுள்ள குடல் முழுமையும் அந்த மூச்சு செல்லும். அதன்பிறகு அவ்விடமிருந்து மூலாதாரமென்று சொல்லப்பட்ட குத்தினிடம் போய் அந்த மூச்சு அபானவாயுவாய் வேளியில் போக ஆரம்பிக்கும் அப்பொழுது



யோகியானவன் அந்த மூச்சை வெளியில் போகவிடாமல் இரண்டு பிருஷ்ட்ட (பிட்ட)ங்களையும் கெட்டியாய் இடுக்கிப் பிடிக்கவேண்டும் அப்படி இடுக்கி பிடித்தால் அந்த மூச்சானது குதத்தினிடம் வழியாய் வெளியில் போகாமல் பின்புறமாயிருக்கும் முதுகெலும்பின் வழியாய்ப்போகும் முதுகெலும்பில் 33 எலும்பு கூண்டுகள் ஒன்றின்மேல் ஒன்று படிப்படியாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த முதுகெலும்பு கூண்டுகள் படத்தில் காட்டப்பட்டிருக்கிறது பாருங்கள். இந்த எலும்பு கூண்டு மத்தியில் வெள்ளை நரம்பொன்றிருக்கிறது. இந்த வெள்ளை நரம்பிற்கு ஸ்பைநல்கார்ட் (Spinalcard) என்றும் சுஷும்நா நாடியென்றும் சொல்லப்படும். அதாவது முதுகெலும்பின் மத்தியில் வெள்ளை நரம்பென்றிருக்கிறது. தாமரைக்கொடியிலுள்ள சிறிய நுலைப்போன்ற சிறிய துவாரங்கள் மேற்படி வெள்ளை நரம்பில் இருக்கின்றன. மூக்குத்துவாரங்களின் வழியாய் உள்ளுக்கிழுத்து நிறுத்திய மூச்சானது அப்பியாச முதிர்ச்சியினால் மெதுவாய்





அவ்வெள்ளை நரம்பில் ஏறிச்செல்லும். யோகாப்பியாசம் செய்பவர்களுக்கு மாத்திரம் முதுகெலும்பிலிருக்கும வெள்ளை நரம்பிலுள்ள சிறிய துவாரங்களின் வழியாய் மூச்சு மேலுக்கேறிச் செல்லும், இதற்குக் காகபுஜண்டர் பிரமாணம்.

போமடா முன்சொன்ன நரம்பினூடே
பூரித்த ரவிமதிபுஞ் சுடர்தான் மூன்றாம்
ஆமடா பின்னியுந்தான் கீழேபாயும்
அந்தரங்கந் தன்னைப்பார்க்க அடங்கிப்போகும்
நாமடா வெளிதிறந்து சொல்லிவிட்டோம்
நாதாந்த பரப்பிரம்ம நாட்டந்தன்னை
ஓமடா விந்துவுந்தான் அண்டவுச்சி
உறுதியுடன் சித்தமதை வூணிப்பாரே.

"பூரித்த ரவிமதியுஞ் சுடர்தான் மூன்றும்பட்ட என்றால் வலது நாசி, இடதுநாசி, இரண்டு நாசிகளிலும் உள்ளுக்கிழுத்த நிறுத்திய மூன்று மூச்சுக்கும் அதிக கோபகிழுத்து நிறுத்திய மூன்று மூச்சுக்கும் அதிக கோபமுண்டாய். அக்நி ஜுவாலையைப் போல் கிளம்பி குதஸ்தானத்திற்குக் கீழ்நோக்கி இந்த மூச்சு சிங்ககுட்டியைப் போல் அதிவேகமாய்ப் பாய்ந்து, முதுகெலும்பின் வழியாய் மேலேறி பிரம்மகபாலம் போய்ச் சேர்ந்து அங்குள்ள விந்து என்று சொல்லும் அமிர்தத்தை யோகாக்நீ உஷ்ணத்தினால் உருக்கிக் கண்டத்தின் வழியாய் விழும்படிசெய்து, தான் நாதாந்த சப்தத்தில் ஐக்கியமாகிவிடும். இதை அடைய வேண்டுமென்று எண்ணங்கொண்ட புருஷன் திடமான துடையவனாயிருந்த யோகாப்பியாசம் செய்துவர வேண்டும். யோகாப்பியாச சாதனையினால் மூச்சு முதுகெலும்பின் வழியாய் மேலேயேறி எல்லா நாடிகளையும் கிளப்பிவிடும். அப்பொழுது நாதசப்தம் காதில் கேட்கும்.

## 77. காதுகளில் பிறக்கும் ஓங்காரத்தில் நாதசப்தம் கேட்பது

யோகாப்பியாசம் செய்யவேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூலில் இந்நூலாசிரியர் சொல்லியிருப்பது போல் மூச்சை உள்ளுக்கிழுத்து, அதை வெளியிடாமல் கண்டத்தினிடம் மூடி நிறுத்தியபோது அந்த மூச்சு சிலநேரம் நுரையீரலில் தங்கிப் பிறகு. தொண்டைக்குப் பின்புறமாயிருக்கும் தீனிப்பைக் குழாய் வழியாய்க் குடலுக்குள் பிரவேசிக்கும் குடல் 22 அடி நீளமுள்ளது. இக்குடல் வயிற்றில் மோதிரம் போல் அனேக வளைவுகளாய்ச் சுற்றிக் கொண்டிருக்கும். இக்குடல் படம் யோகாப்பியாசம் செய்ய வேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூலில் காணலாம். அன்றியும் யோகாப்பியாசம் செய்ய வேண்டிய விதிகளையெல்லாம் மேற்படி நூலில் சொல்லப்படிருக்கிறது. ஆதலால் அந்நூலில் சொல்லியிருப்பது போல் யோகாப்பியாசம் செய்து இந்நூலாசிரியர் அனுபவித்த சுகங்களையெல்லாம் அனுபவிக்கலாம்.

பாம்பு பெட்டியில், பாம்பு சுற்றிக்கொண்டு படுத்திருப்பது போல் வயிற்றில் குடல் அனேக வளைவுகளாய் சுற்றிக்கொண்டிருக்கும் உள்ளுக்கிழுத்து நிறுத்திய மூச்சானது 28 அடி நீளமுள்ள குடல் முழுமையும் சென்று பிறகு அபான வாயுவைப்போல் ஆசனத்தின் வழியாய் வெளியில் செல்லும். ஆனால் அது மூச்சேயொழிய அபானவாயுவல்ல. அந்த மூச்சை ஆசனத்தின் வழியாய் வெளியில் போகவிடாமல் இரண்டு பிட்டங்களையும் கெட்டியாய் இடுக்கிப்பிடிக்க வேண்டும். அப்பொழுது அந்த மூச்சானது முதுகெலும்பிலிருக்கும் வெள்ளை நரம்பிலுள்ல சிறிய ரந்திரங்களின் வழியாய் மேலேறிச் சுற்றுத்திரியும் அப்பொழுது தொப்புளில் இருக்கும் குண்டலி சக்திமேல் கிளம்பி சர்ப்பம்போல் 'ஓங்' காரத்துடன் சீறிக்கொண்டு

சிணிசிணிசிணி ஸங்கு வேணு வீணா
தாளம கண்டாபேரீ ம்ருதங்க மேகநாதஹ

என்னும் பத்துவித நாதங்களும் முன் சொல்லிய 'ஓம்' காரத்திலேயே உண்டாய் காதுகளில் கேட்டுக்கொண்டிருக்கும் புதிதாய் யோகாப்பியாசம் செய்யப்பட்டவர்களின் காதில் ஓங்காரம் கேட்கும்பக்ஷத்தில், இந்தப் பத்துவித வாத்தியங்களையும் ஒவ்வொன்றாய் விடுவித்துக் கேட்க அவர்களுக்குச் சக்தியிராது ஆனால், காதில் ஏதோ இரைச்சல் இருக்கிறதென்று சொல்லுவார்களேயொழிய, அது நாத சப்தமென்று அவர்களுக்குத் தெரியவராது. யோகாப்பியாசம் அபிவிருத்தியாய் கொண்டே வரவர இரவில் நிஸ்ஸப்த மாயிருக்கும்பொழுது அதாவது இரவு பன்னிரண்டு மணிக்கு யோகிகள் யோகாப்பியாசம் செய்து முடித்து மூச்சை மெதுவாய் வெளியில் விட்டுக்கொண்டும் மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாய் எதையும் நினையாமல் சும்மாய் உட்கார்ந்திருப்பார்கள்.

அப்பொழுது காதில் 'ஓ' என்று இரச்சலிடுவதைப் போல் கேட்கும். அது 'ஓ' அல்ல, 'ஓங்' கார சப்தமேளாம். யோகிகள் காதில் 'ஓ' என்னும் சப்தம் கேட்டால் அந்த சப்தத்தை யோகிகள் மிகவும் குக்ஷ்மபுத்தியினால் வெகுநேரம் வரையில் கேட்டுக்கொண்டேயிருக்க வேண்டும். பிறகு, 'ஓ' சப்தமல்ல 'ஓங்காரசப்தமென்று யோகிகள் தெரிந்து கொள்வார்கள். இந்த 'ஓங்' காரத்தில் கீ என்று கூச்சலிடுவதுபோல் மற்றொரு சப்தம் காதில் கேட்கும் இதற்கோர் சிறிய திருஷ்ட்டாந்தம் சொல்லுகிறோம் கேளுங்கள்.

இரண்டு கைகளின் ஆள்காட்டும் விரல்களையும் இரண்டு காதுகளுக்குள் நன்றாய் நுழைத்துவைத்துப் பிறகு கண்களைமூடி காதில் என்ன சப்தம் கேட்கிறதென்று கவனிக்கவேண்டும். அப்பொழுது "குழு குழு குழு குழு" வென்று ஓர்விதமான சப்தம்

கேட்கும். ஆனால், இந்த சப்தம் நாதசப்தத்திற்குச் சமமானதல்ல இதை ஒரு சிறிய திருஷ்டாந்தமாய் உங்களுக்கு இங்கு சொன்னோம். காதுகளில் தனக்குத் தானாகவே வாசிக்கும் நாத சப்தங்களை கேட்டு ஆனந்திக்கவேண்டும். யோக பலத்தினால் காதில் கேட்கும் நாதசப்தங்களுக்குச் சமமான சப்தம் இவ்வுலகத்திலாகிலும், அல்லது தேவருலகத்திலாகிலும் இல்லவே இல்லை. காதில் கேட்கும் ஒரே சப்தத்திலிருந்து ஒவ்வொரு சப்தமாய் விடுவித்துக் கேட்டுக் கொண்டே சென்றால் இது சிணி சிணி சப்தமென்றும் இது சங்கு சப்தமென்றும், இது வேணுநாத சப்தமென்றும் இது வீணாநாத சப்தமென்றும் இது கண்டநாத சப்தமென்றும் இது பேரி சப்தமென்றும், இது மிருதங்க சப்தமென்றும் இது மேகநாத சப்தமென்றும் அந்த 'ஓங்' காரசப்தத்திலிருந்து ஒவ்வொரு நாதசப்தங்களையும் விடுவித்துக் கேட்கவேண்டும் சித்தியடைந்த யோகிகளுக்கு இரவில் விசேஷமாய் நாதசப்தம் காதில் கேட்டிக்கொண்டிருக்கும். பகற்காலங்களில் ஊர் சந்தடி விசேஷமாயிருப்பதனால் தனக்குத்தானாய் வாசித்துக் கொண்டிருக்கும் நாதசப்தங்கள் காதில் கேட்கமாட்டா. இதற்கோகர் சிறிய திருஷ்டாந்தம் சொல்லுகிறோம். சமுத்திரம் இரச்சலிடுவது பகற்காலங்களில் கேட்கமாட்டாது. இரவு பன்னிரண்டு மணிக்கு ஊர் சந்தடியெல்லாம் அடங்கி எங்கும் சப்தமில்லாமல் நிஸ்ஸப்பதமாய் இருக்கும் சமயத்தில் சமுத்திர அலை இரைச்சலிடுவது நன்றாய்த் தெரியவரும். அதுபோல் யோகிகளுக்கு இரவில் நாதசம்தம் நன்றாய்க் கேட்கும், பகற்காலங்களில் எல்லா நாதசப்தமும் கேட்காமல் 'ஓங்'கார சப்தம் மாத்திரம் கேட்டுக்கொண்டிருக்கும்.

## 78. இந்நூலாசிரியர் முதல் முதல் தமது காதில் நாதசப்தகளைக் கேட்டது

இவர் அனேக வருஷங்களால் யோகாப்பியாசம் செய்து கொண்டே வருகிறார். யோகாப்பியாசம் முதிர்ச்சியடைந்த பிறகு இரவு பன்னிரண்டு மணிக்கும் இவ்யோகப்பியாசம் செய்யதுண்டு இரவில் யோகாப்பியாசம் செய்து முடித்தபின் தமது மனதை எங்கும் வெளிவிவகாரங்களில் ஓடவிடாமல் செய்து சும்மாய் உட்கார்ந்திருப்பது வழக்கம். இவ்வாறாக மனதை வெளிவிவகாரங்களில் ஓடவிடாமல் நிறுத்தி, சும்மாய் உட்கார்ந்திருப்பதே நிஷ்ட்டையென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

இவர் இரவு பன்னிரண்டுமணிக்கு "யோகாப்பியாசம்" செய்து முடித்து நிஷ்ட்டையில் இருந்து கொண்டே வரும்பொழுது ஒருநாள் இரவு ஒருமணிக்கு இருந்தாற்போலிருந்து இவரது வலது காதில் ஒரு பெரிய 'ரீங்' காரசப்தம் பிறந்தது. அந்த சப்தம் கேட்ட சில நேரத்திற்கெல்லாம் கண்களை விழித்துப்பார்த்து இதுவென்ன இவ்விடம் எப்பொழுதும் கூச்சவிடாத 'புழு' ஒன்று ஓயாமல் ஒரே கூச்சலாய்க் கூச்சலிடுகிறதே" என்று நினைத்துப்பிறகு, ஓர் தீபம் ஏற்றி அந்த அறையெல்லாம் வெகுநேரம் வரையில் தேடி தேடிப்பார்த்தும் எந்தப்புழுரும் அவ்வறையில் காணப்படவில்லை. பிறகு யாரையாகிலும் அழைத்துவந்து பார்க்கச்சொல்லி அப்புழுவைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று எண்ணி இந்நூலாசிரியர் அவ்வறையைவிட்டு வெளியில் நடந்து கொண்டே செல்லும்பொழுதும் அந்த சப்தம் இவருடன் கூடவே வந்துகொண்டிருந்தது. இவர் எங்கெங்கு சென்றாலும் அந்த

சப்தம் இவருடன் கூடவே வந்துக்கொண்டிருந்தது. அந்த சப்தத்தைகேட்கக்கேட்கமிகவும் ஆனந்தமாகவே இருந்தது. அந்த சப்தத்திற்குச் சமானமான சப்தம் இப்பூலோகத்இல் எங்கும் இராது இவர் அறையைவிட்டு வெளியில் சென்றபிறகு சிலமணிதரை இவர் அறைக்குள் அழைத்துவந்து நிறுத்தி, இவ்விடம் என்ன சப்தம் கேட்கிறதோ அதைச் சற்றே கவனித்துக் கேட்டு சொல்லுங்கள் என்று அவர்களிடம் இந்நூலாசிரியர் சொல்லினார்: பிறகு அவர்கள் சுமார் ஐந்து நிமிஷங்கல் வரையில் மிகவும் நிதானமாய் உற்றுக்கேட்டுப் பிறகு இவ்விடம் எந்த சப்தமும் கேட்கவில்லையென்று சொல்லிவிட்டார்கள். ஆனால் அந்த சப்தம் மாத்திரம் இந்நூலாசிரியர் காதில் கேழ்க்கும் சப்தத்தை அவர்களிடம் சொல்லவில்லை. பிறகு அவர்களையெல்லாம் அவரவர்களிடத்திற்கு அனுப்பிவிட்டார். அக்காலத்தில் நாதசப்தம் தமது காதில் கேட்கிறதென்று இந்நூலாசிரியருக்குத் தோன்றாமல் போயிற்று.

பிறகு இவர் தினந்தோறும் இரவு பன்னிரண்டு மணிக்கு யோகாப்பியாசம் செய்துமுடித்து நிஷ்டையிலிருந்து கொண்டே வரவர முன்னைவிட விசேஷ சப்தம் இரண்டு காதுகளிலும் கேட்க ஆரம்பித்தது. இந்த சப்தத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று எண்ணி, தமது மனதைக் காதுகளில் கேட்கும் சப்தத்தில் நாட்டிக் கேட்டுக்கொண்டே வரவர முன்சொல்லிய ஒரே சப்தத்திலிருந்து சில நாதசபதங்கள் வலது காதிலும், சில நாதசப்தங்கள் இடது காதிலும் கேட்டன. அந்த சப்தங்களைக் கேட்கும்பொழுது உண்டான ஆனந்தம் இவ்வளவென்று சொல்லக், கூடாமையாயிருந்தது. இதற்கு நிஷ்டானுபூதி இங்கு பிரமாணமாய்ச் சொல்லுகிறோம்.

இத்திறமான யோகசா தனையி
　　விருந்துசா திப்பவர் தனக்குச்
சுத்தமா காதத் தொனிகளும் பலவாத்
　　தோன்றிடு மணிகடன் மேக
மத்தளம் பேரி யாழொழி சிலும்பு
　　வளையளி தானமென் றுமையாட்
கத்தனு மொழிந்தானன்றிவு முரவோ
　　ராய்ந்தெடுத் துரைத்தன் ரன்றே

இப்படிப்பட்ட வாத்ய சப்தங்களைத் தாமாகவே கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டுமேயொழிய. தாம் கேட்ட நாதசப்தங்களை இதரர்களுக்குச் சொல்லக் கூடாதநாயிருக்கிறது. அதெப்படியென்றால் எப்பொழுதும் தித்திப்பு சாப்பிடாதவனிடம் தித்திப்பு விஷயம் சொன்னால் அந்த தித்திப்பு எப்படியிருக்க மென்று கேட்பான். அந்தத் தித்திப்பு எப்படியிருக்குமென்று கேட்பாய். அந்த தித்திப்பு, சிவப்பு, கறுப்பு பச்சை, நீலம் வெண்மை முதலான நிறமுடையதல்ல. நிறமுடையதாயிருந்தால் தித்திப்பு இன்ன நிறைமுடையதென்று அவனுக்குச் சொல்லலாம். தித்திப்பிற்கு எந்த நிறமும் இல்லை. அதைச் சாப்பிட்டுப் பார்த்து அந்த ருசியைத் தெரிந்து கொள்ளவேண்டுமேயொழிய மனதினாலும் புத்தியினாலும் அந்தத் தித்திப்பு ருசியை யோசித்துச் சொல்லப்பட்டதல்ல. தித்திப்புள்ள பலகாரங்களை அவனுக்குக் கொடுத்துச் சாப்பிடச் சொன்னால் அவன் அதை சாப்பிட்டு தித்திப்பென்பது இதுதானாவென்று சொல்லுவானேயொழிய அதன் ருசியைச் சொல்லமாட்டான். ஒருவன் கெட்ட நாதசப்தங்களை இதரர்களுக்குச் சொல்வது. இந்தத் தித்திப்புப் போன்றதென்றே தெரிந்து கொள்ளுங்கள்.

இந்நுலாசிரியருக்கு இரவு பன்னிரண்டு மணிமுதல், இரண்டு மணிவரையில் மாத்திரமே கண்டநாதம் கேட்டுக் கொண்டிருந்தது. அந்த கண்டநாத சப்தத்தைக் கேழ்க்கக் கேழ்க்க உண்டான ஆனந்தம் இவ்வளவென்று சொல்ல முடியாது. இரவு இரண்டு மணி ஆனவுடன் காதுகளில் கேட்டுக்கொணடிருந்த கண்டநாத சப்தம் நின்றுவிடும். இது போக மற்ற ஒன்பதுவாத்தியங்களும் கேட்டுக் கொண்டிருக்கும். அந்த ஒன்பது வாத்தியங்களும் எவையோ அவற்றை இவ்விடம் சொல்லுகிறோம்.

பூலோகத்திலுள்ள வாத்யசுரங்களை அனுசரித்து எதோ ஓர்விதமாய்ச் சொல்லி விடுகிறதேயொழிய அந்த நாதசப்தத்தை இந்தச் சுருதியாகிலும், அல்லது மற்ற எந்தச் சுரதியாகிலும் எந்த வேதமாகிலும் சொல்ல சக்தியிராது. ஆனால் கஷ்டப்பட்டு யோகாப்பியாசம் செய்துவரப்பட்டவர்கள் மாத்திரம் அந்த நாதசப்தங்களை கண்டறியலாம்.

முதல் வலது காதில் ரிங்கார சப்தம் கேட்கும் பொழுது அந்த சப்தத்தில் மனதை நாட்டி ஒவ்வொரு சப்தமாய் விடுவித்துக் கேட்கும்பொழுது முன்சொல்லிய சிணி, சிணி, சங்கு, வேணு, வீணா, தாளம், கண்டா, பேரி, மிருதங்கம், மேகநாதம் முதலாகிய வாத்தியங்களையெல்லாம் இரவு பன்னிரண்டு மணி முதல் மூன்று மணிவரையில் மிகவும் ஆனந்தமாய்க் கேட்கலாம். அக்காலத்தில் மனது எங்கும் வெளிவியவகாரங்களில் ஓடாமல் வாத்திய சப்தங்களையே கேட்டு ஆனந்தித்துக்கொண்டிருக்கும். இவைகளையெல்லாம் இந்நூலாசிரியராகிய யோகீஸ்வரர் கேட்டு ஆனந்தித்தபடியால் அவரது அனுபவத்தை கருதிப் பிரமாணங்களுடன் இங்கு சொல்லுகிறார். பகற்காலங்களிலும் இராக்காலங்களிலும் எப்பொழுதும் இந்நூலாசிரியருக்கு

நாதசப்தம் காதில் கேட்டுக் கொண்டேயிருக்கும். ஆனால் இந்த நாதசப்தமே சிரேஷ்ட்டமானதென்றெண்ணி எப்பொழுதும் இதையே கேட்டுக்கொண்டிருக்கலாகாது. இந்நாத சப்தங்களை கடந்து சென்று, பரமாத்ம சொருபத்தில் மனதைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடவேண்டும் இதற்கோர் திருஷ்ட்டாந்தம் சொல்லுகிறோம்.

ஓர் கிழ அரசன் மேல் வேற்றரசன் யுத்தத்திற்கு வந்தபொழுது குமாரனை வரவழைத்து 'அப்பா! நாயனா? வேறரசன் நம்மோடு யுத்தம் செய்ய படையெடுத்து வந்திருக்கிறான். சேனையுடன் சென்று, வெற்றி பெற்றுவரக் கடவாய்டட என்று குமாரனை ஆசீர்வதித்து யுத்தம் செய்ய அனுப்பினான். குமாரன் வேற்றரசனுடன் யுத்தம் செய்து வெற்றியடைந்து திரும்பி வருகையில் கிழ அரசன் சந்தோஷித்து, ராஜவாத்தியங்களுடன் குமாரனை எதிர் கொண்டழைத்துவர அனுப்பினான். அதுபோல நமது பகவானானவர் நம்மை எவ்வாறு எதிர் கொண்டழைத்து தம்மில் ஐக்கியம் செய்து கொள்ளுகிறாரோ, இனி அதைச் சொல்லப்போகிறோம்.

மிகவும் கஷ்ட்டப்பட்டு யோகாப்பியாசம் செய்து முடித்த யோகிகளைக் கடவுளானவர் என்ன செய்கிறாரென்றால் 'அப்பா! குழந்தாய்! கஷ்ட்டப்பட்டு யோகாப்பியாசம் செய்து, சம்சாரமென்னும் சமுத்திரத்தைக் கடந்து கரையெறிவிட்டாயா? வென்று கடவுளானவர் மிகவும் சந்தோஷித்து, இதுவரையில் முன்சொல்லிய தசவித நாதங்களைக் காதில் கேட்கும்படிச் செய்து பிறகு, அந்த யோகிளுக்குக் காக்ஷியைத் தருகிறார். அதாவது மோக்ஷமென்னும் வீட்டில் கொண்டுபோய்ச் சேர்க்கின்றார். இந்த உண்மையநுபவத்தை நமது புராதனமாமாயுள்ள எல்லா ஆலயங்களிலும் பிரத்தியக்ஷமாய்க் காணலாம். அதெப்படியென்றால்.

கோவில்களில் மூலஸ்தானத்திலிருக்கும் சிவ விஷ்ணுகளுக்கு அபிஷேகம் செய்யுங்காலங்களில் அந்த அபிஷேகத்தை தரிசிக்க மூலஸ்தானத்திற்குள் போகிறார்கள். அப்பொழுது முதல் மண்டபத்தில் டம, டம, டம, டமவென்று பெரிய, பேரீவாத்தியமும், டாங்கா வாத்தியமும், மேள தாளவாத்தியமும் தாசிகளின் மத்தள ஒசையும் பெரிய கண்டாநாதமும் சிறிய கண்டா நாதமும் தாசிகளின் தாள சங்குநாதமும் வாயினால் ஊதும் திரிச்சடை நாதமும், வாத்தியமும் இந்த பத்துவித வாத்தியங்களும் காது பிளக்கும்படி வாசித்துக் கொண்டிருப்பார்கள். இந்த வாத்தியங்களெல்லாம் பெரிய கோவில்களில் நடந்தேறிவருமேயொழிய சிறிய கோவில்களுல் இராது இதன் கருத்து என்னவென்றால், மேற் சொல்லிய பத்துவித வாத்தியங்களும் நமக்குள்ளே அடங்கியிருக்கின்றன்வென்று காட்டுவதற்காகவே மூலஸ்தானத்திற்குள் போகும் வழியில் முதல் மண்டபத்தில் மேற்சொல்லிய பத்துவித வாத்தியங்களை வாசித்துக் காட்டுகிறார்கள்.

அந்த வாத்தியங்களையெல்லாம் கேட்டுக்கொண்டே மூலஸ்தானத்திற்குள் சென்று அந்த மூலவிக்கிரக சொருபத்தில் சேவிப்பவர்களின் பூரண திருஷ்ட்டியை நிறுத்திப் பார்க்கும்பொழுது மனம் அந்த விக்கிரக சொரூபத்திலேயே லயித்து விடும். அச்சமயத்தில் அதற்குமுன் கேட்டுகொண்டிருந்த வாத்திய சப்தங்கெளல்லாம் அவர்களுக்குக் கேளாமல் போய்விடும். அதுபோல் யோகிகளும் சில நேரம் தமது காதுகளில் நாதசப்தங்களை கேட்டுக் கொண்டிருந்து அதன் பிறகு, அவர்களின் மனம் ஆகாய வடிவத்தில் போய் ஐக்கியமாய்விடும். அப்பொழுது அதற்குமுன் கேட்டு கொண்டிருந்த நாத சப்தங்கள் அவர்களுக்குக் கேளாமல்

போய்விடும். நமக்குள் தசவித வாத்யங்கள் இருக்கின்றனவென்று காட்டுவதற்காகவே கோவில்களில் தசவித வாத்தியங்களை வாசித்துக் காட்டுகிறார்கள். முப்பத்தாறு தத்துவங்களும் அதிகப்பட்ட இந்த நாதசப்தங்களை யார் கேழ்கின்றாரகளோ அவர்களே முக்தர்கள்: அவர்களே பிரம்ம ஞானிகள் எனென்றால் நாதசப்தம் கேழ்க்கும் ஜன்மத்திலேயே மோக்ஷ வீட்டை அடையப் போகிறவர்களாதலால் இவர்களைப் பிரம்மஞானி களென்றே சொல்லுவார்கள்.

ஒடுங்கினேன் ஓங்கார நிலையிற்குள்ளே
உற்பனமாய் சிவலிங்க முள்ளே கண்டேன்

நடுங்கினேன் மும்மூலங் கொள்ளும் பாது
நாற்பத்து முக்கோணம் நடுவாய்ச் சென்றேன்

அடங்கினே னான்மா வுக்குள்ளே மைந்தா
அடங்காத சித்தமென்று அறிவிற் சேர்ந்தேன்

தங்கினேன் நந்திதனி லேற்க கொண்டே
தாய்பத்தை எந்நாளும் போற்றினேனே.

பிறப்பென்னும் சமுத்திரத்திற்கு ஆசையென்னும் வாசனையே முதலையாயிருக்கின்றது; இம்முதலைக்கு மனமே மூலகாரணமாயிருந்து ஆசையென்னும், முதலையைப் பிடித்திழுக்க அதன் வழியாய் மரணமென்பது காத்திருக்கிற தென்பதை அறிவாலறிந்த புண்ணிய புருஷர்கள், மலின வாசனையுடைய மனதை மலினமற்ற மனதினால் உறவு செய்வாராயின் ஆத்மாவை தரிசிப்பார்கள்..

எந்தெந்த வாசனைகள் மனதில் உதிக்கின்றதோ, அந்தந்த வாச்னைகளை அப்போதைக்கப்போதே நாசம் செய்து வருவார்களாகில் அந்த நாசமே மாயையை நாசம் செய்வதாகும். இம்மாயையே மன உருவமாயிருப்பதால் மாயையென்னும்

*மனதை (நினைப்பு மறப்பைச்) அறச்செய்வாராயின் நிர்விகல்ப சமாதி நிலையை அடைவார்கள்; என்றால் நினைப்பு மறப்பதற்றதே நிர்விகல்ப சமாதியெனப்படும். இவைகளுக்கு ஞானவாசிட்டம் பிரமாணம்.*

பிறவிக் கடலிற் காத பலனும் பெருவாய்
முதலை பிடித் தீர்க்க

லிறவுச் சுழிபாற்சுழலு மவர்க் கிதய
நாவா யெட்ட வா

மறமுற் றுளத்தை யளந்தானே மாய்த்துப்
பிறப்பில் வருந்தாம

னுறவுற றுனைநீ யுய்விப்பா யுயிர்க்குப்
பிறரா லுய்வுண்டோ

எந்த வெந்த வாதனைக ளிதயத் தெழுந்த
வவை யெல்லா

மந்த வந்த விடத் தழிக்கி லுதுவே
மாயைக் கழு வாகு

முந்து போக பேதமென மொழிந்த
விரு வாதனை விட்டு

வந்த பாவா பாவங்சண் மாற்றி
விகற்ப மற மகிழ்வாய்.

## 79. ஆதி சேஷன் மேல் ஸ்ரீ ரங்கநாதர் ஸ்ரீரங்கத்தில் சயனித்த ரஹஸ்யார்த்தம் வெளியிடுதல்

ஸ்ரீரங்கம் கோவில் நான்கு பக்கங்களிலும் ஏழுபெரிய மதில் சுவர்களையுடைய ஏழு பிரகாரங்கள் கட்டப்பட்டிருக் கின்றன. இதில் ஆறு பிரகாரங்களுக்குள் மதில் சுவரை ஒட்டி அனேக வீடுகளைக் கட்டி அவ்வீடுகலில் குடியிருக்கின்றார்கள். அதுவும் ஓர் பெரிய பட்டணமாயிருக்கிறது ஸ்ரீரங்க பட்டணமெல்லாம் ஆறுமதில் சுவர்களுக்குள் அடங்கியிருக்கின்றன.

பிறகு ஆறு மதில்சுவர்களையும் கடந்து உள்ளே செல்லும்பொழுது எழாவது மதில்சுவருக்குள் என்னயிருக்கிற தென்றால், நான்கு மதில்சுவர்களின் மத்தியில் மூலஸ்தான கோபுரம் இருக்கிறது. அந்த கோபுரத்திற்குள் ஸ்ரீரங்க நாதர் ஆதிசேஷன்மேல் சயனித்திருக்கிறார். அப்பெருமாளுக்குத் தேங்காய்களை உடைத்து ஆராதனைக் காட்டுவதில்லை.

தேங்காய்களை உடைத்து அம்முடிகளைத் திருவல்வாய்த்திருவி வாழைப்பழத்தை மிகவும் சன்னமாயும், வட்டமாயும அறிந்து அத்தேங்காய்த் திருவலில் கலந்து அதனிடன் சர்க்கரை ஏலரிசி முதலாகிய வாசனை திினுசுகளும் கலந்து பெருமாளுக்கு ஆராதனை செய்து பாதி பாகம் அர்ச்சகர்கள் எடுத்துக்கொண்டு மிகுதி பார்தி பாகம் ஆராதனை செய்யக் கொடுத்தவர்களுக்குக் கொடுத்துவிடுவார்கள். தேங்காய்களை உடைத்துப் பெருமாளுக்கு காட்டுவதில்லை.

இராவணன் தம்பி விபீஸணர் இலங்கையிலிருந்து வைகுண்டம்போய் பெருமாளுக்குப் பூஜை செய்து வருவது வழக்கம், பெருமாளை இலங்கைக்குக் கொண்டு போய் வைத்து இலங்கையிலேயே பூஜை செய்து கொண்டிருக்க விபிஷ்ணர் எண்ணங்கொண்டு பெருமாளை பிரார்த்தனை செய்து இலங்கைக்கு எழுந்தருள வேண்டு மென்று கேட்டுக் கொண்டாராம்.

வைகுண்டத்திற்கும் இலங்கைக்கும் போகும் வழியில் திருச்சினாப்பள்ளி இருக்கிறது. அதன் சமீபமாய் காவேரி நதி ஓடுகிறது. அந்த நதியே இரண்டாய்ப் பிரிந்து அதில் ஒருநதி, 'காவேரியென்றும்' மற்றொரு நதி கொள்ளிடமென்றும் பெயர் பெற்று ஓடுகின்றன. இவ்விரண்டு நதிகளின் மத்தியில் வந்து சயநித்திருக்கவேண்டுமென்று வைகுண்டத்திலிருக்கும் பெருமாளுக்கு உத்தேசம் இருந்தது, இலங்கைக்குக் கொண்டுபோக கேட்டுக் கொண்டபடியால் ஒப்புக்கொண்டார்.

'ஓய் விபீஷணரே! நான் விக்கிரகத்தை பூக்குடலிற்குள் வைத்து அக்குடலை எங்கும் கீழே வைக்காமல் இலங்கைக்குக் கொண்டுபோய் என் விக்கிரக சொரூபத்தை வைக்க வேண்டும் நீ என்னைப் பூக்குடலில் வைத்துக்கொண்டு போகும்பொழுது வழியில் எவ்விடமாகிலும் உனக்கு மலமூத்திரங்கள் வருவதாயிருந்தால் நான் இருக்கும் பூக்குடலை யார்கையிலாகிலும் கொடுத்து அக்குடலைக் கீழே வைக்க வேண்டாமென்று அவர்களிடம் சொல்லியப்பிறகு, நீ சென்று மலவிசர்ஜனை செய்துவந்து பூக்குடலை எந்த இடத்தில் அவர்கள் வைக்கின்றார்களோ அந்த இடத்திலேயே நான் ஐந்து சிரசுகளையுடைய ஆதிரேஷன்மீது பள்ளிக்கொண்டு விடுவேன். அதன் பிறகு அவ்விடமிருந்து என்னைக்கொண்டுபோக எவ்வளவு பலசாலிகளாயிருந்த போதிலும் என்னையெடுக்க அவர்களால் சாத்தியப்படமாட்டா, இதற்கு என்ன சொல்லுகிறாய்? என்று பெருமாள் கேட்டனர். அதற்குப் பெருமாள் சொற்போல் விபீஷணர் செய்வதாய் ஒப்புக்கொண்டார். அதன் பிறகு பெருமாளானவர் ஒரு சிறிய பெருமாள் விக்கிரக ரூபம் தரித்தனர்.

அந்த விக்கிரக ரூபத்தை விபிஷணர் எடுத்துத் தமது பூக்குடலில் வைத்து வழிநடந்தனர். அப்பொழுது அப்பூக்குடலானது பளுவில்லாமல் மிகவும் இலேசாய்

4218

வெறுங்குடலைக் கொண்டு போவது போலிருந்தது. இவ்வாறாக வைகுண்டத்தைவிட்டு இலங்கைக்குப் போகும் பொழுது திருச்சினாப்பள்ளி சமீபமாயிருக்கும் 'காவேரி' நதி இரண்டாய்ப் பிரிந்து போகுமிடத்தில் விபீஷணர் சென்றார். அந்த இடத்தில் ஆதிசேஷன்மீது சயனித்திருக்கப் பெருமாளானர் எண்ணங்கொண்டிருந்தபடியால் அந்த இடத்திற்கு விபீஷணர் பூக்குடலைக் கொண்டு வந்தவுடன், விபீஷணருக்கு மிகவும் சீக்கிரமாய் மலஜலம்வரும்படிப் பெருமாளானர் செய்துவிட்டார் அதன் பிறகு, பெருமாளானவர் தும்பிக்கையாழ்வாரை அதாவது விக்நேஸ்வரரை நினைத்து நீ பிராமணச் சிறுவன் வேடங்கொண்டு விபீஷணனிடம் சென்று அவன் கையிலிருக்கும் பூக்குவலை வாங்கிக் கொண்டு சீக்கிரமாய் மூன்று குரல் கூப்பிட்டுப் பிறகு, அப்பூக்குடலை நீ நின்றிருக்குமிடத்திலேயே வைத்துவிட்டுப் போகக்கடவாய் என்று பெருமாளர்னவர் தம் மனத்தில் நினைத்தனர்.

பெருமாள் இவ்வாறாக நினைத்தமாத்திரத்தில். விக்நேசுவரர் மிகவும் வைதீகப் பிராமணச் சிறுவர் வேடம் பூண்டு விபீஷணரை எதிர் நோக்கி வந்துகொண்டிருந்தனர். அப்பொழுது விபீஷணர் பிராமணச் சிறுவரைப் பார்த்தவுடன் மிகவும் சந்தோஷித்து; 'ஓய் பிராமணரே; நான் மலஜல விசர்ஜ்ஜனை செய்துவர வேண்டும் இப்பூக்குடலை கீழே வைக்கலாகாது, நான் மலஜல விசர்ஜனைசெய்துவரும் வரையில் இக்குடலை கீழேவைக்காமல கையில் பிடித்துக்கொண்சிரும். நான் வந்தவுடன் குடலை வாங்கிக்கொள்கிறேன் என்று விபீஷணர் சொல்லினார் அப்பொழுது பிராமணர் சிறுவர் சொல்லுகிறார்.

'சரி! நீ சொல்வதுபோல் செய்யத் தடையில்லை. ஆனால் மூன்று குரல் கூப்பிடுவேன். அதற்குள் வரவேண்டும். அப்படி வராவிட்டால் குடலை கீழே வைத்துச் சென்றுவிடுவேன் என்று பிராணச் சிறுவர் சொல்லினார் அப்பொழுது "சரி சரி" பிடியும்

பிடியும் பிடியும் என்று விபீஷணர் சொல்லி பூக்குடலை பிராமணச் சிறுவர் கையில் கொடுத்து மலமூத்திரங்களை விடும் பொழுது "ஓய்! பூக்குடலைக் கொடுத்தவரே!" என்று ஒரு முறை பிராணச் சிறுவர் கூப்பிட்டனர். இவர் மலத்தையோ தீராமல் வயிற்றுவலியுடன் உட்கார்ந்திருந்தால் மறுபடியும் சற்று நேரத்திற்கொல்லாம் "ஓய்! பூக்குடலை கொடுத்தவரே" என்று இரண்டாவது முறை பிராமண சிறுவர் கூப்பிட்டனர். அப்பொழுது விபிஷணர் எழுந்து காலம்ப ஜலத்தைத் தேடிக் கொண்டு சென்றார். இதறகுள் பிராமணச் சிறுவர் ஓய்! பூக்குடலைக் கொடுத்தவரே என்று மூன்றாவது முறையும் கூப்பிட்டு பூக்குடலைக் கீழே வைத்து மெதுவாய் நடந்து சென்றார். பிறகு விபூஷணர் பூக்குடல் இருக்குமிடத்திற்கு வந்து பார்த்தார். அப்பொழுது பெருமாள் பூக்குடலில் இராமல் பெரிய உருவங்கொண்டு ஆதிசேஷன் மீது சயனித்துவிட்டார். அந்த ஆதிசேஷசயனத்தை விமீஷணர் எடுக்கச் சக்தியில்லாமற் போயிற்று. பிறகு அப்பிராமணச் சிறுவர் மேல் அதிக கோபமுண்டாய் அவரைத் தொடர்ந்து சென்று நான் வருவதற்குள் பெருமாளைக் கீழே வைத்து விட்டாயா வென்று சிரசில் நன்றாய் குட்டை வாங்கிக் கொண்டு திருச்சினாப்பள்ளி சமீபமாயிருக்கும் உச்சிமலைமேல் ஏறிக் கல்லுருவமாய் விக்நேஸ்வரர் ரூபங்கொண்டு உட்கார்ந்துவிட்டார். இப்பொழுதும் அந்த திருச்சினாப்பள்ளி உச்சிமலையில் ஏறி, விக்நேஸ்வரர் சிரசில் பார்த்தால் மூன்று மொட்டிக்கை குட்டிய அடையாளங்கள் இருக்கின்றன.

கலியுக பிராரம்பத்தில் வைகுண்டத்திலிருந்து பெருமாளைக் கொண்டுவந்து திருச்சினாப்பள்ளி சமீபமாயிருக்கும் உச்சிமலை மேல் ஏறிக்கல்லுருவமாய் விக்நேஸ்வரர் சிரசில் பார்த்தால் மூன்று மொட்டிக்கை குட்டிய அடையாளங்கள் இருக்கின்றன.

கலியுக பிராரம்பத்தில் வைகுண்டத்திலிருந்து பெருமாளைக் கொண்டுவந்து திருச்சினாப்பள்ளி சமீபமாயிருக்கும் காவேரி, கொள்ளிடம் இவ்விரண்டு நதிகளின் மத்தியில் வைத்தபடியால் விஷ்ணுகோவில்களில் முதல்முதல் உண்டான கோவில் இதுவேயாதலால். இதற்குப் பெரிய கோவிலென்றும் முதல் முதல் உண்டான பெருமாளெனறும் சொல்லுவார்கள். இவர் மிகவும் பெரியவராய் விட்டப்படியால் இவருக்கு வாயில் பற்கள் இல்லையென்றும். தேங்காயைமென்று சாப்பிடமாட்டாரென்றும் தேங்காய் முடிகளைத் திருவி அதனுடன் வாழப்பழம், சர்க்கரையைக் கலந்து கொடுத்தால் பொக்கை வாயில் சாப்பிடமிகவும் நலமாயிருக்குமென்றெண்ணி ஸ்ரீரங்கத்திலுள்ள பிராமணர்கள் இவ்வித ஏற்பாடுகளைச் செய்து வைத்தார்கள்.

மூலாதாரம் என்றால் குதஸ்தானம் அதாவது பிரஜாபதி பிரஜாபதியென்றால், பிரஜைகளை உற்பத்தி செய்யப்பட்டதாதலால் அதற்குப் பிரஜாபதி என்று பெயருண்டாயிற்று மணிபூரகம் என்றால் நாபி(தொப்புள்). அநாதஹமென்றால் இருதயகமலம் விசுத்தி என்றால் நெஞ்சுக்குழி. ஆஞ்ஞேயம் என்றால் புருவத்தியம் அந்த ஆறையும் ஆறு சக்கரங்களென்று முன்னுள்ள பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். இந்த ஆறுசக்கங்களையே ஸ்ரீரங்கத்தின் கோவிலுக்கு ஆறுச்சுற்றுப் பிராகார மதில் சுவர்களாய்க்கட்டி காட்டினார்கள். இந்த ஆறு பிரகாரத்திற்குள்ளவே ஊரெல்லாம் அடங்கியிருக்கின்றன. அதுபோல், முன்சொல்லிய ஆறு சக்கரங்களிலும் ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து பிராணன்கள் ஐந்து. தன்மாத்திரைகள் ஐந்து. மனம், புத்தி, சித்த அஹங்காரம் என்று சொல்லப்பட்ட அந்த கரணங்கள் நான்கு ஆகமொத்தம் இருத்துநான்கு த்துவங்களும் நமது சரீரத்திற்குள் கணக்கில்லாத ஆசைகள் நிறைந்திருக்கின்றனவென்று காட்டுவதற்காகவே ஸ்ரீரங்கத்திலுள்ள ஆறு பிரகாரங்களையும்

ஓர் ஊராய்க் கட்டிக் காட்டினார்கள். அதாவது ஆறு மதில் சுவர்களுக்குள்ளிருக்கும் ஊரில் எத்தனை விதங்களாகிய காரியங்கள் நடந்து வருகின்றனவோ அத்தனை விதங்களாகிய ஆசைகளும் எண்ணங்களும் நமது சரீரத்திலிருக்கும் ஆறு சக்கரங்களிலும் நிறைந்து குடிக்கொண்டிருக்கின்றன என்பதேயாம்.

பிறகு நமது சரீரத்திற்குள் எழாவது சக்கரமிருக்கிறது. அது என்னவென்றால், பிரம்மகபாலமேயாம். அந்த பிரம்ம கபாலத்தில் வெறும் வெளியான ஆகாயம் இருக்கிறது. அந்த வெளியே கடவுளின் சொரூபம். கடவுளானவர் எழாவது சக்கரமாகிய நமது பிரம்மகபாலத்திற்குள் வெளியாய் அடங்கியிருப்பதால் அந்த வெளியை, ஸ்ரீரங்கத்தில் எழாவது பிராகாரத்திற்குள்ளிருக்கும் மூலஸ்தானத்திற்குள் பெருமாள் சயனித்திருப்பதாய்க் காட்டியிருக்கிறார்கள். இதுவே ஸ்ரீரங்கத்தினுடைய ரஹஸ்யார்த்தம் இனி ஆதிசேஷன் ரஹஸ்யார்த்தம் சொல்லுகிறோம்.

பிராண, அபான, வியான, உதான சமானனென்னும் ஐந்து வாயுக்கள் இருக்கின்றன. இந்த ஐந்து வாயுக்குள்ளே ஐந்து சிரசுகளையுடைய நாகேந்திரனென்று சொல்லப்படும்; இதைவிட வேறே ஐந்து சிரசு நாகேந்திரன் தேவலோகத்திலுமில்லை அல்லது பூலோகத்திலுமில்லை. இந்த ஐந்து வாயுக்களிலும் பிரதான வாயு எதுவென்றால் பிராணவாயுவேயாம். இந்தப் பிராணவாயுவை நாகேந்திரனுக்கு மத்ய சிரசாய் வைத்தார்கள். பிறகு அபான வியான இவ்விரண்டு வாயுக்களையும் இரண்டு நாகேந்திரன் சிரசுகளாய் செய்து அவைகளை மத்ய சிரசாய் வைத்த நாகேந்திரன் சிரசிற்கு இரண்டு பக்கமும் சேர்த்து ஆக மொத்தம் ஐந்து சிரசுகளாய்க் காட்டினார்கள், அதாவது, ஐந்து வாயுக்களையே ஐந்துவாயுக்களையுடைய நாகேந்திரனாய்க் காட்டப்பட்டது. மேற்சொல்லிய ஐந்து வாயுக்களின் கொழுப்பை

யோக பலத்தினால் கொன்றுவிடவேண்டும். பஞ்சப் பிராணங்களின் வேகமெல்லாம் அடங்கிய பிறகு நாகேந்திரன் உருவங்கொண்டிருக்கும் பாம்பானது கடிக்க மாட்டாதென்று உலகத்தாருக்கும் காட்டுவதற்காகவே பெருமாளானவர் பஞ்சப் பிராணன்களாயிருக்கும் ஆதிசேஷன்மீது சயனித்து காட்டுகிறார். பெருமாள் ஆதிசேஷன் மீது சயனித்த பிறகு "என்னுடைய பலத்தையெல்லாம் ஒடுக்கின, புருஷன் இவரல்லவோ" வென்று ஐந்து சிரசுகளையும் படமாய் விரித்து பெருமாளுக்குக் குடையாய்ப் பிடிக்கிறது.

அலையுமனத்தை யகத்தடக்கு மவனே சரியை கடந்தோனாம்
அலையுமனத்தை யகத்தடக்கு மவனே கிரியை முடித்தோனாம்
அலையுமனத்தை யகத்தடக்கு மவனே யோக தற்பரனம
அலையுமனத்தை யகத்தடக்கு மவனே ஞானியதிசூரன்



## 80. ஸ்ரீமந்நாராயணமூர்த்தி நாபியில் பிரமதேவன் பிறந்த ரகசியம் வெளியிடுதல்

கிருதயுகம் திரதாயுகம் துவாபாரயுகம் கலியுகமென நான்கு யுகங்களுண்டு ஒவ்வொரு யுகத்திற்கும் எத்தனை வருஷங் களென்பதும் ஒருயுகம் முடிந்தவுடன் மறுயுகம் புதுயுகம் எப்படி உண்டாகிறதுதென்பது இனி சொல்லப்போகிறோம்.

பதினேழுலக்ஷத்து இருபத்தினாயிரம் வருஷங்களானால் ஒரு கிருதயுகம். பன்னிரண்டுலக்ஷத்து அறுபத்து ஒன்பதாயிரம் வருஷங்களானால் ஒரு திரேதாயுகம். எட்டு லக்ஷத்து அறுபத்துநாலாயிரம் வருஷங்களானால் ஒரு துவாபரயுகம், நாலுலக்ஷத்து முப்பத்துயிராயிரம் வருஷங்களானால் ஒரு கலியுகம். ஒவ்வொருயுகம் முடிந்தவுடன் பிரளயகாலம் வருவதுண்டு.



எங்கும் இருக்கப்பட்ட தேசங்களும், தீவுகளும் எல்லாம் சேர்த்து கால்பாகம் பூமிமாத்திரமே இருக்கின்றன. மற்ற முக்கால் பாகம் சமுத்திரஜலம் இருக்கின்றது. ஒருயுகத்திற்கு இருக்கும் வருஷங்கள் முடிந்தவுடன், பிரபஞ்சமெங்கும் சுற்றிக் கொண்டிருந்த சமுத்திர ஜலமெல்லாம் ஒரே முறையாய் பால் எவ்வளவு சீக்கிரமாய் அடுப்பில் பொங்குகிறதோ அதுபோல் எல்லா சமுத்திரஜலமும் ஒன்றாய்ச் சேர்ந்து பொங்கி ஆகாயம் வரையில் உயர்ந்து பரவியிருக்கும், இதையே ஜலப்பிரளய மென்று சொல்லுவார்கள். இரண்டு வருஷங்கள் சென்றபிறகு பொங்கிய சமுத்திரம் அடங்கி, அந்த சமுத்திரங்கள் இருக்கிமிடத்திற்குச் சென்றுவிடும் ஜலப்பிரளயத்தில் எல்லா ஜீவராசிகளும் எங்குமுள்ள திவ்விய க்ஷேத்திரங்களும் தீர்த்ததங்களும் அழிந்து போகும். ஜலப்பிரளயம் முடிந்தவுடன் முதல் முதல் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி அவதரிக்கின்றார். அவர் அவதரித்த நான்கு திக்குகளிலும் திருஷ்ட்டித்துப் பார்க்கும் பொழுது எங்கு பார்கினும் ஏக வெளியாகவே இருந்தது அந்த யுகம் முடிந்ததும் மறுபடியும் வேறொரு யுகம் சிருஷ்ட்டி செய்வதற்காக ஸ்ரீமந் நாராயணமூர்த்தி ஆதிசேஷன்மீது சயனித்து "ஷேஹ" பிரம்மாவென்று பிரம்மதேவரைத் தன் மனதில் நினைத்தார். ஸ்ரீமந்நாராயணமூர்த்தி அவ்வாறு நினைத்த மாத்திரத்தில் அவரது நாபியிலிருந்து (தொப்புளில் இருந்து) பிரம்ம தேவர் பிறந்தார். ஸ்ரீமந்நாராயணமூர்த்தி தொப்புளிலிருந்து பிரம்மதேவர் பிறந்தது படத்தில் காட்டப்பட்டிருக்கின்றது பாருங்கள். "பிரம்மா" என்று நினைத்த மாத்திரத்தில் அவரது தொப்புளில் இருந்து பிரமதேவர் பிறந்தபடியால் பிரமதேவர் மஹாவிஷ்ணுவின் புத்திரரென்றும் சொல்லுவார்கள். பிரம்மதேவர் விஷ்ணுவின் நாபியில் பிறந்த பிறகு விஷ்ணுமூர்த்தியைப் பிரதாஷணம் செய்து இருகை களையும் குவித்து நின்று நீர் என்னை மனதில் நினைத்து சிருஷ்டி -

செய்த காரணம் எதுவோ, அதை அடியேனுக்கு ஆஞ்ஞாபிப்பீர்களாக என்று பிரமதேவர் கேட்டார் ஸ்ரீமந்நாராயணமூர்த்தி பிரமதேவரைப் பார்த்து.

பிரமதேவரே! துவாபர யுகத்திற்கு இருந்து எட்டுலக்ஷத்து அறுபத்து நாலாயிரம் வருஷங்களும் முடிந்து பிறகு, பிரளயகாலம் வந்து அந்த பிரளய காலமும் பூர்த்தியாய்விட்டது. இனி கலியுகம் சிருஷ்டி செய்தேன். அதன் பிறகு ஸ்தாவரமாய் நின்றிருக்கும் மலைகள். விருக்ஷங்கள் முதலானவைகளுடன் சேர்த்து எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளையும் பிரமதேவர் சிருஷ்டி செய்தனர் இது விஷயம் இதுவரையில் நிறுத்தி பிரமதேவர் விஷ்ணுவின் தொப்புளில் இருந்து பிறப்பதற்கு காரண் எதுவோ, அதை இனி சொல்லப்போகிறோம்.

ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களும் தினந்தோறும் அளவற்ற நினைப்பு நினைக்கின்றார்கள். அந்த நினைப்புகளுக்கே மனது என்று சொல்லுவார்கள் அம்மனதிற்கு ரூபமென்பது இல்லவேயில்லை இம்மனதின் ரூபம் எப்படிப்பட்டதென்றால். காற்று தங்கியிருக்குமிடம் எதுவென்றால் தொப்புளேயாம். ஆதலால், ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் ஹே பிரம்மா! என்று நினைத்த மாத்திரத்தில் அந்த மனது தங்கியிருந்த இடமாகிய தொப்புளிலிருந்து பிரமதேவர் புறப்பட்டு வந்தனர். ஆகையால் எல்லோருக்கும் மனது என்பது இருக்கப்பட்ட இடம் தொப்புள் என்று உலகத்தார் தெரிந்து கொள்வதற்காகவே விஷ்ணுவின் தொப்புளில் பிரமதேவர் பிறந்ததாய்ச் சிலைகளில் செய்து கோவில்களில் வைத்து ஜனங்களுக்குக் காட்டியிருக்கின்றார்கள்.

ஒவ்வொரு ஸ்திரி புருஷர்களும் ஜன்மமெடுப்பதற்கு மூலகாரணம் எதுவென்றால் அவர்களின் மனதேயாம்; இம்மனதிற்கு சித்தமென்றும் சொல்லப்படும். இதற்கு முக்தி கோபநிஷத்து பிரமாணம் சொல்லுகிறோம்.

சித்தம் ஸம்ஜாயதே ஜந்ம ஜராமரணகாரணம்

ஒவ்வொரு ஜீவர்களும் மரணமடைந்த பிறகு மறுபடியும் ஜன்மமெடுப்பதற்குக் காரணம் எதுவென்றால். அவரவர்களின் மனதே காரணமாயிருக்கிறது அதெப்படியென்றால்,

நெல், கேழ்வரகு கம்பு, சோளம் இன்னும் அனேக விதங்களாகிய தான்யங்களுண்டு. அந்த தான்யங்களுக்கெல்லாம் விதைகளிருக்கின்றன அந்த விதைகளைப் பூமியில் விதைத்தால் அதே தான்யங்கள் விளைகின்றன. ஒவ்வொரு தான்யங்களுக்கும் விதை எப்படியிருக்கிறதோ அதுபோல் மானிட சரீரம் வருவதற்கும் ஒரு விதையுண்டு. அது என்ன விதையென்றால் மனது என்று சொல்லப்பட்ட விதையேயாம். பிராணனைவிடும் பொழுது எதையும் நினையாமல் பிராணனைவிட்டால் மறுபடியும் அவர்களுக்குச் ஜன்மம் வரவேமாட்டா: எதையும் நினையாமல் எந்த வஸ்துவின் மேலும் ஆசையை வையாமாலும் பிராணனை விட்டுவிடுவதே மோக்ஷமென்றும் சொல்லப்படும். இதற்கு மண்டல பிராஹ மணோபநிஷத் பிரமாணம் சொல்லுகிறோம்

யஸ்ய ஸங்கல்ப நாஸஸ்யாத் தஸ்யமுக்தி க்ரேஸ்திநா

ஜநந மரணங்களுக்கு மூலகாரணமாயிருக்கும் மனதை யார் நசிக்கச் செய்கிறார்களோ அப்படிப்பட்ட மஹா புருஷவர்களுக்கு மோக்ஷம் உடனே சித்திக்கும்.

யதாஸாவே ப்ரமுச்யநதே காமாயஸ்ய ஹ்ருதிஸ்திதா
அதமார்த்யோ மருதோ பவத்யத்ர ப்ரஹ்மஸமஸ்நுதே

நினைப்புகள் பிறக்குமிடத்தை கண்டுபிடித்து அந்த நினைப்புகள் பிறந்த இடத்திலேயே ஒடுங்கும்படி எவன் செய்கிறானோ. அப்படிப்பட்டவன் தானே பிரம்மமாகிறான். இதற்குத் திருக்குறள் பிரமாணம் என்ன வென்றால்.

அவாவென்ப வெல்லா வுயிர்க்கு நெஞ்ஞான்றும்
தவாஅப பிறப்பினும் வித்து. (திருக்குறள்)

உபாயஏசுயேவாஸ்த்தி மநஸ்த்தவ்யஸ்ய நிக்ரஹே
மாநஸேப்யு தயேநாஸோ மநோநாஸோ மஹோ தயஹ.
(முருதிகோபநிஷத்)

*நினைப்புகள் பிறக்குமிடம் எதுவென்றால் இதுவரையில் முன்சொல்லிய தொப்புளேயாம் அந்தத்தொப்புளில் இருந்து புறப்படும் நினைப்பின் முதல் எழுத்து எதுவோ அந்த எழுத்தை வெளிவர விடாமல் அடக்கிவிடவேண்டும். அதெப்படியென்றால் சென்னபட்டணம் என்று நினைப்பு உண்டாகபோகிறது, அதில் முதல் எழுத்து எதுவென்றால் 'செ' என்னும் எழுத்து முதல் புறப்படும் பொழுதே அதைப் புறப்படவிடாமல் செய்துவிட வேண்டும் அவ்வாறு செய்தால் அதன் பிறகு வரப்போகும் நினைப்புகள் எதுவும் வரமாட்டா. மனது என்று சொல்லப்பட்ட நினைப்புகளை நிறுத்துவதற்கு இதுவே முக்கிய உபாயமென்று முக்தி கோபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது இதன்றியும். முக்தி முடிவு ஞானவாசிட்டம் பிரமாணம் சொல்லுகிறோம்.*

ஒருபொரு ணினைவு போய்ப்பின்
னொபொரு ணினைவு முன்னாய்

மருவிடை வெளியிலே யுன்
மனமிலை யாகை யாலே

சொருநீ தானாயத் தோன்றும்
துலைமனங் கொண்டங் குண்ணி

லொருதிரி படியுமுண்டா
யொழியுமச் சொரூப மென்றும்

சொரூபம்விட் டகலன் மோகமாம் வேறு
சொல்லிட முன்பின் பில்லை

யொருபொரு ணினைவை யொழித்துமே லப்பா
லொருகபாரு ணினைவுறி லந்த

லிருபொரு ணடுவு ணினைவற விருக்க
மிது சொருப பத்தியல் பிதுதான்

மருவுகற்பனை மான் டசைவில்கற் போலாய
வருநனாச் சுழுத்திநீர் வடிவாம்

உள்ளுரு சங்கற்பத்தினாற் றோன்று
முள்ளமற் றதனினா லொடுங்குந்

தள்ளுறுகாற்றா லெழுந்ததீங் கொழுந்து
சமிப்பதுங் காற்றினாற்போல்

நள்ளுறு பிரம மன்றுநா னென்று
நாடுதன் மனத்துறு பந்த

மெள்ளுறு மிடமும் பிரிவலாப் பொருளே
யாமெனு மழுத்தமே வீடாம்.

ஊக்கமுளதாய் மன மொன்றி னுரைக்கி
லதுவா மாதலினாற்

றாக்கு மனதை மனத்தாலே தள்ளி
யேறித் தளர்வின்றி

யாக்க மழிவில் பதம்விரைவி லடைவாய்
மனதை மனத்தாலே

நீக்கவலதான் தகை மைந்தா நிருப
நிறுத்தி நெறிபோல

நீக்கமில்லாதலெங்கு நிறைந்ததோர் வெளியை யுன்னுள்
தாக்கியே யறிவினாலே தனை மறந் திருந்து பார்வை
நோக்கியே நிஷ்டைகூடி நொடியாரை நிமிஷம் நோக்கிற்
காக்கியே யாளப் போவான் கருணை செய் யிறைமனம்மா.

நான்முக னுக்கிடமானது வூ ரெங்களூர்
நான்மறையுந் துதி செய்யுமூ ரெங்களூர்
தேவுக்குந் தேவா யிருக்குமு ரெங்களூர்
தேவர்க ளன்றித் திரியுமூ ரெங்களூர் 1

தொற்றரவ:கத் துணிந்த வூரெங்களூர்
சோகமே கங்க டுறந்தவூரெங்களூர்
ராற்ற லுடையார்க் கடைத்தவூ ரெங்களூர்
ரானந்தமாயே யிருக்குமூ ரெங்களூர் 2

காமக்குரோதங் கழிந்தவூ ரெங்களூர்
கல்விக்கடலைக் கடந்தவூ ரெங்களூர்
நாமரூபங்க டவிந்தவூ ரெங்களூர்
ஞானமேயா கநவின்றவூ ரெங்களூர் 3

அறிவிட்டறியாமை போக்குமூ ரெங்களூர்
ரந்னிய மொன்றுமி லாதவூ ரெங்களூர்
குறுயிட்டி தென்னவொண் ணாதவூ ரெங்களூர்
கோசங்க ளைந்துங் குலைந்தவூ ரெங்களூர் 4

புத்தி விகற்ப மறுக்குமு ரெங்களூர்
பூரண போதமே யானவூ ரெங்களூர்
வித்தும் விளைவு மிலாதவூ ரெங்களூர்
விண்முதற் பூதம் விளைந்தவூ ரெங்களூர் 5

எட்டுத்திசையு நீறைந்தவூ ரெங்களூர்
ஏகாந்த மாகியிருக்குமூ ரெங்களூர்
தட்டற்ற யோகிக்கடங்குமூ ரெங்களூர்
தன்பாவங்க டவிர்ந்தவூ ரெங்களூர் 6

உலகத்தையெல்லா வெறுக்குமூ ரெங்களூர்
உண்மையொன் றாகியொன்றானவூ ரெங்களூர்
சிலுகற்ற தற்பரமானவூ ரெங்களூர்
சிந்தனைவிட்டுத் தெளிந்தவூ ரெங்களூர் 7

உன்னப்படா வுணா வானவூ ரெங்களூர்
　　உள்ளொளியாகி யிருக்குமூ ரெங்களூர்
கண்ணுக்குக் கணித்தா யிருக்குமூ ரெங்களூர்
　　கள்ளப் புலனைக் கழிந்ததவூ ரெங்களூர் 8

கத்துஞ் சிலுகு மிலாதவூ ரெங்களூர்
　　காண்பானுங் காட்சியு மற்றவூ ரெங்களூர்
சுத்த வெளியிலே தோன்றுமூ ரெங்களூர்
　　சோம்பர்சுகமென் றுணர்ந்தவூ ரெங்களூர் 9

உலகமுழுது முத்திட மெங்களூர்
　　ஒருதேவையு மாற்றிட ரெங்களூர்
கலகா நிலையாகிய தெங்களூர்
　　கருணாகர னார்கழ லெங்களூர் 10

இந்திரயர்க் கள்வர் சேர்விலா தெங்களூர்
　　ரின்ப நற்பயி ரோங்கிய தெங்களூர்
பந்த மற்றவர் பற்றிட மெங்களூர்
　　பார்வை யற்ற பரம்பொரு தெங்களூர் 11

விரகர்க் கதி தூரம் தெங்களூர்
　　விமலா கட்கண்ணி தாகிய தெங்களூர்
துரியத் தொளிர் சோதிய தெங்களூர்
　　துய்ய நற்கரு ணைக்கழ லெங்களூர் 12

தேடி கண்டுகொண்டேன் தேஜோ மய மென்னுளே
　　தேடித் தேடிங் காணொணாத் தேவனைத் (தேடி)

வாடி யளைந்துநான் மறைகட்உ மொட்டாத
　　நாடிசதுர்முக னாதித்த இடந்தனைத் (தேடி)

பாயுமனதினைப் பாய வொட்டாமலே
　　நாயேன்மன மெழும் நல்ல இடந்தனைத் (தேடி)

*நான்முகன் அதாவது, பிரமதேவர் உதித்த இடம் எதுவென்றால் நாபிஸ்தாயனம், என்றால் தொப்புளேயாம். அந்த*

தொப்புளில் இருந்தே எல்லா நினைப்புகளும் உதிக்கின்றன. நினைப்புகளல்லாம் தொப்புளில் உதிக்காவிட்டால். அவ்விடம் ஒன்றுமில்லாத ஆகாய வடிவாமாகிய வெட்டவெளியே. அந்த தொப்புளில் தங்கியிருக்கும். அந்த வெட்டவெளியே கடவுளின் நிஜமாகிய சொரூபமென்று அறியக்கடவீர்களாக, பிரமதேவர் உதித்த நாபிஸ்தானமாகிய ஆகாயவடிவத்தை ருக் யஜுர், சாம, அதர்வணமென்னும் நான்கு வேதங்களும் துதிசெய்கின்றன. மஹாவிஷ்ணுவென்றும் பரமசிவனென்றும் சொல்லப்பட்ட பெரியதேவன் இந்த ஆகாயவடிவமேயாம். இந்த ஆகாய வடிவமாயிருக்கும் கடவுளானவர் தேவதா சரீரம்தரித்து விஷ்ணுரூபமாயும், பரமசிவன் ரூபமாகவும் வருகின்றார். பிறகு மேற்படி தேவதாசரீரத்தை மறைத்து மறுபடியும் ஆகாய ரூபமாகவே இருப்பார். இந்த ஆகாய ரூபத்திற்குப் பரப்பிரம்மமே அல்லா ரூபமாகவும் ஏகநாத ரூபமாகவும் புத்தர் ரூபமாகவும் சரீரமெடுத்து வந்து. மறுபடியும் அந்த சரீரங்களையெல்லாம் மாயமாய் மறைந்து மறுபடியும் ஆகாய வடிவமாகவே எங்கும் நிறைந்திருப்பார். ஒரே ஆகாய வடிவமாயிருக்கும் பரமாத்மாவானவர் என்ன செய்கின்றாரென்றால். எந்தெந்த மதஸதர்கள் எந்தெந்த கடவுள் ரூபமாய் நினைக்கின்றார்களோ அவரார்வகளுக்கெல்லாம் அந்தந்த தேவதா ரூபமாகவே சரீரமெடுத்துவந்து தரிசனம் தந்து மறுபடியும் அந்த சரீரத்தை மாயமாய் மறைத்து, ஆகாய வடிவமாகவேயிருப்பாரென்று மற்றொரு முறையும் சொல்லுகிறோம்.

எல்லோருக்கும் ஒரே கடவுளாயிருக்கும் ஆகாயரூபமாகிய பரப்பிரம்மத்தின் நிஜ சொரூபத்தை அறியாத பாமர ஜனங்களாகிய மூடஜனங்களால் சிலர் சிவனே பெரியவரென்று, சிலர் விஷ்ணுவே பெரிவரென்றும் சொல்லி ஒருவரோடொருவர் வாதாடிக் கொண்டிருப்பார்கள். விஷ்ணு மதஸதர்களில் சிலர் விஷ்ணுவே பெரியவரென்றும் சொல்லி ஒருவரோடொருவர்

வாதாடி கொண்டிருப்பார்கள். விஷ்ணு மதஸ்தர்களில் சிலர் சிவனைப் பார்ப்பதுமில்லை சிவன் கோவிலுக்குப் போவதுமில்லை. இப்படிப்பட்ட மூடஜனங்கள் ரவுரவாதி நரகங்களையே மறுஜன்மத்தில் அடைவார்கள். சிவமதஸ்தவர்களோ அவ்வாறு செய்யாமல் சிவனையும், விஷ்ணுவையும் சமமாய் பாவித்து பூஜை செய்து வருவார்கள். அப்படிப்பட்ட ஆகாய ரூபமாயிருக்கும் கடவுளிடத்தில் சோகமோகமென்பது இராமல், எப்பொழுதும் ஆனந்தமாகவே இருக்கும், சோக மோகமில்லாமல் எங்கும் வெளியாய் நிறைந்திருக்கும் ஊர் எதுவோ அதுவே எங்களது ஊர். இது த்விர எங்களது ஊர் கடப்பையுமல்ல. கடித்கோட்டையுமல்ல பஞ்சேஷ்ட்டியுமல்ல.

காமக் குரோதாதிகளாகிய ஆசாபாசங்களெல்லாம் கழிந்தவூர் எதுவோ அதுவே எங்களது ஊர். இதன்றியும் எல்லா சாஸ்திரங்களையும் வேதங்களையும் வாசித்து அதற்கு அப்பால் கடந்து சென்றால் அவ்விடம் எந்த நாமரூபங்களும் இல்லாமல் வெறும் ஞானசொரூபமாகவே என்றால், வெளி வெளியாகவே இருக்கும் ஊரே எங்களது ஊராம்.

எங்கள் ஊரில் அந்நியமான வஸ்து ஒன்றுமே இல்லை கண்களை மூடி ஒரு குறியை வைத்துப் பார்த்தபோதிலும் அந்த இடத்தில் எந்தக்குறியும் நிற்காமல் பார்த்தபோதிலும் அந்த இடத்தில் எந்தக்குறியும் நிற்காமல் வெறும் வெளியாகவே இருக்கும். அந்த இடத்தில் அன்னமய பிராணமய. மனோமய விஞ்ஞானமய. ஆனந்தமயமென்னும் ஐந்து கோசங்களிலும் எந்த சோகமும் இராமல் வெறும் வெளியாகவே இருக்கும். இதன்றியும் மனத்திற்குத் தோன்றும் எல்லா எண்ணங்களும் மறைந்து சரீரமெடுப்பதத்கு விதையாயிருக்கும் மனம் இறந்த பிறகு பூரணபோதையாய் இருக்கும் ஊர் எதுவோ அதுவே எங்களது

தொப்புளில் இருந்தே எல்லா நினைப்புகளும் உதிக்கின்றன. நினைப்புகளல்லாம் தொப்புளில் உதிக்காவிட்டால். அவ்விடம் ஒன்றுமில்லாத ஆகாய வடிவாமாகிய வெட்டவெளியே. அந்த தொப்புளில் தங்கியிருக்கும். அந்ச வெட்டவெளியே கடவுளின் நிஜமாகிய சொரூபமென்று அறியக்கடவீர்களாக, பிரமதேவர் உதித்த நாபிஸ்தானமாகிய ஆகாயவடிவத்தை ரூக் யஸுர், சாம, அதர்வணமென்னும் நான்கு வேதங்களும் துதிசெய்கின்றன. மஹாவிஷ்ணுவென்றும் பரமசிவனென்றும் சொல்லப்பட்ட பெரியதேவன் இந்த ஆகாயவடிவமேயாம். இந்த ஆகாய வடிவமாயிருக்கும் கடவுளானவர் தேவதா சரீரம்தரித்து விஷ்ணுரூபமாயும், பரமசிவன் ரூபமாகவும் வருகின்றார். பிறகு மேற்படி தேவதாசரீரத்தை மறைத்து மறுபடியும் ஆகாய ரூபமாகவே இருப்பார். இந்த ஆகாய ரூபத்திற்குப் பரப்பிரம்மமே அல்லா ரூபமாகவும் ஏசுநாத ரூபமாகவும் புத்தர் ரூபமாகவும் சரீரமெடுத்து வந்து. மறுபடியும் அந்த சரீரங்களையெல்லாம் மாயமாய் மறைந்து மறுபடியும் ஆகாய வடிவமாகவே எங்கும் நிறைந்திருப்பார். ஒரே ஆகாய வடிவமாயிருக்கும் பரமாத்மாவானவர் என்ன செய்கின்றாரென்றால். எந்தெந்த மதஸதர்கள் எந்தெந்த கடவுள் ரூபமாய் நினைக்கின்றார்களோ அவரர்வகளுக்கெல்லாம் அந்தந்த தேவதா ரூபமாகவே சரீரமெடுத்துவந்து தரிசனம் தந்து மறுபடியும் அந்த சரீரத்தை மாயமாய் மறைத்து, ஆகாய வடிவமாகவேயிருப்பாரென்று மற்றொரு முறையும் சொல்லுகிறோம்.

எல்லோருக்கும் ஒரே கடவுளாயிருக்கும் ஆகாயரூபமாகிய பரப்பிரம்மத்தின் நிஜ சொரூபத்தை அறியாத பாமர ஜனங்களாகிய மூடஜனங்களால் சிலர் சிவனே பெரியவரென்று சிலர் விஷ்ணுவே பெரிவரென்றும் சொல்லி ஒருவரோடொருவர் வாதாடிக் கொண்டிருப்பார்கள். விஷ்ணு மதஸதர்களில் சிலர் விஷ்ணுவே பெரியவரென்றும் சொல்லி ஒருவரோடொருவர்

வாதாடி கொண்டிருப்பார்கள். விஷ்ணு மதஸ்தர்களில் சிலர் சிவனைப் பார்ப்பதுமில்லை சிவன் கோவிலுக்குப் போவதுமில்லை. இப்படிப்பட்ட மூடஜனங்கள் ரவுரவாதி நரகங்களையே மறுஜன்மத்தில் அடைவார்கள். சிவமதஸ்தவர்களோ அவ்வாறு செய்யாமல் சிவனையும், விஷ்ணுவையும் சமமாய் பாவித்து பூஜை செய்து வருவார்கள். அப்படிப்பட்ட ஆகாய ரூபமாயிருக்கும் கடவுளிடத்தில் சோகமோகமென்பது இராமல், எப்பொழுதும் ஆனந்தமாகவே இருக்கும், சோக மோகமில்லாமல் எங்கும் வெளியாய் நிறைந்திருக்கும் ஊர் எதுவோ அதுவே எங்களது ஊர். இது தவிர எங்களது ஊர் கடப்பையுமல்ல. கடித்கோட்டையுமல்ல பஞ்சேஷ்ட்டியுமல்ல.

காமக் குரோதாதிகளாகிய ஆசாபாசங்களெல்லாம் கழிந்தவூர் எதுவோ அதுவே எங்களது ஊர். இதன்றியும் எல்லா சாஸ்திரங்களையும் வேதங்களையும் வாசித்து அதற்கு அப்பால் கடந்து சென்றால் அவ்விடம் எந்த நாமரூபங்களும் இல்லாமல் வெறும் ஞானசொரூபமாகவே என்றால், வெளி வெளியாகவே இருக்கும் ஊரே எங்களது ஊராம்.

எங்கள் ஊரில் அந்நியமான வஸ்து ஒன்றுமே இல்லை கண்களை மூடி ஒரு குறியை வைத்துப் பார்த்தபோதிலும் அந்த இடத்தில் எந்தக்குறியும் நிற்காமல் பார்த்தபோதிலும் அந்த இடத்தில் எந்தக்குறியும் நிற்காமல் வெறும் வெளியாகவே இருக்கும். அந்த இடத்தில் அன்னமய பிராணமய. மனோமய விஞ்ஞானமய. ஆனந்தமயமென்னும் ஐந்து கோசங்களிலும் எந்த சோகமும் இராமல் வெறும் வெளியாகவே இருக்கும். இதன்றியும் மனத்திற்குத் தோன்றும் எல்லா எண்ணங்களும் மறைந்து சரீரமெடுப்பதத்கு விதையாயிருக்கும் மனம் இறந்த பிறகு பூரணபோதையாய் இருக்கும் ஊர் எதுவோ அதுவே எங்களது

ஊராம். கிழக்கு மேற்கு வடக்கு தெற்கு என்கிற எட்டு திக்குகளிலும் நிறைந்த யாதொரு புண்ணிய பாவங்களுமில்லாமல் எகாந்த வெளியாயிருக்குமிடத்தில் யோகிகள் தங்கியிருப்பார்கள். சகல எண்ணங்களையும்விட்டு விட்டு உலகத்தையெல்லாம் மறந்து. உண்மைப் பொருள் எதுவோ அதை அறிந்து கள்ளப் புலன்களெல்லாம் உள்ளொளியா யிருக்குக் ஊர் எதுவோ அதுவே எங்களது ஊர்.

காண்பானும் காக்ஷியும் என்றால் ஓர் விக்கிரத்தைப் பார்க்கப்பட்டவனும் பார்க்கப்படுபவனுமாகிய விக்கிரகம் இவ்விரண்டும் தோன்றாமல் சுத்த வெளியாயிருக்குமிடத்திலேயே எண்ணங்கள் உதித்துக்கொண்டிருக்கும் கண்கள் மூக்கு வாய் செவிகள் சரீரத்தின் மேலிருக்கும் தோல் இந்தப் பஞ்சேந்திரங்களின் சேர்க்கை மனதிற்கு இல்லாவிடில் சகல பந்த பாசங்களும் அற்றிருக்குமிடமாகிய பரம்பொருள் எதுவோ அதுவே எங்களது ஊர்.

இப்படிப்பட்ட பரம்பொருளாயிருக்கும் தேஜோன்மய மாகிய கடவளை நான் என்னுள்ள தேடிக் கண்டு கொண்டேன். எங்கும் நிறைந்து ஏகவெளியாயிருக்கும் பரப்பிரம்மாகிய கடவுளின் பாதத்தை நான் பார்த்து வருகிறேனென்று மஹாவிஷ்ணுவானவர் பிரமதேவரிடம் சொல்லிய பிறகு விஷ்ணுவானவர் மிகவும் கூர்மையுடைய் கோரைகளுடன் பன்றி அவதாரமெடுத்துப் பூமியையும் பூமிக்குள்ளிருக்கும் மலைகளையும் தமது கோரைகளால் தோண்டிக் கொண்டே பாதாள கங்கை வரையில் சென்று மூழ்கி அதன்கீழ் சென்று பார்க்கும் பொழுது அவ்விடத்திலும் வெறும் வெளியாகவே இருப்பதைக் கண்டு அதற்கு அப்பால் போகச் சாத்தியப்படாமல் மறுபடியும் மஹாவிஷ்ணு வானவர் திரும்பி வந்துவிட்டனர் இதன் கருத்து என்னவென்றால் பூமியையும் பூமியின் கீழிருக்கும் மலையையும் அம்மலையின் கீழிருக்கும் பாதாளகங்கையையும்

தோண்டிக்கொண்டே சென்றால் வெளியாகிய ஆகாயமே வந்து கொண்டிருந்தது பாதாளகங்கையின் கீழும் ஆகாயமே இருந்ததது.

எங்கும் நிறைந்த ஏகவெளியாயிருக்கும் பரப்பிரம்மமாகிய கடவுளின் சிரசை நான் பார்த்துவருகிறேனென்று பிரம தேவரானவர் மஹாவிஷ்ணுவினிடம் சொல்லிப் பிறகு அன்னவாகனத்தின் மீதேறி ஆகாயமார்க்கமாய்ச் சென்றார் எவ்வளவு தூரம் மேலே சென்றபோதிலும் போகப்போக வெறும் வெளியாகிய ஆகாயமே இருப்பதைக் கண்டு பிறகு அந்த வெளிக்கு அப்பால் போக சாத்தியபடாமல் மறுபடியும் கீழே இறங்கிவிட்டார். பூமியின் கீழும் ஆகாயம் இருக்கின்றது. பூமிக்கு மேலும் ஆகாயம் இருக்கின்றது. பூமியின் கீழிருக்கும் ஆகாயமானது. பூமியை கீழே இறங்கவிடாமல் தாங்கி மேல்புறமாயிருக்கும் ஆகாயத்தில் ஒரு வஸ்துவை எறிந்தால் அதைக் கீழே தள்ளிவிடும். பூமியின் கீழும் பூமிக்கு மேலும் இருக்கப்பட்ட ஆகாயத்தில் பரப்பிரம்மமாகிய கடவுளானவர் எவ்வாறு அடங்கியிருக்கின்றாரே இனி அதைச் சொல்லப்போகிறோம் கேளுங்கள்.

இதோ நமக்கெதிரில் காணப்படும் ஆகாயத்தில் காற்றானது அடங்கியிருக்கின்றது. அக்காற்று புஷ்பத்திலுள்ள வாசனையை இழுத்துக்கொண்டு சில தூரத்தில் இருக்கபட்ட ஸ்திரீ புருஷர்கள் சமீபமாயிருக்கும் காற்றில் மேற்படி வாசனையைக் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கும் அப்பொழுது அந்த வாசனையுள்ள காற்றை மூக்குத் துவாரங்களின் வழியாய் அவர்கள் உள்ளுக்கிழுத்து இது இன்ன புஷ்ப வாசனை என்று அறிவார்கள் வாசனையானது காற்றுடன் கலந்து ஆகாயத்தில் எப்படி அடங்கியிருக்கின்றதோ அதுபோல் எங்கும் நிறைந்து ஏகவெளியாயிருக்கும் கடவுளானவர் ஆகாயத்திலே அடங்கியிருக் கின்றார். ஆதலால் இந்தக் கடவுள் 'யஸ்யாந்தர்நாதிமதயம்' என்றால்

ஆதி மத்ய அந்நியம் (இட நடுமுனை) இல்லாவரென்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இப்படிப்பட்ட கடவளை மஹாவிஷ்ணுவும். பிரமதேவரும் தேடித்தெடிக் கண்டறியாத தேவனை நான் என்னுள்ளே நாபிஸ்தானத்தில் தேடிக் கண்டுகொண்டேன். மனமானது ஒரு வஸ்துவிலிருந்து மற்றொரு வஸ்துவின் மேல் போய்ப் பாய்ந்து துள்ளிக் குதித்து ஓடிக்கொண்டிருக்கும் மனதை ஓடவிடாமல் அதெப்படியென்றால்.

குரங்கானது ஒரு செடியிலிருக்கும் கிளையிலிருந்து மற்ற எல்லாக் கிளைகளின் மீதும் தாவிற் துள்ளிபாய்ந்து குதித்து ஓடிக்கொண்டேயிருக்கும். அதுபோல், நமது சரீரமென்னும் செடியில் மனது என்னும் குரங்கு இருந்து கொண்டு சற்று நேரம் மனைவியின் மீதும் சற்று நேரம் பிள்ளைகளின்மீதும் குமாரத்திகளின் மீதும் மருகமகன்மீதும், தனதான்யாதி ஐஸ்வாயங்களின் மீதும், தோட்டம் துரவுகளின் மீதும் வியாபாரத்தின் மீதும் நாசிகளின் மீதும் கச்சேரிகளின் மீதும் பாடல். வீணை மிருதங்கதாள துருத்தி முதலாகிய வாத்தியங்களின் மீதும் நாடகங்களின் மீதும் பரஸ்திரீகளின் மீதும் விவகாரங்களின்மீதும் சந்தானங்களின்மீதும் அல்லது வேதாந்த உபந்நியாசங்களின் மீதும், இவ்வாபார எதிலோயே ஓர் விஷயத்தில் மனக்குரங்கானது எப்பொழுதும் ஓடிக்கொண்டேயிருக்கும். அப்படிப்பட்ட மனக்குரங்கை எங்கும் ஓடவிடாமல் நிறுத்தினால் அப்பொழுது வெட்ட வெளியாயிருக்கும் பரப்பிரம்மத்தில் போய்ச் சேர்ந்து ஐக்கியமாய் விடுவான். இவ்வாறு பரப்பிரம்மத்தில் ஐக்கியமாய் விடுவதே மோக்ஷமென்று சொல்லப்படும். நினைப்புகளென்னும் மனதிற்கு சமுத்திர அலையைத் திருஷ்டாந்தமாய்க் காட்ட இனி சொல்லப்போகிறோம்.

## 81. மூச்சுக்கும் மனத்திற்கும் உள்ள பேதங்களைத் தெரிவிக்கின்றார்

காற்றின் சகாயத்தினால் நெருப்பு எப்படி எரிகின்றதோ அதுபோல், நமது மூக்குத்துவாரங்களின் வழியாய் வரும் மூச்சு என்னும் காற்றின் சகாயத்தினால் நினைப்புகள் பிறந்து மறுபடியும் அந்த நினைப்புகள் மூச்சு என்னும் காற்றிலேயே அடங்கிவிடும். மூச்சு நினைப்பு இவ்விரண்டும் ஒன்றையொன்று அனுசரித்திருப்பதனால் மூச்சு நின்றால் மூச்சும் நின்றுவிடும். இந்த நினைப்புகளுக்கே மனதுயென்று சொல்லப்படும். இந்த மனதினுடைய சுபாவகுணங்கள் எவையென்றால். நினைப்பகளேயாம்.

**மனமெங்குண்டு**

**வாயுவு அங்குண்டு**

**மனமெங்கில்லை**

**வாயுவு அங்கில்லை.**

## 82. மனதிற்குச் சமுத்திர அலையையும் பாம்பின் புற்றையும் திருஷ்டாந்தம் காட்டுதல்

சமுத்திரம் எப்படிப்பட்டதென்றால், காற்றில்லா மலிருக்கும் பொழுது யாதொரு சிறிய அலையும் உண்டாகாமல் அசைவற்று நின்றிருக்கும். அவ்வாறு அசைவற நின்றிருக்கும் சமுத்திர ஜலத்தில் எப்பொழுதும் ஓயாமல் அலைகள் பிறந்து பிறந்து நசித்துவிடுவதற்குக் காரணம் எந்த மலைகளும் செடிகளும் இல்லாமல் ஏக வெளியாயிருக்குமிடத்தில் எப்பொழுதும் விசேஷமாய் காற்று வீசிக்கொண்டேயிருக்கும் கடல் ஏக வெளியாயிருப்பதனால் அவ்வொளியிலிருந்து காற்றானது சொல்பவேகமாய் ஒடிவரும்பொழுது சமுத்திர ஜலத்திற்குள் மூன்றங்குல ஆழத்தில் அக்காற்று பிரவேசிக்கும் காற்று ஜலத்திற்குள் பிரவேசித்தவுடன் அசையாமல் நின்றிருந்த சமுத்திர ஜலம் அசைந்து புரண்டு அலையாய் மேல் கிளம்பி அதிலிருந்து குமிழிகளும் சிறிய சிறிய திவலைகளும் நுரைகளும் உடனுக்குடனே பிறந்து பிறந்து அலையாவும் அலையில் அடங்கி அவ்வலை சமுத்திர ஜலத்தில் மறைந்துவிடும் காற்று இன்னும் விசேஷ வேகமாய் வரும் பொழுது அக்காற்று சமுத்திர ஜலத்தில் அரை அடி ஆழம் உள்ளே பிரவேசிக்கும் காற்று ஜலத்திற்கு அரையடி ஆழம் பிரவேசிக்கும் காற்று ஜலத்திற்குள் அரையடி ஆழம் பிரவேசித்தவுடன் முன் அலைகளைவிட இன்னும் அதிகவேகமாய் வரும்பொழுது அக்காற்று முக்காலடி ஆழத்திற்குள் புகும். அப்பொழுது சமுத்திர ஜலம் ஆள் உயரத்திற்குமேல் அலையாய் எழும்பி மலைபோல் புரண்டுவரும் அப்பொழுது அந்த அலையில் விசேஷ குமிழிகள் திவளைகள் நுரைகள் உண்டாய் மறுபடியும் அந்த அலையில் மறைந்து

ஒன்றுங்காணாமல் சமுத்திரஜலத்தில் மறைந்துவிடும். அசையாமலிருந்த சமுத்திரஜலம காற்றினால் அசைந்து. அதிலிருந்து அலைகளும் அவ்மலையிலிருந்து குமிழிகளும் திவலைகளும் நுரைகளும் உண்டாயிற்று. அதுபோல், மூச்சு என்னும் காற்று நாபியில் பிறந்து, மூக்குத் துவாரங்களின் வழியாய் ஓயாமல் வெளிவந்து ஒவ்வொரு மூச்சாய் இறந்து கொண்டே வரும்பொழுது முன் அலையில் கிளம்பிய குமிழிகள் திவலைகள், நுரைகளைப்போன்ற சிறுசிறு உதவிற்றறதும்மாகிய அனேக எண்ணங்கள், நாபியிலிருந்து வெளிவரும் மூச்சு என்னும் காற்றில் எண்ணங்களென்னும் மனது அடிக்கடிப் பிறந்து மறைந்து நசித்துக்கொண்டே வரும் இப்படி காற்றுவமாயிருக்கும் மனதை நிறுத்த உபாயம் சொல்லுகிறோம் கவனியுங்கள்.

ஓர் புற்றிலிருந்து பாம்பானது வெளிவரும் சமயத்தில் அப்பற்றுனிடம் ஒரு புருஷன் நின்றிருந்தால். அவனைப் பாம்பு பார்த்தவுடன் பயந்து வெளிவராமல் புற்றுக்குள் போய்விடும். மறுபடியும் பத்து நிமிஷங்கள் சென்றபிறகு அப்பாம்பு புற்றினிடம் வந்து எட்டிப்பார்க்கும்பொழுது அப்புருஷன் அவ்விடமேயிருந்தால் அப்பாம்பு மறுபடியும் புற்றுக்குள் போய்விடும். அப்புற்றைவிட்டு புருஷன் விலகிப் போகாமலிருந்தால். பாம்பு புற்றுக்குள்ளேயேயிருக்கும் புருஷன் புற்றினிடமிருந்து விலகிப்போய்விட்டால் பாம்பு வெளியே ஓடும். அதுபோல் நாபி புற்றென்றும், மூச்சு பாம்பென்றும் அந்த மூச்சியென்னும் பாம்பில் அனேக எண்ணங்கள், அடிக்கடி உதித்து உதித்து முன்சொல்லிய குமிழிகள் திவலைகள் நுரைகள் அடிக்கடி அலையில் பிறந்து பிறந்து நசிப்பதுபோல் காற்றின்

மனதுயென்னும் அலைகளும், அம்மனதுயென்னும் அலைகளிலிருந்து குமிழிகள் திவலைகள் நுரைகள் போன்ற அனேக சிறிய சிறிய எண்ணங்கள் எப்பொழுதும் பிறந்துகொண்டே இருக்கும். மூச்சு யென்னும் இந்த எண்ணங்களையே மனது என்று சொல்லுவார்கள். இம்மனமானது காற்றின் உருவமாயிருந்தபோதிலும் அதன் குணத்தைச் சொல்லுகின்றோம்.

எந்த எண்ணங்களுமில்லாமல் வெளியாயிருக்கும் நாபியிலிருந்து கடைக்குப் போகவேண்டும் இன்னின்ன வஸ்த்துகளை வாங்கவேண்டுமென்றும், இப்படிப்பட்ட அனேக விதங்களாகிய எண்ணங்கள் ஒன்றின்பின் ஒன்றாய் உதித்து உதித்து அலையிலிருந்து உண்டாகிய குமிழிகள் திவலைகள் நுரைகள் உடனுக்குடனே மறைந்து விடுவதுபோல், ஆயிரக்கணக்காய உதிக்கும் எண்ணங்கள் யாவும் அலைகள் நுரைகள் திவலைகள் குமிழிகள் சமுத்திர ஜலத்தில் மறைந்ததுபோல், மனது என்னும் நீர்க்குமிழிகள் மூச்சு என்னும் அலையில் பிறந்து மறுபடியும் மூச்சு என்னும் அலையிலேயே மறைந்து போகும் அப்பொழுது என்ன செய்யவேண்டுமென்றால், முன்சொல்லிய புற்றுக்குள்ளிருந்த பாம்பானது வெளிவராமல் எப்படி புற்றுக்குள் அடங்கியிருந்ததோ அது போல் நாபியென்னும் புற்றிலிருந்து மூச்சு என்னும் பாம்பு புறப்படும்பொழுது அதிலிருந்து கடைக்குப் போகவேண்டும் இன்னின்ன வஸ்துக்களை வாங்கவேண்டுமென்று எண்ணம் உதிக்கும். அப்பொழுது முதல் எழுத்தாகிய 'க' என்னும் எழுத்து புறப்பட்டவுடனே நில் நீ எங்கே புறப்படுகின்றாய், மனமே புறப்படு பார்ப்போமென்று கண்களைமூடி நாபியினிடம்

அகத்தில் (உள்ளே) வெளி வெளியாய் என்றால் எந்த எழுத்து நாபியிலிருந்து முதல் பிறக்கின்றதோ அவ்வெழுத்தைப் பார்க்க வேண்டும். அப்பொழுது உலகத்தையெல்லாம் ஆளும் சக்ரவர்த்தி அரசர்களையெல்லாம் தம் ஆஞ்ஞைக்குள் நிறுத்துவதுபோல் இந்திரிய வியாபாரங்கள் யாவும் நின்றுவிடும்.

ஆதலால், அசுத்தமாந மனதை என்றால் எல்லாவற்றிலும் ஆசையுடைய மனதை ஆத்ம ஞானத்தினால் நாசம் செய்தவுடன், மனம் வெளிவியவகாரங்களில் ஓடாமல் நின்றுவிடும். மனம் எப்பொழுது நின்றுவிடுகிறதோ, அப்பொழுது "மூச்சு" ஆடாமல் நின்றுவிடும். மூச்சு நின்றவுடன் காதினால் கேட்பது மூக்கினால் வாசனை அறிவது வாயினால் பேசுவது கண்களினால் பார்ப்பது சீதோஷ்ணங்களாகிய காற்றுகளை மேல் தோலால் அறிவது முதலாகிய ஐந்து இந்திரிய வியாகாரங்களிலும் ஒடுங்கித் தான் தானாய்க் கல்பொம்மையைப்போல் சமாதி நிலையில் நின்று பிரம்மானந்தத்தில் என்றால், ஒருவிதமான சுகத்தில் சொக்கியிருப்பான். மூச்சு நாபிஸ்தானத்திலிருந்து பிறக்கிறது: அதாவது தொப்புளிலிருந்து மூச்சு புறப்படுகின்றது. அந்த தொப்புள் இருக்குமிடமே சிதாகாசம் (சித் - சிறிய, ஆகாசம்- வெளி,) என்று சொல்லப்படும். அந்த சிதாகாசம் இதனடியில் மூன்று கைக்குறிப் படங்களால் காட்டி மன்நிலையைச் சொல்லுகின்றோம் என்றால், இடைவிடாமல் எங்கும் நிறைந்து ஏகவெளியாயிருக்கும் ஆகாயத்தை இங்கு சிறிய ஆகாயமாய் கைக்குறியில் காட்டியிருக்கின்றோம். அக்கைக் குறியைக் கண்களை மூடி உங்கள் புருவ மத்தியில் நிறுத்தி, அதை உள்முகமாய மனக்கண்ணால் ஊன்றிப் பார்த்து அரை நிமிஷ நேரம் நிஷ்டைக் கூட்டிப் பாருங்கள். என்றால், எந்த

எண்ணங்களையும் உதிக்கவிடாமல் சும்மாயிருந்து பார்ப்பதே நிஷ்ட்டைக் கூடுதல் என்பதேயாம்.

மேற்சொல்லிய மனதில் சொரூப நிஜமில்லை விஷயங்களையெல்லாம் வசன நடையில் எழுதாமல் கவிகளாகவும் பாடங்களாகவும் சலோகங்களாகவும் சுருதிகளாகவும் பெரியோர்கள் பாடிச்சென்றார்கள் சிலர் மேற்சொல்லிய கவிப்பாடல்கள் முதலானவைகளுக்குச் சாதாரண உரை தெரிந்து கொள்வார்களே யொழிய, உள்ரகஸ்யமான ஆழந்த கருத்துக்களை அறியார்கள்.



## 83. கைக்குறி சிதாகாசத்தில் மனதை லயப்படுத்தும் படம்

எதிரில், முதற்காட்டிய ஒன்றுமில்லாத கைக்குறி சிதாகாச படத்தில், கடைக்குப் போகவேண்டும். இன்னின்ன பதார்த்தங்களை வாங்கவேண்டும் என்று உதிப்பதற்கு முன் 'க'என்னும் எழுத்து முதல் வெளிவரும். அந்த 'க' என்னும் எழுத்தை இரண்டாவது கைக்குறி சிதாகாச படம் 'க' என்னும் எழுத்துவெளி புறப்படும்பொழுது 'நில்' நீ எங்கே புறப்பாடுகின்றாய் மனமே! புறப்படு பார்ப்போம் என்று கண்களை மூடித் தொப்புளினிடம் மனக்கண்ணால் கைக்குறி படத்தில் தோன்றும் 'க' என்னும் எழுத்தை நோக்கிப்பார்த்துக் கொண்டேயிருந்தால், அவ்வொழுத்து உதித்தவிடத்திலே ஒடுங்கும். கண்ணில் இரவில் தீபப்பிரகாசம் இல்லாவிட்டால் கண்கள் தானாகவே ஒரு பொருளைக் காணமாட்டா. விளக்கொளி சகாயத் தினாலாகிலும் சூரியனது ஒளி சகாயத் தினாலகிலும் கண்ணானது காணும். கண்ணொளி, விளக்கோளி அல்லது சூரிய ஒளியோடு மனம் காணும் அதுபோல் மேல்காட்டிய சிதாகாச ஒளியில் மனக் கண்ணும் ஒளியும் இவ்விரண்டும் கலந்து தனது நிஜ சொரூபத்தை அறிந்து தான் தானாய் இறந்துவிடும். இதறக்கு சிவப்பிரகாசமும் வாசிட்டமும் பிரமாணம்.



கண்ணொளி விளக்களித்துக் காட்டிடு மென்னின் முன்னங்
கண்ணொளி யொன்று மின்றாம் விளக்கொளி கலந்த வற்றைக்
கண்ணொளி யகல நின்றே கண்டிடும் வேறு காணா
கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும் கருத்தொன்றன்றே

அறிபவத் தரசை யறிவது தானே
யவித்தையு மனமு மாண்டதுலாம்
பொறிபயிலாசை துன்பமா நிராசை
புகலரு முத்தியா மின்பம்
பிறிவரு தனது முயற்சியா லுண்டாம்
பேதைய ருண்டேனு மவித்தை
செறிதரு பொய்யாய் நாமமாத் திரமாய்ச்
சித்தெனத் தேர்ந்திடி விலதாம்.

*மனதிற்கு எது தோன்றுகின்றதோ அத்தோற்றத்தின் இச்சை (ஆசை) நீங்கினால் அதுவே அஞ்ஞானமும் மனமும் நசிந்ததாகும். என்றால் அதுவே அஞ்ஞானமும் மனமும் நசிந்ததாகும், என்றால், மனமிறந்ததாகும். சகல விஷயங்களில் ஓடிக்கொண்டிருந்த மனத்திற்குத் துன்பம் அதிகமாய் உண்டாகும். டதை ஓடவிடாமல் நிறுத்தினால் துன்பம் நீங்கும்.*

*உங்கள் எல்லோருக்கும் எண்ணங்கள் உதிப்பதற்கு முன் எந்த எழுத்து முதல் புறப்படுகின்றதோ. அந்த எழுத்தை உற்று நோக்குவீராயின். அவ்வெழுத்து உருவம் மறைந்து மூன்றாவது கைக்குறி படத்தில் காட்டிய ஆகாய வடிவம் தோன்றி, பிறகு அவ்வாகாய வடிவத்திலேயே மனமும், பார்வையும் அறிந்து பெரிய வெளியாய் விடும்.*

மெத்துகின்ற வாதனையை விட்டான் மேலா நலமுளதாஞ்
சத்தினசத்தி னிடைநின்று பைதன்னியத்தியற் சாட்டியத்தி
லொத்து நடுநின் தலைவதுவே யுள்ளமாரு மில்வுள்ளஞ்
சித்தில முயல்வாற் சித்தாகுஞ் செட்த்தின் முயலவாற்செட்மாகும்
(வாசிட்டம்)

அற்பமாகிய இஷ்டவஸ்துவை விட்டொழிந்தால் விசேஷ இன்பமுண்டாகும். சாஸ்வதமாய் இருக்கப் பட்ட பிரம்மத்திற்கும் இல்லாததாகிய ஜகத்திற்கு மத்தியில் நின்று, எப்பொழுதும் கானல் நீர்போல் சலித்துக்கொண்டிருப்பதே மனம். இம்மனம் இறந்தால் ஞானமாகும். இறக்கா விட்டால், உலகமாகும் மனம் இறந்தவுடன், கேட்பது வாசனையறிவது பேசுவது பார்ப்பது சரீரத்தின்மேல் வீசும் குளிர் உஷ்ணங்களை அறிவது முதலாகிய இந்திரியசேஷ்டைகள் நின்றுவிடும். ஆதலால், இந்த ரகசியம் தெரிந்து கொண்டவர்கள். எந்த வேதாந்த சாஸ்திரங்களை வாசிக்கவும் வேண்டாம்; மனோ ஓட்டத்தை நிறுத்தி எப்போதும் சும்மாயிருந்து, அதனால் உண்டாகும் சுகத்தையே அனுபவித்து வாருங்கள் சாதனம் செய்துவரப்பட்டவர்களின் மனோ வோட்டம் ஓடும் மெயில் இன்ஜினுக்கு (யந்திரத்திற்கு) ஸ்டீம் பிரேக்கு (தடை) போட்டவுடன் அப்பிரேக்கானது (தடையானது) ஓடும் சக்கரங்களையெல்லாம் இடுக்கி கெட்டியாய்ப் பிடித்து வண்டியை நிறுத்திவிடுகின்றதோ, அதுபோல் மனோ வோட்டத்தின் வேகமெல்லாம் 'டக்கென்று' நின்றுவிடும்.

ஐயா! இதில் நீளமாய்க் காட்டியிருக்கும் கைக்குறி படத்தை நாபியினிடம் நிறுத்தி மனக்கண்ணால் பார்க் அக்குறி நாபியில் நிற்காவிட்டால், மற்றொரு கைக்குறி போல் சாதனம் செய்யுங்கள். உங்கள் மனம் எங்கும் வெளியில் ஓடாமல் நின்றுவிடும்.



## 84. கைக்குறி சிதாகாசத்தை புருவமத்தியில் நிறுத்தி மனதை லயப்படுத்த மற்றொரு உபதேசம்



கண்களை மூடி மேல்காட்டியிருக்கும் கைக்குறி படத்தைப் புருவமத்தியில் வைத்து மனதினால் நினைத்து மனக்கண்ணால் பாருங்கள். அப்படிப் பார்க்கும்பொழுது அக்குறி உங்கள் மனத்திற்குப் புருவமத்தியில் நன்றாய்ப் புலப்படும் அப்பொழுது, மனதை அங்கும்மிங்கும் ஓடவிடாமல் கைக்குறி வாரத்தில் திருஷ்ட்டியை நிறுத்திப் பாருங்கள் இவ்வாறு சில நிமிஷங்கள் எதையும் நினையாமல் கைக்குறியிலுள்ள ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருப்பீர்களாகில் பெருவிரல் ஆள்காட்டி விரல்களாளெல்லாம் மறைத்துவிடும். விரல்கள் மறைந்தவுடன் உங்களை நீங்கள் மறந்துவிடுவீர்கள். இவ்வாறு மறைந்துவிடுவதே நினைவில் சுழுப்தியென்றும், தூங்காமற் தூங்கிச் சுகம் பெறுவதென்றும் சொல்லப்படும். அச்சமயங்களில் மாத்திரம் வாயுவம்ச மாயிருக்கும் மனதை உபயோகப்படுத்தி. எல்லாக் காரியங்களையும் செய்து முடித்தவுடன் மேற்படி மனது என்னும் வாயுவை வேறு எந்த விஷயங்களில் ஓடவிடாமல் யோக பலத்தினால் நிறுத்திக் கொண்டு வருகிறபடியால், உங்கள் மனோவாட்டத்தை நிறுத்த மிகவும் சுலபமான வழியை இங்கு உங்களுக்குச் சொன்னோம். எப்பொழுது உங்கள் மனோ ஓட்டம் நின்றுவிடுகின்றதோ அப்பொழுதே பிரம்மானந்த சுகத்தைத் தப்பாமல் அடைவீர்கள்.

## 85. மனக்குரங்கை ஈஸ்வரனிடத்தில் அர்ப்பணம் செய்தல்

"பெண்ணாகி வந்த தொரு மாயப்பியாசம் பிடித்திட்டென்னைக
கண்ணால் வெருட்டி முலையால் மயக்கிக் கடிதடத்துப்
புண்ணாக குழியிடைத் தள்ளி யென்போதப் பொருள்பறிக்க
எண்ணா துணைமறந்தே னிறைவா கச்சி யோகம்பனே

[பட்டினத்தடிகள்]

உள்ளமோ ஒன்றில் நில்லாது என்செய்தேன் தீவினையேன்
பத்திமைக் கன்புடையே னாவதே பணியாய் எந்தாய்
தெள்ளியீர் தேவர்க்கெல்லாம் தேவராய்உலகங்கொண்ட
அத்தநின் னடிமை யல்லால் யாதுமொன் றறிகிலனே
இளப்பிளை இயக்கம் நீக்கி இருந்து முன் இமையைக்கூட்டி
அளப்பிலைம் புலனடக்கி அன்பவர் கண்ணே வைத்து
துளக்கமில் சிந்தைசெய்து தோன்றலும் சுடர்விட்டாங்கே
விளக்கினை விதியின் காண்பார் மெய்யம்மையைக் காண்கிறபாரே

[திருக்குறுந்தாண்டகம்]

கொங்கைசிறு வரையென்னும் பொதும்பினில் வீழ்ந்து வழுக்கி
அங்கோர் முழையினில் புக்கிட்டமுந்திக்கிடந்துழல்வேளை
வங்கக் கடல்வண்ண னம்மாள் வில்வின்னையா யினமாற்றி
பங்கப் படா வணஞ்செய்தான் பண்டான்றுபட்டினங்காப்பே.

[பெரியாழ்வார் திருமொழி]

ஆயிழை யார்கொங்கை தங்கும் அக்காத லளற்றமுந்தி
மாயுமென் னாவியை வந்தெடுத் தானின்று மாமலராள்
நாயக னெல்லா வுயிர்கட்கும் நாத னரங்கமெனும்
தூயவன் தீதி லிராமா நுசன் தொல் வருள் சுரந்தெ

[இராமனுஜ நூற்றந்தாதி]

எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கப்பட்டவனே பிரம கபாலத்தை ஹஸ்தத்தில் (கையில்) வைத்துக் கொண்டு பிக்ஷை எடுக்கப்பட்டவனே! என் மனது என்னும் குரங்கானது. எப்பொழுதும் ஸ்திரீகளின் ஸ்தனங்களென்னும் பர்வதத்தின்மீது நாட்யம் (நடனம்) செய்துகொண்டு தாராபுத்ராதிகளென்னும் (பார்யாள் புத்ரர்களென்னும்) கிளைகளின்மீதும் திரிந்து மோகமென்னும் ஆரண்ணியத்தில் (காட்டில்) அலைந்து கொண்டிருக்கின்றது. இவ்விதமாய் தன் இஷ்டம்போல் அலைந்து கொண்டிருக்கும் என்மனது என்னும் குரங்கை திடமாய் உன் பக்தி என்னும் கயிற்றால் கட்டி. அதை உன் சுவாதீனம் செய்து கொண்டால் அதனால் பிக்ஷையெடுக்க உனக்கும் நலமாயிருக்கும். அஃது என்னைவிட்டு ஒழிவதனால் நானும் நல்ல கதியை அடைவேன். ஆதலால் அடியேன்மீது அனுக்கிரஹம் வைத்து, என் மனது என்னும் குரங்கை சுவாதீனம் செய்து கொண்டு என்னை பந்தத்திலிருந்து விமுக்தனாகச் செய்யக்கடவாய்.

மேற்சொல்லியதுபோல் மனம் என்னும் குரங்கை ஈஸ்வரனிடத்தில் அர்ப்பணம் செய்த மாத்திரத்தில் அந்த ஈஸ்வரனே நம்முடைய மனக்கடலில் வசிக்கத்தக்க பாக்கியத்தை நாம் அடைவோம். இதற்கு பெரியாழ்வார் திருமொழிப் பிரமாணம்.

"பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டோடி வந்தென்
மனக்கடலில் வாழவல் மாய மணாள நம்பி
தனிக்கடலே தனிச்சுடரே தனியுலகே என்றென்று
உனக்கிடமாயிருக்க என்னை உனக்குரித் தாக்கினையே"

"பொன்னைக்கொண்டு உரைகல் மீதே
　　நிறமெழ வுரைத்தாற்போல்
உன்னைக் கொண்டேன் நாவகம்பால்
　　மாற்றின்றி உரைத்துக் கொண்டேன்
உன்னைக் கொண்டு என்னுள் வைத்தேன்
　　என்னையும் உன்னிவிட்டேன்
என்னப்பா! என்னிருடி கோசா!
　　என்னுயிர்க் காவலனே."

என்னும் பெரியாழ்வார் திருமழிசையாழ்வார் சொல்லிய வாக்யரீதியாய் ஒவ்வொருவரும் தங்களால் கூடியவரையில் மனம் என்னும் துஷ்டக்குரங்கைப் பலவகையில் ஓடித்திரியாமல் நிறுத்துவதற்காகப் பரமாத்மாவையே சதா சிந்தித்துத் தியானித்து வந்தால். அப்பரமனருள் நமக்குக் கிடைத்து அதனால் அக்கொடிய மனக்குரங்கு வசப்பட்டு பரமாத்மாவே நம்முள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு வசிப்பார், அதனால் நாம் சகல பற்றுகளையும் விட்டு நற்கதியடைவோம், ஆதலால்.

அன்பர்களே! இரவில் சயனிக்கும்பொழுது ஈஸ்வரனைத் துதிசெய்து நாள்தோறும் செய்துவரும் புண்ணிய பாவங்களையெல்லாம் அவருக்கு அர்ப்பணம் செய்து சயனித்து வந்தால் பந்தத்திலிருந்து விமுக்தாகளாகலாம். அதை இதனடியில் உபதேசித்திருக்கின்றோம்; கவனமாய்ச் சிரத்தையுடன் வாசித்து அந்த உபதேசத்தையே குருவாக்காய் நினைத்து ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களும் படுப்பதற்கு முன் எல்லாக்காரியங்களையும் முடித்துக்கொண்டு படுக்கையில் உட்கார்ந்து கண்களை மூடி இருகைகளையும் குவித்து அடியில் சொல்வதுபோல் ஈஸ்வரனைத் துதி செய்து பிரதிதினம் படுத்தால் அன்றன்று செய்துவரும் பாவகர்ங்களையெல்லாம் அன்றன்றே ஒழிந்து நற்கதி அடைவார்கள்.

## 86. இரவில் ஈஸ்வரனைத் துதிசெய்து சயனித்தல்

ஓ சகோதரி! சகோதரர்களே! உலகத்திலுள்ள மனிதர்களெல்லோரும், காலை முதல் மாலை வரையில் யோகங்களோ செய்து, இரவில் போஜனமுண்டு சில நேரம் வீண் வார்த்தைகளாடி எந்த ஈஸ்வரத் தியானமும் இல்லாமல் சயனித்து அவர்களின் மனதை தேவையில்லா விஷயங்களில் செலுத்திக்கொண்டே தூங்கிவிடுகின்றார்கள். இவ்விதமாய் அனேக எண்ணங்களை எண்ணிக்கொண்டு தூங்குவதனால், அவர்களுக்கு அநேக வித கெட்ட சொப்பனங்கள் வந்து கொண்டேயிருக்கும் ஆதலால்.

"பண்டை நாளாலே நினதிரு வருளும்
பங்கயத்தாள திரு வருளும்
கொண்டுநின் கோயில் சீப்த்துப்பல் படிகால்
குடிகுடி வழிவந் தாடசெய்யும்
தொண்டரோக் கருளிச் சோதிவாய் திறந்துன்
தாமரைக் கண்களால் நோக்காய்
தொண்டிரைப் பொருநல தண்பணை ருழந்த
திருப்புளிங் குடிக்கிடந் தானே."

"மனமே யுன்னை வல்வினையே னிரந்து
கவனமே சொல்லின னிது சோரேல் கண்டாய்
புனமேவிய பூந்தண்டுழா யலங்கல்
இனிமேது மிலானை யடை வதுவே."

என்னும் திருவாய்மொழி பிரமாணரீதியாய், இதை வாசிக்கும் அன்பர் யாவரும் இரவு எல்லா வேலைகளையும் முடித்துக் கொண்டு, சயனிப்பதற்காகப் படுக்கையில் உட்கார்ந்து, கூன் வளையாமல் நேராய் நிமிர்ந்து சித்திரப்பதுமைபோலிருந்து,

வாய் கண்களை மூடி, இருகைகளையும் குவித்து, ஈஸ்வரனை துதிசெய்து சயனிக்க வேண்டும்.

அதாவது "எங்கும் பரிபூரணமாய் நிறைந்து எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளிலும் ஸாக்ஷி சொரூபமாய் ஜீவாத்மாவாய் வியாபித்திருக்கும் ஓ பரப்பிரம்மமே! யான் இன்று காலை தூங்கி எழுந்தது முதல் மறுபடியும் சயனிக்க இப்பொழுது படுக்கையில் உட்காரும் வரையில் அடியேன் கால்களாலும் கைகளாலும் மனதனாலுங் வாக்கினாலும், புத்தியினாலும் தெரிந்தும் தெரியாமலும் செய்த புண்ய பாவங்களையெல்லாம் உனக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். நீ என்னுள்ளே ரகஸ்யமாயும் சாக்ஷிசொரூபனாயும் இருதயக்கமலத்தில் நீ வசித்துக் கொண்டிருப்பதனால் நான் இன்றிரவு தூங்கி எழுந்தது முதல் மறுபடியும் நாளைய இரவு படுப்பதற்காக படுக்கையில் உட்காரும்வரையில் என்மனந்த பாபகாரியங்களைச் செய்யவிடாமலும் பொய் சொல்லாமலும். சத்தியமாய் இருந்து காரியங்களிலேயே நடக்கும்படி உன் கருணை என்னும் சாவியை' என் மனத்திற்கு கொடுத்துத் திருப்பக்கடவாய். ஓ பரந்தாமா! என்னை ரக்ஷியும் தேவா!

என்று சிலநேரம் கடவுளை மனதினால் துதிசெய்து முடிந்தபின் கண்களைத் திறவாமாலேயே இடகைப்புறமாய் ஒஞ்சரித்துப்படுத்து. மூச்சில் 'ஸோ' என்னும் மந்திரத்தைச் சேர்த்து உள்ளுக்கிழுத்து, மறுபடியம் மூச்சு வெளிவிடும்பொழுது அந்த மூச்சுடன் 'ஹம்' என்னும் மந்திரம் சேர்த்து வெளிவிடவேண்டும். இவ்வாறு மேற்சொல்லிய 'ஸோஹம்' என்னும் இரண்டு மந்திரங்களையும் மேற்சொல்லியது போல் ஒவ்வொரு மூச்சிலும் சேர்த்து ஜபம் செய்துகொண்டேயிருந்தால் அப்பொழுது உங்களுக்கு உடனே நல்ல தூக்கம் வந்துவிடும் இதுபோல் நீங்கள் தினந்தோறும் இரவில் படுக்கும் பொழுது மறவாமல் செய்துவாருங்கள். அப்பொழுது இதன் அனுபவம்

உங்களுக்குப் பிரத்தியக்ஷ திருஷ்ட்டாநதமாய்த் தெரியவரும். இவ்வாறாக தூங்கப் பட்டவர்களுக்கு எந்த கெட்டக் கனவுகளும் உண்டாகவேமாட்டா. ஒருவேளைகனவு உண்டானால், அது நல்ல கனவாக இருக்கும், முன்சொல்லிய விஷயங்கள் யாவையும் பாடம் செய்து இரவில் சயனிக்கப்படுக்கையில் உட்கார்ந்து கண்களையும் வாயையும்மூடி இருகைகளையும் குவித்து நமஸ்கரித்துக் கொண்டே பிரதிதினம் கடவுளை மனதினால் நமஸ்கரித்துக் கொண்டுவர வேண்டும்.

ஐயா, நீங்கள் மனதை நிறுத்தவேண்டுமென்று மேற்சொல்லியதுபோல் உட்கார்ந்தால், அந்த சமயத்தில் தான் இல்லாத எண்ணங்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாய் அனேகனேக எண்ணங்கள் வந்துக் கொண்டேயிருக்கும். இந்த எண்ணங்களைப் பிராணாயாமம் ஒன்று தான் நாசப்படுத்துமே யொழிய, மற்ற விக்கிரக பூஜை மந்திர ஜயம், யஞ்ஞயாகாதிகள் எதுவும் மனதை நாசம் செய்யமாட்டா. இந்தப் பிராணாயாமம் செய்வது மிகவும் கஷ்ட்டம். இதற்குக் கீழ்படி ராஜயோகம். இந்த ராஜயோகம் ஒவ்வொரு குடும்பத்திலுள்ள ஸ்திரீ புருஷர்கள் எல்லோரும் அப்பியாசம் செய்து வரலாம்.

பாரப்பா சீஷர்களை யழைப்பான் பாவி
பணம்பறிக்க வுபதேசம் பகர்வோ மென்பான்
ஆரப்பா பிரம்மநிலை காட்டா மற்றான்
ஆகாசப் பொய்களையும் வன்தான் சொல்வான்

நேரப்பா சீஷனுக்கு பாவ மாச்சு
நிஷ்டை சொல்லுங் குருக்களுக்குத் தோஷமாச்சு
வீரப்பா அடங்குகின்ற இடத்தைப் பாரான்
விதிபோல முடிந்ததென்று விளம்பு வானே.

## 87. ஏழு சக்கரங்களிலும் மூச்சு நடந்து நம்முடைய ஆயுள்பாகம் காட்டுதல்

நம்முடைய ஆயுள்பாகம் இவ்வளவுதானென்று சொல்ல சாத்தியப்படமாட்டா ஏனென்றால், நாம் வெளியில்விட்ட மூச்சை மறுபடியும் உள்ளுக்கிழுப்போமோ இல்லையோ என்கிற நிச்சயமில்லை வெளியில் விட்ட மூச்சை உள்ளுக்கிழுத்துக் கொண்டும். மறுபடியும் வெளியில்விட்ட மூச்சை உள்ளுக்கிழுக்காவிட்டால் செத்துப்போனனென்று சொல்லுவார்கள். செத்துபோனாண் என்பதின் கருத்து என்னவென்றால் மூக்குத் துவாரங்களில் ஆடிக்கொண்டிருந்த மூச்சு என்பதும் சத்து, சரீரத்தைவிட்டுக் கிளம்பிப் போனபடியால் சத்து எண்ணும் சப்தத்திலிருந்து செத்து என்னும் வாக்கியமுண்டாயிற்று. ஆதலால் செத்து போனானென்று சொல்லுவார்கள். இதன்றியும் அந்தச் சரீரத்தில் குடியிருந்த எல்லா ஆசாபாசங்களும் அந்தச்சத்துடன் கூடவே சேர்ந்து மற்றொரு சரீரத்தில் போய்ச்புகுகின்றன. ஆதலால், நாம் வெளியீடும் மூச்சு இது தான் கடைசியாய் வரும் மூச்சு என்று நினைத்துக் கொள்ள வேண்டுமே யொழிய அந்த மூச்சு மறுபடியும் மூக்கில் ஏறுகிறதென்று நிச்சயிக்கலாகாது. இதற்கு நெஞ்சரி விளக்கம் பிரமாணம்.

இறந்திடு மிருபத்தோரா யிரத்தறு நூறுபேரும்
இறந்திடு மிக் காயம்போனா லீசனை காண்பதென்னாள்
மறந்திடா தறிவானமூல வாசிஸய மேலேயேற்றச்
சிறந்ததற் பரத்துநாக லிங்கரைத் தரிசி நெஞ்சே.

தினந்தோறும் நிமிஷத்திற்கு 15 மூச்சுகளாய் நடந்து நாள் ஒன்றிற்கு இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் இருபத்து ஓராயிரத்து அறுநூறு மூச்சுகள் மூக்குத் துவாரங்களின் வழியாய் நடந்து ஒவ்வொரு மூச்சாய் மூக்கிலிருந்து கீழேயிறங்கி

இறந்துகொண்டே வந்தால் ஈசனைக் காண்பதென்னாள என்று சொல்லப் பட்டிருக்கின்றது. ஆதலால், நமது சரீரத்திற்குள் ஏழுசக்கரங்கள் இருக்கின்றன. அந்த சக்கரங்களிலும் ஏழு தேவதைகள் இருக்கின்றார்கள். அந்த ஏழு தேவதை பசியை, நமது சரீரத்திலிருக்கும் இருபத்து ஒராயிரத்து அறுநூறு மூச்சுகளும் தினந்தோறும் தணித்து கொண்டு வருகின்றன.

ப்ரணஷ்ட்ட ஸ்வாஸ்நிஸ்வாஸ ப்ரத்வம்ஸ விஷயகரஹ
நிஸ்சேஷ்ட்டோ நிர்விகாரஸ்ச்ச லயோஜயதி யோகிநாம்

ஜீவராசிகள் உள்ளுக்கிழுக்கும் மூச்சுக்கு நிஸ்வாஸமென்றும், வெளியில்விடும் மூச்சுக்கு உஸ் வாஸமென்றும் சொல்லப்படும். இந்த நிஸ்வாஸ உஸ்வாஸங்கள் இரண்டும் யோகபலத்தினால் எவர்களுக்கு நின்று விடுகிறதோ அப்படிப்பட்டவர்களுக்கு பேசுவது கேட்கமாட்டா அன்றியும் மனம், புத்தி, சித்த, அஹிங்காரங்களின் வியாபாரங்கள் எதுவும் இருக்கவேமாட்டா; இவ்வாறாக இருப்பதே லயமென்று சொல்லப்படும். இந்த லயம் என்பது யோகாப்பியாசம் செய்து சித்தியடைந்தவர்களுக்கு சித்திக்குமே யொழிய மற்றவர்களுக்கு சித்தியாகமாட்டா. இந்த நிஸ்வாஸ உஸ்வாஸங்களுக்கு 'ஹம்ஸ' என்ற சுருதி சொல்லுகிறது இந்த 'ஹம்ஸ' என்னும் நிஸ்வாஸ உஸ்வாஸங்கள் ஒவ்வொரு ஜீவராசிகளிலும் இருக்கப்பட்ட மூலாதார சுவாதிஷ்ட்டான மணிபூரக அநாஹதவிசுத்த ஆஞ்ஞேய ஸஹஸ்ராரமென்னும் ஏழு சக்கரங்களிலும் திரிந்துகொண்டு அந்தந்த ஜீவராசிகளின் ஆயுள் பிரமாணத்தைக் காட்டிக்கொண்டு வருகிறது. மேற்சொல்லிய மூலாதார முதலாகிய ஏழுசக்கரங்களுமுள்ள படத்தில் காட்டப் பட்டிருக்கிறது.



ஸஹஸ்ராரத்திற்கு
அதி தேவதை பரமாத்மா.

ஆக்கி நேயத்திற்க
அதிதேவதை ஜீவன்.

விசுவாசதிற்கு அதி
தேவதை மகேஸ்வரன்.

அநாஹத்திற்கு அதி
தேவதை ரூத்திரன்

ம ணி பூ ர த் தி ற் கு
அதிதேவதை விஷ்ணு.

சுவாதிஷ்ட்டாணத்திற்கு
அதி (தேவதை பிரம்மன்.

மூலாதாரத்திற்கு அதி
தேவதைகணபதி.

## ஏழு சக்கரங்களிலும் சுவாசம் நடப்பது

அந்த ஏழு சக்கரங்களிலும் ஏழு தேவதைகளிருக்கின்றார்கள். அந்தந்த சக்கரங்களிருக்கும் தேவதைகளினுடைய பசியை தணிக்கச் செய்வதற்காக தினந்தோறும் இருபத்து ஓராயிரத்து அறுநூறு முறை மூச்சு திரிந்துக்கொண்டு அந்ததந்த தேவதைகளினுடைய பசியை ஆற்றிக்கொண்டும். அதன் மூலமாய் நமது ஆயுள் பாகத்தை மூக்குத்துவாரங்களில் நடக்கும் மூச்சானது காட்டிக்கொண்டும் வருகிறது இதற்குச் சுருதிப் பிரமாணம்.

ஷட்ஸதம் கணநாதஸ்ய ஷட்ஸஹஸ்ரம் ப்ரஜாபதேஹே
ஷட்ஸஹஸ்ரம் மஹாவிஷ்ணோ ஷட்ஸஹஸ்ரம் மஹேஸிதுஸ
ஸஹஸ்ரம் ஜீவரூபஸ்ய ஸஹஸ்ரம் ஈஸ்வராதம்நத:
ஸஹஸநுரமநு குருரூபஸ்ய ஏகம்புத்யா ப்ரகல்பயேத்



## 88. மூலாதார சக்கரத்திற்குச் சுருதி

ஆதாரே ப்ரமமசக்ரம் த்ரிதாவர்த்தம் பக மண்டலா காரம்
தத்ரமூலகந்தஹ தத்ரஸக்திம் பாவநாகாரம் த்யாயேத்
தத்ரைவ ஸர்வகாமேஸ்வரி பீடங் ஸர்வகாம பலப்ரதம் பவதி.

*1. குதஸ்தானம் :* இதற்கு மூலாதாரமென்று சொல்லப் படும். மூலாதாரமென்றால், சரீரத்திற்கு முதல் ஆதாரமா யிருக்கப்பட்டது. ஆதலால் இதற்கு மூலதாரமென்று பெயர் உண்டாயிற்று. இந்த மூலாதாரம் முதல் பிரம்ம கபாலம் வரையில் ஏழு சக்கரங்கள் இருக்கின்றன. இந்த ஏழு சக்கரங்களிலும் ஏழு தேவதைகள் நிவசித்துக் கொண்டிருக் கிறார்கள். இவ்வேழு தேவதைகளிலும் முதல் தேவதை யாரென்றால் கணபதி, கணபதியென்றால். மூலாதாராதி ஏழு சக்கரங்களிலும் இருக்கப்பட்ட 'கணங்க'ளுக்கெல்லாம் அதிபதி என்றால் பெரியவர்; ஆதலால், அவருக்குக் 'கணபதி' என்னும் பெயருண்டாயிற்று; இதன்றியும் 'விக்னேஸ்வரர்' என்றும் சொல்வதுண்டு. விக்னேஸ்வர ரென்றால் எந்தக் காரியங்களுக்கும் விக்நமாகாமலிருக்கும் படி செய்யப்பட்டவ ராதலால், அவரை 'விக்நேஸ்வர' ரென்று சொல்ல வேண்டியதாய் நேரிட்டது. அன்றியும், விநாயகர் என்றும் சொல்வார்கள். விநாயகரென்றால் எல்லா வினைகளை (நோய்களை)யும் தீர்க்கப்பட்ட வராதலால் விநாயகரென்னும் பெருண்டாயிற்று. எல்லோ ருக்கும் பெரியவராயும், எந்தக் காரியங்களும் விக்நமாகாம லிருக்கும்படியாயும் செய்யப்பட்டவராதலால் சரீரத்திற்கு முதல் ஆதாரமாயிருக்கப்பட்டது குதம், ஆதலால், அந்த குதத்தினிடம் விக்நேஸ்வரரை முதல் தேவதையாய் நிறுத்தினார்.

இதை அனுசரித்தே உலகத்திலுள்ள ஜனங்கள் எந்த வேலை செய்தபோதிலும் முதல் விக்நேஸ்வரரைப் பூஜித்து அதன்பிறகு அக்காரியத்தைப் பிராரம்பித்தால் 'விக்ந'மில் லாமல் நடைபெறும் என்று முன்னுள்ள பெரியோர்கள் ஏற்பாடுகள் செய்து சென்றார்கள். அதுபோல் நாளது வரையிலும் ஒரு காரிய பிராரம்பத்தில் முதல் விக்நேஸ்வரர் பூஜை செய்தபிறகு அவ்வேலையை ஆரம்பிப்பார்கள். விக்நேஸ்வரர் சிவமஸ்தரென்றும் இவரைப் பூஜிக்கலாகா தென்றும் விஷ்ணுமஸ்தர்களுக்குக் குரோதபுத்தி இருக்கின்றன. அவ்வாறிருந்தபோதிலும் அந்த விக்நேஸ்வரருக்குத் தும்பிக்கை யாழ்வாரென்று விஷ்ணு மபிஸ்தர்கள் பெயர் வைத்து பூஜித்து வருகின்றார்கள். இந்த விக்நேஸ்வரர் சிவமதஸ்தரு மல்ல விஷ்ணு மதஸ்தருமல்ல. எல்லா மதஸ்தர்களின் கடவுளுக்குப் பொதுவாயிருக்கப்பட்டவராதலால் இந்த விக்நேஸ்வரரைக் குதத்தினிடம் துவாரபாலகரைப்போல் காவலாய் வைத்தார்கள்.

இந்த விக்நேஸ்வரருக்குக் காலை 6 மணி முதல் 6.40 நிமிஷங்கள் வரையில் 'ஷட்ஸதம்' என்றால் 600 அறுநூறு மூச்சுகள் நடக்கும். அப்போது விக்நேஸ்வரருடைய பசி தணிந்துவிடும். அவரது பசி தணிந்தவுடன் அந்த மூச்சானது 'சுவாதிஷ்ட்டான' மென்னும் சக்கரத்திற்கேற்ப பிரவேசிக்கும் சுவாதிஷ்ட்டானமென்றால் பிரஜாபதி. பிரஜாபதியென்றால் பிரஜைகளை உற்பத்தி செய்யப்பட்டது. ஆதலால், அதற்குப் பிரஜாபதி என்னும் பெயருண்டாயிற்று இந்தப் பிரஜாபதிக்கு அதிதேவதை யாரென்றால் பிரம்மதேவர். இந்தப் பிரம்ம தேவர் கடவுளைச் சேர்ந்தவரல்ல, இவர் சாதாரணமான மனிதனாயிருந்தவர் இவருக்குப் பிரம்மதேவர் பட்டம் வரவேண்டுமென்று எண்ணங்கொண்டு அனேக ஜன்மங்களை யெடுத்து ஒவ்வொரு ஜன்மத்திலும் விசேஷமாய் அனேக 'யக்ஞயா காதி' களைச் செய்து அந்தப் புண்ணிய விசேஷத்

தினால், பிரம்மபட்டத்திற்கு வந்து சிருஷ்டி கர்த்தாவாய் ஆனார். ஆதலால், இவரைப் பிரஜாபதிக்கு அதிதேவதையாய் நியமித்தார்கள். இவர் கடவுளில் சேர்க்கப்படாதவராதலால், இவருக்குக் கோயில் நியமிக்கவில்லை. இதன்றியும் தேவேந்திரன் எப்படிப்பட்டவரென்றால் அவரும் நர மனிதராய் இருந்தவர். அவருக்கு தேவேந்திர பட்டம் வரவேண்டுமென்று அனேக ஜன்மங்களாய் அனேக 'யக்ஞ யாகாதி'களைச் செய்து வந்தவர். அந்தப் புண்ணிய விசேஷத்தினால் அவருக்குத் தேவேந்திரன் பட்டம் கிடைத்தது. இவ்விருவரும் காம காண்ட விதிப்படி தேவலோகத்தில் இருக்கப்பட்டவர்கள். இவர்களின் ஆயுள்பாகம் எப்படிப்பட்டதோ அதை ஸ்ரீபகவத் கீதை அத்யாயம் 8-சுலோகம், 17-பிரமாணங்களுடன் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

> ஸஹஸ்ர யுகபர்யந்த மஹர்யக் ப்ரஹமணோ விதுஹு
> ராத்ரிம் யுக ஸஹஸ்ராந்தாம் தேஹேம ராதரவிதோ ஜ நாஹ

கிருதயுகம், திரேதயுகம், துவாபரயுகம், கலியுகம் என்ற சொல்லப்பட்ட நான்கு யுகங்களும் ஆயிரமானால் பிரம்மதேவர். தேவேந்திரன் முதலானவர்களுக்கு ஒரு பகலாகின்றது. அப்படிப்பட்ட யுகங்கள் இன்னும் ஆயிரமானால் ஒரு இரவாகிறது. இவ்விரண்டு யுகங்களும் சேர்ந்தால் என்றால், எட்டு யுகங்கள் ஆனால் அவர்களுக்கு ஒரு நாளாகும். இப்படிப்பட்ட நாள்கள் முப்பதானால் அவர்களுக்கு ஒரு மாதமாகின்றது. அப்படிப்பட்ட மாதங்கள் பன்னிரண்டானால் ஒரு வருஷமாகின்றது. அப்படிப்பட்ட வருஷங்கள் நூறானால் பிரம்மதேவர் தேவேந்திரன் முதலானவர்களும் இறந்துவிடுவார்கள். இவர்களுக்கு இறப்பு இருப்பதனாலும், கடவுள் ரூபம் எடுக்க சக்தி இராததனாலும் இவர்கள் கடவுளைச் சேர்ந்தவர்களல்லர்.

ஒரு பட்டத்தை விரும்பி தவம் செய்து அப்பட்டத்தைக் கைப்பெற்றவர்களாதலால் அவர்களுக்குக் கோவிலு மில்லை அவர்களை நரர்கள் பூஜிப்பதுமில்லை. பிரம்மதேவர் எல்லா ஜீவராசிகளையும் சிருஷ்ட்டி செய்பவரதலால் ஜீவராசிகளை உற்பத்திச் செய்விக்கும் லிங்கத்தினிடம் அவரை அதிதேவதையாய் வைத்தார்கள். எல்லா ஜீவராசி களையும் சிருஷ்ட்டி செய்யும் அதிகாரம் பிரம்மதேவருக்கும், மேற்படி ஜீவராசிகளுக்கும் வேண்டும் மழையைப் பெய்விக்க தேவேந்திரனுக்கும் ஈஸ்வரனானவர் அதிகாரம் கொடுத்திருக்கின்றார். ஆதலால் மேற்சொல்லிய இருவரும் இரண்டு வேலையைச் செய்து வருகின்றார்கள்.

## 89. சுவாதிஷ்டான சக்கரத்திற்குச் சுருதி

த்விதீயம் ஸ்வாதிஷ்ட்டாந்சக்ரம் தந்மத்யே பஸ்ச்சிமா
முகம் லிங்கம் ப்ரவாளாங்குர ஸத்ருஸம் த்யாயேத்
தத்ரைவ ஒட்யாண பீடநிலயம் ஜகதாகர்ஷணம் பவதி

சுவாதிஷ்ட்டான சக்கரத்தினிடம் முகம் லிங்க வடிவ மாயிருந்து ஜகத்தைச் சிருஷ்ட்டி செய்வதற்குப் பிரஜாபதியா யிருக்கப்பட்ட இடத்தில் பிரமதேவரை அதிபதியாய் வைத் திருப்பதனால் மூச்சானது, மூலாதாரதினிடம் இருக்கும் கணபதியின் பசியைக் காலை 6·மணி முதல் 6-40 நிமிஷங் களுக்குள் 600 மூச்சுகளால் தணிக்கச் செய்து பிறகு, பிரஜாபதி யினிடமிருக்கும் பிரமதேவரது பசியைத் தணிக்கச் செய்ய, காலை 6-மணி 49-நிமிஷங்கள் முதல் பகல் 1-மணி 20 நிமிஷங்கள் வரையில் ஷட்ஸஹஸ்ரங் என்றால், 6,000 ஆறாயிரம் மூச்சுக்களால் பிரம்மதேவரது பசியைத் தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து மணி பூரக சக்கரத்தினிடம் இருக்கும் மஹாவிஷ்ணுவின் பசியைத் தணிக்கச் செய்ய மூச்சானது செல்லும்.

## 90. மணிபூரக சக்கரத்திற்குச் சுருதி

த்ருதீயம் நாபி சக்கரம் பஞ்சாவர்த்தம் ஸர்ப்பவத் குடிலா
காரம் தந்மத்யே ருண்ட லீஸக்திம் பாலார்க்கோடிஸ
த்ருஸம் த்யாயேத் ஸாமத்யஸகதிஹி ஸாமஹித்திபவதி

*மணிபூரக சக்கரத்தினிடம் அதாவது, தொப்புளினிடம் பெட்டியில் பாம்பு கருணையாய்ச் சுற்றிப் படுத்திருப்பது போல் மணிபூரகமென்னும் சக்கரத்தினிடம், மூச்சுக்குத் தாயாயிருக்கும் பெரும் பாம்பானது அந்தத் தொப்புளினிடம் படுத்துக் கொண்டிருக்கும். அந்த இடத்தில் ஜலம் இருக்கின்றது விஷ்ணுமூர்த்தியானவர் எப்பொழுதும் ஜலமிருக்குமிடத்தில் இருப்பார். ஆதலால், 'மணி பூரகமென்கிற தொப்புளினிடம் ஜலம் இருப்பதனால் அந்த இடத்தில் 'மஹாவிஷ்ணு' வானவர் அதிபதியாயிருக்கின்றார். மூச்சானது மணிபூரகத்தினிடமிருக்கும் மஹாவிஷ்ணுவின் பசியை பகல் 1 மணி 20 நிமிஷங்கள் வரையில் ஷட்ஸஹஸ்ரம் என்றால் 6000 ஆறாயிரம் மூச்சுகளாற் தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து அநாஹத சக்கரத்தினிடமிருக்கும் 'ருத்திரன்' பசியைத் தணிக்கச் செய்ய மூச்சானது செல்லும்.*

## 91. அநாஹத சக்கரத்திற்குச் சுருதி

சதுர்த்தம் ஹ்ருதயா தாரம் அஷ்டதளசலம் அதோமுகம் தந்மத்யே கர்ணிகாயாம் லிங்காகாரம் ஜ்யோதிர் த்யாயேத் ஸைவஹம்ஸகளா ஸர்வேந்த்ரிய வஸ்யாபவதி.

அநாஹத சக்கரத்தினிடம் அதாவது, இருதயத்தினிடம் என்றால் மார்பினிடம் லிங்காகாரம் போன்ற ஓர் கமலம் அடி பெருத்து நுனி சிறுத்துத் தலைக்கீழாய்த் தொங்கிக் கொண்டிருக்கும், அந்தக் கமல மத்தியில் ஜோதி சொரூபமாகி யிருக்கப்பட்ட ருத்திரன் அதிதேவதையாயிருக்கின்றார். இவர் எல்லாவற்றையும் பஸ்மம் செய்யப்பட்டவராதலால் எல்லா ஜீவராசிகளின் இருதய கமலத்தில் இருந்து கொண்டு, புசிக்கப்பட்ட ஆஹாரங்களையெல்லாம் பஸ்மம் செய்விக்கின்றார், மூச்சானது மணிபூரக சக்கரத்தினிடமிருக்கும் மஹாவிஷ்ணுவினுடைய பசியை இரவு 8 மணி வரையில் ஷட்ஸ்ஹஸ்ரம் என்றால் 6000 ஆறாயிரம் மூச்சுகளாக தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து அநாஹத மென்னும் இருதயத்தில் இருக்கப்பட்ட கமலத்தின் மத்தியில் நிவசித்துக் கொண்டிருக்கும் ருத்திரனது பசியை இரவு 8 – மணி 1– நிமிஷம் முதல் இரவு 2 – மணி 40 நிமிஷங்கள் வரையில் ஷட்ஸ்ஹஸ்ரம் என்றால், 6,000 –ஆறாயிரம் மூச்சுகளால் தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து விசுத்திச் சக்கரத்தினிடமிருக்கும் 'ஜீவன்' பசியைத் தணிக்கச் செய்ய மூச்சானது செல்லும்.

## 90. மணிபூரக சக்கரத்திற்குச் சுருதி

த்ருதீயம் நாபி சக்கரம் பஞ்சாவர்த்தம் ஸர்ப்பவத் குடிலா
காரம் தந்மத்யே ருண்ட லீஸக்திம் பாலார்க்கோடிஸ
த்ருஸம் த்யாயேத் ஸாமத்யஸகதிஹி ஸாமஹித்திபவதி

மணிபூரக சக்கரத்தினிடம் அதாவது, தொப்புளினிடம் பெட்டியில் பாம்பு கருணையாய்ச் சுற்றிப் படுத்திருப்பது போல் மணிபூரகமென்னும் சக்கரத்தினிடம், மூச்சுக்குத் தாயாயிருக்கும் பெரும் பாம்பானது அந்தத் தொப்புளினிடம் படுத்துக் கொண்டிருக்கும். அந்த இடத்தில் ஜலம் இருக்கின்றது விஷ்ணுமூர்த்தியானவர் எப்பொழுதும் ஜலமிருக்குமிடத்தில் இருப்பார். ஆதலால், 'மணி பூரகமென்கிற தொப்புளினிடம் ஜலம் இருப்பதனால் அந்த இடத்தில் 'மஹாவிஷ்ணு' வானவர் அதிபதியாயிருக்கின்றார். மூச்சானது மணிபூரகத்தினிடமிருக்கும் மஹாவிஷ்ணுவின் பசியை பகல் 1 மணி 20 நிமிஷங்கள் வரையில் ஷட்ஸஹஸ்ரம் என்றால் 6000 ஆறாயிரம் மூச்சுகளாற் தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து அநாஹத சக்கரத்தினிடமிருக்கும் 'ருத்திரன்' பசியைத் தணிக்கச் செய்ய மூச்சானது செல்லும்.

## 91. அநாஹத சக்கரத்திற்குச் சுருதி

சதுர்த்தம் ஹ்ருதயா தாரம் அஷ்ட்டதளசலம் அதோமுகம்
தந்மத்யே கர்ணிகாயாம் லிங்காகாரம் ஜ்யோதிர் த்யாயேத்
ஸைவஹம்ஸகளா ஸர்வேந்த்ரிய வஸ்யாபவதி.

அநாஹத சக்கரத்தினிடம் அதாவது, இருதயத்தினிடம் என்றால் மார்பினிடம் லிங்காகாரம் போன்ற ஓர் கமலம் அடி பெருத்து நுனி சிறுத்துத் தலைக்கீழாய்த் தொங்கிக் கொண் டிருக்கும், அந்தக் கமல மத்தியில் ஜோதி சொரூபமாகி யிருக்கப்பட்ட ருத்திரன் அதிதேவதையாயிருக்கின்றார். இவர் எல்லாவற்றையும் பஸ்மம் செய்யப்பட்டவராதலால் எல்லா ஜீவராசிகளின் இருதய கமலத்தில் இருந்து கொண்டு, புசிக்கப்பட்ட ஆஹாரங்களையெல்லாம் பஸ்மம் செய்விக் கின்றார், மூச்சானது மணிபூரக சக்கரத்தினிடமிருக்கும் மஹாவிஷ்ணுவினுடைய பசியை இரவு 8 மணி வரையில் ஷட்ஸ்ஹஸ்ரம் என்றால் 6000 ஆறாயிரம் மூச்சுகளாக தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து அநாஹத மென்னும் இருதயத்தில் இருக்கப்பட்ட கமலத்தின் மத்தி யில் நிவசித்துக் கொண்டிருக்கும் ருத்திரனது பசியை இரவு 8 - மணி 1- நிமிஷம் முதல் இரவு 2 – மணி 40 நிமிஷங்கள் வரையில் ஷட்ஸ்ஹஸ்ரம் என்றால், 6,000 –ஆறாயிரம் மூச்சுகளால் தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து விசுத்திச் சக்கரத்தினிடமிருக்கும் 'ஜீவன்' பசியைத் தணிக்கச் செய்ய மூச்சானது செல்லும்.

## 92. விசுத்திச் சக்கரத்திற்குச் சுருதி

பஞ்சமம் கண்டசக்ரம் சதுரங்களம் தத்தாவாமே
சந்த்ரநாடி இடா பிங்களா ஸூர்யநாடி
தந்மத்யே ஸுஷும்நாம் த்யாயேத்
ஸைவ அநாஹதகளா அநாஹத ஸித்திர்பவதி.

*விசுத்திச் சக்கரத்தினிடம் அதாவது, நெஞ்சுக்குழி இதற்குக் கண்டம் என்றும் சொல்லுவார்கள். இந்தக் கண்டத்தினிடம் 'ஜீவன்' அதிதேவதையாயிருந்து வலது நாசியிலும், இடது நாசியிலும் ஸுஷும்நா என்கிற நாடியிலும் மூச்சை உள்ளுக்கிழுக்கும்படியும் மறுபடியும் வெளியில் விடும்படியும் செய்விக்கின்றார். மூச்சானது அநாஹத சக்கரத்தினிடமிருக்கும் ருத்திரனது பசியை இரவு 2 மணி 40 நிமிஷங்கள் வரையில் தணிக்கச் செய்து பிறகு, இரவு 2-மணி 41-நிமிஷங்கள் முதல் 3-மணி 46-நிமிஷங்கள் வரையில் ஹைஸ்ரம் அதாவது 1000-ஆயிரம் மூச்சுகளால் ஜீவனது பசியைத் தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து ஆஞ்ஞேய சக்கரத்தினிடமிருக்கும் 'ஈஸ்வர'ருடைய பசியைத் தணிக்கச் செய்ய மூச்சானது செல்லும்.*

## 93. ஆஞ்ஞேய சக்கரத்திற்குச் சுருதி

ஷஷ்ட்டும் ப்ருமத்யசக்ரம் தத்ர அங்குஷ்ட்டமாத்ரம் ஞாநநேத்ரம் தீப சிகாகாரம் த்யாயேத் வாசா ஸ்த்திர்பவதி.

ஆஞ்சநேய சக்கரத்தினிடம் அதாவது, இரண்டு, கண்களின் புருவங்களுக்கு மத்தியில் ஞாநநேத்ரமானது தீபப் பிரகாசம் போல் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. அந்த இடத்தில் 'ஈஸ்வரர்' அதிதேவதையாயிருக்கின்றார். மூச்சானது விசுத்திச் சக்கரத்தினிடமிருக்கும் 'ஜீவனது' பசியை இரவு 3 மணி 46 நிமிஷங்கள் வரையில் ஹைஸ்ரம் அதாவது, 1000 ஆயிரம் மூச்சுகளால் தணிக்கச் செய்து பிறகு அவ்விட மிருந்து ஆஞ்ஞேயசக்ரத்தினிடமிருக்கும் ஈஸ்வரரது பசியை இரவு 3 மணி 41 நிமிஷங்கள் முதல் காலை 4-மணி 33-நிமிஷங்கள் வரையில் ஸஹஸ்ரம் அதாவது 1,000 ஆயிரம் மூச்சுகளால் தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து ஸஹஸ்ரார சக்கரத்தினிடமிருந்து பரமாத்மாவினுடைய பசியைத் தணிக்கச் செய்து மூச்சானது செல்லும்.

## 92. விசுத்திச் சக்கரத்திற்குச் சுருதி

பஞ்சமம் கண்டசக்ரம் சதுரங்களம் தத்தாவாமே
சந்த்ரநாடி இடா பிங்களா ஸூர்யநாடி
தந்மத்யே ஸுஷும்நாம் த்யாயேத்
ஸைவ அநாஹதகளா அநாஹத ஸித்திர்பவதி.

விசுத்திச் சக்கரத்தினிடம் அதாவது, நெஞ்சுக்குழி இதற்குக் கண்டம் என்றும் சொல்லுவார்கள். இந்தக் கண்டத்தினிடம் 'ஜீவன்' அதிதேவதையாயிருந்து வலது நாசியிலும், இடது நாசியிலும் ஸுஷும்நா என்கிற நாடியிலும் மூச்சை உள்ளுக்கிழுக்கும்படியும் மறுபடியும் வெளியில் விடும்படியும் செய்விக்கின்றார். மூச்சானது அநாஹத சக்கரத்தினிடமிருக்கும் ருத்திரனது பசியை இரவு 2 மணி 40 நிமிஷங்கள் வரையில் தணிக்கச் செய்து பிறகு, இரவு 2-மணி 41-நிமிஷங்கள் முதல் 3-மணி 46-நிமிஷங்கள் வரையில் ஹைஸ்ரம் அதாவது 1000-ஆயிரம் மூச்சுகளால் ஜீவனது பசியைத் தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து ஆஞ்ஞேய சக்கரத்தினிடமிருக்கும் 'ஈஸ்வர'ருடைய பசியைத் தணிக்கச் செய்ய மூச்சானது செல்லும்.

## 93. ஆஞ்ஞேய சக்கரத்திற்குச் சுருதி

ஷஷ்ட்டும் ப்ருமத்யசக்ரம் தத்ர அங்குஷ்ட்டமாத்ரம் ஞாநநேத்ரம் தீப சிகாகாரம் த்யாயேத் வாசா ஸ்த்திர்பவதி.

ஆஞ்சநேய சக்கரத்தினிடம் அதாவது, இரண்டு, கண்களின் புருவங்களுக்கு மத்தியில் ஞாநநேத்ரமானது தீபப் பிரகாசம் போல் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. அந்த இடத்தில் 'ஈஸ்வரர்' அதிதேவதையாயிருக்கின்றார். மூச்சானது விசுத்திச் சக்கரத்தினிடமிருக்கும் 'ஜீவனது' பசியை இரவு 3 மணி 46 நிமிஷங்கள் வரையில் ஹைஸ்ரம் அதாவது, 1000 ஆயிரம் மூச்சுகளால் தணிக்கச் செய்து பிறகு அவ்விட மிருந்து ஆஞ்ஞேயசக்ரத்தினிடமிருக்கும் ஈஸ்வரரது பசியை இரவு 3 மணி 41 நிமிஷங்கள் முதல் காலை 4-மணி 33-நிமிஷங்கள் வரையில் ஸஹஸ்ரம் அதாவது 1,000 ஆயிரம் மூச்சுகளால் தணிக்கச் செய்து பிறகு, அவ்விடமிருந்து ஸஹஸ்ரார சக்கரத்தினிடமிருந்து பரமாத்மாவினுடைய பசியைத் தணிக்கச் செய்து மூச்சானது செல்லும்.



## 94. ஸஹஸ்ரார சக்கரத்திற்குச் சுருதி

ஸப்தமப் ப்ரஹ்மரந்த்ரம் நிர்வாணசக்ரம் ஸுசிகாக்ரப் யேத்யம் தூமஸிகாகாரம் த்யாயேத்
தத்ர ஜர்லந்தரபீடம் மோக்ஷப்ரதம் பவதி.

ஸஹஸ்ரார சக்கரத்திற்குள் அதாவது, பிரம்ம கபாலத்திற்குள் எங்கும் நிறைந்து ஏக வெளியாயிருக்கும் பரமாத்மாவானவர் ஆகாய வடிவமாய் நிவசித்துக் கொண்டிருக்கின்றார். மூச்சானது ஆஞ்ஞேய சக்கரத்தினிடமிருக்கும் 'ஈஸ்வர'ரது பசியை காலை 5-மணி 53-நிமிஷயங்கள் வரையில் ஸஹஸ்ராரம் அதாவது, 1,000-ஆயிரம் மூச்சுகளால் தணிக்கச் செய்து பிறகு அவ்விடமிருந்து ஸஹஸ்ரார கமலத்தினிடமிருக்கும் பரமாத்மாவின் பசியைத் தணிக்கச் செய்ய காலை 4 மணி 54 நிமிஷங்கள் முதல் 6 மணி வரையில ஸஹஸ்ரம் அதாவது, 1,000-ஆயிரம் மூச்சுகளால் தணிக்கச் செய்யும். அப்பொழுது பிரம்மகபாலத்திலிருக்கும் பரமாத்மாவினுடைய பசி ஆறிவிடும். பரமாத்மாவின் பசி தீர்ந்தவுடன் மறுபடியும் மறுநாள் காலை 6 மணி 1 நிமிஷம் முதல் 6 மணி 40 நிமிஷங்கள் வரையில் மூலாதாரத்தினிடமிருக்கும் விக்நேஸ்வரருடைய பசியைத் தணிக்கச் செய்ய சென்றுவிடும். இவ்விதமாய் ஏழு சக்கரங்களிலும் இருக்கும் ஏழு தேவதைகளின் பசியைத் தினந்தோறும் மேற்சொல்லிய கணக்கைப்போல் மூச்சானது ஆற்றிக்கொண்டும், அதனால் நம்முடைய ஆயுள்பாகத்தைக் காட்டிக்கொண்டுமாய் வருகின்றது. கடியாரத்தின் வேலை என்னவென்றால் மணியைக் காட்டும் வேலையாயிருக்கின்றது. எல்லா ஜீவராசிகளின் மூக்குத் துவாரங்களில் ஆடிக்கொண்டிருக்கும் மூச்சின்



வேலை என்னவென்றால், அந்தந்த ஜீவராசிகளின் மூக்குத் துவாரங்களில் ஆடிக்கொண்டிருக்கும் மூச்சின் வேலை என்னவென்றால், அந்தந்த ஜீவராசிகளின் ஆயுள்பாகத்தைக் காட்டும் வேலையாயிருக்கின்றது. ஸூர்ய சந்திராதிகளி னுடைய வேலை செய்யவென்றால், வாரங்கள் மாதங்கள் வருஷங்கள் யுகங்கள் காட்டும் வேலையாயிருக்கின்றது.

நமக்குள்ளிருக்கும் மேற்சொல்லி ஏழு சக்கரங் களையும் ஸ்ரீரங்கத்திலுள்ள கோவிலுக்கு ஏழு சுற்றுப் பிரகாரங்களாய் சுட்டிக்காட்டினார்களென்று சொல்லியிருக் கின்றோம் திருப்பதி மலைமேல் நிவசித்துக் கொண் டிருக்கும் பெருமாளுக்கு வெங்கடேசப் பெருமாளென்றும் ஏழுமலையானென்றும் சொல்லுவார்கள். திருப்பதி மலையின்மேல் அடுக்கடுக்காய் ஏழுமலைகள் இல்லவே யில்லை, முதல் மலை ஏறும்பொழுது படிகள் உயரமாயும்

மிகவும் நெட்டாயும் இருக்கும். இதற்குக் 'காலி கோபுர மென்று சொல்லுவார்கள். இதை ஏற மிகவும் கஷ்டமா யிருக்கும். அதற்குமேல் சுலபமாய் ஏறிச் செல்லலாம் அவ்விடமிருந்து ஒரே மலையாய்ப் போகின்றதேயொழிய ஏழு மலைகள் இல்லை.

இதுவரையில் சொல்லிவந்த நமது சரீரத்திலிருக்கும் ஆறு சக்கரங்களையே ஆறு மலையாய்க் காட்டினார்கள். பிறகு நமக்குள்ளிருக்கும் ஏழாவது சக்கரமாகிய பிரம்ம கபாலத்தில் பரமாத்மாவானவர் நிவசித்துக் கொண்டிருக் கின்றார், அந்தப் பரமாத்மாவே ஏழாவது மலையின் மேல் ஸ்ரீவெங்கடேசப் பெருமாள் நிவசித்துக் கொண்டிருப் பதாய்க் காட்டியிருக்கிறார்கள்.

அப்படிப்பட்ட பரமாத்மாவானவர் 'ஹம்ஸ்' சொரூபமாய் என்றால் 'ஸோஹம்' என்னும் மந்திர ரூபமாய் பீபிலிகாதி அதாவது, கண்களுக்குக் காணப்படாத சிறிய புழு முதல் பிரம்ம தேவர் வரையில் எல்லா ஜீவராசிகளின் மூக்குத் துவாரங்களில் ஆடிக்கொண்டிருக்கின்றார். இந்த 'ஹோஹம்' என்னும் மந்திரமே 'ஓம்' என்னும் தாரக மந்திரமாகின்றது. எப்படியென்றால், 'ஸோ' என்னும் மந்திரத்தில் ஓ என்னும் ஜீவாக்ஷரமும் 'ஹம்' என்னும் சப்த முண்டாயிற்று இவ்வாறாக 'ஹோமம்' என்ற மூச்சானது தனக்குத் தானாகவே ஜபித்துக் கொண்டிருக்கும் மந்திரத்தை யோகிகள் சாஸ்திரிகளின் மூலமாய்க் கண்டுபிடித்து, அந்த மூச்சை செலவு செய்யாமல் சேகரித்து வைத்துக் கொண்டிருப்பார்கள். மூச்சை சேகரித்து வைத்துக் கொண்டிருப்பதனால் அவர்கள் அனேகாலம் ஜீவித்திருப்பார்கள்.

## 95. மனிதர்களின் ஆயுள் பிரமாணமும் சம்சார தொல்லையும் வெளியிடுகின்றார்

மனிதன் சாதாரணமாய்ப் பேசும்பொழுது 12 அங்குலம் மூச்சு, வெளியில் வந்து, 8 அங்குலம் மூச்சு வெளியில் நஷ்டமாய்விடும்.

நடக்கும்பொழுது 16 அங்குலம் மூச்சு வெளியில் வந்து, 3 அங்குலம் மூச்சு உட்சென்று, 8 அங்குலம் மூச்சு நஷ்டமாய்விடும்.

கைத்தொழில் செய்யும்பொழுது 20 அங்குலம் மூச்சு வெளியில் வந்து, 10 அங்குலம் மூச்சு உட்சென்று 10-அங்குலம் மூச்சு நஷ்டமாய்விடும்.

சண்டையில் 24 அங்குலம் மூச்சு வெளியில் வந்து 12 அங்குலம் மூச்சு நஷ்டமாய்விடும்.

நித்திரையில் 48 அங்குலம் மூச்சு வெளியில் வந்து 30 அங்குலம் மூச்சு உட்சென்று 18 அங்குலம் மூச்சு நஷ்டமாய் விடும்.

ஓடும்பொழுது 54 அங்குலம் மூச்சு வெளியில் வந்து 27 அங்குலம் மூச்சு உட்சென்று 27 அங்குலம் மூச்சு நஷ்டமாய்விடும்.

சம்போக காலத்தில் 64 அங்குலம் மூச்சு வெளியில் வந்து 24 அங்குலம் உட்சென்று 40 அங்குலம் மூச்சு நஷ்டமாய்விடும்.

இவ்விதமாய் ஒவ்வொருவரும் நாள் ஒன்றுக்கு முப்பது, நாற்பது (30, 40) ஆயிரக்கணக்காய் மூச்சை செலவழித்து விட்டு எழுபது, எண்பது (70,80) வருஷத்திற்குள் மரணமடை

கின்றார்கள். சகல ஜீவ ஜந்துக்களுக்கும், நாள் ஒன்றுக்கு இருபத்தோராயிரத்து அறநூறு மூச்சுகள் கணக்கு ஏற்படு கின்றன. மனிதர்களுக்கு ஈஸ்வரனால் கொடுக்கப்பட்ட வயது நூறாயிருந்தபோதிலும் மேற்சொல்லியதுபோல் மூச்சை மனிதர்கள் விசேஷமாய்ச் செலவழித்து விடுவதனால் எண்பது (80) வயதிற்குள்மேல் ஜீவித்திருக்க மாட்டார்கள்.

குழந்தையானது பிறந்த மூன்றாம் மாதம் இறந்து விட்டால், அக்குழக்தைக்கு (19,44,000) பத்தொன்பது லக்ஷத்து நாற்பத்து நாலாயிரம் மூச்சுகள் மாத்திரமே இருந்தபடியால், அம்மூச்சுகளெல்லாம் செலவழிந்தவுடன் மூன்று மாதம் வயதுடைய குழந்தையின் ஜீவன் போய்விடும். பத்தொன்பது லக்ஷத்து நாற்பத்து நாலாயிரம் மூச்சு எவ்விதமாய் வந்ததென் றால் மாதம் மூன்றுக்கு நாட்கள் தொண்ணூறு (90) நாள் ஒன்றுக்கு (21,600) இருபத்து ஒராயிரத்து அறுநூறு மூச்சுகள் நடக்கின்றன. ஆதலால் (21, 600 X 90 = 19,44000) இருபத்து ஓராயிரத்து அறுநூறும் தொண்ணூறும் பெருக்கினால் பத்தொன்பது லக்ஷத்து நாற்பத்து நாலாயிரம் மூச்சுகள் ஆகின்றன.

ஒவ்வொரு ஜீவர்கள் எந்நாள் வரையில் பிழைத்திருக்க வேண்டுமோ, அன்னாட்களுக்கு வேண்டிய மூச்சை ஈஸ்வரன் கணக்கெடுத்து ஏற்படுத்தி, ஜீவர்களைச் சிருஷ்டி செய்து அனுப்புகிறான். இச்ஜீவர்களைப் பரிக்ஷிப்பதற்காக ஆயிர வருஷங்களுக்கு வேண்டிய மூச்சை ஈஸ்வரன் ஜீவர்களுக்குக் கொடுத்து பிழைத்திருக்கும்படி அனுப்பிய போதிலும் இவர்கள், பிரதி தினம் ஒரு நிமிஷமாகிலும் ஓய்வில்லாமல் ஆயிர வருஷம் வரையிலும், மாயா சம்சார குடும்பத்திற்கு வேண்டிய வேலைகளைச் செய்துகொண்டு வருவார்களேயொழிய மோக்ஷமடைய அரை நிமிஷமா கிலும் ஈஸ்வரனைத் துதி செய்யார்கள். ஆனால், இவர்கள்

எதை வேண்டி துதி செய்கின்றார்களென்றால், ஸ்நானம் செய்து விபூதி பூசி மடியுடன் கோவிலுக்குச் சென்று பகவா னெதிரில் நின்று நான் செய்யும் வியாபாரத்தில் நல்ல லாபம் வரவேண்டுமென்றாகிலும், என் கேசு ஜயமாக வேண்டு மென்றாகிலும் நான் கொடுத்த பணம் வட்டி முதலுடன் சரியாய் வரவேண்டுமென்றாகிலும். எனக்கு நல்ல சம்பத் துக்கள் வரவேண்டுமென்றாகிலும், எனக்குச் சந்தானம் உண்டாக வேண்டுமென்றாகிலும் எனக்கும் என் குடும்பத் திலுள்ளவர்களுக்கும் யாதொரு வியாதியும் வராமலிருக்க வேண்டுமென்றாகிலும், இவ்வாறு அவரவர்களுக்கு வேண்டியபடி வரங்களைக் கேட்கின்றார்களேயொழிய மாயா சம்சாரத்தைக் கடந்து கடைத்தேறும்படியான வரத்தைக் கேட்க மாட்டார்கள். சம்சாரத்திலிருந்து, கடைத்தேற வேண்டு மென்று ஈஸ்வரனைக் கேட்பவர்கள் ஆயிரத்திற்கொருவர் இருப்பது மிகவும் அரிது. முன் சொல்லி ஆசைகளுடன் கோவிலுக்குப் போகப்பட்டவர்களை ஈஸ்வரன் பரீக்ஷிப் பதற்காக, அவர்கள் கேட்பது போல் வரங்கொடுத்ததுமே யன்றி அதே ஜன்மத்தில் இன்னம் ஆயிர வருஷங்கள் ஜீவித்திருப்பதற்கு வேண்டிய மூச்சையும் ஆயுள் பாகமாய்க் கொடுத்து, அவர்களைப் பரீக்ஷிக்கும்பொழுது இவர்களுக்கு முன்னைவிட ஆசை அதிகமாய் அரை நிமிஷமாகிலும் ஓய்வில் லாமல் தனத்தைச் சம்பாதிக்கப் பிரயத்தினப்பட்டு தனபிசாச மென்னும் சேற்றில் அழுந்திப் பாழாகும் நாளில் அவர் களுக்கு மரணம் சம்பவித்து விட்டால் இரண்டாயிர வருஷம் ஜீவித்திருந்து இப்பொழுது மரணமடைந்தானே போகட்டு மென்று அவன் குடும்பத்தார் எண்ணாமல் அவன்மேல் விழ்ந்து புரண்டு புரண்டு அழுது சில நாட்கள் துக்கித்துப் பிறகு அவன் மாண்டதுபோல் இவர்களும் மாண்டுவிடு வார்கள். இப்படிப்பட்டவர்களின் கூத்துகள் யாவும் ஈஸ்வரனுக்கு ஒரே வேடிக்கையாதலால், மானவ ஜன்மங்

களுக்கு விசேஷ ஆசைகளை உண்டாக்கி அந்த ஆசையால் அவர்களை மோஹிக்கச் செய்து தான் எல்லோருடைய பல விதங்களாகிய கூத்துகளைப் பார்த்துக்கொண்டிருக்கின்றான். இவைகளையெலலாம் ஸ்திரீ புருஷர்கள் கவனித்து, நாம் பிரதிதினம் செய்துவரும் வியாபரேங்களையே செய்து வருகின்றோமே. இதற்காககவா நாம் ஜனனமெடுத்தோம் என்று எந்த ஸ்திரீ புருஷர்கள் சற்று ஆழ்ந்து யோசிக் கின்றார்களோ அப்படிப்பட்டவர்கள் என்ன நினைப்பார் களென்றால் ஓஹோ! நமது காலம் இதுவரையில் வியர்த்த மாய் விட்டதல்லாவென்று நினைத்து, அவரது மனம் துடிதுடித்து மறுபடியும் தாயின் கர்ப்பத்தில் போய்ப் பிரவேசிக்காமலிருப்பதற்காக என்ன செய்யவேண்டுமோ, அதற்கு வேண்டிய பாடுகளைப் படுவார்கள். நாம் மறு ஜன்மம் எடுக்காமலிருப்பதற்காக எது வேண்டுமோ, அதை இந்நூலில் தெரிவித்திருக்கின்றோம். ஆதலால்,நாம் உலகத்தில் ஏன் பிறந்தோம். பிறந்ததற்காக எதை அடைய வேண்டு மென்று ஸ்திரீ புருஷர்கள் சற்று ஆழ்ந்து யோசிப்பார் களாகில், அவர்களுக்கு உடனே நல்லறிவு உண்டாய். மறுபிறப்பு வராதபடி அதற்கு வேண்டிய வழியைத் தேடிக் கொள்வார்கள். அதைச் சற்றே ஆலோசித்துப் பாருங்கள் அப்பொழுது உண்மைப்பொருள் எதுவோ, அது உங்கள் மனத்திற்கு நன்றாய்ப் புலப்படும்.

## 96. மூச்சு மூக்குத் துவாரங்களில் ஸோஹம் மந்திரம் ஜபம் செய்வது

ஹம்ஸோ கணேஸோ விதிரேவ ஹம்ஸோ
ஹம்ஸோ ஹரிர் விஸ்வமயஸச் ஸம்புஹ
ஹம்ஸோஹமா தமா குருரே வஹம்ஸோ
ஹம்ஸோஹம் ஹம்ஸஹ பரமாத் மஹம்ஸஹ.

எல்லா ஜீவராசிகளினுடைய மூக்குத் துவாரங்களில் ஏறி, இறங்கிக்கொண்டிருக்கும் மூச்சுக்கு 'ஹம்ஸ' என்று சொல்லப்படும். மிகவும் அழகுடைய நீலவர்ண சரீரம் தரித்து, சதுர் புஜங்களுடன் மஹா விஷ்ணுவாய் அவதார மெடுத்து வந்தபோதிலும் சரி, இப்படிப்பட்ட கடவுள்கள் சரீரமெடுத்து வருவதனால் அவர்களின் மூக்குத் துவாரங் களிலும் ஹம்ஸமென்று சொல்லப்பட்ட மூச்சானது ஆடிக் கொண்டிருக்கும். 'ஹம்ஸ' என்றால், ஸோஹம் என்னும் மந்திரமேயாம். மேற்சொல்லிய ஈஸ்வரர்களின் மூச்சில் 'ஸோஹம்' என்னும் மந்திரம் நடவாவிட்டால் அவர்களும் பிணத்திற்குச் சமானமாய்விடுவார்கள். ஆதலால், சிவ விஷ்ணுக்களை விட இந்த 'ஸோஹம்' மந்திரமே மிகவும் சிரேஷ்டமானது. இவர்களெல்லோரும் கடவுளல்லர். இவர்களுக்குமேல் ஒரு பெரிய கடவுள் இருக்கின்றார். அவரைப் பரப்பிரம்மமென்று, பரமாத்மாவென்றும் சொல்வார்கள். 'ஸோஹம்' என்னும் மூச்சுகள் அந்தப் பரப்பிரம்மத்திற்கு நடப்பதில்லை இன்னும் இந்த ஹம்ஸ என்பது எப்படிப்பட்டதென்றால்.

சுரு! "ஸ்வப்ரகாஸ சிதாநந்தம் ஸ ஹம்ஸ இதி கீயதே"

(ப்ரஹம் விதேயோபரிஷத்)

சுயம்பிரகாசமாய், பரஞ்சோதியாய், ஞாநாந்த சொரூபமாய், சர்வசாக்ஷியாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் பரப்பிரம்மமாகிய ஆத்மாவே 'ஹம்ஸ்' என்று சொல்லப் படும்; இந்த 'ஹம்ஸ'மானது சகல ஜீவராசிகளின் சரீரத்தில் எங்கு நிவசிக்கிறதென்றால் : –

ஜாக்ரந்நேத்ர த்வயோர்மத்யே: ஹம்ஸ ஏவ ப்ரஸ்காஸதே
காரஹ கேசரீ ப்ரோக்தா ஸத்வம்பதம் சேதி நிஸ்சிதம்
ஹகாரஹ பரமேஸ்யாத் தந்பதம் சேதிநிஸ்ச்சிதம்
ஸகாரோ த்யாயதே ஜந்துஹு ஹகாரோஹி பவேத்த்ருவாம்

(யோக சூடாமண்யுபநிஷத்)

இரண்டு நேத்திரங்களுக்கு மத்தியில் (புருவ மத்திய ஸ்தானத்தில்) 'ஹம்ஸ'மானது பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. 'ஹம்ஸ' என்னும் பதத்தில் 'ஹ' என்னும் அக்ஷரம். 'ம்' 'ஸ' என்னும் அக்ஷரம் ஆக இம்மூன்றும் சேர்ந்திருக்கின்றன. அதில் 'ஹ' என்னும் பரமாத்மா. 'ஸ' என்றால் ஜீவாத்மா என்று சொல்லப்படும். ஹ-ஸ என்னும் இவ்விரண்டும் அக்ஷரங்களின் மத்தியிலிருக்கும் (ம்) என்பது, பரமாத்மாவே ஜீவாத்மா, ஜீவாத்மாவே பரமாத்மா என்று இவ்விரண்டை யும் ஒன்றாய் சேர்ப்பிக்கின்றது. இந்த ஜீவாத்மா, நாபி இருதய கமலம் கண்டம் பிரம்மமந்திரம் இவைகளில் சஞ்சரிக்கின்றது என்று பிரஹ்மோப நிஷத்தில் சொல்லப் பட்டிருக்கின்றது. ஆதலால்,

'ஹம்ஸ' மந்திரத்தை ஜபிக்கப்பட்டவர்கள் என்றால் 'ஸோஹ' மந்திரத்தை ஜபிக்கப்பட்டவர்கள் சத்தியமாய்ப் பரமாத்ம சொரூபத்தை அடைகிறார்கள். இதற்குச் சந்தேக மில்லை. இது சத்தியம் சத்தியமேயாம்.

சுரு!! "ஸகாரஞ்ச ஹகாரஞ்ச ஜீவே ஜபதி ஸர்வநா."

*(ப்ரஹம விநயோ பநிஷத்)*

*ஜீவன் புருவ மத்தியிலிருந்து கொண்டு, 'ஸ' காரத்தை யும் சதா தனக்குத் தானாகவே ஸ்மரித்துக் கொண்டிருக்கும் இதற்குச் சுருதிப் பிரமாணம்.*

சுரு!! ப்ரரணாபாநவஸோ ஜீவோஹ்ய தஸ்ச்சோர் த்வம் ப்ரதாவதி.
வாமதக்ஷிண மார்கேண ஸஞ்சலத்வாந் நத்ருஸயதே
ஆக்ஷிப்தா புஜதண்டேந யதோ ஸச்சலதி கந்துகஹ
ப்ராணாபாந ஸமாக்ஷிப்த ஸ்தத்வஜ்ஜீவோ நவிஸ்ரமேத்
அபாநாத் கர்ஷதி ப்ராணோ அபாநஹ ப்ராணாஸ்ச் சகர்ஷதி
கசரஜ்ஜுவ திதயே தத்யோ ஜாதாதி ஸயோகவித
ஹகாரெண பஹிர்யாதி ஸகாரேண வஸேந்புநஹ
ஹம்ஸஹம்ஸேத்யமந்த்ரம் ஜிவோ ஜபதி ஸாவதா."

(த்யானபிந்தூபநிஷத்)

*சிறு பிள்ளைகள் கையினால் உயிரவிடும் பந்தானது கீழும் மேலும் எகிறிக்கொண்டிருப்பதுபோல், பிராண அபான வாயுக்கள் இரண்டும் இத்தேக மத்தியில் ஷடாதாரங் களின் (ஏழு) சக்கரங்களின் வழியாய் மூச்சானது உட்பிரவேசிக்கும் பொழுது 'ஸ'காரத்துடனும் என்றால் 'ஸோ' என்னும் மந்திரத்துடனும் மறுபடியும் மூச்சு வெளிவரும்பொழுது 'ஹ' காரத்துடனும் என்றால ஹம் என்னும் மந்திரத் துடனும், ஏறி, இறங்கிக் கொண்டு பிரதிதினம் முன்சொல்லி யிருக்கும் கணக்கைப்போல் 21600 இருபத்து ஓராயிரத்து அறுநூறு முறை ரேசக, பூரகமாய் மூக்குத் துவாரங்களின் வழியாய்த் துவாத சாங்குல (12 அங்குலம்) அஷ்ட்டாங்குலம் (8 அங்குல) வரையில் அதாவது, இடது மூக்கில் வெளிவரும் மூச்சு 12 அங்குலமும் வலது மூக்கில் வரும் மூச்சு 8 அங்குலமும்*

வெளிவந்து மறுபடியும் உள் பிரவேசிக்கின்றது. இவ்விதமாய் சூர்ய நாடியி (வலதுமூக்கி)லிருந்து (இடது மூக்கு) மார்க்க மாக்வும், இடது மூக்கிலிருந்து வலது மூக்கு மார்க்கமாகவும் மூச்சு மாறி மாறித் திரிந்துகொண்டே இருக்கும்.

எப்படியென்றால், ஒரு கயிற்றால் கட்டப்பட்ட பக்ஷியானது. அந்தக் கயிற்றை அடிக்கடி எப்படி இழுத்துக் கொண்டிருக்குமோ, அதுபோல், ரேசக*பூரங்களென்னும் பிராண வாயுக்களுக்கு மத்தியிலிருக்கும் ஜீவனை மூச்சானது மேலுக்கும் கீழுக்கும் அதாவது உள்ளுக்கும் வெளிக்கும் இழுத்துக்கொண்டேயிருக்கும். இந்த ஜீவன் மூச்சுடன் சேர்ந்து நாசிக்குள்ளும் வெளியும் நடக்கும்பொழுது 'ஸோஹம் ஸோஹம்' என்னும் வாக்கியத்தைத் தனக்குத் தானாகவே ஜபித்துக் கொண்டே போகும். இந்த ரகசியத்தைத் தெரிந்து இராப்பகலாய் ஜபம் (அப்பியாசம்) செய்து வரப்பட்ட வர்களே ராஜயோகிகள் என்று சொல்லப்படும். இந்த ராஜயோகிகள் யாருக்குச் சமானர்களென்றால்;

> சுரு|| ஹம்ஸஹம்ஸேதி யோபருயாத்ஹமஸோநாம ஹரிஸிவஹ
> குருவக்த்ராத் லப்யதே ப்ரத்யக்ஷஸ் ஸர்வதோமுகம்
>
> (ப்ரஹம வித்யோ பநிஷத்)

ஜீவப் பிரம்மைக்கியத்திற்குக் காரணமாகிய இந்த 'ஸோஹம், மந்திர ரகசியத்தைக் குருமுகமாய்த் தெரிந்து தியானிக்கப்படடவர்களே ஆத்மா ராமத்தியானம் செய்யும் பிரம்ம ஞானிகள் என்று சொல்லப்படுவார்கள். இப்படி ஹம்ஸ தியானம் செய்பவர்கள், ஹரிஹராதி தேவதைகளுக்குச்

---

★ ரேசகம் – மூச்சு வெளியில் விடுவது.
பூராம் – மூச்சு உள்ளுக்கிழுப்பது.

**சமானமாகின்றார்கள். இதுவே குரு ரகஸ்யம், இதுவே சிவராஜயோக சமாதி, இதை ஜபம் செய்யுங்கள் என்னும் விஷய அட்டவணையில் கீழே சொல்லப் போகின்றோம். அதையே குரு வாக்காய் நினைத்து அதில் சொல்லியதுபோல் ஜபம் செய்து வாருங்கள்.**

சொல்லுமெனக் கேட்டுகந்த மாணாக்காவுன்
　　தூலகா ரணப்பிரமந் துரியாதீதம்
அல்லுமல்ல பகலுமல்ல நிஷ்களஞ்கம்
　　ஹம்ஸோஹம் அஜபாமந் திரத்தியானம்
செல்லுமவனே நானென் றபிமானிக்கும்
　　சித்திவிருதத்தி நிரோ தகமாம் யோகத்தாலே
வெல்லறிஞர் பலயோக ளிருத்தியோகி
　　விவேகத்தியா னாதிகளே மேலாம்பிரம்மக்.



## 97. கோவில் மூலஸ்தானத்தில் கடவுள் நான்கு கைகளை மாணவர்களுக்கு காட்டு இரகசியம்

உலகத்திலுள்ள மானவ ஜனங்களில் அநேகர்களுக்கு ஈஸ்வர பக்தியென்பது எள்ளளவேணும் இராமல் எப்பொழுதும் குடும்ப விஷயத்திற்காக வேண்டும் காரியங்களிலேயே அவர்களின் காலத்தைப் போக்கி அதோகதிக்குப் பாத்திரங்களாகின்றார்கள். அவர்களின் ஜனன மரணங்களைப் போக்கடிப்பதற்காக பெரியோர்கள் சில விஷ்ணு கோவில்களும், இன்னும் அனேக தேவதை களின் கோவில்களையும், கட்டி வைத்தனர். கோவில்களில் இருக்கும் கடவுளைத் தரிசிப்பதற்காக ஸ்திர் புருஷர்கள் கோவில் மூலஸ்தானத்திற்குள் சென்று அர்ச்சகரிடம் தேங்காய் களையும் கற்பூரகக் கட்டிகளையும் கொடுப்பார்கள். அர்ச்சகர் தேங்காய்களை உடைத்துக் கடவுளுக்குக் காட்டுவார். அப்பொழுது மூலஸ்தானத்திற்குள்ளிருக்கும் ஸ்திரீ புருஷர் களெல்லோரும் கற்பூர ஆரத்தியைப் பார்த்தவுடன் இரண்டு கைகளையும் குவித்து, அவர்களெல்லோரும் அவரவர் களுக்கு வேண்டும் வரங்களை கேட்டுக் கொள்வார்கள்.

அப்பொழுது கல் உருவமாய் நின்றிருக்கும் கடவுளானவர். உங்களை ரக்ஷிப்பதற்காக நான் நான்கு கைகளுடன் நின்றிருக்கின்றேன் பாருங்கள். நீங்கள் என்னை எந்த வரம் கேட்க வேண்டுமோ, அந்த வரம் கேட்காமல் இரண்டு கைகளையும் குவித்துத் தண்டம் சமர்ப்பித்து, மிகவும் அல்பமானதும், சாஸ்வதமாய் இராமல் சில நாளைக்குள் அழிந்து போகத்தக்கதுமாகிய சொல்பமான வரங்களை மிகவும் பெரிய வரமென்று எண்ணி என்னை கேட்கின்றீர்கள்.

இரண்டு கைகளையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கடவுளாகிய என்னைக் கும்பிடும் கருத்து என்னவென்றால், உனக்குள்ளிருக்கும் ஜீவாத்மாவை பரமாத்மாவாயிருக்கும் உம்மில் சேர்த்துக் கொள்ள வேண்டு''மென்னும் குறியே யென்று தெரிந்து கொள்ளுங்கள். ஆனால், நீங்கள் என்னைப் பார்த்து இரண்டு கைகளையும் குவித்துக் கேட்ட வரங்களை விட இன்னும் பெரிய வரம் கொடுக்க காத்துக் கொண்டிருக் கின்றேன். நான் உங்களுக்குப் பெரும் வரம் கொடுப்ப தாயிருந்தால் நீங்கள் என்ன செய்யவேண்டுமோ அதை இனி சொல்லப்போகின்றேன். அதுபோல் செய்வீர்களாகில் உங்களுக்குப் பெருத்த வரம் கொடுப்பேன்'' என்று பகவானான ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாள் சொல்லி, மறுபடியும் கீழே சொல்லப்போகின்றார்.



## 98. ஸ்ரீ பார்த்தசாதிப் பெருமாள் தம் இடது பாதத்தைக்காட்டிச் சொல்லுகின்றார்

இதோ என் இடது கையைப் பாருங்கள். அது இடது பாதத்தைக் காட்டுகின்றது. ஆதலால் நீங்கள் என் இடது பாதத்தின் மேல் திருஷ்ட்டியை நிறுத்திப் பிறகு உங்கள் மனதை எங்கும் வெளி வியவகாரங்களில் ஓடவிடாமல் செய்து என் பாதத்தின் மீதே திருஷ்ட்டி வைத்துப் பிறகு, அதையும் மறந்து எந்த எண்ணங்களுமில்லாமல் சும்மாயிருக்க வேண்டும்.

பார்த்தசாரதிப் பெருமாளாகிய நான் க்ஷண காலமாகிலும் சும்மாயிராமல் எப்பொழுதும் மௌன சமாதி நிஷ்ட்டையிலேயே நிறைந்திருக்கின்றேன். நான் கல் உருவமாய் நின்று மௌன சமாதியிலிருக்கும் என்னைத் தரிசிக்க வரும் ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களும், எதையும் நினையாமல் சும்மாயிருங்களென்று சொல்ல வாயில்லாமலிருக்கின்றேன். ஆதலால் என்னைத் தரிசிக்கவரும் நீங்களெல்லோரும் சும்மாயிருங்களென்று வாயினால் சொல்வதற்குப் பதிலாய் இதோ என் வலது ஹஸ்தத்தை உங்களுக்குக் காட்டி, சும்மாயிருங்களென்று சைகை செய்கின்றேன் என்று சொல்லும் பாவனையாய் ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாள் தமது வலது ஹஸ்தத்தை எல்லோரும் சும்மாயிருங்களென்று சைகையாய்க் காட்டுகின்றார்கள்.

''நான் கல்லுருவமாய் நின்றிருப்பதுபோல் நீங்களும் உங்கள் மனத்தை எங்கும் வெளி வியவகாரங்களில் ஓடவிடாமல் கல்லைப்போல் செய்து விடுங்கள் அப்படிச்



செய்துவிடுவீர்களாகில் இராக்ஷதாகளைச் சம்கரித்த சக்கரம் இதோ என்று வலது கையில் இருக்கின்றது பாருங்கள். இந்தச் சக்கரத்தினால் உங்கள் மனத்தைக் கண்டித்து அதன்பிறகு, நான் உங்களை என்னில் ஐக்கியம் செய்துகொள்வேன். இவ்வாறு ஐக்கியம் செய்தபின், இக்கலியுகத்தில் ஒரு ஜீவன் இன்று என்னில் ஐக்கியமாகிவிட்டதென்று நான் மிகவும் சந்தோஷித்து அதன்பிறகு என் இடது கையிலிருக்கும் சங்கை வாயில் வைத்துப், பம், பம், பம் என்று பூரிப்பேன், என்னும் கருத்துடன் முன்னுள்ள பெரியோர்கள் கடவுளின் நான்கு கைகளையும் நான்கு விதங்களாய் கல் மரம் செம்பு முதலானவைகளினால் செய்து கோவில்களில் வைத்துக் காட்டினார்கள்.

## 99. பந்தமோக்ஷங்களுக்கு மனதே காரணம்

"ஓம் மநோ ஹித்விவிதம் ப்ரோத்தம் ஸுத்தஞ்சாஸுத்த
மேவச அஸநித்தம் காமஸங்கல்பம் ஸுத்தம் காமவிவர் ஜீவம்"
(ப்ரஹ்ம பீந்துபநிஷத்.)

*மனம் சுத்தம் அசுத்தம் என இரண்டு வகைப்படும். காமகுரோத லோப மோஹ மத மச்சராதி சங்கல்பத்துடன் இருக்கும் மனம் அசுத்தமான மனம். இதற்கு வாசிட்டம் பிரமாணம்.*

மெத்துகின்ற வாதனையை விட்டுவிட்டான் மேலா நலமுளதாஞ்
கத்தி சைத்தி ன்டைநின்று சைதன் னியத்திற சாட்டி யத்தி
லொத்து நடுநின் றலைவதுவே யுள்ளமாகும் மிவ்வுள்ளஞ்
சித்தின் முயல்வாற சித்தாகுஞ் செடத்தின் முயல்வாற் செடமாகும்

*காம குரோத லோப மோஹ மத மச்சராதி குணங்கள் நசிந்து, நல்ல குணங்கள், விஷய வைராக்கியம், ஆத்மா நாத்ம விவேகம் முதலானவைகள் உண்டாயிருக்கும் மனம் சுத்தமான மனம் என்று சொல்லப்படும் என்றால் ஆசையென்கிற பெரிய வாயையுடைய முதலையானது பிடித்திழுக்க அதனால் மரணமுண்டாய் சுழல்போல் சுழலுகின்றோமென்றறிப வர்கள் சுத்தமான மனத்தினால் அசுத்தமான மனதை நாசம் செய்வார்கள் என்றால், எந்த எண்ணம் உதித்தபோதிலும், அதை உதிக்காமல் சும்மாயிருப்பதே சுத்தமான மனம் இதற்கு வாசிட்டம் பிரமாணம்.*

பிறவிக் கடலிற் காதலென்னும் பெருவாய் முதலை பிடித்தீர்க்க
இறவுச் சுழியாற் சுழலுமவர்க் கிதயநாவா யெட்டாவா
மறமுற்றுளத்தை யுய்த்தாலே மாய்த்துப் பிறப்பில் வருந்தாமல்
உறவுற்றுனை நீயுய்லிப்பா யுயிர்க்கும் பிறரா லுய்வுண்டோ.

ஆதலால், இந்த மூன்று உலகமும் மனத்தின் சொரூப மாகவே இருக்கின்றன.

ஒரே பொன்னானது நாநாவித நாம ரூபங்களை யுடைய நாநாவித ஆபரணங்களாவதுபோல் ஓர் மனமே நாநாவித நாமரூபங்களையுடைய பிரபஞ்ச ரூபமாய் காணப்படுகின்றது. அப்படிப்பட்ட மனமே. நமக்குப் பெருத்த சத்துருவாயிருக்கிறது. இதற்கு உபதேச காண்ட படலமும் நெஞ்சறிவிளக்கமும் பிரமாணம்.

பிரகிரு தியெனச் சொல்லப்படு மாயை
　　யுமையிடத் தெம்பெருமா னென்னு
மரனை யாதரித் திருக்கும் பிரம
　　னாதியர்க்கு மயக் களிப்ப தாகும்
விரவு பசும்பொன் னணிப்பால் வெவ்வே
　　றாகுதல் போல மென்கலைக்கு நூல்போற்
பரவு பிரபஞ்ச முண்டாவதற் கதுவே
　　காரண மாய்ப் பலித்த தாமே.

பசும்பொன்னி னாமனொன்றிற் பணதிலே றானாற்போலே
விசும்பெலாங் கவந்தசோதி வெவ்வேறு தெய்வமாகி
உசும்பிசீ வாத்துமாக்க ளுடல்பல வானதன்மை
கசிந்துகண் ணுருகிநாகை லிங்கரைக் காண்பாய் நெஞ்சே.

இந்த மனமே சம்சார ரூபமாகவும், ஜகத் ரூபமாகவும் (மூன்று உலகங்களாகவும்) இருக்கின்றன. [illegible] துக்க சொரூபமாயிருக்கின்றது. அம்மனமே பால்ய யௌவன கௌமார (கிழத்தன)மாய் இருக்கின்றது. அதுவே, கால (யமன்) ரூபமாகவும், ஆணவ, மாய்கை, காம்யம் என மும்மலமாகவும் இருக்கின்றது. மனமே சங்கல்ப விகல்பங் களாகவும் என்றால் நினைப்பு மறப்புகளாகவும் ஜீவ ரூபமாகவும் புத்தி சித்தம் அஹங்காரமாகவும் அந்தக் கரணங் களாகவும் இருக்கின்றன. மனமே பந்தமாயிருக்கின்றது. மனமே ஆகாசாதி பஞ்ச பூதங்களாகவும், சப்த ஸ்பரிசாதி

பஞ்ச தன் மாத்திரைகளாகவும் அன்னமயாதி பஞ்சகோசங் களாகவும் ஞானேந்திரிப கர்மேந்திரிய பஞ்ச பிராணன் களாகவும், காமக் குரோத லோ மோஹ மத மச்சரங் களாகவும், சத்வ ரஜ தமோ குணங்களாகவும் இருக்கின்றன. ஜாக்கிரதை சொப்பன சுஷுப்த்தி என்னும் மூன்று அவஸ்தை களாகவும் இருக்கின்றன. அஷ்ட்டத்திக்குப் பாலகர்களும் அஷ்ட்டவசுக்களும் ஏகாதச ருத்திரர்களும் துவாதசாகித்தியர் களும் மனதாகவேயிருக்கின்றன. காணப்படும் எல்லா வஸ்துக்களும் மனதாகவேயிருக்கின்றன. மனமே நினைப்பு மறப்புகளாகவும், ஞான அஞ்ஞானங்களாகவும் குரு (ஞானம்) சிஷ்யன் (அஞ்ஞானங்)களாகவும், மாயை அவித்தையாகவும் இருக்கின்றன. நாம ரூபங்களுடைய இந்தச் சராசர பிரபஞ்சமெல்லாம் மனதாகவேயிருக்கின்றன.

சுரு।। இதஸ்ச் சேதஸ்ச்ச ஸுயக்ரம் வ்யர்த்தமே வாபிதாவதி
மநோ தூரதரம் யாதி க்ராமே கௌலேயகோயதா."

(மஹோபநிஷத்)

மனம், இது நல்லது இது கெட்டது என்று அறிந்து கெட்டதை விட்டுவிட்டு நல்லதை எடுத்துக் கொள்ளாமல் எல்லா வஸ்துக்களின் மீதும் ஆசையுடையதாய்க் கிராமத்தி லிருக்கும் நாயானது. யாதொரு வேலையுமில்லாமல் விருதாவாய் இருக்கும். இங்கும் அங்கும் குடுகுடுவென்று ஓடித் திரிவதுபோல் இந்த மனமானது க்ஷணத்திற்குள்ளே சொர்க்க மத்ய பாதாளலோகம் வரையில் ஓடி அலைந்துத் திரிந்து கெட்டு வந்து விடுகிறது. மனமானது, இப்படி நான்கு பக்கங்களிலும் ஓடித் திரிவதனால், எல்லோருக்கும் ஜநந மரண துக்கங்கள் சம்பவித்துக் கொண்டேயிருக்கின்றன.

சுரு "ஸ்வலிகல்பித தந்மாத்ரா ஜாரலப்யந்தர வர்திச
பரம் விவஹதாமேதி ஸ்ருங்கவா பத்தஸிம்ஹவத்"

(மஹோபநிஷத்)

ஜீவன், மனோவசமாய் என்றால், மனதுடன் கட்டுப் பட்டு விஷயவாசனாலோலனாய்; அதாவது அனேகவிதங் களாகிய எண்ணங்களுடன் சிங்கமானது சங்கிலியினால் கட்டுப்பட்டதுபோல் இந்த ஜீவன் அனேக ஆசைகளுடன் கட்டப்பட்டு, ஜநந மரண (இறப்பு பிறப்பு) என்கிற சமுத்திரத்தில் மூழ்கி, சுகதுக்கங்களை அனுபவித்துக் கொண்டிருந்தது. கடைசியில் அந்த சரீரத்தைவிட்டு எப்படி ஓடி விடுகிறதென்றால்,

'தோதாஹை பஞ்ஜர்மேதேக்! கீதா போல் போல்கோ உஸ்மே கைஸாஸோ தாதேக்! ஜாதா உப்பர் உட்கர்தேக்! தோதா ஸாத்ஜான் பராபர் ஜாத்தாதேக் ஜ்வா''

இந்தத் தூல சரீரத்தில் எழுபத்தீராயிரம் நாடிகளுண்டு. அதில் பதினேழு தத்துவங்களையுடைய சூக்ஷும சரீரம் ஒன்று இருக்கின்றது. அது யாதெனில் மனம் புத்தி இரண்டு. சூட்சும ஞானேந்திரியங்கள் ஐந்து, பிராண வாயுக்கள் ஐந்து இந்தப் பதினேழு தத்துவங்கள் கூடினதே சூக்ஷும சரீரம் இந்தச் சூக்ஷும சரீரத்திற்குள் ஜீவாத்மா என்னும் கிளியானது நடுநாயகனாயிருந்துகொண்டு, கீதைகளையும் வேத சாஸ்திரங்களையும் பார்த்துக்கொண்டு, கேட்டுக்கொண்டும் அந்தக் கிளி என்னும் ஜீவாத்மா எப்படித் தூங்கிக் கொண்டிருக்கிறது பார்! இவ்வாறாக தூங்கிக் கொண்டிருந்து அந்தத் தூலசரீரத்தைவிட்டு அதாவது மரணமடைந்து கிளியாகிய ஜீவாத்மா சூக்ஷும சரீரத்துடன் (கண்களுக்குக் காணாத சரீரத்துடன்) அதாவது மனம் புத்தி சித்த அஹங் காரங்களுடன் சேர்ந்து ஆகாசமார்க்கமாய்க் கிளம்பிச் சென்று அவனவன் செய்த புண்ணிய பாவகர்மத்திற்குத் தக்கபடி அந்தந்தத் தாய் கர்ப்பத்திலிருக்கும் தூல சரீரத்தில் போய்ச் சேர்ந்து பிறகு சிசுவாய்ப் பிறக்கின்றது. ஆதலால் இப்படிப் பட்ட ஜீவர்களின் மீது மோஹம் வைக்கலாகாது.

நாட்டுவார் சித்தரெல்லாம் பேதமாக
நலம் போலே சாத்திரங்கள் கட்டினார்கள்
பூட்டியே மனிதரெல்லாம் நூலைப் பார்த்துப்
பூரணமாய் அண்டமதைப் பாரா மற்றான்
காட்டிலே திரிந்தலைந்த மானைப் போல
கபடமாய் வாய்ஞானம் பேசுவார்கள்
கூட்டிலே அடைந்திருக்கும் குயிலைப் பாரார்
கூறாத மந்திரத்தின் குறியைப்பாரே.

*ஸ்ரீ பகவத் கீதை அத்தியாயம் 2 சுலோகம் 11-ல் ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லுகின்றார்.*

அஸோர்யா நந்வஸோ சஸ்த்வம் ப்ரஜ் ஞாவா தாஸ்ச்ச பாஷஸே
கதாஸூ குந்கதாஸூபச்ச காநுஸோந்தி பண்டிதாஹ

*கிருஷ்ணன் : ஓ அர்ஜுநா! உன் விஷயத்தைப் பார்க்குமளவில் மிகவும் விச்சிரமாயிருக்கின்றது. எப்படியென்றால் நீ சொல்லுகின்ற வார்த்தைகளோ சகல தர்மங்களையும் அறிந்த பண்டிதர்களுடைய வார்தைகளைப் போல் இருக்கின்றன. துக்கிக்கப்படாத பீஷமத் துரோணர்களின் மரணத்தைக் குறித்து துக்கிப்பதைப் பார்த்தால் எந்தத் தர்மங்களையும் நீ அறியாத பாமரனைப்போல் காணப்படுகின்றாய். வார்த்தையிலே! விவேகிகளைப் போல பேசுகின்றாய்.*

*அஃதெப்படி என்றால் பூஷ்மத் துரோணர்கள் மிகவும் பெரியோர்களென்றும், பூஜ்ஜியர்களென்றும், இவர்களைக் கொல்வது தர்மமல்லவென்றும் சொன்னாயல்லவா? அவர்கள் உனது சத்துக்களாகிய கௌரவ சைன்னியத்திற்கு அதிபதிகளாயிருந்து இப்பொழுது உங்களுடன் யுத்தம் செய்ய முயன்று ஆயுதபானிகளாய் வந்திருக்கின்றர்களால்லவா? யுத்தத்தில் ஆயுதபாணியாய் வந்தவன் பிரம்ம ஞான சம்பன்னனா யிருந்தபோதிலும் அவனைக் கொல்வதனால் பாவமில்லையென்று தர்ம சாஸ்திரங்கள் முறையிடு*

கின்றன. இப்பொழுது யுத்தத்தில் உன்னைக் கொல்வதற்கு ஆயுதபாணிகளாய் வந்திருக்கும் பீஷ்மத் துரோணர்கள் எப்படிப்பட்ட மஹாநு பாவர்களாயிருந்த போதிலும்சரி அவர்களைக் கொல்வது அதர்மமென்று நினைப்பது வியர்த்தமேயல்லவா?

அர்ஜுநன் - ஓ கிருஷ்ணமூர்த்தியே! இவர்களைக் கொல்வது அதர்மமல்லவென்று சொன்னீரல்லவா? இவ்விருவர்களிலும் பீஷ்மருடைய விஷயம் இருக்கட்டும், துரோணாச்சாரியார் பிராமணோத்தமரல்லவா? சாமான்னிய பிராமணராயிருப்பவரைக் கொல்வது பாவமாயிருக்க, பிராமணர்களில் இவர் மிகவும் சிரேஷ்ட்டமாயும், எங்களுக்கு குருவுமாகிய இவரைக் கொல்வது எனக்குப் பாவமல்லவா?

கிருஷ்ணன் : ஓஹோ! அவ்வாறாகவோ எண்ணுகின்றாய்? அதிலுள்ள தர்ம குக்ஷுமத்தை நீ அறியவில்லையே! நீ சொல்லியதுபோல் பிராமணனைக் கொல்வது பாவ காரியமே! சாந்தமே குடிகொண்டுள்ள பிராமணனாயிருந்த போதிலும் அவன் ஆயுதங்களைத் தரித்து யுத்த களத்தில் வந்து நின்றுவிட்டால், அவனைக் கொல்லுவதே தர்ம மென்று தர்மசாஸ்திரங்களும் வேதங்களும் முறையிடு கின்றன. ஆதலால், இப்பொழுது துரோணாசாரியார் ஆயுத பாணியாய் உன்னுடன் யுத்தம் செய்ய வந்திருக்கின்றா ரல்லவா! அப்படிப்பட்டவரைக் கொல்லுவது அதர்மமல்ல.

அர்ஜுநன். ஐயா கிருஷ்ணமூர்த்தியே! இப்பொழுது நீர் சொல்லியதை யோசிக்குமளவில் இந்த பீஷ்மத் துரோணர் களைக் கொல்லுவது பாவ காரியமல்லவென்று தோன்று கிறது. ஆயினும் இப்பொழுது எனக்கு உண்டாயிருக்கும் துக்கத்திற்கு அதுவே முக்கிய காரணமல்ல. எனக்குக் குருக்களாயும் பந்துக்களாயும் இருக்கப்பட்டவர்களைக் கொள்வதற்கு இஷ்ட்டமில்லாமல் விசனப்படுகிறேன்;

கிருஷ்ணன் அப்படி வியசனப்படுவது அறியாத் தன்மையினாலேயன்றி வேறல்ல; நீ ஆத்மாநாத்ம விவேகம் அறியாதவனாயிருப்பதுபோல் காணப்படுகிறது. அப்படி ஆத்மாநாத்ம விகேவமுடையவர்கள் ஜீவித்திருக்கப்பட்டவர்களைக் குறித்தேனும், அல்லது இறந்தவர்களைக் குறித்தேனும் உன்னைப்போல் இப்படி வியாசனப்படமாட்டார்கள்.

இதுவரையில் நீ சொல்லி வந்ததில் குல க்ஷயத்திற்குக் காரண பூதர்கள் நரலோகத்திற்குப் போவார்களென்றும் துரியோதனாதிகள் மித்திர துரோகமும் பாவகாரியங்களும் செய்ததனால் அவர்களுக்கு நரகப் பிராய்தி உண்டாகுமென்றும் அவர்களைக் கொல்லாமலிருப்பதனால் உனக்குப் புண்ணியலோகம் உண்டாகுமென்றும் இவை முதலான சங்கதிகளைச் சொன்னாயல்லவா? இவர்கள் யுத்த களத்தில் இறந்த பிறகு இவர்களின் ஜீவன், புண்ணியலோக்திற்கேனும் பாவலோகத்திற்கேனும் எப்படிப் போகும்?

அர்ஜுனன் : இவர்களின் சரீரம் மாத்திரம் இறக்கின்றதேயொழிய ஜீவன் இறப்பதில்லை இவ்விடத்தில் இந்த தேகத்தை விட்டபொழுது இவர்களின் ஜீவன் புண்ணிய லோகத்திற்கேனும் அல்லது பாவலோகத்திற்கேனும் போகின்றன.

கிருஷ்ணன் : ஆனால், இந்த தேகம் வேறு ஜீவன் வேறு என்றல்லவோ உனது அபிப்பிராயம்.

அர்ஜுனன் : ஆம். தேகம் வீட்டைப் போன்றது. ஜீவன் வீட்டில் குடியிருப்பவனைப் போன்றது. ஒரு வீட்டில் குடியிருப்பவன் அந்த வீட்டைவிட்டு வேறு வீட்டிற்கு எப்படிப் போகின்றானோ, அதுபோல் இந்த ஜீவன் இத்தேகத்தைவிட்டு மற்றொரு தேகத்தில் போய் பிரவேசிக்கின்றது.

கிருஷ்ணன் : நல்லது, இந்த யுத்த களத்தில் பீஷ்மத் துரோணர்கள் இறந்தால் இவர்களின் ஜீவன் எப்படியாகும்?

அர்ஜுனன் : அவர்களின் ஜீவன் பரலோகத்திற்கே போகும்.

கிருஷ்ணன் : பரலோகம் என்றால், புண்ணியலோகமா? அல்லது பாவலோகமா?

அர்ஜுனன் : பரலோகமென்பது புண்ணியலோகமே யாம் அவர்கள் எப்பொழுதும் புண்ணிய கார்யங்களைச் செய்த மகான்களேயொழி, பாவ கார்யங்களைச் செய்தவர்கள் உளர். ஆதலால், அவர்களுக்குச் சொர்க்காதி புண்ணிய லோகமேலையக்குமென்று தோன்றுகிறது.

கிருஷ்ணன் : நல்லது அவர்களின் ஜீவன் புண்ணிய லோகத்தை அடையுமல்லவா? அப்படி அவ்விடம் சென்ற பிறகு அவர்கள் இவ்வுலகம் அனுபவித்த சுகத்தைவிட அதிக சுகத்தை அனுபவிப்பார்களா? அல்லது துக்கத்தை அனுபவிப்பார்களா?

அர்ஜுனன் : அவர்கள் இவ்விடத்தில் அனுபவித்த சுகத்தைவிட அதிக சுகத்தையே அனுபவிப்பார்களேயன்றி துக்கத்தை அனுபவிக்கமாட்டார்கள் என்றே தோன்றுகிறது.

கிருஷ்ணன் : அவர்கள் அவ்விடத்தில் மோக்ஷத்தை அடையத்தக்க யோக்கியதையுடையவர்களாயிருந்து எப்பொழுதும் மோக்ஷ சாம்ராஜ்ஜிய பதவியை அனுபவிக்க வேண்டுமல்லவா? அப்படியிராவிட்டால் அவர்களின் புண்ணியத்திற்குத் தக்க சௌக்கியத்தை அனுபவித்த பிறகு 'க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஷக்தி, என்னும் பிரமாணரீதியாய் புண்ணியம் முடிந்தவுடன் அவர்கள் மறுபடியும் இவ்வுலகத்திற்கு வரவேண்டுமல்லவா? அப்பொழுது அவர்களுக்கு இதைவிட மேலாகிய ஜன்மம் உண்டாகுமென்று எண்ணுகின்றாய்? அல்லது தாழ்ந்த ஜன்மம் உண்டாகுமென்று எண்ணுகின்றாயா?

அர்ஜுனன் : அவர்கள் புண்ணிய புருஷர்களாதலால் அவர்களுக்கு இதைவிட மேலாகிய ஜன்மமே உண்டாகு மென்று தோன்றுகிறது.

கிருஷ்ணன் : ஓ அர்ஜுநா! இப்பொழுது உன் வார்த்தையால் என்ன ஏற்படுகிறதென்றால், நீ இப்பொழுத யாரைக் குறித்து வியசனப்படுகிறயோ, அப்படிப்பட்ட பீஷ்மத் துரோணர்கள் இந்த யுத்த களத்தில் மரணமடைந் தால், பரலோகத்தில் இதைவிட மேலான சுகத்தை அநுபவிப் பார்களென்றும், அவர்கள் மறுபடியும் இவ்வுலகில் ஜன்மிக்க வேண்டியதாய் நேரிட்டால் இதைவிட சிரேஷ்ட்டமான ஜன்மம் எடுப்பார்களென்றும் ஏற்படுகிறதல்லவா? அப்படிப் பட்ட இவர்களைக் குறித்து நீ வியசனப்படுவதேன்? இது அப்படியிருக்கட்டும், உன்னுடைய சத்துருக்களாகிய துரியோதனாதிகள் மரணமடைந்தால் அவர்களுக்குப் பர லோகத்தில் எப்படிப்பட்ட கதியுண்டாகுமென்று எண்ணுகின்றாய்?

அர்ஜுனன் : அவர்கள் இராஜ்ஜியத்தை அபகரித்தவர் களும், மித்திரத் துரோகிகளும் பரமாத்மாக்களுமாய் இருப் பதனால். அவர்களுக்கு எவ்விடம் நரகலோகமே சம்பவிக்கும் மறுபடியும் அவர்கள் இவ்வுலகில் ஜன்மிக்க வேண்டியதாய் நேரிட்டால் அப்பொழுது இதைவிடத் தாழ்ந்த ஜன்மமே உண்டாகுமென்று தோன்றுகிறது.

கிருஷ்ணன் : அவர்களுக்கு அப்படி உண்டாவதனால் உனக்கு ஏதாகிலும் வியசன முண்டாகுமா!

அர்ஜுனா : அவர்கள் எனக்குத் துரோகம் செய்தவர் களாதலால் அவர்களுக்குச் சம்பவிக்கும் துக்கத்திற்காக எனக்கு வியசன முண்டாகமாட்டாது.

கிருஷ்ணன் : நல்லது நீ யாரைக் குறித்து இப்பொழுது வியசனப்படுகிறாய்?

*அர்ஜுநன் : பீஷ்மத் துரோணாதிகள் மரணமடைந்தால் அவர்களுக்கு நல்ல கதியே உண்டாகும். அந்த விஷயத்தில் எனக்கு வியசனம் ஒன்றுமேயில்லை. ஆனால் அவர்கள் நமது எதிரில் இல்லாமல் போகிறார்களென்றே வியசனப்படுகிறேன்.*

சலோ வாயுநந் ஜாயதே மேகஹ புநஸ்தேகைநவ லீயதே
மநஸா கல்பயதே பந்தோ மோக்ஷஸ்தே நைவகல்ப்யதே

*நிர்மலமான ஆகாயத்தில் மேகங்கள் உண்டாவதற்கும் மறுபடியும் அந்த மேகங்கள் இல்லாமற்போவதற்கும் வாயுவே காரணமாயிருப்பதுபோல், மனிதர்களுக்குப் பந்தம் உண்டா வதற்கும், மறுபடியும் அந்தப் பந்தம் நசித்துமோக்ஷம் உண்டாவதற்கும் மனமே காரணமாயிருக்கின்றது என்றால், மனம் சலித்தால் உலகமாகும். சலிக்காவிட்டால் மோக்ஷ மாகும். இந்த மனத்திற்கு நீங்காத சலனம் (அசைவு) எப்பொழுதும் இருந்து கொண்டிருப்பதே மாயை எனப் படும். அச்சலனம் நின்றால் மாயையில்லை. எல்லோருடைய மனோ சலனத்தை நிறுத்திவிட இந்த ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம் ஒன்றே போதுமானதாயிருக்கின்றது. இதற்கு வாசிட்டம் பிரமாணம்.*

அலைக மந்த மனமுல்கா மலைவுபோகின் மனங் கெடிமின்
நிலையே தவமூ நூற்கருத்தும் நிமலவிடுந் துணிபொருளுந்
தலைவி வலைவே மனமாயை தொடர் வாதனையுமதன் பெயரா
மலையு மனமு மதுவதனை மாறா விசாரத் தான்மாய்ப்பாய்

*இந்த ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரக்ஷஸ்ய விசாரணையினால், மாயையுடன் கூடியிருக்கும் மனதை நாசம் செய்ய வேண்டும். இந்த மனம் நசித்தால் உலகத்தையெல்லாம் அழிக்கத்தக்க சுழல் காற்று வந்தாலும் சமுத்திரம் பொங்கி பிரளயகாலம் வந்தாலும் பூமி உருகும்படி எரிகின்ற பன்னிரண்டு சூர்யர்கள் வந்தாலும்*

மனத்திற்குத் துன்பமேயில்லை. நானென்னு அஹங்காரங் கொண்டிருக்கும் மனோ வாசனையை நசிக்கச் செய்தால், ஆணவம் மாய்கை காம்யம் ஆகிய இம்மூவரும் வலைக்குள் அகப்பட்ட பக்ஷியைப்போல் இறப்பார்கள். இதற்கு வாசிட்டம் பிரமாணம்.

பொருகத் திரண்ட முகிலெல்லாம் பெருங் காற்றாலே யொருவுதல்
வருகற்பனை நாசத்தாலே மனம்போயிறக்கு மனமிறந் தாற்போல்
பொருகற் பாந்த மாருதமும் பொங்கு கடலும் புவியனைத்து
முருகச் சுடுபன் னிருதிரு மொருகால் வரினு மிடருண்டோ

நிலைபெறும்படி நானெனும் வாதனை நின்றால்
வலைபுகுந்த புள்ளாமென மூவரு மடிவர்
கொலைசெயற் கெளிதாசையே யுயிற்கொளாங் கூற்றாய்
தொலைவிறுன்பமா நிராசையே துன்பமி லின்பம்.

சுரு॥ யதோ நிர்விஷய ஸ்யாஸ்ய மநஸோ முக்திரிஷ்யதே
தஸ்மாந் நிர்விஷயம் நித்யம் மநஹ கார்யம் முமுக்ஷுணா
(ப்ரஹ்மயிந் தூபநிஷத்)

மனம் எப்பொழுது விஷய சம்பந்த மில்லாமலிருக் கின்றதோ அதாவது புத்திரமித்திர களத்திர கிருகதன தாந்நி யாதி சம்பத்துக்களும் ''இது எனது'' ''இது என்து'' என்னும் ''மம'' காரமும், இவைகளுக்கெல்லாம் நானே காத்தெனன் னும் ''அஹங்'' காரமுமாகிய இவ்விரண்டும் பூர்வஜன்மங் களின் வாசனையினால் ஜீவனுடன் வட அனுசொரூபமாய் (கண்களுக்குக் காணாமல்) தாயின் கர்ப்பத்தில் பிரவேசித்துச் சிசுவாய்ப் பிறந்தவுடன் நான் எனது என்னும் அஹங்கார மமகாரங்கள் சிசுவின் கர்ப்பத்தில் பிரவேசித்துச் சிசுவாய்ப் பிறந்தவுடன் நான் எனது என்னும் அஹங்கார மமகாரங்கள் சிசுவின் கர்ப்பத்திலேயே அடங்கியிருந்து பிறகு சிசுவானது விருத்தி அடையவடைய முன்சொல்லிய ''நான்'' எனது என்னும் அஹங்காரங்களும் ஆசாபாசங்களும் சிசுவுடன்

கூடவே விருத்தியாய்க் கொண்டே வருகின்றன. ஆதலால் நாமெல்லோரும் சிறு பிள்ளைகளாயிருந்த பொழுது எந்த ஆசாபாசங்களும்நமக்கு இல்லாமலிருந்தன. பிறகு நாம் விருத்தியடையவடைய அந்த ஆசாபாசங்களும் நம்முடன் கூடவே விருத்தியாகிக் கொண்டே வருகின்றன. ஆதலால் நாமெல்லோரும் சிறு பிள்ளைகளாயிருந்தபொழுது எந்த ஆபாசங்களும் நமக்கு இல்லாமலிருந்தன பிறகு நாம் விருத்தியடையவடைய அந்த ஆசாபாசங்களும் நம்முடன் கூடவே விருத்தியாகி விருத்தியாகிக் கொண்டே வந்து விட்டன. இவைகள் யாவும், மனத்திற்கு இல்லாமல் எப்பொழுது நசித்து விடுகின்றதோ அப்பொழுதே ஜீவன் மோக்ஷத்தை அடைகின்றது. ஆதலால் மோக்ஷாயிச்சை உடையவர் களெல்லோரும் மனதை விஷய சம்பந்தமில்லாமல் பரிசுத்த மாய்ச் செய்து கொண்டால் அப்பொழுது அவன் யோகியா வான். இதற்கு தேவிகாலோத்திரம் பிரமாணம் :

வளியென மறுகுஞ் சித்த
நெஞ்சிலே மருவி நிற்கும்
தெளிவுற நடுவு கீழ்மேற்
செலாவகை நிறுத்திக் கொண்டால்
ஒளியுறு முள்ள மொன்றும்
பாவியா துறவே நோக்கி
எளியவை பொருள்மேல் பற்றற்
றிருப்பவன் யோகி யாவன்.

ஆதலால் இருதயத்தில் மேற்சொல்லிய காமக் குரோதாதி அழுக்குகள் இல்லாமற் செய்து மனதைப் பரிசுத்த மான நிலையில் நிறுத்தி வைத்தால் தனது நிஜ சொருபத்தை அடையலாம் அப்படி மனது பரிசுத்தமாகாமல் அந்த மனதின் கதி என்ன ஆகிறதென்றால்

"யைஷா ஸ்வபாவாபிமதம் ஸ்வயம் ஸங்கல்ப்ய தாவதி
சீத்சைத்யம் ஸ்வயம் மம்வாநம் மாநாரந்மந உச்யதே"

(மஹோபநிஷத்)

இந்த மனோ வாசனை தனக்கிஷ்ட்டமான விஷயங் களைச் சங்கல்பித்துக்கொண்டு அந்த விஷயங்களிலேயே விசேஷமாய் ஓடிக்கொண்டிருக்கம் இப்படி மனம் சற்றாகிலும் வாடாமல், நாளுக்கு நாள் விருத்தியடைந்து கொண்டேயிருக்கும்.

"ஸங்கல்பநம் மநோ வித்தி ஸங்கல்பஸத் தந்நவித்யதே யத்ர ஸங்கல்பநம் தத்ர. மநோஸ்தீ த்யவகம்யதாம்."

(மஹோபநிஷத்)

சங்கல்பத்தையே (எண்ணங்களையே) மனம் என்று சொல்லப்படும்; சங்கல்பத்தைவிட மனம் வேறானதல்ல சங்கல்பம் எங்கு பிறக்கின்றதோ அங்கு மனம் இருக்கிற தென்று கண்டிதமாய்த் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த மனம் உதிக்குமிடம் நான்முகன் உதித்தவிடமென்று முன் சொல்லியிருக்கின்றோம். அந்த இடத்தை ஆகாய ரூபமாய்ப் பார்த்தால் அதாவது வெளியாய்ப் பார்த்தால்,

"எங்குஞ் சிவமே இரண்டற்று நிற்கு நெஞ்சே
தங்கும சுகநீ சலியாதே – அங்கிங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானும் பரம்."

என்னும் ஸ்ரீ தாயுமானவர் வாக்கியரீதியாய் எங்கும் ஓடித் திரியும் மனதை ஓடவிடாமல் முன் சொல்லியது போல் ஆகாய ரூபமாய் (வெளியாய்) நிறுத்தினால், அப்பொழுது, தானே தானாகின்றான் அதாவது எங்கும் நிறைந்திருக்கும் பரிபூரண பரப்பிரம்மத்தில் ஐக்கியமாகின்றான்.

"வீரஞ்சிரூபாந் மநாஹ கல்பிதத்வாத் ஜகத் ஸ்திதேஹே தாவத் ஸ்திதிரியம் ப்ரோக்தா நந்நாஸே நஸமாப்நுயாத்"

(மஹோபநிஷத்)

*சங்கல்ப ரூபமாயிருக்கும் மனத்தினாலேயே இந்தப் பிரபஞ்சம் கற்பிக்கப்பட்டது; அப்படிப்பட்ட மனதே சதுர்முக பிரம்மதேவனென்றும் சிருஷ்டிக்குக் காரண மென்றும் சொல்லப்படும்.*

"சித்தமேவஹி ஸம்ஸாரோ ராகாதி களேஷ தூஷிதம்
ததேவதைர்வி நிர்முக்தம் பவாந்த இதிகத்யதே."

(மஹோப நிஷத்)

*மனதே, ராகத்துவேஷ காமக்குரோதாதி விருத்திகளாகவும் ஈஷணாத்திரயங்களாகவும் இருக்கின்றன. இவ்வித விகார முடைய மனதே. மஹா சம்சாரமாயிருக்கின்றது. ராகத் துவேஷ காமக்குரோதாதிகள் ஈஷணாத் திரயங்கள் முதலான வைகளைப் பிரம்ம ஞானத்தினால் நசிக்கச் செய்வதே மனோ நாசமென்று சொல்லப்படும். அந்த மனோ நாசமே மோக்ஷம்.*

சொல்லுகின்றேன் என்மகனே மாணாகேளு
சூட்சுமெல்லா மவனுடைய சூட்சமல்லால்
வெல்லுவதற்கு வேறுமொரு விதமுங்காணோம்
வெட்டவெளி யொன்றுநிசம் வெளியே மைந்தா
அல்லுகின்ற ஆன்மாவே ஒன்றே தெய்வம்
அவனியிலே தெய்வமுந்தா னையாயில்லை
தள்ளுகின்ற கருவிகளைத் தள்ளனாக்கால்
தானவனைத் தன்னுள்ளே அறிய லாமே.

"தஸ்ய சஞ்சலதா யைஷாத்வித்யா. வாசநாத்மிகா
வாஸநா பரநாத ந்மீதாம் விசாரேண விநாஸ்ய"

(மஹோப நிஷத்)

*அலைந்து கொண்டிருக்கும் மனதே அவித்தியா, (அஞ்ஞான) வாசனையென்று சொல்லப்படும். அதை ஆத்ம விசாரணையினால் நாசம் செய்ய வேண்டும்.*

நதநாந்யுப குர்வந்தி நமித்ராணி நபாந்தவாஹ
நகாயுக்ளேஸ் வைதுர்யம் நதீர்த்தா யதநாஸ்ரயஹ
கேவலம் தந்மநோமாத்ர ஜயேனா ஸாத்பதே பதம்

(மஹோப நிஷத்)

குருதே கங்கா ஸாகரகமநம் வ்ரத பரிபாலந மதவா தாநம்
ஞாந விஹிநே ஸர்வமநேந முக்தர் ந பவதி ஜந்மஸதேக்,

(ஸ்ரீசங்கராச்சாரியார்)

*பிராணப் பிரயாண காலத்தில் தனம் மித்திரர்கள் பந்துக்கள் முதலானவர்களும் உபகாரம் செய்யமாட்டார்கள். சரீர நஷ்டத்துடனிருக்கும் ஏகாதசி முதலிய உபவாசகள்; புண்ணிய தீர்த்தயாத்திரை தேவாலய தரிசனம் பிரம்மசரியம். சந்நியாசம் முதலியவைகளினால் மோக்ஷம் உண்டாக மாட்டா.*

*ஆனால், சஞ்சல ரூபமாயிருக்கும் மனதை ஜயித்தால் மோக்ஷம் அடையலாம் ஆதலால் எல்லா ஜயத்தைவிட மனோஜயமே சிரேஷ்டமானது.*

சுரு॥ மந ஏவமனுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷ யோஹோ
பந்தாய விஷயாஸந்'தம் முச்த்தை நிர்விஷயம் ஸ்ம்ருதம்.

*ஒவ்வொரு புருஷனுக்கும் அவன் மனதே பந்த மோக்ஷத்திற்குக் காரணமாயிருக்கின்றது. ஸ்திரீ, சந்தானம் புஷ்பம் தாம்பூலாதி விஷயங்களில் ஆசையுடைய மனம், அசுத்தமான மனம் அதனால் ஜீவனுக்கு பக்தமுண்டாகிறது. இதற்கு திருஷ்ட்டாந்தம் ஸ்ரீ கிருஷ்ணர்ஜுந ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத் கீதை அத்யாயம் – 8 சுலோகம் – 1 சொல்லுகின்றோம்.*

உத்தரே த தமநாதமாநம் நாத்மாந வேஸா தமயக்
ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராமைவ ரிபு ராத்மஹ

கிருஷ்ணன் : பிரதி புருஷனுக்கு அவன் மனதே பந்த மோக்ஷத்திற்குக் காரணமாயிருக்கின்றது. அந்த மனதைவிட புத்தி சிரேஷ்ட்டமானது அந்தப் புத்தியினால் மனதை வசப்படுத்திக் கர்மமென்னும் சத்துருவை ஜயிக்க வேண்டு மென்று இதுவரையில் அத்தியாயம் – 3. சுலோகம் 42, 40–ல் சொல்லியிருந்தேன். ஆதலால், தன் மனதினாலேயே தன்னைச் சம்சாரமென்னும் சமுத்திரத்திலிருந்து கரையேற்றிக் கொள்ளவேண்டும். அப்படிக்கல்லாமல் தன் மனதினா லேயே தன்னைச் சம்சார துக்கத்தில் அதாவது. நரகத்தில் விழும்படிக்குக் கெடுத்துக் கொள்ளலாகாது ஏனென்றால்.

பரிசுத்தமுடைய தன் மனதே தனக்குப் பந்துவாயிருக் கின்றது. ஒவ்வொருவரும் மோக்ஷம் என்றால் ஜீவாத்மா பரமாத்மா ஐக்கியம் அல்லது நரகம் அதாவது துக்கம் அடைவதற்குக் காரணம் அவனவன் சொந்த பிரமத்தின்மே யாம். உலகத்தில் மாயையால் வந்த மனைவி புத்திரர் பந்துக்கள் சினேகிதர்கள் முதலானவர்களெல்லோரும் மோக்ஷத்திற்கு விரோதிகள் என்று அறியக் கடவீர்களாக.

ஆதலால், இவர்களெல்லோரும் பந்துக்களாக மாட்டார்கள். தனக்குத்தானே பந்துவாயும், சுகிருதனாயும் ஆகவேண்டும். தன் மனதே தனக்குப் பந்து, என்றால் பரமாத் மாவே தனக்குப் பந்து, அதாவது சற்று நேரமும் சும்மா யிராமல் தைல தாரையைப் போலவும் வெகுநேரம் வரையில் ஓங்காரத்துடன் சப்தம் கொடுக்கும் வெங்கல மணியைப் போலவும் இடைவிடாமல் பரமாத்ம சொரூபத்தைப் துதி செய்து வந்தால் அப்பொழுது அந்தப் பகவானானவர் தனக்குப் பந்துவைப்போல் ஆகின்றார். அப்படிச் செய்யா மல் இதுவரையில் முன் சொல்லியதுபோல் மாயையால் மூடப்பட்டு சம்சாரமென்னும் சமுத்திரத்திலேயே சதா காலமும் மூழ்கிப் பரமாத்மாவைப் பக்தி செய்யாதவன் அந்தப்

பரமாத்மாவிற்குச் சத்துருவைப் போலாகின்றான். இதற்கு திருஷ்ட்டாந்தம் ஸ்ரீ பகவத் கீதை அத்யாயம் 6. சுலோகம் 16 பிரமாணம் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

பந்துராத்மா த்மநஸ்த்தஸ்ய யேநாத்மை வாத்ம நாஜித்ஹ
அநாத்மநஸ் துஸத்ருத்வே வர்த்ததாத்மைவ ஸத்ருவத்.

கண்கள், மூக்கு, வாய், காதுகள் சரீரத்தின் மேலிருக்கும் தோல் இந்த ஐந்து இந்திரியங்களையும் மனம், புத்தி சித்த அஹங்காரங்களையும் எல்லா ஆசைகளையும் எவன் மனம் ஜயிக்கின்றதோ, அப்படிப்பட்டவனுக்கு அந்த மனம் பந்துவைப் போலிருக்கும்.

மேற்சொன்னவைகளையெல்லாம் எவன் மனம் ஜயிக்கவில்லையோ, அப்படிப்பட்டவனுக்கு அந்த மனம் சத்துருவைப் போலிருக்கும்.

எவனொருவன் கடவுளைப் பக்தி என்னும் கயிற்றால் கட்டி விடுகின்றானோ. அப்படிப்பட்டவனுக்கு அந்தக் கடவுள் பந்துவைப்போல் இருப்பார். எவனொருவன் கடவுளைத் துதி செய்யவில்லையோ, அப்படிப்பட்ட வனுக்கு அந்தக் கடவுள் சத்துருவைப்போல் இருப்பார்;

அர்ஜுநா! பரமாத்மாவிற்குப் பந்துத்துவமும், சத்துருத்துவமும் உண்டாகும் மார்க்கம் சொல்லுகிறேன் கேள்.

ஒரு புருஷனுடைய மனது, விஷயங்களில் எப்பொழுதும் ஓடுகின்றதோ அப்பொழுதே அதைத் தன் புத்தியினால் தப்பு மார்க்கங்களில் போகவிடாமல் இழுத்துப் பிடிப்பானாகில் அப்பொழுது தன் மனத்தை ஜயித்தவனாகின்றான். அஃதெப்படியென்றால் ஓர் புருஷன் மற்றோர் புருஷனை நிஸ்காரணமாய் வைக்கின்றான்; அப்பொழுது அதைக்

கேட்டுக் கொள்ளும் புருஷனுடைய மனத்திற்குக் கோபம் உண்டாகுமல்லவா? அந்தக் கோபத்தை அடக்கித் தீர்க்க ஆலோசனை செய்து வைதவனை மறுபடியும் வைத்து நல்லதல்லவென்று எண்ணிச் சகித்துக் கொண்டிருப்பதே சிரேஷ்ட்டமானதென்று எண்ணுவானாகில், அப்பொழுது அவனுக்கு உண்டாகிய கோபம் தணிதுந் சாந்தம் பிரகாசிக்கும். இவ்வாறு பொறுத்துக் கொள்பவன் அடையும் பலன் என்னவென்றால், தன்னை வைதவனுடைய புண்ணியங் களையெல்லாம் இவன் ஆகர்சித்து (இழுத்து)க் கொண்ட வனாகின்றான். ஆதலால் சாந்தமாயிருக்கும் மனது, இதரர்கள் செய்த புண்ணியங்களைத் தனக்கு லபிக்கும்படிச் செய்விக்கும் அதனால் அது அவனுக்கு பந்துவைப்போல் மேன்மையைச் செய்விக்கின்றது. இவன் விஷயம் இப்படியிருக்க இனி இவனை வைதவனுடைய கதி என்ன ஆகிறதென்றால், அவன் ஏதோ ஓர் சொல்ப காரணத்தினால் குரோதத்தை அடைந்து அந்தக் குரோதத்தை அடக்கமுடியாமல் அவனை வைதவனால்தான் அதுவரையில் செய்திருந்த புண்ணியங் களை எல்லாம் அவனுக்குத் தாரை வார்த்தவனாகின்றான். புத்தியின் பலத்தை மீறி, அதன் வார்த்தையைக் கேளாத வனுடைய மனது அவனுக்குச் சத்துருவைப் போலிருக்ந்து கெடுதியை விளைவிக்கும் இப்படியே பிரதி புருஷனுடைய மனது, இந்திரிய விஷயங்களில் புகுந்து காம குரோததாதி களினால் தூண்டப்பட்டு தப்பு மார்க்கங்களில் பிரவேசிதது்க் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கும் புத்திமான் தன் புத்தி பலத்தினால் அந்த மனத்தைத் திருப்பிக் கொண்டு வருவானாகில் அது தப்பு மார்க்கங்களில் போகாமல் அவன் சுவாதீனத்திலேயே இருக்கும். அப்படிச் சுவாதீனமான மனதுடன் செய்யும் கர்மங்கள் நிஷ்காம்ய கர்மங்களாக வதனால், காம்ய கர்மங்களுக்குப் பந்தப்படாமல் மோக்ஷர ரூடனாகின்றான். ஆதலால் அவனுக்கு அந்த மனது

மேன்மை செய்ததாகின்றது. அதனால் அதைப் பந்துவென்று சொல்வதற்குக் காரணமாயிற்று. மனதை அடக்காமல் அதன் இஷ்ட்டம் போல் நடத்திக் காமக் குரோதங்களுக்கு உட்படு வானாகில் அதனால் உண்டாகும் கர்மங்களை அனுபவிக்க வேண்டியவனாய் இருக்கின்றான். அதனால் அதைச் சத்துருவென்று சொல்வதற்குக் காரணமாயிருக்கின்றது.

ஒரு வஸ்துவில் பற்றுதலும், விடுதலுமாயிருப்பதே மனத்தின் சுபாவகுணம் இப்பற்றுதலே. மஹா பந்தமாயிருக் கின்றது. இப்பற்றுதல் அனேக ஜன்மங்களாய் முதிர்ந்து கொண்டே வருகிறது. காமக் குரோதங்களும், ராகத்துவேஷங் களுமே ஜனனத்திற்குக் காரணமாயிருந்து துன்பத்தைத் தருகின்றது. இந்தத் துன்பத்தைத் தருகின்றது. இந்தத் துன்பத்தை எப்பொழுது போக்கிக் கொள்ளுகின்றார்களோ, அப்பொழுதே முக்தர்களாவார்கள். ஞானவாசிட்டம் பிரமாணம்.

பற்று வீடென் றிரண்டிற் பற்றலும் விடுத றானு
முற்றனவ மனத்து ரூப முயர்பந்த மதுவே றில்லை
முற்றறு பற்று வீட்டின் மோகமுந் துயரும் விட்டு
துற்றுள பற்று வீடு துடைத்தசை யாது நிற்பாய்.

சுரு! மநோவ்யாதே சிகிச்சார்த்த முபாயம் சுதயாமிதே
யத்யத் ஸ்வாபிமதம் வஸ்து தத் த்யஜன் மோக்ஷ மஸ்நுதே
(மஹோப நிஷத்)

சகல எண்ணங்களைவிட்டு விடுவதே. மனோவியாதிக்குப் பரம ஔஷதம் இதைவிட வேறொரு ஔஷதம் இல்லை.

சுரு! நிரஸ்த விஷயாஸங்கம் ஸந்திருத்தம் மநோஹ்ருதி
யதா யா த்யுந்மநீ பாவம் ததா தத் பரமம்பதம்

மனம் சகல விஷயங்களிலிருந்து நீங்கி 'நான்' எனது என்னும் 'அகங்கார மமகாரங்கள்' இல்லாததாய் ஆத்ம

சொரூபத்தில் எப்பொழுது லயித்து விடுகிறதோ அப்பொழுது அது பரமபதம் என்னும் மோக்ஷத்தையடையும். எப்படியென்றால், இரவில் மின்னும் பூச்சியானது தன் மெய்யொளியைக் கண்டதுபோல் உண்மை நிலையை அறிந்து உள்ளொலி கண்டால் ஜனனமில்லை பிறகு சிவத்தோடே சேருவார். இதற்கு நெஞ்சறிவிளக்கம் பிரமாணம்.

மின்மினிப் பூச்சி தன்னுண் மெய்யொளி கண்டாற்போல்
உன்மன தொடுங்கியேயுன் னுண்ணள்ளொளி கண்டாற் பின்னைச்
சென்மமுமில்லை யந்தச் சிவத்துளே சேர்வாய் நாளும்
பொன்மகள் புகழு நாகை நாதரைப் போற்று நெஞ்சே.
"மநப்ர ஸ மநோபாயே யோகஇத்யபி தீயதே"
(மஹோப நிஷத்)

மனம் சங்கல்ப விகல்பங்களில்லாமல் என்றால் நினைப்பு மறப்பு இல்லாமல் பிரம்மத்தில் லயித்து உபசாந்தி அடைவதே. ஞானயோகமென்று சொல்லப்படும்.

சுரு॥ "அஸங்கல்பந ஸஸ்த்ரேணச் சிந்நம் கித்தமி தம்யதா
ஸர்வம் ஸர்வகதம் ஸாந்தம் ப்ரஹ்மஸம்பத்யதே ததா!"
(மஹோப நிஷத்)

மனம் சங்கல்ப விகல்பங்களற்று பிரம்மத்தில் எப்பொழுது லயிக்கின்றதோ, அப்பொழுது அது அகண்ட பரிபூர்ண பரப்பிரம்ம சொரூபமாகின்றது.

சுரு! "மநஸா மந ஆலோக்ய வ்ருத்திஸூந்யம் யதா பவேத்
தத; பரம்ப்ரஹ்ம த்ருஸ்யம் த்ருஸ்யதேச ஷச்துர்லபம்
மநஸா மந ஆலோக்ய முக்தோ பவதி யோகவித்
மநஸா மந ஆலோக்ய உந்மந்யந்தம் ஸதா ஸமரேத்
மநஸா மந ஆலோக்ய யோக நிஷ்ட்டஸ் ஸதா பவேத்"
(யோ கஸிகோ பநிஷத்)

மனம் சமஸ்த பிராணிகளையும் காமக் குரோதாதி குணங்களின் ஆழ்ந்த செய்து, துக்கமாக்கிய போகங்களை யெல்லாம் சுகமென்றெண்ணி சம்சாரமென்னும் சமத்திரத் தில் மூழ்க செய்து மறுபடியும் தலையெடுக்காவண்ணம் அஞ்ஞானமென்னும் பாறையால் மூடும்படிச் செய்விக் கின்றது. மனதே புண்ணிய பாவங்களின் மூட்டையைப் பெருத்த சுமையாய்ச் சுமந்து, சுவர்க்க நரகங்களிலிருந்து சுக துக்கங்களை அனுபவிக்க செய்கின்றது. இந்தப் புண்ணிய பாவங்களின் மூட்டைகளையே சஞ்சித கர்மமென்று சொல்லப்படும். ஆதலால், அந்த மனம் இப்பேர்ப் பட்டதென்று, அதைப் பிரம நிஷ்ட்டையில் நிறுத்திச் சகல எண்ணங்களையும் சூன்யமாழ் செய்தால் அப்பொழுது அது, மிகவும் சுலபமாய் பிரம்ம சொரூபத்தை அடையும். ஆதலால் மனதின் சுபாவம் இப்பேர்ப்பட்டதென்பது அறிந்து அதைச் சூன்யமாய்ச் செய்தவனே முக்தனென்றும், ராஜயோகியென்றும் பிரம்மஞாநியென்றும் சொல்லப் படுவான்,

சுரு॥ தாவதேவ நிரோ தவ்யம் யாவத் த்ருதிகதிம் க்ஷயம்
எதத் ஜ்ஞாநஞ்ச மோக்ஷஞ்ச அதோத்யோக்ரந்த விஸ்தரஹ

மனம் எதுவரையில் நசிக்கவில்லையோ அதாவது சங்கல்ப விகல்பமில்லாத ஸ்திதியை அடையவில்லையோ, அதுவரையில் அதை நாசம் செய்யப்பட்ட பிரம்ம நிஷ்ட்டையை அப்பியாசம் செய்வதே பிரம்ம ஞானமென்றும் மோக்ஷ மென்றும் சொல்லப்படும் சாஸ்திராப்பியாசத்தினால் உண்டாகும் ஞானம், பிரம்ம ஞானமென்றும் மோக்ஷமென்றும் சொல்லப் படமாட்டா. இப்படிப்பட்ட பிரம்மஞானம் பிராம்மணத்து வத்தினால் உண்டாக வேண்டும். அந்தப் பிராம்மணத்துவம் எப்படிப் பட்டதென்றால் :-

''ததே தத்ருசா ப்யுக்தம் ஏஷநித்யோ மஹிமா, ப்ராஹ்மணஸ்ய நவர்த்தே கர்மணா நோகநீயாந் தஸ்யைவ ஸ்யாத் பதவித்தம விதித்துவா நலிப்யதே காமணா யாபகேநேதி ''தஸ்மா தேவம் விஸ்ச்சாத்தோ தாதத் உபரதி ஸ்திதிக்ஷுஹு ஸமாஹிதோ. பூதவா ஆத்மந்யே வநத்மாநம் பஸ்பதி ஸர்யதி ஸர்வமாத்மாநம் பஸ்யதி, நைநம் பாம்மா தரதி, ஸர்வம் பாப்பாநம தரதி நைநம் பாப்மா தபதி ஸர்வம் பாப்மாநம் தபதி விபாபோ பிரஜோ விசிகித்ஸோ ப்ராஹ்மணோபவதி.''

(ப்ருஹதாரண்யோ பநிஷத்)

வைய மாச்சிரமம் மென வைத்தவும்
செய்ய சாதி குலமெனச் சேர்த்தவும்
ஐய மின்றி யறவிட் டறிந்தவர்
செய்ய ஞானத்திரறைச் சித்திக்கவே தேவிகாலோத்திரம்।

பிராமணத்வம் பிரம்மஞானத்தினால் உண்டாகமே யொழிய. பிரமசரியம். கிருகஸ்தாசிரமம். வானப் பிரஸ்த்தம். சன்யாசம் என்கிற முதலாகிய ஆசிரமத்தினாலும் ஜாதி குலத்தினாலும் கர்மா நுஷ்ட்டானங்களினாலும் உண்டாக மாட்டா. அப்படிப்பட்ட பிரம்ம ஞானமுடைய பிராமணன், கர்மாநுஷ்ட்டானங்களைச் செய்ய மாட்டான். ஒருவேளை தான் உலகத்தாருக்கா கர்மாநுஷ்ட்டானங்களைச் செய்த போதிலும் அவன், அந்தக் கர்மத்திற்குப் பாத்திரனாக மாட்டான். சாந்தி (காமக்குரோதாதி நாசம்) தாந்தி (இந்திரிய நக்கிரகம் உபரதி (நிராசை) திதீக்ஷை (சாந்தம்) சிரத்தை விசுவாசமென்னும் ஆறு குணங்களை உடையவனாய் ஆத்ம சொரூபனாய் தன்னைத்தான் பிரம்மமென்று அறிந்து சதா ஆத்மா நுஸந்தாநம் செய்து கொண்டு, பிரபஞ்சம் சர்வம் பிரம்ம சொரூபமே என்று நினைக்கப்பட்ட அஹங்கார ரஹிதன் பிராமணனே யொழிய

ஜன்மங்களினாலும் கர்மாநுஷ்ட்டானங்களினாலும் பிராமணனாக மாட்டான் இப்பேர்ப்பட்ட பிரம்ம ஞானமுடைய பிராமணன் எப்படியிருப்பாளென்றால்,

சுரு॥ "யோஹ்ரேரிவ குணத்பீதஹ ஸந்மாநாந் நரகதிவா குணபாதிவ யஹஸ்த்ரீப்யஸ்தம் தேவாஹப்ராஹமணம் விதுஹு

உலகத்தார் சர்ப்பத்தைப் பார்த்துப் பயப்படுவது போல் ஜனக்கூட்டத்தைப் பார்த்து மருளப்பட்டவனும் உலகத்தார் தனக்குச் செய்யமட்ட சன்மானங்களை நரகத்துக்குச் சமானமாய் பார்க்கப்பட்டவனுமாகிய ஒருவன் ஆண் பெண் அலி என்பது சரீரத்திற்கேயொழிய ஆத்மாவிற் கல்லவென்றும், மேற்சொல்லிய சரீரங்கள் அவரவர்களின் சங்கல்பத்தால் (எண்ணங்களால்) அந்தந்த ரூபங்களை அடைகின்றனவென்றும் அறிந்தபடியால், ஆண் பெண் என்னும் வேற்றுமைகள் அவனுக்கு இராததனால் அப்படிப்பட்டவன். ஸ்திரீகளைப் பார்த்த போதிலும் அவர்களைப் பிணங்களாக நினைத்துத் திரஸ்காரஞ்செய்து, சதா ஞான அனுபவ நிஷ்டையிலிருப்பான். மேலும்,

சுலோ। யேன பூர்ணமிவா காஸம் பவத்யேகேந ஸர்வதா ஸூத்யம்யஸ்ய ஜநாகீர்ணல்தம் தேவாஹப்ராம்மணம் விதுஹு"

ஆகாசத்தைப்போல் ஸர்வ பரிபூரணமாயிருக்கும் பிரம்மமே தானென்று, ஆத்மாநு சந்தானஞ் செய்து கொண்டு சதா பரிபூர்ண தன்மையிலிருந்து தனது நிர்விகல்ப சமாதி நிஷ்டைக்கு ஜனசங்கமான இடம் தகர் தென்றெண்ணி ஏகாந்த ஸ்தலத்தையடைந்திருப்பவனே தேவதைகளால் புகழப்பட்ட பிராமணனென்று சொல்லப்படுவான்.

சுரு॥ ஏகமேவா த்வித்ீயம் யத்குரோர்வாக்யேந நிஸ்கிதம் ஏத தேகாந்த ந மித்யுக்தம் ந மடம் ந வநாந்தரம,

என்னும் குருகீதா வாக்கியரீதியாய், தனக்கு இரண்டாவது இல்லாததாய் ஏகமாய் பிரகாசித்துக் கொண்டிருக்கும் பரப் பிரம்மமாகிய ஆத்ம சொரூபத்தை எந்த இடத்தில் தரிசனம் செய்கின்றானோ அந்த இடமே ஏகாந்த ஸ்தலமென்றும் மடமென்றும் சொல்லப்படும். அப்படிப்பட்ட ஏகாந்த ஸ்தலத்தில் உட்கார்ந்து மனத்தைப் பரமாத்மா சொரூபத்தில் ஐக்கியம் செய்து கொண்டிருப்பவனே ஏகாந்த ஸ்தல வாசியென்றும் மடாதிபதியென்றும் சொல்லப்படுமேயொழிய பரமாத்ம சொரூபத்தில் மனதை ஐக்கியம் செய்யாதவன் ஜனசஞ்சாரமில்லாத காட்டிலும் மடங்களிலும் நிவசித்துக் கொண்டிருந்தபொதிலும் அவன் ஏகாந்த ஸ்தலவாசியும் மடாதிபதியும் ஆகமாட்டான். இப்படியிருக்கப்பட்டவனுக்கு மோக்ஷ சாம்ராஜ்ஜிய பதவி உண்டாகமாட்டாது முன் சொல்லிய விஷயங்களை நன்றாய் அறிந்தவனே பிராமணனாவான்.



## 100. ஜீவன்தான் குடியிருந்த சரீரம் விட்டு மற்றொரு சரீரத்தில் போய்ச் சேருவது

கிறிஸ்தவர்களும் மகமதியர்களும் மறுபிறப்பில்லையென்று சொல்லுவதேயல்லாமல் ஏதோ ஓர் காலத்தில் கடவுளானவர் வந்து ஜீவர்களை விசாரித்து அவரவர்களுக்குத் தக்க தண்டனையைக் கொடுத்துவிடுவாரேயொழிய மறுபடியும் அவர்களுக்கு மறுபிறப்பில்லையென்று மகம்மதியர்கள் சொல்லுவதுண்டு இவர்கள் சொல்லுவது எப்படி இருக்கிறதென்றால் ''எருது கன்று போட்டது'' என்று சேவகன் புத்தியில்லாத எஜமானனிடம் வந்து சொன்னால்; அதைப் பிடித்துத் தொழுவத்தில் கட்டிவிடு'' என்று எஜமான் சொல்வதுபோல் இருக்கிறது.

மகமதியர்கள் சொல்லுவதுபோல் கடவுள் வந்து ஜீவனை விசாரிக்கும்பொழுது அந்த ஜீவன் பேசுமா? கடவுள் வந்து விசாரிக்கும் வரையில் அந்த ஜீவனைக் கொண்டு போய் எவ்விடம் வைப்பது? ஜீவனை புட்டியில் போட்டு அடைத்து வைப்பதா? அல்லது பூமியின் கீழ்புதைத்து வைப்பதா? ஜீவன் காற்றுருவமாயிருப்பதனால் அதைப் பிடிக்க எவர்களுக்குத்தான் சாத்தியப்படும். இதன்றியும் கர்மகாண்டத்தில் என்ன சொல்லுகிறதென்றால். ''யமலோகம் உண்டென்றும் யமதூதர்கள் வந்து இறக்கப்பட்டவனுடைய ஜீவனைப் பிடித்து எமலோகம் கொண்டு போய் அவ்விடம் ''யாதனாசரீரம்'' யாதனா சரீரமென்றால் நமது சரீரம்போன்றஅனேக சரீரங்கள் உயிரில்லாமல் இருக்கின்றனவென்றும், அச்சரீரங்கள் எக்காலத்திலும் அழியாமலும் நாற்றமெடுக்காமலும் இருக்கப்பட்ட சரீரங்களென்றும் சொல்வதுண்டு. இறக்கப்பட்டவர்களினுடைய ஜீவனெல்லாம்

யமதூதர்கள் கொண்டுபோய் மேற்சொல்லிய யாதனா சரீரத்தில் விட்டவுடன் அந்த யாதனா சரீரம் எழுந்து நிற்குமென்றும் எழுந்து நின்ற பிறகு யம தூதர்கள் அதை யமதர்மராஜாவிடம் கொண்டுபோய் நிறுத்துவார்களென்றும், நிறுத்திய பிறகு யம தர்மராஜன் அவனை விசாரித்துத் தண்டனை கொடுக்கின்றானாம்.

யாதனா சரீரத்திலிருக்கும் ஜீவனை யமதர்மராஜன் ஏன் கேழ்க்கின்றானென்றால் ''நீ பூலோகத்தில் பரஸ்திரீகளை கட்டியணைத்தாயல்லவா? அதுபோல் இதோ எதிரில் எரிந்து கொண்டிருக்கும் மெழுகு ஸ்தம்பத்தைக் கால் நாழிகை வரையில் கட்டியணைத்துக் கொள் என்று தண்டனை விடுத்து இத்தண்டனை முடிந்தவுடன் இவனை மறுபடியும் இங்குக் கொண்டு வா'வென்று எமதர்மராஜன் எமதூதர்களுக்கு ஆஞ்ஞாபிக்கின்றானாம், பிறகு எம தூதர்கள் யாதனா சரீரத்திற்குள்ளிருக்கும் ஜீவனை வதை செய்வதற்காக எரிந்து கொண்டிருக்கும் எழுகு ஸ்தம்பத்தினிடம் கொண்டுபோய் அந்த ஸ்தாபத்தைக் கால்நாழிகை வரையில் கட்டியணையும் படிச் செய்வார்களாம். அப்பொழுது யாதனா சரீரமானது 'கர கர' வெந்று பற்றி எரியும் அவ்வாறெரியும்பொழுது யாதனா சரீரத்தில் குள்ளிருக்கும் மாயையால் மூடப்பட்ட ஜீவனானது. ''ஐயோ! ஐயோ!!'' வென்று கதறி அழுகின்றதாம். இவ்வாறாக ஜீவன் கால் நாழிகை வரையில் அக்கினி ஸ்தம்பத்தைக் கட்டியணந்தபொழுது யாதனா சரீரத்திற் குள்ளிருக்கும் ஜீவன் மாத்திரம் விசேஷ பாதையை அடையுமேயொழிய ஷை சரீரம் மாத்திரம் பற்றி எரிவதுமில்லை, அல்லது அழிவதுமில்லை. பரபுருஷனைக் கட்டியணைந்த ஸ்திரீகளுக்கும் இதுபோன்ற சிக்ஷையே உண்டாகுமாம். பிறகு மெழுகு ஸ்தம்பத்தைக் கட்டியணைந்து கால் நாழிகை வரையில் யம தண்டனையை அனுபவித்து முடிந்தவுடனே மறுபடியும் அவனைக் கொண்டுபோய் யமதர்மராஜனிடம் நிறுத்துாவர்களாம். அப்பொழுது அந்த ஜீவன் செய்த

புண்ணிய பாவத்திற்குத் தக்கபடி மற்றொரு தாயின் கர்ப்பத்திலிருக்கும் பிண்டத்தில் கொண்டுபோய்ப் போடுகின்றானாம்.

இன்னும் சில திருஷ்ட்டாந்தங்கள் கர்மகாண்டத்தில் சொல்லியிருப்பதைச் சொல்லுகிறோம். விசேஷ பாவங்களைச் செய்த ஜீவர்களைக் கொண்டுபோய் மேற்சொல்லிய யாதனா சரீரத்தில்விட்டு, அந்தந்த ஜீவர்கள் செய்த பாவத்திற்குத் தக்கபடி தண்டனைகளை யமதர்மராஜன் எவ்வாறு தண்டிக்கின்றானென்றால் சில பாபிகளின் சிரசுகலைச் செக்கில் வைத்து அரைக்கால்நாழிகை திருப்பும்படித் தண்டனை செய்கிறான் அப்பொழுது யம தூதர்கள் அவனைக் கொண்டு போய் அவன் சிரசை செக்கில் வைத்து அரைக்கால் நாழிகை வரையில் ஆட்டும்படிச் செய்விப்பார்கள் அச்சமயம் அவன் சிரசானது 'கசகச'வென்று நசுங்கி அதிலிருந்து இரத்தம் ஓடும். அப்போது அந்த ஜீவன் எப்படிப்பட்ட பாதையை அனுபவிக்கமோ அதை நீங்களே சற்று ஆலோசித்துப் பாருங்கள். அந்த ஜீவன் மேற்படி சிக்ஷையை அனுபவித்து முடிந்தபின் 'கசகச' வென்று நசுங்கிய யாதனா சரீரத்தின் ஓரசு மறுபடியும் எப்பொழுதும்போல் சரியாய்விடும். இன்னும் சிலர் செய்த பாவத்திற்காகச் சிரசில் வாளை வைத்து அறுக்கும்படி யமதர்மராஜன் தண்டனையை விதிக்கின்றானாம். அப்பொழுது யமதூதர்கள் அவனைக் கொண்டு போய் அவன் சிரசில் வாளை வைத்து அறுக்கின்றார்கள். அறுக்கும்பொழுது அவன் சிரசிலிருந்து இரத்தம் பிரவாகமாய் ஓடும். அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் அந்த ஜீவன் எவ்வித பாதைபடுமோ பாருங்கள் அவன் சிக்ஷ முடிந்தவுடன் மறுபடியும் யாதனா சரீரம் சிரசு முன்போல் சரியாய் விடும்.

இன்னும் சிலரைப் பாம்பு, தேள், நண்டு, நெருக்கால் இவைகள் கடிக்கும்படி யமதர்மராஜன் தண்டனையை விதிக்கின்றான். பாவம் செய்தவர்களுக்கெல்லாம் இன்னும்

எப்படிப்பட்ட தண்டனைகளை விதிக்கிறார்களென்றால் எரியும் அக்கிநி குண்டத்தில் தள்ளி சிரசின் மேல் கதையால் அடிக்கின்றான். ஒருவன் கனத்த ஊசியினால் நெற்றியில் குத்துகின்றான். ஒருவன் கொடாலியால் நெற்றியைப் பிளக்கின்றான். இதுபோன்ற இன்னும் அநேக தண்டனைகளை யமதர்மராஜன் தண்டிக்கிறானாம். இவைகளையெல்லாம் கர்ம காண்டத்தில் ஏன் சொல்லுகிறார்களென்றால் "யம லோகத்தில் இப்படிப்பட்ட கடுமையான தண்டனைகளை விதிக்கின்றார்களோ" வென்று ஜனங்கள் கேட்டு மிகவும் பயந்து இனியாகிலும் பாவ கார்யங்களைச் செய்யாமலிருப்பதற்காக கருடபுராணத்தில் எழுதினார்கள்.

கர்ம காண்ட விதிப்படி யமலோகத்தில் பாவம் செய்த ஜீவர்களெல்லாம் மேற்சொல்லிய தண்டனைகளை அனுபவித்த பிறகு, மறுபடியும் பூலோகத்தில் ஜீவர்களுக்கு எந்த வியாதிகளும் அணுகாமல் இருக்க வேண்டுமல்லவா? அப்படியிருக்க பூலோகத்திலுள்ள சில மனிதர்களுக்குக் குஷ்ட்ட வியாதிகள் வந்து அதனால் கைகால்களின் விரல்களெல்லாம் குறைந்து ரணங்களோடு அதிலிருந்து சீழும் ரத்தமும் வடிந்து தனக்கும் இதரர்களுக்கும் சகிக்கக் கூடாத நாற்றமெடுத்து இராப்பகலாய் விசேஷ பாதைபைப் படுகின்றார்கள் சிலருக்கு இராஜ பிளவு டாக்டர்வந்து அதை அறுக்கும்பொழுது சகிக்கக் கூடாத பாதைபட்டு ஐயோ என்று கதறுகின்றார்கள். சிலருக்கு சகிக்கக்கூடாத வயிற்று வலி வந்து துக்கின்றார்கள். இவ்வாறாக அனேகர்கள் அனேக விதங்களாகிய பாதைகளைப்பட்டுக் கொண்டிருப்பதெல்லாம் நாம பிரத்தியக்ஷமாய்ப் பார்த்துக் கொண்டு வருகிறோம். ஆதலால், நரகலோகமென்பது பூலோகத்தில் இருக்கின்றதே யொழிய இதைவிட வேறு நரக லோகம் எவ்விடமும் இல்லவே இல்லை நமது ராஜாங்கத்திலுள்ள மேஜெஸ்ரேட்டு (Magistrats). அந்தந்தக் குற்றங்களுக்குத்

தக்கபடி எவ்வாறு தண்டனைகளை விதிக்கின்றானென்றால், அதாவது சிறிய குற்றம் செய்தால் சொற்பதண்டனையை விதிக்கின்றான், அதற்கு மேல் பெரிய குற்றம் செய்தால் பெரிய தண்டனையைக் கொடுப்பான். இவ்வாறாக அந்தந்தக் குற்றங்களுக்குத் தக்கபடி மேஜஸ்ரேட்டு (Megistrate) எப்படி தண்டனை விதிக்கின்றானோ அது போல். ஜீவர்கள் செய்து வரும் சிறிய பாவத்திற்குத் தக்கபடி சிறிய வியாதிகளும் அதாவது தலைநோய் சுரம் சிறிய இருமல். காதுவலி, கண்ணோய் ஜலுப்பு, சிரங்கு, கட்டி இன்னும் இப்படிப்பட்ட அனேக விதங்களாகிய சொற்ப வியாதிகளை அனுபவிக்க தண்டனையாய் ஏற்படுத்தி அனுப்புகிறார். அதைவிட இன்னும் பெரிய பாவம் செய்தவர்களுக்கு மேற்சொல்லிய குஷ்ட்டம் இராஜ பிளவு இப்படிப்பட்ட இன்னும் பெரிய வியாதிகளை அனுபவிக்கக் கடவுளானவர் தண்டனைச் செய்கிறார். இந்தத் தண்டனைகளையெல்லாம் பூலோகத்தில் அனுபவித்து மரணமடைந்து மறுபடியும் வேறொரு தாயின் கர்ப்பத்தில் போய்ச் சேர்ந்து மறுபடியும் பூலோகத்தில் வந்து பிறந்து, மறுபடியும் முன் ஜன்மத்தில் செய்த பாவக் கருமங்களுக்காக வியாதிகள் வந்து அந்த வியாதிகளை அனுபவித்து மறுபடியும் இறக்கின்றார்கள். யமதர்மராஜ னாகிலும், அல்லது யம தூதர்களாகிலும் காற்றுருவமா யிருக்கும் ஜீவனை எவ்விதமாய்ப் பிடிப்பார்கள்? ஜீவன் எவர்களின் கைகளுக்கும் அகப்படமாட்டாது இறந்தவுடன் ஜீவன் உடனே மற்றொரு சரீரத்தில் போய் புகுந்து கொண்டு மறு ஜனனம் எடுக்கிறது. ஜீவன் மறுஜனனம் எடுக்கிறது. ஜீவன் மறுஜனனம் எடுக்கிறதென்பதற்கு இந்நூலாசிரி யருக்குப் பிரத்திய க்ஷமாய் தெரிந்த இரண்டு திருஷ்ட்டாந் தங்ககளைக் கீழே சொல்லப் போகின்றார்.

இந்நூலாசிரியரது பந்துவில் சரவண முதலியார் என்பவர் தன் குமாரனை சீமையில் படிப்பதற்காக அனுப்பி,

அவன் செலவிற்காக பவுன்களையும் அனுப்பி வந்தனர், 4- வருஷங்களுக்குப் பிறகு அவன் பரீக்ஷையில் தவறிப் போய் விட்டான். பிறகு தகப்பனார், இந்தியாவிற்கு வந்து விடும்படி அவனுக்குக் கடிதமெழுதினார். அதற்கு அவன் நான் இந்தியாவிற்கு வரமாட்டேனென்று பதில் எழுதி விட்டான். அவன் சீமையில், உபாத்தியாயர் வேலையில் அமர்ந்து, ஒரு துரைசானியை விவாகம் செய்துகொண்டு பிள்ளை பெண்களைப் பெற்று வாழ்ந்து வந்தான். பிறகு, அவன் தந்தை சரவண முதலியார் இறந்துவிட்டனர். தந்தை இறந்தவுடன் தன் தாய்க்கு ''எனக்கு முப்பதினாயிரம் கொடுத்துவிட்டு மற்ற ஆஸ்திகளையெல்லாம் நீங்களே எடுத்துக்கொள்ளுங்கள் அப்படி கொடாவிட்டால், இவ்விடம் உங்கள் பேரில் கோர்ட்டில் தாவா செய்வேன்'' என்று எழுதினான். அதன்பிறகு தாயானவள் அவன் கேட்டதுபோல் முப்பதினாயிரம் ரூபாய் கொடுத்தார்.

மேற்சொல்லிய சிறுவன் நமது தாய்நாடாகிய இந்தியாவில் பிறந்து, 18-வருடங்கள் வளர்ந்த பிறகு சீமை ஏன் போய் சேர்ந்து விட்டானோ, அதற்குக் காரணம் இவன் பூர்வ ஜன்மத்தில் சீமையில் பிறந்து வளர்ந்தவன், ஏதோ சொல்ப புண்ணியம் செய்ததனால் இந்தியாவிலுள்ள பரத கண்டத்தில் வந்து பிறந்து, 18-வருஷங்கள் வரையில் இந்தியாவிலிருந்து மறுபடியும் அவன் பூர்வ ஜன்ம இருப்பிடமாகிய சீமை போய் சேர வேண்டுமென்று அவனுக்குக் கர்மமென்னும் தலைவிதி இருந்தபடியால், அந்தக் கர்மமென்னும் தலைவிதியானது அவனை நேராய் சீமைக்கு இழுத்துக் கொண்டு போய்விட்டது. இது, அவன் கர்மமென்னும் தலைவிதி குற்றமேயொழிய, அவன் குற்றமல்ல. இதையே பூர்வ வாசனையென்று சொல்லப் படும்.

இனி மற்றொரு திருஷ்ட்டாந்தம் சொல்லுகிறோம் கேளுங்கள். இந்நூலாசிரியர். 1931 ௵ சிலோன் தேசம் சென்று 6- மாத காலம் வரைவில் சிலோன் தேசமெல்லாம் போய் உபந்நியாசங்களைச் செய்துவந்தனர். அத்தேசத்திற்கு முக்கிய பட்டணமாயிருக்கும் கொழும்பில் ராமநாதன் என்னும் பெயருடன் ஒரு பெரிய தனவான் இருந்தனர். இவர் அனேக வருஷங்களுக்குமுன் அமெரிக்காப் போயிருந்தனர். அக்காலத்தில் அவர் மிகவும் அழகுடைய துரைசானி ஒருத்தியை அழைத்துக்கொண்டு சிலோன் தேசம் வந்து அவளை விவாகம் செய்து கொண்டனர். விவாகம் செய்து கொண்டபின் அவள் பூட்சு கவுன் முதலாகிய உடுப்புகளை நீக்கி நமது இந்து ஸ்திரீகள் உடுப்பதுபோல் பட்டுச் சேலை, பட்டு ரவிக்கைகளைத் தரிசித்துக் கொள்ளும்படி செய்து பிறகு தினந்தோறும் காலையில் ஸ்நானம் செய்து நெற்றியில் விபூதியணிந்து கோவிலுக்குப் போய் ஈஸ்வரனைக் கும்பிட்டுவர ஏற்பாடு செய்து விட்டனர். அதேபோல் அவள் பிரதிதினம் காலை மாலைகளில் மிகவும் பயபக்தியுடன் நமது கோவிலுக்குச் சென்று ஈஸ்வரனைக் தரிசித்துக் கும்பிட்டு வருவது வழக்கம். பிறகு ஈஸ்வரபக்தி முதிர்ந்து, காலை மாலைகளில் ஓர் அறையில் உட்கார்ந்து ஜபமாலையைக் கையில் பிடித்துத் திருப்பி ஜபம் செய்து வருவது வழக்கம். அமெரிக்கா தேசம் விட்டு சிலோன் தேசம் வந்தது முதல் இவ்வம்மையார் மச்ச மாம்சாதிகளைச் சாப்பிடுவதில்லை. இலையில் பதார்த்தங்கள் சாதம் முதலானவைகளைப் பரிமாரியப் பின் நம்மைப்போல் கைகளால் பிசைந்து சாப்பிடுவது வழக்கம். அமெரிக்காவில் பிளேட்டுகள் என்று சொல்லப்பட்ட பீங்கான் தட்டுகளில் வைத்த மாமிச பதார்த்தங்களையெல்லாம் மேஜைக் கத்தியால் அறுத்து 'போர்க்கு' (Fork) என்று சொல்லப்பட்ட முள்ளுகளால் குத்திச் சாப்பிட்டுக் கொண்டிருந்த வெண்மை நிறமுடைய

துரை சானியானவள் நமது தமிழ் மக்கள் நடையில் வந்தது எவ்வளவு விசேஷமோ. அதை நீங்களே சற்று ஆலோசித்து பாருங்கள். அவைகளுக்கெல்லாம் காரணம் இவ்வம்மை யார் பூர்வஜன்ம வாசனையேயாம் அஃதெப்படியென்றால்,

இவ்வம்மையார் பூர்வ ஜன்மத்தில் நமது இந்து தேசத்தில் பிறந்தவள் ஏதோ சிறிய பாபகர்மம் செய்ததனால் இந்தப் பாவ கர்மத்தை அனுபவிப்பதற்காக அமெரிக்க தேசத்தில் போய்ப் பிறந்து சில வருஷங்கள் அங்கு மச்சமாம்ச சாதிகளைக் கத்தியால் அறுத்து, போர்க்கு (Fork) என்னும் முள்ளுகளால் குத்தியெடுத்துப் புசித்துப் பிறகு பூர்வ ஜன்ம கர்மபலன் முடிந்தவுடன் மறுபடியும் நமது தமிழ் மக்களிருக்கும் சிலோன் தேசம் வந்து சேர்ந்து சீமையில்தான் சாப்பிட்டுக் கொண்டிருந்த மாம்சாதிகளையெல்லாம் விட்டு ஒழித்து ஸ்நானம். பூஜை ஜபம் முதலானவைகளைச் செய்து வருவது எவ்வளவு விசேஷமோ பாருங்கள். அவரவர்களின் கர்மத்திற்குத் தக்கபடி அமெரிக்காவிலும் சீமையிலும் இருப்பவர்கள் நமது இந்து தேசத்தில் வந்து பிறக்கிறார்கள். அதுபோல், நமது இந்து தேசத்தில் இருப்பவர்கள் அமெரிக் காவிலும் சீமை தேசத்திலும் போய்ப் பிறக்கின்றார்கள்.



## 101. ஜனகமஹாராஜர் அரசாளுகை

தாமரை இலையில் மீதுள்ள ஜலபிந்து தாமரை இலையில் ஒட்டாமலிருப்பதுபோல் இருந்து ஜனகமஹா ராஜர்ராஜ்ஜிய பரிபாலனம் செய்து வந்தனர். உலகத்திலுள்ள ஜனங்களெல்லோரும் ஆசாபாசங்களென்னும் பந்த பாசங்களில்கட்டுப்பட்டிருந்தபோதிலும்அதில்கட்டுப்படாமல் முன் சொல்லிய தாமரையிலையின் மீதுள்ள ஜலபிந்துவை போலிருந்து எல்லாக் காரியங்களையும் செய்துவர வேண்டும்.

ஜனகர் ராஜ்ஜிய பரிபாலனம் செய்யும் வேளையில் மாத்திரம், அந்தந்த வேலைகளுக்கு வேண்டுவதுபோல் தம்மனதை உபயோகப்படுத்தி, எல்லா வேலைகளும் செய்து முடித்துப் பிறகு அவரது மனத்தை எந்த வெளி வியவகாரங் களிலும் போகவிடாமல் நிறுத்தி, ஆகாய வடிவமாயிருக்கும் பரமாத்ம சொரூபத்தில் அம்மனதைக் கலக்கச் செய்து எல்லாம் தாமாய், நின்ற விடத்திலும் செல்லுமிடத்திலும் உட்காருமிடத்திலும் படுக்குமிடத்திலும்மற்ற எல்லாக் காலங்களிலும் அங்கங்கு இருந்த இடத்திலேயே சமாதி நிலையில் நின்று என்றால், எந்த எண்ணங்களும் இல்லாமல் மனதை ஆகாய வடிவமாகிய பரமாத்ம சொரூபத்தில் கலக்கும்படி செய்து எப்பொழுதும் பிரம்மானந்தத்திலேயே சொக்கியிருப்பார்.

முன் ஜன் மாந்திரங்களில் செய்துவந்த கர்மம் பூர்த்தியாகாமல் சிறிது சேஷமிருந்தபடியால் அக்கர்மம் ஒழியும் வரையில் ஜனகர் மனம் பிரம்மத்தில் சற்று லயித்தும்; மறுபடியும் சற்று விட்டுமாய் இருந்து கர்மசேஷமெல்லாம் நீங்கியபிறகு சுத்தப் பிரம்மமானார். இவர் பூர்வ ஜன்மத்தில்

யோகியாயிருந்தும் அந்த ஜன்மத்திலேயே ஞானியாகாமல், கர்ம சேஷத்தினால் மரணமடைந்து, மறு சரீரமெடுத்து ஜனகர் என்னும் பெயர் வஹித்து, கர்மரேஷம் ஒழியும் வரையில் ராஜ்ஜிய பரிபாலனம் செய்துகொண்டே தான் தானாய் என்றால் ஜனகர் மனம் சிலநேரம் பிரம்மத்தில் கலப்பதும், மறுபடியும் பிரம்மத்திலிருந்து பிரத்தியேகமாய் வந்து சிலநேரம் பிரம்மத்தில் கலப்பதும், மறுபடியும் பிரம்மத்திலிருந்து பிரத்தியேகமாய் வந்து சிலநேரம் ராஜ்ஜிய பரிபாலனம் செய்து மறுபடியும் பிரம்மத்தில் ஐக்கியமாய் கர்மசேஷம் முடிந்தவுடன் ஜனகர் சுத்த பிரம்மமானார்.

ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களும் அனேக ஜன்மங்களாய்ச் செய்து வரும் புண்ணிய பாபங்களின் மூட்டைகளுக்கே 'ஸஞ்சிதமென்றும், கர்மமென்றும், வினைப்பயனென்றும்' சொல்லப்படும். இந்தக் கர்மத்தை எதற்கு ஒப்பிடலா மென்றால், பெருங்காயமிருந்த குடுவைக்கு ஒப்பிடலாம்.

காயம் தினந்தோறும் சிறுகச் சிறுக குடுவையிலிருந்து எடுத்துக்கொண்டே வந்தால் சிலது நாளைக்குள் வெறுங் குடுவை யாய் விடும். ஆனால், காயத்தின் வாசனை மாத்திரம் இருக்கும்.

அதுபோல், ஜனகருக்கிருந்த எல்லாக் கர்மங்களும் ஒவ்வொரு ஜன்மத்திலும் சிறுகச் சிறுக ஒழிந்து கொண்டே வந்து பிறகு, கடைசி ஜன்மத்தில் வெறுங்குடுவையில் இருந்த காய வாசனையைப்போல் ஜனகருக்கு கர்மசேஷம் இருந்தபடியால் அந்த வாசனைக்காக கடைசியில் ஜனக மஹாராஜர் சரீரம் எடுக்கவேண்டியதாய் நேரிட்டது. பிறகு அச்ஜன்மத்தில் அவரது கர்ம சேஷமெல்லாம் ஒழிந்து விட்டன. கர்மசேஷம் ஒழிந்த பின் ஜனகர் சுத்த பிரம்ம மானார். இதுபோல் ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களுக்கும் கர்மமென்பது இருந்து கொண்டேயிருக்கின்றது. இந்தக் கர்மங்களெல்லாம் ஈஸ்வரார்ப்பணமாய் செய்து வரும்

புண்ணியங்களினால் பஸ்பமாய்விடும். கர்மங்களெல்லாம் பஸ்பமான பிறகு, அவர்களின் ஆத்மா பரமாத்மாவில் போய் சேர்ந்து விடும்.

உலகத்திலுள்ள ஸ்திரீ புருஷர்களெல்லோரும் தாம் ஜீவித்திருக்கும் வரையில், பார்யாள் புத்திர புத்திரி பௌத்திர (பேரன்) பவுத்திரி (பேத்தி) பூமி தோட்டம் துரவு வஸ்துவாகனாதிகளின்மீது அதிகமோகம் வைத்து, கடைசியில் இம் மோகத்துடனே பிராணனை விடுவதனால் இவர்களுக்கு இம்மோகமே விதையாயிருந்து மறுபடியும் அம்மோகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக வேறு சரீரம் எடுக்கின்றார்கள். கர்மமென்னும் வினைப்பயன் இருக்கும் வரையில் முன்சொல்லிய ஆசையென்னும் மோகம் இவர்களை விட்டு நீங்கமாட்டா. ஒருவன் ஈஸ்வரனுக்குச் சமானமாயிருந்த போதிலும் அவனுக்கு கர்மமென்னும் வினைப்பயன் இருக்கும் பக்ஷத்தில் அவன் கர்மம் ஒழியும் வரையில் பிறந்து பிறந்து சுகதுக்கங்களை அடைய வேண்டியவனாகவே இருப்பான். இக்கர்மம் என்பது யாரையும் விடமாட்டா ஆதலால்,

இச்சையென்னும் ஆசையை நீக்கிக்கொண்டே வருவீர்களாகில் நாளாவட்டத்தில் உங்கள் ஆசையென்னும் மோகம் நீங்கி வரவரக் கடைசியில் சுத்த பிரம்மாய் விடுவீர்கள். பார்க்கப்பட்டவர்களுக்கு மாத்திரம் ஆசையுடையவர்களாய் நடித்துக் காட்ட வேண்டுமேயொழிய நீங்கள் மாத்திரம் எந்த வஸ்துவின் மேல் பற்றுதல் வையாமலும் அதை நினையாமலும் இருக்க வேண்டும். இவ்வாறிருப்பீர்களாகில் சகல ஆசையென்னும் பிடிப்புகளெல்லாம் உங்களைவிட்டு நீங்கும். இவைகளெல்லாம் நீங்கிய பிறகு, மோக்ஷமென்னும் வீட்டைத் தப்பாமல் அடைவீர்கள்.

## 102. பிரம்ம சூத்திரமே யஞ்ஞோபவீத தாரணை

சுரு॥ "யோனர்வமிதம் ப்ரோதம் ஸூதரே மணிகணா இவ தத்ஸூந்ரம் தாரயேத் யோகீ யோகவித் தத்வதர்ஸிவாந் பஹிஸ்ஸூத்ரம்த்யஜேந் வித்வாந்யோகமுத்தம மாஸ்ரிதஹ பரஹம பாவம்தம் ஸூத்ரம் தாரயேத்யஹ ஸசே தநஹ ஜ்ஞாநஸிகி நோஜ் ஞாநநிஷ்ட்டா ஜ்ஞாநயஞ்ஞோப வீதிநஹ ஜ்ஞாநமேவ பரம்தேஷாம் பவித்ரம் ஜ்ஞாந முச்ச"

(ப்ரஹ்மோபநிஷத்)

ஒரு முத்துச் சரத்திலுள்ள ஒவ்வொரு முத்திலும் ஒரே நூலானது நிறைந்திருப்பதுபோல் சகல ஜீவஜந்துக்களின் இருதய கமலத்தில் பரமாத்மா ஒருவனே வியாபித்திருக்கின்றாள் அப்படிப்பட்ட பரமாத்மாவே மஹா சூத்திரம் மஹா யஞ்ஞோபவீதம். (பூணூல்) நிஜமாகிய ஞான ஸந்நியாவந்தனம் என்று சொல்லப்படும். அந்த மஹா சூத்திரமான பிரம்மத்தைத் தெரிந்து கொண்டு பிரம்மாநு சந்தானஞ் செய்வதே யஞ்ஞோ பவீததாரணையென்று சொல்லப்படும். பிரம்மஞானியாகிய பிராமணன் பிரம்மாநுபூதியென்றும் பிரம்ம சூத்திரத்தைத் தரித்து நூலிழைகளுடைய பூணூலைக் கழற்றிட வேண்டும் அந்தப் பிரம்மமென்னும் சூத்திரத்தைத் தரித்த ஞானியாகிய பிராமணனுக்கு உச்சிஷ்டம் (எச்சில்) சுசி ஆகாரம் என்னும் பேதமே இராது. சர்வம் அபேத பரபிரம்ம சொரூபமாகவே இருக்கும் அந்தப் பிரம்மமென்னும் சூத்திரத்தைத் தெரிந்து, அதை இடைவிடாமல் தியானித்துக் கொண்டிருப்பவனே சூத்திரம் இப்படிப்பட்டதென்று தெரிந்து யஞ்ஞோப வீதத்தைத் தரித்த ஞான பிராமணன் என்று சொல்லப்படுவான். அவ்வித பிரம்ம

சூத்திரத்தைத் தெரிந்தவனே ஜீவித்திருப்பவன் மற்றவர்கள் ஜீவித்திருந்தபோதிலும் பிணத்திற்குச் சமானரேயாவார்கள். இப்படிப்பட்ட பிரம்மஞானமுடையவன் பிராமணனே யொழிய ஜன்மங்களினாலும் கர்ம நிஷ்டங்களினாலும் பிராமணனாகமாட்டான்.

> சுரு॥ "நிராலம்போ பநிஷதம் யோதீதே குர்வ துக்ரஹத
> ஸோக்நிபூதோ பவதி ஸவாயுபூதோ பவதி நஸ புநரா
> வர்த்ததே நஸ புநராவர்த்ததே புநர்நாபிஜாயதே
> புநா தாபி ஜாயயதே இத்யுபநிஷத்"
>
> (நிராலம்பபோபநிஷத்)

இந்த நிரநலம்போப நிஷத்தில் சொல்லப்பட்ட பிரம்ம சூத்திரத்தை "இதுவே சிவராஜயோக ஸமாதி இதை ஜபம் செய்யுங்கள்" என்னும் அட்டவணையில் இனி சொல்வோம். ஆதலால், அதையே குருவாக்காய் நினைத்து இடைவிடாத ஜீவப்பிரவாஹம் போல் எப்பொழுதும் ஜபம் செய்து வருபவர்கள் அக்கிநியைப் போலும். வாயுவைப் போலும் பவித்திரமாகின்றார்கள் அப்படிப்பட்டவர்களுக்குப் புனர் ஜனனம் இல்லவேயில்லை. இந்த உபநஷத் வாக்கியங்கள் மஹாரகசியம்; இது பரமகோப்யம் இந்தப் பிரம்ம சூத்திரத்தைத் தெரிந்து ஜபம் செய்து கொண்டிருப்பதே ஸம்பிரஞ்ஞான ஸமாதி என்றும், அல்லது ஸவிகல்ப ஸமாதி என்றும் சொல்லப்படும்.



## 103. சிவராஜயோகம் சமாதி

சுருு "ஸம்ப்ரஜ் ஞாதஸ்மாதிஸ்யாத் த்யாநாப்யா ஸப்ரகர் க்ஷதஹ
ப்ரஸாந்த வ்ருத்திகச் சித்தம் பரமாநந்த தாயகம்" (முக்தி)

"ஹ்ருதயக்மலத்யே தீப மத்வைத ஸாரம்
ப்ரணவமயம் மதர்க்யம யோகிஹ்ருத் யாநகம்யம்
ஹரிகுருஸிவயோகம் ஸர்வபூதஸ்த் மேகம்
ஸக்ருதபி மநஸா த்யாயதேய்ஹ ஸ முக்தக்ஷ"

பாரப்பா இதையறியார் சித்தர் கூடிப்
பார்தனிலே அறுபத்து நாலு யோகம்
ஆரப்பா இருக்குதென்று வெவ்வேறாக
அலைந்தலைந்து கெட்டவர்களனத்தங் கோடி
நேரப்பா ராஜங்க யோகம் பார்த்து
நிலைஅறிந்து கண்டவனே கோடிக்கொன்று
வீரப்பா பேசாமல் மனக்கண்ணாலே
விந்துவிடா பாங்ந்தலம் வெளியைக் காணே (1)

கண்ணான பிடரிமுது கேடு ரந்திரம்
கால்கூட்டிப் பார்த்தாலே தலைமே லாகும்
வீண்ணான பெருவிளக்கு னீன மானால்
விமோ சளமாம் நிராலம்ப மெனத்தான் சொல்லும்
ஒண்ணான யோகமல்லவோ இந்த நிஷ்டை
உபதேசம் பெற்றவர்க்கே உண்மை யாகும்
அண்ணாந்து பார்த்திருந்தால் வருமோ ஞானம்
"அஜபா மந்தி ரத்தியாளம் அறைகின்றேனே (2)
அறைகிலேன் அஜபையென்னும் பிராணன் மாவை
அகண்டபரா யரத்தினுள்ளே ஐக்கியம் செய்ய

குறைவில்லை "ஓங்" கார மூல வட்டக்
குண்டலியாய் நின்றிடத்திற் குணாதீ தந்தான
நிறைகிலேன் நாசிகா ரந்த்ர வாயு
நீங்காம லேகமாய் நிர்ணயித்துப்
பறைகிறே னக்ஷரசா தனமுந் தள்ளிப்
பந்தமற் மகாலமோ க்ஷப்பதிபெற் றேனே (3)

மகிமையென்று யோகாசா தனையி னாலே
மகாகாச நிர்விகற்ப வாழ்க்கை யாச்சு
அகமகயென் றாணவத்தை நீக்க லாச்சு
அத்துவித பிரம்மசிதா னந்த காரம்
சகலாதீ தங்கடந்து களாதீ தத்தில்
சாதித்தேன் தன்மயமாய்ச் சார்ந்துபோச்சு
பகலிருளில் லாதவெளிக் கப்பலாச்சு
பத்தமற்ற மகாமோக்ஷப் பதம் பெற்றேனே (4)

பெற்றதனைச் சொல்லிவிட்டேன் வடநூல் பாஷை
பிரித்துமுப்பத் தொன்றினிலே பிரம்ம ஞானம்
தத்துவத்தைச் சொல்லிவைத்தேன் யோகி யானால்
சாதனைசெய் வான்றிவான் சைதன் யத்தில்
முத்தியடை வானதிலே நிருத்தஞ் செய்வான்
முமுட்சுத் துதமறிந்த மூர்த்தியாவான்
நித்தியமெனு முபநிடதப் பொருள்தான் சொல்லும்
நிலவரத்தால் யோகநிஷ்ட்டை நிறைந்து முற்றே (5)

"தனிமுதலைப் பார்த்திருந்து தனித்திருந்து வாழாம
லனியாயமாய்ப் பிறந்திங் கலைந்து நின்றேன் பூரணமே
வாசிதனைப் பார்த்திருந்து மகிழ்ந்துனைத்தான் போற்றாமல்
காசிவரைப் போய்த் திரிந்து காலலுத்தேன் பூரணமே."

*மேற்சொல்லிய பாடல்களின் உரையே இதனடியில் விவரித்துச் சொல்லப்போகின்றோம். ஆதலால், இந்நூலுக்*

கெல்லாம் இதுவே மிகவும் முக்கியமான ரகஸ்யமும் முக்கியமான உபதேசமுமாய் இருக்கிறது. யோக மார்க்கமோ மிகவும் கஷ்டமான மார்க்கம், இந்த ராஜ்யோகமே ராஜபாட்டையைப்போல் ஆயாசமில்லாமல் மிகவும் சுலபமாய் இருக்கும் மார்க்கம், ஆதலால், ஸ்திரீ புருஷர்களாகிய நீங்கள் எல்லோரும், யோக வழியைவிட்டு ராஜபாட்டையாகிய இந்த ராஜயோகத்தை இதனடியில் சரியான வழியுடன் சொல்லுகிறோம். அதுபோல், ஏகாந்த இருட்டு அறையில் உட்கார்ந்து ஜபம் செய்து வருவீர்களாகில் அப்பொழுதே உங்கள் மனம் இறந்துவிடும். இது யோகத்திற்குக் கீழ்ப்படி, இதனால் அநேக மஹான்கள் சித்தியடைந்திருக்கின்றார்கள். ஆதலால், மனம் இருக்கும் ரகஸ்யம் அனேகர்களுக்குத் தெரியவரரது. இது உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டிருக் கிறது அவ்வாறு உபநிஷத்துகளில் சொல்லியிருந்தபோதிலும், அதன் ரகஸ்யம், சுவானுபவமுடைய அப்யாசிகளுக்கு மாத்திரம் தெரியவருமேயொழிய விசேஷ சாஸ்திரங்களை யும் வாசித்துப் பிரபஞ்சத்தை எல்லாம் ஜயிக்கத்தக்க பண்டிதனென்று பெயர் பெற்ற போதிலும், பிரம்ம சூத்திர ரகஸ்யம் அனுபவமில்லாமல் தெரியவரமாட்டாது. ஆதலால், யாம் மூன்றாம் படியாகி யோக மார்க்கத்திலிருந்து யக்ஞோ பவீதமென்னும் பிரம்ம சூத்திரரமாகிய நூலைப் பிடித்து, அதன் கொழுப்பை அடக்கி பாம்பாட்டியைப்போல் ஆட்டி, பிரம்ம சூத்திர ரகஸ்யங்களையெல்லாம் யோகபலத்தினால் அறிந்து, அதை இப்பொழுது உங்கள் புத்திக்கு நன்றாய் விளக்கும்படி பலவித திருஷ்டாந்தங்களின் மூலமாயும் ஸோஹம்'' மந்திரம் சுவாசத்துடன் சேர்த்து ஜபம் செய்வது படத்தின் மூலமாயும் காட்டி உங்கள் மனத்தின் ஓட்டத்தை நிறுத்திவிடப் போகிறோம். ஆதலால் இதை முக்கியமாய்க் கவனித்து இதுவே ''குருவாக்காய்'' நினைத்து இதனடியில் சொல்லுவதுபோல் ஜபம் செய்து வரவேண்டும்.

எல்லா வஸ்துகளையும் கட்டுவதற்கு கொலுசும் கயிறும் நூலும் வேண்டுவதாயிருக்கின்றன. இவைகள் இல்லாவிட்டால், எந்தக் காரியமும் நடைபெற மாட்டா. அதுபோல் ஜீவராசிகளின் மனத்தை கட்ட நூல் ஒன்று இருக்கிறது. அந்நூல் நமது சரீரத்தில் மூக்கின் ரந்திரங்களின் வழியாய் ஆடிக்கொண்டிருக்கின்றது. இந்நூல் என்றைக்கோ ஓர் நாள் அறுபட்டுப் போகிறது. இந்நூல் அறுபட்டால் சரீரம் பிணமாய்விடும். ஆதலால், மூக்கு ரந்திரங்களின் வழியாய் ஆடிக்கொண்டிருக்கும் ''யஞ்ஞோபவீதமென்னும்'' நூல் அறுபடாமுன்னமே. எல்லா ஸ்திரீ புருஷர்களும் ஜாக்கிரதைப்பட வேண்டும். அதாவது, சிங்கம், புலி, யானை முதலானவைகளைக் கட்டுவதற்குக் கொலுசு (சங்கிலி) வேண்டும். பசு, எருது, எருமைக் கிடா, எருமை இன்னும் அனேக மிருகங்களையும் பக்ஷிகளையும் கட்டக் கயிறு வேண்டும். கண்களுக்குக் காணப்படும் கொலுசுகளாலும் கயிறுகளாலும் கட்டுகின்றோம். மனது என்னும் குரங்கானது கண்களுக்குக் காணப்படாத கயிற்றால் கட்டவேண்டும். என்றால், கண்களுக்குக் காணப்படாத மனது என்னும் குரங்கை கண்களுக்குக் காணப்படாத யஞ்ஞோபவீத மென்னும் நூலால் கட்டவேண்டும் என்பதேயாம். இந்த யஞ்ஞோப வீதமென்னும் நூலுக்கே பிரம்ம சூத்திர மென்றும், ஹம்ஸ என்றும், வாசி என்றும் கால் என்றும், குதிரை என்றும் மூச்சு என்றும் சுவாசமென்றும் பிராண னென்றும், உயிர் என்றும் சொல்லப்படும். இது முக்கியமான விஷயமாதலால் பலவிடங்களில் இதை முன்னமே சொல்லியிருக்கின்றோம். இந்த மூச்சானது நாபியில் பிறந்து, மூக்குரந்திரங்களின் வழியாய் வருகிறது. இந்த மூச்சுடன் கூடவே ஞாபகமிராததும் உதவியற்றதுமான அனேக சிறிய சிறிய எண்ணங்களும் அந்த மூச்சுடன் கூடவே பிறந்து பிறந்து, உடனுக்குடனே அந்த க்ஷணமே மறைந்து விடுகின்றன எப்படியென்றால்,

நிஷ்களங்கமாய் (அசையாமல்) இருக்கும் சமுத்திரத்தின் மேல் காற்று எப்பொழுதும் அடித்துக் கொண்டேயிருக்கும். ஜலத்தின் மேல் காற்று வேகமாய் படுவதனால் அந்த ஜலம். அலைகளாய் புறண்டுகொண்டேயிருக்கும். அந்த அலைகளி லிருந்து, நுரைகளும் குமிழிகளும் திவலைகளும் உடனுக் குடனே பிறந்து பிறந்து, அந்த க்ஷணமே நுரை குமிழ் திவலைகள் யாவும் மேற்படி அலைகளில் மறைந்து அவ்வலைகள் சமுத்திரத்தில் மறைந்து விடுகின்றன. சமுத்திர ஜலமே அலைகளாகவும் நுரைகளாகவும் குமிழி களாகவும் தோன்றி, மறுபடியும் அவை யாவும் சமுத்திரத்தில் மறைந்த விடுகின்றன. இவைகளெல்லாம் முன்பு ஒருமுறை சொன்னோம் அதை மறுபடியும் இவ்விடமும் சொன்னோம். அடிக்கடி உதிக்கும் எண்ணங்களுக்காக இந்தக் குமிழி திவலை நுரைகளை திருஷ்டாந்தமாய் காட்டப்பட்டது.

அதுபோல், நாம் மூக்கு ரந்திரங்களின் வழியாய் விடும் மூச்சு என்னும் காற்றில், எதற்கும் உபயோகமற்ற சிறிய சிறிய எண்ணங்கள் உடனுக்குடனே உதித்து ஷை அலையி லுள்ள நீர்க்குமிழிகள் எவ்வளவு சீக்கிராய்ப் பிறந்து நசித்துப் போகின்றனவோ அதுபோல், நிமிஷத்திற்குள் அனேக உதவியற்ற எண்ணங்கள் ஷை மூச்சிலிருந்து ஒவ்வோரடி வைக்கும் பொழுதெல்லாம் ஒவ்வொரு எண்ணம் பிறந்து பிறந்து மேற்சொல்லிய நீர்க் குமிழியைப் போல் மறைந்து விடுகின்றன. இந்த எண்ணங்களையே மனது என்று சொல்லப்படும், இந்த மனது என்னும் குரங்கைக் கட்டும் நூலுக்கே யஞ்ஞோபவீதமென்றும், பிரம்ம சூத்திரமென்றும் சொல்லப்படும். இந்த மூச்சு நாபியிலிருந்து புறப்படுகிறது. ஆதலால் நாம் நினைக்கும் எண்ணங்களும் நாபியிலிருந்தே பிறக்கின்றன. இந்த மூச்சுக்கே ஹம்ஸஸ் ஸோஹம'' என்று உபநிஷத்து சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, ஹம்ஸ்

என்றால் மூச்சு இந்த மூச்சுடன் ஸோஹம் என்னும் மந்திரம் சேர்ந்து, நாள் ஒன்றிற்கு இருபத்தி ஓராயிரத்து அறுநூறு முறை தனக்குத்தானாகவே ஜபித்துக் கொண்டே இருக்கும் இப்படிப்பட்ட மூச்சு என்னும் நூலில் அடியில் சொல்லப் போகும் இரண்டு மந்திரங்களும் சேர்த்து, உள்ளுக்கும் வெளிக்குமாய் இழுத்து ஜபம் செய்து வந்தால் மனம் வெளி வியவகாரங்களில் ஓட அவகாசமிராமல், மந்திரம் மூச்சு இவ்விரண்டின் மத்தியில் சில நேரம் கட்டுப்பட்டு, பிறகு அம்மனம் தனக்குத்தானாகவே இறந்துவிடும். ஏனென்றால், பலவிடங்களிலும் ஓடிக்கொண்டிருக்கும் மனதை பிரம்ம சூத்திரமென்னும் நூலால் (மூச்சால்) கட்டிவிட்டால் அம்மனம் சிலநேரம் மாத்திரம் மந்திரத்தை ஜபம் செய்து செய்துக்கொண்டிருந்து பிறகு தூங்கும் சிறுவன் கையிலிருக் கும் பழத்தைச் சிறுவன் நழுவவிட்டுத் தூங்குவதுபோல், மனம் மேற்படி மூச்சுடன் சேர்ந்து மந்திர ஜபம் செய்து கொண்டேயிருந்து பிறகு தன்னைத்தானே மறந்துதான் தானாய் நின்றுவிடும். இதுவே ஹம்ஸ்ஸோஹம் என்னும் மந்திரத்தின் ரகஸ்யாதர்த்தம் இன்னும் இந்த ஹம்ஸஸ் ஸோஹ ரகஸ்யார்த்தம் என்னவென்றால், சிவோஹம் என்று சொல்லப்படும் இந்தச் ''சிவோஹம்'' ரகஸ்யம் என்ன வென்றால் 'ஹம் என்றால் நான் சிவோ என்றால் சிவம் என்றால் நானே சிவம் என்பதேயாம். இவ்வாறு கர்ம வாக்கினால் சிவோஹம் சிவேவாஹம் என்று சொல்லிக் கொண்டிருந்தால் சிவமாய் விடுவானார் எப்பொழுதும் ஆகவே மாட்டான்.

''சிவோஹம்'' மந்திரத்தின் ரகஸ்யார்த்தமே ''ஸோஹம்'' என்றால் நானே பிரம்மம் பிரம்மமே நான் என்று மூக்கின் ரந்திரங்களின் வழியாய் ஆடிக்கொண்டிருக்கும் மூச்சானது ஸோஹம் என்னும் இரண்டு மந்திரங்களையும் தனக்குத்

தானோகவே நாள் முழுமையும் இருபத்து ஓராயிரத்து அறுநூறு முறை சொல்லிக் கொண்டு ஒவ்வொரு ஜீவராசி களின் மூக்குத் துவாரங்களில் ஆடிக்கொண்டிருக்கும். ஸோஹம் மந்திரத்தின் அர்த்தமும் ஒன்றேயாம். அதாவது ஸோஹம்' என்றால் நானே பிரம்மமென்றும் சிவோஹம் என்றால் நானே சிவமென்றும் சொல்லப்படும். இவ்விரண்டு மந்திரங்களும் ஒரே பரப்பிரம்மத்தைக் குறிப்பிட்டுச் சொல்லுகின்றன. ஆதலால் சிவோஹம் என்னும் ரகஸ்யம் குருவினால் தெரிந்து கொள்ளும் வரையில் சிவோஹம் என்றிருந்திடாயே என்று பாடங்களின் மறைவாய்ச் சொல்லி யிருந்த பொருளை எல்லாம் இப்பொழுது இந்நூலில் வெட்டவெளியாய்ச் சொல்லியிருக்கின்றோம். ஆதலால் ஸ்திரீ புருஷர்களெல்லோரும் பிரதிதினம் தவறாமல் ராஜயோகம் ஜபம் செய்து வரவேண்டிய வழியை இதனடியில் உபதேச மாய்ச் சொல்லுகிறோம். ஆதலால்,

இந்நூலாசிரியர் படத்தையே 'குரு' வாய் நினைத்து, பூஜை அறையில் வைத்து விளக்கேற்றி படத்திற்கெதிரில் பழம் வைத்து கற்பூரம் (சூடம்) ஏற்றி நமஸ்கரித்து எனக்குச் "சிவராஜயோகம் சித்தியாகும்படி அனுக்கிரகம் செய்ய வேண்டும்" மென்று மனதில் நினைத்துப் பிறகு, படத்துக் கெதிரில் வடக்கு முகமாய் சித்தாசனத்துடன் மான் தோல்மீது உட்கார்ந்து ஒரு தட்டில் பஞ்சபாத்திரம் ஜலம் வைத்துக் கொண்டு கொஞ்சம் எள்ளை வலதுகைவிரல் நுனியில் வைத்து இடது கையில் பஞ்சபாத்திரம் எடுத்துக்கொண்டு மேற்படி எள்ளில் ஜலம் விட்டுக்கொண்டே உடல்பொருள் ஆவி இம்மூன்றும் குருசுவாமிகளுக்கு அர்ப்பனசெய்து விட்டேன் என்று மனதில் நினைத்து எள்ளும் ஜலமும் தட்டில்விட்டுக் கையைத் துடைத்துக் கொள்ள வேண்டும்.

விரிந்த சஞ்சித வினைகளன் புடனாம்
விழிக்க வெந்தன விரும்பிமுற் சென்னம்
புரிந்த வல்வினை யுடலுடன் களும்
புந்திசே ரருன் வருவினை போக்கு
பருந்துயர் பொருளுயிருடம் புனவே
யல்ல நய்மன வாகுமிங் குனைப்போ
லிருந்த நம்குரு வடிவைநின் கருத்தி
லிழுத்து வாய்பொறாளிதுவென மொழிந்தார்.

இவ்வாறாக உடல் பொருள் ஆவி இம்மூன்றும் அப்படத்திற்குத் தத்தம் செய்த பிறகு – அவ்வுடல் பொருள் ஆவி இம்மூன்றும் உமதல்ல எமதாகும். மாயை ஸஞ்சித கர்மங்களெல்லாம் நயன தீக்ஷையால் (கண் பார்வையால்) தகிக்கப்பட்டொழியும். பிறகு உன் பிராரப்த கர்மமானது சரீரம் இருக்கும் வரையில் இருந்து அதனோடே அபிப்ராப்த கர்மம் ஒழியும். உன் மனதிற் பதிந்த நம் அருளானது. இனி உன் ஆகாம்ய கர்மங்களை ஏறவொட்டாமல் தடுக்கும். இந்தப் ஸஞ்சித ப்ராப்த ஆகாம்ய கர்மங்களையெல்லாம் இந்நூலில் முன்பே சொல்லியிருக்கிறோம்; இது முக்கியமாய்த் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம். ஆதலால் அதை மறுபடியும் ஒருமுறை வாசித்து அதன் கருத்தை நன்றாய் அறியுங்கள்.

உடல் பொருள் ஆவி இம்மூன்றும் மேற்படி படத்திற்குத் தத்தம் செய்த பிறகு, விபூதியை மந்திர பூர்வமாய் அந்தந்த அவயங்களில் இட்டு ராஜயோகம் ஜபம் செய்ய வேண்டும். இனி விபூதி மந்திரம் விதிப்படு இடும் உபதேசம் இதனடியில் சொல்லுகிறோம். அதுபோல் அந்தந்த அங்கங்களில் அந்தந்த மந்திரங்களை மூன்று முறை சொல்லி மூன்று முறை விபூதி இடவேண்டும்.

ஒரு பெரிய மணை அதாவது ''ஒரு அங்குலம் உயர முள்ள பெரிய மணைமேல் மான் தோல் போட்டு. அதன்

மேல் வெள்ளை வஸ்திரம் மடித்து விரிந்து மணை எதிரில் பஞ்சபாத்திரத்தில் ஜலம் உத்திரணியுடன் (சிறிய கரண்டியுடன்) தட்டில் வைக்க வேண்டும். பிறகு இந்நூலாசிரியர் சித்தாசனமாய் உட்கார்ந்து சின்முத்திரையை விரல்களால் பிடித்துக் காட்டியதுபோல் அதாவது இடது பாதம் வலது துடையின் கீழ் வைத்து, வலது பாதம் இடது துடையுடன் சேர்ந்தாற்போல் பாதம் சமமாய் இருக்கும்படி வைப்பதே சித்தாசனம் இவ்விதமாய் சித்தாசனத்துடன் வடக்கு முகமாய் உட்காரவேண்டும் உட்கார்ந்தவுடன், அப்புருஷன் சுற்றிலுமிருக்கும் துஷ்ட தேவதைகளைத் தூரமாய் விலக்கும்படி செய்வதற்காக வலது கை மூன்று விரல்களால் பஞ்ச பாத்திரத்திலுள்ள ஜலம் எடுத்து, மந்திரத்துடன் சிரசிற்கு மேலும், சிரசு சுற்றிலும் இறைக்கவேண்டும். அவ்வாறு இறைக்கும் நீர்த்துளியானது, அஸ்திரமாய் (பாணமாய்) துஷ்ட தேவதைகளையெல்லாம் தூரமாய்த் துரத்தும். பிறகு ஆரமனம் செய்து அதன் பிறகு, விபூதி குழைத்து மந்திரத்துடன் அந்தந்த அவயங்களில் இட வேண்டும்.

நீங்கள் பிரதிதினம் காலை 7 மணிக்கெல்லாம் ஸ்நானம் செய்து உலர்ந்து மடிவஸ்திரம் கட்டிக் கொண்டு, முன்சொல்லியதுபோல் மணையின் மீது மான் தோல் போட்டிருக்கும். ஆசனத்தில் வடக்கு முகமாய் சித்தாசனத்துடன் உட்காரவேண்டும். பிறகு வலதுகை மோதிரவிரல், நடுவிரல் ஆள்காட்டும் விரல் இம்மூன்றையும் பஞ்சபாத்திர லுள்ள ஜலத்தில் மூழ்த்தி.

ஓம் அஸ்த்ராயநமஹ, ஓம் ஆஸ்த்ராயநமஹ ஓம் அஸ்த்ராய நமஹ என்று மூன்று முறை மனதில் நினைத்துக்கொண்டே மூன்று முறை ஜலம் எடுத்து சிரசிற்குமேல் இறைக்கவேண்டும். பிறகு,

ஓம் அஸ்திராயநமஹ, ஓம் அஸ்த்ராயநமஹ, ஓம் அஸ்த்ராய நலஹ என்று மூன்றுமுறை மனதில் நினைத்து கொண்டே மூன்று மறை ஜலம், கை வளைத்துச் சிரசு சுற்றிலுமிருக்கும் துஷ்டதேவதைகளெல்லாம் தூரமாய் விலகிவிடும். பிறகு,

இடது கையில் உத்தரணி ஜலம் எடுத்து வலது உள்ளங்கையில் விட்டு, ஓம் ஆத்மதத்வாய நமஹ என்று சொல்லியபிறகு அந்தத் தீர்த்தம் சாப்பிட்டு மறுபடியும்.

ஒரு உத்தரணி ஜலம் எடுத்து உள்ளங்கையில் விட்டு ஓம் வித்யாதத்வாய நமஹ என்று சொல்லியபிறகு, அந்த தீர்த்தம் சாப்பிட்டு மறுபடியும்.

ஒரு உத்தரணி ஜலம் எடுத்து, உள்ளங்கையில் விட்டு ஓம் சிவதத்வாயநமஹ என்று சொல்லிய பிறகு அந்தத் தீர்த்தம் சாப்பிடவேண்டும். இதையே ஆசமனம் என்று சொல்லப்படும். இப்படி செய்தால் வாய் சுத்தமாகிறது. அதன்பிறகு, இந்தச் சுத்தமான வாயினால் மந்திரஜபம் செய்யவேண்டும்.

இவ்வாறு மூன்றுமுறை ஆசமனம் செய்து, முடிந்தவுடன் குட்டை அல்லது வேஷ்ட்டி முனையை எடுத்து ஜலத்தில் நனைத்துப் பிழிந்து இரண்டு கண்களையும், வாயையும் துடைத்துக்கொள்ள வேண்டும். பிறகு

ஆள் காட்டும் விரலை நீக்கி, பெருவிரல், நடுவிரல், மோதிரவிரல்களால் விபூதி எடுத்து இடது உள்ளங்கையில் வைத்து வலது கை மோதிரவிரல் நடுவிரல் ஆள் காட்டும் விரல் இம்மூன்று விரல்களால் பஞ்சபாத்திரத்திலுள்ள ஜலம் எடுத்து ஓம்சிவ, ஓம்சிவ, ஓம்சிவ என்று மூன்று முறை மனதில் நினைத்துக்கொண்டே, ஷெ விபூதியில் மூன்று முறை ஜலம் விட்டு, விபூதியிலுள்ள இடது கையை வலது

துடையின் மேல் வைத்து, வலது உள்ளங்கையால் அந்த விபூதியை மூடி, சிவ சிவ சிவ என்று மூன்று முறை மனதில் நினைத்து முடிந்தவுடன் விபூதியைக் குழைத்து வலதுகை மோதிரவிரலால் இடது உள்ளங்கையில் ''ஓம்'' என்று அந்த விபூதியில் எழுதி மறுபடியும் விபூதியை குழைத்து,

வலது இடது கைகளின் மோதிரவிரல் நடுவிரல் ஆள் காட்டும் விரல் இந்த ஆறு விரல்களையும் சிரசிற்கு மேல் கொண்டு போய் அவ்விரல்களைப் பின்புறமாய் மடித்து ஒன்றாய்ச் சேர்த்து, ஓம் ஈசாயந மூர்த்தியாய நமஹ, ஓம் ஈசாய நமூர்த்தியாயநமஹ ஓம் ஈசாயந மூர்த்தியாயநமஹ என்று மூன்று முறை மனதில் நினைத்து மூன்று முறை சிரசு உச்சியை ஆறு விரல்களால் தொடவேண்டும்.

பிறகு விபூதியைக் குழைத்து, தத் புருஷ, வஸ்தராய நமஹ, ஓம் தத்புருஷ வஸ்த்ராயநமஹ ஓம் தத்புருஷ வஸ்த்ராயநமஹ என்று மூன்று முறை மனதில் நினைத்து மூன்று முறை நெற்றியில் வைக்கவேண்டும். பிறகு,

விபூதியைக் குழைத்து ஓம் அகோர இருதயாய நமஹ ஓம் அகோர இருதயாய நமஹ. ஓம் அகோர இருதயாய என்று மூன்று முறை மனதில் நினைத்து மூன்று முறை மார்பில் வைக்கவேண்டும். பிறகு,

விபூதியைக் குழைத்து ஓம் வாமதேவ குய்யாய நமஹ ஓம் வாமதேவ குய்யாயநமஹ, ஓம் வாமதேவ குய்யாய் நமஹ என்று மூன்று முறை மனத்தில் நினைத்து வலது இடது கைகளின் ஆறுவிரல்களால் நாபியை (தொப்புளை)த் தொடவேண்டும் பிறகு,

வலது புஜம், இடது புஜம், நடுக்கைகள், கணுக்கைகள் மாறுதலாய் முழங்கால் பாதமனிக்கட்டு, விலா, இடுப்பு கழுத்து முதலான ஒவ்வொரு இடங்களிலும், ஓம் ஸத்யோ

சாதாயநமஹ என்று மூன்று முறை மனதில் நினைத்து மூன்று முறை விபூதியைக் குழைத்து மேற்சொல்லிய இடங்களில் இடவேண்டும். விபூதி இட்டு முடித்தவுடன் விபூதிகை அலம்புக்கையிலிருக்கும் விபூதி ஜலத்தில் மூன்று துளி ஜலம் சிவ சிவ சிவ என்று மனதில் நினைத்துச் சாப்பிடவேண்டும். பிறகு,

ஒரு உத்திரணி ஜலம் வலது கையில் விட்டுக்கொண்டு ஓம் ஆத்மத்வாயநமஹ, என்று சொல்லி முடிந்தவுடன் அந்த தீர்த்தம் சாப்பிட்டு மறுபடியும்.

உத்திராணி ஜலம் கையில் விட்டு ஓம் வித்யா தத்வாய நமஹ என்று சொல்லி முடித்தவுடன் அந்த தீர்த்தம் சாப்பிட்டு மறுபடியும்,

உத்திரணிஜலம் கையில் விட்டு ஓம் சிவ தத்வாய நமஹ என்று சொல்லி முடிந்தவுடன் அந்தத் தீர்த்தம் சாப்பிட வேண்டும்.

இவ்வாறு மூன்று முறை ஆசமனம் செய்து முடிந்த பின்; வலகைப் பெருவிரல் மோதிர விரல்களை ஒன்றாய் சேர்த்து அடியில் சொல்லப்போகும் மந்திரங்களைச் சொல்லி அந்தந்த இடங்களை ஷை விரல்களின் நுனியால் தொட வேண்டும். இதைப் பாடஞ்செய்துக் கொள்ளுங்கள், ஹர என்று வலது கண்ணையும் ருத்ர என்று இடது கண்ணையும் சங்கர என்று வலது காதையும், நீலுலோஹித என்று இடது காதையும் பீம என்று வலது நாசியையும் விஜய என்று இடது நாசியையும் தேவதேவ என்று வாயையும் உற்பவ என்று தொப்புளையும் கபாலிச் என்று சிரசு உச்சியையும், சிகாயமஹ என்று குடுமியையும் இருதயாயநமஹ என்று மார்பையும் இவ்வாறாக ஒவ்வொரு மந்திரமும் சொல்லி மேற்சொல்லிய ஒவ்வோரிடமும் தொட வேண்டும்.

அந்தந்த இடங்களைத் தொட்டு முடித்தவுடன் கண்களை மூடி, தனது குருவை இருதய கமலத்தில் நிறுத்தி அவரது ரூபத்தை உள்முகமாய் மனக் கண்ணால் பார்த்து.

குருர்ப்ரஹமா குருர்விஷ்ணு குருர்தேவோ மஹேஸ்வரஹ
குருசாஹாத் பர பரஹ்மா தஸ்மை ஸ்ரீ குருவேநமஹ

எனக்கு ''ஸோஹம்'' மந்திரம் சித்திக்கும்படி வரம் பிரசாதிக்க வேண்டும்.

என்று மனதில் நினைத்துக் கும்பிடவேண்டும். அதன் பிறகு சின்முத்திரையை விரல்களால் பிடித்துக் கண்களையும் வாயையும் மூடி மூக்கு நுனியில் திருஷ்ட்டியை நிறுத்தி மூச்சு உள்ளே செல்லும்போது அந்த மூச்சுடன் கூடவே 'ஸோ' என்னும் மந்திரத்தைச் சேர்த்து உள்ளுக்கிழுத்து மறுபடியும் மூச்சு வெளிவிடும் பொழுது அந்த மூச்சுடன் கூடவே 'ஹம்' என்னும் மந்திரத்தைச் சேர்த்து வெளியிடவேண்டும் இதுபோல ஒவ்வொரு மூச்சிலும் மேற்சொல்லிய ஸோ ''ஹம்'' என்னும் இரண்டு மந்திரங்களையும் சேர்த்து கால்மணி நேரமோ அல்லது அரைமணி நேரமோ உங்கள் சக்தி யானுசாரம் ஜபம் செய்துவரவேண்டும் பள்ளமிரைத்த வனுக்கும் பங்கண்டு. என்பதுபோல், இந்த மந்திரம் நீங்கள் எவ்வளவு நேரம் ஜபிக்கின்றீர்களோ அதற்குத் தக்க பலன் உங்களுக்குக் கிடைக்கும் விஷ்ணு மதஸ்தர்கள் எவ்வாறு செய்யவேண்டுமோ அதை இனி சொல்லப் போகிறோம் கேளுங்கள்.

விஷ்ணு மதஸ்தர்கள் ஸ்ரீ சூர்ணம் இடவேண்டிய மந்திரங்களை இனிச் சொல்லுகிறோம். அதுபோல் அந்தந்த இடங்களில் அந்தந்த மந்திரங்களைச் சொல்லி ஸ்ரீ சூர்ணம் இடவேண்டும்.

உச்சியில் ஓம் தத்ஸத் ஸ்ரீ பரப்பிரம்மணே நமஹ நெற்றியில் கேசவாயநமஹ நாபியில் நாராயணாய் நமஹ மார்பில் மாதவாய நமஹ வலது புஜத்தில் வாமநாய நமஹ இடது புஜத்தில் ஸ்ரீதாராய இடுப்புப் பின்புறம் பத்மநாபாய நமஹ புறங்கழுத்தில் தாமோ தராய் நமஹ என்று சொல்லி இடவேண்டும், இந்த மந்திரங்களுடன் ஸ்ரீ சூரணம் மேற்சொல்லிய ஒவ்வொரு இடங்களிலும் அணிந்து முன்சொல்லியதுபோல் குருவை ஸ்துதி செய்து முடிந்தபின் இதுவரையில் சொல்லியது போல் ஸோஹம் மந்திரம் மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்யவேண்டும்.

உலகத்தில் வாசகம் மந்தம் மானசம் என்று மூன்று விதங்களாய் மந்திரங்களை ஜபம் செய்து வருகிறார்கள். அது எவ்வாறெனில் இதரர்கள் கேட்கும்படி மந்திரம் வாக்கினால் ஜபம் செய்து வருவது வாசமென்னும் இதரர்களுக்குக் கேட்காதபடி உதட்டை முணமுணவென்று அசைத்து மந்திரம் ஜெபம் செய்து வருவது மந்தமென்றும் மந்திரம் மனதினால் நினைத்து ஜபம் செய்து வருவது மானசமென்றும் சொல்லப்படும். வாசகமாய் மந்திரம் ஜபிப்பதுவிட மந்தமாய் மந்திரம் ஜபிப்பது பதினாயிரம் மடங்குபலன் அதிகம் மந்தமாய் ஜபிப்பதைவிட மானசமாய் ஜபிப்பது இருபதினாயிரம் மடங்கு பலன்.அதிகம்.

உலகத்திலுள்ள ஜனங்களெல்லோரும். இம்மூன்று விதங்களில் ஏதேனும் ஒருவிதமாய் ஜபம் செய்து வருகின்றார்களேயொழிய, மந்திரங்களை யச்ஞோபவீத மென்னும் நூலுடன் சேர்த்து ஜபம் செய்வதில்லை.

இந்த ஜீவப்பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யத்தில் சொல்லியிருக்கும் மந்திரங்களின் உபதேசமெல்லாம் யஞ்ஞோபவீதமென்னும் மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்துவர வேண்டிய மந்திரங்களாகவே இருக்கும். இவ்வாறு ஜபம் செய்து வந்தால் முன்சொல்லியவை

களைவிட கோடி மடங்கு அதிக பலத்தைத் தரும் மேற்சொல்லிய ஸோஹம் மந்திரம் மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்வதை இந்நூலாசிரியராக யோகீஸ்வரர் படத்தின் மூலமாய்க் காட்டி இன்னும் தெளிவாய் இனி சொல்லப் போகின்றார்.

ஸோஹம் மந்திரம் ஜபம் செய்வதற்குமுன் மிகவும் உயர்ந்த பளிங்கு சாம்பிராணி தூள் செய்து பூஜை அறையில் தூபம் போட்டு பரிமளமுள்ள ஊதுவத்தி கொளுத்தினால் அவ்வத்தி நிதானமாய் ஒரு மணிநேரம் எரிந்து அதன் சுகந்த வாசனை அவ்வறையெல்லாம் நிறைந்திருக்கும் அச்சமயம் இதரர்கள் உள்ளே உள்ளே வராதபடி கதவைச் சாற்றித் தாள் போட்டு மனதை ஒரே நாட்டத்தில் நிறுத்துவதற்காக முன் அமைத்து வைத்திருந்த மணையின்மீது இந்நூலாசிரியர் சித்தாசனத்துடன் எதிரிலிருக்கும் படத்தில் உட்கார்ந்து கைகளால் தின் முத்திரையைப் பிடித்துக் காட்டியிருப்பது போல நீங்களும் உட்கார்ந்து கண்களையும் வாயையும் மூடி சின் முத்திரையை விரல்களால் பிடித்து முகத்தை நிமிர்த்திப் இடுப்பு கூன் வளையாமல் நேராய் நிறுத்திச் சித்திரப் பதுமை போல் அசைவர நின்று இதனடியில் சொல்லப் போகும் 'ஷோஹம்' என்னும் இரண்டு மந்திரத்தையும் பிரதிதினம் காலைமாலைகளில் ஜபம் செய்து வரவேண்டும். இவ்வாறு பிரதி தினம் தவறாமல் ஜபம் செய்துவந்தால் மனோ சக்தி உண்டாகும். இந்நூலாசிரியர் வலது கைப்படத்தில் அம்பினால் காட்டியிருக்கும் சுண்டு விரலே 'ஸோ' என்னும் மந்திரம், அடுத்து படத்தில் அம்பினால் காட்டியிருக்கும் சுண்டு விரலே 'ஸோ' என்னும் மந்திரம், அடுத்து படத்தில் அம்பினால் காட்டியிருக்கம் மோதிர விரலே மனது மேற்படி படத்தில் அம்பினால் காட்டியிருக்கும் நடுவிரலே மூச்சு. இதுபோல், இடதுகைப் படத்தில் அம்பினால் காட்டி யிருக்கும் நடுவிரலே ஹம்' என்னும் மந்திரம் மேற்படி

படத்தில் அம்பினால் காட்டியிருக்கும் சுண்டு விரலே மூச்சு மந்திரம். மனது, மூச்சு இம்மூன்றையும் ஒன்றாய் சேர்த்து உள்ளுக்கிழுத்தவுடன் மனது வெளியில் ஓட அவகாச மிராமல், மந்திரம், மூச்சு இவ்விரண்டின் மத்தியில் கட்டுப்பட்டு, ஒரே சமாதி நிலையில் நின்றுவிடும். இவ்வாறு சமாதி நிலையில் நின்றிருந்தால் அப்பொழுது மனம் இறந்துவிடும், மனம்இறந்துவிடுவதனால் தான் வஸ்துக்களின் மீது வைத்திருந்த இச்சைகளையும் செய்ய வேண்டிய கார்யங்களையும் மறந்து எந்த, நினைப்பில் லாமல் தான் தானாயிருந்து தேனையுண்ட வண்டுபோல் மயக்கங் கொண்டு ஆனந்த நித்திரையில் சொக்கியிருப்பான்.



ஸோ ஹம் மந்திரம் ஜபம் செய்வது

நீங்கள் ஸோஹம் மந்திரஜபம் செய்யும்பொழுது உங்கள் மனமானது ஸோஹம் மந்திரத்தை ஜபம் செய்யாமல் அடிக்கடி வெளி வியவகாரங்களில் ஓடிக் கொண்டே யிருக்கும். அச்சமயத்தில் மனதை வெளியில் போகவிடாமல் மறுபடியும் இழுத்துக்கொண்டு வந்து மூச்சுடன் சேர்த்து மந்திரம் ஜபம் செய்யும்படி செய்யவேண்டும். இவ்வாறாக எத்தனை முறை மனம் வெளியில் ஓடிய போதிலும் அத்தனை முறையும் அம்மனத்தை இழுத்துக் கொண்டு வந்து மூச்சுடன் சேர்த்து மந்திரம் ஜபம் செய்து கொண்டே வந்தால் பிறகு அம்மனம் வெளியில் ஓட அவகாசமிராமல் மந்திரத்திலேயே கட்டுப்பட்டிருக்கும். இதற்கும் பட்டினத் தடிகள் பாடல் பிரமாணம்;

சினந்தனை யற்றும் பிரியமுந்தா னற்றுச் செய்கை யற்று
நினைத்தது மற்று நினையாமையுமற்று நிச்சித்த னாய்த்
தனந்தனியேயிருந் தானந்த நித்திரைத் தங்குகின்ற
வனந்தனி லென் றிருப்பனேத்தனே கயிலாயத்தனே

''ஸோஹம்'' மந்திரத்தால் மனத்தைக் கட்டுங்கள் என்று நேராய் சொல்லாமல், மேற்சொல்லிய பாடலாய் பட்டினத்தடிகள் பாடினார்கள். பட்டினத்தடிகள் மேற் சொல்லிய பாட்டின் ரகஸ்யார்த்தம் இந்த ''ஸோஹம்'' மந்திரமேயாம்; ஆதலால். எல்லோரும் இதில் சொல்லியது போல் ஸோஹம் மந்திரம் ஜபம் செய்து வாருங்கள். இந்த ''ஸோஹம்'' மந்திர ஜபத்திற்கே; அஹமபிரம் மாஸ்மி, ''பூஜையென்று சொல்லப்படும். இதற்கு ரிபு கீதை பிரமாணம் சொல்லகின்றோம் கேளுங்கள்.

அஹம்பிம்ம நிச்சயமே தேவபூஜை
அஹம்பிரம்மநிச் சயமே தெய்வத்தியானம்
அஹம்பிரம்ம நிச்சயமே செப தபங்கள்
அஹம்பிரம்ம நிச்சயமே அறங்களாகும்

அஹம்பிரம்ம நிச்சயமே யகண்ட தியானம்
அஹம்பிரம்ம நிச்சயமேய கண்டயோ கம்
அஹம்பிரம்ம நிச்சயமே யகண்ட ஞானம்
அஹம்பிரம்ம நிச்சயமே யகண்ட மோட்சம்.

அதாவது அஹம்பிரமாஸ்மி என்று சொல்லப்பட்ட ''ஸோஹம்'' மந்திர ஜபமே நிச்சயமான தேவபூஜை ஸோஹம் மந்திரஜபமே நிச்சயமான தெய்வத்தியானம் ஸோஹம் மந்திர ஜபமே நிச்சயமான செபதபங்கள் ஸோஹம் மந்திரஜபமே நிச்சயமான அறங்க (தர்மங்க) ளாகும். ஸோஹம் மந்திரஜபமே நிச்சயமான அகண்ட தியானம். ஸோஹம் மந்திரஜபமே நிச்சயமான அகண்ட யோகம், ஸோஹம் மந்திரஜபமே நிச்சயமான அகண்ட ஞானம் ஸோஹம் மந்திர ஜபமே நிச்சயமான அகண்ட மோட்சம்.

என்று சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதலால் இப்படிப்பட்ட அகண்டமோட்ச சாம்ராஜ்ய பதவியை தரத்தக்க ''ஸோஹம்'' மந்திர உபதேசத்தை உங்களுக்கு எவர்களும் புத்தக மூலமாய் உபதேசிக்க மாட்டார்கள். அப்படிப்பட்ட அதிகோப்யான உபதேசத்தை, இந்நூலை வாசிக்கும் ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களும் பேசும் வேளை, வேலைகள் செய்யும் வேளை படிக்கும் வேளை எழுதும் வேளை, தூங்கும் வேளை தவிர மற்றக் காலங்களிலெல்லாம் ''ஸோஹம்'' மந்திரத்தை மூச்சுடன் சேர்ந்து ஜபம் செய்துவந்தால் அப்பொழுது மனமானது வெளி விவகாரங் களில் ஓட சக்தியில்லாமல் ஸோஹம் மந்திரத்திலேயே கட்டுப்பட்டிருக்கும். தம் மரண காலம் வரையில் இதுபோல் ''ஸோஹம்'' மந்திரம் ஜபம் செய்து கொண்டேயிருந்து மரணமடைந்தால் மறுஜன்மத்தில் வரும் மனைவி மக்கள் மேல் சிறிதேனும் ஆசையில்லாமல் மிகவும் பரிசுத்தர்களா

யிருப்பார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு எந்த ஆசைகளும் சிறிதேனும் இராது. எப்பொழுது எந்த ஆசைகளும், எந்த எண்ணங்களும் இல்லாமல் இருக்கிறார்களோ அப்பொழுதே தம் சொந்த வீடாகிய வெட்ட வெளியில் போய் ஐக்கியமாய் விடுவார்கள். இப்படி ஐக்கியமாய் விடுவதே மோக்ஷ மென்று சொல்லப்படும். இந்நூலாசிரியர் வலது புஜம், இடது புஜம் இவ்விரண்டு புஜங்களுக்கு மத்தியில் காட்டி யிருக்கும் வலது இடது இரண்டு கைகளின் மத்தியில் இந்நூலாசிரியர் சித்தாசனத்தில் உட்கார்ந்து விரல்களால் சின்முத்திரையைப் பிடித்து, கண்களையும் வாயையும் மூடி காட்டியதுபோல் நீங்களும் உட்கார்ந்து சின்முத்திரைய விரல்களால் பிடித்துக் கண்களை மூடி விரலையும் மூடி மூக்கு நுனியில் திருஷ்ட்டி வைத்து மூச்சைக் கவனித்து 'ஸோ' என்னும் மந்திரம் மனது மூச்சு இம்மூன்றையும் ஒன்றாய்ச் சேர்த்து மூக்குத் துவாரங்களின் வழியாய் மிகவும் நிதானமாய் இழுத்துக் காட்டியதுபோல் நீங்களும் இழுத்து மறுபடியும் மூச்சு வெளிவிடும் பொழுது அந்த மூச்சுடன் கூடவே 'ஹம்' என்னும் மந்திரம் சேர்த்து இந்நூலாசிரியர் மூக்கின் துவாரங்களின் வழியாய் வெளியில் விட்டுக் காட்டியதுபோல் நீங்களும் விடவேண்டும். ஆனால், நீங்கள் மூச்சு உள்ளுக்கிழுக்கும்பொழுது வலது இடது மூக்குத் துவாரங்களைக் கவனிக்காமல் மூச்சை மாத்திரம் கவனிக்க வேண்டும். உங்கள் மனத்திற்கு நன்றாய்ப் பிடிப்படும்படி இப்படம் ஓர் குறியாய் காட்டப்பட்டது; இவ்விதமாய் ஒவ்வொரு மூச்சிலம் முன்சொல்லிய இரண்டு மந்திரங்களை யும், சேர்த்து வெளியில் விட்டுக் கொண்டும் மறுபடியும் உள்ளுக்கிழுத்துக் கொண்டுமாய் இருக்க வேண்டும். ஆதலால், சொல்லாத மேற்சொல்லிய மந்திரம் உங்களுக்குக் குறியாய் சொன்னோம். காலை மாலைகளில் இக்குறியைப் பார்த்து யோஹம் மந்திரத்தில் மனத்தைச் சேர்த்து

*அம்மனதின் அன்பால், மேற்படி மந்திரம் ஜபம் செய்து தெளிவு பெற்றவர்களாய் தவம் செய்வீர்களாகில், பராபர வய்துவாகிய கடவுள் வசப்படுவார்.*

*எட்டுதக்கரிய இவ்விரு மொழியைக் குரு வாக்காய் நம்பி நிஷ்ட்டை சாதிப்பாராகில், சகல பாவமும் ஒழிந்து பிறப்பிறப்பு நீங்கும்; இதற்கு அகஸ்தியர் பாடல், நெஞ்சறி விளக்கம், பிரபுலிங்கலீலை, சிவஞான சித்தியார், தாயுமானவர் பிரமாணம்.*

கூறாத மந்திரத்தின் குறியைப் 'பார்த்துக்
குவல யத்தில் அந்திசந்தி யுச்சிக் காலம்
மாறாது தேவனுக்குப் பூசை செய்து
மனந்தானும் தெளிவுபெற்று மகிழ்ச்சியாக
குற்றமது வையாமல் அன்பி னாலே
குருபரனை நோக்கியாட தவமே செய்து
பற்றாசை வைத்துமிகப் பார்க்கும் போது
பராபரனும் கைவசமா யாகு வானே.

'எட்டுதற் கரிய சத்குரு வருளா
லியம்பு மோர் மொழியினைப் பெற்றே
நிட்டை சாதித்தே சகல கேவலங்க
ளீங்கிடிற் பிறப் பறுமே.''

* நெஞ்சஞ் O சோஹம், பாவனையி னிற்க
நிறுத்தி விடயங்க
ளஞ்சுந் துறவாத் துறந்த சிவயோகி யொருவ
னடி யிணையிற்
றுஞ்சுந் திருமான் முதலமர ருள்ளமவனைத்
துதித் திறைஞ்ச
தெஞ்சுங் சுவ மாமுனிவ ரிலையென
நான்மறையு மியம்புமால்

---

*நெஞ்சம் – மனம், O சோஹம் மந்திர ஜபம்.

கண்டவிலை யல்லனோ னென்றகன்று காணாக்
கழிபரமு நானல்ல னெனக்கருதிக் கசிந்த
தொண்டினோடு முளத்தவன்றா னின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்
விண்டகலு மலங்க ளெல்லாங் கருடதியா னத்தால்
விடமொழியு மதுபோல் விமலதைய மடையும்
பண்டைமறை களுமதுநா னானே னென்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென்னுங்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்தி மேன் மேற்
பாராதி யறியாத மேனமாம் வித்தைப்
பதித் தன்பு நீராகவே
பாச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காத வண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்ட மெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட் பார மென்று
மாராரு மறியாத சூதான வெளியில் வெளி
யாகின்ற துரிய மயமே
யண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யாநந்த மான பரமே.

இதுபோல், ஒவ்வொரு குடும்பத்திலுள்ள ஸ்திரீ புருஷர்களும் முன்சொல்லியதுபோல் ஓர் அறையைப் பூஜை வீடாய்ச் செய்து அதில் மணையும் அதன்மேல் மான்தோலும் போட்டு வடக்கு முகமாய் உட்கார்ந்து இடுப்புக் கூன் வளையாமல் நேராய் நிமிர்ந்து சித்திரப்பதுமைபோல் நின்று ''ஸோஹம்'' என்னும் இரண்டு மந்திரங்களையும் வாக்கினால்

சொல்லாமல் மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கிழுத்து சாதகம் செய்து வருவீர்களாகில் அந்த க்ஷணமே உங்கள் மனமானது வெளியில் ஓட அவகாசமிராமல் மந்திரம் மூச்சு இவ்விரண்டின் மத்தியில் கட்டுப்பட்டு ஒடுங்கிவிடும். இது தேவரகஸ்யம் இந்தத் தேவரகஸ்யம் உங்களுக்குச் சொன்னோம். இவ்வித மாய்ச் சில நாள் பழகி வந்தால் சரீரம் சிரசு முதலானவைகள் அசையாமல் சிலாவடிவமாய் (கோவில்களிலிருக்கும் கல்பொம்மையைப்போல்) நின்றுவிடும். இப்படி நின்று விடுவதே ஜாக்கிரத்தில் சுஷுப்தியென்றும், தூங்காமற் தூங்கிச் சுகம்பெறுவதென்று சொல்லப்படும். அச்சமயம் ஓர் விதமாகிய சுகமுண்டாகும். அந்தச் சுகத்தை அனுபவித்துப் பாருங்கள். இவ்விதமாய் அப்பியாசம் செய்து வருவதே ராஜயோகம் என்று வேதங்க்ளின் முடிவாகிய அந்தரார்த்தம்.

நினைக்கும்படி விஷயங்கள் யாவும் 'ஸோஹம்' மந்திர ஜபத்தால் மறந்திருக்கும் யோகியை, பிரமன் விஷ்ணுக்களும் உபசரிப்பார்கள். என்றால், ஒருவன் தன்னைக் கருடனாய்ப் பாவித்துப் பாம்பின் விஷயத்தை அவன் மந்திர பலத்தால் நீக்குவதுபோல் 'ஸோஹம்' மந்திரம் ஜபம் செய்து வரப்பட்டவர்கள். ஷை மந்திர பலத்தால் பூர்வ ஜன்மங்களில் விஷம்போல் ஏறிவந்த பாவகர்மங்கள் யாவும் இந்த 'ஸோஹம்' மந்திர ஜபத்தின் சுடரால் நீங்கப்பெற்று தன்னைத்தான் மறந்து சொக்கி யிருப்பான்,

இந்நூலாசிரியர் வலது இடது மூக்குத் துவாரங்களில் காட்டியிருக்கும் அம்புகளே மூச்சு இந்த மூச்சு கண்களுக்குக் காணப்படாதது, ஆதலால், அந்த மூச்சை மேற்படி படத்தின் மூக்கில் அம்புபோல் காட்டியிருக்கின்றார். அந்த அம்பு 'ஸோ' என்னும் மந்திரத்தை மூக்கு ரந்திரங்களின் வழியாய் மூச்சு வெளிவரும்பொழுது அந்த 'ஸோ' என்னும் மந்திரத்தைவிட்டு 'ஹம்' என்னும் மந்திரத்தைச் சேர்த்து

இழுத்துக் கொண்டு வருகிறது. மூச்சு வெளிவிடும்பொழுது 'ஹம்' என்னும் மந்திரத்தைச் சேர்த்துவிட வேண்டும்.

இந்த ராஜயோகம் செய்யப்பட்டவர்கள் வியாபாரம் அல்லது உத்தியோகம் செய்யச் செல்லுங்காலத்தில் தங்களை எதிர்நோக்கி வரப்பட்ட ஸ்திரீ புருஷர்களையாகிலும் அல்லது வேறு எந்த வஸ்துக்களையாகிலும் ஏறெடுத்துப் பார்க்கலாகாது அப்படிப் பார்ப்பதனால், பலகெட்ட எண்ணங்களுக்கிடமுண்டாகி, அனேக அநர்த்தங்களில் மனது கொண்டுபோய்விடும். அதாவது கண்கள் மூக்கு வாய் செவிகள் தேகசர்மம் என்னும் பஞ்சேந்திரியங்களில் (ஐந்து இந்திரியங்களில்) கண் என்னும் இந்திரியம் மாத்திரம் விசேஷ அனர்த்தங்களை உண்டாக்குவதற்குக் காரணமாயிருக்கின்றது.

அப்படிப்பட்ட அனர்த்தங்கள் உதிக்காமல் இருப்ப தற்கு என்ன செய்யவேண்டுமென்றால், நடந்து போகும் பொழுது வண்டிகளின் பயமில்லாமல் இருப்பதற்காக பாட்டை இடது கை ஓரமாய்ச் சென்று தலையைக் குனிந்து பாதப் பெருவிரலிலிருந்து மூன்றடி தூரத்தில் திருஷ்ட்டியை நிறுத்தி 'ஸோ' என்னும் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கிழுத்து மறுபடியும் மூச்சு வெளியில் விடும்பொழுது ஹம் என்னும் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்துவிட வேண்டும் மூச்சு உட்செல்லும்பொழுது மறுபடியும் வெளிவரும் பொழுதும் மேற்சொல்லிய இரண்டு மந்திரங்களையும் சேர்த்துவிட்டுக் கொண்டே சென்று, வியாபாரம் அல்லது உத்தியோகங்கள் செய்யும்பொழுது மாத்திரம் மேற்படி ஸோஹம் மந்திரஜபம் செய்வதை நிறுத்தி, அந்தந்த வியவ காரங்களில் மனத்தைக் கவனிக்கச் செய்து வேளை முடிந்த வுடன் மறுபடியும் மேற்சொல்லியபோது, 'ஸோஹம்' என்னும் இரண்டு 'மந்திரங்களை மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்து கொண்டே வரவேண்டும். இவ்வாறு ஸோஹம்

மந்திரம் ஜபம் செய்து கொண்டே போகும்பொழுதுதான் எந்த இடத்தை நாடிச்செல்லுகின்றானோ அதை மறந்து அதிக தூரம் சென்றுவிடுவான் ஏனென்றால் மனம் மூச்சுடன் சேர்த்து 'ஸோஹம்' மந்திரத்தை ஜபித்துக்கொண்டே நடப்பதினால்தான் குறித்திருந்த வழித்தப்பி வெகு தூரம் சென்று விடுவான். மேற்படி ஜபம் நிறுத்தி, உலக வியாபாரத் தில் மனத்தைத் திருப்பிப் பார்த்தபொழுது வெகுதூரம் வந்து விட்டோமென்று எண்ணிதான் குறித்த இடம்போக மறுபடியும் பின்னுக்கே திரும்புவான். இதை நீங்கள் பரீக்ஷித்துப் பாருங்கள். அப்பொழுது இதன் அனுபவம் உங்களுக்குப் பிரத்தியக்ஷ திருஷ்டாந்தமாய்த் தெரியவரும்.

பகற்காலங்களில் முன்சொல்லியதுபோல் ஹோஹம் மந்திர ஜபம் செய்து இரவில் போஜனமுண்டு படுக்கையில் உட்கார்ந்து சில நிமிஷங்கள் இந்நூலில் முன் சொல்லியது போல் ஈஸ்வரனைத் துதி செய்து இடது கைப்புறமாய் ஓஞ்சரித்துப்படுத்து, மேற்படி 'ஸோஹம் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்து கொண்டே இருந்தால் அப்பொழுது மனதானது ஊர் வியவகாரங்களில் ஓடாமல் மூச்சு என்னும் நூலுடன் கட்டுப்பட்டு சீக்கிரமாய் தூங்கிவிடும் இப்படிச் செய்யாமல் படுத்தால் மனதானது ஏதேதோ உதவி யற்ற அனேக எண்ணங்களையெல்லாம் இரவு பன்னிரண்டு மணி வரையில் எண்ணி எண்ணிப் பிறகு தூங்கிவிடும். இரவு படுத்துத் தூங்குவதற்குமுன் எண்ணிய எண்ணங்களெல்லாம் காலையில் ஞாபகமிருக்குமா என்றாலோ இராது ஆதலால் இடது கைப்புறமாய் ஒஞ்சரித்து படுத்தவுடன் ஸோஹம் மந்திரம் மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்து கொண்டிருந்தால் பதினைந்து நிமிஷத்திற்குள் மிகவும் நல்ல தூக்கம் வந்து விடும், இதை நீங்கள் பரீக்ஷித்துப் பாருங்கள் அப்பொழுது மனோலயம் பிரலத்தியக்ஷ திருஷ்டாந்தமாய் உங்களுக்கே தெரியவரும். இதற்குத் திருஷ்டாந்தம் சொல்லுகிறோம் கேளுங்கள்.

இந்நூலாசிரியர் 1922 ஷு சிலோன் கண்டி சென்றிருந்த பொழுது ஓர் ஜவுளி வியாபாரி பிரதிதினம் இரவு கடையைச் சாற்றி வீடு சென்று சாப்பிட்டுப் படுத்தவுடன் தூக்கம் வராமல் இரவு பன்னிரண்டு மணி வரையில் விழித்துக் கொண்டிருப்பது வழக்கமென்றும், எந்தக் காரணத்தினால் தூக்கம் வருவதில்லையென்றும், இந்நூலாசிரியரைக் கேட்டான். நீ சாப்பிட்டுப் படுத்தபிறகு உன் மனதானது ஜவுளி கொடுக்கல் வாங்கல் விஷயத்தைக் குறித்தும் குடும்ப விஷயங்கள் குறித்தும் இன்னும் அனேக விஷயங்களில் உள் மனம் ஓடிக் கொண்டிருக்கவில்லையா என்று இந்நூலாசிரியர் அவனைக் கேட்டனர். அதற்கு அதுவாஸ்தமான விஷயமே என்று சொன்னான். நீ அவ்வாறு அநேக எண்ணங்களை எண்ணிக்கொண்டிருப்பதனால் உனக்குத் தூக்கம் சீக்கிரமாய் வருவதில்லை என்று இந்நூலாசிரியர் சொல்லினர். அதற்கு என்ன செய்யலாமென்றும் வர்த்தகன் கேட்டான். "இரவில் ஈஸ்வரனைத் துதி செய்து சயனித்தல், என்று இந்நூலில் எழுதியிருக்கின்றோம் அதாவது இரவு. சாப்பிட்டு யாருடனும் வீண் வியவகாரங்களைப் பேசாமல் பிறகு படுப்பதற்காகப் படுக்கையில் உட்கார்ந்து கண்களை மூடி இரு கைகளையும் குவித்து நமஸ்கரித்து.

"எங்கும் பரிபூரணமாய் நிறைந்து எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளிலும் சாக்ஷி சொரூபமாய் ஜீவாத்மாவாய் வியாபித்திருக்கும் ஓ பரப்பிரம்மமே! நான் இன்று காலை தூங்கிஎழுந்தது முதல் மறுபடியும் சயனிக்க இப்பொழுது படுக்கையில் உட்காரும் வரையில் அடியேன் கைகளாலும் கால்களாலும் மனதினாலும் வாக்கினாலும் தெரிந்தும் தெரியாமலும் செய்த புண்ணிய பாவங்களையெல்லாம் உமக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். நீர் என்னுள்ளே ரகஸ்யமாயும் சாக்ஷிசொரூபனாயும் இருப்பதால் நான் இன்றிரவு தூங்கி எழுந்தது முதல் மறுபடியும் நாளைய இரவு

படுக்கும் வரையில் என் மனதைப் பாவ காரியங்களைச் செய்யவிடாமலும் பொய் சொல்லாமலும் நல்ல காரியங் களையே செய்யும்படிச் செய்ய உன் கருணையென்னும் சாவியைக் கொடுத்துத் திருப்பப் கடவாய்.''

என்று உதட்டை அசைக்காமல் மனதினால் நினைத்து ஜபம் செய்து முடிந்தவுடன் மறுபடியும் கண்களைத் திறக்காமல் இடது கைப்புறமாய் ஒஞ்சரித்துப் படுத்துக் கண்களை மூடிக்கொண்டே மூக்கு நுனிக்குறியில் திருஷ்ட்டியை நிறுத்தி, மூச்சு மூக்குத் துவாரங்களின் வழியாய் உட்செல் லும்போது இந்த மூச்சுடன் கூட ''ஸோ'' என்னும் மந்திரத் தைச் சேர்த்து உள்ளுக்கிழுத்து மறுபடியும் மூச்சு வெளி யிடும்பொழுது அந்த மூச்சுடன் கூட 'ஹம்' என்னும் மந்திரத்தைச் சேர்த்து வெளியில் விடவேண்டும் இவ்வாறு சுமார் ஐம்பது அல்லது அறுபது மூச்சுகளுடன் கூட மேற்சொல்லிய இரண்டு மந்திரங்களைச் சேர்த்து ஜபம் செய்து கொண்டேயிருப்பாயாகில், உனக்கு அதிசீக்கிரமாய் தூக்கம் வந்து விடும்.

அவன் அன்றிரவு இந்நூலாசிரியர் சொல்லியது போல் ஈஸ்வரனைத் துதிசெய்து படுத்த சில நிமிஷங்களுக் கெல்லாம் நல்ல தூக்கம் வந்துவிட்டது. பிறகு அவன் காலையில் இந்நூலாசிரியரிடம் வந்து சுவாமி! நான் நேற்றைய இரவு நீங்கள் சொல்லியதுபோல் செய்து படுத்த சில நிமிஷங்களுக்குள் எப்பொழுதும் வராத மிகவும் நல்ல தூக்கம் வந்துவிட்டது. இப்படிப் பட்ட தூக்கம் இதுவரை யில் எப்பொழுதும் வரவில்லையென்றும் எந்தக் கனவு களும் இல்லாமல் மிகவும் சுகமாய்த் தூங்கி எழுந்தேன் என்றும் சொல்லினன்.

இந்திரிய வியாபாரம். மனோவியாபாரம் என இரண்டு வியாபாரங்கள் நமக்குண்டு இந்திரிய வியாபாரமென்றால்

மனதை நிறுத்தவேண்டுமென்று வீட்டில் உட்கார்ந்தபொழுது வீட்டிலுள்ளவர்கள் பேசும் சப்தங்களையெல்லாம் காதினால் கேட்டுக்கொண்டிருத்தல் மனோவியாபாரமென்றால், மனம் வெளியில் சஞ்சாரம் செய்யப் போகுதல். இவ்விரண்டும் ஒரே காலத்தில் ஒழுப்பது மிகவும் கஷ்டமாயிருக்கும்; இராத்திரி மூன்று மணிக்கு நிஸ்சப்தமாயிருப்பதால் அக்காலத்தில் எந்த இந்திரிய வியாபாரங்களுள் இராது. அச்சமயத்தில் படுக்கை விட்டெழுந்து மறுபடியும் தூக்கம் வராத வண்ணம் கைகால்களைச் சுத்திசெய்து முன்சொல்லிய ஏகாந்தமான அறையில் எறும்பு மூட்டுப் பூச்சிகளின் பாதைகள் இல்லாம லிருப்பதற்காகத் தனக்குத் தகுந்த ஒரு பெரிய மணையின் மேல் மான்தோல் போட்டு அபானவாயு படாவண்ணம் அதன்மேல் வெள்ளை வஸ்திரம் மடித்து விரித்து வடக்கு முகமாய் உட்கார்ந்து ஆகாச வடிவத்தில் மனம் லயிக்கும் படிச் சாதகம் செய்துவரவேண்டும்.

இப்படி வடதிசையை நோக்கிச் செய்து நிஷ்காம்யம் இதனால் ஞானமடைவார்கள் கிழக்குத் திசையை நோக்கிச் செய்வது காம்யம் இதனால் அவரவர்கள் கோரிய பலன்களை மறு ஜன்மத்தில் அடைவார்கள். படத்தில் காட்டிய கைக்குறியிலுள்ள ஆகாசக் குறியை அகமுகமாய் (உள்முகமாய்) கண்களைமூடி மனக்கண்ணால் பார்த்து வருவீர்களாகில், சில மாதங்களுக்குள் மனம் அக்கைக் குறியினுள் லயித்துச் சுற்றிலுமிருக்கும் பெருவிரல் ஆள் காட்டும் விரல்களின் ஓரங்களெல்லாம் புலப்படாமல், அகண்டாகார விருத்தியாய்த் தன்னைத்தான் மறந்து, தான் எங்கு உட்கார்ந்திருப்பதும் என்ன செய்வதும் தனக்குத் தெரியாமல் மனம் கைக்குறியின் நடுவிலுள்ள ஆகாய வடிவத்தில் லயித்துவிடும்; அப்படி மனம் லயித்து விடுவதே "தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது" என்று சொல்லப்படும். ஆனால், அந்தக் கைக்குறியை நீங்கள் கையினால் பிடித்துக்

கொண்டு கண்களைத் திறந்து பார்த்துக் கொண்டிருக்க வேண்டாம், அக்கைக் குறியிலுள்ள ஆகாயத்தைப் புருவ மத்தியில் நிறுத்திக் கண்களை மூடி உள்முகமாய் மனக்கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தால் மனம் லயமாகும்.

மபடியும் காலை 6-மணி முதல் ''ஸோஹம்'' மந்திரம் ஜபிக்கவேண்டும்.

விட்டுப்போம் சம்சார வியாபாரங்கள்
விஷயசுகம் இச்சைவைத்தால் விவேகம் போச்சு
தொட்டுவிட லாகாது ஞானமார்க்கம்
துரியநிலை நன்றாகத் தோன்றுமட்டும்
எட்டுகின்ற பரியந்தம் சுருதி வாக்கியத்
தெண்ணமெனுந் தியானத்தா லெய்து முக்தி
தட்டுகின்ற ஜீவத்வம் தனக்கில்லாமற்
சமாதியுற்றால் நாமதுவே சாக்ஷாத்காரம்
வீணல்லோ சாதனப் பிரயோஜனங்கள்
மெய்ஞ்ஞான அபரோட்சம் வந்தபோது
வீணல்லோ வேதபா டத்தினிச்சை
வீயோமபரி பூரணத்தில் மேவிநின்றால்
வீணல்லோ இருட்டறையிற் பொருளைக்காண
விளக்கதனை மறந்தவன்கை விடுதல்போலும்
வீணல்லோ தயான தாரணைக ளெல்லாம்
மெய்பிர காசிக்கும்வரை வேணுந்தானே



## 104. கடவுளையே பக்தி செய்து கடைத்தேற வேண்டிய ரகஸ்யார்த்தம்

உலகத்திலுள்ள மானவ ஜனங்களெல்லோரும் சிவாலயம், பெருமாள் சந்நிதி விக்னேஸ்வர். சுப்பிரமண்யர் பார்வதி, லக்ஷ்மி, நவக்கிரகங்கள், ஆஞ்சநேயர், மஹாகாளி இன்னும் அநேகமாயுள்ளன அநேக தேவதைகளைத் தரிசித்து அவர்களுக்கு வேண்டும் வரங்களைக் கேட்டு அவ்வரங் களால் தாம் சுகமடையவேண்டுமென்று எண்ணி, அந்தந்த கோவில்களுக்குச் சென்று தேங்காய்களை உடைத்து, கற்பூரமேற்றி, அவ்விக்கரங்களின் ரூபத்தைக் கண்காளல் பார்த்து மனதினால் கிரகித்துத் தாடையில் போட்டு இரண்டு கைகளையும் குவித்து நின்று பிறகு தமக்கு வேண்டும் வரம் எதுவோ, அதை நினைத்துக் கேட்கின்றார்கள். இவர்கள் எவ்வளவு பக்தியுடனிருந்து வரங்களைக் கேட்ட போதிலும் அவர்கள் கேட்கும் வரம் இச்ஜன்மத்தில் சித்திக்க மாட்டா இவைகளெல்லாம் மறுஜன்மத்தில் சித்திக்கும். இதன் ரகஸ்யார்த்தம் ஜனங்களுக்குத் தெரியாததனால் அவ்வாறு கேட்கின்றார்களேயொழிய மற்றப் படிக்கு வேறல்ல. இவ்வாறு வரம் கேட்பது அறியாத் தன்மையேயாம் தமக்கு எந்தப் பகவான் மீது விசேஷ பிரீதியோ அந்தக் கடவுளை மாத்திரம் உபாசநாமூர்த்தியாகக் கொண்டு அவரது ரூபத்தைக் நன்றாய்த் தரிசித்துக் கண்களை மூடி புருவ மத்தியில் நினைத்து மனக்கண்ணால் பார்த்தவுடன் அவ்வுருவம் புருவ மத்தியில் காணப்படும். அதைக் கண்டபிறகு அவ்வுருவத் திலேயே மனத்தை நிறுத்தித் தன் மனைவி மக்கள் மீது வைத்திருக்கும் பிரீதியைவிட அதிகப் பிரீதியை

அக்கடவுள்மேல் வைத்து சதாகாலமும் ஜபம் செய்துவர வேண்டும் இவர்கள் எந்த கோவில்களுக்குச் சென்றாலும் அவ்விக்கிரகங்களின் ரூபத்தைப் பார்க்காமல் கண்களை மூடித் தனது உபாசனா மூர்த்தியாகிய கடவுளின் ரூபத்தைப் புருவ மத்தியில நினைத்து அவ்வுருவத்தை மனக்கண்ணால் பார்த்து உள்முகமாகவே மனக்கையால் கும்பிட்டு வரவேண்டுமேயொழிய அந்தந்தக் கோவில்களிலுள்ள விக்கிரகங்களின் ரூபத்தைப் பார்த்துக் கும்பிடலாகாது. ஓர் கடவுளின் ரூபத்தை மாத்திரம் உறுதிப்பிடியாய்ப் பிடித் தால் அக்கடவுளின் கிருபையால் நாம் கடைத்தேறலாம்.

இவர் பன்னிரண்டு வருஷங்கள் வரையில் ஒரே கடவுளை நினைத்து விசேஷ பக்தியுடன் மானஸ பூஜை செய்து வந்த படியால், அக்கடவுளின் திருவருளால், தனக்குத் தானாகவே தாம் இச்சை கொண்டிராத அனேக காரியங்களை யெல்லாம் சித்தியாயிற்று அனேகவித ரூபங்களையுடைய பல கடவுள்களைக் கும்பிட்டு வந்தால், அவர்களெல்லோரும் தமக்கு வசமாகார்கள். குரங்குப்பிடியைப்போல் ஓர் கடவுளையே நினைத்து விசேஷ பக்தியுடன் மானசு பூஜை செய்துவந்தால் அக்கடவுள் தம் வசமாய்த் தான் நினையாத வஸ்துக்களையெல்லாம் அனுக்ரஹம் செய்வார், மேற்சொல் லியதுபோல் ஈஸ்வர பூஜை செய்து வரவேண்டுமென்பதே இந்நூலாசிரியர் கருத்து.



## 105. ருஷிகள் ஆஹாரமில்லாமலிருப்பதற்குக் காரணம்

மலைக்குகைக்குள் தவம் செய்யும் தபோதனர்கள் மேற்படி குகைக்குள் உட்கார்ந்து இடுப்புக்கூன் வளையாமல் நேராய் நிமிர்ந்து கழுத்து முகம் சாயாமல் சித்திரப் பதுமைபோல் நின்று அவர்களின் மனதைப் பரமாத்ம சொரூபத்தில் ஐக்கியம் செய்து விடுவதே, 'மனம் இறந்த' தென்று பெரியோர்கள் சொல்வதுண்டு. அப்படி மனம் எதுவரையில் இறந்து நிற்கின்றதோ அதுவரையில் மேற் சொல்லிய ருஷிகளுக்குப் பசி தாகங்கள் உண்டாகவேமாட்டா. ருஷிகள் அனேக வருஷங்கள் நிஷ்ட்டையில் இருப்பதனால், அக்காலத்தில் அவர்களின் மனம் ஆத்மா சொரூபத்தில் ஐக்கியமாய்விடும். இவ்வாறு ஐக்கியமாய் எத்தனை வருஷங் களிருந்தபோதிலும் ருஷிகளுக்குப் பசி தாகம் உண்டாகவே மாட்டா. பசி தாகங்கள் உண்டாவதற்குக் காரணம் மனதாகவே யிருக்கின்றது. அப்படிப்பட்ட மனம் இறந்துவிடுவதே சமாதி என்று சொல்லப்படும்; அனேக வருஷங்கள் ருஷிகள் சமாதி நிஷ்ட்டையிலிருந்து சமாதி நிஷ்ட்டையைக் கலைந்து ருஷிகள் குகைக்குள்ளிருந்து வெளிவந்தவுடன் அவர்களின் மனது, மறுபடியும் பலவிடங்களிலும் ஓட ஆரம்பிக்கும். அப்பொழுது ருஷிகளுக்குப் பசி தாகங்கள் உண்டாகும். அச்சமயம் ருஷிகள்' செடியிலுள்ள தழைகளைப் பறித்துத் தின்பதனால் பாவமுண்டாகுமென்று எண்ணிப் பழுத்து உதிர்ந்து மண்ணாய்ப் போகும் சருகுகளைத் தின்று ஜலம் சாப்பிட்டு மறுபடியும் குகைக்குள் சென்று அனேக வருஷங்கள் தவம் செய்து வருகிறார்கள் மரத்திலுள்ள தழைகளைப் பறித்தும் புசிக்காமல் பழுத்து உதிர்ந்த சருகு களைப் புசிப்பதற்குக் காரணம் யாதெனில், பரமாத்மா

சொரூபமும் மரத்திலும் செடிகளிலும் இருப்பதனால் அவைகளைப் பறித்துத் தின்னலாகாது. அப்படித் தின்றால் பரமாத்மாவைக் கொன்றவனாகின்றான் என்னும் ஜீவ காருண்யத்துடனிருந்து சருகுகளைப் புசித்து காலங்கழித்து வருகிறார்கள். இப்படிப்பட்ட மஹான்கள் பாமரர்களாகிய மானவ ஜனங்களின் கண்களுக்குக் காணப்பட மாட்டார்கள்.

உங்கள் குடும்பத்தில் எவர்களுக்காகிலும் வியாதி வந்து விட்டால் அதை நிவாரணை செய்து கொள்வதற்காக துஷ்ட்ட தேவதைகளுக்குப் பொங்கலிட்டு, நைவேத்தியம் காட்டி, அதன் எதிரில் ஆடு அல்லது கோழிகளைப் பலி கொடுத்து அதன் தலைகளை மஹாகாளி எதிரில் வைத்து தூப தீப நைவேத்தியம் காட்டி சிரசுகளின் முண்டத்தின் மேல் ஜலம் விட்டுக்கொண்டே எங்களுக்கு வாய்த் திறந்து நல்லவரம் கொடுக்க வேண்டுமென்று மூட ஜனங்கள் கேட்பதுண்டு அப்பொழுது பிராணன் சிரசு முண்டத்தைவிட்டு போகும் பொழுது வாய்த் திறப்பது வழக்கம் அதைப் பாமர ஜனங்கள் பார்த்து, அம்மன் எங்களுக்கு நல்ல வரம் கொடுத்தார் களென்று மகிழ்ந்து விடுவார்கள். பிறகு அதன் தோலை உரித்து அனேகவித பக்குவங்களுடன் சமைத்து நாருசியாய்ச் சாப்பிடுவார்கள். இவைகள் மனிதர்களுக்கு என்ன தீங்கு செய்கின்றன. காட்டிலிருக்கும் புல்லையும் புல்லிலுள்ள அரிசிகளையும் சிறிய சிறிய கற்களையும் தின்று காலங்கழித்து வரும் பக்ஷிகளையும் மிருகங்களையும் துப்பாக்கியால் சுட்டும் பிடித்தும் கொண்டு வந்து பொசுக்கிச் சாப்பிடுகிறார்கள்.

ஐயோ! பாவம்! வாயில்லாத ஜீவனைக் கொண்டு வந்து கொன்றால் அவைகள் என்ன செய்யும்'' இவ்வாறு கொன்று தின்றாலும் சரி அல்லது கசாபத் தொழில் என்றால் ஆடுகளை அறுக்கும் துலக்கனிடமிருந்து மாமிசங்களைக் கொண்டுவந்து தின்றாலும் சரி எல்லாவற்றிற்கும் பாவம் ஒன்றேயாகும். ஆதலால்,

உங்கள் மக்களும் நீங்களும் நோய்கொள்
உங்கள் மக்களும் நாங்களு மென்செய்தோம்
பொங்க லிட்டுப் பலியுங் கொடுக்கிறீர்
எங்கள் முறையினை யீசனார் கேளாரோ
அம்மா வென்றலா ஆருயிரைக் கொன்றருந்தி
இம்மா னுடரெல்லாம் மின்புற் றிருக்கின்றாரே
அம்மா வென்னுஞ் சத்தங் கேட்டகன்ற மாதவர்க்கும்
பொய்மா நிரையமென்றாற் புசித்தவபர்க் கெனசொல்வேத

உங்கள் குழந்தைகளுக்கும் உங்களுக்கும் நோயுண்டானால் நாங்களும் எங்கள் குழந்தைகளும் உங்களுக்கு என்ன தீங்கு செய்தோம். அம்மனுக்கு பொங்கலிட்டு அம்மனுக்கெதிரில் எங்களைக் கத்தியால் வீசி பலிகொடுக்கின்றீர்கள். நாங்கள் உங்களால் மரணமடையும் துன்பத்திற்குத் தக்க தண்டனை ஈஸ்வரனானவர் உங்களைத் தண்டிக்காமல் விடுவாரோ?

நாங்கள் பிராணனை விடும் சமயத்தில் அம்மாவென்று அலறிக் கூச்சலிடும் சப்தம் யார் காதில் விழுகின்றதோ அந்தந்த சப்தம் கேட்டவர்களெல்லோரும் நரகத்தை அனுபவிக்க வேண்டுயதாயிருக்க எங்கள் மாமிசத்தைச் சாப்பிட்டவர்களெல்லோரும் எப்படிப்பட்ட நரகத்தில் போய் விழுவார்களோ தெரியவரமாட்டா.

கங்கையிற் படிந்திட்டாலும் கடவுளைப் பூசித்தாலும்
மங்குல்போற் கோடிதானம் வள்ளலாய் வழங்கினாலும்
சங்கையில் லாதஞான தத்துவ முணர்ந்திட்டாலும்
பொங்குறு புலால்புசிப்போன் போய்நர கடைவானன்றே

அதாவது கங்கா யமுனா சரஸ்வதி நர்மதா சிந்து காவேரி துங்கபத்ரா கோதாவரி முதலாகிய ஒன்பது மஹா தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்து வாய்த்தான் போட்டுத் தீர்த்தங்களைக் காவடியில் கட்டி மிகவும் நேம நிஷ்ட்டைகளுடன்

அத்தீர்த்தங்களைக் கொண்டுபோய் காசி இராமேஸ் வரங்களிலுள்ள மஹாலிங்கங்களுக்கு அபிஷேகம் செய்து ஆங்காங்குள்ள பெரியோர்களுக்கு மேகம் வருஷிப்பது போல் கோதான பூதான சொர்னதான கன்னிகாதான அன்ன தான வஸ்திரதான முதலாகிய முப்பத்திரண்டு தானங்களைச் செய்து ஆங்காங்குள்ள பெரியோர்களின் திருவாக்கால் ஞானார்த்தங்களைக் கேட்டுச் சந்தேக விபரீத பரத்த்துவ விசாரணைகளைச் செய்து, உண்மை பொருளை அறிந்த வனாயிருந்தபோதிலும் ஜீவராசிகளின் உயிர்களைப் போக்கி அவற்றின் மாமிசங்களைத் தின்று, தன் தேகத்தை வளர்ப்பானா கில் நரகத்தையே அடைந்து, துக்கமனுபவிக்க வேண்டிய தாய் நேரிடும் என்பதே இப்பாடல்களின் கருத்தாகும்.

ஆதலால் இதுவரையில் தெரியாமல் மாமிசங்களைத் தின்றிருந்தபோதிலும் இப்பொழுது இந்நூலை வாசிக்கும் ஸ்திரீ புருஷர்களாகிய நீங்களெல்லோரும் இனி, மாமிசங் களைப் புசிக்காமலிருப்பீர்களாகில், சீக்கிரமாய் உங்களுக்கு ஈஸ்வரர் அனுக்கிரஹம் உண்டாகும். அவ்வனு கிரஹத்தினால் மோக்ஷ சாம்ராஜ்ய பதவியைத் தப்பாமல் அடைவீர்கள்; இது சத்தியம் உலகத்திலுள்ள சகல ஜீவ ராசிகளுக்கும் பசி தாகங்கள் உண்டாவதற்குக் காரணம் அவைகளின் மனதாகவே இருக்கின்றது. பசி தாகங்கள் உண்டாவதற்கும் பசி தாகங்கள் இல்லாமலிருப்பதற்கும் காரணம் இதனடியில் சொல்லுகிறோம்.

காலை 6 மணி முதல் மாலை ஆறுமணி வரையில் பன்னிரண்டு மணி நேரம் ஆகின்றது. இப்பன்னிரண்டு மணி நேரத்திற்குள் காலை ஆறு அல்லது ஏழு மணிக்கெல்லாம் இட்லி சாம்பார் உப்புமா ரொட்டி பூரி முதலாகிய பலகாரங் களையும் காபியும் சாப்பிட்டு மறுபடியும் பகல் பத்து அல்லது பதினோரு மணிக்கெல்லாம் சாதம் சாப்பிட்டு,

மறுபடியும் மாலை மூன்று மணிக்குச் சிற்றுண்டி (Tiffin) பலகாரங்களும், டீ (Tea) காபி (Coffee) முதலானவைகளையும் சாப்பிட்டு மறுபடியும் மாலை ஏழு அல்லது எட்டு மணிக்கெல்லாம் சாதம் சாப்பிடுகின்றீர்களே. அது ஏன் என்று புருஷர்களைக் கேட்டால், ''ஐயா! நாங்கள் அங்கங்குத் திரிந்து கஷ்டப்பட்டு வருவதனால் சரீரம் அலண்டு பசி தாகம் உண்டாகிறது'' என்று சொல்லுவது வழக்கம் நல்லது. இவர்களைப்போல் எங்கும் வெளியில் செல்லாமல் வீட்டிலேயே சும்மா உட்கார்ந்திருப்பவர்களுக்கும் இவர் களைப் போல் நான்கு வேலையும் சாப்பிடுகின்றார்களே அடியேன் இதுபோல் மாலை ஆறுமணி முதல் மறுநாட் காலை ஆறு மணி வரையில் பன்னிரண்டு மணி நேரம் உண்டல்லவா அச்சமயம் பகற்காலங்களில் உண்டாகிய பசி தாகங்களைப்போல் இராமல் சும்மாத் தூங்குவதேன்? அப்படித் தூங்கும் சமயத்தில் நல்ல அர்த்தராத்திரி வேளை யில் திவ்யமான பலகாரங்களைக் கொண்டுவந்து கொடுத்த போதிலும் இப்பொழுது வேண்டாம்; காலைக்கு ஆகட்டு மென்று சிலர் சொல்லுவதும் சுபாவமாயிருக்கும் விஷயம் ஒவ்வொருவரும் அறிந்த விஷயமேயல்லவா? பகற்காலங் களிலுள்ள பன்னிரண்டு மணி நேரத்திற்குள் நான்கு முறை சாப்பிடுவது போல் இராக்காலங்களிலுள்ள பன்னிரண்டு மணி நேரத்திற்குள் ஒருமுறை மாத்திரம் சாப்பிட்டு மறுபடியும் மறுநாட் காலை வரையில் சாப்பிடாமலிருப்பதற்குக் காரணம்.

நமது வயிற்றில் ஓர் பெரிய தீனிப்பையுண்டு. அந்தத் தீனிப்பையைப் பிளந்து படத்தில் காட்டப் பட்டிருக்கின்றது. இப் பை சகல ஜீவராசிகளின் கர்ப்பத்தில் இருக்கிறது. என்றால், நாம் சாப்பிடும் பதார்த்தங்கள், தாடை பற்களால் அரைப்பட்டுத் தொண்டையின் பின்புறமாய்ச் சேர்ந் திருக்கும் சிறிய குழாய் வழியாய் ரசரூபமடைய தீனிப் பைக்குள் அப்பதார்த்தங்கள் இறங்குகின்றன. இக்குழாய்



வாயிற்கும் ஜீரண கோசத்திற்கும் ஒரே கால்வாயாக இருக்கிறது. ஜீரண கோசத்தின் இருபுறமும் ஒருவிதமான வளையம்போல் தசை நார்கள் (Museles) மூடப்பட்டு விழுங்கும் ஆஹாரங்களை உள்ளுக்குச் செலுத்த அடிக்கடி தொண்டையிடம் திறந்து கொண்டும், மறுபடியும் மூடிக்கொண்டுமாய் இருக்கிறது. ஜீரண கோசத்திற்குக் கீழ்ப்பாகம் இருபத்திரண்டடி நீளமுள்ள சிறுகுடல் தொடரப்பட்டிருக்கின்றது. தீனிப்பை வடிவாகிய இடத்திற்குப் பெருங்குடல் என்று சொல்லப் படும். குதத்திடம் மலத்தைத் தள்ள எப்பொழுதும் இப்பெருங்குடல் வாயைத் திறந்து கொண்டேயிருக்கும். குதத்தினிடம் சேர்ந்திருக்கும் மலத்தை வெளியில் தள்ள வேண்டுமென்று நினைத்து, குதத்தை (ஆசனத்தைத்) திறந்தால் உடனே அம்மலம் வெளியில வந்துவிழும், மறுபடியும்

குதத்தை (ஆசனத்தை) மூடிவிட்டால் மலம் குடல் கடைசி யில் வந்து நின்றிருக்கும். மறுபடியும் குதம் திறந்தால் மலம் வெளிவரும். ஆதலால், குடலுக்கெல்லாம் குதமே ஆதாரமாயிருந்து மலத்தை வெளியில் தள்ளவும் உள்ளே நிறுத்தவும் செய்விக்கிறது.

வழவழப்பான மெல்லிய தோல், குடல் முழுமையும் இருந்து சாப்பிடும் ஆஹாரங்களை உள்ளுக்கு நழுவச் செய்கிறது. வழவழப்பான மெல்லிய தோலில் மாமிசக் கிரந்திகள் சேர்ந்து, பதார்த்தங்களை ஜீரணிக்கச் செய்யும். மேற்படி குடல் சுற்றிலுமுள்ள தோலில் வரிகளில்லாத தசைநார்கள் (Museles) அடங்கியிருக்கின்றன. மனதின் ஓட்டத்தால் தசை நார்கள் மெதுவாக திறப்பதும் மறுபடியும் மூடுவதுமாயிருந்து ஜீர்ண கோசத்திலும் குடலிலும் அற்புத மான அசைவை உண்டாக்கும் என்றால், ஜீர்ண கோசப்பை மனதின் ஓட்டத்தால் திறப்பது மறுபடியும் மூடுவதுமாயி ருப்பதால் சாப்பிட்ட ஆஹாரம் மெதுவாய்நசுக்கப்பட்டு அதிலுன்டாகியரசத்தை வேறுபடுத்தி அந்த ரசத்தை ரத்த ரூபமாய்ச் செய்து. நாடி நரம்புகளுக்குப் பங்கிட்டனுப்பி திப்பியை மலமாய்ச் செய்து குதத்தின் வழியாய் போகும்படிச் செய்யும். ஈரல் (Liver) வரிக்கம் (Pancreas) தீனிப்பை சமீபமாய் அமைந்திருக்கின்றது. ஈரலடியிலிருக்கும் பித்தப் பையில் பித்தம் சேர்த்துக்கொண்டேயிருக்கும். கொழுப்புள்ள பதார்த் தங்களும் கொழுப்பில்லாத பதார்த்தங்களும் பாதி அரைப் படும். பாதி அரைபடாமலும் குடலில் செல்லும்பொழுது. மேற்படி பித்தப் பையிலிருக்கும் பித்தம் (கசப்பு) ஒவ்வொரு துளியாய் அப்பதார்த்தங்களில் வீழ்ந்து, எப்படிபட்ட கொழுப் புள்ள பதார்த்தங்களாயிருந்த போதிலும் மேற்படி பித்தத் துளிகள் ஜீர்ணிக்கச் செய்யும். பித்தப்பையிலிருந்து பித்தம் குடலில் விழும். சரீரத்திற்குள்ளிருக்கும் யந்திரங்களை யெல்லாம் அசையும்படிச் செய்வதற்குக் காரணம் மனதாக

வேயிருக்கின்றது. இம்மனம் எங்கும் ஒட்டாமலிருந்தால் நமக்குள்ளிருக்கும் யந்திரங்கள் யாவும் அசையாமல் நின்று விடும் அப்பொழுத எந்தப் பதார்த்தங்களும் ஜீர்ணமாக மாட்டா. மனம் வெளியில் ஓடாமல் நின்றுவிடுவதே சமாதியென்று சொல்லப் படும். ஜீவராசிகள் சாப்பிடும் பதார்த்தம் பைக்குள் இறங்குகின்றன. இப்பையானது இச்சரீரத்திற்கு இந்திரம்போல் இருக்கின்றது இவ்வியந் திரத்தை அரைப்பதற்கு மனதே மேல் அச்சாயிருக்கின்றது. அம்மனது என்னும் அச்சைப் பிடித்து அரைப்பதற்கு எண்ணங்களே காரணமாயிருக்கின்றது. ஆதலால். எண்ணங் களென்னும் மனம் எப்பொழுதும் ஓடிக்கொண்டேயிருக்கும். அதனால் முன்சொல்லிய தீனிப்பையிலுள்ள தீனிகளையெல்லாம் பகற்காலங்களில் பல இடங்களிலும் ஓடிக் கொண்டிருக்கும் மனது என்னும் அச்சானது சாப்பிட்ட பதார்த்தங்களை அறைத்துக்கொண்டேயிருக்கும். பற்காலங்களில் தீனிப்பை யிலுள்ள பதார்த்தங்கள் மனது என்னும் அச்சினால் விசேஷமாய் அரைக்கப்படுகின்றது. ஆதலால், பகற்காலங்களில் நான்கு முறை சாப்பிடுகிறார்கள். இப்படிப்பட்ட மனம் இராக் காலங்களில் எங்கும் ஓடாமல் நின்று விடுவதனால் தீனிப்பை என்னும் இயந்திரமானது மனதென்னும் அச்சினால் அரைப்படாமல் நின்று விடும். அப்படி நின்றுவிடுவதனால் தீனிப்பையிலிருக்கும் பதார்த்தங்கள் ஜீர்ணமாகாமல் தீனிப் பையிலேயே தங்கியிருக்கும். பிறகு புருஷன் காலை ஐந்து மணிக்கு எழுந்தவுடன் மறுபடியும் அவன் மனம் பல இடங் களிலும் ஓட ஆரம்பிக்கும், அப்பொழுது இரவு தீனிப்பையில் மிகுதியாகத் தங்கியிருந்த பதார்த்தங்களெல்லாம் காலை ஏழுமணிக்குள் அரைப்பட்டு போகும். தீனிப்பையிலிருந்த பதார்த்தங்களெல்லாம் காலை ஏழு மணிக்குள் செலவழிந்து விடுவதனால். மறுபடியும் காலை எழுமணிக்கமேல் பசிதாகமுண்டாகின்றன. பகற்காலங்களில் பசிதாகங்கள்

அதிகமாய் உண்டாவதற்கும், இராக்காலங்களில் பதார்தாங்கள் பூர்த்தியாய் இல்லாமலிருப்பதற்கும் காரணம் மனதாகவேயிருக்கின்றது. இப்படிப் பட்ட மனம் சமாதியில் எத்தனை நாள் நின்றிருக்கின்றதோ அத்தனை நாட்கள் வரையில் பசி தாகங்கள் உண்டாகவேமாட்டா ஆதலால், எல்லாத் தவங்களிலும் மனதை வெளியில் ஓடவிடாமல் நிறுத்துவதே பெரிய தவமென்று அறியவேண்டும். அதாவது, மனது சும்மாயிருக்க வேண்டும். அப்படிக்கு மனம் சும்மாயிராமல் எந்த மந்திரங்களை ஜபம் செய்துவந்த போதிலும் பிரயோஜனமில்லை. அப்படிப் பிரயோஜனமில்லாவிடில் 'ஸோஹம்' மந்திரம் ஏன் ஜபம் செய்யவேண்டுமென்று கேட்கின்றீர்களா என்ன? அதற்குக் காரணம் சொல்லுகிறோம் கேளுங்கள்.

மனது ரெப்பை மூடுமவ்வளவு நேரமும் சும்மாயிராமல் சதா காலமும் அநேக எண்ணங்களை எண்ணித் தன்னிஷ்டம் போல் வெளியில் ஓடிக்கொண்டேயிருக்கும். அப்படி ஓடிக்கொண்டிருக்கும் மனதை ஸோஹம் மந்திரத்துடன் சேர்த்து ஜபம் செய்துவந்தால் சகல எண்ணங்களும் ஒழிந்து மனம் ஒரே நிலையில் நின்றுவிடும் பிறகு சில மாதங்களின் பழக்கத்தால் அந்த ஸோஹம் மந்திரத்தியானமும் ஒழிந்து தான் தானாகவே சமாதியில் நின்றுவிடும். அதாவது, அனேக ஆயிரம் எண்ணங்களை எண்ணும் மனதை முதல் ஓர் நிலைக்குக் கொண்டுவருவதற்காக முன் சொல்லிய 'ஸோஹம்' என்னும் இரண்டு மந்திரங்களையும் ஜபம் செய்யவேண்டும். இவ்வாறு ஜபித்து வந்தால் அந்த ஓர்நிலையும் நின்று தன்னைத்தான் மறந்து சமாதி நிலையை அடைய லாம் என்று தெரிந்து கொள்ளக் கடவீர்களாக.

## 106. ஸோஹம் மந்திரஜபத்தை மறுபடியும் ஜபிக்க வேண்டாமென்று கண்டனை செய்வது

"ஸோஹம் சிந்மாத்ரமேமேவேதி சிந்தநம் த்யாநமுச்யதே
த்யாநஸ்ய விஸ்ம்ருதிஹி ஸமபக் ஸமாதி ரபிதீயதே."

(த்ரிஸிகி ப்ராஹமணோபநிஷத்)

"ஆநந்தா த்பிர்யத்பரஹ ஸோஹமஸ்மி
ப்ரத்பக் தாதுர்நாத்ர ஸம்ஸீதிரஸ்தி." (மைத்ரேயுபநிஷத்)

ஜ்ஞானத்வாஸ்வம் ப்ரத்யகா த்மா நம்பத்தி தத்வ்ருத்தி

(ஸாக்ஷணம்)

ஸோர்ஹமித்யேவத த்வ்ருத்யா ஆவாந்யத்ரா தமமதிம்

(தயஜேத் அத்யா த்மோ பநிஷத்)

திரமென்ன ஹம்ஸோஹம் மந்திரா தீதம்
திருசியசூன் யாதிகளே தியான மாகும்
சரமென்ன சாக்கரமுத லவித்தை சூன்யம்
சாதனையே சமாதியெனத் தானே போகும்
வரமென்ன விப்ரீத விருத்தி மார்க்கம்
வாசனையே சாதனமாய் வகுத்துக் காட்டும்
அரமென்ன இதையறிந்தால் யோகி யாவான்
அஞ்ஞான மவரிடத்தி லணுகா தென்னே.

*இதற்குமுன் அத்தியாயத்தில் 'ஸோஹம்'' மந்திரம் மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்யும்படிச் சொன்னோம். அதற்குப்பின் அத்தியாயமாகிய இதில் ஸோஹம் மந்திரம் ஜபம் செய்யவேண்டாமென்று கண்டனைச் செய்கிறோம், காரணம் சொல்லப்போகின்றோம்.*

மனமானது, இமைக்கொட்டுமவ்வளவு நேரமும் சும்மாயிராமல் ஏதோ ஓர் விஷயத்தை நினைத்து எப்பொழுதும் கானல்நீர்போல் அசைந்துகொண்டேயிருக்கும். இவ்வாறாய் எப்பொழுதும் கானல்நீர்போல் அசைந்து கொண்டிருக்கும் மனதை ஒரே முறை சும்மாயிருவென்றால் சும்மாயிராது. ஆதலால், கானல் நீர்போல் அசைந்துகொண்டிருக்கும் மனதை முதல் ஓர் நிலையில் நிறுத்துவதற்காக ஸோஹம் மந்திரஜபம் செய்து வந்தால் அப்பொழுது அம்மனம் ஒரே நிலையில் நின்றுவிடும். மனதை ஒரே நிலையில் நிறுத்த சாதனம் செய்துவந்தால் சில நாளைக்குள் அந்த ஓர் நிலையும் நின்று தன்னைத்தான் மறந்து பிறகு சமாதி நிஷ்ட்டையில் நின்றுவிடும். மனதை நிறுத்த இதைவிட வழி வேறொன்றில்லை, எல்லா உபதேசங்களைவிட இந்த ஸோஹம் மந்திர உபதேசமே மிகவும் சிரேஷ்ட்டமானது. மற்ற உபதேசங் களெல்லாம் இதைவிடத் தாழ்ந்த உபதேசமே யொழிய இதைவிட அதிகமானதும் இதற்குச் சமானமானதும் அல்ல. இதுமுக்கியமான உபதேசமாதலால் இவ்வுபதேசத்தை இந்நூலில் பலவிடங்களிலும் சொல்லியிருக்கின்றோம். ஆதலால் ஹம்ஸ்' ரகசியமாகிய 'ஸோஹம்' என்னும் மந்திரத்தை எப்பொழுதும் ஜபித்துக் கொண்டிருப்பதே ஆத்ம தியானமென்று சொல்லப்படும். இது ஞானிகளுக்கு ஞான காயத்திரியாயிருக்கின்றது. இந்த ஞானகாயத்திரிபே 'ஸோஹம்' என்னும் அஜபா காயத்திரியை ஜபிப்பதையும் விட்டு சகலமும் மறந்து கேவல பிரஞ்ஞையுடையவனாயிருப்பதே ஆத்ம சாக்ஷரத்காரமென்றும், பிரம்ம நிஷ்டை யென்றும் நிர்விகல்ப சமாதி என்றும் சொல்லப்படும். ஆதலால், சில வருஷங்கள் வரையில் ஸோஹம் மந்திரத்தை ஜபம் செய்துவந்து பிறகு அந்த ஸோஹம் மந்திர ஜபத்தை ஜபிக்காமலும் எதையும் நினையாமலும் சும்மாயிருக்கவேண்டும். அப்படி சும்மா இருப்பதே அஸம்பிரஞ்ஞாத சமாதி என்றும் சொல்லப்படும்.

## 107. அஸம்பிரஞ்ஞாத சமாதி

சுரு!! *"அஸம்ப்ர ஞ்ஞாத நாமாயம் ஸமாதிப்யோகி நாம் ப்ரியஹ ப்ரபாஸஶூந்யம் மதஸ்ஸீந்யம் புத்தி ஸஶூந்யம்சிதா த்மகம்," (முக்திகோபநிஷத்)*

முத்தியடா மந்திரத்தை நினைக்கும்போது
மோசமடா மனந்தாலு மிரண்டாய்ப் போகும்
சத்தியடா மனந்தானும் ஏகமாகத்
தனித்திருந்து நித்திரையைத் தள்ளி மைந்தா
வுத்திபடா பிரம்மத்திற் புகுந்து கொண்டால்
பூலோகமெல்லாந்தான் பணியு முன்னை
எத்தியே திரியாமற் பிடரி மார்க்கம்
ஏறுகன்ற வாசியுந்தான் கற்பந் தானே.

*"நானே பிரம்மம்" "பிரம்மமே நான்" வன்னும் ஸோஹம் மந்திரஜபத்தை மறந்து மனோபுத்திகள் இவ்விரண்டும் சூன்யமாய் சகல எண்ணங்களும் மறந்து, தானே தானாய்த் தன்மயமாய்க் கேவல சின்மாத்திரனாய் (சிதாகாச வடிவமாய்) இருந்தது என்றால், நிர்மலமான கண்ணாடி எதிரில் மற்றொரு நிர்மலமான கண்ணாடியை வைத்தபோது எந்த பேதமுமில் லாமலும், ஒன்றையொன்று காணாமலும் இரண்டு ஒன்றா யிருப்பது போல் பிரம்ம சொரூபத்தில் மனம் கலந்து சாக்ஷிமாத்திரனாய் நின்றிரும்பதே அஸம்பிரஞ்ஞாத சமாதி என்றும் நிர்விகப்ப சமாதி என்றும் சொல்லப்படும். இதற்குக் கைவல்யம் பிரமாணம்.*

களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர்
களங்கமற்ற கண்ணாடி காட்டும் போது
விளங்கியதன் மயமாகி வேத மாகி
விகற்பமின்றி நிருவிகம்ப மானாற் போல

அளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தா
யாநந்த மாம்பிரமத் தைக்கிய மான
உளந்தெளிந்த படியிருந்தா லுலக மெங்கே
யுலைவெங்கே யென்ற சங்கை யொழித்தி டாயே

என்றிருப்பதனால் மோக்ஷத்தைக் கொடுக்கும் அஸம் பிரஞ்ஞாத சமாதியே உயர்ந்தது. அந்த அஸம்பிரஞ்ஞாத சமாதியை அடையுமுன் மனதை விஷயமாகக் கொண்டு சங்கல்ப விகல்பங்கள் என்றால் நினைப்பு மறப்புகள் நாபியிலிருந்து உண்டாகும் விதங்களையறிந்து, அவைகள் உண்டாகாவண்ணம் தடுக்க வேண்டும். மனதில் ஒரு சங்கல்பமும் உண்டாகாமல் தடுத்து விட்டால். அதுவே அஸம் பிரஞ்ஞாத சமாதியாகும். சங்கல்பமே மனதிற்குச் சொரூபமான படியால், சங்கல்பங்கள் உண்டாகாமல் நின்றுவிட்டால் மனமிறந்த தென்றுயோகிகள் கூறுவார்கள். மனமிறந்த சமாதியே அஸம்பிரஞ்ஞாத சமாதி அந்த அஸம்பிரஞ்ஞாத சமாதியில் ஆத்மா தான் மாத்திரமாய நின்றிருக்கும், சம்பிரஞ்ஞாத சமாதியில் சித்த விருத்திகள் அடங்கியிருந்த போதிலும் சமாதியிலிருக்கிறோமென்றும் தத்துவங்களின் உண்மையறிய வேண்டுமென்றும் மனோ சங்கல்பம் இருப்பதால்,.அடங்கியிருந்த சித்தவிருத்திகள் மனதிற்குப் பலமாய் கவரத்தக்க விஷயங்களின் சம்பந்தம் நேரிட்டால் மனம் வெளியே கிளம்பி நிஷ்ட்டையில் உட்கார்ந்த புருஷனை உலக வியாபாரத்தில் இழுத்துச் செல்லும்; அஸம்பிரஞ்ஞாத சமாதியில் மனமில்லாமல் ஆத்மா மாத்திரம் நின்றிருப்பதனால். அப்பொழுது மனோ சங்கல்பங்கள் உண்டாவதற்குக் காரணமில்லை. அஸம் பிரஞ்ஞாத சமாதியில் இருந்தால் மனம் விஷயங்களில் இழுத்துச்சென்று அநர்த்தத்தை விளைவிக்காது.

சுரு- அஜ்ஞாந ஹ்ருதய க்ரந்தோ் நிஸ்ஸேஷ விவபஸ் த்ததா
ஸமாதிநா விகல்பேந யதா அத்வை தாத்ம தர்ஸனம்
(அத்யா த்மோபநிஷத்)

இருத்தியே இருதயத்தில் மனமொன்றாக
ஏகபர மாம்பொருளை யிருத்தியொன்றாய்
நிறுத்தியே வெகுகோடி காலமட்டும்
நிருவிகற்ப சமாதியிலே நிறைந்ததெந்நாளும்
பொருந்தியே லலாடக்கண் திறந்து பார்க்கப்
பூலோக மெங்குமொன்றாய் நிறைந்தேன்மைந்தா
கருத்தொன்றாய் நிறுத்தியடா கபடம் நீக்கிக்
காரணத்தைக் கண்டுவிளை யாடுவாயே

இந்த நிர்விகல்பசமாதி நிஷ்டையினால் அஞ்ஞான மயமாகிய சமஸ்த இருதய கிரந்திகளும் நசிந்து அதாவது ஸங்கல்ப விகல்பங்கள் (நினைப்பு மறப்பு) சூன்னியமாய்க் கேவல அத்வய பிரம்மமாகிய ஆத்ம சாக்ஷாத்காரம் உண்டாகும்.

சுரு॥"ஸமாதிநிஷ்ட்டதாமேப்ய நிர்விகல்போ பவாநக"
(அத்யாத்மோ பநிஷத்)

ஸதா நிர்விகல்பசமாதி நிஷ்டையிலிருந்து நிர்விகாரமாய் என்றால், எந்த நினைப்பு மறப்புகளும் இல்லாமலிருப் பதற்கு ஒவ்வொருவரும் பிரயத்தினம் செய்ய வேண்டும்.

சுரு தா்மமேகமிமம் ப்ராஹு ஸமாதிம்போகவித்தமாஹ
வர்ஷத்யேஷயதா தா்மாம்ருத தாராஹ ஸஹஸரஸஹ
அமுநா வாஸநாஜாலே நிஸ்ஸேஷம் ப்ரவிலாபிலே
(அத்யா த்மோ பநிஷத்)

இந்த நிர்விகல்பசமாதியை தர்மமேகமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இதனால் சுவாநுபவா நந்தா மிருதம் விசேஷமாய் வருஷித்து தேஹவாசனை

சாஸ்திர வாசனை, லோகவாசனை என்னும் மூன்று வாசனைகளும் நீங்குவதனால்.

சுரு ''யதா ஜலேஜலம் க்ஷிப்தம் க்ஷீரம் க்ஷீரே க்ருதம்க்ருதே
அவிஸேஷோபவத் தத்வத் ஜீவாத்ம பரமாத்மா நோஹோ''
'யதோதகே தோய மநு ப்ரவிஷ்ட்டம் த்தாத்ம நிருபாதி ஸம்ஸ்திநஹ',
ரூபோ (பயிங்கலோ பநிஷத்)

ஜலத்தில் ஜலமும் பாலில் பாலும் நெய்யில் நெய்யும் கலந்து ஏகமாவதுபோல் இந்தச் சரீரம் நசித்தவுடனே ஜீவோபாதி என்றால் அனேக எண்ணங்களுடைய மனம் நசித்துப் பிரம்மத்தில் ஆத்மா கலந்து ஏகமாய்ப் போவதே விவேகமுக்தி எனப்படும்.

சுரு ''ஆத்மாநா த்மவிவேநேக புநஸ ஸம்ஸார நிர்வருதிஹி
தத்விநா ஜன்மகோட்யாபி பந்தஸ்ச்சேதோ நஸித்யதி

என்னும் சுருதிரீரியாய் ஆத்மா அநாத்மா என்னும் விவேக மில்லாதவர்கள், கோடி ஜன்மங்கள் எடுத்த போதிலும் மோக்ஷத்தை அடைய மாட்டார்கள்.

சுரு ''அயமா த்மா ப்ரஹ்ம ஆத்மா நாராயண, பரஹ''

என்னும் சுருதிரீதியாய், ஆத்மாவே பரப்பிரம்ம மென்று அறிந்து ஆத்மா நுபவம் அடையாதவர்கள் வனவாசம் சென்று தலைகீழாய்நின்று. அன்ன ஆகாரங்களில்லாமல் தவஞ்செய்து எவ்வளவு கஷ்ட்டபட்ட போதிலும் மோக்ஷத்தை அடைய மாட்டார்கள்.

''அஞ்ஞாநாம் பாவநார்த்தாய ப்ரதிமாஹ பரிகல்பிதாஹ

ஆத்மஞான மில்லாதவர்களுக்கே விக்கிரக ஆராதனைகள் சொல்லப்பட்டதேயொழிய கேவல ஆத்மஞானிகளுக்கு விக்கிரக ஆராதனைகளினால் பிரயோஜனமில்லை. ஆத்மா ஞானிகள் எதை ஆராதிக்கின்றார்களென்றால்;

தேஹோ தேவாலய ப்ரோக்தோ ஜீவோ தேவஸ்ஸ தாஸிவஹ·
த்யஜேத்ஞாந நிர்மால்யம் ஸோஹம்பாவேந பூஜயேத்."

நமது தேஹமே தேவாலயமென்றும், அந்தத் தேஹ மென்னும் தேவாலயத்தில் நிவசித்துக் கொண்டிருக்கும் ஜீவனே புராதன என்றால் ஆதிபுருஷனாகிய பரப்பிரம்ம மென்றும் அறிந்து அஞ்ஞானமென்னும் பழைய புஷ்பங் களினால் பூஜை செய்து அதையும் மறந்து பிரம்ம ஐக்கிய அநுபவத்தை அடைந்தவர்களே புனர் ஜநந (மறுஜநந) மில்லா தவர்களாய் நித்திய முக்தியை அடைவார்களேயன்றி, மற்றவர்கள் எவ்வளவு கஷ்டப்பட்ட போதிலும் முக்தியை (மோக்ஷத்தை) அடையமாட்டார்கள்.

சுலோ॥ அவிச்சிந்த சிதாத்மநஹ புமாநஸ்தீஹ நேதரதத்
ஸ்வஸங்கல்பயவஸாத் பத்தஹ நிஸ்ஸங்கல்பஸ்து முச்யதே."

தேசகால வஸ்து பரிச்சேதமில்லாத சித்ரூபனான பரம புருஷன் ஒருவன் இருக்கின்றான். மற்றொருவனில்லை. அப்புருஷன் தனது சங்கல்பமென்னும் மாயா சக்தியினால் பந்தப்பட்டு சம்சாரத்தை அனுபவிக்கின்றான். சங்கல்ப சூன்யமானால் முத்தனாகின்றான்.



## 108. சிதாகாசம் எது? நிர்விகல்ப சமாதி எது?

சுரு "தேஸாத். தேஸாந்தர ப்ராப்தெள ஸம்விதோ (மத்யமேவ) யந் நமேஷண சிதாகாஸம் தத்விர்த்தி முநிபுங்கவா." (மஹோபநிஷத்)

"ஒரு பொருளை நீத்து ஒரு பொருளைப் பற்றி இரு பொருளும் போக்கி இடையேயொரு பொருளுமற்ற நிலையாதோ அதுவே உனது நிலை.

மனமானது க்ஷணத்திற்குள்ளே ஓரிடமிருந்து மற்றோரிடத்திற்கு ஓடிக்கொண்டிருக்கும். அப்படி ஓரிடமிருந்து மற்றோரிடத்திற்கு ஓடும்பொழுது இவ்விரண்டிற்கும் மத்தியில் எந்த ஞானம் மத்யஸ்தமாயிருக்கின்றதோ அதாவது. இவ்விரண்டிற்கும்மத்தியில் இதைகொட்டுமவ்வளவு நேரம் எது வெளியாய் இருக்கின்றதோ அந்த வெளியே சிதாகாசம், இந்த "சிதாகாசமே" நீயென்று அறிந்து அந்த ரூபமாகவேயிருக்கவேண்டும். என்றால், எந்த எண்ணங்களும் இல்லாமல் சும்மாயிருக்க வேண்டும், அதற்குத் தாயுமானவர் பாடல் பிரமாணம் என்னவென்றால்.

கூடுத லுடன்பிரித லற்றுநீர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரிதலற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற் றுநிலையான
குறியற்று மலமுமற்று
நாடுதலு மற்றமேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்று விந்து
நாதமற்று ஐவகைப் பூதபே தமுமற்று
ஞாதுருவின் ஞானமற்று

வாடுதலு மற்றுமே லொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமுமற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்டவசமாய்
தேடுதலு மற்றுவிட நிலை என்ற மௌனியே
சித்தாந்த முக்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவை

ஒவ்வொரு வார்த்தையாடும் பொழுது மத்தியில் விட்டுவிட்டு வார்த்தையாடுவார்களேயொழிய ரெயில் ஓடுவதுபோல் ஒரே நீளமாய் வார்த்தையாடுவதில்லை. எப்படியென்றால், இவ்விடமிருந்து ஆபீசுக்குப் போய் இன்றுமாலை துரையிடம் - மூன்று தினங்கள் - லீவுவாங்கிக் கொண்டு - திருவண்ணாமலை - கார்த்திகை தீபம் போக வேண்டுமென்று இவ்வாறான பல பல எண்ணங்களை ஆபீசில் உத்தியோகம் செய்யும் புருஷன் நினைக்கின்றான். மேற்சொல்லியதுபோல் எண்ணங் கொண்டிருக்கும் புருஷன் ஒவ்வொரு வார்த்தை மத்தியில் கோடு போட்டிருக்கும் இடங்களில் சற்று நிறுத்தி நிறுத்தி மறுவார்த்தைத் துவக்கு கிறான். ஒரு வார்த்தைக்கும் மற்றொரு வார்த்தைக்கும் மத்தியில் நிறுத்தி வேறு வெளியாயாம் ஒவ்வொரு வார்த்தை யின் மத்தியிலிருக்கும் இடம் எதுவோ அந்த, ''நான்'' என்பதே யாம் ஒவ்வொரு வார்த்தையின் மத்தியிலிருக்கும் இடமே வெறும் பாழ்வெளி என்று சொல்லப்படும் அந்த வெறும் பாழ்வெளியே ஆத்மா.

முன்சொல்லிய ஆபீஸ் உத்தியோகஸ்தன் முதல் என்ன நினைத்தானென்றால். ஆபீசுக்குப்போய் என்று முதல் நினைத்தான், போய்... என்று நினைத்தயிடத்திலேயே வார்த்தை நிறுத்திவிட்டு, மறுபடியும் வரப்போகும் வார்த்தையை

மனதில் நினைக்காமல் நிறுத்தி விடவேண்டும், என்றால் ஆபிசுக்குப் போய் என்று எண்ணம் உதித்தவுடன் மறுபடியும் வேறு எண்ணங் கொள்ளாமல் சும்மாயிருந்துவிட வேண்டும். உங்களுக்கு முதல் எந்த எண்ணம் உதிக்கின்றதோ, அந்த எண்ணம் வெளிப்புறப்படும் பொழுதே அதை வெளிக் கிளம்பாமல் இருக்கும்படிச் செய்து சும்மாயிருந்து பாருங்கள். அப்பொழுது எவ்வளவு நேரம் நீங்கள் சும்மாயிருக்கின்றீர் களோ, அவ்வளவு நேரமும் ஓர்வித சுகத்தை அடைவீர்கள், இதற்கு ஞானவாசிட்டம் பிரமாணம்,

ஓரிடம்விட் டோரிடத்தே யுள்ளமுறி வைற்றினடு
உண்மை யாகிப்
பேரிலதா யுணர்விலதாய்ச் சடமிலதா யதுநீயாய்
பிரியே லென்றுங்
கூரியபுத் தியினாலே யூகித்துக் குடும்பியெனுங்
குறிப்பை மாற்றித்
தூரியதாம் படிமனத்தின் றுவச்கறுத்து விருந்தபடி
துணிந்து நிற்பாய்

சுரு "தஸமிந் நிரஸ்த நிஸ்ஸேஷ ஸங்கல்பஸ்திதி மேஷி ஸர்வாத்மகம் பதம்ஸாந்தம் ததாப்ராப்நோஷ்யஸம் ஸயஹ"
(மஹோபநிஷத்)

அப்படிப்பட்ட சிதாகாசத்தில் (வெளியில்) சகல எண்ணங்களும் அடங்கித் தான் தானாய் இருப்பானேயாகில், சர்வத்திற்கும் அதிகப்பட்டதும் பரம சாந்தமாயிருப் பதுமாகிய பிரம்ம சொரூபத்தில் ஐக்கியமாய் விடுவான். இப்படி ஐக்கியமாவதே "நிர்விகல்ப சமாதி" என்று சொல்லப்படும். இதற்குச் சுருதிப் பிரமாணம் :

அர்த்தா தர்த்தாந்தாம் சித்தே யாதிமத்யேது யாஸ்திதிஹி
ஸாத்வஸ்த மநநாகார ஸ்வரூபஸ்திதி ருச்யதே

என்னும் மஹோபநிஷத் வாக்கியரீதியாய் மனமானது ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்திற்குப் போகும் பொழுது அதன் மத்தியில் சித்த சலனமில்லாமல் நிற்கும் நிலை எதுவோ அதுவே நிர்விகல்ப சமாதி என்றும், உனது சொரூபமென்றும் சொல்லப்படும்.

சுரு।। ''சித்தம் தூரே பரித்யஜ்ய யோஸிஸோஹி ஸ்திரோப''
(மஹோபநிஷத்)

சங்கல்ப விகல்ப ரூபமாயிருக்கும் என்றால், நினைப்பு மறப்பாயிருக்கும் மனதைத் தூரப்படுத்தி, சேஷமாய் நின்றிருக்கும் ஞானமே உன் சொரூபமாதலால் சஞ்சலமில்லாமல் என்றால், மனம் எதையும் நினையாமல் சும்மாயிருக்க வேண்டும்.

சுரு।। ''நாஹம் நேதமிதி த்யாயந் தீஷ்ட்ட த்வமசலாசல'
ஆத்மநோ ஜகதஸ்சாந்தர் த்ரஷ்ட்ட ருத்ருஸ்ய தஸாந்தரே
தர்ஸநாக்யம் ஸ்வமாத்மாநம ஸர்வதா பாவயந் பவ''
(மஹோபநிஷத்)

கண், மூக்கு, வாய், செவிகள், தேகசர்மம் என்னும் இந்த ஐந்து இந்திரியங்களும், அஹங்காரமும் நானல்ல. இந்த ஜகத்து மித்தியா (மாயா) சொரூபமானது என்று நிச்சயமாய் அறிந்து இந்தத் தேஹேந்திரிய ஜகத்திற்குச் சாக்ஷி மாத்திரனாய் இருந்து கொண்டு எது அறிகின்றதோ அந்த சாக்ஷியே தன் சொரூபமென்று அறிந்து சதா அந்த சாக்ஷியுடன் சேர்ந்து தன்மயமாய் (தான் தானாய்) இருக்கவேண்டும்.

சுரு।। ''அவலப்ய நிராலம்பம் மத்யே ஸ்திரோபவ''
(மஹோபநிஷத்)

இந்திரியங்கள், மனம், புத்தி சித்த அஹங்காரங்களுக்கெல்லாம் சாக்ஷியாயிருக்கும் வஸ்துவே ஆத்மாவென்றும் பிரம்மனென்றும் சொல்லப்படும். அப்படி சாக்ஷி சொரூப

மாகிய ஆத்மா சமஸ்தானத்திற்கும் ஆதாரமானது; அப்படிப் பட்ட ஆத்மாவிற்கு ஆதாரம் ஒன்றுமில்லை. அது நிராதாரமாயிருக்கப்பட்டது. அப்படிப்பட்ட ஆத்மாவே நீயென்று அறிந்து திட நிச்சயமுடையவனாய்ச் சதா அதையே தியானித்துத் தன்மயாமாயிருக்க வேண்டும்.

''த்ரிஷ்ட்ரு தர்ஸந த்ருஸ்யாநாம் மத்யே யத்தர்ஸநம் ஸம்ருதம்
நாதஹபரதரம் கிஞ்சிந் நிஸ்ச்சயோ ஸ்த்யபரோமுநே.''

(மஹோப)

காண்பான் காக்ஷி காணப்படும் பொருள் என்றால், திருசிய பிரபஞ்சம் இம்மூன்றும், த்ரிபுடி என்று சொல்லப் படும். அப்படிப்பட்ட திரிபுடி மத்தியில் சாக்ஷியாய் எந்த அறிவு பிரகாசிக்கின்றதோ அந்த அறிவே ஆத்மாவென்றும் பிரம்மமென்றும் சொல்லப்படும். அந்த அறிவதானென்று தெரிந்து சதா தன்மயமாயிருப்பதைவிட. வேறு சாஸ்திரார்த்த ஸாராம்சம் இல்லையாதலால் சதா அந்த அறிவை ''தான்'' என்று அறிந்து எப்பொழுதும் தன்மயமாயிருக்கவேண்டும். இதற்குத் திருஷ்ட்டாந்தம் என்ன வென்றால்.

சுலோ॥ ''நஸாஷிணம் ஸாக்ஷய தர்மாஹ ஸர்ஸ்ப்ரஸந்தி
விலக்ஷணம் அவிகார மதர்ஸீநம் க்ருஹதர்மாஹப்ர தீபதத்''

என்னும் சுலோகரீதியாய் ஒரு வீட்டிலுள்ள கூடத்தில் தீபம் பிரகாசித்துக் கொண்டிருக்கும்பொழுது அந்தத் தீபத்தை அனுசரித்து ஜனங்கள் மேற்படி கூடத்தில் நடந்து கொண்டு அனேக காரியங்களைச் செய்துவந்த போதிலும் அந்தத் தீபம் மாத்திரம் எந்தக் கார்யங்களையும் செய்யாமலும் எந்த விகாரங்களை அடையாமலும் சலிக்காமலும் அவர்கள் செய்யும் காரியங்களையெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கும். அதுபோல் அவனவன் தினந்தோறும் செய்யும் புண்ணிய பாவங்களையெல்லாம் ஆத்மா பார்த்துக் கொண்டு சாக்ஷிமாத்திரனாய் இருக்கின்றது.

## 109. மனம் உற்பத்தி, மனம் லயம், மனம் கனவு காணுதல்

மனம் எந்த வேலையும் செய்யாமல் எப்பொழுதும் சும்மாயிருக்கவேண்டுமென்று எல்லாச் சாஸ்திரங்களிலும் சொல்லியிருப்பதுமேயல்லாமல் பெரியோர்கள் பாடிய பாடல்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால், சாஸ்திரங்களும், பெரியோர்களும் சொல்லிய வாக்கியங் களுக்கு விரோதமாய் மனம் நடந்து கொண்டிருக்கும்.

ஸ்திரீ புருஷர்கள் ஏதோ ஓர் கார்யார்த்தமாய் வீட்டை விட்டு வெளிவருகிறார்கள். அவர்கள் வெளிவந்தவுடன் ஏதோ ஓர் எண்ணம் முதல் உதித்து உடனே அவ்வெண்ணம் மறைந்துவிடும். மறுபடியும் வேறு எண்ணம் உதிக்கும். பிறகு அவ்வெண்ணமும் மறைந்துவிடும். இவர்கள் நடந்து செல்லச் செல்ல ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்பொழு தெல்லாம் ஒவ்வொரு எண்ணம் பிறந்து பிறந்து உடனுக் குடனே நசிந்துவிடும். இவ்வாறாக இருபது அடி தூரம் நடந்தபின் அவ்விடம் நிற்கவேண்டும். நின்றபிறகு நல்லது. நான் இப்பொழுது வீட்டை விட்டு இருபது அடி தூரம் நடந்து இங்கு வந்து நின்றேனல்லவா? இதற்குள் எத்தனை எண்ணங்களை எண்ணினானோ அவற்றைச் சற்றே ஆலோசித்துப் பார்க்கலாம் என்று தமக்குள் நினைத்து அவ்விடம் சற்று நின்று தாம் அது வரையில் எண்ணிய எண்ணங்களையெல்லாம் எவ்வளவு நேரம் நின்று ஆலோசித்தபோதிலும் அதில் ஒரு எண்ணமாகிலும் ஞாபகத் திற்கு வரவேமாட்டா. இன்னும் நடக்க நடக்க வெவ்வே றான புதிய எண்ணங்கள் உதித்துக் கொண்டும், மறுபடியும்

உடனுக்குடனே மறந்து கொண்டுமாய்ப் போகுமேயொழிய முன் எண்ணிய எண்ணங்கள் மறுபடியும் உதிக்கமாட்டா. தான் எந்த இடம் போகவேண்டுமென்று நினைத்துப் போகின்றானோ, அந்த இடம் போய்ச் சேருவதற்குள் எத்தனையோ எண்ணங்கள் பிறந்து பிறந்து உடனுக்குடனே மறந்துவிடும். இதற்கு சுருதிப் பிரமாணம் ''புங்கானு புங்க விஷயே ஹணதத்வருபிணாம்'' அதாவது க்ஷணத்திற்குள் அனேக எண்ணங்கள் பிறந்து பிறந்து நசிந்து விடுகிற தென்பதேயாம்.

உலகத்திலுள்ள எல்லா ஸ்திரீ புருஷர்களினுடைய மனமானது ரெப்பைமூடு மவ்வளவு நேரமும் சும்மாயிராமல் எப்பொழுதும் எதையோ ஒரு விஷயத்தை நினைத்து எண்ணிக் கொண்டேயிருக்கும்.

உலகத்திலுள்ள ஜனங்களெல்லோரும் காலை முதல், மாலை வரையில் அவரவர்கள் செய்ய வேண்டிய வேலை களையெல்லாம் செய்து முடித்து இரவு சாப்பிட்டுப் படுக்க சிலருக்கு 9 சிலருக்கு 10 சிலருக்கு 11 மணி ஆகும். மறுபடி யும் சிலர் காலை 3 சிலர் 4 சிலர் 5 மணிக்கு எழுந்திருப் பார்கள். இதன் மத்தியில் அதாவது, தூக்கத்திலிருக்கும் 4 அல்லது 5 அல்லது 6 மணி நேரம் வரையில் மாத்திரமே அவர்களின் மனமானது எந்த எண்ணமும் எண்ணாமல் சும்மா யிருக்கும் அப்படி சும்மாயிருந்தபோதிலும் ஒவ்வொரு சமயங்களில் அம்மனம் கனவு என்பதைக் காணும். தான் தூங்கும்பொழுது தன் வீட்டில் கள்ளர்கள் புகுந்து வீட்டி லுள்ள தனதான்னியங்களைக் கொண்டு போன போதிலும் சரி, அல்லது தன் மீது சர்ப்பம் ஏறிச் சென்றபோதிலும் அல்லது சரி அல்லது தன் அங்கத்தின்மேல் வஸ்திரம் இல்லாமலிருந்தபோதிலும் சரி, தனக்கு யாதொன்றும் தெரியாமல் தன் சரீரத்தைத்தான் மறந்து தூங்கிக் கொண்

டிருப்பான். அப்படிப்பட்ட சமயத்தில் மனமானது கண் மூலமாய் எதையும் பார்ப்பதில்லை. அப்படியிருக்க இரவு தூங்கும் வேலையில் மனமானது சரீரத்திற்குள்ளிருந்து கிளம்பி எங்கெங்கோ வெளியிற்சென்று அனேக வஸ்துக் களைப் பார்த்தும் அனேக வேலைகளைச் செய்தும் மறுபடியும் சரீரத்திற்குள் வந்து புகுந்து கொள்ளும், பிறகு காலையில் எழுந்தவுடன் தான் இரவு பார்த்தவைகளையும் செய்த கார்யங்களையும் இதரர்களிடம் சொல்லும். இதையே கனவு என்று சொல்லுவார்கள்.

கடவுளாகிய ஆத்மாவானவர் எல்லா ஜீவராசிகளின் இருதய கமலத்தில் சாக்ஷி சொரூபமாயும் ஜீவாத்மாவாயும் நிவசித்துக் கொண்டிருக்கிறார். இவ்வாறாக சாக்ஷி சொரூப மாயிருக்கும் ஆத்மாவானவர் என்ன செய்கிறாரோ அதை இனிச் சொல்லுகிறோம் கேளுங்கள். இரவு படுத்துத் தூங்கும்பொழுது மனம் வெளியில் சென்று எதையெதைப் பார்த்ததையும் எதையெதைச் செய்ததையும் தனக்குள் சாக்ஷி சொரூபமாயிருக்கும், ஆத்மாவானவர் பார்த்துக் கொண் டிருந்தபடியால் புருஷன் தூங்கிக் காலையில் எழுந்தவுடன் இரவு தான் கனவில் கண்டவைகளையெல்லாம் இதரர்களுக் குச் சொல்லும்படி அவனுக்குள் சாக்ஷியாயிருக்கும் ஆத்மா வானவர் ஞாகப்படுத்துகிறார். சொல்லுகிறான். கனவு காணாமல் சும்மாய்த் தூங்குவதே சுஷுப்தி என்று சொல்லப் படும். ஜாக்கிரதா அவஸ்த்தையில் இந்த ஜஷுப்தியா வஸ்த்தை அடைந்திருப்பதே சமாதியென்று சொல்லப்படும். இப்படிப்பட்ட சமாதியில் மனம் லயிக்காமல் இரவு தூக்கத்தில் லயித்திருப்பது என்படியிருக்கிறதோ அதை இனித் தெரிவிக்கின்றோம் கேளுங்கள்.

யுகமுடிவில் பிரளய காலம் வரும்பொழுது எல்லாச் சமுத்திரங்களும் பொங்கி ஆகாயம் உயரத்தில் பரவி அனகே வருஷங்கள் வரையில் ஜலப் பிரளயத்தில் உலகம் மூழ்கி

இருக்கும். அந்தப் பிரளயத்தில் எல்லா வஸ்துக்களும் எப்படி நசிந்து விடுகின்றதோ அதுபோல் பிரபஞ்சத்திலுள்ள மானவர்களின் மனதெல்லாம் இரவு தூங்கும்பொழுது நாலுமணி நேரம் தூக்கத்தில் லயித்திருக்கும். இத்தூக்கம் பிரளய காலத்திற்கு ஒப்பிடலாம்.

ஜலப்பிரளயம் முடிந்தபின் மறுபடியும் மஹாவிஷ்ணு வானவர் பிரபஞ்சத்தைச் சிருஷ்ட்டி செய்கிறார். இதுபோல் இரவு தூங்கி எழுந்தவுடன் மறுபடியும் இரவு படுக்கும் வரையில் மனமானது அனேக உலக வியாபாரங்களைச் செய்து கொண்டிருக்கும். இதைப் பிரபஞ்ச சிருட்டிக்கு ஒப்பிடலாம். இதுபோல் நமக்குப் பிரதி தினம் ஒரு பிரயள காலமாயிருக்கிறதென்று தெரிந்து கொள்ளுங்கள் பிரபஞ்ச தர்மம்இப்படியிருக்க,

மானவ ஜனங்களெல்லோரும் மாயையென்னும் ஆசையால் கட்டுப்பட்டு, நீர்க்குமிழியைப் போல் க்ஷணத் திற்குள் அழிந்து போகத் தக்க சரீரம் அனேக காலமிருப் பதாய் எண்ணி அனேக விதங்களாகிய வேலைகளைச் செய்து பொருள் சம்பாதித்து இப்பொழுதிருக்கும் மனைவி மக்களுக்கு ஆஸ்தி சேகரித்துக்கொண்டே வரும் சமயத்தில் இருந்தாற்போலிருந்து ஏதோ ஓர் வியாதி கண்டு ஜீவன் அந்த சரீரத்தை விட்டு மற்றொரு சரீரத்தில் போய்ச் சேர்ந்து ஜன்மமெடுத்து, அந்த ஜன்மத்திலும் சில வருஷங்கள் ஜீவித் திருந்து மறுபடியும் அவ்விடம் புதியதாய் வரும் மனைவி மக்களுக்கு ஆஸ்தி சேகரித்து வைத்து மறுபடியும் அந்தச் சரீரத்தையும் விட்டு வேறு சரீரத்தில் போய் சேர்ந்து இவ்விதமாய் கணக்கில்லாத சரீரங்களை ஜீவன் எடுத்துக் கொண்டே போகும்.

ஈஸ்வரர் ஸ்திரீ புருஷர்களை ஆசையென்னும் மாயை யால் மோஹிக்கச் செய்து, தாம் சூத்திரதாரியைப் போலிருந்து

என்றால், தோல் பொம்மைகளின் கைகளுக்கும், கால்களுக்கும் புருஷன் நூலைக்கட்டி அந்நூல் மூலமாய் பொம்மைகளை ஆட்டிக் காட்டுபவனைப்போல், ஈஸ்வரர் ஸ்திரீ புருஷர்களை ஆசையென்னும் நூலால் கட்டி அனேக விதங்களாகிய ஆட்டங்களை ஆட்டக்காட்டுகிறார். ஆதலால், இப்படிப்பட்ட ஈஸ்வர மாயைக்கு உட்படாமலிருப்பதற்காக இந்த ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம்'' என்னும் நூலை இந்நூலாசிரியர் எழுதி வெளியிட்டிருக்கின்றார். இந்நூலை வாசித்த மாத்திரத்தில் ஸ்திரீ புருஷர்களை மூடிக்கொண்டிருக்கும் ஆசையென்னும் மோஹம் உடனே நீங்கி மோக்ஷமென்னும் வீட்டை அடைய எல்லோரும் பிரயத்தினப் படுவார்கள்.

சுரு॥ மந்மாயா மோஹிதசேஸோ
மாமாத்மாந மாபூர்ணய்பரம
வுதிர்த்தோதர பூரணாய பரமந்திகாகா
இவஸ்ரயோபி அலப்தவந்தஹ.

முநிபுங்கவா! என் மாயையால் மூடப்பட்டிருக்கும் வித்வாம்ஸர்கள் அகண்ட ஸச்சிதானந்த ஸர்வ பரிபூரண பரப்பிரம்ம சொரூபமாயிருக்கும் என்னைத் தமது ஆத்ம சொரூபமென்று அறியமாட்டார்கள். ஞாநானுபவம் இல்லாதவர்கள் தாங்களே ஞானமுடைய வித்வாம்ஸர்களென்று உலகத்தார் பிரமை அடையும்படி ஒவ்வொரு ஊரிலும் சொல்லிக்கொண்டு காகத்தைப்போல் திரிவார்கள்.

சுரு॥ ஏஹி வ்ருத்திம் விஹாயைநாம ப்ரஹ்மாச்யாந் பாவநீம்
பராம் ஸ்வதைவதேது ஜ்வமதி பஸுபிஸ்ச்சி ஸமா நராஹ
ஏதுல்ருத்திம் விஜாநந்தி ஞாத்வா நைவர்த்தியந்தியே
தேஹை ஸ்த்புருஷா தந்யா வந்த்யாஸ்த்தே புவநத்யயே

என்னும் தேஜோபிந்தூபநிஷத் வாக்யரீதியாய், ஆத்மானுசந்தானம் இப்படிப்பட்டதென்று தெரிந்து அதைச் சாதனம்

செய்யாமல் எவன் விருதாகாலம் கழித்து வருகிறானோ அப்படிப்பட்டவனை நான்கு பாதங்களையுடைய பசுவிற்குச் சமானமானவனென்றே சொல்லப்படும். எவன் ஆத்ம நிஷ்டையைத் தெரிந்துகொண்டு அதை ஜபம் செய்து வருகிறானோ அப்படிப்பட்டவனே ஸத்புருஷனென்றும் கிருதார்த்தனென்றும் மூன்று உலகத்தாரால் நமஸ்கரிக்கப் படும் மகாத்மாவென்று சொல்லப்படும் இதன்றியும்.

சுரு॥ ''ஏஷாம் வ்ருத்திம் ஸமாவ்ருத்தா பரிபக்வா ச ஸாபுநஹ
தேவை ஸத் ப்ரஹ்மதாம் ப்ராப்ததா நேதரே ஸப்த வாதிநஹ

''குஸலா ப்ரஹ்மவாத்தாயாம வ்குத்திஹீநாம் ஸுராகிணஹ
தேப்ய ஞாநதயா மரநம் புநராயாந்தி யாந்திச''

''அவித்யாயமந்த்ரே வர்த்தமாநஹ: ஸ்வயந்திராஹ
பண்டிதம் மந்யமாநாஹ தந்தரம்யமாணாஹ
பரியந்தி மூடா ஆந்தே நைநே நீயமாநா யதாந்தாஹ

என்னும் தேஜோ பிந்தூபநிஷத், கடோபநிஷத் வாக்கிய ரீதியாய் எவன் ஆத்மநிஷ்டையைச் செய்து வருகிறானோ, அப்படிப்பட்டவனுக்கு மனோவியாபாரங்களெல்லாம் சூன்யமாய் அதன்பிறகு தான் தானாய்ப் பிரகாசித்துக் கொண்டிருப்பான், அப்படிப் பிரகாசித்துக் கொண்டிருப் பவனே ஸச்சிதானந்த சொரூபமாயிருக்கும் பரப்பிரம்மத்தில் போய் ஐக்கியமாய் விடுவான்.

இப்படிக்குச் செய்யாமல் நானே பிரம்மமென்று எவன் வாக்கினால் சொல்லுகிறானோ அப்படிப்பட்டவன் சாஸ்திரங்களை வாசித்து அதன் ரகஸ்யார்த்தங்களைத் தெரிந்து கொள்ளாமலும், ஆத்ம ஞானத்தில் சுவாநுபவம் இல்லாமலும் இருந்து நான் பிரம்மஞானியென்று எவன் சொல்லுகிறானோ அப்படிப்பட்டவனை, ஸுஷ்க்க வேதாந்தியென்றே சொல்லப்படும். இப்படிப்பட்ட

ஸூஷ்க்கவேதாந்தம் எப்படியிருக்கிறதென்றால் ஒரு குருடன் மற்றொரு குருடனுக்கு வழிகாட்ட அவன் கையைப் பிடித்து மேடு பள்ளங்கள் வழியாய் அழைத்துச் சென்று கடைசியில் இருவரும் ஓர் பெரிய பள்ளத்தில் விழுந்து துக்கப்பட்டுக் கொண்டிருப்பதுபோல். முன் சொல்லிய ஸூஷ்க்க வேதாந்திகளின் வாக்கியங்களை, ஜனங்கள் கேட்டு ஜநந மரண சொரூபமாயிருக்கும் ஸம்சாரமென்கிற பெரும்பாழும் பள்ளத்தில் வீழ்ந்து மோக்ஷமென்னும் கரையேற சக்தியில்லாமல் எப்பொழுதும் துக்கித்துக் கொண்டேயிருப்பார்கள். ஆதலால்,

சுரு॥ பாஷாணலோஹ ம்ருண்மய விக்ரஹேஷு
பூஜா புநர்ஜநந போக்கரீ மமுக்ஷோ தஸ்மாத் யதிஹி ஸ்வஹீரு
தர்ஸநமேவ கூர்யாத் பாஹ்யார்ச்சநம் ப்ரஹரோத புநர்ப்பவாய:

என்னும் மைத்ரேயோ பநிஷத் வாக்கிய ரீதியாய் பொன் செம்பு முதலாகிய லோகங்களினாலும் மரகதம் மாணிக்கம் முதலாகிய ரத்தினங்களினாலும் பாஷாணம் (கல்) மரம் மண் முதலானவைகளினாலும் செய்த விக்கிரகங்களை மிகவும் சிரத்தை பக்தியுடன் பூஜித்து வந்தால் இந்தப் பூஜைகளின் பலன்களை அனுபவிப்பதற்காக மறுஜன்மமுண்டாகும்; ஞானம் அடையும் வரையில் பிரம்ம சூத்திரமாகிய ஹம்ஸ ஸூத்திரத்தை அதாவது, 'ஸோஹம்' மந்திரத்தை ஜபம் செய்து வரவேண்டும். ஞானமடைந்தபின் எதையும் ஜபம் செய்யாமல் சும்மாயிருக்கவேண்டும்.

## 110. ஆத்மாவானவர் மாயையால் கட்டுப்பட்டு, சம்பாரத்தை அனுபவிக்கிறார்

உலகத்தில் கர்ம காண்டம், ஞான காண்டமென்று இரண்டு காண்டகளுண்டு. கர்ம காண்டத்தினால் ஜன்மங்கள் அதிகரித்துக் கொண்டே வரும் ஞான காண்டத்தினால் மோக்ஷப் பிராயம் உண்டாகும். ஆதலால், எல்லோரும் ஞான காண்டத்தையே அனுஷ்டித்து வரவேண்டும் இதற்குச் சுருதி பிரமாணம்.

"ஹஸ்த்தம் ஹஸ்த்தேந ஸம்பூட்ய தநதைர் தந்தாந் விசூர்ண்யச
அங்காந் ந்யங்லக நிவாக்ரம்ய ஜயோதாதெள வைகம்ம ந"

என்னும் மஹோபநிஷத் வாக்யரீதியாய் ஹஸ்த்தம் ஹஸ்த்தேந-கர்ம காண்டத்தை ஞான காண்டத்தினால் கண்டித்து தந்தைர் தந்தாந் விசூர்ணயா – சல்கல்ப மென்னும் என்றால், எண்ணங்களென்னும் பற்களை, ஞானமென்னும் பற்களால பொடி செய்து அங்காந் யங்கை; யோகாஷ்ட்டாங் கங்களை ஞானஷ்ட்டாங்கங்களினால் கண்டித்து, மனதை ஆத்மாவில் லயிக்கும்படி அப்பியசித்தால் மனோஜய முண்டாகும்.

"மநஸோ ஹ்யுந்மநீ பாவே த்தைதம் நைவோபலப்யதே
யதா யா த்யுந்நீ பாவம் ததா தத் பரவம்பகம."

(பயிங்கோலோபநிஷத்)

இந்த மனமே மஹா மாயையென்று சொல்லப்படும். இதனாலேயே நீ, நான், என்னும் துவைதபேதங்கள் உண்டாகின்றன. இந்த மனதே நித்தியமுத்த பரப்பிரம்மமென்றறியாமல் தேகமேதானென்னும் பிரமையை உண்டாக்கும்.

இந்த மனதே புத்தி சித்த அஹங்காரங்களாகவும், காமக் குரோதாதிகளாகவும் இருந்து, என் மனைவி என் குமாரர்கள், என் குமாரத்திகள், என் பொருள்கள், என் வீடு, என் தோட்டம், என் துரவுகள் என்று தனதல்லாத வேறு வஸ்துக் களையெல்லாம் தனதாய் நினைத்து, அநேக ஜன்மங்களாய் பலவிதத் துன்பங்களை அடைந்துகொண்டு வருகிறது. இம்மனதே சரீரமென்னும் விருக்ஷத்திற்கு, மூலகாரணமா யிருக்கிறது. இந்தச் சரீரமென்னும் விருக்ஷத்திற்கு. மேற்சொல்லிய அசாபாசங்களும் காமக்குரோதிகளும் அநேக ஜன்மங்களாய்த் தழைத்துப் படர்ந்துகொண்டே வருவதை வெட்ட வெட்ட, அவைகள் யாவும் மறுபடியும் துளிர்த்துக் கொழுந்து இலைகளுமாய். மறுபடியும் படர்ந்து வருகின்றன. இவைகளையெல்லாம் வேருடன் களைந்து, நல்வினை தீவினையென்னும் புண்ணிய பாவங்களையெல்லாம் எரித்து அஞ்ஞானமென்னும் பாறையைச் சிறிதேனும் இராதபடி சுழுமுனையென்னும் உளியால் செதுக்கி இடைகலை பிங்கலையென்னும் வாசியால் (மூச்சினால்) கட்டி துடுக்குத் தனமாயிருக்கும் கண்கள் மூக்கு வாய் செவிகள் தேக சர்மம் என்னும் இந்த ஐந்து துஷ்ட இந்திரியங்களையும் வைராக் கியத்தினால் வென்று மேற்சொல்லியவைகளையெல்லாம் அன்னமய கோசமென்னும் பள்ளத்தில் தள்ளி 'ஸோஹம்' என்னும் மந்திரஜப அக்கினியினால் சாம்பலாய் எரித்து சமாதி நிஷ்டை செய்யவேண்டும். மனத்தின் வடிவமே சங்கற்பமாகும் சங்கற்பம் என்பதும் மனதும் இவ்விரண்டும் ஒன்றேயாம். அநர்த்தம் மோகம் மலம்பந்தம் அவித்தை (அஞ்ஞானம்) மாயை முதலான பெயர்களெல்லாம் சங்கற்பத்திற்குத் தக்க பெயர்களேயாம். சங்கல்பமென்றால், நினைக்கும் நினைப்புகள், இச்சங்கற்பம், நசிந்தால் காணப்படும் வஸ்துவும் மனதும் நாசமாகும். இதற்கு ஞான வாசிட்டமும், தேவிகாலோத்திரமும் பிரமாணம்.

மனத்தின் வடிவு சங்கற்ப மற்றில் விரண்டு மொன்றாகு
மநரத்த மோக மலம்பந்த மவித்தை மாயை தமமுதலா
மினத்த பெயர் சங்கற்பத்துக் கேற்ற பெயராமி துநமூவிற்
கனத்த சகக்காட்சியும் போகுங் கதிர் விட்டெரிக்கும் பரவடிவம்.

ஆகத்தே யாங்கார வடிவ தாகி
யிருவினைசெய் ககங்கார மாகு மாய
மோகத்தைத் துறக்கின் மொழியிற் படாத
முத்திதல மினிதளிக்கு மொழிந்த தன்றிச்
சோகத்தைத் தருமுடலை யெல்லாம் விட்டுச்
சேராத வறிவாகிச் சத்த ரூபம்
ஆகத்தான் பாவித்தற் சக்தி யெல்லாம்
மறவிடுகை பரமார்த்த மறிவார் தாமே.

இப்படிப்பட்ட சண்டாள மனம் நித்திரையில மாத்திரம் சற்று நேரம் சும்மாயிருக்கும். எப்படியென்றால்,

"ஸுஷுப்தௌ ஸுகமாத்ராயாம் பேதஹ கேநாவ லோகிதஹ
சித்தமூலோ விகல்போயம் பாவேந கஸ்ச்சந
அதஸ்சித்தம் ஸமாதேஹி ப்ரயக்ரூபே பராத்மநி" (அத்யாத்)

இந்த மனம் நித்திரையில் அடங்கியிருப்பதால் பிரபஞ்சமும், பிரபஞ்சத்தில் அடங்கிய விஷய போகங் களும் தோன்றுவதில்லை. நித்திரையை விட்டு எழுந்த வுடன் மறுபடியும் மனம் தோன்றுவதனால் பிரபஞ்ச வியவகாரங்கள் உண்டாகின்றன. இப்படிப்பட்ட சண்டாள மனத்தை பிரம்ம நிஷ்ட்டையில் லயிக்கச் செய்தால் துவைத பிராந்தி நசிந்து என்றால் (சங்கல்ப விகல்பமற்று) பிரபஞ்சம் தோன்றாமல் சர்வம் தானான பிரம்ம சாக்ஷாத்காரம் உண்டாகும்.

சுவாமி! மனம் நித்திரையில் அடங்கிப் பிரபஞ்சம் தோன்றாமலிருக்க மறுபடியும் பிரம்ம நிஷ்ட்டையில் மனம் அடங்கும்படி ஏன் அப்பியாசம் செய்ய வேண்டும்?

குழந்தாய்! நீ கேட்ட கேள்வி மிகவும் உத்தமமான தாகவே இருக்கிறது.

ஸுஷுப்தீ ஸமாத்யோர் மநோலய விஸேஷேபி மஹதஸ் த்யுபயோர்பேதஹ தமஸி லீனத்வாத் முக்தி ஹேது த்வாயா வாஸ்ச்ச ஸமாதௌ மருதித தமேநவி காரஸ்ய ததாகாராகாரித அகண்டாகார வ்ருத்யா தமக ஸாக்ஷீசை தந்யே ப்ரபஞ்சலய ஸம்பத்யதே.''

(மண்டல ப்ராஹமணோபநிஷத்)

மனம் நித்திரையில் அஞ்ஞானமென்னும் அந்த காரத்தில் (இருளில்) லயித்திருப்பதால், ஈர பூமியில் வீழ்ந்த விதை பூமியில் அடங்கி மறுபடியும் முளையெடுப்பது போல் ஜாக்கிரதாவஸ்தையில் மறுபடியும் மனம் தோன்றிக் கொண்டிருக்கும். மேலும் நித்திரையில் மனதுடன் கூட ஜீவனும் அஞ்ஞானத்தில் அடங்கி இருப்பதனால்தானே பிரம்மமென்று தெரியாமல் தன்னை மறந்து இருளடைந்த பாழுங்கிணற்றில் வீழ்ந்திருக்கும். அதனால் ஜீவன், முக்தி அடையமாட்டாது பிரம்ம நிஷ்டையில் மனம் ஞானாக்நியிலயிக்கபட்டிருப்பதனால் அக்நியில் விழுந்த விதை மறுபடியும் முளையெடுக்காமல் நசிப்பதுபோல் அந்த மனம் நசிந்துவிடும். என்றால் கணக்கற்ற பிறவிகளைத் தருவதற்குக் காரணமாயிருக்கின்ற புண்ணிய பாவமென்னும் இருவினைகளையே சஞ்சிதமென்று சொல்லப்படும். இவ்விருவினைகளையும் வறுத்த விதைபோல் செய்ய ஆசாரியரது திருவருள் வேண்டும். ஆதலால், இந்நூலில் உபதேசமாய்ச் சொல்லியிருக்கும் உபதேசங்களே ஆசாரியரது திருவாக்காய் நம்பி ஜபம் செய்து வரப்பட்டவர்களின் இருவினைகளும் அதாவது புண்ய பாவங்கள் இரண்டும் சாம்பலாய் எரிந்து சரீரமிருக்கும் வரையில் பிராரப்த கர்மங்களை அனுபவிக்க வேண்டும் பிராரப்தம் அனுபவிக்

கும் நாளில்தான் செய்துவந்த ஆகாம்ய வினைகள் யாவும் ஒளியினால் இருள் நீங்குவதுபோல், ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கும் இதற்குச் சிவப்பிரகாசம் பிரமாணம்.

'எல்லையில் பிறவி நல்க மிருவினை யெரிசேர் வித்தின்
ஒல்லையி னகலு மென்ற வுடற்பழவினைக ளூட்டுத்
தொல்லையின் வருதல் போலத் தோன்றிரு வினையதுண்டேல்
அல்லொளி புரையு ஞானத் தழலுற வழிந்து போமே.

பிரம்ம நிஷ்ட்டையிலிருக்கும் ஞானிகளக்குத்தான் ஜீவனென்னும் துவைதபிராந்தி நசித்து பிரபஞ்சம் தோன்றாமல்தான் கேவலக்ஷாக்ஷிமாத்ர சுயம்பிரகாச பரப்பிரம்மமாயிருப்பார்கள். இதுவே நினைவில், சும்ஷுப்தி என்று சொல்லப்படும். ஆதலால், நித்திரை செய்பவனுக்கும் பிரம்மநிஷ்டையில் இருப்பவர்களுக்கும் விசேஷ பேதமுண்டு. பிரம்ம நிஷ்டையில் இருப்பவர்களுக்கு மரண காலத்தில் மிருத்தியு (மரணம்) உண்டாக மாட்டா பிரம்ம நிஷ்ட்டையை மறந்தவர்களுக்கே மரணமுண்டாகும்.



## 111. லக்ஷாதிபதி குதிரையாய்ப் போய்ப் பிறப்பது

மரண காலத்தில், எவனெவன் எதையெதை நினைத்துப் பிராணனை விடுகிறானோ, அவனவனுக்கு அந்தந்த ஜன்மங்கள் உண்டாகின்றன.

ஒரு லட்சாதிபதி மரண கால சமீபத்தில் குதிரையின் மீது விசேஷ ஆசை வைத்து, வாங்கி அதன்மீது அதிக பிரீதி வைத்துக் காப்பாற்றிக் கொண்டு வந்தான். இவனுக்கோ பிராண பிரயாண காலம் (மரண காலம்) சமீபத்தது. பிராணன் போழும்பொழுது ஒவ்வொருவருக்கும் சித்ர குப்தயென்னும் படம் ஒன்று அவர்களின் கண்களுக்கெதிரில் காணப்படும். சித்ரகுப்த (சித்ரம் படம் குப்தரஹஸ்யம்) அதாவது, ரஹசிய மான படம் காணப்படும். உலகத்திலுள்ள ஜனங்கள் இதையறியாமல் சித்திரா புத்திரன் என்று வழக்கச் சொல்லாய்ச் சொல்லுவார்கள்; அவனவன் செய்துவரும் புண்ணிய பாவங்களையெல்லாம் வேறோர் சித்ராபுத்திரன் இருந்து பார்த்துக் கணக்கு எழுதுவதல்ல பின் எப்படி யென்றால் அவனவன் இருதய கமலத்தில் சாக்ஷி சொரூபமாய் அமர்ந்திருக்கும் ஆத்மா ஜநந காலம் முதல், மரண கால பரியந்தம் அவனவன் செய்துவரும் புண்ணி பாவங்களை யெல்லாம் பார்த்திருந்து அவனவன் புண்ணிய பாவங்களுக் குத் தக்கபடி எவனெவனை எந்தெந்த ஜாதியில் யார் யார் வீட்டில் ஜன்மிக்கச் செய்ய வேண்டுமோ அவனவனை அந்தந்த ஜாதி வீட்டில் ஜன்மிக்கச் செய்கிறான்; மனம் கோரிய விஷயங் களையெல்லாம் ஆத்மா அறிகின்றது. ஆதலால், மரண காலத்தில்அவன்கோரிய விஷயங்களையெல்லாம்மேற்சொல்லிய

சித்ரகுப்த படத்தில் ஆத்மாவானவர் காட்டுவதனால், அந்த ஆத்மா விற்குச் சித்ரகுப்த னென்று பெயர் வந்தது.

''பயாஸ்கோப்பில் (Bioscope) படங்கள் எப்படிக் காட்டப்பட்டு, ஒன்றன்பின் ஒன்றாய் துரிதத்துடன் போகின்றனவோ அதுபோல் மரணமடையப்பட்டவன் எந்தெந்த எண்ணங்களை எண்ணியிருந்தானோ, அவை களையெல்லாம் அந்தச் சித்ரகுப்த படத்தில் காட்டிக் கொண்டே சென்று இவன் எந்த வஸ்துவின்மீது அதிக பிரீதியை வைத்திருந்தானோ அவ்வஸ்துவைக் கடைசியில் அந்தச் சித்ரகுப்த படத்தில் ஆத்மாவானது கொண்டுவந்து நிறுத்திவிடும்; அவன் நினைத்திருந்த வஸ்து அவன்முன் வந்து நின்றிருப்பதால் அவன் மனம் அவ்வஸ்துவில் ஆழ்ந்து நிற்கும். அந்தச் சமயத்தில் அவனது பந்து ஜனங் களெல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டு நான் யார் அவர் யார், அவன் யார் எனக்கென்ன சொல்லுகிறாய்? இவளுக் கென்ன சொல்லுகிறாய்? அவனுக்கென்ன சொல்லுகிறாய்? என்று சிலரும், மற்றும் சிலர் நாராயணாவென்று சொல்! கோவிந்தாவென்று சொல் ராமாவென்று சொல்; கிருஷ்ணா வென்று சொல் என்று இவ்வாறு அனேகர்கள் அனேக விதங்களாய்ச் சொல்லி, அவனுக்குத் தொந்தரவைக் கொடுத்துக் கொண்டிருப்பார்கள். ஆனால், அவர்கள் சொல்லும் விஷயம் எதுவும் அவனுக்குக் கேட்கமாட்டா. ஏனென்றால், மனம் கண் என்னும் இந்திரியத்துடன் சேர்ந்து பார்க்குந்தொழில் பிரவேசித்திருப்பதனால் செவி (காது) என்னும் இந்திரியம் யாதொன்றும் கிரகிக்க மாட்டா ஒரு சொல்லைக் கேட்க வேண்டுமானால், மனம், செவி செவி இந்திரியம் இம்மூன்றும் ஒன்றாய்ச் சேர்ந்தால் மாத்திரம் விஷயங்களைக் கிரகிக்குமே யொழிய, இம்மூன்றும் ஒன்றாய்ச் சேராவிட்டால் விஷயங் களைக் கிரகிக்க மாட்டா. இப்படிப்பட்டவனுக்கு நூறு

செவிகள் இருந்த போதிலும் பிரயோஜனப்படமாட்டா. செவி இந்திரியத்துடன் கூட மனம் சேர்ந்தால்தான் பேசும் விஷயங்களைக் கிரகிக்கும். ஆதலால், பிராண பிரயாண காலத்தில் (மரண காலத்தில்) இருக்கப்பட்டவர்களுக்கு எது சொல்லியபோதிலும், அவர்களுக்குக் கேட்கவே மாட்டா. ஒருவன் மனம் சம்சார விஷயத்திலேயே அதிகமாய் உழன்று வந்தால் அவன் மரண காலத்தில் மேற்சொல்லிய 'சித்ரகுப்த' மடத்தில் அந்த சம்சார ஞாபகமே வந்து நிற்கும். சம்சார ஆசையைவிட்டு ஸதாகாலமும் ஈஸ்வரத் தியானத்தில் இருப்பானேயாகில், அவனுக்கு அந்த ஈஸ்வர ஞாபமே மரண காலத்தில் உண்டாகும், அதனால் மறுஜன்மத்தில் மேல்படியில் ஆத்மாவானவர் கொண்டுபோய் விடுவார்.

அர்ஜுநன் : சுவாமி! பிராண பிரயாண காலத்தில் கிருஷ்ணாவென்று நினைத்தால் அடுத்த ஜன்மத்தில் நல்ல கதியை அடைவானென்று சொன்னீரல்லவா? அதுபோல் என் பிராண பிரயாண காலத்தில் கிருஷ்ணாவென்று நினைக்கிறேன் என்று அர்ஜுநன் சொல்லினர். அதற்குக் கிருஷ்ண பகவான் சொல்லுகிறார்.

கிருஷ்ணன் : "ஓஹோ! நீ அப்படியா நினைக்கின்றாய்! அப்படி நினைக்கவேண்டாம். நீ இப்பொழுது எதன்மேல் அதிக ஆசையும் பிரீதியும் ஞாபகமும் வைத்திருக்கின்றாயோ, அந்த ஞாபகமே உன் மரண கால சமீபத்தில் வருமேயொழிய என் ஞாபகமே உண்டாகமாட்டாது. கிருஷ்ணாவென்று சொல்லுகிறேனென்று இப்பொழுது நீ சொன்ன வார்த்தை பேச்சு முறைக்குச் சொன்ன வார்த்தையேயொழிய உன் மரண கால சமயத்தில் என் ஞாபகம் உனக்கு எள் மூக்கின் முனையவ் வளவேனும் உண்டாகவே மாட்டாது. இதற்காக என்ன செய்ய வேண்டுமென்றால், இன்று முதல் உன் மரண கால

பரியந்தம் நீ வேலை செய்யும் சமயம் தவிர, மற்றக் காலங்களிலெல்லாம் ''கிருஷ்ணா கிருஷ்ணா'' வென்று நினைத்துக் கொண்டே இருக்கவேண்டும். அப்படி நினைத்துக் கொண்டே இருப்பாயாகில் உன் மரண காலத்தில் உன்னை நீ மறந்து பிரஞ்ஞை தப்பியிருப்பாய். அச்சமயம் நான் உனக்குள் அந்தர்யாமியாயும், சாக்ஷிசொரு பனாயும் இருப்பதனால்.

ஐயோ பாவம்! இவன் இத்தனை வருஷங்களாய் என் நாமஸ்மரனை செய்துவந்து இப்பொழுது பிரஞ்ஞை தப்பி விட்டான். ஆதலால் இவனுக்கு என் நாமஸ்மரணை உண்டாக்க வேண்டுமென்றெண்ணி, என்னை நினைக்கும்படி உன் மனத்திற்குச் சாவியைக் கொடுத்துத் திருப்பி விடுவேன். அப்பொழுது நீ என்னை நினைத்துக்கொண்டே பிராணனை விட்டுவிடுவாய் அப்படிப் பிராணனை விட்டு விடுவதனால் நீ நல்ல பதவியை அடைவாய் என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லினர்.

இப்பொழுது சம்சார விஷயங்களைப் பார்த்துக் கொண் டிருந்து மரண காலத்தில் ஈஸ்வரத் தியானம் செய்யலா மென்று நீங்கள் நினைக்கவேண்டாம். ஏனென்றால், இப்பொழுது மனம் எந்த விஷயத்தில் விசேஷமாய் பற்றுகின்றதோ அந்த விஷயம் மாத்திரம் மரணகாலத்தில் ஞாபகத்திற்கு வருமே யொழிய ஈஸ்வரத் தியானம் ஞாபகத்திற்கு வரமாட்டாது. ஆதலால், இதில் சொல்லியிருக்கும் ராஜயோக ரகஸ்யத் தைத் தெரிந்து கொண்டு மரணகால பரியந்தம் யார் ஒருவர் சிவராஜயோக சமாதியில் சொல்லியிருக்கும். 'ஸோஹம்' மந்திரத்தை ஜபம் செய்து வருகிறார்களோ அவர்கள் தப்பாமல் நற்கதியை அடைவார்கள் என்று அறியக் கடவீர்களாக.



இந்த உபதேசம் இதுவரையில் நிறுத்தி, இனிக் குதிரை வாங்கிய லக்ஷாதிபதி எவ்விதமானானோ, அவனைக் குறித்துச் சொல்லுகிறோம் கேளுங்கள்.

மேற்சொல்லிய லக்ஷாதிபதி குதிரையின்மீது அதிக பிரீதி வைத்திருந்தபடியால் கடைசியில் அவனுடைய குதிரை ரூபம் முன்சொல்லிய சித்ரகுப்த படத்தில் காணப் படும். அப்பொழுது அந்தக் குதிரையைத் தன் எதிரிலிருக்கும் சித்ரகுப்த படத்தில் பார்த்து, ''உன்னை வாங்கி அதிக நாள் சவாரி செய்யாமல் உன்னை விட்டு மரணமடைகிறேனே'' என்று மனதில் நினைத்து அக்குதிரையைப் பார்த்துக் கொண்டே அவன் பிராணனை விடுகிறான். குதிரையைப் பார்த்துக்கொண்டே ஜீவனை விடும்பொழுது தோன்றும் சித்ரகுப்த படம் இதோ காட்டப்பட்டிருக்கின்றது பாருங்கள்.

அன்றியும் மேற்படி லக்ஷாதிபதி பிராணனை விடும் பொழுது, மனைவியார் அவன் கால்மாட்டில் உட்கார்ந்து மிகவும் துக்கத்துடனிருக்கும் குறியை ஷை படத்தில்

கவனியுங்கள் ஒவ்வொருவருக்கும் பிராணனை விடும்பொழுது அவர்களின் கண்களுக்கு நேராய் ஷை சித்ரகுப்த படம் வந்து நிற்கும் இவ்வாறு நின்றபிறகு இறக்கப்பட்டவனுடைய மனம் ஷை படத்தைப் பார்க்கும் . அச்சமயத்தில் தனக்குள் ஆத்ம சொரூபனாயும் சாக்ஷிமாத்திரனாயும் இருக்கப்பட்ட பரப்பிரம்மத்தின் அம்சமாகிய ஆத்மா, அந்த ஜீவன், பால்யத் திலிருந்து மரணமடையும் வரையில் எந்தெந்த வஸ்துக் களின்மீது அதிக ஆவல் கொண்டிருந்ததோ அவைகளை யெல்லாம் ஷை படத்தில், பயாஸ் கோப்பில் படங்கள் எவ்விதமாய் ஒன்றன்பின் ஒன்றாய் காட்டிக்கொண்டே போகிறதோ அதுபோல் அவன் எதிரிலிருக்கும் படத்தில் ஒவ்வொன்றாய் காட்டிக் கொண்டேவந்து, பிறகு அவன் கர்மத்திற்குத் தக்கபடி எந்தச் சரீரம் எடுக்கவேண்டுமோ அதன்மேல் அவனுக்கு அதிகப் பிரீதியை உண்டாக்கி அதை நினைக்கும்படிச் செய்வித்து அந்த ரூபத்தை ஷை சித்திரகுப்த படத்தில் ஆத்மா கொண்டுவந்து நிறுத்தி அவனைப் பார்க்கும்படி செய்து அவன் பிராணனை (உயிரை) விடும்படிச் செய்கிறான். இவ்விதமாய் அவன் பிராணனை விடுவித்து மறுபடியும் அவன் இனி எடுக்கப் போகும் ஜன்மத்திலும் ஆத்மாவாகிய தான் சாக்ஷிபூதனா யிருக்க அதன் பிராணனுடன் கூடவே சேர்ந்து மற்றொரு தாய் கர்ப்பத்தில் ஆத்மாவும் போய்ச் சேரும். இந்த ஜீவன் மோக்ஷமடையும் வரையில் ஷை ஆத்மா அவனுக்குச் சாக்ஷிமாத்திரனாய் இருப்பதற்காக அவன் ஜீவனுடன் கூடவே அந்தந்தச் சரீரங்களில் சென்று கொண்டேயிருக்கும். இச்ஜீவன் எத்தனை கோடி ஜன்மங் களெடுத்தும் இனி எப்பொழுது மோக்ஷமடைய போவது என்பதும், அந்தந்த ஜீவர்களில் இருக்கும் ஆத்மாவிற்கு ஸ்பஷ்டமாய்த் தெரியவரும். பிராணனை விடப்பட்ட ஜீவர்களின் ரகஸ்யார்த்தம் இதுவேயாம். இது முக்கியமாய்த் தெரிந்து

கொள்ள வேண்டிய விஷயமாதலால் இதை இதற்கு முன்னும் சொன்னோம். மறுபடியும் இவ்விடமும் சொல்லு கிறோம் ஜீவன் பார்த்துக் கொண்டிருந்தவைகளையெல்லாம் யார் பார்த்துக் கொண்டிருந்தார்களென்றால்,

"எகோதேவஸ் ஸர்வபூதேஜுகூட ஸர்வவ்யாபீ ஸர்வ பூதஏந்தராத்மா கர்மாத்க்ஷஸ் ஸர்வபூதாதி வாஸஸ்ஸா க்ஷீ சேதா கேவலோ நிர்குணஸச்ச

(ஸ்வேதாஸ்வதரோபநிஷத்)

ஒரு முத்துச்சரத்திலிருக்கப்பட்ட ஒவ்வொரு முத்திலும் ஒரே நூலானது வியாபித்திருப்பதுபோல் பரப்பிரம்மமாகிய ஆத்மா சகல ஜீவஜந்துக்களிலும் சாக்ஷி சொரூபமாய் வியாபித்து, அந்தந்த ஜீவர்கள் செய்யப்பட்ட காரியங்களுக்கெல்லாம் சாக்ஷியாய் இருக்கின்றான்.

இப்படிச் சாக்ஷி சொரூபமாயிருக்கும் ஆத்மா. அவனவன் செய்துவரும் காரியங்களையெல்லாம் தினந்தோறும் பார்த்துக் கொண்டிருந்து முன்சொல்லிய லக்ஷாதிபதி புண்ணியம் செய்திருந்தால் அவனை ஆஸ்த்ரேலியா தேசத்திலுள்ள குதிரையின் கர்ப்பத்தில் பிரவேசிக்கச் செய்கிறான்; அல்லது பாவம் செய்திருந்தால் ஜட்கா வண்டிகளின் குதிரைக் கர்ப்பத்தில் பிரவேசிக்கச் செய்கிறான். ஆஸ்த்ரேலியா தேசக் குதிரைகள் மிகவும் விலையுள்ளவைகள் அவற்றைப் பெறுத்த உத்தியோகஸ்தர்கள் மாத்திரம் வாங்கி பிரதிதினம் 5 அல்லது 6 மைல் தூரம் சவாரி செய்து மிகவும் சுகமாய் வைத்திருப்பார்கள். பாவம் செய்த ஜட்கா வண்டி குதிரை களைக் காலை 6-மணி முதல் பகல் இரண்டு மணி வரையில் வண்டியில் கட்டி நன்றாய் அடித்தடித்துச் சவாரி செய்து செய்து கொல்லுகிறார்கள். புருஷன் எதையெதை நினைத்துச் சீவனை விடுகிறானோ அந்தந்த ரூபத்தை அவன் மறு ஜன்மத்தில் தப்பாமல் அடைகிறான். இதற்கு 28 சைவாகமங்

களின் சாராங்ஹங்களை எல்லாம் திரட்டி எடுத்துப் பார்வதி தேவிக்கு பரமேஸ்வரனால் உபதேசிக்கப்பட்ட தேவிகா லோத்திரமும் வேதாந்த சாரமாயுள்ள கைவல்யமும் இவ் விரண்டிலுள்ள பிரமாணங்களை இதனடியில் சொல்லு கின்றோம்.

எந்த வாருயிர யாதோர் பொருளினைச்
சிந்தையாற் பற்றிக் காரியஞ் செய்திடின்
அந்த யோனிய தாமென் றறிவினால்
பந்தமில் பொருள் பற்றுத றக்கதே.

ஸ்திரீ புருஷர்கள் உயிரை விடும்பொழுது எதை நினைத்துக் கொண்டே உயிரை விடுகின்றார்களோ அதை அனுபவிப்பதற்காக மறுபடியும் மற்றொரு யோனியில் போய்ப் பிறக்கின்றார்கள்.

சடமதாகிய தியான மெய்யாகிய
சர்வ முத்தியை நல்கும்
திடமதான தெப்படியெனி லவரவர்
தியானமே பிறப் பாகும்
உடல மாசையாற் றியானிக்கிற்
றியானித்த வுடலகளா குவர் மைந்தா
தொடர்பவங் கெடச் சொரூபமே
தியானிக்கிற் சொரூப மாகுவர் மெய்யே.

என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அதாவது பொய்யாகிய நினைப்பானது. சத்தியமாகிய பரிபூர்ண கைவல்யத்தைக் கொடுக்கமாட்டாது. அவரவர் மரண காலத்தில் நினைக்கும் ரூபமாகவே மறுஜநந முண்டாகும். ஆதலால் மரண காலத்தில் தேக இச்சையினால் நினைத்த நினைப்பு வடிவமாவார்கள். அனேக கோடான கோடி ஜன்மங்களாய் வரும் ஜனனம் மறுபடியும் வராமலிருக்க ஆத்ம சொரூபத்தை

எப்பொழுதும் நினைத்துக் கொண்டே இருந்தால் அந்த ஆத்ம சொரூபத்திலேயே போய் ஐக்கியமாவார்கள்.

ஜனங்கள் ஒவ்வொருவரும் பிராணனைவிடும் பொழுது அவர்களின் எதிரிலிருக்கும் சித்ரகுப்த படத்தில் தோன்றும் ரூபங்களைப் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது அவன் பந்து ஜனங்களும் மற்றவர்களும் அவன் பார்க்கும் பார்வையைப் பார்த்து என்ன சொல்லுவார்களென்றால் எதிரில் யமன் வந்து நிற்பதனால் அவனைப் பார்த்து மருண்டு விழிக்கின்றான். அதனால் நமது ஸரமணையுமில்லை நாம் சொல்வது கேட்பதுமில்லையென்று ஒருவரோடொருவர் பேசி இனி அவன் சாகப் போகிறானென்று தீர்மானித்து விடுவார்கள். இப்படிப்பட்ட சமயத்தில் மனம் கண் இந்திரி யத்துடன் சேர்ந்து பார்க்கும் தொழிலில் இருப்பதனால், அக்காலத்தில் செவியென்னும் இந்திரியங்கள் எந்த வார்த்தையும், கிரகிக்க மாட்டா. சாகப்பட்டவர்களின் எதிரில் யமன் வந்து நிற்கின்றான் என்னும் பிரமையை இனியாகிலும் விட்டுவிடுங்கள். இவையெல்லாம் எவர்களுக்கும் தெரியாத தேவ ரகஸ்யம்.

மேற்சொல்லியவன் லக்ஷாதிபதியாயிருந்தும் குதிரை யின் ஜன்மம் ஏன் அடையவேண்டுமென்று கேட்கின்றீர் களா என்ன? அதற்குக் காரணம் சொல்லுகின்றோம் கேளுங்கள். இவன் பூர்வ ஜன்மத்தில் செய்த புண்ணியத்தி னால், அந்தப் புண்ணிய பலனை அனுபவிப்பதற்காக இப்பொழுது லக்ஷாதிபதி வீட்டில் ஜன்மித்து, புண்ணிய பலன் எவ்வளவு அனுபவிக்கவேண்டுமோ, அவ்வளவும் அனுபவித்து முடிந்தவுடன் மரணமடைகிறான். அதுபோல் பாவங்களையும் அவன் அனுபவிக்க வேண்டியவனாயிருப் பதனால் ''பித்தி கர்மா நுஸாரணி'' என்பதுபோல் எந்தக்

கர்மத்தை அவன் அனுபவிக்க வேண்டியவனாயிருக் கின்றானோ, அந்தக் கர்மத்திற்குத் தகுந்த புத்தி, மரண காலத்தில் அவனுக்கு உண்டாகும். ஆதலால், முன் சொல்லிய லக்ஷாதிபதி புண்ணிய பலனை அடைந்ததுபோல், அவன் செய்த பாவ பலனையும் அடைய வேண்டியவனா யிருப்பதனால், எந்த ஜன்மத்தை அவன் அடைய வேண்டுமோ, அதற்குத் தகுந்த புத்தி மரணகாலத்தில் அவனுக்கு உண்டாகிறது.

ஒரு பெரிய குடும்பத்தில் அனேகர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் மாத்திரமே. ஆத்மாநாத்ம விவேக முடைய யோகியாய் இருந்தான். மற்றவர்களெல்லோரும் ஆத்மாநாத்ம விவேக சூன்யங்களாய் கேவல விஷய சுகபோகங்களில் ஆசையுடையவர்களாய் இருந்தார்கள். அவர்களின் விஷயங்களையெல்லாம் கீழே சொல்லு கிறோம் கவனியுங்கள்.

ஆத்மாநாத்ம விவேக சூன்யர்கள் ஒரு சமயத்தில் தித்திப்பு பலகாரங்களையும், பழ வர்க்கங்களையும் புசித்து சந்தோஷப் படுவார்கள். மற்றொரு சமயத்தில் ஸ்திரீ சந்தன புஷ்ப தாம்பூலாதி போகங்களை அனுபவிப்பார்கள். இன்னொரு சமயத்தில் சிலர் ஸ்பேட்டுகளும் சிலர் சதுரங் கமும் சிலர் சொக்கட்டான்களும், சிலர் தாயமும் ஆடிக் கொண்டு பொழுதைப் போக்குவார்கள். மற்றொரு சமயத் தில் சங்கீத ராகங்களைக் கேட்டுச் சந்தோஷப்படுவார்கள். சில நாட்களில் தாசி கச்சேரிகளை வைத்து சந்தோஷப் படுவார்கள். ஒரு சமயத்தில் சிலர் மதுபானங்களைச் சாப்பிட்டுச் சொக்கிச் சாய்ந்து ஆடுவார்கள். சிலர் பரஸ்திரீகளைச் சேர்ந்து அவளிடமிருக்கும் பொருளைக் கைப்பற்றிக் காலம் கழித்து வருவார்கள். இதுபோல்,

அவரவர்களின் இஷ்டானுசாரமாய் மிகவும் அல்பமான விஷய போகங்களில் ஆசையுடையவர்களாயிருப்பார்கள். மேற்சொல்லிய யோகியானவன் எந்த விஷயானந்தங்களில் அகப்படாமலும் மேற்சொல்லியவர்களுடன் சேராமலும் தனக்கு வேண்டிய ஆஹாரங்களை மாத்திரம் புசித்து ஏகாந்த ஸ்தலத்திலிருந்து ஆத்மாநுபவ நிஷ்டையிலேயே இருப்பான். இந்த யோகி மற்றவர்களைப் பார்த்து தனக்குள் தான் கீழே சொல்லுமாறு ஆலோசிக்கிறான். ''இவர்கள் இப்பிரபஞ்சம் வித்தை என்று அறியாமல் துச்ச போகங்க்ளையெல்லாம் சாஸ்வதமாய் இருக்கப்பட்டதென்று எண்ணி, பகவத் பக்தி என்பது சிறிதேனும் இராமல் எப்பொழுதும் துஷ்ட காரியங் களையே செய்து அஞ்ஞானமென்னும் இருளில் மூழ்கி பாரமார்த்திக விஷயத்தில் கொஞ்சமேனும் ஜாக்கிரதை இல்லாமல் தூங்குகிறவர்களைப் போல் இருக்கின்றார்கள் என்று நினைக்கின்றான்.

அப்படி நினைப்பதனால் இவன் ஒருவனே பாரமார்த் திக விஷயத்தில் விழித்துக்கொண்டு என்றால்தான் ஜாக்கிர தையுடன் இருப்பதாய் எண்ணுகிறான். மேற்சொல்லிய ஆத்மாநாத்ம விவேக சூன்யர்களெல்லோரும் இந்த யோகி விஷயத்தைக் குறித்து எவ்வாறு நினைக்கிறார்களென் றால், நாமெல்லோரும் இப்படிப்பட்ட அனேக விதங் களாகிய போகங்களை அனுபவித்துக் கொண்டிருக்க, இவன் மாத்திரம் நம்முடன் சேராமல் பிரத்தியேகமாயிருந்து நாம் பார்க்கும் போதெல்லாம் மௌனமாகவே இருக்கிறான் அன்றியும் இவன் நபும்ஸகனாக இருப்பான். அதனால் ஸ்திரீகளைப் பார்ப்பதில்லையென்று சிலர் சொல்லுவார்கள். சந்தன புஷ்ப தாம்பூலாதிகளில் இச்சை இல்லாமலிருப் பதனால் இவன் மட்டியாயிருக்கின்றானென்று சிலர்

சொல்லுவார்கள். ஆசையுடைய பதார்த்தங்களில் இச்சை இல்லாதவனாயிருப்பதால் இவன் மட்டியாயிருக்கின்றா னென்று சிலர் சொல்லுவார்கள். ஆசையுடைய பதார்த் தங்களில் இச்சை இல்லாதவனாயிருப்பதால் இவனுக்குச் சாணமும், வெல்லமும் ஒன்றே என்று சிலர் சொல்லு வார்கள்.. சங்கீத ருசிகளை அறியாதவனாயிருப்பதனால் செவிடன் காதில் சங்கு ஊதுவது போலவேயன்றிச் சிலர் சொல்லுவார்கள். இவ்விதமாய் அனேகர்கள் அனேக விதமாய் நினைத்து நாம் ஆனந்திப்பதுபோல் இவனும் ஆனந்திக்காமல் சர்வகால ஸாவாவஸ்தைகளிலும் மௌனத்துடனிருந்து தூங்கிக் கொண்டே இருக்கின்றா னென்று எண்ணிக் கொள்வார்கள். இவர்கள் இருவகுப்பினர் விஷயங்கள் நேர் விருத்தமாயிருக்கிறது. இதற்கோர் திருஷ்டாந்தம்.



## 112. ஜடபரதன் மானாய் போய்ப் பிறப்பது

பூர்வம் ருஷபனது புத்திரனான பரதன் புகஹாசிரமம் சென்று அவ்விடத்தில் தவம் செய்துகொண்டிருந்தான், ஒருநாள் பரதன் சக்ரதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து சென்ற போது அந்தச் சக்கரதீர்த்தத்தில் பூர்ண கர்ப்பத்துடனிருந்த ஒரு பெண் மான் ஜலம் குடித்துக் கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் சிங்கம் சத்தம் செய்து கர்ஜித்தது. அக்கர்ஜனை யைக் கேட்ட மானானது பயந்து துள்ளி எகிறி விழுந்தது. மான் விழுந்தவுடன் வயிற்றிலிருந்த குட்டி வெளிவந்தது. குட்டி வெளிவந்தவுடன் மான் உடனே இறந்துவிட்டது. அதைத் தன் ஆசிரமத்திற்குக் கொண்டுபோய் மிகவும் பிரீதியுடன் வளர்த்து வந்தான். இவ்வாறிருக்கும்பொழுது பரதனுக்குப் பிராண பிரயாணகாலம் சமீபித்துப் பிராணனை விடும்பொழுதும் மான் அவன் சமீபமாகவே படுத்து பரதனையே பார்த்துக் கொண்டிருந்தது. அப்பொழுது பரதன் மானை நினைத்துக்கொண்டே பிராணனை விட்டுவிட்டான். பரதன் மானைப் பார்த்துக் கொண்டே பிராணனை விடுவது அடுத்த பக்கத்தில் சித்ரகுப்த படத்தில் காட்டப்பட்டிருக்கிறது. இவ்வாறு பிராணனை விட்ட வுடன் பரதன் மான் ரூபத்தைத் தரித்தான். பரதன் மான் ரூபத்தைத் தரித்திருந்தபோதிலும் தன் பூர்வ ஜன்ம ஆத்மானுபவநிஷ்டை சாமர்த்தியத்தினால் அந்த ஆத்மானுபவ நிஷ்டையிலேயே இருந்து வந்தான் இவ்வாறு சிலகால மிருந்து பிறகு பரதன் அம்மான் சரீரத்தைவிட்டு அங்கிரஸ னென்னும் தபோ பிராமணனுக்குப் புத்திரனாய்ப் போய் பிறந்தான். இவ்விடம் பிறந்தபோதிலும் பூர்வ ஜன்மங்



களின் வாசனையாகிய ஆத்மானுபவ நிஷ்டையிலேயிருந்து ஸர்வ சங்க பரித் தியாகம் செய்து எந்தக் கார்யங்களையும் செய்ய இச்சையில்லாதவனாய் இருந்து எப்பொழுது தன்னில்தான் பிரம்மானந்த சுகத்தை அனுபவித்துக் கொண்டு பார்க்கப்பட்டவர்களுக்கு மாத்திரம் பயித்தியக் காரனைப் போல் காணப்பட்டு வந்தான். இவ்வாறு சில வருஷங்கள் சென்றபிறகு தன் தாயின் சக்களத்திப் பிள்ளை அவன் பிரபாவம் அறியாதவனாதலால், அவனால் கிருஹ கிருத்தியங்களும் வியவசாயங்களும் செய்வித்துக் கொண்டு மிகவும் சொற்பமான போஜனம் கொடுத்துக் கழனிக்குக் காவலாயிருக்கும்படிச் செய்தான். இப்படியிருக்க ஒரு நாள் சிந்து தேசாதிபதியாகிய "ரஹூக்" னென்னும் அரசன் கபில் மஹாமுனிவரால் தத்துவோப தேசமடைய எண்ணின

வனாய்ப் பல்லகின் மீதேறி, பரதன் கழனிக்குக் காவலா யிருக்கும் மார்க்கமாய்ப் போகும்பொழுது பல்லக்குச் சுமக்கப்பட்டவர்கள் கழனிக்குக் காவலாயிருக்கும் பரதனைப் பார்த்து அவனை அழைத்து வந்து, பல்லக்கைச் சுமக்கும்படிச் செய்தார்கள்; அது கடைசி ஜன்மமாகையால் அஹங்காரமமகாரங்கள் இல்லாதவனாய் மௌனத்துட னிருந்து பல்லக்கைச் சுமந்துகொண்டு வருவதை அரசன் பார்த்து அவனைத் துர்ப்பாஷைகளாய்த் தூஷித்தான். அப்பொழுது பரதன் அவ்விராஜனுக்குச் சிவ தத்துவ ஞானோபதேசமும், ஹிருதய கிரந்தி விமோசனங்களாகிய சில வாக்கியங்களையும் சொல்லினன். அரசன் அதைக் கேட்டவுடன், பரதனைப் பிரம்ம ஞானியென்றறிந்து, உடனே பல்லக்கிலிருந்து குதித்து, அந்தப் பிராமணனுடைய பாதங்களில் சாஷ்ட்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று இருகைகளையும் குவித்துத் தன் பிழையைப் பொறுத்தருள வேண்டிக்கொண்டனன். 'ஸம்சாரம் அஸாரம்' என்று அரசனுக்குப் போதித்து பிறகு சில தத்வோபதேசங் க்ளையும் உபதேசித்தான். ஆதலால், பிரம்மஞான சம்பர் களாகிய மஹான்கள் எப்பொழுதும் நீர்ப்பூத்த நெருப்பைப் போல் இருப்பார்கள்.

இப்படிப்பட்ட மஹான்கள் பிராணனை விடும் பொழுது எந்த எண்ணங்களையும் எண்ணாமல், பிராணனை விட்டுவிடுவார்கள். இவர்கள் அவ்வாறு விடுவதனால் இவர்களுக்கு மறுஜநநமில்லை. இவைகள் யாவும் அந்தந்த ஜீவிகள் செய்யும் புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி அமைக்குமேயொழிய, மற்றபடிக்கு அமைக்கமாட்டா. ஆனால், ஜீவர்கள் செய்யும் புண்ணிய பாவங்களெல்லாம் தனக்குள் அந்தர்யாமியாயும். சாக்ஷி பூதமாயும் இருக்கும் ஆத்மாவைப் பற்றமாட்டா. எப்படியென்றால்,

"ஸூர்யோயதா ஸர்வலோகஸ்ய சக்ஷுர்ந லிப்யதே
சாக்ஷுஷைர் பாஹ்ய தோஷை: ஏகஸ்த்ததாஸர்வ
பூநாந்தராத்மா நலிப்யதே லோக கதுக்கேந'பாஹ்யதா'
(கடோபநிஷத்)

சூர்ய கிரணங்கள், சுகந்த துர்க்கந்தங்களைச் சுவாசித்துக் கொண்டிருந்தபோதிலும், அந்தச் சுகந்த துர்க்கந்தங்கள் சூரியனைப் பற்றாமலிருப்பதுபோல், சகல ஜீவ ஜந்துக்களினுடைய இருதய கமலத்தில் நிவசித்துக் கொண்டிருக்கும் பரப்பிரம்மமாகிய ஆத்மாவிற்கு அந்தந்த ஜந்துக்கள் செய்யும் புண்ணிய பாவங்கள் பற்றமாட்டா. ஆத்மா புண்ணிய பாவங்கள் இல்லாத நிர்தோஷி. ஆதலால், நிர்மலனாகின்றான். புண்ணிய பாவங்கள் நம்மைப் பற்றாமலிருப்பதற்காக நாம் செய்யப்பட்ட கார்யங்களையெல்லாம் ஈஸ்வரார்ப்பணமாய் அல்லது கிருஷ்ணார்ப்பணமாய்ச் செய்து வந்தால் சகல புண்ணிய பாவங்களும் நம்மைப் பற்றாமல் ஈஸ்வரனைச் சேருகிறது – எப்பொழுது புண்ணிய பாவங்கள் நம்மை விட்டு ஒழிந்து விடுகிறதோ அப்பொழுதே முக்தனாகின்றான்.

"ஏகதா பஹுதாசைவ த்ருஷ்யதே ஜலசந்த்ரவத்"
(த்ரிபுராரி உபநிஷத்)

கடமெனு முபாதி போனாற் ககனமொன் றானாற்போல்
உடலெனு முபாதிபோன வுத்தரஞ் சீவன் முத்தா
அடிமுடி நடுவுமின்றி யகம்புற மின்றி நின்ற
படிதிகழ் விதேகமுக்திப் பதமடைந் திருப்ப ரென்றும்

ஆகமெனு மான் பூரண
மேகமனேக விதஞ் சீவர்
ஆகமெனு மந்தர் கரணோ
பாதிக ளளவிண் யாதலினால்

சகமுழுதுங் குளிர் சந்திர
னேகஞ் சலந்திரர் பலராம்
சகமதி லேரி குளஞ் சிறுகுழி
கால்சட்டி குடம் பலவாம்

சட்டி குடங்களி லொன்று
நசித்திடி னதினுட் சலசந்திரன்
குட்டி முதற்சந்திர னோடு
கூடு மொழிந்தவை கூடவே
சுட்டு முபாதி நசித்திடு
சீவன் காரண வான்மாவில்
கிட்டு மயக்கிய முபாதி
கெடாதவர் கேவல மாகாரே. (கைவல்யம்)

ஒரு சந்திரனே, அநேக நீர்க்குடங்களில் பிரதிபிம்பித்து அநேக சந்திரர்களாய்த் தோன்றுவது போல், பரப்பிரம்ம மாகிய ஆத்மா ஒன்றே, நாதா ஜந்துகளின் சரீரத்தில் பிரதி பிம்பித்து அனேக ஜீவர்களாய்த் தோன்றுகிறார். நீர்க்குடத்தி லுள்ள ஜலம் அசையாமலிருந்தால் நீர்க்குடத்திலிருக்கும் சந்திர பிரதி பிம்பம் அசையாமல் பரிசுத்தமாய்க் காணப் படும். நீர்க்குடத்திலுள்ள ஜலம் அசைந்தால் குடத்திலுள்ள சந்திர பிரதிபிம்பமும் அசைவதாய் காணப்படுமேயன்றி வாஸ்தவமான சந்திரன் அசைவதில்லை. அதுபோல், குடத்திலிருக்கும் ஆகாயத்தில் எந்தச் சங்கல்பங்களும் இல்லாமல் பரிசுத்த ஆகாயமாய் அக்குடத்தில் அடங்கி இருக்கின்றன. குடத்திற்கு உபாதியாயிருக்கும் ஒடு உடைந்த வுடனே, அந்தக் குடத்திலிருந்த ஆகாயம் மஹாகாசத்தில் போய் சேர்ந்துவிடும். குடத்தைப் போன்ற நமது சரீரத்தி லிருக்கும் ஆத்மாவுடன் மனது சேர்ந்திருப்பதனால் குடத் திற்குச் சமானமாயிருக்கும் நமது சரீரம் நசித்தவுடனே அந்த சரீரத்தில் மனதுடன் கூடியிருந்த ஆத்மா வேறு சரீரத்தில்

போய் சேருகிறது. இந்த ஆத்மா மனதுடன் கூட எது வரையில் சம்பந்தப் பட்டிருக்கிறதோ அதுவரையில் அநேக ஜன்மங்களை அடைந்து கொண்டே வரும். எவன் மனம், இறந்துவிடுகிறதோ, அதாவது சகல சுகதுக்கங்களையும் சகல எண்ணங்களையும் விட்டு விடுகிறதோ அப்பொழுது அப்புருஷனை வேறு தாயின் கர்ப்பத்தில் சிருஷ்டி செய்ய பரமாத்மாவிற்கு வேலையிராது, அவனுடன் கூடிய சரீரம் கோடானகோடி ஜன்மங்களாம் சாக்ஷி சொரூபமாய் வந்து கொண்டிருந்த மேற்சொல்லி பரமாத்மாவிற்கு வேலையிராத தனால் தனது நிஜ சொரூபமாகிய பரப்பிரம்மத்தில் ஆத்மா போய் சேர்ந்து ஐக்கியமாய்விடும். எறும்பு முதல் பிரம்மதேவன் வரையில் இருக்கும் ஜீவாத்மாக்களெல்லாம் சகல ஆசைகளையும் புண்ணிய பாவங்களையும் ஒழித்த பிறகு ஏதோ ஓர் ஜன்மத்தில், அவர்களுக்கு சாக்ஷியாயிருந்த ஆத்மா அந்தப் பரப்பிரம்மத்தில் போய்ச் சேரவேண்டிய திண்ணம், இதற்கு சிவப்பிரகாச நூல் பிரமாணம்.

தனக்கென வறிவிலாதான் றானிவை யறிந்து சாரான்
தனக்கென வறிவிலாத வாயிறால னறியா சாரத்
தனக்கென வறிவி லாதன் றத்துவ வன்ன ரூபன்
தனக்கென வறிவா னாலிச் சகலமு நுகருந் தானே

மனதானது எப்பொழுதும் வெளி வியவகாரங்களில் ஓடிக்கொண்டிருப்பதனால் நம்மில் இருக்கும் ஆத்மாவைத் தெரிந்து கொள்ளாமலிருக்கிறோம். மனதை ஏங்கும் வெளி வியவகாரங்களில் ஓடவிடாமல் நிறுத்திவிட்டால் நம்மில் இருக்கும் ஆத்மாவைத் தரிசிக்கலாம்.

ஆகாயத்திலிருக்கும் சந்திரனைப்போல் ஜலசந்திரனும் அசையாமலிருந்த போதிலும், ஜலம் அசைவதால் ஜலசந்திரனும் அசைந்து கொண்டிருக்கும். அதுபோல் நிர்விகார பரப்பிரம்மமாகிய ஆத்மாவினுடைய பிரதி

பிம்பமாகிய ஜீவனும் நிர்விகாரனால் (எந்த விகாரங்களும் இல்லாதவனாய்) இருந்தபோதிலும் அந்த ஜீவன் மாயை என்னும் அஞ்ஞானத்துடன் கூடியிருப்பதனால், சங்கல்ப விகல்பங்கள் உண்டாய் எப்பொழுதும் பாதரசம்போல் சலித்துக் கொண்டிருக்கும் மனம் புத்தி சித்தம் அஹங்கார மென்னும் அந்தக் கரணங்களுடன் கூடிக்கொண்டு என் தேசம் என் பாரியாள் என்னும் தேகாபிமானமும், அஹங்கார மமகாரங்களும், காமக்குரோத லோப மோஹ மதமாச்சாரங்கள் முதலான குணங்களையுடையவனாய்த் தூள சரீரத்தின் மூலமாய் அனேக கர்மங்களை செய்து கொண்டு, அதன் பலன்களை அனுபவித்துக் கொண்டு மரணமடைந்தபின், ஜீவன் சூட்சும சரீரத்துடன் சேர்ந்து சூட்சும சரீரராய், சொர்க்க நரகங்களை அடைந்து சுக துக்கங்களை அனுபவித்து மறுபடியும் பூர்வ கர்ம சேஷத்திற்காக ஜநநமெடுத்து அவைகளை அனுபவிக்க, நாநாயோனிகளில் போய் புகுந்து பிறந்து கொண்டும், இறந்து கொண்டும் இவ்விதமாய் ஒரு குளத்தில் அகப்பட்டுக் கொண்டு, அந்தக் குளத்தைவிட்டு வெளிச் செல்ல சக்தியில்லாமல், இக்கரைக்கும் அக்கரைக்கும் நீந்திக் கொண்டிருக்கும் மீன் குட்டியைப் போலும் சுழல் நீரில் அகப்பட்டுக் கொண்டு அதிலிருந்து தப்பிப் போக சக்தியில்லாமல் அந்தச் சுழலில் தானே சுற்றிச் சுற்றித் திரிந்து கொண்டிருக்கும் வண்டு போலும் இந்த ஜீவன் ஜனன மரணமென்னும் துக்க சமுத்திரத்தில் மூழ்கி அதிலிருந்து தப்பித்துக் கொண்டு போக சக்தியில்லாமல் அலைந்து கொண்டிருக்கும்.

"ப்ரஜ்ஞாநகயேவை தேப்பஹ ஸமுத்தாயதாந்தயேவாநு"

(லாநு லிநஸ்யதி)

இப்படிப்பட்ட ஜீவனுக்குச் சஞ்சித கர்மமும் பிராப்த கர்மமும் நசித்தவுடனே தேஹமுப் ஜீவோபாதியும் என்றால்

சங்கல்பரூபமாயிருக்கும் மனதும் நசிந்து ''ப்ரமஹமவேத ப்ரஹ்மைவ பவதி என்னும் சுருதிரீதியாய் குடத்திலுள்ள ஆகாசம் மஹாகாசத்தில், கலந்து ஏகமாவதுபோல் அகண்ட ஸச்சிதானந்த நிர்மல பரிபூரணமாகிய பரப்பிரம்மத்தில் ஐக்கியமாய் நித்திய முக்தனாகின்றான்.

சுரு॥ ''ஏகோபஹூநாம்யோ வித்தாதிகா்மாந்''

(கடோப நிஷத்)

பரப்பிரம்மாகிய ஆத்மா ஒருவனே சகல ஜீவராசிகளுக்கும் சாக்ஷியாயிருந்து அவரவர்கள் கோரிய பலன்களைக் கொடுத்துக் கொணடிருக்கிறான் நானே பிரம்ம பிரம்மமே நான்'' என்று பேதமில்லாமலிருக்கும் ஞானிகளை மாத்திரம் ஈஸ்வரன் தன்னில் ஐக்கியம் செய்து கொள்கிறார். பிரம்மம் வேறுதான் வேறென்று பேதமாய் எண்ணப்பட்டவர்களை ஈஸ்வரன் தன்னில் ஐக்கியம் செய்து கொள்ளமாட்டார். இதற்குத் திருஷ்ட்டாந்தம் தேவி காலோத்திரமும் ஸ்ரீ பகவத் கீதை, அத்தியாயம் 4 சுலோகம் 12ம் பிரமாணம்.

நித்தனாம் பரமேசன் யாரென்று நிச்சயிக்கின்
முத்தனவ னேனினு மவன்முத்தான முயிருடம்பின்
பெத்தமற ஞானத்தாற் காட்சி பெறித சாந்தியுடைச்
சித்தனாய்ப் பொகுடபற்றுத் தீர்ந்து வீட்டையுமாம்
காண்க்ஷந்தஹ கர்மணாம் சித்திம் யஜந்த இஹதேவ தாஹ
க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோக ஸித்திர்பவதி கர்மஜா''

கிருஷ்ணன் : இந்தப் பூலோகத்திலுள்ள ஜனங்களில் சிலரே, ஞானத்தைப் பெற்று, மோக்ஷமடைய வேண்டு மென்று எண்ணுகிறார்கள். இப்படிப்பட்டவர்கள். அல்ப தேவதைகளை ஆராதிப்பதனால் பிரயோஜனமில்லை யென்று தெரிந்து கொண்டு மோக்ஷத்திற்கு ஆதாரமா யிருக்கும் என்னையே ஆராதித்துக் கடைத்தேறுகிறார்கள். மற்றவர்களென்றாலோ கர்மபலத்தைக் கோரி கர்மங்

களையே செய்து வருகிறார்களாகயிருக்கிறார்கள். அப்படிப் பட்ட பலன்கள் சொற்ப பலன்களேயாம். அல்ப தேவதையை ஆராதிப்பவர்களுக்குதான் அல்ப பலன்களையே கொடுக்கின்ற வனாயிருக்கிறேன். எப்படியென்றால், ரம்பா சம்போகாதி சொல்ப பலனை நினைக்கப்பட்டவர்கள் இந்திராதி தேவதைகளுக்கு யஞ்ஞம் செய்வார்கள்; சந்தானம் வேண்டு மென்று நினைக்கப்பட்டவர்கள், அரசமர நாகபிரதிட்சை பிரதக்ஷணம் விரதங்கள் முதலிய செய்வார்கள். ஏதேனும் குரூரமான கிரஹசாரம் இருந்தால் நவக்கிரகங்களைப் பிரதக்ஷணம் செய்வார்கள்; ஏதேனும் ஆபத்து உண்டானால், அந்த ஆபத்துத் தீரும்படி சுந்தர காண்டம் பாராயணம் செய்வார்கள். ஐஸ்வரியம் வேண்டுமென்று நினைக்கப்பட்ட வர்கள் சூர்ய நமஸ்காரங்களைச் செய்வார்கள். இப்படி அனேக விதங்களாகிய பலன்களைத் தரத்தக்க அநேக தேவதைகளை ஆராதித்துக் கொண்டிருப்பார்கள். இப்படிப்பட்டவர்களுக் கெல்லாம் நானே அப்பலனைக் கொடுக்கும் தேவதா ரூபமாயிருந்து அழிந்து போகத்தக்க சொல்ப பலன்களைக் கொடுத்து வருகின்றேன். அவர்கள் அப்படிப்பட்ட அல்ப தேவதைகளை ஆராதிக்காமல் எப்போதும் எந்த இச்சையும் இல்லாமல் என்னையே தியானம் செய்து வந்தால் பெருத்த சாம்ராஜ்ஜிய பதவியாகிய மோக்ஷத்தை அவர்களுக்கு நான் கொடுப்பேன்.

ஆனால், என்னை அவர்கள் அப்படி ஆராதிக்க மாட்டார்கள். ஏனென்றால், பிரபஞ்ச சிருஷ்டி முதல் நாளது வரையில் மனிதர்கள், அநேக கோடானுகோடி ஜென்மங்கள் எடுத்திருக்கிறார்கள். ஒவ்வொரு ஜென்மங்களிலும் வந்த பெண்டுகளையும், தனதானியம், கிரகம், பூமி தோட்டம் முதலானவைகளின்மேல் அதிக ஆசையுடையவர்களாய்

பிசினைப்போல் பந்தத்தில் ஒட்டிக் கொண்டிருப்பதனால் நன்மார்க்கமாகிய மோக்ஷத்திற்கு இடம் கொடாமல் அந்தச் சம்சார பந்தத்திலேயே அவர்களை இடித்துக் கொண்டு போகும் இதையே பூர்வ வாசனையென்றும் பந்தமென்றும் சொல்லப்படும். இவ்வாறு எத்தனை கற்பகோடி யுகங்கள் வரையில் ஜீவர்கள் சம்சாரத்தில் இருந்தபோதிலும் ஏதோ ஓர் ஜன்மத்தில் என்னில் வந்து சேர்ந்து ஐக்கியப் படுபவர் களாகவே இருக்கின்றார்கள். ஆனால் ஜனங்கள் என்னை யடைவது மிகவும் கஷ்டம். எவனொருவன் பலாபேக்ஷையை விட்டு நிஷ்காம கர்மத்தைச் செய்து வருகிறானோ, அவனுக்கு அநேக ஜன்மங்களுக்குப்பின் ஞானமுண்டாய் அந்த ஞானத் தினால் அவனது ஆகாம்ய சஞ்சித கர்மங்கள் பஸ்பமாய்ப் பிறகு என்னில் ஐக்கியமாவான். ஆகாம்ய சஞ்சித கர்மாகள் உள்ளவரையில் ஜன்மங்கள் எடுத்துக் கொண்டே வர வேண்டும். எந்நாள் எந்த பக்ஷத்தில் ஆகாம்ய ஸஞ்சிதங்கள் பஸ்பமாய் விடுகின்றனவோ அந்த க்ஷணமே, சரீரமிருக்கு மளவில் பிராப்த கர்மங்களை அனுபவித்து அந்தச் சரீரம் விட்டவுடன் என்னில் வந்து ஐக்கியமாகின்றான். ஆதலால், மனமென்னும் சிறு குழந்தையை அசுத்தவாசனை யில் செலுத்தாமல் சுத்த வாசனையில் நிறுத்தவேண்டும். அனேக ஜன்மங்களாய் எடுத்துவந்த நாநாவித ஜன்மங்களின் பழக்கத்தால் வந்த அசுத்த வாசனைகளை நீக்கி மகத்தாகிய சுத்த வாசனையைக் கைப்பெற்றால் மனம் இறந்து பிரம்ம சொரூபியாகும். இவைகளை அறிந்த ஆசார்யரும், வேதங் களும் சொல்லும். ஆதலால், இந்த ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யத்தை வெளிக்காட்டவும், இதில் உபதேசித் திருக்கும் உபதேசங்களே ஆசார்யத்து உபதேசமாகவும் எண்ணிய ஜபம் செய்து வரப்பட்டவர்களுக்கு மனோசாந்தி யுண்டாய், பரமபதமென்னும் (மோக்ஷமென்னும்) கைவல்

யத்தை அடைவார்கள். இதற்கு ஞான வாசிட்டம் பிரமாணம்.

மிகமுயன்று வருந்தாமற் சமமா கின்ற
வேண்டுகோ ளாற்றன் முயல்வால்ளினோதந் தன்னாற்
பகர்மனமாஞ் சிறுமகவை நித்தல் வேண்டும்
பலவிறப்பிற் பரிசயங்க ளகலப்பண்ணி
யகல்சுபா தனையுதித்தான் முயற்சிபேறா
மையுறினுஞ் சுபமடைவா ய்துதீதல்ல
திகழ்மனம்போய்த் தற்பதத்தைத் தெளிவு மட்டுந்
தேசிகனூற் சொல்வழியில் செல்லு வாயே.

இந்த உலகத்தில் வசிக்கும் மனிதர்கள் முதல் சகல ஐந்துக்களும் ஜீவன்களென்று சொல்லப்படும். பரப்பிரம் மத்தின் பிரதிபிம்பமாகியஇந்த ஜீவன் மாயை என்னும் அஞ்ஞானத்தில் மூடப்பட்டிருக்கிறான். இப்படிப்பட்ட ஜீவன் பிரம்மைக்கியத்தைப் போதிக்கும் தம்வம்ஸி முதலான மஹாவாக்கியங்களை விசாரணை செய்தால், ஜநந மரணங் களில்லாதவனாய், பிரம்மைத்தியமென்னும் முத்தியை அடைவானேயொழிய மற்றவைகளால் அடையமாட்டான்.

"தத்வமஸி" தத் அது த்வம் = நீ ஆகின்றாய் அதாவது, தத் அந்தப் பரப்பிரம்மம், த்வம் ஜீவாத்ம சொரூபியாயிருக்கப் பட்ட நீ அஸி = ஆகின்றாய்.

என்றால் ஜீவாத்மா சொரூபமாயிருக்கப்பட்ட நீ அந்தப் பரப்பிரம்ம சொரூபமாகின்றாய் என்பததேயாம்.

"அக்நிர்யதைகோ புவநம்பரவிஷ்டோ
ரூபம்ரூபம் ப்ரதிரூபோ பவூவ
ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா
ரூபம்ரூபம் ப்ரதிரூபோ பஹிஷ்ச்ச." (கடோபநிஷத்)

ஒரு வத்தியில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் தீபத்தி லிருக்கும் அநேக வத்திகளை ஏற்றியபோது அந்த ஓர் தீபமே

அநேக வத்திகளில் வியாபித்திருப்பதுபோல் ஓர் ஆத்மாவே அநேக தேவங்களில் வியாபித்து, அனேக ஆத்மாக்களாய்த் தோன்றுகின்றது.

"வாயுர்யதைகோ புவநம்ப்ரவிஷ்டோ
ரூபம்ரூபம் ப்ரதிரூபோ பபூவ
ஏகஸ்ததா ஸர்வபூதாந்தரா த்மா
ரூபம்ரூபம் ப்ரதிரூபோ பஹிஷ்ச்ச" (கடோபநிஷத்)

பிரபஞ்சமெல்லாம் ஓர் வாயுவே வியாபித்து பிராண வாயுவென்றும், மலயமாருதமென்றும் சுழல் காற்றென்றும் சொல்லப்படுவதுபோல் ஓர் ஆத்மாவே, பிபீலிகாதி பிரம்ம தேவன் வரையும் சகல ஜீவஜந்துக்களிலும் வியாபித்து அனேக ஆத்மாக்களாய்த் தோன்றுகின்றான்.

"யுதேவேஹ ததமுத்ரா ததந்விஹ மருத்யோஸ்ச்ச
ம்ருத்யு மாப்நோதி இஹ நாநேவ பஸ்யதி"
(கடோபநிஷத்)

இந்தச் சரீரத்தில் இருக்கும் ஆத்மாவே அந்தப் பரலோகத்திலிருக்கும் பரப்பிரம்மமாய் இருக்கிறது. அந்தப் பரலோகத்தில் இருக்கும் பரப்பிரம்மமே. இந்த உலகத்தில் நமது சரீரத்தில் ஆத்ம சொரூபமாய் நிவசித்துக் கொண்டிருக் கிறது. ஓர் ஆகாயமே கடோபாதியினால் கடாகாசமென்றும், உபாதியில்லாமலிருப்பதால், மஹாகாசமென்றும், சொல்லப்படும். சர்வபரிபூரண பரப்பிரம்மம் இந்தத் தேகத்தில் வசிப்பதால் ஆத்மாவென்று சொல்லப்படும்.

"அணோரணீயாந் மஹதோமஹீயாந்
ஆத்மஸ்யஜந்தோர் நிஹிதோ குஹாயாம்."
(கடோபநிஷக்)

இந்த உலகத்தில் அணுவைவிட என்றால் கண் களுக்குக் காணப்படாத தூசியைப் போலிருக்கும் சிறிய புழு

முதல், யானை அல்லது பர்வதம் போன்ற பெரிய ஜந்துக் களினுடைய சரீரத்திலும் ஆத்மா நிவசித்துக் கொண்டிருக் கிறது.

அஸரீரம் ஸரீரேஷு அநவஸ்த்தே ஷ்வவஸ்த்திகம்'
(கடோபநிஷத்)

ஆத்மா, தனக்குச் சரீரமில்லாமல் எல்லா ஜீவராசி களின் சரீரத்தில் நிவசித்துக் கொண்டிருக்கின்றான்.

ஆத்மா காற்று ரூபமாய் இருக்கப்பட்டவன் ஆதலால் இந்தச் சரீரத்திலேயே ரூபமில்லாமல் நாசரஹிதனாய் நிவசித்துக்கொண்டிருக்கின்றான். இந்தச் சரீரத்திற்கு நாசமேயொழிய ஆத்மாவிற்கு நாசமில்லை ஸ்ரீபகவத் கீதை அத்தியாயம் 2 சுலோகம் 23, 24, 25இல் ஸ்ரீ கிருஷ்ணபகவான் என்ன சொல்லுகிறாரென்றால்,

நைநம் சிந்தந்தி ஸஸ்ராணி நைநம் தஹதி பாவகஹ
நைநம் க்ளேதயந் த்யாபோ நஸோஷயதி மாருதஹ
அச்சேத்யோயமதாஹ்யோ யமக்ளேத்யோ ஸோஷ்யயேவாஸ
நித்ய ஸஸர்வகதஹ ஸ்தாணு ரசலோயம் ஸநாதநஹ
அவ்யக்தோய மசிந்த்யோ யமவிகார்யோ முச்யதே
தஸ்மா தேமம் விதித்வைநம் காநுஸோசிது மர்ஹஸி

இந்தத் தேஹம் ஆயுதங்களில் வெட்டப்பட்ட போதிலும், அக்நியினால் தஹிக்கப்பட்டபோதிலும், ஜலத் தினால் நனைக்கப்பட்டபோதிலும் காற்றினால் மோதப் பட்டபோதிலும், இந்தத் தேஹத்திலிருக்கும் ஆத்மா அதனை விட்டு மற்றொரு தேஹத்தில் போய் பிரவேசிக்கின்றதே யன்றி தேஹத்துடன்கூட நசிக்கப்பட்டதல்ல அப்படி வெட்டப்படுவது தஹிக்கப்படுவது. நனைக்கப் படுவது மோதப்படுவது நிந்திக்கப்படுவது முதலானவைகள் சரீரத் திற்குச் சம்பந்தப் பட்டதேயொழிய ஆத்மாவிற்குச் சம்பந்தப்

பட்டவையல்ல சரீரத்திற்கு மாத்திரம் மாறுதலுண்டேயன்றி ஆத்மாவிற்கு எப்பொழுதும் மாறுதலில்லை. இந்த ஆத்மா ஆயுதம் அக்கிநிஜலம் வாயு முதலாகிய எவற்றினாலும் நிரூபிக்கப்படமாட்டாது. இவ்வாத்மா எப்படிப்பட்ட தென்றால் ஆதியில் பசுத் தன்மையையுடைய தாயிருந்தது. பசுத்தன்மையாயிருந்த ஆத்மாவிற்கு ஆணவ மலமென்னும் பந்தம் ஏற்பட்டதனால் அவ்வாத்மாவிற்கு ஜீவாத்மா என்னும் பெயர் உண்டாயிற்று. இதற்குச் சிவஞான சித்தியார் பிரமாணம் :

> அசித்தரு வியாப கம்போல் லியாபக மருவ மின்றாய்
> வசித்திட வரும் வியாபி யெனும் வழக்குடையனாகி
> நசித்திடா ஞானச் செய்தி யநாதியே மறைந்து நிற்கும்
> பசுத்துவ முடையனாகிப் பசுவென நிற்கு மான்மா.

இது நித்தியமானது. அதாவது ஆத்மா ஒரு போதிருந்து, ஒருபோது இல்லாமல் இருப்பதுமல்ல; மாயா சம்சாரத்தி லிருந்து தப்பித்துக்கொண்டு பரப்பிரம்மத்தில் போய் ஐக்கியமாகும் வரையில் எப்பொழுதும் எதையோ ஓர் சரீரத்தை ஆசிரயித்துக் கொண்டேயிருக்கும். 'ஸர்வகதம்' அதாவது, பிபீலிகாதி பிரமதேவன் வரையில் சகல ஜந்துக் களின் இருதய கமலத்தில் ஆத்மா நிவசித்துக் கொண்டிருக் கிறான்.

'ஸ்தாணு' அதாவது, தான் தரித்திருக்கும் தேஹங்கள் அப்போதைக்கப்போது மாறினாலும் ஆத்மா மாத்திரம் மாறாமல் எப்பொழுதும் ஒரே விதமாயிருக்கும்.

இன்னும் இந்த ஆத்மா எப்படிப்பட்டதென்றால் ஞானேந்திரியங்களினால் அறியக்கூடாதவனென்பதற்குச் சுருதிப் பிரமாணமென்னவென்றால் நதத்ரா சஹீர்கச்சதி நா வாக்கச்சதி நோமநஹ ந வித்யோக ந விஜாநீமஹ'' ஆத்மா கண்களுக்குக் காணப்படாதது மனதினால் நினைப்பதற்குச்

சாத்தியப்படாதது, இப்படிப்பட்டதென்று நிரூபித்துச் சொல்ல வாக்கு தரமாட்டாது. இப்படிப்பட்ட எந்த விகாரங் களும் ஆத்மாவிற்கு இல்லையென்று தத்துவ ஞானிகள் சொல்லுகிறார்கள். ஒருமுறை சொல்லிய விஷயங்களைப் போல் மறுபடியும் சொல்லுகின்றோமென்று யோசிக் கின்றாயா என்ன? பரமாத்ம சொரூபம் இப்படிப்பட்ட தென்று உன் மனதிற்கு நன்றாய் பிடிபடும்படிச் சப்தங்களை மாற்றி மாற்றித் தெரிவிக்கின்றேன். ஆதலால் ஆத்மா இப்படிப்பட்டதென்று தெரிந்து கொண்டு யுத்தம் செய் இனி நீ துக்கப்பட வேண்டாம் இன்னும் அத்யாயம் 2 சுலோகம் 26இல் ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லுகிறார் :

அத சைநம் நித்யஜா தம் நித்யம்வா மந்யஸே. ம்ருதம்
ததாயித்வம்* மஹாபாஹோ நைவம் ஸோசிது மர்ஹஸி

ஓ அர்ஜுநா! ஆத்ம தத்துவம் இப்படிப்பட்டதென்று நான் உனக்கு, இதுவரையில் அத்தியாயம் 2 சுலோகம் 2 முதல் 25 வரையில் சொல்லியிருக்கின்றேன். ஆதலால் மறுபடியும் இந்த ஆத்மா பிறக்கின்றனவென்றும் இறக்கின்ற னவென்றும் நினைக்க வேண்டாம். இந்த ஆத்மாவைக் குறித்து நீ துக்கப்படவேண்டாம். ஏனென்றால், பிறந்தவன் இறப்பதும், இறந்தவன் மறுபடியும் பிறப்பதும் தப்பாதல்லவா? ஆதலால் பிறந்து இறந்து கொண்டிருக்கும் சுபாவமுடைய பீஷ்மர் முதலானவர்கள் இன்று உன்னால்

★ ''மஹாபாஹோ'' என்றழைப்பதற்குக் காரணமென்ன வென்றால் யுத்தம் செய்யவே சென்று ஆயுதபாணியாய் வந்த உன்னைப் போன்ற பராக்கிரமசாலிக்கு இப்படிப்பட்ட விசாரம் தோன்றும். உனக்கு புஜபலமேயொழிய நல்லது கெட்டது என்று ரசிப்பதற்குத் தகுந்த மனோபலம் இல்லாததனால் மிகவும் துக்கத்தை அடைகின்றான் என்னும் பாவனையுடன் மஹாபஹோ என்று சொன்ன வார்த்தையாகும்.

கொல்லப்பட்டபோதிலும் நாளைய தினம் மறுபடியும் தப்பாமல் பிறப்பார்கள். பூர்த்தியாய் நாசமானால் விசனப்பட வேண்டியதுதான். தூங்கி எழுந்தவனைப்போல் இன்றைக் கிறந்து நாளைக்குப் பிறப்பவர்களைக் குறித்து விசனப்பட வேண்டாம். இறந்தவர்கள் மறுபடியும் பிறப்பார் களல்லவா? இதற்கு சிவஞான சித்திரயர் பிரமாணம் :

சூக்குமதேகி யாகித் தூலரூ பத்தின் மன்னிச்
சாக்கிரை முதலா யுள்ள வலத்தையுட் டங்கு யெங்கும்
போக்கிகொ வரவுமெல்லாம் புரிந்தபுண் ணியங்கள் பாவ
மாக்கியும் பலன்களெல்லாம் மருந்தியு நிற்கு மானமா
ஸ்வாஏஷமஹிநஜ ஆத்மா ஐரோ மரோ மரூதோபயோ
ப்ரஹ்மாபயம் ஹி வை ப்ரஹ்மயபவதி''

(ப்ருஹதாரண்யகோப)

ஆத்மா பால்ய யௌவன கௌமாரங்கள் (கிழத் தனங்கள்) இல்லாதது. சரீரத்திற்கே பால்ய யௌவன கௌமார (கிழத்தன) அவஸ்தைகள் உண்டு: ஆத்மா பயமில்லாதவன் அப்படிப்பட்ட ஆத்மா அந்தச் சரீரத்தில் எவ்விடம் குடி இருக்கின்றதென்றால்,

''அந்த ஸ்ஸரீரே நிஹிதோ குஹாயாம்

(அத்யாத்மோபநிஷத்)

ஆத்மா இந்தச் சரீரத்தில் பஞ்சகோசங்களில் வசிக்கின்றது. அவை : அன்னமய பிராணமய மனோமய விஞ்ஞானமய ஆநந்தமயமென்றும் சொல்லப்படும்.

இந்தத் தூலசரீரம் ஆஹாரமில்லாவிடில் நசிந்துவிடும். அப்படி நசிக்காமல் நிற்பதற்காக அன்ன மயகோசமும், சூட்சும சரீரம் நிற்பதற்காக பிராணமய மனோமய விஞ்ஞான மய இந்த மூன்று கோசங்களும் ஆதாரமாயிருக்கின்றன.

இதில் பிராணவாயு கர்மேந்திரியங்கள் சேர்ந்து பிராணமய கோசமாகும்.

சித்தம், கர்மேந்திரியங்கள் சேர்ந்து மனோமயகோச மாகும். புத்தி, ஞானேந்திரியங்கள் சேர்ந்து விஞ்ஞானமய கோசமாகும். காரண சரீரம், ஆனந்தமயகோசமென்று சொல்லப்படும். இப்படிப்பட்ட கோசங்கள். ஞானத்தை எவ்விதமாய் மூடிக்கொண்டிருக்கிறதென்றால் ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகின்றார் :

> தூமேநாவ்ரியதே வஹ்நிர்யதா தர்ஸோ மலேநச
> யதோல்பே நாவ்ருதோகர்ப்பஸ்த்தா தேநேதமாவ்ருதம்
> ஆவ்ருதம் ஜ்ஞாந மேதேந ஜ்ஞாநிநோ நித்யவைரினா
> காமரூபேண கௌந்தேய! துஷ்பூரே ணாநலேநச.

ஓ குந்திபுத்திரா! அக்நி புகையினாலும் கண்ணாடி அழுக்கினாலும் கர்பத்திலிருக்கும் பிண்டம் பையினாலும் எப்படி மூடப்பட்டிருக்கின்றதோ, அவ்வாறே ஞானமானது ஆசையினால் மூடப்பட்டிருக்கிறது. இம்மூன்று திருஷ்ட்டாந்தங்களும் மூன்றுவித மனிதரைக் குறிப்பிடும், அம்மூவகை மனிதராவது :–

1. புகையினால் அக்னி மூடப்பட்டிருப்பதுபோல் மாயை என்னும் ஆசையால் ஆத்ம ஞானமென்னும் அக்னியை மூடப்பட்டிருப்பவர்கள் ஆத்மஞானமுள்ளவர் களே யாவார்கள்.

எப்படியென்றால், நிஷ்களங்கமான ஆத்மஞானத் திலேயே நிலையில்லாமலும், விஷய பற்றுதல்களை முழுவதும் விடாமலும் இருப்பார்கள். அக்னியைச் சூழ்ந் திருக்கும் புகை எவ்வளவு விசேஷமாயிருந்தாலும், அக்னி யின் மீது காற்று பட்டவுடன் புகை விலக்கப்பட்டு பிறகு அது

சுவாலையை விட்டுப் பிரகாசிக்கத் தொடங்கியவுடன் புகை இருந்த இடந் தெரியாமல் எப்படி மறைந்து விடுகிறதோ, அதுபோல் குரு உபதேசத்தினால், சாது சங்கத்தினாலும் இவர்களுக்கு இச்சை நலிந்து நசிந்து கூடிய சீக்கிரமே அப்பியாச முதிர்ச்சியினால் ஆத்ம ஞானத்தை அடைவார்கள். ஆதலால், இவர்கள் முதல் வகுப்பினர் ஆவார்கள்.

2. அழுக்கினால் மூடப்பட்ட கண்ணாடியைப் பார்க்கும் ஒருவனது முகம் பிரகாசமாயும் சுத்தமாயும் தெரியா விட்டாலும் ஏகதேசமாய்த் தெரியுமன்றோ? அவனுக்குத் தன் முகம் பிரகாசமாய்த் தெரியவேண்டுமென்கிற எண்ணம் மாத்திரம் இருக்கிறதேயன்றி, அழுக்கைத் துடைத்தால் கண்ணாடியில் முகம் பிரகாசிக்கும் என்கிற ஞானம் இல்லை. அதுபோல் ஆத்ம ஞானத்தைச் சம்பாதிக்க வேண்டுமென்கிற அபேக்ஷை மாத்திரம் இருக்கிறது. ஆசையை ஒழித்தாலன்றி அதை அடையலாமென்கிற நிச்சயமில்லாமல் கலக்க முற்றிருப்பான். இந்த ஆசையைப் போக்கடித்துக் கொண்டால், ஆத்ம ஞானத்தை அடையலாம் என்கிற நிச்சய ஞானம் இல்லாமலிருப்பான் இப்படிப்பட்டவனுக்குக் குரு உபதேசத்தினாலும் சாது சங்கத்தி (நல்லவர்கள் சகவாசந்தி) னாலும் சில காலங்களுக்குப் பின் ஞானோதயமாகும். இப்படிப்பட்டவர்கள் இரண்டாவது வகுப்பினராவார்கள். இதற்குக் கைவல்யம் பிரமாணம் :

தர்ப்பணத்தினிற் கலிபும்வாஸ்தவமலஞ் சகசமாதலின் மைந்தா
கற்பளிங்கினிற்கருநிறஞ் சகசமாங் கறுத்தன் றாரோபம்
தற்கபணத்தினிலழுக்கற வேண்டினாற்சாதனத் தொழில் வேண்டும்
கற்பளிங்கிலாரோபமே கறுபெனக் கண்டிட மனம் போதும்

3. தாயின் கர்ப்பத்திலுள்ள பையில் அடங்கிக் கொண் டிருக்கும் பிண்டமானது தானாகவே அந்தப் பையை விட்டுவரச் சக்தியற்றதாயிருப்பதுபோல், ஆத்ம ஞான மில்லாதவர்கள் ஆத்மா இப்படிப்பட்டதென்று அறியாமல்

ஆசையென்னும் வலையில் அகப்பட்டுக் கொண்டிருப் பார்கள் ஆசையை நிவர்த்தி செய்து கொள்ளச் சக்தியற்ற இவர்களக்குக் குரு உபதேசத்திலினாலும் சாது சங்கத்தி னாலும் பிரயோஜனமில்லை. இவர்களே மூன்றாவது வகுப்பினர்கள் ஆவார்கள்.

அர்ஜுனா! புகைந்து கொண்டிருக்கும் அக்னி ஊது வதனாலேயோ, அல்லது விசிறியினால் விசுறுவதனா லேயோ புகை நீங்கி ஜுவாலை உண்டாகிறதல்லவா? அழுக் கினால் மூடப்பட்ட கண்ணாடியைக் கழுவுவதனாலேயோ அல்லது துடைப்பதனாலேயோ அழுக்கு நீங்கிக் கண்ணாடி துலாம் பரமாயிருக்குமல்லவா? பிரசவித்தவுடன் சிசுவை மூடிக் கொண்டிருந்த 'மா, விழுந்து விடுகின்றதல்லவா? அதுபோல் யோகாப்பியாசத்தினால், யோகியை மூடிக்கொண் டிருந்த காமக் குரோதங்கள் நீங்கி ஞானம் பிரகாசிக்கும். ஜனனமென்கிற மாயை நசித்தால், எங்கும் நிறைந்திருக்கும் பராபர வஸ்துவானது உதயமாகும். இப்பராபர வஸ்து உதயமானால் மாயை நாசமாகும். மாயை நாசமாவதே மோக்ஷமெனப்படும். ஞானமென்கிற சூரியன் உதயமானால், அனேக ஜன்மங்களாய்த் தொடர்ந்துவரும் மண்ணாசைப் பெண்ணாசை பொருளாசை என்கிற மூன்று ஆசைகளும், ஆணவம் மாய்கை, காமியம் என்னும் மும்மலங்களும் நீங்கும், இதற்கு ஞானவாசிட்டம் பிரமாணம் :

பிறப்பெனு மாயைக் கரையதா யெங்கும்
பிறிவறு பெரும்பொரு டோன்றி
விறப்புறு மாயைக் கிச்சையே வடிவா
மிதனுடை நாசமே வீடு
சிறப்பில் சங்கற்பஞ் சிதைந்திடி லிதுதான்
றேய்ந்திடுஞ் சித்தெனுங் கதிரோன்
புறப்படி லிதய விசும்பில் வாதனையாம்
பொங்கிருள் போமெனப் புகல்வாம்.

அர்ஜுனன் : ஓ... சுவாமி! புகையினால் மூடப்பட்ட அக்னி ஊதுவதனால் எரிந்து, ஊதுவதை நிறுத்தினவுடனே எரிவது நின்று, மறுபடியும் புகைந்து கொண்டிருக்கு மல்லவா? அதுபோல் இந்த ஞானமும் காமக் குரோதங் களால் மறைவுப்பட்டும், மறுபடியும் வெளிப்பட்டுக் கொண்டிருக்குமல்லவா;

கிருஷ்ணன் : ஆம்! புகைந்து கொண்டிருக்கும் அக்னியை விசிறினால் எரிந்து, மறுபடியும் அணைந்து மறுபடியும் புகைந்து மறுபடியும் எரிந்து வரவர சில நேரத்தில் ஜுவாலை பிரகாசித்துப் பெருந்தீயை உண்டாக்கும். அதன்பிறகு விசிறுவதாயினும் ஊதுவதாயினும் இல்லாமலே தனக்குத் தானாய், எப்படி விசேஷ ஜுவாலையுடன் எரிகிறதோ அதுபோல் யோகாப்பியாசிக்கும் காமக் குரோதங்கள் மனம் புத்தி இந்திரியங்கள் முதலானவைகளெல்லாம் அவன் செய்யும் மனோ நிக்கிரஹத்தில் நிவர்த்தியாய் மறுபடியும் தோன்றி மறுபடியும் மனம், புத்தி இந்திரிய நிக்கிரஹத்தி னால் நிவர்த்தியாய் இப்படிச் சில நாள் வரையில் அவனைக் கஷ்டப்படுத்திக் கொண்டிருக்கும். ஆனால், அவைகள் தோன்றும் போதெல்லாம் அந்த யோகாபியாசி விடாமல் பிடிவாதத்துடன் இருந்து, மனம் புத்தி இந்திரியங்கள் முதலானவைகளை நிக்கிரஹித்துக் கொண்டே வருவானா கில் அவைகள் அனைத்தும் அவனை விட்டொழியும், அப்படி ஊக்கத்துடன் விடாமல் செய்துவரும் அப்பியாசத் தினால் சில காலங்களுக்குள் பூர்ண வைராக்கியமுண்டாகும். அப்பொழுது அந்தக் காமக் குரோதங்கள், அவனை விட்டொழியும். அதன்பிறகு ஞானம் நிர்மலமானதாய் பிரகாசித்துக் கொண்டிருக்கும்.

கள்ளன் ஒருவன். இராஜனுடைய படுக்கையறையில் ரகசியமாய் பிரவேசித்து ஆபரணங்களையெல்லாம் எடுத்துக்

கொண்டு போவதற்குச் சமயம் பார்த்துக் கொண்டு பதுங்கி யிருந்தான் இராஜனானவன் தன் மகளை, ஒரு பாகவ தோத்தமனுக்கு அவனுடைய ஜாதி குல கோத்ரம்யாதா யிருந்தபோதிலும் விசாரிக்காமல் விவாகம் செய்வித்துத் தன்னுடைய ராஜ்ஜியத்தில் பாதி ராஜ்ஜியம் அவனுக்குக் கொடுப்பதாய் தன் மனைவியிடம் சொல்லினன். கள்ளன். இவைகளைக் கேட்டவுடன்தான் முன் உத்தேசித்திருந்த திருட்டு வேலை செய்வதனால் அற்ப பலனே உண்டாகு மென்றும் அல்லது ஒருவேளை பிடிபட்டாலோ ராஜ தண்டனைக்குப் பாத்திரனாக வேண்டுமென்று எண்ணின வனாய். இப்படிப்பட்ட காரியங்களைச் செய்வதைப் பார்க்கிலும் சில காலம் வரையில் பாகவதனாய் வேடந்தரித்து இராஜ குமராத்தியையும் பாதி ராஜ்ஜியத்தையும் அடையலாம் என்று எண்ணி ரகசியமாய் வெளியே சென்று மறுநாள் அருணோ தயத்திலேயே ஆற்றுக்குச் சென்று நீராடி துவாத சோர்த்துவ புரண்டங்களை (பன்னிரண்டு நாமங்களைத்) தரித்து, பகவத் பக்த சின்னங்களுடன் சர்வகால சர்வாவஸ்தைகளிலும் பகவந்நாமத்தையே ஜபித்துக் கொண்டிருந்தான். மறுநாள் காலை இராஜன் மந்திரிமார்களைப் பார்த்துத் தன் குமாரத்தியின் விவாகத்தைக் குறித்துத்தான் கொண்டிருக்கும் மனோ நிச்சயத்தைத் தெரிவித்து அப்படிப்பட்ட புருஷன் எவ்விடத்திலேனும் காணப்பட்டால் ஆறு மாதம் வரையில் அவனுடைய நடத்தைகளைப் பார்த்து, அதன்பிறகு அவனைத் தன்னிடத்தில் அழைத்து வரும்படி ஆஞ்ஞாபித்துக் கட்டளை யிட்டான். பட்டினமெங்கும் தேடியலைந்தபோது அன்றிரவு இராஜனது படுக்கையறையில் பதுங்கியிருந்து வெளியான வேஷதாரியாகிய கள்ளனே சேவகர்களுக்குத் தென் பட்டான். சேவகர்கள் தன்னைக் கண்டுபிடிக்கத் திரிந்து கொண்டிருப்பதை வேஷதாரியாகிய திருடன் அறிந்து தன் மனோரதம் சித்திக்குமென்னும் நம்பிக்கையுடன் ஒரு

க்ஷணமேனும் ஓயாமல் பகவந்நாமத்தை ஸ்மரித்துக் கொண்டே வந்தான். இவ்வாறு ஸ்மரித்துக் கொண்டு வந்தபடியால், அப்பியாச முதிர்ச்சியினால் பகவந்நாமத்தில் உண்மையாகவே அவனுக்கு ருசியுண்டாய். முன்னிருந்த துன்மார்க்க குணங்கள் கிரமக்கிரமமாய் நசிந்து பகவத் பக்தி அதிகரித்துக் கொண்டே வந்தது. அவனை இராஜ சபைக்கு அழைத்துச் சென்றார்கள். இராஜன்தான் உத்தேசித்தபடி தனது குமாரத்திற்குக் தகுந்தவரன் (புருஷன்)இவனே என்று நிச்சயித்துத் தன் குமாரத்தியைப் பாணிக் கிரகணம் (விவாகம்) செய்து கொள்ள வேண்டுமென்றும் தனது பாதி இராஜ்ஜியத்தை அங்கீகரிக்க வேண்டுமென்றும் அரசன் அவனைப் பிரார்த்தித்தான். திருடனுக்கு அப்பியாச முதிர்ச்சி யினால் பகவந்நாமத்தில் ருசி அதிகரித்தபடியால், முன்னிருந்த துர்விஷயம் யாவும் நசிந்து போய் விஷய இச்சை பூர்த்தியாய் விட்டவனாதலால், இராஜனுடைய பிரார்த்தனையின்மீது அசூயையுண்டாய் அவ்வார்த்தைக்கு உடன்படாமல் திடீரென்று எழுந்து வெளியே சென்றான். இதற்கு வாசிட்டம் பிரமாணம் :

> பாரியை யுடையொன் யாவனனனுக்கே பற்றாம் போக
> நாரியை யில்லாதார்க்குப் போகத்தி னலமெங் குண்டாங்
> காநிகை தன்னை நீங்கிற் கருத்துரு சகத்து நீங்கும்
> போரியல் சகத்து நீங்கிற் பிரவில் பேரின்ப முண்டாம்.

அதாவது, மனைவியுடையவனுக்கே மோகத்திலும் எல்லாப் பொருள்களிலும் இச்சை உண்டாகும். மனைவி இல்லாதவனுக்குப் புணர்ச்சியின் இன்பமும் வஸ்துக்களின் இச்சையும் உண்டாகமாட்டா சம்போகத்திற்கு இடமான பெண்ணைவிட்டால் உலகத்திலுள்ள பற்றுதல் யாவும் நீங்கும் இப்பற்றுதல் யாவும் நீங்கினால் உலகத்திலுள்ள இச்சை யாவும் ஒழிந்து, சொல்லத்தகாத பேரானந்த இன்ப

கொண்டு போவதற்குச் சமயம் பார்த்துக் கொண்டு பதுங்கி யிருந்தான் இராஜனானவன் தன் மகளை, ஒரு பாகவ தோத்தமனுக்கு அவனுடைய ஜாதி குல கோத்ரம்யாதா யிருந்தபோதிலும் விசாரிக்காமல் விவாகம் செய்வித்துத் தன்னுடைய ராஜ்ஜியத்தில் பாதி ராஜ்ஜியம் அவனுக்குக் கொடுப்பதாய் தன் மனைவியிடம் சொல்லினன். கள்ளன். இவைகளைக் கேட்டவுடன்தான் முன் உத்தேசித்திருந்த திருட்டு வேலை செய்வதனால் அற்ப பலனே உண்டாகு மென்றும் அல்லது ஒருவேளை பிடிபட்டாலோ ராஜ தண்டனைக்குப் பாத்திரனாக வேண்டுமென்று எண்ணின வனாய். இப்படிப்பட்ட காரியங்களைச் செய்வதைப் பார்க்கிலும் சில காலம் வரையில் பாகவதனாய் வேடந்தரித்து இராஜ குமராத்தியையும் பாதி ராஜ்ஜியத்தையும் அடையலாம் என்று எண்ணி ரகசியமாய் வெளியே சென்று மறுநாள் அருணோ தயத்திலேயே ஆற்றுக்குச் சென்று நீராடி துவாத சோர்த்துவ புரண்டங்களை (பன்னிரண்டு நாமங்களைத்) தரித்து, பகவத் பக்த சின்னங்களுடன் சர்வகால சர்வாவஸ்தைகளிலும் பகவந்நாமத்தையே ஜபித்துக் கொண்டிருந்தான். மறுநாள் காலை இராஜன் மந்திரிமார்களைப் பார்த்துத் தன் குமாரத்தியின் விவாகத்தைக் குறித்துத்தான் கொண்டிருக்கும் மனோ நிச்சயத்தைத் தெரிவித்து அப்படிப்பட்ட புருஷன் எவ்விடத்திலேனும் காணப்பட்டால் ஆறு மாதம் வரையில் அவனுடைய நடத்தைகளைப் பார்த்து, அதன்பிறகு அவனைத் தன்னிடத்தில் அழைத்து வரும்படி ஆஞ்ஞாபித்துக் கட்டளை யிட்டான். பட்டினமெங்கும் தேடியலைந்தபோது அன்றிரவு இராஜனது படுக்கையறையில் பதுங்கியிருந்து வெளியான வேஷதாரியாகிய கள்ளனே சேவகர்களுக்குத் தென் பட்டான். சேவகர்கள் தன்னைக் கண்டுபிடிக்கத் திரிந்து கொண்டிருப்பதை வேஷதாரியாகிய திருடன் அறிந்து தன் மனோரதம் சித்திக்குமென்னும் நம்பிக்கையுடன் ஒரு

க்ஷணமேனும் ஓயாமல் பகவந்நாமத்தை ஸ்மரித்துக் கொண்டே வந்தான். இவ்வாறு ஸ்மரித்துக் கொண்டு வந்தபடியால், அப்பியாச முதிர்ச்சியினால் பகவந்நாமத்தில் உண்மையாகவே அவனுக்கு ருசியுண்டாய். முன்னிருந்த துன்மார்க்க குணங்கள் கிரமக்கிரமமாய் நசிந்து பகவத் பக்தி அதிகரித்துக் கொண்டே வந்தது. அவனை இராஜ சபைக்கு அழைத்துச் சென்றார்கள். இராஜன்தான் உத்தேசித்தபடி தனது குமாரத்திற்குக் தகுந்தவரன் (புருஷன்)இவனே என்று நிச்சயித்துத் தன் குமாரத்தியைப் பாணிக் கிரகணம் (விவாகம்) செய்து கொள்ள வேண்டுமென்றும் தனது பாதி இராஜ்ஜியத்தை அங்கீகரிக்க வேண்டுமென்றும் அரசன் அவனைப் பிரார்த்தித்தான். திருடனுக்கு அப்பியாச முதிர்ச்சி யினால் பகவந்நாமத்தில் ருசி அதிகரித்தபடியால், முன்னிருந்த துர்விஷயம் யாவும் நசிந்து போய் விஷய இச்சை பூர்த்தியாய் விட்டவனாதலால், இராஜனுடைய பிரார்த்தனையின்மீது அசூயையுண்டாய் அவ்வார்த்தைக்கு உடன்படாமல் திடீரென்று எழுந்து வெளியே சென்றான். இதற்கு வாசிட்டம் பிரமாணம் :

> பாரியை யுடையொன் யாவனனனுக்கே பற்றாம் போக
> நாரியை யில்லாதார்க்குப் போகத்தி னலமெங் குண்டாங்
> காநிகை தன்னை நீங்கிற் கருத்துரு சகத்து நீங்கும்
> போரியல் சகத்து நீங்கிற் பிரவில் பேரின்ப முண்டாம்.

அதாவது, மனைவியுடையவனுக்கே மோகத்திலும் எல்லாப் பொருள்களிலும் இச்சை உண்டாகும். மனைவி இல்லாதவனுக்குப் புணர்ச்சியின் இன்பமும் வஸ்துக்களின் இச்சையும் உண்டாகமாட்டா சம்போகத்திற்கு இடமான பெண்ணைவிட்டால் உலகத்திலுள்ள பற்றுதல் யாவும் நீங்கும் இப்பற்றுதல் யாவும் நீங்கினால் உலகத்திலுள்ள இச்சை யாவும் ஒழிந்து, சொல்லத்தகாத பேரானந்த இன்ப

சுகத்தை அடைவான் மேற்சொல்லிய கள்ளன் செய்த பக்தியே சரிகை எனப்படும் சரிகை முடிந்தபின் கிரிகை தானாய் உண்டாகும். கிரிகை முடிந்தபின் யோகியாவான். யோகம் முடிந்தபின் ஞான வானாவான், ஆதலால் முதற் படியாகிய சரிகையை எல்லோரும் மிகவும் சிரத்தை பக்தி விசுவாசங்களுடன் செய்துவந்தால் மற்ற மூன்று படிகளும் தனக்குத் தானாகவே உண்டாகும். இதற்கு வள்ளலார் பாடல் பிரமாணம்.

சரிகையிலே யீசன்சட வடிவாய் நின்றான்
கிரிகையிலே மந்திரத்திற்கிட்டி யருந்தா
னூனுமிலா யோகத்தினுள்ளொளி யாயேநின்றான்
ஞானமதி தானாயினான்.

சரிகையிலே இருக்கப்பட்டவர்களுக்கு. ஈசன், கல், மரம், செம்புகளால் செய்யப்பட்ட விக்கிரங்களில் நின்றார். கிரிசையிலே இருக்கப்பட்டவர்களுக்கு மந்திர வடிவமாய் நின்றார். யோகநிலை அறிந்தவர்களுக்கு உள்ளொளியாய் நின்றார். ஞானத்தில் தன்னில் ஐக்கியம் செய்து தான் தானாய் நின்றார். காயும் கிழங்கும் கனியும் புசித்துத்தவம் செய்தாலும் ஜநந மரணமென்னும் பிறவி நீங்கமாட்டா. தேகத்திற் குள்ளிருக்கும் இருதய கமலத்தின் மத்தியில் கூடஸ்தனாயும் சாக்ஷிமாத்திரனாயும் சதாசிவனென்று பெயர் வழங்கும் பரமாத்ம சொரூபத்தை எங்கும் நிறைந்த பராபர வஸ்துவாய் பார்த்துத்தான் அவ்வஸ்துவில் கலந்தால், பிறவி நீங்கும் இதற்கு வள்ளலார் சரித்திரம் பிரமாணம்.

காயுங் கிழங்குங் கனியருந்தி நோற்றாலு
மாயும் பிறப்பகல் மாட்டுமோ – காயத்திற்
றங்குஞ் சதாசிவனைத் தானாகக் கண்டுதனை
யெங்குமாய்க் கண்டா லிறும்.

பகவத் குணானுபவத்தின் ருசியறுத்தி தத்தேகநிஷ்ட் டனாய் ஆத்மானுபவமுடைவனுக்கு லௌதீக விஷயங் களில் ருசி உண்டாகுமா? உண்டாகவேமாட்டா. சில சமயங் களில் அவனுடைய மனம் துர்விஷயங்களில் திருப்பினாலும், அவ்வாறு போகவிடாமல் அதனை உடனே திரும்பிக் கொள்வான்.

ஆத்மா, மனதுடன் கூட எதுவரையில் சம்பந்தப்பட் டிருக்கிறதோ, அதுவரையில் ஜனன மரணங்கள் வந்து கொண்டேயிருக்கும் மனம் இறந்தால் ஜீவன் மோக்ஷத்தை அடையும். அஃதெப்படியென்றால் ஆத்மாவிற்குச் சக்ஷாய காரியாயிருந்த மனம் நசிந்துவிட்டபடியால் ஆத்மாவாகிய தான் வேறு சரீரங்களில் புகுந்தொழில் நீக்கத் தன் நிஜ சொரூபமாகிய பரம்பிரம்மத்துடன் போய்ச் சேர்ந்து ஐக்கிய மாய்விடும். எப்படியென்றால், கண்ணாடி எதிரில் மற்றொரு கண்ணாடி வைத்தால், அவைகள் எப்படி ஒன்றையொன்று அறியாமலிருக்கின்றதோ அதுபோல் சராசரமென்கிற அசையும் அசையாப் பொருள்களெல்லாம் அசையாமல் பரிபூரணமாய் நிற்பதற்கு, நீ நான் என்னும் கற்பனை முதலாகிய வேற்றுமைகளெல்லாம் அடங்கிவிட்டால் ஒப்பற்ற கைவல்யமாகும். இதற்கு வாசிட்டம் பிரமாணம்.

> நிற்பநடப்ப வெனுமனைத்தி னிழலாடாது வெறிதிருக்குந்
> தற்பணந்தா னெப்படியோ தானே விளங்கு மப்படியே
> தற்பமுறுநீ நான் முதலாங் காட்சி விகற்ப பெலாமடக்கி
> யற்பமெனினுங் காட்சியறி லதுவேதனிக் கேவல நிலைமை

அணு (கண்களுக்குக் காணப்படாத சிறிய புழு) முதல் பிரமதேவன் வரையில் அநேககோடி ஜன்மங்களை யுகங்கள்தோறும் எடுத்துக்கொண்டு வந்தபோதிலும் எதுவோ ஓர் ஜன்மத்தில் அந்தப் பிரப்பிரம்மத்தல் போய்ச் சேர வேண்டியது திண்ணம். ஆனால் ஜீவகோடிகள் அந்தப்

பரப்பிரம்மத்தில் போய்ச் சேருவது மிகவும் கஷ்ட்ட சாத்தியம்; ஏனென்றால், பிரமதேவர் ஜீவர்களைச் சிருஷ்ட்டி செய்த நாள் முதல் நாளது வரையில் எத்தனையோ கோடி ஜன்மங்கள் எடுத்து ஒவ்வொரு ஜன்மத்திலும் மாறி மாறி வந்து கொண்டிருக்கும் பெண்டு பிள்ளைகளின் மீதும், பூமி வீடு தனம் தான்யங்களின் மீதும். அதிக பிரீதியை வைத்து மரணமடைந்து கொண்டே வருவதால், இவர்களுக்கு ஜன்மங்கள்தோறும் பெண்டு பிள்ளைகளின் மீதிருந்த ஆசை ஒவ்வொரு ஜன்மத்திலும் அதிகரித்துக் கொண்டே வரும் இப்படிப்பட்டவர்களுக்கு மென்மேலும் சம்சார வாசனை யில் மனம் இழுத்துக்கொண்டு செல்லுமேயொழிய, மோக்ஷத்தை அடைய இச்சையை எவ்வளவேனும் உண்டாகமாட்டா. உலகத்திலுள்ள ஜனங்களெல்லோரும் இப்படிப்பட்ட மாயா சக்கரத்தில் அகப்பட்டு கொண்டிருக்கிறார்கள்.

இந்த மாயா சக்கரத்தைக் குறித்து ஸ்ரீ பகவத் கீதை அத்தியாயம் 3, சுலோகம் 16.

ஏவம் ப்ரவர் திதம் சக்கரம் நாநுவர்த்தயதீஹ யஹ.
அகாயு ரிந்திரியாராமோ மோகம்பார்த்த ஜீவதி.

அர்ஜுநா! இந்த யஞ்ஞும் சக்கராகாரமாய்த் திரிந்து கொண்டிருக்கிறது. அஃதெப்படியென்றால், யஞ்ஞும் ஜனங்களுடன் கூடவே பிரம்மதேவனால் உற்பத்திச் செய்து அனுப்பப்பட்டது. ஜனங்கள் செய்யும் யஞ்ஞானத்தினால் தேவதைகள் பிரீதியடைகிறார்கள். தேவதைகள் பிரீதியடை வதனால் மழை பெய்கிறது. மழை பெய்வதனால் ஆஹார (சாப்பிடும்) வஸ்துக்களெல்லாம் விசேஷமாய் விளைகிறது, அப்படி விளைவதனால் பகவானுக்கு ஆராதனை செய்ய சக்தியுடைவர்களாயிருப்பார்கள். இப்படிப்பட்ட கர்மம் மறுபடியும் அந்தப் பகவானிடத்திலேயே சமர்ப்பணமாகிறது. ஆதலால், இந்த யஞ்ஞரூபமாகிய கர்மம் எந்தப் பிரப்பிரம்

மத்திலிருந்து பிறந்ததோ, அந்தப் பரப்பிரம்மத்திலேயே ஐக்கியமாய் மறுபடியும் அதிலிருந்தே உண்டாகிறபடியால், இதற்குச் சக்கரமென்று சொல்லப்படும். இந்த விஷயங் களையெல்லாம் எவனொருவன் சரியாய் அறியாமல், தான் செய்யப்பட்ட கர்மங்களெல்லாம் பரமாத்மாவினாலேயே உண்டாயினவென்றும், அவற்றின் பலன் அந்தப் பரமாத்மா விற்கே சேர வேண்டியதாயிருக்கிறதென்றும் எண்ணாமல் பஞ்சேந்திரிய (ஐந்து இந்தியரிங்களின்) வழியாய் மனத்தை ஓடும்படிச் செய்கிறானோ, அவன் பாபாத்மானாகிறான்:

ஓ அர்ஜுனா! உலகத்தில் முதல் விருக்ஷமுண்டாயிற்றா? அல்லது விதையுண்டாயிற்றா என்னும் விஷயம் எவ்வாறு சொல்லத் துணியமாட்டோமோ, அதுபோல் இந்த யஞ்ஞரூபமாகிய கர்மத்திற்கு இது முதலென்றும் இது கடைசியென்றும் சொல்வதற்குச் சாத்தியபடமாட்டாது. அதுபோல் சம்சாரமென்னும் சமுத்திரம் அனாதி என்று அறியக்கடவாய். அஃதெப்படியென்றால், ஒரு சக்கரத்தின் மீதேறி அந்தச் சக்கரத்தை அநேக தடவைகளில் சுற்றி வரும் எறும்பானது, தான் வெகுதூரம் திரிகின்றதென்று எண்ணுமே யன்றி மறுபடியும்தான் யதாஸ்தானத்திற்கே வருகிறதென்று தெரிந்து, அந்தச் சக்கரத்தை விட்டு இறங்க எப்படி பிரயத்தனப்படாதோ, அதுபோல் சம்சாரியானவன் தான் ஒருமுறை செய்த காரியங்களையே மறுபடியும் செய்து அப்போதைக்கப்போது தான் செய்துவரும் காரியம். புதிதான காரியமென்று எண்ணி பிரமையடைந்து இந்தச் சம்சாரமென்னும் சமுத்திரம் அனாதி என்று அறியக்கடவாய். சக்கரத்தில் பிறந்து கொண்டும் இறந்து கொண்டும் இருப்பானேயன்றி, இதிலிருந்து தப்பித்துக் கொள்வதற்குப் பிரயத்தினப்படமாட்டான்.

இப்படிப்பட்ட மாயா சம்சார சக்கரத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கப்பட்டவர்கள் என்றைக்கோ ஓர் நாள்

அத்வைத உபந்நியாசங்களைக் கேட்கவேண்டுமென்றும் இச்சையுண்டாய் உபந்நியாசம் செய்யுமிடத்திற்குச் சென்று உட்கார்ந்திருந்த போதிலும் உபந்நியாசம் ஆரம்பித்தவுடன், ஐயோ மாயா சம்சார சக்கரத்தில் மூழ்கியிருக்கப்பட்ட நீ, இந்த வேதாந்த ரகசியங்களைக் கேட்க அருஹனல்லவே என்று மூதேவியானவள் பிரசன்னமாகின்றாள். அந்த மூதேவி யாரென்றால் ஜன்மாந்திரங்கள் தோறும் இவனுடன் கூடவே சாக்ஷியாய் வந்து கொண்டிருக்கும் பரப்பிரம்மத்தின் அம்சமாகிய ஆத்மாவென்று அறியக் கடவீர்களாக.

இந்த ஆத்மா. சிலருடைய மனத்தை உபந்நியாசங்களைக் கேட்க விடாமல் வேறு விஷயங்களில் அவர்களின் மனத்தை இழுத்துச் செல்லும்.

இப்படிப்பட்டவர்களுக்கு ஜன்மங்கள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. இவைகளையெல்லாம் விட்டு மோக்ஷத்திற்குரிய சாதனங்களைச் செய்துவந்தால் 'முக்தி' பெறலாம்.

"லாலநே தாடநே மாதுர் ந வைஷமயம் யதார்பகே
தத்வதேவ மஹேஸஸ்ய நியந்துர் குணதோஷயோ ஹோர"
ஸ்ரீபகவத் கீதை, அத்தியாயம்4, சுலோகம் 8.

என்று சொல்லியிருக்கின்றது. அதாவது, தாய் சொல்வது போல் கேட்கும் குமாரனை. அவள் பிரீதியுடன் பார்ப்பாள், அவள் வார்த்தையைக் கேளாத குமாரனை அடிப்பாள், அப்படி அடிப்பதேன் என்றால், தான் சொன்னபடி கேட்டு அவனும் நல்வழிக்கு வரவேண்டுமென்னும் எண்ணத்தினால் அவனை அடிக்கின்றாளேயொழிய அவன்மீது விரோதத்தினாலல்ல அதுபோல் சகல புருஷர்களுக்கு நல்லறிவு தோன்றி மோக்ஷானந்தப் பதவியை அடையும் பொருட்டு மேற்சொன்ன விஷயங்களையெல்லாம் எழுத நேரிட்டது.

எவனொருவன் தன் மனத்தை சதா பகவத் விஷயத்தில் லயிக்கும்படி அப்பியசித்து வருகிறானோ, அப்படிபட்டவனுக்குக் கிரமக் கிரமமாய் இந்திரியங்கள் வசமாகும் சகல இந்திரியங்களும் எப்பொழுது சரியாய் வசப்பட்டு நிற்கின்றனவோ, அப்பொழுதுதான் திடஞானமுடையவனாயிருப்பான். ஆதலால் மனத்தையும் இந்திரியங்களையும் சுவாதீனம் செய்து கொண்டு சமாதியில் இருக்கவேண்டும். அதாவது கண்கள், மூக்கு, வாய், செவிகள் தேஹ சர்மம் என்னும் ஐந்து இந்திரியங்களும், மனத்திற்கு வேலைக்காரர்களாய் இருந்து வெளி விஷயங்களைக் கொண்டுபோய் மனத்திடம் மேற்சொல்லிய இந்திரியங்கள் சேர்ப்பிக்கின்றன. இந்திரியங்கள், விஷயங்களை மனத்திடம் சேர்ப்பித்தவுடன் அம்மனம், உள்முகமாய் உதவியற்ற அனேக யோசனைகளைச் செய்துகொண்டே கடைசியில் எல்லாவற்றையும் மறந்துவிடும்.

நமது சரீரத்தின் மத்தியில் தாமரைக் கமலம்போல் இருக்கும் இருதய கமல கூண்டுக்குள் நிவசித்துக் கொண்டிருக்கும் ஆத்ம சன்னிதானத்தை அனுசரித்துக் கொண்டிருக்கும் மனம் புத்தி சித்த அஹங்காரமென்னும் அந்தக் கரணங்கள் நான்கும் நீர்க் குடத்திலுள்ள ஜலத்தைப்போல் சதாகாலமும் அசைந்து கொண்டிருப்பதனால் நமது இருதய கமலத்தில் இருக்கும் ஆத்மாவைத் தெரிந்து கொள்ளாமல் இருக்கின்றோம். மனம் புத்தி சித்தம் அஹங்காரமென்னும் அந்தக் கரணங்கள் நான்கும் அசையாமல் நின்றுவிட்டால் முன் நீர்க்குடத்தில் ஜலம் அசையாமல் இருந்து ஜலத்தில் சந்திரனது பிரதிபிம்பம் எவ்வளவு சுத்தமாய்க் காணப்பட்டதோ, அதுபோல் மனம் அசையாத தீபம்போல் நின்றால், இருதய கமலத்திலிருக்கும் பரமாத்ம சொரூபத்தைக் காணலாம் இதற்குத் திருஷ்ட்டாந்தம் ஸ்ரீ பகவத் கீதை அத்தியாயம் – 2, சுலோகம் 61 பிரமாணம்.

* தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பரஹ
வசேஹி யஸ் யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞாப்ர திஷ்ட்டிதா

கிருஷ்ணன். இந்திரியங்கள் யோகாப்பியாசியினது மனத்தையும் பலவந்தமாய் இழுத்துக் கொண்டிருக்கும். ஆனால், அவற்றை அவன் சுவாதீனப்படத்திக் கொள்ள அவனுக்கு மிகவும் கஷ்டமாகவே இருக்கும். ஆயினும் யோகாப்பியாசியானவன், இந்திரியங்களென்னும் குதிரைகளினால் இழுத்துக் கொண்டிருக்கும் தன் மனதென்னும் வண்டியைத் துன்மார்க்க விஷயங்களில் போகவிடாமல் புத்தி என்னு கயிற்றால் இழுத்துப் பிடித்துச் சன்மார்க்கத்திற்குத் திருப்பிக் கொண்டுவர வேண்டும். அப்படிச் செய்வதனால், காரில்லாத (கொழுவில்லாத) கலப்பை எப்படி பூமியை உழமாட்டாதோ. அதுபோல் மனமில்லா விட்டால் எந்த இந்திரியங்களும் பிரயோஜனப்படமாட்டா. இந்திரியங்களில் ஏதேனும் ஓர் இந்திரியம் தப்பு மார்க்கங்களில் ஓடினால் அது மனதினுடைய தப்பாகவே இருக்கிறது அப்படிப்பட்ட மனத்தை முதல் வசப்படுத்திய பிறகு இந்திரியங்களை வசப்படுத்துவதற்குப் பிரயத்தினப்பட வேண்டும். அப்படி மனத்தை வசப்படுத்தச் சாதனம் புத்தியேயாம். எவனொருவன் தன் புத்தியினால் நல்லது. கெட்டது என்பவற்றை அறிந்து தன் மனத்தைக் கெட்ட மார்க்கங்களில்

---

* (தாநி) ஆத்மதத்துவத்தை விசாரிக்குமளவில், இந்திரியங்களுக்கெல்லாம் மனதே ராஜன் அந்த ராஜனைப் பிடித்துச் சிறைச் சாலையில் அடைத்தபொழுது அதாவது, பரப்பிரம்ம சொரூபமாயிருக்கும் ஆத்மாவில் மனத்தை ஐக்கியம் செய்தபொழுது சங்கல்பங் (எண்ணங்)களென்னும் சேவகர்கள் எல்லோரும் தலைகாட்டாமல் ஓடிப்போய் விடுவார்கள் என்பதேவாம்.

இந்திரியங்களென்றால், கண்கள் மூக்கு வாய்செவிகள் தேகத்தின் மீதிருக்கும் தோல் இவ்வைந்தையும் இந்திரியங்களென்று சொல்லப்படும்.

போகவிடாமல் இழுத்துப் பிடிக்கிறானோ அப்படிப்பட்ட வனுக்கு முக்தி சுலப சாத்தியமாகும்.

*அர்ஜுனன் :* ஆனால் மனத்தை வசப்படுத்துவதற்கு புத்தியே சாதனமென்று சொன்னீரல்லவா? அதனை எப்படிச் சாதனம் செய்ய வேண்டுமோ, அதை விவரித்துச் செல்லும் கிருஷ்ணா!

*கிருஷ்ணன் :* அர்ஜுநா! மனிதன், ஸ்திரீ ரூபத்தைப் பார்த்தவுடன், அவனுடைய மனம் அவள் மேல் நாடுகின்ற தல்லவா? அப்பொழுது விவேகியானவன் என்ன செய்ய வேண்டுமென்றால், நாரீ ஸ்தநபர நாபீ தேஸம் ஸ்ருஷ்ட்வா மாயாமோஹா வேஸம் ஏ தந்மாம்ஸ வஸாதி விகாரம் மநஸி விஸிந்திய வாரம் வாரம் என்னும் ஸ்ரீ சங்கராச்சாரியார் வாக்கிய ரீதியாய் ஸ்திரீ ரூபம் சீழ் ரத்தம் மாமிசம் நாற்றங் களுடன் கூடிய கெட்ட பதார்த்தமென்று எண்ணினால் அப்படிப் பட்டவனுடைய திருஷ்ட்டிக்கு ஸ்திரீகள் தெரிந்தபோதிலும் மோகத்தை அடையாமல் இருப்பான். இப்படி இருந்த போதிலும் அவனது இந்திரியங்கள் அப்போதைக்கப்போது கெட்ட விஷயங்களில் ஓடிக்கொண்டேயிருக்கும். அப்படி ஓடாமலிருப்பதற்காக யோகியானவன் தன் மனத்தைச் சதா காலமும் என்னிடம் சேர்த்து என்னையே நம்பியிருந் தால் அப்பொழுது அந்த யோகியின் மனம், இந்தியரிங்களின் வழியாய்த் தப்பு விஷயங்களில் பிரவேசிக்காமல் நின்று விடும். அஃதெப்படியென்றால், இதுவரையில் மனம் வண்டி யைப் போன்றதென்றும் இந்திரியங்கள் குதிரையைப் போன்றதென்றும், பின் புறமாய் வண்டியின் சக்கரத்தை இழுத்துப் பிடிப்பவன் யோகியைப் போன்றவனென்றும் அப்படி இழுத்துப் பிடித்துக்கொண்டிருந்தபோதிலும் அந்தக் குதிரைகள் அதிக கஷ்டத்தோடாயினும் வண்டியை இழுத்துக் கொண்டிருக்குமென்றும் சொல்லி இருந்தேனல்லவா? அப்படிப் பின்புறமாய் மனிதன் வண்டியின் சக்கரத்தை

இழுத்துப் பிடிப்பதை விட; உறுதியான கயிற்றால் அந்தச் சக்கரத்தை ஒரு விருக்ஷத்தில் கட்டிவிட்டால், அப்பொழுது அந்த வண்டியைக் குதிரை இழுக்குமா? இழுக்காது.

அதுபோல், யோகியானவன் தன் மனதென்னும் வண்டியை ''நான்'' என்னும் விருஷத்தில் கட்டிவிட்டால், அதாவது, மனத்தை ஆத்மாவில் ஐக்கியம் செய்துவிட்டால் அப்பேர்ப்பட்டவனுடைய இந்திரியங்கள் விஷயங்களில் போகமாட்டா. ஆதலால், மேற்சொல்லியதுபோல் எவ னொருவன், தன் மனத்தை பகவத் விஷயத்தில் எப்பொழுதும் லயித்திருக்கும்படிப் பழகி வருகிறானோ, அப்படிப்பட்ட வனுக்குக் கிரமக்கிரமமாய் சகல இந்திரியங்களும் வசமாகும். சகல இந்திரியங்களும் வசமானால் பிறகு ஸ்திரமாகிய ஞானம் அடைவான். ஆதலால், மனத்தையும், இந்தியரிங்களையும் தன் சுவாதீனம் செய்து கொண்டு சமாதியிலிருக்க வேண்டும்.



## 113. ஞானி க்ஷணநேரம் புழு சரீரமெடுத்துப் பிறகு மோக்ஷமடைந்தார்

ஒரு பெரிய பிரம்ம ஞானியாகிய சாதுவிற்குப் பிராணப் பிரயாண காலம் சமீபித்தது. அப்பொழுது தம்மிடமிருக்கும் சிஷ்யர்களில் அதிசூக்ஷ்ம புத்தியுடைய சிஷ்யனை ஞானி கூப்பிட்டு.

'இப்பொழுது எனது சரீரத்திலிருக்கும் ஜீவன் கிளம்பி விடப் போகிறது. அச்சமயத்தில் ஒரு பெரிய இடி போன்ற சப்தம் உண்டாகப் போகிறது. அந்தச் சமயம் நீ மிகவும் ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும்'' என்று சொல்லினர். அந்தச் சிஷ்யன் ஜீவாத்மா. பரமாத்மா லக்ஷணங்களைக் குறித்து அவர் அடிக்கடி உபந்யாசங்களைச் செய்து வருவதை யெல்லாம் நன்றாய் கேட்டு அறிந்தவன். குருவின் பிராணன் சரீரத்திலிருந்து கிளம்பிக்கொண்டிருக்கும் சமயத்தில் 'பழமோ இலந்தப்பழம்' என்று ஒருபெருஞ் சப்தமுண்டா யிற்று. அந்தச் சப்தம் சிஷ்யன் காதில் விழுந்தவுடன், ஓஹோ! இப்பொழுது நமது குருவானவர் இலந்தம் பழத்தில் புழுவாய் வந்திருக்கின்றார். என்று எண்ணி, உடனே வெளியில் வந்து இலந்தம்பழம் விற்றுக்கொண்டு செல்லும் கிழவியைக் கூப்பிட்டு, அக்கூடையிலுள்ள இலந்தம் பழங்களை யெல்லாம் வாங்கி ஒவ்வொரு பழத்தையும் நன்றாய் பிசையும் படி மற்ற சிஷ்யர்களுக்கெல்லாம் சொல்லி, தானும் அப்பழங் களை நன்றாய் பிசைந்தான்; அப்பொழுது புழு ரூபமடைந் திருந்த தமது குருவானவர் அப்புழு சரீரத்தை விட்டுப் பிறகு மோக்ஷமென்னும் வீட்டை அடைந்தனர். அவர் மஹா ஞானியிருந்தும் புழு சரீரமெடுத்து பிறகு உடனே மோக்ஷ மடையவேண்டுமென்று அவருக்குப் பிராரப்த கர்மமிருந்த படியால் சிலநேரம் புழு சரீரமெடுத்துப் பிறகு மோக்ஷமடைந்தார்.

## 114. சரீரமே காசி க்ஷேத்திரம்

நமது இந்தியாவில் இருக்கப்பட்ட காசி, பிரயாகா, ஸ்ரீசைலம், காஞ்சி, காளஹஸ்தி முதலானவைகளெல்லாம் சரீரத்தில் இருக்கின்றனவேயொழிய மற்ற எவ்விடங்களிலும் இல்லை.

சரீரமே காசி க்ஷேத்திரம். இந்தச் சரீரத்தினால் செய்யப்படும் பிரம்மஞானமே காசி கங்கை பிரம்ம ஞானத்திற்கு வேண்டிய சிரத்தைகளே கயா, குருவை யாசித்து அவரால் பிரம்மோபதேசம் பெறுவதே ப்ரயாகை. விஸ்வேஸ்வரன் என்பது பிரத்தியே காத்மா. இவைகளெல்லாம் சரீரத்திலேயே இருக்கின்றன.

பரிசுத்தமாகிய கண்ணாடியில் எல்லா வஸ்துக்களுமத் எப்படிக் காணப்படுகிறதோ அதுபோல் சரீரத்தில் இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்று மூன்று நாடிகளிலிருக்கின்றன. இம்மூன்று நாடிகளிலும் சுழுமுனை என்னும் ஜீவன் நாடியில் நின்றிருப்பதனால், பெரிய விருக்ஷத்தின்மேல் இருப்பான் கீழே இருக்கப்பட்ட வஸ்துக்களையெல்லாம் எப்படிப் பார்க்கிறானோ. அதுபோல், ஜீவனும் சுழுமுனையில் இருந்து சகலவித ஆசையில் பந்தபட்டிருப்பதனால் ஜநந மரணாதிதுக்கங்களை அடைய வேண்டியதாயிருக்கிறது.

இருதயத்தில் தலைக்கீழாய்த் தொங்கிக் கொண்டிருக்கும் கமல மத்தியில் பரமேஸ்வரனான ஆத்மாவானவர் நவசித்துக் கொண்டிருக்கிறார். அப்பரமேஸ்வரனாகிய ஆத்ம சொரூபத்தில், ஜீவஸ்வரூபியாகிய தான் எப்பொழுது போய் சேருகிறானோ அப்பொழுதே ஆநந்த சொரூபனாகிறான்.

தேகம் முதல் ஆண்ட பிண்ட பிரம்மாண்டங்களெல்லாம். அக்கினியிலிருந்து உண்டாகிய பொரிகளைப்போல். அந்தப் பரப்பிரம்மத்திலிருந்தே உண்டாயிற்றென்று அறிய வேண்டும். சரீரமே நானென்று பிரம்மையடைந்து ஞான காண்டத்தை அறியாமல், கர்ம காண்டத்தில் மூழ்கி கண்களுக்குக் காணப்படும் காசிகயா பிரயாக என்று சொல்லப்பட்ட தீர்த்தங்களுக்கெல்லாம் சென்று அந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து முக்தியடையவேனென்று நினைக்கின்றான்.

நாற்றமுடைய கள் குடத்தைக் கொண்டுபோய் புண்ணிய தீர்த்தங்களாகிய கங்கைகளில் எத்தனை முறை கழுவிய போதிலும் குடத்திலுள்ள கள் நாற்றம் போகாமலிருப்பதால் சுக்கில சோகித் சம்பந்தங்களினால் உண்டாகிய தேகத்திற்குள், அநேக ஜன்மங்களிலிருந்து தொடர்ந்து வந்து கொண்டே இருக்கும் வாசனைகளென்னும் அழுக்குகளையெல்லாம் கழுவி போக்கடிக்காமல் சரீரத்தின்மேலிருக்கும் தோலை காசி கங்கை கயாபிரயாக என்று சொல்லப்பட்ட தீர்த்தங்களில் எத்தனை முறை கழுவிய போதிலும் மோக்ஷமென்னும் வீட்டை அடைய மாட்டார்கள். அநேக ஜன்மங்களிலிருந்து ஸ்திரீ புருஷர்களைத் தொடர்ந்து கொண்டே வரும் ஆசைகளென்னும் அழுக்குகளையெல்லாம் பிரம்ம ஞானமென்னும் ஜலத்தினால் கழுவிப் போக்கடித்து 'ஹம்ஸ' ஸ்வரூபர்களாய் இருப்பார்களேயாயின் அதன்பிறகு ஜநந மரணங்களென்னும் பிரவாகத்திலிருந்து விடுபடுவார்கள்.

## 115. கோபம் எதனால் உண்டாகிறது

ஏதோ ஓர் குரோகத்தினால் ஒருவன், மற்றொருவனைத் தூஷிக்கிறான். அவன் அந்தத் தூஷணைகளைக் கேட்டவுடனே அவனுக்குள்ளிருக்கும் மனம், புத்தி, சித்த அஹங்கார மென்று சொல்லப்பட்ட நான்கு அந்தக் கரணங்களி லிருந்தும்அஹங்காரமென்பதற்குக் கோபமுண்டாகும். அஹங்காரத்திற்குக் கோபமுண்டானவுடன் சரீரத்திலிருக்கும் இரத்தத்திற்கு அதிக உஷ்ணமுண்டாய் அந்த உஷ்ணத் தினால் சரீரத்திலிருக்கும் இரத்தமெல்லாம் பொங்கிக் கொண் டிருக்கும், சரீரத்திலிருக்கும் இரத்தம் பொங்குவதனால் அந்தச் சமயத்தில் முகம் கண்கள் மிகவும் சிவந்து சரீரத்திற்கு நடுக்கலை உண்டாக்கும். சரீரம் நடுங்குவதனால் மீசைகள் படபடவென்று துடித்துக்கொண்டிருக்கும்.

ஒரு பாத்திரத்தில் ஜலம் விட்டு அப்பாத்திரத்தை அடுப்பில் வைத்து, அதன்மேல் ஒரு இலேசாகிய தட்டை எரிய விடும்பொழுது பாத்திரத்திற்குள்ளிருக்கும் ஜலத்திற்கு அதிக சூடுண்டாய், அந்த ஜலம் பொங்கி தெள்ளிக் கொண்டிருக்கும். அப்பொழுது பாத்திரத்தின் மேல் மூடி யிருக்கும் தட்டானது ஜலம் பொங்கும் வேகத்தினால் மேலே எகிறி குதித்துக் கொண்டிருக்கும். அதுபோல், அதிகக் கோபத்தினால் இரத்தம் பொங்கிக் கொண்டிருக்கும். அப்படிப்பட்ட சமயத்தில் அவன் எப்படிப்பட்ட புத்திசாலி யாயிருந்த போதிலும் சரி, கோபத்தினால் அப்புத்தியெல்லாம் கெடுவதுமேயல்லாமல்தான் கற்ற ஸ்மிருதி புராண இதிகாசங்களையும், ஆசார்ய உபதேசத்தினால்தான் தெரிந்து கொண்ட விசேஷ விஷயாம்சங்களையெல்லாம் மறந்து, அவ்வேகத்தினால் தன் மதிகெட்டுப் புத்தி நாசமாய்த் தன்னைப் படைத்தவனை மறுபடியும் தூஷிப்பதோ அடிப்பதோ,

அல்லது கொல்லுவதோ இப்படிப்பட்ட காரியங்களில் கொண்டு செல்லும் ஒன்றை அவன் கோபம் செய்துவிடும். இதற்குத் தாயுமானவர் பாடல் பிரமாணம் என்னவென்றால்,

"ஆராயும் வேலையிற் பிரமாதி யானாலு
மையவொரு செயலுமில்லை
அயமதியொடு பேசாத பெருமைபெறு
குணசந்த்ரராமென விருத்தபெரும்
நேராக வொருகோப மொருவேளை வரவந்த
நிறைவொன்று மில்லாமலே
நெட்டுயிர்த் துத்தட டழிந்துளறு வார்வசன
நிர்வாக ரென்ற பேரும்.

என்று சொல்லியிருக்கின்றார். ஆதலால், தனக்குண்டாகும் கோபத்தினால் மேற்சொல்லியது போல் செய்து முடித்து சற்றுநேரம் சென்ற பிறகு மறுபடியும் அவன் கோபம் சாந்த மாகும். கோபம் சாந்தமானவுடன் சரீரத்தில் பொங்கிக் கொண்டிருந்த இரத்தத்தின் கொதிப்பெல்லாம் அடங்கி விடும். அப்பொழுது தன் ஸ்த்திர புத்தி தனக்குண்டாய் ஆஹா! எனக்குண்டான கோபத்தினால் எவ்வளவு துன்மார்க்க காரியம் செய்து விட்டென்று தனக்குள்தான் ஆலோசித்துப் பிறகு விசனபடுகிறான். கோபமென்பது சகஜமாய் எல்லோ ருக்கும் வருவதுண்டு. எவர்களுக்காகிலும் கோபம் வந்தால் உடனே அந்த இடத்தை விட்டு இருபதடி தொலைவில் சென்றுவிடவேண்டும். அவ்வாறு சென்றுவிட்டால் அக் கோபம் தணிந்து பொங்கிக் கொண்டிருந்த இரத்தம் குளிர்ந்துவிடும்.

இந்நூலாசிரியராகிய யோகீஸ்வரர் இவரது மனைவி யாருடன் கூடிவாழும் நாளில் எப்பொழுதாகிலும் ஒவ்வொரு சமயங்களில் குடும்ப விஷயமாய் இவரது மனைவியாருக்குக் கோபமுண்டாய் பிறகு இந்நூலாசிரியரைப் பார்த்து உரத்த

சப்ததத்துடன் சில வார்த்தைகளைப் பேச ஆரம்பித்தவுடன் வெளியே போய்விடுவது வழக்கம். இவர் வெளியே போகும்பொழுது இவரது பத்நியார் இவ்வாறு சொல்லுவது வழக்கம் அதாவது.

''இனி இங்கு நிற்காமல் மெதுவாய் நழுவி விடுவார். இருந்தால் வார்த்தைக்கு வார்த்தை முதிர்ந்து அதனால் கலஹமுண்டாகுமென்று எண்ணி வெளியே போய் விடுகிறார். எப்போதாகிலும் குடும்ப விஷயமாய் ஏதாகிலும் கேட்டால் அதற்குத் தக்க பதில் சொல்லாமல் ஒவ்வொரு முறையும் இதுபோல் போய் விடுகிறார்.'' இந்நூலாசிரியர் இவ்வாறாக குடும்பத்திலிருந்து அப்பியாசம் செய்து வருங்காலத்தில் பிறகு இவர் மனைவி யார் சிவபதவி அடையும் வரையில் தம்பதிகள் இருவரும் நகமும் சதையும் போல் ஒன்றாய்க் கூடியிருந்து வாழ்ந்து வந்தார்கள்.

இவ்வம்மையார் சிவபதவி அடைந்தவுடன் இவர் ''சந்யாசி'' ஆசிரமம் பெற்று பிறகு இந்த 'ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம்'' என்னும் நூலை எழுதித் தம் அனுபவங்களையெல்லாம் இந்நூலில் உபநிஷத்துக்கள், சுருதிகள், பாடல்கள் முதலாகிய திருஷ்ட்டாந்தங்களுடன் வெளியிட்டிருக்கின்றார்.



## 116. மூத்திரப்பை தீனிப்பை குடல்களைக் கழுவி காயசுத்தி செய்யப் பழகுதல்

குடலையும் தீனிப்பையையும் ஜலத்தினால் அலம்பி விடுவதற்குக் காயசுத்தி என்று சொல்லப்படும்.

இரவு மூன்று மணிக்கெழுந்து பல் தேய்த்துப் பிறகு இரண்டு படி ஜலத்தை ஓர் பெரிய சொம்பில் வைத்து



ஜலம் சாப்பிட்டு, மூத்திரப் பை, தீனிப்பை, குடல் இவைகளை இரண்டு விதங்களாய் கழுவப் பழகுதல்.

அதனுடன் ஒரு பஞ்சபாத்திரமும் வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு பெரிய சொம்பு ஜலமும் பஞ்சபாத்திரமும் குடல் கழுவும் படத்திற்கெதிரில் இருக்கின்றன பாருங்கள். மேற்படி பெரிய சொம்பிலிருக்கும் ஜலத்தைப் பஞ்சபாத்திரம் நிறைய விட்டு, அதிலிருந்து எட்டு விழுங்கு ஜலம் சாப்பிட்டு பஞ்சபாத்திரத்தைக் கீழே வைத்து இதோ மேலே இருக்கும் முதற்படம் நெ. 1 இல் மூச்சை உள்ளுக்கிழுத்து வயிற்றை எக்கி இந்நூலாசிரியராகிய யோகீஸ்வரர் எவ்வாறு உட்கார்ந்திருக்கின்றாரோ அதுபோல் நீங்களும்

மூச்சை உள்ளுக்கிழுத்து வயிற்றை எக்கி உட்கார்ந்து மூச்சைவிடாமல் வயிற்றை முன்னுக்குத் தள்ளி மறுபடியும் மூச்சை விடாமல் வயிற்றை உள்ளுக்கு எக்கிக்கொண்டு மறுபடியும் வயிற்றை முன்னுக்குத் தள்ளி இவ்விதமாய் மூச்சைப் பிடிக்க எவ்வளவு நேரம் சக்தியுண்டோ அவ்வளவு நேரமும் மூச்சைப் பிடித்து எக்கிக்கொண்டு முன்னுக்கும் பின்னுக்குமாய் வயிற்றை அசைத்து அசைத்துக் குலுக்கி, மூச்சைப் பிடிக்க சக்தியில்லாமலிருந்தால் அப்பொழுதும் மூச்சை விட்டுவிட்டு இரண்டு நிமிஷங்கள் வரையில் சும்மாய் உட்கார்ந்து தேகசிரமம் தீர்த்துக்கொண்டு, மறுபடியும் பஞ்சபாத்திரத்தில் இன்னும் கொஞ்சம் ஜலம்விட்டு, அந்த ஜலத்தில் மறுபடியும் எட்டு விழுங்கு ஜலம் சாப்பிட்டு பஞ்ச பாத்திரத்தைக் கீழே வைத்து மறுபடியும் முன்போல் மூச்சை உள்ளுக்கிழுத்து வயிற்றை முன்னும் பின்னுக்குமாய்க் குலுக்க வேண்டும். இவ்விதமாய் இரண்டு முறை செய்த பிறகு நெ. 2– படத்தில் எழுந்து நின்று வயிற்றை உள்ளுக்கெக்கிக் காட்டியிருப்பதுபோல் நீங்களும் எக்கிக் கொண்டு மூச்சை விடாமல்வயிற்றை முன்னுக்குத் தள்ளி மறுபடியும் வயிற்றை எக்கிக்கொண்டு சுமார் பத்து முறை வரையில் வயிற்றை முன்னும் பின்னுக்குமாய் அசைத்து அசைத்துக் குலுக்கிப் பிறகு மூச்சைப் பிடிக்கச் சக்தியில்லா மலிருந்தால் அப்பொழுது மூச்சை விட்டுவிட்டு இரண்டு நிமிஷங்கள் வரையில் சும்மாய் உட்கார்ந்து தேக சிரமம் தீர்த்துக்கொண்டு மறுபடியும் எட்டு விழுங்கி ஜலம் சாப்பிட்டு, உட்கார்ந்து சில நேரமும் நின்று சில நேரமும் சாதனம் செய்யவேண்டும். இவ்விதமாய் சாதனம் செய்து சிறுகச் சிறுக அந்த ஜலத்தையெல்லாம் சாப்பிட்டுக் கொண்டே வரவர வயிற்றை அசைக்கும்பொழுதெல்லாம் என்ன சப்தமுண்டாகுமென்றால், ஓர் தோல் பையில் அரை பாகம் ஜலம் விட்டு அதன் வாயை மூடி அப்பையைக்

குலுக்கும்பொழுது அதிலிருந்து என்ன சப்தம் உண்டா கின்றதோ அந்தச் சப்தம் போல் குடலை அசைக்கும் போதெல்லாம் சப்தமுண்டாகும். பஞ்சபாத்திரம் இல்லா விட்டால் அதற்குப் பதிலாய் ஒரு லோட்டா (டம்ளர்) உபயோகப்படுத்திக் கொள்ளலாம். இவ்விதமாய்ச் சாதனம் செய்யும்பொழுது பத்து நிமிஷங்களுக்கொருதரம் அடிக்கடி மூத்திரம் சுரந்துகொண்டே வரும் மூத்திரம் அடிக்கடி சுரந்து கொண்டு வருவதனால் மூத்திரப்பை பரிசுத்தமாய்விடும். மூத்திரப்பை எப்போது பரிசுத்தமாய் விடுகிறதோ அதன்பிறகு அதில் தங்கும் மூத்திரம் பரிசுத்தமான ஜலமாகவேயிருக்கும் அப்போது அம்மூத்திரத்தைப் பிடித்து யூரினாமிடா (Urinemiter) – டிக்ரி – (Degree) போட்டுப் பார்த்தால், அம்மூத்திரம் ஜலம் நிற்கும் குறி அளவில் அந்த யூரினாமிடரில் காட்டும் இது அடியேனுக்குப் பிரத்தியக்ஷ திருஷ்டாந்தம். இதை நீங்களும் அனுபவத்தில் காணலாம். மூச்சைப் பிடித்து வயிற்றை முன்னுக்கும் பின்னுக்குமாய்அசைத்து அசைத்துக் குலுக்கு வதனால் மூத்திரப் பையில் சென்று ஜலம் போக தீனி பையில் மிகுதியாயிருக்கும் ஜலமானது, கட்டியாயிருக்கும் மலத்தை யெல்லாம் கலக்கிச் சில நேரத்திற்குள் மலத்தை அதிவேக மாய் வெளியில் கொண்டுவரும் அச்சமயத்தில் மலபாதை யைத் தீர்த்துக்கொண்டு வரவேண்டும். இவ்வப்பியாசம் செய்து வெளியில் வரும் மலம் கட்டியாய் வராமல் மிகவும் தாராளமாய் வரும், மறுபடியும் முன்போல் எட்டு விழுங்கு ஜலம் சாப்பிட்டு உட்கார்ந்து சில நேரமும் நின்று சில நேரமும் மூச்சைப் பிடித்து வயிற்றை அசைத்துக் குலுக்கிச் சாதனம் செய்தால் மறுபடியும் சில நிமிஷங்களுக்குள் கொஞ்சம் கட்டியாயும் குழம்பாயும் மலம் வரும். பிறகு கால்லம்பி மறுபடியும் ஜலம் சாப்பிட்டு, உட்கார்ந்து சில நேரமும், நின்று சில நேரமும் சாதனம் செய்ய வேண்டும். இந்தச் சாதனத்தினால் இரண்டு மூன்று விசை மலம்

குழம்பாய் வந்து, மறுபடியும் செய்யும்பொழுது வெறும் ஜலமாகவே வரும். காயசுத்தி செய்து சித்தியடைந்த புருஷர்கள் ஒரு பெரிய சொம்பு ஜலம் சாப்பிட்டு ஓர் அசைவு அசைந்தவுடன் மலமும் ஜலமுமாக ஆசனத்தின் வழியாய் வந்துவிடும். மறுபடியும் ஜலம் சாப்பிட்டு வயிற்றை அசைத்தால் வெறும் ஜலமாகவே வந்துவிடும், இவ்விதமாய்க் குடலைக் கழுவிச் சுத்தம் செய்து பிறகு இன்னும் கொஞ்சம் ஜலம் தீனிப்பையில் தங்கியிருக்கும் அப்பொழுது ஆள் காட்டும் விரல் நடுவிரல் இவ்விரண்டையும் வாயிற்குள் விட்டு அவ்விரல்கள் உண்ணாக்கில் படும்படி அசைக்க வேண்டும். அப்படி அசைத்தவுடனே விசேஷ புளிப்புடன் ஜலமும் அதாவது டார்டாரிக் ஆஸிட் (Tartaric Acid) போன்ற புளிப்பு வெண்மை நுரையுடன் பால்போல் வெளியில் வந்து விழும். இப்புளிப்பானது எல்லாப் புளிப்பைவிட அதிகமாயிருக்கும். இது வயிற்றிலிருந்து கொண்டு புசித்த ஆஹாரங்களை ஜீர்ணிக்கச் செய்யும். இப்படிப் பழகுவதே காயசுத்தி என்று சொல்லப்படும்.

இந்தக் காயசுத்தி செய்ததனால் தூத்துக்குடியில் இருக்கும் ஒருவனுக்குக் கையில் இருந்த படை மறைந்து விட்டதென்றும் சொன்னார். குடல் கழுவுவதனால் வியாதிகளும் நீங்கிவிடும். இதில் சொல்லியதுபோல் அநேகர்கள் குடலைக் கழுவி மலஜலங்களை வெளியில் தள்ளப் பழகினவர்கள் எந்த வியாதியும் இல்லாமல் சுகமாய் இருக்கிறார்கள். காயசுத்தி செய்து முடிந்தவுடன் யோகாப்பியாசம் செய்ய வேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூலில் சொல்லியிருக்கும் யோகாப்பியாசத்தைச் சாதனை செய்துவர வேண்டும்.

## 117. ஸ்ரீ ராமாயணத்தின் அந்தரார்த்தம்

ஆனந்தமயமே அயோத்தியா நகரமென்று சொல்லப் படும்; அந்நகரத்தை ஆள்பவர். பரப்பிரம்மமென்னும் தசரதரேயாகும். அவருக்கு இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்னும் மூன்று மனைவிகள் உண்டு. அவர்களில் ஞான சக்தி என்னும் கௌசல்யா தேவியின் கர்ப்பத்தில் ஆத்மாவென்னும் ஸ்ரீ ராமமூர்த்தி அவதரித்தனர். அவர் அஞ்ஞானமென்னும் பால்யாவஸ்தையினால் தன் நிஜ சொரூபத்தை மறந்து, தேஹம் இந்திரியங்கள் பிரபஞ்சம் முதலானவைகளின் மீத அபிமானம் வைத்திருந்தனர். பிறகு வசிஷ்ட்டர் உபதேசத்தினால் மறுபடியும் தன் அறிவை அறிந்து வைராக்கியமென்னும் இலக்ஷுமண மூர்த்தியைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு, மனன என்னும் விசுவாமித் திரருடன் புறப்பட்டு பஞ்சமஹா பாதகம் என்னும் பர்வதங் களைக் கடந்து, ஞானம் என்னும் தீக்ஷண்ணிய பாணத்தினால் மாயா சக்தி என்னும் தார்கியை வதைத்து ஆசையென்னும் மாரீடனை சமுத்திரத்தில் மூழ்கச் செய்து துராசாரமென்னும் சிலையைக் காலினால் மிதித்து சதாசாரமென்னும் அகலிகை யின் சாபத்தை நீக்கி, ஏகாந்தமென்னும் மிதிலாபுரம் பிரவேசித்து, சந்திமென்னும் ஜநகனைத் தரிசித்து அஞ்ஞான மென்னும் சிவனுடைய வில்லை முறித்து, ஆனந்தமென்னும் சீதையை மனம் புரிந்து மனமென்னும் பரசுராமனை பங்கப் படுத்தி மோக்ஷமென்னும் அயோத்திமாநகரம் சேர்ந்து, ஜீவத்வ தியாகமென்னும் பட்டாபிஷேகத்திற்கு அருகனா யிருந்தனர். அப்பொழுது கிரியாசக்தி என்னும் கைகேகி யினால், சபலத்துவமென்னும் விக்கினமுண்டாக பெற்று ஆத்மா என்னும் இராமன், பிரம்மமென்னும் தசரதனைப் பிரிந்து மோக்ஷமென்னும் அயோத்தியா நகரத்தை விட்டு

ஆனந்தமென்னும் சீதை வைராக்கியமென்னும் இலக்ஷ்மண னுடன் புறப்பட்டு, சித்தமென்னும் சரயு நதியைக்கடந்து, புத்தியென்னும் குகனைத் துணையாகக் கொண்டு, நிக்ஷேபமென்னும் மஹா ஆரண்ணியத்திற் புகுந்து தபசு என்னும் சித்திர கூடத்தில் நின்று, அஹங்காரமென்னும் விராதனைப் பலிகொடுத்து மனமென்னும் காகாசுரனை வதைத்து, சங்கல்பமென்னும் கண்களைக் குத்தி நிர்வி கல்ப மென்னும் கண்களைத் தந்து, வீரியமென்னும் அகஸ்திய முனியை ஆசிரித்து தைரியமென்னும் அஸ்திரத்தைப் பிரயோகித்து காமமென்னும் சூர்ப்பனகையைப் பங்கப் படுத்தி ஆகாம்மிய கர்மங்களென்னும் மாரீசன் வஞ்சித்த போது, ராஜஸமென்னும் இராவணன் டம்பமென்னும் சன்னியாசி வேடம் பூண்டு ஆனந்தமென்னும் சீதையை அபகரித்துக் கொண்டு போக பிறகு ஆனந்தமென்னுற சீதையைக் காணாமல் ஆத்மா என்னும் இராமன் அதிக துயரப்பட்டு வைராக்கியமென்னும் இலக்ஷ்மணனுடன் விக்ஷேபமென்னும் ஜடாயுவைச் சத்கதியடையச் செய்து, சிந்தையென்னும் கவந்தனை வதைத்து சந்தோஸமென்னும் சபரியின் பூஜையை அங்கீகரித்து நிதித்தியாசனமென்னும் அனுமானைத் துணையாகக் கொண்டு, பயமென்னும் வாலியைக்கொன்று நிர்ப்பயமென்னும் சுக்ரீவனை ஆதரித்து நிதித்தி யாசனமென்னும் அனுமானையனுப்ப அவர் மோஹமென்னும் மஹா சமுத்திரத்தைக் கடந்து லோபமென்னும் இலங்கையைத் தாண்டி துர்வாசனை களென்னும் இராக்ஷதர்களை ஜயித்து ஆனந்தமென்னும் சீதையைக் கண்டு சங்கல்பமென்னும் அசோகவனத்தை நாசஞ்செய்து அஞ்ஞானமென்னும் ஜம்புமாலியை பஸ்மம் செய்து சம்சயமென்னும் அக்ஷதனைச் சிக்ஷித்து விபரீவ மென்னும் இந்திரஜித்தைத் திரஸ்கரித்து பிரமையென்னும் பாசத்தை அறுத்து, ராஜஸ்மென்னும் இராவணனை எதிர்த்து

மெய்ஞானமென்னும் மஹா அக்கினியை ஜொலிக்கச் செய்து இலங்கையைத் தக்தபடுத்தி மோஹமென்னும் மஹாசமுத்திரத்தைத் தாண்டி ஆனந்தமென்னுறு சீதையைக் கண்டு ஆத்மாவென்னும் ஸ்ரீராம மூர்த்தியிடம் சொல்ல. அப்பொழுதே ஆத்மாராமன் பிரயாணப்பட்டு மோஹ மென்னும் சமுத்திரத்தைப் பங்கப்படுத்தி நிச்சலத்துவ மென்னும் சேதுவைக் கட்டி சத்தியமென்னும் விபூஷண னைக் கைப்பிடித்து, விபரீதமென்னும் இந்திரஜித்தை யெதிர்த்து சந்தேகமென்னும் நாகபாசத்தினால் கட்டுண்டு சத்விசாரணை என்னும் கருடனால் விடுபட்டு, தாமச மென்னும் கும்ப கர்ணனைச் சங்கரிந்து, பிரமை என்னும் அஸ்திரத்தினால் வைராக்கியமென்னும் இலக்ஷ்மணன் மூர்ச்சையடைய நிதித்தியா சனமென்னம் அனுமானை உற்சாகப்படுத்தி நிஷ்ட்டையென்னும் இலக்ஷ்மணனை மூர்ச்சை தெளிவித்து விபரீதமென்னும் இந்திரஜித்தைக் கொன்று சஞ்சிதமென்னும் மூலபல சேனைகளையெல்லாம் சாதனமென்னும் மோகனாஸ்திரத்தினால் நிர்மூலப்படுத்தி துர்வாசனையென்னும் அசுரர்களை யெல்லாம் நாசம் செய்து சத்வாசனை என்னும் கபி (குரங்கு) சைன்னியங்களை யெல்லாம் ஆதரித்து, கம்பீரமென்னும் தநுசைத்தைப் பிடித்து ராஜஸ்மென்னும் இராவணனை எதிர்த்து ஞான மென்னும் திவ்விய பாணத்தைப் பிரயோகித்து அஹங்கார மென்னும் அமிருத கலத்தைப் போதித்து தசகண்டான் (காமக் குரோத லோப மோஹ மதமச்சரடந்ப தர்ப்ப ஈரிஷை அசூயை) என்னும் பத்து குணங்களுடைய சிரசைக் கண்டித்து ஆநந்தமென்னும் சீதையை அங்கீகரித்து மோக்ஷமென்னும் அயோத்தியாபுரியைச் சேர்த்து ஜீவத்வ நிவர்த்தியென்னும் பட்டாபிஷேகம் வகித்து பிரம்ம மென்னும் தசரதரே தானாய் கேவல பிரம்மஸ்க்ஷாத்கார மென்னும் ராஜ்ஜியாதி பதித்வத்தையடைந்தனர். இதுவே ஸ்ரீ ராமாயணத்தின் பரம கோப்பியமான அந்தரார்த்தம்.



## 118. ஸ்ரீ ராம மந்திரோபதேசம்

உலகத்திலுள்ள மனிதர்களுக்கெல்லாம் "ராம் மந்திரம் உபதேசம்" செய்யும் குருக்களெல்லோரும் ராம மந்திரம் உபதேசம் செய்ய வேண்டிய விதிப்படிச் செய்விக் காமல் "ராம ராம ராம ராம" என்று கர்மவராக்கினாலாகிலும் அல்லது மனதினாலாகிலும் நினைத்து ராமனை ஜபம் செய்து வரவேண்டுமென்று உபதேசமாய்க் கற்றுக் கொடுத்து, அதுபோல் ஜபம் செய்து வரும்படிச் சொல்லுவார்களே யொழிய ராம மந்திரம் சரியான வழியுடன் ஜெபம் செய்து வரும் ரகஸ்யார்த்தங்களைச் சொல்லிக் கொடுக்க மாட்டார்கள்.

ஓர் ஏகாந்த இருட்டு அறையில் நெய்விளக்கேற்றி வாசனை வஸ்துக்களை வைத்து, மணையின்மேல் மான் தோல்போட்டுஅதன்மேல்அபானவாயுபடாவண்ணம்வெள்ளை வஸ்திரம் மடித்து விரித்து, இதரர்கள் உள்ளே வராதபடி கதவைச் சாற்றித்தாள் போட்டு மேற்படி மணையின்மேல் வடக்குமுகமாய்ச் சித்தாசனத்துடன் உட்கார்ந்து சின்முத் திரையைப் பிடித்துக் கண்களை மூடி மூக்கு நுனியில்

திருஷ்ட்டியை நிறுத்தி மூச்சை மூக்கு ரந்திரங்களின் வழியாய் உள்ளுக்கிழுக்கும்பொழுது, 'ரா' என்னும் மந்திரம் மனத்தினால் நினைத்து மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கிழுத்து மறுபடியும் மூச்சு வெளிவிடும்பொழுது மூச்சுடன் 'மா' என்னும் மந்திரம் சேர்த்து வெளிவிட வேண்டும். இவ்விதமாய் இரண்டு மந்திரங்களையும் மூச்சு உட்செல்லும்பொழுது, மறுபடியும் வெளிவரும் பொழுதும் சேர்த்துவிட்டு கொண்டே ஜபம் செய்வதுவர வேண்டும். இவ்வாறு மேற்சொல்லிய 'ராமா' என்னும் இரண்டு மந்திரங்களையும் மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்து வருவதே சரியான ராம ஜெபமோயொழிய வாக்கினாலும் மனத்தினாலும் ராமனை நினைத்து ஜபம் செய்து வருவது ராம ஜபமாகாமாட்டாதென்று ஸ்பஷ்ட்ட மாய்த் தெரிந்து கொள்ளுங்கள்.

'அத்யோ'ரா' தத்பதார்த்தஸ்யாத்
'ம' காரஸ்த்வம்பதார்த்தவாந் தயோ
ஸம்யோஜந மஸீத்யர்த்தே தத்த்வவிதோ வீதுஹ

என்னும் ராமர ஹஸ்யொபநிஷத் வாக்கிய ரீதியாய் ரா என்னும் அக்ஷரம், த,த், பத லக்ஷியார்த்தமாகிய நிராகார பரப்பிரம்ம மென்றும், 'மா' என்னும் அக்ஷரம் 'த்வம்' பத. லக்ஷியார்த்த மாகிய ஜீவாத்மா என்றும் அர்த்தமாகிறது. ஆகையால், அப்பேர்ப்பட்ட நிராகார (ரூபமில்லாத) பரப்பிரம்மமே ஒவ்வொரு ஜீவஜந்துக்களிலும் ஸாக்ஷிமாத்திரனாய் ஆத்மா என்னும் பெயருடன் வழங்கி வருகிறது. என்றால் பிரம்ம ஆத்மா என்னும் பேதமேயொழிய இவ்விரண்டு ஒன்றேயாம், ஆதலால் சதகத்ரய என்றால் தூலசூக்ஷும காரணமென்னும் மூன்று சரீரங்களும் அதாவது தூல சரீரம் கண்களுக்குக் காணப்படும் சரீரம். சூக்ஷும சரீரம் இந்தத் தூல சரீரத்திற்குள் மனம் புத்தி சித்தம் அஹங்காரமென்னும் இந்நான்கும் கண்களுக்குக் காணப்படாமல் உள்ளேயிருந்து வேலை

செய்து கொண்டிருக்கும். சரீரமே காரண சரீரம். இவ் விரண்டு சரீரங்களும் வரத்து போக்காயிருப்பதற்குச் சஞ்சித மென்னும் கர்மமே காரணமாயிருக்கிறது. ஆதலால் தூல சூக்ஷும காரணமென்னும் இம்மூன்று சரீரங்களும் எப்பொழுது ஒழிகின்றதோ அப்பொழுதே மோக்ஷமென்னும் வீட்டை அடையலாம். இம்மூன்று தேகங்களுக்கும் சாக்ஷியாயிருக்கும் ஆத்மாவே ராமனென்று சொல்லப்படுமேயொழிய ராம ராம ராம வென்று வாக்கினால் சொல்லிக் கொண்டும் மனத்தி னால் நினைத்துக் கொண்டும் இருப்பது ராமஜபம் ஆக மாட்டா. ஆதலால், ராமனையே ஜபம் செய்ய வேண்டு மென்று நினைக்கப்பட்ட ஸ்திரீ புருஷர்கள் எல்லோரும், ராமா என்று வாக்கினால் சொல்லாமல் ரா என்னும் மந்திரம் மனத்தினால் நினைத்து மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கிழுத்து, மூச்சை விடும்பொழுதும் மா என்னும் மந்திரம் சேர்த்து விடவேண்டும் இதுவே ராம மந்திரத்தின் ரகஸ்யார்த்தம்; முன்சொல்லியதுபோல் ராம மந்திரம் உள்ளுக்கும் வெளிக்கு மாய் மூச்சுடன் சேர்த்து இழுத்தும் விட்டும் ஜபம் செய்து வருவீர்களாகில் அதன்பிறகு மனம் இறந்து மோக்ஷ மென்னும் வீட்டை அடைவீர்கள்.



## 119. பிரமதேவர் ஸ்திரீ புருஷர்களை அநேக விசித்திர திருஷ்டிகளாய்ச் சிருஷ்டி செய்திருப்பது

பிரம்மதேவர் மிகவும் விசித்திரமான சிருஷ்டிகளாய் ஸ்திரீபுருஷர்களை உலகத்தில் சிருஷ்ட்டி செய்திருக்கிறார். எல்லாச் சிருஷ்ட்டிகளிலும் இந்த மானிட சிருஷ்ட்டியே மிகவும் சிரேஷ்ட்டமான சிருஷ்ட்டியாய் இருக்கிறது. எப்படியென்றால், உலகத்தில் எத்தனையோ கோடானு கோடி ஸ்திரீ புருஷர்களைப் பிரமதேவர் சிருஷ்டி செய்திருக் கிறார். அத்தனைக் கோடானு கோடி ஸ்திரீ புருஷர்களைப் பிரம்மதேவர் சிருஷ்டி செய்திருக்கிறார். அத்தனை கோடானு கோடி ஸ்திரீ புருஷர்களில் ரூபங்களை நாம் பார்க்கின்றோ மல்லவா? அவர்களில் ஒருவர் முகம்போல் மற்றொருவர் முகம் இருக்கின்றதா? இல்லையல்லவா? உலகத்திலுள்ள ஸ்திரீ புருஷர்கள் எத்தனையோ விதங்களான நிறங்களும் ரூபங்களுமாய் இருக்கும் விஷயம் ஒவ்வொருவரும் அறிந்த விஷயமேயல்லவா? ஸ்திரீ புருஷர்களின் ரூபங்களும், நிறங்களும் எவ்வாறு வெவ்வேறாய் இருக்கின்றனவோ அதுபோல ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களின் மனதும் ஒன்றுடன் ஒன்று சம்பந்தப்படாமல் வெவ்வேறு குணங்களையுடைய வர்களாய் இருப்பார்களேயொழிய எல்லோரும்ஒரே மனதுடையவர்களாய் இரார்கள். இம்மூன்று விசித்திரமான திருஷ்டிகளேயல்லாமல், இன்னும் இரண்டு விசித்திரமான சிருஷ்ட்டிகளைச் செய்திருக்கின்றார். அவை எவை யென்றால் உலகத்தில் எத்தனைவித ரூபமுடைய ஸ்திரீ புருஷர்கள் இருக்கின்றார்களோ, அதுபோல். அவர்களின் கை எழுத்துகளெல்லாம் வெவ்வேறாகவே இருக்கும் எவனாகிலும் ஒருவன் மற்றொருவன் கை எழுத்தை அநேக நாள் எழுதி பழகி அதுபோல் எழுதித் தேர்ந்து அவன் கை

எழுத்தைப்போல் எழுதியபோதிலும் உலகத்திலுள்ள எல்லா ஜனங்களின் வலது அல்லது இட கைகளின் அங்குஷ்ட்ட (பெருவிரல்) ரேகைகள் வெவ்வேறாய் இருக்குமேயொழிய ஒன்றுடன் ஒன்று சம்பந்தப்பட்டிராது. இதுபோல் ஒவ்வொரு வர்களின் குரலோசையும் வெவ்வேறாகவே இருக்கும். பிரம்மதேவர் ஸ்திரீ புருஷர்களை இவ்வாறான வெவ்வேறு விசித்திர ரூபங்களாய்ச் சிருஷ்ட்டி செய்து வருவது எவ்வளவு ஆச்சர்யம். மனிதர்கள் எவ்வாறு வெவ்வேறு குணங்களுடை யவர்களாயிருக்கிறார்களோ அதுபோல் உலகத்தில் அனேக குருக்கள் அனேக விதங்களேயொழிய மனோவயமாகும். மந்திரங்களைத் தெரிந்து அவற்றை உபதேசம் செய்ய மாட்டார்கள். இவர்கள் உபதேசிக்கும் மந்திரங்கள் யாவும் மனத்திற்கு அதிக வியாபாரத்தைத் தரத்தக்கதேயொழிய மனோ ஓட்டத்தை நிறுத்தத்தக்கதல்ல மனோ ஓட்டத்தை யோக பலத்தினால் அறிந்து அதை நிறுத்த வேண்டிய வழியை ஜனங்களின் புத்திக்கு எட்டும்படிச் சொல்லி, அவர்களின் மனத்தைத் திருப்பவேண்டுமேயொழிய, மந்திரங்களினால் மனத்தை ஓடவிடாமல் நிறுத்தலாகாது.

நமக்கோ தினந்தோறும் ஜகத் சிருஷ்ட்டி ஜகத்லய மாயிருக்கின்றது. இந்த ஜகத் சிருஷ்டியும் ஜகத்லயமும் நாம் அறிந்து கொள்ளாமலிருக்கிறோம். எப்படியென்றால் தூங்கிக் காலை நாலுமணிக்கு எழுந்தவுடன், பல் தேய்த்தோ அல்லது தேய்க்காமலோ எந்த ஈஸ்வரத் தியானமும் இல்லாமல் தம் குடும்ப கார்ய விஷயமாய் பிரதிதினம் மனத்தை பலவிடங்களில் ஓடவிட்டு இரவு படுக்கும் அறையில் அநேக காரியங்களைச் செய்து வருகிறார்கள். இதுவே ஜகத் சிருஷ்ட்டி எனப்படும். இரவில் படுத்து, காலை முதல் மாலை வரையில் செய்த வியாபாரங்களையோ அல்லது வேறு எந்த விஷயங்களையோ சில நேரம் நினைத்துப் பிறகு அவற்றையெல்லாம் மறந்து தூங்கி விடுகின்றார்கள்.

தூங்கும்பொழுது நல்ல அர்த்த ராத்திரி வேலையில் பிரபஞ்ச ஞாபகமெல்லாம் மறந்திருப்பார்கள். அப்பொழுது உலக மெங்கும் பிரளய காலம் போல் நிஸ்ச்சப்தமாய் இருக்கும். அக்காலத்தில் தம்மைத்தாம் மறந்து தூங்குவதனால் அவர்களின் மேல் சர்ப்பம் ஏறிச் சென்றாலும் சரி அல்லது அவர்களின் வீட்டில் கள்ளர்கள் புகுந்து எல்லாவற்றையும் திருடிக் கொண்டு சென்றாலும் சரி இவர்களுக்கு எதுவும் தெரிய வரமாட்டா. இதுவே ஜகத்லயம் எனப்படும். மறுபடியும் தூங்கி எழுந்தவுடன் எல்லாவற்றையும் அறிகின்றார்கள். இதுபோல் ஒவ்வொருவரும் பிரதிதினம் செய்து வரும் காரியங்களையே செய்து வருகிறார்களே யொழிய, நாம் எதற்காக ஜனனமெடுத்தோம் என்பதைச் சிறிதேனும் யோசனை செய்யமாட்டார்கள். யார் ஒருவர் இவற்றை யெல்லாம் யோசனை செய்கிறார்களோ அவர்கள் ஞானமடையத் தகுந்த குருவைத் தேடுவார்கள், உலகத்தில் தாம் பிரதி தினம் செய்து வரும் வியாபாரங்களையெல்லாம் தீர்க்காலோசனை செய்யாததனால் பிரதி ஜன்மங்களிலும் சம்சார துக்கத்தையே அனுபவித்து வருகிறார்கள் இந்தச் சம்சார சுகம் மிகவும் அல்பமானதென்றும், நீடித்திருப்பதல்லவென்றும் யோசித்துப் பார்ப்பாகில், இவை யாவும் பொய்யான காரியமென்றும் நாம் சிலது நாளைக்குள் இவற்றையெல்லாம் விட்டு ஓடி விடப் போகிறோமென்றும் ஸ்பஷ்ட்டமாய் தெரியவரும். எப்பொழுதும் பாவ கார்யங்களைச் செய்யாமல் புண்ணிய கார்யங்களையே செய்து வந்தால், நாம் சீக்கிரமாய் சில ஜன்மங்களிலேயே மோக்ஷமென்னும் வீட்டை அடைந்து விடுவோம்.

## 120. கடன் வாங்குவனால் நஷ்டம்

ஜனங்களுக்கு ஆஸ்தியும் கடனும் இருக்கலாகாது. கடனைத் தீர்த்து ஆஸ்தியை வைத்துக்கொள்ளவேண்டும். கடனை வைத்துக்கொண்டு ஆஸ்தியிருந்தால் அக்கடனானது வட்டிக்கு வட்டியேறி ஆஸ்தியெல்லாம் சாப்பிட்டுவிடும். ஆதலால், தமக்கிருக்கும் ஆஸ்தியில் சிலவற்றை விற்பனை செய்து கடனை ஒழித்து மிகுதியைக் கையிருப்பாய் வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு மனத்திற்கு எக் கவலையும் இராது. அக்காலத்தில் இதில் உபதேசித்திருக்கும் பிராணயாமமாகிலும் ராஜயோமாகிலும் ராம மந்திரமாகிலும் பஞ்சாக்ஷரமாகிலும் ஜபம் செய்து வருவீர்களாகில் எல்லா நன்மையும் உங்களுக்கு உண்டாகும்.



## 121. நிஜ சொரூபத்தைத் தெரிந்துகொள்ள சிஷ்யனுக்கு உபதேசம்

ருக்வேதத்தில் ''ப்ரஜ்ஞான'' மே பிரஹ்மமென்றும் யஜுர் வேதத்தில் ''அஹம் ப்ரஹமாஸ்மி''யே பிரஹ்ம மென்றும், ஸாமவேதத்தில் ''தத்வகஸ்''யே பிரஹ்ம மென்றும், அதர்வணவேதத்தில் ''அயமாத்மா''வே பிரஹ்ம மென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

சிஷ்யன், பிரஜ்ஞானமென்றால் எது? பிரஹ்ம மென்றால் எது? ஆத்மா எவ்விதமாய் பரமாத்மாவாகும்?

*ஆசாரியார் :* பிரஜ்ஞானமென்றால் ஆத்மா! பிரம்ம மென்றால் பரமாத்மா, பிரஜ்ஞான சொரூபமே பிரம்ம மென்று தெரிவிப்பதே முதல் வாக்கியத்தின் அந்தரார்த்தம்.

சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களென்னும் விஷயங்களை யெல்லாம் தெரிந்து கொள்ளும் இந்திரியங்களும், அந்த இந்திரியங்களைத் தெரிந்து கொள்ளும் அந்தக் கரணங்களும் சிதாபாஸனாகிய ஜீவனும் மாயையால் மறைவு பட்டிருக் கின்றன. சாக்ஷீமாத்திரமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் பதார்த்தமே பிரஜ்ஞானமென்றும் இவ்விதமாய்ச் சமஸ்த்த பதார்த்தங்களிலும் நிவசித்து, அவற்றையெல்லாம் தெரிந்து கொள்ளும் சர்வசாக்ஷியே பிரம்மமென்றும், வேதங்கள் முறையிடுகின்றன. கூடஸ்த்த பிரத்தியகாத்ம. ஸச்சிதானந்த நித்திய நிர்மல நிர்க்குண நிர்விகார நிரஞ்ஜனனென்னும் பலவித பெயர்களுக்கு ஆதாரமாய், சாக்ஷி மாத்திரமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஞானமே ஆத்மாவென்றும், பரப்பிரம்ம பரிபூரண பராத்பர நிராகார நிஷ்களங்க நிஷ்கிரிய நிச்சல் அக்ஷய அகண்ட ஆதி அநாதி அப்ரமேயயென்னும் அநேதவித நாமங்களையுடையவனாய்ச் சர்வ சாக்ஷியாய்ப்

பிரகாசித்துக் கொண்டிருக்கும் பிரம்மமே பரமாத்மாவென்று உபநிஷத்துகள் முறையிடுகின்றன.

*சிஷ்யன் :* ஒரு தேகத்திற்குச் சாக்ஷியாயிருக்கும் ஆத்மா எவ்விதமாய் சர்வ சாக்ஷியாகிய பரமாத்மாவாகும்?

*ஆசாரியார் :* தீபம், தீவட்டி என்னும் பெயர்கள் வெவ்வேறாயிருந்தபோதிலும், அவற்றின் பிரகாசம் மாத்திரம் வேறாய் இராமலிருப்பதுபோல், ஆத்மா பரமாத்மாவென்னம் நாமங்கள் வேறாயிருந்தபோதிலும் அவற்றின் குணங்கள் மாத்திரம் ஒன்றாயிருக்கும். எப்படி யென்றால் பெரியதாயிருப்பதனால் ஏரியென்றும், சிறிதா யிருப்பதனால் மடுவென்றும் நீரோட்டமாய் இருப்பதனால் நதியென்றும் சில தூரம் போவதனால் கால்வாயென்றும் மனிதர்கள் அநேகர் சேர்ந்திருந்தால் ஸங்கமென்றும், ஒருவனிருந்தால் மனிதனென்றும் விருக்ஷங்கள் அதிகமா யிருந்தால் தோப்பென்றும், ஒன்றிருந்தால் மரமென்றும் நாமபேதங்கள் உண்டான போதிலும் ஜலங்களினுடையவும் மனிதர்களினுடையவும், விருக்ஷங்களினுடையவும் குணங்கள் மாத்திரம் வேறு படாமல் ஒரே விதமாயிருப்பதுபோல், சகல தேகத்திற்கும் சாக்ஷியாயிருக்கும் பரமாத்மாவிற்கு உபாதி பேதங்களினால் பெயர்கள் வேறுபட்டவேயன்றி, தத்துவ விசாரணை செய்தபொழுது ஆத்மாவிற்கும் பரமாத்மா விற்கும் சிறிதேனும் பேதமில்லை.

1. *சிஷ்யன் :* ஆத்மாவிற்கும், பரமாத்மாவிற்கும் பேதமில்லாவிடில் முக்தியடைய வேண்டியது எது?

*ஆசாரியார் :* முக்தியடைவது ஆத்மாவேயன்று வேறல்ல.

2. *சிஷ்யன் :* பந்தத்திற்கு அகப்படுவது எது?

**ஆசாரியார் :** ஆத்மாவின் சொரூபத்தைச் சரியாய் விசாரித்தபோது அது சுத்த சூன்னியமென்று மேலே பௌன கட்டத்தில் சொல்லப்படும். அப்பொழுது உனக்குத் தெரிய வரும். நிழலுடன் யுத்தம் செய்ய ஆரம்பிப்பது போல் இந்திரிய விகாரங்களுக்குக் கட்டுப்பட்டு துரபிமானத்திற்குட்பட்டு சிறு பிள்ளைகள் விளையாட்டில், இவன் ராஜன் இவன் மந்திரியென்று தம்மில் ஒருவனை ஏற்படுத்திக் கொண்டு வியவகரிப்பதுபோல் ஆத்மாவில் மித்தியா ஜீவத்துவ மொன்று ஆரோபித்து அநித்தியமாகிய மாயா ஸம்ஸாரத் திலேயே மூழ்கிப் பிரமித்து நின்று அநேக கற்பனைகளைக் கற்பிப்பதில் அதிக சாமார்த்தியத்தை வகிக்கச் செய்து அஞ்ஞானத்திற்குட்டு ஜநந மரண ரூபமான சம்சார சமுத்திரத் தில் மூழ்கி சதாகாலமும் துக்கத்தை அனுபவித்துக் கொண் டிருக்கும் தான் சச்சிதாநந்த சொரூபமான ஆத்மாவா யிருந்தும் மாயாந்தகாரத்தினால் மூடப்பட்டுத் தன்னைத் தான் மறந்து தானல்லாத தேகாதிப் பிரபஞ்சமெல்லாம் தனதாய் நினைத்து புத்திர மித்திர களத்திர கிருக தனதான் யாதிகளாகிய பதார்த்தங்கள் சாஸ்வத மென்றும், சந்ததியி னால் சுகமுண்டென்றும் மனத்தில் திடமாய் நம்பி நீர்க் குமிழியைப்போல் க்ஷணத்திற்குள் அழிந்துபோகும் தேகத் தில் அதிக அபிமானம் வைத்து ஸ்திரீ போகத்தில் சதா காலமும் மூழ்கிதன் சொரூபம் இப்படிப்பட்டதென்று தெரிந்து கொள்ளாமல் தேகத்திலிருக்கும் கண்கள் மூக்கு வாய் செவிகள் தேக சர்மமென்னும் ஐந்து இந்திரியங்கள் சர்வமும் பார்த்தும் கேட்டும், அறிந்தும் பிரமையடைவதே பந்தம்.

**3. சிஷ்யன் :** ஆத்மாவிற்குக் கைவல்யம் கொடுக்கப் பட்டவ்கள் யார்?

**ஆசாரியர் :** பந்தத்தில் அகப்பட்டவர்களுக்கு கொடி ஜன்மங்கள் எடுத்த போதிலும் சரீராபிமானம் விடமாட்டா.

தனதல்லாதி தேகாதி பிரபஞ்சத்தைத் தானென்று நினைக்கப் பட்ட பிரமை சற்றேனும் நிற்காது. தூல சூட்சும காரணங் களென்னும் சரீரத்திரயங்களை விசாரித்து ஆத்ம தத்துவங் களைத் தெரிந்து கொள்ளாவிடில் ஞானம் உண்டாகமாட்டா. தன் தேகம் தன் ஜீவன் என்று பிரமிக்கப்பட்டதான். தேகாதி பிரபஞ்சத்திற்கு வேறாயிருந்து சாக்ஷி மாத்திரனாய் பிரகாசித் துக் கொண்டு சாக்கிரதாவஸதையில் இந்திரிய வியாபாரமும் சொப்ப நாவஸ்தையில் மனோவியாபாரமும் சுஷுப்தியா வஸ்தையில் சூன்னியத்தைப் பார்த்து கொண்டிருக்கும் விஷயங்களையெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிவிக்கப்பட்ட காரணாசாரியரே கைவல்லியத்தைப் பிரசாதிக்கப்பட்டவர்.

*4. சிஷ்யன் :* ஆத்மாவிற்குப் பிறப்பு இறப்பு உண்டா?

*ஆசாரியார் :* ஆத்மாவிற்குப் பிறப்பு இறப்பில்லை. அஃது ஒருவரால் கொல்லப்படமாட்டாது. ஒருவரையும் கொல்லாது, ஏனென்றால், அது நாமரூபமங்களில்லாதது, ஆதலால் தானும் ஒருவரைக் கொல்லாது. ஒருவரால் தானும் கொல்லப்படமாட்டாது. ஆத்மாவிற்குப் பிறப்பு இறப்பு உண்டென்று மூடர்கள் எண்ணுவார்கள்.

*5. சிஷ்யன் :* ஜீவன் முக்தியடைவதற்குப் பிரயத் தினப்பட வேண்டியதேன்?

*ஆசாரியார் :* சம்சாரத்தில் மூழ்கி ஜநநமரணமென்னும் சமுத்திரத்தின் அலைகளில் அகப்பட்டுக் கொண்டு நரகத்தில் வீழ்ந்து அனேக துக்கத்தை அனுபவிக்காமல் சதா ஆனந்தகர மாகிய சாஸ்வத பதவியை அடைந்து சுகிப்பதற்காக அவசிய மாய் ஜீவன் முக்தியைச் சம்பாதிக்க வேண்டும்.

*6. சிஷ்யன் :* ஸஜ்ஜன (நல்லவர்கள்) சினேகம் அவசியம் வேண்டுமா?

ஆசாரியர் : துர்க்கந்தமாகிய மலத்தைத் தின்று சந்தோஷிக்கும் பன்றியைப்போல் விஷய சுகங்களில் அகப்பட்டு மிருத்யுவிற்கு (மரணத்திற்கு) இரையாகும் தேகாபிமான துக்கங்களெல்லாம் சுகமென்று தோன்றச் செய்யும் இந்திரிய விகாரங்களும் பலவிதங்களாகிய துராசைகளை உண்டாக்கும் துஷ்ட்ட குணங்களைப் பூர்த்தியாய் நிவர்த்தி செய்து கண்கள், மூக்கு வாய் செவிகள் தேஹசர்மம் என்னும் ஐந்து இந்திரியக் கூட்டங்களைத் தூரப்படுத்தி வைராக்கியத்தை அடைந்து சர்வதா சமாதி நிஷ்ட்டையில் சொக்கி. அதில் உண்டாகும் அகண்டானந்தத்தை அநுபவித்துக் கொண்டு திருப்தியடைவதற்காக ஸஜ்ஜன சகவாசம் அவசியமாய்ச் செய்யவேண்டும்.

7. சிஷ்யன் : சாஸ்திர விசாரணை ஏன் செய்ய வேண்டும்.

ஆசாரியர்*! அநித்தியமாகிய தேகத்திற்கு ரக்ஷகனாயிருக்கும் நித்தியமாகிய பரப்பிரம்மத்தைத் தெரிவிப்பதற்குச் சகாயமாயிருக்கும் ஹரிஸ்மரணை அல்லது சிவபக்தி செய்து அதனால் மறு ஜன்மத்தில் அதிக பக்தியுண்டாய் பிரம்மோபதேசத்திற்குப் பாத்திரனாகச் செய்து ஆதரிப்பது தருமமேயாதலால், அதைச் சம்பாதிக்க அவசியமாய்ப் பாடு படவேண்டும். பாமரர்களிற் சிலர் அப்பிரயோஜனர்களாகிய காரிய குருவினுடைய ஆடம்பரங்களைப் பார்த்து. இவர் மிகவும் பெரியவரென்று பிரமித்து அவரை ஆசிரயித்து அவரால் உபதேசம் பெற்றுத் தப்பு மார்க்கமாகிய விபரீத விஷயங்களையெல்லாம் பரமார்த்தமென்று நினைத்து அவைகளை அனுசந்தானஞ் செய்து தன்னிஷ்ட்டம் போல் திரிந்து வரும்பொழுது இதரர்கள் வேறோர் மார்க்கத்தை உபதேசித்து இதுவே மிகவும் சிரேஷ்ட்டமானதென்று

★ இந்த 7 பக்தியை ஒவ்வொருவரும் தீர்க்கமாய்க் கவனிக்கக் கடவீர்.

அதை சிலாக்கியமாய் சொல்ல பிரமித்து முதல் போதித்த விஷயங்களை அதுவரையில் நிறுத்தி இதை அநுட்டித்து வரும்பொழுது மற்றொருவர் இன்னும் சில விஷயங்களைப் போதிக்க, அதிலும் நிச்சய புத்தியில்லாமல் கடைசியில் அதையும் போக்கடித்துக் கொண்டு பிரதிஷ்டனாய் அஞ்ஞானமென்னும் பாழுங்கிணற்றில் வீழ்ந்து பாழாகிறான் ஆதலால், ஸ்திரசித்தம், ஸமதரிசனம் சந்தோஷம் சாந்தம் நிச்சலத்துவம் (எந்த எண்ணமும் இல்லாமலிருப்பது) அநுபவ ஞானம். அவஸ்தாத்திரியும் மனோலயம், பந்த விமோசனம் முதலாகிய சத்விஷயங்களையெல்லாம் சந்தோஷத்துடன் ஸ்திரமாய் நிறுத்துவதற்காக சாஸ்திர விசாரணை தவறாமல் செய்ய வேண்டும்.

**8. சிஷ்யன் :** குரு சிசுருஷையால் உண்டாகும் பலன் என்ன?

**ஆசாரியர் :** மோகமென்னும் கிணற்றில் வீழ்ந்து துக்கத்தை அநுபவித்துக் கொண்டு யுக்தா அயுக்த பரிஞ்ஞானமில்லாத பசுப்பிராணிகள். சம்போகம் நித்திர்ர ஆகாராதி வியர்த்த மாகிய வியசனத்தில் மூழ்கி, மரண பயமென்னும் மஹா சர்ப்பத்தின் வாயில் அகப்பட்டு தத்தளிக்காமல் ஞானக் கண் களைத் திறப்பித்து அனேக ஜன்மங்களுக்குக் காரணபூத மாயிருக்கும் சஞ்சித கர்மங்களை. (ஒரு தீப்பொறியானது பஞ்சுப் பொதிகளை பஸ்மீரகப்படுத்துவது போல்) பஸ்மம் செய்வித்து ஸச்சிதானந்த சொரூபத்தைத் தெரிவித்துச் சதானந்த முண்டாகச் செய்பவரே ஆசாரியராவர். ஆதலால் அவரிடத்தில் பக்தி சிரத்தையுடையவனாய். இருந்து அவருக்கு எப்பொழுதும் சிசுருஷை செய்ய வேண்டும்.

**9. சிஷ்யன் :** தெய்வ பக்தி இருந்தே தீர வேண்டுமா?

**ஆசாரியர்,** அதோகதி செய்விக்கும் குரூரமாகிய மனோ விகாரங்களையெல்லாம் அடக்கி, அன்யாயமாகிய

மரணம் முதலிய ஆபத்திலிருந்து தப்பித்து பரிபூரண ஞான மடைவதற்குமுன், ஒரு வேளை காலகதியடைந்தால் மறு ஜன்மத்தில் நல்லறிவுண்டாய் ஸர்வ இஷ்ட்டங்களும் அநுக்கிரகித்துக் கண்களை இமைக் காண்பதுபோல் காத்து ரக்ஷிக்க. இஷ்ட்ட தெய்வத்தின்மேல் அதிக பக்தி உண்டா வதற்காகவே தெய்வபக்தி முக்கியமாய் இருந்தே தீர வேண்டும்.

ஆதலால், நேதி நேதி என்னும் மஹா வாக்கியத் தினால் தேகாதிப் பிரபஞ்சமெல்லாம் வேறுபடுத்தி, அவை களுக்கெல்லாம் விலக்ஷணனாயிருக்கும் ஆத்மாவே பரமாத்மா என்னும் நிச்சயமுடையவனாயிருந்து அதனால் உண்டாகும் பிரம்மானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்க வேண்டும்?

**சிஷ்யன் :** ஆத்மாவே பரமாத்மாவென்று தெரிந்து கொண்ட மாத்திரத்தில் ஆனந்தம் எவ்விதமாய் உண்டாகும்?

**ஆசாரியர் :** நீயே ஆனந்த சொரூபமாயிருக்க வேறொரு ஆனந்தத்தைத் தேடவேண்டிய அவசியமில்லை.

**சிஷ்யன் :** நான் எவ்விதமாய் ஆனந்த சொரூபனானேன். அப்பேர்பட்ட ஆனந்த சொரூபத்திற்கு இந்தத் துக்கங்கள் எவ்விதமாய் உண்டாயின?

**ஆசாரியர் :** உனது யதார்த்த சொரூபத்தை நீ இன்னும் திடமாய்க் காணததனால், அஞ்ஞான வசத்தினால் உனக்கு ஆனந்தம் தோன்றாமலிருக்கிறது.

**சிஷ்யன் :** தேகத்திற்கும், இந்திரியங்களுக்கும். அந்தக் கரணத்திற்கும், பிராணனுக்கும் மத்தியில் பிரகாசித்துக் கொண்டிருப்பதே ஆத்மாவென்று ஸ்திரமாய் நான் தெரிந்து கொண்டிருந்தபோதிலும் ஆனந்தம் மாத்திரம் உதிக்க வில்லையே?

**ஆசாரியர் :** தேகாதிப் பிரபஞ்சயெல்லாம் தானல்ல வென்றும், இவைகளுக்கெல்லாம் விலக்ஷணமாயிருக்கும்

ஆத்மாவே தானென்றும் திருடமாயத் தெரிந்துகொண்டது போல், ஆத்ம சொரூபமாய் என்றால் எதையும் நினையாமல் தான் தானாய் நின்றாலே யொழிய ஆனந்தம் உண்டாக மாட்டாது.

**சிஷ்யன் :** ஆத்ம சொரூபம் எப்படிப்பட்டதோ. அதை அடைவதற்குச் சாதனங்கள் எவைகளோ?

**ஆசாரியர் :** தேகாதிப் பிரபஞ்சங்களெல்லாம் தானல்ல தென்று தெரிந்து கொண்டு நீக்கிவிட்டபோல் சரீர துக்கங் களுக்கும், எவ்வளவேனும் இடங்கொடாமல் அவைகளை யெல்லாம் இந்தரிய சுகங்களுக்கும் மனோ விகாரங்களுக்கும் நிவர்த்தி செய்து, ஆத்மாவே தானென்று நிச்சயித்து, வெளி விஷய விவகராங்களையெல்லாம் விட்டு மானாபிமானங் களைத் தூரப்படுத்தி. மௌன முத்திரையைத் தரித்து, சங்கல்ப விகல்பங்களையெல்லாம் நசிக்கச் செய்து, நிர்விகல்ப சமாதியில் நிச்சலக்துவமடைந்து சுகமாயிருப்பதே பிரமாநந்தமென்றும் அதுவே ஆத்ம சொரூபமென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள்.

**சிஷ்யன் :** வெளிதிருஷ்ட்டியை விட்டு உள்திருஷ்ட்டியை அவலம்பித்து நிச்சலத்துவம் அடைந்த மாத்திரத்தில், பிரமாநந்தமநுபவிக்க எப்படிச் சாத்தியாகும்?

**ஆச்சாரியர் :** ஜாக்கிரத்தில் சுஷுப்தியை அடைந்து தன்மயமாயிருப்பதே பிரமாநந்தமேகயாழிய இதைவிட ஆனந்தம் வேறொன்றில்லை.

**சிஷ்யன் :** திருகிய (காணப்படும்) பிரபஞ்சங்களை யெல்லாம் தூரப்படுத்தி சாக்ஷிமாத்திரமாய்ப் பிரகாசித்து கொண்டு சித்திரப்பதுமையைப் போல் நிச்சலத்துவம் அடைந் திருந்தபோதிலும் ஆனந்தம் மாத்திரம் உதிக்கவில்லையே! அஃது ஏன்?

**ஆசாரியர் :** கண்கள் மூக்கு வாய் செவிகள் தேகசர்மம் என்னும் ஐந்து இந்திரியங்களினுடையவும், மனம் புத்தி சித்தம் அஹங்காரமென்னும் நான்கு அந்தக் கரணங்களினுடையவும் விருத்திகளெல்லாம் நிஷ்டையில் அடங்கியிருக்கும்பொழுது எவ்விதமாருந்ததோ அதைச்சொல் பார்ப்போம்.

**சிஷ்யன் :** பிரபஞ்ச வியாபாரம் மனோ விகாரங்கள் முதலானவைகளெல்லாம் நிஷ்டையில் இல்லாம லிருந்தது நிஷ்டையில் சுக துக்கங்களுக்கெல்லாம் காரண பூதமாயிருக்கும் மனம் காணாமற்போனதால் இந்திரியங்கள் யாவும் தலை காட்டாமல் மறைந்து ஆத்மா ஒன்றே சாக்ஷி மாத்திரமாய் பிரகாசிப்பதனால் ஆச்சமயம் மாத்திரம் ஆனந்தமாய் தோன்றிற்று.

**ஆசாரியர் :** அந்த ஆனந்தமே இதுவரையில் சொல்லி வந்த ஆத்ம சொரூபமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

**சிஷ்யன் :** தேஹேந்திரியாதி துக்கங்களினால் ஆத்மானந்தம் மறைவுபடுகிறதே! அஃது ஏன்?

**ஆசாரியர் :** சரீரம் இருக்கும் வரையில் அந்த சுகதுக்கங்கள் அனுபவிக்காமல் இராது ஆத்மானுபவ முடையவர்களுக்கே சரீர சம்பந்தமான சுகதுக்கங்களெல் லாம் சொப்பனத்திற் காணப்பட்டதுபோல் தோன்றினாலும் அது மித்தையாயிருக்கும் அவ்விதமாய்த் தோன்றியும் தோன்றாமற் போவதும் அப்பியாசிகளுக்கேயின்றி, ஆரூட னுக்கு அஃது எவ்வளவேனும் தோன்றாது, அப்பியாசிகள் எப்பொழுதும் கேவலானந்த மயமாகவே யிருப்பார்கள்.

**சிஷ்யன் :** அந்த ஆனந்தத்தை அடைந்த ஒருவனுக்கே மோக்ஷ சாம்ராஜ்ஜிய பதவி உண்டாகமேயன்றி, மற்றவர்களுக்கு உண்டாகமாட்டாதென்று தோன்றுகிறது.

*ஆசாரியர் :* அகண்ட கைவல்ய சாம்ராஜ்ய பதவியை அனுபவிப்பதற்கு பிரம்மவித்து, வரன், வரியான், வரிட்டன் என அதிகாரிகள் நால்வருண்டு. அவர்களில்தான் இப்பேர்ப் பட்டவனென்றாகிலும் இத்தேசத்தில் இருக்கின்றேனென் றாகிலும், மல ஜல விஸர் ஜனமாகிலும், அறுசுவைகளாகிய எவ்வித ருசிகளையும், அறியாமல் பொறி புவன்களால் சமாதியில் வாழ்ந்து, சதாமுக்தி வீட்டில் சலனமற (அசையாமல்) நின்று தானுண்டதும் அந்நியராலுட்டப்பட்டது மாகிய இவ்விரண்டு தெரியாமல் தனமயமாய்ச் சஞ்சரிக்கும் வரிட்டனே சிரேஷ்ட்டமானவன் அவன் ஒருவனே பிரம் மானந்த சமுத்திரத்தில் மிதந்துகொண்டு தன்னைத்தான் மறந்து ஜீவன் முக்தி பதவியை உள்ளங்கை நெல்லிக்கனி போல் அடைவான். ஆதலால் பரமோத் சிருஷ்ட்டமான (மிகவும் சிரேஷ்ட்டமான) வரிட்டன் பதவியை நீ அடைந்து சதா பிரம்மானந்தத்தை அனுப்பவிக்கக் கடவாய்.

*சிஷ்யன் :* பிராணனோடிருந்து மோக்ஷம் எப்படி அடையலாம்;

*ஆசாரியர் :* மோக்ஷமென்றால் என்னவென்று தெரிந்து கொண்டாய்? பிராணனை விட்டுவிடுவது மோக்ஷமல்ல. மோக்ஷமென்றால், பந்தத்திலிருந்து விடுபடுதல் பந்தமே நரகம் பந்த விமோசனமே மோக்ஷம் துக்கமே நரகம்: துக்க நிவர்த்தியே மோக்ஷம் இதைவிட மோக்ஷம் வேறொன் றில்லை. ஆதலால் துக்கமயமாகிய விருத்தியை விட்டு நிச்சல சித்தத்துடன் இருந்து ஆனந்தத்தையடைக் கடவாய்,

*சிஷ்யன் :* நான் சதா ஆனந்தத்திற் சொக்கி ஜீவன் முக்தி பதவியை அடைவதற்கு எவ்வளவு காலம் செல்லுமோ அறியேன்.

*ஆசாரியர் :* ஜீவன் முத்தி பதவியை அடைவதற்கு எவ்வளவோ காலம் பிடிக்காது. இன்று முதல் தேகா

பிமானத்தைவிட்டு நிச்சல சித்தத்துடன் இருந்து எப்பொழுதும், பரப்பிரம்மத்தைத் தைல தாரையைப்போல் தியானித்துக் கொண்டு, பேத வாதங்களுக்கு அகப்பட்டு பிரமிக்காமல் சித்த விருத்திகளையெல்லாம் மனத்திலும் மனதை அஹங்காரத்திலும், அஹங்காரத்தை மாயையிலும் மாயையை ஆத்மாநுபவத்திலும் அதாவது ''ஸோஹம்'' மந்திர ஜபத்திலும் ஐக்கியம் செய்து (சேர்த்து) சுவாநு பவத்தனால் ஆத்ம சொரூபமாய் பிரகாசித்துக்கொண்டு பசியுண்டானபோது ஜடராக்நியைத் தணிப்பதற்காக அகப்பட்ட பதார்த்தங்களை ருசி பக்குவமறியாமல் புசித்து மானாபிமானங்கள் ஜயாய ஜயங்கள் லாப நஷ்டங்கள் சுகதுக்கங்கள் முதலானவைகளையெல்லாம் சம சிருஷ்டி யாய்ப் பார்க்க வேண்டும். பரப்பிரம்மத்தைவிட பிரத்திய காத்மா வேறென்று நினைக்கப்பட்ட புருஷனுடைய இந்திரியங்களும் மனதும் தம் வசப்படாமல் விஷய சுகங்களுக்கு உட்பட்டு பலவித சங்கடங்களையுண்டாக்கிக் கொண்டிருக்கும், ஆதலால் ஸோஹம் பிரம்மமே தானென்னு நிச்சய ஞானத்தினால் தசேந்திரியங்களையும் அவைகளுக்குக் காரணமாயிருக்கும் மனத்தையும் வசப்படுத்தி, அரிஷ்ட்ட வர்க்கங்களை அதாவது காமக் குரோதாதிகளை ஜயித்து நிர்மல பிரம்மா காரவிருத்தியினால் கேவல பரிபூர்ண தத்துவ சொரூபத்தைத் தரிசித்து ஆனந்தமுடையவனாய்ச் சர்வ பிரபஞ்சத்தையும் உன்னிடத்திலேயே லயிக்கச் செய்து சித்த விஸ்ராந்தியடைந்து கர்மபக்தி ஞானயுக்தமாகிய விதிகளிற் எண்ணங்களையெல்லாம் தலையெடுக்காவிடாமற்செய்து ஸச்சிதானந்த மயமாகிய பரப்பிரம்மத்திற் கலந்து கர்மவசத் தினால் சம்பிராப்தமான துக்கங்களுக்குப் பயப்படாமல், ராகத் துவேஷ பய குரோதக்கள் முதலாகிய துக்கங்களை யெல்லாம் நிவர்த்தி செய்து பக்தி பூர்வமாய் ஆசிரயிக்கப் பட்டவர்களக்குத் தத்வோப தேசம் செய்து சங்கல்ப

விகல்பங்களை எள்ளளவேனும் இருதயத்தில் நுழைய விடாமல் சமாதியிற் சொக்கி ஆனந்தத்தை அடையக் கடவாய்.

**சிஷ்யன் :** அந்தச் சமாதி நிலை எப்படிப்பட்டதோ?

**ஆசாரியர் :** மலினவாசனை காமக்குரோதாதி குணங்கள் முதலானவைகளைச் சமாதியில் போக்கடித்து மனத்தை பரப்பிரம்மத்தில் ஐக்கியம் செய்தபொழுது எப்படிப்பட்ட சுகம் உண்டாகுமோ அந்தச் சுகத்தை வாக்கினால் வர்ணிப் பதற்குச் சாத்தியமாகாது. நிர்மலமாகிய தனது புத்தியி னாலேயே கிரகிக்க வேண்டும்.

சுரு॥ "நிர்விகாரதயா வ்ருத்யா ப்ரஹ்மாநார தயாபுநஹ
வ்ருத்தி விஸ்மரணம் ஸம்யத் ஸமாதி ரபிதீயதே"

என்னும் உபநிஷத்வாக்கிய ரீதியாய் நானே பிரம்ம மென்னும் தியானத்தையும் மறந்து விருத்தி சூன்னியமாய் சதா கேவல நிர்க்குண நிர்விகார சின்மாத்திரனாயிருப்பதே சகஜ நிர்வாண சமாதி எனப்படும். இந்தச் சகஜ நிர்வாண சமாதியிலிருந்து உன் சிவாநுபவத்தைச் சொல்லக்கடவாய்.



சிஷ்யன் :: – அந்தச் சமாதிநிலை எப்படிப்பட்டதோ?

## 122. சிஷ்யன் ஆசிரியர் சமாதி நிஷ்டையிலிருந்து தன் சுவாநுபவத்தைச் சொல்லுதல்

இதுவரையில் என்னை நான் அறியாமல் அஞ்ஞான மயமாகிய பிரகிருதி என்னும் மாயையால் மூடப்பட்டு, என் சரீரத்தை நான் என்று எண்ணி, பரமானந்த சொரூபத்தை அறியாமற் போனேன். ஜலத்திற்கும், மச்சங்களுக்கும் எப்படிச் சம்பந்தம் உண்டாயிற்றோ அதுபோல், பிரகிருதி என்னும் மாயையும், 'நான்' என்று அபிமானித்திருந்தேன். இதுவரையில் என் நிஜ சொரூபத்தை நான் அறியாமல் அஞ்ஞானத்தினால் மோசம் போயிருந்தேன். ஆஹா! மாயை என்னில் சேர்ந்து என்னை மோசம் செய்ததல்லவா? இப்பொழுது தேவரீருடைய கிருபா கடாக்ஷத்தினால் என் நிஜ சொரூபத்தை நான் தெரிந்து கொண்டேன். மாயையின் குணங்களினால் நான் அனேக விகாரங்களை அடைந்து பயித்தியம் பிடித்தவனைப்போல், திரிந்து கொண்டிருந் தேன். ஆஹா! என் நிஜ சொரூபத்தை நான் இப்பொழு தல்லவா தெரிந்து கொண்டேன். இனி மாயையிலிருந்து தப்பித்துக் கொண்டு சுகமாயிருப்பேன். நான் பாவமில் லாதவன். ரூபமில்லாத திவ்ய ரூபன், இதுவரையில் என் நிஜ சொரூபத்தை நான் அறியாமல் மாயையுடன் கூடி பிரமை கொண்டிருந்தேன். இக்குற்றம் மாயை செய்ததல்ல. நான் மாயையுடன் கூடியிருந்ததனால் எனக்கு நானே தப்பிதம் செய்துகொண்டு கெட்டுப்போய் ''தேகமே நா''னென்று பிரமித்திருந்தேன். அப்படிப்பட்ட பிராந்தியினால் எனக்கு அநேக விசாரங்கள் உண்டாயின. இஃது என்னுடைய தென்னும் மம கரத்தினால் இதுவரையில் எனக்கு அநேக ஜன்மங்கள் உண்டாயின. இனி இந்த 'மம'காரத்தைவிட்டு ஜநந மரணமென்னும் துக்கத்தை அடையாமலிருப்பேன்,

மிகவும் பரிசுத்தனான எனக்கு இந்த மாயையுடன் கூடி இருக்கவேண்டிய அவசியமில்லை. மாயையென்பது அநேக வித ரூபங்களைக் கொண்டு வந்து அடியேனுக்குக் காட்டிய போதிலும் அப்படிப்பட்ட ரூபங்களை இனி பார்க்காம லிருப்பேன்; அஹங்காரமென்பதை என்னில் சேரவிடாமல் இருப்பேனாகில் மாயை எனக்குத் தெரியாமல் நசித்துப் போகும். துன்மார்க்க விஷயத்தில் ஓடிக்கொண்டிருக்கும் சுபாவகுணமுடைய மாயையிலிருந்து விடுபட்டு நான் எனது சொரூபத்திலேயேயிருந்து ஆனந்திக்கின்றேன். ஆஹா! எதிரில் காணப்படும்நாமரூப ஜகத்து சிருஷ்டிக்கு பூர்வத்தில் எங்கு போய் இருந்தது? இப்பொழுது எப்படி உண்டாயிற்று? மறுபடியும் பிரளயத்தில் எங்கு லயித்திருக் கும்? இப்பொழுது பிராந்தியினால் இருப்பதாய்த் தோன்று கிறது. இந்த ஜாக்கிரதாவஸ்தையில் சர்வமும் காணப்படு கிறதேயொழிய நித்திராவஸ்த்தையில் பூர்த்தியாகக் காணப்படுவதில்லை. ஆஹா! இஃது எவ்வளவு ஆச்சரிகர்ய மாயிருக்கிறது! இதைவிட வேறே ஆச்சரியமொன்றுண்டோ? இப்படிக் காணப்படுவது மாயாபிராந்தியினாலொழிய வேறன்று. மனமே பிராந்தி ரூபமாயிருக்கிறது. பிராந்தி யில்லாத விடில் ஜகத்தில்லை எல்லாம் பரிபூரண பரப்பிரம்ம மாகவே இருக்கிறது. ஆதலால், எது விலக்ஷணம் எது விதி. எது நிஷேதம் (தள்ளப்பட்டது) எது சுத்தம் எது அசுத்தம் இவைகளெல்லாம் அசத்தியமே.

பரிபூரண பிரம்மானந்த நிஷ்ட்டையில் நானேயிருக் கின்றேன். என்னைவிட அந்நியமாய் எதையும் பார்ப்ப தில்லை. எதையும் கேட்பதில்லை. நான் எதையும் அறிவ தில்லை. பரிபூரண பரப்பிரம்மத்தை என்னிடத்திலேயே நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். சமுத்திரத்தில் காற்று சஞ்சரிப்பதனால் அலைகள் அனேக விசை பிறந்து பிறந்து நசிப்பதுபோல் ஞானானந்த சொரூபியாகிய என்னிடத்தில் மாயையென்னும் காற்று சஞ்சரிப்பதனால்

பிரபஞ்சமென்னும் அலைகள் அனேக வகை பிறந்து பிறந்து நசிக்கின்றன. ஆத்ம சொரூபியாகிய நான் என்றைக்கும் அத்விதீய பரிபூரண பரப்பிரம்மமாயிருக்கிறேன். "உபே வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜநஹ பரம்ம ஸாம்ய முபைதி" என்பதுபோல் என்னைவிட அந்நியமானது எதுவுமில்லை. எனக்கு விதி விலக்குகளில்லை. எனக்கு புண்ணிய பாவங்களேது? மனது வாக்குக் காயமென்னும் திரிகரண சுத்தியால் நான் புண்ணிய பாவங்களைச் செய்வ தில்லை. நான் அஸங்கன் நான் அடையாளமில்லாதவன். நான் அசரீரி, நான் அசலன், சம்சார பந்தத்தையும் அஞ்ஞான பாசங்களையும் ஹரித்ததனால் (ஹரித்தல் – நாசம் செய்ததனால்.) நான் ஹரி நான் பிரசாந்தன். நான் ஆதி அந்தியமில்லாதவன், நான் பரிபூரண பரபிரம்மம். நான் அகர்த்தன், நான் அபோக் தன் என்றால், நான் எந்தக் காரியங்களையும் செய்வதில்லை. எதையும் அனுபவிப் பதில்லை. நான் பிறப்பு இறப்பில்லாதவன் நான் நாசமில் லாதவன், நான் நித்தியமங்கள சொரூபன்.

ஓ சற்குருநாதா! மாயாந்தகாரத்தினால் மூடப்பட்ட என்னை, பாசமென்னும் மாயையினின்று நீக்கிப் பசுபதி யுடன் சேர்ப்பித்த என் பிரபுவே! இப்பொழுதல்லவோ? என்னை நான் அறிந்தேன்; இப்பொழுது உமக்கும் எனக்கும் யாதொரு பேதமில்லை. நாமிருவரும் ஏக பரப்பிரம்ம சொரூபிகளேயாம்.

**ஆசாரியர்** – உன்னை நீ அறிந்த குமாரா இப்பொழுது ஒன்று சொல்லுகிறோம் கேள்.

சுரு॥ "ப்ரமாதோ ப்ரஹம நிஷ்ட்டாயம் நகர்த்தவ்ய ஹகதாசந ப்ராமாதோம்ருத்யு ரித்யாஹு᳚ வித்யாயாம்ப்ரஹ மாவ திநஹ யதாபக்ருஷ்ட்டம் ஸைவாலம் க்ஷணமாத்ரம்ந திஷ்ட்டதி ஆவ்ருணோதி ததா மாயா பராஞ்ஞும் வாபிபராங் முகம்"

என்னும் அத்யாத்மோபநிஷத் வாக்கிய ரீதியாய் சாதாரணமாய் எல்லோருக்கும் மரண காலத்தில் மிருத்யு உண்டாகமாட்டா; பிரம்ம நிஷ்ட்டையை மறப்பதே மிருத்யு. ஒரு தடாகத்தி லுள்ள பாச்சியை எவ்வளவு தூரம்போக்கியபோதிலும், மறுபடியும் பாச்சியானது யதாப்பிரகாரம் ஜலத்தை மூடிக் கொள்வதுபோல், எப்படிப்பட்ட பிரம்மவேத்தனாயிருந்த போதிலும் பிரம்ம நிஷ்ட்டாபியாசத்தில் சிரத்தையில்லாமல் பராமரிக்கையாயிருந்தால், ஆவரண விக்ஷேச சொரூபமா யிருக்கும் மாயாசக்தி அந்த க்ஷணமே அவனை மேற்சொல்லி பாச்சியைப்போல் மூடிக்கொண்டு அவனுக்கு ஜநந மரண துக்கங்களை உண்டாக்கச் செய்யும். ஆதலால், நீ ஒருபோதும் பிரம்ம நிஷ்ட்டாபியாசத்தை மறக்கவேண்டாம். சர்வ வியாபகமான ஸச்சிதானந்த பரப்பிரம்மத்தை பிரம்மவேந் தர்கள் தமது ஆத்ம சொரூபமாய் அறிகிறார்கள். அந்தப் பிரப் பிரம்மம். ஆகாயத்தைப்போல் எங்கும் வியாபித்திருக்கிறது. அந்தப் பரப்பிரம்மம் சகல ஜீவர்களின் இருதய கமலத்தில் சாக்ஷிமாத்திரனாயிருந்து கொண்டு, கண்கள் சகல ரூபங் களையும் அறுவதுபோல், தேஹேந்திரியாதி பிரபஞ்சங்களை யெல்லாம் ஆத்மாவானது அறிந்து கொண்டிருக்கும், அஹங்கார மமகார சூன்னியர்களான் பிரம்மவேத்தர்கள். அப்படிப்பட்ட பரப்பிரம்மத்தைத் தமது ஆத்ம சொரூபமாய் அறிந்து, சதா ஆத்மாஜசந்தானம் செய்து கொண்டிருப்பது போல் நீயும் செய்யக் கடவாய்.



## 123. பரப்பிரம்மத்தின் ரூபம் எப்படிப்பட்டது?

உலகத்தில் காரியகுரு, காரண குரு என இரண்டு குருக்களுண்டு. இதில் காரிய குரு என்பவன் எப்படிப் பட்டவனென்றால் ஓர் முத்திரையைக் காட்டிக்கொடுத்து அதாவது சுவற்றில் ஓர் சிறிய கறுப்புப் புள்ளி வைத்து அதைக் கண் சிமிட்டாமல் பார்க்கவேண்டுமென்றும் அக்காலத்தில் கண்களில் ஜலம் தாரை தாரையாய்ப் பெருகிக் கண்கள் எரிச்சல் உண்டாகுமென்றும் எவ்வளவு எரிச்சல் உண்டான போதிலும் கண்களைச் சிமிட்டாமல் மேற்சொல்லிய புள்ளியைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமென்றும், இவ்வாறு சில மாதங்கள் பழகி வந்தால் சுவற்றிலுள்ள புள்ளியின் குறி மறைந்து நக்ஷத்திர மண்டலம் தோன்று மென்றும், பிறகு சந்திர மண்டலம் தோன்றுமென்றும், பிறகு, சூர்ய மண்டலம் தோன்றுமென்றும், பிறகு அம்மண்டலம் விசேஷ பிரகாசமே ஆத்ம தரிசனமென்றும், அப்படிக் காணப்படும் பிரகாசமே ஆத்ம தரிசனமென்றும், அந்த ஆத்ம தரிசனமே பரமாத்ம சொரூபமென்றும் சொல்லுவார்கள். மற்றும் சில குருக்கள் மூக்கின் நுனைக் குறியைக் காட்டி அதைத் திருஷ்ட்டித்துப் பார். அப்பொழுது அந்தத் திருஷ்ட்டி மறைந்து முன் சொல்லிய மண்டலங்கள் காணப்படும் என்றும் சொல்லுவார்கள். இவ்வாறே அநேக குருக்கள் அநேக விதங்களாய் காட்டி ஆத்மா, கோடி சூர்யப் பிரகாச மாய்க் காணப்படுமென்றும் சொல்லுவார்கள். இவை யாவும் அறியாத்தன்மையேயாம். நாமரூபமில்லாத பரப்பிரம் மத்தின் அம்சமாகிய ஆத்மாவிற்குப் பிரகாசம் எவ்விதமாய் உண்டாகும். முன் சொல்லிய மண்டலங்களும் பிரகாசமும் கடந்து பார்த்தால் சுத்த சூன்யமாயிருக்கும். ஆகாயவடிவமே காணப்படும் அந்த ஆகாய வடிவம் இங்குப் பலவித

திருஷ்ட்டாந்தங்களுடன் காட்டிச் சொல்லப் போகிறோம் கேளுங்கள், இதற்கு ஞானவாசிட்டம் பிரமாணம்.

அறிவதா யறிவே மெய்யா யமலமா யனைத்தா யாறிப்
பியுறு வரவு போக்கில் பிரமமே யுளதா மந்தச்
செறிபொருட் சத்தி தோற்ற மாத்தரஞ் சகமாய் நிற்கும்
பொறிகள்பல் காட்சி பொய்யே பொருண்மேயயே யென்று வாழ்வாய்

இராப்பகல் இல்லாத இடம் எதுவோ அதுவே பரமாத்மாவின் சுயரூபம், அதாவது, காலை நாலே முக்கால் அல்லது ஐந்து மணி வேளையில் உள்ளங்கையிலுள்ள கோடுகள் தெரிந்து தெரியாமலும் காணப்படும். சமயம் எதுவோ அதுவே இரவு பகலும் இல்லாத இடம். அச்சமயம் நீலம் போலிருக்கும் மேல் ஆகாயத்தைப் பாராமல் அதன் மத்தியிலுள்ள ஆகாயத்தை மாத்திரம் நோக்கிப் பார்த்தால் சற்று இருளும், சற்று வெளிச்சமாயும் காணப்படும். இரவும், பகலும் கூடுமுன்னமே அதாவது காலை ஐந்துமணி முதல் ஐந்தேகால் ஐந்தரை மணி வரையில் எல்லா ஜீவராதிகளின் மனத்திற்கு மிகுவம் சந்தோஷமுண்டாகும். அக்காலத்தில் 'கூ' வென்று குயில்கூவுவதும் மயில் ஆடுவதும் சிங்கம் புலி யானை முதலானவைகள் கர்ஜனை செய்தும் காடை புறா கோழி இன்னும் மற்றமுள்ள வானம்பாடி காக்கை முதலான பக்ஷிகள் கூவுவதும் மயில் ஆடுவதும் சிங்கம் புலி யானை முதலானவைகள் கர்ஜனை செய்தும் காடை புறா கோழி இன்னும் மற்றமுள்ள வானம்பாடி காக்கை முதலான பக்ஷிகள் கூவுவதும் ஏரி குளம் சமுத்திரம் முதலானவைகளிலுள்ள மீன்கள் மிகவும் சந்தோஷித்து ஜலத்தினின்று ஒரு முழத்திற்கு மேல் துள்ளி எழுப்பிக் குதித்துக் கொண்டிருப்பதும் எல்லாப் புஷ்பங்களும் மலர்ந்து பூர்க்கும் வேளை அதுவே யாம். அச்சமயம் அப்புருஷர்களின் மனம், ஓர் விதமாகிய

சந்தோஷத்தை அடையும். இருட்டு அறையில் உட்கார்ந்து கண்களை மூடி காலை ஊந்து மணிக்குத் தரிசித்துப் பரமாத்மாவின் ரூபம் மனதினால் நினைத்துப் புருவ மத்தியில் மனக் கண்ணால் பார்த்தபொழுது அந்த ரூபம் புருவ மத்தியில் தோன்றும். அப்பொழுது மனத்தை வெளி வியவகாரங்களில் ஓடவிடாமல் நிறுத்திப் பரமாத்மாவின் ரூபத்திலேயே ஐக்கியமாகும்படிச் செய்தால் மிகவும் ஆனந்தம் உண்டாகும். அச்சமயம் எந்த மந்திரங்களையும் ஜபிக்காமல் சும்மாயிருந்தால்தான் ஓர் விதமாகிய ஆனந்தம் உண்டாகும் அனகே விஷயங்களில் ஓடிக்கொண்டிருக்கும் மனத்தை ஓடவிடாமல் நிறுத்துவதற்காக இந்நூலில் ஸோஹம் மந்திரம், பஞ்சாக்ஷர மந்திரம் முதலானவைகளை உபதேசமாய்ச் சொல்லப்பட்டன. இவ்வாறு ஜபம் செய்து வந்தால் அனேக எண்ணங்களை எண்ணிக்கொண்டிருக்கும் மனமானது ஒரே எண்ணமாயிருந்து மந்திரத்தை ஜபம் செய்து கொண்டே வரவர அநேக நாள் பழக்கத்தால், ஜபித்துக் கொண்டிருக்கும் மந்திரம் தனக்குத் தானாய் நின்றுவிடும். அப்பொழுது எல்லாவற்றிற்கும் சாக்ஷியாயிருந்து அறிவதாயும் நிர்மலமாயும் எல்லாமாயும், உபசாந்தமாயும், இராப் பகல் இல்லாததுமாயிருக்கிற பிரம்ம சொரூபத்தில் சேர்ந்து விடுவான். அச்சமயத்தில் முன் சொல்லிய ஆனந்தம் தோன்றும். மனம் இருக்கும்வரையில் ஆனந்தம் உண்டாகமாட்டாது மனம் நசித்தால் தன்னைத்தான் மறந்து ஆனந்தத்திலேயே சொக்கியிருப்பான்.

அருணோதயமானவுடன் பக்ஷிகள் கூவுவதும், சிங்கம் புலி முதலானவைகள் கர்ஜனை செய்வதும், அருணோதயத்திற்கு முன் ஜனங்களுக்கும் உண்டாயிருந்த ஓர்விதமான சந்தோஷமும் நீங்கிவிடும். பிறகு மனக்குரங்கானது பழைய படி பலவிடங்களிலும் ஓடித்திரிந்து கெட்டலையும், அப்பாழ்

மனம் இஷ்டம்போல் போக விடாமல் பத்தியினால் திருப்பி விட வேண்டும். அப்பொழுது அம்மனத்தின் சேஷ்டைகள் யாவும் அடங்கிவிடும். அதாவது, கள், சாராயம், விஸ்கி, பிராந்தி, ஒயின் முதலானவைகளில் எவரெவர்களின் மனம் எதையெதைச் சாப்பிடவேண்டுமென்று நினைக்கிறதோ அப்பொழுது அம்மனத்தின் இஷ்டம்போல் போக விடாமல் புத்தியினால் தடுத்துவிட்டால் மனத்திற்கு உண்டாயிருந்த இச்சை ஒழியும். மனத்தை வசப்படுத்த புத்தியே முக்கியமான தாயிருகின்றது. துன்மார்க்க கர்ம பலன்களை அனுபவிக்க வேண்டியதாயிருந்தது. புத்தி சொல்லும் சொற்களை மனம் கேட்கமாட்டாது. மனத்தைவிடப் புத்தி சிரேஷ்டமானதா யிருப்பதனால் புத்தி சொல்லும் வார்த்தையை முக்கியமாய் மனம் கவனிக்கவேண்டும்.



## 124. மனம் லயப்பட மூன்றாம் முறை உபதேசித்தல்

உங்கள் மனத்திற்கு நன்றாய் விளங்கும்படி மறுபடியும் உபதேசிக்கின்றோம்.

நமது சரீரத்திற்குள் எந்த ரூபமும் இல்லாமல் காற்றுருவமாயிருக்கும் மனது என்று சொல்லப்பட்ட குரங்கு ஒன்று இருக்கிறது. எவ்வாறு தாவித்தாவி எகிறிக் குதித்துக் கொண்டே ஓடுகிறதோ அதுபோல் நமக்குள் எந்த ரூபமும் இல்லாமலிருக்கும் மனக்குரங்கானது சற்று நேரம் மனைவியார் மீதும் புத்திரர்கள், புத்திரிகள் பேரன், பேத்திமார்களின் மீதும் இவ்வாறாக ஒருவர் மீதிருந்து மற்றொருவர் மீது முன் சொல்லிய குரங்கைப்போல் இம் மனக்குரங்கும் ஒருவர் மேலிருந்து, மற்றொருவர் மேல் தாவி எகிறிக் குதித்துக்கொண்டே சென்று பிறகு, பூமி, தோட்டம், துரவு, தன தான்யாதி முதலாகிய ஐஸ்வர்யங்களின் மீது சற்று நேரம் ஓடி, இரவில் படுத்தபின் மனம் தூங்கிவிடும். தன் ஆசாயத்தைத் தீர்த்துக் கொள்ள மனமானது இரவில் சற்று நேரம் தூங்கியபிறகு, காலை எழுந்தவுடன் மறுபடியும் முன்னால் நினைத்தது போல் வேறு வேறான அனேக எண்ணங்களை எல்லாம் மனம் எண்ணிக் கொண்டேயிருக்கும். இதற்குத் திருஷ்ட்டாந்தம் தாயுமானவர் பாடல்.

காடுங் கரையு மனக்குரங்கு
  கால்விட்டோட அதன்பிறகே
யோடுந் தொழிலாற் பயனுளதோ?
  ஒன்றாய்ப் பலவாய் உயிரக்குயிரா
யாடுங் கருணைப் பரஞ்சோதி
  யருளைப் பெறுதற் கன்புநிலை
தேடும் பருவ மிதுகண்டீர்
  சேர வாருஞ் சகத்தீரே.

பிரபஞ்சத்திலுள்ள மாணவர்களின் மனத்தையெல்லாம் சும்மாயிருக்கச் சொன்னால் சும்மாயிராமல் அதற்கு நேர்விரோதமாய் இருந்து மனத்தில் இஷ்டம்போல் நடக்கிறது எப்படியென்றால், ஏதாகிலும் ஒரு காரியத்தை நினைத்து வீட்டை விட்டு வெளிக் கிளம்பினவுடன், ஜலத்தில் நீர்க் குமிழிகள் பிறந்து பிறந்து எவ்வளவு சீக்கிரமாய் நசிக்கின்றனவோ அதுபோல் ''புங்கானுபுங்க விஷயே க்ஷணதத்வரூபிணாம்'' என்னும் வாக்கியரீதியாய் க்ஷணத்திற்குள், கணக்கற்ற எண்ணங்கள் பிறந்து பிறந்து, அப்போதே அக்கணமே இமை கொட்டுவதற்குள் மறைந்து மனம் வேறு விஷயங்களில் பிரவேசித்து (ஓடி) அதையும் மறந்து, மறுபடியும் வெவ்வேறு விஷயங்களை யோசனை செய்து கொண்டே. இவ்வாறாக தான் குறித்த இடம் போய்ச் சேருவதற்குள் அனேக யோசனைகள் பிறந்து பிறந்து அக்கணமே மறைந்து மறுபடியும் அந்த ஞாபகமில்லாமல் பூர்த்தியாய் மறந்துவிடும். பிரபஞ்சத்திலுள்ள மாணவர்களின் மனத்திற்கெல்லாம் எப்பொழுதும் இப்படிப்பட்ட சேஷ்ட்டையே உண்டாகிக் கொண்டே இருக்கும். இப்படிப்பட்ட மனம் எப்பொழுதும் ஓய்ந்து சற்று நேரம் அடங்கியிருக்குமென்றால், சாதாரணமாய் ஜனங்கள் அவரவர்களின் வேலைகளை முடித்துச் சாப்பிட்டுச் சயனிக்க இரவு பதினோரு மணியாகும். அதற்குமேல் சயனித்து மறுபடியும் மூன்று அல்லது நான்கு மணிக்கு எழுந்திருக்கின்றார்கள். இதன் மத்தியில் அதாவது நித்திரையில் இருக்கும் நான்கு மணி நேரம் மாத்திரம். இப்பாழ் மனம் நித்திரையில் அடங்கியிருக்கும். அச்சமயத்திலும் மனம் சும்மாயிராமல், கனவு என்பதைக் காணும். அப்படிப்பட்ட சமயத்தில் மனம் வஸ்துக்களைக் கண்ணிந்திரிய முகமாய் அறிந்து எதையும் பார்ப்பதில்லை. அப்படியிருக்க இரவு தூங்கும்பொழுது மனம் வெளியில் சென்று திரிந்து தான் இரவு தூக்கத்தில்

கண்ட வஸ்துக்களையெல்லாம் காலையில் அம்மனம் இதரர் களிடம் எவ்விதமாய்ச் சொல்லுகிறதென்றால் தன்னில் அந்தர்யாமியாயும் சாக்ஷிசொரூபனாயும் இருக்கும் ஆபத்மா வானது, மனம் இரவு நூக்கத்தில் கண்ட விஷயங்களை எல்லாம் தான் சாக்ஷிமாத்திரனாயிருந்து பார்த்து வந்தவனாத லால் புருஷன் தூங்கி எழுந்தவுடன் இரவு தூக்கத்தில் கண்ட விஷயங்களை எல்லாம் அவனுக்கு ஞாபகப்படுத்தி இரவு தான் கனவில் கண்டதை மற்றவர்களிடம் சொல்லும்படி ஆத்மா செய்விக்கிறது. அதனால், அவன் இரவு தான் கண்ட கனவைச் சொல்லுகிறான். இம்மனம் ஒவ்வொரு சமயம் கனவு காணாமல் சும்மாய் அடங்கியிருக்கும். அப்படிச் சும்மாய் அடங்கியிருப்பதே சுஷுப்தி என்று சொல்லப்படும் அதாவது மனத்திற்கும் பிரபஞ்ச வியாபாரங்களும் சொப்பனாவஸ்தை களும் இல்லாமலிருப்பதே சுஷுப்தியாவஸ்தை என்று சொல்லப்படும். ஜாக்கிரத்தில் இந்த சுஷுப்தியாவஸ்தை அடைந்திருப்பதே சமாதி என்று சொல்லப்படும். இந்தச் சமாதியில் காணப்படும் வஸ்துவே யோக திருஷ்ட்டை என்று சொல்லப்படும். இப்படிப்பட்ட சமாதியில் மனம் லயிக்காமல் தூக்கத்தில் லயித்திருப்பது எப்படி இருக்கிற தென்றால் பிரளயகாலம் வந்தபொழுது பிரபஞ்சமெல்லாம் எவ்விதமாய் ஜலத்தில் மூழ்கிவிடுகின்றனவோ அதுபோல், பிரபஞ்சத்திலுள்ள ஜீவர்களின் மனதெல்லாம் இரவு தூங்கும்பொழுது நான்கு மணிநேரம் மாத்திரம் தூங்கும் பொழுது நான்கு மணிநேரம் மாத்திரம் தூக்கத்தில் லயித் திருந்து, தூக்கத்தை விட்டெழுந்தவுடன் மறுபடியும் இரவு தூங்கும் வரையில் அவர்களின் மனமானது அனேக எண்ணங் களை எண்ணிக் கொண்டிருக்கும். அப்படி எண்ணிய எண்ணங்களெல்லாம் ஞாபகமிராது. ஆனால் அவர்களுக்கு எது முக்கியமான விஷயங்களோ அவற்றில் சிலது மாத்திரம் ஞாபகமிருந்து மற்றவைகளெல்லாம் மறந்துவிடும். மனது

எப்படி க்ஷணத்திற்குள் உதித்து உடனே மறந்துவிடுகிறதோ அதுபோல் பிரபஞ்சத்திலுள்ள மானவ ஜனங்களெல்லோரும். மாயையால் கட்டுப்பட்டு க்ஷணத்திற்குள் அழிந்துபோகும் தேகம் அநேக காலமிருப்பதால் எண்ணி அநேக பாடுகள் பட்டு நல்வழியிலும் துன்மார்க்க விருத்தியிலும் திரவ்வியம் சம்பாதித்து இப்பொழுதுள்ள பெண்டு பிள்ளைகளுக்கு ஆஸ்தி சேகரித்து கொண்டே வரவர, அகஸ்மாத்தாய் இருந்தாற்போலிருந்து திடீரென்று ஏதோ ஓர் வியாதிவந்து ஜீவன் அத்தேஹத்தைவிட்டு மற்றொரு தேஹத்திற்போய்ப் பிரவேசித்து, மறுஜநநமெடுத்து அங்கும் சிலநாளிருந்து அச்சென்மத்தில் புதிதாய் வரும் பெண்டு பிள்ளைகளுக்கு மறுபடியும் தனம் சம்பாதித்து வைத்து மறுபடியும் மரணமடைந்து வேறு சரீரத்தில் போய்ப் புகுந்து மறுபடியும் அங்கு வரும் பெண்டு பிள்ளைகளுக்கு ஆஸ்தி சேகரித்து வைத்து இவ்விதமாய் அப்போதைக்கப்போது ஜன்மான்திரங்கள் தோறும் புதிதாய் வந்து கொண்டிருக்கும் பெண்டு பிள்ளைகளில் மீது ஆசை அதிகமாய் வைத்துக்கொண்டு வருவதனால் அந்தப் பாழும் ஆசையினால் ஜன்மங்கள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. ஈஸ்வரன் ஸ்திரீ புருஷர்களை இப்படிப்பட்ட ஆசை என்னும் மாயையினால் அவர்களை மோஹிக்கச் செய்துதான் சூத்திரகாரியைப்போலிருந்து அவர்களை ஆட்டி அவர்களின் கூத்துகளையெல்லாம் பார்த்து வருகிறான். ஆதலால் இந்த ஈஸ்வர மாயைக்குட்படாமல் தப்பித்துக் கொள்ளும் பொருட்டே இந்நூல் எழுதப்பட்டது.



## 125. மௌனம் எது? சமாதி எது?

சுரு॥ "ஸந்த்யக்த வாஸ்நாந் மௌநா ற்ருதே
நாந்த்யுத்தமம் பதம்" *(முக்திகோபநிஷத்)*

*பிரம்ம ஞானிகளுக்கு சர்வ வாசனைகளும் சூன்னிய மாய் மௌனத்தைவிட சிரேஷ்டமானது யாதொன்று மில்லை. மௌனமென்றால் பிரபஞ்ச தர்ம சம்பந்தங்களை விட்டுச் சகல சங்கல்பங்களையும் ஒழித்து பிரம்ம சொரூபனாயிருக்கப்பட்டவனுக்கு ஆனந்தத்தை லபிக்கும் இந்த மௌனமே தியானமென்று சொல்லப்படும் மௌன மென்றால் யாருடனும் பேசாமல் வாயை மூடிக் கொண்டிருப்பதல்ல மனத்தை வெளி வியவகாரங்களில் ஓட விடாமல் நிறுத்துவதே மௌனமாகும் இதற்கு கோயிற் புராணமும், தாயுமான சுவாமி பாடலும் பிரமாணம் என்னவென்றால்,*

வாக்கொடி மனமிறந்த மன்னவ னெங்கு மாகி
நீக்கமற நிறைந்தா மேனுர்* நிகழ்தரா ததனான மூத்தி
போக்கொளி நல்லவெஸ்றப் புனிதனே புசிந்திசெய்தெம்
பாக்கியவகையா வெண்ணில் பதிமிடும் பாரில்வைத்தான்

"மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவியே துரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்த நின்னடிய ரடியிலே"

*சுரு॥ பால்யோ திஷ்டாஸேத் பால்யஞ்ச நிர்வித்ய பாண்டித்யேந திஷ்டாஸேத் பால்யஞ்ச பாண்டியத் யஞ்ச*

---

* *நிகழ்தரா – அந்த உண்மை விளங்கா.*

நிர்வித்ய மௌநேந திஷ்ட்டாஸேத் பால்யஞ்ச பாண்டியத்
யஞ்ச மௌநஞ்ச நிர்வித்ய அதப்ராஹ் மணஹ

(ப்ருஹ தாரண்யகோ பநிஷத்)

பால்யமென்றால் சிரவணம் பாண்டியத்தியமென்றால் மநநம் மௌனமென்றால் நிதித்தியாசனம் இம்மூன்றையும் விட்டுத் தன்னைத்தான் மறந்து பிரம்ம சொரூபியா யிருப்பதே மௌனம்.

சுரு।। "கடாகாச மஹாகாசம் இவாத்மாநம் பராத்மநி
விலாப்யா கண்டபாவேந தூஷ்ணீம் பாவஸதா ഫுநே"
"சிதாத்மநி ஸதாநந்தே தேக்ஷேரூட மஹந்தியம்
நிவேஸ்ய லிங்கமுத் ஸ்ருஜ்ய கேவலோ பவ ஸர்வதா"

(அத்யா)

கடாகாசம் மஹாகாசம் ஏகமாவதுபோல் ஆத்மாவே பரப்பிரம்மமென்னும், பரப்பிரம்மமே ஆத்மாவென்றும் ஐக்கியத்தை அடைந்து, ஆத்ம சொரூபியாகிய நீயே பிரம்ம மென்றும் நிச்சயித்துச் சகல எண்ணங்களையும் மறந்து சிலை (கல்) வடிவமாய்ச் சும்மாயிருப்பதே மௌனம்.

சுரு।। "வாஸநாஸ்த்வம் பரிக்யஜ்ய அந்தஸ் ஸாந்தஹ ஸ்மஸ் தேஹோபவ சிங்மாத்ர வாஸநஹ தாமப்யத ப்ரித்யஜ்ய மநோ புத்தி ஸமந்விதாம் ஸேசத்திர ஸமதநோ மயித்வம் பவமாருதே அஸப்தமஸ்பர்ஸ மித்யாதி."

(முக்திகோபநிஷத்)

வாசனாத்திரயங்களும் மோக்ஷத்தின் இச்சையும் விட்டு, ஜகத் சர்வம் அநித்தியமென்றும் பிரம்மமே சத்தியமென்றும் பிரம்மத்தைத் தியானிக்க வேண்டும். பிறகு அந்தப் பிரம்ம தியானத்தையும்விட்டு மனோபுத்திகள் இரண்டையும் சஞ்ஜலமில்லாமல் (அசையாமல்) ஸ்திரமாய் நிறுத்தி.

சுரு॥ ''ஹ்ருதய நிர்மலம் க்ருத்வா சித்தயித்வாப்ய நாமயம்
அஹமேவ பரம் ஸர்வமிதி பஸயேத்பரம் ஸுகம்''

(பயிங்க)

இருதயத்திலிருக்கும் காமக் குரோதாதிகளாகிய அழுக்குகளையெல்லாம் நீக்கி மனத்தை நிர்மலமாகச் செய்து அந்தப் பரம்பிரம்மமே நானென்றும் தானே சர்வமென்றும் மௌனமாய் சும்மாயிருப்பதே பரமசுகம். இதற்குத் தாயுமானவர் பாடல் பிரமாணமென்ன வென்றால்,

பந்தமறு மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொறை யருளி அந்தப் பண்புக்கேதான்
சிந்தையில்லை நானெனும் பான்மை யில்லை
தேசமில்லை காலமில்லை திக்கு மில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிறிது மில்லை
சொல்லுமில்லை இராப்பகலாந் தோற்றமில்லை
அந்தமில்லை ஆதியில்லை நடுவு மில்லை
அகமுமில்லை புறமுமில்லை அனைத்து மில்லை.

அதாவது பூதங்களற்று பொறியற்று புலன்களற்று பேத குணங்களற்று பேராசையுமற்று காது காரணங்களற்று ஆனந்தக் காக்ஷியிருப்பதே சமாதியாகும். இதற்கு த்ரிஸிகி பிராம்மணோபநிஷத் பிரமாணமௌனவென்றால்

''அஹமேவ பரம் ப்ரஹமா ஹமிதி ஸம்ஸதிதிஹி
ஸமாதிஹி ஸதுவிஞ்ஞேயஹி ஸர்வவ்ருத்தி விலர் ஜிதஹ.''

ஆத்ம சொரூபியாகிய பிரம்மமென்று ஐக்கிய பாவத்தில் திருடமாய் நின்று சகல மனோ விருத்திகளும் சூன்னியமாய் எந்த எண்ணங்களுமில்லாமல் சகல திருசியங்களும் அதாவது கண்களுக்குக் காணப்படும் சகல வஸ்துக்களும், எண்ணங் களும் மறந்து தானேதானாய் நின்றிருப்பதே சமாதி எனப்படும்.

## 126. சாஸ்திர விசாரணை ஜபதங்களின் பலன்

சகல சாஸ்திரங்களையும் வாசிக்கவேண்டுமென்னும் பிராந்தியைவிட்டு, ஆத்மாவே சத்தியமாகிய பரப்பிரம்ம மென்று அறிந்து ஆத்மானுசந்தானம் செய்து கொண்டு இருக்க வேண்டும். ஸ்நானம் சந்தியாவந்தனம். ஜபம், தபம், ஹோமம், நியமம், யாகம் தீர்த்தயாத்திரைகள் முதலாகிய ஸத்கர்மங்களைச் செய்வதனால் தத்வஞானம் உண்டாக மாட்டா. அதனால் ஆத்மானுபவத்தை அடைய மாட்டா.

''சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ.''

மதுரமாகிய பதார்த்தங்களைச் சமைத்து அதில் அகப்பையையைப் போட்டு வைத்தால் அவ்வகப்பையும் சட்டியும் பதார்த்த ருசியை அறியாததுபோல சகல சாஸ்திரங் களையும் வாசித்துப் பண்டிதனென்று பெயர் பெற்ற போதிலும் குரு கடாக்ஷத்தினால் வேதாந்த சாஸ்திரங்களைக் கேட்டு சிரவண மநந நித்தியாசனமுடையவனாய் தத்துவ ஞான ஸம்பவன்னாயிருந்தபோதிலும் ஆத்மாநுபவம் அடையாவிட்டால் அப்படிப்பட்டவன் வியர்த்தனே.

''நட்ட கல்லு பேசுமோ நாதனுள் ளிருக்கையிலே''

என்றபடி இருதய கலமத்திலிருக்கும் ஆத்மதேவதையைத் தெரிந்து கொள்ளாமல் வேறோரிடத்தில் தெய்வமிருக்கிற தென்று எண்ணப்பட்டவர்கள் ஹஸ்தத்தில் (கையில்) இருக்கும் தேவலோகத்திலுள்ள தேவரத்னமாகிய கௌஸ்துவ மணியை விட்டுவிட்டு, பூலோகத்திலுள்ள சாமான்னியமாகிய ரத்னத்தைத் தேடப்பட்டவனுக்குச் சமானமாகிறார்கள்.

சகல சாஸ்திரங்களையும் வாசிப்பதனால் பிரயோஜன மில்லை. அதனால் முக்தி அடையமாட்டார்கள். இந்த

தேஹத்தில் நிவசித்துக் கொண்டிருக்கும் பரப்பிரம்மமாகிய ஆத்மாவை உள்முகமாய்த் தரிசித்தால் முத்தியை அடையலாம்.

இந்த ஆத்மாநுபவம் உபயோகமற்ற சிரவணக்களினாலும் (கேள்விகளினாலும்) தவம் செய்வதனாலும், சாங்கியஹட தி யோகங்களினாலும் வர்ணாசிரம தர்மங்களைத் தப்பாமல் அநுஷ்டிப்பதாலும் உண்டாக மாட்டாது.

அம்ருதபானம் செய்தவனுக்கு ஜலபானம் செய்வதனால் யாதொரு பிரயோஜனம் இல்லாமலிருப்பது போல் வேதாந்த விசாரணையினாலும் குருவினாலும் ஆத்மாநுபவம் அறிந்தவனுக்கு வேதங்களினால் பிரயோஜனமில்லை.

உலகத்தில் சமுத்திரம்போல் அனேக சாஸ்திரங்கள் விசேஷமாயிருக்கின்றன. ஒவ்வொரு மனிதனும் ஆயிர வருஷங்கள் ஜீவித்திருந்து சாஸ்திரங்களை வாசித்துக் கொண்டிருந்தபோதிலும் அந்தச் சாஸ்திரங்கள் சம்பூர்ணமாக மாட்டா. ஆதலால் சாஸ்த்திர விசாரணையைவிட்டு நமது ஜீவிதகாலம் மிகவும் சொற்பமாயும், தாமரையிலையின் மீதுள்ள ஜலபிந்துவைப் போல் இருக்கிறதென்று எண்ணி அதிதீவிரப்பட்டு இந்நூலில் உபதேசித்திருக்கும் ராஜ யோகத்தின் ரகசியத்தைத் தெரிந்து கொண்டு சதாகாலமும் அந்தத் தியானத்திலேயே இருக்கவேண்டும்.

சகல சாஸ்திரங்களையும் வாசித்துப் பண்டிதனென்று பெயர் பெற்ற போதிலும் பிரமன் விஷ்ணு மஹேஸ்வ ராதி சகல தேவதைகளைப் பூஜித்த போதிலும், ஆத்ம ஞான மில்லாவிடில் மேற்சொல்லியவைகளெல்லாம் நிஷ்ப்பிர யோஜனமே. வருணாசிரம தர்மங்களைத் தப்பாமல் அநுஷ்ட்டித்த போதிலும், மஹாமேரு பர்வதமவ்வளவு தங்கம் கோடி முறைகளில் தானம் கொடுத்த போதிலும் ஆத்ம ஞானம் இல்லாவிட்டால் அவைகளெல்லாம் நிஷ்

ப்ரயோஜனமே. கோடி யஜ்ஞங்கள் செய்த போதிலும், பசுக்கள் குதிரைகள் யானை முதலானவைகளைக் கோடி கோடி யாய்த் தானங் கொடுத்தபோதிலும் முக்தி உண்டாகமாட்டா. குருகடாக்ஷமில்லாமல் ஆத்ம ஞானம் உண்டாகமாட்டாது. ஆத்ம ஞானமில்லாமல் முக்தி லயிக்காது. ஆதலால்,

உலகத்திலுள்ள மனிதர்களெல்லோரும் சாஸ்திரங் களையே பார்த்துக் கொண்டு கூட்டங்கூடி ஒருவரோ டொருவர் விசாரணை செய்து கொண்டே வந்து இருந்தாற் போலிருந்து திடீரென ஏதோ ஓர் வியாதி வந்து இந்தச் சரீரத்தை விட்டுக் கிளம்பி, அவனவன் கர்மத்திற்குத் தக்கபடி வேறு சரீரத்தில் போய்ப் புகுந்து அந்த ஜன்மத்திலும் முன் ஜன்மாந்திர வாசனையினால் இவனைச் சாஸ்திரங்களைப் பார்க்கும்படி இழுத்துக்கொண்டே செல்லும். ஆதலால் சாஸ்திர விசாரணையை விட்டு ஒழித்து யாருடனும் விருதா வார்த்தைகளை வாய்த்திறந்து பேசாமலிருந்து இந்நூலில் உபதேசித்து இருக்கும் விஷயங்களை நன்றாயறிந்து, பிறகு இந்நூலையும் வாசிக்காமல் நிறுத்தி, சதாகாலமும் தன் ஜபத்திலேயே இருக்க வேண்டும். மனதை ஒடுக்கவேண்டு மென்று எல்லாச் சாஸ்திரங்களும் பெரியோர்களும் சொல்லி யிருக்க நீங்கள் அவ்வாறு செய்யாமல் சாஸ்திரங்களையே வாசித்து மனத்தைச் சமுத்திரம் போல் விரிவாகச் செய்து கொள்கிறீர்கள். அப்படிச் செய்து வருவதனால் விசேஷ ஜன்மங் களை எடுக்க வேண்டியதாயிருக்கிறதே யொழிய மற்ற படிக்கு வேறு ஒன்றில்லை. ஆதலால், இந்நூலை விருகா காலங்கழித்துச் சென்று விடாமல் மனதை ஒடுக்கச் சாதனம் செய்துவர வேண்டும் என்று இந்நூலாசிரியருடைய கருத்து.

கனவு கண்டு மறுபடியும் சில நேரத்திற்கெல்லாம் மறந்து விடுவதுபோல் சிலநாளிலிருந்து பிறகு மறைந்து போகப்பட்ட மனைவி, புத்திரர்கள், புத்திரிகள் தனதான்யாதி ஐஸ்வர்யங்களெல்லாம் அனேககாலம் இருக்கப்பட்டவை யென்று எண்ணி விருதா பிரதமையடைந்து, இது எனது,

58 E

இவர்களெல்லோரும் என்னுடையவர்களே என்று பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு ஸ்தீரி புருஷர்களும் நினைக்கிறார்கள். ஆனால் மாயையென்பது இவர்களை எப்படிப் பட்ட பிரமையில் கொண்டு வந்து விடுகிறது பாருங்கள். என் மனைவி யென்பவள் யார்? என் புத்திரர்கள் யார்? பந்துக்கள் யார்? இப்பொழுதிருக்கும் மனைவி புத்திர, புத்திரிகள் என்பது பன்னிரண்டாவது வயதில் இருந்தார்களா? இல்லை யல்லவா? இவர்களின் மீது இப்பொழுதிருக்கும் ஆசை என் பன்னிரண்டாவது வயதில் இருந்ததா? அக்காலத்தில் இல்லையல்லவா? இவைகளெல்லாம் விவாகம் செய்த பிறகு வந்த ஆசைகளே யொழிய, விவாகத்திற்குமுன் இருந்த ஆசைகளல்ல. இந்த ஆசைகள் ஒவ்வொரு ஜன்மத்திலும் சிறிது சிறிதாய்த் தொடர்ந்து கொண்டே வந்தவை. இந்த ஆசைகளுக்கே மாயையென்று சொல்லப்படுமே யொழிய இதைவிட மாயையென்பது வேறோர் வஸ்து வில்லை. ஆதலால், இந்த ஆசைகளையும் சகல மனோ வியாபரங்களையும் விட்டு ஒழித்து, பிரம்மத்தைத் தியானித்து மஹா வாக்கியார்த்தங்களை அறிந்து பிறகு தத்துவ விவேகத்தினால் 'பிரம்மமே நான்' ''நானே பிரம்ம'' மென்று நிச்சயித்து, சகலமும் மறந்து* நிர்வகல்பசமாதி நிஷ்ட்டை யென்னும் ஆத்ம சாக்ஷாத்காரத்தை அடையவேண்டும். அதை அடைந்தவனே சந்யாசி, அவனே முக்தன், அவனே பூஜ்யன். அவனே ராஜயோகி அவனே பரமஹம்ஸன், அவனே அவதூதன், அவனே பிராமணன்.

காஷாய வஸ்திரங்களைத் தரித்துக் கொண்டிருப் பதனால் சந்யாசியும், கௌபீனமில்லாமல் திரிவதனால் அவதூதனும், நூலிழைகளையுடைய பூணூலைக் கழுத்தில் தரித்துக் கொண்டு இருப்பதனால் பிராமணனும் ஆக மாட்டான் என்று அறிய வேண்டும்.

---

★ எந்த நினைப்பு மறப்புகள் இல்லாமல் சும்மாயிருப்பதே நிர்விகல்பசமாதி என்று சொல்லப்படும்.

## 127. பரமஹம்ஸன் எவன்?

சுரு॥ ''யோயம் பரமஹம்ஸமார்கோ லோக துர்லப தரோ நது பாஹுல்யோயத்யேகோ பவதி ஸ ஏவ நித்ய கூட ஸ்தஹஸ ஏவ வேதபுருஷ இதி விதுஷோ மந்யந்தே மஹா புருஷோ யச்சித்தம் தத்ஸதா மய்யேவா வசிஷ்ட்டதே தஸ்மாத ஹம்ச தஸ்மிந்நேவவஸ்தீயதே அஸௌ.

ஸ்வபுத்ர மித்ரகளத்ர பந்த்வதீந்ஸிகாம் யஜ்ஞோபாவீதா யாகம் வைத்ரம் ஸ்வாத்யா யம்ச ஸர்வகர்மாணி ஸந்யஸ்யம் யம் ப்ரஹமாண்டம் ச ஹித்வா கௌபீநம் தண்ட மாசசாா. நம் ச ஸ்வஸரீரோப போகர்த்தாய லோகஸ்யை லோபகத ரார்த்தாய ச பரிக்ரஹேத் தச்ச ந முக்யோ ஸதிகோ அயம் முக்ய இதி சயதயம் முக்யஹ''

*(பரமஹம்ஸோபநிஷத்)*

பிரபஞ்சத்திலுள்ள ஜீவகோடிகளெல்லாம் விடும் உஸ்வாச நிஸ்வாசங்களுக்கு (மூச்சுகளுக்கு) ''ஹம்ஸ'' என்று சொல்லப்படும். இந்த ''ஹம்ஸ''த்தை (மூச்சை)த் தன் சுதாதீனம் செய்து கொண்டு நடத்தப்பட்டவனே பரம ஹம்ஸன். ராஜாங்கத்தில் பெயர் பெற்றவனுக்கு பஹதூர் பட்டம் சக்கரவர்த்தியினால் எப்படிக் கொடுக்கப்படு கின்றதோ, அதுபோல் ஹம்ஸத்தை (மூச்சை)த் தன் சுவாதீனம் செய்து கொண்டவனுக்குப் பரமஹம்ஸ என்னும் பட்டம் அவனது குருவினால் கொடுக்கப்படும்.

உலகத்தில் இந்தப் பரமஹம்ஸர்கள் இருப்பது, மிகத் துர்லபம். அநேக ஜன்மங்களாய் நிஷ்காம்ய புண்ணிய கர்மங்களை அநுஷ்டித்து வந்து, அந்தப் புண்ணிய கர்மங்களின் பரிபக்குவத்தினால் இந்த ஜன்மத்தில் லயிக்குமேயொழிய சாதாரணமாய் லயிக்கத்தக்கதல்ல.

பிரம்மசாரிகள் கிருகஸ்தர்கள் இருப்பதுபோல் இந்தப் பரம மஹம்ஸர்கள் எங்கும் இருக்கமாட்டார்கள். பவித்திரமாகிய புண்ணிய தீர்த்த, ஸ்தலங்கள் எங்கெங்குண்டோ, அங்கங்குத் தேடித் தேடி திரிந்து அலைந்து பார்த்தபோதிலும் ஒரு பரமஹம்ஸன் அகப்படுவது மிகவும் கஷ்டம். அந்தப் பரமஹம்ஸனே நித்திய பவித்திரன். அவனுக்கு லௌகீக சின்னங்கள். சிகா (குடுமி) யஞ்ஞோவவீதங் (பூணூல்)கள் இல்லாவிட்டாலும் அவன் நித்திய பூஜ்யனே நித்திய பூஜ்யன் என்பதற்கு ஸ்ரீ சங்கராச்சாரியார் சொல்லுகிறார்.

சுரு।। "நித்யம் ஸர்வதா காலத்ரயேபி அஸேஷ விஸேஷாத்யதே ந பூதம் பவித்ரம் ஸிகா யஜ்ஞோப வீத வேதா தயயநாதித்யாகஸாத்திகாரணம் ஸ்த்யஜ்ஞா நமத்த மாநந்தாத்ப ஸ்வரூபம் யத்ப்ரஹ்ம தஸ்மிந்நித மஹமஸ்மீதி ஜஞோநாவதிஷ்டதி இதி நித்ய பூதஸ்தஹ யதஸ்ததஹ ஸிகாயஜ்ஞோபவீத வேதாத்யய நாதி பரித்யாக்யபித ளாத்ராதி ஸமாநத்வேந ஸங்கநீயஹ கிம்து ஸ ஏவ நித்ய பூதஸ்தோ ந ஹயந்நோ வேதாத்தியய நாதி மாநபி."

காலத்திரயங்களில் சிகை (குடுமி) யஞ்ஞோபவீதம் (பூணூல்) வேதாத் த்யநாதிகள் (வேதபாராயணர்கள்) இல்லா விட்டாலும் மனோகத்திக்குக் காரணமாகிய சத்திய (சத்திய மானதும்) ஞான (ஞான சொரூபமானதும்) அநந்த (ஆதி மத்ய அந்திய மில்லாததும்) ஆநந் தாத்ம சொரூபமானது மாகிய எந்தப் பரபிரம்மமுண்டோ அந்தப் பரப்பிரம்மமே நான் என்று பிரம்மத்தில் ஐக்கியமாய் இருப்பவனே நித்ய பூஜ்யனென்று சொல்லப்படுவான். அப்படிப்பட்டவனுக்குச் சிரசில் குடுமி கழுத்தில் பூணூல் இல்லாவிட்டாலும் அவனே பிராமணனாவான். இப்படிப்பட்ட பிரம்மைக்கியாநு சந்தானமில்லாமல் குடுமி வைத்துக் கொண்டும் கழுத்தில் பூணூல் தரித்துக்கொண்டும் வேதபாராயணம் செய்து வந்தபோதிலும் அவன் பிராமணனாமாட்டான். அதாவது,

சிகாயஞ்ஞோபவீத வேதபாட அப்பியாசங்களில் புண்ணிய முண்டாகுமென்னும் விஷயங்களை சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதை நாம் எப்படி நம்புகின்றோமோ. அது போல் வைராக்கியமுடையவன் சிகாயஞ்ஞோப வீதங் களைத் தியாகம் செய்ய வேண்டுமென்று (நீக்கிவிடவேண்டு மென்று சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதனால் அதைப் பரமஹம்ஸன் அனுஷ்டித்து வருகிறான். அதனால் அவனுக்குத் தோஷமில்லை, இந்த விஷயத்தில் யாதொரு சந்தேகமும் இல்லை, பிரம்மாத் மைக்கியத்தை அடைந்த வனுக்குச் சிகா யஞ்ஞோபவீதங்கள் இல்லாவிட்டாலும் அவன் பவித்ரரனே யாவான். அவனே வேதபுருஷன் காலாத் புருஷனும் (காலனும் ஆத்மாவும்) அவனே. அதாவது, என்னைவிட வேறானவனன்று என்று இரண்யகசப்பன் நாரத மஹரிஷிக்குச் சொல்லினர் சூரணாயிருக்கப்படடவன் ரணக்களத்தில் ஆயுதங்களினால் விசேஷ காயம் பட்டபோதி லும்; அவைகளையெல்லாம் லக்ஷியம் செய்யாமல் ரணக் களத்தில தீரனாய் நின்று எப்படி யுத்தம் செய்கிறானோ. அதுபோல் பிராணாயாமம் செய்யப்பட்ட பரமஹம்ஸனுக் குத் தன் தேகத்தில் எவ்வளவு நோய் உண்டான போதிலும் அவைகளையெல்லாம் லக்ஷியம் செய்யாமல் தன் அப்பியாசத்தைத் தவறாமல் பிரதிதினமும் செய்துவருவான். இப்படி அப்பியசித்து வருவதனால் அவனது இந்திரியங் களின் வேகமெல்லாம் அடங்கிவிடும். அப்பொழுது பரமஹம்ஸன் எப்படியிருப்பானென்றால் நன்றாய் பழகிய குதிரைகளை ரதத்தில் கட்டி நிறுத்தி வைத்தபோதிலும் சாதியினுடைய தூண்டுகோலில்லாமல் எப்படி போகாமல் நின்றிருக்கிறதோ அதுபோல், பரமஹம்ஸனுடைய இந்திரி யங்கள் எங்கும் ஓடாமல் நிச்சலனமாய் நின்றிருக்கும், இப்படி இந்திரியங்களை ஜயித்தவன் தத்துவார்த்த லக்ஷிய பூதனாய் ஆத்மாவைவிட நான் வேறு பதார்த்தமல்லவென்று பேத புத்தியில்லாமலிருப்பான்.

## 128. பரமாத்மா சரீரத்தில் குடியிருந்து கிளம்பி விடுதல்

பரமாத்மாவாகிய கடவுள் சரீர இருதய கமலத்தில் நிவசிக்கின்றாரென்று நாராயணோபநிஷத்திலும் ஸுபா லோப நிஷத்திலும் யோக சிகோபநிஷத்திலும் சொல்லப் பட்டிருக்கிறது. உபநிஷத்தில் சொல்லியிருப்பதைப் பரீக்ஷிப் பதற்காக இருதய கமலத்தை இருபிளப்பாய் அறுத்துப் பார்த்தோம். உபநிஷத்துகளில் சொல்லிய விஷயங்கள் யாவும் அந்தக் கமலத்தில் சரியாய் அமைந்திருந்தன. ஆனால் பரீக்ஷிக்கும் பொழுது கமலத்தின் மத்தியிலிருந்த ஜலம் மாத்திரம் காணப்படவில்லை. ஆத்மாவானவர் எப்பொழுதும் ஜலத்துடன் சம்பந்தப்பட்டு இருப்பவராதலால் பிராணப் பிரயாண காலத்தில் (பிராணன் போகும்பொழுது) கமலத்தி லிருக்கும் ஜலம் வற்றிவிடும். ஜல மத்தியில் நிவசித்துக் கொண் டிருந்த ஜீவன் கிளம்பி விடுகின்றது. களேபரத்தில் (பிணத்தின்) இருதய கமலத்தியிருக்கும் ஜலத்தைக் காண முடியாது.

"பதமகோஸ ப்ரதீகாஸம் ஹ்ருதயம் சாப்யதோமுகம்
அதோ நிஷ்ட்யா திதஸ்த்யாந்து நாப்யாமுபரி திஷ்ட்டதி
ஹ்ருதயம் தத்விஜா நீயாத் விஸ்வஸயா யதநம் மஹத்
ஸந்ததம் ஸிலாபிஸ்து லம்பத்யா கோஸஸந்நிபம்
தஸ்யாந்கேஸூக்ஷிரம் ஸூக்ஷமம் தஸ்மிந்ஸர்வம் பரதிஷ்ட்டிதம்
தஸ்யமத்யே மஹாநக்நிர் ரிஸ்வார்சிர் விஸ்வதோமுகம்
ஸோக்நபுந்விபஜந் திருஷ்ட்டந்நாஹார மஜரஹ கவிஹி
திரியகூர்தவ மதஸாபீ ரஸ்மயஸ்தஸ்ய ஸந்ததா
ஸந்தாபயதி ஸ்வம் தேஹமாபாத தலமஸ்தகம்
தஸயமத்யே லஹ்நி ஸிகா அணீ யோர்த்தவா வ்யதஸ்திதஹ
நீலதோய தமத்யஸ்தாவித்யுல்லே கேவபான்வரா
நீவாரஸீநிகவத்தந்வீ பீதா பாஸ்யா ந்யணூபமா
தஸ்யா ஸிகாயா மத்யே பரமாற்மா வ்யவஸ்திதஹ
ஸப்ரஹமா ஸ ஸிவ ஸ ஹரிஸேந்த்ர ஹ்ஞோக்ஷாஹ பரமஸவராட்"

(ஸுபாம்லாபநிஷத்)

*ஹிருதயஸ்யமத்யே லோஹிதம் மாம்ஸபிண்டம் யஸ்மிந், தத்தஹரம் புண்டரீகம் குமுதமிவா நேகதா விக்ஸிதம் தஸ்யமத்யே ஸமுத்ரம் ஸமுந்ஸ்யமத்யே, நோகஸ்தஸ்மிந் நாட்யஸ்ச்ச தஸ்ரோபவந்தி தத்ரமா ரமேஸ்ச்சா புநர்பவேதி தத்ரரமா புண்யேந புண்யலோகம் நயதி அரமாபாபேந பாபநிமிஸ்ச்யா யஸ்மரதி?*

*(ஸுபாலோபநிஷத்)*

''அங்குஷ்ட்டமா த்ரஹ புருஷோங்குஷ்டஞ்ச ச மைாஸ்ரிதஹ ஈஸஸ் ஸர்வஸ்ய ஜகத் ப்ரபு ப்ரீணாதிவிஸ்வபுக்''

(ஸுபாலோபநிஷத்)

*''அஸ்மிஸ் பரஹமபுரே வேஸ்ம தத்தஹரம் யதி நம்முநே. புண்டரீகம் து தநமத்யே ஆகாஸோ தஹரேஸதி தத், ஸ ஸிவ ஸச்சிதாநந்த ஸோந்வேஷ்ட்டவ்யே முமுக்ஷுபிஹி அயம் ஹருதிஸ்த்தித் ஸாக்ஷி ஸர்வேஷா மவிஸேஷதஹ, தேநாரம் ஹ்ருதயம் ப்ரோச்தஹ ஸிவஸிவஸம்ஸாரமோ சக (இத்யுபநிஷத்'')*

*பத்மகோசப் ப்ரதீகாசம் - தாமரைக் கமலத்திற்குச் சமானமான, யத் எந்த ஹ்ருதயம், சாப்ய - இருதயம் அதோ முகம் தலைக்கீழாக, நிஷ்ட்ய நெஞ்சுக்கு, விதஸ்தயாந்து - ஜாணளவு, அத்-கீழ், நாப்யாம-நபிக்கு, விதஸ்த்யாந்து ஜாணளவு உபரி-மேல் திஷ்ட்டதி-இருக்கின்றதோ. தத்- அந்த ஹ்ருதயம். ஹ்ருதயம் விஸ்வஸ்ச ப்ரபஞ்ச சொரூபனான பரமாத்மாவிற்கு மஹத்-சிரேஷ்ட்டமான, ஆயத்நம்- ஸ்தானமாய் விஜாநீயாத்-இருக்கிறதென்று தெரிந்து கொள்ளவேண்டும். தத் அந்த இருதயம், கோஸஸந்நிபம் - கமலத்திற்குச் சமானதாய், ஸிராபிஸ்து - நரம்புகளுடன்கூடி, லம்பதே, தொங்கு மறது தஸ்ய-அதனுடைய அந்தயே- மத்தியல், ஸுக்ஷ்மமாகிய ஸுஷிரம்-ரந்திரம், அஸ்தி உண்டு தஸ்மிந் அதில் ஸர்வம் ஸர்வஸ்வரூபனாகிய பரப்ரஹ்மம்.*

ப்ரதிஷ்ட்டிதம்-இருக்கிறான். (தியானிக்கப்பட்டவர்களை அனுக்கிரகிப்பதற்காக இருதய கமலத்தில் இருக்கிறான்) தஸ்ய அந்த இருதயத்தின் மத்யே-மத்தியில் விஸ்வதோ முகஹ-எங்கும் வியாபித்திருப்பதாயும், விஸ்வார்சிஹ-எங்கும் ஜ்வாலையுடையதாயும், மஹாந்-பெரியதாயும், அக்நிஹி-ஜடராக்நி, வர்த்தே-இருக்கிறது ஸஹ. அந்த அக்நி, அஜரஹ-ஜாக்கிரதையுடையதாயும் கவிஹி-ஸப்தமுடையதாகவும், திருஷ்ட்டந் இருந்து ஆஹாரம்-ஆஹாரத்தை (பக்ஷிக்கப்பட்ட. குடிக்கப்பட்ட, அஹாரங்களை (விபஜந்-பங்கிடுவதற்காக. அக்ர புக்-புசித்து, (முதல் சாப்பிடும் பதார்த்தங்களைத்தான் சொந்தமாய்ப் புசித்து) ஆபாததலமஸ்தகம்பாதம் முதல் உச்சிவரையில், ஸ்வயம்-ஸ்வயமாய் தேக்கம் தேகத்தை. ஸந்தா பயதி-தபிக்கச் செய்கிறது. (உஷ்ணடத்தை உண்டாக்கச் செய்கிறது.) தஸ்ய - அந்த இருதயத்தின் மத்யே மத்தியில் வஹ்நிஸ்கா-அக்நிஜ்வாலை, அணியோர்த்தவர மேல் களம்பி வ்யவஸ்த்திதஹ-இருக்கின்றது. நீலதோயமத் யஸ்தா; நீல-கறுத்த தோயத-மேகங்களின், மத்யஸ்தா மத்தியிலிருந்து வித்யல்லேகேவ-மின்னற் கொடிபோல் பாஸ்வரா-ப்ரகாசித்துக்கொண்டு, நீவாரஸுகவத்-நெல்லினுடைய நுனியிலிருக்கும் சிறிய முள்ளைப்போல், தந்வீ ஸுக்ஷ்மமானதும், பிதா பச்சை நிறமுடைய காந்தியுடையதும், அனூபமா-இதற்கு உபனேம் கொடுப்பதற்கு வேறொரு வஸ்து இல்லாததாய், பாஸ்வதி பிரகாசிக்கின்றது. தஸ்யாஹ அப்படிப்பட்ட ஸிகாயாஹ-சிகையின் மத்யே-மத்தியில், பரமாத்மா-பரப்ரஹமம் வ்யவஸதிதஹ-இருக்கிறான் ஸஹ-அவனே அக்ஷரஹ-நாசமில்லாமல், பரம்ஹ-சிரேஷ்ட்டனாய் ஸ்வராட்-ஸ்வயமாய் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும் பரமாத்மாவாய் இருக்கிறான், (கர்மத்திற்குப் பந்தப்பட்டிராத பரமாத்மா என்பதேயாம்.)

அதாவது மாமிசத்துடன் சேர்ந்து நரம்புகளுடன் கூடி சிவந்த நிறமுடைய தாமரைக்கமலம் போன்ற மாமிசக் கமலம் ஒன்று இருயத்தில் தலைக்கீழாய்த் தொங்கிக் கொண்டிருக்கும். அந்தக் கமலம் இந்தப் பக்கத்திலிருக்கும் படத்தில் காட்டப்பட்டிருக்கிறது; அது தொண்டைக்கு ஜாணளவு கீழும் நாபிக்கு ஜாணளவு மேலுமாய் இருக்கிறது. அந்தக் கமலத்தின் மத்தியில் முக்கியமான ரந்திரமொன்



றுண்டு. அந்த ரந்திர மத்தியில் அங்குலப் பிரமாணம் ஆகாசம் உண்டு. அந்த ஆகாசம் மலர்ந்த வெண்மையான தாமரை மலரைப் போலிருக்கிறது. அது இந்தப் பக்கத்திலிருக்கும் நெம்பர் 2-படத்தில் அம்பினால் காட்டப்பட்டிருக்கிறது. அந்த ஆகாச மத்தியில் சமுத்திரம்போல் ஜலம் நிறைந்திருக்கும், அந்த ஜலமத்தியில் பரமாத்மா நெல்லின் நுனியிலுள்ள சிறிய முள்ளைப்போலவும், கருத்த மேகங்களின் மத்தியில் தோன்றும் மின்னலைப் போலவும்.

"கார்வண்ணன் திருமேனி கண்ணும் வாயும்
கைத்தலமு மடியினையும் கமல வண்ணன்
பார்வண்ண மடமங்கை பத்தர் பித்தர்
பனிமலர்மேல் பாவைக்குப் பாவம் செய்தேன்
ஏர்வண்ண வென்பேதை யென்சொல் கேளான்
எம்பெருமான் திருவரங்க மெங்மே மென்னும்
நீர்வண்ண நீர்மலைக்கே போவே னென்னும்
இறுவன்றோ நிறையறிந்தார் நிற்கு மாறே."

என்னும் திருமங்கையாழ்வார் அருளிய திருநெடுந்தாண்டகம் வாக்கிய ரீதியாய், மிகவும் சூட்சுமமான தாயும், அதற்குச் சமானமானது வேறொன்றும் இல்லாததாயும், பச்சை நிறமுள்ள காந்தியுடையதாயும் இருக்கிறது. இதற்குத் தொண்டரடிப்பொடியாழ்வார் பிரமாணம்.

"பச்சை மாமலைபோல் மேனி"

ஆத்மாவின் திருமேனி பச்சை வர்ணமுடையது என்பதேயாம்.

அந்தப் பரமாத்மாவானவர் ஜடராக்நிக்கு உஷ்ணத்தை யுண்டாக்கி ஜீவராசிகள் புசிக்கும் ஆஹாரங்களை பஸ்மம் செய்வித்து, பாதபெருவிரல் முதல் உச்சி வரையில் உஷ்ணத்தை உண்டாக்குகிறார். இப்படிப்பட்ட பரமாத்மா இருதய

கமலத்திலிருக்கும் ஜலத்துடன் சேர்ந்து இருப்பதனால் அவருக்கு நாராயணன் என்று பெயர் உண்டாயிற்று. அதாவது நாரா என்றால் ஜலம். அயன் என்றால் ஸ்தானம் (இருப் பிடம்) ஜலத்திற்கு ஸ்தானமாயிருக்கப்பட்டவர் ஆதலால், அவருக்கு நாராயணன் என்று பெயர் வந்தது. அன்றியும், ஆலிலைமேல் பள்ளிக்கொண்டான் என்றும் சொல்லு வார்கள். ஏனென்றால், இருதய கமலத்தை இருபிளப்பாய் பிளந்தபோது அது ஆலிலை வடிவமாயிருக்கும். இதற்குப் பெரியாழ்வார் திருமொழி பிரமாணம்.

"ஆலத்திலையா னரவி னணைமேலான்
நீலக்கடலுள் நெடுங்காலங் கண்லளர்ந்தான்"

அந்த ஆலிலையின் மீதிருக்கும் ஜலத்தின்மீது ஒவ்வொரு ஜீவ ஜந்துக்களிலும் அனேக கோடான கோடி ஜன்மங்களாய் ஜீவாத்மா சொரூபமாய் இருந்துகொண்டு வருவதனால் அவருக்கு! ஆலிலைமேல் பள்ளிக்கொண்டார் என்று பெயர் வந்தது. எல்லா ஜீவராசிகளின் இருதய கமலத்திலிருக்கும் ஜலமத்தியில் ஆத்மா என்னும் நாராயணன் பள்ளிகொண் டிருக்கிறாரேயொழிய இதைவிட வேறு எந்த ஜலத்திலும், வேறு ஆலிலையின் மேலும் படுக்கவில்லை அந்த இலை மத்தியிலிருக்கும் ஜலத்தில் ஆத்மா நிவசிக்கிறார். அதனால் ஆலிலை மேல் பள்ளி கொண்டான் என்று பெயர் வந்தது. அன்றியும் ஸ்ரீ பகவத்கீதை அத்தியாயம் 15 சுலோகம் 14-ல் ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லுகின்றார்.

அஹம் ஸ்வஸ்தா நரோபூத்வா ப்ராணிநம் தேஹமாஸ் ரிதஹ
ப்ராணபா நஸமாயுக்தஹ பசாம்யந்நாம சதுர்விதம்.

நான், பிராணிகளுடைய தேகத்தை ஆசிரயித்து, ஆக்நி சொரூபமாயிருந்து அந்த அக்நியைத் தூண்டும் பிராண அபான வாயுக்களுடன் கூடி, சாப்பிடும் பக்ஷ்யம் போஜநப்

லேஹ்யம் சோஷ்யம் முதலாகிய நான்குவித ஆஹாரங்களையும் ஜீரணம் செய்விக்கின்றேன் அன்றியும், அத்யாயம் 15. சுலோகம் 15.

ஸர்தஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த ஸம்ருதி ரஜ்ஞாநமபோஹநம் ச. வேதை ஸ்ச்ச ஸர்வை ரஹ மேவ வேத்யோ வேதபந்தக்ருத்வேத வி தேவ சாஹம்.

பிரம்மாதி தேவதைகள் முதல் சகல பிராணிகளினுடைய இருதய கமலத்தில் நான் ஆத்மாவாயிருக்கிறேன். என்னாலேயே நினைப்பும் அறிவும், மறதியும் உண்டாகின்றன. ஸ்கவதுவதங்களைச் சிருஷ்ட்டிச் செய்தவன் நானே. வேதங்களுக்குக் காணப்படுபவனும் நானே, இப்படிப்பட்ட என்னை. ஸ்திரீ புருஷர்களுக்கிருக்கும் அனேக விதங்களாகிய ஆசைகளும், காமக் குரோதாதிகளும் மூடிக்கொண்டிருப்பதனால் நான் அவர்களுக்குக் காணப்படுவதில்லை. இவைகளையெல்லாம் ஒழித்தவர்களுக்கே நான் மிகவும் சுலபமாய்க் காணப்படுவேன் என்று சொல்லப் பட்டிருக்கிறது. ஆதலால், சுலோ॥ ஹ்ருதாகாஸே சிதாபாநு ஸதாபாஸதிபாஸதே நசோதேதி நாஸ்த்தமேதி கதாஸந்தயா முபாஸ்மஹே.

என்னும் சுலோக ரீதியாய் இருதய கமல ஆகாசத்தில் சிதாபாதன் என்றால், சித்தென்னும் பரமாத்மா பிரகாசித்துக் கொண்டு பகலிரவுகள் இல்லாமல் எப்பொழுதும் ஒரே ஒளியாய் இருப்பவனைத் தரிசித்த யோகியானவன் சந்தியாவந்தனம் செய்யவேண்டிய அவஸ்யமில்லை. பரமாத்ம சொரூபத்தை அறிந்து கொள்ளாதவர்களே சந்தியாவந்தனம் காலம் தவறாமல் செய்துவரவேண்டும்.

இப்பரமாத்மா இருக்கும் இருதய கமலத்தில் பஞ்சபூதங்களும் அடங்கியிருக்கின்றன. அவை பிருதி

விபூமி (மண்ணீரல்) அப்பு–ஜலம் (ஈரல்), தேயு–அக்நி (புச்சி அல்லது கசப்பு) இந்தக் கசப்பு கருப்பு ஈரலில் ஒரு சிறிய பையில் நிறைந்திருக்கும். வாயு–காற்று நுரையீரல் ஆகாயம்–வெளி (இருதய கமலம்) இவ்வைந்தும் சேர்ந்ததே பஞ்ச பூதங்கள், இப்பஞ்சபூதங்களே ஜீவராசிகளுக்கு மிகவும் முக்கியமானவைகள். இவ்வைந்தும் ஈரல் குலையே (கொத்தே) பஞ்சபூதங்கள். இதிலிருந்து உஷ்ணமுண்டாய் ஜீவராசிகள் புசிக்கும் (சாப்பிடும்) ஆஹாரங்களையெல்லாம் ஜீரணிக்கச் செய்கிறது. இப்பஞ்சபூதங்களிலிருக்கும் கசப்பே குளிர்காலங்களில் மூக்கு, வாய், சிறுநீர், மலம் வழியாய்ப் புகையை உண்டாக்குகிறது. இப்படிப்பட்ட பஞ்சபூதங் களின் மத்தியில் பரமாத்மா எப்படி நிவசித்துக் கொண்டிருக் கிறாரென்றால் :

''மகிழ்ச்சியுடன் மார்க்கண்டா வாராய்கண்ணே
வரலாறு நீயெனமா யறிவாய் சொல்லாய்
சுகட்சியுடன் கருதிப்பார் யுகங்கள் தோறும்
சூட்சுமிந்த மாலலோன்றன் வயிற்றிற் சேர்வேன்.

''புஷ்பமதயே யதாகந்தஹ பயோமத்யே யதாக்ருதம்
திலமத்யே யதாதைலம் பாஷாணே ஷ்விவ காஞ்சனம்
ஹ்ருதிஸ் தாநே ஸ்திதம்பத்மப் தஸ்ரவக்த்ர மதோமுகம்
ஊர்த்வநாள மதோபிந்து தஸ்யமத்யே ஸ்த்திகம் ப்ரஹ்ம''

புஷ்ப மத்தியில் இருக்கும் வாசனையைப் போலவும், பால் மத்தியில் இருக்கும் நெய்யைப் போலவும், எள் மத்தியில் இருக்கும் எண்ணைபோலவும், கல் மத்தியிலிருக்கும் தங்கம் போலவும் இருதய ஸ்தானத்தில் தாமரைக் கமலம் போன்ற சிகப்பு. வெண்மை நிறமுடைய மாமிசனத்தினால் உண்டாயிருக்கும். கமல மத்தியில் ஜலமுண்டு. அந்த ஜலமத்தியில்பரமாத்மாவானாவர், நிவசித்துக் கொண் டிருக்கிறார்.

அகட்டி[illegible] ஆலிலைமே லிருப்பாரையா
அப்போது இவரிடத்தி லெல்லா ஞாயம்
இகழ்ச்சியுட னிவற்றைப்பின் எவரோ காணேன்
இவ்வார்த்தை நானறிவே னவரைக் கேளீர் "

இருதய கமலத்தை இரு பிளப்பாய் பிளந்து பார்த்தால் அதுஆலிலைபோல் காணப்படும். அந்த ஆலிலை மேல் ஜலம் இருக்கிறது. அந்த ஜலத்தின்மேல் பள்ளிகொண் டிருக்கும் பரமாத்மாவே நாராயணன், இந்த நாராயணனே சிவன், இவனே பிரமன், இவனே இந்திரன், இவனே சித்திரகுப்தன், இந்தச் சித்திரகுப்தன் ரகசியம் அறியாத சில புருஷர்கள் சித்திரா புத்திரன், என்று வழக்கச் சொல்லாய்ச் சொல்லுகிறார்கள். ஜீவ கோடிகள் செய்யும் புண்ணிய பாவங்களையெல்லாம் வேறோர் சித்திராபுத்திரன் இருந்து பார்த்துக் கொண்டு கணக்கு எழுதுவதல்ல. அவனவன் செய்துவரும் புண்ணிய பாவங்களெல்லாவற்றையும் இருதய கமலத்திற்கு சாக்ஷி சொரூபமாயிருக்கும் ஆத்மா பார்த்து வருகிறது புண்ணிய பாவங்களைப் பார்த்து வருவதுமேயல்லாமல் ஜீவ கோடிகள் பிரதி தினம் செலவு செய்யும் மூச்சுகளையெல்லாம் அந்தந்த ஜீவஜந்துக்களில் சாக்ஷிசொரூபமாயிருக்கும் ஆத்மா கணக்குப் பார்த்து வரும் ஏனெனில் ஜீவ ஜந்துக்களின் ஆயுட்பாகம் மூச்சேயொழிய சூர்பசந்திரர்கள் நடக்கும் நாட்களல்ல. ஒவ்வொரு மனிதனுக்கும் இத்தனை கோடி மூச்சுகளென்று கணக்கு ஏற்பட்டிருக்கிறது. இருதய கமலத்திலிருக்கும் ஆத்மா வானவர் தினந்தோறும் ஸ்திரீ புருஷர்கள் செலவு செய்யும் மூச்சுகளையெல்லாம் கணக்குப் பார்த்துக் கொண்டே யிருந்து பிறகு நாற்பத்தைந்து லக்ஷத்து முப்பதினாயிரம் மூச்சுகள் இருக்கும்பொழுதே இதரர்களுக்கு வேறு சரீரம் ஆத்மாவானவர் சிருஷ்ட்டி செய்து விடுவார். அதாவது நாள் ஒன்றிற்கு நடக்கும் மூச்சுகள் எத்தனையென்றால்

இருபத்தோராயிரத்து அறுநூறு மூச்சுகள். மாதம் ஏழுக்கு நாட்கள் 210 ஆதலால் இருபததோராயிரத்து அறுநூறு மூச்சையும் இருநூற்று பத்து நாட்களையும் பெருக்கினால் 21.600 x 210 = 45,36,000 நாற்பத்தைந்து லக்ஷத்து முப்பத் தாறாயிரம் முச்சுகள் ஆகிறது. பிரதி ஜீவனுக்கும் இவ்வளவு மூச்சு இருக்கும் பொழுதே அந்தந்த ஜீவர்களுக்கு வேறு சரீரம் ஆத்மா சிருஷ்ட்டி செய்து விடுகிறார்.

இதற்கோர் திருஷ்ட்டாந்தம் சொல்லுகிறோம் கேளுங்கள். வெட்கட்ராமையர் என்பவன் ஒருவனிருந்தான். அவனுக்கு ஆயுட்பாகத்தில் ஏற்படுத்தியிருந்த மூச்சுகளெல் லாம் செலுவழிந்து நாற்பத்தைந்து லக்ஷத்து முப்பத்தாறா யிரம் மூச்சுகள் இருக்கும்பொழுதே வெங்கட்ராமையனை வேறு ஜன்மத்தில் சிருஷ்ட்டி செய்ய ஆத்மா ஆலோசித்த, அவன் பிரசரப்ததத்தில் கொண்டுவந்த புண்ணிய பாவங்கள் போக சேஷமாய் முன் தங்கியிருக்கும் சஞ்சிதமென்னும் புண்ணிய பாவங்களையும் இந்த ஜன்மத்தில் செய்து வந்த ஆகக்ம்மிய மென்னும் புண்ணிய பாவங்களையும் கணக்குப் பார்த்து முன் ஜன்மத்தைவிட இவன் கொஞ்சம் புண்ணியம் அதிகமாய் இந்த ஜன்மத்தில் செய்திருப்பதனால் இவன் புண்ணியத்திற்குத் தக்கபடி எந்த இராஜன் வீட்டில் பிறப்பிக்க வேண்டுமோ அந்த இராஜன் பத்தினியார் மாதவிடாய் நிறுத்தி கர்ப்பம் தரிக்க ஆத்மா செய்விக்கிறது ஆனால், அந்த ராஜனுக்குப் பிராரப்த கர்மத்தில் புத்திர சந்தானம் இருந்தால் மாத்திரம் அவ்விடத்தில் சிருஷ்ட்டி செய்வானே யொழிய சந்தானம் இல்லாவிட்டால் ராஜனுக்குச்சமானமாய்ச் செல்வமும் புத்திர சந்தானமும் இருக்கப்பட்ட வேறு எந்த அரசன் வீட்டிலோ, அல்லது அரசனுக்குச் சமானமான பெருக்க செல்வமுடையவன் வீட்டிலோ ஆத்மாவானவர் சிருஷ்ட்டி செய்து விடுவார்.

இவ்விதமாய்ச் சிருஷ்ட்டித்துக் கர்ப்பம் தரித்தபின் வெங்கட்ராமையனை ஆணாய்ச் சிருஷ்ட்டி செய்யலாமா என்று ஆத்மா யோசித்து இவன் குமாரன்மேல் அதிக பிரீதி வைத்து எப்பொழுதும் குமாரனையே நினைத்துக் கொண்டிருப்பதனால் இவன் பிராணன் போகும்பொழுது இவனது குமாரன் ரூபத்தை நாமல்லவோ சித்திரகுப்த படத்தில் காட்டப்போகிறோம், ஆதலால் இவனை ஆணாகவே சிருஷ்ட்டி செய்விக்க வேண்டுமென்று ஆத்மா தீர்மானித்துப் பிறகு, ஆணாகவே சிருஷ்ட்டி செய்து விடுவார். மேற்படி ஐயருக்கு இனி வரப்போகும் ஜன்மத்தில் அனுபவிப் பதற்காக அவனது சஞ்சிதமென்னும் புண்ணிய பாவங்களின் கர்மத்திற்குத் தக்கபடி அவனுக்கு இத்தனைப் புத்திரி களென்றும் இத்தனை புத்திரிகைகளென்றும் அவர்களில் ஒருவன் இன்ன வயதில் மரணமடைய வேண்டுமென்றும் மற்றொருவனுக்கு அங்கு விவாகம் நடக்க வேண்டுமென்றும் இவை முதலானவைகளும், இவன் இன்னின்ன விஷயங் களினால் மனோ வியாகூலமடைய வேண்டுமென்றும் இத்தனை லட்சம் ரூபாய்கள் சம்பாதிக்க வேண்டுமென்றும் கடைசியாய் இன்னின்ன வியாதியினால் துன்பப்பட்டு மரணமடைய வேண்டுமென்றும் அவன் பிராரப்தத்தில் அனுபவிக்க தந்து வெங்கட்ராமையன் இராஜன் வீட்டில் சிசுவாய்ச் சிருஷ்ட்டி செய்து விடுகிறான். இவ்விதமாய்ச் சிருஷ்ட்டி செய்து ராஜஸ்திரி கர்ப்பத்திலிருக்கும் சிசுவிற்கு மாதம் ஏழு முடிவதற்கும் வெங்கட்ராமையர் சரீரத்திலுள்ள நாற்பத்தைந்து லக்ஷம் முப்பத்தாறாயிரம் மூச்சுகள் செலவா வதற்கும் கணக்குச் சரியாய் விடும்.

பிறகு, வெங்கட்ராமையர் தரித்திருந்த சரீரத்தை விட்டுக் கிளம்புவதற்குமுன், அதாவது இருபத்தோராயிரத்து அறுநூறு மூச்சுகள் இருக்கும்பொழுதே என்றால் ஒருநாள்

முழுமையும் வெங்கட்ராமையர் பிரஞ்ஞை தப்பும்படி ஆத்மா செய்வித்துப் பிறகு வெங்கட்ராமையர் பாலிய தசையிலிருந்து மரண கால பரியந்தம் எந்தெந்த ஸ்திரீகளை இச்சை கொண்டிருந்தானோ அவர்களின் ரூபத்தையும் எந்தெந்த வஸ்துக்களின்மேல் அதிக பிரீதி வைத்திருந்தானோ அவைகளையும் பயாஸ்கோப்பில் படங்களை எவ்விதமாய் ஒன்றின்பின் ஒன்றாய்க் காட்டிக் கொண்டு போகின்றனவோ அதுபோல் இவன் ஆவல் கொண்டிருந்த வஸ்துக்களை யெல்லாம் ஒன்றின்பின் ஒன்றாய் வெங்கட்ராமையர் எதிரில் காணப்படும் சித்ரகுப்த (சித்ர - படம் குப்த - ரகசியம்) அதாவது ரகசியமான படத்தில் அவனுக்குள்ளிருக்கும் ஆத்மாவானவர் காட்டிக்கொண்டே சென்று பிறகு அதிகப் பிரீதி வைத்திருக்கும் தன் குமாரனது ரூபத்தை அந்தப் படத்தில் கடைசியாய்க் கொண்டுவந்து நிறுத்திவிடுவார்.

மேற்படி சித்ரகுப்த படத்தில் வெங்கட்ராமையர் குமாரனது ரூபத்தை ஆத்மாவானவர் கொண்டுவந்து நிறுத்திய பிறகு வெங்கட்ராமையர், தனது குமாரனது ரூபத்தை பார்த்து ஐயோ குமாரா! உன்னைவிட்டு நான்மரணமடை கிறேனே என்று மேற்படி வெங்கட்ராமையர் ஸ்மரித்துக் கொண்டிருப்பான். அந்தச் சமயத்தில் அவனது பந்துஜனங் களெல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டு அண்ணா எனக்கென்ன சொல்லுகிறாய். மாமா எனக்கென்ன சொல்லு கிறாய், அப்பா எனக்கென்ன சொல்லுகிறாய் என்று சிலரும், மற்றும் சிலர், நாராயணாவென்று சொல் ராமாவென்று சொல், கோவிந்தானென்று சொல், கிருஷ்ணாவென்று சொல்லென்று இவ்விதமாய் அவனுக்குத் தொந்தரவைக் கொடுத்துக் கொண்டிருப்பார்கள். இதற்கு பெரியாழ்வார் திருமொழிப் பிரமாணம் என்னவென்றால்,

"வாயொருபக்கம் வாங்கிவலிப்ப
வார்ந்த நீர்க்குழிக் கண்கள் மிழற்ற
தாய்ஒருபக்கம் தந்தை ஒரு பக்கம்
தாரமும் ஒரு பக்கம் அலற்ற
தீ ஒரு பக்கம் சேர்வதன் முன்னம்
செங்கண்மா லொடும் சிக்கெனச் சுற்ற
மாய்ஒரு பக்கம்நிற்கல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலுமாமே"

"சோர்வி னாற்பொருள் வைத்ததுண்டாகிற்
சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து
ஆர்வினலும் வாய்திறவாதே
அந்தக்காலமடைவதன் முன்னம்
மார்வ மென்பதோர் கோயிலமைத்து
மாதவனென்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வமென்பதோர் பூவிட வல்லார்க்
கரவ தண்டத்தி லுய்யலுமாமே."

இவ்வாறாக அவன் பந்துக்கள் எவ்வளவு உரத்த சப்தத்துடன் கேட்டபோதிலும் அவனுக்கு எந்தச் சங்கதியும் கேட்கமாட்டா. ஏனென்றால், அவன் மனம் சித்ரகுப்த படத்திலிருக்கும் குமாரனது ரூபத்தைப் பார்த்துக் கொண் டிருப்பதனால் அவனுக்கு எந்தச் சங்கதியும் கேட்கவே மாட்டா. இவ்விதமாய் மூச்சுக்களெல்லாம் செலவழியும் வரையில் படத்திலிருக்கும் குமாரனது ரூபத்தை அவன் பார்த்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டே வந்து கடைசியாய் வரும் மூச்சுடன் மனம் சேர்ந்து, ஓ குமாரா! உன்னை விட்டுச் செல்லுகிறேன்! என்று நினைத்துக் கொண்டே மனம் ஆத்மாவுடன் சேர்ந்து கிளம்பி இராஜனது பத்தினியார் கர்ப்பத்திலிருக்கும் சிசுவில் போய்ச் சேரும். இதற்குள்

ராஜனது பத்தினிக்கு மாதங்கள் ஏழு பூர்த்தியாய்விடும். வெங்கட்ராமையர். குமாரனை நினைத்துக் கொண்டே சரீரத்தை விட்டுக் கிளம்பினவுடன் (புதிதாய் வீடுகட்டி முடித்துக் கிரகப்பிரவேசம் செய்து அதில் குடிபோய்ச் சேருவது போல்) ராஜனது பத்தினியின் கர்ப்பத்திலிருக்கும் சிசுவில் போய்ச் சேருகிறது. இதற்குத் திருஷ்டாந்தம் ஸ்ரீ பகவத் கீதை அத்யாயம் 2, சுலோகம் 22 பிரமாணம் என்னவென்றால்,



வாஸாம்ஸி ஜீர்ணாநி யதாவிஹாய
நவானி க்ருஹ்ணாதி நரோபராணி
ததா ஸரீராணி விஹாய ஜீர்ணா
ந்யாந்யாநீ ஸம்யாதி நவாநிதேஹி

**கிருஷ்ணன் :** ஒருவன் கிழிந்த பழைய வஸ்திரத்தைத் அவிழ்த்துப் புதிய வஸ்திரத்தைத் தரிக்கும்பொழுது தான் மாத்திரம் எப்படி மாறாமல்இருக்கின்றானோ அதுபோல், வியாதி முதலானவகைளினால் சரீரம்நசிந்தவுடன் ஆத்மா வானது அந்தச் சரீரத்தைவிட்டு வேறு சரீரத்தில் பிரவேசிக் கிறது. இவ்விதமாய் எத்தனை சரீரங்களில் பிரவேசித்த போதிலும் ஆத்மா மாத்திரம் எவ்வளவேனும் மாறுதலை யடையாமல் எப்பொழுதும் ஒரேசுயம்பிரகாசமா யிருக்கும்.

மரணமடைவது சரீரமேயன்றி ஆத்மாவல்ல. இதற் கோர் திருஷ்ட்டாந்தம் சொல்லுகிறேன் கேள். ஒரு சபையில் சேஷய்யனென்பவனை நீ பார்க்கின்றாய், அப்பொழுது அவன் வெள்ளை வஸ்த்திரத்தைக் கட்டிக்கொண்டு ஒரு சிறிய் தளுவத்தைப் புஜத்தின்மேல் போட்டுக் கொண் டிருந்தான். சிலநாள் சென்றபிறகு மறுபடியும் அவனை மற்றொரு சபையில் பார்க்கும்பொழுது சொக்காய் அதன் மேல் அங்கவஸ்த்திரம் தலைப்பாகை முதலிய உடுப்பு களுடன் இருந்தான். நீ அவ்விடம் சென்று அவனைப் பார்த்தபொழுது சேஷய்யனென்று சொல்லுவாயா? அல்லது வேறு மனிதனென்று நினைப்பாயா?

**அர்ஜுனன் :** அவனை வேறு மனிதனென்று எப்படி நினைக்கலாம்? சேஷய்யனே என்று நினைக்க வேண்டும்.

**கிருஷ்ணன் :** அதுபோல், ஒருவன்தான் தரித்திருந்த தேகத்தைவிட்டு மற்றொரு தேகத்தில் பிரவேசித்தபொழுது அவன் தேகம் மாத்திரம் மாறுகிறதேயன்றி அவனுக்குள் இருந்த ஆத்மா மாத்திரம் மாறுவதும், நசிப்பதும் இல்லை. ஆதலால், இதை வாசிக்கப்பட்ட சகோதரிகளே! சகோதரர் களே! உங்கள் குடும்பத்தில் யாவரேனும் தெய்வானு கூலத்தி னால் மரணமடைந்தால் அவர்களுக்காக நீங்கள் துக்கப்பட

வேண்டாம். அவர்கள் நம்முடன் கூட வந்தவர்களுமல்ல வரப்பட்டவர்களுக்கல்ல. சந்தையிற் கூட்டம்போல் மத்தியில் வந்து மத்தியிலேயே சென்றுவிடப்பட்டவர்கள். ஆதலால், அவர்களுக்காக நீங்கள் துக்கிக்க வேண்டாம். இதற்குத் திருஷ்ட்டாந்தம் தாயுமான சுவாமி பாடல் என்னவென்றால்,

> "தந்தைதாய் தமர்தாரம் மகவெனு மிவையெலாஞ்
> சந்தையிற் கூட்ட மிதிலோர் சந்தேகமில்லை."

என்று சொல்லியிருக்கின்றார். ஆதலால், வெங்கட்ராமைய் யருடைய ஆத்மாவானது அவனுடைய மனத்துடன் சேர்ந்து இராஜனுடைய பத்தினியின் கர்ப்பத்திலிருக்கும் பிண்டத் தில் போய்ப் பிரவேசித்தவுடன், பிண்டம் தலைக்கீழாகத் திரும்பும். அதுமுதல் ஜநநகாலம் வரையில் கர்ப்பப் பையில் அடைபட்டிருக்கும் ஜீவன், எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகளின் நானாயோனிகளில் பிறந்து அந்தந்த வம்சத்தில் வந்துகொண்டிருந்த புத்திர பௌத்திர களத்திர தனதான்யாதிகளையெல்லாம் இவனுடன் கூடவே சாக்ஷிசொரூபமாய் வந்து கொண்டிருக்கும் ஆத்மாவானவர் ஒவ்வொரு ஜன்மத்திலும் அவன் பூர்வ ஜன்மங்களை யெல்லாம் கர்ப்பப் பையில் காட்டிக்கொண்டே வருவார். அதாவது ராஜ ஸ்திரீ கர்ப்பத்தில் பிரவேசிப்பதற்குமுன் என்றால், குமாரனை நினைத்துக்கொண்டே பிராணனைவிடு முன் வெங்கட்ராமையராயிருந்து ஜன்மத்தில் வந்த பிராமண ஜாதி பெண்டு பிள்ளைகளையும் அந்த ஜன்மத்திலிருந்த தனதான்யங்களைச் சற்று நேரம் காட்டுவார். அவைகளை யெல்லாம் பார்த்து வியசனப்படுவான். பிறகு அதை மறைத்து அதற்குமுன் க்ஷத்திரியனாயிருந்த பொழுது வந்த க்ஷத்திரியஜாதி பெண்டுபிள்ளைகளையெல்லாம் சிலநேரம் காட்டிப் பிறகு, அதை மறைத்து அதற்கு முன் சண்டாளனா

யிருந்தபொழுது வந்த ஜன்மாந்தர ஜாதி பெண்டு பிள்ளை களையும் சிலநேரம் காட்டுவார் இவ்விதமாய் எந்தெந்த ஜன்மங்களை ஜீவன் எடுத்து வந்ததோ அந்தந்த ஜன்மங் களையெல்லாம் சிலச்சில நிமிஷங்கள் ஆத்மா காட்டும் போதெல்லாம் ஜீவன் அந்தந்த ஜன்மங்களை நினைத்துத் துக்கப்படும் பிறகு ஜநந காலம் ஸமீபித்து ராஜனது பத்தினி பிரசவ வேதனைப்படுவாள். அப்பொழுது சிசுவானது மாயா பிரபஞ்சத்தில் பிரவேசிக்க மிகவும் பயந்திருக்கும் சமயத்தில் தனஞ்சயன் என்னும்வாயுவினால் வெளியில் தள்ளப்படுகிறது. அந்தச் சமயத்தில் சிசுவானது மிகவும் பயந்து இரண்டு கைகளையும் குவித்துத்தன் சிரசின் மேல் வைத்து. ஐயோ! என்னை மாயா பிரபஞ்சத்தில் கொண்டு போய்த் தள்ளு கிறாயாவென்று ஈஸ்வரனைக் கும்பிட்டுக் கொண்டே தாயின் கர்ப்பப் பையிலிருந்து புறப்பட்டு வெளிவருகிறது.

இவ்வாறு சிசு கும்பிட்டுக் கொண்டே வெளிவந்த வுடன், சிசுவை மாயை மூடிக்கொண்டு ஒன்றும் தெரியாமல் திக்பிரமையுடனிருக்கும். அப்பொழுது ஸ்திரீகள் குளிர்ந்த ஜலத்தை யெடுத்து சிசுவின் முகத்தில் தெளிக்கின்றார்கள். தெளிந்தவுடன், சிசு திடுக்கிட்டுத் திமிறி. கைகால்களை உதறி ''குவா!குவா! குவா!'' என்று வீறிட்டு அழுது பூர்வ ஞானத்தை மறந்து பரப்பிரம்ம சொரூபமாயிருக்கும் பிறகு பதினோறாவது நாள் புண்ணியாஹவாசனம் செய்து அந்த சிசுவிற்கு வெங்கட்ராமையர் என்னும் பெயர் போய் ஸ்ரீராம ராஜ உடையார் என்று நாமகரணம் செய்வார்கள். சிசு வளர்ந்து இரண்டாவது வயது தொடங்கினவுடன் அத்தை, அண்ணா, அக்கா, மாமா, அக்கா என்று சொல்லென்று அக்குழந்தைக்குப் பிறகு கண் எது? மூக்கெது? வாய் எது? நாக்கெது? கை எது? கால் எது? தலை எது? என்றும், அம்மா யார்? அத்தை யார்? மாமா யார் என்றும் நூதனமான வார்த்தைகளையெல்லாம் கற்றுக் கொடுத்து அந்தந்த

ஆட்களைக் குறிப்பிட்டுக் காட்டுவார்கள். இவ்விதமாய் வார்த்தைகளைக் கற்றுக்கொடுத்துப் பிறகு, ஐந்தாவது வயதில் வாசிப்பதற்காக பள்ளிக்கு அனுப்புகிறார்கள். வாசித்துப் படிப்பில் தேர்ந்து யௌவன வயது வந்தவுடன், தான் தாயின் கர்ப்பத்தில் இருந்தபொழுது இன்ன இடத்திலிருந்து பாரியாள் வரவேண்டுமென்றும் அவளுக்கித்தனை புத்திரர்கள் உண்டாக வேண்டுமென்றும் பிராரப்தத்தில் எழுதி இருக்கின்றாரென்று முன் சொல்லியிருந்தோமல்லவா? அதுபோல் அந்த இடத்தில் விவாகம் முடிந்து தான் அனுபவிக்க வேண்டி சொத்துக்களையெல்லாம் முன் சொல்லிய பிராரப்த கர்மம்போல் அவனுக்கு வந்து அவைகளை அனுபவித்து, பிறகு அவன் பிராரப்த கர்மத்தின்படி அவனுக்கு வரவேண்டிய வியாதிகள் வந்துஇவன் அச்ஜன்மத்தில் பார்யாளின் மேல் அதிகப் பிரீதிவைத்தபடியால் பிராண பிரயாண காலத்தில் அதாவது, பிராணன் போகும்பொழுது இவன் எதிரில் நின்றிருக்கும் சித்ரகுப்த படத்தில்இவன் எதிரில் நின்றிருக்கும் சித்ரகுப்த படத்தில் இவன் பார்யாளின் ரூபத்தை சாக்ஷி சொரூபமாயிருக்கும் ஆத்மாவானவர் கொண்டு வந்து காட்டுகிறார். அப்பொழுது பாரியாளை நினைத்துக் கொண்டே பிராணனை விடுகிறான். பிராணனை விட்டவுடன் இவன் பண்ணிய பாவத்திற்குத் தக்கபடி வேறு ஜாதி தாயின் கர்ப்பத்தில் சிருஷ்ட்டி செய்திருக்கும் பெண் சரீரத்திலுள்ள இருதய கமலத்திலிருக்கும் ஜல மத்தியில் போய் ஆத்மா பிரவேசிக்கும், ஆத்மா, சிசுவில் பிரவேசித்தது முதல் பூமியில் பிறக்கும் வரையில் ஜீவன் முன் சொல்லியதுபோல் பூர்வ ஞானத்துடன் இருந்து பிறகு பெண் சிசுவாய் பிறக்கிறது. பிறந்த பதினோறாவது நாள் புண்ணியாஹவாசனம் செய்வித்து 'கமலாபாய்' என்ற பெயர் வைத்தார்கள். முன் சில வருஷங்கள் வெங்கட்ராமையராகவும், சில வருஷங்கள் ராமராஜ உடையவராகவும் இருந்த

ஜீவன் இப்பொழுது பெண் ரூபங்கொண்ட கமலாபாய் என்னும் பெயருடன் வளர்ந்து வருகிறது.

ஆதலால், ஜீவனுக்கு ஜாதி பேதமில்லை. அப்படி யிருக்க, பூர்வ ஜன்மத்தில் எந்த மிலேச்சனோ (துலுக்கனோ) எந்தச் சண்டாளனோ ஒருவன். பிரதி தினம் கர்மம் செய்யப் பட்ட பிராமணர்களின் வீட்டில் வந்து ஜன்மித்து, நான் உயர்ந்த ஜாதியானென்றும் என்னைவிட உயர்ந்த ஜாதியான் உலகத்தில் ஒருவருமில்லையென்றும் பிராமணர்கள் சொல்லிக் கொண்டிருப்பார்கள். இந்தப் பிராமணர்கள் பூர்வ ஜன்மத்தில் எந்த ஜாதியில் பிறந்தவர்கள், வருகிற ஜென்மத் தில் எந்த ஜாதியில் போய்ப் பிறப்பார்கள். ஆதலால், இந்த ஜன்மத்தில் நான் பிராமணனென்று அஹங்காரம் கொள்ள லாகாது. இது வேத விருத்தம், இவைகளையெல்லாம் நன்றாயறிந்த பிராம்மணர்கள், மற்றவர்களை இகழ்ந்து பேசார்கள். ஜாதி பேதமில்லாத ஜீவனுக்கு மத்தியில் ஜாதிபேதம் எங்கிருந்து வந்தது? பிராமண குலத்தில் பிறந்தவனை, உபநயனம் செய்யும் வரையில் இவனைச் சூத்திரப்பிள்ளைபோல் நினைப்பார்கள். வைதீகமுள்ள சில பிராமணர்கள் தன்பிள்ளை தீண்டிய பதார்த்தமும் ஜலமும் சாப்பிட மாட்டார்கள். அவர்கள் சாப்பிடாததற்குக் காரணம் மேற்சொல்லியவைகளேயாம். அதாவது எந்த ஜாதியி லிருந்து வந்தவனோ என்பதேயாம், காற்றுருவமாயிருக்கப் பட்ட ஜீவனுக்கு ஜாதிபேதம் எங்கிருந்து வந்தது? தன் குமாரனுக்கு உபநயனம் செய்து பூணூல் போட்டபிறகு அவன் தொட்ட பதார்த்தங்களை ஷை வைதீகப் பிராமணர்கள் சாப்பிடுவார்கள்.

ஆத்மா எந்தச் சரீரத்தை விட்டுக் கிளம்பிவிடுகிறதோ அந்தச் சரீரத்திலுள்ள இருதய கமலத்திலிருக்கும் அங்குலப் பிராமண ஆகாசத்திலுள்ள ஜலம் வற்றிக் கொண்டே வரும்.

*அந்த ஆகாசம் ஈரல் படத்தில் அம்பினால் காட்டப்பட்டிருக் கிறது அந்த ஜலம் வற்ற வற்ற நாவறட்சியை உண்டாக்கும். அப்பொழுது காக்கைத் தொட்டுப் பார்த்தால் அதில் சிறிதேனும் ஜலமில்லாமல்'நா' வறண்டு முள்ளுபோல் காணப்படும். இவ்விதமாய் இருதய கமலத்திலிருக்கும் ஜலம் வற்றிக்கொண்டே வரவர அப்பொழுது ஜலமந்திரியி லிருக்கும் நாராயணன் (ஆத்மா) கடைசியாய் வெளிவரும் மூச்சுடன் கூடவே சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்பி, அவனவன் கர்மானுசாரமாய் எந்தெந்த தாயின் கர்ப்பத்தில் தூல சரீரத்தை ஆத்மா சிருஷ்ட்டி செய்திருக்கிறதோ, அந்த சரீரத்திலிலுள்ள இருதய கமலத்திலிருக்கும் ஜலமத்தியில் ஏழாவது மாதம் ஆத்மா போய்ப் பிரவேசிக்கிறது.*

*இருதய கமலத்தில் பரமாத்மா இருக்கும் ஜல சம்பந்தத் தால் ஜீவராசிகளின் 'நா'வின் கீழிலிருந்து ஜலம் சுரந்து கொண்டிருக்கும். அந்தப் பரமாத்மா சரீரத்தை விட்டுக் கிளம்பும்பொழுது இருதய கமலத்திலிருக்கும் ஜலம் வற்றுவதனால் 'நா' வறண்டுபோகும். இவ்விதமாய் நாவறண்டு கொண்டே வந்து ஆத்மா கடைசியாய் வெளி வரும் மூச்சுடன் கூடவே சேர்ந்து வெளிக்கிளம்பி விடுகிறான். பிறகு மூக்கில் மூச்சு ஆடாமல் நின்றுவிடும். அப்பொழுது சரீரம் பிரேதமாய் (பிணமாய்) விடும்.*

"ஸதம் கைகா ச ஹ்ருதயஸ்ய நாட்யஸ் காஸாம் மூர்தாநம்பி நிஸ்ருதைகா தயோர்தவ மாயந் நமருதத்வ மேதி விஷ்வங்ந் யா உத்க்ரமணே பவந்தி." *(கடோபநிஷத்)*

இடா பாகீரத கங்கா பிங்களா யமுனா நதீ
கயோர் மத்யகதா நாடீ ஸுஷுமநாச ஸாஸ்வதீ
ஏவம ஞாநஹ்ரதே தீரத்தே ராகத்வேஷ மலாபஹே
யஹ ஸ்நாதி மானஸே தீர்த்தே ஸ யாதி பரமாம் கதிம்.

சரீரத்திலிருக்கும் நாடிகளில் முக்கியமான நாடி சுஷும்னாநாடி ஒன்றிருக்கிறது.

அந்த நாடியைச் சுவாதீனம் செய்துக்கொண்டு அதன் வழியாய் யோகபலத்தினால் உச்சியைத் திறந்து ஆத்மாவை விட்டவன், ஜநநமரணமென்னும் சமுத்திரத்தைத் தாண்டி முத்தியை அடைகிறான். மற்ற நாடிகளின் வழியாய் ஆத்மா சென்றால் மறுபடியும் சம்சாரத்தை அடைகிறான். இந்த ஆத்மாவைக் குறித்து ஸ்ரீ பகவத் கீதை அத்தியாயம் 18. சுலோகம் 61–இல் என்ன சொல்லுகிறதென்றால். ஈரவரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ரத்தேஸெர்ஜுந! திஷ்ட்டதி ப்ராமயந் ஸாவபூதாநி யந்த்ராரூடா மாயபா.

ஓ அர்ஜுநா! எல்லாப் பூதங்களும் சாக்ஷியாயிருந்து எல்லோருக்கும் ஆஞ்ஞாபிக்கும் ஈஸ்வரன் எல்லாப் பிராணிகளின் இருதய கமலத்தின் மத்தியிலிருந்து சூத்திர தாரியால் ஆட்டபடும். பொம்மையைப் போல் ஆட்டி, மாயையால் பிராணிகளைப் பிரமிக்கச் செய்கிறான்; இவ்வாறு சொல்வதற்குக் காரணம் யாதெனில் அத்யாயம் 15, சுலோகம் 10.

உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஜ்ஞாநம் வாகுணார் விதம் விமூடா நாநுபஸ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷஹ.

இத்தேஹத்தைவிட்டு மாறிமாறி வந்து கொண்டிருக்கும் தூல சூக்ஷும காரண தேஹங்கள், ஒன்றைவிட்டு மற்றொன்றோடடைந்து, விஷய போக சுகங்களை அனுபவித்துக் கொண்டிருக்கும். அஞ்ஞானிகள் ஆத்மாவை அறியமாட்டார்கள். அப்படி அறியாமல் போவதனால் ஸ்திரீ புருஷர்களின் இருதயத்தில் ஈஸ்வரனாயிருக்கும் ஆத்மா, அவர்களை நாடகத்தில், பொம்மைகளைச் சூத்திரத்தினால் (கயிற்றால்) கட்டி, ஆட்டிக்காட்டுவது போல் ஆட்டி வைக்கின்றான். அன்றியும்,

"கபாலகுஹரே மத்யே சதுர்த்வாரஸ்ய மத்யமே
ததாத்மாராஜதே தத்யாதா வ்யோமநி திவாகரஹ
கோதண்டத்வய மத்யேது ப்ரஹமமந்த்ரேஷு ஸக்திச
ஸ்வாத்மாநம் புருஷம் பஸ்யேந்மநஸ் த்தர்ர லயம் கதம்
ரத்நாநி ஜ்யோத்ஸநிநாதம் து பிந்த்மஹேஸ்வரம் பதம்"

(தியானபிந்தூப நிஷத்)

பிரம்ம கபாலத்திற்கு (உச்சிக்கு) நான்கு துவாரங்களுண்டு. அதற்கு மத்தியிலிருக்கும் ஆகாயத்தில், சூரியன் ஆகாய மத்தியில் பிரகாசித்துக் கொண்டிருப்பதுபோல், பரமாத்மாவானவர் மண்டை ஓட்டிற்குள் வெட்ட வெளியாய் நிவசித்துக் கொண்டிருக்கிறார். அவர் நாத (பிராணன்) பிந்து (மனங்)களுடன் கூடி மஹேஸ்வர சொரூபமாய் இருக்கிறார். அன்றியும், கோதண்டம் போலிருக்கும் புருவ மத்தியில் துத்மா சுஷுமனா நாடியுடன் கூடியிருக்கிறார்.

இந்த ஆத்மா, இருதய கமலத்திலிருக்கும் அங்குலப் பிராமண ஆகாயத்திலிருக்கும் ஜலமத்தியில் இருப்பதாய் முன் சொல்லியிருக்க, இப்பொழுது பிரம்ம கபாலத்தில் (உச்சியி)லும், வில்லைப் போலிருக்கும் புருவ மத்தியிலும் இருப்பதாய் மறுபடியும் சொல்வதற்குக் காரணம்.

இருதய கமலத்திலிருக்கும் பரமாத்மாவிற்கு, புருவ மத்தியமும் உச்சியும் ஸ்தானமாயிருந்துகொண்டு சரீரத்திலுள்ள நாடி நரம்புகளுக்கெல்லாம் உஷ்ணத்தை உண்டாக்கி, ஆடும்படிச் செய்விக்கின்றான்.

பரமாத்மாவானவர், இருதய கமலத்திலும் புருவ மத்தியிலும் சிதாகாசமென்று சொல்லப்பட்ட சிறிய துவாரத்திலும், பிரம்ம கபாலமாகிய மண்டை ஓட்டிற்கும், அதன்கீழ் இருக்கும் மூளை இவ்விரண்டிற்கும் மத்தியில் நிவசிக்கின்றார் என்று காட்டுவதற்காக முன்னுள்ள பெரியோர்கள்

என்ன செய்தார்களென்றால், பரமாத்மாவானவர் இருதய கமலத்தில் நிவசிக்கின்றார் என்று காட்டுவதற்காக இரண்டு கைகளையும் குவித்து, முதல் மார்பினிடம் வைத்து கும்பிட்டுக் காட்டி பிறகு, புருவ மத்தியிலும் இருக்கின்றாரென்று புருவமத்தியில் கும்பிட்டுக் காட்டி, அதன் பிறகு பிரம்ம கபாலத்திற்குள்ளும் இருக்கிறாரென்று சிரசு உச்சியில் வைத்தக் கும்பிட்டுக் காட்டினார்கள். மண்டை ஓட்டிற்குள் பரப்பிரம்மமானது நிவசித்துக் கொண்டிருப்பதனால் அந்த மண்டை ஓட்டிற்குப் பிரம்ம கபாலமென்ற பெயர் வந்தது. இருதய கமலம். நெற்றி, புருவ மத்யம், சிரசு உச்சி இம்மூன்று இடங்களிலும் இரண்டு கைகளையும் குவித்துக் கும்பிட்டுக் காட்டும் ரகஸ்யார்த்தம் இதுவேயாம். மேற் சொல்லிய மூன்று இடங்களிலும் பரமாத்மாவானவர் நவசிக்கின்றார்.

"ப்ரஹ்மரந்த்ரே ப்ருவோர்மத்யே சித்ரவிம்ஹரிம்
கோபீசந்தபமாலிப்ப தத்ர த்யாத்வாய் நூயாத் பரம்."

என்னும் வாஸுதேவோபநிஷத் வாக்கிய ரீதியாய் பரமாத்மா உச்சியிலும் புருவ மத்தியிலும், இருதய கமலத்திலும் நீ வசித்துக் கொண்டிருப்பதனால், அந்த மூன்று இடங்களிலும் பரமாத்மா இருக்கிறதென்று காட்டுவதற்காக கோபீ சந்தமாகிலும், திரிசூர்ணமாகிலும், விபூதி சந்தனமாகிலும் தரிசிக்கின்றார்கள் இவைகளெல்லாம் வேதங்களினுடையவும், குருவினுடையவும் மஹா ரகசியங்கள்.



## 129. யோகாப்பியாசத்தினால் உண்டாகும் பலனை இந்நூலாசிரியர் வெளியிடுகின்றார்

இந்நூலாசிரியராகிய "ஸ்ரீ பரம ஹம்ஸ ஸச்சிதானந்த யோகிஸ்வரர்?" பால்ய தசையில் உலகத்திலுள்ள மானவ ஜனங்களெல்லோரும் எவ்விதமாய் ஆசாபாசங்களில் கட்டுப்பட்டிருக்கின்றார்களோ, அதுபோல் இவரும் ஆசாபாசங்களென்றும் கயிற்றால் கட்டுப்பட்டிருந்தவர். பன்னிரண்டு வருஷங்கள் வரையில் இவரது உபாசனா மூர்த்தியாகிய ஸ்ரீ ஏகாம்பரீஸ்வரரை மானச பூசையாய்ச் செய்து வந்தனர். பன்னிரண்டு வருஷங்கள் வரையில் மானச பூஜை செய்து முடிந்தபின் பதின்மூன்றாம் வருஷம் யோககுருவானவர் தாமாகவே இந்நூலாசிரியரிடம் வந்து யோகாப்பியாசம் செய்ய வேண்டிய சிரமங்களையெல்லாம் உபதேசம் செய்தனர். அவரிடம் உபதேசம் பெற்ற பிறகு, நாளாவட்டத்தில் சிறுகச் சிறுக யோகாப்பியாசத்தை உயர்த்திக்கொண்டே சென்றனர். இவ்வாறாக, யோகாப் பியாசத்தை உயர்த்திக்கொண்டே வரும் சமயத்தில் இந்நூலாசிரியருக்கு முன்னிருந்த துர்க்குணங்களெல்லாம் யோக பலத்தில் சிறுகச் சிறுக குறைந்து கொண்டேவந்து, கடைசியில் பூர்த்தியாய் நசிந்துவிட்டன. பிறகு ஜனங்களின் மீது அதிகப் பிரீதியும் விஸ்வாசமும் உண்டாயிற்று. அதன் பிறகு, பூததயைப் பச்சாதாபம் கருணை ஜீவகாருண்யம் முதலான நற்குணங்கள் யோகபலத்தினால் ஏற்பட்டதுமே யன்றி ஏழைகளைக் கண்டால் தம் சத்தியானுசாரம் பொருளுதவி செய்யுங் குணங்களும் யோகபலத்தினால் ஏற்பட்டன. யோகாப்பியாசம் முதிர்ச்சி அடையாமுன் இக்குணங்கள் யாவும் இந்நூலாசிரியருக்கு இல்லை. மேற்சொல்லிய குணங்களெல்லாம் மோக்ஷத்திற்கு முக்கிய

சாதனைகள். இக்குணங்கள் ஏற்படாவிட்டால் எந்த ஜன்மத்திலும் மோக்ஷமென்னும் வீட்டை அடையமாட்டார்கள். இந்நூலாசிரியருக்கு இக்குணங்களெல்லாம் யோகபலத்தினால் உண்டானபிறகு, அப்போதைக்கப்போது சமாதி நிஷ்டையில் இருக்க சாதனம் செய்து வந்தனர். இந்தச் சாதனையினால் வெளிவியவகாரங்களினால் குரங்கைப் போல் ஓடிக்கொண்டிருந்த மனம் அவ்விவகாரங்களில் ஓடாமல் நின்று விடுவதே மௌனமென்றும் நிஷ்டையென்றும், சமாதியென்றும் சொல்லப்படுமேயொழிய வாய்த்திறவாமல் மூடி பேசாமலிருந்து மனத்தை வெளி வியவகாரங்களில் ஓடவிட்டு கடிதத்தில் எழுதிக் காட்டுவதும் கைகளால் ஜாடை காட்டுவதும் மௌனமல்ல.

யோக பலத்தினால் மனத்தை எந்த வியவகாரங்களிலும் ஓடவிடாமல் நிறுத்தி மௌனம் தரித்தால் அதனால் உண்டாகும் சுகம் இவ்வளவங்வளவென்று சொல்ல சாத்தியப் படமாட்டாது. இந்நூலாசிரியர் யோகாப்பியாச சாதனம் அபிவிருத்தி செய்து அப்போதைக்கப்போது சமாதி சாதனையும் செய்து வந்தபடியால் அதனால் நிர்வகல்ய சமாதி நிஷ்டை உண்டாயிற்று.

''எமது யோகாப்பியாசம் செய்யவேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூல்'' வாசித்து அதில் சொல்லியிருப்பது போல் யோகாப்பியாசம் செய்துவந்தால் அப்பொழுது அவர்களுக்குச் சிறுகச்சிறுக யோகாப்பியாசம் முதிர்ந்துகொண்டே வந்து கடைசியில் அவர்களிடத்திலுள்ள துர்குணங் களெல்லாம் யோக பலத்தினால் இந்நூலாசிரியருக்கு எவ்வாறு நசிந்து விட்டனவோ அதுபோல், புதிதாய் யோகாப்பியாச சாதனை செய்து வரப்பட்டவர்களுக்கும் நசிந்துவிடும்.

## 130. பஞ்சாக்ஷர மந்திரத்தினால் உண்டாகும் பலன்

பிரபஞ்சத்திலுள்ள எல்லா க்ஷேத்திரங்களிலும் பிரசித்தியடைந்தது காசி க்ஷேத்திரம், இது, பிரம்மரிஷி தேவ ரிஷி ராஜரிஷி இவர்களால் பூஜிக்கப்பட்டது. இந்த க்ஷேத்திரம் கைவல்யத்தைப் பிரசாதிக்கத் தக்கது (தரத்தக்கது) பிரம் மஹத்தி முதலாகிய மஹாபாவங்களையும் நாசம் செய்யத் தக்கது, இந்தக் காசி க்ஷேத்திரத்தில் கணபதி, காலபைரவன் பிந்துமாதவன் விஸ்வேஸ்வரன் பார்வதி, குஹை, பாகீரதி, மணிகர்ணிகா முதலானவைகளும் உண்டென்று கர்மகாண்டத்தில் சொல்லியிருக்கிறது. காசி க்ஷேத்திரத்தை விசுவநாதசங்கர் அரசாண்டு வந்தான். அவனுக்கு ஒரு பெண் குழந்தை உண்டாயிற்று. அந்தக் குழந்தைக்கு 'கலாவதி, என்று நாமகரணம் வைக்கப்பட்டு வளர்ந்து வந்தது. ஒருநாள் 'தூர்வாஸ மஹரிஷி' காசிராஜனிடம் வந்தனர். அரசன் தன் குமாரத்தியை வரவழைத்து அம்மா கலாவதி! இவர் தூர்வாஸ மஹரிஷி இந்த மஹாத்மா ஈஸ்வரனுக்குச் சமானமானவர்.

இப்படிப்பட்ட மஹாத்மா சிலகாலம் வரையில் நம்முடனிருக்க உத்தேசித்து வந்திருக்கின்றனர். ஆதலால், ''நீ இவருக்கு வேண்டிய உபசரணைகளைச் செய்துவரக் கடவாய்'' என்று அரசன் குமாரத்திக்கு ஆஞ்ஞாபித்தான். இவைகளையெல்லாம் ராஜகுமாரத்தி கேட்டு மிகவும் சந்தோஷித்து தூர்வாஸ மஹரிஷியினது பாதத்தில் சாஷ்ட்டாங் கமாய் விழுந்து நமஸ்கரித்து, தூர்வாஸ மஹரிஷியின் ஹஸ்தத்தை ராஜகுமாரத்தி பிடித்துக் கொண்டு தனது நந்தவனத்திற்கு அழைத்துச் சென்று உபசரித்தனள். பிறகு பிரதிதினம் காலை மாலைகளில் பூஜைக்கு வேண்டிய வஸ்த்துக்களையெல்லாம் சேகரித்து வைத்து தர்ப்பாசனம்

அதன்மேல் வியாக்ராசனம் (புலித்தோல்) முதலானவை களை அமைத்து வைப்பாள், இவ்விதமாய் பிரதிதினம் அவரை இணைபிரியாமல் உபசரித்து வந்தனள். சில மாதங்கள் சென்றவுடனே அவருக்கு இக்கன்னிகைமேல் விசேஷப் பிரீதியுண்டாய் மிகவும் சந்தோஷித்து'

''அம்மா குழந்தாய்! உனது நல்ல விருந்திற்கும் உன் விஷயத்திற்கும் விவேகத்திற்கும் மிகவும் சந்தோஷமடைந் தேன். உனக்கு ''புஞ்சாக்ஷர'', மந்திரத்தை இப்பொழுது உபதேசிக்கிறேன். அவ்வுபதேசத்தைப் பெற்றுச் சதாகால மும் அதையே ஸ்மரித்து (நினைத்துக்) கொண்டு சமாதி நிஷ்ட்டையில் இருந்து காலம் கழித்து வருவாயாகில் உனது சஞ்சித கர்மங்களெலலாம் ஒழிந்து மஹத்தாகிய கைவல்ய பதவியை அடைவாய்'' என்று சொல்லிப் பஞ்சா க்ஷர மந்திரத்தை உபதேசித்துச் சென்றார். அந்தப் பஞ்சாக்ஷர மந்திரம் உபதேசம் பெற்ற முதல் விவாகமாகும் வரையில் நித்திரை வேளை தவிர மற்றக் காலங்களெல்லாம் அந்தத் தியானத்திலேயே இருப்பாள். ராஜன் தன் குமாரத்திற்கு விவாஹம் செய்ய உத்தேசித்து மதுராபுரி அரசனையும் அரச குமாரனையும் வரவழைத்து வேதவிதித்தபடி நல்ல சுபமுகூர்த்தத்தில் விவாகம் செய்வித்துக் கொடுத்தான். ஒருநாள் நல்ல சுபலக்கினத்தில் நிவேக முகூர்த்தம் (சாந்தி முகூர்த்தம்) செய்வித்தார்கள். முகூர்த்த அறைக்குள் சென்ற வுடன் அரசக் குமாரன் தன் பத்தினியினது கையைப் பிடித்தான். பிடித்தவுடன் அந்தக் கையானது உலைக்களத்தில் வைத்துக் காய்ச்சிய இரும்பு எவ்வளவு சூடாயிருக்குமோ அவ்வளவு சூடாயிருந்தது. அரசகுமாரன் அந்தச் சூட்டைச் சகிக்க முடியாமல் கையை விட்டுவிட்டு மஹா ஆச்சரியப் பட்டுத் தன் நாயகியைப் பார்த்து ''உன் ஹஸ்தத்தைத் தீண்டிய மாத்திரத்தில் என் சரீரமெல்லாம் தீச்சூடு கொளுத்தி விட்டதற்குக் காரணமென்ன?'' வென்று கேட்டான்

அப்பொழுது ராஜனது பத்தினி சொல்லுகிறாள். ''ஓ அரசே! உமது சரீரம் ஆசாங்களில்லாமல் ஜீவஹிம்சை செய்து மாமிசங்களைப் புசித்து வளர்ந்து நீசத்துவமடைந்திருக் கிறது. எனது சாரீரமோ அப்படியல்ல துர்வாஸ மஹரிஷி யால் பஞ்சாக்ஷர மந்திரம் உபதேசம் பெற்று அதைச் சதா காலமும் இடைவிடாமல் ஜபித்துக்கொண்டு சரீரம் பவித்திர மாய் விட்டது. அதனால் அவ்வளவு சூடாயிருக்கிறது. இப்படிப்பட்ட பரிசுத்தமுடைய சரீரத்தை நீர்தீண்ட சாத்தியப் படுமா? விரதம் செய்யும் ஸ்திரீகள் தீர்க்க உபவாசமுள்ள ஸ்தீரிகள், கர்ப்பமாயிருக்கும் ஸ்தீரிகள், வியாதியுள்ள ஸ்திரீகள் முதலானவர்கள் ஸமபோகத்திற்கு அருசரல்லர்' என்று சொல்லினள். இதைக்கேட்ட ராஜகுமாரன் மிகவும் விசனமடைந்து தன் நாயகியைப் பார்த்து, அப்படிப்பட்ட பாவங்களையெல்லாம் நிர்மூலம் செய்யத்தக்க மஹா மந்திரமாகிய பஞ்சாக்ஷர'' மந்திரத்தை நீ எனக்கு உபதேசம் செய்யவேண்டும்'' மென்று கேட்டான். அதற்குப் பத்தினி யானவள் சொல்லுகிறாள். ''ஓ பிராமணவல்லபா! நான் உமக்கு நாயகியாயிருக்கிறேன். இந்த மஹா பஞ்சாக்ஷரத்தை உமக்கு நான் உபதேசிக்கலாகாது, நமது குல குருவாகிய கர்க்க மஹாமுனிவரிடம் நீர் உபதேசம் பெற்று பவித்திரமான பிறகு என்னைத் தீண்டலா'' மென்று சொல்லித் தன் நாயகனை அழைத்துக்கொண்டு கர்க்க மஹாமுனி ஆசிரமத்திற்குச் சென்றாள்.

சுவாமி!இவ்வரசன் நல்ல ஆசாரங்களில்லாமல் பரஸ்திரீகளை மோஹித்து ஜீவஹிம்சை செய்து மாமிசங் களைப் புசித்து மஹா பாவங்களுக்குட்பட்டு நீசத்துவ மடைந்திருக்கிறார். ஆதலால், இவரது பாவ கர்மங்களை யெல்லாம் பஸ்பம் செய்விக்கத்தக்க மஹாமந்திரிமாகிற

பஞ்சாக்ஷர மந்திரத்தை இவ்வரசனுக்கு உபதேசம் செய்விக்கும் பொருட்டு, தேவரீருடைய ஆசிரமத்திற்கு வந்தோம். இவரது சரீரம் பவித்திரமாகும் வரையில் அடியாளை இவர்தீண்டலாகாது என்று முனிவரிடம் சொல்லினள். இவ்வார்த்தைகளை எல்லாம் கேட்ட கர்க்க மஹாமுனி மிகவும் சந்தோஷித்து, அவர்களிருவரையும் யமுனாநதிக்கு அழைத்துச் சென்று அரசனை நதியில் இறங்கும்படிச் செய்து சங்கல்ப பூர்வமாய் அகமர்ஷண (பாவங்களைப் போக்கடிக்கத்தக்க) ஸ்நானம் செய்வித்து விபூதியைத் தரிக்கும்படி சொல்லி, பிறகு அரசகுமாரனைக் கரைமீது அழைத்து வந்து; சித்தாசனத்தில் உட்காரும்படிச் செய்து அரசனது இரண்டு ஹஸ்தங்களையும் ரிஷியினது பாதத்தின் மீது வைக்கும்படிச் சொல்லி சாஸ்திர விதிப்படி உடல், பொருள், ஆவி இம்மூன்றையும் தத்தம் செய்துகொண்டு ஹஸ்த மஸ்தக சையோகம் செய்துஎன்றால், கர்க்க மஹாமுனி வலதுகையை அரசன் சிரசில் வைத்து ஆசீர்வாதம் செய்துசிவபஞ்சாக்ஷர மந்திரம் உபதேசித்தார். அரசகுமாரன் அம்மந்திரம் உபதேசம் பெற்றவுடன் மனதை ஒருநிலையாய் நிறுத்தி பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருந்தான். இப்படி ஜபித்துக்கொண்டிருக்கும் பொழுது அரசனுடைய பாவ கர்மங்களெல்லாம் அநேக கோடி கருங்காகரூபங்கொண்டு அரசனது சரீரத்திலிருந்து புறப்பட்டு, ஆகாயமார்க்கமாய்க் கிளப்பிப் படபடவென்றடித்துக் கொண்டு, எரிந்து சாம்பலாய் யமுனா நதியில் விழுந்தன. இவைகளையெல்லாம் அரசகுமாரன் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டு இவ்விஷயங்களையெல்லாம் தன் குருவாகிய கர்க்க மஹரிஷியிடம் சொல்லினன். அதைக் கேட்ட ரிஷியானவர் சொல்லுகிறார்: ''ஓ அரசே! நீ முன்

ஜன்மங்களில் செய்து வந்த பாவ கர்மங்களையெல்லாம் பஞ்சாக்ஷர மந்திர ஜபத்தால் இந்தப் பஞ்சாக்ஷர அக்கிநி, உன் பாவகர்மங்களையெல்லாம் பஸ்மம்செய்துவிட்டது. ஆதலால், நீ இன்று முதல் இந்தப் பஞ்சாக்ஷர மந்திரத்தைச் சதாகாலமும் ஜபித்துக்கொண்டே வரவேண்டும் என்று சொல்லி, இளவரசனையும் இளவரசியையும் மறுபடியும் ஆசீர்வதித்து அனுப்பினார். பிறகு தம்பதிகளிருவரும் பஞ்சாக்ஷர மந்திரம் ஜபம் தவறாமல் சதாகாலமும் செய்து வந்தார்கள். அப்படிப்பட்ட பஞ்சாக்ஷர மந்திர ஜபம் செய்யும் முறையை இதனடியில் சக்கர மூலமாய்க் காட்டி உபதேசித்திருக்கிறோம். அதுபோல் இவ்வுலகத்திலுள்ள ஸ்திரீ புருஷர்களெல்லாரும் பேசும் வேலைகளில் தவிர மற்ற காலங்களெல்லாம் அணுவேனும் விடாமல் சதா காலமும் பஞ்சாக்ஷர மந்திரம் ஜபித்து வந்தால் அவர்களி னுடைய பாவ கர்மங்களையெல்லாம் பஞ்சாக்ஷர அக்கினி யினால் பஸ்மமாய் மோக்ஷமென்னும் பதவியைத் தப்பாமல் அடைவார்கள்.



## 131. பஞ்சாக்ஷர மந்திரோபதேசம்

பஞ்சாக்ஷர மந்திரம் ஜபம் செய்யவேண்டுமென்று நினைக்கப்பட்ட ஸ்திரீகளாயினும், அல்லது புருஷர்களாயினும் என்ன செய்யவேண்டுமென்றால் மனது சஞ்சலமில்லாமல் (ஓடாமல்)அசைவற்று நிற்பதற்காகத் தன் வீட்டில் சப்தங்கள் கேளாத ஓர் ஏகாந்த அறையை பூஜைவிடமாய்ச் செய்யவேண்டும். அவ்வீட்டில் மனம் லயிக்க மிகுந்த பரிமளமுள்ள வாஸனை வஸ்துக்கள் வைத்து அவ்வறையில்இதரர்கள் பிரவேசிக்காதபடி நிர்ணயம் செய்து, தான்பஞ்சாக்ஷர மந்திரம் ஜபம் செய்வதற்காக ஒரு பெரிய மனையின்மீது மான்தோல் அமைத்து அதன்மேல் அபானவாயு படாவண்ணம் வெள்ளை வஸ்திரம் மடித்து விரித்துச் சித்தாஸனத்துடன் உட்கார்ந்து இடுப்பு கூன் வளையாமல் சித்திரப்பதுமைபோல் சரியாய் நிறுத்தி முகத்தை நிமிர்த்தி நேராய். 'சிந்முத்திரை'யை விரல்களால் பிடித்து அடியில் காட்டியிருக்கும் பஞ்சாக்ஷர மந்திர ஜபம் செய்ய வேண்டும்.




இதுவே பஞ்சாக்ஷர மந்திரம்

''காண்பேனே 'ந' காரமது 'ம' காரம் புக்கும்
கருத்தான 'ம' காரமது 'சி' காரம் புக்கும்
தேண்பேனே 'சி' காரமது 'வ' காரம் புக்கும்
சிவசிவ 'வ' காரமது 'ய' காரம் புக்கும்
காண்பனே 'ய' காரமது சுடரிற் புக்கும்
குருவான சுடரோடி மணியிட் புக்கும்
நாண்பான மணியோடி பரத்திற் புக்கும்
நற்பரந்தான் சிம்புக்குஞ் சிவத்தைக் கேளே''

''நகாரமாகிய சேரியை நஞ்சென வெறுத்து
மாகாரமாகிய மயலெல்லாம் வேருடன் கலைந்து
சிகாரமாகிய வனத்திருந் திளைப்பாறி
வகாரமாகிய சிவனை யடைந்தனன் ஜீவன்''

''அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செ
ழுத்திலே வளர்ந்து
அஞ்செழுத்தை யோதுகின்ற
பஞ்சபூத பாவிகாள்
அஞ்செழுத்திலோ ரெழுத்தை
அறுந்துகூற வல்லீரேல்
அஞ்ச லஞ்சலென்று நாதன்
அம்பலத்தி லாடுமே''

''நமசிவாய'' என்னும் ஐந்து அக்ஷரங்களிலும் 'ய' என்னும் மந்திரம் ஜீவனாயிருக்கிறது. இந்த 'ய' என்னும் ஜீவனால் நம, சிவ, என்னும் இரண்டு மந்தரங்களை மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கிழுத்து வெளிவிடவேண்டும். இந்தப் பஞ்சாக்ஷர மந்திரமே. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசங்கள், இவைகளே பிரமன், விஷ்ணு, ருத்திரன், மஹேஸ்வரன் சதாசிவன் இவ்வைந்து பேர்களும் சுவர் திஷ்ட்டானம் மணிபூரகம் அநாஹதம் விசுத்தி ஆஞ்ஞேகளுக்கு அதிதேவதைகளாயிருந்து மூச்சை நடத்திக்கொண்டு வருகிறார்கள்.

பிருதிவி (பூமி) 'ந' காரம். இந்த ந, காரமே பிர்மன், அப்பு (ஜலம்), 'ம'காரம்; இந்த 'ம' காரமே விஷ்ணு, தேயு (அக்நி) 'சி' காரம்; இந்த 'சி' காரமே ருத்திரன். வாயும் (காற்று) 'வ'காரம்; இந்த 'வ'காரமே மஹேஸ்வரன். ஆகாயம் (வெளி) 'ய'காரம்: இந்த 'யா' காரமே சதாசிவன். இந்தப் பஞ்சாக்ஷரம் குருரகசியத்தை அடியில் சொல்லுகிறோம். ஆதலால், அதையே 'குரு' வாக்காய் நம்பி இதில் உபதேசித்ததுபோல் ஜபம் செய்து வரவேண்டும்.

பஞ்சாரக்ஷர மந்திர சக்கரம் நெம்பர் 5-இல் காட்டிய 'ய' என்னும் மந்திரத்தின் மத்தியிலிருப்பது மூக்குத் தண்டு. அந்த மூக்குத்தண்டுக்கு வலது. இடது பாகங்களிலுள்ள மூக்கின் ரந்திரங்கள், சிவன் (சூரியநாடி) சக்தி (சந்திர நாடி) என்று சொல்லப்பட்ட மூச்சு நடக்கும்படியான மார்க்கங்கள். இம்மார்க்கமாய் 'ய' என்னும் ஜீவாக்ஷரத்தை நீக்கி பஞ்சாக்ஷர மந்திர படத்தில் 4,3 நெம்பரில் காட்டிய நம, என்னும் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து உள்ளுக்கிழுத்து, மூச்சை வெளிவிடாமல் சிலநேரம் நிறுத்தி மறுபடியும் மூச்சை வெளிவிடும்பொழுது 2–1 நெம்பரில் காட்டிய 'சிவ' என்னும் மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து வெளிவிட வேண்டும்.

அதாவது ஒவ்வொரு மூச்சும் உட்பிரவேசிக்கும் பொழுது அந்த மூச்சுடன் கூடவே 'நம' என்னும் மந்திரத்தை மனத்துடன் சேர்த்து உள்ளுக்கிழுத்து, மறுபடியும் மூச்சு வெளிவிடும்பொழுது 'சிவ' என்னும் மந்திரத்துடன் விட்டு விட்டு மறுபடியும் மூச்சு உட்செல்லும்போது 'நம' என்னும் மந்திரத்தினால் உள்ளுக்கிழுத்து மறுபடியும் 'சிவ' என்னும் மந்திரம் சேர்த்து விடவேண்டும்.

என்றால் மூச்சு 'நம' என்னும் மந்திரத்துடன் உள்ளுக் கிழுத்து 'சிவ' என்னும் மந்திரத்துடன் வெளியில் விட வேண்டும் என்பதேயாம்.

'ய' என்பது ஜீவன், இந்த ஜீவனால்மற்ற நான்கு மந்திரங்களையும், அதாவது, நம, சிவ என்னும் மந்திரங்களை ஜபிக்கவேண்டும். நெ. 5–ல் காட்டிய 'ய' என்னும் அக்ஷரத்தில் இரண்டு கால்கள் காட்டப்பட்டிருக்கின்றன. அந்தக் கால்களே உசுவாச நிசுவாசங்களாகும். என்றால், உள்ளுக்குள்ளும் வெளிக்குமாய் ஆடிக்கொண்டிருக்கும் மூச்சுகளேயாகும். இந்த மூச்சுகளை 'ய' என்னும் ஜீவன் உள்ளுக்கும் வெளிக்குமாய் இழுத்துக்கொண்டிருக்கிற தென்று அறியக் கடவீர்களாக இதை யார் ஒரு விடாமுயற்சி யாய் ஜபம் செய்து வருகிறார்களோ, அப்படிப்பட்டவர் களின் மனம் இறந்து, ஆத்மசொரூபத்தில் லயித்து முன் சொல்லிய காசிராசன் குமாரத்தியாகிய 'கலாவதி' அடைந்த சுகம் அடைவார்கள் இதன் அனுபவம் பிரத்தியக்ஷயமாய் ஜபம் செய்துவரப்பட்டவர்களுக்கு மாத்திரம் தெரியவருமே யொழிய, மற்றவர்களுக்குத் தெரியவரமாட்டாதென்று அறியக் கடவீர்களாக.



## 132. பிரமதேவர் கண்ட காட்சியும் பரமனைத் துதிசெய்து வரம்பெற்றது

ஏகாக்ஷரமாகிய 'ஓம்' என்னும் பிரணவத்தை துவைதிகளுக்கும் அத்வைதிகளுக்கும் விசிஷ்டாத் வைதிகளுக்கு ஒரே உருவமாய்க் காட்ட, இதனடியில் காசி காண்ட பிரமாணத்துடன் சொல்லுகிறோம்.

யுகமொரு நூறு நீங்கா யோகினி லுயங்கு வேதன்
அகமல ரதனி லோங்கு மலங்கொளி யொன்று தோன்றி
நிகரில் பாதலங்க ளேழுங் கடந்தந்த நிலையில் மீட்டும்
புகுதலு முலகம் போர்க்கும் பொங்கொலி யெழுந்ததறே
பொங்கொ யெழுதல் கேட்டு பொறிபுல னடங்கிய யாற்றுந்
துங்கநல் விரத நீங்கிச் சதுமுகன் துணைவி நோக்கச்
செங்கண்மா லுருவா யாதிவேதகா ரணமாய்ச் சீர்த்தி
கஞ்சுசாத் துவிதமாகு மகரமுன் சார்தல் கண்டான்.
இராஜத குணத்திரண்டாம் வேத காரணமாய் வேதன்
பராவரு முருவ முற்றோர்வடிவமா யனைத்து மாகி
விராவியபே ருலகமீன்ற வன்னையாய் விளங்கு மென்னாத்
தாரதல முழுதும் போற்று முகரமுன் சாரக் கண்டான்
சாமகா ரணமாய் நோற்றறொழிற்குயர் தலைமைத் தாங்கிக்
காமனை யெரித்த முக்கட் கடவுளென் வடிவுபோன்று
தேமற விளங்கு மிக்க தாமத குணத்திற் றோன்று
நாமநூல் மறையோ ரேத்து மகரமு நண்ணக் கண்டான்
உலகெலா மோங்கு சுத்தப்பிரம்மா யுவமை யின்றி
யுலகில பேரின்பமாகி வாக்கினுக் காதி யாகி
யிலகொளி விரிக்கும் தூய விச்சுவ வுருவா யென்றுந்
தொல்லைவி லானந்த மாகு நாதமுள் றென்றக் கண்டான்.
காரண மனைத்துந் தோன்றுங் காரண மாகி யெங்கும்

பூரண மாகியோங்கும் பிரமமாய்ப் பொலிந்து நின்ற
வேர்பெற விளங்கிந் தோன்றும் விந்துவை நோக்கி யெங்கும்
சீர்கெழு பிரணவத்தைத் தெருளுற வேத்து மன்றே.

நூதுயுகங்கள், யோகத்திலிருந்த பிரமதேவனுடைய இருதய கமலத்தின் மத்தியில் 'அ' காரத்தின் சிரசாகிய சுழி சுழன்று அவ்விடமிருந்து நீளமாய்ப் புறப்பட்டு அண்ட புவனங்களுள்ள வரையில் சென்று அகண்ட புவனங்கள் முடிந்தவுடன் அங்குச் சுற்றி முடிந்து, திரும்பி மறுபடியும் அகரத்தின் சிரசாகிய சுழியின்கீழ் மத்தியில் வந்து கலந்து, சிலதூரம் செல்லும்பொழுது அதற்குப் பிறகு ஒன்றுமில்லா மலிருந்தப்படியால், அந்த அகரத்துக் அப்பால் போகவிடா மல் குறுக்கிட்டுக் காலாய் நின்று. 'அ' கரமாய்த் தோன்றிய எழுத்தைத் தம் இருதயத்தில் பிரமதேவர் கண்டவுடன், தமது யோகம் கலைந்து பார்க்க அந்த அகாரத்தில் நாதசப்தம் பிறந்ததைக் கேட்டார். அந்த அகாரம் சாத்விக குணமும் விஷ்ணுவின் அம்ஸமும் ருக்வேதத்திற்கு முதற்காரணமும் கீர்த்திப் பொருந்தியதுமாய் இருக்கப்பட்டது. அன்றியும் எல்லா எழுத்துக்களிலும் வார்த்தைகளிலும் 'அ' என்னும் சப்தம் அடங்கியிருக்கிறது; அந்த அகாரம் இதனடியில் காட்டப்பட்டிருக்கிறது பாருங்கள்.

அ

இராஜன் குணரூபமான யஜுர் வேதத்தில் பிரம தேவர் வணங்கத்தக்க ஒருருங்கொண்டு, உலகங்களைப் பெற்ற மாதாவாகிய உமையவள் வடிவம்போல். பூ உலக முழுதும் துதிக்கும்படியான ''உ''காரம் தன் இருதயத்தில் தோன்று தலைப் பிரமதேவர் கண்டார். அந்த ''உ'' காரம் இதனடியில் காட்டப்பட்டிருக்கிறது பாருங்கள்.

## உ

ஸாமவேதப் பிரியனாயும் தபோ விரதங்களுக்குத் தலைவனாயும், மதமென்கின்ற மன்மதனை ஞானக்கண்ணால் எரித்த கடவுளின் ரூபமாயும் குற்றமற்றவனாய் விளங்குப வனும் தாமகுணத்தில் உதித்தவனும் வேதங்கள் துதிக்கப் படுவதுமாகிய ''ம'' காரம் தன் இருதயத்தில் தோன்று தலைப்பிரமதேவர் கண்டார். அந்த ''ம''காரம் இதனடியில் காட்டப்பட்டிருக்கிறது பாருங்கள்.

## ம

உலகத்தில் உயர்ந்த சப்தமே ஒப்பற்ற பிரம்மமாய்ச் சொல்லுதற்கரிய பேரின்பமயமாயும். வாக்குக்குத் தலைமை யாயும், பிரகாசிக்கிற விஸ்வரூபமுடையதாயும் எக்காலத் திலும் குறைவில்லாத ஆனந்தரூபமான நாதம் தம் இருதயத் தில் தோன்றுதலைப் பிரமதேவர் கேட்டார்.

சகல காரணங்களும் தோன்றுதற்கு மூல காரணமாயும் எங்கும் பரிபூரணமாயும் நிறைந்திருக்கும் விந்துவைப் பார்த்து, எவ்விடத்தும் சிறந்து விளங்கும் பிரணவத்தைப் பிரமதேவர் தெளிவோடு அறிந்துத் துதி செய்கிறார். இவை களுக்குக் காசி காண்ட பிரமாணம்,

> உலகெலா மளிக்கு மாற்றா லோமெனும் பெயர தாயிற்
> றலகறு கரும் வாரியகன் கரை கடத்த றன்னா
> விலகுதா ரகமென் றோதும் பெயரொடு மியைந்ததென்னா
> மலர்தலை யுலகம் பூத்த மறையவன் பழிச்சு கின்றான்.

> ஓங்கார வுருவா யோது மெழுத்தா யோங்கா ராதி
> நீங்கரும் வன்னந் தோன்று நிலையதா யுயிர்கள் யாவுந்
> தாங்கியு மதனுட் டோயாச் சதாசிவ மாகி நான்காந்
> தீங்கறு மறையாய் நாத விந்துவாய்ச் சிவம தாகி.

அகரமா யுகர மாகி மகரமா யழிவொன் றின்றிப்
பகர்வரும் பவராய்த் தூய சர்வமாய்ப் பிரமமாகிப்
புகலருங் குணக் குன்றாகிப் புவன கோடிகளும் பூத்த
நிகரறு துரிய மாகி நிமலரு மாகி நின்றாய்.

குறுமையாய் நெடுமை யாகிக் குணங்குறி புருவ மில்லாச்
சிறுமையாய்ப் பருமை யாகிச் சித்துரு வாகி நான்கு
மறைபுக விளைய ராகி விருத்தராய் வண்ண மைந்தா
யறிவரு முதாத்த மிக்க வனுதாத்தஞ் சொரித மாகி

எடுத்தலே படுத்தல் மிக்க நலிதல்மூக் கிதழ்நாப் பல்லோ
டடுத்திடு மண்ணஞ் சார்ந்து பிறந்தவக் கரங்க ளாகி
நடத்தலோ டிருந்த லென்னும் பாவக நண்ணி நண்ணாக்
கடுத்திகழ் மிடற்ற ரசகிக் களைகணா யருவ மாகி.

மலரய னாகி யாவும்வதுத் மால்வடிவமாகி
யுலகெலாங் காத்து முக்கா ணொருவனா யொடுக்கிப் பின்னு
மலகிலா யுருவ மாகி யேகமா யனாதி யாகி
யிலகுபே ரொளியே யெந்தா யென்றெடுத் தேத்த செய்தான்.

உள்ளநெகிழ் விழினிப்ப பழிற்சிப்
பழிச்சி யுவந் தேத்து
மள்ளற் கமலப்பொருட் டுறைய்யு
மலரோன்முன்ன ரருள் புரிவான்
கொள்ளையினவண் டிசைபயிலக் கொழுந்தேன்
பிலிற்று நறுங் கொன்றை
வள்ள லிலிங்கத் திடையினிது வந்து தோன்றி
மகிழ்ந் துரைப்பான்.

விழைந்த கேட்டியென வமலன் வினவலோடும் மலர்க் கிழவன்
தழைந்த வுவகை மீதூரத் தண்டிற்பணிந்து கதிருமிழுங்
குழைந்த மதிதாழ் புரிசடை யெங்குழகா நினது குற்றடியேன்
பழங்க ணகல விவ்விலிங்கத் திருத்தி யென்னப் பகர்தனனால்

அனைய நேர்ந்தே னிவ்விலிங்கத் தகலா தடைவ லிதனாமம்
வினைக ளர்க்கு மோங்கார விலிங்க மென்ன விளம்பிருக
வனையு முலக முழுதழைக்கும் வரமு மளித்தோம் பிதா மகனென்
றிதனி னெவரும் பணிந்தேத்தும் பேரு முனக்கே யீந்தன மால்

உலகம் எல்லாவற்றையும் சிருஷ்டித்ததனால் ஓங்கார மென்னும் பெயருடையதாயிற்று. சொல்லுதற்கரிய விசாலமாகிய கர்மமென்னும் சமுத்திரத்தைத் தாண்டச் செய்தால், தாரக மந்திரமாயிற்றென்று உலக சிருஷ்ட்டி செய்யும் பிரமதேவர் துதிக்கின்றார்.

ஜீவகோடிகள் ஜபிக்கும் பஞ்சாக்ஷரத்தில் சேர்ந்து, அவைகளை நீர் உட்கொண்டு, விலஹணனாயும் சபித சிவனாயும் குற்றமற்ற நான்கு வேதங்களாயும் சிவமாயும் நிற்கின்றீர்.

அகரமாய் உகரமாய் மகரமாய்ச் சொல்லுதற்கரிய பகவானாய்ச் சர்வமுமாய்ப் பிரம்மமாய் அளவிடற்கரிய குணமலையாய்ப் புவனகோடிகளுண்டாகின்ற நிகரற்ற துரியமாய் மலரகிதராய் நிற்கின்றீர்.

குறி தாயும் நெடிதாயும் குணங்குறி உருவங்களில்லாத வராய், அணுவாய் ஸ்தூரலமாய் சித்ரூபமாய் நான்கு வேதங்களும் கூறும் இளைஞராய் விருத்தராய்ப் பஞ்ச வர்ணங்களாய் உரத்ததொனி சமதொனி தாழ்ந்த தொனி உடையவராயும் இருக்கின்றீர்;

எடுத்தல் படுத்தல் கவிதல் மூக்கிதழ் நா பல்லோடு சேர்ந்த மேல்வாயைப் பொருந்திப் பிறக்கின்ற அக்ஷரங் களாயும், நடத்தலோடிருத்த லென்னுந் தன்மையைப் பொருந்தியும் பொருந்தாமலும் இருக்கும் நஞ்சை அணிந்த கண்டத்தையவராயும் இருக்கின்றீர்.

பிரம்மாவாயிருந்து சர்வமும் சிருஷ்ட்டித்து விஷ்ணு வடிவமாயிருந்த உலகெலாம் காத்து திருநேத்திரதாரியா யிருந்து யாவற்றையும் சங்கரித்துப் பின்பு அளவிடற்கரிய வுருவங்களாயும் ஏகரூபமாகியும் விளங்குகின்ற அகண்ட ஜோதியே என் பிதாவே என்று பிரமதேவர் பலமுறையும் துதிசெய்தனர்.

மனங்கசிந்து கண்ணீர் பெருகப் புகழ்ந்து புகழ்ந்து துதிக்கின்ற தாமரை யாசனராகும் பிரமதேவருக்கு அனுக் கிரகம் செய்ய, வண்டுகள் இசைபாடுகிற தேன் பொருந்திய கொன்றைமாலை யணிந்தவரும் கிருபையுள்ளவருமான சிவபெருமான், பிரமதேவர் பூசித்த லிங்கத்தினின்று மகிழ்ந்து கூறுகிறார்.

ஹே! பிரமதேவா, நீ விரும்பியதைக் கேட்கக்கடவாய் என்ற சிவபெருமான் லிங்கத்தினின்று கேட்டனர் அப்பொழுது பிரமதேவர் மிகவும் சந்தோஷித்து மரம்போல் வீழ்ந்து நமஸ்கரித்து 'நிலா வீசுகின்ற ஜடாபாரத்தையுடைய எனது தலைவனே உமது சிற்றடியனாகிய அடியேனது ஊழ்வினைகள் நீங்கும்படி இந்த லிங்கத்தில் எப்பொழுதும் எழுந்தருளியிருக்கவேண்டும் என்று வேண்டிக் கொண்டனர்.

நீ கேட்டதுபோல் இந்த லிங்கத்தில் எப்பொழுதும் இருப்பேன். இந்த லிங்கத்தின் நாமம் துன்பம் தீர்க்கும் ஓங்கார லிங்கமென்று யாம் பெயரிட்டதுபோல் உலகத்தார் சொல்ல வரமும் கொடுத்தேன்'' உன்னால் இந்த லிங்கத் திற்கு இப்பெயர் உண்டாயிற்றென்று உலகத்தார் சொல்ல வரமும் கொடுத்தேன்! என்று சொல்லி மறைந்தனர்.

## 133. ஓம் என்னும் மஹா மந்திரத்தின் ரஹஸ்யம்

சுரு॥ அஷ்டாங்கம் ச சதுஷ்பாதம் த்ரிஸ்தானம் பஞ்சதைத்வதம்
ஓங்காரம் யோக ஞானாதி பராஹமணோ நப வேத் து ஸஹ

*(த்யானபிந் தூபநிஷத்)*

*'ஓம்' என்பது 'அ', 'உ', 'ம' என்ற மூன்று அக்ஷிரங்கள் சேர்ந்துள்ளது. இவைகளை மாத்திரைகள் என்றும் சொல்வதுண்டு. இவைகளைத் தவிர நான்காவது மாத்திரை அல்லது அர்த்த மாத்திரை அல்லது அமாத்திரை என்ற ஒரு மாத்திரையும் அந்தர்கதமாயிருக்கிறது. என்றால் சேர்ந்திருக்கிறது. இவைகளின் அர்த்தம் தெரிந்து கொள்ளாவிட்டால், பிரம்ம ஞானம் உண்டாகவேமாட்டா. ஆகையால் அதை இங்கு விசாரிப்போம்.*

*'ஓம்' என்பது பரப்பிரம்மத்தின் பெயர்.*

சுரு॥ ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம த்யேபம் ஸர்வமு முக்ஷுபிஹி

*(த்யானயிந்தூபநிஷத்)*

*இந்த 'ஓம்' தியானத்திற்கு மிகவும் சிரேஷ்ட்டமானது. ஸகுணம் நிர்க்குணம் இரண்டிற்கும் உபயோகமானது. சரியான ஸம்ஸ்காரத்தை அடையாத மனத்திற்கு, நிர்க்குண உபாஸனம் பிடிபடாதாகையால். ஸகுணத்யானம் முதலில் அவசியமாய்ச் செய்ய வேண்டும். இதற்கு ஒரு மூர்த்தியை அதாவது சிவனோ விஷ்ணுவோ, கணபதியோ, ஸுப்ரமண்யனோ, பார்வதியோ லஷ்மியோ இன்னும் அவரவர்களுக்கு இஷ்ட்டமான தேவதா ஸ்வரூபத்தை அதாவது, தலை முகம் கால் கை முதலான அவயவங்களுடன் இருக்கும் ஒரு பிம்பத்தை மனக்கண்ணால் பார்த்து அதிலேயே மனத்தை ஒரே நாட்டமாக நிறுத்தி அப்பியாசம் செய்து அந்த*

அப்பியாச முதிர்ச்சியினால் தன்னை அறவே மறந்து, தானென்றும் தேவதை என்னும் துவைத் (இரண்டான) பாவமில்லாமல் ஏகமாய்த் தேவதா ஸ்வரூபத்தில் ஐக்கியமாய்விடும். இது ஒருவிதமான ஸகுணோபாஸனம், இதன்பலன் என்னவென்றால் எந்தத் தேவதையை உபாஸித்து அதன் பாவத்தையடைகின்றானோ, அந்த உபாஸகனுக்கு, அந்தத் தேவதையினால் ஐசுவரியங் களெல்லாம் உண்டாகும். இதைவிட அதிக உத்திருஷ்ட்ட (சிரேட்ட) மான த்யானம் எதுவென்றால், அவயவமுள்ள தேவதாபாவனையை விட்டு, மனதை ஒரே இடத்தில் நிறுத்த வேண்டியதற்காக ஒரு அடையாளத்தை அதாவது லிங்கத் தைப் புருவமத்தியில் நிறுத்தி, அதை அதிஸூக்ஷ்மமான பரமாத்மாவாக நினைத்து அதில் மனதை லயப்படுத்தினால், ப்ரம்ம பாவத்தை அடைந்ததாகும். இதன் பலன் என்ன வென்றால், உபாஸகன் ப்ரம்மமாகவே ஆகிவிடுவான், 'யத் பாவம் தத்பவதி' என்ற நியாயப் பிரகாரம், இப்படி செய்ய உபயோகமான அனேக லிங்கங்களில் இந்த 'ஓம்' என்னும் லிங்கம் மிகவும் சிரேஷ்ட்டமானது. ஏனென்றால், 'ஓம்' என்பது நிரம்ப அர்த்த புஷ்ட்டியுள்ளது.

சுரு|| ''ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம'' நேகநாநாஸ்தி கிஞ்சந'' ''ப்ரஹ்மைமவேதம் ஸர்வம்'' ஆத்மைவேதம் ஸர்வம் ''அஹமேவ இதம் ஸர்வம்''

என்று மஹா வாக்கியங்களில் சொல்லியதுபோல் ஸர்வ சராசர அண்டகோடிகளெல்லாம் ப்ரஹ்மத்தைத் தவிர வேறல்ல என்கிற அகண்டாகார ஏகவிருத்தியை யடைந்தா லல்லது, அபேத ஞானம் வந்து ப்ரஹ்பத்தில் லயிக்க சாத்திய மாகாது. இந்த அகண்டாகார விருத்தியையுடைய 'ஓ' கார த்யானத்தைத் தவிர வேறு ஸுலப போபாயம் இல்லை. ஆகையால், 'ஓம்' என்னும் பரம சிரேஷ்ட்டமான மந்திரத்

தின் மாத்திரைகளையும், அவற்றின் ரஹஸ்யார்த்தங் களையும் மனத்தில் நிறுத்தி மனனம் செய்து என்றால், நினைத்து. உபாஸனை செய்ய ஆரம்பிக்கவேண்டும். அதன் ரகஸ்யார்த்தத்தைத் தெரிவிக்கிறோம் கேளுங்கள்.

சுரு॥ யஓகாரஹ ப்ரணவஹயவஹ ப்ரணவஹ ஸ
ஸர்வவ்யாபீ ஸ ஏகஹ தத் பரப்ரஹம.

(அதர்வஸிர உபநிஷத்)

'ஓம்' என்பது மஹா புனிதமான அஹரம். அதாவது. அழியாப் பொருள். என்றால், பரப்ரஹ்மம் என்பதேயாம். அதற்கு எப்படி 'ஓம்' என்று பெயர் வந்ததென்றால்,

சுரு॥ யஸவாதுச்சார்யமாண ஏவ ப்ராணாந ஊர்தவம்
உத்க்ராமதி"

என்னும் அதர்வசி உபநிஷத் வாக்கிய ரீதியாய் 'ஓம்' என்று சொன்ன மாத்திரத்தில்; சொல்பவனை மேல் பதவிக்கு (ப்ரஹ்த்தினிடம்) கொண்டுபோகும். அந்தக் காரணத் தினால் "ஓம்! என்று சொல்லப்படுகிறது. இதற்கு 'ப்ரணவம்' என்றும் பெயருண்டு அப்படிச் சொல்லக் காரணமென்ன வென்றால்.

சுரு॥ "ப்ராணாந் ஸர்வாந் பரமாத்மநி ப்ரணாமயதி இதி
ப்ரணவஹ."

என்னும் அதர்வசிர உபநிஷத் வாக்கிய ரீதியாய் பிராணி களைப் பரமாத்ம ஸ்வரூபத்தில் லயிக்கச் செய்கிற ஸாமர்த் தியமிருப்பதால் ஓம் என்பதற்குப் 'ப்ரணவம்' என்று சொல்லப்படுகிறது.

'அ' என்றால் ஸூரியன். 'உ' என்றால் சந்திரன் 'ம்' என்றால் அக்கினி. 'ஓ' என்பது எல்லாப் பிரகாசமுள்ள வஸ்துக்களின் ஸ்வரூபம்.

'அ' என்றால் ஸ்தூலம் 'உ' என்றால் ஸூக்ஷமம் 'ம' என்றால் காரணம் அதாவது, ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம் (லிங்க சரீரம்) காரண சரீரம் என்று இம்மூன்றையும் ஓம் என்பது குறிப்பிடுகிறது.

'அ' என்றால் ஸ்திரீ, 'உ' என்றால் 'பூமான்' (புருஷன்) 'ம்' என்றால் நபும்ஸகன் 'ஓம்' என்பது லிங்க ஸமஷ்ட்டி.

'அ' என்றால் ரிக் வேதம், 'உ' என்றால் யஜுர் யேதம். 'ம' என்றால் ஸாமவேதம், இந்த மூன்று எழுத்து அடங்கிய 'ஓம்' என்பது ஸர்வ வேதங்களின் ஸாரம் என்று அர்த்தம்.

'அ' என்றால்காயத்ரீசந்தஸ், 'உ' என்றால் திரிஷ்ட்டிச் சந்தஸ், 'ம்' என்றால் ஜகதீச் சந்தஸ். 'ஓம்' என்பது எல்லாச் சந்தஸ்களையும் (விருத்தங்களையும்) குறிக்கிறது.

'அ' என்றால் கார்ஹ பத்யாக்னி, 'உ' என்றால் தக்ஷ்ணாக்னி, 'ம்' என்றால் ஆ ஹவனீ யாக்னி, 'ஓம்' என்பது அக்னி ஹோத்ராதி ஸர்வ கர்மங்களையும் காட்டுகிறது.

'அ' என்றால் ஹரஸ்வம். 'உ' தீர்க்கம். 'ம்' ப்லுதம், 'ஓம்' என்பது மூன்று வித ஸ்வரங்களின் கூட்டம்.

'அ' என்றால்பாதம். 'உ' என்றால் நாபி 'ம்' என்றால் சிரசு. 'ஓம்' என்பது ஸர்வ அவயங்களோடு கூடிய வ்யத்தி (தேஹ) விசித்திரத்தைப் போதிக்கிறது.

'அ' என்றால் புத்தி. 'உ' என்றால் மனம். 'ம்' என்றால் அஹங்காரம். 'ஓம்' என்றால் ஸர்வ அந்தக் கரண ஸமஷ்ட்டி.

'அ' என்றால் ரஜோகுணம். 'உ' என்றால் ஸத்வ குணம். 'ம்' என்றால் தமோ குணம். 'ஓம்' என்பது சகலமான குணபேதங்களுக்கு ஆதாரமாயிருக்கும் மாயையைக் குறிப்பிடுகிறது.

'அ' என்றால் சிவப்பு. 'உ' என்றால் கபில வர்ணம், 'ம்' என்றால் கறுப்பு, 'ஓம்' என்றால் ஸர்வ வர்ணங்களின் பேதம்.

'அ! என்றால் பூரகம், 'உ' என்றால் கும்பகம் 'ம்' என்றால் ரேசகம். 'ஓம்' என்பது ப்ராணாயாமாப்பியாஸ மான யோகத்தைக் காட்டுகிறது.

'அ' என்றால் நாதம், 'உ' என்றால் பிந்து, 'ம்' என்றால் கனை. 'ஓம்' என்றால் நாத, பிந்து களைகளின் ஸமஷ்டீ.

'அ' என்றால் கிரியாசக்தி. 'உ' என்றால்பிந்து, 'ம்' என்றால் ஞானசக்தி. 'ஓம்' என்பது மூன்றுவித சக்தி ஸ்வரூபம். இதையே ப்ராஹமணீ வைஷ்ட்ணவீ ரௌத்ரீ என்று சொல்வதுண்டு.

'அ' என்றால் ப்ரம்மா 'உ' என்றால் விஷ்ணு, 'ம்' என்றால் ருத்திரன், 'ஓம்' என்பது மும்மூர்த்தி ஸ்வரூபம்.

'அ' என்றால் வஸுக்கள், 'உ' என்றால் ருத்தர்கள். 'ம்' என்றால் ஆதித்யர்கள். அதாவது, எல்லாத் தேவகணக் கூட்டங்களும் 'ஓங்' காரமாகவே இருக்கின்றன.

'அ' என்றால் சென்றகாலம் (பூதகாலம்), 'உ' என்றால் நிகழ்காலம் (பவ்யம்), 'ம்' என்றல் எதிர்காலம் (பவிஷ்யத்), 'ஓம்' என்பது மூன்று காலங்களையும் காட்டுகிறது.

'அ' என்றால், ஜாக்கிரதாவஸ்தையில், ஸர்வவெளிப் பிரபஞ்ச வஸ்துக்களையும் அனுபவிக்கிற ஸ்தூலா பீமானி யான விசுவன் என்கிற ஜீவபேதம். 'உ' என்றால் ஸ்வப்னாவஸ்தையில் ஸர்வபாஹ்யவஸ்து வாஸனா மயமான மானஸப் பிரபஞ்ச வஸ்துக்களையனு பவிக்கும் லிங்காபி மானியான் தைஜஸ் (ஜீவன்), 'ம்' என்றால் ஸுஷுப்தியாவஸ்தையில் எவ்விதமான பிரபாஞ்சானுவ

மின்றிப் பரமாத்மாவோடு ஐக்கியமாகும் காரணமாபிமானி யான ப்ராஞ்ஞனென்று ஜீவன் என்று ஓம் என்பது குறிப்பிடுகிறது.

'அ' என்றால் அத்யாத்மத்தில் (பிண்டத்தில்) ஸாக்ஷி ஸ்வரூபனான ஜீவாத்மா. 'உ' என்றால் அந்தராத்மா. 'ம்' என்றால் கூடஸ்தன். அதாவது, ஜாக்கிரஸ்வப்ன ஸுஷுப்தி அவஸ்தைகளில் சிதாபாஸ ஜீவனான பிரதி பிம்ப ஸ்வரூபத்தை 'ஓம்' காட்டிக்கொடுக்கிறது.

'அ' என்றால் அதி தைவத்தில் (அண்டத்தில்) ஜாக்கிர பிரபஞ்சத்திற்கு அதிபதியாகிய ஸ்தூலாபி மானியான விசாட் புருஷன். 'உ' என்றால் லிங்க (ஸூக்ஷ்ம) சரீராபி மானியான ஹிரண்யகர்ப்பன். 'ம்' என்றால்காரண (அஞ்ஞான) சரீராபிமானியான ஈஸ்வரன், அதாவது, (ஓம் என்பது) எல்லாக் கடவுளையும் காட்டுகிறது.

'ஓம்' என்னும் மந்திரமானது ஸர்வ நாமரூப கர்மங்களினால் ஸம்ஸாரமாகிய எல்லாப் பிரபஞ்சத்தையும் சேர்த்துக் காட்டுகிறது.

இப்படிச் சொல்வதற்கு ஆதாரம், ப்ரம்மவித்யா மாண்டுக்கிய மைத்ராயணீ காலாக்நிருதர நாரத பரிவ்ரா ஜக உபநிஷத்துக்களேயாம்.

சுரு॥ "அமாத்ரஸ் சதுர்த்தஹ அவ்யவஹார்யஹ
ப்ரபஞ்சோப ஸமஹ
ஸிவஹ அத்வைதஹ ஏவம் ஓங்கார ஆத்மைவ"
(மாண்டூக்யோகநிஷத்)

'ஓங்' காரத்தின் வ்யக்தமான மூன்று அக்ஷரங்களும் ஸர்வ நஸ்வரமான ஜகத்தை எடுத்துக்காட்டி அவ்யக்த (காணப்படும்) பிரபஞ்சத்திற்கு அதீதமாயும் இந்தப் பிரபஞ்ச

வஸ்துக்களில் அந்தர்யாமியாயும் அதாவது, "ஸூத்ரே மணிகணா இவ" நூல் முத்துச் சரத்திற்குள் இருந்தபோதி லும், வெளியில் காணப்படாமலிருப்பது போலவும், ததிநீல ஸர்பிஹி தயிரில் நெய் போலவும், "திலேஷுதைலம்" எள்ளிற்குள் எண்ணெய் போலவும் இருந்து ஆகாசத்தைப் போய் ஏகமா (ஒன்றா)யும், நிரவ்யல மாயும் என்றால், எந்த அவயவங்களும் இல்லாமல் ஸர்வ வியாபியாயும், மிகவும் ஸூக்ஷ்மமாயும். அஸங்க (ஒன்றிலும் ஒட்டாதவனாயும்) அவிகாரியா (மாறாதவனா)யும் அகண்டமா (துண்டிக்கக் கூடாதவனா)யும். நிர்மல (ராகத்துவேஷாதி அழுக்கில் லாதவ)னாயும் ஸர்வத்திற்கும், ஆதாரமாயும், அப்ரமேய மாயும், ஸர்வ ஸ்வரூபியாயும், ஸர்வ. ஸாக்ஷியாயும் நித்ய சுத்த நித்ய புத்த நித்ய முக்த ஸ்வரூபனாயும். சிதர்காசனாயு மிருக்கும் ஆத்மா, அல்லது ப்ரமத்தை ஓம் என்பது தெரிவிக் கிறது.

சுரு|| "ஸர்வவிக்ந ஹரீ மந்த்ரஹப்ணவஹ ஸர்வ தோஷக்ஷ"
(யோகதத்வோபநிஷத்)

சுரு|| "ஸுசிர்லாப்ய ஸுசிர்வாபியோ ஜபேத் ப்ரணவம்
ஸதா நாஸ லிப்யதி பாபேந பத்மபத்ரமிவாம்பஸ"
(யோகசூடாமண்யுபநிஷத்)

சுரு|| "ஆத்மாநம்அரணியம் க்ருத்வா ப்ரணவம் சோத்த்ரார
ணீம் த்யாந நிர்மதநா ப்யாஸாதீ பாஸம் தஹதி பண்டிதஹ"
(வைகல்யயோபநிஷத்)

சுரு|| "ஸ்வதேஹம் அரணியம் க்ருத்வா ப்ரணவம்சோத்தரார
ணீம் த்யாந நிர்மதநாப்யாஸாத் தேவம்பஸ்யேத் நிகூடவத்."
(ஸ்வேதாஸ்தவதரோபநிஷத்)

என்னும் உபநிஷத் வாக்கியரீதியாய் சுசியாயிருந்தாலும், சுசியாய் இல்லாவிட்டாலும் எல்லாக் காலங்களிலும் முன்

சொல்லிய 'ஓங்' காரத்தை த்யானம் செய்து வருபவர்கள் ஜநந, மரண, ஜரா (கிழத்தனம்) வியாதி, பயம் முதலாகிய துக்க ஸமுத்தரமாகிய ஸம்ஸார அநர்த்த பரம்பரைக்குக் காரணமாயிருக்கும் மனத்தை அநித்யமாகவும், துச்சமாகவும் மித்யா பூத்மாகவும், துக்க மயமாகவுமான தேஹாதிப் பிரபஞ்ச வியாபாரங்களில் ஓடவிடாமல், அவைகளில் சிறிதேனும் சுகம் கிடையாதென்கிற நிச்சய புத்தியினால் அறிந்து ராகத் துவேஷாதி மலங்களை ஒழித்து, 'நான்' என்னுடையது' என்ற துரபிமானத்தை நீக்கி மனத்தைப் பரிசுத்தமாய்ச் செய்து ஸாத்விக விருத்தியினால் சித்த சுத்தியையடைந்து ஞானோத்பத்திக்ஞுகுத் தயாராக்கிஜகாக் கிரியம் செய்து 'உபாதானம் ப்ரபஞ்சஸய ப்ரஹ்மணோந்யந் ந வித்யதே தஸ்மாத் ஸர்வ ப்ரபஞ்சோயம் ப்ரஹ்மை வாஸ்கந விசதரத்'' என்னும் யோக சிகோப நிஷத் வாக்கிய ரீதியாயும் ''ஏகமேவா த்வதியம் ப்ரஹம'' என்கிற சுருதிரிதி யாயும் ஸர்வமும் ப்ரஹ்மமே ப்ரஹ்மத்தைத்தவிர வேறு பதார்த்தம் இல்லை என்று விவேக வைராக்கியங்களை யடைந்து ரஜ்வஞ்ஞானாத் க்ஷணேனை வயதனத் ரஜ்ஜுர்ஹி ஸர்பிணீ பாதி தத்வத் சிதிஸ் ஸாக்ஷரத் விஸ்வா காரேண கேவலா என்ற சுருதிரீதியாய் கயிறு என்று அறியாமுன் எப்படி அந்தக் கயிறானது ஒரே க்ஷணத்தில் ஸர்ப்பமாக மாறித்தோன்றி, மோகத்தையும் சோகத்தையும் தந்து ஸர்வ அநர்த்தத்திற்கும் ஹேதுவாய், பிறகு ஒரு வெளிச்சத்தைக் கொண்டுவந்து பார்த்த மாத்திரத்திற் கயிறுதான் என்று அறிந்த க்ஷணத்திலேயே ஸர்ப்பம் என்று பிராந்தி நாசத்தை யடைந்து கயிறு என்கிற வாஸ்தவ ஞானமுண்டாய் ஸர்வ துக்கமும் நிவர்த்தியாகிறதோ அதுபோல எப்பொழுதும் ஸத்தியமாயிருக்கும் ப்ரம்மமானது அதாவது தனக்குள்ளிருக்

கும் ஆத்மாவானது தன் நிஜ ஸ்வரூபத்தை ப்ரமயினால் மறந்து காலத்தில் புருஷனுக்கு நாம ரூப கர்மத்தோடு கூடிய அநித்ய ஜடதுக்க ரூபமான தேஹேந்திரியாதிப் பிரபஞ்ச மெல்லாம் பஹிர் (வெளி) விஷயங்களாகத் தோன்றி, 'நான்' எனது என்னும் மோஹத்தையும் துரபிமானத்தையும் ஜநா, மரண ஜரா வியாதி பயம் முதலான கொடிய துக்கமயமாகிய சோகத்தையும் குயவன் சக்கிரகம் போல் சுற்றிச் சுற்றி அனுபவிக்கச் செய்து பிறகு, அநேக ஜன்மாதிரங்களில் செய்து வந்த பண்ணிய விசேஷத்தினால் ஒரு அனுபவ ஆத்ம ஞானமுள்ள ஸத்குருவை நாடி அவரது கருணாகடாக்ஷத் தினாலும், ஈஸ்வரார்ப்பணமாய்ச் செய்த வேதவிஹித கர்மானுஷ்ட்டானத்தின் பல ரூபமான ஈஸ்வரானுக்கிரகத் தினாலும் "தத்த்வமஸி" என்ற உபதேசம் பெற்று' அதாவது நீ ஜீவனல்ல ஸம்ஸாரியல்ல தேஹாதி உபாதிகள் உனக் கில்லை. இவைகளெல்லாம் அஞ்ஞானத்தினால் தோன்று கின்றனவே தவிர, வாஸ்தவத்தில் உனக்கில்லை. நீ எப்பொழுதும் நித்ய ஸித்தனான பரபிரம்மமே தவிர வேறல்ல, அஞ்ஞானமென்கிற பிராந்தியினால் நீயே ப்ரம்மமென்பதை மறந்து, ஜீவனென்று நினைத்துத் தேகத்தையே ஆத்மாவென்று தப்பான அபிப்பிராயம் கொண்டு, ஸம்ஸாரி என்று நினைத்துத் திண்டாடுகிறாய் என்று தெரிவித்த மாத்திரத்தில் பூர்வ புண்ணிய ஸம்ஸ்காரத் தினால் பரோக்ஷமாய்ப் வாக்கியார்த்தத்தையறிந்தவுடன் அபரோக்ஷமாய்ப் (பிரத்தியக்ஷமாய்)த்தான் ப்ரம்மம் என்கிற ஞான வெளிச்சத்தினால் தன்னைத்தான் நிஜமாய் லக்ஷியார்த்தத்தையறிந்து, ஸ்வானுபவம் ஸமதிருஷ்ட்டி வந்த க்ஷணத்திலேயே ஸர்வ ப்ராதிக்குக் காரணமான அஞ்ஞானம் நசுக்கப்பெற்று ப்ரம்ம வேத ப்ரஹமைவபவதீ"

என்கிற சுருதிரீதியாவும் ''ப்ரமாகீடவத்'' என்கிற நியாயப் படிக்கும் அதாவது ஒரு குளவியானது. பச்சைப் புழுவைக் கொண்டுவந்துதான் விசித்திரமாய்க் கட்டியிருக்கும் மண் கூண்டில் வைத்து அதை ஒருகொட்டுக் கொட்டிவிட்டுக் கூண்டின் வாயை நன்றாய் அடைத்துவிட்டுப் பிறகு குளவி அந்தக் கூண்டைச் சுற்றிச் சுற்றி ரீங்காரம் செய்து கொண் டிருக்கும், அதன்பிறகு அந்தப்புழுவானது தனக்கு உண்டா யிருக்கும் உபத்திரவத்தினாலும், குளவியின் ரீங்கார சப்தத்தைக் கேட்பதனாலும் சதாகாலமும் அந்தக் குளவியின் ரூபத்தைப் புழுவானது மனத்தில் நினைத்துக் கொண்டிருக்க, அந்தச் சித்தப்பிரம்மையினால் தானும் புழுரூபத்தைவிட்டுப் புழுவிற்கு உபாசனா மூர்த்தியாயிருந்த குளவி ரூபமாய் மாறுவது உலகப் பிரசித்தம், இதையாவரும் பார்த்திருக் கலாம். ஸுக துக்கமுள்ள தேஹேந்திரியாதி உபாதிகளோடு கூடிய தாம் ஜீவர்கள் என்கிற அஞ்ஞானத்தை நாசம் செய்தால் தங்களுடைய நித்யபுத்த நித்திய சுத்த நித்யமுத்த ஸ்வரூப மான நிர்க்குணம் ப்ரம்மத்தில் ஐக்கியமாய் ஜீவன் முக்தர் களானவர்கள் என்பதற்கு அணுவேனும். ஸந்தேஹ மில்லை.



## 134. பராபர வஸ்துவராகிய கடவுளை வேதங்கள் துதி செய்வது

*வேதங்கள் பராபர வஸ்துவாகிய கடவுளை துதி செய்வதை இதனடியில் காசிகாண்ட பிரமாண ரீதியாய்ச் சொல்லுகிறோம்.*

தேற லொழுகக் கனிந்த பசுந்தேகமாய் கனியைப் பிழிந்து செழுஞ்
சாறு நுர்கந்தா லென்ன வண்டகோடி பிழிந்து தனி நுகர்ந்து
நீறு பூசி யென் பணிந்து குலந்திரிந்து நின்றாடு
மீறி லொரு னெவ னுளனாங் கவனே யுள்ளத் திருக்குமால்
அன்ன கடவுள் மாயை முழுதுலக மறைப்ப வவிர சுடராய்த்
தன்னை யுணரா வகை யுறைவோ னுலக முழுதுந் தானாக
மன்னி யிடினும் மனோவாக்குக் காய மிவற்றுக் கெட்டாத
முன்னோ னயன்மாறகவர் நிலமை காண்டல் சொல்ல முடியாதே
சாற்றுமுலக மெவற்றினுக்குந் தானே யாகி யினி தமைத்தல்
போற்றி யளித்தல் துடைத்து .லென்னப் புகலுமரியமுந் தொழிலு
மாற்று மொருவனெவன் சிவனா மவனே மொழிந்த தத்துவமென்
றேற்ற மறைகளொரு நான்கின் முதலாம் வேத மிசைத்ததுவே
புரிதற் கரிய வரும்கத்தால் யோகமதனாற் புவன மெல்லாம்
பரவப் படுவா னியாவ் னுளன் யாமு மவனாற் பரிவோடு
முறை பெற்றுலகி நிலைபெறுது மனைய கண்மூன் றுடையோனே
தெரிதற் கரிய தத்துவமென் றிரண்டாம் வேதஞ் செப்பியதால்
யாவ னுலக மூன்றையுந் திரிவிப் பவன்மற் றெஞ்ஞான்றும்
யாவன் யோக முனிவரா லேத்தல் படுவோ னினிதோங்க
யாவன் றனது பேரொளியா லெவையும் விளக்கு மல்லிறைவன்
மேவ வருந்தத் துவமென்றே மூன்றாம் வேதம் விளம் பியதால்
கண்ணீர் பார மயிர் பொடிப்ப வுள்ள நெகிழக் கசிந்து கசிந்த
துண்ணீர் மையினா லெஞ்ஞான்றுந் தன்னை யுணரு முணர்வுடையோ
ரண்ணா வழுத்தத் தன்னருளாற் றன்னை யறிவிப்பவன் யாரத்
தண்ணார் கடுக்கையொனேன்ன நான்காம் வேதஞ் சாற்றியதால்

இரசமொழுக நல்ல மாங்கனியைப் பிழிந்து அவ்வி ரசத்தைப் புசித்தாற்போல், சகல சராசர புவனங்களை யெல்லாம் ஒருங்கே சேர்த்துப் பிழிந்ததேனைத் தானேவுண்டு விபூதியணிந்து மண்டை ஓடுகளை மாலையாய்ச் சூட்டி சூலம் பிடித்து நின்று நர்த்தனம் செய்பவன் எவனோ அவனே என் இருதய கமல மத்தியில் குடிகொண்டிருக்கிறான்.

மாயையானது உலகம் எல்லாவற்றையும் சூழ்ந்த போதிலும் மேற்சொல்லிய கடவுளைப் பற்றமாட்டாது. இவர் மனோவாக்கு காயங்களுக்கு எட்டாதவர். இக் கடவுளைப் பிரமவிஷ்ணுக்களும் காணுதலரிது.

உலகமெங்கும் நிறைந்து தானே தானாயிருந்து படைத்தல் காத்தல் அழித்தலென்னும் மூன்று தொழிலும் செய்கிறவனெவனோ. அவனே மூன்று சொல்லப் பட்டவன். இப்படிப்பட்டவனை முதல் வேதமாகிய ருக்வேதம் துதி செய்கிறது.

செய்தற்கரிய யாகத்தினால் பூலோகத்திலுள்ள மானவர்களெல்லோரும் எவனைத் துதிக்கிறார்களோ, அப்படிப்பட்டவனால், நாங்களும் வேதமென்னும் பெயர் பெற்று துதி செய்கிறோமென்று இரண்டாம் வேதமாகியா யஜுர் வேதம் துதி செய்கிறது.

எவன் மூன்று லோகங்களையும் நடத்தகிறானோ, எவன் எக்காலத்தும் யோகிகளாலும், முனிவர்களாலும் துதிக்கப்படுகிறானோ அவன் தனது பேரொளியால் உலக மெல்லாவற்றையும் காப்பாற்றுகிறானென்று மூன்றால் வேதமாகிய சாமவேதம் துதி செய்கிறது.

கண்ணீர் வடிய ரோமம் சிலிர்க்க மனமுருகக் கசிந்து கசிந்து மனக்கண்ணினால் எப்பொழுதும் தம்மை உணரும் உணர்வுடையோர் எண்ணித் துதிக்க. தன்னருளால் தன்னை அறிவிப்பவன் எவனோ, அவனே கொன்றை மாலை யணிந்த சிவபெருமானென்று நான்காம் வேதமாகிய அதர்வண வேதம் துதி செய்கிறது.

## 135. நான்கு வேதங்கள் கடந்தபின் என்னயிருக்கிறது

ருக், யஜுர், ஸாம, அதர்வணமென்னும் நான்கு வேதங்களையும் படித்து முடித்து வேதங்களை மூடியபின் நான்கு வேதங்களுக்கு அப்பால் ஒன்றுமில்லாத ஆகாய வடிவமே நிற்கும். இதையே வேதாந்தமென்று சொல்லப் படும். அதாவது வேதங்களுக்கு அப்பால் என்ன வஸ்து இருக்கிறதோ அதுவே வேதாந்தம், அந்த வேதாந்தம் ஒன்றும் சொல்ல நாவெழாமல் நின்றுவிடும். இதுவே நான்கு வேதங்களின் முடிவின் கருத்து, அப்பொழுது அவ்விடத்தில் பகலுமல்லாமல் இரவுமல்லாமல் பகலும் இரவு கூடிப் பிரியும் சமயத்தில் சற்று வெளிச்சமாயும் சற்று இருளாயும் எப்படியிருக்கிறதோ, அதுபோல், நான்கு வேதங்களையும் கடந்து பார்க்கும்போது சற்று வெளிச்சமாயும் சற்று இருளாயும் இருக்கும், அதாவது, பகலுமல்லாமல் இரவு மல்லாமல் இந்த இடத்தில் தோன்றும். என்றால், வேதங் களின் முடிவில் ஒன்றுமில்லாத வஸ்துவே வெளிவெளி யாய் இருக்கிறது. இதற்கு ரிபுகீதை பிரமாணம்.

ஓதியிடும் பிரஞ்ஞான பதமுந் தள்ளி
உரைசெய்த பிரமென்னும் பதமுந் தள்ளி
பேதமிலாப் பரப்பிரமம் நானே யென்று
பிரியமுடன் பழகிய பாவனையுந் தள்ளி
யேதையுமே நினையாமல் வெறுத் திருந்திங்
கிவ்விதமா யிருப்பதெனு நினைவுந் தள்ளி
யீதெனவே யுணரவொணா யிருப்புத் தானே
யென்றுமண் டேகரச நிலைமையாமே.

அந்த இடத்தில் மனம்போய் நின்றபிறகு அம்மனத் திற்கு உள்ளக் குளிர்ச்சியுண்டாய்த் தன்னைத்தான் மறந்து ஒருவித சுகத்தையடைந்து சொக்கியிருக்கும் இவ்வாறு மனம் இறந்து சொக்கியிருப்பதே மௌனமென்றும், சமாதி யென்றும், நிர்வகல்பமென்றும் சொல்லப்படும். இந்த நிர்விகல்ப சமாதியை அடைய வேண்டுமென்று நினைக்கப் பட்ட புருஷன் எந்த மந்திரங்களையும் வாக்கினால் சொல்லாமலும் மனதினால் நினையாமலும் சும்மாயிருக்க வேண்டும். இவ்வாறு சும்மாயிருந்து சுகம் அனுபவிக்க வேண்டியதே யொழிய பூஜைகளாலும் மந்திர ஜபங்களா லும் ஷெ சுகத்தையனுபவிக்கமாட்டார்கள்; முதல், மனம் ஒருவழிப்பட்டு நிற்க, மந்திரங்களை ஜபம் செய்யும்படி முன்னுள்ள பெரியோர்கள் ஏற்படுத்தினார்கள். மனதை ஒருவழிக்குக் கொண்டு வர 'ஸோஹம்' மந்திரத்தை மூச்சுடன் சேர்த்து ஜபம் செய்து வாருங்கள்.



## 136. பரமசிவன் வெண்மை 1 சரீரம் எடுத்துக் காட்டுவதற்குக் காரணம்

நல்ல எண்ணங்களும் அல்லது கெட்ட எண்ணங்களும் இல்லாமல் துலாம்பரமாயிருக்கும் வெண்மைபோல் இருக்க வேண்டுமென்று காட்டுவதற்காகப் பரமசிவன், வெண்மைத் திருமேனி எடுத்துக்காட்டினார். வெண்மைத் திருமேனி எடுத்து மூன்று திருநீறு ரேகைகளைப் பரமசிவன் நெற்றியில் அணிந்து காட்டினார். இதன் கருத்து என்னவென்றால் மண்ணாசைப் பெண்ணாசைப் பொருளாசை என்னும் மூன்று ஆசைகளையும், ஆணவம் மாயை காம்யம் என்னும் மும்மலங்களையும் ஒழிக்க வேண்டுமென்று காட்டுவதற்காகப் பரமசிவன் மூன்று ரேகைகளையுடைய வெண்மை நிறமுள்ள திருநீற்றை நெற்றியில் அணிந்து காட்டிய ரஹஸ்யம் இதுவேயாம். இதன்றியும், பிணத்திற்கு ஸ்நானம் செய்வித்து, மூன்று ரேகையுடைய விபூதியைப் பிணைத்து நெற்றியில் வைத்து சுடலைக்கு அனுப்புகிறார்கள். இதன் கருத்து என்னவென்றால், இந்த ஜன்மத்தில் ஆணவம் மாயை காம்பம் என்கிற மும்மலங்களையும் நீ ஒழிக்கவில்லை. இனி எடுக்கப்போகும் ஜன்மத்திலாகிலும் மும்மலங்களையும் ஒழித்துவிடு என்னும் கருத்துடன் மூன்று ரேகையுடைய விபூதியைப் பிணைத்து நெற்றியில் வைத்து அனுப்புகிறார்கள். அதாவது முதல் விபூதிரேகை ஆணவம் இரண்டாவது ரேகை மாயை, மூன்றாவது ரேகை காம்யம் என்பதேயாம். இந்த மும்மலங்களையும் போக்கடித்துக் கொண்டபின் பரமசிவனது சொரூபத்தில் ஐக்கியமாய் விடுவார்கள். அப்படி ஐக்கியமான பிறகு, அவர்களுக்கு மறுஜநநமில்லை. மானவ ஜனங்களெல்லோரும், உள்ளே கெட்ட எண்ணங்களை வைத்துக் கொண்டு நெற்றிமுதல், பாதம் வரையில் திருநீறு அணிந்தால் என்ன பிரயோஜனம், அநேக ஜன்மங்களாய் உங்களைத் தொடர்ந்து கொண்டே வரும் கெட்ட எண்ணங்களையெல்லாம் நீக்கி விடுவார்களாகில் இந்த ஜன்மத்திலேயே பரமசிவத்தில் ஐக்கியமாய் விடுவீர்கள். இப்படிப்பட்ட கல்மிஷங்களை ஒழித்த புருஷன் திருநீறு அணிய வேண்டியதில்லை. மனத்தில் கல்மிஷங்கள் இருக்கப்பட்டவர்களுக்கே திருநீறு, பூஜைகள் ஜபதபங்கள் முதலானவைகள் வேண்டும்.

## 137. ஞானமடையும் மார்க்கம்

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் கறவின் வாய்ப்பாட்டு

ஓ பரப்பிரம்மமே! யான் ஜநந மரணமென்னும் கடலில் மூழ்கி அஹங்காரமென்னும் முதலை வாயில் அகப்பட்டு, நல்வினை தீவினை என்று சொல்லப்பட்ட இரண்டு அலைகளால் எறிந்து, மாதர்களின் காம மயக்கமென்னும் சுழல் காற்றடிக்க, ஆசை என்னும் காட்டாறு மேலும் மேலும் வந்து மோத, சிறு தோணிக்காரர்போல், ஞானமாகிய மரக்கலத்தையும் கைசோரவிட்டு, மதிமயங்கி, திருட்டுக் கப்பல் போன்ற யமதூதர்கள் வருவாரே என்று அஞ்சி அருவுயாறு போலக் கண்ணீரைப் பெருக்கி நிற்கும் எளியேனை மோக்ஷமாகிய கரையைச் சேரும்படிக்குக் கருணை செய்வாய்.

அதாவது, சம்சாரமானது இருளடைந்து காட்டைப் போன்றது. மிகவும் பயங்கரமானது. இது, வீடு வாசல் தோட்டம் துரவு புத்திர மித்திர களத்திர தனதான்னியாதிகளான முட்களையுடைய புதராயிருக்கிறது. இதில் காமக் குரோத லோப மோஹ மத மாச்சர்யம் என்னும் ஆறு கள்ளர் களும் வியாதி என்னும் புலியும் பாவம் என்னும் கோர ராக்ஷதர்களும் துராசை என்னும் சர்ப்பங்களும், கிழத்தனம் என்னும் பிசாசமும் மிருத்யு என்னும் சகஜ சுபாவமும் இவைகளெல்லாம் சம்சாரம் என்னும் காட்டில் தன்னிஷ்டம் போல் திரிந்து கொண்டிருக்கின்றன. தாரியத்திரியம் இமவத் பர்வதம்போல் சுற்றிலும் கோட்டைக் கட்டியவண்ணம் சுற்றிக் கொண்டிருக்கிறது. ரோஷ சந்தோஷங்கள் பயங்கரமான பனிக்காற்றைப் போன்றது – துக்கமென்னும் காடு மஹாவேகமாய்த் தகித்துக்கொண்டேயிருக்கும் விஷயங்கள் தேன்களாகவும் இந்திரியங்கள் சர்ப்பங்களாகவும்,

காமக்குரோதாதிகள் வேங்கைப் புலிகளாகவும். சங்கல்ப விகல்பங்கள் சிங்கங்களாகவும், எண்ணங்கள் வேட்டை நாய்களாகவும், அஞ்ஞானம் கடாந்தகாரமாய் மூடிக்கொண்டு மாயாந்தகாரத்தில் அகப்பட்டு வழி காணாமல் சம்சாரமென்னும் சமுத்திரத்தில் அதாவது, மனமென்னும் சமுத்திரத்தில் தாரா புத்திராதிகளென்னும் ஜலத்தில் அழுத்தி வேறொன்றும் தோன்றாமல், முதலிருந்து கடைசி வரையில் புண்ணிய பாவங்களுக்குட்பட்டு வண்டியின் சக்கரம்போல் திரிந்து திரிந்து தங்குவதற்காக எங்கும் சரியான இடம் அகப்படாமல் சிரமப்பட்டு, முன் எத்தனை ஜன்மங்கள் எடுத்தேனோ இனி எத்தனை ஜன்மங்கள் எடுப்பேனோ? என்று பயந்து புத்திர மித்திர களத்தீர தனதான்னியாதிகளில் இச்சையில்லாத வனாய்ச் சுவர்க்கம் முதல் சத்தியலோகம் வரையில் அனுபவிக்கும் பிரதான சாதனங்களாகிய நித்திய நைமித்தி யாதி கர்மங்களை எப்பொழுதும் பலாபேக்ஷயில்லாமல் ஈஸ்வரார்ப்பணமாய்ச் செய்து சித்த சுத்தியடையவேண்டும். காமமென்னும் மதகஜம் (மத யானை) ஞானமென்னும் அங்குசம் ஒன்றிற்கே வசமாகுமேயன்றி, மற்றவைகளால் வசப்பட மாட்டாது. இராக்ஷதர்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டுச் சம்பாதித்த அமிர்தத்தைக் காமத்தினால் நிமிஷத்தில் கஷ்டப்படுத்திக் கொண்டார்கள். காமம் என்பது சம்போக மேயல்ல. அந்த வஸ்துவும் வேண்டுமென்று இச்சிப்பதே காமமாகும்.

மோஹப் பிரவாஹங்களில் வீழ்ந்து மூழ்கிக் கொண் டிருக்கும் மனிதர்களுக்கு எவ்விதமாய் ஞானோதயமாகும். சரீரம் யாருடையது? சரீரத்திற்குடியிருப்பவன் யார்? என்பதையும் தெரிந்து ஆத்ம தத்துவத்தை விசாரிக்குமளவில், இந்திரியங்களுக்கெல்லாம் மனதே ராஜன். இந்த ராஜனைப் பிடித்துச் சிறைச்சாலையில் அடைத்தபொழுது அதாவது, பரப்பிரம்ம சொரூபமாயிருக்கும் ஆத்மாவில் மனத்தை ஐக்கியம் செய்தபொழுது, சங்கல்பமென்னும் சேவர்களெல் லோரும் ஓடிப்போய் விடுவார்கள். விசாலமாகிய ஆகாயத்தை

மேகங்கள் மூடிக்கொண்டு காணப்படாமற் செய்வதுபோல் தூல சூட்சும தேகத்தில் மத்தியில் அத்விதியமான ஸத்வஸ்து நிறைந்திருக்கிறது. பிரம்மாண்டத்திலுள்ள பதார்த்தம் பிண்டாண்டத்தில் உண்டு. அது மாயையால் மூடப் பட்டிருப்பதனால், காணப்படாமலிருக்கிறது. அந்த மாயையின் மகிமையினாலேயே 'நான்' என்னுடையது. என்னும் பிராந்திகள் உண்டாயிருக்கின்றன. விவேகத்தினால் தத்துவங்களை விசாரித்தபொழுது பிராந்தியும், அஞ்ஞானமென்னும் இருளும் பூர்வ ஜன்மங்களின் சஞ்சித கர்மங்களும் சூரியனைக் கண்ட இருளைப் போலும், பனியைப்போலும் தனக்குத் தாமாகவே ஒழித்து, நிர்மலத்வமடையும். துவைத்தை விட்டு அத்வைதத்தைப் பார்க்குமளவில், சர்வத்திற்கும், எந்தப் பதார்த்தம் ஆதாரமாயிருக்கிறதோ, அந்தப் பதார்த்துமே உனக்கும் எனக்கும் காரணமாயிருக்கிறது. அந்தப் பதார்த்தம் கண்களில்லாமே சர்வமும் பார்த்துக் கொண்டும், செவிகளில்லாமலே சர்வமும் கேட்டுக்கொண்டும். கைகளில்லாமலே சகல காரியங்களைச் செய்துக் கொண்டும், கால்களில்லாமலே எங்கும் சஞ்சரித்துக் கொண்டும், வாயில்லாமலே சங்கல்பித்துக் கொண்டும் எந்த அவபவங்களும் எந்த ரூபங்களும் இல்லாமல் சர்வமும் தானாய், ஸச்சிதானந்த சொரூபனாய், ஆதிமத்யாந்தரஹிதனாய். அப்ரமேயனாய் அபரிச்னின்னனாய். வேதங்களினாலும் ஆன்றோர்களினாலும் நிரூபிக்கக் கூடாமல் சர்வசக்தனய் தான் தானாகவே பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். அப்படிப்பட்ட பரமாத்மா தன் மகத்துவத்தினால் எதை நடத்தவேண்டுமானாலும் அதை நடத்துவார்.

இத்தகைய பரமாத்மாவை, எந்த மஹான்கள், தனது புத்திர களத்திராதிகளைவிட்டுச் சதாகாலமும் தியானிக்கின்றார்களோ, அப்பேர்ப்பட்டவர்களுக்கு அந்தப் பரமாத்மா ஊழியம் செய்து கொண்டிருப்பார். இப்படிப்பட்ட பரமாத்மா எவ்விடம் நிவசிக்கின்றாரென்றால், நமது தேக மத்தியில் புத்தி என்னும் குகையில் அந்தர்யாமியாய்ச் சாக்ஷி

சொரூபனாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். இந்தப் பரமாத்மா, தேவமானவகிருமீ கீடகாதி சகல ஜந்துகளிலும் இருந்துக்கொண்டு, சகல காரியங்களையும் செய்வதைப் பார்த்துக்கொண்டு சாக்ஷியாயிருக்கின்றார். இவ்வாறாக இருந்து மரண காலத்தில் அவனவன் செய்யும் புண்ணிய பாவங்களுக்குத் தக்க ஜனனத்தைத் தருகின்றார். ஆதலால் இதையறிந்து லோபத்துவமில்லாமல் ஸத்காரியங்களில், தனத்தை உபயோகப்படுத்த வேண்டும். ஸத்காரியங்களில் தனத்தை உபயோகப்படுத்தாவிட்டால், மறுஜன்மத்தில் தரித்திரனாய்ப் பிறப்பான். பிறகு தாரித்திரிய தோஷத்தினால் யுக்தா அயுக்த பரீஞானமில்லாமல் பாவகாரியங்களில் பிரவேசிப்பான். பாவகாரியத்தினால் நரகம் சம்பவிக்கும்.

''பரோகாரரார்த்தம் மிதம் சரீரம்'' என்னும் வாக்கியத்தைக் கிரஹித்துத் தன்னை ஆசிரயித்தவர்களுக்கும் ஏழைகளுக்கும் தன் சக்தியானுசாரம் வஞ்சனையில்லாமல் எவ்விதத்திலாயினும் உபகாரம் செய்யவேண்டும், விருக்ஷங்களும் தம்மை ஆசிரயித்தவர்களுக்கு நிழலையும் தம்மால் உண்டாகிய கனிவர்க்கங்களையும் தந்து உபசரித்துக் கொண்டிருக்கும். மேகங்கள், உலகத்திற்கு வேண்டிய ஜலத்தைத் தந்து ஆதரிக்கின்றன. ஜடபதார்த்தங்களுக்கே இவ்வளவு பரோபகார்த்தமுண்டாயிருக்க, விவேகமுடைய மனிதர்களுக்கு எவ்வளவு இருக்கவேண்டும். இஃதன்றி தனக்கு அபகாரம் செய்யப்பட்ட குரூர [illegible] யும், [illegible] வனுக்கும் தீங்கு செய்யாமல் எப்பொழு[illegible] முடைய செய்யவேண்டியதே யொழிய கெடுதி [illegible] தும் உபகாரம் மேனும் எண்ணலாகாது, எவர்கள் எ[illegible] செய்யக் கொஞ்ச அதில் தனக்குப் பிரீயமில்லை [illegible] தச் செய்தபோதிலும் அக்காரியங்களைத்தான் அ[illegible]யர்களுக்குச் என்று தோன்றினால் ஜாக்கிரதையாய்ப் பிரவர்த்தி[illegible]ப்பது பரம தர்மமாகும். செய்யாமல்

''அஹிம்ஸாப் பரமோதஹ'' என்றிருப்பதனால் எந்த ஜந்துக்களையும் இம்சை செய்யலாகாது இம்சையென்றால்

மேகங்கள் மூடிக்கொண்டு காணப்படாமற் செய்வதுபோல் தூல சூட்சும தேகத்தில் மத்தியில் அத்விதியமான ஸத்வஸ்து நிறைந்திருக்கிறது. பிரம்மாண்டத்திலுள்ள பதார்த்தம் பிண்டான் டத்தில் உண்டு. அது மாயையால் மூடப் பட்டிருப்பதனால், காணப்படாமலிருக்கிறது. அந்த மாயையின் மகிமை யினாலேயே 'நான்' என்னுடையது. என்னும் பிராந்திகள் உண்டாயிருக்கின்றன. விவேகத்தினால் தத்துவங்களை விசாரித்தபொழுது பிராந்தியும், அஞ்ஞானமென்னும் இருளும் பூர்வ ஜன்மங்களின் சஞ்சித கர்மங்களும் சூரியனைக் கண்ட இருளைப் போலும், பனியைப்போலும் தனக்குத் தாமாகவே ஒழித்து, நிர்மலத்வமடையும். துவைத்தை விட்டு அத்வைதத்தைப் பார்க்குமளவில், சர்வத்திற்கும், எந்தப் பதார்த்தம் ஆதாரமாயிருக்கிறதோ, அந்தப் பதார்த் துமே உனக்கும் எனக்கும் காரணமாயிருக்கிறது. அந்தப் பதார்த்தம் கண்களில்லாமே சர்வமும் பார்த்துக் கொண்டும், செவிகளில்லாமலே சர்வமும் கேட்டுக்கொண்டும். கைகளில்லாமலே சகல காரியங்களைச் செய்துக் கொண்டும், கால்களில்லாமலே எங்கும் சஞ்சரித்துக் கொண்டும், வாயில்லாமலே சங்கல்பித்துக் கொண்டும் எந்த அவபவங் களும் எந்த ரூபங்களும் இல்லாமல் சர்வமும் தானாய், ஸச்சிதானந்த சொரூபனாய், ஆதிமத்யாந்தரஹிதனாய். அப்ரமேயனாய் அபரிச்னின்னனாய். வேதங்களினாலும் ஆன்றோர்களினாலும் நிரூபிக்கக் கூடாமல் சர்வசக்தனய் தான் தானாகவே பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். அப்படிப்பட்ட பரமாத்மா தன் மகத்துவத்தினால் எதை நடத்தவேண்டுமானாலும் அதை நடத்துவார்.

இத்தகைய பரமாத்மாவை, எந்த மஹான்கள், தனது புத்திர களத்திராதிகளைவிட்டுச் சதாகாலமும் தியானிக் கின்றார்களோ, அப்பேர்ப்பட்டவர்களுக்கு அந்தப் பரமாத்மா ஊழியம் செய்து கொண்டிருப்பார். இப்படிப்பட்ட பரமாத்மா எவ்விடம் நிவசிக்கின்றாரென்றால், நமது தேக மத்தியில் புத்தி என்னும் குகையில் அந்தர்யாமியாய்ச் சாக்ஷி

சொரூபனாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். இந்தப் பரமாத்மா, தேவமானவகிருமீ கீடகாதி சகல ஜந்துகளிலும் இருந்துக்கொண்டு, சகல காரியங்களையும் செய்வதைப் பார்த்துக்கொண்டு சாக்ஷியாயிருக்கின்றார். இவ்வாறாக இருந்து மரண காலத்தில் அவனவன் செய்யும் புண்ணிய பாவங்களுக்குத் தக்க ஜனனத்தைத் தருகின்றார். ஆதலால் இதையறிந்து லோபத்துவமில்லாமல் ஸத்காரியங்களில், தனத்தை உபயோகப்படுத்த வேண்டும். ஸத்காரியங்களில் தனத்தை உபயோகப்படுத்தாவிட்டால், மறுஜன்மத்தில் தரித்திரனாய்ப் பிறப்பான். பிறகு தாரித்திரிய தோஷத்தினால் யுக்தா அயுக்த பரீஞானமில்லாமல் பாவகாரியங்களில் பிரவேசிப்பான். பாவகாரியத்தினால் நரகம் சம்பவிக்கும்.

''பரோகாரார்த்தம் மிதம் சரீரம்'' என்னும் வாக்கியத்தைக் கிரஹித்துத் தன்னை ஆசிரயித்தவர்களுக்கும் ஏழைகளுக்கும் தன் சக்தியானுசாரம் வஞ்சனையில்லாமல் எவ்விதத்திலாயினும் உபகாரம் செய்யவேண்டும், விருக்ஷங்களும் தம்மை ஆசிரயித்தவர்களுக்கு நிழலையும் தம்மால் உண்டாகிய கனிவர்க்கங்களையும் தந்து உபகரித்துக் கொண்டிருக்கும். மேகங்கள், உலகத்திற்கு வேண்டிய ஜலத்தைத் தந்து ஆதரிக்கின்றன. ஜடபதார்த்தங்களுக்கே இவ்வளவு பரோபகார்த்தமுண்டாயிருக்க, விவேகமுடைய மனிதர்களுக்கு எவ்வளவு இருக்கவேண்டும். இஃதன்றியும், தனக்கு அபகாரம் செய்யப்பட்ட குரூர [illegible]முடையவனுக்கும் தீங்கு செய்யாமல் எப்பொழுதும் உபகாரம் செய்யவேண்டியதே யொழிய கெடுதி செய்யக் கொஞ்சமேனும் எண்ணலாகாது, எவர்கள் எ[illegible]தச் செய்தபோதிலும் அதில் தனக்குப் பிரீயமில்லை என்று தோன்றினால் அக்காரியங்களைத்தான் அந்நியர்களுக்குச் செய்யாமல் ஜாக்கிரதையாய்ப் பிரவர்த்திப்பது பரம தர்மமாகும்.

''அஹிம்ஸாப் பரமோ தஹ'' என்றிருப்பதனால் எந்த ஜந்துக்களையும் இம்சை செய்யலாகாது இம்சையென்றால்

ஜந்துக்களைக் கொல்லுவதேயல்ல? இதரர்களின் மனத்தை நோகப் பேசுவதும் இம்சையேயாம். விபசாரமென்றால், புருஷனை வஞ்சித்துப் பரபுருஷனுடன் சேருவதல்ல. பரபுருஷர்களை மனத்தில் நினைப்பதும் விபசாரமே.

பூஜை என்றால் சும்மா வாயினால் துதிசெய்வதல்ல, சித்த சுத்தியுடன் செய்யும் பக்தியே பூஜை. பிரேமை, என்றால் இருவரும் ஆலிங்கனம் செய்து கொள்வதல்ல மனத்தில் எப்பொழுதும் மறவாமலிருப்பதே பிரேமை ஆராதனை என்றால் பஞ்சபக்ஷண பாயசங்களுடன் சந்தோஷப்படுத்துவதல்ல. திரிகரண (மனம் வாக்கு காயம்) சுத்தியுடன் பிரியமாய்ச் சந்தோஷப்படுத்துவதே ஆராதனை ஸ்நானமென்றால், கங்கா யமுநா காவேரி நதிகளில் ஸ்நானம் செய்வதல்ல. மனத்தில்எந்தக் கல்மிஷங்களும் இல்லாமலிருப்பதே ஸ்நாநம். சுசி என்றால் ஈரவஸ்திரங்களைக் கட்டிக் கொண்டு மடியாயிருப்பதல்ல. மந்தபுத்தியை விட்டுப் பரிசுத்த சித்தத்துடனிருப்பதே சுசி. காம்பீரியம் என்றால் கூட கோபுரம் மாடமாளிகைகள் கட்டிப் பூஷணங்களைத் தரித்துக் கொண்டிருப்பதல்ல. சத்தியம் தவறாமல் நடப்பதே காம்பீர்யம்'' மஹாசூரன் என்றால் யுத்தத்தில் ஜயமடையவனல்ல. தனது இந்திரியங்களை ஜபித்தவனே மஹாசூரன் தாதா என்றால் தானம் செய்யப்பட்டவனல்ல. பூதத்யை பச்சாத்தாபம் உடையவனே தாதா வக்தன் (வக்கீல்) என்றால் பாரிஸ்டர் வக்கீலல்ல. சத்தியமாக வார்த்தையாடுபவனே வக்த்தா (வக்கீல்) நிஷ்ட்டை என்றால் ஆஸனத்தின்மீது உட்கார்ந்து கண்களை மூடிதான் உபதேசம் பெற்ற மந்திரங்களை மனதினால் ஆஜபாவாய் உச்சரித்துக் கொண்டிருப்பதல்ல. சங்கல்ப விகல்பங்களில்லாமல் மௌன முத்திரையைத் தரிப்பதே நிஷ்ட்டை பாண்டித்யம் என்றால் வேத சாஸ்திரங்களைக் கற்று வீண் விவாதங்களில் பிரவேசிப்பதல்ல. பிரம்ம ஞானமடைந்த பிரம்மானந்தத்தை அனுபவிப்பதே பாண்டித்யம். மேற்சொல்லிய விஷயங்களையெல்லாம் நிவர்த்தி செய்து ஆத்மவத் ஸர்வபூதா

நியஹ பஸயதிஸ பஸ்யதி'' என்றும் வாக்கியரிதியாய் சகல பூதங்களையும் தன்னைப்போல் நினைத்துச் சஞ்சரிக்கும் புருஷர்களுக்குச் சித்த சுத்தியுண்டாகும். சித்தசுத்தி அடைந்த புருஷர்கள் பூமியானது சகல ஜந்துக்களுக்கும் ஆதாரமாய் இருந்து அவர்களின் காரியத்தையெல்லாம் சகித்துக் கொண்டிருப்பது போல் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு இருக்க வேண்டும். சகிக்காவிடில் எத்தனைக் குணங்களிலிருந்தபோதிலும் பிரயோஜனப்படமாட்டா. பர்வதங்கள் சகல ஜீவகோடிகளுக்கும் ஆதாரமாயிருப்பது போல். இதரர்கள் விஷயமாய் எப்பொழுதும் உபகாரமே செய்ய வேண்டும். மூலச்சேதம் செய்த போதிலும் அதாவது, கிளைகளை வெட்டிய போதிலும் பட்டைகளைச் செதுக்கிய போதிலும்; விருக்ஷங்கள் பலருக்கும் உபயோகப்படுவது போல் தனக்கு ஆபத்து வந்தபோதிலும் நிச்சய சித்தத்துடன் பின் வாங்காமலிருக்க வேண்டும் குளத்தில் ஸ்நானம் செய்த போதிலும் குளத்து ஜலம் பரிசுத்தமாயிருப்பதுபோல் நல்ல நடவடிக்கையினால் எப்பொழுதும் சுசிரீபவனாயிருக்க வேண்டும். அக்கினி எப்பொழுதும் அந்தகாரமாயிராமல் தேஜோ மயமாயிருப்பதுபோல், புருஷன் அஞ்ஞானத்தினால் மூடப்படாமல்ஞான நிஷ்ட்டனாயிருக்க வேண்டும். சமுத்துக்களின் சேர்க்கையினால் அக்கினி பிரகாசிப்பது போல். சுத்தமான தபஸ்ஸினால் பிரகாசித்துக்கொண் டிருக்கவேண்டும். அக்கினி தன் பிரயத்தினமில்லாமல் தனக்குக் கிடைத்த வஸ்துக்களை நிறுத்தாமல் தக்ஷணமே பஸ்மம் செய்வதுபோல், எப்பொழுது எந்தப் பதார்த்தம் கிடைக்கிறதோ அதை ருசி பார்க்காமல் புசிக்கவேண்டும். மனத்தை அந்தப் பதார்த்தத்தில் செலுத்தாமல் புசித்தால் ருசியை அறியமாட்டாது. இதை அப்பியாசம் செய்து தெரிந்துகொள்ள வேண்டும். வாயு மந்த வேதங்கள் சுகத்த துர்க்கந்தங்கள் சீதளம் உஷ்ணம் முதலாகிய குணங்களுடன் கூடி வீசியபோதிலும், அந்த குணங்களெல்லாம் அதன் அதன் சேர்க்கையினால் உண்டானதேயொழிய. வாயுவினால்

உண்டானதல்ல. அதுபோல், தேகத்தில் வசிக்கும் ஆத்மா விற்குக் கர்மவசத்தினால் சம்பவித்த சுக துக்கங்கள் முதலாகிய விகாரங்களெல்லாம் அஞ்ஞான வசத்தினால் உண்டா யிற்றேயொழிய ஸகஜமாய் வந்ததல்லவென்று அறிய வேண்டும்.

பிராண வாயுவானது எவ்வித ருசிகரமாகிய பதார்த்தங் களையும் நினையாமல் சாமான்னியமாகிய அன்னவுதகங் (ஜலங்)களினால் திருப்பதியடைகிறதோ, அதுபோல் எப்பொழுதும் ருசிகரமாகிய பதார்த்தங்களைத் தேடாமல் தேஹம் நிற்பதற்கு மாத்திரம் வேண்டிய சாதாரண ஆஹாரத் தைப் புசிக்கவேண்டும்.

ஆகாயம் சராசர ரூபமாகிய சமஸ்த பதார்த்தங்களிலும் நிறைந்தருந்தபோதிலும் எதிலும் அந்த ஆகாயம் ஒட்டாமல் விலக்ஷணமாயிருப்பதுபோலும், பரமாத்மா சகல படாமல் வஸ்துக்களினாலும் உள்ளும் புறமும் நிறைந்திருந்த போதிலும் விலக்ஷணமாயிருக்கிறதென்றும், ஆகாயத்தில் தோன்றும் மேகங்கள் மின்னல் முதலானவைகளை யெல்லாம் ஆகாயம் பற்றாமலிருப்பது போல் பரமாத்மா கால வசத்தினால் தோன்றும் உற்பத்தி ஸ்திதி நாசங்கள் ஆகிய எவற்றையும் அடையாமல் சச்சிதானந்த மயமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறதென்று அறிய வேண்டும்.

விருத்தியக்ஷங்கள். சந்திர கலைக்கேயொழிய சந்திரனுக்கில்லாமலிருப்பதுபோல் ஜநநமரணாதி விகாரங்கள் சரீரத்திற்கேயொழிய ஆத்மாவிற்கல்லவென்று அறிய வேண்டும். சூரியன் தன் கிரணங்களினால் ஜலத்தை இழுத்தபோதிலும் அதைத்தான் உபயோகப்படுத்திக் கொள் ளாமல் மறுபடியும் பூமியில்விட்டு விடுவதுபோல் இதரர்கள் நமக்குக் கொடுத்த பதார்த்தத்தைத் தம் வயிற்றிற்கே உபயோகப்படுத்தாமல் தம்மை ஆசிரயித்தவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கவேண்டும். காதினால் கேட்ட சப்தாதி

விஷயங்களைக் கிரஹித்தபோதிலும் மனத்தில் நிறுத்தாமல் அவைகளை உடனே நிவர்த்தி செய்யவேண்டும். சிறு பிள்ளைகள். மானாபிமானம் சத்துரு மித்துருக்கள். சுகதுக் கங்கள் முதலானவைகளையெல்லாம் கவனியாமல் தனது ஆட்டத்தில் ஆசையுடையவர்களால் ஆனந்திப்பதுபோல் ஞானவசத்தினால் மானாபிமானங்களெல்லாம் சரீரத்திற்கே யொழிய ஆத்மா விற்கல்லவென்று தெரிந்து புத்திர களத்திராதி விஷய சிந்தையில்லாமல் திட* வைராக்கியத் தினாலும் அப்பியாச யோகத்தினாலும் மனத்தைச் சிதற விடாமல், ஆடாமல் ஓய்ந்துவிட்ட பம்பரம்போல் நிறுத்தி எந்த நினைப்புகளும் இல்லாமல் பரமாத்மா சொரூபத் திலேயே திருஷ்ட்டியை நிறுத்தவேண்டும், அஃது எப்படி யெனில்,

"ஆடாம லோய்ந்திட்ட பம்பரம் போல்விசை
யடங்கிமனம் வீழ நேரே
யறியாமை யாகின்ற விருளகல விருளொளிய
மல்லா திருந்த வெளிபோற்

கோடா தெனைக்கண் டெனக்குணிறை சாந்தவெளி
கூடி யின்பா தீதமுங்
கூடினே னோசரியை கிரியையின் முயன்றுநெறி
கூடினே ளேவல் லனியா

வீடாக வேயாறு வீட்டினி னிரம்பியே
யிலகிவளர்ப்பிராண னென்னு
மிருநிதி யினைக் கூடியோகபர னாகாம
வேழைக் குடும்பனாகித்

---

★ வைராக்கியமென்றால் இந்திரியங்களை விஷயங்களிற் போக விடாமல் நிறுத்துவது.

ஃ அப்பியாச யோமென்றால், மனத்தைப் பரமாத்மாவில் சேர்ப்ப தற்குப் பழக்கப்படுத்தல்.

தேடர் தழிக்கவொரு மதிவந்த தென்கொலோ
தேடரிய சத்தாகி யென்
சித்வமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேஜோ மயானந் தமே''

சுரு॥ ''ப்ரணவோ தநுஹு ஸரோஹயாதமா ப்ரஹமதல்ல க்ஷயமுச்யதே அப்ரமத்தேக வேத்தவ்யம் ஸரவத்தம யோபமேத்''

என்னும் த்யானபுந்தூபநிஷத் வாக்கிய ரீதியாய், பிரணவமே தநுசு. ஜீவனே பானம், லக்ஷியமே பரப்பிரம்ம மென்று சொல்லப்படும். ஓர் வேடன் ஓர் குறியில் லஷியம் வைத்துப் பாணத்தை விட்டபொழுது அந்தப் பாணம் குறி தப்பாமல் அந்த லக்ஷியத்திலேயே சேர்ந்து குத்திக் கொண்டு அதிலேயே ஒட்டி இருப்பதுபோல், பிரம்மஞானியும் மன மென்னும் லக்ஷியத்தில் குறி வைத்துப் பிரயோகித்தபோது இந்த ஜீவனென்னும் பாணமானது அந்த லக்ஷியமென்னும் பிரம்மத்திற் போய்ச்சேர்ந்து அதில் லயித்து அந்த ரூபமேயாகும்.

நிரம்ப அஞ்ஞானத்தில் மூழ்கியிருக்கப்பட்டவர் களுக்குத் ''தேஹமே தானென்றும்'', ''காணப்படும் பிரபஞ்சமெல்லாம் நித்தியமென்றும்'' தோன்றுவது சகஜமேயாதலால் அப்படிப்பட்டவர்கள் அவசியமாய் மனோ சுத்திக்காகச் சத்கர்மங்களைச் செய்யவேண்டும். அவர்களைவிட அதிக விவேகமுடையவர்களுக்கு ''ஜீவான தானென்றும்'' 'திருஸ்ய (காணப்படும்) பிரபஞ்சமெல்லாம் காலக்கிரகத்தில் வேறு ரூபமாய் மாறுவதனால் அநித்ய மென்றும் தோன்றுவது சுவாபமாதலால், அப்படிப்பட்ட வர்கள் முக்கியமாய்ச் சித்தி சுத்திக்காகச் சத்துவகுண விசிஷ்ட்டார்களாய்ப் பக்திமார்க்கப் பிரதிஷிட்டர்களாய் பிரவர்த்திக்க வேண்டும்.

சுத்த ஞானஸம்பன்னர்களாய் இருக்கப்பட்டவர் களுக்கு ஸ்திர விசாரணையில் பிரம்மமே தானென்றும,

திருஸ்ய பிரபஞ்சமெல்லாம் மித்தையென்றும் தோன்றுவது சகஜமாதலால், அப்படிப்பட்டவர்கள் நிச்சயமாய் பரப்பிரம் மத்தில்கலந்து பரவசமடைந்து மௌன நிஷ்ட்டையை அலம்பித்த, 'நீ', 'நான்' என்னும் திவைதபேதம் நீங்கித் துரீய திருஷ்ட்டியுண்டாய் நிர்மலத்துவம் அடைந்திருக்க வேண்டும்.

தன்னைத்தான் அறிந்தவர்கள், நிர்மலமாகிய ஞான சம்பந்தத்தால் நிராகார பரப்பிரம்மத்தைத் தெரிந்து கொண்டு, கேவல தியானரூபமாய் ஐந்தாவது பதவியாகிய கைவல்ய பதவியில் இச்சையுண்டாய், ஜீவன் முக்தர்களாய் இருந்து கடைசியில் விதேஹ முக்தியையடைவார்கள்.

ஆதலால், இந்தக் கிரந்தத்தை முதலிலிருந்து கடைசி வரையில் பலகால் வாசித்து, ஆங்காங்கு சொல்லியிருக்கும் உபநிஷத் வாக்கியங்களின் அபிப்பிராயத்தை நன்குணர்ந்த, கேவல பிரம்மாத்வைத் ஞடானுகாந்நத பிராப்தர்களாக வேண்டுமென்பதே இந்நூலின் கருத்து.

மேற்படி ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யத்தி லுள்ள ரஹஸ்யங்களையெல்லாம், சிறு பிள்ளைகள் முதல், யோகிகள் ஞானிகள் வரையில் அறிந்த விஷயமேயொழிய அறியாத விஷயமல்ல. ஆனால் இவ்விஷயங்களை அவர்கள் ஆழ்ந்து பாராத குற்றத்தினால் உலகத்தின் மாயா ரஹஸ்யார்த் தங்களை அறிந்து கொள்ளாமலிருக்கிறார்கள். ஜனங்கள் ஒவ்வொரு குடும்பத்திலும் பிறந்து சுக துக்கங்க்ளை அனுபவித்து, குடும்ப வியவகாரங்களிலேயே சதாகாலமும் உழன்று அனேக யோசனைகளுடன் இருந்து கடைசியாய் ஒருநாள், இத்தேஹத்தில் மூக்கு ரந்திரங்களின் வழியாய் ஆடிக்கொண்டிருக்கும் மூச்சானது அறுபட்டு ஓடிவிடப் போகிறது.

நாம் எதற்காக ஜநநமெடுத்தோம். ஜநநமெடுத்ததற்கு மறுஜன்மத்திற்காக வேண்டிய என்ன சாதனைகளைச் செய்ய வேண்டும் என்று சற்று ஆழ்ந்து யோசிப்பாராயின், அவர்கள் பூர்வ ஜன்மங்களில்செய்த புண்ணிய விசேஷத்தால் நல்வழியில் செல்ல அவர்களின் மனத்திற்கு ஓர் இச்சை உண்டாக்கும். காம்ய புண்ணியத்தினால் அதாவது இன்னது வேண்டுமென்று செய்த புண்ணியத்தினால் மறுஜன்மத்தில் தனவந்தனாய் போய் பிறப்பால் அப்படிப்பட்டவனுக்கு ஈசுவர பக்தியினால் பிரீதியில்லாமல், எப்பொழுதும் தனம் சம்பாதிக்கும் விஷயங்களிலேயே அவன் மனம் பற்றி இழுக்கும் இவ்வாறான தநாசையுடைய புருஷனது மனம் ஈஸ்வர பக்தியில் நாடமாட்டா. ஏனென்றால் இவ்வீஸ்வர பக்தி ஜன்மாந்தரங்கள் தோறும். பஜனைகளாலும் தேவ லாய தரிசனங்களினாலும் வேதாந்த விசாரணையினாலும் மஹாதீர்த்தங்களினாலும் வேதாந்த விசாரணையினாலும் மஹா தீர்த்தங்களின் ஸ்நானங்களினாலும் சத்தியம் தவறா மல் இருப்பதனாலும் இவ்வாறாக ஒவ்வொரு ஜன்மத்திலும் சிறுகச் சிறுக ஜன்மாந்திரங்கள் தோறும் அபிவிருத்தியாய் வந்துகொண்டே இருக்கும். இவ்வாறு கஷ்டப்பட்டு மர்னிட சரீரம் எடுத்தும், பெரியார்களையும் அடியார் களையும் ஞானிகளையும் தம் வாக்கிற்கு வந்தவாறு தூஷித்து அவர்களின் பாவ கர்மங்களையெல்லாம் பங்கிட்டுக் கொண்டு மறுபடியும் தாழ்ந்த சரீரமெடுத்து, வண்டியின் சக்கரம் கீழ்மேலாய்ச் சுழல்வதுபோல் அவர்களுக்குத் தாழ்வான ஜன்மங்கள் வந்துகொண்டும் மறுபடியும் போய்க்கொண்டுமாய் இருக்கும். இப்படிப்பட்ட மஹா ரஹஸ்யங்களையெல்லாம் சிலர் தெரிந்து கொள்ளாமல் ஜன்மாந்திரங்கள்தோறும், பாவ கர்மங்களென்னும் மூட்டை யைத் தலைமேல் சுமந்து கடைசியில் தாழ்ந்த சரீரமெடுத்து அந்தந்த கர்மவிதியின்படி அச்சரீரங்களுக்கு உயர்வு

தாழ்வான வியாதிகள் உண்டாய். அவ்வியாதிகளினால் மனம் நொந்து எத்தனைநாள் அக்கர்ம பலன் நோயை அனுபவிக்க வேண்டுமோ, அந்நாள் வரையில் அந்நோயை அனுபவித்துக் கடைசியாய்ப் பிராணனை விட்டுவிடுவார்கள். ஆதலால் எப்பொழுதும் பாவகார்யங்களைச் செய்யாமல், புண்ணிய கார்யங்களையே செய்துவர வேண்டும். புண்ணிய கார்யங்களைச் செய்து வருவதனால், மறு ஜன்மத்திற்கு மிகவும் பிரயோஜனமுண்டு. புண்ணிய கார்யங்களைச் செய்வதுமேயல்லாமல் விளையாட்டிற்கும் பொய் சொல்லாமல் இருக்கவேண்டும். சத்தியமாய் இருப்பதுமே யல்லால் ஐயோ பாவம் என்கிற கனிகரமும் ஜீவகாருண்யமும். பிறருக்கு ஏதாகிலும் துன்பம் நேரிட்டால் தமக்கு நேரிட்டது போல் எண்ணி, அதற்காக அவர்களுக்கு வேண்டிய சகாயம் செய்ய வேண்டும். இவ்வாறாக இருக்க வேண்டுமென்று இந்நூலில் எழுதிவிட்டபோதிலும் இப்படிப்பட்ட குணங்கள் உண்டாவதற்கும் பூர்வ ஜன்ம புண்ணியம் இருக்கவேண்டும். பூர்வ ஜன்ம புண்ணியம் இருக்கும் பக்ஷத்தில் மேற் சொல்லிய குணங்களெல்லாம் தமக்குத் தாமாகவே பூர்வ ஜன்ம வாசனையினால் உண்டாகும், இவைகளை யெல்லாம் ஜனங்கள் தெரிந்துகொள்வதற்காக இந்நூலில் எழுதினோம்.

நில்லடா சகலகலை ஞானஞ் சொன்னேன்
நீங்காத மும்மூல நிலையுஞ் சொன்னேன்
மல்லடா ஆதிவஸ்தை யறியச் சொன்னேன்
மடங்காத சித்தனென்று ஆடச் சொன்னேன்
வல்லடா யோகத்தின் வகையுஞ் சொன்னேன்
வஸ்தான மும்மூலங் கொள்ளச் சொன்னேன்
அல்லடா அதையெடுத்துத் தானு முண்டு
அடங்காத ஆத்துமாவி லடங்கி நில்லே.

சுரு॥ ''ஆப்யாயந்து மமாங்காதி வாக் ப்ராணஸ் சக்ஷுஹு ஸ்ரோத்ரமதோ பல மிந்த்ரியாணி ஸர்வாணி. ஸர்வம் ப்ரஹமோப நிஷதம் மாஹம் ப்ரஹம நிராகுரயயாம் மாமாப்ரஹம நிராக ரோத் நிராகரணமஸத்வ நிராகரணமே அஸ்து ததாத்மநி நிரதேய உபநிஷத்ஹு தர்மாஹ ஸ்தே மயிஸந்துதே மயிஸந்து, ஓம் ஸாந்திஹி ஸாந்திஹி.''

அடியேனுடைய வாக்கி பாணி(கைகள்) பாதம் பாயுரு உபஸ்தங்களாகிய கர்மேந்திரியங்களும் கண்கள். மூக்கு நாக்கு செவிகள் தேகத்தின் மேலிருக்கும் தோல் முதலாகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், மனோ புத்தி சித்த அஹங்காரங்களாகிய அந்தக் கரணங்கள் நான்கும், பஞ்சபாராணன்களும், சப்த ஸ்பரிச ரூப ரஸ நந்தங்களாகிய தந்மாத்திரைகளும், நாகன் கூர்ம க்ருகுர தேவதத்த தநஞ்ஜய னென்னும் ஐந்து உப வாயுக்களும் விஷயாதிகளில் ஓடாமல், பரப்பிரம்மமாகிய ஆத்ம சொரூபத்தில் நின்று திருப்தியடையக் கடவன. வேதாந்த பிரதிபாதமாகிய ஸச்சிதானந்த பரப்பிரம்மம் சர்வ சொரூபியாகக் கடவது ஆத்ம சொரூபியாகிய அடியேன் அந்த பரப்பிரம்ம ஆத்ம சொரூபியாகிய ' அடியேனை நிராகரிக்காமலிருக்கக் கடவதாக. அந்தப் பரம்பிரம்மத்தினுடைய ஆதாரணை அடியேனுக்கு உண்டாகக் கடவதாக. அடியேனுக்கு அந்த பரப்பிரம்மத்தில் விஸ்வாசமும், பிரம்ம லக்ஷியபாவமும் உண்டாகக் கடவன. மேலும், அந்தப் பரப்பிம்மத்தில் ஆசையுடைய அடியேனுக்கு உபநிஷத்துக்களினால் சொல்லப்பட்ட தருமங்களெல்லாம் உண்டாகக் கடவன. சகல தருமங்களும் அடியேனிடத்தில் உண்டாயிருக்கக் கடவன. ஓ!பிரணவ சொரூபியாகிய பரம்பிரம்மமே ஓ நாராயணா! சாந்திஹி! சாந்திஹி! சாந்திஹி! சாந்திஹி! சகல விக்கினங்களும் பரிகரிக்கக்கடவாய் கிருஷ்ணா!

## 138. கர்ம வியாதியை வைத்திய மூலமாய்ப் போக்கடிப்பதனால் உண்டாகும் கெடுதி

ஸ்திரீ புருஷர்களுக்குப் பிராரப்த கர்மத்தினால் வந்த வியாதியை, வைத்தியத்தினால் போக்கடித்துக் கொண்டால், தாம் எத்தனை நாள் வியாதி அனுபவித்தார்களோ அந்நாள் போக மிகுதி அனுபவிக்கவேண்டிய நாட்களை வைத்தியத்தினால் போக்கடித்தால் இன்னும் அனுபவிக்கவேண்டிய வியாதியை மறுஜன்மத்திலும் அனுபவிக்கவேண்டியதாய் நேரிடும். அந்த ஜன்மத்திலும் வைத்தியமதினால் போக்கடித்துக் கொண்டால், மிகுதி சேஷமாய் நின்றிருக்கும் வியாதியை மறுஜன்மத்தில் தப்பாமல் அனுபவிக்க வேண்டியதாய் நேரிடும். ஸ்திரீ புருஷர்கள் இதன் ரகஸ்யங்களையெல்லாம் தெரிந்து கொள்ளாமல், அவரவர்கள் செய்த கர்மத்தினால் வந்த வியாதிகளை ஔஷதகங்களினால் போக்கடித்துக் கொண்டு இன்னும் அனுபவிக்க வேண்டிய மிகுதி சேஷ கர்மத்தை மறுஜன்மத்தில் அனுபவிக்கிறார்கள். எந்த வியாதிகள் வந்தபோதிலும் ''படுமனமே படு'' நீ பூர்வ ஜன்மங்களில் செய்த பாவ கர்மத்திற்காக அதன் பலனை இச்ஜன்மத்தில் அனுபவிக்கின்றாய் என்று தன் மனத்தை நொந்து, அந்நோய்களை சகித்துக் கொண்டிருக்கவேண்டும். யாரொருவர் தன் மனத்தை நொந்து, தன் வியாதியை வைத்தியத்தால் போக்கடித்துக் கொள்ளாமல் சகித்துக் கொண்டிருக்கின்றார்களோ, அவர்களை ஞானியென்றே சொல்லலாம், ஏனென்றால், ஞானிகள் இந்த ரகஸ்யம் நன்றாய் அறிந்தவர்கள், அவர்களின் கைகளிலாகிலும் மற்ற எவ்விடங்களிலாகிலும் இரணங்கண்டு அதில் புழுக்கள் விழுந்து நெளிந்து கீழே விழுந்த போதிலும், அப்புழுக்களை

மறுபடியும் எடுத்து தம் புண்ணில் விட்டுக்கொண்டு அவைகள் தம்மை எவ்வளவு குடைந்தபோதிலும் அவற்றைச் சகித்துக் கொண்டு கர்மபலனை அனுபவிப்பார்கள். அவர்கள் இவ்வாறு அனுபவித்து மறுஜன்மத்தில் பரிசுத்தர்களாய் விடுவார்கள். கர்ம வியாதி எவர்களாலும் உண்டாக்கத் தக்கதல்ல. அஃது ஈஸ்வரன் உண்டாக்கியது. அந்த ஈஸ்வர சிருஷ்டியை நாம் ஒளஷதங்களினால் போக்கடித்துக் கொண்டால் மிகுதி அனுபவிக்க வேண்டிய வியாதி மறுஜன்மத்தில் தப்பாமல் அனுபவிக்க வேண்டியதாய் நேரிடும். ஆதலால், அவரவர்களின் கர்ம வசத்தால் வந்த வியாதியை அனுபவிப்பதே மிகவும் உத்தமம் என்று அறியக் கடவீர்களாக.

## ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம்
## ஸம்பூரணம்



## மலச்சிக்கல் நிவாரணம் செய்யும் அன்னரஸ ஸஞ்சீவி (CONSTIPATION)

உலகத்திலுள்ள ஜனங்களின் சரீரங்களெல்லாம் பிருதிவி (மண்) அப்பு (ஜலம்) தேயு (அக்நி) வாயு (காற்று) ஆகாசம் (வெளி) என்று சொல்லப்பட்ட இந்த பஞ்ச (ஐந்து) பூதங்களினால் உண்டாயிற்று, இவ்வாறாக எல்லோருடைய சரீரங்களும் ஒரே பஞ்ச பூதங்களினால் உண்டான போதிலும், இச்சரீரங்களெல்லாம் ஒரே விதமாயிராமல் வெவ்வேறு பேதங்களாய் இருக்கின்றது.

சிலருக்குப் பித்தம் அதிகமாயும், சமமாயும், குறை வாயுமிருக்கும், அதுபோல், உஷ்ணம் அதிகமாயும், சமமாயும், குறைவாயும் இருக்கும். அதுபோல் நாடிகளும், வெட்டைச் சூடுகளும், சிலேஷ்ம (சீதள)ங்களும், ஜன்னிகளும், திமிர்களும், காமாலைகளும், தித்திப்புகளும், உப்புகளும், புளிப்புகளும், உட்கானல்களும், ஸ்தூலமாகுவதும் கருகுதலும் (மெலிந்து போகுதலும்), நரம்புவலிகளும், தொண்டை கட்டுதலும், மூச்சு அதிகமாய் விடுதலும், மேல்சுவாசம் உண்டாகுதலும், மஞ்சள் காமாலைகளும் மஞ்சள் மூத்திரங்களுமுடையவர்களாய் அனேக விதங்களாய் இருக்கின்றார்கள்.

மேற்சொல்லிய சரீரங்களில் சில சரீரங்களுக்கு மலச்சிக்கல் (Constipation) உண்டாய் மலவிசர்ச்சனை செய்யும் பொழுது (மலம் தள்ளும் பொழுது) தாராளமாய் (தளர்ச்சியாய்) வராமலிருப்பதனால் அச்சமயம் மூச்சை நீடித்து நிறுத்தி மூச்சை விடும்பொழுது மலம் அழுத்தமாயும் உருண்டை உருண்டை களாயும் மூச்சின் பலத்தால் மிகவும் கஷ்டத்துடன் சிலசமயம் வெளியில் வரும் பொழுது மலம் தசையில் பட்டுக் கொண்டுவரும். அப்படி வருதனால் அந்த சதையிலிருந்து ரத்தம் உண்டாய் அந்த ரத்தம் மலத்தில் பட்டு வெளிவரும். இவ்வாறு

வரும் மலத்திற்கே மலச்சிக்கல் (Constipation) என்று சொல்லப்படும். இவ்வாறான மலச்சிக்கலுடையவர்களுக்கும் மலம் தாராளமாய் வரப்பட்டவர்களுக்கும் எப்பொழுதும் எந்த நோய்களும் வராமலிருக்க பிரதி தினம் பழைய சாதமும், அந்தச் சாதத்தின் ரசமாகிய அன்னரச சஞ்சீவியையும் சாப்பிட வேண்டிய முறையை இதனடியில் சொல்லியிருக்கின்றோம்.

இரவில் சாதம் வடிந்தபிறகு சுத்த (நல்ல) ஜலம் ஒரு கலாய் பாத்திரதிலாகிலும் அல்லது தெள்ளும்படி (கொதிக்கும் படி) எரியவிட்டு. கொதித்தபின் அச்ஜலத்தை வேறாய் எடுத்து ஆறவைக்க வேண்டும். பிறகு சாதம் வடித்த கஞ்சி நீரிலிருக்கும் ஏட்டை நீக்கி அந்தந்தக் குடும்பத்திற்கு வேண்டுமளவு கஞ்சிநீர் வேறோர் பாண்டத்தில் விட்டு அந்தக் கஞ்சிநீர் இரண்டளவு பிரமாணம் முன் காய்ச்சி வைத்த வெந்நீரை அந்தக் கஞ்சி நீரில்விட்டுக் கலந்து தயார் செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

இரவில் எல்லோரும் சாப்பிட்ட பிறகு மிகுதியாயிருக்கும் சாதத்தில் தயார் செய்து வைத்த கஞ்சிநீர் ஜலத்தை ஷை சாதமுள்ள பாண்டத்தில் விட்டு சாதமும் நீரையும் கரண்டியால் நன்றாய்க் கலக்கிப் பிறகு அப்பாண்டத்தை மூடி வைக்கவேண்டும். மறுநாள் காலை பழைய சாதம் இலையில் சாப்பிடாமல் கிண்ணத்தில் போட்டு ஷை பழைய சாதம் நீர் சாதத்திற்கு மேல் ஒரு அங்குலம் நீர் இருக்கும்படி விட்டு அதில் சமுத்திர வைணம் (உப்பு) கொஞ்சம் அதிகமாய்க் கரிக்கும்படி போட்டு பிசைந்து ஏதாகிலும் ஊறுக்காய் வைத்து கொண்டு சாப்பிட்டுக் கடைசியில் அந்நீரையும் சாப்பிட வேண்டும். எவ்வளவு மழைக்காலமாயிருந்தாலும் அல்லது குளிர் காலமாயிருந்தாலும் தினசரி தவறாமல் தம் ஆயுள் உள்ள வரையில் ஷை பழைய சாதமும், அதன் நீரும் சாப்பிட்டு வருவாராகில், அவர்களுக்கு எப்படிப்பட்ட வியாதிகளும் மலச்சிக்கலும் வரவேமாட்டா.

முன் சொல்லிய பழைய சாதம் நீரை நன்றாய்க் கலக்கி ஓர் கலாய் பாத்திரத்தில் மூன்று டம்ளர் அல்லது இரண்டு டம்பளருக்குக் குறையாமல் அளந்துவிட்டு அதில் கலக்கிக் காலையில் எதுவும் சாப்பிடாமல் வெறும் வயிற்றில் அந்நீரைச் சாப்பிட்ட உடனே தாம்பூலம் போட்டு, அத்தாம்பூலத்தை விழுங்க வேண்டும். தாம்பூலத்துடன் புகையிலைப்போட வேண்டாம். இவ்வாறு சாப்பிட்டால் ஒன்று அல்லது இரண்டு முறை அந்தந்தத் தேகத்திற்குத் தக்கப்படி பேதியாய்ப் பிறகு அந்நீர் வெளியில் தள்ளும். உப்பு கொஞ்சம் அதிகமாய்க் கரிக்கும்படி போட்டு சாப்பிட்டால் இக்குணத்தைத் தரும் உப்பு அளவிற்குமேல் விசேஷமாய்ப் போட்டு, சாப்பிட்டால் வயிற்று நோய் உண்டாகும் வாந்தியாகும். குடலை முறுக்கும், தாகமெடுக்கும் நன்றாய் பேதியாகும். சாதாரணமாய் சாப்பிடும் உப்பைவிட கொஞ்சம் அதிகமாய் கரிக்கும்படிப்போட்டு சாப்பிட்டால் மிகவும் சுலபமாய்ப் பேதியாகும்.

மேற்சொல்லிய பழையசாதத்தில் தயிராகிலும் மோராகிலும்விட்டு சாப்பிடலாகாது. அவ்வாறு சாப்பிட்டால் திமிர் சோம்பேரித்தனம், கொட்டாவி, தூக்கம் மந்தபுத்தி முதலானவைகள் உண்டாவதுமேயன்றி வியாதிகளுக்கும் தாய் வீடாயிருக்கும். மேற்படி பழைய சாதத்திற்கு இரவு மிகுதியாயிருக்கும் பதார்த்தங்களை வைத்துக் கொண்டு சாப்பிடலாகாது. எந்த ஊறுகாயாகிலும் வைத்துச் சாப்பிடவேண்டும். இப்பழைய சாதமும் அதன் நீரும் ஓர் கைகண்ட ஔஷதமென்று நினைத்து சாப்பிட வாருங்கள்.

-முற்றிற்று-

கடப்பை பரமஹம்ஸ

## ஸ்ரீ சச்சிதானந்த யோகீஸ்வரர்

அருளிய பயனுள்ள நூல்கள்

## ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரகசியம்

சாஸ்திரங்கள், வேதங்கள் ஸ்ரீ பகவத்கீதையின் ரகசியங்களும், மோட்சம் அடைய எளிய நடையில் எழுதியுள்ளார், யோகத்தில் கண்டறிந்தவைகளை விளக்கி மனதை அடக்க சுலப வழிகளை கூறுகிறார். (விலை ரூ. 300/– தபால் செலவு தனி)

## ஜனன மரண ரகஸ்யம்

மானிடர்களின் உன்னத ரகசியமான ஜனன மரண ரகஸ்யார்த்தங்களை விரிவாயும் படித்தவர் முதல் பாமரர் வரை அறியும் வண்ணம் இந்நூலில் எழுதியுள்ளார். (விலை ரூ. 50/– தபால் செலவு தனி)

## யோகாப்பியாசம்

செய்யவேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூல். மூச்சை நிறுத்தி, கணக்குடன் எண்ணிக்கைகளை கூட்டி கொண்டே சென்றால் எந்த வியாதியும் அணுகாமல் ஆயுள் விருத்தியும் யோக சித்தியும் அடையலாம். (அச்சில்)

---